# பக்த மாலா
# வசனம்


బలరాముడు.
రుక్మిణి
సాత్యకి.
ప్రద్యుమ్నుడు
అనిరుద్ధుడు.
LITHO. MEENAKSHIAMMAIH PRESS
MYLAPORE. 19
తిరువల్లిక్కేణి శ్రీ పార్థసారథిస్వామి.

ஸ்ரீ

ஸ்ரீபார்த்தசாரதி குரவேநம:

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:






விட்டோபா. ருக்குமாயி.

శ్లో॥ వకుళాలఙ్కృతం శ్రీమచ్ఛఠకోపపదద్వయమ్।
అస్మత్కులధనంభోగ్య మస్తు మేమూర్ధ్నిభూషణమ్॥

# பக்தமால வசனம்.

---

பதினான்கு சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ங்கட பதியாய் விட்டலசா யகனாய் விண்ணவர் முனிவரர் போற்றும்
விரியுக மரியா யரனய னாய்வே தாகமங் களின்றனி வித்தாய்ப்
ந்துறு கமலை கலைமக ளோடு பயன்றரு பகவதி யாகிப்
பணமுடைப் பணியாய்க் கருடனாய்ச் சேனை முதலியாய்க் கணபதி யாகி
ந்தவேற் குகனா யுயர்சட கோப னுடையவர் வரவர முனியா
யோண்கபீர் துக்கா ராமுத ருச ராயொளிர் கோவிந்த னாகித்
சமழ் துளவ பார்த்தசா ரதியாய்த் திகழ்தரு ஞானம தாகித்
தொறு நிறைந்து கபிவரற் காத்த செல்வனு மிராமனைத் தொழுவாம்.

தோரா—வெங்கடகிருஷ்ண ஸ்ரீ நரசிம்மா வேதவல்லி மன்னுதா
அங்கிதவிட்டல பார்த்தசாரதி ஹரீவரத ரகுநாதா.

## நூலாசிரியர் வணக்கம்.

ஸ்ரீஹரி ! விட்டல ! ஸ்ரீதரா ! கேசவா ! சிதானந்தா ! ஸ்ரீராமா ! மோஹமெனும் பிரமையை அணைத்தமூலகுருமூர்த்தியானகுணதாமர் நீரன்றோ ! இடுப்பிலிரண்டு கைகளை யிட்டுச் சரணங்களைச் செங்கல்மேலிட்டு அகங்களைப்போக்கு மருட்பார்வையாலனைவரையு மானந்தத்துடன் பார்த்துக்கொண்டு தற்பரரானவர்களுக்குத் தரிசனங்கொடுத்துச் சமுசாரதரணஞ் செய்தருளுவீர். நீரே விநாயகருடைய ரூபத்தைக்கொண்டு நிகிலவித்தைகளைத்தந்தருளுவீர். குலதெய்வமான வேங்கடேசுவரரைக் குறிப்புடன்பஜித்து, அலர்மேல்மங்கைத் தாயாரையு மன்புடன் துதித்து, பரமாசாரியரான பார்த்தசாரதிக்குப் பிரணாமங்களைப் பண்ணி, திரு அல்லிக்கேணி வேதவல்லித்தாயாருக்குத் தீர்க்க தெண்டஞ் சமர்ப்பித்து, பன்னிரண்டாழ்வார்களையும் பக்தியுடன் துதித்து எதிராஜர் வரவரமுனி முதலான ஆசாரியர்களை வணங்கி சர்வேஸ்வரனைச் சதாகாலம் பாடிக்கொண்டிருக்கும் சரஸ்வதியைநினைத்து உலகிலிருக்கும் ஸ்ரீஹரிபக்தர்களை உகப்புடன் தொழுது, ஞானகுருவான கோவிந்தரைத் தியானித்து, ஸ்ரீ முஷ்டமிராமனுஜரை சித்தத்திலிருத்தி, வியாசர், வால்மீகர் முதலானவர்களுக்கு வந்தனம் புரிந்து, ஹரிநாமத்தை யல்லும் பகலு மனுசந்திக்கும் நாமதேவர், ஞானதேவர், துகாராமர், கபீர்தாசர், துளசிதாசர், ஜயதேவர், இராமதாசர் முதலான பக்தர்களுக்கு நமஸ்கரித்து கம்பர் முதலான கவிப்புலவர்களையும் வணங்கி ஸ்ரீஹரி அடியரான பக்தருடைய சரித்திரங்களைச் சொல்லத்தொடங்கினேன். பரமாசாரியரென்னிருதயத்திலிருந்து பாவனமான அக்கதைகளைச் சொல்லுவிக்கக்கடவர்.

## அவையடக்கம்.

ப்ரவசபாவத்தை யடைந்த பக்தர்களைப் பாமரர்களென்றெண்ணாமல் ஸ்ரீஹரிக்கு அவர்கள் பரதந்திரர்களாகி ஜகத்தை உத்தரிக்க வந்தவர்களென் றறியத்தக்கது. அவர்கள் சரித்திரங்கள் வேறுபாஷைகளிலிருந்தன; அவைகளைத் தமிழ்பாஷையிலெழுதித் தமிழ் நாட்டுக்குபயோகமாகும்படி ஸ்ரீஹரி கிருபையாலெ

தைச் சொல்லத்தொடங்கினர். ஸ்ரீஹரி இவ்வேளையிலோர் கப்பலையெடுப்பதற்குச் சமுத்திரத்திற்குச்சென்றார். ஒரு வர்த்தகன் கப்பல் முழுகிப்போகச் சித்தமாயிருக்க அவன் தனக்குவரு மாதாந்த்தி லந்திலோர்பாக முமக்குக் கொடுப்பதாகப் பெருமாளுக்கு பிரார்த்தனைச்செய்து முடிப்புக்கட்டினன்; அதனு லவ்விடஞ் சென்றார். சற்றுநேரம் நிதானியுமென்று சொல்லுமளவில், அக்ரதாச ராச்சரியப்பட்டு இதனை கிரகிக்கத்தக்கதென்று சற்று நேரம் நிதானித்திருக்க அவர்தியானத்தில் ஸ்ரீஹரிவந்தார். அவர்பீதாம்பரம் நனைந்திருந்தது. மானசபூஜை முடிந்தவுடன் அக்ரதாசர் நாபாஜியை யழைத்து சமுத்திரத்தில் நடந்த சங்கதி யுனக்கெப்படி தெரிந்ததென்று வினவ, நாபாஜி அவரைநோக்கி, உம்மாணை வேறொன்றில்லை, சாதுக்களிட்ட பிரசாதமகிமையும் தேவரீருடைய கிருபையுமே இந்த ஞானத்தை யுண்டாக்கிற்றென்று தெரிவித்தார். இதைக்கேட்டு நாபாஜியை நோக்கி அக்ரதாசர் சொல்லுவார், நீர் பக்த சரித்திரங்களைப் பாடக்கடவீர், இதனுல் பவதரண மனுயாசமாக ஆகுமென்று சொல்ல, விநய விதேயத்துடன் குருசரணங்களுக்கு நமஸ்கரித்து குருவாக்கினையைச் சிரசாவகித்து "குவாலேர்" பாஷையில் பக்தர்கதைகளை யெல்லாம் வெளிப்படுத்தினர். ஜனங்களனைவரு மவைகளைவாசித்துக் கொண்டாடினர்கள். நாபாஜி இந்துஸ்தான் தேசத்தில் பிரசித்தராயிருந்தார். அக்கதைகளுடைய தாற்பரிய மெல்லாம் மஹாராஷ்டர பாஷையில் வெளியாயின. மஹாராஷ்டர தேசத்திற் பிரசித்தரான மஹான்களுடைய சரித்திரங்களை அவரவர்கள் வம்சபரம்பரைகளைக் கொண்டு அந்தப்பாஷையில் மஹீபதிபாவா எழுதினர். அதனை யாதாரமாகக்கொண்டு மேற்கண்ட சரித்திரங்கள் தமிழிலெழுதப்பட்டன.

---

## புண்டரீகன் சரித்திரம்.

கலியுக ஸ்ரீவைகுண்டமென்று கணக்கிடப்பட்ட பண்டரிபுரமெனும் க்ஷேத்திரம், பூர்வகாலத்தில் லோஹதண்டமென்று பேர் பெற்றிருந்தது. அவ்விடமொரு அந்தணன் ஜத்வாயென்று பேர் பெற்று சாத்வீக குணத்தை வகித்து சத்யவானுகி இந்திரிய நிக்கிரகமுடையவனும் பகவானிட மனுதினமும் பக்தி செலுத்திக்கொ

ண்டு பாபமற்றவனுகிப் பதிவிரதையான ஸாத்யகி யென்னும் ஸதியுடன் புத்ராபேக்ஷையைக்கொண்டு தவம் செய்துக்கொண்டிருந்தான். ஸ்ரீஹரிகடாக்ஷத்தா லவனுக்கொரு குமாரன்பிறக்க, தம்பதிகளிருவரும் சந்தோஷித்துப் புண்டரீகனென்று நாமகரணம் செய்து சரிவயதில் உபநயனுதிகளைச்செய்து வித்தையைக், கற்பித்து பதினுருவது வயதில் விவாகம் செய்தார்கள். ஆனுல் பிள்ளை துஷ்ட விருத்தியுடையவனுய் தாய்தந்தைகளுக்கு துர்வசனங்களைச் சொல்லிக்கொண்டு திரவியத்தை விரயம்பண்ணிக்கொண்டு வேசியின் சகவாசத்தி லிருத்தலும், நட்டுவர்களுடன்கூடி இருத்தலும் தாயார் ஹிதத்தைச்சொன்னுல் அவளைத்திரஸ்கரித்து சண்டிமுண்டியென்று பலவாருகச் சொல்லுதலும் தகப்பனைக்கண்டு நீ செத்தால் நான் சுகமடைவேனென்று சொல்லுதலும் இப்படி அந்த விருத்த தம்பதிகளிருவரையும் கஷ்டப்படுத்திக்கொண்டிருந்தான். அவர்கள் தமது புத்திரன் சகவாசத்திலிருக்கிறதைவிட மரணமடைவது மேன்மையென்றெண்ணி பயத்துட னிருக்குங்கால், கங்கா யாத்திரைக்காக பிரயாணப்பட்டுப் போயிக்கொண்டிருக்கு மனேகர் லோஹதண்டத்தில் வந்திறங்கினுர்கள். அவர்களுடன்கூட அவ்விருவரும் போகவெண்ணி குமாரனைப்பார்த்து பிள்ளாய்! எங்களுக்கு கங்காயாத்திரை செய்விக்க வேண்டுமென்று கேட்க, குமார னவர்களைநோக்கி உமக்கின்னம் மரணம் வரவில்லையோ! இன்றையதினமே நீங்கள் போவீர்களாகில் நான் சுகத்தையடைவேனென்று சொன்னுன். இதைக்கேட்டு தாய்தந்தைகளிருவரும் வியசனத்தையடைந்து அன்றே காசியாத்திரைக்குப் பிரயாணமாயினர்கள்.

சிலநாள்செல்ல இன்னும் சிலர் காசியாத்திரைக்குப்பிரயாணமாகி அந்தக்ஷேத்திரத்தில் வந்திறங்கினர், அதைக்கண்டு புண்டரீகன் தன் மனேவியைப்பார்த்து நாமிருவரு மிந்த யாத்திரா ஜனங்களைக்கூடி காசிக்ஷேத்திர மெப்படி யிருக்கிறதோ போய் பார்ப்போமென்றும் இதற்கு வேண்டுந் திரவியம் தன்னிடம் வெகுவாயிருக்கிறதென்றும் சொல்லி அவள் சம்மதிமேல் இரண்டு குதிரைகளை வரவழைத்து ஒன்றின்மேல் தன்மனேவியை யுட்காரச்செய்து மற்றென்றின்மேல் தானேறிக்கொண்டு இருவரும் சென்றனர். தாய்தந்தைகள் பாதசாரிகளாய்ப்போக அவர்களைத் தான் வழி

யிற்கண்டு கணக்கிடாதிருந்தான். இவ்வாறு காசி சமீபத்திற்குச் செல்ல வழிதப்பி தெற்குதிசையில் குக்குடமுனிவர் ஆச்சிரமத்தி னருகிலிருக்கும் சத்திரத்தைச் சேர்ந்தனர். குக்குடயோகியென் பவர் தாய்தந்தைகளின் சேவா தற்பரர், வேறுதேவதைகளைக் காண்பவரல்லர், அவர்கள் சேவையிலிருந்துக்கொண்டு பகற்கால த்தில் புராண சிரவணம் செய்வித்துக்கொண்டு இராக்காலத்தில் ஹரிகுணுனுவாதத்தை யவர்கள் கேட்கும்படிச் செய்துக்கொண்டு க்ஷணநேரமும் ஒழியாமல் சேவா நிரதரா யிருப்பார். இப்போ தைக்கும் குக்குடயோகியை மனதிலெண்ணினுல் அவரது மகிமை யினுல் தீமையான கனவுகள் நிவாரணமாகி நல்ல சொப்பனங்களு ண்டாகுமென்றும் விக்கினங்கள் நாசமடையுமென்றும் பிரசித்த மாக விருக்கின்றது. காசிபட்டணத்துச் சமீபமிருந்தும் பாகீரதி யைச் சேவிக்காமலேவிருந்தனர். அவர் தனது ஆச்சிரமத்திற்கு வெளியாக வருந்தருணத்தில் புண்டரீகனவரைப்பார்த்து ஸ்வாமி! காசிபுரி யிவ்விடத்திற் கெவ்வளவு தூரமென்று கேட்டான், அத ற்கு அவர் சொல்லுவார். ஐயா! காசீபுரியும் பாகீரதியு மெந்த மூலையிலிருக்குமோ எனக்குத் தெரியாதென்று சொன்னுர். பின் னர் புண்டரீகன் ஐயோ! உமது ஜன்மம் வியர்த்தமாச்சுதே! இவ்விடமிருந்தும் க்ஷேத்திரதரிசனம் செய்யாதிருப்பது என்ன சித்திரமென்று கருதியிருக்கும் சமயத்தில் இரவுகாலம் சமீபித் தது; ஜனங்களனைவரும் நித்திரையி லழுந்தினர். அவ்வேளையில் மூன்று ஸ்திரீகள் தண்ணீர்குடங்களை யேந்திக்கொண்டு அழுக்க டைந்தவர்களாய் வந்தனர். அப்பொழுது புண்டரீகன் ஜாக்கிர தைக்குவந்து பிசாச ரூபிகளைப்போலிருக்கு மம்மூவரைக்கண்டு பயத்துடனவர்களைப் பார்த்துக்கொண்டிருக்க அவ்வாச்சிரமத்தை மெழுகி கழுவி மொக்கிட்டு அனேகவிதமான சேவைகளைச்செய்ய அவர்களது ரூபங்கள்மாறி சுந்தரஸ்திரீகளாகி சாவித்ரீ, லக்ஷ்மீ, கௌரீதேவிகளைப்போலத் தோணப்பட்டு அவர்கள் திருமேனி காந்தி நாலுதிக்குகளிலும் வீசிற்று. அதைக்கண்டு ஆச்சரியமடை ந்து, நீங்களார்? ஏன்வந்திவ்விடம் சேவைசெய்கிறீர்கள்? உங்க ளுடைய தேஜசு காந்தியுடையதா யிருக்கின்றதே! என்று கேட்க அவர்களிலொருத்தி இவனைப்பார்த்து அடா! துராத்மா! பாபிஷ் டனே! சாதுநிந்தகனே! துற்மார்க்கனே! எங்களைத் தீண்டவே

ண்டாம், வழிமடக்காதே! போவென்று பயமுறுத்திச்சொல்ல, புண்டரீகன் பயந்து ஓ தாய்மாரே! அடியேன் பதிதன், காப்பாற்றக் கடவீரென்று கால்களில்விழ, அம்மூவரவனைக்கண்டு அடா பிராம்மணா! எழுந்திரு! அனேக ஜன்மங்களிற்செய்த புண்ணியமின்றைக்குப் பலித்தது, ஆனதாலெங்களைக்கண்டு புனிதனுனாய், இந்த ஜன்மத்தில் நீ துராத்மாவா யிருந்தாய், மகாஞானியான குக்குட முனிவரை நீ தரிசித்தபடியா லந்தபாபம் நசித்தது, ஆனதா லெமது தரிசன முனக்கு கிடைத்தது. நாங்கள் மூவரும் கங்கை, யமுனை, சரஸ்வதிகளாவோம், துஷ்டரனேக ரெங்களிடம் ஸ்நானம் செய்வதா லவரதுபாபங்களை நாங்கள் வகித்து மலினமுடையவர்களாய் இம்மகாமதியான குக்குடமுனி ஆச்சிரமத்திற்கு தினந்தோறும்வந்து அவரது சேவைகளைச் செய்ய நாங்கள் பாபங்களைக்கழுவி பரிசுத்தராகிறோம். இந்த சாதுபுருஷனுடைய மகிமையை வர்ணிக்க எங்களுக்குச் சாமர்த்தியமில்லை. சதுர்முகனான பிரமதேவனு மவருக்கு நமஸ்கரிப்பனென்று சொல்லுமளவில், புண்டரீகன் பார்த்து ஓதாய்மாரே! இவ்வண்ணமான புண்ணிய மிவரென்ன செய்தாரென்று கேட்க, கங்கை சொல்லுவாள், இவர் பூர்வம்செய்த புண்ணியத்தை பூரணமாகவர்ணிக்க யாவராலுமாகாது. இப்பொழுது தாய்தந்தை சேவையை செய்துக்கொண்டு வேறொரு தெய்வத்தைக் கண்டறியார். பெருமாளும் பிராட்டியு மெப்படி ஒருவர்க்கொருவர் இணைபிரியாரோ அப்படி அல்லும்பகலு மவர்களது சேவாதற்பரரா யிருப்பார். தாய்தந்தைகள் சேவையைக் காட்டிலும் பெரியபுண்ணியம் வேறொன்றில்லை. கோடியாகங்களின் பலத்தைக்கொடுக்கும். மூன்றுதரம் பூவலம்வந்த பலத்தைக்கொடுக்கும். பிதாவின்சேவை செய்பவருக்கு அற்புதமான ஞானமுண்டாம், பகவா னெதிரில்வந்துநிற்பன். சுருதி, தாய்தந்தையரை தெய்வமென்று சொல்லி இருக்கிறது. புராணங்களும் மிதமின்றி சொல்லியிருக்கின்றன, தாய்தந்தைகளை நிந்திப்பவர் பரமசண்டாளர்களாகி அதோகதியை யடைவார்கள். எமபடாளவர்களைக் கொண்டுபோய் கும்பீபாகநரகத்தில் போட்டு விடுவர்களென்று சொல்ல புண்டரீகன் அதிகமான வனுதாபத்தை யுடையவனாய் அழுதுக்கொண்டு ஐயோ! நரதேஹ முத்தமமானதல்லவா! அதனை வியர்த்தமாகச் செய்துவிட்டேனே! நான் மகா

துர்ஜ்ஜனன், அதமன், மகாபாப மென்மேல் நேர்ந்ததே! என்ன செய்வதென்று கேட்க, பாகீரதி அவனைப்பார்த்து, ஓபுண்டரீகனே! ஸ்ரீஹரியைப்போலும் லக்ஷ்மியைப்போலும் தாய்தந்தைகளைப் பாவித்து பூஜிப்பாயாகில் பகவான் திருப்தியடைந்து உன்னை மூன்று லோகத்திலும் கீர்த்தியுடையவனாகச் செய்வர். இது சத்தியமென்றுசொல்லி அம்மூவரும் தமதிருப்பிடம் போய்விட்டனர்.

அனந்தரம் புண்டரீகன் குக்குடமுனிவருக்கு நமஸ்கரித்துப் புறப்பட்டு தாய்தந்தையரு மவ்விடமே யிருக்கக்கண்டு குதிரைகள்மீது அவர்களிருவரையு மேற்காரவைத்து காசியாத்திரை யதாவிதியாக நடத்தி கயாவர்ஜனம் செய்வித்து, மாகஸ்நானம் பிரயாகையில் நடப்பித்து தன்மனைவியுடன் தாய்தந்தைகளுக்கு சேவை செய்துக்கொண்டு திரும்பி லோஹதண்ட க்ஷேத்திரத்திற்கு வந்து அவர்களை ஆச்சிரமத்திலிருத்தி குக்குடயோகி பக்தி செய்வது போல அல்லும்பகலு மொழிவின்றி அவர்களுக்கு சேவைசெய்துக்கொண்டிருந்தனன்.

துவாரகாபுரியில் ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கும் ருக்மணிதேவிக்கும் பிரணயகலஹ முண்டானதால் ருக்மணிபிராட்டி லோஹதண்டக்ஷேத்திரத்திற்கு வந்து தவம்புரிந்துக்கொண்டிருந்தனள். பெருமாளப்பொழுது துவாரகையிலிருந் தெழுந்தருளிவந்து ருக்மணி பிராட்டியைச் சமாதானப்படுத்தி திரும்பிப்போக யத்தனிக்கும் போது பக்தனை புண்டரீகனைப்பார்த்து போவோமென்று அவனுடைய ஆச்சிரமத்திற்குவர அவனவ்வேளையில் தாய்தந்தை சேவா தற்பரனுயிருந்தான். பெருமாள் சௌமியத்துவமான ரூபத்தையுடையவராய், சங்குசக்கரங்களைத்தரித்த இருகரங்களை இடுப்பில் வைத்துக்கொண்டவராய் புஞ்சிரிப்பான முகத்தையுடையவராய் கால்பெருவிரல் பரியந்தம் கழுத்தில் வனமாலையானது தொங்க, முத்துமாலையும் ஷடாக்ஷரமந்திரமாலையும், சுவர்ணவல்லிரேகையும் கண்டத்திலணிந்திருக்க, இடுப்பில் மேகலையுடையவராய், மகரகுண்டலங்கள் கிரீடம் திவ்விய பீதாம்பரமுடையவராய், அவரது திருமேனிகாந்தி நாலுதிக்குகளிலும் பிரகாசிக்கும் பொழுது புண்டரீகனுக்கு கண்கள் மூடப்பட்டு அதனால் அவர் வியப்படைந்து பின்னே திரும்பிப் பார்க்குமளவில் பெருமா ளெழுந்தருளினதைக்கண்டு செங்கல்லுகளை யவர்முன் இட்டு அவைமேலி

ருக்கச்சொல்லி மனதினல் நமஸ்கரித்து பிதாசேவை பூர்த்தியான பிறகு பெருமாள் முன்பு வந்து நமஸ்கரித்தான். சியாமசுந்தர ரூபரும் சமபாதங்களையுடையவராய் பக்தன்பணியைப் பார்த்துக் கொண்டிருக்கும் பெருமாள் புண்டரீகனைப்பார்த்து, வாராய்பிள்ளாய்! உன்போல பக்தனை நாம் கண்டதில்லை, உனக்கிஷ்டமான வரங்களைக்கேள் தருகிறோமென்றருளினர். புண்டரீகன் கத்கத கண்டத்துடன் நமஸ்கரித்து ஒபகவானே! தேவரீர் சர்வகாலமும் இந்த இடத்திலேயே இப்பொழுதுநின்ற திருக்கோலத்துடனிருந்தும், தீர்த்தத்திலும், க்ஷேத்திரத்திலும், அடியேனிடமும் சமானமாகவிருந்து, இம்மூன்று ரூபங்களுடன் லோகத்தாருக்குத் தரிசனங் கொடுத்துக்கொண்டும், தரிசனமாத்திரத்தில் ஜனங்களை உத்தாரணம் பண்ணிக்கொண்டும், வைகுண்டநாயகரான தேவரீர் மூன்றுதேவதைரூபமொருரூபமாகக் காட்டிக்கொண்டும், விட்டலவென்னும் திருநாமத்தால் விக்யாதியடைந்துக்கொண்டும், க்ஷேத்திரத்தை பக்திமுக்தி தாயகமாகச் செய்துக்கொண்டும், சகல ஹிதார்த்தங்களைக் கொடுத்துக்கொண்டும், ஸகல தீர்த்தங்களுக்கிதனை ஸ்தானரூபமாகச்செய்தும், மூன்றுலோகங்களையும்உத்தரிக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்ள, ஸ்ரீஹரி அப்படியேயாகக்கடவதென்றனுக்கிரகித்து, மூவ்வுலகங்களிலுள்ள தீர்த்தங்கள் மத்தியானத்திற்கு இவ்விடம் வருமென்றும், என்னுடையதரிசனமாத்திரத்தால் பிராணிகோடிகள் பக்திஞானத்தை யடைவார்களென்றும், இதுமுதல் நானிவ்விடமே யிருப்பேனென்றருளி செங்கல்களின்மேலப்பொழுது நின்றதிருக்கோலத்துடன் வீற்றிருக்கிறார். பிற்காலத்தில் லோஹதண்டமென்பது பண்டரிபுர க்ஷேத்திரமென்று பிரஸித்தியாயிற்று.

(இச்சரித்திரம் மாத்திரம் "பாண்டுரங்க மஹாத்மிய" மென்னும் மஹாராஷ்டிரக் கிரந்தத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது.)

---

## ஜயதேவர் சரித்திரம்.

ஜகன்னாதமெனும் க்ஷேத்திரத்திற்குச் சமீபத்தில் துந்துபில்வமெனும் பெயருடைய கிராமமொன்றுண்டு. அதில் பிராம்

மணகுலத்தில் வியாஸ மகாமுனியம்ஸமாக ஜயதேவரவதரித்தார். குழந்தைப் பருவத்தில் நின்று அவர் நாளுக்குநாள் வளர்ந்துவர தாய்தந்தைகள் உபநயனம் செய்தனர். சாஸ்திராப்பியாசம் செய்யாமலே சகலவித்தைகளிலும் நிபுணராயினர். நக்ஷத்திரங்களிற் சந்திரனைப்போலும், தபசிகளிற் சங்கரரைப்போலும், சகலசாதனங்களில் சுத்தபாவத்தைப் போலும், ஜயதேவர் பிராம்மணர்களில் சிரேஷ்டரா யெழுந்தருளியிருந்து சுருதிசாஸ்திரங்களனைத்தையுஞ்சோதித்து புராணங்களனைத்தையும் பார்த்து அவைகளிற் கலியுகத்தில் முக்கியசாதனமானது ஹரிகீர்த்தனையென்றறிந்துக் கொண்டு பத்மபுராணத்தில் ராதாமாதவவிலாச மென்னும் இதிஹாஸ மொன்றைக் கீர்த்தன ரூபமாகப் பாடி கீதகோவிந்த மென்று அந்தக் கிரந்தத்திற்குத் திருநாமஞ்சாற்றிப் பிரசுரப்படுத்த, அது ஸ்வர்னத்திற்கு இரத்தின மிழைத்தாற்போல் மேன்மை பொருந்தியதால் சகலருமெழுதிக்கொண்டு பாடஞ்செய்து ஹரி லீலைகளை மனைகள்தோறும் பாடிக்கொண்டிருந்தனர். புஷ்பமோரிட மிருக்கினு மதின்பரிமள மெங்கும்பரவுவதுபோல உலகிலது பிரகாசத்திற்கு வந்தது.

ஜகன்னாதத்தில் சாத்வீகனென்றோர் அரசனிருந்தான். அவனும் ஜயதேவர்செய்த கிரந்தம்போலவே வொன்றைச்செய்து அனேக பிரதிகளை யெழுதும்படிபண்ணி லோகத்தார் படனைசெய்யும்பொருட் டனுப்பினன். இதை சர்வக்ஞரான பண்டிதர்களறிந்து அரசனிடஞ்சென்று நீசெய்த கிரந்தம் ஜயதேவர் செய்ததற்கு சாம்யமென்று ஆத்மஸ்துதி செய்துக்கொள்ளுகிறாய், அறிந்தோர் தம்முடைய கீர்த்தியைத் தாமே வர்ணனை செய்பார். நீ செய்த கிரந்தத்தை யெல்லோரையும் படிக்கும்படி யாக்கியாபிக்கிறாய். வித்தையும், குருமந்திரமும், மகாரத்னமும், கஸ்தூரியும், கன்னிகையும் இவைகளை பலாத்காரமாக விற்கப்போனால் விலை குறைந்து போம். அப்படி உன்னுடைய சித்தத்தில் அஹம்பாவத்தை வைத்துக் கிரந்தத்தை செய்தபடியால் ஜகன்னாதஸ்வாமி யதனை அங்கீகரிக்க மாட்டாரென்று சொன்னார்கள். அரச னவர்களைப் பார்த்து ஜயதேவர் ஹரிகுணங்களை வர்ணித்தார், யானுமப்படியே வர்ணித்தேன். இருவருடைய கிரந்தங்களும் ஜகன்னாதர் சன்னிதியி லோரிரவில் வைப்போம், எது பெருமாளுக் கங்கீகாரமில்லை

யோ அதனை யவர் விலக்கிவிடுவாரென்று சொல்ல, பண்டிதர்களதற்குச் சம்மதித்து இரண்டு கிரந்தங்களையும் வரவழைத்து ஜகன்னாதர் சன்னிதானத்தில்வைத்து ஸன்னிதி கதவுகளுக்குப் பூட்டுகளைப்போட்டு மறுநாள் விடியற்காலத்தில் சகலருங்கூடி பூட்டுகளைத் திறந்து ஹாரதி கொடுக்கும்பொழுது ஜயதேவர் கிரந்தத்தை புருஷோத்தமர் சமீபத்திலிருக்கவும் அரசனுடைய கிரந்தத்தை கீழ விழுந்திருக்கவும் கண்டார்கள். அப்பொழுது ஜயஜயவென்று சொல்லிக்கொண்டு சாதுக்கள் கைதட்டி யானந்தித்து அரசனை நோக்கி, க்ஷீர நீரங்களின் வித்தியாஸந் தெரியவந்தது, அம்ஸபக்ஷியும் காகமும் சமமாமோ ? அதைப்போல ஜயதேவருடைய கிரந்தத்திற்கும் உனது கிரந்தத்திற்கும் சாம்யம் வரமாட்டாதென்று சொல்ல அரசன் வெட்கத்துடன் ஹரிஸன்னிதியில் நின்று அஞ்சலியஸ்தனாகி ஓ ஸ்வாமி! பதிதபாவனரெனும் திருநாமமென்விஷயமாய் பொய்யானதுபோல் தோன்றுகிறது. ஒருவரை சன்மானித்து மற்றொருவரை யவமானப்படுத்தினீர். ஸர்வகடங்களிலும் நீர் சமானராய் வியாபகரா யிருக்கின்றீர். ஜலமானது புலிக்கும் பசுவுக்கும் சமானமன்றோ ? ஜயதேவர் முகமாக சொல்லிவைத்தவரும் நீரே, எனக்குள் அந்தர்யாமியா யிருந்து சொல்லிவைத்தவர் யாரென்று விண்ணப்பஞ்செய்ய, இந்த கருணுவசனங்களைக்கேட்டு, பெருமாள் பிரஸன்னராகி இருபத்துநான்கு சுலோகங்களை அரசன்செய்த கிரந்தத்திலிருந்தெடுத்து ஜயதேவர் கிரந்தத்தி லெழுதிவைத்தார். இவ்வளவுக்கே அரசன் திருப்தியடைந்து சந்தோஷித்தான்.

யாகங்கள்செய்த ஒரு பிராம்மணன் அந்த ஜகன்னாதக்ஷேத்திரத்தில் வாஸஞ்செய்துகொண்டிருந்தான். அவனுக்கு கன்னியாரத்தினமொன்று பிறந்தது. பத்மங்கள் போன்ற கண்களிருந்தமையால் பத்மாவதியென்று தாய்தந்தைகள் பேரிட்டனர். அப்பெண் லாவண்ய சௌந்தர்யங்களை யுடைத்தாயிருந்தாளாதலால் தகப்பன் அக்கன்னிகையை ஜகன்னாதஸ்வாமிக்கு அர்ப்பணஞ் செய்ய வேண்டுமென்று மனதிலெண்ணிக்கொண்டான். அப்பெண்ணை அந்தணரனேகர் விவாகநிமித்தம் கேட்கவந்தால் அவளைக் கிருஷ்ணார்ப்பணம் செய்துவிட்டேனென்று சொல்லிக்கொண்டிருப்பன். இப்படியிருக்க அக்கன்னிகை பெரியதாகும் சமயத்தில் பெருமா

ளந்த பிராம்மணனுடைய சொப்பனத்திற்சென்று நம் விஷயமாய் கன்னிகையை யற்பணஞ் செய்தாய், நாமிக்கலியுகத்தில் பௌத் தரூபத்தைத் தரித்திருக்கிறோமாதலாலும் ஜயதேவரெனது அம் சமாகப் பிறந்திருப்பதாலும் அவருக்கு கன்னிகையை அலங்காரங் களுடன் அற்பிக்கக் கடவையென்று நியமிக்க, அவ்வந்தணன் விழி த்துக்கொண்டு ஆனந்தத்தையடைந்து ஜயதேவரை யழைத்து பெண்ணுக்கும் பிள்ளைக்கும் பொருத்த நிமித்தங்களைப் பார்க்க முப்பத்தாறு லக்ஷணங்களும் பொருந்தி யிருந்ததைக் கண்டு முகூர்த்த நிச்சயஞ்செய்து சாஹித்தியங்களை சித்தப்படுத்தி தேவ ப்பிரதிஷ்டை முதலானதுகளைச் செய்வித்துத் தம்பதிகள் நடுவில் (அந்திரபடம்) திரைச்சீலையைவைத்து பிராம்மணர்கள் மங்களாஷ் டகங்களைச் சொல்லத் தொடங்கினார்கள். கேசவ, நாராயண, மாதவ, கோவிந்த, கோபால, தேவதேவ, மதுசூதன, கிருஷ்ண, விஷ்ணு, வாமன, இராமா, பக்தகைவாரா, கோகுலவாசா, பண்ட ரீசா, வைகுண்டவாஸா, சேஷசயன, பெண்ணையும் பிள்ளையையும், ரக்ஷிக்கக் கடவீரென்று அஷ்டகங்களைச் சொல்லி வாத்தியகோஷ ங்கள் விசேஷமாக முழங்க, ஜயஜய சப்தங்களுடன் கலியாண மகோச்சவத்தை நாலுநாள் பரியந்தம் யாவருங்கூடி நடத்தினார் கள். பின்பு ஜயதேவரெப்பொழுதும் ஹரிகுணனுவாதம் செய் துக்கொண்டு ஜகன்னாதத்தில் நிவசித்திருந்தனர்.

அந்த க்ஷேத்திரத்திற்குச் சமீபமான ஓர் கிராமத்தில் உதார குணங்களையுடைய வொரு வர்த்தகனிருந்தான். அவன் ஜயதேவ ருடைய கீர்த்தியைக்கேட்டு களிப்புற்று கிருதார்த்தனாக வேண்டு மென்றெண்ணி அவரிடம்வந்து சரணமடைய, அவனதிகாரத்தைப் பார்த்து ஜயதேவரனுக்கிரகித்தனர். அவிஸ்வாசி, நிந்தகன், பரத னத்தை விரும்புவோன், அனசாரன், பித்ருதுரோகி, பரஸ்திரீகம னம் பண்ணுவோன், அனுபவமின்றி பிரமஞ்ஞானத்தைச் சொல் பவன், இக்குணங்க ளுடையோரை யெப்பொழுதும் சிஷ்யரா கச் செய்யலாகாது. அந்த வர்த்தக னிக்குணங்க ளில்லாதவன், மனவாக்காயங்களால் குருசேவா தற்பரனயிருந்தான். ஒருநாள் அவனசாரியரிடஞ் சென்று அதிக விநயத்துடன், ஸ்வாமி! தேவரீர் அடியேனுடைய கிரகத்திற்கெழுந்தருளி கிருதார்த்த னாக்கவேண் டுமென்று பிரார்த்தித்து அவரை இரதத்திலேற்றிக்கொண்டு தன

திருப்பிடம் வந்து சேர்ந்தான். ஹரிகுணகீர்த்தனை, ஆத்மசர்ச்சை, பிரமஞ்ஞானம், க்ஷமை, சாந்தி, தயை, நிஷ்காமபுத்தி, உதாரம் முதலானவை சத்சமாகத்தாலன்றிக் கிடைக்க மாட்டாதென்று வர்த்தகன் ஜயதேவரை தனது வீட்டிலிருத்திக்கொண்டு உல்லா சத்துடன் சேவைசெய்ய அவரும் அல்லும்பகலும் ஹரிகீர்த்தனைச் செய்துக்கொண்டு அஞ்ஞானிகள் துராசாரர் முதலானுரை ஹரி பக்தியில் பிரீதி உண்டாகும்படிசெய்தனர். ஒருமாசபரியந்த மவ்வி டமிருந்து வர்த்தகனைக்கண்டு ஜகன்னாதத்திற்குச் செல்ல உத்தரவு கொடுமென்று கேட்டார். அவனும் ஆசாரிய ஹஸ்தத்தைத் தன் தலைமேல் வைத்து பூரண கிருபை செய்யவேண்டு மென்று பிரார்த்தித்து ஆஸனத்தி லுட்காரச்செய்து பிரேமையுடன் பூஜி த்து குருதக்ஷிணை யென்ன கொடுப்போமென்று விசாரிக்குமள வில் சுவர்ணம் ரத்தினம், திரவியம் முதலானவையெல்லாம் அவரு க்கு மிருத்து சமானமாக இருப்பதால் அவருக்கறியாமல் அவர் மனைவியாருக்கேதாகிலுங் கொடுத்தனுப்ப வேண்டுமென்று சங் கற்பித்துக்கொண்டு ஓரிரதத்தின்மீது அனேகமான ரத்தினபரணங் களும் வஸ்திரங்களும் வைத்து அவைமீது ஆசனமொன்றுபோட்டு ஜயதேவரை சன்மானத்துடன் அதன்மேலுட்காரவைத்து சாதுர் யமுடைய ஓர் மனிதனைக் கூடக்கூட்டி அவனுடன் தானிரகசிய மாகவைத்த ஆபரணாதிகளை ஆசாரியருடைய தேவியாருக்குத் தனது நமஸ்காரங்களுடன் அற்பணைசெய்து சீக்கிரத்தில் வரக்கட வையென்றுக்கியாபித்து ஜயதேவரைவழிகூட்டியனுப்பி, அவரிடம் விடைபெற்றுக்கொண்டு வர்த்தகன் தன்வீட்டிற்குத் திரும்பினன்.

ஜயதேவருடன் வந்தமனிதன் தன்வீட்டி லத்தின மேதோ துரிதமான காரியமிருக்கிறதென் றவருடன் விண்ணப்பஞ்செய்ய, அவரும் கருணைகூர்ந்து அடிமைத்தொழில் பராதீனமாக்குமெ ன்று அவனை வீட்டிற்குப் போய்க் காரியசாதனஞ்செய்துக்கொள் ளென் றனுப்பிவிட்டுத் தானொருவராக இரதத்தை யோட்டிக் கொண்டு அரண்ணியத்திற் போய்க்கொண்டிருந்தார். இரண்டு பேர் திருடர், வர்த்தகன் குப்ததானஞ் செய்தானென்ற தறிந்து அகஸ்மாத்தாக அவரிடம் வந்து நமஸ்காரஞ் செய்தார்கள். இரு புறத்தி லிரண்டுபேரும் வந்து தோன்றவே, ஜயதேவர் திருடரென் றறிந்து திரவியமூலமாக அனர்த்தமும், பிராணஹானிபு மாகுமல்

லவாவென்றெண்ணி இரதத்தைவிட்டிறங்கி இதனுள் வஸ்திராபரண திரவியங்க ளிருப்பதுபோல் காண்கிறது அவைகளை யுமக்கு அர்ப்பணஞ் செய்தேனென்றுசொல்லி பாதசாரியாக முன்னே நடந்தனர். திருடர் தமக்குள் தாங்கள் ஜயதேவர் முன்னேசென்று வர்த்தகனுடன் சொல்லி நம்மை சிக்ஷை செய்விப்பாராதலாலவரைக் கொன்றுவிட்டு பின்பு நாமிரதத்தை கைக்கொண்டுபோவோமென்று ஆலோசித்து சீக்கிரத்தி லவரிடம்வந்து இவரை கொல்லக்கூடாதென் றெண்ணி இரண்டு கைகளையும் இரண்டுகால் களையுஞ் சேதித்து ஆங்கோர் பாழுங்குட்டையில் அவரைக்கொண்டுபோய் போட்டுவிட்டு அந்த இரதத்தை கைக்கொண்டு தங்க ளிருப்பிடம் சென்றனர்.

ஜயதேவர் தமதிருதயத்தில் ஸ்ரீயப்பதியை ஸ்திரப்படுத்திக் கொண்டு ஞானதிருஷ்டியால் விசாரிக்குமளவில் தேகத்திற்கே துன்பமிருக்கிறதன்றி அலிப்தனை வாத்மாராமன் சுகதுக்கங்களுக்கு வேறுயிருக்கின்றான். தேகம் சகல வியாதிகளுக்கிருப்பிடம் காமக்குரோதாதிகளுக்கு மூலமாகும். திரிகுண விகாரமென்றறிந்து தேகாதீதராகி அவ்விடம் வீற்றிருந்தார். அந்த தினத்தில் கிரவுஞ்சராஜனென்றோரரசன் வேட்டை நிமித்தமாக வனத்திற்கு வர இராத்திரி சமயமானதால் அப்பாழுங்குட்டையினிட மோர் பிரகாசம் அகஸ்மாத்தாக தூரத்திற்றோன்றி அவ்விடம் சென்று பார்க்குமளவில் பரமதேஜஸ்ஸுடைய விஷ்ணுபக்தர் தியான தாரணையுடையராய், ராமா! கிருஷ்ணா! கோவிந்தாதி நாமஸ்மரணை செய்துக்கொண் டிருப்பவரைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, வெளிச்சத்திற் பார்க்கும்பொழுது கைகால்கள் சேதிக்கப்பட்டிருப்பதையறிந்து பயமுற்று ஸ்வாமி! இப்படி யாவரவஸ்தையடையச் செய்தாரென்று கேட்க, ஜயதேவரவனை நோக்கி ஐயா! என்னுடைய பிறப்பே இப்படி கர சரணமில்லாதிருக்கின்றது, சகலேந்திரியங்களு மன்னியமே யென்று சொல்லுமளவில், அரசனிவ்வார்த்தைகளைக் கேட்டு, இவர் விஷ்ணு பக்தரும் பூர்ணக்ஞானியென்று முணர்ந்து பல்லாக்கை வரவழைத்து ஜயதேவரை யதனுளிருத்தி தனது பட்டணத்திற்குக் கொண்டு போய் ஆஸனத்திலுட்காரவைத்து விதியுக்தமாக பூஜைசெய்து அவருடைய வனுக்கிரகத்தைப்பெற்று சேவகர்களை யழைத்து

சர்வகாலங்களிலும் ஸ்வாமி சேவை செய்துக் கொண்டிருக்க ஆக்கியாபித்தான். அவர்களும் சாதுசேவை சந்கீர்த்தனம் ஹரிகுணனுவாத மெங்களுடைய பாக்கியோதயத்தா லுண்டாயிற்றென்று ஆனந்தித்தனர்.

ஒருநாளரசன் ஜயதேவரிடம் வந்து, ஸ்வாமி! அடியேனுக்கொரு சேவை லபிக்கச்செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அவரவனைக்கண்டு, வாராய் அரசனே! நீர் ஸாதுஜனங்களை யாராதித்துக்கொண்டிரும். அதைக்காட்டிலும் விசேஷ சாதனமில்லை. வீட்டுக்குவரும் சஜ்ஜனங்களுக்கு இச்சாபூர்த்தியாக போஜனமிட்டு அவர்கள் கேட்கும் வஸ்திராலங்காரங்களைக் கொடுத்து திருப்தி செய்யவும். பாகவத சேவையினால் பகவான் சந்தோஷிப்பார். இலக்குமியைக் காட்டிலும் விசேஷமாக சாதுசேவையில் பிரீதியுடையவர். இவ்விதமான ததீயாராதனையைசெய்யக் கடவாயென்று சொல்ல அரசன் சொல்லுவான், ஸ்வாமி! அடியேன் அஞ்ஞான தசையி லிருப்பவனாதலா லவர்களை நானெப்படி கண்டறிவது, அவர்கள் ஸ்திதியை தேவரீ ரருளவேண்டுமென்று கேட்க, ஜயதேவர் பாகவதர்களி னடையாளங்களைச் சொல்லுகிறேன் கேட்கக் கடவாய், பன்னிரண்டு வூர்த்தவபுண்டரங்கள் தரித்தவரும், துளசிமாலையைக் கண்டத்தில் பூஷணமாக வுடையவரும், அனன்னிய பக்தியுடன் ஹரிநாமத்தைச் சொல்பவரும், இத்தன்மையுடையவர்களுக்கு நீர் சரணமடையக் கடவீரென்றுசொல்ல, அரசனதைக்கேட்டு ஆசாரியராக்ஞையை சிரசாவகித்து ஹரிபக்தர்களையாதரிக்கத்தொடங்கினான். சற்கரையைக்கண்டு எறும்பு உல்லாசத்துட னோடிவதுபோலும், மேக கற்ஜனையைக்கண்டு மயில்களாடுவதுபோலும், அரசனுடைய கீர்த்தியைக்கேட்டு அவனது பக்தி நெறியைப் பார்க்க விரும்பி சாதுக்கள் வந்துக்கொண்டிருப்பர். இப்படி வருவோர், ஜயதேவரை முன்பு கண்டு, பிறகு இராஜதரிசனத்திற்குப் போவார்கள். அரசனவர்களைக் கண்டவுடன் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து வீட்டிற்கழைத்துக்கொண்டுபோய் இச்சாபோஜனமளித்து நாலுமாசம் பரியந்தம் வைத்துக்கொண்டு அவர்கள் கோருமவற்றைக் கொடுத்தனுப்பிக்கொண்டிருப்பன்.

ஜயதேவஸ்வாமியின் கைகால்களை வெட்டினதிருடர்க ளிருவரும் சாதுக்கள் விஷயமாக அரசன் செய்யு மௌதார்யத்தைக்

கேட்டு தாமும் சாதுக்கள்வேஷம்போட்டுக்கொண்டு திரவியத்தை அரசனிடம் கேட்டால் கொடுப்பானென்று சிந்தித்து ஜயதேவரவ் விடமிருப்பது தெரியாமல் தாங்கள் கோபிசந்தனத்தால் துவாதச புண்டரங்களைத் தரித்து துளசிமாலையைக் கழுத்திலணிந்து, சோபையுடன்கூடி முனிஜனங்களைக் காட்டிலும் கொக்கினுடைய தியானம் சுந்தரமாகத் தோன்றுவதுபோல அவர்களிருவருமுள்ளத்திற் கபடத்தையுடையவராய் வெளிக்குச் சாதுக்களைப்போலத் தோன்றச்செய்து பட்டணத்திற் பிரவேசித்துக் கைகளில் ஜபமாலையை திருப்பிக்கொண்டு வெளிக்குமாத்திரம் விரக்தியைக் காண்பித்துக் கொண்டு அரசனரன்மனைக்குட்சென்று எதிரே நோக்கும்பொழுது ஜயதேவ ரா்சனத்திலிருக்கக் கண்டார்கள். உடனேயவர்களுடைய ஜீவத்வம் சிந்தையென்னும் அக்கினியில் விழுந்தது. அவர்களுக்குள் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டு நமக்கு நாமே அக்கினி குண்டத்தில் வந்துவிழுந்தோமே! யாருடைய கைகால்களை வெட்டினோமோ அந்த ஜயதேவ ரிங்கிருக்கிறாரே ! கிராதகன் ஆண்புறு 'பெண்புறுக்களை யடிக்க எத்தனிக்க ஓர் அரவங்கடித்து மாய்ந்தது போல் நம்முடைய கபடம் நம்மையே கெடுத்ததே யென்றெண்ணி முன்னேவர, ஜயதேவரும் பரஸ்பரகுறிப்பை யறிந்துக்கொண்டவராயினும் ஸர்வபூதங்களிடத்தும் விரோதமின்றி சாந்தியை வகித்திருந்தமையால் சத்துருக்கள் மித்துருக்களைப்போலத் தோன்றப்பட்டு தன் ஆஸனத்தினின்றுங் குதித்து அவர்களைகட்டியணைத்துக்கொண்டு சேவகரை அழைத்து சாதுக்கள் வந்தார்களென்று அரசனுக்கு தெரிவிக்கச் சொல்லி ஆக்கியாபிக்க, அவர்கள் இராஜனிடஞ்சென்று தெரிவிக்கவே துரிதத்தி லரச னுசாரியரிடம் வந்து பணிந்து சாதுக்களுக்கும் நமஸ்கரித்து, அவர்களுக் கிருப்பிடமேற்படுத்தி பூஜித்து போஜனமளித்து இச்சையுள்ளமட்டு மிவ்விடம் வசித்திருக்கலாமென்று சொல்ல, வேஷதாரிகள் அப்படியே இருப்போமென்று ஆமோதித்திருந்தனர்.

அவ்விருவரு மவ்விடமிருப்பது அவர்களுக்கு சிறைச்சாலை போலிருந்தது. உபசாரங்களெவையுஞ் சகிக்கவில்லை. துலுக்கர், மணிதரைச் செம்மையாகப் போஷித்துப் பிறகு அவர்களை "மகம்மாயி" யென்னும் புஷ்டி அவுஷதம் செய்வதைப்போலாகுமென்றெண்ணியிருந்தனர். இப்படி அவ்வேஷதாரிகள் சிந்தையுடைய

வராகியிருக்தமையால் க்ஷயரோகி துற்பலனைப்போல அவர்களுடைய உடம்புகள் வாடிற்று. இதைக்கண்டு அரசன் ஜயதேவரிடம் சென்று ஸ்வாமி! சிலநாள்களுக்குமுன் இரண்டு சாதுக்கள் தேவரீராலனுக்கப்பட்டு வந்தவர்களிப்பொழுது இளைத்தவர்களாகக் காண்கிறேன். அனேகவித உபசாரங்கள் வீணாகுவது போல் தோன்றுகிறது. இதற்கென்ன செய்யலாமென்று கேட்க, ஜயதேவரரசனைநோக்கி, அப்பா! சஜ்ஜனங்களுக்கு விஷய போகத்தி லாசக்தியிராது. விரக்தருக்கு மாயா மமதைகள் விஷதுல்யமாயிருக்கும். அனேக சாதுக்களுன்னிடம் வருகிறார்கள். அவர்களைக்காட்டிலு மவ்விருவர் அதிக விரக்தியுடையோர். உனது பாக்கியா திசயத்தா லித்தனைநா ளுன்னிடமிருந்தனர்கள். இனி அவர்கள் போகவேண்டுமென்றால் இஷ்டமான பொருளைக் கொடுத்தனுப்பிவிடுமென்று சொல்ல, அப்படியே செய்கிறேனென்று நமஸ்கரித்து தனதிருப்பிடம் வந்தான். பின்பு இரண்டொரு நாளில் வேஷதாரிகள் இராஜனிடஞ்சென்று நாங்கள் தீர்த்தவாசிகளாதலால் போக உத்தரவு கொடுவென்று கேட்டனர். அரசன் உமதிச்சை யென்னவென்றுகேட்க இரண்டு ரதங்கள் நிறைய திரவியத்தைக் கொடுவென்று வினவ, அப்படியே அவர்களிச்சாபூர்த்தியாகக்கொடுத்து சேவகரைக்கூட அனுப்பி நமஸ்கரித்தான். பின்பு ஜயதேவரிட மவர்கள் வந்து உத்தரவு கேட்டுக்கொண்டு மார்க்கத்தில் நடந்துபோக அரண்ணியத்தைச் சேர்ந்தார்கள். அங்கு வேஷதாரிகளை சேவகர் நமஸ்கரித்து எம்மரசனது வீட்டுக்கு சாதுக்களனேகர் வருகிறார்கள். அவர்களைக்காட்டி லும்மிடத்தில் ஜயதேவஸ்வாமிக்கு விசேஷ கிருபை யேனிருந்ததென்று கேட்க, வேஷதாரிக ளவர்களைப்பார்த்து பூர்வாஸ்ரமத்தில் நாங்களும் உம்முடைய ஸ்வாமியுமொரு துர்மார்க்கனான வரசனிட மவர் மந்திரியாகவும் நாங்கள் சேவகராகவு மிருந்தோம். அப்போது ஜயதேவரா லேதோ அபராதஞ் செய்யப்பட்டபடியால் அவர்மேலரசன் கோபித்து அரண்ணியத்திற் கொண்டுபோய் சிரச்சேதஞ் செய்ய ஆக்கினையிட்டான். நாங்களு மிவரை அரண்யத்திற்கழைத்துக்கொண்டு பிராணனை வாங்காமல் கை கால்களை மாத்திரம் வெட்டி குட்டையிற் போட்டு பட்டணத்திற்குள் சென்றோம். அன்றுமுதல் ராஜசேவையைவிட்டு விரக்தியடைந்து விஷ்ணுபக்

தராகி தீர்த்தாடனஞ்செய்துக்கொண்டு உம்முடைய நகரத்திற்கு வந்தோம், அவரை நாங்கள் கொல்லாமல் விட்டபடியால் எங்கள் மேல் விசுவாச மதிகமாகவைத்து இராஜனிடம் சொல்லி பூஜை செய்வித்தார். அவருக்கு பிராணதானங் கொடுத்ததிற் கிது பிரதியுபகாரமென்று சொல்லவே இந்த வேஷதாரிகளின் அபத்த வசனத்திற்குப் பூமிதேவி நடுநடுங்கி அவர்கள் பாதஸ்பரிசையை சகிக்காமல் பிளப்புண்டாக அவ்விருவரு மப்பிளப்பி லமிழ்ந்துபோயினர். சேவகரிந்த ஆச்சரியத்தைக்கண்டு அனர்த்தமாச்சுதென்று சிந்தித்து திரும்பி பட்டணத்திற்கு வந்து இந்த விருத்தாந்தத்தை ஜயதேவரிடம் சொல்ல, அவர். கண்களில் நீர் தளும்ப விசனமடைந்து பகவானைக்குறித்து பிரார்த்திக்கத் தொடங்கினர். ஓ பதித பாவனரே! பக்தவத்ஸலரே! ஸ்ரீகிருஷ்ணா! ருக்மணிரமணரே! ஜகஜ் ஜீவனரே! என் சத்துருக்களை யதோகதிக்கேன் போகவிடுத்தீர்? உம்மிடத்தில் விரோதபக்தியுடைய இராவணனுக்கு சாயுஜ்ய பதவியைக்கொடுத்து என்னுடைய சத்துருக்களுக்கு அதோகதியைக் கொடுத்தீர்! சிசுபாலன் சதாபராதங்கள் செய்திருந்தும் அவனிடம் கிருபையுடையவராகி என் சத்துருக்களுக்கு அதோகதி கொடுத்தீர். கம்சன் சாணூரன் பூதனைமுதலானுரை மோக்ஷத்திற்குக் கொண்டுபோனீர். ஓ மதுசூதனரே! என் சத்துருக்களுக்கேன் அதோகதியைக் கொடுத்தீரென்று தோத்திரஞ்செய்ய பகவான் சந்தோஷித்து மேகஸ்யாமளமான சுந்தர திருமேனியுடையவராகி நாலு புஜங்களுடன் பிரஸன்னரானவாறே ஜயதேவர் கை கால்கள் முன்போலவே வந்தன. வேஷதாரிகளை புஷ்பகத்திலிருத்திக்கொண்டு பகவான் ஜயதேவரைப் பார்த்து, உனது பக்தி மேன்மையடைந்தது, க்ஷமையும், தயையும், சாந்தியு முன்னிடமிருக்கின்றன. சத்துரு மித்திரரிடம் சமபாவனையுடையோருக்கு நாம் ஸ்வாதீனமா யிருப்போமென்றுசொல்லி மறைந்தனர். பக்தியின் மேன்மை பெரியது. பிரம்மாதிகளுக்கும் தெரியப்படாது.

ஜயதேவருக்குக் கை கால்கள் வந்ததை யரசன்கண்டு ஆச்சரியமுற்று தன்கைகளைக் குவித்துக்கொண்டு ஆசாரியரை நோக்கி கர சரணங்கள் முன்னில்லாதிருந்த காரணத்தைக் கேட்க, முன்னடந்த சமாசாரத்தை ஜயதேவர் முழுக்க வெளியிட்டார். அப்

போ தவ்விட மிருந்தோரால் ஜய ஜய சப்தத்தாலும், நாமஸ்மரணையினலும், பெருத்த ஓசையுண்டாயிற்று. அரசன் உடனே பல்லாக்கையனுப்பி பதிவிரதா சிரோமணியான பத்மாவதியை வரவழைத்து அனேக வஸ்திர பூஷணு லங்காரங்களைச் சமர்ப்பித்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து அரசன் தனது அந்தப்புரத்திற் சென்று மனைவியைப்பார்த்து ஜயதேவர் மனைவியான பத்மாவதி தேவியாருக்கு உன்கைகளா லிரவும் பகலும் சேவைசெய்துக் கொண் டிருக்கவேண்டுமென் ருக்ஞாபித்து தானும் தன்கைகளால் ஜயதேவருக்குச் சேவைசெய்துக் கொண்டிருந்தான்.

இப்படியிருக்க ஒருநாள் அந்தப்புரத்தில் இராஜன் மனைவி சபைசெய்து உட்கார்ந்துக் கொண்டிருக்க, சுகந்தங்களில் கஸ்தூரி சிரேஷ்டமானதுபோல பத்மாவதி தேவியார் முக்கியாசனத்தில் வீற்றிருந்தாள். அவ்விடம் அகஸ்மாத்தாக ஓர் தூதி வந்து இராஜபந்து ஒருவன் மரணமடைய அவன் பத்தினி தன்பதியை சித்தத்தில் வைத்துக்கொண்டு உடன்கட்டை யேறப்போகிருளென்னும் வர்த்தமானத்தைச் சொன்னுள். இச்சங்கதி அரசன் மனைவி முதலானோர் கேட்டு ஆச்சரியமடைந்தனர். பத்மாவதி மாத்திரமதனை யாச்சரியமாக எண்ணவில்லை. இதை இராஜபத்தினி கண்டு அத்தேவியார் சமீபம் வந்து கைகளை கூப்பிக்கொண்டு தாயே! மாயா மமதைகளைவிட்டு நிஜபதியை யிருதயத்திலிருத்திக்கொண்டு ஏழு ஜன்மங்கள் வரைக்குமவனே பதியாகவேண்டுமென்று உடன்கட்டை யேறப்போனல் உமது சித்தத்திற்கது ஆச்சரியகர மாகாம லிருப்பதற்கென்ன காரணமென்று கேட்க பத்மாவதி அவளைப்பார்த்து பர்த்தா முன்புபோனல் பின்பு பத்தினி போவாளாயின் எந்த காலத்திலவனைச் சேருவாளோ தெரியாது, பர்த்தா மரணமடைந்தானென்னும் வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில், சூரியன்பின் கிரணம் போவதுபோல, பிராணனைக் கொடுத்துவிடவேண்டுமென்று சொல்ல, அரசன் மனைவி ஆச்சரியத்தையடைந்து அனுபவமின்றி சொல்லுகிருளென்று நம்பாமலிருந்தனள். அனுபவமற்ற ஆத்மஞானமும், பிராணமில்லாத சரீரமும், மூக்கில்லாத முகமும், தனலுப்தனுடைய பிரேமையும், சாதனையில்லாத சுத்த பாவமும் நிஷ்பலங்களானதுபோல அரசன் மனைவிக்கு அவ்வார்த்தை யசத்தியமாகத்தோன்றி தனது மந்தி

ரியை அழைத்து இச்சங்கதியைத் தெரிவித்து ஜயதேவர் மரண மடைந்தனரென்னும் வார்த்தை பட்டணத்திற் சமயோசிதமாகத் தெரியப்படுத்த வேண்டுமென்று சொன்னாள். இப்படி இருக்க ஒரு நாள் இராஜன் வனவிஹாரமாகச்செல்ல ஜயதேவரையும் பல்லாக்கி லுட்கார வைத்துக்கொண்டு அரண்ணியத்திற்குக் கொண்டுபோனான். அப்போது இராஜபத்தினியின் மந்திரி ஓர் மனிதனைவிட்டு ஜயதேவஸ்வாமி புலியினாலடிபட்டுசெத்தாரென்று சொல்லவேண்டுமென்று அவனுக்குக் கற்பிக்க அவனுமப்படியே பட்டணமெங்கும் தெரியப்படுத்தினான். இதுவுமன்றி நம்புதலை யுண்டாவதற்கு ரக்த வஸ்திரத்தையும் காட்டினான். இராஜஸ்திரீ யிந்த வார்த்தையைக்கேட்டு கபடமாக அழுதுக்கொண்டிருக்க பத்மாவதிதேவி அவ்விடம் வந்து விசனத்திற்கு காரணத்தை விசாரித்தாள். அப்போது இராஜபத்னி தேவியாரைப் பார்த்து அம்மே! அனர்த்தமுண்டாயிற்று இன்றையதினம் ஜயதேவஸ்வாமியை அரண்யத்தில் புலி அடித்துக் கொன்றதாமென்று சொல்ல அப்போது பத்மாவதி இவ்வார்த்தை மும்மாறு சத்தியமாவென்று கேட்க ஜயதேவஸ்வாமி யதார்த்தமாகக் கொல்லப்பட்டாரென்று சொன்னாள். பத்மாவதி யிந்த வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில், தீபத்துடன் தேஜசு செல்வதுபோலும் பிராணனை விட்டாள். சாயந்திரமாம்போது அரண்ணியத்திலிருந்து அரசன் பட்டணத்திற்குவர, தன் பிரதானியால் சகல விருத்தாந்தங்களு மறிந்துக்கொண்டு தன் மனைவியைக் கொன்றால் ஸ்திரீ ஹத்தி வருமென்றெண்ணி தானே பிராணத் தியாகம் பண்ணிக் கொள்ளவேண்டுமென்று எத்தனித்து பட்டணத்திற்கு வெளியே பெருத்த அக்கினியை யுண்டாக்கி, ஜயதேவஸ்வாமி முன்பு வந்து நமஸ்கரித்து, ஓ ஸ்வாமி! என்னால் அனர்த்தமுண்டாயிற்று என்று சொல்ல ஞானபரிபூரணரான ஜயதேவஸ்வாமி சர்வத்தையு மறிந்துகொண்டவராகி இராஜனை சமாதானப்படுத்திப் பிராணபரித்தியாகம் செய்யவேண்டாமென்று சொல்லி பத்மாவதி தேவியார் திருமேனி சமீபத்திற்கு வந்து தாளவீணைகளை யேந்திக்கொண்டு ராதா மாதவ விலாசமான இருபத்தனலு அஷ்டபதிகளையும் பாடி நடனஞ்செய்து கேசவா, கோவிந்தா, நாராயணா, நரஹரி, முகுந்த, மாதவா, பக்தவத்ஸலா, பத்மநாபா, கோகுலபாலா

கஜேந்திர ரக்ஷகா, பிரஹ்லாத ரக்ஷகா, பதிதபாவனு, பாண்டவ ரக்ஷகா, பரந்தாமா, மனமோஹனு, மேகஸ்யாமா, கோபீஜனமானசரஞ்சனு, அனுதநாதா, ருக்மணீவர, திகம்பரா, ஜகதோத்தாரா, ஸ்ரீ கிருஷ்ணு அதிதீனனுன வென்னை சீக்கிரமாக ரக்ஷியும் என்று இவ்வண்ணமாகதுதிக்க இக்கருணு வசனங்களைக்கேட்டு பகவான் பிரஸன்னராகி ஜயதேவரை ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு உன்னுடைய அஷ்டபதிகளை யார் பாடுவார்களோ, யாவர் பிரீதியுடன் கேட்பார்களோ அவர்கள்சமீபத்தில் கரங்களைக் குவித்துக்கொண்டு நிற்பேனென்று சொல்லி பத்மாவதி சரீரத்தைத்தொட்டு ஸஜீவியாகச் செய்தருளினுர். அச்சமயத்தில் சமஸ்த ஜனங்களும் பக்தர்களும் ஜயஜயவென்னும் ஓசையைச் செய்தார்கள். தேவர்கள் விமானுரூடராகி புஷ்ப வருஷத்தைப் பொழிந்தனர். சகலரும் சந்தோஷத்தை யடைந்தார்கள். அரச னனேகபரியாயம் ஜயதேவருக்கு நமஸ்கரித்தான். இந்த சரித்திரம் உத்தமமானது, இதனை கேட்போரையும் படிப்போரையும் ருக்மணீகாந்தன் ரக்ஷிப்பர்.

---

## துளஸிதாசர் சரித்திரம்.

ஹஸ்திநுபுரத்தில் ஆத்மாராமனென்று கனேஜா பிராம்மணனெருவனிருந்தான். அவன் தருமமும் சீலமும் தயை முதலான குணங்களை யுடையவனுய் அகுபர் என்னும் மஹா ராஜனிடம் மந்திரியாகவிருந்தான். இவனுக்கு வால்மீக முனியம்சமாக ஒரு பிள்ளைபிறந்தது. அக்குழந்தைக்கு ஜாதகர்ம நாமகர்மங்களை தகப்பன் பிராம்மணர்களைக் கொண்டு செய்வித்து துளசிதாஸென்று பெயரிட்டான். தாய் தந்தைகள் உல்லாசத்துடன் பிள்ளைக்கு சரிவயசு வந்தவுடன் உபநயனத்தைச் செய்து சந்தியா வந்தனம் வேதாத்யயனம் முதலானவைகளை விதிபூர்வகமாகக் கற்பித்து பன்னிரண்டுவருஷம் பிரமசரிய விரதத்தை நடப்பித்து பின்பு மமதாதேவி யென்று பேர்பெற்றவளை விவாகஞ் செய்தார்கள். தாருண்ணிய தசை வந்தவுடன் தம்பதிக ளிருவருக்கும் விசேஷ பிரீதியுண்டாகி ஒருவரைவிட்டு மற்றொருவர் பிரியாமல் நானுவித வஸ்திர பூஷணங்களையும் கேஸரி கஸ்தூரி, சந்தனம், ஏலம், ஜாபத்திரி முதலான போகத்திரவியங்களால் நிதமும் போகங்களை யனுப

வித்துக்கொண்டு வந்தனர். துளசிதாஸர் மனைவி, பதிவிரதா சிரோமணியாகி அனன்னியபாவத்துடன் புருஷனிஷ்டத்தின்படி சேவை செய்துக்கொண் டிருந்தனள்.

ஒருநாள் அகுபர் மகாராஜன் துளசிதாஸரைக்கூட அழைத்து வனவிஹாரத்திற்குச் சென்றனன். அத்தினத்தில் மமதாதேவி தாயாருக்குச் சரீரம் செம்மையில்லையென்றும் தன்குமாரத்தியை வந்து பார்த்துப் போகவும் சமாசாரம் வந்ததா லதனைக்கேட்டு மமதாதேவி அத்யந்த துக்கத்துடன் பரிதாபத்தை யடைந்திருக்க, இவ்வார்த்தையைச் சொன்ன மனிதன் மமதாதேவியைப் பார்த்து, அம்மா! நீ துக்கிக்கவேண்டாம், உன்தாயாருக்கு சரீரவியாதியில்லை நீ உன்தாயாரைக்கண்டு வெகுகாலமானபடியால் இப்படி சொன்னால் வருவாயென்றெண்ணி சொல்லியனுப்பினதே தவிர வேறல்லவென்று விளம்பினன். அப்பொழுது மமதாதேவி மாமனார் மாமியாரிடஞ்சென்று அவர்களைநோக்கி இன்றையதின மெனது பர்த்தா வனவிஹாரத்திற்குச்சென்றனர். அவர் வருமுன் அடியாள் தாயாரைக் கண்டுவருகிறேன் விடைகொடுத்தருள வேண்டுமென்று வேண்ட, அவர்கள் சம்மதித்து விடைகொடுக்கத் தாயார் வீட்டுக்குச் சென்றாள். அன்றையதினம் சாயங்காலத்தில் துளசிதாஸர் வீடுவந்துசேர்ந்தவுடன் நடந்தவிருத்தாந்தத்தை தாயார்சொல்லக்கேட்டு மமதாதேவியை மனதில் நினைத்து ஓ பிரியமுடையவளே! இவ்விடமென்னைத் தனியாகவிட்டு தாய்வீடு சென்றாயே! என்று சிந்தித்து, சயனித்தபோதிலும் நித்திரை வாராதிருக்க, அப்போதே புறப்பட்டு ஐந்து கோசதூரமிருக்கும் தன்மாமியார்வீட்டைச் சேர்ந்தார். அப்பொழுது நடுராத்திரியானதா லவர்கள் கதவுகளைச் சாற்றிக் கொண்டு நித்திரையி லிருந்தமையால் தானுட்புகுர நேராமல் வீட்டைச்சுற்றி வருமளவில் ஒரு சர்ப்பம் மெத்தைமேலிருந்து கீழ்வரைக்குந் தொங்கிக்கொண்டிருக்க வதனைப் பிடித்துக்கொண்டு மெத்தைமேலேறி யுள்ளே பிரவேசிக்குமளவில் அவ்விடத்திய சேவகரெழுந்திருந்து துளசிதாஸரைக் கண்டனர். மமதாதேவி விழித்துக்கொண்டு தன் பர்த்தாவைப் பார்த்து ஆச்சரியத்தை யடைந்தாள். துளசிதாஸர் தன் மனைவியைப்பார்த்து ஓ சுந்தரீ! என்னைவிட்டு நீ இவ்விடமேன்வந்தாய்! ஐந்து கோசதூரம் நடந்து உன்னிமித்த மிவ்விடம் வந்தேனென்ன, மமதாதேவி பூர்ணப்பிரவாஹ

த்துடனிருக்கும் யமுனு நதியைத்தாண்டி எப்படி வீட்டுக்குள் பிர வேசித்தீரென்று கேட்க, துளசிதாசர் சொல்லுவார். எனக்கு முன க்கு மிருக்கும் பிரீதி விசேஷத்தால் எனக்காக கயிறு கட்டிவைத் தாயன்றோ! அதைப்பிடித் தேறிவந்தேனென்ன, மமதாதேவி நான் கயிறுபோடவில்லையே! நீர் சொல்லுவதுபொய்போல் காணு தே என்று சேவகரை தீபத்தைக் கொண்டுவரச்சொல்லி மேடை யிற்சென்று பார்க்குமளவில் அவ்விடத்தில் மஹா சர்ப்பத்தைக் கண்டு அனைவரு மாச்சரியமடைந்தனர். அப்பொழுது மமதாதேவி தன் பர்த்தாவை ஏகாந்தமாக அழைத்து ஒ பிராணநாதரே! அடி யாள் வாக்கியத்தைக்கேளும், நீர் புத்திமானென்றும் விதரணைசாலி யென்றும் எண்ணுகிறீர்,விவேக மெம்மாத்திரமுமில்லை, தாய்தந்தை பந்துக்கள் சம்பத்து யாவையும் விட்டு இவ்விரவி லொண்டியாக எனக்காக ஏன் வந்தீர்? எம்போல ஸ்திரீகளால் இராவணன் முத லானவனேகர் நாசமடைந்தனர், தீபத்தைப் பார்த்து விட்டிற்பூச்சி நாசமடைவதுபோல ஸ்திரீகாமம் கெடுதலைக்கே காரணமாம், ஆத் மாராமனை யறியாமல் பிராந்திவிஷயத்தி லபேக்ஷை யுடையவராக நிற்கின்றீர், ஸ்ரீராமர் சகலருக்கும் விஸ்ராமர், பிள்ளை, பெண் டுகள், தனம் முதலானதுகளின்மேல் பிரியம் வைப்பதுபோல ஸ்ரீஹரிசரணத்தில் பிரீதிவைத்தால் ஜன்மசாபல்ய மாகுமென்று மமதாதேவி சொல்ல, துளசிதாசர் அனுதாபத்தை யடைந்து ஒ தாயே! நீசொன்னது சத்தியமென்று சரணங்களைத் தொட்டு நம ஸ்கரித்து அவ்விடம் விட்டுப் புறப்பட்டு பூர்வஜன்ம காரணத்தை யறிந்து காசிப்பட்டணம் சேர்ந்தார்.

ஸ்ரீராம சரித்திரத்தைப் பாடி ஜனங்களைப் பக்தியில் சேர்க்க வேண்டுமென்றும், விஷயசுகம் நாசமடையத்தக்க தென்றும், அதனிட மித்தனைநாள் பிரீதியடைந்து காலம் போக்கினே னென் றும், அனுதாபத்துடன் பாகிரதியில் ஸ்நானம் பண்ணி அன்ன மும் பழவர்க்கங்களையும் சாப்பிடாமல் இலை சருகுகளைச் சாப்பி ட்டுக் கொண்டு ஸ்ரீராம ரெப்போது தரிசனங் கொடுப்பாரென்று இராமத்தியானமே செய்துக்கொண்டிருப்பர். இவர் சௌசவிதி யை செலுத்த ஓரரண்ணியத்திற்குச் சென்று காலலம்பின பிறகு மிருந்த ஜலத்தை ஒருவிருக்ஷத்தினடியிற் பரிஹரித்து வந்தனர். பன்னிரண்டு வருஷங்க ளல்லும் பகலும் நாமஸ்மரணை செய்துக்

கொண்டு க்ஷணநேரமு மிடைவிடாம லனுஷ்டித்து வந்தனர். ஒரு நாள் துளசிதாஸர் சௌசத்திற்குச்சென்று மிருதி ஜலத்தை அந்த ஸ்தலத்தில் பரிகரிக்கும்பொழுது பயங்கரமான ஒரு பிசாசம் கைகளைக் குவித்துக்கொண்டு துளசிதாஸர் முன் நின்று உமக்காக நான் பிரஸன்னனானேன், வேண்டும் வரங்களை கொடுப்பேனென்று சொல்லிற்று. அப்பொழுது துளசிதாசர் நீயாரென்று கேட்க நான் பிசாசமாகும், அனேகதினங்களாக நீர் இவ்விடம் பரிஹரிக்கும் ஜலத்தை பானஞ்செய்துக் கொண்டிருக்கிறேன், எனக்கு தாஹமெடுக்கும்பொழுது ஆற்றின் ஜலமாகிலும் கிணற்று ஜலமாகிலும் பானஞ்செய்ய வதிகாரமில்லை யாதலால் நீ இத்தனை நாள் உதகபானம் செய்வித்தாயாதலால் என்னாலாகுங் காரியத்தை யாக்ஞாபித்தால் செய்வேனென்று சொல்லிற்று. ஸ்ரீராம தரிசனத்தை இச்சித்திருக்க பூதம் பிரஸன்னமாச்சுதென்று துளசிதாஸர் ஆச்சரியப்பட்டு, சித்தாந்த ஞானத்தை இச்சித்தபோது பாஷண்டஞானம் கேள்விப்பட்டதுபோல நீ பிரசன்னமானால் உன்னாலென்ன செய்யக்கூடுமென்ன, பூதம், காரியசாதனைக்கு ஏற்றக்குறைச்சலொன்றும் பார்க்கவேண்டாமென்ன, அதற்கு துளசிதாசர், ஆனாலெனக்கு இராம தரிசனத்தைத் தவிர வேறு இச்சையில்லையென்று சொல்ல, அந்த பூதம் பின்னுக்குச்சென்று இவ்வெழுத்துகளுச்சரிக்கப்பட்டால் நான் நாசமடைவேன், நீர் யாரைக்காண இச்சிக்கிறீரோ அவருடைய சேவகரான ஆஞ்சனேயரின் தரிசனத்தை செய்விக்கிறேனென்று சொல்லிற்று. ஆனா லவ ரெங்கிருப்பாரென்று துளசிதாசர் கேட்க, நீர் தினந்தோறும் புராணச்சிரவணம் செய்யுமிடத்திற்கு விருத்தப்பிராம்மண வேஷத்தைக்கொண்டு எல்லவருக்கும் முன்னுதாக வருவதும் எல்லவரும் போனபிறகு போவதும், தலையிலோர் குல்லாவும், வஸ்திரங்கள் ஜீரணமாயும் கையிலோர் தடியுமாக இருப்பவர் ஆஞ்சனேயரென்று பிசாசஞ்சொல்லிமறைந்தது.

பின்பு துளசிதாஸர் ஆச்சிரமத்திற்கு வந்து மறுநாள் ஸ்நானஞ்செய்து நித்திய நியமங்களை முடித்து நாமஸ்மரணை செய்துக்கொண்டு புராணம் நடக்குமிடம் சென்றனர். அவ்விடம் பிசாசம் சொன்ன குறிப்புகளுடைய பிராம்மணர் உட்கார்ந்துக்கொண்டிருந்தனர். புராண சிரவணமானபிறகு கேட்கவந்தவர்களனைவரும் தமதிருப்பிடம் சென்றனர். எல்லோருக்கும் பின் அந்த விரு

த்த பிராம்மணர் மௌனத்தைத் தரித்து போகத்தொடங்க, துளசிதாசர் அவர் பின் றொடர்ந்தனர். பட்டணத்திற்கு வெளியேபோகும்பொழுது யாருமிராதவிடத்தில் அந்தப் பிராம்மணருடையச் சரணங்களைப் பிடித்துக்கொண்டு, ஸ்வாமி! என்னிடம் கிருபை செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க அவ்வந்தணர், நீயார்? என்னையேன் தீண்டினாய்? நான் ஆனாதன், தரித்திரன், என் கால்களை ஏன் பிடித்தாயென்று கேட்க, துளசிதாஸர் நீர் ராமபக்தர், ஆஞ்சனேயராவீரென்று சொல்லித் திரும்பிச் சரணங்களைப் பிடித்தார். அப்போது துளசிதாஸரது பூர்வ விருத்தாந்தத்தை விசாரித்து வால்மீகாம்ச மென்றறிந்து ஆஞ்சனேயர் பிரஸன்னராகி உன்னிஷ்டமென்னவென்று கேட்க, ஸ்ரீராம தரிசனமெனக் குண்டாகும்படி கிருபை செய்யவேண்டுமென்று துளசிதாசர் வேண்டிக்கொள்ள அப்படியே யாகக்கடவதென்று சொல்லி மறைந்தனர். பின்பு ஆஞ்சனேயர் ஸ்ரீராமமூர்த்தியைப் பிரார்த்தித்து துளசிதாசருக்குப் பிரஸன்னராகி மனோபீஷ்டங்களைத் தீர்க்கவேண்டுமென்ன பகவானுமப்படியே யென்று அருள்புரிந்து சகல வானர சேனையைக்கூட இட்டுக்கொண்டு துளசிதாசருடைய ஆச்சிரம சமீபமாக போய்க்கொண்டிருக்க, துளசிதாஸர் யாரோ மிலேச்சன் போகிறானென்று சும்மாயிருந்துவிட்டார். சமஸ்த சேனைகள் வானரர்களென்றும் துலுக்கராஜன் ரகுவீரரென்று மறியவில்லையாதலால் நமஸ்கரித்தாரில்லை. பின்பு ஆஞ்சனேயர் துளசிதாசரிடம் வந்து உன்னிஷ்ட பூர்த்தி பகவான் செய்தாரா? வென்று கேட்க, இராம தரிசன மெனக்காகவில்லையென்று சொன்னார். ஆஞ்சனேயரப்பொழுது இதற்குமுன் பகவான் உன் ஆச்சிரமத்திற்கு முன்பாக போனாரன்றோ! வென்ன துளசிதாசர் யாரோ ஒரு துலுக்கப்பிரபு போனாரென்ன, ஆஞ்சனேயர், அந்த வேஷத்துடன் ஸ்ரீராமமூர்த்தி சென்றாரென்ன துளசிதாஸர், ஜலமானது பூமியெங்குமிருக்கினும் சாதகபக்ஷி அந்த நீரை கிரகிக்காததுபோல இராமோபாஸகரான பக்தர்கள் ராம சொரூபத்தைத்தவிர இதர சொரூபத்தை மன்னிக்கமாட்டார்கள். வால்மீகர் பூர்வத்தில் வர்ணித்தாப்போலே நான் பகவானுடைய ரூபத்தைக் காணவேண்டுமென்று சொல்ல ஆஞ்சனேயர் புன்சிரிப்புடன் ரகுநந்தன ரப்படியே யருளுவரென்று சொல்லி மறைந்தனர்.

ஆஞ்சனேயர் பின்பு பகவானைத் தியானிக்கத் தொடங்கி ஜய அயோத்தியவாசா! சீதாரமணா! இராவணாந்தகா! பதிதபாவனா! தீனோத்தரணா! தைத்தியமர்த்தனா! ஸ்ரீராமா! வென்று தோத்திரஞ்செய்ய பகவான் பிரசன்னராகி உன்மனோரதமென்னென்று கேட்க, துளசிதாஸருக்கு, தரிசனந் தந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, கலியுகத்தில் சாக்ஷாத் சகுணதரிசன மெப்படியாகுமென்று பகவான் கேட்க ஆஞ்சனேயர் சொல்லுவார். துளசிதாஸசர் வால்மீகரம்சமாக அவதரித்தனர், ஜனங்களை பக்தியிற் பிரவேசிக்கச் செய்யவேண்டுமென்று தேவரீரே ஆக்ஞாபித்தருளினீர், ஆதலால் அம்சாவதாரமாகப் பிறந்தவராதலால் தரிசனந் தந்தருள வேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அப்படியே செய்வேனென்று சொல்லி பகவான் சீதாலக்ஷ்மண சகிதராகி சகுணரூபத்தைத்தரித்து ஆஞ்சனேயருடன் பக்தருக்குத் தரிசனங் கொடுக்கச்செல்லும்போது முன்னுதாக அஞ்சனைச்செல்வர் சென்று துளசிதாசரைக் கண்டு இப்பொழுதே இராம மூர்த்தி உன் மனோரதத்தை தீர்ப்பாரென்று சொல்ல, அவர் சந்தோஷ யுக்தராயிருந்து பிரத்தியக்ஷத்தில் பகவானைப் பார்த்தார். பிரகாசம் பொருந்திய கிரீடத்தைத் தரித்து, பீதாம்பரதாரியாகி வில்லம்புகளையுடையரா யெழுந்தருளிய ஸ்ரீராமமூர்த்தியைக் கண்டு அபாரமான ஆனந்தத்தை யடைந்து அனன்னிய பாவத்தால் திருவடிகளுக்கு நமஸ்கரித்து நிற்க, பகவான் பிரேமையினால் பக்தரைக் கருணித்தருளினார். பின்பு ஆஞ்சனேயர் துளசிதாஸரைப்பார்த்து இராமரூபத்தைப் பிரத்தியக்ஷமாகப் பார்த்திராதலால் அவருடைய லீலையை ஜனங்களுக்குச் சொல்லக்கடவை. கலியுகத்தில் யாக யோக வேதாத்தியயனங்க ளாகாவாகையால் பகவந்நாம மகிமையைப் பிரகடப்படுத்தி ஜனங்களைப் பக்தியிற் பிரவேசிக்கச்செய்யுமென்று சொல்லிப் பெருமாளைப்பார்த்து, ஸ்வாமி! தேவரீர் அபய அஸ்தத்தாலனுக்கிரகிக்க வேண்டுமென்றுப் பிரார்த்திக்க பெருமாளுமப்படியே அபயஹஸ்தத்தைக் கொடுத்து அதிருசியரானார். உடனே கவித்வதாரையுண்டாகி துளசிதாஸர் பகவத் குணானுபவ வர்ணனம் செய்ய உபக்கிரமித்தனர்.

காசிபட்டணத்திற் சகல ஜனங்களும் துளசிதாஸருடைய ஹரிகீர்த்தனைகளைக் கேட்கத் தொடங்கி அவரிருக்கும் நிமித்த மோர்

மடத்தை யேற்படுத்தினர்கள். சுகுணசாலியான ஒரு ஸ்ரீமந்தன் துளசிதாசரிட மனுக்கிரகத்தைப் பெற்று நானாவித பதார்த்தங்களையுங் கொண்டுவந்து மடத்திற்குபயோகமாகும்படி செய்து வந்தான். போஜனசமயத்தில் துளசிதாஸருடன் அனேக யாசகரும் ஏழைகளும் ஆயிரம்பேர்வரையில் சாப்பிட்டுக்கொண்டிருப்பார்கள். புரஜனங்களவரது பிரபாவத்தைக்கேட்டு அனேக பாத்திரங்களும் பதார்த்தங்களும் கொடுத்துக்கொண்டிருப்பர், சிலர் கொடுப்பவரும் சிலர் வாங்கிக்கொண்டு போவாரும், சிலர் பூஷிப்பவரும், சிலர் நிந்திப்பவரும், இவ்வண்ணமாயிருந்த போதிலும் துளசிதாஸர் தன்மனதிலேற்றக்குறைச்சல்களை யெண்ணாமல் ஆகாயம் போல ஒட்டாதிருந்தார். போஜனமான பிறகு ஹரிகீர்த்தனை விஸ்தாரமாக நடக்கும். பஜனைசெய்யும்பொருட்டு பெரியோர்களனேகர் வருவார்கள். இரவு காலங்களில் கதவுகளைத்திறந்த வண்ணமாகவைத்து நித்திரை செய்வார்கள். இப்படியிருக்க ஓரிரவில் இரண்டுபேர் திருடர் பிரவேசித்து யாவரும் நித்திரையிலிருக்கும்போது ஸ்வர்ண பாத்திரங்கள் முதலானவைகளை மூட்டையாக கட்டித் திருடிக்கொண்டு போகுஞ்சமயத்தில் துவாரத்திலிரண்டுபேர் வில்லம்புகளை யேந்தி சூரரைப்போல உட்கார்ந்திருந்தனர். திருடரவர்களைப் பார்த்து நாம் பிரவேசிக்கும்போது யாருமிருக்கவில்லையே என்று ஆச்சரியப்பட்டு வடக்கேயிருக்கும் வாசற்படியிற் சென்று பார்க்க அவ்விடமும் கிரீடகுண்டலங்களைத் தரித்து வில்லம்புகளுட னிருவரிருக்கக் கண்டு தெற்குவாசற்படியிலுமப்படியே தோணப்பட்டு ஒன்றுந்தோன்றாமல் சற்றுநேரத்தில் போய்விடுவர்களென்றும், பின்பு நாம் மூட்டையைக் கொண்டு போவோமென்றும் நாலுநாழிகை சும்மாயிருந்து திரும்பி துவாரத்திற்போய்ப் பார்க்குமளவில் முன்போலவே சேவகரிருப்பதைக் கண்டு பயமுடையவராகி சொர்ண பாத்திரங்களை மடத்திலேயே வைத்துவிட்டு வீட்டுக்குப்போக வாசற்படியில் வர அவர்களைப் போகாமல் தடுத்தனர். இதற்குள் அருணோதயமாயிற்று. மடத்திலிருப்பவரெல்லோரு மெழுந்திருந்து இராமமூர்த்திக்கு ஹாரதிகளைக் கொடுத்தனர். பின்னர் துளசிதாஸர் வாசலில் வர அவ்விரண்டு திருடரும் வந்து திருவடிகளில் விழுந்து க்ஷமித்து ரக்ஷித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர். துளசிதாஸ ரிருவரையும் பார்

த்து யாரென்று கேட்க நாங்கள் திருடர்கள், திருடவேண்டு மென்று வந்தோம், துவாரத்திலிருவர் வில்லம்புகளுடனிருந்து எங்களை வெளியிற்போகச் செய்யவில்லை, இந்த சொர்ண பாத்திரங்களைக்கொண்டு போகக்கூடாமல் இவ்விடமே வைத்துக் கொண்டிருந்தோம், இவ்வண்ணமான வபராத மெங்களால் நடந்தது, நீர் இராம பக்தராவீர் உதார குணத்தை யுடையவராவீர், இரவில் கவாடங்களை மூடாதிருக்கிறதால் நாங்கள் பயமின்றி திருடுவதற்கு வந்தோம், எங்களை ரக்ஷியுமென்று வேண்டிக்கொண்டார்கள். துளசிதாஸரப்பொழுது சிஷ்யரை யழைத்து எனக்கறிவிக்காமல் துவாரத்தில் காவலாளிகளை வைத்தவராரென்றுகேட்க சிஷரவரைப்பார்த்துஸ்வாமி! நாங்கள் தேவரீர் திருவடிசாக்ஷியாக காவலாளிகளை வைக்கவில்லையென்று சொன்னார்கள். அவ்வேளையிலந்த திருடர் துளசிதாஸரைப்பார்த்து ஐயா! அவ்விரண்டு காவலாளிகள் கிரீடகுண்டலங்களைத் தரித்து பீதாம்பரதாரிகளா யிருந்தார்களென்றுசொல்ல,அனைவருமாச்சரியமடைந்து வாசற்படியினிடம் வந்து பார்க்கும்பொழுது அவ்விடம் ஒருவருமில்லை. இதைக்கண்டு துளசிதாசர் கண்களில் ஜலம்பெருகச்சொல்லலுற்றார்.இராமபிரானும் இலக்ஷ்மணப்பெருமாளும், துவாரரக்ஷகராளுப்போல் தோன்றுகிறது, நானாயோக சாதனைகளாலும், தீர்த்தாடனங்களாலும், பிராப்தமாகாத ஜகத்ரக்ஷகர் துவாரபாலர்களானாரன்றோ! ஏகபாணம் ஏகவசனம் ஏகபத்னி விரதமுடையவரும், ராவணாந்தகருமான ரகுனந்தனர் துவாரபாலகரானாரன்றோ! பாததூளியால் கல்லைப் பெண்ணாக்கினவரன்றோ! ஜயரகுவீரா! பரமபுருஷா! நீலகண்டபிரியகரா! விஸ்வோத்தாரா! உபமன்யனெனும் குழந்தை, பால் வேண்டுமென்றான், அவனுக்குப் பாற்கடலையே கொடுத்தீர், துருவனெனும்பாலகனுக்கு அழிவற்ற துருவபதத்தைக் கொடுத்தீர், உமக்குப்பிரியரான விபீஷணருக்கு ஸ்வர்ணபுரியைக் கொடுத்தீர், இவ்வள வௌதார்யத்தை நீர்வகித்திருக்க சொர்ணபாத்திரங்கள் திருடர் கொண்டுபோனால் லோபத்வமேன் உண்டாயிற்று என்று அனுதாபத்துடன் திருடரைப் பார்த்து நீங்கள் சங்கோசமின்றி இஷ்டப்படி வேண்டியவற்றைக் கொண்டு போகலாமென்று சொல்ல, அவர்கள் துளசிதாஸர் திருவடிகளைப்பிடித்துக்கொண்டு ஸ்வாமி! நாங்கள் பாபிகள், துர்ஜனர்கள், ஞானமற்றவர்கள், உமது

சாங்கத்திய மகிமையால் பரிசவேதி இரும்பை பொன்னுக்குவது போல ஸ்ரீராம தரிசனமாயிற்று. சூரியோதயத்தி லிருள் நீங்குவது போல உமது தரிசனத்தா லெங்க ளஞ்ஞானம் போயிற்றுதலால் எங்கண்மேல் கிருபைவைத்து அபயதானங்கொடுக்கச் சொல்லி வேண்டினுர்கள். துளசிதாஸரவர்களைப் பார்த்து நீங்கள் பாக்கியவான்கள், ஆயாசமின்றி உங்களுக்கு இராமமூர்த்தி தரிசனத்தையருளினுர், நீரைத் தேடிப்போனல் அமிர்தமகப்பட்டாப் போலே யாயிற்றென்று சொல்ல, அவ்விருவரும் நமஸ்கரித்து துஷ்ட புத்திகளை விட்டு அவரிடமே யிருந்தனர். பாகவதத்தில் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி உத்தவருக்கு இரகசியமாகச் சொன்னதாவது; பகவானை யடையவேண்டுமேவர் சற்சங்கம் செய்யவேண்டுமென்றும் அதனல் ஹரிகுணனுவாதம் கேட்கப்படுமென்றும், நாமஸ்மரணையில் பிரீதியுண்டா மென்றும், அருளினுராதலால் ஜாரராளுலும், சோரரர்னுலும், துர்ஜனர்களாலுலும், சாதுஜன சமாகமத்தால் சாதுக்களாவார்கள்.

ஒருநாள் துளசிதாசர் மடத்தில் அனேக்பிராம்மணர்கள் அன்னத்தை புஜிக்க உட்கார்ந்து ஆபோசனமிடும்பொழுது ஒரு பிராம்மணன் வாசற்படியில் வந்து "ஜயசீதாராம்"என்றுரைத்து நான்பிரம்மஹத்தியைச் செய்த பிராம்மணன் புசிப்புக்கொடுமென்று கேட்டான். அப்போது அந்தணரெல்லோரு முள்ளே உட்கார்ந்திருக்க, துளசிதாஸர் வாசற்படியில் வந்து அவ்வந்தணனுடைய அஸ்தத்தைப் பிடித்துக்கொண்டு மற்றப் பிராமணருடன் உட்காரவைத்து ஐயா! அந்தணரே! நீர், சீதாராமாயென்று உச்சரித்தவுடனே பிரம்மஹத்திமுதலான தோஷமெல்லாம் போயிற்றுதலால் சொஸ்தமாக உட்கார்ந்து போஜனஞ்செய்யுமென்று சொன்னுர். அப்போதவ்விடமிருந்த பண்டிதர்கள் முதலானேர் துளசிதாசரை நோக்கி பிரம்மஹத்தி செய்தவனை எந்த ஆதாரத்தைப்பற்றி எம்முடன் சாப்பிட உட்காரவைத்தீரென்ன, துளசிதாஸர், ராமாராமாவென்று ஸ்மரிக்க பிரம்மஹத்தி எப்படி நிற்கும்? கலியுகத்தில் நாமமகிமை அற்புதமென்றும் ஸ்நானசந்தியாகருமங்கள் செய்வதற்கு முன், கேசவ, நாராயணுவென்னும் நாமங்களாலே பிராரம்பித்து கர்மாந்தத்திலும் பகவந்நாமமே ஸ்மரிக்கப்படுமென்றும் கிருஷ்ணமூர்த்தி யுத்தவருக்குச் சொன்னதறியீரோ! பிராம்மண பிரஷ்டனுன அஜா

மேளன் அந்திமகாலத்தில் நாராயணநாமத்தைச் சொல்லி நற்கதியடையவில்லையா ? வென்றுசொல்ல, பண்டிதர்க ளவரைநோக்கி நீர்சொல்லும் வார்த்தைக ளெங்களுக்கு சத்தியமாகத் தோன்ற, கண்காக்ஷியாகக்காட்டுவீராகில் சமுசயம் சமிக்குமென்றுசொல்ல, துளசிதாச ரதைக்கேட்டு உங்களுக்கென்ன திருஷ்டாந்தம் வேண்டுமென்று வினவ, பண்டிதர்க ளவரைநோக்கி ஐயா! விச்வேசுரன் சந்நிதியில் நந்திகேசுவரர் பாஷாண மூர்த்தியாக இருக்கிறர். அவருக்கு அன்னபாத்திரத்தை யற்பியும், அவரன்னத்தைப் பக்ஷிப்பாராகில் பிரம்மஹத்தி செய்தவனை பந்தியுளுட்காரவைத்து சாப்பிடச் செய்வோமென்றுர்கள். துளசிதாசரதைக்கேட்டு ஆனந்தத்துடனன்னபாத்திரத்தை யேந்திக்கொண்டு விச்வேசுரன் சன்னிதிக்குச் சென்று பிராமணர்களெல்லோரும் பார்த்துக்கொண்டிருக்க, நந்திகேசன் முன்பு பிரசாதத்தை வைத்து இருகைகளுங்கூப்பிக்கொண்டு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ஜயஜய சந்திரமௌளீ! நீலகண்டா!—கட்வாங்கதாரீ!. திருபுராரீ! ஏழையின் வசனங்களைக் கேளும். முற்காலத்தில் விஷத்தை நீர்சாப்பிடும் சமயத்தில் அங்கதகனமாக வொட்டாமல் இராமாயென்னு மிரண்டெழுத்தை ஸ்மரித்தீரல்லவா! அதுவே சத்தியமானு லிந்த நந்திகேசுரர் நைவேத்தியத்தை பக்ஷிக்கக்கடவரென்று சொல்லவே அந்த நந்திமூர்த்தி திடுக்கென்றெழுந்திருந்து நைவேத்தியத்தை பக்ஷித்து, முன்போலவே உட்கார்ந்துவிட்டார். பக்தமகிமை அற்புதமானது, வைஷ்ணவரனைவரும் ஜய ஜயவென்று சொல்லி நாமஸ்மரணை செய்துக்கொண்டு துளசிதாசருக்கு நமஸ்கரித்து ஸ்வாமி! நீர் பெருமை பொருந்தினவர். பக்ஷிகளில் கருடனைப்போலும், சித்தர்களில் தத்தாத்திரேயரைப்போலும், பண்டிதர்களில் வேதாந்த வக்தாவைப்போலும், நீர் சிரேஷ்டரென்று துதித்து சகலரும் மடத்திற்கு வந்து பிரம்மஹத்தி செய்தவனைப் பந்தியி லுட்காரவைத்துக்கொண்டு யாவரும் பக்ஷித்தனர். நாட்டிலிருந்தோரெல்லோரும் நாமஸ்மரணை செய்யத்தொடங்கி அபிமானத்தைவிட்டு ஹரிலீலைகளை சிரவணஞ் செய்துக்கொண்டு சொஸ்தமாக விருந்தார்கள்.

இப்படி வெகுகாலம் நடந்தேறிவர அப்பட்டணத்தில் ஜைத்பாலென்னு மொரு சிறந்த வர்த்தகன் சரீரத்தை விட்டான். அவனுடைய பதிவிரதையான பத்தினி மாயா மமதைகளை

விட்டு மனதில் தன்பதியை மனனஞ் செய்துக்கொண்டு உடன் கட்டை யேற நிச்சித்து கங்கைதீரத்தி லக்கினியை யுண்டாக்கி அதனில் விழப்போகும்பொழுது துளசிதாசர் மடம் மார்க்கத்தி லிருக்கக்கண்டு அவரைச் சேவித்துப் போவோமென்றெண்ணி அவரிடம் செல்ல, அவர் நாமஸ்மரணையி லிருக்கக்கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தாள். "அஷ்டபுத்திர பகுதனமஸ்து" வென்றவர் ஆசீர்வாதம் செய்தார். அந்த ஸ்திரீ இந்த வார்த்தையைக் கேட்டு, ஸ்வாமி! எனது பர்த்தா பரகதி யடைந்தனர். அவருடன் உடன்கட்டை யேறச்செல்லுகிறேன், உமது ஆசீர்வாதம் அனுகூலிக்காதே என்கிற சமுசய முண்டாயிற்றே! யென்று சொல்ல, துளசிதாசர் நான் சங்கதி யறியாமற் சொன்னேன், ஸ்ரீராமசந்திர ரதை சத்தியஞ்செய்யக்கடவரென்று சொல்ல, அம்மாது மறுபடியும் நமஸ்கரித்து புறப்பட்டு பிரேதசமீபம் வந்தவுடன் தனது பர்த்தா ஜீவித்து உட்கார்ந்திருக்கக்கண்டு அத்யானந்தத்தை யடைந்தாள். அவ்விடத்திலிருந்து மனைவரும் ஜய ஜய ரப்தங்களுடன் வர அம்மாது பர்த்தாவின் கையைப் பிடித்துக் கொண்டு துளசிதாசர் மடத்திற்கு வந்து நமஸ்கரித்து தனதிருப்பிடம் சென்றாள்.

அப்பட்டணத்திலிருக்குஞ் சகலரும் ஹரி பக்தரான துளசிதாசருடைய புகழை வெளியிட்டுக்கொண்டிருக்க எவனோ ஒருவன் அஸ்தினபுரத்திற்குச் சென்று இவருடைய மகிமையை அகுபர் ராஜனுக்குச் சொன்னான். அரசனிதைக்கேட்டு ஆச்சரியமடைந்து சாதுரியமுடைய தன் அமைச்சனை யழைத்து அறிவாளியும் ஹரி பக்தருமான துளசிதாசரை அழைத்துவாவென்று ஆக்கியாபித்து இரதம் முதலான பரிவாரத்தையு மனுப்பினான். அவ்வமைச்சன் காசிபுரிச்சென்று துளசிதாஸரைக் கண்டு ஸ்வாமி! தேவரீருடைய வைபவ விசேஷங்களைக்கேட்டு அகுபரரசனழைத்துவரச் சொன்னானதலா லவ்விட மெழுந்தருள வேண்டுமென்றறிவிக்க துளசிதாசர் தன் மனதில் தேசாந்திரத்திலிருக்கும் ஜனங்களையும் திருநாம சங்கீர்த்தனத்தி லீடுபாடு செய்யவேண்டுமென்றெண்ணி அரசனிஷ்டப்படி ஆங்கு செல்லப் பிரயாணமானார். ஆசையற்ற ஹரிபக்தர்கள் அவனியிற் சஞ்சரிப்பது லோகோபகாரமல்லது வேறல்ல. ஹரிநாமத்தை யபாரமாகச்

செய்துக்கொண்டு ஹஸ்திநுபுரத்தை துளசிதாசர் சேர்ந்தார். அரசனு மெதிர்கொண்டுவந்து நமஸ்கரித்து வீட்டிற் கழைத்துக் கொண்டுபோய் சிம்மாஸனத்தி லுட்காரவைத்து சேவகரை இரகசியமாக வரவழைத்து அந்த பக்தரை அவ்விடமிருந்து போகவொட்டாமல் அவர்மேல் காவலிருக்கும்படி திட்டஞ்செய்து துளசிதாசருக்கு ஷோடசோபசார பூஜைகளைச் செய்து உமது பிரபாவத்தை வெகுவாக கேட்டிருக்கிறேன் இரண்டாவது ஈஸ்வராம்சமென்று சொல்லுகிறார்கள் அமானுஷ கிருத்தியங்கள் செய்திருப்பதைக் கேட்டு சந்தோஷிக்கிறேனென்ன, துளசிதாஸ ரரசனைப் பார்த்து இராஜனே! அச்செய்கைகள் யாவும் ஸ்ரீராமரால் செய்யப்பட்டவையன்றி அநாதனுன வென்னால் செய்யப்படவில்லை அவர்சரணங்களிற் சித்தமிடுவ தொன்றொழிய இந்த சாமர்த்தியங்களொன்னிடமில்லையென்று சொல்ல, அவனிவ் வசனங்களைக்கேட்டு ஸ்ரீராமரை யெனக்கு பிரஸன்னராக்கும் பரியந்த மிவ்விடம்விட்டு உம்மை நான் போகவொட்டேனென்று சொல்லி தான் அந்தப் புரத்திற்குச் சென்று துளசிதாசர் வைஷ்ணவ வீரரானபடியால் பிரத்தியக்ஷ திருஷ்டாந்தம் பார்க்கவேண்டு மென்றிருந்தான். அப்பொழுது சேவகர் துளசிதாசரைக் கண்டு ஸ்வாமி! ஸ்ரீராமதரிசனம் செய்விக்காதபக்ஷத்திற்கு இவ்விடம்விட்டு உம்மைப் போகவொட்டோமென்றார்கள். இதைக்கண்டு ஹரிபக்தர் சங்கடமடைந்து ஆஞ்சனேயரை தோத்திரஞ்செய்ய, அவர் பிரஸன்னராகி ஆகாயத்தை மேகம் மறைப்பதுபோல அனேக வானர வீரரை அம்பரத்தி லிருக்கச்செய்து அகுபர் அரசனுக்கு உங்களுடைய சுபாவகுணங்களைக் காட்டவேண்டுமென் றுக்கியாபிக்க, அவர்கள் அவ்வாக்கினையை சிரசாவகித்து அற்புதமான சேஷ்டைகளைச் செய்யலுற்றனர், வீடுமேலேறிக்குதித் ததனை கீழ விழும்படி செய்வதும் பெரிய விருக்ஷங்களைப்பிடுங்கி மனிதர்மேல் போடுவதும், சிலருடைய காது மூக்குகளை கடித்துப்போடுகிறதும், சிலருடைய வஸ்திரங்களைப் பிடுங்கி அம்மணமாக்குகையும், சிலர் கால்களைப் பிடித்திழுத்துப் பள்ளத்தில் தள்ளுவதும், லோபிகள் திரவியத்தை யெடுத்தெறிவதும், துர்ஜனரை இராஜன் வீட்டிற் கிழுத்துக் கொண்டுபோவதும், இப்படி விபரீதங்களைச்செய்ய, சேவக ஜனங்களனைவரும் இராஜனிடம் வந்து வானரர்கள் கூட்டமாக வந்து

பிரளயகாலம்போல பட்டணம் முழுதையு மல்லகல்லோலஞ் செய்கிறார்களென்று சொன்னார்கள். சில அறிவாளிக ளரசனைப் பார்த்து மஹாராஜரே! துளசிதாசர் மகாபக்தர், அவர் விஷயத்தில் நீர் சேஷ்டை செய்ய உத்தேசித்ததால் வானரர்கள் பட்டணத்திலனைவருக்கும் வருத்தத்தைக் கொடுக்கிறார்களென்று சொல்ல, அரசன் வியப்புற்று அநியாயமாயிற்றென்றெண்ணி அம்பரீஷனைச் சேஷ்டை செய்ததினால் துர்வாச ரவமதிப்படைந்ததுபோல தனக்கும் அபாயம் நேர்ந்ததென்று துளசிதாசரிடம் வந்து கைகூப்பி ஓ விஷ்ணு பக்தரே! இப்பொழுதிந்த வானரதளத்தை நிவர்த்தி செய்யவும், நானறியாமலுமக்கு சேஷ்டை செய்ததை, க்ஷமிக்கும்படிபிரார்த்தித்தான். துளசிதாச ரரசனைப்பார்த்து, ஓ இராஜனே! இராமதரிசனத்தை யிச்சித்தாய், ஸூர்யோதயத்திற்கு முன் அருணோதயமானாப்போல முன்பு வானரர்கள் வந்தனர், பின்பு ஸ்ரீராமர் வருவார், இன்னம் பதினெட்டு பத்மங்கள் கணக்கான வானர வெள்ளம் வந்தபிறகு தாசரதிவந்து உனக்குத் தரிசனங்கொடுப்பாரென்றுசொல்ல, ஸ்ரீராம தரிசன மடைந்தேனென்று அவர் சரணங்களை அரசன் பிடித்துக்கொண்டு உமது மகிமையை அறியாமற்போனேன், பதினயிரம் வானரசேனை இவ்விதமாகப் பட்டணமனைத்தையும் அழியச்செய்தன, இனி பதினெண் பத்மங்களுடைய தளம் வந்தால் பிரளயகாலமாகுமென்று சொல்ல, துளசிதாச ரிதைக்கேட்டு வானர சைனியத்தை அவ்விடம் விட்டுப் போம்படி அருள, அவையாவும் பட்டணத்தை விட்டு நீங்கின. அப்போது அந்த பக்தருடைய திருவடிகளை யனைவரும் நமஸ்கரித்தனர். ஒருவருஷம் வரைக்குமவ்விடம் துளசிதாசர் நிவசித்திருக்க அனேக மூடரும் அஞ்ஞானிகளும் ஹரி குண கீர்த்தனையால் பக்தியில் பிரவேசித்தனர். பின்பு அகுபர் ராஜனிடம் விடைபெற்றுக்கொண்டு மதுராவாசியான ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைத் தரிசிக்க வேண்டுமென்றெண்ணி முதல் கோகுலஞ்சென்று அவ்விடம் பகவானைத்தரிசித்து பிருந்தாவனத்திற்கு மப்படியே சென்று ஸ்ரீஹரியைச் சேவித்து ஒரு மாசம் வரைக்கு மிருந்து பின்பு மதுரையைப் பிரவேசித்து யமுனைக்கரையில் ஸ்நானஞ்செய்து பகவானைத் தரிசித்து அல்லும் பகலும் ஹரி குணானுவாதம் செய்துக்கொண்டு அவ்விடத்திய பக்த ஜனங்களுடன் நிவசித்திருந்தார்.

மதுரையில் பிரியதாசரென்னும் ஓர் விஷ்ணுபக்தர் கலியுகத்திற் பிறந்த பக்தருடைய சரித்திரங்களனைத்தையும் வடமொழியிலெழுதிக் கொண்டிருந்தார். துளசிதாசரிச்சங்கதியைக் கேட்டு அந்தபக்தரிடஞ்சென்று தானின்னுனென்று தெரிவிக்காமல் ஐயா! நீர் பக்தர்கள் மகிமைகளை யெழுதியிருப்பதாக கேள்விப்பட்டேனாதலால் அவைகளைக் காண்பிக்கவேண்டுமென்றுகேட்க, பிரியதாஸ ரவரைப்பார்த்து நாலு ஜாதியிலுள்ள பக்தர்களை வர்ணித்தேனுனல் துளசிதாசர் சரித்திரத்தை மாத்திர மெழுதவில்லை, அவரிந்த கலியுகத்தில் பக்த சிரோமணியென்று கேள்வியுற்றேன், அவருடைய மகிமையை யெழுதவில்லை யாதலால் சிந்தையுடையவனுகின்றேனென்று சொன்னுர். பகவான் பக்தர்களுக்கு பிரியகரனுதலால் பிரியதாஸருக்குத் தெரியாமல் ஸ்ரீராமர் துளசிதாசஸர் சரித்திரத்தை எழுதி வைத்திருந்தனர். கதைகளைக் கேட்கும் நிமித்தியம் வைஷ்ணவ ஜனங்களவ்விடம் வந்து உட்கார்ந்திருக்க பிரியதாஸர் பக்தர்கள் சரித்திரங்களை வாசிக்கச் சகலரும் கேட்டுக்கொண்டிருந்தனர். அந்தியத்தில் துளசிதாசர் சரித்திரமு மெழுதியிருக்கக் கண்டு ஆச்சரியமடைந்து ஸ்ரீராமர் தானே யெழுதியிருக்கிருரென்று எல்லோருக்குங் காண்பிக்க அவர்கள் வியப்புற்றவராகி பகவானுடைய மகிமையை வர்ணிக்க சக்தியற்றவராய் தடஸ்தராகி சும்மா யிருந்தனர். சுருதி சாஸ்திரங்களே வர்ணிக்கக்கூடாமல் மௌனமானுல் மனிதரெம்மாத்திரம்? இப்படி பக்தி பிரேமையுடன் பகவத் கதைகளைச் சிரவணஞ்செய்ய ஸ்ரீராம தரிசனமாம். இது நிச்சயமாக நம்பவேண்டும். மூலக்கிரந்தம் வடமொழியிலிருக்க அதனைப் பிராகிருதத்திற் தேசபாஷையில் செய்யப்பட்டது. துளசிதாசர் சரித்திரம் பகவானுலேயே வர்ணிக்கப்பட்டபடியால் சத்பாவத்துடன் கேட்போர் ஸ்ரீராம ரனுக்கிரகத்தைப் பெறுவார்கள்.

---

## நாமதேவ் சரித்திரம்.

பண்டரிபுரியில் தையற்காரர் குலத்தில் தாமாஜி யென்றொருவரிருந்தார். அவர் வைஷ்ணவ பக்தராகியும் மகா புண்ணிய

சாலியாகியும் பக்திஞான வைராக்கியங்களை யுடையவராகி கோணுயியெனும் பதிவிரதையான மங்கையுடன் பாண்டுரங்கர்மேல் பக்தி செலுத்திக்கொண்டு காலயாபனஞ் செய்துக்கொண்டிருந்தார். வார்த்திகதசை வந்தும் பிள்ளையில்லா திருந்தமையால் மனைவியானவள் புருஷனைப்பார்த்து, பிராணநாதரே! நீர் பகவானிடஞ் சென்று நமக்கொரு புத்திரன் வேண்டுமென்பதாக பிரார்த்திக்கவும், நமக்கு வயசாய்விட்டதென்று நீர் எண்ண வேண்டாம், ஈஸ்வரனுடைய சாமர்த்தியம் மகா பெருமையுடையதாகுமென்று நீரறியீரோ! இராமரவதாரமெடுத்துச் சமுத்திரத்திற்கு வாராவதியைக் கட்டினர், கிருஷ்ணவதாரத்தில் பிரமதேவன் கோபாலரையும் கோவத்சங்களையு மொளித்து வைத்தபோது தானே அந்த இடைப்பிள்ளைகளாகவும் கன்றுக்குட்டிகளாகவு மாகவில்லையா? அப்படியிருக்க நமக்கொரு பிள்ளையைக் கொடுப்பது அவருக் கருமையோ! நீர் போய் கேளுமென்று வற்புறுத்திச்சொல்ல, தாமாஜி சம்மதித்து பாண்டுரங்கருடைய ஆலயத்திற்குச்சென்று சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, ஓ ஸ்வாமி! எனது மனைவி புத்திர ஸந்தானத்தை யிச்சித்து தேவரீரிடம் விண்ணப்பஞ் செய்யச்சொன்னாள், நீர் பிரஸன்னராய் ஓர் புத்திரனை அருளவேண்டுமென்று அவ்விடம் உட்கார்ந்துக்கொண்டு சிந்தித்திருக்க, சற்றுநேரம் அரைக்கண் நித்திரை யுடையவராயிருந்தார். அவ்வேளையில் பாண்டுரங்கர் பிரஸன்னராகி தாமாஜியை நோக்கி நாளையதினம் சந்திரபாகா நதிக்கு ஸ்நானஞ் செய்யப்போகும் பொழுது பிரவாகத்துடன் கிளிஞ்சலி லோர் சிசுவு மிதந்துக்கொண்டு வரும், அது "விட்டல" வெனும் நாமத்தைச் சொல்லிக் கொண்டிருக்கும். அதனை யெடுத்துக்கொண்டு வளர்த்துக்கொள்ளலாமென்றருளி மறைந்தனர். இது சொப்பனம்போலிருந்தது. பின்பு பகவானுக்கு தெண்டம் சமர்ப்பித்து தன் மனைவியிடம் வந்து சங்கதி தெரிவித்து மறுநாளுதயமானவுடன் பீமாநதி தீரத்திற்குச் சீக்கிரமாகச்சென்று ஸ்நானஞ்செய்து நித்திய நியமங்களை முடித்து அக்கரையி லுட்கார்ந் தெதிர்பார்த்துக் கொண்டிருக்க அந்த நதி வெள்ளத்திலோர் கிளிஞ்சல் மிதந்துக்கொண்டு வரக் கண்டு தாமாஜி ஆழ்ந்த ஜலத்திற்சென்று அதனை எடுத்துக் கொண்டுவந்து கரையைச்சேர்ந்து திறந்து பார்க்கும்பொழுது அப்

போது பிறந்தக் குழந்தையைப்போல, லாவண்ய சுந்தரத்துடனிருக்கும் உத்தவருடைய அம்சமான பாலகனைக் கண்டு இக்குழந்தைக்கு ஸ்தன்னியபான மெவர் கொடுப்பாரென்று சிந்தையுடையவராய் வஸ்திரத்தி லணைந்துக்கொண்டு வீட்டிற்குக் கொண்டுவந்து மனைவியைப் பார்த்து உனக்கு பாண்டுரங்கர் புத்திரனைத் தந்தாரென்று அவள் கையில் கொடுத்தார். கோணாயிதேவிக்கு ஸ்தன்னியத்தில் பால் சுரந்தது. அதைக்கண் டவ்விருவரும் சந்தோஷித்து, கிழத்தனத்தில் நம்மை கடவுள் கருணித்தாரென்று குழந்தைக்கு ஸ்நானஞ் செய்வித்து கோணாயி ஸ்தன்னியபானங் கொடுத்தாள். நாராயணனை பிரஸன்னனாக்கிக்கொண்டு அவனருளால் நாமோச்சாரணை செய்யும் குழந்தையை யடைந்ததால் நால்வர் பந்துஜனங்கள் கூடி நாமதேவ் என்று பேரிட்டார்கள். தாய் தந்தைகள் பிரியத்துடன் போஷித்துவர, நாளுக்கு நாள் வளர்ந்து வந்தார்.

ஒருநாள் தாமாஜி வேறொரு கிராமத்தில் சந்தைக்கூட்டத்திற்குச் செல்ல, கோணாயி தன் குமாரனையழைத்து பூஜாதிரவியங்களையும் நைவேத்திய தாம்பாளத்தையுங் கொடுத்து பாண்டுரங்கரிடஞ் சென்று பிரசாத நிவேதனஞ்செய்து திரும்பிவரச் சொல்லிக் கட்டளையிட் டனுப்பினாள். நாமதேவ் பூஜாதிரவியங்களை கைக்கொண்டு சன்னிதியிற் பிரவேசித்து விதிப்படி பூஜையை முடித்துப் பிரசாத தாம்பாளத்தை பாண்டுரங்கர் முன்வைத்து பக்ஷியுமென்று பிரார்த்தித்தார். அவர் பக்ஷிக்காமலிருந்ததால், அவரை நோக்கி ஸ்வாமி! பூஜை செய்வதற்கு பொழுதாயிற்றென்று கோபித்துக்கொள்ளவேண்டாம், உமது நிஜபக்தரான தாமாஜி கிராமத்திற்குச் சென்றனராதலால் தாயார் நைவேத்தியத்தை என்னிடம் கொடுத்தனுப்பினாள், நீர் பக்ஷிக்காவிடில் தாயாரென்மேல் கோபிப்பாள், ஓ ஜகந்நாதரே! இதென்ன வநியாயம்? ஏன் சாப்பிடாதிருக்கிறீரென்று கேட்கிறானேயன்றி பாஷாணமூர்த்தி யெப்படி புசிக்குமென்று விகல்ப மெம்மாத்திரமில்லை. தினந்தோறும் பெருமான் சாப்பிடுகிறாரென்றே தானுத்தேசித்துக்கொண்டு, அவர் சாப்பிடாதிருக்கிறாரே! என்ன செய்வதென்று விசனமுற்று அழுதுக்கொண்டிருக்க, பாண்டுரங்க ரப்பிள்ளையின் சுத்த பாவத்தைக்கண்டு பிரசன்னராகி அழவேண்

டாமென்று சமாதானப்படுத்தி பிரீதியுடன் பிரசாதத்தை பக்ஷித்து யாரிடமுஞ் சொல்லவேண்டாமென்று எப்போதும் போலிருந்தனர். பின்பு நாமதேவ் பெருமாளுக்கு நமஸ்கரித்து வீட்டிற்கு வருமளவில் நைவேத்திய மெங்கேயென்று தாயார் கேட்க, பாண்டுரங்கர் பக்ஷித்தாரென்று சொன்னர். மறுநாள் தாமாஜி வீட்டிற்கு வந்தவுடன் கோணயி நடந்த சங்கதியைத் தெரிவிக்க, அவராச்சரியப்பட்டு நாமதேவை யழைத்துப் பகவான் பிரசாதத்தை யெப்படி பக்ஷித்தார்? இப்போது ஸன்னிதிக்குச்சென்று பிரத்தியக்ஷமாக எனக்கு காண்பியுமென்று சொல்லி பூஜாதிரவியங்களையும் பிரசாதமும் கைக்கொண்டு சன்னிதிக்கு வந்து இருவரும் நமஸ்கரித்தார்கள் பின்பு நாமதேவ் ஷோடசோபசார பூஜைகளைச் செய்து பிரசாதத்தை பெருமாள் முன்வைத்து ஸ்வாமி! கருடத்வஜரே! பக்ஷியுமென்று பிரார்த்தித்தார். அப்போது பெருமாள் நாமதேவைக் கண்டு உன்னுடன் தாமாஜி வந்திருக்கிறு னுதலா லுனக்கு மாத்திரம் பிரஸன்னனுவேர்மொழிய மற்றொருவருக்கு நாம் காணப்படோ மென்று சொல்ல, நாமதேவ் ஓ தேவனே! நீர் கபடியாக விருக்கின்றீர், என் பிதாவுக் கெதிர்ப்படாமல் திருட்டுதனமாக விருக்க நிச்சயித்ததுபோல் காணுகிறதென்று சொல்ல, பகவான் சிரித்து தாமாஜிக்கும் கண் காக்ஷியாயிருந்து பிரசாதத்தை பக்ஷித்தார். பின்பு தகப்பன் பிள்ளையைப் பார்த்து நீ யெனக்கு குமார னுயாதலால் பகவான் பிரசன்னனுரேயன்றி வேறொரு ஹேது வில்லையென்று சொல்லி வெகு சந்தோஷத்துடனனேக பரியாயம் நமஸ்காரங்களைச்செய்து பிள்ளையுடன் வீடு வந்து மனையாளைப்பார்த்து சத்தியமாகவே ஸ்வாமி சாப்பிட்டாரென்றும் நாமதேவ் நிஜபக்தனென்றும் சொன்னர். அதுகண்டு கோணயி இவன் அயோனிசம்பவனுகி பகவத் கிருபையால் நமக்குப் பிள்ளையாய் வந்திருக்கிறனென் றிருவரும் சந்தோஷத்துடனிருந்தார்கள்.

சில காலத்திற்குப்பின் நாமதேவுக்கு யௌவன காலம் வந்தது. பந்துக்களெல்லோருங்கூடி இராஜாயீ என்னுங் கன்னிகையை அவருக்கு விவாகம் செய்தனர். கொஞ்ச காலத்திலவருக்கொரு குழந்தை பிறந்தது. அச்சிசுவுக்கு நாமகரணஞ் செய்யும்பொருட்டு பாண்டுரங்கர் பந்துவைப்போலே ரூபத்தைத் தரி

த்து காணிக்கைகளை கையிலேந்திக்கொண்டு நாமதேவ் வீட்டிற்கு வந்தனர். வந்த உரன்முறையாருக்கு கோணுபி வந்தன வழி பாடுகளைச்செய்து பேரனுக்கு என்ன பேரிடவேண்டுமென்று வினவ, பந்துரூபியான பெருமாள் நாராயணவெனும் நாமத்தை யிடச்சொல்லி பிராம்மணர்களை வரவழைத்து புண்ணியா வசனங் கள் முதலானவைகளைச் செய்வித்து இராஜாயிக்குப் புடவை இரா விக்கையும் குழந்தைக்குக் குல்லா சொக்கா முதலானதுகளைக் கொடுத்து மறைந்தனர்.

பின்பு சிலகாலம் நடந்துவர, நாமதேவுடைய தாய் தந்தை கள் நாளுக்கு நாள் விருத்தராகா நின்றனர். தங்கள் குலத்தொழி லான தையல் வேலையை நாமதேவ் தொடராமல் துளப்மாலையை யணிந்த பாண்டுரங்கரைத் தொடர்ந்து, பிதுரார்ஜிதத்தைக் கொ ண்டு பாகவதர்களுக்கு பிரபலமாகப் போஜனமிடுவதும், எப்பொ ழுதும் ஏழைகளுக் கிறக்கமுற்று ஹிதகாரியங்களையே செய்வ தும், பக்தி பாவனையால் பரவசராகி பாண்டுரங்கரைப் பாடுவதும் மெய்மறந்தாடுவதும், ஹரிதாசர்களிடஞ் சென்று ஹரிகதையெனு மமிர்தத்தை அன்புடனருந்துவதும், தனத்தை ஆர்ஜிக்காமல் தாமோதரனைச் சேவித்துக்கொண்டு வீட்டிலிருந்த பொருளையே விநியோகஞ் செய்துகொண்டிருந்தார். தாயானவள் தனயரான நாமதேவை ஒருநாள் கண்டு உன் இருதயத்தில் ஸ்ரீ ஹரியை வைத்துக்கொண்டு சமுசாரத்தில் திருஷ்டி வையாமல் சர்வ கால முஞ் சருவேசுரனைப் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டு சகல தனத் தையும் போக்கடித்துக்கொண்டு, மனைவியும் மைந்தரும் அன்னத் திற்கு அதிக சங்கடப்பட்டுக் கொண்டிருக்க நீ அவர்கள்மேல் நாட்டம் வைக்காமல் ஹரி திருவடிகளின்மேல் வைத்திருந்தால் சமுசார மெப்படி நடக்கும்? நானெவ்விதம் சம்பாதிப்பேன்? இனி உன் வீட்டிற்கு வேண்டியவைகளைக் குறித்து நீயே சம்பா தித்து நடத்தக் கடவாயென்று சொன்னாள். நாமதே விதைக் கேட்டு அனுதாபத்துடன் நாராயணனிடஞ் சென்று ஓ பண்டரி நாதரே! துக்கரூபமான பவசாகரத்தி லென்னை யேன் வைத்தீ ரென்று அழுதுக்கொண்டு நிற்க, கருணாமூர்த்தியான பாண்டுரங் கர் அவர் கண்ணீரைத்துடைத்து யாவருன்னை துக்கப்படுத்தினர் களென்று கேட்க, நாமதேவ் சொல்லுவார், ஸ்வாமி! அடியேன்

தேவரீர் பாதாரவிந்த தியானத்தால் சமுசாரத்தைப் பார்க்காம லிருக்கிறேனென்று தாயார் கோபித்துக் கொண்டாளென்று சொல்ல, பாண்டுரங்கர் நாமதேவரை நோக்கி நீ நம்மிடத்தே எப்போதுமிருக்கக்கடவை. அப்படி யிருப்பையாயின், மாயாமமதைகளுன்னை யொட்டா. நீ என்னுடைய அம்சபூதனென்றறி. சூரியனும் சூரிய கிரணங்களும் வேறுகாததுபோல நீ யெனக்கனந்நியமென்றறிந்துக்கொள். தீபமும் தன் பிரகாசமு மொன்று யிருக்க வெவ்வேறகத் தெரிவதுபோல உனக்கு மெனக்கு மிருக்கும் பிரீதி அவ்வண்ணமானதாகுமென்று அனேக திருஷ்டாந்த பூர்வகமாகச் சொல்ல, நாமதேவ் அவரை நோக்கி ஸ்வாமி! இந்த ஞானமெனக்கேன் சொல்லுகின்றீர், உமது நாமமென் நாக்கிலிருக்குமாயின் நித்திய சுகத்தை யடையேனோ? நீரும் நானு மொன்றெனும் பிரமஞ்ஞான மெனக்குச் சரிபடாது, நீர் ஸ்வாமியாயிருப்பவர், அடியேன் தேவரீர் சொத்தான சேவகன், சர்வ கல்யாணகுணங்களும் சகலைஸ்வரியமும் சாசுவதமாக தேவரீரிடமிருக்க,அடியேனிடம் அகில துர்க்குணங்களும் அஷ்டதரித்திரமு மதிசயித்திருக்கின்றது, தேவரீ ரிருப்பிடம் வைகுண்ட புவனமாகும், அடியேனிருக்குமிடம் பொத்த குடிசையாகும். தேவரீர் வீட்டில் ஸ்வரண மணிகளுடன் சேர்ந்த வைஸ்வர்யமுண்டு. அடியேனுடைய ஐசுவரியம் தேவரீர் திருநாமமேயென்று சொல்ல,பாண்டுரங்கர் சிரித்துக்கொண்டு ஹிதவசனங்களை சொல்லிக்கொண்டிருந்தார்.

அவ்வேளையில் நாமதேவ் வீட்டில், மருமகள் மாமியாரைக் கண்டு, கழுத்திலணிய கருமணியாவது கிடையாது. கட்டும் வஸ்திரங்கள் கந்தலாய்ப்போயின, சாப்பிடுவதற்குச் சற்றேனு மன்னங் கிடையாது, தரித்திரத்தைப் போகிக்கவே உன் தனயருக்காட்பட்டேனென்று சொல்ல, கோணாயி இவ்வார்த்தைகளைக் கேட்டு வருத்தமுற்று வீட்டிற்கு வெளியே சென்றனள். அவ்வேளையிலொரு வர்த்தகரைப்போல வேஷம்போட்டுக்கொண்டு கோணி மோருக்களைக் கைக்கொண்டு கேசவரென்னும் திருநாமத்தை வகித்து நாமதேவர் வீட்டிற்கு வந்து கதவைத் தட்டினர். அப்போது ராஜாயி உள்ளிருந்து யாரென்று கேட்க, உம்மைப் பார்க்கவேண்டுமென்று விருப்பங்கொண்டு வந்தேனென்று பெரு

மாள் சொல்ல, ராஜாயி சிந்தையுடையவளாய் தரித்திர தசையி லிதுவும் சம்பிராப்த மாயிற்றே என்று, எஜமானர் வீட்டிலில்லை, நீர் திரும்பிப் போகலாமென்று சொல்லி, அக்கம் பக்கத்தாரைச் சேர்த்துக்கொண்டு அவர்களுடன் சொல்லுவாள், பார்க்கவரு மவர்கள் பிராணனை வாங்குகிறார்கள், தாளவீணைகளைத் தரித்து தாமோதரனை நண்ணி தாண்டவம் செய்கிறார்கள், சமையல் செய்த வன்னத்தைச் சாப்பிட்டுப் போகிறதால் பாலகரும் நானும் பசி யுடனிருந்து விடுகிறோமென்று சொல்லிக்கொண்டிருக்க, பெருமா ளிவைகளைக் கேட்டுக் கதவைத் திறவென்று சொல்லி நாமதே வுக்கு மெனக்கும் வெகுநாளாக நேசமுண்டு, அவர் செலவுக்கில்லா மல் சங்கடப்படுகிறாரென்றறிந்து கோணி ஸ்வர்ணத்தைக் கொண்டு வந்தேன், நீ பார்க்கக்கூடவாய், கதவைத் திறவென்று சொன்னார். தனமென்கிற வார்த்தையைக் கேட்டவுடன் ராஜாயி தாளைத் திற ந்து, வந்தவரை உள்ளே அழைத்து மரியாதையுடன் உட்கார ஆசனம் போட்டு, எஜமான் சற்றுநேரங் கழிந்தவுடன் வருவார், அதுவரைக்கும் நீரிவ்விட 'மிருந்தருளு'மென்ன, பகவான் சொல் லுவார், பணத்தைக்கண்ட பின்னன்றோ நீ பிரிய வசனத்தைச் சொன்னாயென்று சிரித்து, உன் பர்த்தாவைக் கஷ்டப்படுத்த வேண்டாம், அவர் வந்தவுடன் நான் வந்து போனேனென்று சொல்லக்கடவாயென்று கோணி சுவர்ணத்தை அவ்விடத்திற் போட்டு மறைந்துவிட்டார். அப்பொழுது ராஜாயிக்குச் சந்தோ ஷமுண்டாகி கோணியைத் திறந்து கைநிறையச் சுவர்ணத்தை எந்திக்கொண்டு கடைக்குச் சென்று பருப்பு, உப்பு, அமுதுபடி முதலானவைகளையும் வஸ்திராலங்காரங்கள் முதலானவைகளை யுங் கொண்டுவரச் செய்தாள். அச்சமயத்தில் வெளியே சென்ற கோணாயி எவ்விடமோ கொஞ்சம் தானியத்தைச் சம்பாதித் துக்கொண்டு, நாமதேவ் கோபித்துக்கொண்டு போனானதலா லவ னைச் சமாதானப்படுத்தி அழைத்து வரலாமென்று பாண்டுரங்கர் ஸன்னிதிக்குச் சென்றனள். நாமதேவ் தாயாரைப் பார்த்தவள வில் கோவில் பின்புறத்தில் பிரவேசித்தார். கோணாயி பாண்டு ரங்கரைக் கண்டு நமஸ்கரித்து ஸ்வாமி! எங்களைப் பிரியத்துடன் பாராமல் நீர் நாமதேவனிடம் மாத்திரம் பிரீதி வகித்தீர், இதனா லெங்கள் சமுசாரத்திற்கு ஹானி வந்தது, தேகபாவத்தை விட்டு

நாமதேவ், உனது நாமத்தைச் சொல்லிக் கூத்தாடுகிறான். மோஹத்தை யுன்மேல் வைத்து தாய் தந்தை மனைவி புத்திரரைப் பார்க்கிறதில்லை, கஷ்டத்துடன் பிள்ளையை வளர்த்தேன், கடைசியி லுன்வசமாய் விட்டான், நீர் பிராணநாதர், பக்தவரதராக விருக்கின்றீர், உமது மடியைப் பிடித்து நான் விடமாட்டேன், பாரும்! என்று சொல்ல, பெருமா ளிவைகளைக் கேட்டு சொல்லுவார், நாமதேவ் நமது பாதங்களை நம்பினதலால் உனக்கது மிகுதியான கஷ்டமுண்டாக்கினது. அதற்கு நாமென்ன செய்வோம். புத்திர வாத்ஸல்யத்தை நாமதேவ்மேல் வைத்து நம்மை நீ வேருக்குகிறாய், உனது பிள்ளையை ஆடங்கமின்றி அழைத்துக்கொண்டு போகலாம், என்பேரில் நீ அபவாதம் போடவேண்டாம், அனேக ஜன்மங்கள் நீ சுகிருதத்தைச் செய்தாயாதலால் இராக்கதரில் பிரஹலாதன் பிறந்தாற்போல உனக்கு நாமதேவ் பிள்ளையாக நேர்ந்தான், அவன் சுசிலன், பிரிய பக்தன், நிஜபுத்திரனுவானென்றார், கோணுபி பெருமாளுடன் பேச்சென்னவென்று ருக்மணி பிராட்டியிடம் சென்று பக்தியுடன் நமஸ்கரித்து ஓ தாயே! உம்முடைய பர்த்தா எனது பிள்ளையைப் பைத்தியக்கார னுக்கிவிட்டார்; அவனுக்குச் சமுசாரத்தின்மீது நோக்கில்லாதபடியா லெங்களுக் கிந்த கதி வந்தது; குலதெய்வமென்று பாண்டுரங்கரைத் தொழுது வந்தால் எங்களுக் கிவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்தன; அவரைச் சேவித்த மாத்திரத்தில் ஜீவத்துவம் சேதமாய் விடுகிறது; ஏக புத்திரனை யிவனைப் பெருமாள் தன் ஆதீனமாக்கிக்கொண்டால் எங்களுக் கென்ன கதி? ஓ தாயே! இது யாவும் தேவரீருக்குத் தெரிந்தது தானே! இனி அவருக்கு அடியாளுடைய விண்ணப்பத்தைச் சொல்லி அனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்து அச்சன்னிதி பக்கம் போகுமளவில் அவ்விடம் நாமதேவைக் கண்டு அடா பிள்ளாய்! நானுன்னை இப்போது பாண்டுரங்கர் பார்க்க வீட்டுக் கழைத்துக்கொண்டு போகிறேன் பாரென்று பெருமாள் சன்னிதிக்குத் திரும்பி வந்து அவர் முன் நின்று சொல்லுவாள், ஓ ஸ்வாமி! தேவரீர் சமுசாரியாயிருந்து ஜகன்மோகனராகி செங்கல்மேல் நின்றுக்கொண்டு உம்மிடத்திற்கு வருபவரனைவரையும் பிரபஞ்சத்திற்கு வேருக்கி நாடகஞ் செய்துக்கொண்டிருக்கிறீர்? எனது மைந்தனைத் தேவரீர்

திருடிக்கொண்டீர். அவனைக் கொடுக்காவிடில் இவ்விடத்தை விட்டுப் போகேன் மௌனத்தை வகித்து என் வீட்டை முழுகடிக்கச் செய்கிறீரோ? ஓ முகுந்தா! கேசவா! கிருஷ்ணா! மாதவா! என்று அன்புடன் வர்ணிக்க, பாண்டுரங்கர் கோணாயியைக் கண்டு உன் பிள்ளையை நீ அழைத்துக்கொண்டு போகலாம், நம்மேல் நீ நிமித்தம் வைக்கவேண்டாமென்று நாமதேவ் கையைப் பிடித்து கோணாயி கையில் வைத்து அவன் மாயாமமதைகளை விட்டபடியால் நம்மேல் நிந்தை வந்ததென்று சொல்லியனுப்பினார். குமாரனை கூட அழைத்துக்கொண்டு கோணாயி வீட்டுக்குப் போம்போது ஸ்ரீ ஹரியை நீ சரணமடைந்தாயோ வென்று கேட்க, நாமதேவ் கண்களில் ஜலம் பெருக சும்மாவிருந்தார். பின்பு அவ்விருவரும் வீட்டிற்குள் பிரவேசித்துப் பார்க்குமளவில் நூதனமான வஸ்திரங்களும் திரவிய ராசிகளுமிருக்கக் கண்டு நாமதேவ் அனுதாபத்தை யடைந்து வலையிற்பட்ட மிருகம்போலே சங்கடத்துடன் தாயாரைப் பார்த்து அம்மே! இந்த சம்பத்து, தனம் முதலான:தெவ்விடமிருந்து வந்ததென்று கேட்கத் தனக்கு தெரியாதென்று சொன்னாள், அப்பொழுது மனையாள் புருஷனிடம் வந்து, ஸ்வாமி! பொழுதாயிற்று, ஸ்நானஞ்செய்து சாப்பிடவாருமென்ன, நாமதேவ ரம்மொழிகளைக் கேட்டு திரவியத்தைக் கண்டு குளிர்ந்த வார்த்தைகள் சொல்லுகிறா ளென்றெண்ணி தனதானியங்கள் எங்கிருந்து வந்ததென்று கேட்க, பர்த்தாவானவர் பாகவதர்களுக்குப் பங்கிட்டு விடுவாரென்று தான் மறுமொழி சொல்லாதிருந்தாள். அவ்வேளையில் ஜனபாய் என்னும் தாஸியானவள் வந்து நமஸ்கரித்து ஓ ஸ்வாமி! ராஜாயி வறுமையினால் மனவருத்த முற்றிருந்தமையால் கிருபாமூர்த்தியான பாண்டுரங்கர் கேசவசெட்டி யென்னும் பேரைக்கொண்டு கோணி பொன்னைக் கொண்டுவந்துக் கொடுத்து உமக்கு மவருக்கும் நேசமுண்டென்றும், அன்ன வஸ்திரங்களுக்காக அனுகூலப் படுத்திக் கொள்ளலாமென்றும் தேவரீருக்குக் கஷ்டங் கொடுக்கவேண்டாமென்று சொல்லிப் போயினர். இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் நாமதேவ் நயனங்களில் நீர் வெள்ளமாக வோட பகவானை நினைத்துக்கொண்டு ஓ கிருஷ்ணா! பதிதபாவனா! பக்தவத்சலா! பக்தபூஷணா! கருணாசிந்தா! ஜகஜ்ஜீவனா! ஸ்ரீவிட்டலா! தேவ

ரீர் அவ்யயர், பிறப்பில்லாதவர், அஜிதர், மாயாதீதர், நிராமயர், அனாதநாதர், கருணாலயர், அடியேன் நிமித்தம் சிரமை யெடுத்துக் கொண்டீர். காமியபக்தர்கள் தேவரீரை பஜிக்கிறார்கள் அவர்களுக்கு தேவரீர் தன் சம்பத்துகளைக் கொடுப்பதில்லை அடியேன் கேட்காமலிருக்க ஆசக்தி யில்லாதவனுக்கு அதனைக் கொடுத்தருளினீரல்லவா! சமுத்திரத்தில் மேகம் வருஷித்தாலென்ன பிரயோசனம்? அதைப்போல இந்த திரவிய மெனக்குச் சம்மதியில்லை. தேவரீர் திருநாம மென்னும் தனத்தால் அடியேன் திருப்தி யடைந்திருக்கிறேனென்று சொல்லி அவ்விடத்திய பிராம்மணர்களையும் சாதுக்களையு மழைத்து திரவிய வஸ்திராலங்காரங்களனைத்தையு மவர்களுக்கு தத்தம் செய்து புருஷோத்தமனைப் பஜித்துக்கொண்டிருந்தனர்.

---

## நாமதேவ் யாத்ராவளி.

ஞானனந்த பூர்ணரும், மகா பக்தருமான ஞானதேவரென்னுமொருவர் நாமதேவரைப் பார்க்க விரும்பி அவரிடம் வர, நாமதேவ் அவரைக் கண்டவுடன் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து அபாரமான பிரேமையுடன் வித்யுக்தமாக பூஜித்து பூர்வ ஜன்மத்திலடியேன் செய்த பாக்கியவிசேஷத்தால் தேவரீரைத் தரிசித்தேன் உலகமாயையா லடிபட்டிருக்கும் ஜீவகோடிகளைச் சீர்திருத்தும்பொருட்டு விலக்ஷணமான விக்ஞானத்தை அருள்செய்ய அவதரித்தீரென்று விநயத்துடன்சொல்லி திரும்பித்தெண்டனிட்டார். ஞானதேவ ரவரைக் கருணித்து ஐயா நாமதேவரே! உம்முடைய பாக்கிய விசேஷஞ்சொல்ல தரமல்ல, எப்பொழுதும் பண்டரிநாதன் சன்னிதியிலிருந்து பிரேம மாதுர்யத்தை யுடைவராகி ஆசாபாசங்களை விட்டகன்றீர். நீர் பிறந்த வம்சம் பவித்திரமாயிற்று. ஒரு சங்கல்பத்தைக்கொண்டு உம்மிடம் வந்தேன், ஜீவன் முக்தனானாலும் குரு, தேவ, தீர்த்த, பஜனைகளை விடக்கூடா தாதலால் உம்முடன் கூடி சகல தீர்த்தங்களையும் சேவிக்கவேண்டுமெனுமபேக்ஷைக்கொண்டு வந்தேன், என் மனோரதத்தைப் பூர்த்தி செய்யக் கடவீரென்ன, நாமதேவ் சிந்தையுடையவராய் பண்டரீக்ஷேத்திரத்தைவிட்டு தீர்த்தாடனை யேன் செய்யவேண்டும்? விலை

யுயர்ந்த கஸ்தூரியை யெறிந்துவிட்டு வரட்டி சாம்பலைக் கொள்வது போல பண்டரிநாதரை விட்டுப்போக மனமில்லாமல், ஞானதேவரைப் பார்த்து அடியேன் சர்வ பிரகாரங்களாலும் பிராண பூதரான பாண்டுரங்கருக் காதீனனாக விருக்கின்றேன், அவரனுமதியைக் கொள்வீராகி லுமதிஷ்டப்படி வருகிறேனென்றார், ஞானதேவ ரதைக்கேட்டு உமது வுட்கருத்தை அறிந்துக்கொண்டேன், நீர் ஞானபக்திகளை மேருவைப்போல யுடையவராவீரென்று சொல்லி நாமதேவுடன் ஞானதேவர் பெருமாள் சன்னிதிக்குச் சென்று விநயத்துடன் வந்தனங்களைச் செய்து தன் மனதிலிருக்கு மெண்ணத்தை மாதவருக்கு ஞானதேவ ரறிவிக்க, பாண்டுரங்கரவரைப் பார்த்து பிரமஞ்ஞானத்தைப் பெற்று ஸ்படிகம்போன்ற பரிசுத்த சித்தமுடையராகி சதா நிர்மலராகியிருக்கிற நீர் தொந்தரையான தீர்த்த யாத்திரை யேன் போகிறீரென்று வினவ, ஞானதேவர் சொல்லுவார், சத்புருஷரான நாமதேவர் சாங்கத்தியத்தால் தேகத்தை சார்த்தகம் செய்துக்கொள்ள வேண்டுமென்று யாசித்தேனென்று திரும்பி நமஸ்கரித்தார். பெருமாள் சிரித்துக் கொண்டு நாமதேவைப் பார்த்து சொரூபக்ஞரான ஞானதேவர் உன்னுடைய சாங்கத்தியத்தை யிச்சிக்கிறார், அவரது மனோரதத்தைப் பூர்த்திசெய்து திரும்பி சீக்கிரத்தில் வரக்கடவை யென்று அவர் கையைப்பிடித்து ஞானதேவர் கரத்திலிட்டு நாமதேவனென்னிட மதிக பிரேமையைச் செய்து வருவான், உன் வாக்யத்தைத் தடுக்காமல் நானிப்போ தனுப்புகிறேன், நீர் அவனைக் காப்பாற்றிக்கொண்டு உமது காரியசாதனைச் செய்துக்கொண்டு சீக்கிரத்தில் வரக்கடவீரென்று சொல்ல, இருவரும் பகவானுக்கு நமஸ்கரித்து சந்திரபாகாநதியைத் தாண்டி போகுமளவில் நாமதேவர் சோகத்தால் நினைப்பற்றவராகி ஞானதேவருடன் நடந்துக் கொண்டு பிரேமைபாவனையா லடிக்கடி திரும்பிப் பார்த்துக்கொண்டு என்னையேன் யாத்திரைக்காக பாண்டுரங்கர் போகச்சொன்னாரென்றும், மகத்தான பிரேமையைப் பகவானிடம் வைத்து குழந்தையைப்போல் அத்யந்த மோஹத்துடன் ஓ பண்டரிநாதரே! எப்பொழுது தேவரீர் முகத்தைப் பார்க்கப் போகிறேன்! தேவரீரைப் பார்க்காத நாள் தண்டகாரண்ணியமாகத் தோன்றுதே? ஓ தெய்வ சிகாமணியே? தாய், தகப்பன் தாதா

வாகி அடியே னிருதயத்தி லிருக்கக் கடவீரென்று அபாரமான பிரேமையுடன் சொல்லிக்கொண்டு நடந்தனர். ஞானதேவ ரவரைப்பார்த்து ஐயா பக்தசிரேஷ்டரே! பிரியத்துடன் ஸ்ரீஹரி உமது உள்ளத்துளிருக்கின்றார், நீர் விசாரிக்காமல் வீணில் கஷ்டப்படுகிறீர், பராத்பரரான வெம்பெருமானுக்குள் நீரிருக்கின்றீர், உமக்குள் அவர் பிரவேசித்திருக்கிறார், உமக்குள் நீர் யாராயிருக்கின்றீரோ கண்டுகொள்ளுமென்று சொல்ல, நாமதேவ ரவரைக் கண்டு தியானிக்கத் தகுந்தவரான ஸ்ரீபாண்டுரங்கரை நீர் காண்பியும், ஸ்ரீஹரியினுடைய விக்கிரக சௌந்தர்யத்தையே அடியேனுடைய மனது சேவிக்கக்கோரும், மற்றொரு விஷயத்தி லபேக்ஷை கொண்டு மாறாதென்று சொல்ல, ஞானதேவர் ஐயா பக்தரே? அத்வயரென்றும் அக்ஷரரென்று மறியத்தக்க வமலர், உமதிருதயத்திற் சாக்ஷாத்கரித்திருக்கின்றார். நாராயணரே நிகில ரூபராகி நயனாந்தர்வர்த்தியாகியு மிருக்கின்றார். அவரே வேறின்றி வியாபகராகியு மிருக்கின்றாரென்ன, நாமதேவ், அடியேனுக்கு சகுணத்திலேயே சாக்ஷாத்காரம் சௌக்கியமாயிருக்கும், திவ்யாத்ம சொரூபமான நிர்க்குணத்தில் நிலைசெல்லாது, திவ்வியமங்கள விக்கிரகத்தைநாடி பிரியத்துடன் பாடவு மாடவும் பாதசேவையைச் செய்யவும் ஹரிதாஸ்யத்திலேயே அடியேனுடைய மனது ஈடுபட்டிருக்குமன்றி மற்றொன்றி லீடுபடாதென்று சொல்லிக்கொண்டு இருவரும் யாத்திராபரராய் இவ்விதங்களான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு நடந்து சென்றார்கள்.

ஒருநாள் ஞானதேவர் நாமதேவைப் பார்த்து, பக்த சிரேஷ்டரே! நீர் எதினாலே பகவானை சுவாதீனப்படுத்திக்கொண்டீரோ அந்த பக்திமார்க்கத்தையும் அந்த பஜனையைச் செய்யும் விதமும் சிரவணமென்னும் மனன மென்னும் நிதித்தியாசனமென்னுமிவைகளின்விதமும் விஸ்ராந்தியென்பதெதுவோ அதனையும் உம்மிடமிருந்து அறிந்துக்கொள்ளவேண்டுமென்று வெகுகாலமாக இச்சித்தேன், உமக்கனுபவமான சாதனோபாயத்தைச் சொல்லவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, நாமதேவ ரவரது திருவடிகளைப் பிடித்துக்கொண்டு திரிகரண சுத்தியாகச் சொல்லுவார், அடியேன் அக்ஞானி, ஒன்றுந் தெரியாதவன், நீர் அத்யாத்மஞான மென்னை கேட்டது கற்பகவிருக்ஷம் லோபியினிடம் யாசகத்திற் கேகியதுபோ

லாச்சரியமாயிருக்கிறதென்று திரும்பியுந் திருவடிகளைப் பிடிக்க ஞானதேவரவரை நோக்கி, என் விஷயத்தில் சங்கை வைக்கவேண்டாம், உம்முடைய வனுபவத்தைச் சொல்லவும், உமது ஞானாமிருதவருஷத்தைப் பொழியச் செய்யவும், நீர் விச்ராந்தியை அங்கமாயுடையவரென்று உமது சாங்கத்யத்தை யிச்சித்தேன். நீர் அந்தரங்க பக்தராகி பாண்டுரங்கரை யுமதாதீனமாகச் செய்துக்கொண்டீர். அன்பு பெருகாத ஆத்மஞான மென்ன பிரயோஜனம்? உமது ஞானம் விஸ்வோத்தாரகமா யிருக்கிறது, அதை கேட்க விரும்புகிறேனுதலா லுமது மௌனத்தை விட்டு என்னுடைய வார்த்தையைப் பூர்த்தி செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டார். நாமதேவர் சொல்லத் தொடங்கினர்—ஸ்வாமி? அடியேனுடைய வனுபவத்தைச் சொல்லுகிறேன் கேளும். வைராக்கியத்தைப் பூர்ணமாக வகித்து ஸர்வபூதங்களிலும் தயை யுடைத்தாய் நீ நானென்ற பேதத்தை விடுவது சுத்தபஜனை யெனப்படும். இந்நிலையில்லாவிடில் ஸாதனங்கள் வியர்த்தமாம். உள்ளே தோஷகுணங்களை யுடையராகி உபசாரத்திற்கு வெளியே நமஸ்காரம் செய்தாலென்ன பிரயோஜனம்? உத்தமம், மத்தியமம், அதமமெனும் தன்மைகளைக் குறிப்பிடாமலிருப்பதே அகண்டமான நமஸ்காரமாகும். இவ்வண்ணமான புருஷனுக்கு ஸ்வாநந்தவெள்ளம் ஊறிக்கொண்டிருக்கும். விஸ்வத்தில் சர்வேசுவரன் வியாபித்திருக்கிறனென்கிற நிச்சலமான விந்த ஞானமே மனதில் ஸ்திரப்படுத்துவது அக்ஷயமான தியானமாகும். நாதலுப்தத்தால் மானனது தேகபாவத்தை மறந்தாற்போல மனதை ஹரிகீர்த்தனையில் லீனப்படுத்துவது சிரவணமாகும். லோபிகள் திரவியத்தைச் சேர்க்கும்பொருட்டு விவகாரத்தி லெப்படி சித்தத்தை வைப்பார்களோ, அப்படி ஆத்ம ஹிதத்திற்கு விசாரணையுடைத்தாயிருப்பது மனனமென்று சொல்லப்படும். ஜாரஸ்திரீ, பரபுருஷனிடம் பிரீதிவைத்து லௌகிகமான வீட்டுக்காரியங்களை நிருவகித்துக் கொள்வது போலவும், சாதகபக்ஷிகள் பூமண்டலத்திருக்கினும் அவைகளுடைய லக்ஷியம் மேகமண்டலத்தி லிருப்பதுபோலும், வெளிநோக்கைக்கொண்டு சமுசாரம் செய்துக்கொண்டு இருதயத்தில் ஸ்ரீதரனைத் தியானித்துச் சர்வப்பிரகாரங்களாலும் சகல பூதங்களிலும் பாண்டுரங்கரை சிந்தித்துக்கொண்டு ரஜோகுண தமோகுணங்களை

விட்டு பகவத் விஷயமான பிரேமையை சித்தத்தி லிட்டுக்கொண்டு அஸங்கனுகி சத்வ சீலனுகி பிரேம பக்தியை வகித்திருப்பது சிரேஷ்டமான நிதித்யாசனமாகும். ஏகாந்தத்தி லுட்கார்ந்துக்கொண்டு நித்திய நியமத்துடன் ஸ்ரீஹரிகுண கீர்த்தனே செய்யவேண்டும். இவையில்லாத சாதனங்கள் பந்தகங்களேயாம். அவை பிரயோஜனத்திற்கு வாரா. திரிகரண சுத்தியாக எனது மனோபாவமான வனுபவத்தைச் சொன்னேன், இதனே அடியேனுக்கு ருக்மணி காந்தர் சொன்னரென்று தெரிவிக்க, ஞானதேவர் கேட்டு ஆச்சரியமுற்று உமக்கு சமமான விஷ்ணுபக்த ருண்டாவ தருமை, இன்றையதின மமிர்த விருஷ்டியைப் பொழிந்தீரென்று நாமதேவை யனேக விதங்களாகச் சிலாகித்து ஸ்வானந்தத்தில் முழுகினவர்களாய் இருவரும் சம்பாஷித்துக்கொண்டு அவ்வவ்விடங்களில் ஹரிகுண கீர்த்தனேச் செய்துக்கொண்டு யாத்திரை செய்துக்கொண்டிருந்தனர்.

இப்படி சஞ்சரித்துக்கொண்டு ஹஸ்தினுபுரத்தைச் சேர, அவ்விட மனைவரும் நாமதேவுடைய பக்தி தாற்பரியத்தைக் கண்டு அவருக்கு நமஸ்கரித்து தாளவீணேகளுடன் வாத்யகோஷங்கள் ஜய ஜய சப்தங்களுடன் விசேஷமாகச் செய்துக்கொண்டு பகவந்நாமத்தைச் சொல்லிப் பாடிக்கொண்டு பட்டணத்திற் பிரவேசிக்க, அவ்விடத்திய துலுக்க வரசன் சந்தடியைக் கேட்டுக் காரணத்தை விசாரிக்க; அவ்விடத்தார் நாமதேவரென்னும் பக்தர் பண்டரியிலிருந்து தீர்த்த யாத்திரையாக வந்தாரென்றுர்கள். அவன் கோபமுடையவனுய், கீர்த்தனேயினுல் ஜனங்கள் கெட்டுப் போகிறுர்களென்று யௌவனதசையில் வியாதியுண்டாவதுபோல, கீர்த்தனே செய்யுமிடத்திற்குச் சென்று சகிக்காமல் ஒரு பசுவை அவ்விடம் கொண்டுவந்து வெட்டி நாமதேவைப் பார்த்து இந்த பசுவை நீரெழுப்புவீராகி லுமது புராண வாக்கியங்களேச் சத்தியமென் றெண்ணுவேன், இல்லாவிடி லும்மைக் கொன்றுவிடுவேன், எத்தனேநாளி லெழுப்புவீரென்று கேட்டான். அப்போது கீர்த்தனே மாதுர்யம் நின்றுவிட்டது. யாவரும் சேட்டை யற்றிருந்தனர். நாமதேவ ரப்போது அரசனே நோக்கி நாலு நாள் வேண்டுமென்று சொல்ல அரச னதற்குச் சம்மதித்து வீட்டிற்குச் சென்றனன். பின்பு நாமதேவர் ஸ்ரீஹரியை மனதிலிருத்திக்கொ

ண்டு தீனதயாளா! பதிதபாவனா! பக்தவத்ஸலா! கருணாகரா! அந்தரசாக்ஷி! குணநிதானா! பக்தபூஷணா! கோவிந்தா! புண்டரீகவரதா! பண்டரிநாதா! பாண்டுரங்கா! வென்று பிரேம ரஸத்துடன் கீர்த்தனையில் நாமதேவ் சோகித்து கண்ணீர் தாரையாக வர, பகவானைப் பஜித்துக் கொண்டிருந்தார். சிரவணத்திற்காக வந்தவர்களும் அழுதுக்கொண்டிருந்து ஒருநாள் பரியந்தமிருந்து மறுநாள் சூர்யோதமானவுடன் தங்கள் தங்கள் வீட்டிற்குப் போய் விட்டனர். நாமதேவ் மாத்திரம் அந்த பசுவின் சிரசை பிடித்துக்கொண்டு பண்டரிநாதா! ஸ்ரீஹரி! சீக்கிரமாக வாரும், பண்டரியில் பக்த ஜனங்களுடைய கீர்த்தனையில் கட்டுப்பட்டீரோ? அல்லது யோகிகளுடைய தியானத்திற் கட்டுப்பட்டீரோ? ஸ்ரீமான்கள் உம்மைப் பூஜித்துக்கொண்டிருக்க வடியேனை மறந்தீரோ வென்று நாலு நாள் பரியந்த மல்லும் பகலும் அழைத்துக்கொண்டு அவரது கண்ணீரால் பூமியாவும் நனைக்கப்பட்டிருந்தும் பெருமாள் வராமையால் ஜலமில்லாமல் மச்சங்கள் தடமாடுவதுபோல நாமதேவ் சங்கடப்பட்டுக்கொண்டு எனக்கு காலம் சமீபித்ததென்று சொல்லி ஸ்மரணைதப்பி விழுந்துவிட்டார். அவ்வேளையில் பகவான் நாமதேவ ரிருதயத்தில் பிரஸன்னராகி பசுவை யெழுப்பி நாமதேவரை ஸ்மரணைக்கு வரச்செய்ய, பெருமாள் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு ஸ்வாமி! ஏனிவ்வளவு காலம் ஆலஸ்யம் செய்தீரென்று கேட்க, பகவான் சொல்லுவார், ஓநாமதேவா! நீ நாலு நாள் வேண்டுமென்று ஏன் பிரதிக்ஞை செய்தாய்? அப்போதே எழுப்புவேனென்று சொல்லியிருந்தா லப்போதே வந்திருப்பேன், உன் சங்கல்ப முன்னிடமே யிருக்க என்மேல் நிமித்தம் வைக்கவேண்டாமென்று சொல்லி மறைந்தனர். பின்னர் நாமதேவ் கண்திறந்து பார்க்குமளவில் அப்பசு யெழுந்திருந்தது. இவ்வாச்சரியத்தை யனைவருங்கண்டு அரசனிடம் சொல்ல அவனவ்விடம் வந்து நாமதேவை நமஸ்கரித்தான், சகலரு மானந்தத்தை யடைந்து நாமதேவை கொண்டாடினார்கள்.

சிலநாள் அஸ்தினாபுரியில் நாமதேவ் தனது மதுரகானத்தை வெளியிட்டுக்கொண்டிருந்து அப்பட்டணத்தை விட்டு அவ்வவ்விடத்திய தீர்த்தங்களைச் சேவித்துக்கொண்டு காசிபட்டணம் வந்தனர் அவ்விடத்தில் கபீர்தாஸரைக் கண்டு அவரது ஹரிகீர்த்த

ணையைக் கேட்டு பின்பு மதுரை, பிருந்தாவனம், துவாரகைகளுக்குச் சென்று, திரும்பி வருமளவில் மார்வாடி தேசத்திற் பிரவேசித்து வழியில் மிகுந்த தாகத்தா லவ்விருவரு மவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்க அவ்விடமோர் கிணற்றைக் கண்டார்கள். அதிக ஆழத்தில் அதில் ஜலமிருக்கக் கண்டு ஒன்றுந் தோன்றாமலிருக்க, ஞானதேவர் கிணற்றிற்குள் ளிறங்கி ஜலத்தைச் சாப்பிட்டு தாக சாந்தி செய்துக்கொண்டார். நாமதேவ் அக்கிணற்றி லிறங்க வறியாமல் கரைமே லிருந்துக்கொண்டு பகவானைப் பிரார்த்திக்கத் தொடங்கினர், ஓ பரமபுருஷா! பாண்டுரங்கா! நிகமகோசரா! நீலவர்ணா! ஜகதோத்தாரா! ஸ்ரீஹரீ! அடியேன் தாகத்தினா லுபத்திரவப் படுகிறேன், ஓ தாமோதரரே! கருணையுடன் சீக்கிரத்தில் வந்து கடாக்ஷிக்கவுமென்று பலவாறாக வேண்ட, தயாளுவான பகவான் அக்கிணற்றின் ஜலத்தை மேலுக்கு வரும்படிசெய்தார். இந்த மகிமையை ஞானதேவர்கண்டு ஓ பக்தசிரேஷ்டரே! சர்வேஸ்வரன் உம்மிடத்தில் பிரேம ரசத்தைக் கொண்டாடுவதுபோல இக்கிணற்றில் நீரு பெருகிவந்தது ஆச்சரியகரமானதென்று சொல்ல, நாமதேவ் தாகசாந்தி செய்துக்கொண்ட பிறகு பிரயாணப்பட்டு வேறு யாத்திரைகளுக்கு நடந்தனர். இப்பொழுதும் அவ்விடத்தில் மார்கழி மாசத்தில் பிரபலமான வுற்சவம் நடந்தேறி வருகின்றது.

பின்பு பதரிகாச்சிரமம் முதலான திவ்வியதேசங்க ளனைத்தையுஞ் சேவித்துக்கொண்டு தெற்கே நோக்கிச்சென்று (திருவணை) சேதுதரிசனமும் இராமலிங்க தரிசனமுஞ் செய்துக்கொண்டு அரங்கநாதரையும், வரதரையும் திருவேங்கடத்தான் முதலானோரைச் சேவித்துக்கொண்டு அவுண்டா நாகநாதமெனும் புண்ணிய க்ஷேத்திரத்தைச் சேர்ந்தார்கள். அன்றையதினம் மஹாசிவராத்திரி பர்வகாலமா யிருந்தபடியாலும் அந்த க்ஷேத்திரம் இரண்டாவது கைலாசமென்று பக்த ஜனங்களால் சொல்லப்படுவதாலும் அவ்விடத்திய புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு சிவபெருமானைச் சேவித்து நமஸ்கரித்து பார்வதீவரா! கட்வாங்கதரா! கைலாசபதி! திகம்பரா! விஸ்வேஸ்வராவென்று தோத்திரஞ்செய்து, சந்தன குசுமங்களைச் சமர்ப்பிக்க, சந்திரமௌலி சந்துஷ்ட சித்தராயிருந்தார்.

பின்பு நாமதேவ் தாளவீணைகளை யேந்திக்கொண்டு ஆர்த்தியுடன் கீர்த்தனை செய்ய ஆரம்பித்தார். இருதயத்தில் பாண்டுரங்கரை சிந்தித்துக்கொண்டு கண்களை மூடிக்கொண்டு மானாவமானங் களைவிட்டு டாம்பீக லோகாசாரங்களைவிட்டு வாஸனா லக்ஷணத் தையும் விட்டு, பேதாபேதமின்றி ஆசாபாசங்களை நிரஸித்து ஸ்வாநந்த பிரீதியுடன் ஆடவும் பாடவு மிருந்தனர். அளவிறந்த ஜனங்க ளவ்விடம் சிரவணத்திலுட்கார்ந்துக்கொண் டிருந்தனர். பௌர்ணிமையில் சந்திரன் பூர்ணகலையுடன் வர, சமுத்திரராஜன் சந்தோஷிப்பதுபோல, கேட்க வந்தவர்கள் புளகித காத்திரராகி கண்களி லானந்த பாஷ்பம்பொழிய தடஸ்தராயிருந்தனர். மன திற்கு விஷயங்களில் பிரீதி குறைந்தால் இந்திரியங்களுக்கு சகஜ மாக மறப்புண்டாகும், அதைப்போல நாமதேவ் தேஹபாவத் தை விட்டபடியால் ஸ்ரீஹரிகுண கீர்த்தனையைக் கேட்போரும் விதேஹ ஸ்திதி யடைந்திருந்தனர். அச்சமயத்தில் பிராம்மணர் கள் ஸ்நானம்பண்ணி சர்வாங்கமும் பஸ்மத்தைத் தரித்து உருத்தி ராக்ஷ மாலைகளைக் கழுத்திலணிந்து மடி வஸ்திரங்களுடன் அக் ரோதகத்தை (பிராம்மணர்கள் பூஜை நிமித்தியம் கொண்டுபோகும் ஜலம்) கையிலேந்தி பூஜாதிரவியங்களை கைக்கொண்டு சாம்பமூர்த் திக்கு அபிஷேகஞ்செய்ய சன்னிதிக்கு வந்தனர். கீர்த்தனை கேட் கும் ஜனசமூஹ மவ்விட மதிகமாயிருந்தபடியால் சன்னிதிக்குட் செல்ல சந்து அகப்படவில்லை. வெளிக்குமாத்திரம் ஸ்னானம் பண்ணி உள்ளே விகல்பங்களுடையவர்களாயிருக்க தம்மை தீண் டவேண்டாமென்று சொல்லிக்கொண்டிருந்தனர். ஹரிகீர்த்த னைக்கு அசுசித்வ மெப்பொழுது மில்லை. அப்படியே பிராம்மண சபைச் சேர்ந்தவிடத்திலும் விஷ்ணுதரிசன ஸ்தலத்திலும் அசு சித்வமில்லை. அந்த பிராம்மணர்க ளிதைக் கண்டறியாமல் கோப த்தையடைந்து ஓ நாமதேவா! நீயேன் வீணாக ஊளரிக்கொண்டி ருக்கிறாய்? உன்னுடைய கூச்சல் பண்டரியில் பிரயோஜனப்ப டும், இவ்விடம் நாகநாதர் அதனை மன்னிக்காரென்று சொல்ல, சுரோதாக்க ளனைவரு மவ்வந்தணரைக்கண்டு, நீங்கள் ஹரிஹரர் களை பின்னமாகச் சொல்லுவது எங்களுக்கு சம்மதி யாகாது, வெல்லமு மதுரமும் வேறாகாது, புஷ்பமு மகரந்தமும் வேறா காது. அதுபோல சிவபெருமானும் விஷ்ணுவு மிருவரு மேகமா

யிருக்கிறார்க ளாதலால் நாகநாதர் கிர்த்தனையைக் கேட்டுச் சந் தோஷித் திருக்கிறாரென்று சொல்ல, பிராம்மணர்கள் பொறுக் காமல் பாமரர்களான நீங்க ளெங்களுக்கு ஞானத்தை போதிக் கிறீர்களோ! நாங்கள் சாஸ்திராதிகாரிகள், சர்வஞ்ஞர்கள், நாம தேவின் சித்தாந்த மிவ்விடம் சரிப்படாது, இவ்விடம் விட்டு எழுந் திருங்கோள், இல்லாவிடில் தாடனை செய்வோமென்றார்கள். இவ் வுரைகளுக் கவ்விடம் பிரதியுத்தர மொன்றுமில்லாதிருந்ததால் சிவபூஜைக்கு நாழியாச்சுதென்றும் சன்னிதிக்குள் போக மார்க்க மில்லையென்றும் கண்டு அந்த பிராம்மணர்கள் நாமதேவ் அரு கில்வந்து கோபத்துடன் முதுகிலடித்துக் கிர்த்தனையை நிறுத்தி நாமதேவைப் பார்த்து, வியர்த்தமாக இவ்விடமேன் பிதற்றிக்கொ ண்டிருக்கிறாய்? சிவ தரிசனத்திற்கு நாங்கள்போக வழியில்லை, நீ தேகபாவத்தையும் லஜ்ஜையும் விட்டிருக்கிறாய், உன்னுடைய சித்தாந்த ஞானம் கர்மாசரணையை முழுகடித்தது, சன்னிதி பின் பக்கம் போய் பாடிக்கொண்டிருவென்று சொல்ல, நாமதேவ் நம ஸ்கரித்து அப்படியே செய்கிறேனென்று அந்த இடத்தைவிட்டு பின்பக்கம் சென்றார். தீர்த்தபாத்திரத்தில் சாராயம் விழுந்தாப் போல சந்தனத்தில் வெள்ளைப்பூண்டு விழுந்தாப்போல கதையின் மாதுரியம் நின்றுவிட்டது. கேட்கிறவர்களின் சித்தங்கள் கிலேச முற்றன. நாமதேவ ரவ்விடத்திலும் கிர்த்தனையைச் செய்துக்கொ ண்டு ஓ பதிதபாவனா! அனாதநாதா! அடியேனை விதேசத்திலேன் ஒண்டியாக விட்டீர்? தாயார் பாலகனை அரண்யத்தில் விட்டதுபோ லின்றையதின மெனக்கு விபரீதமாயிற்று. ஓ பண்டரீபுர நிவாசி! விடோபாயி! குலஸ்வாமினி! எனது தாயே! என்னை யெப்படி மறந்து இவ்விடத்தில் போட்டாய், உன்னை தியானத்தில் திசை கள் நிறைந்தவனாக காணும்போது தேகபாவனைச் சமூலமாக போய்விடுகிறது. உனது சன்னிதியைக் கண்களால் காணுமள வில் இந்திரிய சேஷ்டைகள் விட்டுப்போகின்றன. ஓ கிருஷ்ணா! ஜகதீசா! யென்று சிந்திக்க, சொர்கத்திலிருந்து நவவித பக்திகள் நவலக்ஷபதாகங்களாக (கோடிமரங்களாக) கீழுக்கிறங்கின. இந்த வற்புதத்தைக்கண்டு சகலரு மாச்சரியப்பட்டு தடஸ்தராகி "விட் டல" நாமத்தைக் கர்ஜித்துக்கொண்டு ஆடத்தொடங்கினர். பதா கங்களுடைய காற்று நாலுபக்கங்களிலும் வீசினது. நாமதேவ் அமித

மான ஆனந்தத்தை யடைந்து பகவத்கிருபையை அறிந்துக்கொண்டு பாண்டுரங்கர் சகலசாகித்தியமும் குறைவில்லாமற் கொடுத்து நாகநாதரை மர்த்திரம் விமுகராக வைத்திருக்கிறார், அடியேனால் அபராதமென்ன நடந்ததோ தெரியாது. ஓ க்ஷீரசாகரவிலாசரே! லக்ஷ்மீகாந்தரே! கருணாகரரே! யாதவாராயரே! கிருபை செய்யும், ஹஸ்திபுரியில் துலுக்கர் பசுவைக் கொன்றபோது காப்பாற்றி ரக்ஷித்தீர். அரண்ணியத்தில் தாகமெடுத்தபோது ரக்ஷித்தீர். ஏன் இப்போது அனுக்கிரகிக்காதிருக்கிறீர்? அடியேன் பக்கம் முதுகிட்டு கங்காதர ருட்கார்ந்திருக்கிறார். நீர் கருணிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, கிழக்கைப்பார்த்த தேவாலயம் மேற்கு திசைக்குத் திரும்பிவிட்டது. அது சுதினமென்று பக்தர்கள் தாளங்களைப் போட்டுக்கொண்டு அத்தியானந்தத்தையடைந்தனர். உமாரமணரும் நாமதேவுடைய கீர்த்தனையைக் கேட்டுக்கொண்டிருந்தார். சூர்யோதயமானபிறகு பிராம்மணர்கள் பூஜா விசர்ஜனஞ்செய்து வெளியேவர, சமுகத்தில் நாமதேவர் கீர்த்தனை செய்வதைக்கண்டு ஆலயம் திரும்பிவிட்டதென் றறிந்துக்கொண்டு ஆச்சரியப்பட்டு நாம் கர்மாபிமானிகளாகி நாமதேவைச் சங்கடப்படுத்தினோமென்று அனுதாபமடைந்து அவரிடம்வந்து, நீர் தன்னியரானவர், மேன்மையுடையவர், காணாததும் கேட்காததுமான செய்கையை இன்று நீர்செய்தீர், உம்மைப்பெற்ற தாய்தந்தைய ரெவ்வளவு மேன்மையுடையாரோவென்று அனேகவிதமாகத் தோத்திரஞ்செய்து நமஸ்கரித்தார்கள். நாமதேவ் கத்கதகண்டத்துடன் பகவத் கிருபாரசத்தைச் சொல்ல வாய்வராமல் பண்டரீநாதருக்கு ஆரத்திகொடுத்து நமஸ்கரித்துப் பிரசாதத்தைப் பங்கிட்டார். அப்போ தெல்லோரும் பார்த்துக்கொண்டிருக்க பதாகங்கள் மறைந்தன. இப்போதைக்கு மந்தவாலயம் பிரத்தியக்ஷமாக வப்படியே மேற்கு முகமாக விருக்கின்றது.

பின்பு நாமதேவும் ஞானதேவரும் கைலாசபதிக்கு நமஸ்கரித்து அவ்விடம் விட்டுப் பண்டரிபுரத்திற்கு வந்துக்கொண்டிருந்தனர். மாமியார் வீட்டில் வாசஞ்செய்யும் மருமகள் தன் தாயார் வீட்டிற்குச் செல்லும்போது சந்தோஷ மடைவதுபோல உல்லாஸத்துடன் நடந்து சிகரதரிசனமானவுடன், சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, ஹரிநாமத்தை ஜெபித்துக்கொண்டு ஆலயத்திற் பிரவேசி

த்து நாமதேவ் தெண்டஞ்சமர்ப்பித்துக் கட்டையைப்போல் கீழே விழுந்திருந்தார். ஞானதேவரவரை யெழுப்பி கையைப்பிடித்துக் கொண்டு மண்டபத்திற்குட் செல்ல நாமதேவ் திரும்பி நமஸ்கரித்து கர்ப்பகிரகத்திற்சென்று பகவானுடைய சரணகமலங்களில் மஸ்தகத்தை வைத்து எழுந்திருந்து, ஓ ஸ்வாமி! வெகு தொந்தரவுகளை யடைந்தேன், அடியேனைக் கிருபாதிருஷ்டியுடன் பார்க்கக் கடவீர், அனேக தேசங்களைப் பார்த்தேன், ஆனால் பண்டரிக்குச் சமானமானதைப் பார்க்கவில்லை. தீர்த்தங்களனைத்தையும் சேவித்தேன் ஆனால் சந்திரபாகாநதியிற்றான் அடியேன் மன நிலைபெற்றது. தேவரீரைவிட்டபிறகு சகுணமூர்த்திகளனேகரைச் சேவித்தேன். ஆயினுந் தேவரீருக்குச் சமமாக வடியேனுக்கு யாரும் தோணப்படவில்லை. அவர்களைச் சேவிக்கும்போது பிரீதியுடன் தேவரீரையே நினைத்துக்கொண்டிருப்பேன். நீரெனக்கு இஷ்டர், மித்திரர், பந்துவு; ஆப்தர், குலதெய்வமென்று சொல்லி சும்மாவிருக்குமளவில் பகவான் கிருபாநோக்கத்துடன் உன்னை க்ஷணமாவது மறந்திருக்கவில்லையென்றுசொல்லி தன்கழுத்திலிருக்கிற துளபமாலையை நாமதேவ் கழுத்தில் போட்டார். அனேக பக்த ஜனங்களப்போ தவ்விடங் கூடியிருந்து ஜய ஜய சப்தங்களைச் சொல்லிச் சந்தோஷித்து பகவானுக்கும் பக்தனுக்கும் ஹாரதிகளைக் கொடுத்து மங்களாசாஸனஞ் செய்தார்கள்.

பின்னர் பகவான் நாமதேவைக் கண்டு நீ சமஸ்த தீர்த்தயாத்திரைகளைச்செய்து ஜன்ம சாபல்யத்தைச் செய்துக்கொண்டாய். அது பூர்த்தியாவதற்கு வுத்தியாபனமும் ததீயாராதனமுஞ் செய்யவேண்டும். புராணத்தைக்கேட்டு அதிலடங்கிய வர்த்தங்களை மனனம் செய்யாவிட்டால் வியர்த்தமாவதுபோல சப்தபுரிமுதலான திவ்விய தேசங்களைக் கண்டு வந்தனையாதலா லதற்குச் சாந்தி செய்யவேண்டுமென்று சொல்லி ருக்மணிதேவியிடஞ் சென்று நாமதேவனுக்கு மெனக்கும் பிரீதி யதிகமா யிருப்பதால் இவனது யாத்திரை பூர்த்திசெய்ய நீயு முதவவேண்டுமென, ருக்மணி பிராட்டி ஓ ஸ்வாமி! நாமதேவன் யாவையும் விட்டு உம்மையே பிடித்திருக்கிறனாதலா லும்மையன்றி யாவ ரக்காரியத்தை முடிப்பார். நீரே நாமதேவருடன் சென்று பிராம்மணர்களை அழைத்துவாரும், அஷ்டசித்திக ளனுகூலமா யிருக்கும்போ தென்ன குறைச்ச லிவ்

விடமுண்டு? இச்சாமாத்திரத்திலெது ஆகாமலிருக்குமென்று சொல்ல, பகவான் ஒரு பிராம்மண கிரகஸ்த வேஷத்தைத் தரித்துக்கொண்டு பக்தரனைவரும் கூடவர, பண்டரியை வலம்வந்து அக்கிரஹாரத்திற்குச்சென்று பிராம்மணர்களுக்குத் தெண்டம் சமர்ப்பிக்க, அவர்கள் அவரது தேஜோ விசேஷங்களைப் பார்த்து இவர் சாமானிய பிராம்மண ரல்லரென்று கண்டுகொண்டு சந்தோஷித்து உம்மைத் தரிசித்தமாத்திரத்தில், திரிவித தாபங்கள் போயின, உமது ஊரென்ன? பெயரென்ன? உமது செய்தொழிலென்ன? எவ்விடமிறங்கி யிருக்கிறீரென்று கேட்க, பகவானவர்களைப்பார்த்து நம்முடைய ஜாதியும் விருத்தியுமிந்த பக்தர்களறிவார்கள். நாம் அஸங்கராயிருக்கினும் அவர்களுக் கனன்னியனுவோம். நாமதேவுக்குள் அன்பனுவோம். நாம், தேவாலயத் திருப்போம். நமது நாம மனந்தனென்று சொல்லுவர்கள், நாளையதினம் ஸ்நான விதிகளை முடித்துக்கொண்டு சங்கையின்றி போஜனத்திற்கு வரவேண்டுமென்று சொல்லிவிட்டு, ஆலயத்தினுள்பிரவேசித்து ருக்மணி பிராட்டிக்கு நடந்ததைச் சொல்லி சமையல் எத்தனத்தைச் சூசனை செய்தார். பிராட்டியிச்சாமாத்திரத்தில் அஷ்டசித்திகளும் தாசிகளாக வந்து சாஹித்தியங்களனைத்தையும் சித்தப்படுத்தினர். அவ்விடம் மெழுகி கழுவி மொக்கிட்டு கொடிமாங்களிருத்தி அலங்காரம் பண்ணப்பட்டிருந்தது. அப்பொழுது புண்ணியாஹவாசனம் செய்விக்க, ருக்மணி சத்யபாமை யிருவரும் நாமதேவுக்கு மங்கள ஸ்நானஞ் செய்வித்தனர். பகவான் வஸ்திரபூஷணங்களை விசேஷமாகக் கொடுத்தார். நாமதேவ ரவைகளைத் தரித்துக்கொண்டு அலங்கிருதராகியிருக்க சகலரு மவரை தன்னியரென்று சொன்னுர்கள். இதற்குள் சமையலாகி யிருந்ததால் கிரகஸ்தவேஷரான பாண்டுரங்கர் பிராம்மணர்களை யழைத்து அவர்களுக் காஸனங்க ளளித்து உட்காரச்செய்து அவர்களுடைய திருவடிகளைக் கழுவி தனது பீதாம்பரத்தால் துடைத்து அவர்க ளங்குஷ்டங்களைக் கண்களுக் கொற்றிக்கொண்டு வரிசையாக வுட்காரவைத்து அவர்களது சரணதீர்த்தத்தை ஸ்வீகரித்து துளபமாலைகளை யவர்கள்கழுத்திற்போட்டு கஸ்தூரி திலகத்தை நெற்றிகளில் வைத்து தூபங்கொடுத்து ரத்னதீப ஜோதியை பிரகாசிப்பிக்கச் செய்து ஹாரதிகளை யவர்களுக்குக் கொடுத்து, சுவர்ண பத்திரங்களை

முன்னிட, ருக்மணி பிராட்டி கிரஹிணி வேஷத்துடன் சகலவித பக்வான்னங்களையும் வட்டிக்க, பகவான், நாமதேவை அழைத்து அவரது கைகளால் சங்கல்பம் செய்வித்து பக்தரெல்லோரும் ஜய ஜய சப்தங்களைச் செய்ய போக்தா ருக்மணிபதி யென்று ஆபோசனங் கொண்டார்கள். எவ்விடத்தில் பகவான் கர்த்தா, போக்தா வாக விருக்கின்றாரோ அவ்விட மெந்த பதார்த்தமும் குறையுண்டாகாது. அந்தண ரனைவரும் கவள கவளத்திற்கு அச்சுதனுடைய நாமத்தைச் சொல்லிக்கொண்டு சுகமாகச் சாப்பிட்டு ஆனந்த யுக்தரானபிறகு பகவா னவர்களுக்கு கையலம்ப ஜலங்கொடுத்து வுட்காரும்படிசெய்து தாம்பூலமளித்து இருகைகளைக் குவித்து நீங்களனைவரும் பார்த்துக்கொண்டிருக்க நாம் சாப்பிடவேண்டு மாதலால் சற்றுநேரம் சொஸ்த சித்தரா யிருக்கக் கடவீர்கள், நாம்போஜனம்செய்தபிறகு தக்ஷிணை கொடுப்போமென்றார். அவர்களுஞ் சம்மதித்து, பகவானைப்பார்த்து ஐயா! நீர் வியாபகராகி காரிய சாதனத்தை செம்மையாகச் செய்தீர், குறையொன்று மில்லாமல் ஆதரணையுடன் அன்னமளித்தீர், உம்முடைய ஒடுக்கமும் கௌரவமும் உவமையற்றதா யிருக்கின்றன. நீர் ஸர்வகாலமும் விஜயத்தை யுடையவராய் எம்மை பரிபாலிக்கக் கடவீர். ஆகல்ப பரியந்தம் ஜீவித்திருக்கக் கடவீரென்று ஆசிர்வதித்து அக்ஷதைகளைக் கொடுக்க, பகவா னதனைப் பீதாம்பரத்திற் கொண்டு, நாமதேவ் முந்தாணியி லிட்டனர். பின்பு பிராம்மணர்கள் பகவானைப் போஜனம் செய்யும்படி சொல்ல, ருக்மணி பிராட்டி சகல பதார்த்தங்களையும் கொண்டுவந்தனள். பகவான் போஜனத்திற்கு பக்தஜனங்களுட னுட்கார்ந்தார். நாமதேவர் வாரா திருந்தபடியால் தானே எழுந்திருந்து அவரை ஆலயத்தி லோரிடம் ஸ்மரணைதப்பி நிற்கக்கண்டு அவரை மெதுவாக ஜாக்கிரதைக்குக் கொண்டுவந்து போஜனத்திற்கு உட்காரவைத்தார். திரும்பி அவர் ஆனந்தபோதத்தி லமிழ்ந்திருப்பதால், பகவானவரைப்பார்த்து, நீ யெனக்கு அன்யமல்ல, கண்திறந்து பார்க்கக்கடவை. அனேக பக்தர்க ளிவ்விடம் போஜனத்திற்காக வுட்கார்ந்திருக்கின்றார்கள். நீ உன் வாய்திறந்து அமிருத வசனங்களைச் சொல்லுமென்று கைகளைப் பிடிக்க, நாமதேவர் அவர் திருவடிகளில் தலையை வைத்து ஜன்ம ஜன்மங்களிலு மிந்தப் பிரேமதானத்

த்தையே கொடுத்தருள வேண்டுமென்று கேட்டார். பெருமாளும் பிரீதி விசேஷத்தால் நாமதேவுக்குத் தன் கைகளால் போஜனத்தை யூட்டிக்கொண்டும் உதடுக்கு ஒட்டிய அன்னத்தைதுடைத்துக்கொண்டும் அன்புடன் தாய் குழந்தைக்கு வூட்டுவதுபோல அத்தியந்தப் பிரீதியுடன் வார்த்தையாடிக்கொண்டு கருணை வெள்ளமோட நாமதேவரை பக்ஷிப்பித்து மீந்த பிரசாதத்தை பகவான் சாப்பிட்டார். அந்தணரெல்லவரு மிதைக்கண்டு அதோமுகத்தை யுடையவர்களாகி இனி யென்னசெய்வோம்? இந்த எஜமானனுடைய மனைவி நமக்கு அன்னத்தை வட்டித்தாள், இவளெந்த ஜாதியாளோ தெரியாமற் போயிற்று, அவன் நாமதேவுடைய எச்சிலைச் சாப்பிட்டானுதலால் அவனுக்கு தகப்பனாக யிருக்கவேண்டும், அவனிடத்திலதிகபிரீதியைக்காட்டி தர்மத்திற்கு விரோதமாக நடந்தான், நமது கர்மாசாரத்திற்குக் குறையுண்டாயிற்று, இச்சங்கதி நம்மையறியாமல் நடந்தபடியால் பிராயச்சித்தத்தால் சரிப்படுத்திக்கொண்டு இந்த பிராம்மண கிரஹஸ்தனுக்கு ஜாதிகட்டு செய்யவேண்டுமென்றெண்ணி, அவர்கள் மௌனத்துடன் செல்லத்தொடங்க, பகவான்வர்களைக் கூப்பிட்டு சுவர்ணத்தை துளசிதளத்துடன் சேர்த்து தக்ஷிணைக்கொடுக்க, நாமதேவரை அழைத்துவந்து அவர்கள் திருவடிகளின்மேற் போட்டு இவன்மீது கிருபைவைக்க வேண்டுமென்று வேண்ட, பிராம்மணர்கள் பகவானைப் பார்த்து ஐயா! நாமதேவ் தையற்கார ஜாதியான், நீ அவனைப் பந்தியில் வைத்துக்கொண்டு சாப்பிட்டதுமன்றி அவனெச்சிலைப் பக்ஷித்தாய், உன்னைப் பார்த்தால் வேஷதாரியைப்போல தோன்றுகிறது, வர்ணாச்சிரம தருமமும்மிட மிருப்பதுபோல் காணவில்லை, நீ சர்வசாஸ்திரங்களையு மறிந்தவனைப்போ லகப்படுகிறாய், வேதவசனத்தை மன்னித்துக் கருமாசரணையை நிலைநிறுத்தவேண்டியிருந்தது. நாமதேவ்மேற் பிரீதிவைத்து செய்யாதகாரியத்தைச் செய்தாயென்று சொன்னார்கள். பகவா னவ்வார்த்தைகளைக்கேட்டு நாமதேவுடன் சாப்பிட்டேனென்கிற தோஷ மெனக்கில்லை, சைதன்னிய மொன்றானது, புண்ணிய பாபங்கள் பாதிக்கா, நான் சுத்தன், புத்தன், வியாபகன், அலிப்தனாக யிருப்பவன், தேகத்தைப்பற்றி நாமதேவை தையற்கார னென்றால் சகலருடைய சரீரம்போல அவனுடையதும் பஞ்சதத்வங்களா லானது, எந்த அவய

வத்தை நீங்கள் நாமதேவென்று பேரிடுவீர், பிருதிவி முதலிய பூதங்களிலெதற்கு தோஷத்தை கற்பிக்கின்றீர். நீங்கள் வேதங்களை வாசித்தவராயினும் பிரமநிஷ்டை லக்ஷணத்தை கண்டதில்லை, பேதப்பிரமை போகவில்லை, நாமதேவ் சங்கல்பம் செய்யும்போது அவனுக் கன்னமிடுவதற்கு அதிகாரமில்லையென்று ஏன் சொல்லவில்லை? நாமதேவ் ஆத்ம சொரூபியானபடியால் அவன் பிராம்மணனாக சொல்லப்படுவான். இதுவன்றி பாண்டுரங்கருக்கு பிரிய பக்தனாதலால் அவன் விஷயத்திற் சங்கைசெய்ய அவசியமில்லை. வாசாமகோசரமான பிரமத்தை யறியு மவரை பிராம்மணரென்று வேதஞ் சொல்லிற்று. நீசரென்று அவர்களைச் சொல்லுவது நியாயமன்று. அக்ஞானத்தி லமிழ்ந்தினவர்கள் தேகத்திற்கு பிராம்மணத்வ மென்றெண்ணுவர்கள். பகவானுடைய வடியார்களின் பாதரஜசே ஜகத்திற்கெல்லாம் பாவனமாயிருக்குமென்று அளவின்றிய சாஸ்திரங்களும் புராணங்களும் முறையிடுகின்றன. மேலான ஞானமும் மகத்தான வைராக்கியத்தையுங் கொண்டு பிரேம பக்தியை வகித்து மோஹத்தை விட்டு ஸ்ரீ ஹரி நாமத்தைச் சிந்தித்து சித்தலயத்தை யடைந்து சஞ்சரிக்குமிடமனைத்தையும் பவித்திரமாக்கி மஹானந்தத்தில் மக்னராயிருக்கும் பக்தர்களுடைய மேலான பிரசாத மின்றையதின மெனக்கு பாக்கிய விசேஷத்தால் அமிருத துல்யமாகக் கிடைத்தது. அவ்வண்ணமான பக்தர்களில் நாமதேவன் சிரேஷ்டனாகும், ஆனதாலவன் பிரசாதத்தை பக்ஷித்தேன், மேல் நடக்கும்படியான காரியங்களைத் தெரியச் சொல்லுங்களென்று வினவினர். பிராம்மணர்களதற்கு பெருமாளை நோக்கி, நீர் சத்குணங்களை பூரணமாக வுடையவர், சாஸ்திரார்த்தங்களைக் கண்டறிந்தவர். பிராம்மணர்களுக்கு ஆசாரம் பிரதம தருமம். அதாவது-பொய்சொல்லாமை, நியமம், சமதமாதிகளை யுடையராயிருத்தல், தவம், சர்வ பூதங்களிலுந் தயையுண்டாகி சொரூபானுசந்தானத்தி லிருத்தல், ஸ்நானம், சந்தியை, தேவார்ச்சனை, ஜபம், ஹோமம், அத்தியயனம், அதிதிபூஜை, புராண ஸ்ரவணம், குலாசார தருமம், சந்தோஷத்துடனிருத்தல், இவை யாவும் பிராம்மண தருமமாக வேதங்களிற் சொல்லப்பட்டிருப்பதால், அப்பிரமத்தனாய் அனாசாரத்தை யாசரிப்பது தகாத தாதலால், நீர் அனுதாபமுடையவராய் எல்

லோருங்காண அபிமானத்தைவிட்டு பிராயச்சித்தஞ் செய்துக் கொள்ளவேண்டும். அதற்கு பண்டரீ க்ஷேத்திரத்தை வலம் வந்து பக்தியுடன் பீமாநதியில் முழுகி பிராம்மண ஜனங்களுக்கு தக்ஷிணை தானங்களைக் கொடுத்தால், செய்த பாபம் நசிக்குமென் றூர்கள். இதைக்கேட்டு பிராம்மண வேஷதாரியான பாண்டுரங்கர் பிராம்மணர்களைக் கண்டு, ஹரிகதையைக் கேட்பதும், ஆத்மாவை யறிவதும், எல்லாம் ஹரிமய மென்றிருத்தலும், வாசனாத்ரயங்களைப் போக்குதலும், பரிசுத்த ஸ்நானமாகச் சொல்லப்படும். ஜலஸ்நானத்தால் பாபக்ஷயமாகாது, ஸ்ரீஹரிநாமத்தையும் சாதுசேவையுஞ் செய்துக்கொண்டிருப்பவன் புண்ணிய மூர்த்தியாவானென்று சொல்லிக்கொண்டு பக்தஜனங்களுடன் நதிக்கரையைச் சென்று ஸ்நானம் செய்யுமளவில் பிராம்மண ஜனங்க ளனைவருங்கூடி பிராயச்சித்தவிதிகளைத் தீர்த்தார்கள். ஸ்ரீஹரியின் சௌலப்பியத்தைக்கண்டு சுரர் களனைவருஞ் சந்தோஷமடைந்து புஷ்பவருஷத்தை பொழிந்தனர். பெருமாளும் புன்சிரிப்பான முகத்துடன் இவ்வித நடனங்களை நடத்தி, வைபவத்துடன் பக்தரனைவரும் பின்தொடர, பிரபையுடன்கூடி சந்நிதிக்குள் பிரவேசித்தனர். உதயத்தில் பிராம்மண ஜனங்களுக்கு பக்ஷணை செய்விக்கவெண்ணி கிரகஸ்த ரூபத்துடனே அவர்க ளனைவரையுமழைத்து, ருக்மணி பிராட்டியிடம் வந்து சீக்கிரத்திற் சமையலாகவேண்டுமென்று சொன்னூர். சகலமும் சித்தமாக விருப்பதை பிராம்மண ஜனங்கள் கண்டு ஸ்நான சந்தியாதி கிரியைகளைத் தீர்த்துக்கொண்டு வந்தனர். பெருமாள் விதியுக்தமாக வவர்களைப் பூஜித்து தனது கையினூல் கஸ்தூரி திலகங்களிட்டு புஷ்ப ஹாரங்களைப் போட்டு பாதஜலத்தை புரோக்ஷணை செய்துக்கொண்டார். ருக்மணி பிராட்டி அவ்வேளையில் இலைகளை வட்டித்து சரச பதார்த்தங்களுடன் அன்னமளிக்க, அந்தணரெல்லோரும் ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டு ஆபோஸனஞ் செய்து ஹரியே போக்தாவென்று சாப்பிடத் தொடங்கினூர்கள், பந்திவிசாரணை பாண்டுரங்கர் செய்துக்கொண்டிருக்க, பிராம்மண ரனைவரும் திருப்தியாக பக்ஷித்தனர். பின்பு அவர்களுக்குக் கை அலம்ப ஜலங்கொடுத்து தாம்பூலத்தையு மளித்து அவர்க ளனுமதியைக்கொண்டு தான் பக்ஷிப்பதற்கு பக்தஜனங்களுட னுட்கார்ந்தார், அவர்களாரெனில், நிவு

ருத்திஞதர், நாமதேவ், சோபானதேவர், நரஹரி, ஞானதேவர், விசோபாகேசர், ராகா குயவர், கோரா குயவர், சோகாமேளர், இன்னு மிதரபக்தர்களுங் கூடியிருந்து பெருமாள் புஜிக்குமளவில் வைஷ்ணவ ரசத்தை விமலமாகக் கொண்டனர். பக்த ஜனங்களாந்த பிரம்ம ரசத்தை உண்டு பரமானந்தத்தால் மக்னராகி பிராம்மண ஜனங்க ளனைவரும் பார்க்க அவர்கள் தங்கள் தேகங்களை மறந்தனர். பக்தர்களனைவரும் பக்ஷித்தபிறகு பாண்டுரங்கர் தனது பீதாம்பரத்தா லவர்களது வாயைத் துடைப்பதும் பலவிதமான பணிகளைச் செய்யும் லீலைகளைக்காண, பிரம்மதேவனு மிதரதேவர்களும் விமானங்கள் மீதேறி ஆகாயத்தில் வந்து நின்று பார்த்துக்கொண்டிருந்து சொர்க்கவாசிகளான தாங்க ளிந்த விஸ்ராந்தியை அடைந்ததில்லை யென்றும் பெருமாளுடைய சௌலப்பியத்திற்கெல்லையில்லை யென்றும் சொல்லிக்கொண்டு புஷ்பவிருஷ்டியைப் பொழிந்தனர். அந்த புஷ்பங்களின் மகரந்தத்தையும் பெருமாள் வீற்றிருந்த ஆனந்த கோலத்தையுங் கண்டு பிராம்மண ஜனங்களுக் கோரானந்தானுபவ முண்டாயிற்று. இதற்கென்ன ஹேதுவென்று அவர்கள் விசாரிக்குமளவில் பிராம்மண கிரகஸ்தன் பாண்டுரங்க ரென்றறிந்துக்கொண்டு ஐயோ! பகவானுக்குப் பிராயச்சித்தஞ் செய்வித்தோமே! என்று அனுதாபத்துடனிருக்க, பெருமாள் கிரீடகுண்டல, கௌஸ்துப, கங்கண, கேயூரங்களை யுடையராய் சங்குசக்கரம் முதலானவைகளை சதுர்ப்புஜங்களிற் றரித்துக்கொண்டு ஸ்ரீவத்ஸ சின்னத்துடன், பீதாம்பர தாரியாகி, புன்சிரிப்பான முகத்துடன் நாலுதிக்குகளிலும் காந்திவீச பிரஸன்னராகுமளவில், பிராம்மணர்கள் நமஸ்கரித்து பிரமைநீங்கி கண்கள் சிதறக் கண்டுக்கொண்டிருந்து சொல்லுவார்கள்-ஓ ஸ்வாமி! எங்களிடத்திலிருக்கும் தேகாபிமானத்தைப் போக்கடித்து, அக்ஞானத்தை நிரசித்து தேவரீரடியார்கள் திருவடிகளிலன்பு செலுத்த தேவரீர் கிருபை செய்யவும், ஓ கிருஷ்ணா! முகுந்தா! கோவிந்தா! கேசவா! அச்சுதா! நாராயணா! நரஹரி! பாண்டுரங்கா! பண்டரீசாவென்று தோத்திரஞ்செய்தார்கள். பெருமா ளதைக்கேட்டு ஓ பிராம்மண சிரேஷ்டர்களே! குலாபிமானம் தேகாபிமானம் முதலானவைகளை விடுங்கோள். பக்தர்களுடைய ஜாதியை குறிப்பிடாம லன்புடன் சேவித்து முக்தியடை

வதற்கு முகுந்தனுடைய நாமமே முக்கியமென் றெண்ணி பஜனை செய்வீர்களாயின் இந்த சமுசாரத்தைக் கடக்கலாம். இதுதான் சுலபமான மார்க்கம். உண்மையான லக்ஷணங்களை ஞானதேவருங்களுக் குரைப்பாரென்று சொல்லி மறைந்தனர். பின்ன ரவர்களுக்கு ஞானதேவர் பிரம்மஞானத்தைப் போதித்தார். பக்தஜனங்க ளனைவரும் ஜய ஜய சப்தங்களைச் சொல்லிக்கொண்டு பாண்டுரங்கருடைய சௌலப்பியத்தையும் சரித்திரங்களையுங் கொண்டாடிக்கொண்டு சுகமே இருந்தனர். பாண்டுரங்கர் நாமதேவுடைய யாத்திரையை இவ்விதமாகப் பூர்த்தி செய்தனர்.

---

## விசோபா கேசர்.

குயவர் குலத்தில் கோராவென்றொரு பக்த [illegible] கியத்தாலும் ஞான பரிபாகத்தாலும் கோவிந்தனை வசப்படுத்திக் கொண் டிருந்தனர். பண்டரி புரத்தில் நாமதேவர் ஞாணதேவர் முதலானவரைக் கண்டு அவர்களுக் கன்னமிட நினைத்து அருகில் வந்து நமஸ்கரித்து ஸ்வாமிகளே! தேவரீர் தேகப்பற்றுகளைவிட்டு, முகுந்தனுடைய பாதாரவிந்தங்களை பிரத்தியக்ஷமாகச் சேவித்து மேன்மை யடைந்தவர்கள். அடியாருக் கடியேனான ஏழையின் கிருகத்திற்கு தேவரீர்க ளனைவரும் ஒருவேளை யமுதுகொள்ள எழுந்தருளி அடியேனை கிருதார்த்தனாக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, அவர்கள் பிரியத்தை யடைந்து சந்தோஷத்துட னவரிருக்குமிடம் வந்தனர். கோராபக்த ரவர்களது திருவடிகளைக் கழுவி அந்த ஜலத்தை தான் சிரசின்மேல் வகித்து போஜனத்திற்கு உட்காரும்படி செய்து அறுசுவை பதார்த்தங்களை யன்புடனளிக்கச் செய்து அவர்கள் திருப்தியா யுண்டபிறகு கையலம்ப ஜலங்கொடுத்து உட்காரும்படிசெய்து தாம்பூலத்தைச் சகலருக்கு மளித்தனர். அந்த பக்தர்க ளனைவரும் அவ்விடம் வீற்றிருக்க, விநோதமாக ஞானதேவர் கோராபக்தரைப் பார்த்து ஐயா! பானைகளைப்போலிருக்கிற யெங்களை நீர் இவ்விடமிருக்கச் செய்தீர். நீரோ சாதுரியமுடைய குயவராயிருந்து கோவிந்தரைக் கண்டீர், இவ்விடத்தில் வெந்தபானைக ளெதுவோ வேகாதபானைக ளெதுவோ

சொல்லவேண்டுமென்று கேட்க, அப்படியே ஆகக்கடவதென்று பானைகளைத் தட்டுங் கட்டையைக் கையிலேந்தி அவ்விடத்தி லுட்கார்ந்திருந்த பக்தர்கள் தலைகளைத் தட்டிப் பார்த்துக்கொண்டு வர, எல்லோரு மௌனமா யிருந்தார்கள். நாமதேவர் தலையைத் தட்டப்போம்பொழுது ஏனடிக்கவந்தீரென்று கேட்டார். அப்பொழுது கோராபக்தர், இதுதான் வேகாதபானையென்று சொல்ல, அவ்விடத்திய பக்தர்க ளனைவரும் சிரிக்கத் தொடங்கினார்கள். நாமதேவரதிக விசனமுற்று உடனே அவ்விடமிருந் தெழுந்திருந்து வேறு கதி யில்லையென்று பண்டரீநாதரிடம் வந்து கண்களில் ஜலம்பெருக பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டார். ஹரி பாண்டுரங்கர் இதற்கென்ன காரணமென்று கேட்க, கோராபக்தர் வீட்டில் தனக்கு நடந்த அவமானத்தை நாமதேவ் வெளியிட்டார்! பகவான் சிரித்துக்கொண்டு கோராபக்தன் சத்தியத்தைச் சொன்னான். அதிற் சந்தேகமில்லை, உலகத்தி லாசாரிய ரனுக்கிரகமடையாதிருப்பவன் பக்வமானவ னன்றென்று பெரியோர்கள் சொல்லுவர்களென்றுரைக்க, நாமதேவர் பெருமானை நோக்கி ஓ ஸ்வாமீ! துக்க நிவர்த்திக்காக அடியேன் தேவரீரிடம் வந்து வேண்டிக்கொண்டால் கிருபாகண்ணோக்கஞ் செய்யாமல் மனவருத்தத்தை யுண்டாக்கிநீரே! உம்மைத் தொழுவதும் சகலமான தவங்கள் புரிவதும் உம்மை யடையவல்லவா ஜனங்கள் செய்வது? அப்படி அடியேன் தேவரீரை யடைந்த பிறகு ஆசாரியன் வேண்டுவதென்னென்று சொல்ல, பெருமாள் சொல்லுவார்; என்னை யொருவன் பிரத்யக்ஷமாகக் கண்டுகொண்டாலும் ஆசாரியனுடைய கிருபையின்றி ஆத்மஞான மெய்பவுங் கிட்டாது. மல்லிகார்ஜுனன் தேவாலயத்தில் விசோபாகேசர ரென்பவர்வாசஞ்செய்துகொண்டிருப்பார். அவருலகமாயையை உற்றுணராமல் உபரதி சுகத்தை மேற்கொண்டு ஆனந்தானுபவத்தி லிருப்பவர், அவரை ஆசாரியராக வரிக்கக் கடவையென்று சொன்னார். நாமதேவர், ஸ்வாமி! தேவரீரே ஆசாரிய ராகலாமேயென்று சொன்னாலு மிசையவில்லையாதலால் அழுத கண்ணீருட னவ்விடம் விட்டு புறப்பட்டு பகவானுடைய நாமத்தைப் பலமாகச் சொல்லிக்கொண்டு பகவான் சொன்னபடி அந்த தேவாலயத்தைச் சேர்ந்தார். அவ்விடத்தில் விசோபாகேசரென்பவர் சிவலிங்கத்தின்மீது தன் கால்களை

நீட்டிக் கண்களை மூடிக்கொண்டு கள்ளநித்திரை யுடையவராய் வீற்றிருந்தார். நாமதேவ ரவர் நிலமையைக் கண்டு சங்கித்து, இதென்ன வாச்சரியமென்று வருத்தமுற்றவராய் அவரை நோக்கி ஒ ஸ்வாமீ! தேவரீர் சாதுபுருஷராக விருக்கிறீர்! சாம்பமூர்த்தியின் மீது சரணங்களைவைத்து இப்படிப் படுத்துக்கொண்டிருப்பது தகுதியா? என்று சொல்ல, விசோபாகேசர், ஐயா! தேகத்தின்மீது மறதி நேர்ந்தபடியால் தெரியாமல் கால்களை வைத்தேன். வார்த்திக்கியத்தால் சக்தியற்றவனுயு மிருக்கிறேன். நீ தயவுசெய்து சிவலிங்கமில்லாத இடத்தில் கால்களை யெடுத்து வையென்றுசொல்ல, நாமதேவ ரக்கால்களைப் பிடித்து பக்கத்தில் வைத்தனர். அங்குமொருலிங்க மிருக்கக்கண்டார். அவ்விடம்விட்டு இன்னமோரிடத்தில் வைக்க அங்கு மோர்லிங்க மிருந்தது. எங்கெங்கு இடங்களிலக்கால்களை வைத்தபோதிலும் அவ்வவ்விடங்களிலும் லிங்கங்களே உண்டாயின. இதைக்கண்டு ஆச்சரியமுற்று ஆசாரியருக்கு வலம் வந்து சரணங்களைப் பிடித்து, ஒ ஞானசாகரரே! சைதன்னியரூபரே! தேவரீருடைய பாதசேவை செய்யுமளவில் யாவும் சிவமயமாய்ப் பிரகாசித்ததென்று திரும்பி குருசரணங்களுக்கு நமஸ்கரித்தார். அப்போது விசோபாகேசர் நாமதேவைக் கிட்ட உட்காரவைத்துக்கொண்டு ஞானநேத்திரத்தைக் காண்பித்து சகலவேத சாஸ்திர ரகசியமான ஆனந்தத்தை யடையச்செய்து சமுசயத்தை நிரவித்து அஸ்தமஸ்தக சையோகஞ்செய்து இருகாங்களைக் குவித்து அடியேன் ஞானதேவருக்கு கிங்கரன், அவருடைய பாதாரவிந்தத் தியானத்தில் நிலைமை பெற்றவனென்று சொல்ல, நாமதேவர் சித்தங் கரைந்து தன்மய ஸ்திதியை யடைந்து, ஒ குருராயரே! என்னைத் தரிக்கும்படி செய்தது உமது திருவடிகளா லால் அவைகளுக்கு சேவை செய்ய யாவுமொன்றுகத் தெரியவந்தது. பகவானை பாண்டுரங்க மூர்த்தியை எனது இருதயத்திலேயே கண்டுகொண்டேனென்று பிரம்மானந்தத்தை யடைந்து ஆசாரிய ரனுமதியைக்கொண்டு திரும்பி பண்டரிபுரத்திற்கு வந்தார். முன்போல ஆலயத்திற்கு வெகுவாகப் போகாதிருந்தார். ஒருநாள் பாண்டுரங்கர் நாமதேவுடைய சித்தத்தை சோதிக்கும் பொருட்டு ஒரு யாத்திரைகாலமான துவாதசி தினத்தில் நாய் வடிவங் கொண்டு அங்கு மிங்கும் திரிந்துகொண்டு பலபேர் தமக்கு

வேண்டும் உணவுகளை சமையல்செய்து வைத்திருந்தால் அவை களை அன்னாய் வாயினால் தீண்டிற்று. அந்த செய்கையைக் கண்டு அருகிலிருக்கிற ஜனங்க ளதனைத் துரத்துவதும் சில ரன்னத்தைச் சாப்பிட்டுக்கொண்டிருக்க அந்த நாய் வருவதைப்பார்த்து கொல் லுங்கள், கொல்லுங்களென்று கூறுவதும்,பிராம்மணர்கள் பக்ஷணை செய்யும்பொழு தவ்விடம் அந்த சுனகம் சென்றால் கோபத்துடன் கட்டையை யெடுத்து அடி! அடி! யென்பவர்களும்; அது அன் னத்தைத் தீண்டிவிட்டால் மடிவஸ்திரங்களுடைய பிராம்மணர் கள் மனதிற் கலங்கி சாப்பாட்டைவிட்டு அன்னம் அபரிசுத்தமா யிற்றென் றெழுந்துவிடுவதும், இது கபடமான சுவானமாகயிருக் கிறது, கட்டையினா லடித்துக் கொல்லுங்க ளென்று சொல்ப வரும், சில குடியானவர்கள் சாப்பிட்டுக்கொண்டிருக்க அந்நா யானது சென்று சாப்பிடும் பாத்திரங்களான இலைகளை யிழுக்கு மளவில் அதனை துரத்திவிட்டு புஜிப்பவரும், இப்படியாக அந்த நாய் யாத்திரையில் திரிந்துக்கொண்டு நாமதேவ் வீட்டிற்குச் சென்றது. அவ்விடத்தில் செய்துவைக்கப்பட்டிருந்த பக்ஷியங் களை அச்சுனகம் வாயில் கவ்விக்கொண்டிருக்க நாமதேவர் நெய் யை அந்த பக்ஷியங்களுக்கு தடவி அந்த நாய்க்குப் போட்டு அதனைப் பக்ஷிக்கும்படி செய்தனர். இதைக்கண்டு பாமர ஜனங் கள் நாமதேவரைப் பார்த்து நகைக்க வாரம்பித்தனர். பின்பு பாண்டுரங்கர் பிரசன்னராகி என்னை யெப்படி கண்டுகொண்டா யென்று கேட்டார். நாமதேவர் பெருமானுக்கு நமஸ்கரித்து ஸ்வாமி! தேவரீருடைய குறிப்பை ஆசாரிய ரறிவித்தாரென்ற னர். அப்போது பகவா னவரைநோக்கி நாமதேவா! நீஇப்போது பக்கா (சுட்ட) பாண்டம்போலாய்விட்டாய், இனி பக்தஜனங்க ளுடைய மத்தியில் நீ மேன்மை யடைவாயென் றருளி மறைந்த னர். உவமையற்ற விருத்திகளை யுடைய நாமதேவை அனைவரும் கொண்டாடினார்கள்.

நாமதேவ் ஏகாதசி விரதத்தை யாசரிப்பது வழக்கமாயிருந் தது. அத்தினத்திலவர் ஜலபானங்கூட செய்யாமலிருப்பர். பக வானவரை பரிக்ஷிப்பதற் கொரு ஏகாதசி தினம் விருத்த பிராம் மண ரூபத்தைத் தரித்து காயத்தை நடுக்கலுற்றதுபோல காண் பித்து கிழிந்த வஸ்திரமும் தலையிலொரு குல்லாவு முடையராய்

கால்கள் தடுமாற நாமதேவ் வீட்டில் வந்து நின்று ஐயா! விருத்தாப்பிய தசையில் பசிநோயினால் வருத்தப்படுகிறேன், நீர் ஹரிதாஸரென்று கேள்விப்பட்டு உம்மிடம் வந்தேன், அன்னமளிக்க வேண்டுமென்று வேண்டினார். நாமதேவ் அவரைக்கண்டு நமஸ்கரித்து, ஸ்வாமி! இன்றையதினம் ஏகாதசியாகும். வீட்டிலன்னமில்லை பழவர்க்கங்களை புசிக்கலாம், தருகிறேனென்ன; பிராம்மணர் அவரை நோக்கி அன்னத்தையே வேண்டுகிறேன் வேறு பதார்த்தங்கள் வேண்டாம் ஆயாஸத்துடனுமது வீட்டிற்கு வந்தேன் அதிக பசியுடையவனாயிருக்கிறேனென்று பலதரம் சொல்லிக்கொண்டு வுட்கார்ந்தவராய், ஐயா! இன்றையதினம் நீர் அன்னங்கொடுக்காவிடில் எனதுயிர் போய்விடும், பிரமஹத்தி யுமக் குண்டாகுமென்று சொல்ல, நாமதேவ் சொல்லுவார்; ஓ ஸ்வாமி! பாண்டுரங்கனுடைய திருவடிகளை மனதிற் பதித்துக்கொண்டிருந்தால் புண்ணிய பாபங்களடியேனு[illegible]ாரா. சகலவாசைகளை விட்ட சத்குண பூர்ணனுக்குத் திருட[illegible]டய பயமெப்படியும் தொடராது, அதைப்போல புண்ணிய பாபங்களெனும் பந்தங்கள் அடியேனை விட்டுப் போயினவென்று சொல்ல, பிராம்மண ரவரை நோக்கி உயிர்களின் மீது கருணையை வைக்காமல் ஆத்ம ஞானத்தையுடைத்தா யிருக்கை வியர்த்தமாகும், பசியுட னவஸ்தையடைந்திருக்க பிரஸாதத்தைக் கொடுக்காவிடில் பிராணன் வெளியாய்விடுமென்று அழுந்திய குரலுடன் சொல்ல, நாமதேவர் அப்படியே அடியேனுக்கு மாகக்கடவதென்ன, அதிதியாய் வந்தவர் கண்களை சுழற்றிப்பார்த்து பிராணனை விட்டனர். பின்னர் நாமதேவ ரந்த பிரேதத்தை பீமாநதிக்கரைக்குக் கொண்டுபோய் பகவந்நாமத்தைச் சொல்லிக்கொண்டு காஷ்டத்தின்மே லதனை வைத்து நாமதேவும் நாராயணனை மனதிலிறுத்தி அந்த சவத்துடன் படுத்துக்கொண்டு அக்கினியை மூட்டச்செய்தனர். அந்த அக்கினி எரியுந் தருணத்தில் பெருமாளதைவிட்டெழுந்திருந்து சதுர்ப்புஜரூபத்தைக் காண்பித்து, நாமதேவா! உன்மனதை பரிக்ஷிக்க இவ்வண்ணமாக வந்தேன். முற்காலத்தில், ருக்மாங்கதன் முதலான பக்தரைப்போலே ஆசாரிய கடாக்ஷத்தால் நீயும் திடசித்தத்தை யுடைத்தாயிருக்கிறாயென்றருளி மறைந்தனர்.

---

## பாகவதன்.

பண்டரீ புரத்தில் பிராம்மண குலத்தில் பாகவதனென்று பெயர் பெற்று ருக்மணி பிராட்டிக்குப் பக்தனாகி வெகுகாலமாக சேவை செய்துக்கொண்டு, தாயே! அடியேனுடைய தரித்திர தசையைப் போக்கி ரக்ஷித்தருளவேண்டுமென்று பலமுறை பிரார்த்திக்க ருக்மணி பிராட்டி தயையுடையவளாகி பிரஸன்னையாய் பிரியத்துடனவனுக்கொரு ஸ்பரிச வேதியைக் கொடுத்து இதனை யிரும்புமேல் தேய்த்தாலந்த இரும்பு சொர்னமாய்விடும். அதைக்கொண்டுடன் இஷ்டப்பிரகாரம் தனத்தை சேகரப் படுத்திக்கொண்டு அதனை காப்பாற்றிக்கொள்ளென்று சொல்லி மறைந்தனள். பாகவதன் சந்தோஷித்து பிராட்டியை பலமுறைத் துதித்து அந்த ஸ்பரிச வேதியை கைக்கொண்டு தனது மனைவியான கமலஜ யென்பவளிடங் கொடுத்து ரகசியமாக இரும்பைப் பொன்னாக்கிக்கொண்டு விசேஷசெல்வத்தை யுடையனாய் பிராம்மணர்களுக்கடிக்கடி போஜனமிட்டுக்கொண்டு பண்டரிபுரத்தில் பிரபலமான பக்தனென்று பலபேருங் கூப்பிட விளங்கினான்.

ஒருநாள் கமலஜ கையில் குடத்தை யேந்திக்கொண்டு ஜலத்திற்காக பீமாநதிக்குச் சென்றனள். நாமதேவ் மனைவியும் ஜலம் திரட்ட அவ்விடம் வந்தனள். கும்பங்களில் ஜலத்தை நிறைத்துக்கொண்டு இருவரும் திரும்பிவருகிற சமயத்தில் கமலஜ நாமதேவர் மனைவியைப்பார்த்து அம்மே! உங்களைப் பார்த்தால் தரித்திர தசையையுடையவர்கள்போல் காண்கிறீர்கள் இதற்கென்ன காரணமென்று கேட்க, ராஜாயி சொல்லுவாள், தாயே! எனது பர்த்தா, பாண்டுரங்கருடைய நாமத்தையேபாடி அவனையே சேவித்துக்கொண்டு தாரபுத்திரர்களை தயையுடன் பாராதிருப்பதால் தரித்திரத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறோமென்ன கமலஜ சொல்லுவாள் பரிசுத்த மனதுடன் நீங்கள் பாண்டுரங்கரை சேவித்தும் அவருங்களுக்கு பொருளை கொடாதிருப்பதால் அவருடைய சேவையை விட்டுவிடுவது சௌக்கியமாகும். உங்களுடைய குறைகள் தீர்ந்துவிடும். பலிதமில்லாத செடியால் பிரயோஜனமென்ன? எனது பர்த்தாவானவர், ருக்மணி தேவியைத் தொழுதுக்கொண்டிருந்தமையால் அப்பிராட்டி ஸ்பரிசவேதியைத் தந்தனள், அத

னால் சகல சௌக்கியங்களு மனுபவித்துக் கொண்டிருக்கிறோம், பிராம்மண ஜனங்களுக்கும் போஜன மளிக்கிறோமென்ன, இராஜாயி ஆச்சரியப்பட்டு அந்த பரிசத்தை காண்பிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, வீட்டிற்கு வந்தால் காண்பிக்கிறேனென்று கமலஜ சொன்னாள். பின்பு அவர்களிருவரும் தம் தம் வீடுகளுக்குச் சென்றனர். சிலநாள் கழிந்தபிறகு ஒருதினம் இராஜாயி கமலஜ வீட்டிற்குச் சென்று பரிசவேதியைப் பார்த்து இரும்பு பொன்னாகும் கிரிகையைக்கண்டு அதனைத் தந்தால் தன் வீட்டிலிருக்கு மிரும்பு வஸ்துக்களைப் பொன்னாக்கிக்கொண்டு தருகிறேனென்ன அவளதற்கு சம்மதித்து உன் பர்த்தாவுக்கும் இதர ஜனங்களுக்குந் தெரிவிக்காமல் சௌக்கியமாம்படி பொன்னை செய்துக்கொண்டு சீக்கிரத்தில் திரும்பிக் கொடுத்துவிட வேண்டுமென்று கமலஜ பரிசவேதியைக் கொடுக்க, இராஜாயி அதனை கைக்கொண்டு தன் வீட்டிற்கு வந்து இரும்பு பாத்திரங்களைச் சொர்ணமாகச்செய்து கடைக்குச் சென்று தானியம் முதலான வஸ்துக்களை வாங்கிக்கொண்டு வந்து சமையல் செய்து புருஷன் வரவை எதிர்பார்த்திருந்தாள். நாமதேவ் நாராயணனுடைய சன்னிதியில் நடனத்துடன் பஜனை செய்து மூன்றாம் ஜாம மாம்போது தன் வீட்டிற்கு வந்து பார்க்குமளவில் இரும்பு பாத்திரங்கள் சுவர்ணமாகி யிருப்பதையும் தானியராசியையும் நூதன வஸ்திரங்களையு மிருக்கக்கண்டார். நல்லவார்த்தை யொருநாளும் சொல்லாத மனைவியானவள் பிரியத்துடன் போஜனம் செய்யும்படி வேண்டினாள். நாமதேவ் அவளைக் கண்டு இந்த சம்பத்து இங்கெப்படி வந்ததென்று கேட்க, அவள் புருஷனைக் கண்டு இனி நீர் வீட்டினுடைய சங்கதியே விசாரிக்கவேண்டாம் சொஸ்தமாக ஸ்ரீஹரி பஜனையைச் செய்துக்கொண்டிரும், பகவான் நம்மை ரக்ஷிப்பரென்று சொல்ல, நாமதேவர் சங்கதி யறியாமல் சாப்பிடேனென்ன, மனையாள் சம்பத்து வந்த சங்கதியைத் தெரிவித்து பரிசவேதியைக் காண்பிக்க, அதனைப் பலாத்காரமாக நாமதேவ் கைக்கொண்டு சந்திரபாகா நதிக்குச் சென்று ஆழ்ந்த ஜலத்திற் போட்டுவிட்டு ஸ்நானஞ்செய்து கரையிலுட்கார்ந்து ஸ்மரணை செய்துக்கொண்டிருந்தார். வீட்டில் மகத்தான கிலேசத்தை யடைந்து மனைவி யுட்கார்ந்திருந்தாள்.

பாகவதன் தன் வீட்டிலில்லாளைக் கண்டு பரிஸவேதியைக்கேட்டான். சீக்கிரத்திற் கொண்டுவருகிறேனென்று அவளை ராஜாயினிடம் சென்று பரிசவேதியைக் கொடுக்கச் சொல்லிக்கேட்டாள். அவள் தொந்தரவடைந்து பயமுற்றவளாய் பர்த்தாவினிடம் வந்து பரிசவேதியைக் கொடுமென்று கேட்டாள். அவரதனை ஆற்றிலெறிந்து விட்டேனென்றனர். இதைக்கேட்டு ராஜாயியும் கமலஜயுங் கூக்குரலிட் டழத்தொடங்கினர்கள். அனேக ஜனங்களிதனைப் பார்க்கும் பொருட்டு ஆற்றின் கரைக்குச் சென்றனர். பாகவதனிதைக்கேட்டு பரிதபித்தோடிவந்து நாமதேவரைக்கண்டு, ஐயா! நீர் ஹரிதாஸராக விருந்து பிராம்மணனுடைய சொத்தை யபகரித்தீர், மேலான வைஷ்ணவர்களிவ்விதமான செய்கையைச் செய்ய மனதிலெண்ணார்களென்று சொல்ல, நாமதேவ் சொல்லுவார், நானபகரிக்கவில்லை, தபசியாயிருக்கிற உமக்கு இந்த தனம் துக்கத்தைக் கொடுக்குமென்றெண்ணி ஆற்றிலெறிந்துவிட்டேன். இது பொய்யென்றுங்களுக்குத் தோன்றினால் ஆற்றிலிறங்கிப் பார்த்துக்கொள்ளுங்கோளென்றார். இதைக் கேட்டு அவ்விடத்திய ஜனங்கள் சிரித்து, தண்ணீர்க்குள்ளிருக்குமதை எப்படி கண்களால் பார்க்கக் கூடுமென்றனர். அப்போது நாமதேவ் ஆற்றுக்குள் குதித்து முழுகி ஒருபிடி பரிசவேதிகளைக் கொண்டுவந்து கரைமேற்போட்டு பரிக்ஷித்துக் கொள்ளலாமென்று சொல்ல, சிலர் இரும்பு கரண்டிகளைக் கொண்டுவந்து பரிக்ஷிக்க, அவை சொர்ணமானதை பார்த்து பாகவதன் அனுதாபமுற்று ஹரிகிருபையை அடைந்த புண்ணிய பக்தருடைய அற்புத மகிமை இதுவென்றெண்ணி [illegible]வேதிகள் பிரயோஜனப்பட மாட்டாவென்று ஆற்றிலெறிந்துவிட்டு நாமதேவுடைய சிஷ்யனாகி பகவத் பக்தி வகித்து நித்தியசுகத்தைப் பெற்றான். நாமதேவ ரானந்த பூர்த்தியுடன் நரஹரியைப் பஜித்துக்கொண்டு சியாமள ரூபரான சர்வேசுரனை சதானுபவம் பண்ணிக்கொண்டிருந்தார்.

ஒருநாள் நாமதேவருடைய தாயார், தன்மகனை யழைத்து அப்பா! நீ யெப்பொழுதும் பாண்டுரங்கருடைய தாஸ்ய ரசத்திலீடுபட்டு தாராபுத்திரர்களுடைய நோக்கத்தை விட்டாய். தர்ம மார்க்கத்தைக் காப்பாற்றி என்னைத் தயையுடன் பார்க்கக் கடவை. எனக்கு வார்த்திகதசை வந்தது. சக்தியும் சரீரத்திலில்லை.

இருமலுண்டாகி இரவும் பகலும் தொந்தரவு செய்கின்றது. இந்த வியாதி நிவர்த்திக்காக வனத்திற்குச் சென்று மூலிகையைக் கொண்டுவரக் கடவையென்று சொல்ல, அப்படியே செய்கிறேனென்று அரிவாளைக் கையிலேந்திக்கொண்டு வனத்திற் சென்றும் மூலிகையைக் கண்டுபிடித்து அரிவாளாலந்த செடியை வெட்ட, அதில் நின்றும் இரக்தம் வரக்கண்டு கையிலிருந்த அரிவாளை கீழே போட்டுவிட்டு நான்கு யோனிகளில் நிறைந்த ஜந்துக்கள் நாராயணாம்சமென வறிந்தும் மகா பாபத்தை இன்றையதினம் மிஞ்சிச் செய்துவிட்டேன்! ஐயோ! வென்று அனுதாபத்துடன் அதிக விசன முடையவராய், ஹரி! விட்டல மூர்த்தியே! ஆதிநாராயணரே! கேசவ நாமரே! கோவிந்தா! மாதவா! முகுந்தா! நரஹரி! ஜனார்த்தனா! கருணையுடன் வாருமென்று பலதர மழைத்தாலும் பண்டரிநாதர் வாராதிருப்பதைக் கண்டு தான் செய்த பாபத்தைச் சிந்தித்துக்கொண்டு அரிவாளால் தனதுகாலை அறுத்து ஆங்கிருந்த மாம்சத்தை யெடுத்து அந்தமூலிகைக்கு ஒட்டினும் இரத்தம் வருவதடங்கவில்லை யாதலால் அச்சுதரே! பராத்பரரே! பரம புருஷரே! யென்று பிரயாசைப் பட்டுக்கொண் டிருக்குமளவில், பாண்டுரங்க ரவ்விடம் வந்து புன்சிரிப்புடன் பார்க்கத் தொடங்கினார். அப்போது செடிக்கு நேரிட்ட இரத்தமும் சடக்கென நின்றது. நாமதேவருடைய காயமும் செம்மையாயிற்று. பெருமாள் மறையவே நாமதேவர் வீட்டிற்கு வருமளவில் தாயாருக்கிருந்த இருமலும் தணிந்துவிட்டது.



## பிதர் பிராம்மணன்.

நாமதேவருடைய கீர்த்தி நான்கு திக்குகளிலும் பரவினதால் தூரதேசங்களிலிருந்தும் ஜனங்கள் தரிசனத்திற்கு வருவார்கள். பிதரென்னும் பட்டணத்தி லிருந்த ஒரு தனவானான பிராம்மணன் காம்மியார்த்தமாகப் பண்டரிநாதர் விஷயத்தில் பிரார்த்தனை யொன்று செய்துகொண்டான். தான் கோரினது பிரபலமான காரியமா யிருந்தது. அது பலிதத்திற்கு வந்ததால் அந்த பிரார்த்தனையை செலுத்தவேண்டுமென்று பண்டரி புரத்

திற்குச் சென்று பாண்டுரங்கர் விஷயத்தில் தனது வீட்டில் உற்சவம் செய்விக்கவேண்டி நாமதேவை பிதர்பட்டணத்திற்கு வரும்படி பிரார்த்தித்தான். இதைக்கேட்டு நாமதேவ், ஐயா! பிராம்மணரே! வைகுண்டத்தைக் காட்டில் விசேஷமாக வெண்ணி இந்தப் பண்டரியில் வாசஞ்செய்கிறேன், இதைவிட்டு மற்றொரிடம் வரமாட்டேனென்று சொல்லிவிட்டார். பிராம்மண னதிக சிந்தை யடைந்து பாண்டுரங்கருடைய சபா மண்டபத்திற் சென்று இருபதுநா ளவ்விடம் உபவாசமாக கிடந்திருந்தான். இந்த நிக்கிரகத்தைக் கண்டு பெருமா ளவன் கோரிக்கையை நிறைவேற்றுகிறேனென்று சொல்லி நாமதேவரிடஞ்சென்று பிதர் பட்டணத்திற்குப்போய் வரக்கடவையென் றுக்ஞாபிக்க நாமதேவ் சம்மதித்து பெருமாளுடைய விடைபெற்றுக்கொண்டு பிராம்மண ஜனங்களும் பாகவதரு மின்று மிதர ஜனங்களும் புடைசூழ வாத்திய கோஷங்கள் முழங்க, வாசுதேவா! கிருஷ்ணா! முகுந்தா! முராஹரி! அச்சுதா! அனந்தா! வென்று நாமங்களைச் சொல்லிக்கொண்டு அந்த பிராம்மணனுடன் பிதர்பட்டணத்திற் பிரவேசித்தார். அவ்விடத்திய வரசன் இவ்வோசையைக் கேட்டு மெத்தைமேலேரி பரிவாரத்துட னவர்களிருப்பதைப் பார்த்து மந்திரியை யழைத்து அதென்னவென்று கேட்டான். மந்திரி சில மனிதரை யனுப்பிச் சங்கதி யறிந்துவரச் சொன்னான். அச்சேவகர் ஹரிதாஸர்களிடம் வந்து வாத்திய கோஷத்தை நிறுத்தவே, கூடவந்த பிராம்மணர்களும் பாகவதர்களும் பயந்து தூரப்போய்விட்டார்கள். நாமதேவ் சேவகர்களெதிரில் நின்று ஐயா! நாங்கள் யாத்திராபரரா யிவ்விடம் வந்தோம். நான் பாண்டுரங்கருக்குப் பணிசெய்பவனுவேன், ஆடம்பரத்துடன் பெருமாளைப்பாடி அவரைச் சிந்தித்துக்கொண்டு தீமையொன்றுஞ் செய்யாமல் போய்விடுவோமென்று சொன்னார். அம்மனிதர்கள் மந்திரியிடஞ்சென்று தேவரே! நாமதேவென்னும் ஹரிதாசர் பண்டரியிலிருந்து பஜனை சமூகத்துடன் பகவந்நாமத்தைச் செய்துக்கொண்டு வந்தாரென்ன அம்மந்திரி இச்சங்கதியை அரசனுக் கறிவித்தான். துலுக்கவரச னுதலால் பாகவதோத்தமரென்றறியாமல் பரிஜனங்களைவிட்டு அவர்களைப் பிடித்து கட்டிக் கொண்டுவாருங்கோளென்று உத்தரவனுப்பினான். அவ்வேளையில் மந்திரி அரசனைக் கண்டு மஹாராஜரே! இந்த வாக்கனுயால் தன்

ணமயாகாது, கெடுதலை நேரிடுமென்று சொல்லியுங் கேளாமலிருந்தான். சேவகரப்படியே அவர்களைக் கட்டிப்பிடித்துக்கொண்டு வந்ததுமன்றி தடிகளாலடித்தும் அரசனெதிரில் கொண்டுவந்து நிற்த்தினர். அப்போதரசன் ஓர் பசுவை அவ்விடங் கொன்று நாமதேவைப் பார்த்து இந்த பசுவை பிழைக்கச்செய்து எழுப்புவாயாகில் உன்னை விடுவேன், இல்லையாகில் உன்னை பிரஷ்டனுக்குவேனென்று சொன்னான். அவ்வேளையில் ஹரிதாஸர்களனைவரும் ஹாஹாகார ஓசை செய்து ஹரி! ஹரி! யென்று சொல்லிக்கொண்டு அபிதமான துக்கத்திலமிழ்ந்திருந்தனர். நாமதேவ் நரஹரியை மனதிலிருத்திக்கொண்டு, பசுவின் சிரஸின்மேற் கையை வைத்துக்கொண்டு கோ[illegible]நா! புண்டரீகாக்ஷா! பண்டரிநாதா! பத்மநாபா! பரவா[illegible]தவா! பரந்தாமா! பாண்டுரங்கா! ஸர்வேசுவரனே! சங்கடகாலத்தில் சம்ரக்ஷணை செய்யும் ஓ தயாநிதி! வெங்கடநிலையரே! வேகத்துடன் வாரும், பகவானே! பக்தபூஷணரே! சீக்கிரத்தில் உமது அருட்கண்ணோக்கம் வைபாவிடில் அடியேனுடைய பிராணன் போய்விடுமென்று பிரார்த்திக்க, இம்முறையைக்கேட்டு ஆகாயத்திலோர் ஓசையுண்டாக்கி பெருமாள் வந்து பசுவை தீண்டினமாத்திரத்தில் அது எழுந்திருந்தது, அவ்வேளையில் அனேக சர்ப்பங்களந்தப்பட்டணத்தில் உண்டாகி ஜனங்களைக் கடிக்க அவர்களனைவரும் மரணமடைந்தார்கள். அந்த பிரேதங்களனைத்தையு மரசனிடம் கொண்டுவந்து பிரஜைகளனைவரும் காட்ட இராஜன் மந்திரியை யழைத்து மனோவியாகூலத்துடன் சொல்லுவான், ஹரிதாஸருக்கு அறியாமலே நானபசாரங்களைச் செய்துவிட்டேன் அவரை அனேக விதங்களால் பிரார்த்தித்து இந்த அரிஷ்டத்தை நிவர்த்தி செய்விப்பாயென்று வேண்டிக்கொண்டான். அச்சமயத்தில் நாமதேவ் ஸ்ரீ ஹரியினுடைய ரூபத்தில் மனதைச்செலுத்தி ஆனந்தரசத்தில் மூழ்கியிருந்தனர். கண்கள் திறந்தவுடன் தன்னெதிரில் மந்திரியு மிராஜனும் பிரார்த்தித்துக்கொண்டிருக்கக்கண்டு உடனே பகவானைக் குறித்து நாமதேவ் பிரீதியுடன்வேண்ட இறந்த பிரஜைகளனைவரும் பிழைத்தனர். சர்ப்பங்களும் போயின. பாண்டுரங்கர் இந்த சித்திரத்தைக் கண்டு மகிழ்ந்தனர். பின்பு நாமதேவர் அந்த பிராம்மணன் சங்கல்பித்த உற்சவத்தை பூர்ஜிதமாகச் செய்வி

த்து, ஹரிகுண கீர்த்தனத்தா லனேகரைச் சத்ஸஹவாசத்தி லீடு படுத்தி சதானந்த முடையராகச் செய்தனர். இவ்விதமாக பிராம்மணனுடைய பிரார்த்தனையைச் செலுத்தச்செய்து பலபேர் கொண்டாட நாமதேவர் பண்டரிபுரத்திற்குத் திரும்பி எழுந்தருளினர்.

---

## கமலாகரன்.

கமலாகரனென்று மொரு பிராம்மணன் பண்டரி க்ஷேத்திரத்தில் வாசமாகவிருந்து பிக்ஷாடனஞ் செய்துக்கொண்டு வருவான். அவனுடைய மனைவி சுமதியென்பவள் பதிவசனங்களுக்கு மாறு சொல்லாமல் குணசாலியாகி பெரியோரிடத்தில் பிரீதி வைத்துக் கொண்டு பசியுடன் வந்தவர்களுக்கு போஜனமளித்து இம்மைக்கும் மறுமைக்கும் ஹிதத்தை தேடுமவளா யொருபுத்திரனைப் பெற்றிருந்தாள். ஒருநாள் சில சாதுக்கள் பண்டரிபுரத்திற்கு வந்திருந்தனர், அவர்கள் புண்ணிய சீலராகியும் பரமபாகவதராகவு மிருந்தார்கள். கமலாகர னவர்களைக்கண்டு தன் வீட்டிற் கெழுந்தருளும்படி பிரார்த்தித்தான். இந்த பிராம்மணனுடைய சுத்தபாவத்தைக் கண்டு அவர்களு மப்படியே வந்தார்கள். இவ னவர்களை சன்மானித்து அர்க்கிய பாத்தியங்களைக் கொடுத்து ஆசனங்களி லுட்காரச் செய்து அவர்களுடைய சரணதூளியால் தான் பரிசுத்தியை யடைந்தேனென்று அவர்களை நோக்கி ஸ்வாமிகளே! ஒருவேளை அன்னமிவ்விடத்திற் புஜித்து அடியேனை அனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். சாதுக்கள் கமலாகரனைக் கண்டு, ஐயா! எங்களுக்கு நீ அன்னங் கொடுக்கவேண்டு மென்னும் பிரீதிக்கே நாங்கள் திருப்தியடைந்தோம், நீ வேறு பிரயாசை யெடுத்துக்கொள்ளவேண்டா மென்றார்கள். அதற்கு பிராம்மணன், மகான்களே! தேவாள் புண்ணிய மூர்த்திகளான பெரியோர்கள், இவ்விட மமுதுகொள்வீராகில் பெருமா ளடியேனிடங் கருணை செய்வாரென்று பலவாறாகப் பிரார்த்திக்க அவர்கள் போஜனஞ் செய்யச் சம்மதித்து ஸ்நானத்திற் கேகினர். பின்பு கமலாகரன் தன் மனைவியிடம் வந்து சாதுக்கள் வந்தார்களென்று சொல்ல, அவளு மதைக் கேட்டு பாண்டுரங்கரும் ருக்மணி பிராட்டியும்

ரக்ஷிப்பதற்கு நம் தலைமேல் குடையாயிருக்க நமக்கென்ன சங்கை, சாதுக்களுக் கன்னமிடுவோம் உமக்கு பிரயாசை வேண்டியதில்லை யென்று சந்தோஷத்துடன் சொல்ல அந்தப் பிராம்மணன் ஸ்நானஞ் செய்யப்போனான்.

பின்பு சுமதியானவள் வீட்டிற்குள் சென்று பானைகளைப் பார்க்குமளவில் பதார்த்தங்க ளில்லாதிருந்தன. அக்கம் பக்கங்களி லமுதுபடி முதலானவைகளைக் கொண்டுவந்து நாலு விதம் பதார்த்தங்கள் பணியாரங்களுடன் சமையல் செய்து பாயசம் பண்ண வாரம்பித்து அதற்கு விறகு இல்லாதிருந்ததனால் வெளியிற் சாலையில் விளையாடிக்கொண்டிருந்த பிள்ளையைக் கூப்பிட்டு விறகைக் கொண்டுவரச் சொல்லி கேட்டாள். அவனுமப்படியே சென்று விறகைத் தொட்டவுடனொருபாம்பு அவ்விடமிருந்து கடிக்க, அம்மா! யென்றலறி அப்போதே பிராணனை விட்டான். உடனே தாயாரவ்விடம் வந்து பார்க்க, சர்ப்பத்தைக் கண்டு துக்கித்தாள். ஏகபுத்திரனாயிருந்தவனுக் கிந்த கதி வந்ததல்லவாவென்று சோகத்தை யடைந்து சாதுக்க ளிதைக்கேட்டால் சுகமுண்டாகாதென் றெண்ணி பாலகனை மறைவாக வைத்து தான் ஸ்நானஞ் செய்து விறகைக் கொண்டுவந்து பாகத்தைப் பூர்த்தி செய்தாள்.

அவ்வேளையில் சாதுக்க ளனைவரும் ஸ்நானம் பண்ணி சந்தியா கருமங்களையும் தேவபூஜைகளையு முடித்துக்கொண்டு கமலாகரனுட னெழுந்தருள, சுமதியானவ ளவர்களுக்கு ஆஸனங்களையளித்து இலைகளைப் போட்டு பதார்த்தங்களையும் அன்னத்தையும் வட்டித்தாள். சாதுக்க ளன்புடன் ஹரியைச் சிந்தித்துக்கொண்டு ஆபோசனங்கொள்ளுஞ் சமயத்தில் அக்கூட்டத்தில் நாமதேவும் கூடவிருந்து ஹரி! விட்டல! சாப்பிடவாருமென்று பாவத்திலெண்ணுங்கால் பாண்டுரங்கர் தனது பாவத்திற் குட்படாதபடியால் ஏதோ விக்கின மிவ்விடத்தில் நடந்திருக்கிறதென் றுணர்ந்து பாலகனொருவனை பிராதக்காலத்திற் கண்டேன், அவனைக் கூப்பிடக்கடவீர்களென்று சொல்ல, சுமதி அவரைக் கண்டு ஸ்வாமி! பாலகன் புஜித்து தொட்டிலில் நித்திரை செய்கிறானென்று சொல்ல, நாமதேவ ரக்குமாரனை மெதுவா யெழுப்பிக்கொண்டு வரச் சொல்லிக் கேட்க, தேவர் பக்ஷித்தருளுமென்று சுமதி பிரார்த்திக்க, நாமதேவர் இலையைவிட் டெழுந்திருந்து தாளவீணைகளை

கையிற்கொண்டு கண்களிலிருந்து ஜலம் பொழிய ஓ கிருஷ்ணா! கிருபாமூர்த்தி! தீனவத்சலரே! உம்மைத் தவிர என்னை எந்தத் தாய் ரக்ஷிக்கப்போகிறாள்? கமலநாயகரே! விசுவவியாபகரே! என்று அனேக விதங்களாகத் தோத்திரஞ் செய்தும் பகவான் வாராமையால் பாண்டுரங்கரே! உம்முடைய நாமோச்சாரணையை அடியேன் விட்டுவிடுகிறேன் பாரும்! பாம்பு சரீரத்தை நீர் வகித்து பாலகனைக் கொன்றீர். பக்தர்களுக் கிவ்வாறான கஷ்டங்களை யிடுவது உமக்கு நியாயமா? சரணாகதியடைந்த வெங்களுக்கு தேவரீரே கதியன்றி வேறொருவ ருண்டோ? சத்பாவத்துட னும்மைப் பஜிப்போருக்கு இவ்விதத் துன்பங்களை யிடுவையாயின் அடியோங்க ளென்ன செய்யப்போகிறோம். சீக்கிரத்தில்வந் தடியேனுடைய குறையை தீர்க்கக் கடவீர். பாண்டுரங்கரே! நீரெனக் காதாரபூதர், நீரிப்பொழுது வராவிடில் அடியேன் பிராணனை விடுகிறேனென்று புலம்பப் பெருமாள் பிரஸன்னராகி பிரிய வசனங்களை பேசிக்கொண் டிருந்தார். அவ்வேளையி லக்குழந்தை தொட்டிலி லிருந்து "அம்மா" வென்று கூப்பிட்டான். உடனே தாயார் சென்று என்னென்றுகேட்க, தாகத்திற்கு ஜலங்கொண்டு வரும்படி கேட்டான். அதைக்கண்டு சந்தோஷத்துடன் தாயா ரக்குழந்தையை யெடுத்துவந்து சாதுக்களிடம் விட்டனள். பெருமாள் மறைந்தவுடன் நாமதேவர் முதலானோருக்கு நடந்த சங்கதியை சுமதியாளவள் தெரிவித்தாள். அப்பொழுது சகல சாதுக்களும் ஜய ஜய வென்று நாமதேவரைக் கொண்டாடி பாலகனை பந்தியில் வைத்துக்கொண்டு பாண்டுரங்கரைப் புகழ்ந்துக் கொண்டு பக்ஷணை செய்தார்கள்.

---

## தாதா சவுகார்.

ஒருநாள் தாயாராகிய கோணாயி தனது பிள்ளையாகிய நாமதேவை அழைத்துச் சமீபத்தி லுட்கார வைத்துக்கொண்டு அப்பா! நீ ஸ்ரீ ஹரியை மனதிற் கொண்டு சமுசாரத்தைப் பார்க்காமலிருக்கிறாய், கிருஷ்ணனையே கோரிக் கொண்டாடிக்கொண்டிருந்தால் ரக்ஷிப்பாரைக் கென்னசெய்வது? குமாரர்களுக் கென்ன

கதி? யென்று கேட்க நாமதேவர் தாயாரைக்கண்டு தாயே! அனேக ஜன்மங்களில் சுகிருதங்களைச் செய்தேன். அவையெல்லாம் ஸ்ரீ ஹரிக்கு அர்ப்பணையாய் விட்டன. கையில் திரவியமில்லாதபடியால் விவகார மேதேனும் செய்ய விரகில்லை. கையிருப்பு இருக்குமாயின் வேண்டிய கிருஷிசெய்து குடும்பத்தை போஷிப்பேனென்ன, தாயா ரிதைக் கேட்டு தாதா வென்னுமொரு பிராம்மண சவுகாரிடஞ் சென்று ஆயிரம் விராஹன் கடன் கேட்டாள். அந்த சவுகார் தன லோபியாக வயிற்றிற்கே தவிடு அன்னத்தைச் சாப்பிட்டுக்கொண்டு தனத்தைச் சேகரித்து வட்டிக்கு கொடுத்துக்கொண் டிருப்பான். நாமதேவ் வர்த்தகஞ் செய்ய வெத் தனித்ததால் கோணாயி கடன் கேட்க, அவன் விசுவாசத்துட னுடனே பணத்தை யெண்ணிக் கொடுத்தான். ஐவஜூ யில்லாமல் கடன் கொடுத்தானென்றும் இது பாண்டுரங்கருடைய எத்தனமென்றும் கோணாயி யெண்ணிக்கொண்டிருந்தாள். ஆறு மாசங்களுக்குள் பணத்தைச் சேர்த்துவிடுகிறேனென்று பத்திர மெழுதிக்கொடுத்து அந்த திரவியத்தைக் கொண்டு வந்து கோணாயி நாமதேவை அழைத்து அப்பா! நீ இந்த திரவியத்தைக்கொண்டு கிரமமாக வர்த்தகம் செய்யக்கடவாய். உன்னுடைய யூகையினாலும் யுத்தியினாலும் லாபத்திற்கே அனுகூலமாக சரக்கை விற்கவேண்டும், கடன்காரனுக்கு ஆறு மாசத்திற்குள் பணங் கட்டவேண்டும், ஜாக்கிரதையாய் விவகாரத்தை நடத்த வேண்டுமென்று சொல்ல, அப்படியே ஆகட்டுமென்று தாயாருக்கு நமஸ்கரித்து தனக்குள் எண்ணத் தொடங்கினார், எந்தவித வர்த்தகம் செய்வது? எப்படி செய்வது? ஒரு புருஷனுலகத்தில் பிள்ளைகளுண்டாக தவம் புரிவான், தன் கோரிக்கை தீரும்படி குமாரன் பிறந்தால் காலன் வந்து அந்தப் பிள்ளையைக் கொண்டுபோய்விடுவான், பின்பு அவன் தனக்குத்தானே வருத்த மூர்[illegible]ப்பான். யக்கியங்களைச் செய்தா லொரு புருஷன் தேவ[illegible]லத்தைப் புஜித்து திரும்பி தலைகீழாய் கீழேவிழுவான், [illegible] வியர்த்தமேயாம். தவங்கள் செய்தால் அரசன் வீட்டில் பிறந்து அரசாக்ஷியை வகித்து முடிவில் நரகத்தை யடைவான், இதிற் சமுசயமில்லை. ஒரு கோரிக்கையு மில்லாமல் பாகவதரானவர்களுக்கன்னமளித்தால் சாக்ஷாத் சர்வேஸ்வரன் திருப்த்தனாவான், இது

தான் லாபமுள்ள வியாபாரமென் றெண்ணிக்கொண்டு, அதுவு மிந்த பண்டரீபுரத்தில் செய்வேனுயின் தாயார் மெத்தகோபித் துக் கொள்ளுவாளென்று மனதி லெண்ணித் தாயாரிடம் நின்று, அம்மே! தூரதேசத்திற்குப்போய் வர்த்தகம் செய்வேன், பணத் தைக்கொடுத்தா லவ்விடம் போகிறேனென்ன, தாயாரும் திரவியத் தைக் கொடுத்து அப்பா! தந்திர மறிந்த வர்த்தகர்களுடன் கூடி கூர்மையான புத்தியுடன் வஸ்திரங்களை வாங்கி லாபத்திற்கே ஜாக் கிரதையுடன் விற்கக்கடவாய்; முதலுக்கு மோசமின்றிக் காப்பாற்ற வேண்டுமென்று சொல்ல, நாமதேவர் கனிகரத்துடன் நான் சமு சாரத்திலிருந்துக்கொண்டு ஒருகாலும் நஷ்டத்தை மனசார செய் யமாட்டேன். அப்படி செய்வேனுகி லுன்புத்திர னுகேனென்று சொல்லி பாண்டுரங்கரைச் சேவித்துக்கொண்டு திரவியத்துடனு ம் சில பிராம்மணர்களுடனும் இராக்ஷச புவனமென்னும் க்ஷேத் திரத்திற்குச் சென்றனர்.

அந்த இடம் சுஜனங்களான பாகவதர்க ளிருக்கும் சுபகர மான க்ஷேத்திரமா யிருந்தது. நாமதேவ ரவ்விடத்தில் வசிக் கும் பிராம்மணர்களைக் கண்டு ஐயா! பிராம்மணர்களே! ஈஸ்வ ரார்ப்பணமாக நான்கு தினங்கள் பரியந்தம் பிராம்மணர்களுக்கு போஜன மிடுவதற்குப் பிரயத்தனமாக விருக்கிறது. பகற்காலத் தில் பக்ஷணை செய்வித்து இரவில் ஹரிகதையை நீங்க ளனைவரும் கேட்கச் செய்கிறேனென்று சொல்லி பணத்தைக் கொடுக்க, அவ் விடமுள்ள பிராம்மணர்க ளதிக சந்தோஷத்துடன் மண்டப மொன் றேறப்போட்டு சாஹித்தியங்களைச் சேகரப் படுத்திக்கொண்டு மறுதின மிரண்டு ஜாமத்திற்குள் பக்ஷியங்களுடனும் பக்வான் னங்களுடனும் சமையல் செய்து இலைகளில் ப்ரஸாதத்தையும் பக்வான்னங்களையும் வட்டித்துப் பிராம்மணர்க ளெல்லாம் போ ஜனத்திற் குட்கார்ந்து ஆபோசனமிட்டு ஹரியே போக்தாவென் று சொல்லி சாப்பிடத்தொடங்கினுர்கள், அவர்க ளனைவருஞ் சுக மாகச் சாப்பிட்டுக்கொண்டிருக்க ஹரிநாமத்தைச் சொல்லிக்கொ ண்டு நயனுநந்தமாக நாமதேவ் பார்த்துக்கொண்டிருந்தார். அவர்க ளனைவரும் திருப்தியாகச் சாப்பிட்ட்பிறகு ஒரு விராகன் தக்ஷிணை தாம்பூலத்துடன் கொடுத்தார். இந்த உச்சவத்தை யொரு பிராம் மணன் பார்த்து பண்டரி புரத்திற்குச் சென்று ஒரு விராகன்

தக்ஷிணைக் கொடுக்கிறார்களென்று அவ்விடத்தில் விளம்பரஞ் செய்ய அனேக பிராம்மணர்கள் உல்லாசத்துடன் இராக்ஷச புவனத்திற்குச் சென்றனர். பணத்தைக்கொடுத்த தாதா சவுகாரிதைக் கேட்டு, கோணுயி மோசஞ்செய்து என்வீட்டை முழுகடித்தானென்றும் கொடுத்தபணத்திற் கொஞ்சமாவது வாராதென் றெண்ணி மார்பை அடித்துக்கொண்டு இராக்ஷச பவனத்திற்சென்று அடா நாமா! என்னுடைய பணத்தை நீ கைக்கொண்டு வேடிக்கையோடே விப்ர போஜனஞ் செய்வித்தாய், துச்சகுணங்களைக் கொண்டு தனத்தைச் செலவு செய்தாயென்று தூஷிக்கத் தொடங்கினன். அவ்வேளையில் பிராம்மணர்களனைவரும் போஜனம் செய்ய உட்கார்ந்திருந்த விநோதத்தைப் பார்த்துக்கொண்டு நாமதேவர் வீற்றிருந்தனர். தாதா சவுகாரின் கடினவாக்கியங்களை நாமதேவ் கேட்டு வேதாத்தியனஞ் செய்யும் விப்ரர்களுக்கு தாதாவைக்காட்டி ஐயா! பிராம்மணோத்தமர்களே! இந்த உற்சவத்திற்கு இவர் தான் கர்த்தாவாவார். இவர்கையினு லுதகத்தைச் சங்கல்ப பூர்வகமாக விடுவித்து போஜனம் செய்யக் கடவீர்கள், சமயோசிதமாக வந்துவிட்டாரென்ன, பிராம்மணர்க ளவன்கையி லுதகத்தைவிட எத்தனிக்கும்போது, அவன்தான் சங்கல்பத்தைச் சொல்லி நீரைவிட்டால் சகலதனமும் போய்விடுமென்று பயப்பட்டு பின்னிடைந்தவனுய் சொல்லுவான், நான் பிறந்ததுமுதல் பித்ரு சிரார்த்தமே வைத்ததில்லையே! இந்தப் பிரகாரம் சகல தனத்தையும் நான் சிலவழிக்கமாட்டேனென்று விவாதம் செய்துக்கொண்டிருக்க, பிராம்மணர்கள் ஆபோசனத்திற்கு ஆலஸ்ய மாவதைக்கண்டு பலவாரான வார்த்தைகளைச் சொல்லி, தாதா சவுகாரை நோக்கி, நீ அப் பிரமத்தனுயும் மூர்க்கனுயு மிருக்கிறுய். ஹஸ்தோதகத்தை நீ யிப்போது விடக்கடவாய். எங்கள் வாக்கியங்களை நீ கேளாதிருந்தால் சீக்கிரத்தி லழிந்து விடுவாயென்று சொல்ல, தாதா சவுகார் அவர்களை நோக்கி இது நாமதேவ் செய்த சந்தர்ப்பமேயென் றெழுந்திருந்து தன் கையினு லுதகத்தைவிட்டான். பாண்டுரங்கர் போக்தா வென்று பிராம்மணர்கள் ஆபோசனமிட்டு திருப்தியாகச் சாப்பிட்டார்கள். பின்பு தாம்பூலமும் ஒரு விராகன் தக்ஷிணையும் நாமதேவ் கொடுத்தனுப்பினர். தாதா சவுகா ரிதனைக் கண்டுகொண்டிருந்து ஐயோ! திரவியமெல்லா

மிப்படி அனியாயமாய்ப் போய்விடுவதே! யென்று திகைத்து நின்ருன். பின்பு நாமதேவ் போஜனத்திற் கெழுந்திருமென்று தாதா சவுகாரை யழைக்க அவன் அடடா! தனமெல்லாம் போய்விட்டதே! வென்றுசொல்ல, நாமதேவ், ஐயா! இந்த க்ஷேத்திரத்தில் ஐந்துநாள் பிராம்மணர்கள் புஜித்தனர். உமக்கு பெரிய சுகிருதம் நேர்ந்தது. நீரும் சுகமாக பக்ஷியுமென்று சொல்ல, சவுகார் சொல்லுவான், அடா நாமா! அந்த சுகுருதத்தினுல் இனிமேல் வரும் சுகத்தை நான் வேண்டேன். இப்போ தெனக்கு வட்டியு முதலுங் கொடுத்துவிடு. அந்த திரவியம் கையில்வந்தா லன்னத்தை புஜிப்பேன், இல்லாவிடில் பிராணனை விடுவேனென்ருன், நாமதே விந்த நிற்பந்தத்தைக்கண்டு பாண்டுரங்கரை நினைத்து ஹரி! நாராயணு! அச்சுதா! கேசவா! முகுந்தா! முரஹரி! ஜனர்த்தனு! ஸ்ரீதரா! சியாமளரூபா! பண்டரிநாதா! ஸர்வேசுரா! நஷ்டமாகா வியாபாரத்தை நான்செய்தேன். அதினுடைய கிரியாபலத்தை யிவன் காணுமல் கிலேசத்தை அடைகிருன், நீர் ஆப்தராயிருக்கிறீ ராதலால் அடியேனை 'யாதரித்தருளக் கடவீர், ஓ தாமோதரரே! அடியேனுடைய பிராப்த்த மெப்படி யிருக்கிறதோவென்று பிரார்த்திக்க, பாண்டுரங்கர் பிரஸன்னராகி நாமதேவைக்கண்டு அந்த சவுக்காருடன் விகடமாக ஒன்றுஞ் சொல்லாமல் ஜலத்திற்குள் ளழைத்துக்கொண்டுபோய் ஸ்நானஞ் செய்யும்படி செய்வையாகில் அவ னவ்விடத்தி லாச்சரியமான மகிமையைக் காண்பானென்று சொல்லி மறைந்தனர்.

நாமதேவை அந்த சவுகார் பிடித்துக்கொண்டு நிந்திதமான வார்த்தைகளைச் சொல்ல, நாமதேவ் ஐயா! உமது பணத்தை பத்துபங் கதிகமாகப் பெருக்கினேன், நான்கு மாசம் பொறுத்துக்கொண்டால் காண்பிக்கிறேன், அப்பொழுது நீ பெற்றுக்கொள்ளலாமென்ன, அவன் பணத்தை யிப்போது கையில் போடாவிடில் பிராணன் போய்விடுமென்று கையைப் பிடிக்க, நாமதேவர் சொல்லுவார், ஆற்றில் துடையளவு ஜலத்தில் வந்தீராகில் விராகன்களின் மூட்டையை விதிப்படிக் கொடுப்பேனென்று சொல்லி அவன் கையைப் பிடித்துக்கொண்டு ஆற்றினிடஞ் சென்று ஜலத்திற் கொண்டுபோனர். அப்பொழுது தாதா அடா நாமா! என்னை ஆழ்ந்த ஜலத்தில் முழுகச்செய்யப் பார்க்கிருயோ

வென்று சொல்லிக்கொண்டிருக்க நாமதேவ் அவன் கையைப் பிடித்துக்கொண்டு ஐயா ! இதில் ஸ்நானஞ் செய்யும், உமக்குக் குறையொன்றும் வாராதென்று தலையை ஜலத்தில் முழுகச்செய்ய, அதிலவன் விசித்திரங்களைக்கண்டான், அவையாவன அவன் பாதாளத்திற்குப் போனதுபோலத் தோன்றி அவ்விடத்தில் திவ்விய ரத்னமயமான தேஜஸுடு விளங்க தேஜோமயமான வீடொன் றிருந்தது. அந்த வீட்டைத்தேவதா ஸம்பந்தமான கற்பக விருக்ஷங்கள் சூழ்ந்திருந்தன. காமதேனுவும் சிந்தாமணியு மவ்விடம் சேர்ந்திருந்தன. அழகான இடத்தைக்கண்டு ஆனந்தித்துக் கொண்டிருக்க சுந்தரம் பொருந்திய இரண்டு துலுக்கர் தாதா சவுகாரிடம் வந்து ஐயா! அரஸன் அரண்மனைக்குள் ளெழுந்தருளி யிருக்கிறா ரவ்விடம் வரச்சொன்னாரென்று விண்ணப்பஞ் செய்ய, சவுகார் பிராந்தியடைந்தவனாய், உள்ளே புகுந்தவளவில், உயர்ந்த வாஸனத்தி லோ ரரசனெழுந்தருளி யிருக்கக் கண்டான். அந்த இராஜனைச் சூழ்ந்த சகல பரிசாரகரும் துலுக்கரா யிருந்தார்கள். இதைப்பார்த்து பயமடைந்து, நாமதேவ னிந்த சங்கடத்தை நிவர்த்தித்தால் கடனைக் கேட்கமாட்டேனென்று மனதிலெண்ணுற வே, அவ்விடத்திற் நாமதேவரையே கண்டு தனக்கோ ராதார முண்டாயிற்றென்று நினைத்திருந்தான். அரச னவனை போஜனத்திற் கழைத்து வாவென்று நாமதேவுக்கு கட்டளையிட, அவர் தாதா சமீபம் வந்து ஐயா ! போஜனத்திற்குப் பந்தியி லுட்காருமென்று சொல்ல, தாதா சொல்லுவான் துலுக்கருடைய வன்னம் நிந்திதமாகும், வேண்டாமென்று சொல்ல, நாமதேவர் பண்டரி நாதரே பிரபுவாகி உம்மை பக்ஷணைக்கு கூப்பிட்டாரென்று சொல்ல, சவுகார் சொல்லுவான் அடா நாமா ! நீ, கொடுமையானச் சேஷ்டைகளைச் செய்தாய், இந்த வாபத்தி லிருந்தும் தொந்தரவிலிருந்தும் நிவர்த்திசெய்துவிடு, நீ கொடுக்கவேண்டிய கடனை நான் கேட்கமாட்டேனென்ன, நாமதேவ் ஐயா ! நீர் பயமுறுமலும் சமுசயிக்காமலும் பக்ஷணை செய்யுமென்ன, அவன் அமுதுபடி சாமக்கிரி கொடுப்பாயாகில் நான் சமையல் செய்து இவ்விடம் சாப்பிடுவேனென்ன, நாமதேவர் சென்று அரசனுக் கறிவிக்க அரசன் தாதாவினுடைய சஞ்சிதபல மென்று சொல்லி, அமுதுபடியே கொடுமென்ன, நாமதேவ் அதனைக் கொண்டுவந்து சவுகார் கையிற் கொ

டுக்க, அவன் பார்த்து துலுக்கர் சமீபமில்லாத இடத்தைக் காண்பித்தால் நான் பாகம் செய்து பக்ஷிப்பேன், இந்த உபகாரத்தை நீ செய்வையாயின் நீ கொடுக்கவேண்டிய பணத்தை விட்டுவிடுகிறேனென்று சொன்னான். அப்போது ஈஸ்வர மாயையா லவனுக்குக் கண்கள் மூடப்பட்டன. நீரிலிருந்து அந்தப் பிராம்மண சவுகார் வெளியிற் கிளம்புமளவில் தனது நிவாசபூமியான பண்டரிபுரம் கண்களுக்குத் தோன்றிற்று. இதென்ன வாச்சரியமென்று மனதி லெண்ணிக்கொண்டு மூட்டையைக் கையிலேந்திக்கொண்டு தன் வீட்டைச் சேர்ந்து அவிழ்த்து பார்க்குமளவில் விராகன்களனேக மதில் நிறைந்திருந்தன. இதைக்கண்டு அதிக சந்தோஷமுடையனாகி ஈஸ்வர மகிமையை யெண்ணிப் புகழ்ந்துக்கொண்டிருந்தான். பின்பு நாமதேவரை யொருநாள் கண்டு தெண்டஞ் சமர்ப்பித்து ஐயா உமக்கு ஸ்ரீஹரி ஸர்வ விதங்களிலும் வசமாயிருக்கிறா னென்றான்.

ஞானதேவ ரொருநாள் பண்டரிக்கு வந்து பெருமாளைக்கண்டு ஸ்வாமி! உம்மையன்றி வேறு ரக்ஷக ர்டியேனுக் கில்லையாதலால் சமாதியைக் கொடுக்கச் சொல்லிக் கேட்டார். அப்படியே யாகக் கடவதென்று பெருமாள் சொல்ல, ஞானதேவர் ஆளந்தியென்னும் தன்னிருப்பிடம் வந்தார். பாண்டுரங்க ரவ்விடத்திற் கொருநாள் சென்று இந்திராதி தேவர்கள் சேவிக்கச் சாதுக்க ளனேகர் கூடியிருக்க மகோத்சவமாக ஞானதேவருக்கு சமாதி யளித்தார். ஞானதேவர் சமாதியடைந்தாரென்று நாமதேவ் கேட்க அதிகதுக்கத்தை யடைந்து பெருமாளிடஞ் சென்று, கேசவா! கிருஷ்ணா! முகுந்தா! முரஹரி, கிருபையுடன் ஞானதேவரை எனக்குக் காண்பியும், ஓ தயாமூர்த்தி! இப்போது காண்பிக்காவிடி லென துயிர் போய்விடும். நாங்க ளிருவரு மதிசயமான பிரேமையுடனிருந்தோம். இப்பொழு தவரைக் கண்களாரக் காணவேண்டுமென்றார். பெருமாள் பிரிய வாக்கியங்களைச் சொல்லியும் பயன்படாம லிருக்க, கருடனை அழைத்து, நீ வைகுண்டத்திற்குச் சென்று புண்டரீகன் பக்கத்திலிருக்கும் ஞானதேவரைக் கொண்டு வரச் சொன்னார். பெரிய திருவடியும் வேகத்துடன் சென்று வைகுண்டத்தி லவரைக் கண்டு பாண்டுரங்க ருமமை வரச்சொல்லி சொன்னார், என்மீதேறி கருணையுடன் வாருமென்ன, அவ்

வாக்கினையை சிரசாவகித்து அவ்வாறே பாண்டுரங்கரிடம் வரு மளவில் நாமதேவைப் பெருமாள் கூப்பிட்டு பாரும்! ஆகாய மார்க்கத்தில் கருடனுடைய முதுகின்மேல் ஞானதேவர் வருகிறா ரென்று சொல்லிக்கொண்டே யிருக்கக் கருடன் பூமிமே லிறங்கி னார். அப்பொழுது நாமதேவர் ஆர்த்தியுடன் ஞானதேவருக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து இரகசிய கோஷ்டியி லிருவரும் வெகு நேர மிருந்தனர். ருக்மணி பிராட்டி அந்த பக்த ஜனங்களுக் கன்னமளிக்க அவர்கள் திருப்தியடைந்து அவரவருடைய நிவா சங்களுக்குச் சென்றனர். பக்தரான நாமதேவ் விஷயமாக பாண் டுரங்கர் செய்த சரிதைகளை அனுரக்தியுடன் சொன்னாலும் வாசித் தாலும் எழுதினாலும் பரம புருஷரான பாண்டுரங்கர் கிருபை யுண்டாகும்.



## ஞானதேவர் சரித்திரம்

### விட்டலபந்து.

கோதாவரி தீரத்தில் ஆபேகாமெனுங் கிராமமொன்றுண்டு. அதில் கோவிந்தபட்டரென்னும் பிராம்மண சிரேஷ்டர் நீராபாயி யென்னும் மனைவியுடன் கிரகஸ்த தர்மத்தைப் பரிபாலித்துக் கொண்டு பக்தியுடன் பாண்டுரங்கரைத் தொழுதுக்கொண்டு வாச மாயிருந்தனர், பகவத் கிருபையா லவர்களுக்கோர் புத்திரனு ண்டானான். அவனுக்கு விட்டல பந்துவென்று நாமஞ்சாற்றி வளர்த்துவர குழந்தைப் பருவ முதற்கொண்டு கிருஷ்ணபக்திபி லீடுபட்டிருந்தான். பிறகு தாய் தந்தைகள் உபநயனமும் வித்தி யாப்பியாசமும் செய்வித்தனர். எட்டாவது வயதிலேயே சம ஸ்த யாத்திரைகளும் செய்யவிரும்பித் தகப்பனை கேட்குமளவில் அவரும் போகும்படி யுத்தரவு செய்தனர். விட்டலபந்து தாய் தந்தைகளுக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து அந்த கிராமத்தை விட்டு திவ்விய தேசங்களைச் சேவிக்கத் தொடங்கி குசேலபுரம், கோவர்த்தனம், கோகுலம், மதுரை, ஒறிித்துவாரம், பதரிகாச் சிரமம், அயோத்தி, வெங்கடாசலம், காஞ்சிபுரம், ஸ்ரீரங்கம், ரா மேசுவரம் முதலான திவ்விய தேசங்க ளனைத்தையுஞ் சேவித்து அலகாவதியெனும் க்ஷேத்திரத்தைச் சேர்ந்து சக்கர தீர்த்தத் தில் ஸ்நானம் பண்ணி நித்யகருமங்களை செய்துக்கொண்டிருந்

தான். அவ்வூரில் வாஸமாயிருந்த சித்தோபந்து வெனும் பிராம் மணன் அவரிடம் வந்து மதுரவாக்கியங்களைச் சொல்லித் தன் வீட்டிற் கழைத்துவந்து அதிதி பூஜையைச் செய்து, விட்டல பந்தை அன்றையதின மவ்விடமே தங்கும்படி கேட்டுக்கொள்ள, அவனும் சம்மதித் திருந்தனன். அன்றிரவில் சித்தோபந்துடைய சொப்பனத்தில் பாண்டுரங்க ரெழுந்தருளி உன் குமாரத்தியை விட்டல பந்துக்கு கலியாணம் பண்ணிக் கொடுக்கும்படி கூறி யருளினர். இச்சொப்பன சங்கதியை விட்டலபந்துக்குத் தெரிவிக்க, இது என்னாத காரியமென்று விநய விதேயத்துடன் விரக்தியை வகித்து, வேண்டாமென்றான். சித்தோபந்து பகவதாக்ஞையாயிற்றே! அதனை விடத்தகுமா? வென்று விண்ணப்பஞ்செய்ய ஆனல் பண்டரீநாதர் தனக்கு நேராக சொல்லில் விட்டலபந்து பார்க்கலா மென்றான். அப்படியாறு லன்றையதினமு மளகாவதியி லிருப்பாராகில் ஹரிபாண்டுரங்க ருனக்குஞ் சொல்லுவா ரென்று சித்தோபந்து சொல்ல, அதைக்கேட்டு விட்டலபந்து கிலேசத்துட னவ்விடத்திலேயே யிருந்தார். பெருமாள் விட்டலபந்து சொப்பனத்திலுஞ் சென்று அக்கன்னிகையை விவாகத்திற் கைக் கொள்ளக்கடவை யென்றுக்ஞாபித்தார். விட்டலபந்து இவ்விசித்திரத்தைக் கண்டு, விழித்துக்கொண்டு சித்தோபந்துக்குக் கினவு கண்டதை வெளியிட்டார். இவர் சந்தோஷித்து பொருத்த நிமித்தங்களை பிள்ளைக்கும் பெண்ணுக்கும் விசாரிக்குமளவில் பொருந்தியிருந்ததைக் கண்டு முகூர்த்த நிச்சயஞ் செய்து பிராம்மண ஜனங்கள் மங்க ளாஷ்டகங்கள்சொல்ல வேடிக்கையுடன் விவாஹத்தை முடித்தார்.

இவ்விதமாக விட்டலபந்து விவாகஞ் செய்துக்கொண்டு பவதரணோபாயமான பண்டரீ புரத்தைச் சேவிக்க விரும்பி தனது மாமனரை பண்டரி யாத்திரைக்கு விடைகொடுக்கும்படி கேட்டான். மாமனு ரதைக் கேட்டுத் தானும் கூடவருவதாகச் சொல்லி இன்ன மிதரரையுங் கூட்டிக்கொண்டு பண்டரிக்குச் சென்றனன். உத்தமமான க்ஷேத்திர மென்று மகா பிரேமையுடன் அவ்விடம் சேர்ந்தார்கள். அந்த ஸ்தலத்தின் பெருமை ஆச்சரியகரமானது. அவ்விடத்திற் போனவுடன் அபிமானம் விட்டுப்போம். அதனைக் கண்டமாத்திரத்தில் பாபங்கள் நிரஸனமாய்விடும். தரும

நெறிகளை யுணர்ந்த விட்டலபந்து அவ்விடஞ் சென்று பீமாநதியைக் கண்டவுடன் விதியுக்தமாக நமஸ்கரித்து அதில் ஸ்நானஞ் செய்து தனது நித்திய கருமானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ருக்மணிபதியைச் சேவித்து அவரது திருவடிகளைத் தொட்டு நமஸ்கரித்து பண்டரீபுரத்தை வலம்வருமளவில் ஹரிதாஸர்கள் ஸ்ரீ ஹரி நாமத்தை அதியானந்தத்துடன் பாட, தான் கேட்டு விசேஷமான பக்தியுடன் விரக்த சித்தராகி யிருந்தார். தன் கூடவந்த பந்துக்கள் திரும்பி தமதிருப்பிடம் செல்லுமளவில் விட்டலபந்து மவர்களுடன் கூடி மாமனார் வீட்டிற்கு வந்தார். அவ்விடம் சிலநாளிருந்து விரக்தியையே மேற்கொண்டு தாய் தந்தையரைப் பார்க்க விரும்பி மாமனாருக் கறிவிக்க சித்தோபந்து தன் புத்திரியையும் மருமகனையும் அழைத்துக்கொண்டு ஆபேகாமுக்கு வந்தார். விட்டலபந்து தன் மனையாளுடன் தாய் தந்தைகளுக்கு நமஸ்கரித்தான். சித்தோபந்தும் தன் புத்திரிக்கு விவாஹமான சங்கதியாவும் சம்பந்திகளுக் கறிவிக்க அவர்கள் அத்தியானந்தத்தை யடைந்து சித்தோபந்துக்கு சன்மானங்களை வெகுவாகச் செய்தனுப்பினார்கள். விட்டலபந்து தன்னுடைய தாரத்துடன் தாய் தந்தைகளுக்குச் சேவை செய்துக்கொண்டு பகவத் சிந்தனையும் விரக்தி லக்ஷணமும் விடாமல் காலயாபனஞ்செய்துவந்தார். சிலகாலஞ்சென்றபின் பெரிய வயதை யுடையவர்களாதலால் மாதா பிதாக்கள் பரமபதத்தை யடைந்தனர். பின்னர் விட்டலபந்து இளம் பருவமான தனது மனையாள்மீது மோஹத்தை விட்டு கிரகஸ்த தர்மத்தையும் தான் பாராமல் கிருஷ்ண சரணங்களில் விருப்பத்தை வைத்து இகலோக சுகமெப்பவு மிடருகளையே தருமென்றும் அதனை யிச்சியாதிருப்பது நன்றென்றும் எண்ணியிருக்க இந்தசங்கதியை யறிந்து மாமனார்வந்து குமாரத்தியையும் மருமகனையும் தன திருப்பிடமான அளகாபுரிக் கழைத்துப்போனார்.

அது க்ஷேத்ரவாசமா யிருந்தபடியால் விட்டலபந்து சாதுசமாகமஞ் செய்துக்கொண்டும் பாகவதர்களைத் தொழுதுக்கொண்டும் சித்த சாந்தியுடையவரா யிருந்தார். ஒருநாள் தான் சன்னியாசம் வாங்கிக்கொள்ளும்பொருட்டு தன் மனைவியை கேட்க, அவள் மாருத்தரங் கொடாமல் தன் தகப்பனிடம் வந்து கேட்டாள். சந்ததியில்லாதிருக்க சன்னியாசம் வாங்கிக்கொள்வது சாஸ்திர ரீதி

யல்ல வென்று சித்தோபந்து ஒப்பாமலிருந்தார். சிலநாள் கழிந்த பிறகு விட்டலபந்து கங்காயாத்திரை போய் வருகிறே னென்று மனையாளைக் கேட்க அவ்வேளையிலேதோ வீட்டு வேலைகள் செய் வதனால் பாராமுகமாகயிருந்து நல்லதென்று மாறுத்தரங் கொடுக்க, விட்டலபந்து வீட்டை விட்டு புறப்பட்டு காசிபட்டணத்திற்குச் சென்று பகவத் ஸேவையை பயிர்ச்சி செய்து தரணோபாயத்திற் காக தீர்த்தபாதரென்னு மாசாரியரிடம் சன்னியாசாச்சிரமத்தை கைக்கொள்ள வெண்ணி சரணமடைந்தார். ஞான பூர்ணரான வவ்வாசிரியர் உனக்கு மனைவி மக்களுண்டோவென்று கேட்க, விட்டலபந்து இல்லையென்று சொல்ல, அவர் சன்னியாசாச்சிரமத் தைக் கொடுத்து சைதன்னிய னெனும் நாமத்தை யிட்டருளினர். விட்டலபந்து சன்னியசித்த சங்கதியை அளகாவதியில் மனையாள் கேட்டு அதிகவிசனத்துடன் அழத்தொடங்கினள். அப்போது சித்தோபந்து குமாரத்திக்கு சமாதானஞ் சொல்லி அரசு விருக்ஷ த்திற்கு அனுதினமும் பிரதக்ஷணம் வரும்படி ஆக்கினை செய் தார். அதேபிரகாரம் அம்மாது செய்துவந்தாள்.

இப்படியிருக்க காசிப்பட்டணத்தில் தீர்த்தபாத ஸ்வாமி, சேது தரிசன நிமித்தியம் பிரயாணமாகி அவ்வவ்விடங்களில் தீர்த் தங்களைச் சேவித்துக்கொண்டு கோதாவரியில் ஸ்நானஞ் செய்ய அளகாபுரத்திற்கு வந்து மார்க்காயாசத்தால் அலண்டு அவ்வரசு விருக்ஷத்தினிடம் உட்கார்ந்தனர். அவ்விடத்தில் விட்டலபந்து மனையாள் அச்செடிக்கு வலம்வந்துக்கொண்டிருந்தாள். அந்த சன்னியாசியா ரவ்விடம் வரக்கண்டு அவள் சாஷ்டாங்கமாக நம ஸ்கரிக்க அவர் "புத்ரவதீபவ" "புண்ணியவதீபவ" யென்றாசீர்வ தித்தார். அவளதைக் கேட்டுச் சிரித்து ஸ்வாமி! அடியாளுடைய பர்த்தா காசிக்குச்சென்று அவ்விடம் விரக்தராகி சன்னியாசம் வாங்கிக்கொண்டாரென்று கேள்வியாயிற்று. பர்த்தா யில்லா மல் புத்திர ரெப்படி பிறப்பார்கள்? தேவரீர் வாக்கு நிஷ்பலமா காதென் றெண்ணுகிறேனென்ன? தீர்த்தபாத ரிவ்வசனங்களைக் கேட்டு உனது பர்த்தாவுக்கு ஆச்சிரமங் கொடுத்தவ னெவனோ அவன் பிராயச்சித்தம் வாங்கிக்கொள்ளவேண்டி வரும், இளமை யெதுடைய ஸ்திரீயிருக்க ஆச்சிரமங் கொடுக்கத் தகாது, உனது பர்த்தாவி னடையாளங்களைப் பாங்குடன் சொல்லென்ன, அவள்

தன் கணவனுடைய ரூப சின்னங்களை தெரிவித்தாள். தீர்த்தபாதர் அவ்வசனங்களைக் கேட்டு நானே அவனை சன்னியாசியாக செய்தேனென்று சொல்லி உனக்கு ஆப்தர் யாருமில்லையோவென்று கேட்க தாய் தந்தைகளு மிதர பந்துக்களு மிருக்கிறார்களென்று சொல்லி நிற்க, உன் தகப்பனை அழைத்துவாவென்று கட்டளை யிட்டார். உடனே அவள் தகப்பனிடம் வந்து சந்தோஷத்துடன் தீர்த்தபாத ஸ்வாமிகள் வந்த சங்கதியைச் சொல்லி பிதாவை அழைத்து வந்தாள். சித்தோபந்து, சன்னியாசியைக் கண்டவுடன் தீர்க்க நமஸ்காரஞ் செய்து விதி பூர்வகமாக பூஜைகளையும் நடத்தினன். அப்பொழுது தீர்த்தபாதர் தானறியாமற் செய்த காரியத்தைத் தெரிவித்து இந்த வபசார மென்தவத்தை வீணாகச்செய்யும், காசிபட்டண மிப்போது நான் போகவேண்டுமானதால் நீங்கள் வரவேண்டுமென்று தகப்பனையும் அவர் குமார்தியையும் சன்னியாசியா ரிட்டுக்கொண்டு காசிபுரியைச் சேர்ந்தார். அவ்விடத்தில் சைதன்னிய னெனும் சிஷ்யனை யழைத்து இளமைப் பருவமுடைய மனையாளிருக்க, நீ சன்னியாசி யாகுவதற்கு முன்பு ஏன் அசத்தியத்தைச் சொன்னாய்? இவள் உன்மனையாளோ அல்லளோவென்று கேட்க, அவன், பயந்து ஸ்வாமி! இவளென்பத்தினியாகும், பிள்ளைக ளில்லாம லிருந்தமையால் விட்டு வந்தேனென்ன, ஆசாரிய ரவனைநோக்கி நீ யுன் மனையாளை கைக்கொண்டு குறிப்புட னிருக்கக் கடவை. நீ பொய்யை யுரைத்து என்னை நரகத்திற் காளாக்கினை, தாருண்ணியமுடைய ஸ்திரியை விட்டுவிடுவது தகாத பாபமாம். என தாக்கினையை மீறாமல் மனையாளை மறுபடியு மங்கீகரித்துக்கொண்டு வாழ்வாயாக, அதனா லுனக்கு மேன்மை யுண்டாகுமென்று சொன்னார். குருவாக்கினையை சிரசா வகித்து மனைவியை கைக்கொண்டு சைதன்னியர் அளகாவதிக்கு வந்து சேர்ந்தனர்.

கிரகஸ்த தருமத்தைச் சைதன்னியர் திரும்பி கைக்கொள்ள அவ்விடத்திய பிராம்மணர்க ளனைவரும் இது சாஸ்திர விரோதமென்று சொல்லி பஹிஷ்காரம் (ஜாதிகட்டு) வைத்தார்கள். சதி புருஷர்க ளிருவரும் ஊரிலிருக்கச் சரிப்படாமல் சமீபமான காட்டிற்குச் சென்று பகவதனுபவத்தி லீடுபட்டு இரவும் பகலும் ஹரிநாமத்தை விடாமல் உச்சரித்துக்கொண்டு அருகிலிருக்கும் கிரா

மவாசிகளான பிராம்மண கிரகங்களில் பிக்ஷை வாங்கிக்கொண்டு தேக யாத்திரையை நடத்தி வருவார்கள். இவ்விதமாக நடந்தேறிவர மனையாள் கர்ப்பமுடையவளாய் பகவத் கருணையால் மூன்று பிள்ளைகளையும் ஒரு பெண்குழந்தையையும் பெற்றாள். பால பருவத்தில் குழந்தைகளுடைய விளையாட்டின் மேன்மையால் தாய் தந்தைகள் விநோதமடைந்து அவர்களை லாலிதப்படுத்தி ஆனந்தித்துக் கொண்டிருந்தனர். அம்மூன்று பிள்ளைகளும் பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களுடைய அம்சமாக விளங்கினார்கள். யோகமாயையி னம்சமாக வப் பெண்குழந்தை விளங்கிற்று, முன்பு பிறந்த ருத்திரருடைய அம்சமானவருக்கு நிவிருத்தி யென்றும், விஷ்ணு அம்சமாக பிறந்தவருக்கு ஞானதேவரென்றும், பிரம்மதேவ ரம்சமாக பிறந்த மூன்றாவது பிள்ளைக்கு சோபான ரென்றும், யோகமாயையி னம்சமாகப் பிறந்த பெண் குழந்தைக்கு முக்தாபாயி யென்றும் நாமங்களைச் சாற்றி தாய் தந்தைகள் வளர்த்து வந்தனர். பிள்ளைகளுடைய லீலைகளை தகப்பன் கண்டு களிக்கினும் பாண்டுரங்கருடைய நாமத்தை விடாமல் பஜித்துக்கொண்டு இல்லாளுடன் கூடியிருந்தனர். கிராமவாசிக ளனைவரும் அக்குமாரர்களுடைய முகங்களைக் காணலாகாதென்று நிந்திதமான வாக்கியங்களை நவின்றனர். சிறுவர்கள் மூவரும் சிறுடன் வளர அவர்கள் தாயார் தன் பர்த்தாவைக்கண்டு பிள்ளைகளுக்கு உபநயனங்களைச் செய்விக்கவேண்டுமென்று வற்புறுத்தினாள். சைதன்னியரிவ்வார்த்தைகளைக் கேட்டு பிராம்மணர்களிடஞ் சென்று, ஐயா! பிராம்மணச் சிரேஷ்டர்களே! நீங்கள் சகல சாஸ்திரங்களையும் சாக்ஷாத் கரித்தவர்கள், நான் செய்த பிழைக்கு பிராயச்சித்தத்தைச் செய்து அடியேனை யொருநிலையில் நிற்கச் செய்யக்கடவீரென்று பிரார்த்தித்தார். பிராம்மணர்கள் தர்ம சாஸ்திரங்களை பரிசோதனை செய்யுமளவில் தேகத்தை மாய்த்துக்கொள்வதே தகுதியான தண்டனை விதி யென்றும் சன்னியாசி பிள்ளைகளுக்கு கரும நிபந்தனங்கள் கிடையாவென்றுஞ் சொல்லிவிட்டார்கள். இதைக்கேட்டு அனுதாப சித்தமுடையனாய் சைதன்னியர் தன் மனைவியுடன் ஹரிநாமத்தை அபரிமிதமாகச் செய்துக்கொண்டு காட்டிற் பிரவேசித்து இருவருங் களேபரங்களை விட்டு பரம பதத்தைப் பெற்றனர்.

தாய் தந்தைகளிருவரும் தங்களை விட்டுப்போனதைக் கண்டு தனயர்கள் மூவரும் பிராம்மண ஜனங்களிடம் சென்று ஓ பிராம்ம ணோத்தமர்களே ! எங்களுக்குத் தண்டனையாவதேதா வோ தெரியப்படுத்த வேண்டுமென்று கேட்க, அவர்கள் பிரதிஷ்டானி யென்னும் பட்டணத்தில் பண்டித ரனேக ரிருக்கின்றனர், அவ்விடம் சென்று விசாரிக்கில் அவர்கள் சொல்லும் சாஸ்திரவிதி யங்கீகாரமாகும் இதிலையமில்லை யென்றனர். அப்போது நிவிருத்திநாதர் சொல்லுவார், நாமெனும் வஸ்து ஞானசொரூபி, அவயவமில்லாம லிருப்ப தென்றார். ஞானதேவர் கர்ம விகர்மங்களுக்கு ஆத்மா வேறுபட்டவனென்றனர். சோபானர் திருந்தமான ஹரிபக்தியே பிரதான மென்றார், ஆனதால் ஞானிகளுக்கு ஜாதியாச்சிரமங்களேன் வேண்டுமென்று சொல்ல, அந்த கிராமத்திலிருக்கும் பிராம்மணர்க ளொரு பத்திரிகையை யெழுதி அச்சிறுவர்களிடங் கொடுத்து பிரதிஷ்டானி பட்டணத்திற்குக் கொண்டுபோகக்கடவீரென்று சொன்னார்கள். அதனை தாங்கள் கையிலேந்தி ஹரி நாமத்தைச் சொல்லிக்கொண்டு பிரயாணமாகிச் சென்று பாதையில் கோதாவரி நதியில் ஸ்நானஞ் செய்து பிரதிஷ்டானியைச் சேர்ந்து அவ்விடத்திய பிராம்மணர்களைச் சபை கூடச்செய்து அவர்களுக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து தாங்கள் கொண்டுவந்த பத்திரிகையை அவர்களுக்குக் கொடுத்து எதிரே நின்றார்கள். பண்டிதர்கள் சாஸ்திரங்க ளனைத்தையும் பரிசோதித்து சன்னியாசியினுடைய சந்ததிக்கு சாதி கோத்திரங்களையும் செய்யத் தகுந்த கருமங்களையு மொன்றும் சொல்லவில்லை யென்றும் ஸ்ரீஹரி நாமத்தையே மனதி லிருத்திக்கொண்டு சர்வேசுவரனுக்குச் சரணமடைந்து சர்வமு மவனே யென்று சதாநினைத்திருந்தால் நீங்கள் கருமங்கள் செய்யாமலே கிருதார்த்த ராவீர்களென்று தெரிவிக்க, இதைக்கேட்டு அச்சிறுவர்கள் சொல்லுவார், எங்களுடைய யோசனையு மிதுதான், நாங்கள் சந்தோஷத்தை யடைந்தோம், மேன்மையடைந்தோ மென்றார்கள். அப்பொழுது சபையிற்சேர்ந்த பிராம்மணனொருவ னச்சிறுவர்களை நோக்கி உங்களுடைய நாமங்களென்னவென்று கேட்க அவர்கள் தங்களுடைய பெயர்கள் ஒவ்வொருவரும் வெவ்வேறாகச் சொன்னார்கள். மற்றொரு பிராம்மணன் ஞானசாஸ்திரங்க ளொன்றையு மறியாமல் ஞானதேவனெ

னும் பேரை வகிப்பது தகுதியல்லவென்று சொல்லிக்கொண் டிருக்க அவ்வேளையில் எருமைக்கிடா வொன்று பளுவைச் சுமந் துக்கொண்டு போகின்றதைப் பார்த்து அந்தக் கிடாவுக்கும் ஞானதேவனென்று பேரிட்டாற்போலாம். தாய் தந்தைகளிந்த பெயரிட்டது தகுதியல்ல. செய்கையின்றி வெறும் பெயரால் பிர யோஜனமென்ன ? என்று விளம்பினன். அப்போது ஞானதே வர் அஞ்சலி அஸ்தராய் சொல்லுவார், ஸ்வாமி! நீர், காண்பித்த எருமைக்கிடாவுக்கும் எனக்கும் பேதமில்லை, சைதன்னிய மெவ் விடத்திலு மேகரீதியா யிருக்கின்றது, வியாபகமாகி விசுவமெங் கும் நிறைந்திருக்கிற தென்றார். பிராம்மண னது வெளிவார்த் தை யென்று எருமைக்கிடா முதுகின்மே லடித்தான். அதின் தழும்பு ஞானதேவ ரங்கத்தி லிருக்கப்பார்த்து, பின்னும் ஞான தேவரைக்கண்டு உனக்கு மதற்கும் பேதமில்லாதிருந்தால் அதற் குச் சுருதியை சொல்லிவையு மென்றான். அப்படியே செய்வே னென்று ஞானதேவர் தன் கையை எருமைக்கிடா தலைமேல் வைத்து ருக்வேதத்தைச் சொல்லென் றுக்ஞாபித்தார். அந்தக் கிடா அப்பொழுது ருக்வேத முழுக்க ஓதியது. அவ்விடத்திய பிராம்மணர்களதைக்கண்டு ஆச்சரியப்பட்டு வேதசாஸ்திரங்களை வாசித்த எங்களுக் கிம்மகிமைக ளுண்டாகவில்லை, இது அற்புத மான செய்கையென்று சொல்ல ஞானதேவர், ஸ்வாமி! அடி யே னிதற்கு கர்த்தனல்ல, சாக்ஷாத் பாண்டுரங்கரே இதற்கு கர்த் தராவார். அடியோங்களுக்கு பிராம்மண பாததூளியே கதியன்றி வேறில்லை யென்றனர்

பின்பு அவ்விடத்திய பிராம்மண ஜனங்க ளனைவரும் அவர் களுக்கு விகிதராகி மன்னித்திருந்தமையால் அனவரதமும் ஹரி குண வர்ணனைச் செய்துக்கொண்டு கிருஷ்ண நாமங்களை குறிப் புடன் பாடிக்கொண் டிருந்தார்கள். இந்த நால்வரு மொரு பிரா ம்மணன் வீட்டிற் தங்கியிருந்தபோது அவ்வந்தணனுக்கு பிதுரு திதி வந்தது. அத்தினத்தி லிதர பிராம்மணர்களை போஜனத்திற் கழைத்தான். சன்னியாசி சந்ததியை வீட்டில் வைத்திருப்பதால் அவர்கள் வரமாட்டோ மென்றார்கள். இந்த பிராம்மணன் திகி லடைந்திருக்க ஞானதேவ ரவனைக்கண்டு எதார்த்தமான பிதுருக் களை யிவ்விடத்திற் கழைத்து போஜன மிடுகிறேன், நீ தளர்வடை

யவேண்டாம், பதார்த்தங்க ளனைத்தையும் பக்ஷ்யங்களுடன் பாக ஞ்செய்ய யெத்தனியுமென்று சொல்ல, அவ்வந்தண னப்படியே சமையல் செய்து சித்தப்படுத்த, ஞானதேவர் அக்ஷதைகளைக் கைக்கொண்டு ஆவாஹனம் செய்தவுடன் பிதுர்க்கள் கண்கா‌க்ஷியாக வந்தனர். அவர்களை அந்த பிராம்மணன் சத்கரித்துப் பூஜித்து இலைகளைப் போட்டு அன்னமிட அவர்கள் சகல பதார்த்தங்களையும் சௌக்கியமாக பக்ஷித்து தாம்பூல தக்ஷிணைகளை வாங்கிக் கொண்டபிறகு எதாஸ்தானங்களுக்குப் போகக் கடவீர்களென்று சொன்னமாத்திரத்தில் ஆகாயமார்க்கமாகச் சென்று மறைந்தனர். கிராமவாசிக ளனைவரு மிதைக்கண் டாச்சரியமுற்று அந்நால்வரும் அவதார புருஷரான மஹான்களென்றும் இவ்வுலகில் கலிதோஷத்தை நிவர்த்திக்க வந்தவர்களென்றும் நினைந்து இவர்களுக்கு பிராயச்சித்த மொன்றும் வேண்டுவதில்லை யென்றும் பத்திரிகை யெழுதி அவர்களிடங் கொடுக்க அதனைப் பத்திரப் படுத்திக்கொண்டு திரும்பி அளகாவதிக்குவர பிரயாணப்பட்டார்கள். வேதாத்தியயனஞ் செய்த எருமைக்கிடா இந்நால்வரை விட்டுப் பிரியாமல் கூடவே வந்தது. அவ்வூரிலுள்ள ஜனங்க ளனேகர் வழிகூட்டி யனுப்ப அவ்வூரை விட்டு மஹாலயமெனும் பட்டணத்தை வந்து சேர்ந்தார்கள்.

அப்பட்டணத்திற் கரசனான மோஹன னென்பவன் இந்நால்வரையும் கௌரவப்படுத்தி தன் பட்டணத்திற் சிலகாலம் வைத்திருந்தான். கோரக் நாதருடைய குருபரம்பரையைச் சேர்ந்த கோணீநாத ரென்பவர் நிவிருத்தி நாதருக்கு தாரக மந்திரத்தை யுபதேசித்தார். நிவிருத்திநாதர் ஞானதேவருக் கம்மந்திரத்தை யுபதேசித்தார். ஞானதேவர் சகல சேவைகளையும் சதாசாரியருக்கு கர்த்தா தானென் றெண்ணுமல் செய்யலுற்று கலி ஜனங்கள்மேல் கருணை யுடையவராகி பகவத்கீதையை மஹராஷ்ட்ர பாஷையில் பணித்து, அந்த கிரந்தத்தை ஆசாரியன் சன்னிதியில் வைக்க அவர் ஞானதேவரைப் பார்த்து உன்னுடைய அனுபவார்த்தங்களை இன்னமொரு கிரந்தத்தில் வெளியிடவேண்டுமென, அப்படியே இவரும் அனுபவாமிருதரச மென்றொரு கிரந்தத்தை இயற்றி ஆசாரிய ரெதிரிலிட, அவரு மதிலடங்கிய பொருள்களைக் கண்டு ஆனந்தத்தை யடைந்தனர். பிரவிருத்தி லக்ஷணங்களி லடிபடும்

ஜனங்களுக்கு அது பிரபத்தி நிஷ்டையைத் தெரிவிப்பதும் அகங் காரத்தை யுடையோருக்கு அதிக பயத்தை கொடுக்குமதும் அகங் காரந்தை யணைத்தவர்களுக்கு அதிக சுகத்தைக் கொடுக்கத்தக்க கிரந்தமாகும். பின்பு அந்நால்வரும் அரசனிடம் விடைபெற்று ஹரிநாமஸ்மரணை யுடன் வழிநடந்து செல்ல, தங்கள் கூடயிருந்த எருமைக்கிடா நாளபியென்று மரணியத்தில் பிராணனைவிட்டது. கூடயிருந்தவர்களோர் பெரிய பள்ளத்தை நோண்டி சமாதி செய்து அவ்விடத்திலோர் சிலையை ஸ்தாபித்து சிந்தூரத்தைப்பூசி, "மசோபா" யென்று பேர் வைத்தார்கள். பின்பு வழிநடந்து அளகாபுரியைச் சமீபிக்க அவ்விடத்திய பிரஜைக ளனைவருங்கூடி எதிர்க்கொண்டுவந்து மேன்மையுடன் கொண்டாடி இந் நால்வரு டைய மஹிமைகளை கேட்டு தம்முடைய வீடுகளில் சேர்த்துக் கொண்டார்கள். பிரதிஷ்டானி பட்டணத்தில் பிராம்மணர்கள் கொடுத்த பத்திரிகையை அவர்களுக்குக் கொடுக்க அவர்கள் ஞானதேவர் முதலானோருக்கு நமஸ்கரித்து மன்னித்தார்கள். ஹரி குண கீர்த்தனையை அவ்விடத்தி லனுதினமும் செய்துவர சகல ஜனங்களும் பக்தி பிரேமையைச் சார்ந்திருந்தனர்.

## விசோபாசாடி.

விசோபா சாடியென்றொரு பிராம்மணன் அவ்வூரில் வாசமா யிருந்தான். அவ னெப்போதும் ஞானதேவ் முதலானோருக்கு விரோதத்தைப் பாராட்டிக் கொண்டிருப்பன். ஒருவருஷம் தீபாவளி பண்டிகைக்கு பிட்டுசெய்து பெருமானுக்கு பிரஸாத மிடவேண்டுமென்று நிவிருத்திநாதர் முக்தாபாயிக்கு கட்டளையிட் டார். அம்மாது புதுசட்டி வேண்டுமென்று குயவன் வீட்டிற்குச் சென்றாள். அவ்வேளையில் விசோபாசாடி அவ்விடம் வந்து எங்கு செல்கிறு யென்று கேட்டான். அவள் குயவன் வீட்டுக்கு ஓர் சட் டிக்காகப் போகிறே னென்றாள். சன்னியாசியின் சந்ததியான உங்களுக்கு ஜாதியில்லையென்றும் உங்களுக்கு மண்பாத்திரமும் கிடைக்கமாட்டாதென்று அவன் சொல்லி அவளை தன் கையினு லடித்துக் குயவனைக் கண்டு முக்தாபாயிக்கு நீ பாண்டத்தைக் கொடுக்கக்கூடாது, கொடுத்தாயாகில் நீ யெனக்குக் கொடுக்க வேண்டிய கடனை யிப்போதே கொடுக்கச்சொல்லி கேட்பேனென் று சொல்லிப் போய்விட்டான். முக்தாபாயி குயவன் வீட்டுக் கழு

துக்கொண்டு சென்று ஓர் பாத்திரங் கொடுக்கச்சொல்லி கேட்க அவன் பாத்திரந் தன்னிட மில்லையென்று சொல்லிவிட்டான். அம்மாது திரும்பி அழுதுக்கொண்டே வீடு வந்து சேர்ந்தாள். அவ்வேளையில் ஞானதேவர் வந்து முக்தாபாயியை நோக்கி சோகமடைய காரணமென்னவென்று கேட்க அவள் நடந்த சங்கதியை அறிவித்தாள். அப்போ தவர் தன் முதுகின்மேல் பிட்டு செய்யலாமென்று யோகாக்கினியைக் கிளப்பி கண்களிலும் மூக்கிலும் ஜ்வாலைகளை வரக்காட்டி கவிழ்ந்துப் படுத்துக்கொண்டு தன் முதுகின்மேல் முக்தாபாயியைப் பிட்டுகளைச் செய்யச் சொன்னார். நல்லதென் றந்தமாது தனக்கு வேண்டிய பிட்டைச் சமைத்துக் கொள்ள ஞானதேவர் தமது யோகாக்கினியைத் தணித்துவிட்டார். பின்பு நிவிருத்திநாத ரெழுந்தருளவே அப்பதார்த்தத்தை பெருமாளுக் கர்ப்பணஞ் செய்து நால்வரும் சாப்பிட்டுக்கொண்டிருந்தனர். விசோபாசாடி வெளியிலிருந்து இந்த விந்தையை தான் பார்த்துக்கொண்டிருந்து அநுதாப முடையவனாகி ஹரி! ஹரி! என்னபாபஞ் செய்தேனென்று ஞானதேவரிடம் வந்து அடியேன் சரணாகதியானேனென்று தெண்டனிட்டுப் பிரசாதத்தைக் கேட்க ஞானதேவர் கடினச்சொல்லாக அடா! "கேசரனே" என்ன அவன் உணர்ச்சியுடையவனாய் பலாத்காரமாக அவர் பிரசாதத்தை யெடுத்து பக்ஷித்து உம்மையன்றி அடியேனுக்கு வேறுகதி யில்லையென்று கால்களைப் பிடித்துக்கொண்டு சரணமென்று சொல்ல லுற்றான். அப்பொழுது ஞானதேவர் தன் கிருபா திருஷ்டியால் பார்த்தவளவில் கிருதார்த்தனாகி அபாரஞானத்தை யுடையவனாய், விசோபாசாடி யென்னும் நாமத்தைவிட்டு விசோபாகேசர னெனும் நாமத்தை வகித்தான். ஞானதேவர் செய்த மகிமைகளை உலகத்தாருக்கு பிரஸித்தமாகவே அனேகர் வந்து அவரைச் சேவித்துக்கொண்டு போவார்கள்.

கோதாவரி தீரத்தில் சாங்கதேவனெனு மோர் யோகீசுவர னிருந்தான். அவன் புரந்தரனுடைய அம்சத்தினால் பிறந்து ஆயிரத்து நானூறுவருஷம் சமாதி சாதனத்தி லிருந்தான். அவன் ஞானதேவருடைய மகத்தான மகிமைகளைக் கேட்டுத் தானும் ஞானத்தை யடையவேண்டு மென்னும் கருத்துடையவனாய் சிஷ்யரி லொருவனை யழைத்து பத்திரிகை யெழுதியனுப்ப யோசித்து

காகிதத்தைக் கையிலேந்திக்கொண்டு ஞானதேவருக்கு வர்ணனை "சிரஞ்சீவி" யென் றெழுதினல் தானவருக்கு சிஷ்யனுகுஞ் செய லொவ்வாதென்றும், தீர்த்தரூபரென் றெழுதினல் தான் மூற்றூ ணயிருத்தலாலும் ஒன்றுந் தோன்ருமல் கடிதத்திலொன்று மெழு தாமல் மடித்து சிஷ்யனுக்குக் கொடுத்து அளகாபுரியில் ஞான தேவர் கையிற் கொடுக்கச்சொல்ல, அவனும் அவ்வாறே சென்று சாங்கதேவன் சீட்டனுப்பினனென்று ஞானதேவர் கையிற்கொ டுக்க அவரதைத் திறந்துபார்த்து வெருங் காகிதமாக விருந்த தைக்கண்டு விசேஷகாலம் வியர்த்தமாக இந்த விபூதியிலிருந்தா னே! சித்திகளெத்தனை யுடைத்தாயினு மாத்ம பிராப்தியைக்கொ டுக்காவே! என்றெண்ணி கடுதாசியைக் கையிலேந்திக்கொண்டு கருணையுடன் பத்திரிகையை யெழுதினர். அதாவது, பரப்பிரம்ம மே பரிபூரணமாய் விளங்காநின்றதென்பது பிரசித்தமன்றோ? சைதன்னியத்திற்கு சிறியவன் பெரியனெனும் குறிப்புகள் கிடை யாது, அதனை இவ்வள வவ்வளவென்றுஞ் சொல்லப்போகாது, மேகமற்ற வாகாயங் கண்களுக்கோர் கரைகாணு திருப்பதுபோல பரமாத்மா சதோதயமாய் ஞானஸ்வரூபராய் ஆனந்த சொரூப ராய் விளங்குவர். இத்தன்மையான வவரை அவித்தையும் மாயையும் அறியவொட்டாமற் செய்தபடியால் ஜீவனுக்குப் பிர மை பெருக்காச்சுது. விஸ்வபீஜமாயிருக்கும் வஸ்து உம்மிடத் திலேயே இருக்கிறது. சுதந்திரத்தைவிட்டு விவேக வழியால் பார்க்கக் கடவீரென்று பத்திரமெழுதி அம் மனிதனிடங்கொடுத் தார். அவனு மதைக் கொண்டுவந்து சாங்கதேவரிடங் கொடுத் தான். அந்தப் பத்திரிகையி லடங்கிய சங்கதிகளைக்காணப் பரதத் துவபாவனை மனதிற்பட்டு ஞானதேவரைச் சேவிக்கவேண்டுமெ ன்று ஒரு புலியின்மீதேறிப் பாம்பை சவுக்காகப் பிடித்துக்கொண் டு அளகாபுரிச் சமீபத்திற்குவந்து ஒரு சிஷ்யனைத் தான் வந்த சங் கதியறிவிக்க ஞானதேவரிட மனுப்பினன். அம்மனிதன் வரும் சமயத்திலோர் குட்டிச்சுவரின்மேல் ஞானதேவ ருட்கார்ந்திருந் தார். சாங்கதேவன் வந்தானென் றவன் சொன்னதே ஓஹோ? யோகி சிரேஷ்டன் வந்தானோ! வென் றுசொல்லி சுவரைக்கண்டு யோகி சிரேஷ்டனுக்காக நீ யெதிர்க்கொண்டு செல்லக் கடவை யென் றுக்ஞாபிக்க அந்தச்சுவர் சாங்கதேவரிடம் வேகத்துடன்

சென்றது. குட்டிச்சுவர் மேலவர் வருவதைச் சாங்கதேவன் கண்டு வெட்கமுற்று அசேதனமான சுவரை நடப்பித்த மஹானுபாவர் முன்பு சேதனமான புலியை நடத்திவைப்பது சிலாக்கியமல்லவென்று அவ்வாகனத்தினின் றிறங்கி சாஷ்டாங்கமாகத் தெண்டஞ் சமர்ப்பிக்க, ஞானதேவர் சுவரை விட்டிறங்கி அவனை யெழுப்பி இவ்விருவரு மங்கோர் வடவிருக்ஷத்தி னடியிலுட்கார்ந்து வெகு நேரம் வார்த்தையாடி ஞானதேவர் வீட்டிற் கழைத்து வந்தார். அப்பொழுது வீட்டில் முக்தாபாயி ஸ்நானம் செய்துகொண்டிருந்தாள். அதைக்கண்டு சாங்கதேவன் திரும்பிப்போக, அம்மாது, காய்க்கத்தகுந்த செடியாயிருந்து மிம்மட்டுங் காயாமரம்போல் குருவைக் காணுதிருந்தையே! யென்றாள். இதனைக்கேட்டு சாங்கதேவன் முக்தாபாயி சமீபத்திற் சென்றுக் கும்பிட்டு தாயே! உமக்கெப்படி இது தெரியப்பட்டதென்று கேட்டான். அவள் சொல்லுவாள், நான் ஸ்நானஞ் செய்யும் சமயத்தில் நீ வந்து திரும்பிவிட்டாயன்றே? ஆசாரியாஸ்ரயணத்தை யடைந்திருந்தாயானல் விகிருதியின் விகாரத்தை நீ காணுயன்றே? பசுக்கூட்டங்கள் காடுகளில் பலவாருகச் சஞ்சரிக்கும், அவைகளுக்கு வஸ்திராச்சாதனை யில்லாதிருக்கினும் அவை விகாரங்களொன்றுமறியா. அப்படியே நானும் பசு சமான்மென்று பார்க்காதிருந்தாய் அதனுல் ஆத்மலக்ஷ்யமுனக் கிருக்கவில்லையென்றறிந்தேனென்றாள். யோகீஸ்வர னிந்த வாக்கியங்களைக் கேட்டு ஞானதேவருடைய திருவடிகளில் விழுந்து நமஸ்கரிக்க அவர் கிருபா கடாக்ஷத்தால் அவன் சிரசின்மேல் தனது அஸ்தத்தை வைத்து அபார கருணையுடன் தாரக மந்திரத்தை அவனுக் குபதேசித்தார். பிறகு சாங்கதேவன் ஆத்மலக்ஷ்யத்தில் நின்று பகவதனுபவத்தைப்பெற்று பிரபத்தி நிஷ்டையில் நின்றவனாய் விஸ்ராந்தியுடையவனானன்.

ஞானதேவர் தனது கருணையினல் கலி ஜனங்களுக்கு ஹரி பக்தியை யுண்டாக்கி பண்டரி யாத்திரை சென்று பாண்டுரங்கரைச் சேவித்து நாமதேவருடன் கூடி நாட்டினிலுள்ள சகல தீர்த்தங்களையுந் திவ்விய தேசங்களையுஞ் சேவித்து ஹரி குணனுவாதத்தை யபாரமாகச் செய்து ஜகத்தை உத்தரித்து விளங்கினர். இச்சரித்திரத்தை வாசித்தோரும் கேட்போரும் இகபர சுகங்களை யடைவார்கள்.

## கூர்மதாஸர் சரித்திரம்.

பைடன் என்று பேர் விளங்கின பட்டணத்தில் பிராம்மண தம்பதிகளுக்கு கை கால்களில்லாத ஓர் பிள்ளை பிறந்தது. தாய் தந்தைகள் தரித்திர தசையால் தடுமாறிக்கொண்டிருந்தும் அக்குழந்தைக்கு கூர்மதாஸனென்று நாமஞ்சாற்றி வளர்த்து வந்தனர். அப்பிள்ளை வளர வளர அவருக்குப் பகவத் பக்தியும் வளர்ந்துக்கொண்டு வந்தது. தகுந்த வயதில் தாய் தந்தைகள் உபநயன கர்மத்தை நடத்தினார்கள். அங்கஹீனராயிருந்தும் ஹரி நாமத்தை அனுஷ்டித்து வருவதால் பட்டணத்து ஜனங்க ளவருக்கு போஜனத்தை நடப்பித்துக்கொண்டு வருவார்கள். சிலகாலஞ் சென்ற பிறகு சிலஹரிதாஸர்கள் பண்டரீ யாத்திரைக்குப் போய்க்கொண்டு வழியி லப்பட்டணத்தி லிறங்கி கூர்மதாஸ ரிருந்த வீட்டுக்கருகில் பஜனை செய்து பாண்டுரங்கருடைய மகிமையைப் பாடிக்கொண்டிருந்தார்கள், இதைக்கேட்டு கூர்மதாசருக்கு பெருமாள் விஷயத்தில் பிரீதி மேனு மேலும் ஜனித்து பண்டரீபுரத்திற்குத் தான் போக வுத்தேசித்து அந்த ஹரிதாஸர்களைக் கண்டு ஸ்வாமிகளே! அடியேனு மவ்விடம் வருகிறே னென்ன! அவர்கள் சொல்லுவார்கள், ஐயா! வுமக்குச் கைகால் களில்லையே! விசேஷ திரவியமும்மிட மிருந்தா லதைக்கொண்டு விடோபாமூர்த்தியை நீர் சேவிக்கலாம், அதுவுமில்லையா தலா லவரதுசேவை லபிப்ப தருமையென்று சொல்லிப் போய்விட்டார்கள். கூர்மதாஸ ரவ்வசனங்களைக் கேட்டு கிலேசமுற்று தனக்குள் எண்ணத் தொடங்கினர், அனேக யோனிகளிலே திரிந்து திரிந்து இந்தமானிட ஜன்ம மருமையாகக் கிடைத்ததன்றோ! இப்பொழுது பண்டரிபுரத்திற்குப் போகாவிடில் புண்ணியம் விளையாது, நரகத்தையே அனுபவிக்கவேண்டி வரும், தருணோபாயம் தப்பிவிட்டால் கரையேறு மார்க்கத்தைக் காணேனென்று கூர்மதாஸர் நகர்ந்துக்கொண்டு கோசுதூரம்வரையிற்போக அஸ்தமானமாய் விட்டது. ஆயாஸத்துடன் செல்ல, அவ்விட மொரு ஆஞ்சனேயர் கோவிலைக்கண்டு பசிதாகங்களால் பரிதபித்துக்கொண்டு பாண்டுரங்கா! பதிதபாவனா! பரந்தாமா! பக்தவத்சலா! கிருஷ்ணா! கேசவா! முகுந்தா! கோவிந்தா! ஹரீ! போக்கற்று தேவரீருடைய பாதங்களைப்பிடிக்க விரும்பினேன். பூரணதயை யுடையவரே! தகப்பனும் நீரே! தாயு



కూర్మదాసుడు.
கூர்மதாசர்.

సావతా మాలి.
சாவதாமாலி.

గోరా కుమ్మరి.
கோரா குயவர்.

நீரே தெய்வமும் நீரேயென்று பிரார்த்திக்க பெருமாளோர் விப்ர வேஷத்தைக் கொண்டு வர்த்தகரைப்போல அவ்விடம் வந்து, ஐயா! நீரெவ்விடம் போகிறீர்? பெயரென்ன? ஊரென்ன? வென்று கேட்க, பக்தன் அக்கேள்விகளுக் குத்தரஞ் சாற்றியபிறகு பெருமாள் நன்றாயிற்று, எனக்குந் துணை நேர்ந்ததென்று தெரிவிக்கக், கூர்மதாஸ ரவரைக் கண்டு ஐயா! கை காலுடைய வுமக்கும் அவையில்லா தவெனக்கும் பொருந்துத லெப்படி யமையும்? உமது பேரென்னவென்று கேட்க, பகவான் சொல்லுவார், அபாரமான திரவியத்தை ஆர்ஜித்து கொடுக்கல் வாங்கலான வியாபாரஞ் செய்துக்கொண்டு ஊருக்கொரு நாள் சஞ்சரித்து ஒரு கோசு தூரமே நடந்துக்கொண்டு பரப்பிரயோஜனமாக ஏழைகளான வழிப்போக்கருக்குப் பசிதாகங்களைப் போக்கி பெரியதானகடை பண்டரீபுரியில் வைத்து மெதுவாக வழி நடந்து மேன்மையாக வியாபாரஞ் செய்துக்கொண்டு பண்டரீபுரத்திறகுப் போவதும் வருவதுமாக விருப்பேன், என் பெயர் கிஸ்தி விடோபாவென்று சொல்லுவார்கள் உன்னுடைய சகவாசமு மெனக்குச் செம்மையாக நேர்ந்தது, பண்டரீபுரத்தில் பிரபலரான பக்தர்கள் பெருமாளுடைய திருநாமத்தைக் கொண்டாடி கூத்தாடுவார்கள், நிறைந்த அன்புடன் நீரவ்விடம் போகிறீ ராதலால் நிஜமாகியசாதன மமையுமென்று சொல்லித் தானே சமையல் செய்து அவருக்கு வூட்டி நீரைக் குடிக்கச்செய்ய அவர் நித்திரை யடைந்தார். மறுநா ளுதயமானவுடன் மார்க்கத்தைக் காண்பித்து மறைந்தருளினர்.

இவ்விதமாக கூர்மதாஸர் ஒரு கோசுதூரம் ஒவ்வொருநாள் நடக்கப் பெருமா ளவருக்கு வர்த்தகரூபியாய் பிரீதியுடன் சேவை செய்து வருவர். காடுகளிலுங் கிராமங்களை யிவருக்காக வேற்படுத்தி லஹூள் என்னும் கிராமம் வரையிற் சேர்த்தருளினர். அவ்வூர் பண்டரீபுரத்திற்கு ஏழு கோசு தூரத்திலிருப்பது. அனேக பாகவதர்கள் கும்பு கும்பாக பண்டரிக்குப் போய்க்கொண்டிருந்தனர். கூர்மதாஸ ரவர்களைக் கண்டு எவ்விடஞ் செல்லுகிறீரென? அவர்கள் பண்டரீபுரத்திற்கென்று சொல்ல, அவ்விடத்தி லின்றைக்கென்ன விசேஷமென, அவர்களிது கார்த்திகை சுத்த ஏகாதசி உச்சவமென்றும், அன்றையதினம் ஹரி பாண்டுரங்கரைச் சேவித்தால் பிராணிகோடிகள் பரமபதத்தை யடைவார்க ளென்றார்

கள். இவ்வசனங்களைக் கூர்மதாஸர் கேட்டு, என்ன செய்வேன்? பொழுது விடியுமுன் னவ்விடம் போவதற் கெப்படி முடியும்? ஓ பண்டரிநாதா! பாதங்களற்ற நானெப்படி பாதை நடப்பேன், அன்பு மேற்கொண்டு ஹரி பாண்டுரங்கரை அவ்விடத்திற் கழைக்க வெண்ணி அந்த பாகவதர் மூலமாக பாண்டுரங்கருக்கு நிருபத்தைச் சொல்லி யனுப்பினார். அதாவது, ஓ பராத்பரரே! ஸ்ரீ பாண்டு ரங்கரே! வெகுதூரத்திலிருக்கும் பைடன் புரத்திலிருந்து "லகுள்" என்னும் கிராமத்திற்கு வெகு பிரயாசைப்பட்டு வந்தேன். கைகால் களில்லாமலே பிறந்தே னுதலால் நான் உம்மிடம் நடந்துவருவதற்கு ஏழு நாள் செல்லும், உம்மை நாளையதினஞ் சேவிக்கவேண்டு மாதலால் ஓ கருணைக்கடலே! நீ ரிதுவரைக்கும் வந்து கண்காக்ஷியாக தரிசனந் தந்தருள வேண்டுமென்று சொல்லி யனுப்ப, அந்த பாகவதர்கள் பாண்டுரங்கர் கோவிலைச் சேர்ந்து ஹரி! கோவிந்தா! அச்சுதா! கிருஷ்ணு! வென்று சொல்லிக்கொண்டு ஆலயத்தை வலம் வந்து கிராம பிரதக்ஷணமும் வந்து மஹா மண்டபத்தில் நாமதேவ் முதலான அனைவரும் பாண்டுரங்கர் மகிமையைச் சொல்லிக்கொண்டு, மாதவா! கிருஷ்ணு! முராரி! அச்சுதா! மதுசூதனு! ஸ்ரீதரா! கேசவா! முகுந்தா! நரஹரி! கோவிந்தா! வென்று பிரேமையுடன் நாமோச்சாரணை செய்துக்கொண்டிருக்க, பகவானும் பக்தர்களைக் கருணையுடன் கண்டுகொண்டிருக்க, அத்தருணத்தில் கூர்மதாசருடைய நிருபத்தைக் கொண்டுவந்த பாகவதர்கள் வந்து பெருமாள் சரணங்களின்மேல் சிரங்களை வைத்து அவரை ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு அவர் திருமுக மண்டலத்தைப் பார்த்த மாத்திரத்தி லானந்தத்தை யடைந்து, ஸ்வாமி! தேவரீருடைய திருமுகத்தைப் பார்த்தவளவில் ஜனங்களுக்கு தாபங்க ளனைத்துந் தீர்ந்துவிடும். பாவத்திற் கெட்டாத பிரமசுகமவர்களுக்கு மறப்பின்றி தோன்றுமென்று அந்த பாகவதர்கள் தோத்திரஞ் செய்து கூர்மதாஸருடைய நிருபத்தை கூறினார்கள். அதைக் கேட்டமாத்திரத்தில் பாண்டுரங்க ரெழுந்திருந்து நாமதேவரையும் ஞானதேவரையும் கூட அழைத்துக்கொண்டு தன் மனதிலிருந்ததை யவர்களுக்குச் சொல்லி பக்தரான கூர்மதாசரைப் பார்க்கும் பொருட்டு மூவரும் பாதசாரிகளாக நடந்தார்கள்.

## சாவதா மாலீ (தோட்டக்காரன்).

பாண்டுரங்கருடன் நாமதேவரும் ஞானதேவரும் வர, மார்க்கத்திலோர் தோட்டத்தைக்கண்டு பெருமாள் தாகசாந்தி பண்ணிக்கொண்டு வருவதாகச்சொல்லி அவ்விரண்டு பேரையும் வெளியே நிறுத்தித் தானொருவராய்த் தோட்டத்திற்குள் பிரவேசித்தார். அவ்விடத்தில் சாவதா யென்னும் மாலி தன் மனதில் பண்டரிநாதரை நிறுத்திக்கொண்டு சிதராமல் வெளிநோக்க மில்லாமல் பரவச மடைந்திருந்தான். பெருமாள் தன் கைகளா லவன் தலையைத் தீண்டினவுடன் வெளிநோக்கங் கொண்டு கண்களை மெதுவாகத் திறந்து பார்க்குமளவில் சியாமளசுந்தர சுகுமாரரும் திருத்துழாய் மாலையையுங் கிரீடமும் வனமாலையு முடையராய் திருமேனி காந்தி திக்குகளிற் ஜொலிக்க பிரசன்னராகி நின்றனர். சாவதாமாலி அம் மூர்த்தியைக் கண்டு பரம சுகத்தை யடைந்து சரணங்களை யர்ச்சிக்கிறேனென, பகவான் சொல்லுவார், பூஜையை நானடைவதற்கிது சமயமல்ல, இரண்டுபேர் திருடர்க ளென்பின் வந்திருக்கிறார்கள், என்னை யுசிதமான ஸ்தலத்தி லொளித்து வைக்கக்கடவையென்று சொல்ல, சாவதாமாலி இதனைக்கேட்டு ஸ்வாமீ! தேவரீர் சர்வவியாபியாயிருக்க உம்மை யென்னிடம் ஒளிப்பதற் கிடங்காணேன், காற்றைப் பஞ்சரத்தி லடக்கலாமோ? வென் றுணர்த்த, பாண்டுரங்கர் சொல்லுவார். அப்பா! இப்போது பிரமஞானம் பயன்படாது உசிதமான யிடத்தி லொளித்துவையுமென்றார். இதைக் கேட்டு சாவதாமாலி கட்கத்தை கையிலேந்தித் தன் வயிற்றைக் கிழி இருதய குகையிலிருக்கக் கடவீரென்றார். உடனே பெருமா ளதற்குள் பிரவேசித்தனர். அப்பொழுது பக்தன் சமரசமாக வயிற்றின்மீது வஸ்திரத்தைச் சுத்தி விசேஷப்பிரீதியுடன் உள்ளிருக்கிறவரை உத்தேசித்து ஓ விட்டல மூர்த்தியே! உம்மை விலயகாலம் வரைக்கும் விடமாட்டேனென்ன, பகவான் சொல்லுவார், ஓய் மாலீ! நீ நிஜமாகி உடம்பை அறுத்து ஒதுங்க விடங்கொடுத்தாய் உன்னுபகாரத்திற்கு பிரதியுபகார மொன்று மிவ்விடத்தில் காண்கிலேன், இது உண்மையென் றிவ்வண்ணம் பக்தரும் பாண்டுரங்கரும் பரமானந்த மடைந்து ஒருவருக் கொருவர் பேசிக்கொண் டிருந்தனர். இதற்கு திருஷ்டாந்தமாக கோபிகை யொருத்தி தயிரை விற்றுக் கொண்டு கோகுலத்தி லிருக்குங்காலத்தில் தலைமேல் தயிர்ப்பா

னையை வைத்துக்கொண்டு "தயிரோ! தயிரென்று சென்றவள் கிருஷ்ணா! தாமோதரா! வென்று ஹரி தியானத்தால் பரவசமாகி கூறிக்கொண்டு சென்றனள். தயிரு வாங்குகிறவளொருத்தி அவளை யழைத்து கிருஷ்ணனைக் காண்பிக்கச்சொல்லிக் கேட்டாள். அவள் கூடையை இறக்கி பானையைத் திறந்தமாத்திரத்தில் அப்பானையிலிருந்து கிருஷ்ணன் வெளிவந்தார். அப்பொழுது கோகுலத்திலிருந்த ஜனங்க ளனைவரும் ஆச்சரியப்பட்டார்கள். அற்புத காரியங்கள்செய்யும் அகிலேஸ்வரனுக்கு பக்தன் வயிற்றில் பதுங்கியிருப்பதுபெரியதல்ல.

தோட்டத்திற்கு வெளியேயிருந்த நாமதேவர் பெருமாள் வெகுநேரமாய் வாராதிருப்பதைக்கண்டு பெருத்த துக்கமடைந்து, போனவ ரின்னம் வரவில்லையே! தோட்டத்திற்குள் பெருமாளுக் கேதோ தொந்தரவு நேர்ந்ததுபோ லிருக்கிறதென்று அடிக்கடி துக்கித்துக்கொண்டு கலவரமுடையவராய் வனத்திற்குட் சென்று வெகுவாகத் தேடினர். அவ்விடத்தி லகப்படவில்லை. சாவதாமாலி ஆங்குட்கார்ந் திருக்கக்கண்டு அவர் திருவடிகளை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு ஐயா! கோவிந்தரை கண்ணாரப் பார்க்கச் செய்யவுமென்று அபாரப்பிரேமையுட னழுதுக்கொண்டிருக்க, சாவதாமாலியானவர் பகவதனுபவத்தி லீடுபட்டவராகி தேகபாவனை யற்றிருந்தார். அவருடைய திருமுக மண்டல காந்தியும் பூர்ணகளையும் பார்த்து இவருக்குள் பாண்டுரங்கர் அனுவர்த்தராகி வீற்றிருக்கிறரென்று நாமதேவ ரறிந்துக்கொண்டு ஹரிசிந்தனையைச் செய்து ஓ பரமபுருஷரான பாண்டுரங்கரே! அடியேனிடத்திற் கருணைபாரும், இந்த சாவதா மாலியினிடம் திருப்தியுடனிருக்க உமக் கெப்படி யிஷ்டமாயிற்றோ? தேவரீரைத் தன்னுள் வைத்துக்கொள்ள இந்த சாவதா என்ன நோன்பு நோற்றரோ? வென்று சொல்லி ஓ கிருஷ்ணா! துவாரகா வாசா! ஸ்ரீ ஹரி! சுந்தரமான தேவரீர் திருமுகமண்டலத்தைக் காண்பியும், பவளம்போன்ற வாயினால் சம்பாஷணை செய்தருளுமென்று தைனியத்தை வகித்து வேண்ட, பகவான் சாவதாமாலி வயிற்றினின்றும் சொல்லுவார்! ஓ சாவதா! உவமையற்ற பிரேமையால் நாமதேவன் விலாபிக்கிறுனதலால் நான் வெளியில் வரும்படி வயிற்றின்மேற் கட்டை விடுவியு மென்றனர். இவ்வார்த்தைகளைச் சாவ

தாமாலிகேட்டு நாமதேவரைக்கண்டு பாண்டுரங்கர் பிரபலமான பிரேமையை உம்மிடத்தில் வைத்திருக்கிறார். இப்போதே தரிசனங் கொடுத்து உன் அபேக்ஷிதத்தை நிறைவேற்றுவார். பூர்வஜன்மத்தில் விசேஷமான புண்ணியங்களைச் செய்தீர், இது அதினுடைய பலமல்லவா? என்று சொல்லி தன்வயிற்றின்மேற் கட்டியிருந்த வஸ்திரத்தை அவிழ்த்தார். உடனே பாண்டுரங்கர் நாமதேவர் காண வெளிவந்தனர். நாமதேவ் ஸ்வாமி திருவடிகளைப் பிடித்திருக்க, அவரை யெழுப்பி பெருமாள் தன் பீதாம்பரத்தா லவரது கண்ணீரைத் துடைத்து இவ்வளவு விசனத்தையே னடைந்தாயென்ன, நாமதேவர் சொல்லுவார், ஸ்வாமி! நானென்ன செய்வேன் தேவரீர் திருமுக மண்டலத்தை அடியேன் பார்க்காவிடி லிவ்விதமாவ மகா மோஹ முண்டாகின்றதுமன்றி, தேவரீரைக் காணாவிட்டால் மனது தபிக்கிறது, அடியேன் பைத்தியம்பிடித்தவனாய் விடுகிறேன், தாய், தந்தை, பந்துவும் நீரே ஓ ஸர்வேசுவரா! ஹரி! சர்வமும் நீராயிருக்கிறீரென்று சொல்ல, பாண்டுரங்கர் சிரித்துக்கொண்டு ஞானதேவரைப் பார்த்து கூர்மதாஸரிடம் நாம் மூவரும் செல்லுவோமென்று சொல்லிப் பிரயாணமானார். கூர்மதாசருக் கவ்விடம் சுப சகுனங்களாயின. சீக்கிரமாகப் பெருமா ளவ்விடஞ் சென்று தரிசனங் கொடுத்தவுடன் அத்யாசக்தியுடன் கூர்மதாஸர் சரணங்களைப் பிடித்துக்கொண்டு அசித்தைப்போல விழுந்து கிடக்க, கருணாநிதியான் பெருமாள் தன் கைகளா லவரை யெடுத்து வரங்களைக் கேளுங் கொடுப்பேனென்று சொல்ல, இதைக்கேட்டு கூர்மதாஸ ரத்யானந்தத்தை யுடையவராய் யெப்பொழுதுந் தன்னிடத்திலேயே இருக்க அருளவேண்டுமென அப்படியே ஆகக்கடவதென்று கேட்டவரத்தைக் கொடுத்து லஹுளெனும் கிராமத்தில் தனது ரூபத்தை நிலைநிறுத்தினர். ஆஷாட மாசத்திலும் கார்த்திகை மாசத்திலு மவ்விடத்தி லுற்சவ மிப்போதும் நடந்தேறி வருகின்றது! அனேக பிரஜைக ளவ்விடமும் வருகிறார்கள். இது பாவனமான சரித்திரம் கேட்போர் பவித்திர மடைவார்கள்.



## ராகா குயவர் கதை.

திவ்விய தேசங்களிற் சிறந்த பண்டரி புரத்தில் ராகாவென்னும் குயவரொருவர் பங்காவென்னும் மனைவியுடனும் வங்கா

வென்றும் புத்திரியுடனும் வாழ்ந்திருந்தார். அவர் பாண்டுரங்கர் விஷயத்திற் பிரபலமான பக்தியுடையவராய் பகவன் நாமத்தைச் சொல்லிக்கொண்டு தனது குலவிருத்தியில் தருமநெறி தப்பாமல் பாண்டங்களைப் பண்ணி விற்பனைசெய்து அதினால் ஜீவனம் நடத்தி வருவர். ஒருகாலத்தில் பாண்டங்களைச் செய்து தன்வீட்டிலோரிடத்தில் கும்பலாக வைத்திருந்தார். அவைகளிலோர்பானையில் பூனை, குட்டிகளைப் போட்டிருந்தது. தாய்ப்பூனை வெளியில் மேய்ச்சலுக்கு போனவேளையில் பூனைக்குட்டிகளுடன் அந்த பானைகளனைத்தையுஞ் சூளையில் வைத்து நெருப்பிட்டனர். பின்பு தாய்ப்பூனை வந்து தனது குட்டிகளைக் காணுமல் கூச்சலிட்டு துக்கித்து அங்குமிங்குமாக திரிந்துக்கொண்டிருந்தது. இதை ராகாகுபவர் கண்டு குட்டிகளைக் காணுமல் அது கலக்கமுறுகிறதென் றறிந்து தன்னை மறந்து கீழ்விழுந்து சற்று நிதானித்து மனைவியை யழைத்துச் சொல்லுவார், அறியாமல் பூனைக்குட்டிகளை சூளையில் வைத்துவிட்டேன், மகத்தானமோசம் வந்ததே! என்னசெய்வோம்! அபசாரம் நேர்ந்ததென்று சொல்ல, அம்மாது அழுதுக்கொண்டு ஆகா! வென்று அவனிமேல் விழுந்து சதிபுருஷர்க ளிருவரும் ஸ்ரீஹரியைத் தங்களிருதயத்தில் தியானித்து, பதிதபாவனு! பாண்டுரங்கா! பக்தவத்சலா! ஆநந்தகந்தா! ஜகத்குரு! ஸ்ரீபதி! தேவரீர் பாண்டவர்களை அரக்குமாளிகையி லழியவொட்டாமல் காப்பாற்றினீர், பிரகலாதாழ்வானைப் பெருந்தீயிலிருந்து காப்பாற்றினீர், அதைப்போல் இந்தப் பூனைக்குட்டிகளைப் பிழைப்பிப்பது தேவரீருக்கு பெரிய காரியமோ? பண்டரி நாதரே! பரமபுருஷரே! இந்தப் பாபத்தினின்று அடியேனை விடுதலை செய்யவும் ஓ! பரந்தாமரே யென்று பிரார்த்திக்க, மனையாள் தன் புருஷனைப் பார்த்துச் சொல்லுவாள். பிராணநாதரே! பாண்டுரங்கருக்கு பிரார்த்தனையாக ஒரு முடிப்பு கட்டினால் மனோரதம் பலிக்குமென்று சொல்ல, ராகாகுபவர் சொல்லுவார், பூனைக்குட்டிகளைப் பெருமாள் குறைவின்றிக் காப்பாற்றுவாரேல் ஸ்ரீயப்பதிக்குச் சரணமடைந்து சமுசார சம்பந்தத்தை விட்டுவிடுகிறேன், ஸ்வாமீ! ஹிம்சையான இக்கரும மென்னை அணுகவொட்டாமல் இரக்ஷித்தருள வேண்டுமென்று பண்டரி நாதரைப் பக்தியுடன் நினைத்துக்கொண்டு பதிசதிக ளிருவரும் அன்னபானங்களை விட்டு அவ்விடம் மூன்று நாள் கிடந்திருந்தார்

கள். பின்பு அந்த சூளையிலுள்ள அக்கினி அணைந்தது. அதி லிருந்த பாண்டங்க ளனைத்தையும் ஒவ்வொன்ருக எடுத்து வைக் குமளவில் அந்த தாய்ப்பூனையான து அமிதமாக கூச்சலிட்டுக் கொண்டு அவ்விடந் திரிய, பரமபுருஷனுடைய கிருபையால் அப்பூனைக்குட்டிகளும் கூச்சலிட்டன. அதை அந்த தாய்ப்பூனை க்கேட்டு ஓட்டமிட்டுக் குதித்துக் குட்டிகளுடன் சேர்ந்தது. அப்போ தந்த விஷ்ணுபக்தர் தன் மனைவியைப்பார்த்து பெண் ணே! நாம் ஸ்ரீஹரிகருணையை யடைந்தோம், ஆனந்த மாயிற்று, பிரார்த்தனை கைக்கூடி வந்தது, இனி நாம் சமுசாரத்தை விட்டு விடவேண்டுமென்று சொல்லி, வீட்டிலிருக்கும் சகல பதார்த்தங் களையும் பிராம்மண ஜனங்களுக்குச் சந்தோஷத்துடன் பங்கிட்டு தனது தொழிலையும் விட்டு கௌபீனத்தைத் தரித்து சதியுந்தானு மாக ஸர்வேஸ்வரனுக்குச் சரணமடைந்து காட்டிற்சென்று காஷ் டங்களைப் பொருக்கி தலையின்மீது வைத்துக்கொண்டு கடைவீதி யி லதனை விற்று அதனுல் வந்தத் திரவியத்தைக் கொண்டு தமது ஜீவனத்தை நடத்திக்கொண்டு ஸ்ரீஹரியைச் சிந்தித்து அவருடைய ஸ்மரணையை மறவாமல் காலங்கழித்து வருவார்கள். இந்த தசை யிலும் அதிதிவந்தால் அவர் சத்கரித்துக் கொண்டிருப்பர். தை யற்காரர் தெருவுகளில் தான் கட்டும் கௌபீனத்திற்குத் துண்டு வஸ்திரங்களைத் தேடிக்கொண்டிருப்பர். அதைக்கண்டு அத் தை யற்காரர்கள் ஓய் ராகா குயவரே! பூனைக்குட்டிகளுக்காகச் சமு சாரத்தை விட்டு இப்படி யேன் வீதிகளிலிருக்கும் வஸ்திரத் துண்டு களைப் பொருக்குகிறீ ரென்ருர்கள். இதைக் கேட்டு நல்லவார்த் தை யென்றெண்ணி பிராம்மணர் சாப்பிட்ட எச்சிலிலைகளை யப் போது கௌபீனமாகத் தரிக்கலுற்ருர். இவ்விதமாக அதிக விரக் தியுடன் காந்தனும் மனைவியும் காலயாபனஞ் செய்ய, பாண்டு ரங்க மூர்த்தி அவர்களைப் பரமகிருபையுடன் பாதுகாத்துக்கொ ண்டு வருவார்.

ஒருநாளவருடைய குமாரத்தி ஆற்றிற்குச் சென்று ஸ்நா னஞ் செய்துக்கொண் டிரு [illegible] அவ்வேளையில் நாமதேவர் குமாரத்தி அவ்விடம் வர் [illegible] திரங்களை தோய்த்துக்கொண் டிருந்தாள். அதினுற் சி[illegible]லத்துளிகள் ஸ்நானஞ் செய்துக் கொண்டிருககு மப்பெ[illegible]பட்டன. அதனு லப்பெண் நாம

தேவர் புத்திரியைப் பார்த்து அம்மே! கொஞ்சம் நிதானித்துத் தோய்க்கக்கடவை, என்னுடைய மானஸ பூஜையை முடித்துக் கொண்டபிறகு வஸ்திரத்தை நீ தோய்க்கலாமென்றாள். அதைக்கேட்டு நாமதேவ் குமார்த்தி சொல்லுவாள், நீ புண்ணியவதியோ! குயவர்களுடைய குலத்தில் சீலமென்ன இருக்கிறது? உன் தகப்பன் பூனைக்குட்டிகளுக்காகச் சமுசாரத்தை விட்டானல்லவா? அது காம்மிய பக்தியன்றோ? வீணில் கமலக் கண்ணருக்குக் கஷ்டத்தைக் கொடுத்தானென்று சொல்ல, அக்குயப்பெண் சொல்லுவாள், அம்மே! ஹரி விக்கிரகத்திற் கன்னமிட்டுச் சாப்பிடும்படி உன் பிதா செய்தது அவருக்குக் கஷ்டங் கொடுத்தது போலன்றோ? நாங்கள் கமலேசனைச் சிந்தித்துக் காட்டிற் சென்றுக் காஷ்டங்களைக் கொண்டுவந்து அதனை விற்று ஜீவனத்தை நடப்பித்துக் கொண்டு வருவோமென்று சொல்லிப்போகத் தொடங்கினாள். பின்பு நாமதேவ் குமாரத்தி வஸ்திரங்களைத் தோய்த்துக்கொண்டு தன் வீட்டிற்குச் சென்று வங்கா சொன்ன வார்த்தைகளைத் தன் தகப்பனுக்குத் தெரிவித்தாள். இதைக்கேட்டு நாமதேவர் ஹரி சன்னிதிக்குட் சென்று அனேக விதங்களாக பிரீதியுடன் பிரார்த்தித்து வினயத்துடன் சொல்லுவார், ஓ தேவதேவா! ருக்மணிகாந்தா! ராகாகுபவ ரும்மை பக்தியுடன் தொழுதார், ஆனுலது ரக்தியோ, (சகாமமோ) விரக்தியோ (நிஷ்காமமோ) வென்று கேட்க, பகவான் சொல்லுவார், அவன் வைராக்கியத்தில் சிரேஷ்டனாகி விளங்குமவனும், இது உனக்கு காண்பிக்கிறேன் வாவென்று கூட அழைத்துக்கொண்டு ருக்மணி பிராட்டியுடன் ராகாகுபவர் சஞ்சரிக்கும் காட்டிற்குச் சென்றனர். அவ்விடத்தில் ராகா பக்தரும்அவரது மனைவியும் புத்திரியும் இரண்டாம் ஜாமத்திற்குச் சென்று உலர்ந்த விறகுத் துண்டுகளை அங்கங்கு தேடிக்கொண்டு ஓரிடத்திற் சேகரப்படுத்துவதும், இரண்டு சமித்துகள் ஓரிடமிருந்தாலிதரா ளவைகளைச் சேகரப்படுத்தினார்களென்று அவைகளைத் தீண்டாமலும், அவ்வனத்தில் ஜீவ ஹத்தி வருமென்று ஜாக்கிரதையுடன்பூமியைப் பார்த்து நடந்துக்கொண்டிருப்பதும் விறகைக் கட்டாகக்கட்டி தலைமே லெடுத்துக்கொள்ளுவதும், இத்தன்மையாக அம்மூவரும் காட்டிலிருந்தார்கள். இவர்கள் கண்களுக்குக் காணுமல் பெருமாளும் பிராட்டியும் நாமதேவரும் அவர்களுடை

ய செய்கைகளைக் கண்டுக் கொண்டிருந்தார்கள். அவ்வேளையில் நாமதேவர் ருக்மணி பிராட்டியைக் கண்டு தாயே! ஏதாகிலு மிவர்களுக்குக் கொடுத்துப்பார்க்கி லிவர்களுடைய குணங்களைக் காணலாமென்றார். அதைக் கேட்டுப் பிராட்டி சந்தடி செய்யாமல் கையிலிருக்கும் கங்கணத்தைக் கழற்றி அவர்கள் சேர்த்துவைத்த காஷ்டத்தின்மீது வைத்தாள். ராகாகுயவர் கங்கணத்தை யவ்விடம் பார்த்து ஓடிச்சென்று தன் மனையாளை அழைத்து தூரத்தினின்று அதனை காண்பித்து அந்தப்பொருள் நமக்கு மகத்தான விக்கினங்களைக் கொடுக்குமென்று புருஷன் சொல்ல, ஆமென்று அவளுஞ் சம்மதித்து உலகில் நம்மைக் கெடுக்கும் பொருட்டு பெருமாள் சித்திகளைக் காண்பித்தனர். பிரபஞ்ச சம்பந்தமான வஸ்துக்கள் பிரயோஜனத்திற்கு வாராவென்று பாண்டுரங்கருடைய பாதங்களைச் சலனமின்றி சரணடைந்திருக்க இதனைக் காண்பதென்ன வாச்சரியம்? இந்த கங்கணம் நமக்கென்னப் பிரயோஜனமென்று இச்சையை யறுத்துப் போகத் தொடங்கினார்கள். இதைக்கண்டு நாமதேவர் பெருமாளைப் பார்த்து ஸ்வாமி! தேவரீரிவர்களுக்குத் தரிசனந்தந்தருள வேண்டுமென்று வேண்டினார். அப்பொழுது சதுர்ப்புஜங்களுடன் பெருமா ளவ்விடத்திற் பிரகடமானார். அதை ராகாகுயவர் கண்டு பரிமிதியற்ற பிரீதியுடன் அனந்தா! அச்சுதா! ஆதிநாராயணா! கேசவா! கோவிந்தா! முராரியென்று அனேக நாமங்களால் தோத்திரஞ் செய்து அடியேனுடைய நோன்பு இன்று பலித்ததென்று ஆனந்தத்துடன் தெண்டஞ் சமர்ப்பித்து அஞ்சலியஸ்தராய் நின்றார். பெருமாள் பிரீதியுடனவர்களை யாசீர்வதித்து மறைந்தருளினர். பின்பு ராகாபக்தர் பாசமோகங்களற்று பண்டரியி லிரு[illegible]ரைப் பஜித்துக்கொண் டிருந்தார்.



## கோரா குயவ[illegible]திரம்

தர்டோகியெனும் கிராமம் [illegible] புரத்திற்குச் சற்றுதூரத்திலிருக்கும். அதில் கோராயெ[illegible] குயவர் வாசமாயிருந்தனர். அவர் இருக்கும் வேளையிலும் [illegible] வேளையிலும் படுக்கும் வேளையிலும் புசிக்கும் வேளையி[illegible]லகாலங்களிலும் பாண்டுரங்க

ருடைய சிந்தனைச் செய்துக்கொண்டு கிரகஸ்த தருமத்திலிருந்தார். காதுகளாற் கேட்கும்போதும் கண்களாற் பார்க்கும்போதும் இந்திரியங்கள் விஷய விஹாரங்களி லிருக்கும்போதும் எவ்விடத்தும் பரமாத்மாவான ஸ்ரீஹரியையே பார்க்கும் நிஷ்டை அவருக்குநிலை பொருந்தி யிருந்தது. ஒருநாள் அவருடைய மனைவி தனக்கிருந்த ஒரே குழந்தையை வாஸலில் விட்டு தான் கையில் குடத்தைக்கொண்டு ஜலந்திரட்டச் சென்றாள். அவ்வேளையி லந்தயிடத்தில் தகப்பன் பானைகளைச் செய்ப மண்மிதித்துக்கொண்டு பாண்டுரங்கரை பாவத்தி லிருத்திக்கொண்டு வெளிவிருத்திகளை யறியாதவராய் விமலமான ஞானனுபவத்தி னின்றனர். அத்தருணத்தி லக்குழந்தை தவழ்ந்துக்கொண்டு தகப்பன் கால்களிடம் வர அவர் தேகத்தை மறந்து பரமாத்மாவினுடைய வியாபகத் தன்மையில் பாவனையிட்டவராகி அக்குழந்தையை மண்ணுடன் மிதித்து விட்டார். மனையாள் ஜலம் திரட்டிக்கொண்டு வந்து வீட்டில் வைத்து பிரேமை மிகுதியுடன் மைந்தனை பேரிட்டழைத்தனள். பலதர மழைத்தும் காணமல் புருஷனைப்பார்த்து பிராணநாதரே! இவ்விடத்திற் குழந்தையைவிட்டு ஜலத்திற்குச்சென்றேன், திரும்பிவந்துப் பார்க்குமளவி லவனைக் காணமையால் என்மனந் துடிக்கிறதென்று உரக்கக்கூவிச் சொல்லியு மவர் கேட்காதவராகி ஹரிதற்பரராயிருந்தனர். அப்போ தவ்விடத்தில் மண்ணைப் பார்க்குமளவில் மாம்சமும் ரக்தமும் கூடியிருந்தது. இதைக்கண்டு கண்ணீர் விட்டழுது மார்பி லடித்துக்கொண்டு புருஷனை நோக்கி நீர் பிள்ளையை மண்ணில் மிதித்து விட்டீரே! வீட்டைச் சாம்ப்ராக்கினீரே! நான் பிராணனை விடுவேனென்று உரக்கக் கூவிக்கொண்டு அழுதகுரலுடன் சொல்ல, அவர் வெளிநோக்கத்தை யுடையவராய் பெருமாளென் னிருதயத்தில் பேரின்பத்தைக் கொண்டு முகமலர்ச்சியுட னிருந்தனரே! அதை நீ கெடுத்தாயன்றோ? வெனச் சொல்லிக்கொண்டு கோபத்துடன் தன் மனையாளை யடிக்கச் சக்ரதண்டத்தைக் கையிலேந்தினர். இதைக்கண்டு மனைவி பயந்து என்னைத் தீண்டினல் பாண்டு ரங்கர்மேல் ஆணையென்று சொன்னள். இவ்வசனங்களைக் கேட்டு கோராபக்தர் அந்த கட்டையைக் கீழே போட்டுவிட்டு பாண்டுரங்கா! முராரீ! பக்தவரதா! கைவாரா! யென்று பஜனை செய்துக்கொண்டு பற்றின்றி இருந்தனர், உலகத்தோர் பலவாறு

ஷ நிந்தித வாக்கியங்களைச்சொல்லத் தொடங்கினார்கள். அவையொன்றையுந் தான் கேளாமல் மலரகிதமான மனதுடன் மாதவனைக் கொண்டாடிக் கொண்டாடித் தொழுதிருந்தனர். ஒருநாள் தன் மனைவி ஜலத்தைக்கொண்டுவந்து பர்த்தாவின் காலை யலம்ப எத்தனித்தாள். அப்பொழுது கோராபக்தர்தன்னைத் தீண்டக்கூடாதென்று தெரிவித்தார். இதைக்கேட்டு கர்வத்தைவிட்டு இனி சமுசாரத்திற் கென்னசெய்வேனென் றழுதுக்கொண்டு அதிக துக்கத்தோடும், தன் பர்த்தாவைக்கண்டு, பிராண நாதரே! பிள்ளையி னிமித்தம் அன்றுஅறியாமல் வார்த்தை யாடினேன். அதனை மன்னித்து அடியாளை அங்கிகரிக்கக் கடவீர், கோபத்தை விட்டு விடுமென்று வேண்ட, கோராபக்தர் சொல்லுவார், பெருமாள்மேல் வைத்த ஆணையை நானொருநாளும் விடமாட்டேன், கிழக்குதிக்கிலுதிக்குஞ் சூரியன் மேற்கி லுதயமாயினு மென்னுடைய நிச்சயத்தை நான் விடமாட்டே னென்றார், மனைவி இதைக்கேட்டு மகத்தான துக்கத்தை யடைந்து புத்திருண்டாவதற்கும் குல சம்ரக்ஷணைக்கும் நற்கதி யடைவதற்கும் வேறொரு பெண்ணை விவாகஞ் செய்விக்க வெண்ணி தனது தாயார் வீடு சென்று தனக்கும் தன் பர்த்தாவுக்கும் நடந்த சங்கதியை தந்தை தாய்களுக்குச் சொல்லி வம்சத்தை நிலைநிறுத்த உங்களிடம் யாசிக்க வந்தேன், கடைகுட்டிப்பெண்ணை என் பர்த்தாவுக்கு கலியாணஞ் செய்துக்கொடுக்க வேண்டும், அவருக்கு மனைவியா நான் இருக்க வேறோர் பெண்ணைக் கொடுப்பதற்கு எவரும் சம்மதிக்காரென்று விசாரித் திவ்விடம் வந்தேன், எனது விண்ணப்பத்தைக் கேட்டருளக் கடவீரென்று பிரார்த்தித்தாள். தாய் தந்தைக ளிருவரு மிவ்வசனங்களை கேட்டுக் கருணையுடையவராகி கனிஷ்ட புத்திரியைக் கொடுக்கச் சம்மதித்தார்கள். உடனே அவள் பிராம்மணரை யழைத்து விவாஹ லக்கினத்தை யேற்படுத்தி கலியாணப் பிள்ளையை அழைத்துவந்து சாஹித்தியங்களைச் சேகரப் படுத்திக்கொண்டு பிராம்மணர்க ளனைவரும் மாதவன்மேல் மங்கள கீதங்கள் பாட, பந்துக்க ளனைவரும் கூடி விவாகத்தைச் செய்து முடித்தனர். நான்காநாள் சகலரு மவர்க ளிருப்பிடங்களுக்குப் போகிற தருணத்தில், மாமனார் மருமகனைக் கண்டு அப்பா! நீ யென்னுடைய ஜேஷ்ட புத்திரியையும் கனிஷ்ட புத்திரியையுங் கொண்டாய். அவ

ர்க ளிருவரையும் வஞ்சனையின்றி சமபாவத்துடன் பார்த்துக்கொண்டு சுகமுடனிருக்கக் கடவாய். ஸ்திரீகளிருவரும் போர்செய்துக் கொண் டிருந்தால் இதர ஜனங்கள் கண்டு பரிஹாசம் செய்வார்கள், என்னுடைய விண்ணப்பத்திற்கு வேறாக நடப்பாயாகில் விடோபாமேலாணை யிருக்கிறதென்றான். அறிவாளியான கோரா பக்தர் இதைக்கேட்டு அதிக சந்தோஷத்தை யடைந்து பகவானுடைய கிருபை பூர்ணமாக விருந்தால் பந்தங்கள் தமக்குத் தாமே போய்விடுகின்றன, விஷயங்களில் தோஷதிருஷ்டியை யுண்டாக்கி காமவிகாரங்களில்லாமல் ஸ்ரீஹரி செய்வரென்றெண்ணி வீட்டிற்குச் சென்று இரண்டு மனைவிகளுட னிருந்து சகல வஸ்துக்களும் சமமாக இருவருக்குங் கொடுத்துக்கொண்டு காலயாபனஞ் செய்துவருவார்.

ஒருநாள் மூத்தப்பெண்சாதி பர்த்தாவினிடம்வந்து வம்ச விருத்திக்காக எனது தங்கையை உமக்கு கலியாணஞ் செய்வித்தேன். அவளைக் கைக்கொள்ள வேண்டுமென்று கேட்க, கோரா பக்தர் வினயத்துடன் சொல்லுவார், பெண்ணே! கேளாய்! உன் தகப்ப னென்னை வழிகூட்டி அனுப்பும் பொழுது உங்களிருவரையும் சமமாகப் பார்க்கும்படி ஆணையிட்டு கட்டளை யிட்டார். அக்காரணத்தால் உங்களிருவரையும் பிராணன் போனாலும் தீண்டமாட்டேனென்றார். இதைக்கேட்ட அவ்விருவரு மதிக விசனத்தை யடைந்திருந்தார்கள். ஓ ரிரவில் மூத்தபெண்சாதி பிரேரபணையால் இளையவள் பர்த்தா படுத்துக்கொண் டிருக்குமிடஞ் சென்று நித்திரையிலிருக்கு மவரது கைகளை தன் மார்பி லிருத்தின மாத்திரத்தி லவர் விழித்துக்கொண்டவராகி அனுதாபத்துடன் விசனமுற்று ஆண்டவ ராக்ஞைக்கு அன்னியமாக நடப்பது அதிக தோஷமென்றெண்ணி, பயமற்றவராகி ஸ்தம்பத்திற்குக் கத்தியைக் கட்டி. ஸ்திரீயைத்தொட்ட கைக ளிவையல்லவா! வென்று அவைகளை கரகரவென்றறுத்துவிட்டு அச்சமின்றி ஹரி நாமத்தைச் சொல்லிக்கொண்டு மோகத்தை விட்டிருந்தார். உதயமானவுடன் பத்தினிகளிருவரு மவ்விடம் வந்து பார்க்குமளவில் விபரீதத்தைக் கண்டு மார்பிலடித்துக்கொண்டு மிகுதியாக அழத்தொடங்கி இனி நாம் பிழைப்ப தெப்படியென்று ஒன்றுந் தோன்றாம லிருக்க, சம்பத்திற்கும் மோக்ஷத்திற்கும் ஸ்ரீதரரான பாண்டுரங்க ரிருக்கிறாராத

லாற் சிந்திக்க அவசரமில்லையென்று கோராபக்தர் சொல்ல, இது குணக்ராஹ்யமென்றெண்ணி உற்சவ சமயம் வந்தவுடன் பண்டரீபுரத்திற்கு சாது சங்கத்துடன்கூடி சதிகளிருவரும் தமது பர்த்தாவை இட்டுக்கொண்டு சென்றனர். அவ்விடம் சேர்ந்து மண்டபத்திற்குள் கோரா பிரவேசிக்கவே நாமதேவருல்லாசத்துடன் கீர்த்தனைச் செய்துக்கொண்டிருக்க சகல பக்தருங்காண ஸ்ரீ ஹரி நடனஞ் செய்துக்கொண்டிருக்கக்கண்டார். ஹரிநாமத்தை அபரிமிதமான அன்புடன் யாவரும் சொல்லத்தொடங்க அபாரமான மதுரமுண்டாயிற்று. அதனாலவ்விடத்திலனைவரும் கைகளை மேலுக்கெடுத்து ஹரி! கிருஷ்ணா! அச்சுதா! முராரே! கோவிந்தா! மாதவா! கோகுலவாசா! வென்றனந்தநாமங்களைச் சொல்லி கைகளைத் தட்ட வாரம்பித்தனர். அத்தருணத்தில் கோராபக்தரும் தனக்கு கையைத் தட்டகரமில்லையென்றெண்ணங்கொள்ளவே கைகள் முன்போல வந்தன. அதைக் கண்டு அப்போதனைவரும் மஹா சந்தோஷத்தை யடைந்து, இன்னுமதிகமாக ஹரி நாமத்தைச் சொல்லி பெருமாளைக் கொண்டாடினார்கள். அத்தருணத்தில் கோரபக்தருடைய மூத்தபத்நினி கைகளைக் கூப்பிக்கொண்டு வரங்களைக் கொடுக்கும் வாசுதேவரே! கணவனுக்கு கையைக் கொடுத்தீர், எனது குமாரனையும் நீர் கொடுக்கக் கடவீரென்று வேண்டினாள். அப்பொழுதந்த பாலகன் பக்தர்களின் சமூகத்தில் பாடிக்கொண்டுவர, தாயார் தன் புத்திரனைக் கண்டு தடையற்ற வானந்த மடைந்து நின்றனள். அவ்வேளையில் ருக்மணிதேவி அம்மூவரையும் பிரீதியுடன் நோக்கி இன்று தொடங்கி ஆணை தீர்ந்துவிட்டது. இனி சுகமாகச் சமுசாரத்தைச் செய்யக் கடவீர்களென்றாள். இந்தச் சரிதைகளைக் கேட்டு அவ்விடத்திய பக்தர்கள் பிரியத்தையு மானந்தத்தையு மடைந்தார்கள்.

---

## கபீர்தாஸர் சரித்திரம்.

ஸ்ரீஹரியினுடைய ஆக்ஞையினால் சுகப்பிரம்மருஷியினம்சமான சிசுவு ஓர் கிளிஞ்சிலிலடங்கி, மழைதுளிகளுடன் கங்கா நதியில்விழ அது காசிபட்டணத்தில் மணிகர்ணிகை யெனுங் கட்டத்தில் மிதந்துக்கொண்டு வந்தது. அவ்வேளையில் பஞ்சுக்கொட்டித்

துலுக்கன் கமாலென்னும் பெயருடையோ னவ்விடமிருந்து நூலைத் தோய்த்துக்கொண்டிருந்தான். அக்கிளிஞ்சிலைக்கண்டு மாரளவு ஜலத்திற் சென்று அதனைக் கைக்கொண்டு கரையேறிவந்து அக்கிளிஞ்சிலைத் திறந்து பார்க்குமளவில் சுந்தரமான குழந்தை சர்வலக்ஷணங்களுடன்கூடி யிருக்கக்கண்டு சந்தோஷத்தை யடைந்து வீட்டிற்கு அந்தக் குழந்தையுடன் சென்று பெண்சாதியை யழைத்து புத்திரவாஞ்சையை வெகுகாலமாகப் பெற்றிருந்தோமல்லவா! அந்த மனோரத மின்றைக்குப் பூர்த்தியாச்சுதென்று சொல்லி பத்தினி கையில் ராமநாமத்தைச் சொல்லுமச் சிசுவைக்கொடுத்தான். அவளக் குழந்தையைக் கைக்கொள்ளவே அவள் ஸ்தன்னியத்தில் பிரேமை லக்ஷணத்தால் பாலுண்டாயிற் றுதலா லம்மாது, பாலகனுக்கு பால் கொடுத்து வளர்க்க நாளுக்கு நாள் பிள்ளை வளர்ந்து வந்தாள். கமால் அப்பிள்ளைக்கு கபீரென்று நாமத்தைச் சாற்றினான். அக்குமாரரும் பகவானுடைய திருநாமத்தையெப்பவுஞ் சொல்லிக்கொண் டிருப்பர். அதைக்கண்டு பூட்டணத்தி லுள்ளோ ரனைவரும் பாலகன் பூர்ணபக்தரென்றும் தாய் தந்தைகள் சுகிருதவிசேஷங்களைத் தாராளமாகச் செய்ததால் பக்த சிரோமணி பாலகனாரென்றும் சொல்லலுற்றார்கள்.

பிள்ளைக்கு விவேகதசை வந்தவுடன் தாய் தந்தைகள் தங்கள் குலவிருத்தியான நெய்யுந் தொழிலைக் கற்பிக்கத் தொடங்கினார்கள். அத்தொழிலில் சித்தமொருமிக்காமல் மௌனியாயிருப்பதைக் கண்டு தாயார் சிக்ஷை செய்து மெதுவாகக் கற்பித்துக் கொடுத்து ஒருநாள் நூலைக் கொண்டுவந்து கபீர் முன்வைத்து துணி நெய்யுமென்று சொல்லி தான் வெளியே சென்றனள். கபீர் ஸ்ரீராம பஜனையால் காயத்தை மறந்து கண்களை மூடிக்கொண்டு கையினா லொரு வேலையுஞ் செய்யாமல் சும்மாவிருக்க தாயார் கண்டு தனையனை முதுகின்மே லடித்தாள். அப்போது தேகஸ்மிருதியைக் கொண்டு துணியை நெய்யத் தொடங்கினர். திரும்பி தியானத்தில் ஸ்ரீ ஹரி பிரஸன்னராகவே தேகத்தை மறந்தனர். இவ்வண்ணம் தியானத்திற்கு பரதந்திரரா யிருப்பதை இராமமூர்த்தி கண்டுகொண்டு அவரே அவ்வஸ்திரத்தை நெய்து கபீருக்கு வெளிநோக்கமுண்டாகும்படி கருணிக்க, அவர் தேகபாவனை யடைந்து தன்முன் பார்க்குமளவில் துணி முழுக்க நெய்



కబీరుదాసుడు.
கபீர்தாசர்.

కమాలు .
கமால்.

కబీరుభార్య
கபீர்மனையாள்.

யப்பட்டிருந்தது. அதனை சீராக மடித்து தாயாரிடம் சேர்த்த னர். அவளதனை திரும்பி கபீர் கையிற் கொடுத்து கடைவீதி யிற் சென்று அதனை விற்று காசு கொண்டுவரச்சொன்னாள். கபீ ரதனை கக்கத்தி லிருத்திக்கொண்டு கடைவீதியிற் சென்று ஓர் பக்கத்தி லுட்கார்ந்து வஸ்திரத்தை நால்வர் பார்க்கும்படி தன் முன் வைத்து ஸ்ரீராம பஜனையிற் சித்தத்தை ரமிக்கச்செய்துக் கொண்டிருந்தார். அவ்வஸ்திரம் பெருமாள் கைப்பட்டதாதலால் அதன் விலை அமிதம்போல காணப்பட்டிருந்தது. பிரஜைகளுடைய அதிகாரானு குணத்திற்கு மிஞ்சி அப்புடைவை தோன்றினபடியால் அதற்கு கிரயமொன்று மேற்படவில்லை, பொழுது சாய்ந்துபோனபடியால் கபீர் அவ்வஸ்திரத்தை கையிலேந்திக்கொண்டு தாயார் கோபிப்பாளென்று பயத்தை யுடைத்தாய் வழியிலோர் விடுதி வீடிருக்கக் கண்டு அதனுட் சென்று ஹரிஸ்மரணை செய்துக்கொண்டு உட்கார்ந்திருந்தனர். இராமபிரானேரேழைப்பிராம்மணனைப்போலக் கபீரிடஞ்சென்று ஐயா! குளிர்காலமாயிருக்கின்றது, வஸ்திரமின்றி கொடிய துன்பத்தை யடைகிறேன், ஓர் வஸ்திரத்தைக் கொடுவென்று பிரார்த்தித்தார். கபீர்தாஸரிதைக் கண்டு தன்னிடமிருக்கும் வஸ்திரத்தில் பாதி கிழித்துக் கொடுக்க, அவரதனை கைக்கொண்டு சென்றனர். பரிக்ஷிக்கும் பொருட்டு ஸ்ரீராமர் திரும்பி யோர் பகீர் வேஷத்தைத் தரித்து வந்து ஐயா! வஸ்திரஹீனனா யிருக்கிறேனாதலா லோர் வஸ்திரத்தைக் கொடுமென்று கேட்டு, (குதா) கடவுள் நிராகாரராக யிருக்க நீ யேன் ஹரியை ஆதரித்துத் தொழுகிறு யென்றார். அதற்குக் கபீர்தாஸர் சொல்லுவார், பகவானுடைய நேர்மை காய்ச்சின நெய்போலும் காய்ச்சாத நெய்போலு மிருக்கும், கரைந்த நெய்யைப்போலாகும், நிராகாரம் கரையாத நெய்யைப்போலாகும் அவருடைய சகுண சொரூபம், நெய் கரைந்திருந்தாலும் கரையாமலிருந்தாலும் (பின்னம்)வேறுமோ? அப்படியே அவ்வியக்தமான தேஜஸ்ஸு பக்த ஜனங்களுக்காக வியக்த ரூபமாகி ஆகாரத்தை யடைந்ததென்று சொல்ல, பகீர் மாறுத்தரஞ் சொல்லாமல் வஸ்திரத்தைக் கேட்டார். கபீ ரப்பொழுது தன்னிடமிருந்த பாதிவஸ்திரத்தை அவருக்குக் கொடுத்துவிட்டு யுபாதியற்றவராகி ராம பஜனையி லிருந்தனர். பின்பு பெருமாள் பிரா

ம்மண வேஷத்துடன் கபீருடைய வீட்டிற்குச் சென்று அவர் தாயாரை வெளியே வரச்சொல்லி அழைத்து கபீர் செய்த விவகாரங்களை அவளுடன் சொல்லி அவனிப்பொழு தோர் விடுதி வீட்டிலிருந்துகொண்டு ராமசிந்தனை செய்கிறானென்றார். தாயா ரவரைப் பார்த்து கபீர் வீட்டிற்கு வந்தவுட னடிப்பே னென்றாள். பெருமாள் இப்பொழுது வீட்டிற்கு வாரான் அந்த வீட்டைக் காட்டுகிறேன் வாவென் றழைத்துவந்து தான் தூரத்திலிருந்து கபீரைக் காண்பித்தார். அவள் தன் குமாரனைக் கண்டு சமீபத்திற் சென்று பார்க்குமளவில் பகவன் நாமத்தைச் செய்துக்கொண்டிருந்தனர். அதைக்கண்டு அடா! கபீரா! வஸ்திர மெங்கேயென்று கேட்க, கபீர் ரகுராமரிடம் சித்தத்தைச் செலுத்தி வெளி நோக்கமின்றி பரதந்திரராகி மௌனியாயிருந்தார். தாயார் பிரம்பைக்கையிலேந்தி கோபத்துடன் திட்டிக்கொண்டு கபீரை யடித்தாள். அவ்வடிகள் பெருமாள் மேற்பட்ட மாத்திரத்தில் சிக்ஷித்தது போதும், க்ஷமிக்கக்கடவையென்று சர்வேஸ்வரன் முதுகுமேல் தழும்புகளைக் காண்பித்து விப்ர வேஷத்தை விட்டு மேககாந்தியான திருமேனியும், கர்ணகுண்டலங்களும், விசால மார்பும், கண்டத்தில் கௌஸ்துபமணியும், வில்லம்புகளுடன் சொர்ண காந்தியைக்கூடின சீதாபிராட்டி சகிதம் சேவை சாதித்தனர். அப்பொழுது கபீர் கண்ணை விழித்து திவ்விய மங்கள விக்கிரஹத்தைப் பார்த்து அபாரமான பிரேமையுடன் அனேக பர்யாயங்கள் நமஸ்கரித்து சகஜ தாஸ்யத்தை நேத்ராஞ்சலிகளுடன் செய்வதைக் கண்டு பகவான் சொல்லுவார், எமது பரிக்ஷைக்கு நீ பொருத்திருந்தாய், உன்னை விடாமல் நாமருகி லிருப்போம், எம்மை நீ பஜிக்கக்கடவையென்று சொல்லி அவர் தாயாரைக் கண்டு அமித பாக்கியத்தை நீ செய்தவளாவாய். எம்மை உன் இருதயத்தில் நிறுத்திக்கொள்ளென்று சொல்லி மறைந்தருளினர். பின்ன ரவள் அமிதானந்தத்தை யடைந்து மகனைக் கட்டியணைத் துச்சிமோர்ந்து சொல்லுவாள், அப்பா! இராம பஜனையை நீ கற்றாய், உன்னா லந்த நீலவர்ணனுடைய ரூபத்தைக் கண்டேனன்றோ? ஆனந்தத்தை யடைந்தேனென்று பிள்ளையை வீட்டிற் கழைத்துவந்து இராம சிந்தனையே செய்துக்கொண்டு குறையொன் றில்லாமல் சந்தோஷமா யிருந்தனர். தாயாரும் பிள்ளையி னிஷ்டப்படி நடந்து வருவள். சில

நாள் கழிந்தபின் சுலக்ஷணமான ஓர் பெண்ணைக் கொண்டுவந்து கபீருக்குக் கலியாணஞ் செய்ய அவரும் விலக்ஷணமான கிரகஸ்தராகி வீற்றிருந்தார். தாயாரும் தினமும் தப்பாமல் தாசரதி பஜனையைச் செய்துவந்ததால் மேலான ஞானத்தையுடையவளாய் மேன்மை யடைந்திருந்தாள்.

பதிவிரதையான பத்தினியுடன்கூடி கபீர்தாஸர் சம்பத்து தரித்திரமென்று இரண்டையும் பாராமல் வாழ்ந்து வருங்காலத்தில் ஓர் பிள்ளை பிறந்தது. பன்னிரண்டாநாள் பந்துக்களனைவரும் பிரேமையுடன் வந்து கமால் என்று நாமகரணஞ் செய்தனர். நாளுக்குநாள் அப்பிள்ளை பெரியவனாகி நல்ல குணங்களையுடையவனாய் தகப்பன் சொன்ன கவிகளைத் தான் பாடஞ்செய்து வைராக்கியமும், சுசித்வமும், சீலமும் விசேஷமாகக்கொண்டு ஞானானுபவமுடையவனாய் ஹரிகுண கானஞ் செய்துவருவான். சின்ன வயதையுடையவனாயினும ஒருநாள் தகப்பனை பக்தியுடன்கண்டு துவாரகாபுரியைச் சேவிக்க அபேக்ஷையுடையவனா யிருக்கிறேனென்றும் ஆக்ஞையானால் போய் வருகிறேனென்றும் அன்புடன் கேட்டு தெண்டஞ் சமர்ப்பிக்கத் தகப்பன் சந்தோஷித்து சிறுவயதில் யாத்திர சிந்தனை செய்வது ஸ்ரீஹரி கிருபையென்றெண்ணி, போகலாமென்று பிள்ளைக்குச் சொன்னார். தகப்பன் திருவடிகளில் தெண்டஞ் சமர்ப்பித்து கமால் காசி பட்டணத்தை விட்டு ஹரிநாமத்தை யிடைவிடாமற் சொல்லிக்கொண்டு பிரயாணப்பட்டான். நல்ல அன்னத்தில் நினைப்பு செல்லாமலும் தனவான்களுடைய வீட்டில் தான் பிரவேசிக்காமலும் நியம விரோதமின்றி வழிநடந்துசெல்வன். இவன் பஜனையில் பாடும் பாட்டுகளை புரஜனங்கள் கேட்டு இன்புற்று மன்னித்து வருவார்கள். நாரதரைப்போல நாமத்தை இரவும் பகலுஞ் சொல்லிக்கொண்டிருந்தபடியால் அவனைப் பார்க்க சகலரும் பிரீதி யடைந்திருப்பார்கள். கிராமங்களில் ஒவ்வொரு நாள் மாத்திரந் தங்குவதன்றி மறுதினந் தங்காம லிப்படி நிஷ்டாகரிஷ்டனாய் துவாரகாபுரியைச் சேர்ந்தான். அவ்விட மனுதாபத்துடன் தீர்த்த ஸ்நாநம் பண்ணி துவாதசோர்த்வ புண்டரங்களைத் தரித்து பிரேமையுடன் சன்னிதியிற் சென்று ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்குச் சாஷ்டாங்க தெண்டஞ் சமர்ப்பித்து அந்த விக்கிரகத்தை தன் ஹிருதயத்தில் நிலை

நிறுத்திக்கொண்டு அனேகப் பிரகாரங்களாகத் தோத்திரங்களைச் செய்து நூதன கவித்வங்களைச் சொல்லி நான்கு மாசங்களவ்விடமிருந்து பின்பு பெருமாளுக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து வீட்டுக்குப் பிரயாணமாகி இடைவிடாமல் ராமபஜனை செய்துக்கொண்டு வழி நடந்து சென்றனன். விஷ்ணுதாஸனென்றொரு வர்த்தகன் கமால் வருவதைக் கேட்டு இதர ஜனங்களையுங் கூட்டிக்கொண்டு எதிர்சென்று தன் வீட்டிற் கழைத்துவந்து மரியாதையுடனன்ன மளித்திருக்கச் செய்தான். கமால், இரவுகாலமானவாறே சில கீர்த்தனங்களை வேடிக்கையுடன் பாடினன். அனேக ஜனங்களந்த நாம ஸங்கீர்த்தனத்தைக்கேட்டு அத்யானந்தத்தை யடைந்தனர். அந்த வர்த்தகன் பிரியமுடையவனாய் திரவிய ராசிகளை கமால் தீண்டானென் றெண்ணி நூதனமான ஓர் மாணிக்கத்தை எதிரில் வைத்துப் பாதங்களுக்கு நமஸ்கரித்து இது இரவு காலத்தில் வெளிச்சத்தைக் கொடுக்குமாதலால் அங்கிகரிக்கும்படி பிரார்த்தித்தான். கமா லிதைக்கேட்டு ஐயா, வர்த்தகரே ! இதை நான் கொண்டுபோவேனாகில் என் தகப்பனார் கோபிப்பார். இரத்தினங்கள் முதலானவை யெனக்கு கற்கள்போலத் தோன்றும, அவை சுகத்தைக் கொடா. இது விஷயத்தில் நீரேன் பிரயாசை யெடுத்துக்கொண்டீர். அதனை வேண்டாமென்று சொல்லி விட்டான். சாதுமார்க்கமும் சாதுக்களுடைய கிரியாவிசேஷங்க ளறியாத அவ்வர்த்தகன், கமால்தாசு நித்திரை செய்துக்கொண் டிருக்குமளவில் அந்த இரத்தினத்தை அவன் கோமணத்திற் கட்டி முடிப்போட்டான். கமால் உதயமானவாறே விழித்துக்கொண்டு கௌபீனத்தில் மணியை முடிந்த தறியாமல் வழிநடந்து அன்றே வீட்டைச்சேர்ந்து தகப்பனுக்கு நமஸ்கரித்தான். பின்பு தன் கோமணத்தில் முடி யிருப்பதைக் கண்டு மகாபயத்துடன் தகப்பனிடம் வந்து வர்த்தகனுக்குந் தனக்கும் நடந்த சங்கதியை வெளிப்படுத்தின மாத்திரத்தில் கபீர்தாஸர் மூர்ச்சை யடைந்து கீழே விழுந்தனர். சற்று நேரம் சென்றபின் திரும்பி எழுந்திருக்க அவருடைய பத்தினியானவள் வந்து என்ன சங்கதி? யென்று விசாரித்தாள். கபீர்தாஸர் தன் குமாரனை எதிரில் நிற்கவொட்டாமல் துரத்திவிட்டு அபாரமான கோபத்தை யடைந்து மனைவியைக் கண்டு சொல்லுவார், இன்றையதினம் நமது வமிசமே முழுகிப்

போய்விட்டது. கமால் இராமநாமத்தைப் பாடி இரத்தினத்தைக் கொண்டுவந்தான். இராமநாமத்தை விக்கிரயப்படுத்தினேன். இந்த அக்கிரமமான வபசாரத்தால் அதிக துக்கத்தை யடைந்தேனென்று சொல்ல, இதை கமால் கேட்டு உடனே அவ்விடம் நிற்காமல் அவ்வர்த்தகனிடஞ் சென்று தகப்பன் சொன்னதை தெரிவித்து அந்த இரத்தினத்தை அவன் கையிற் கொடுத்து திரும்பிவந்து தாய் தந்தைகளுக்கு நமஸ்கரித்து நின்று சங்கதியைச் சொன்னான். இதைக் கேட்டு அவர்க ளிருவரும் குமாரன் கிருபாதிகனாய் நின்றானென்று அதிக சந்தோஷத்தை யடைந்தார்கள்.

ஒருதினம் கபீர்தாசர் கடைவீதியில் கானஞ் செய்துக்கொண்டு ஸ்ரீராம மூர்த்தியின் கீர்த்தியைப் பிரபலப் படுத்திக்கொண்டிருந்தனர். அந்த வீதியில் இல்லா ளொருத்தித் தன் வீட்டிலிருந்துக்கொண்டு எந்திரத்தில் மாவரைத்துக்கொண் டிருந்தாள். அதைக் கண்டவுடன் கபீர் தன் உல்லாசத்தைவிட்டு வெளியேயிருந்துக்கொண்டு அபரிமிதமாக அழத்தொடங்கினார். அதைக் கண்டு வழியே போகும் ஜனங்கள் விந்தையடைந்து அழுகைக்குக் காரண மென்னென்று வினவ, அவர்க ளனைவரும் கலி மனிதர்களென்று கண்ணெடுத்துப் பாராமல் மாறுத்தர மொன்றுங் கொடாமல் அழுதுக்கொண்டே யிருந்தார். அவ்வேளையில் நிபட் நிரஞ்சன னென்றொரு பக்தர் அம்மார்க்கமாக வந்து கபீரைக் கண்டு ஏன் அழுகிறீரென்று கேட்க, ஸ்வாமீ! உலகத்தில் பிரகிருதி சம்பந்தமான ஜனங்கள் உண்மைநெறி சொல்ல வறியாரென்று பேசாதிருந்தேன். நீர் பூரணஞான முடையவராதலால் அடியேன் விண்ணப்பத்தைக் கேட்கக் கடவீர். எந்திரத்தில் மாவரைக்கு மளவில் தானிய மனைத்தும் பொடியாய்ப் போகிறதே! அதைப்போல இந்த சமுசார சக்கரத்தில் விழுந்த நான் நாசமடைவது தப்பாதென்று பயந்து மிகுதியாக அழத்தொடங்கினேனென்றார். இதைக்கேட்டு நிபட் நிரஞ்சனர் பிரீதராகி சொல்லுவார், உலகத்தில் பாகவதர்கள் உண்மையான வாதாரத்தை விடாதிருப்பாராயின் பயமொன்றையு மடையார். ஆதாரத்தைப் பிடிக்காதிருக்கு மவர்கள் பவசக்கரத்திற் பொடியாகிக் கீழேவிழுந்து விடுவார்கள். அதெப்படியென்றால் யந்திரக்கல் மத்தியில் அச்சா ணிடமிருக்குந் தானியங்கள் பொடியாய் விழாததுபோல் பலமாக

ஸ்ரீராம சிந்தனை செய்பவருக்குக் காலசக்கர பயமொன்று மிராது. மேலான வைராக்கியத்தை யடைந்து, சாந்தியும், தாந்தியும், க்ஷமையும் நீர் உடையவராயிருக்க நீர் ஏன் பயப்பட்டு கண்ணீர் விட்டழுகிறீர் ? சோகத்தை விட்டு விடுமென்று தகுந்த வார்த்தைகளைச் சொல்ல, கபீர் சந்தோஷமடைந்து கிபட் நிரஞ்சனருக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து பின்பு இருவரும் ஆனந்தத்துடன் பாடிக்கொண்டு மாடிக்கொண்டும் தமது நிவாசங்களுக்குச் சென்றனர்.

இவ்விதமாக ஹரிகுணானு வாதத்தில் காலயாபனம் பண்ணுமளவில் கபீரொருநாள் தனக்குள் சிந்திக்கத் தொடங்கினர். உலகத்தில் சமுசாரத்தி லிருக்கினும் களங்க ரகிதராகி சதாசாரியரை யடையாவிட்டால் பிரேத சமானராவார்கள். ஒரு புருஷனுக்குப் பிரியமுடைய பத்தினி யில்லாவிட்டால் பிரபஞ்ச காரியங்கள் நடவா. சிறுவர்களில்லா வீடுஞ் சுகமுடையதாகக் காணாது. அதைப்போலவே ஆசாரியனருளை யடையாதவன் ஆயுள் வியர்த்தமாகுமென்று சிந்தித்து ராமானந்தரெனும் சன்னியாசியாரை ஆஸ்ரயித்துச் சமுசாரத்தைத் தரிப்பேனென் றெண்ணி ஓர்நா ளவ்வாசாரியர் ஸன்னிதிக்குச் சென்று தூரத்திலிருந்து நமஸ்கரித்து தேவரீர் கிருபைக்கு அடியேன் பாத்திரனாகும்படி ஆதரத்துட னுபதேசித்து ஆட்கொண்டருளுமென்று பிரார்த்திக்க, ராமானந்தர் சொல்லுவார், நீர் துலுக்கர் வம்சத்தில் பிறந்தபடியால் உபதேசம் பொருந்தா தென்றார். அதைக்கேட்டு கபீர், ஸ்வாமீ ! அடியேன் அதிதீனன், தேவரீர் திருவடிகளிலேயே அடியேன் நிச்சயத்தை வைத்தேனாதலால் அடியேனைக் கடத்தேறச் செய்யவேண்டுமென்று நமஸ்கரித்து வீட்டிற்கு வந்தனர். பின்பு குருசரணங்கள் தன் தலையிற்படு முபாய மேதென்று தனக்குள் சிந்தித்து, ஒருநாள் ராமானந்தர் ஸ்நானஞ்செய்யும் பொருட்டு கங்கைக்கு இறங்கும் படிக்கட்டுகளின் மேல் கபீர்தாஸர் முக்காடிட்டு படுத்துக்கொண் டிருந்தார். அருணோதய சமயமான சந்தியிருட்டில் ராமானந்தர் ஸ்நான கட்டத்திற்கு அங்குச் செல்ல, கபீர் தலைமேல் பாதத்தை அறியாமல் வைத்து, ராமா ! ராமா ! யாரையோ மிதித்து விட்டேனே ! என்றனுதாபத்துடன் சொல்லிக்கொண்டு ஸ்நானத்திற்குச் சென்றனர். பின்னர் கபீர் எழுந்திருந்து ஸ்வாமி ! தேவரீர் கிருபையை யடைந்தேன், அனாயாசமாகத் தேவ

ரீர் சரணங்களடியேன் தலைமேல் வைக்கப்பட்டன, ஸ்ரீராம மந்திரமும் சிரவணமாயிற்று, அநேக ஜன்மங்களிற் செய்த சுகிருதமின்று பலித்தது கிருதார்த்தனானேனென்று பலமுறை நமஸ்கரித்து ஆடத்தொடங்கி ஆசாரியரைக் கண்டேனென்று பாடவாரம்பித்தார். இந்த விந்தையைக் கண்டு ராமானந்தர் சந்தோஷத்தை யடைந்து அவரைப் பரிக்ஷிக்க வேண்டுமென்று பிரியமுற்றிருந்து தனது நியமத்தை முடித்துக்கொண்டு ஆச்சிரமத்தை யடைந்தார்.

சிலநாள் கழிந்தபின் கபீர்தாசர் ஸ்ரீஹரியைப் பாடிக்கொண்டு கடைவீதியிற் சென்று கண்ணீரொழுக கான நிருத்தியங்களை மெய்மறந்து செய்துக்கொண்டு எனது ஆசாரிய ஸ்ரீராமானந்தர் பாதங்களை நியமத்துடன் பிடித்துக் குறைகளை யற்றேனென்று குருவைப் புகழ்ந்து கொண்டாடிக்கொண் டிருந்தார். ராமானந்தரவ்வேளையில் வந்து இவ்வாக்கியங்களைக் கேட்டு கோபங் கொண்டவரைப்போல் வெளிக்குக் காட்டி அடா! கபீரா! என்னுடைய சிஷ்யனாக நீ சொல்லிக்கொண்டு சஞ்சரிக்கிறாய், நானுனக்கு மந்திரோபதேச மெப்போது செய்தேன்? அதற்கு சாக்ஷி யார்? வீணிலேன் பிதற்றிக்கொண் டிருக்கிறாயென்று தனது பாதக்குறடை யவன்மே லெறிந்தனர். அது கபீர் நெற்றியிற் படவே ரத்தம் வரத்தொடங்கிற்று. இதைக் கண்டு கபீர் சந்தோஷமுடையராய் தேவரீ ரப்பொழுது செய்த உபதேசம் இரகசியமாயிருந்தது, இப்பொழுது நால்வரறிய தேவரீர் பாதுகைகளடியேன் சிரஸின் மேல் வைக்கப்பட்டன. ஐந்து பூதங்களையும் சாக்ஷி வைத்து தேவரீர் கமலபதங்களைப் பிடித்தேன், தேவரீர் செய்த உபதேசத்திற்கு ஸ்ரீஹரியே சாக்ஷியென்றனர். இதைக் கேட்டவுடன் இராமானந்தர் கிருபை யுடையராய் அமிதமான பிரேமையுடன் தனது அஸ்தத்தை அவர் தலைமீது வைத்து தாரகமந்திரத்தை யுபதேசித் தருளினர். அதற்கு அளவுபடாத ஆனந்தத்தை கபீரடைந்தவராகி கமலக்கண்ணரான இராமபிரான்மேல் கவிதைகளை யனேகமாகப்பாடி பிரபலமான புகழை யுலகத்தி லடைந்திருந்தார்.

இதைக்கண்டு குடிலபுத்தியால் துர்ச்சனர்களவருக்குக் கஷ்டமுண்டாகும்பொருட்டு ஏகாந்தமான விடத்தி லிருந்த குடிலர்களனை

வருங்கூடியாலோசித்து, கபீர்தாஸர் பெயரால் திவ்ய க்ஷேத்திரங்களில் வசிக்கும் சாதுக்களனைவர்களுக்குங் கடிதங்களெழுதி, அதில் ஸ்ரீராமபிரான் விஷயமாய் மகோத்ஸவமொன்று நடக்குமென்றும் நாங்களே நியமித்த ஓர் தினத்தில் சகல சாதுஜனங்களும் காசிப்பட்டணத்தில் சேவைசாதிக்கவேண்டுமென்றெழுதி மனிதர்வசங்கொடுத்தனுப்பினார்கள். ஹரித்துவாரம், பிருந்தாவனம், அயோத்தி, துவாரகை, மதுரை முதலான விடங்களுக் கவர்கள் சென்று கடிதங்களைக் கொடுக்க, அவ்வவ்விடத்திய சாது கூட்டங்கள் அபரிமிதமாக புறப்பட்டு காசிபட்டணத்தில் நேத்திரோத்ஸவமாக கபீர்தாஸருடைய உத்சவத்தைக் காணும் பொருட்டு நியமித்ததினத்தில் நூறாயிரம் ஸாதுக்கள் நாமஸங்கீர்த்தனஞ் செய்துக்கொண்டு வந்து கபீர்தாஸரைக் கண்டு தெண்டஞ் சமர்ப்பிக்க அவரு மதிக பிரீதராகி அவர்களனைவருக்கும் நமஸ்கரித்து அமிதமான ஆனந்தத்துடன் சத்கரித்து சுதினமென்று கொண்டாடினார். இது, துர்ஜனர்கள் செய்த துஷ்டசேஷ்டையென் றறியாமல் ஈஸ்வர கடாக்ஷமென்றெண்ணி இன்புற்றிருந்தனர். ஸ்ரீராமபிரான் குடிலருடைய வெத்தனத்தை குந்தகப்படுத்த வெண்ணியும் கபீர்தாஸர் குறையைத் தீர்க்கக் கருத்துடையவராயும் பெருத்த வேலையைப் பூண்டுக்கொண்டு அத்தனை பேருக்கு மத்தனை கபீர் ரூபங்களை வகித்து வந்த ஸாதுக்களனைவருக்கும் உல்லாசத்துடன் சேவை செய்துக்கொண் டிருந்தனர். என்னவேண்டுமென்று சிலரை விசாரித்து இஷ்ட வஸ்துக்களைக் கொடுப்பர், சிலர்களுடைய திருவடியைக் கழுவி சுகமுடனிருக்கச் செய்வர். சிலருக்கு ஸ்நானஞ் செய்விப்பர், சிலருக்கு சந்தன மரைத்துக் கொடுப்பர், சிலர் முன்னின்று கைகளைக் கூப்பிக்கொண்டிருப்பர், சில சாதுக்களுடையச் சரணங்களைப் பிடித்துக்கொண் டிருப்பர். ஓரிடத்தில் சாதுக்களுடைய பாதரக்ஷைகளை சுமந்துக்கொண்டிருப்பர். ஓரிடத்தில் கானஞ் செய்துக்கொண்டு சாதுக்களைச் சந்தோஷப் படுத்துவர். சிலருக்கு போஜனமிட்டு சயனத்திற் படுக்கச் செய்வர். கோரினவர்களுக்கு குடுகுடியைக் கழுவி குடாகு போட்டுக்கொடுப்பர். சிலருக்குத் தாம்பூலத்தைக் கொடுத்து இத வசனங்களைச் சொல்லிக்கொண் டிருப்பர். துளபமாலைகளைக் கட்டி சிலருக்குப் போட்டு பூஜித்து வருவர். சிலருக்கு கஸ்தூரி திலகத்தை நெற்றி



துளசிவாணி
తులసీవణికుడు.

ஜீவன் தத்துவன்.
జీవుడు తత్వుడు.

யில் சாற்றுவர். சிலருக்கு வஸ்திரங்களைக் கொடுப்பர். சிலருக்குப் பூஷணங்களைக் கொடுப்பர். சிலருக்குச் சாப்பாட்டுச் சாமக்கிரிகையைக் கொடுப்பர். சிலருடன் ஏகாந்தத்தில் ஆத்ம ஞானத்தைச் சொல்லுவர். போஜன பந்தியிலன்னமிட்டு போதுமவ்வளவு ஜலத்தைக் கொடுப்பர். சிலருக்கு விசிறியை யெடுத்து விசிறுவர் சிலருக்குப் படுக்கைகளைப் போட்டு பாங்காகப் படுக்கச் செய்வர். நித்திரைக்கு ஸாதனமாக சிலருடைய சரீரங்களை யொத்திக்கொண்டு சுகமுறச் செய்வர். சிலருக்கு வெண்சாமரங்களைப்போடுவர். இப்படி வியாபகரான பகவான் பக்தன் காரியமாய் வெகுரூபங்களை வகித்து அனேகவித சேவைகளை மூன்றுநாள் பரியந்தஞ் செய்து வேடிக்கையுடன் சந்தோஷப்படுத்தி விசேஷமாக வஸ்திரங்களையுந் தனத்தையுங் கொடுத்து விடைகொடுத் தனுப்பி தானும் மறைந்தனர். துர்ஜனர்க ளனுதாபத்தை யடைந்து கபீர் தாசருக்குக் கெடுதி செய்ய வெண்ணமிட வதுவே கீர்த்தியைக் கொடுத்ததே! சர்வேஸ்வரன் காப்பாற்றினு ரென்னு விஸ்வசிந்து அவர்கள் கபீர்தாஸரிடம் வந்து சரணமடைந்தோமென்று திருவடிகளைப் பிடித்தார்கள். கபீரவர்களை மன்னித்து இராம மந்திரத்தை அவர்களுக் குபதேசித்துப் பக்திமார்க்கத்திலிருக்கச் செய்தனர். கபீர்தாசரும் ஸ்ரீராமமூர்த்தியின் கருணைக்கு முடிவில்லை யென்று களிப்புற்று திருப்தரா யிருந்தார்.

## துளஸீவாணி.

கிரகஸ்தாச்சிரமத்தில் மனைவி புத்திரருடன் கபீர்தாசர் வாழ்ந்துக் கொண்டிருந்தாலும் விரக்தி யுடையவராய் சாந்தியும் தாந்தியும் சத்பக்தியு முடையவரா யிருப்பார். பதினயிரம் சாதுக்க ளொருகாலத்தில் ஹரிநாமத்தைப் பாடிக்கொண்டு துவாதச புண்டரமும் துளசி மாலைகளைத் தரித்து காசிநகரத்திற்கு வந்து அவ்விடத்திய ஜனங்களைப் பார்த்து, ஐயா! எங்க ளெல்லோருக்கும் போஜனந்தை யளிக்கும் புண்ணியமூர்த்தி இவ்விடம் யாரேனுமுள ரோவென்று கேட்க, சில துர்ஜனர்கள் கபீர்தாஸருங்களுக்கு சோறிடுவா ரென்ன, அந்த பாகவதர்கள் அது உண்மையென்று நம்பி அவர் வீட்டிற்கு வந்து "ஜய சீதாராம்" யென்று சகலரும் கூச்சலிட்டனர். இதைக்கண்டு கபீர்தாஸரவர்களது பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து நிற்க சாதுக்கள் சொல்லுவார்கள், ஐயா! நாங்க

ளனைவரும் தீர்த்தாடனம் பண்ணிக்கொண்டு இப்பட்டணத்து வீதியில் வர, சிலர் நீ ரன்னதானம் செய்வீரென்று சொன்னபடியால் மிகுந்த பிரீதியுட னும்மிடம் வந்தோமென்றனர். கபீர் தாஸரிதைக் கேட்டு கடைவீதிக்குச் சென்று அவ்விடம் துளசிதாசெனும் வர்த்தகனைக் கண்டு, ஐயா! இன்றையதினம் சாது ஜனங்கள் வெகுபே ரென் வீட்டிற்கு வந்தார்கள். இல்லையென்னுமலவர்களுக்குச் சாமக்கிரிகையைக் கொடுத்தால் கணக்கானபணத்தை பின்னிட்டுக்கொடுத்து விடுகிறே னென்றார். வர்த்தக னிதைக்கேட்டு உன்மத்தனாகி இவ்விரவிற்கு உம்மனைவியை போகதானமாகக்கொடுத்தால் சாதுக்களுக்கு வேண்டிய சாகித்தியத்தைக் கொடுப்பேனென்றான். அதைக் கேட்டு கபீர்தாச ரப்படியே யாகக்கடவதென்று சம்மதித்து சாஹித்தியத்தைப் பெற்று வீட்டிற்குக் கொண்டுவந்து சாதுக்க ளனைவருக்கும் பூர்த்தியாகக் கொடுத்தனர். அவர்க ளனைவரும் திருப்தி யடைந்ததைப் பார்த்து சந்தோஷித்து கபீர்தாஸர் நிரஹேதுகமாக சாதுக்களுடைய சேவையை ஈஸ்வரன் கிருபை செய்தாரென்று சாயங்கால மானவுடன் மனைவியை யழைத்துச் சொல்லுவார், பெண்ணே! செய்பத்தகாத வேலையை இன்று நீ செய்யவேண்டி வந்தது, துளசிதாசனெனும் வர்த்தகனுக்கு இந்த இரவுக்குன்னை விக்கிரயித்தேன், அவனுடைய இஷ்டபூர்த்தியை நீ குறைவின்றி செய்யக்கடவை, சாதுஜனங்களுக் கின்றையதினம் சாமக்கிரிகையைக் கொடுத்தான். பாபமென்று நீ சங்கோசிக்காம லென் வாக்கைப் பரிபாலனம் பண்ணவேண்டுமென்று சொல்ல, அவளு மப்படியேயென்று சந்தோஷித்தனள். பின்பு கபீர்தாஸர் அவள் கையைப் பிடித்துக்கொண்டு அந்த வர்த்தகன் வீட்டிற்கு வந்தனர். வர்த்தகனச் சமயத்திற் சௌக்கியமான ஓர் கட்டிலைப் பூட்டி அலங்காரங்களனைத்துஞ் செய்து புஷ்பம், பன்னீர், சந்தனம், வஸ்திரம், தாம்பூலம் முதலாகியதுகளை வைத்துக்கொண்டு விசேஷ வாஞ்சையுடனெதிர்பார்த்திருந்தான். கபீர்தாஸர் தன் பத்தினியை அவன் வீட்டில் விட்டு தன் வீடு வந்து சேர்ந்தார். அம்மாது அந்த வர்த்தகனிடஞ் சென்று சொல்லுவாள், பாகவதர்களுக் கின்று நீரன்னமிட்டீர், அது பிரபலமான உபகாரமாகும், நீர் கிருபை செய்தபடி பாலெங்களுக்கு சுகிருத முண்டாயிற்று. உமக்கு விஷயேச்

சை யுண்டாயிருந்தபடியால் நானிவ்விடம் வந்தேன், உம்மிஷ்டத்தை நிறைவேற்றிக்கொள்ளலாமென்று அவன் இன்புறும்படி பாட்டுகளைப் பாடினாள். வர்த்தகன் காமாதுரனாகி அவளைச் சாமான்யமான ஸ்திரீயென்று கட்டியணைவதற்குக் கிட்டச் சென்றான். தீபத்தைக் கண்டு ஓர் பதங்கம் பிரமை கொண்டு அதில் விழுவதுபோல் பாபரூபியான வர்த்தக னவளைத் தீண்டப்போகும் சமயத்தில் காகுத்தரவ்வூரின் கொத்தவால் ரூபத்தைக்கொண்டு வில்லம்புகளும் டால் கத்திகளையும் தரித்துக்கொண்டு அவ்விடத்திற் காணப்பட்டு கோபத்துட னவ்வர்த்தகனைக் கண்டு சொல்லுவார். அளவுபடாத பாபகருமத்தை ஆலோசிக்காமற் செய்கிறாய்! இந்த வில்லம்புகளா லுன்னை இப்பொழுதே வெட்டி மாய்ப்பே னென்றார். வர்த்தக னிதைக்கண்டு விட விட நடுங்கிக்கொண்டு நானபராதியானேன், நீர் கேட்ட தனத்தைக் கொடுக்கிறேன், என் பிராணனை ரக்ஷியுமென்று கிழண்டை விழுந்து திருவடிகளைப் பிடித்துக்கொண்டான். தாசரதியைக் கண்டமாத்திரத்தில் தாது சாபல்லியம் போய்விட்டது, அப்போது பெருமா ளவனைப் பார்த்து அடா துலசி! கபீர்தாஸர் பத்தினி எனது பகினி (தங்கை)யாவாள், அவளுக்கு நீ தெண்டஞ் சமர்ப்பிக்கக்கடவை யென்றார். அதற்கு வர்த்தக னப்படியே செய்து அடியேனால் அநியாயம் நடந்தது நீரதை க்ஷமிக்கக்கடவீர், உமது வீட்டிற்குப் போகலாமென்ன, பகவான் வர்த்தகனைக் கண்டு துஷ்டசேட்டைகளை விட்டுவிடு, தன மதத்தா லுன்னை நீ மறக்கவேண்டாம், ஜாக்கிரதையாயிருக்கக்கடவை, அனுதாபத்துடன் கபீர்தாஸரைச் சரணம் புகுவாய், அவர் மனைவியை அழைத்துக்கொண்டுபோய் அவர் வீட்டில் விட்டுவரக் கடவையென் றிந்த லீலைகளைக் காட்டி கருணாமூர்த்தியான இராமர் கண்படாமல் மறைந்தனர். கடவுள் கட்டளைப்படி அவ்வர்த்தகன் அம்மாதைக் கபீரிடங் கொண்டுவந்து விட்டுச் சென்றனன்.

கபீர்தாசர் தன் பத்தினியை வீட்டிற் கண்டு வர்த்தக னிஷ்டப்படி நீ நடவாமல் இவ்வளவு சீக்கிர மேன் வந்தாயென்று வினவ, அம்மாது, கொத்தவா லவ்விடம் வந்து வர்த்தகனைச் சிக்ஷிக்க, என்னை இவ்விட மவன் கொண்டுவந்து விட்டா னென்றாள். இதைக்கேட்டு கபீர் கோபங்கொண்டு கொத்தவால் வீட்டிற்குச் சென்

று கொத்தவால்! கொத்தவாலென்று கூச்சலிட, அவன் கலக்க முற்று வாசற்கதவை திறந்து வெளியே வந்து கபீர்தாசருக்கு வந்தனமிட்டு நிற்க, ஓய் கொத்தவாலே! துளசி வர்த்தகனுக்கு என் மனைவியை இன்றைக்கு போகதானமாகக் கொடுக்க, நீரே னவனிடஞ்சென்று தொந்தரவு கொடுத்தீர்? இன்றைக்கவன் சாதுக்களுக் கன்னமிட்டான், எனது வாக்கியத்தை மீருமல் எனது பத்தினி அவ்விட மிருந்தாள். ஏகாந்தத்திலென்வந்து அந்தவர்த்தகனைச் சிக்ஷித்தாய்? என்று கேழ்க்க, கொத்தவா லாச்சரியப்பட்டு ஒன்றுந் தோன்ரும லிருந்து நான் வர்த்தகனைக் காணவே யில்லையே? ஈஸ்வர சாக்ஷியாக எனக்கிந்தச் சங்கதியொன்றுந் தெரியாது. அப்படி இதிலெனக் கன்வய முண்டாயிற்றே லெனது கண்கள் போகக்கடவது. ஹரிபக்தரான உமக்கு நான் அசத்தியஞ் சொன்னால் ரவரவ நரகத்தை யடையக்கடவே னென்ருன். இதைக்கேட்டு கபீர்தாஸர், இது இராமபிரான் காரியமா மென்றும் அவர் கிருபைகூர்ந்து பக்தரக்ஷணை செய்தா ரென்றும் தான் மனதிலெண்ணிக்கொண்டு துளசிவர்த்தகன் வீட்டிற்குச் சென்று ஐயா! ஸ்ரீரகுராம ருமக்குத் தலையுடன் தரிசன மருளினுர். அனேக சாதனங்கள் செய்யினு மவர் கண்களுக் கெதிராகார். அவரை அனுயாசமாக நீர் பார்த்தீர் உம்முடைய மகாபாக்கியமின்று பலிதத்திற்கு வந்த தென்று சொல்ல, அவ்வர்த்தகன் கபீர் பாதங்களைப் பிடித்துக்கொண்டு அடியேன் மகாபாபி, வியபிசாரத் தன்மையையுடையோன். என்னை இரக்ஷித்தருளினீர். விஷத்தை தின்றுப் பிராணனை ரக்ஷித்துக் கொண்டாப்போ லாயிற்று. பாராங்கல்லைக் கட்டிக்கொண்டு சமுத்திரத்தை நீந்தினதுபோ லாயிற்றென்று அனுதாபத்துடன் சொல்லி ஹரிபஜனையி லவன் பிரீதியை யுடையவனாய் மகா பாபங்களைப் போக்கிக்கொண்டு மாதவனுடைய சேவையில் விளங்கினுன். கபீர்தாஸர் தன் வீட்டுக்குவந்து கனத்த பிரேமையுடன் இராமசிந்தனைச் செய்துக்கொண்டு மனைவி புத்திரருடன் மகிழ்வுற் றிருந்தனர்.

## கமால் தாஸர்.

ஒருகால் பாகவத ரனேகர் தீர்த்த யாத்திரைகளைச் செய்துக் கொண்டு ஒருஜாமம் ராத்திரியான சமயத்தில் கபீர்தாஸர் வீட்டிற்கு வந்தனர். அவர்களைக் கண்டவுடன் பக்தர் சந்தோஷப்

பட்டு உட்காரச்செய்து பிரிய வாக்கியங்களைச் சற்றுநேரஞ் சொல்லிக்கொண்டிருந்து பின்பு, கபீர்தாசர், ஏகாந்தத்தில் மனைவியிடம் வந்து பெண்ணே! இன்று நம்வீட்டிற்குச் சாதுக்கள் வந்தனர். அவர்களுக் கன்னமிட வேண்டுமென்று மபேக்ஷையிருக்கின்றதென்று சொல்ல, கணவனைப்பார்த்து ஸ்வாமி! பாண்டத்திலெள்ளளவு அன்னங்கூட வில்லையே! அங்கம் பக்கத்தில் கடன்கேட்கினு மேது மகப்படுவதில்லையே! என்செய்வேன். கோமிட்டியுங் கையில் துட்டுவாங்காமல் கொடுக்கான். துட்டு கையிலில்லாமையால் திருடியாவது கொண்டுவாரும். சாதுஜனங்களுக்காக விப்படிச் செய்வது அபசாரமாகாது. கமாலும் நீரும் திருட்டுத்தனமாக கோமுட்டி வீட்டிற்குச் சென்று அரிசி பருப்பு முதலான சாமக்கிரியை அடைவுடன் கொண்டுவந்தால் சீக்கிரத்தில் சமையல் செய்து சாதுஜனங்களுக்கு சாதமிடுவே மென்றாள். இதைக் கேட்டு கபீர் சம்மதித்து கமாலைக் கூட்டிக்கொண்டு ஆயுதங்களைக் கையிலேந்தி ஓர் வர்த்தகன் கடையைப் பார்த்து அவன் நித்திரையுடையவனா யிருக்கக் கண்டு இருளான விரவில் தங்களுடைய வாயுதங்களால் கன்னமிட்டுத் துவாரமாக்கினர். கபீர், துவாரத்திற்கு வெளியிலிருந்து கமாலைப்பார்த்து நீ யுள்ளே சென்று காரிய சாதனத்தைச் சீக்கிரத்திற் செய்துவரக் கடவை யென்றனர். தகப்பன் கட்டளைப்படி கமால் துவாரத்திற்குள் பிரவேசித்து திரவிய ராசிகளையும், வஸ்திரமூட்டைகளையும் ஒவ்வோ ரிடங்களில் கண்டு இவை நமக்கென்ன பிரயோஜனமென்று அவைகளைத் தாண்டி இன்னொ ரறைக்குட் பிரவேசிக்க அவ்விடம் அரிசி பருப்பு முதலான சாமக்கிரிகைக ளிருக்கக்கண்டு தன் வீட்டிற்குவந்த பாகவதர்களுக் கெவ்வளவு வேண்டுமோ அவ்வளவு மாத்திரமே கைக்கொண்டு தகப்பனுக் கெட்டிக்கொடுக்க அவ ரதைவாங்கி மூட்டை கட்டிக்கொண்டு மனதிற் குறையுற்றவராய், பிள்ளாய்! நாமிதைக் கைக்கொண்டு இவ்விடத்தைவிட்டு, வீட்டுக்குப்போவோமாகில் நமக்கு சவுக்கிய முண்டாகாது. இதர திருடர்களிந்த துவாரத்தின் வழியாய்ப் பிரவேசித்து இஷ்டமான வஸ்துக்களைக் கொண்டுபோனால்நமக்கு பாபம் வந்து நேரிடும் அதனால் சந்வ ஹானிவரும், உள்ளே தூங்கும் மனிதனை யெழுப்பி விட்டுப் போவது யுத்தமாகு மென்று சொல்ல, இவ்வுரைக்கிசைந்து கமால் உள்ளே பிரவே

சித்து படுத்துக்கொண்டு நித்திரைசெய்யு மவனை யெழுப்பி, நாங்கள் திருட ரிரண்டுபேர் சாமக்கிரிகையை திருடிக்கொண்டு போகிறோம், உன்னுடைய சொத்தை நீ பத்திரப்படுத்திக் கொள்ளக் கடவையென்று சொல்லி துரிதமாய்வந்து துவாரத்தில் நுழைந்து வயரளவு வெளிவருமளவில் உள்ளிருந்த வர்த்தக னோடிவந்து கமால் கால்களைப் பிடித்துக்கொண்டான். இதைக் கண்டு கமால் தகப்பனைப் பார்த்து அய்யபோ! வர்த்தகன் உள்ளேவந்து கால்களைப் பிடித்துக் கொண்டான். சற்றுநேர மிவ்விட மிருந்தா லிதரஜனங்கள் வந்து கூடி விடுவார்கள். நம்மை திருடர்களென்று விபரீதஞ் செய்வார்கள், வீட்டில் வந்த பாகவதர்களுக்குப் பூரணமாகப் பக்ஷணை யிடவேண்டும், ஆனதைப்பற்றி எனது தலையை நறுக்கிக் கொண்டு போம், மாயா மமதைகளை இச்சமயத்தில் நீர் மனதில் வைக்கவேண்டாம், அப்படி வைத்தால் ஸத்வஹானி வரும், நாம் திருடர்களென்று பாகவதர்க ளறிந்தால் விலகிப்போய்விடுவர்கள். ஆபத்தென் றெண்ணுமல் சாந்தியைக்கொண்டு என் தலையை நறுக்கிக்கொண்டு போமென்று சொல்ல, கபீர்தாஸ ரதற்குச் சந்தோஷித்து, கத்தியைக்கொண்டு குமாரன் கழுத்தை யறுத்துச் சாமக்கிரிகையும் சிரசையும் கைக்கொண்டு, தன் வீடுவந்து நடந்த சங்கதியை மனையாளுக்குத் தெரிவித்து சாமக்கிரிகையையும் தலையையுங் கொடுததனர். அம்மாது, குமாரனுடைய தலையைக் கண்டவுடன் அப்பா! மகனே! சாதுக்களுக் காகவே சரீரத்தை வளர்த்து வந்தையோ? பரமாத்மாவை பஜித்து வம்சத்தை உத்தரித்தாய், உலகில் வந்தபிறகு சமுஸாரத்தி லிருந்தே சீருடன் முக்தியை பெற்றயோ? என்று சொல்லி துக்கத்தை யுடையவளாய் அவ்விட மொரு மூலையில் அந்தலையை யொளித்துவைத்து சஞ்சலமற்று தைரியத்துடன் சமையல் செய்து பக்வான்னங்களும், பக்ஷியங்களுஞ் செய்து பாகவதர்களுக்குப் போஜன மளித்தாள். எனக்கிது சுதினம், சாதுக்களுடைய சேவை நேர்ந்தது, மேன்மையாச்சு தென்று கபீர்தாஸர் சந்தோஷத்துடன் அனைவருடனும் சம்பாஷித்துக்கொண்டு அவர்களுடைய சேவையி லிருந்தனர். அருணோதயமா மளவில் சாதுக்க ளனைவருமெழுந்திருந்து ஸ்ரீஹரி ஸ்மரணையைச் செய்து ஸ்நானத்திற்குச் சென்றனர்.

இதிப்படி யிருக்க வர்த்தகன் தன் வீட்டில் விசேஷமாகக் கூச்சலிட்டு திருடர்! திருடர்! என்று உறக்கக் கூவினன். இதைக் கேட்டு அக்கம் பக்கத்திலிருந்த ஜனங்க ளவ் வீட்டை வந்து பார்க்குமளவில் சிரசில்லாத தேகத்தைக்கண்டு இன்னதென்று சொல்லத் தெரியாமல் திருடன் சிரத்தை வேறொரு திருடன் கண்டனைச் செய்துக்கொண்டு போய்விட்டான். இதற்காக விசனப்பட வசரமில்லை. திரவியத்தை வைத்துக்கொண்டு ஒருவனாகி தான் படுத்துக்கொண் டிருப்பது தகாது. பொருள் நிமித்தம் பெருத்த உபத்திரவங்கள் நேரிடும். அது அனர்த்தங்களுக்கெல்லா மதிஷ்டானமாக விருக்கும். தனம் தன்னைக் கொல்வதற்கு மூலமா யிருக்கும். வந்த திருடர் திரவியத்தைத் தீண்டாமல் வெறும் ஸாமக்கிரிகையை மாத்திரமே கொண்டுபோனார்கள். அவர் சுகுணங்களையுடைய சாதுக்களா யிருப்பார்கள். உனக்கு சவுக்கிய மாச்சுதென்று சொன்னார்கள். பின்பு வர்த்தக னரசனிடஞ் சென்று சங்கதி யனைத்தையும் விளப்பினன். அவ்வரசன் விசாரணை செய்யாமல் அத் திருடன் சரீரத்தைச் சூலத்தில் போடும்படி சொல்லிவிட்டான். சேவக ரனைவரு மச்சரீரத்தைக் கொண்டு வந்து முச்சந்திகள் கூடுமோரிடத்தில் சூலத்தை நட்டு அதனி லச்சரீரத்தை யிருக்கச்செய்து திருடர்களுக்கு செய்யும் சிக்ஷை யிது வென்று சகலருக்குந் தெரிவித்தார்கள்.

கபீர் தாஸர் வீட்டிற்குவந்த சாதுக்கள் கங்கா ஸ்நானம் செய்துக்கொண்டு துவாதசோர்த்வ புண்டரங்களைத் தரித்து கபீர் தாஸரிடம் விடை கொண்டு செல்ல நிற்க, அவர் மனைவி வெளியில் வந்து கண்களில் ஜலம் பெருக, ஸ்வாமிகளே! கருணைகடாக்ஷம் வைக்கக்கடவீர்கள். திரும்பி எப்பொழுது பார்ப்பேனோ வென்று பக்தியுடன் தீர்க்கதெண்டஞ் ஸமர்ப்பித்து புருஷனும் பாரியையு மவர்களுடன் வழிக்கூட்டி யனுப்பச் சென்றனர். முச்சந்திவீதி வருமளவில் சூலத்தில் சாது ஜனங்க ளோர் சிரசில்லாச் சரீரத்தைக் கண்டு விந்தையடைந்து சற்றுநேர மவ்விடம் நின்றனர். அச்சமயத்தி லந்த பிரேதத்தின் கைகளிரண்டு மந்த சாதுக்களுக்கோர் கும்பிடு போட்டது. இதைக்கண்டு அவர்களாச்சரியப்பட்டு இதுவரையிலந்த மிந்த பிரேதசரீரம் பிராணனை வைத்துக்கொண்டிருப்பதற் கென்ன காரணமோ! எப்படி வைத்துக்கொண்

டிருந்ததோ வென்று வினவ, கபீர்தாசர், ஸ்வாமிகளே! இவ்வுலகில் இவனுமோர் பக்தனுகயிருப்பவன், தேவரீர்களுக்கு நமஸ்கரிக்க வேண்டி தனது பிராணனை வைத்திருந்தான், அவன் ஸங்கல்பம் நிறைவேறினதைச் சகலருக்குந் தெரியச் செய்தன னென்றார். அதைக்கேட்டு சாதுக்கள் இத்திருடன் யாரென்று வினவ, கபீர்தாஸர் நடந்த சங்கதியை நவின்றனர். சாதுக்கள் அதைக் கேட்டு நாங்க ளன்னங் கொடுக்கச்சொல்லி கேட்காதிருக்க உத்தமனான குமாரனை யேன் கொன்றாய்? அச்சிரசைக் கொண்டுவரும்படி அவர்க ளாக்ஞாபிக்க கபீர் மனைவி தன் வீட்டிற்குச் சென்று அதனைக் கொண்டுவந்தாள். அப்பொழுது சாதுக்கள் கமால் சரீரத்தை சூலத்திலிருந்து கீழேயிறக்கி பூமிமேல் வைத்து சிரசைச் சரீரத்துடன் சேர்க்குமளவில் ஆச்சரியத்துடன் கமா லெழுந்திருந்து சாதுக்களுக்கு பிரீதியுடன் தெண்டஞ் ஸமர்ப்பித்து நின்றான். அப்பிள்ளையின் நற்குணங்களுக் கானந்தித்து ஆசீர்வாதங்களை யனேகமாகச் செய்துப் பாகவதர்கள் பாதசாரிகளாக போயினர். காசி க்ஷேத்திரத்தி லிருக்கு மனைவரும் கபீரையும் கமாலையுங் கொண்டாடினார்கள். பின்பு கபீர் பிள்ளையை அழைத்துக்கொண்டு மனைவியுடன் வீடுவந்து சேர்ந்தார்.

### கபீர் மனைவி.

ஒருநா ளிரவில் சாதுஜனங்கள் யாத்திரை செய்துக்கொண்டு கபீர் வீட்டிற் கெல்லோரும் வந்தனர். பார்யையும் பர்த்தாவுமவர்களுக்கு பக்தியுடன் தெண்டஞ் ஸமர்ப்பித்து உசிதாஸனங்களி லுட்காரும்படி பிரார்த்தித்துப் பூஜித்தார்கள். பின்பு புருஷன் மனைவியைப் பார்த்து இவர்களுக்கு அன்னங் கொடுத்து ஆதரிப்பது உத்தம மாகுமென்று சொல்ல, மனையாள் கலக்கமுடையவளாய் ஸ்வாமி! என் செய்வேன்! அணுவள வன்னமுங்கிடையாமல் அமிதமான கஷ்டத்துடன் உபவாசமாக இன்றிருக்கிறோமே! அங்கம் பக்கத்தில் கடன் கேட்டாலும் அகப்படாம லிருக்கின்றதே! வர்த்தகனையாவது கேட்டு வருகிறேனென்று கடைவீதி சென்றனள். பாதையில் ராமநாமத்தைச் சொல்லிக்கொண்டு போகுமளவில் கடைகளனைத்தும் மூடப்பட்டு ஒரு கடைமாத்திரம் திறந்திருக்கக் கண்டாள். அம்மாது அக்கடைக்

குச் சென்று வர்த்தகனைப்பார்த்து ஐயா! வீட்டில் சாதுக்கள் வந்திருக்கிறார்கள். நீர் உபகாரஞ் செய்து சாமக்கிரிகையை அவர்களுக்குக் கொடுப்பீராகில் அதன் விலையைக் கொண்டுவந்து கொடுத்துவிடுவேன், தப்பமாட்டே னென்றாள். அவனனுகூல னாகாமல் பெயரென்ன? ஊரென்ன? வென்று கேட்க, அம்மாது நான் கபீர்தாஸர் மனைவி, இவ்வூரி லெனது வீட்டிற்குச் சாது ஜனங்கள் வந்தார்கள். அவர்களுக்காக சாமக்கிரிகையைக் கேட்கிறே னென்றாள். வர்த்தக னவளுடைய சுந்தரமான முகத்தைக்கண்டு காமாதுரனாகி மோகமுற்று என்னுடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்வையாயின் அரிசி பருப்புமுதலான சாமக்கிரிகையையும் வஸ்திர பூஷணங்களும் பொன்னையுங் கொடுக்கிறேன். இல்லாவிடில் வெறுமனே போகலா மென்றான். அப்போதம்மாது தனக்குள் எண்ணுவாள் சாதுக்களுக் கன்னமிடாவிட்டால் சத்வ ஹானிவரும். இன்ன மோரிடத்திலும் சாமக்கிரிகை அகப்படாது, விதிநிஷேதங்கள் லௌகிகருக்கே விதிக்கப்பட்டிருக்கிறது, சகலத்தைவிட்டு ஸ்ரீஹரி சரணங்களையே பிடித்தவனுக்கு நுண்ணறிவால் பார்க்கும் பொழுது தர்மாதர்மங்கள் வேண்டுவதில்லை. பரதன் தனது தாயாரான கைகேயி வார்த்தையை கேட்கா திருந்தபடியால் ரகுராமருடைய திருவடியைச் சேர்ந்தான். பிரஹலாதன் தகப்பனுடைய வார்த்தையைக் கேளா திருந்தமையால் பரமபுருஷனான கோவிந்தனை யடைந்தான். மாபலி, குருவாக்கையைக் கடந்து வாமனவருளைப் பெற்றான். கோபிகைக ளனைவரும் கிருஷ்ணமூர்த்தி மேல் பிரீதராகி தாய் தந்தைகளை விட்டனர். இவ் வண்ணமான செய்கைகளை யெல்லாம் தான் மனதி லெண்ணிக் கொண்டு பரமாத்மாவின்மேல் பாரத்தைப் போட்டு ஸ்திமித மனமுடையவளாய் வர்த்தகனைப் பார்த்து ஐயா! நீர் சாமக்கிரிகையை முன்னே கொடும், நான் திரும்பி இப்போதே வந்து உன் கோரிக்கையை நிறைவேற்றக் கடவேன், சாதுக்க ளுபவாசமாக விருந்து படுத்துக்கொள்வார்க ளென்றாள். வர்த்தகன், நீ திரும்பிவருவா யென்பது என்ன நிச்சயமென்ன, அதற்கு அம்மாது சத்தியஞ் செய்து சாமக்கிரிகையைக் கொண்டுவந்தாள். அவள் வீட்டிற்கு வந்தவுடன் சாதுக்க ளனைவரு மவளை நோக்கி தாயே! சாமக்கிரிகையை கொடுத்தால் சமையல் நாங்களே செய்துக்கொள்வோ மென்

ரூர்கள். அப்படியே யாகக்கடவதென்று அவள் சாமக்கிரிகையை யவர்களுக்குக் கொடுத் துபசரிக்க அவர்கள் சமையல் செய்து பக்ஷித்தனர். பின்பு அம்மாது பர்த்தாவை ஏகாந்தத்திற் கழைத்து, பிராண நாதரே! வர்த்தகனுக்கு வாக்கைக் கொடுந்து பதார்த்தங்களை வாங்கி வந்தேன். இப்போது அவனுடைய இஷ்டத்தை தீர்க்கவேண்டு மானதால் தேவரீ ரனுக்ஞைத் தந்தருளவேண்டும்; போகிறேனென்றாள். அதைக்கேட்டு கபீரா னந்தத்தையடைந்து வாணியன் செய்த உபகாரம் விசேஷ மாச்சுது. சாதுக்களுக்காக தேகத்தை விற்பது சந்தோஷகர மானது. இந்தவிரவில் நீயொண்டியாய் சேற்றி லெப்படி நடந்து செல்லுவாயென்று சொல்லி மனையாளைத் தான் சுமந்துக்கொண்டுபோய் அக்கடையினிடத்தில் விட்டு சங்கோசமின்றி அவனிஷ்டத்தை நீ சம்பூர்த்தி செய்யக்கடவாய். சாதுக்களுக் கவனன்னமிட்டதால் நமக்கு சவுக்கியமாயிற்று. நான் சாதுக்களுடைய சேவைசெய்யப் போகிறேனென்று வீட்டிற்குத் திரும்பினர். அம்மாதும் வர்த்தகனிடம் சென்றாள். அவனு மெப்போ வருவாளோவென் றெதிர்பார்த்திருந்து அவளைப் பார்த்தவுடன் அதிக சந்தோஷமடைந்து மழையிலும் சேற்றிலும் கால்களுக் கழுக்கொட்டாம லெப்படி வந்தாயென்று கேட்க, அம்மாது சொல்லுவாள், நீர் சாமக்கிரிகையைக் கொடுத்தபடியால் சாதுஜனங்க ளதிக சந்தோஷத்தை யடைந்தார்கள். அவர்கள் பூர்ணதிருப்தி யடைந்தபடியா லந்த புண்ணிய முமக்கே வாச்சுது. நீர் செய்த உபகாரத்திற்கு நான் எவ்வளவு கொடுத்தாலும் போராது. நான் பதிவிரதை யானபடியால் பர்த்தாவினுக்ஞையை கேட்டேன், அவர் சம்மதித்து என்னை யிதுவரைக்கும் சுமந்துக்கொண்டுவந்து சந்தோஷத்துடன் விட்டுப்போனர். உம்முடைய் மனேபிஷ்டத்தை நீர் தடையின்றி செய்துக்கொள்ளலாமென்றாள். இதைக்கேட்டு அவ்வர்த்தக னனுதாபத்தையுடையவனாய், இம் மானிடதேகத்தை யடைந்து சார்ந்தகமாக நானொன்றும் நன்மை தேடி செய்துக்கொள்ளவில்லை. எண்பத்து நான்குலக்ஷ யோனிகளில் திரிந்துத் திரிந்து அருமையாக இம்மானிடசரீர மமைந்தது. அது கிடைத்தும் விஷய வாசனைகளிலேயே உழண்டுக்கொண் டிருந்துவிட்டேன். துளசிவனத்தைத் துண்டித்துக் கெடுத்தாப்போ லெனக்கு தோஷமுண்டாயிற்று. கபீர்

தாஸர் ஹரிபத்தியி லதிக நைபுண்ணியத்தை யுடையவர். போக தானத்திற்காக பத்தினியைக் கொடுப்பவர்களை யெங்கும் கண்டதில்லை. பதிவிரதையிற் சிறந்த அம்மாதை நான் மாத்ருவாக வெண்ணுவேனென்று அவளுக்கு நமஸ்கரித்துத் தாயே! என்னை க்ஷமிக்கக் கடவாய். நான் குடில புத்தியாற் பிழை செய்துவிட்டேன், மூடனான பாலகன், என்னை கபீர்தாஸரிடம் கொண்டு போய் அவர் திருவடிகளி லிடங்கொடுக்கச் செய்யுமென்று சொல்ல, அம்மாது சொல்லுவாள், ஸ்ரீராமருடைய கிருபை நேர்ந்ததே உமக்கு அனுதாப முண்டாயிற்று, பாபமனைத்தும் போயிற்று, பவரோகத்தைக் கடந்தீரென்று அவனை கபீர்தாஸரிடம் கொண்டுவந்து விட்டாள். வர்த்தக னபிமானத்தைவிட்டு ... பிரியத்துட னவருக்கு நமஸ்கரித்து நிற்க, கபீர் கருணை... ராய் அவனை யாலிங்கனஞ் செய்துக்கொண்டனர். வர்த்தகன இராம பஜனையில் பிரீதி யுடையனும் அதனை செய்து கிருதார்த்தனானன்.

### தத்துவன் ஜீவன்.

கபீர் தாஸரிடம் ஞானதேவரும் நாமதேவரும் யாத்திரை செய்துக்கொண்டு வந்திருந்தனர். ஒருவர்க் கொருவர் வந்தனங்களைச் செய்துக்கொண்டு பிரீதராய் சந்தோஷத்தை யடைந்திருக்க நாமதேவர் சொல்லுவார், அனேக யிடங்களில் யாத்திரை செய்துக்கொண்டு உம்மை யிவ்விடத்திற் கண்டோம் எங்குளுக்கு க்ஷேமமாயிற்று. ஆனந்த மடைந்தோ மென்று ஏகநிஷ்டையுடனனைவரும் கூடிக்கொண்டு பகவானுடைய கருணையைப் புகழ்ந்து பாடுவது மாடுவதுமாக யிருந்தார்கள். நாமதேவர் பண்டரி புரத்திற்கு வரவேண்டுமென்று கபீர் தாஸரை யழைத்தனர். அதற்கவர் சம்மதிக்க நாமதேவரும் ஞானதேவரு மவருடைய விடைபெற்றுக்கொண்டு இதரமான தீர்த்தங்களுக்குச் சென்றார்கள்.

சிலநாள் கழிந்தபின் கபீர்தாசர் யாத்திரைக்காக புறப்பட்டு பண்டரி க்ஷேத்திரத்திற்குச் சென்று பாண்டு ரங்கரை பக்தியுடன் சேவித்து பிரீதியுடன் நாமதேவர், நிவிருத்திநாதர், ஞானதேவர் முதலான பக்தர்களையும் சேவித்து இராமேஸ்வரத்திற்குச் செல்லுமளவில் அவ்வவ் விடங்களில் ஹரிகுணனுவாதஞ் செய்துக்கொண்டு நடந்தனர். ஓர் தினத்தி லோர்பட்டணத்தி

லிறங்கி யெல்லோருங் கேட்க ஹரிகுணனு வாதத்தை ஆனந்தத்துடன் பாடினர். அதைக் கேட்டுக்கொண்டிருந்த ஜனங்களில் தத்துவன், ஜீவனெனு மிரண்டு பிராமணர்களுடைய மனங்கள் கரையப்பட்டு ஆனந்தத்துடன் கபீர் தாஸருக்குச் சரணமடைந்து தெண்டஞ் ஸமர்ப்பிக்க அவர்கள் பரிசுத்த லக்ஷணங்களை பொருந்தினவர்களென்று கபீர் கண்டுகொண்டு அவர்களுக்கு தாரக மந்திரத்தை அனுக்கிரகிந்தனர். பின்பு அவர் ராமேசுவரத்திற்குச் சென்று சேதுதரிசனஞ் செய்து இராமலிங்கரைச் சேவித்து அமிதமான பிரேமையுடன் காசிக்ஷேத்திரத்தைச் சேர்ந்தார்கள்.

ஜீவனும் தத்துவனும் தம்முடைய பந்துக்களாலு மிதர பிராம்மணர்களாலும் பஹிஷ்காரம் பண்ணப்பட்டு நிந்தைக்குட்பட்டவர்களாய் குரூரமான சிக்ஷையை யடைந்தார்கள். இதர பிராம்மணர்கள் போஜனத்திற்கு கூப்பிடாதிருப்பர்கள். குலத்திலுள்ளோர் வெகுவாகத் தொந்தரையைக் கொடுத்தாலும் குரு திருவடிகளே கதியென்று சத்தியத்தை யுடையராய் குடும்பத்தில் சிலகாலமிருக்க ஒருவனுக்கு குமாரன்வயதுடையவனுனன், மற்றொருவனுக் கோர் குமாரத்தி யௌவன தசையடையுங் காலமாயிற்று. அப்பெண்ணுக்கும் பிள்ளைக்கும் விவாகம் செய்யும் பொட்டு பிள்ளையும் பெண்ணு மகப்படா திருந்தார்கள். அதைப்பற்றி ஜீவனும் தத்துவனும் கபீர்தாஸரிடம் வந்து தெண்டனிட்டுச் சங்கதியைத் தெரிவிக்க அவர் சொல்லுவார், என்னுடைய உபதேசத்தை நீங்கள் கொண்டதாதலா லிவ்வண்ண மாயிற்று. உங்களிருவர்களில் சம்பந்தங்களைச் செய்துகொண்டால் பரமபதத்திற் கேகுவீர்களென்றூர். இதைக்கேட்டு அவ்விருவரு மஞ்சலி அஸ்தராய், நமஸ்கரித்து தேவரீர் கிருபையென்று சொல்லித் திரும்பிப் பிரயாணமாகி தங்கள் வீடுவந்து சேர்ந்து விவாக லக்னத்தை வைத்து சாமக்கிரிகையைச் சேகரப்படுத்தி பிள்ளைக்கு உபநயனத்தையும் செய்து மறுநாள் விவாகம்செய்ய நிச்சயித்துக்கொண்டிருக்க, அவ்வூரில் வசிக்கும் பிராம்மணர்கள் வந்து பந்துக்களின்றி விவாகமெப்படி செய்வீர்களென்று கேட்க, அவ்விருவரும் பிள்ளையும் பெண்ணும் வீட்டிலேயே யிருக்கிறூர்களாதலால் திருத்தமாக செய்துக் கொள்ளுவோம், பசுபக்ஷிகளைப்போல வெங்களுக்கு ஜாதியுடன் காரிய மில்லையென்று சொன்னூர்கள். இவர்கள் பகவத் கிரு

பையையே கோரினவர்களென்று பிராம்மணர்களுக்கு வெளியாயி ற்று. பின்பு பிராம்மண ரனைவருங்கூடி பஹிஷ்காரத்தைப் போக் கிவிட்டு அவர்களே பிள்ளையையும் பெண்ணையு மேற்படுத்தி விவா கங்களை முடித்து கர்ம மார்க்கங்களை கெடுக்கக் கூடாதென்று ஜாதி யில் கலக்கச் செய்துகொண்டார்கள். இது தங்களுடைய ஆசா ரியர் கிருபையென்று மனதி லெண்ணி அவ்விருவர்களும் காசிப ட்டணத்திற்குச் சென்று குருவுக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து நடந்த சங்கதி யனைத்தையு மறிவித்தார்கள். அதற்கு கபீர்தாஸ ரானந்தித்து ஆசீர்வசனங்க ளனேகமாகச் செய்ய அமிதப்பிரேமை யுடன் திரும்பி தங்கள் வீடு வந்து சேர்ந்தார்கள்.

## பத்ம நாபன்.

காசிபட்டணத்திலோர் வர்த்தக னதிக சம்பத்தையும் ... தியு முடையவனுய் லாவண்யமான மனையாளுட னிருந்து ... பிள்ளைகளைப் பெற்று வாழ்ந்திருந்தான். நல்ல பந்துக்களும் ம... வகர்களும் செல்வமும் குறைவின்றி யுடைந்தாயிருந்தான். கொ ஞ்சகாலத்திற்குப்பின் சரீரத்தில் கோரமான ஓர் வியாதி கண்டது. பூர்வ கருமவசத்தால் புழுக்க ளச்சரீரத்தில் பொருந்தி யிருந்து, துர்க்கந்தமெங்கும் வீச ஜனங்கள் அவனைக் கிட்ட சகிக்காம லிருந் தார்கள். அதற்குத் தகுந்தவபித்திய விசேஷங்கள் அளவின்றி நடந் துக்கொண்டிருந்தன. நவக்கிரக சாந்திக்காக பிராம்மணர்க ளநே... சரைவிட்டு பிரபலமாக ஜபஹோமங்களை பந்துக்கள் செய்வித்தார் கள். குலதேவதைகளுக்கு மனேகமான பூஜைகளைச் செய்தார்கள், மல்ஹாரி யென்னு மோர் மஹாதேவதையையும் கும்பிட்டார்கள், ஸப்தசதி யென்னும் சாக்தேய கிரந்தத்தைப் பாராயணஞ் செய் வித்தார்கள். குப்த, தானங்களையும் வெகுவாகச் செய்தார்கள். சூரிய நமஸ்காரங்கள், காயத்ரி ஜபம், ருத்ராபிஷேகம், கணபதி ஜபம், காலபைரவர்ஜபமு மிவை யனைத்தையுஞ் செய்வித்தார்கள். இவை யெவ்வளவு செய்யினும் வியாதி குறைவுபடாமல் பெருகிக் கொண்டு வருவதை வர்த்தகன் கண்டு பந்துக்க ளனைவரையும் சமீ பத்தி லழைத்து வியாதி நாளுக்குநா ளெனக்கு விருத்தியாய்க் கொண்டு வருகிறது, விபரீதமான கருமத்தை விசேஷமாகப் பூர் வம் செய்தேன். அதனாலே வியாதியும் சம்பவ மாச்சுது. என் மீதினி ஆசையை வைக்கவேண்டாம். பாகீரதியி லென் சரீரத்

தைப் போட்டுவிடுங்கோ ளென்றான். அதைக்கேட்டு பந்துக்களனை வரும் வெகுவாக அழத் தொடங்கினார்கள். பின்பு அந்த வர்த் தகனைக் கங்கைக் கரைக்கு அழைத்துக்கொண்டு போய் பந்துக்க ளனைவரும் பானைகளைக் கொண்டுவந்து அவ் வர்த்தகனுடைய கால்களுக்கு இரண்டு பானைகளும் தலைக்கிரண்டு பானைகளைக் கட்டி விடுத்துப் படுத்தினார்கள். அனேக ரிந்த விந்தையைப் பார்க்க வந் தனர். அவ்விடத்தில் கபீருக்கு சிஷ்யனான பத்மநாப னெனும் பிராம்மணன் ஆசமனஞ் செய்ய அவ்விடம் சென்றான். ஆத்ம ஹத்தி செய்துக்கொள்ள அவ்விடம் வந்திருக்கும் வர்த்தகன் சங் கதியைக் கேட்டு அவனிடம் சென்று சொல்லுவான். ஐயா! வர்த்தகரே! நீர் பிராணத்தியாகம் செய்ய யெத்தனிப்பது பாப மாகும். எண்பத்துநான்கு லக்ஷம் யோனிகளில் திரிந்து திரிந்து அருமையாக விந்த மானிடதேகம் வந்தது. இதில் நீர் ஆத்ம ஹத் திக்கு உடன்படுவீராயின் பவநரக மும்மை யெப்பவும் விடாது மனிதப் பிறவியை நாமடைந்தால் மாதவனைப் பஜிக்கவேண்டும். அதனால் ஜனனமரணங்கள் போய்விடும். ஸத்தியத்தில் நிற்கவே ண்டுமென் றுரைத்தான். இதைக்கேட்டு வர்த்தகன், உபாயங்க ளெத்தனை செய்யினும் தினதினமும் வியாதி விருத்தியாய்க் கொ ண்டே வந்தது. அதனாற் றுன்பத்தை யடைந்து பொறுக்கக் கூடாமல் துக்கமுடையவனாய் பாகீரதியில் விழுந்து சாவது பாவ னமென் றெண்ணினே னென்றான். பத்மநாப னிதைக்கேட்டு விகி தமான உபாய மொன்றுண்டு. அதனை நீங்க ளனுசந்திக்காமல் அலக்ஷியம் செய்தீர்கள். இப்பொழுது ஸ்ரீராம ராமவென்று நீர் சொல்வீராகில் ஸர்வேஸ்வரனுடைய கிருபையால் வியாதி சவுக் கியப்படும். வேதம், புராணம், ஜபம், தப மிவைகளை விதிபூர்வ கமா யாரம்பிக்கு மிடத்தில் இராம நாமத்தைச் சொல்லாம லவை கிரியா காரியமாகா, ஹரிநாமத்தைவிட்டு அனேக தேவர்களை விசேஷமாகப் பூஜித்தாலும், அனேக யாத்திரைகளைச் செய்யி னும் கொஞ்சமேனும் சுகத்தை அடையார்கள். இராமத் தியா னத்தைவிட்டு யோகசாதனம், செய்வார்கள், அன்னதானம், ரத் தினதானம், கோதானம், பலிகொடுத்தல் செய்வதெல்லாம் வியர்த் தமாகும். இதரஜனங்களையும் பத்மநாபன் கண்டு நீங்களனைவரும் அன்போடு மூன்றுதரம் ராம நாமத்தைச்சொன்னால், பவரோகமே

நசித்து விடுமென்று சொல்ல, வினயத்துடன் வந்த ஜனங்களனைவரும் இராம நாமத்தைச் சொல்லலுற்றார்கள். வர்த்தகனும் இராம நாமத்தைச் சொல்லத் தொடங்க உலகத்தார்காண, வியாதி உபசமனமாயிற்று. வியாதியுடன் கூடின இதர ஜனங்களும் தங்களுக்கிருந்த நோய்களி லிருந்து விடுதலையாயினார்கள். வர்த்தக னெழுந்திருந்து பத்மநாபனுக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து சுகமுடனின்றான். இதர ஜனங்க ளனைவரும் பத்மநாபன் மகா குணசாலியென்று கொண்டாடினார்கள். அனேகம்பே ரப்போது இராம நாமத்தை நியமனத்துடன் சொல்லத் தொடங்கினார்கள். வினீதனாகி வர்த்தகன் தன் வீட்டிற்குச் சென்றான்.

சில ரிந்த சங்கதியைக் கபீர் தாஸருக்குத் தெரிவித்தார்கள். அதைக் கேட்டு கபீர் பத்மநாபனை அழைத்து மூலகாரணமான இராம நாமத்தை மூன்றுதரமேன் சொல்லச் சொன்னாய்? பக்தி யுடன் ஒருதரம் சொன்னால் பந்தம் விட்டுப்போம். வாலாகோளி இராம பஜனையால் வால்மீக மகாருஷி யானார். காலாந்தரத்தில் இராமாயண மெனும் கிரந்தமவரா லுண்டாயிற்று. நூறு கோடி கிரந்தத்தை அவர் செய்ய அதை யனைத்தையுஞ் சாம்பமூர்த்தி கைக்கொண்டு ஸ்வர்க்க மர்த்திய பாதாள மென்னும் மூன்று லோகங்களுக்கும் பங்கிட்டார். அவைகளி லொரு சுலோகம் மீந்தது. அது முப்பத்திரண் டக்ஷரங்களுடன் கூடினதாகும். அதையும் மூன்று லோகங்களுக்குப் பங்கிட மிகுந்த இரண்டெழுத்தைத் தான் நிறுத்திக் கொண்டார். சமுத்திரத்தைக் கடையுங் காலத்தில் மகா விஷமானது பிறந்து. மூன்று லோகத்தையுந் தகித்துக்கொண் டிருந்தது. அவ்வேளையில் சந்திர சேகர ரவ்விஷத்தை விழுங்கி இராமாவென்று சொன்னமாத்திரத்தில் சீதலத்தை யடைந்தனர். இப்படி யிருக்க ஒருதரம் பக்தியுடன் நாமத்தைச் சொன்னால் சகலமும் சித்திக்குமென்று கபீர்தாஸர் தெரியச் சொன்னார்.

---

## ஜகமித்திரன் சரித்திரம்.

பரலீவைஜனுப மென்றொரு கிராமத்தில் பிராம்மண வம்சத்தில் ஜகமித்திர ரென்றொருவ ரிருந்தனர். அவர் வீட்டு வீட்டுக்கு தானிய பிக்ஷை வாங்கிக்கொண்டு அதனால் திருப்தி யுடைய

வராய்த் தனது குடும்பத்தை போஷணஞ் செய்தும் பெருமாள் விஷயத்தில் பக்தியுடையவராய் அவருடைய குணானுவாதம் நால்வருக்கும் சொல்லிக்கொண்டு மோகத்தையடையாமல் மாதவனைத் தியானஞ் செய்துவருவார். அனேகரவரை யாதரித்துக் கொண்டு அவர்சொல்லும் ஹரிகதைகளைக் கேட்டுக் கொண்டு மிருப்பார்கள். அவர் புண்ணியசீல ரென்று, தனிகரும் தரித்திரரும் தங்களுக்குள் பேசிக்கொண்டிருந்தார்கள். சிலகால மிப்படி நடந்தேறிவர அவர் சீரான கீர்த்தியை யடைந்திருந்தனர்; இதைக் கண்டு பொறாமை கொண்டு குதர்க்கரான சில துர்ஜனர்கள் கூடி ஓரிரவில் விஷ்ணுபக்தர் நித்திரை செய்துகொண்டிருக்க வீட்டிற்கு நெருப்பை யிட்டுச் சென்றனர். அவ்வேளையில் அவர் நித்திரை தெளிந் தெழுந்திருந்து பார்க்குமளவில் நாலுபக்கத்திலும் நெருப்பு சுற்றிக் கொண்டது. மனைவி மக்களுடன் தான் மத்தியில் நின்றனர். அத்தருணத்தி லவருக்கொன்றுந் தோன்றாமல் ஹரி! வாசுதேவா! அநாதரக்ஷகா! ஆபத்பாந்தவா! புண்டரீகவரதா! புருஷோத்தமா! நாராயணா! நரஹரி! கோவிந்தா! புண்டரீகாக்ஷா! பாண்டுரங்கா! என்று முறையிட்டுச் சீக்கிரத்தில் வந்து ரக்ஷியுமென்று பிரார்த்திக்க, இதைப் பாண்டுரங்கர் செவியேற்றி சுதரிசனத்தைக் கொண்டு ரக்ஷித்து அவரை சுகமுடனிருக்கச் செய்தார். பக்கத்து வீடுகளிலிருக்கும் ஜனங்கள் பயமடைந்திருந்தனர். வெளிபார்வைக்குப் பக்தன் குடும்பத்துடன் பஸ்மமானா ரென்றெண்ணி பிரஜைகள் பரிதாபப் பட்டனர். உதயமானவுடன் நெருப்பனைத்துஞ் சாந்தியாச்சுது. புரஜனங்கள் அனைவரும் கூடிக்கொண்டு அவரைப்பார்க்க வந்தனர். அவ்விடத்தில் சாம்பல் கரி முதலானவை யொன்று மில்லாம லிருந்தது. பக்தர் பாண்டுரங்கரைப் பாடிக் கொண்டு வேடிக்கையுடன் விட்டல மூர்த்தியின் மகிமையை விசேஷமாகக் கொண்டாடிக் கொண்டு சுகமாக விருக்கக் கண்டு, குந்திதேவி பிள்ளைகளை அரக்குமாளிகையிலிருந்து முற்காலத்தில் கோவிந்தன் காப்பாற்றியது போல் இன்றிவர்களை ஈஸ்வரன் காப்பாற்றினா ரென்று சொல்லிக் கொண்டு ஆனந்தத்துடன் அவரவர் வீடுகளுக்குச் சென்றனர். அந்த பக்தரும் ஹரியினுடைய கிருபையை பெருமையென்றெண்ணி அடிக்கடி தெண்டஞ் சமர்ப்பித்தனர்.

சஜ்ஜனரான சிலர் கூடி அந்த பக்தருக்கு பூமிதானங் கொடுத்தால் புண்ணியமா மென்றெண்ணி தங்கள் எத்தனத்தை அவருக் கறிவித்தனர். ஜகமித்திர ரவர்களைப் பார்த்து கிருஹஸ்தர்களே! பிக்ஷாடனை செய்வதினாலே குடும்பரக்ஷணை குறைவின்றி நடந்தேறி வருகின்றது. ஆசக்தியுடன் பூமியைக் கைக்கொண்டால் பந்தமாம். விசுவத்திற் கெல்லாம் குடும்பியான நாராயணன் விகிதமாக ரக்ஷித்துக் கொண்டிருக்க நிலையற்ற விவ்வாசைகளில் நிலைப்புவைத்தல் நாசகரமா மென் றுரைக்க, கிரகஸ்தர்கள் சொல்லுவார்கள் நாங்கள் விதை விதைத்து தானியம் பலிதமான பிறகு வுமக்குக் கொடுப்போ மென்று சொல்லி தருமமாக அவ்வந்தணருக்கு கொஞ்சம் பூமியை தானங் கொடுத்தார்கள். ஜகமித்திரனும் அந்த மானிய பூமியைக் கைக்கொண்டு சுகமாக விருந்தனர்.

இவ்விதமாக வெகுகாலங் கழிய ஒரு துலுக்கப்பிரபு கிராமாதிகாரத்தை வகித்து வந்தான். அவனவ்விடத்திய பூமிகணக்குகளெல்லாம் பரிசோதித்துக்கொண்டு ஜகமித்திரர் பூமியை ஜப்தி செய்தான். அவ்விடத்தி லனைவரு மத் துலுக்கனிடஞ் சென்று ஐயா! நாங்கள் எங்களுக்கு இஹபர சாதனமென் றெண்ணி அந்த வந்தணருக்குப் பூமிதானஞ் செய்தோம். அதை நீர் ஜப்திசெய்யவேண்டாம், கொடுத்துவிடுமென்று பிரார்த்திக்க, அவன் கேட்காமல் பரிவாரத்துடன் அவ்வந்தணர் வீட்டிற்குச் சென்று ஓய்! நீ ஜகமித்திரனென்ற பேர்வைத்துக்கொண்டாய், விவாஹப் பிரதிஷ்டைக்காக நீயோர் புலியைக் கொண்டுவரவேண்டும். நீ யப்படிச் செய்வாயேல் பூமி கிடைக்கு மென்றான். ஜகமித்திரர் நல்லதென்று சொல்லி அரண்ணியத்திற்குச் சென்று அபாரமான ஆர்த்தியுடன் ஆகிருஷ்ணா! மாதவா! கேசவா! முராரீ! கோவிந்தா! கோகுலவாசா! ஸ்ரீதரா! ஸ்ரீநிவாசா! தாமோதரா! ஹரிபாண்டு ரங்கா! வென்று பிரார்த்தித்து ஓ பரந்தாமனே! மேன்மை செய்யக்கடவீர், ஜிலேதாரனோர் புலியைப்பார்க்க விரும்பினன், காரியசாதனஞ்செய்து கடாக்ஷித்தருளும்; ஸ்ரீஹரி! யென்று வினவ, பெருமாளே புலிருபராய் வந்தனர். இந்தக் குறிப்பை யறிந்துக்கொண்டு ஜகமித்திரர் தெண்டஞ் ஸமர்ப்பித்து நிற்கப் பெருமாள் உன் அங்கவஸ்திரத்தை என் கழுத்திற்கட்டி ஊருக்குள் சீக்கிரத்தி லென்னைக் கொண்டுபோவென்று சொன்னர். அப்போது பரிசுத்த

மனதுடன் பகவானைத் தோத்தரித்து மயிர்க் ... அப்புலியை தன்னுடைய அங்கவஸ்திரத்தால் கட்டிக்கொ... ஊருக்குள் வர அப்புலி ஓர் கர்ஜனை செய்தது. அதைக்கே... ஊரிலிருக்கும் ஸ்திரீகளும் புருஷர்களும் அதினெதிரே ந... துப் பயமுடையவர்களாகி சிலருள்ளவே பதுங்கிக் கொ... சிலர் சுவர்கள் மேலேறியும் சிலர் மேடைகள் மேலே... த்தார்கள். சிலரவரவர் வாசற்படி கதவுகளைச் சாற்றிக... ர்கள். அனேக ஜனங்களாச்சரியமடைந்தார்கள். பக்தனு... பகவான் புலியைப்போல் வந்தனரென்றும் இது அவர் கி... றும் சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஊராரனைவரும் ஜி... வீட்டிற்குச்சென்று புலிவந்ததென்று சொன்னார்கள். இதைக்கேட்டு கோட்டையின் கதவை மூடச்செய்தான். கோட்டைவாசற் படியினிடம் வந்து வுள்ளேபுக வுபாயமறியாமல் பக்தர் புலியுடனுட்கார்ந்திருந்தார். அப்பொழுது புலி ஓர் கர்ஜனை செய்யுமளவில் கோட்டைக் கதவு கீழேவிழுந்தது. கலக்கமின்றி பக்தரந்தப் புலியுடன் கோட்டைக்குள் நுழைந்தனர். இவர் பாண்டுரங்க மூர்த்தி யென்று சொல்லிக் கொண்டு பிரஜைகளுடைய பயத்தை நீக்கி சுஜனரான ஜகமித்திரர் ஜிலேதாரனிடம் போய் சொல்லுவார், ஐயா! சுகமாகப் புலியை கைக்கொள்ளு மென்றார். அவன் பயத்தால் மனைவியுடனிருந்துக் கொண்டு தெருக்கதவை மூடிக் கொண்டான். அப்பொழுது பக்தரவனை நோக்கி பகவானே வந்தார். தபங்கள் விரதங்களெத்தனை செய்தாலும் தரிசிக்கவரிய தேவனும், நீர் பயமுற்றுக் கதவையேன் சாற்றினீர், சந்திரனைக் காட்டிலும் சீதலத்தை யுடையவராவர், சொர்க்கத்திற் அமிருதத்தைப் பானம் செய்பவர், நீர் பார்க்கவாரு மென்று சொல்ல, புலியானது கர்ஜித்து பிடிப்பை விடுவித்துக் கொள்ள எத்தனித்தது. அப்பொழுது ஜகமித்திரர் அதின் தலையைத் தடவிக்கொடுத்து சாந்தப்படுத்திக் கொண்டிருந்தனர். பகவானும் பக்தா தீனராகி விளையாட்டைக் காண்பித்துக் கொண்டிருந்தனர். அவ்வேளையில் ஜிலேதாரன் மனைவி அதிக பயத்தையடைந்து புருஷனைப் பார்த்து நீர் வெளியே போம். உமக்காகப் பிள்ளைகளுக்கும் எனக்கும் பிராணஹானி வரும்போல் காண்கிறது. நீரோ கிழவனாய் விட்டீர். அப்புலிக்கு நீரொருவரே பிரஸாதமாகி காலனுடையப் பட்டணத்திற்குப்

போய் எங்களைக் காப்பாற்றுமென்று சொல்லப் பிரஜைகளனைவருமவனை அல்பமாகப் பார்த்தார்கள். பின்பு ஜீலேதார் கதவைத் திறந்து பக்தனுக்கு நமஸ்கரித்து ஐயா! பிராம்மணரே! இப்புலியை நீர் காட்டுக்கழைத்துக் கொண்டுபோம். நானறியாமற் பிழை செய்தேன். க்ஷமித்து ரக்ஷிக்கக் கடவீர். நீர் வைத்துக்கொண்ட நாமத்திற்குத் தக்கபடி ஜகத்திற்கு நீர் மித்திர ராவீரென்பது சத்தியமாயிற்றென்று சொல்ல அந்த பக்தர், புலியுந் தானுமாக வனத்திற்குச் செல்ல, பெருமாள் பிரேமையுடன் சியாமளமான சுந்தர சுகுமாரராகிய திவ்யமங்கள விக்கிரகத்துடன் சேவை சாதிக்கப் பக்தர் பிரேமானந்தத்தால் புளகித காத்திரராகி பூஜித்து நிற்கப் பெருமாள் மறைந்தனர். ஜகமித்திரர் ஆர்த்தியுடன் வீட்டைச் சேர்ந்து தனது பூமியை தானனுபவித்துக்கொண்டு சுகமேயிருந்தனர்,



## ஜோகாபரமானந்தன் சரித்திரம்.

பார்சியென்னுமோரூர் பண்டரிக்கு வடக்குதிக்கிலிருக்கும், அதில் பிராம்மண குலத்தில் ஜோகாபரமானந்த ரென்பவர் பக்தர்களில் சிரேஷ்டராகி ஸ்ரீஹரியையே சிந்தித்தும், ஆராதித்தும் அவரது நாமத்தைப் பஜித்துக்கொண்டும் பிக்ஷாடனத்தால் குடும்ப போஷணஞ் செய்துவருவர். குடிலருடன் சேராமலும் ஆசாபாசங்களை தன் மனதில் வைக்காமலும் பொழுது விடிந்தவுடன் ஸ்நானஞ்செய்து பாண்டுரங்கர் விக்கிரக மொன்றுக்கு ஷோட சோபசார பூஜைகளைச் செய்து பகவத்கீதை சுலோக மொவ்வொன்றைச் சொல்லி ஒவ்வொரு நமஸ்காரம் செய்துக்கொண் டிருப்பர். இப்படி எழுநூறு சுலோகங்களைச் சொல்லி எழுநூறு நமஸ்காரங்கள் செய்தபின் பக்ஷணைசெய்து வருவார். பிரதி தினமும் பூஜையைத் தப்பாமல் பரமானந்தத்துடன் நித்திய நியமங்களை நடத்திக்கொண்டு காலயாபனம் செய்துவருவார்.

ஒருநாள் சில வர்த்தகர்க ளவ்வூருக்கு வந்து கோவிலி லிறங்கியிருந்து பக்தரான ஜோகாபரமானந்தரைப் பார்க்கவந்தார்கள். அவ்வேளையில் பூமியானது மழையினால் நனைந்திருந்தது. ஆங்கு இவர் ஏகநிஷ்டராகி நமஸ்காரங்களைச் செய்துக்கொண்டிருந்ததை, வர்த்தகர்களி லொருவன் கண்டு விரக்தரென்றறிந்து விசேஷ

கனிகரத்துடன் பீதாம்பர மொன்றை கையிலேந்திக் கொடுக்க வெண்ணி அந்த பக்தரைப் பார்த்து வெகுவாகத் தோத்திரம் பண்ணிப் பீதாம்பரத்தைக் கட்டிக் கொள்ளும், நான் மந்தபுத்தியை யுடையோன், என்னை மன்னித்து இந்த வஸ்திரத்தை அங்கிகரிக்கக் கடவீரென்று வேண்டினான். அதற்கவ ரந்த வர்த்தகனைக் கண்டு ஸ்ரீஹரி மகாதயை யுடையவர். எம்மை விசாரித்து எங்களுக்காக பழைய வஸ்திரங்களும் பசிக்கு சாப்பாடுங் கொடுத்து வர, நாங்க ளதனால் பரமதிருப்தியை யடைந்து பஜனையி லீடுபட்டிருக்கிறோம். ஆனதா லிந்தசரிகை பீதாம்பர மெங்களுக் கென்னத்திற்கு? ஸ்வாமிக்குச் சமர்ப்பணஞ் செய்யும்படி வேண்டினார். அவ்வர்த்தக னதைக் கேளாமல் அவ்வஸ்திரத்தைப் பலாத்காரமாய்க் கட்டிவிட்டுப் போயினான். பின்பந்த பக்தர் பீதாம்பரத்திற்குச் சேஷ்டையென் றெண்ணி முன்போல் தாராளமாக நமஸ்கரிக்கப் பின்னிடைந்தார். வஸ்திர லோபத்தால் நிஷ்டை குலைந்தது. பசியும் கூடப்பொருந்தி ஆபாசப்படுத்த நியமந் தப்பிவிட்டது. இதனால் துக்கத்தை யடைந்து பரிதபிக்க லானார். பீதாம்பரமே இன்றைக் கெனக்கு விரோதியாய் வந்தது. இதா நமஸ்காரங்களைச் செய்யவொட்டாமல் கெடுத்துவிட்டது. எனது நியமனந்தப்பிப்போனதால் பொசிப்பெடுப்பது தகுதியல்லவென்று வெளியேவந்து உட்கார்ந்து எண்ணத் தொடங்கினார். இன்றைக்கு செய்த தப்பிதத்திற்கு தேகதண்டனை யெது தகுதியாயிருக்கும்? கானகத்திற் சென்று பஞ்சாக்கினி மத்தியில் கனத்த தபத்தைச்செய்வோமா? அல்லது கங்கா ஸ்நானத்திற்குச்சென் றவ்விடமே இருந்து விடலாமா? அன்னபானங்களை விட்டு அனுதாபத்துடன் காயத்தைப் போக்கிக் கொள்ளலாமா? அக்கினியை மூட்டி விழுந்து சாகலாமா என்றிவ்வாறு பலவிதமாக எண்ணிக்கொண் டிருக்க ஒரு குடியானவன் இரண் டெருதுகளை யேர் நுகத்தடிக்குப் பூட்டி பூமியை உழுவதற்குச் சென்றனன். பக்தரவனை யழைத்து பீதாம்பரத்தைக்காட்டி இதற் கீடாக அவ்விரண் டெருதுகளைத் தனக்குக் கொடுக்கச் சொல்லிக்கேட்டார். எருதுகளைக் காட்டிலும் பீதாம்பரத்தின் விலை இரண்டுபங்கதிகமாகயிருந்தபடியால் குடியானவனதைக்கண்டதிர்ந்து பீதாம்பரத்தை வாங்கிக்கொண்டு ரிஷபங்களைக் கொடுத்தான். இந்தபக்தரவனைப் பார்த்து அப்பா!

என்கால்க ளிரண்டையும் நக...
சவுக்கிஞ லடித்துப்போ வென்ன அம்ரூ
துப்போய்விட்டான். அவ்விரண்டெரு
று பாராமல் முட்களிலும் கற்களிலு
ப்பிரகாரம் வழிதப்பி சஞ்சரித்த...
பின்னமாகி நின்றது, அடிகம...
லோலமாய் நின்றும் ஹரி! கிருஷ்ணு! அ...
முராரி! கேசவா! கோவிந்தா! ராமசந்திரா! ரகுவீரா...
வஞ! பாண்டுரங்கா! வென்று நாமங்களைச் சொல்லிக் கொண்டு அடியேனுக் கிந்த தேகதண்டனை தகும் தகுமென்று சொல்ல அந்த பக்தருடைய பிராணன்கள் கண்டகதமாயிற்று. அவ்வேளையில் கருணுநிதியான பாண்டுரங்க ரவ்விடத்திற்கு வந்து பக்தனுடைய கால்களை நுகத்தடி விட்டவிழ்த்து உடம்பைத் துடைத்து சொல்லுவார், நீ செய்யும் சகல காரியங்களு நம்மைக் குறித்தே செய்துக் கொண்டிருந்தாய், ஓர் தப்பிதமு மில்லாதிருக்க தேக தண்டனையேன் செய்தாயென்று சொல்லிப் பக்தனை அனுக்கிரகித்து மறைந்தார். ஜோகா பரமானந்தர் தன் வீட்டிற்குச்சென்று நித்திய நியமங்களை நடத்திக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தார்.

---

## நரஹரி கதை.

பண்டரி புரத்தில் தட்டார் குலத்தில் நரஹரி யென்றொரு புண்ணிய சீலர் வாழ்ந்திருந்தனர். அவர் சாம்பமூர்த்தி சேவா தற்பரராகி விடியற்காலத்தி லெழுந்திருந்து பீமாநதியில் ஸ்நானஞ் செய்து ஆசாபாசங்களை யறுத்து அரன் சன்னதிக்குச் சென்று அன்புடன் பூஜைசெய்து வருவர். பண்டரி புரத்தில் வாஸமாயிருக்கும் பாண்டுரங்கரை சேவிக்காமலும் அவர் வீற்றிருக்குமாலயத்தின் சிகரத்தையும் கண்ணெடுத்துக் காணுமலும் சாம்பமூர்த்தியைத் தொழுதுக்கொண்டு மற்றொரு தெய்வத்தைத் தொழாமலும் சத்திய சீலராகி ஓரிடத்திலேயே பக்தி செலுத்திக்கொண்டிருந்தனர்.

இதிப்படி யிருக்க அவ்வூருக்கோர் வர்த்தகன் வந்து பிள்ளையில்லாமல் சிந்தை யடைந்து பெருமாளைச் சேவித்து பாண்டுரங்கா! பரம தயாநிதி! நரஹரீ! நாராயணு! வார்த்திக தசையில் வம்

க்குள் அடியேனுக்கோர் புத்தி
ணங்கள் செதுக்கிய பொன்னரைஞாண்
சமர்ப்பிக்கிறே னென்று சொல்லி பிரா
த்திற்குச் சென்றனன். அவனுடைய
ஷத்திற்குள் பாண்டு ரங்கருடைய
பூரணமனோர தனுகித் தனது
வண்டி பண்டரி புரத்திற்கு வந்தான்.
விடுதியிலிறங்கி ஸ்நானஞ்செய்து பெருமாளை ஆனந்தத்துடன் சேவித்துப் பூஜித்து அவ்விடத்திய அர்ச்சகரைப்பார்த்து ஐயா! பாண்டுரங்க மூர்த்திக்காக சொர்ண அரைஞாண்கயிறு செய்யவேண்டு மாதலால் சீராகச் செய்யும் தட்டானொருவனைத் தெரியச் சொல்லுமென்று கேட்க, அவனிவ்வூரில் நரஹரி யென்னும் தட்டான் நலமாகச் செய்யத்தக்கவன். சத்யவந்தன், சீருடையவனும் ஜாக்கிரதை யுடையவனுமாமென்று சொல்ல, அவ் வர்த்தகன் நலமாச்சுதென்று தட்டானான நரஹரியிடம் வந்து சொர்ணமும் இரத்தினங்களுங் கொடுத்துப் பாண்டுரங்கருக்கு அரைஞாண் கயிறொன்றை தகுதியாகச் செய்யுமென் றாக்ஞாபித்தான். நரஹரி அவைகளைக் கைக்கொண்டு நாராயண மூர்த்தியினுடைய இடுப்பினளவைக் கொண்டு வரச்சொல்லி கேட்க, அவ்வர்த்தகன் ஸ்ரீஹரி சன்னிதிக்குச் சென்று பாண்டுரங்க ரிடுப்பளவைப் பிடித்துவந்து நரஹரிக்குக் கொடுத்தனன். பின்பு தட்டான் மணிகளை இழைத்து சொர்ணத்தினால் அரைஞாண் கயிறு சாதுரியமாகச் செய்துக் கொடுத்தான்.

அனந்தரம் வர்த்தகன் பூஜாதிரவியங்களைச் சேகரப் படுத்திக்கொண்டு பெருமாள் சன்னிதிக்குச் சென்று அபிஷேகங்களைப் பாண்டுரங்கருக்குச் செய்து பூஜையனைத்தும் பண்ணி அபாரமான பிரியத்துடன் அரைஞாண் கயிற்றை அம்மூர்த்திக்கு சமர்ப்பிக்கும்போது அது பிடிக்காம லிருந்தது. அதைத் திரும்பி கொண்டுவந்து நரஹரிக்குக் காட்டி இது பிடிக்கவில்லை யென்று தெரியப்படுத்த அவரதை நீட்ட மாகச் செய்துக் கொடுத்தார். வர்த்தகன் திரும்பி அதனைக் கொண்டுவந்து பெருமாளுக்குப்போட, அது பெரியதாய் தளர்த்தியாய் விட்டது. திரும்பி அதனை வர்த்தகன் நரஹரிக்குக் கொண்டுவந்து காட்டி அதனைக் கொஞ்சம்

குறுகலாகச் செய்துக் கொடுமென்றுக் கொடுத்தான். அதைத் திரும்பி மூர்த்திக்குப் போடுமளவில் பிடிக்காதிருந்தது. வர்த்தகன் திரும்பி அதனை நரஹறியிடங் கொண்டுவந்து ஐயா! நான் செய்யும் கைங்கரியம் பெருமாளுக்கு உகக்கும்படி செம்மையாய்ச்செய்துக்கொடுவென்றுகேட்க அதனை மறுபடியும் கொஞ்சம் நீளமாகச்செய்துக்கொடுத்தார். அதைக் கொண்டுவந்து பாண்டுரங்க மூர்த்திக்குத் தரிக்கச் செய்ய அது தளர்ந்திருந்தது. திரும்பி வர்த்தகன் நரஹறியிடம் வந்து ஐயா! நீர் சன்னிதி வரைக்கும் வந்து உமது கையினால் போடுமென்று பிரார்த்தித்தான். அதற்கு நரஹறி சொல்லுவார். ஐயா! சங்கர மூர்த்தி யொருவரே சிரேஷ்ட ரென்றும் அவரைத்தவிர மற்றொரு தெய்வத்தை அவனியிற் பாரேனென்னும் விரத முடையேனாதலால், விடோபா சன்னிதிக்கு வரமாட்டேனென்றார். அனேக விதங்களா லவ்வர்த்தகன் வேண்டியு மிடங் கொடுக்கவில்லை. அப்போது வர்த்தக னவரை நோக்கி ஐயா! உமக்கு தேவதாந்தரத்தைக் கண்ணாலே பார்க்கக் கூடாதென்ற விரத மாதலால் நீர் பார்க்கவேண்டாம். கைகளால் தொட்டு அந்த ஆபரணத்தைப் பெருமாளுக்குப் போடக் கடவீரென்று அவருடைய கண்களை வஸ்திரத்தாற்கட்டி அவர் கையைப் பிடித்துக்கொண்டு பாண்டுரங்கர் சன்னிதிக்குப் பிரியத்துடன் கொண்டுவந்தான். நரஹறி தனது கைகளால் பாண்டுரங்கருடைய விக்கிரகத்தை ஆபாத மஸ்தக பரியந்தம் கைகளால் பரிசிக்குமளவில் பஞ்சமுகங்களும் பன்னக பூஷணமும் பத்துகைகளும் பெருத்த சடையும் புலிசர்மமும் விபூதியையுடைய திருமேனியுமாக விருக்கக்கண்டு தான் மனதிலெண்ணி ஆராதித்த தெய்வமென்றே தோணப்பட்டு கண்களைத் திறந்து பார்க்குமளவில் பீதாம்பரத்துடன் இடுப்புமே லிரண்டு கைகளை யுடையராய் சியாமள திருமேனி யுடைய சுந்தர மூர்த்தியும் சங்கமும் சக்கரமும் கிரீடமும் வைஜயந்தி வனமாலையும் சம சரணங்களுடன் செங்கல்மேல் வீற்றிருக்கும் பாண்டுரங்கருடைய ரூபத்தைக் கண்டு ஐயோ! நான் பிரமித்தேனே! யென்று நரஹறி திரும்பிக் கண்களை மூடிக்கொண்டார். பின்பு கைகளால் பரிசிக்குமளவில் பார்வதிரமணருடைய ரூபமே தோன்றிற்று. திரும்பி கண் திறந்துப் பார்க்குமளவில் பெருமாள் ரூபத்தையே பார்த்தார், இவ்வாச்சரி

யத்தைக் கண்டு கண்களுக்குக் கட்டியிருந்த வஸ்திரத்தை அவிழ்த்து கீழேபோட்டு பாண்டுரங்கரை பரந்தாமராகப் பாவித்து அனுதாபத்துடனவரது திருவடிகளைக் கண்டு பிரீதியுடன் சேவித்து, விஸ்வ வியாபகரே! விட்டலரங்கரே! புருஷோத்தமரே! புண்டரீகவரதரே! ஸ்வாமீ! பக்தருடைய மாயையைப் பரிஹரிக்கும்பொருட்டு இந்த செய்கையைப் பூண்டீர். முத்தியடைவதற்கு மேலான ஞானத்தைத் தந்தருளினீர். அடியேன் வேற்றுமையான ஞானத்தை யடைந்திருந்தேன், பரிசீலனை செய்து பார்க்குமளவில் பரமசிவன் நீர்தான். ஜய கேசவஸ்வாமீ! ஜய ஸ்ரீகிருஷ்ணு! ஜய ஸ்ரீசங்கரா! ஜய ஸ்ரீநிவாசா! ஜய பார்வதீரமணு! ஜய பாண்டுரங்கா! ஜய பினகபாணி! ஜய கோதண்டபாணி! ஜய நீலகண்டா! ஜயராம சந்திரா! தேவரீரைச் சரணமடைந்தேன், இரக்ஷித்தருளக் கடவீரென்று தோத்திரங்கள் செய்ய, பெருமாள் பிரஸன்னராகி சொல்லுவார், ஓ நரஹரி! சத்தியத்தை விடாமல் செய்த தவம் சர்வேஸ்வரனுன நம்மையே யடையும், இவ்வார்த்தையில் வித்தியாஸ மணுவளவேனுங் கிடையாது. உனக்குத் திரும்பியும் பேதந் தோன்ருமலிருக்கும் பொருட்டு இக்காரியத்தைச் செய்தோமென்று இடுப்பி லரைஞாண் கயிற்றை யணிந்துக் கொண்டனர். வர்த்தகன் தனது கைங்கரியம் நிறைவேறிற்றென்று சந்தோஷத்தை யடைந்திருந்தான். நரஹரி அபாரமானப் பிரீதியைப் பாண்டுரங்கரிடம் செலுத்திக்கொண்டு பூர்ணதிருப்தியை யுடையராய் தன் வீட்டுக்குச் சென்றனர்.

---

## ஜனுபாயி சரித்திரம்.

ஒரு வருஷம் பண்டரிபுர உச்சவத்தில் பாண்டுரங்கரைச் சேவிக்க ஜனங்க ளதிகமாக வந்திருந்தார்கள். அவர்களி லோர் பெண்பிள்ளை தாய் தந்தைகளுடன் வந்திருந்தது. அப்பெண் பெருமாளைச் சேவித்து பிதா மாதாக்களைக் கண்டு சொல்லுவாள்; உம்மை நீங்கள் போஷித்துக்கொள்வது கஷ்டமாயிருக்கிறது, நானிவ்விட மிருக்கிறேன் பாண்டுரங்க ரெனக்கிருக்கிருர், நீங்கள் வீட்டிற்குச் செல்லலாமென்ருள். அவ்விடத்திலுள்ள ஜனங்களாச்சரியப்பட்டு ஏழு பிராயத்துப் பெண்ணுக் கிந்த ஞானமுண்

டாயிற்றே! பகவானிடம் பிரீதியை வைத்தா ளல்லவா? வென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். தாய் தந்தைகள் கூப்பிட்டும் போகாமையால் அவ்விடமே விட்டுப் போயினார்கள். அச்சன்னிதியி லோரிடத்தில் அக்கன்னிகை யொருத்தியா யிருந்ததை நாமதேவர் கண்டு கடாக்ஷத்துடன் கேட்கலுற்றார். பெண்ணே! உனக்குப் பந்துக்கள் யாருமில்லையோ? அவர்க ளெங்கு சென்றனர். பெயரென்ன? வென்று கேட்க, அக்கன்னிகை அவரைக் கண்டு அடியாளுக்கு பிரியரானவர் பாண்டுரங்கரே, மாதாவும் பிதாவு மவரேயாவார். ஜனுபாயி என்று அடியாளை பேரிட்டழைப்பார்கள். பண்டரிநாதரைத் தவிரப் பந்துக்க ளில்லையென்று சொல்ல, நாமதேவ ரப்பெண்ணைக் கையிற் பிடித்துக்கொண்டு கருணையுடன் வீட்டுக்குச் சென்று தன் தாயாரை அழைத்து, தாயே! இப்பெண், தாய் தந்தைகளை விட்டு யாத்திரையி லொண்டியாய் நின்றனள், கீழ்மைசெய்யாமல் மன்னித்து ரக்ஷிக்கக்கடவை, என்றிவ்விதமாக தனயன் சொல்ல, தாயார் கிருபையுடன் அப்பெண்ணை வீட்டுவேலைகள் செய்ய நியமித்தாள். அப்பெண் மகா புண்ணியமென்று சுசீலையான பாகவதருடைய சரணசேவா நிஷ்டையைப் பலமாகப் பிடித்துத் தாஸியாகி, வீட்டுக் காரியங்களனைத்தும் செய்துக்கொண்டும், பகவானுடைய சரித்திரங்களைப் பக்தியுடன் கேட்டுக்கொண்டும், பகவன் நாமத்தை யெப்போதும் பாராட்டிக்கொண்டும் அவள் வளர்ந்து வந்தாள். மகத்தான மோகத்துடன் தனக்கு தாய் தந்தையர் நாமதேவரே யென்றிருந்தாள்.

இப்படியிருக்க நாமதேவர் ஓரிரவில் வீட்டில் நித்திரை செய்துக்கொண்டிருந்தனர். அப்போது காற்றுமழை அதிகமாக வருஷிக்கத் தொடங்கிற்று. பக்தன் நிவசித்திருந்த வீட்டின் மேற்கூரை சின்னபின்னமாகச் சிதரலாயிற்று. அப்போது ஸ்ரீ ஹரி சுதர்சனத்தை முன்னே யனுப்பி வீட்டிலொழுக்க லில்லாமல் சுகமாக விருக்கச்செய்து பின்பு பாண்டுரங்கரே அவர் வீட்டிற்கு மெதுவாக வந்து வீட்டின்மேலேறி மேற்கூரையைச் செம்மை செய்துக்கொண்டிருந்தார். நித்திரை தெளிந்து நாமதேவர் வெளிவந்து பார்க்கும்பொழுது பீதாம்பர காந்தியால் விளங்கும் பெருமானைக் கண்டு அதிதீனராகி பாண்டுரங்கருடைய பாதங்களைப் பிடித்

துக்கொண்டு பதிதபாவனரே! நீர் இந்த வீட்டின்மீதேறி செய்வதென்ன? வென்று வினவ, பெருமாள் சொல்லுவார், சமுசார விவகாரங்களிற் சேராமலவைகளை மறந்து மோக மமதைகளை விட்டாயாதலால் உனக்கு நன்மைசெய்ய வெண்ணிக் கூரையை சரிப்படுத்துகிறேன், இல்லாவிடில் உன் தாயார் நிந்தித வார்த்தைகளை யென்பேரில் சொல்லுவாளன்றோ! வென்று விளம்ப, இதைக் கேட்டு கோணுபாயி பெருமாளுக்கு நமஸ்கரித்து நின்றனள். அவ்வேளையில் ஜனுபாயி பெருமாளுடைய முதுகைத் துடைத்துக்கொண்டு, கிருபா சாகரா! கோவிந்தா! விட்டலா! கிருஷ்ணா! ஸ்ரீஹரி! அபாரமான தயையுடன் நிஜாங்கத்தாலெங்களை இரக்ஷித்தருளுகிறீரென்றாள். அப்பொழுது பெருமாள் நாமதேவரைப்பார்த்து உனக்கு பசியுண்டானாற்போல் காணுது போஜனம் செய்வோம் பிரஸாதத்தை வட்டிக்கச் செய்யென்ன, தாம்பாளங்களி லன்னத்தையிட்டு கோணுபாயி கொண்டுவந்து வைத்தனள். அப்பொழுது நாமதேவர் பிள்ளைகளுடன்கூடி பெருமாளுடன் அன்னத்தை புஜித்தார். ஜனுபாயியைக் கூப்பிடா திருந்தபடியால் அவள் பெருமாளை ஸ்மரித்துக்கொண்டு ஹரி! வேங்கடபதி! பாண்டு ரங்கா! பக்தரக்ஷகா! நாராயணா! நாரசிம்மா! அடியாள் பரதேசியா யிவ்விட மிருந்து விட்டேன். ஓ லக்ஷ்மீ நாயகரே! அடியாளை விட்டுவிடுவது தகுதியோ? கருணைக் கண்ணால் பாருமென்று பிரலாபித்துக்கொண்டு தன் குடிசையிலிருந்தாள், பாண்டுரங்கர் அவள் படும் வருத்தத்தை தனக்குள் கண்டுகொண்டு அடிக்கடி அவள் செய்யும் விண்ணப்பத்தையே கேட்டுக்கொண்டு தான் பக்ஷணை செய்யாமல் அன்னம் ருசிக்கவில்லையென்று அதை விட்டெழுந்தனர். அப்பொழுது நாமதேவ ரவரைக் கண்டு ஸ்ரீஹரி! பாண்டுரங்கா! ஜனுபாயியை நம்மிட பந்தியிற் சேர்க்கவில்லை யென்று உமக்கு குறையுண்டாயிற்றல்லவா வென்று சொல்ல, கோணுபாயி அவ்வேளையில் பெருமாள் பிரசாதத்தை ஜனுபாயிக்குக் கொடுத்தனள். அவள் அதை ஸ்ரீஹரிப் பிரசாதமென்று கைக்கொண்டு தாம்பாளத்தில் வைத்துவிட்டு பெருமாள் வரவை எதிர்பார்த்திருந்தாள்.

பின்பு பெருமாள் நாமதேவருடன் படுக்கையில் படுத்திருந்து அவர் நித்திரை செய்யுமளவில் பெருமாள் ஜனுபாய் குடிசைக்கு

வந்து எனக்குப் பசியா யிருக்கிறது அன்னங் கொடுவென்று கேட்க, ஓலக்ஷ்மீபதி! உமக்கன்னத்தை அடியா ளெவ்விடமிருந்து கொண்டுவருவது, உம்முடைய எச்சிலான பிரசாதமே எனக்கு கோஜனபாயி கொடுத்தாள், ஓ கண்ணபிரானே! அதை யுமக்கிடுவது நன்றே! கிருபா சாகரா! கோவிந்தா! கிருஷ்ணா! கமலாபதி! அனந்தா! அச்சுதா! நீர்தயையுட னடியாளிடம் வந்தீர், என்ன கொடுக்கப் போகிறேனென்று சொல்ல, அவரந்த எச்சிலன்னத்தையே கொண்டுவரச் சொன்னார். அவ ளவ்வண்ணமே யதைக் கொண்டு வந்து பெருமாள்முன் இட அவர் சொல்லுவார், என் எச்சிலை நான் சாப்பிட ஏதுக்கு சங்கோசமென்று ஜனபாயியுடன் சாப்பிட்டு, கையை அலம்பி சயனத்திற் படுத்தனர். அவ்வேளையில் தாயா ரெழுந்திருந்து நாமதேவரை யெழுப்பி பெருமாள் செய்த கிருத்தியங்களை நவின்றனள். நாமதேவர் தாயார் வாக்கியங்களைக் கேட்டு ஜனபாயி சிறந்த பக்தியி லிருப்பவ ளாதலால் பாண்டுரங்க ரவளிடம் பிரீதியுடன் சென்றனர். அவர் பக்தவத்ஸலரென்று நாம் கேட்டில்லையோ? பிரேமானந்தத்தை யடைந்த அப்பெண் பெருமாளுக்குப் பிரியமுடையவ ளானாள். அவளைச் சாமான்னியமாகச் சொல்ல ஒண்ணாது, சபரிக்குச் சமமாக சிந்திக்கத் தக்கவளாதலால் ஸ்ரீஹரி அவளிடம் சென்றனர், இதில் விசித்திர மென்னவென்று சொன்னார். புன்சிரிப்புடன் பெ ளிவ்வசனங்களைக் கேட்டிருந்து நாமதேவரிடம் வந்து சய விஸ்ரமித்திருந்தனர்.

அன்றிரவு மூன்றுஞ் சாமத்திற் கெழுந்திருந்து ஸ்ரீஹரி ஜனபாய் குடிசைக்குச்சென்று அவளை எழுந்திருக்கச் சொல்லி யெந்திரக்கல்லை அவள் முன் இட்டு, நான்மாவை அரைக்கிறேன் நீ கையை யெந்திரத்தின்மேல் வெறுமனே வைத்து பாட்டுகளைப் பாடக் கடவையென்று பாண்டுரங்கர் சொல்ல, அப்படியே செய்வேனென்று தலைமயிரை முடித்துக் கொண்டு அக்கல்லின்மீது தன்கையை வைத்துக்கொண்டு ஸ்ரீஹரிபக்தர்களுடைய சல்லாபங்களைச் சொல்லத் தொடங்கினாள். தாமோதரரிடம் தற்பரரான நாமதேவ ரெனக்குத் தகப்பனாவார். நிவிருத்திநாதரும் ஞானதேவரு மெனக்கு நிலைபொருந்திய சகோதரராவார்கள். ராஜாயி யெனக்கு தாயாராவாள். கோராபக்தரெனது மாமனாராவார். சாவதாமாலி யெ

ணது பந்துவர்வார். அவர்களனைவரும் ஹரி பாண்டுரங்கரைத் தம் வசம் பண்ணிக்கொண்டு இப்புவியின்கண் பிரபலமான செய்கைகளைச் செய்தனர். அவைகளை யெவ்வள வென்று சொல்லுவேன்! நாமதேவர் யாத்திரைக்குச்சென்று அஸ்தினாபுரியில்பிரேதமான பசுவை பிழைக்கச் செய்தார். நாகநாதர் சிவாலயத்தை நாமகற்ஜனை செய்து மேற்கு முகமாக்கினார். இன்னு மனேக லீலைகளை யவரைக் கொண்டு பெருமாள் செய்வித்தார். ஞானதேவர் எருமைக்கடா முகத்தினால் வேதங்களை யோதிவித்தார். கோராகுயவர் குழந்தையை மண்ணில் மிதித்தும் கைகளை சேதித்துக்கொண்டும் பாண்டுரங்கர் சன்னிதிக்குப் போக, பெருமா ளவரது கரங்களையுங் கொடுத்துக் குழந்தையையு மெழுப்பினர். சாவதாமாலி தன் வயிற்றைக் கீறி சர்வேஸ்வரனை அதனுள் வைத்துக்கொண்டு நாமதேவருடைய பக்தியைக் கண்டு வெளிவந்தார். பக்தரான கபீர் வஸ்திரங்களை நெய்ய பகவானும் கூட நெய்து பின்பு தனது தரிசனத்தை தந்தருளினார். ஸ்ரீஹரி சரிதைகளை சுருதி சாஸ்திரங்களால் சொல்லக் கூடவில்லை யென்று மகத்தான பிரீதியுடன் மயிர்குச் சிலுப்புடையவளாய் அனுராக்தியுடன் பாடிக்கொண்டிருந்தாள். பாட்டுகளுடைய ஓசையை கோணபாயி கேட்டுக்கொண்டிருந்து ஜனபாயி இருக்கும் குடிசைக்குவந்து அடி! ஜனீ! கூலி கொடுத்து அன்னியரைக் கூட மாவரைக்கச் செய்வது அடுக்குமா? என்று வினவ அவள் மாறொன்றுஞ் சொல்லாமலிருக்க, கட்டையைக் கையிலேந்திக் கொண்டு அடி! தானியத்தைக் கொடுக்காவிட்டால் அன்னியரெப்படி உன்கூட அரைப்பார்கள். நமது சமுசாரம் துர்ப்பலமானதென்று உனக்குத் தெரியாதா? என்று சொல்லிக்கொண்டு ஓரடி அடித்தாள். அந்தவடி பெருமாளுக்குப் பட்டது. அப்பொழுது ஜனபாயி பாட்டுகளை நிறுத்தி ஆயி! ஹரி சர்வேஸ்வரன் அடியாளுடன் மாவரைக்கின்றாரென்றாள். அதைக்கேட்டு நாமதேவரவ்விடம் வந்து தாயாரை நோக்கி, ஜனார்த்தனரே ஜனபாயியோடு ஆனந்தத்துடன் மாவரைக்கிறார். அவளுத்தம நிலையுடையவளாய் சர்வேஸ்வரனை சுவாதீனமாகச் செய்துக் கொண்டாளென்று சொல்ல, சினேகத்துடனும் பயத்துடனும் தாயாரவ்விட மிருந்து திரும்பி, ஐயோ! ஸ்ரீஹரியை அடித்தேனே! சமுசாரத்திற்காக கஷ்டப்பட்டுக் கொண்டு சர்வேஸ்வரனை அடித்தேனே; சமு

சாரம் எப்பவும் துன்பத்திற்கே இருப்பிடமாகி அறியத்தக்கதன்றோ? சுகுமாரரும் சியாமலரூபரும் திவ்வியசுந்தர விக்கிரஹருமான ஸ்ரீஹரி சொர்க்க வாசிகளான இந்திரன் முதலானோர்க் கெட்டாதவர், அவ்வண்ணமானவரை நானடித்தேனே! என்று சொல்லிக்கொண்டு அனுதாபத்துடன் உட்கார்ந் திருந்தாள்.

ஸ்ரீஹரியும் ஜனுபாயியும் கூடிக்கொண்டு அம்மாவையலரைத்து ஓரிடத்தி லெடுத்துவைக்க அருணோதய மாயிற்று. அவ்வேளையிலும் பெருமாள் ஜனுபாயியுடன் பிரிய வசனங்களைச் சொல்லிக் கொண்டிருந்தனர். ஜனுபாயி அவரைக்கண்டு ஓ சௌரி! முகுந்தா! சர்வேஸ்வரா! ஸ்ரீஹரி! ஸன்னிதியி லும்மைக் காணுவிடி லவ்விடத்திலுள்ள ஜனங்களும் பிராம்மணர்களும் சோதிக்கத் தொடங்கி கலக்கமுறுவர்க ளாதலா லிப்போதே உம்முடைய ஆலயத்திற்குச் செல்லுதல் நன்றும், ஓ நீரஜநாபரே! அடியாளைக் காப்பாற்றுமென்று சொல்லவே, பாண்டுரங்கர் துரிதத்துடன் செல்லுமளவில் தனது மணியாரத்தை யவ்விடம் விட்டு நினைப்பில்லாதவரைப்போல் ஜனுபாயினுடைய ஜீர்ண வஸ்திரத்தை தோளின்மே லிட்டுக்கொண் டேகினர். அருணோதய மாய்போது ஆலயத்தில் சகல பக்தர்களும் ஆரத்தியைக் கொடுக்க, ஆங்கு அவர் கழுத்திலிருந்த மணியாரத்தைக் காணுமல் ஜீர்ண வஸ்திர மொன்றைத் தோளின்மேற் கண்டனர். பிராம்மணர்க ளாச்சரியத்துடன் நிச்சய மறியாமல், வெளியில் பூட்டு சாவி போட்ட வண்ண மிருந்ததே! கழுத்துமணி எப்படி போயிற்று? கந்தலெப்படி யிவ்விடம் வந்ததென்று விசாரித்துக்கொண் டிருந்தார்கள். அப்பொழுது ஒருவனதை யெடுத்துப் பரிசோதித்தான், ஜனுபாயிகந்தலென்றுஇதர ஜனங்கள் சொல்லவே அவள்வீட்டிற்கர்ச்சகர்கள் சென்று அனேக தூஷண வாக்கியங்களை யவள்மேற் சொல்லி பெருமாளுடைய மணிமாலை யெவ்விட மிருக்கிறது உண்மையைச் சொல்லென்று வற்புறுத்த அவள், ஸ்வாமிகளே! மாதவன் சாக்ஷியாக மாலையை நானறியேன், நானெடுத்திருந்தாலென து கண்கள் போகக்கடவன வென்றாள். அர்ச்சகர்க ளதனைக் கேட்டு அங்கு விழுந்திருந்த வஸ்திரங்க ளனைத்தையும் பரிசோதிக்க அவ்விடத்தி லந்த ஹார மகப்பட்டது. ஜனுபாயி தான் ஹாரத்தைத் திருடினளென்று அவளை சிக்ஷைக்குட்படுத்தி சூல

த்திற்போட நதிக்கரை போரத்திற்கு நடத்திக்கொண்டு சென்ற னர். அவ்வேளையில் ஜனபாயி ஓ ஹரி ! சர்வேஸ்வரரே! ஆதரியும், கிருபா சாகரரே ! கருணாநிதி! கிருஷ்ணா ! ஜனார்த்தனா ! பக்தவத்சலா ! பாண்டுரங்கா ! காப்பாற்ற வாரும் ஓ ஸ்ரீநிவாசா ! ஜனார்த்தனா ! உன்னையன்றி யென்னை இரக்ஷிப்பவர் யாருமில்லையென்று பிரார்த்திக்க, நாராயணனுடைய கிருபையால் சூலம் நீராய்விட்டது. இதைக்கண்டு சகல ஜனங்களு மாச்சரிய மடைந்தனர். ஸ்ரீஹரியினுடைய விசேஷ கிருபையென்று சொல்லிக்கொண்டு அபார பிரேமையுடன் ஹரிநாமத்தைச் சொல்லத் தொடங்கினார்கள். ஜனபாயி, நாமதேவரை கௌரவப் படுத்திக்கொண்டு ஈஸ்வரனுடைய நிரஹேதுக கிருபையை நினைப்பி விட்டுக்கொண்டு தன்னிருப்பிடம் சென்றாள்.

ஒருதினத்தில் ஜனபாயி தனது வீட்டிலிருந்துக்கொண்டு பாண்டுரங்கர் விஷயமாக கவித்வங்களைப் பாடிக்கொண்டிருக்க அவைகளை பெருமாளொண்டியாக கோவிலி லுட்கார்ந்து எழுதிக்கொண் டிருந்தனர். அவ்வேளையில் பெருமாளைச் சேவிக்க ஞானதேவர் வந்து அவ ரெழுதிக்கொண் டிருப்பதைக் கண்டு விந்தை யடைந்து நமஸ்கரித்து ஸ்ரீஹரி ! வாசுதேவா ! விட்டலரங்கா ! நீரஜனபா ! நீரெழுதுவ தென்னென்று கேட்க, தாஸி ஜனபாய் செய்த கவித்வத்தை எழுதுகிறேனென்று பெருமாள் சொல்ல, தனது தோத்திரத்தைத் தானே எழுதுவது தேவரீருக்கு தகுதியோ ! தேவரீர் கைகளால் அதனை எழுதுவது ஆச்சரிய மாகுமென்று ஞானதேவர் சொல்ல பாண்டுரங்க ரதைக்கேட்டு சொல்லுவார். ஜனபாய் செய்த கவித்வங்களை கேட்க கேட்க இனிப்புடையனவாயிருந்தன. மேலான மதுரத்துட னிருந்த சாஹித்திய மாதலாலெழுதிக்கொண் டிருந்தேனென்று சொல்லி பெருமாள் நாமதேவர் வீட்டிற்கு வந்தனர். அவரை விடாமல் ஞானதேவரும் இதரமான பக்தர்களும் தொடர்ந்து வந்தனர். இவர்க ளனைவரையும் பார்த்து நாமதேவர் நமஸ்கரித்து அவர்களிருக்க ஆஸனங்களைக் கொடுக்க அனைவரு முட்கார்ந்தபிறகு பெருமாள் நாமதேவரைக்கண்டு, ஜனபாயியை அழைத்து வரும்படி கட்டளை யிட்டனர். உடனே அவளை யழைத்துவர, அவள் பெருமாளைக்கண்டு தெண்டம் ஸமர்ப்பித்தனள். ஸ்ரீஹரி ஜனபாயியைப் பார்த்து நீ செய்த கவித்வங்

இதைக் கேட்டு அவ்வர்த்தகன்மனைவி திடுக்கிட்டு மாறுத்தரஞ் சொல்லாமல் திகைத்து நிற்க, தபசி அவளைப்பார்த்து ஏன் திகைக்கிறாய்? அவ்விபூதியைப் போட்டுவிட்டையோ? யென்று கேட்டார். அவள் சாப பீதியினால் வியப்புற்று சொல்லுவாள், ஸ்வாமி! எனக்கொரு சினேகிதி சொன்னச் சொல்லைக் கேட்டு அந்த விபூதிமகிமையை விஸ்வஸிக்காமல் அடுப்பிலெரிந்து விட்டேன், நான் செய்த பூர்வகருமமான தென்னை நாசஞ் செய்தது. ப்ரம தயையுடைய ஓ ஸ்வாமி! பரபுத்தியினாலப் பலத்தை கைவிட்டேனென்ன அவர் சொல்லுவார், வரதானம் வியர்த்தமாய் விட்டதோ! அடுப்புச் சாம்ப லெவ்விட மெறிந்தாய்? அந்தக் குப்பமேட்டைக் குறிப்புடன் காட்டக்கடவையென்று வெளியே வந்து நிற்க, அவள் வெகுநாளாய் பயிர் பச்சைகளுக்குச் சேர்த்துவைத்த பாரமான குப்பமேட்டைக் காண்பித்தாள். அத்தபசி உடனே அக்குப்ப மேட்டின் மேலேறி "ஆலக்" யென்று உரக்கக் கூப்பிட "ஆதேஸ்" என்று ஓர் த்வனி அதினின்று முண்டாயிற்று. இதற்குள் அவ்விடத்திலுள்ள ஜனங்க ளனைவருங்கூடி அக்குப்பயைக் கிளருமளவில் அவ்விடம் பன்னிரண்டு வருஷத்திய பிள்ளை சாதுவேஷத்தைப் பூண்டு சுந்தரமான மேனியுடன் சகல சுகுணங்க ளுடையவனாய் தவத்தைச் செய்துக் கொண்டிருந்தான். அப்பிள்ளையின்மேல் மண்ணொட்டாம லிருப்பதைப் பார்த்து சகலரும் மகத்தான வாச்சரியத்தை யடைந்தனர். மச்சேந்திரர் அப்பிள்ளையி னருகில்வரும் சமயத்தில் மைந்தன் கண்திறந் தெழுந்திருந்து, அவருக்கு சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தான். உடனே பிள்ளையை கரத்திற் பிடித்துக்கொண்டு கோரக்ஷக னென்று பேரிட்டு தபசி போகத் தொடங்கினர். அப்பொழுது வர்த்தகனு மவன் மனைவியு மோடிவந்து நமஸ்காரங்களைச் செய்ய, பெரியோரால் பூஜிக்கப்படு மொரு பிள்ளை யுமக்குண்டாவா னென்று சொல்லிப் போய்விட்டார்.

தபசியின்பின் தனயனும் போகத் தொடங்கினான். சிலகாலங்கழிய கோரக்ஷகன் தன் ஆசிரியரைக்கண்டு ஸ்வாமீ! தேவரீர் உபதேசம் செய்யவேண்டு மென்று பிரார்த்தித்தான். அதற்கு ஆசாரியர் சொல்லுவார். நீ சிஸ்ருஷை செய்து வருவையாகி லுபதேசமொழியைச் சொல்லுவேன், பரிக்ஷை செய்யாமல் பிரம்

மோப தேசத்தைப் பெரியோர் செய்யா ரென்றார். கோரக்ஷக னும் சேவாதற்பரனாகி சிஸ்ரூஷைகளைச் செய்து அவருடன் சஞ்ச ரித்துக் கொண்டிருந்தான். ஒருநாளிருவரு மோர் பட்டணத்தைச் சேர்ந்து வூருக்கு வெளியி லோர் விருக்ஷத்தடியில் ஆசாரியர் நின்று சிஷ்யனை பிக்ஷை கொண்டுவரும்படி கட்டளையிட்டார். கோரக்ஷகன் பட்டணத்து வீதிகளிற் சென்று பிக்ஷையைக் கேட்க, ஒரு பிராம்மணஸ்திரீ அன்னமிட்டு சில வடைகளையுங் கொடுத்தாள். கோரக்ஷகன் சந்தோஷத்தை யடைந்து செல்லுமளவில் அவ்விடத்திய ஜனங்கள் கண்டு கிடைத்ததற்கு சந்தோஷிக்கும் சத்புருஷ னென்று அவனைக் கொண்டாடினார்கள். கோரக்ஷக னவ்வடைகளையு மன்னத்தையும் குருவுக் கர்ப்பிக்க அவர் பிரேமையுடன் பக்ஷித்து இந்த வடைகள் மதுரரஸத்துடன் கூடியிருக்கின்றன நாளையதினமும் வடைகளைக் கொண்டு வந்து கொடுவென்று சிஷ்யனைக் கேட்டார். அப்படியே செய்வேனென்று சொல்லி சிஷ்ய னருணோதயத்தி லெழுந்திருந்து ஸ்நானஞ் செய்து நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு ஜோல்னாவை கக்கத்திலிட்டு முன் தான்சென்ற பிராம்மணன் வீட்டுக்கே திரும்பியும் பிக்ஷைக்குப் போய் வடைகளைக் கொடுக்கச்சொல்லிக் கேட்டான். அந்த பிராம்மணஸ்திரீ சொல்லுவாள், நேற்றியதினம் பிராம்மண ஜனங்களுக்கு ததீயாராதனஞ் செய்தோ மாதலால் வடைக ளுனக்குக் கிடைத்தன. இன்றையதினம் வீட்டில் நான் வடைகள் செய்யவில்லை, தானிய பிக்ஷையை கொண்டுபோவென்றாள். கோரக்ஷகன் தானியத்தை நான் கொள்ளேன். அஷ்டவித சித்திகளும் சதுர்வித முக்திகளும் அடுத்துவந்தாலும் ஆசாரியர் கண்ணெடுத்துப் பார்ப்பவ ரல்லர். அவருடைய இச்சாபூர்த்தி செய்யும்பொருட்டு நீ வடைகளைச் செய்துக்கொடு வென்றான். அம்மாது அங்குள்ளோரைப் பார்த்து நாயிக் கொருநா ளன்னமிட்டால் மறுதினமு மந்த வன்னத்தையே விரும்பும், அதுபோல இவன் வேஷதாரியாக நேற்று வந்து அன்னத்தைக் கொண்டுபோனான் இன்றைக்கும் திரும்பியு மதற்காக வந்தானென்று சொல்ல, கோரக்ஷகன் அவளை நோக்கி அம்மே! நான் நாயைக்காட்டிலும் ஈனன். வடைகளைக் கொள்ளாமல் நான் போகேனென்றான். அம்மாது உரத்த சத்தத்துடன் சொல்லுவாள், நீ அடஞ்செய்ன [illegible] ும்

அடையாப்பொருளெப்படி யடையப்படும்? நீ யுனது நேத்திரத்தைக் கொடுப்பையோ? வென்ன, கோரக்ஷகன் சமுசயமின்றி நான் சக்ஷுவைக் கொடுக்கிறேன் நீ வடைகளைத் தரவேண்டுமென்ன, அவள் பிரயோஜனமற்ற வீண்வார்த்தைகளைப் பிதற்றுவதனாலென்னவென்று சொல்ல, உடனே கோரக்ஷகன் ஒரு கண்ணைப் பிடுங்கிக் கையில் வைத்தான். அதைக்கண்ட அம்மாது திடுக்கிட்டுப் பயந்து அவன் கண் இரத்தத்தைத் துடைத்து கால்களில் விழ, கோரக்ஷகன் பயப்படவேண்டாமென்று தைரியஞ் சொல்லி, சாந்தியுடனும் குரோதமற்றும் குருவை நினைத்துக்கொண்டும் வேதனையுமடையாமல் மகா ஸித்திகளையும் நினையாமலிருந்தான். பிராம்மணன்மனைவி சீக்கிரத்தில் வீட்டிற் சென்று மாவை யரைத்து வடைகளைச் சுட்டு உடனே கொண்டுவந்து கொடுத்து யாருடனும் சொல்ல வேண்டாமென்று கும்பிட்டாள். அப்பொழுது கோரக்ஷகன் கண்ணுக்கு வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு ஆசாரியரிடம் வந்து வடைகளை அவர்முன் வைத்து அமுது செய்யுமென்று பிரார்த்தித்தான். சச்சிஷ்யனை சதாசாரியர் கண்டு இவ்வளவு ஆலசியமேனென்ன, கோரக்ஷகன், வடைகளுக்காக விழியைக் கொடுத்தேனென்ன, குருமூர்த்தி மற்றொரு கண்ணைத் தனக்குக் கொடுவென்ன, அப்படியேயென்று கோரக்ஷகன் தனது இரண்டாவது நேத்திரத்தையுஞ் சதாசாரியருக்கு சமர்ப்பித்தான். அப்பொழுது ஆசாரியர் மகத்தான பிரீதி யடைந்து அமலக் கண்களைக் கொடுத்துக் கிருத கிருத்தியனென்று சொல்லி தாரக மந்திரத்தை யுபதேசித்து பக்ஷணைசெய்து பிரசாதத்தைக் கொடுத்தருளினார்.

அவர்கள் இருவரும் கூடி மகா மேன்மை யுடையவர்களாகி உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்து பின்பு வெவ்வேறாகி மச்சேந்திரர் தீவுகளுக்குத் தீர்த்தயாத்திரைச் சென்றனர். கோரக்ஷகர் பரதகண்டத்திற் சகல தீர்த்தங்களைச் சேவித்துக்கொண்டு கோவிந்தா! கேசவா! முராரி! மாதவா! ஹரி! அச்சுதா வென்று சொல்லி துர்ஜனர்களனைவரையும் சுஜனர்களாகச் செய்து விஷ்ணு அம்சராணபடியால் விசேஷ ஜனங்களுக்கு விஸ்வோத் தாரகமான தாரக மந்திரத்தை யுபதேசித்துக்கொண்டு வெகுகாலஞ் சஞ்சரித்து ஆசாரியரைக் காணவேண்டு மென்னுங் கருத்துடையவராய் அவரைக் காணாமல், தனலோபிக்குத் தனம் நஷ்டமானால்

குனிந்து குண்டிதனுவதுபோல, மனவருத்தமுற்று தேடலுற்ருன். இப்படி தேசதேசங்களவருக்காகத் தேடிக்கொண்டிருக்க கானீபா நாதரெனு மோர் சத்புருஷர் மச்சேந்திரரிருக்குமிடத்தைத் தெரிவித்தார். அதை மனதிற் குறிப்புடன் கொண்டு அவ்விடத்திற்குப் போய்க்கொண்டிருக்கும் மார்க்கத்தில் ஓர் பட்டணத்திற் பிரவேசித்து பிக்ஷைக்காக ஒரு வீட்டிற்குப் போம்பொழுது ஒரு ஸ்திரீ! கோரக்ஷகருடைய சுந்தரமேனியும், பூர்ண சந்திரனைப் போன்ற முகமும், லாவண்யமான காந்தியும் பார்த்து, ஐயா! பிக்ஷகரே! நீர் முன்னுக்குச் சென்ருல் மிகுதியான விக்கினங்கள் வந்தடையும், அங்கிருப்பது ஸ்திரீ ராஜ்யமாகும். அவ்வூரிலிருப்பவர் சாதுக்களையாவது யோகிகளையாவது கண்டால் சிக்கிரத்தில் கொல்லுவார்கள். அந்த ராஜ்யத்தின் அரசாக்ஷியைப் பிரேமளராணி யென்பவள் செலுத்துவாள். நான் சத்தியத்தைச் சொன்னேன் நீரவ்விடம் போகக்கூடா தென்ருள். கோரக்ஷகரது பொய்யென் றெண்ணமலிருந்தும் ஆசாரியரை சேவிக்கவேண்டு மாசையினுல் போகவேண்டியதா யிருப்பதால் அவ்வார்த்தைகளை கவனிக்காமல் போகலுற்ருர்.

ஸ்திரீ ராஜ்யத்திற்குப் போகும் மார்க்கத்தி லோர் செடியின் கீழ், பகல் வேஷக்காரர் சில ருட்கார்ந்திருக்க கோரக்ஷகரவர்களைப் பார்த்து சந்தோஷித்து நீங்க ளெவ்விடம் போகிறீர்களென்ன? அவர்கள் மகா சோகத்துடன் நாங்கள் பகல் வேஷங்களைப் போட்டு வெகுவாக நடனஞ் செய்வோம் பிரேமளராணி வசிக்கும் பட்டணத்திற்கு போய்க்கொண் டிருக்குந் தருணத்தில் மிருதங்க மடிப்போனுக்கு வியாதி சம்பவித்தது இதனுல் கிலேசமடைந்தோமென்ன, கோரக்ஷகர் நான் மிருதங்க வாத்தியம் செய்வேனென்று அவர்களுடைய மிருதங்கத்தைக் கொண்டு தான் வாசிக்க அவர்கள் மதுரமான வோசையைக் கேட்டு சந்தோஷ மடைந்து அந்தக் கோரக்ஷகரைத் தங்கள் சமூகத்தி லொருவராகச் சேர்த்துக் கொண்டு பிரேமள புரத்திற்கு அழைத்துப் போனுர்கள். கோரக்ஷகரும் ஆசாரியரைக் காணும் பொருட்டு தனது மேன்மையை லேசமும் பாராட்டாமல் அப்பகல் வேஷக்காரர்களுக்குச் சேவை செய்து அவர்களைக் கொண்டாடிக்கொண்டு சென்றனர். அவர்க ளவ்வூரைச் சேர்ந்தவுடன், இராணியினுடைய

அரண்மனையி லாடத் தொடங்கினார்கள். பிரேமள ராணியும் மச்சேந்திரரும் அப்பகல் வேஷக்கார ராடுவதைப் பிரீதியுடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவ்வேளையி லவ்விருவர்களை சந்தோஷிப்பிக்கும்பொருட்டு மிருதங்கவாத்தியத்தை கோரக்ஷகர் மெத்த சாதுர்யத்துடன் வாசித்தார். அந்த வாத்தியத்தில் "கோரக்ஷக னிவ்விடம் வந்தான்" எனு முச்சரிப்பு பிரேமள ராணியின் மனதிற்பட்டு திடுக்கிட்டுத் தனக்கு பிரியமுள்ள கணவரான மச்சேந்திருக்குச் சொல்லுவாள், பிராண நாதரே! மிருதங்க வாத்தியத்தை நீர் சற்று நிதானித்துக் கேளுமென்ன, அவருமப்படியே செவியிட, தன்னுடை சிஷ்யன் கோரக்ஷகன் வந்தானென் றறிந்து அவ்விடமாடிக்கொண் டிருக்கும் வேஷதாரிகளில் தேடிப்பார்க்கு மளவில் சிஷனுடைய குறிப்பு லக்ஷணங்களை அவர்களி லொருவனுக்கிருக்கக்கண்டு தனது மனைவியைப் பார்த்து சிஷ்யன் வந்து விட்டான். இனி யவனென்னை விடான். நீ இதை பார்க்கக்கடவை யென்று சொல்லி ஆசனத்தை விட்டிறங்கிவந்து அவனை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டார். கோரக்ஷகர் மிருதங்கத்தைக் கீழே வைத்து சாஷ்டாங்கமாகச் சத்குருவுக்குத் தெண்டம் ஸமர்ப்பித்து அவ்விருவரு மேகாந்தப்பிரதேசத்திற் கெழுந்தருளி வெகுநேரம் பேசிக்கொண்டிருந்து மச்சேந்திரர் சொல்லுவார், நான் உலகத்திலுள்ள தீர்த்தங்க ளனைத்தையும் சேவித் திவ்விடம் வந்தேன், பிரேமள ராணியானவ ளென்னை வலையிற் போட்டுக்கொண்டாள். இராஜ்ய போகங்களை யனுபவிக்க வெனது மனதை ரம்மியப்படுத்தினாள். போஜன சயனாதிகள் குறைவின்றி நடந்தேறிவர அவளுக்கோர் புத்திரனைப் பெற்றேன். நீ வருவாயென் றெதிர்பார்த்திருந்தேன். நீ வந்தால் நானிவ்விட மிருக்கமாட்டேனென்று நிஜத்தை யவளுக்குச் சொன்னேன். அவ ளதற்குமேல் தன் ராஜ்யத்திற்கு வரும் சாதுக்களைக் கொல்ல வாக்ஞாபித்தாள். நீ யிவ்விட மெப்படி வந்தாயென்ன, கோரக்ஷகர் கூறுவார், சகல தீர்த்தங்களைச் சேவித்துக்கொண்டு உம்மைப் பார்க்க விருப்பமுற்று தேடிக்கொண்டிருக்க கானீபா நாதர் நீ ரிவ்விட மிருக்கும் சங்கதியைச் சொன்னா ராதலால் தேவரீரைத் தேடிக்கொண்டு தேவரீரை சேவிக்க வந்தேன், இப்பொழுது ஆனந்த மடைந்தே னென்றார்.

ஆசாரியரும் சிஷ்யனு மிவ்விதமாக அப்போதிற் கப்போது வார்த்தைக ளாடிக்கொண்டிருக்க மகத்தான் பிரேமையுடன் கோரக்ஷக ராசாரியருக்கு சிஸ்ரூஷை செய்து வருவார். இதைக் கண்டு பிரேமளராணி பெரிய விசனத்தில் முழுகினள். சோமசேகரருக்கு சமானரான தனது பர்த்தா, சிஷ்யன்மேல் பிரியத்தைப்பாராட்டுவதைக்கண்டு தான், பிரேமாதிக்கியத்தைத் தன் பர்த்தாவின்மேல் விசேஷமாகச் செய்து தனது நாதன் தன்னை விடாதிருக்கும் யோசனை செய்து வருவாள். மச்சேந்திரரும் கோரக்ஷகரு மேகாந்தமாக விருக்கும் மோர் சமயத்தில் கோரக்ஷகர் குருவைக்கண்டு பிரயோஜன மொன்றுமின்றி காலத்தை வியர்த்தமாக கழிக்க லானேமென்றும் இந்த ராஜ்யத்தை விட்டு வடக்கே நோக்கிச் செல்வோமென்று சூசனை செய்ய, மச்சேந்திர ரதைக் கேட்டு இந்ததேச மதிக சௌக்கியமாக விருக்கின்றதே! சொர்க்கத்தில் நாம் வசித்தாலு மிவ்வளவுசௌக்கியம் நேரிடாதே! பாலகனை விட்டெப்படி போகக்கூடும்? நான் கட்டுப்பட்டவனு யிருக்கிறேனே! என்றார். கோரக்ஷகர் இதைக் கேட்டு அனுதாபமுற்று சமயத்தை யெதிர்ப்பார்த்து கஷ்டத்துட னிருந்தனர்.

வெகுகால மிப்படி நடந்துக்கொண்டு வர, ஓரிரவில் புருஷரான மச்சேந்திரரும் அவர் மனைவியும் புத்திரனுடன் கட்டிலின் மேற் படுத்துக்கொண்டிருக்க பிள்ளை வயிற்றுவலியா லழத்தொடங்கினன். தகப்ப னெழுந்திருந்து தன்யனை நோக்கி ஏ னழுகிறுயென்ன, மல விஸர்ஜனத்திற்குக் கட்டிலி னின்றும் கீழே போகவேண்டுமென்ன மச்சேந்திரர் கோரக்ஷகரை யழைத்து தன் பிள்ளையான மீனு நாதனை மலவிசர்ஜனம் செய்விக்கக் கொண்டு போய் திரும்பி யிவ்விட மழைத்துவா வென்ன, அவரு மப்படியே அப்பிள்ளையைப் பிடித்துக்கொண்டு மல விசர்ஜனத்திற்கு உட்காரவைத்து ஜலவிசர்ஜனம் செய்வையேல் காதறுப்பே னென்றார். இதைக்கேட்டுத் திடுக்கிட்டு அப்பிள்ளை, தன்னைத் தகப்பனிடம் கொண்டுபோ வென்றுன். கோரக்ஷக ரவ்வண்ணமே அவனைக் கொண்டுவந்து கட்டிலின்மீ திருத்தினர். பின்பு அப்பிள்ளை படுக்கையிலேயே மல ஜலங்களை விட்டான். அவ்விடத்தில் நாற்ற முண்டாகவே மச்சேந்திர ரெழுந்து கோரக்ஷகரை யழைத்துப் பிள்ளையைக் கழுவிக்கொண்டு வரச்சொன்னர். அதை

க்கேட்டு கோரக்ஷக ரப்பாலகனை ஜலத்தினிடம் கொண்டுபோய் வஸ்திரத்தை வண்ணான் துவைப்பதுபோல பாறையின்மே லடிக்கத் தொடங்கினர். அதனா லப்பிள்ளைக்குப் பிராணன் போய்விட்டது. பின்பு அதிலிருந்த ரக்தத்தை யலம்பி அஸ்தி மாம்சத்தை அவ்விடம் போட்டுவிட்டு சர்மத்தைக் கழுவி குருவிருக்குமிடம் கொண்டுவந்து உலர்த்தினர். பின்பு குரு, கோரக்ஷகரைக் கண்டு குமார னெங்கேயென்று கேட்க, சிஷ்ய னவனைத் துவைத்து உலர்த்தினேனென்ன, சதிபதிக ளிருவரும் வெளியேவந்து தமது புத்திரனுடைய சர்மத்தைக் கண்டு மூர்ச்சை யுடையோராய் திரும்பி எழுந்திருந்து ஆசாரியர் சிஷ்யனைக் கண்டு பூர்ணகளையுடன் கூடின புத்திரனைக் கொல்வது உனக்குப் பொருத்த மாமோ! என் பிள்ளையை நான் திரும்பிக் காணச் செய்வையேல் உன்னைப் பேர் பெற்ற சிஷ்யனாக எண்ணுவே னென்ன, கோரக்ஷக ரிதைக் கேட்டு நூற்றெட்டு பேரை அப் பிள்ளையைப்போலவே யிருக்கச் செய்து மகிமையைக் காண்பித்தார். இந்த அற்புதத்தைக் கண்டு மச்சேந்திரர் சந்தோஷித்தனர். பிரேமளா ராணி கோரக்ஷகரைக்கண்டு நமஸ்கரித்து ஐயா! உமது மேலான வித்தைகளை மறைத்து எனது பிள்ளையை எனக்குக் கொடுமென்ன, கோரக்ஷகர் அவள் பிள்ளையை அவளுக்குக் கொடுத்தவுடன் மற்ற நூற்றேழு பேரு மறைந்தனர்.

பின்பு சிஷ்யன் ஆசாரியருக்குத் தெண்டம் ஸமர்ப்பித்து ஸ்வாமி! இனி நாமிருவரு மிவ்விட மிருப்பது தகுதியல்ல, இதை விட்டுப்போவது நன்மை யென்று சொல்ல, ஆசாரியர் தனது சிஷனது பேச்சைக் கேளாவிடில் விபரீதத்தைச் செய்வானென்றெண்ணி அவனுக்குச் சம்மதி வசனத்தைக் கொடுத்து தனது மனைவியான பிரேமளையைக் கண்டு கோரக்ஷக னென்னை வரச் சொல்லிக் கூப்பிடுகிறான், போகாவிடில் ஆபத் துண்டாம், நான் போவே னென்ன அவள் போரநொந்து பிராண நாதரே! உம்மைப் பிரிந்து பிராண னிப்புவியின்கண் ணிற்குமோ? எப்படி பொறுப்பேனென்று பலவாறாகச் சொல்லி பிரலாபித்து அம் மச்சேந்திரருடைய ஜோல்னாவில் சொர்ணக்கட்டிகளை வைத்து நமஸ்கரித்தாள். மச்சேந்திர ரதிக துக்கத்துடன் வீட்டைவிட்டு சிஷ்யனுடன் சென்று பட்டணத்தைத் தாண்டி கானகத்தில் நடந்துக்

கொண்டிருக்க கோரக்ஷகரைக் கண்டு வழியில் பயமுண்டோ வென்ன, அவராசாரியரை நோக்கி ஸ்வாமி! மேலான விராகத்துடன் சகலத்தையும் விட்டு நாம் செல்ல பயமென்ன இருக்கிறதென்று சொல்லியு மவர் பீதியுடனே நடந்துக்கொண் டிருந்தனர். சற்று தூரம் நடந்தவளவில் நிர்மலமான ஜலத்தையுடைய ஓர் தடாகத்தைக் கண்டு ஆசாரியர் தனது ஜோல்னாவை அக்கரையில் வைத்து சௌசத்திற்குச் சென்றனர். அப்பொழுது கோரக்ஷகர், ஆசாரிய ரடிக்கடி பயப்படுவதற்குக் காரணமென்ன விருக்குமென்று ஆலோசித்து அவரது ஜோல்னாவை விரித்துப் பார்க்குமளவில் பொற்கட்டிகளைக் கண்டு பொன்மீதும் பெண்மீதும் அத்யந்த பிரீதி ஆசாரியர் வைத்தா ரென்றும் பிரதிபந்தமான பெண்ணை விட்டும் பொன்னைவிட வில்லையென்று மெண்ணி இதை விடுவிப்பது உத்தமமென்று அப் பொற்கட்டிகளைத் தடாகத்தி லெறிந்து அவைகளுக்குப் பதிலாக அந்த ஜோல்னாவில் கற்களைச் சேகரித்து வைத்தனர். பின்பு மச்சேந்திரர் சௌசத்தைச் செய்துக்கொண்டு ஜோல்னாவை கக்கத்திலிட்டு நடக்கத் தொடங்கினர். சற்றுதூரஞ் செல்ல மகத்தான அரண்ணியத்திற் பிரவேசித்தனர். அப்பொழுது ஆசாரியர் சிஷனைக்கண்டு வழியில் பயமுண்டோ வென்ன, அதற்கு சிஷன், ஸ்வாமீ! பயம் தடாகத்தினிடமே போய்விட்டதென்றான். அதைக் கேட்டு ஆசாரியர் தனது ஜோல்னாவைப் பார்க்குமளவில் அதில் கற்களைக்கண்டு வழிச்செலவுக்குக் கொண்டுவந்த திரவியத்தை தமக்காகிலும் மற்றொருவர்க்காகிலு முபயோகப் படுத்தாமல் வீண் செய்தது நன்மையோ? வென்று வெறுக்க, கோரக்ஷகர் ஓர் பாராங் கல்லின்மேல் சௌசத்தை விட்டார். அக்கல்லெல்லாம் காஞ்சனமாயிருக்க குருவானவர் பார்த்து மயிர்க்குச்சலிப்புடையராகி மிகுந்த வாச்சரியத்தை அடைந்தனர். அப்போது கோரக்ஷகர் ஸ்வாமீ! இது தேவரீருடைய திருவடிகளின் மேலான பிரதாப மாகுமென்று மகத்தான பிரேமையுடன் நமஸ்கரித்தார். அப்பொழுது மச்சேந்திரர் தன்னில்மை தானறிந்துக்கொண்டு சிஷ்யனுடைய அற்புத மகிமைகளை உலகத்தோ ரறியும் பொருட் டிவ்விதமாகச் செய்யலாச்சுதென்று சொல்லிக்கொண்டு நிர்ப்பயராகி சுவேச்சையாக சஞ்சரித்தனர்.

---

# சோகாமேள் சரித்திரம்.

பஞ்சம குலத்தில் சோகாமே ளென்பவர் பிறந்து பாரியை யுடன் பண்டரி புரத்தில் வாசமாயிருந்தார், அந்தியர் குலத்திற் பிறக்கினு மவனியிலுள்ளோ ரனைவரையும் ஆத்மதுல்யமாகப் பார்ப்பர். தேகமனித்தியமெனும் விசாரணை யுடையவராய் சத்யமான ஆத்ம நிலைமையிலும் ஹரிபக்தியிலு மீடுபட்டிருப்பர். ஏகாதசி விரதத்தை கைக்கொண்டு அதனை நியமத்துடன் கொண்டாடுவர். ஹரிநாம சங்கீர்த்தனத்தை அதிமதுரமென்று கேட்பர். திருநாமத்தை இடைவிடாம லுச்சரித்துக் கொண்டிருப்பர். துடைப்பத்தை கைக்கொண்டு புரிபிரதக்ஷிண மார்க்கத்தையும் கோவில் வெளி பிரதக்ஷிண மார்க்கத்தையும் பெருக்கிச் சுத்தப்படுத்துவர். அடியார்களுடைய சேவையை அபரிமிதமாகச் செய்து வருவர். இந்த நிஷ்டையைக்கண்டு பாண்டுரங்கர் அப்போதைக்கப்போ தரிசனங் கொடுத்து வருவர்.

இப்படி யிருக்க வொருநாள் ஸ்ரீஹரி சோகாமேள் வீட்டிற்கு வந்து ஏகாதசியாயிருந்த படியால் ஏதாகினு மூபஹாரம் (பலஹாரம்) கொடுமென்று கேட்டார். சோகாமேள ரதைக்கேட்டுத் தன் மனையாளை யழைத்து பெருமாளுக் கேதாகிலும் தகுந்த பதார்த்தத்தைக் கொண்டுவந்து கொடுக்கச் சொல்ல, அவளுமோமென்று சம்மதித்து சீக்கிரத்தில் மனை அறையிற் சென்று ஏட்டுத் தயிரை அன்புடன் கொண்டுவந்து கொடுக்கப் பெருமாள், பேர், ஊர், குலங்களைப் பாராமல் பிரியமுடன் பக்ஷித்தெழுந்திருக்கு மளவில் கொஞ்சம் தயிர் பூமிமேல் விழுந்து பீதாம்பரத்திற் கொட்டிக் கொண்டது. பின்பு பிரியத்துடன் சோகாமேள் ஸ்ரீஹரி சரணங்களுக்கு நமஸ்கரித்து, எதுகுல திலகரே! அச்சுதரே! பாண்டு ரங்கரே! கோவிந்தா! முராரி! நாளை தினம் துவாதசி யாதலால் தீர்த்தப் பிரசாதத்திற்கு தேவரீ ரெழுந்தருளுமென்று பிரார்த்திக்க ஸ்ரீஹரி சம்மதித்துச் சென்றனர். வெளியிலிருந்த ஓர் பிராம்மண னிந்த சங்கதி யனைத்து மறிந்துக்கொண்டு சந்தாபத்துடன் ஸ்ரீஹரி சன்னிதிக்குச் சென்று விக்கிரகத்தைப் பார்க்குமளவில் பீதாம்பரத்தில் தயிரொட்டி யிருந்தது. இதைக் கண்டு வியப்புற்று ஏகாந்தமாக அவ்விடத்திய பிராம்மணர்களுக்குச் சொல்லுவான், பறையனான சோகாமேளன் பாண்டுரங்கர்

சன்னிதிக்கு பலமுறை வருவதும் அவரைத் தீண்டுவதும், அவர் ஆலய சமீபத்தில் வாஸமாயிருப்பதும் தகுதியன்று, ஊருக்கு வெளியில் அவனிருக்கு முபாயத்தைச் செய்வது யுக்தமென்று சொல்ல, இந்தப்படியே பிராம்மணர்களனைவரு மோர் பத்திரிகையை யெழுதி அதிகாரிக் கனுப்பினார்கள். அவ்வதிகாரி சில துலுக்கர்களை அழைத்து, சோகாமேளை அழைத்து வரும்படி ஆக்ஞாபித்தான். அவர்கள் சோகாமேள் வீடடிற்குச் சென்று அதிகாரியினுடைய உத்தரவை யறிவித்தார்கள். இதைக்கேட்டு சோகாமேள் விந்தை யடைந்து ஐயோ! விட்டலமூர்த்தி விருந்துக்கு வருவாரே! நான் வர சரிப்படாதென்று சொல்லி, பெண் சாதியைப் பார்த்து ஓ பெண்ணே! பாண்டுரங்கரை போஜனத்திற்கு வரச்சொன்னேமே! அதை நீ மறந்தனையோ! சீக்கிரத்தில் சமையல் செய்யென்றார். இதைக்கேட்டே அத்துலுக்கர்களவனை வெளியே இழுத்து அடித்துக்கொண்டு வந்து அதிகாரியினிடம் சேர்த்தனர். சோகாமே ளவ்வதிகாரிக்குத் தெண்டனிட்டு, ஓ தந்தை தாயரே! ஏழையை யழைத்ததென்ன காரணமென்றார். அதிகாரி யவரைக் கண்டு சொல்லுவான். பிராம்மணர்கள் பத்திரிகையை யனுப்பினார்கள். நீ அந்தியர் குலத்தில் பிறந்து ஹரியாலயத்தி லிரவிற் சென்று பூஜை செய்து பெருமாளுடன் பேசிக்கொண்டிருப்பாயாம். ஜாதி தர்மத்திற்கு விரோதமாக நீ சன்னிதிக்குச் செல்லத்தகுமா? வென்று கேட்க, சோகாமேள் சொல்லலுற்றார், ஸ்வாமி! பாண்டுரங்கரே என்னை அழைக்கிறார், அது அவருக்குத் தகுமா? நான் நீசனென் றெவ்வளவு சொல்லியு மவர் கேளாமலிருப்பர், என்னுடைய வீட்டிற் கவரேவந்து சுகமுடன் சாப்பிடுவர், இதை நிவர்த்திக்க உபாயமொன்றில்லை, என்னுடைய வபராத மணுவளவேனும் கிடையாது. அடியவரிட மிடைவிடா பக்தியை அவ ரிச்சித்திருப்பர். ஜாதி நீதிகளைப் பாரார், ஸர்வ தேகங்களிலு மாத்மா வொரு தன்மையாயிருந்து சகலமான விந்திரியங்களையு மாட்டிவைத்துக்கொண்டு நிஷ்களங்கராய் நிர்விகாரராயிருப்பதுபோலும், பிராம்மணனும் பறையனும் பூமிமேல் நடந்தா லந்த பூமிக்கு தோஷமில்லாதது போலும், பிராம்மணனும் பறையனும் கங்கையில் முழுகினால் பாகீரதிக்கு தோஷமுண்டாகாததுபோலும், ஸ்ரீஹரிக்கும் அபவித்திர மொன்றும் ஒட்டா

தென்றான். இதைக்கேட்டு அதிகாரி ரோஷத்தை யுடையவனாய் அடா! பரதத்துவத்தை நீ யெங்களுக்குச் சொல்வதற்கு வெட்கப் படாயோ? என்று சேவகரை நோக்கி இரண்டெருதுகளைக் கொண்டுவரச்சொல்லி நுகத்தடிக்கு அவ்வெருதுகளைப் பூட்டிச் சோகாமேள் கால்களை நுகத்தடி நடுவில் கட்டினான். பின்பு சோகாமேள் பிராணன் போகும் பரியந்தம் எருதுகளை இழுக்கச்செய்து தன்னிடம் கொண்டு வரும்படி அதிகாரி சேவகர்களுக்கு நியமித்தான். இதுகண்டு சோகாமேள் ஸ்ரீஹரி பஜனையை செய்யலுற்றார். அச்சுதா! கிருஷ்ணா! ஆனந்த சாகரா! பரந்தாமா! பாண்டுரங்கா! இவ்வுலகில் நீசனாகியும் பாபியாகியும் பிறந்தேன்! அந்த ஹேதுவினாலேயே உம்முடனானிருப்பது பெரிய தப்பிதம், உன் ஆலயத்திற்கு வெளியில் பெருக்கிவரும் வேலைதா னெனக்கு தகுந்ததாகும், என்னுடைய ஈனஸ்திதியைக்கண்டு இப்போ தென்னை இரக்ஷியும், ஓவிட்டல மூர்த்தி! வாசுதேவா! தசரதராமா! கேசவா! முராரீ! நாராயணா! நரஹரி! யென்று பிரார்த்திக்க, பெருமாளவ்விடம் வந்து நுகத்தடியைப் பிடித்து நின்றனர். அதிகாரியானவன் அறிவீனனாகி அவ்வெருதுகளை யோட்டச் சொல்லி யுத்தரவு செய்து, எந்ததெய்வம் குறுக்கேவருமோ நான் பார்க்கிறேனென்று சொல்ல, எருதுகள் நடக்கவேண்டி அச்சேவகர் அவைகளை அபாரமாக அடித்தனர். எவ்வளவடித்தாலு மவைகள் நகரவில்லை. பூமியில் நாட்டிவைத்தாப்போ லிருந்தன. அவ்விடத்திய ஜனங்க ளனைவரும் இதை விசித்திரமாகப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

சோகாமேள் மனைவியிடம் சிலர் சென்று இந்த சங்கதியைச் சொன்னார்கள். அவளதிக அபேக்ஷையுடன் புருஷனைக் காண அதிகாரரிடம் மார்பை புடைத்துக்கொண்டு வந்துபார்க்குமளவில் ருக்மணீபதி நுகத்தடி முன்பு நிற்கக் கண்டாள். ஸ்ரீஹரி, பக்தர்களுக்குக் காணப் படும்படியானவரும் அபக்தருக்கு கோசரமாகாதவராகியு மிருப்பர். பெருமாள் முன்பாக அவள் நின்று கைகூப்பி ஸ்வாமீ! அடியோங்கள் மெத்த ஏழைகள் எங்களுதரபோஷணத்தை நடத்திக் கொள்வதே கஷ்டமாக விருக்கின்றது. தேவரீர் பலாத்காரமாக போஜன பந்திக்கு வருவதும், புருஷனை ஆலயத்திற்குள் ளழைத்துப் போவதுமான கலக சேஷ்

டைகளை யுண்டாக்கி இந்த கதிக்குக் கொண்டுவந்தீர். பக்தவாத்சல்லியத்தை யுடைய தேவரீர் உமது ரூபத்தை பிரகடப்படுத்தி எனது புருஷன் சாகாமலிருக்கு முபாயத்தைச் செய்யக் கடவீரென்று பிரார்த்திக்க, பெருமா ளிதைக் கேட்டு சதுர்புஜங்களும், திவ்யாயுதங்களும், மகரகுண்டலங்களும், கிரீடமும், வைஜயந்தி வனமாலைகளும், பீதாம்பரமும், ஸ்ரீவத்சம் முதலாகிய சகல அலங்காரங்களுடைய சுந்தர ரூபராய் விளங்க, பெருத்த மின்னல் ஆகாயத்திற் றோன்றினால் நேத்திரங்கள் சிதறுமாப்போல அவ்விடமிருந்த அனைவருக்கும் சர்வேசுவரனது திவ்யமங்கள விக்கிரகத்தின் காந்தியினால் கண்களனைத்து மூடப்பட்டன. உடனே பெருமாள் மறைந்தனர். அவ்விடத்திய ஜனங்க ளனைவரும் அவ்வதிகாரியு மாச்சரிய மடைந்து பக்தனுடைய கால்கட்டுகளை அவிழ்க்கச் செய்துவிட்டார்கள். சோகாமேளரைப் பற்றி சாக்ஷாத் ஸர்வேசுவரனைக் கண்டோமென்று சகலரு மார்த்தியுடன் தெண்டம் ஸமர்ப்பித்தார்கள். இது பாண்டுரங்கருடைய பரம கிருபையென்றெண்ணி கிருஷ்ணா! கோவிந்தா! முகுந்தா! முராரி! நாராயணா! நரஹரி! அச்சுதா! அனந்தா! வென்னும் நாமங்களைக் கொண்டாடிக்கொண்டு சோகாமேள் தன்னிருப்பிடஞ் சென்றனர். அதுமுதலவர் பெருமாள் சன்னிதிக்கு ஆடங்கமின்றி போக்குவருத்தா யிருப்பர்.



## ஏகநாதர் சரித்திரம்.

பைடனெனும் பட்டணத்திற் பானுதாஸரென்பவர் பிராம்மண வம்சத்தில் பரமபக்தராகி பிரசித்தியடைந்திருந்தனர். அவர் குமாரன் சக்கரபாணி யென்பவர் சூரிய நாராயணனெனும் பிள்ளையைப் பெற்றார். இவர் ருக்மணியெனும் புண்ணியவதியை விவாகஞ் செய்துக்கொண்டு மகோபகாரரான ஏகநாதரைப் பெற்றார். சிறுபிராயத்திலேயே ஏகநாதருடைய தாய் தந்தைக ளிருவரும் ஸ்ரீஹரி பதத்திற்குச் சென்றதால் பாட்டனாரவரை பரிபாலித்து வந்தார். அப்பிள்ளை சிறுவயதிலேயே தன்வீடு பாலகர்களுடன் கூடி சிலைகளை வைத்து ஸ்ரீஹரி யென்று பூஜிப்பர். பக்தர்கள் பாடும் பாட்டுகளைக் கேட்டு பிரேமையுட னவர்களைப்போலே பாடுவார். நின்றாலும், நடந்தாலும், பண்டரி நாதா! பத்மநாபா!



ఏకనాథు.
ஏகனாதர்

జనార్దనస్వామి
ஜனார்த்தனசாமி.



చంద్రభట్టు
சந்தர்ப்பட்டு.



పితామహుల చక్రపాణి.
பிதாமஹான் சக்ரபாணி.

பாண்டுரங்கா! காப்பாற்றுமென்று கூவுவர். சுப்பல்களின் நுனியில் சீலைக்கந்தல்களைக் கட்டி கையிற் பிடித்துக்கொண்டு இது கொடி மரமாகும், பண்டரீ புரத்திற்குப் போவேனென்பர். சிசுவாயிருந்து ஸ்ரீஹரி சிந்தனை செய்வதைப் பாட்டன் கண்டு தன் தகப்பனுக்குப் பகவான் கொடுத்த வரப்பிரஸாதத்தால் இப்பிள்ளை பிறந்தாரென்று பிரீதி செய்துக்கொண்டிருந்து ஆறுவது வயதில் அவர் உபநயனத்தை முடித்தார். அதுமுதலப்பிள்ளை குலகுரு சொன்னபடி நித்திய கருமங்களைச் செய்துவருவர். ஸ்நானஞ் செய்யாமல் ஜலபானங் கூட செய்யார். வேதாத்தியயன மொருதர மிரண்டுதரஞ் சொன்னவாறே பாடமாக்கி ஒப்பிப்பர். இதர வித்தைகளையு மெளிதிலே வுணர்ந்தனர். சித்தத்தில் தொந்தரையடையாமல் ஸ்ரீவைஷ்ணவராகி யெந்தெந்த வேளையி லெது வெது பிராப்தமாமோ அது ஈஸ்வரானுக்கிரகத்தா லுண்டாகுமென்று திடமுடையவராகி இராமநாமத்தை யிடைவிடாது பிரீதியுடன் ஜபித்துக்கொண்டிருப்பர். நீதிசாஸ்திரங்களி லிருக்கு மர்த்த விசேஷங்களை நைபுண்ணியத்துட னிதர ஜனங்களுக் கவர் சொன்னால் பண்டிதர்களு மவைகளைக் கேட்டு பிரபலாச்சரியத்தை யடைந்து சாராசார விவேக சீலரென்று சொல்லுவார்கள்.

ஒருநா ளேகநாதர் பண்டிதர்களிடஞ் சென்று ஐயா! எனக்கேதாகிலுஞ் சமுசயங்கள் நேரிட்டா லவைகளை யாவர் தீர்ப்பாரென்று கேட்க, அவர்கள் அப்பா! சமுசாரி சேதனன், சத்குருவை யடையாமல் முத்தி சேரமாட்டான். ஸ்ரீஹரியே ஆசார்யராகி சத்கதியைக் கொடுப்பார். சமுசயங்களவரே தீர்ப்பாரென்று பிரதி யுத்தரம் சொன்னார்கள். இதைக்கேட்டு ஏகநாதர் தீவிரத்தை யுடையவராகி எப்பொழுது நான் சத்குருவை யடைவேன். எப்போ தவருடைய சேவையைச் செய்வேன், எப்போ மேன்மை யடையப் போகிறே னென்று மகத்தான விசனத்தை யுடையராகி ஓரிரவில் தான் ஹரிபஜனை செய்துகொண்டிருக்க, இருஜாம வேளையில் ஆகாய வீதியி லோரோசை யுண்டாயிற்று அதாவது "தத்தாத்திரயர் சிஷ்யரான ஜனார்த்தனர் 'தேவகிரிகடே' யென்னும் பட்டணத்திலிருப்பார், அவரை நீ காணக்கடவை" யென்னும் வசனத்தைக் கேட்கவே சந்தோஷத்தை யடைந்து அவ்விடத்தி லொருவருக்குந் தெரியப்படுத்தாமல் ஒண்டியா

கவே புறப்பட்டு ஐந்து காதவழி நடந்து அவ்வூரைச் சேர்ந்து ஜனார்த்தனருடைய இருப்பிடத்தை விசாரித்துக்கொண்டு அவர் வீட்டையடைந்து தனது வரவை அவ்விடத்திலிருந்த ஒருவர் மூலமாகத் தெரியப்படுத்தச் சொன்னார். ஜனார்த்தன ரம்மனிதன் வசனத்தைக் கேட்டு தடை செய்யாமல் வெளி வாசற்படிவரைத் தானே வந்து நீதி நெறியுடைய அவ்வைஷ்ணவரைக் கண்டு சந்தோஷிக்க, ஏகநாதருஞ் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து அடியேனைப் புனிதனாக்க வேண்டும், சரணாகதனானேன், தேவரீர் திருவடித் தாமரைகளைச் சேர்ந்தேன், ஸ்ரீகுருநாயரே! தேவரீருடைய திருக்கைகளை அடியேன் சிரசின்மீதிட்டு ரக்ஷிக்கக் கடவீர், ஆசையும் மோஹமும் அநிவாரங்களாகி அதிக தொந்தரை செய்ய, தேவரீரிடம் வந்தேன், அடியேனை யங்கீகரித் தனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். அனுதாபத்தை யுடையவரென்று ஆசாரியர் சந்தோஷித்து வினயத்துட னவரை நோக்கி வீட்டிற்குள் வரக்கடவீ ரென்றார். ஏகநாதர் பிரியமுடையவராகி, துருவபாலகன் நாரதரைக் கண்டுகொண்டதைப்போல் பவரோகத்தை நிவர்த்தி செய்யு மாசாரியரைக் கண்டு தைரிய மடைந்து தனது மமதைகளை விட்டு மேன்மை கீழ்மை யென்று பாராமல் பிருதிபாகச் சேவைகளைச் செய்யத் தொடங்கினார்.

### ஜனார்த்தன சுவாமி.

அருணோதய காலத்தில் ஏகநாதர் எழுந்திருந்து ஹரிஸ்மரணையைச் செய்து, சௌச கருமங்களை முடித்து, வீட்டை மெழுகுதல் முதலான வாஸ்து பூஜைகளைச் செய்து ஆசாரிய ரெழுந்தவுடன் சௌசத்திற்காக ஜலத்தைக் கொடுத்து அவர் காலலம்புமிடத்தில் மணையை வைத்து பாத்திரங்களைப் பரிசுத்தமாகத் துலக்கி மிருத்திகையும் சுடு ஜலமும் ஆசாரியர் கேட்காமுன் கொண்டுவந்து வைத்து அவருக்கு ஸ்நான விதியெல்லாஞ் கிரமமாகச் செய்வித்து, பூஜா திரவ்வியங்கள், புஷ்பம், துளசி முதலாகியதுகளைக் கொண்டுவந்து வைத்து ஆசாரியர் பெருமாளாராதனத்திலிருக்க சந்தனம், தூபம், ஹாரதிகளைச் சேகரித்துக் கொடுத்து அவர் தியானத்திலிருந்தா லவரையே தான் சேவித்து அவர் ஸ்வீகரித்த எச்சிலிலையை அன்புட னருந்தி அவருக்குத் தாம்பூலத்தைக் கொடுத்து எச்சிற் படிக்கத்தையும் அண்டைவைத்து எந்த வேளை

யினுமேமாறுமல் ஜன்மமிருக்கும்வரைக்கு மிவ்வாறன குருசேவை யிலிருக்கவேண்டுமென் றெண்ணியிருந்தார். இதுவன்றி ஜனார்த்த னருடைய பிரபஞ்ச சம்மந்தமான கணக்குகளையும் லக்ஷண யுக்த மாகவும் திருத்தமாகவும் வைத்து வந்தார். ஜனார்த்தன ஸ்வாமி இவருடைய குணங்களைக் கண்டு ஏகநாதரே! நீர் நம்மிடத்தே இரு ந்துவிட்டீர். உம்முடைய பந்துக்க ளெவ்விட மிருப்பரென்று கே ட்க, ஏகநாத ரவரை நோக்கி ஸ்வாமி! அடியேனுடைய பந்துக் களும் பாட்டனும் பாட்டியும் பைடன்புரத்தி லிருப்பார்கள். அடி யேன்சிசுவா யிருக்கும் பொழுது தாய் தந்தைகள் தேகங்களை விட் டனர். அவர்களை மனதிலெண்ணுமல் பாப நிவர்த்திக்காக தேவரீ ரிடம் வந்தேன். தேவர் சேவையே அடியேனுக்கு பிராப்பிய மாம், குருநாமமே ஜபமாகும். ஒரு விகல்பமில்லாம லிவ்விடம் வந் தேன். தேவரீர் உச்சிஷ்டமே அடியேனுக்கு பிரம்மரசமாகுமெ ன்று சொன்னர்.

ஜனார்த்தனர் ஞானேசுவரி யெனும் கிரந்தத்தை பாராயணஞ் செய்து தான தருமம் பண்ணி அத்தியயனமான பிறகு சாப்பி ட்டு இராஜ்ய விஷயமான விவகாரங்களை இராஜனிடம் உத்யோக மூலமாகச் செலுத்தி பூஜிதை யடைந்து காலயாபனம் செய்து வருவர். இப்படியிருக்க ஓர் சமயத்தில் அரசனுக்கு விரோதி யொ ருவன் சேனையுடன் வந்து ஊரைச் சுற்றிக்கொண்டான். இதைக் கண்டு இராஜன் ஜனார்த்தனரிடம் சேவகரை யனுப்பினன். அவ் வேளையிலிவர் பகவத்தியான தற்பரரா யிருந்தனர். அப்போது ஏகநாத ரவரைத் தியானத்திலிருந் தெழுப்பாமல் அவர் தரிக்கும் வஸ்திரங்களை தானணிந்துக்கொண்டு அரசனிடம் செல்ல அவன் சேனைகளைக்கூட்டி விரோதி சைன்னியங்களை ஓட்டிவிட வேண்டு மென்று ஆக்ஞாபிக்க ஏகநாதர் ஜனார்த்தனருடைய வேஷத்துடன் அனேக சைன்னியத்தைக் கைக்கொண்டு எதிரிகளிடம் போர் புரி ந்து அவாகளை யோட்டிவிட்டு பயநிவர்த்தி செய்து விஜயத்துடன் வீடு வந்து ஆசாரியர் வஸ்திரங்களை முன்போலவே வைத்து சேவா தற்பரராயிருந்தார். பின்பு ஆசாரியர் தேகநோக்க முடையவராய் எழுந்திருந்து திருவாராதனையை முடித்துப் போஜனஞ் செய்து சற்றுநேரம் சயனத்திற் றுயின்றெழுந்து விவகார தசையி லுடுத் திக் கொள்ளும் வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு நடந்த சங்கதி

யொன்றுந் தெரியாமல் உத்தியோகத்திற்குச் சென்று அரசனைக் கண்டார். அவ னவரைச் சமீபத்தி லுட்காரச்செய்து சால்வைகளைப் போற்றி சத்துரு ஜயத்திற்காக பிருதுகளைக் கொடுத்து கௌரவப் படுத்தினன். ஜனர்த்தன ரிதைக் கண்டு சாதுரியத்துட னென்றும் சொல்லாமல் கொடுத்தவைகளை அங்கீகரித்து வீட்டுக்கு வந்து இதற்குக் காரணம் ஏகநாதராக வெண்ணி சிஷ்யரைப் பார்த்து கேட்குமளவில் அவர் மௌனமாயிருக்க பின்னும் ஆசாரியர் கேட்கும்பொழுது நடந்த சங்கதி சிஷ்ய ரறிவித்தார். இதைக் கேட்டு ஆசாரியர் சிரிக்கத் தொடங்க ஏகநாத ரவருடைய திருவடிகளைப் பிடித்தனர்.

சிலகால மிப்படி செல்ல ஆசாரியர் ஓர் நாள் கணக்குகளைப் பார்க்க ஏகநாதருக்குச் சொல்ல, அப்படியேயென்று ஏகநாத ரனேக பத்துகளை யொன்றாகக் கூட்டி தொகைபோடு மளவி லோர் பைசா குறைவா யிருந்தது. அதைச் சரிப்படுத்தும் பொருட்டு அனேக பரியாயம் கணக்கைக் கூட்டவும் கையிருப்பைச் சோதிக்கவுமாக விருந்தபடியால் இரவிற் காலம் இருஜாமமாயிற்று. அப்போது அகஸ்மார்த்தாகவந்த பத்து தோன்றினதால் ஏகநாதர் அபரிமிதமாக வானந்த மடைந்தனர். அப்பொழுது ஜனர்த்தன ரிதைக்கண்டு என்ன விசித்திர மென்று கேட்க, கணக்கி லோர் பைசா விட்டுப்போச்சுது, அது கிடைத்ததால் சந்தோஷ மடைந்தேனென்றார். அப்பொழுது ஆசாரியர் சொல்லுவார், இவ்விதமாகவே ஹரியினிடம் சித்தத்தை வைத்தால் ஸம்ஸாரத்தை தாண்டலாமென்று சொல்ல, ஏகநாத ரெழுத்தாணியைக் கீழேவைத்து ஸ்வாமி! அடியேனுடைய வெண்ணமு மப்படியே யிருக்கிறதென்று சொல்ல, ஆசாரியர் தனது அஸ்தத்தை யவர் தலைமேல் வைத்து தாரக மந்திரத்தை யுபதேசித்து கடாக்ஷித் தருளினர். ஏகநாதர் சேவா நிரதராகி ஆசாரியருடைய சௌச ஸ்தலத்தையும் சுத்தப்படுத்திக் கோலமிட்டு வருவர். சிலநாட்கழிய ஆசாரிய ரிதை யனுதினமுங் கண்டு ஆச்சரியமுற்று அழுக்கெடுப்போ னிவ்வண்ணம் செய்யமாட்டானென்று ஏகநாதரை யழைத்து சௌச ஸ்தலத்தை சுத்தப்படுத்தி கோலமிடுவ தாரென்று கேட்க ஏகநாதர் சேவாநிஷ்டனாகி செய்தேனென்ன, சேவா ருணஸ்தனா யிருப்பதா லினி நீர் சேவை செய்யவேண்டியதில்லையென்று ஆசாரியர் ஆக்ஞாபித்தனர்.

ஜனார்த்தனர் சிஷன்மீதி லதிகப் பிரீதியுடையராகி தத்தாத்
திரயருடைய தரிசனத்தைச் செய்விக்க விரும்பியும், சிஷனுடைய
பிரபாவ மவர் காணவேண்டுமென் றெண்ணியும், அங்கோர் பர்வ
தத்தின்மீது ஏகநாதரை அழைத்துக்கொண்டு சென்றனர். அங்
கு பரிசுத்தமான ஜலமுடைய தடாக மொன்றுண்டு, வாழைமரம்,
பலாமரம், சண்பகமரம் முதலானவை அவ்விடமுண்டு, ஸ்தலமும்
ரம்யமாக விருக்கும். அவ்விடத்திற்கு வியாழக்கிழமை தோறும்
ஜனார்த்தனர் சென்று அத்தடாகத்திற் ஸ்நானஞ்செய்து ஆயிரம்
பார்த்திவ (மண்) லிங்கங்களைச் செய்து விதிப்படி அர்ச்சனை பூஜை
களை முடிக்கும் சமயத்தில் தத்தாத்திரயர் தரிசனங் கொடுத்து
அவ்விடத்தில் சிஷ்யருடன் சம்பாஷித்துக்கொண் டிருப்பர்.
அவர் ஏகநாதருக்கு வரங்களைக் கொடுப்பாரென்று மனதிலெ
ண்ணி ஜனார்த்தனர் ஏகநாதரை பருவதத்தின்மேல் அழைத்
துக்கொண்டு வந்து ஏகநாதரே! மாறு வேஷத்துடன் தத்தாத்தி
ரயர் நமக்குத் தரிசனங் கொடுப்பார். நீர் மனதில் விகல்ப மொ
ன்றும் வைக்காமல் அவரை மன்னிக்கத் தகுவீர். நீர், ஸ்நானம்
செய்தென்னுட னிருமென்று கட்டளை யிட்டனர். பின்பு ஆசாரி
யர் நீராடி ஆயிரம் லிங்கங்களைச் செய்து பூஜித்து பின்பு மனதில்
தத்தாத்திரயருடைய ரூபத்தைப் பிரியத்துடன் சிந்திக்க அவ
ரோர் துலுக்கருடைய வேஷத்துடன் ஓர் நாயைக் கூட கொண்டு
வந்தனர். ஜனார்த்கனர் அவருடைய திருவடிகளுக்கு நமஸ்கரித்து
வேடிக்கையுடன் சில வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருந்து
பிரஹ்ம ரசத்தில் முழுகி, மனதிற் கெட்டாத பகவதனுபவ பா
ராகி ஆத்மசர்ச்சை செய்துக்கொண்டிருக்க ஏகநாதர் அவ்வார்
த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தனர். அத்தருணத்தில் தத்
தாத்திரயர் ஓர் மண் பாத்திரத்தைக் கையிலேந்தி ஜனார்த்தன
ரைப் பார்த்து அப்பா! இது நிறையும்படி அந்த நாயின் பாலை
கறக்கக்கடவை யென்ன, அப்படியே அந்த நாயின் ஸ்தன்னி
யத்திலிருந்து பாலைக்கறக்க தத்தாத்திரயர் முன்னிட அவரதனை
கரபாத்திரத்திற் கொண்டு கைகளால் கலக்க மென்மையான மது
ரமுள்ள அன்ன மதிலிருந்தது. அதனை யிருவரும் பக்ஷணஞ்செய்து
அந்த பாத்திரத்தில் கையலம்பினர். பின்பு ஜனார்த்தனர் ஏகநாத
ரைக் கண்டு நீர் தடாகத்திற் சென்றிந்த பாத்திரத்தைக் கழுவிக்

கொண்டு வரக்கடவையென்று சொல்ல அவரதனை கைக்கொண்டு சென்று சாதகர்களுக்கு சற்குருவினுடைய உச்சிஷ்டமே கங்கை, நர்மதை, கோதாவரிக ளாகுமென்றும் இஜ்ஜகத்திற் றன் அதிஷ்டவானென்று மெண்ணி குருப்பிரசாதத்தை சாப்பிட்டு பாத்திரத்தைக் கழுவிக் கொண்டுவந்தார். இதை யறிந்துகொண்ட ஜனார்த்தனர் தன தாசாரியருக்குத் தெரிவித்து ஸ்வாமி! தேவரீர் ஏகநாதருக்கு தரிசனந்தந்து தரிக்கச் செய்யவேண்டுமென்று பிரார்திக்க, தத்தாத்திரயர் சொல்லுவார், ஏகநாத னுலகத்தைத் தரிக்கச்செய்ய வந்தவன். பாகவதார்த்தத்தை வெளிப்படுத்தி இராம சரிதையையும் மராட்டி பாஷையில் மேன்மையுடன் பிரசுரப்படுத்தி ஜனங்களைப் பக்தி மார்க்கத்தில் நிற்கச் செய்வனென்று சொல்லி தனது நிஜரூபத்தைக் காண்பித்தனர். அவர் சியாமல சுந்தர மூர்த்தியாகவும், ஆறுபுஜங்களை யுடையவரும், விசால நேத்திரங்களுடையவருமாய் பிரகடித்தார். அப்பொழுது ஏகநாத ரவர் திருவடிகளைப் பிடிக்க, பரமாசாரியர் தனது கரங்களை யவர் தலைமேல் வைத்து மறைந்தனர். பின்பு ஜனார்த்தனர் தத்தாத்திரயருடைய கருணையை யடைந்த ஏகநாதருடன் தனது வீட்டிற்கு வந்தனர்.

அனந்தரம் ஏகநாதர் தனது ஆசாரியருடைய சேவையை இடைவிடாமற் செய்துக்கொண்டிருக்க ஒருநாள் பரமாசாரியரான தத்தாத்திரயரைப் பஜித்துக்கொண் டிருந்தார். அவ்வேளையில் ஜனார்த்தன ரவரிடம் வரவே, ஏகநாதர் தெண்டஞ் சமர்ப்பிக்க, ஜனார்த்தன ரவரை நோக்கி ஏகநாதரே! ஹரிகிருபையால் ஆத்மஞானத்தை யடைந்தாயாயினும் சர்வேசுரனுடைய சகுணபக்தியினியராக வேண்டும். யோகபலத்தால் ஆகாயத்திற் பறக்கக் கற்றாலும் ஹரியைக் காண்பதற்கு அது அனுகூலத்தைக் கொடாது. தான் திகம்பர னானாலும் விஷ்ணுவை காண்ப தருமையாகும். தேவகிரிக்குக் கிழக்குத் திக்கில் திருமலைக்குச் சமமான ஓர் மலை "சுலபா" வென்று பெயர் பெற்றிருக்கிறது. அவ்விடம் சூரிய தீர்த்த மென்னும் சரோவர மொன்றுண்டு, அவ்விடத்திற்கு நீர் சென்று அத்திருக்குளத்தில் ஸ்நானஞ் செய்து சாதனை செய்வையாகில் பகவான் சாக்ஷாத்கரிப்பார். அங்கு பண்டரிநாதரைப் பக்தியுடன் ஏகாக்கிரமாக தியானித்துக்கொண்டு எவருடனும் பேசாமல் இலைசருகுகளைப் பக்ஷித்துக்கொண்டு நியமத்துடனிருந்தா லவ்விட

முனக்கோர் திருஷ்டாந்தமாகும் அதனை நீ எனக்கு சொல்லுவீ யென் றுக்ஞாபித்தார். இதைக் கேட்டுப் பரமானந்தத்தை யடைந்து ஏகநாதர் பிரயாணமாகி சுலப பர்வதத்திற்குச் சென்று பாண்டுரங்கருடைய பாதங்களில் பக்தி செலுத்தி மனதை மாதவனுடைய ரூபத்திற் சேர்க்கவே விருத்தி வெளிநோக்க மில்லாதிருந்தது. அங்கோர் சர்ப்பம், நிதமும் அவருடைய சரீரத்தைச் சுற்றிக் கொண்டு சிரசின்மேல் படத்தை விரித்து சீதோஷ்ணங்களைச் சேரவொட்டாமல் செய்தது. ஏகநாதருடைய விருத்தி வெளியாம் போது அப்பாம்புப் போய்விடும். தேகத்தின் மீது மறதியுண்டானபடியால் அவருக் கது தெரியாதிருந்தது. அப்பர்வதத்திற் கிழண்டை யோர் கிராம மிருந்தது. அவ்விடத்தி லோர் குடியானவன் ஹரிதாஸர்கள்மே லன்பு செலுத்திக்கொண் டிருப்பன். சாந்தவிருத்தியையும் சுத்தாசாரத்தையு முடையவனும் சிரத்தையுடன் சாதுக்களைப் பூஜை செய்பவனுதலால் மலைமேற் சென்று ஏகநாதருக்குப் பால் கொடுத்துக்கொண் டிருப்பான். அவ ரக் குடியானவனுடைய பக்தியைக் கண்டு அதனைச் சாப்பிட்டுவருவர். அக்குடியானவனுடைய மனைவி யொருநா ளதிகாலை ஸ்நானம் செய்து பர்த்தாவுக்குப் பக்ஷணை கொண்டுவந்தாள். புருஷ னிவ்வளவு சீக்கிரத்தி லேன் கொண்டுவந்தா யென்று கேட்க, மனைவி சொல்லுவாள், இரவு நேரத்தில் விழித்துக்கொண்டு மாவரைத்து ரொட்டி செய்துக்கொண்டு வந்தேன். பாத்திரத்தில் நிறைய பாலும் கொண்டு வந்தேன் மலை மேலிருக்கும் முனிவருக்குக் கொடு மென்றுள். அப்படியே யாகக்கடவதென்று அவன் நீராடி ஹரிஸ்மரணையைச் செய்து பாலைக் கையிலேந்தி தியானத்திலிருக்கும் தபசி இடத்திற்குச் சென்றுன். அங்கு ஓர் பாம்பு அவரைச் சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு பயமுற்று உரக்கக் கூவியும் அது விடாதிருந்தது. அப்போ தக்குடியானவன், ஐயோ! இத்தபசிக்கு என்ன தீம்பு வருகிறதோவென் றெண்ணி ஓ பாண்டுரங்கரே! தயாநிதி! நரஹரி! ரங்கா! நாராயணு! இந்த தபசியைக்காப்பாற்று மென்று நாலுபக்கங்களும் நோக்கி உரக்கக் கூவலுற்றுன். மெதுவாகத் தபசி மௌனத்தை விடுகிற சமயத்தில் பாம்பும் விட்டுப் போயிற்று. அப்பொழுது தபசி குடியானவனைக் கண்டு ஏன் சந்தடி செய்தாயென்ன, அவ னவரைக் கண்டு நீர் தியானத்தில்

இருக்குமளவில் சர்ப்பமொன் றும்மை சுற்றிக்கொண்டது, அதைக்கண்டு நான் கூச்சலிட்டே னென்றான். இதைக் கேட்டு ஏகநாதர் பகவானிடம் பிரேமை யுடையவராய் சகல பாரமும் ஹரிமேல் வைத்து தயாநிதி! தாமோதரா! சேஷசயநா! ஜகதாகாரா! ஸ்ரீயப்பதி! கிருபாசாகரா! இரக்ஷிக்கிற கர்த்தா நீராவீர். நீர் சகல ஜகத்திற்கும் சாக்ஷிரூபர். சதானந்த ஞான பூர்ணர். பக்தர்களுக்காக சகுணத்தை யுடையவராவீர். தேவரீருடைய சதுர்ப்புஜ திவ்வியமங்கள விக்கிரகத்தை அடியேனுக்குக் காட்டி யருளுமென்று அனேகவிதங்களாகப் பிரார்த்தித்துத் தியானத்திலிருக்க, ஸ்ரீஹரி இதைக் கேட்டு சகலாலங்கிருத சின்மயவிக்கிரகராகி நான்கு கைகள், கிரீடம், குண்டலம், சங்கம், சக்கரம், சார்ங்கம், கதை முதலானவைகளை யுடையராய் பீதாம்பரத்தைத் தரித்து பிரஸன்ன ரானார். அங்கு சூரிய தேஜஸ்ஸைக் காட்டிலுமதிக தீப்தியா யிருப்பதைக் கண்டு இதென்ன நூதனமா யிருக்கிறதேயென்று அவர் கண்களைத் திறக்க ஸ்ரீஹரி ரங்கருடைய சாக்ஷாத்காரத்தை சீர்மையுடன் கண்டு அதிசயமான வன்பினால் மானசிகமாக வர்ச்சித்து கோவிந்தா! ஹரி! அடியேன் கோரியபடியே நீர் கருணித்தீரல்லவா! என்று பாதங்களைப் பிடிக்கவே பகவான் மறைந்தனர். அக் குடியானவன் கிருஷ்ண மூர்த்தியைக் கண்டு கிருதகிருத்தியனானே னென்று சொல்லி ஏகநாதரைப் பார்த்து நீர் சாக்ஷாத்விஷ்ணு சொரூபர், பாலமுது செய்யுமென்று பிரார்த்தித்தான். அவனுடைய பரிசுத்த வெண்ணத்தை யறிந்து ஏகநாத ரந்தப் பாலை யருந்தி சித்தசாந்தியுடன் ஜனார்தனரைச் சேரவிரும்பி பர்வதித்தினின் றிரங்கி, அதற்கு ஓர் நமஸ்காரஞ் செய்து ஆசாரியரிடம் வந்து அவரது சரணங்களைப் பிடிக்க, ஹரியைக் கண்டா ரென்று ஜனார்த்தனருக்குச் சூசனையாயிற்று.

### சந்திரம்பட்டு.

ஒருநா ளேகநாதரை ஆசாரியர் கண்டு காசி க்ஷேத்திரத்திற்குப் போக வேண்டுமென்று அவரையும். சேவகரையும் அழைத்துக் கொண்டு குதிரைகள் மேலேறி நாமஸங்கீர்த்தனத்தைப் பாடிக் கொண்டும், அந்தந்தக் கிராமங்களில் ஹரி குணாநுவாதஞ் செய்துக் கொண்டும் ஓர் பட்டணத்திற் சேர்ந்தனர். அவ்

விடத்தில் சந்திரம் பட்டென்பவன் குணவானாக யிருந்தா னாத லால் அவனிடத்திற்றங்கி பாகவதத்தில் பிரம்மதேவர் நாரதருக் குபதேசித்த சுலோகங்களை வியாக்கியானம் செய்தார்கள். அதி லடங்கிய அர்த்த விசேஷங்கள் கிரம உபாஸனையும், கருமமும், ஞானமும், சமரச லக்ஷணமும், முக்கியமாக விருந்தன. இந்நான்கு மவர்களிட மிருக்கச் சந்திரம்பட்டு கண்டு சினேக மதிகமாகி அவர்களைப் பிரியமன மில்லாமல் தானுமவர்களுடன் காசிக்குப் போகத் தொடர்ந்தான். அங்காங்கு சாதுக்களையும், யோகி களையும் சேவித்துக் கொண்டு பஞ்சவடி தீர்த்தத்திற்கு அவர்க ளனைவரும் சென்றார்கள். அவ்விடம் கோதாவரி நதியில் ஸ்நானஞ் செய்து இராம மூர்த்தியைச் சேவித்து மேற் சொன்ன சுலோகங் களுக்கு வேதாந் தார்த்தங்களை விவரிக்க அவ்விடத்து பண்டிதர்க ளனேகர் பிரமஞானத்தை யறிவித்தார்க ளென்று வெகுவாக மன் னித்தார்கள். சந்திரம்பட்டு அந்த வர்த்தங்களை சார்வதா வாசிக் கத் தொடங்கினான். அனந்தரம் அவர்கள் திரியம்பகத்திற்குச் சென்று பிரம்ம கிரியை வலம் வந்து குசாவர்த்தியில் ஸ்நானஞ் செ ய்து திரிபுராரியைச் சேவித்து மூன்றுநா ளவ்விடமிருந்து காசிக்கு ப்போகும் நியமனத்தைவிட்டு வீட்டை நோக்கித் திரும்பினார்கள். பின்பு அவர்க ளிருப்பிடமான தேவகிரியைச் சேர்ந்து ததியா ராதனை தாமோதரப் பிரீதியாகச் செய்தார்கள். ஜீவாதாரமான ஸ்ரீஹரி நாமத்தைச் சார்வதா செய்துக்கொண்டு சந்திரம்பட்டு மவ் விடமே ஜனார்த்தனருடனிருந்து பிரம்ம ரசத்தைப்பானஞ் செய்து ஞானானு பவத்தைப் பெற்று சரீரத்தை விட்டுவிட்டான். அப் புண்ணியவா னுடைய சரீர மங்குள்ள பர்வதத்தின்மேற் சமாதி செய்யப்பட்டது. இப்போதைக்கு மனேக மகிமைக ளவ்விடத்தி லுண்டாகின்றன வென்றும் அது ஆசாரியருடைய கிருபை யென் றும் சொல்லுவர்கள்.

ஒருநாள் ஆசிரியர் ஏகாந்தமாக ஏகநாதரை யழைத்தருள, சீஷன் வந்து அவரது சரணங்களைப் பிடித்துக்கொண்டு, ஜய ஜனார் த்தனஸ்வாமி! பிறப்பிறப் பென்னும் பிணியொன்று மில்லாமற் செய்யும் பிரியபந்து நீரே! மோக்ஷதாதாவும் நீரே! சுருதிகளுக் கெட்டாத ஷட்குணைஸ்வரிய சித்தி ரூபரும் நீரே பிரமதேவன் கன்றுக்குட்டிகளையும் கோப பாலர்களையும் வஞ்சனை செய்து கைக்

கொண்டு போனன். அப்பொழுது அந்தக் கன்றுக் குட்டிகளும் கோப பாலரும் நீரேயானீர். பின்பு பிரமதேவ னும்மை தோத்தி ரஞ்செய்தான். உம்முடைய சத்தா தாரகத்தா லிந்திரியங்கள் சலிக் கின்றன. உம்மையன்றி வேறு பதார்த்த முலகிலில்லையென்று ஆசா ரியரை தோத்திரஞ் செய்ய, அவர் சந்தோஷித்து, அப்பா! ஏக நாதரே! நீர் தீர்த்தயாத்திரை செய்துவரவேண்டும், அதன் மூல மாக சாதுக்களுடைய சேவையும் சத்சுதாலாபமு முண்டாகும். உம்முடைய யோக க்ஷேமத்திற் கது உதவியா யிருக்குமென்றார். இதைக் கேட்டு ஏகநாதர் சோகமும் சந்தோஷமு முடையவராய் ஸ்வாமீ! ஆசாரிய சேவை அந்தரிக்குமே யென்ன, ஆசாரிய ரிஷ் டத்தை சிஷ்யன் அனுஸரிப்பதே அவசிய கர்த்தவ்விய மென்று ஜனார்த்தனர் சொல்லி சிஷ்யனுடன் போஜனஞ் செய்து இருவரும் வீட்டை விட்டு வெகுதூரம் நடந்துச் செல்ல, ஆசாரியர் வழிகூட்டி யனுப்ப, வெகுதூரம் வருவதை ஏகநாதர் கண்டு குருவின் பாதங் களைப் பிடித்துக்கொண்டு, நிற்கச்சொல்லி அழத் தொடங்கினர். ஆசாரியரும் கண்ணீர் பெருக சிஷ்யனைக் கட்டி யணைத்து எனது ஜீவபிராணன்கள் நீர்தான். உமது ஆத்மா நான்தா னென்று சொல்லி பிரியத்தைக் காண்பித்தார். ஏகநாத ராசாரியருக்கு அதிக பக்தியுடன் தெண்டஞ் சமர்ப்பித்து அவருடைய விக்கிரகத் தை மனதி லிட்டுக் கொண்டு மார்க்கத்தைப் பிடித்துச் சென்றார்.

### சக்கரபாணி.

பைடன் புரத்திற் சக்கரபாணி யென்னும் பிதாமஹன் பேர னை ஏகநாதரைக் காணமல் வெகுவாக விசனமுற்று அவ்வூரைச் சந்து சந்தாக சோதித்தும் சங்கதி யறியாமல் செய்வ தென்னெ ன்று சிந்தை செய்துக்கொண்டிருந்து பண்டிதர்கள் சேர்ந்திருக்கு மிடங்களிற் சென்று பேரன் சங்கதியை கேட்க அவர்கள் சொல்லு வார்கள், ஐயா! ஒரு சாஸ்திரி இவ்விடம் வந்திருந்தான், உமது பேரனவனுடன் சாஸ்திர விசாரணை செய்தக்கொண் டிருந்தான், அந்த சாஸ்திரி பதரிவனத்திற்குப் போகிறதாகச் சொன்னன், அவனுடன்கூட உனது பேரன்போன சங்கதி யறியோம். அந்த சாஸ்திரிக்குக் கடித மெழுதி தெரிந்து கொண்டால் உசிதமாகு மென்றார்கள். அக்கிழவனர் பதரீவனத்திற்குப் போயிருக்கு மந் தப் பண்டிதனுக்கு கடிதமனுப்பினர். அக்கடிதத்தை யந்தப்

பண்டிதன் பார்த்து விசனமுற்று என்னுடனுமதுபேரன் வரவில்லையென்றும் தேவகிரியில் ஜனார்த்தனரிடம் ஒருவேளை சேர்ந்திருந்தாலிருக்கலா மென்றும் அவ்விடத்திற்குச் சென்று விசாரியுமென்றும் மறுகடிதம் எழுதினான். பைடன் புரியில் பண்டிதர்களிதைக்கண்டு தேவகிரிக்குச் சென்று ஜனார்த்தனரைப் பார்த்து ஏகநாதர் சங்கதியைக் கேட்கு மளவில் அவ ரப்பண்டிதர்களை நோக்கி ஏகநாத ரென்னை பிரியாம லிதுவரைக்கும் சேவாநிரதராயிருந்தார், யாத்திரை செய்துவரச் சொல்லி யானே அனுப்பினேன், அவர் விஷயமாக ஒரு சிந்தையு மடைய வேண்டியதில்லையென்று பிதாமஹருக்குக் கடிதம் தானே எழுதி யனுப்பினார். அதனை அவர்கள் கொண்டுவந்து சக்கரபாணிக்குக் கொடுக்க பாட்டனும் பாட்டியு மதிக சந்தோஷத்தை யடைந்து அச்சீட்டைக் கொண்டுவந்தவர்களுக்குச் சற்கரையைக் கொடுத்துத் தாங்களே பிரயாணமாகி தேவகிரிக்கு வந்து சங்கதி யனைத்தையும் ஜனார்த்தனருக்குச் சொன்னார்கள், அவ ரக்கிழவர்களை யொருமாச பரியந்தம் வைத்துக்கொண்டு, ஏகநாதர் விஷ்ணு அம்சராகப் பிறந்தவரென்று அவருடைய சுகுணங்க ளனைத்தையு மவர்களுக்குச் சொல்லியும் புதுவஸ்திரங்களும் வழிச்செலவுக்குங் கொடுத்தும் ஏகநாதருக்குக் கடிதமொன் றெழுதி அதி "லிக்கடிதத்தைக் கண்டவுடன் உன்னிருப்பிடமான பைடன்புரிக்கு நீ பிரயாணமாகக் கடவை" யென் றெழுதி அக்கிழவர்கையிற் கொடுத்து, யாத்திரை யெல்லாஞ்செய்து உமது பேரன் வருவார், அவருக்காகத் எதிர்ப்பார்த்திரும், இந்தகடிதம் ஏகநாதர் பார்த்தவளவில் மற்றோரிடஞ் செல்லார், உம திருப்பிடம் நீர் போமென்று விடைகொடுத் தனுப்ப, பாட்டனும் பாட்டியும் சந்தோஷத்துடன் வீடுவந்துசேர்ந்து பேரன் வரவை யெதிர்பார்த் திருந்தார்கள். அந்தப்பட்டணத்திலும் இச்சங்கதியை யனைவரு மறிந்துகொண்டார்கள்.

ஏகநாதர் யாத்திரை யெல்லாஞ் செய்துக்கொண்டு கங்கோத்தரி, பதரிவனம், பிருந்தாவனம், பிரையாகை, அயோத்தி, மதுரை, துவாரகை, முதலான முக்கியஸ்தலங்களைப் பார்த்து பைடன் புரத்தில் கோதாவரிக்கு வந்து ஸ்நானம் செய்து சாம்பமூர்த்தியைச் சேவித்து சாதுக்களுடன் கூடியிருந்து இரண்டு ஜாமமாகும் பொழுது பிக்ஷைக்குச் சென்று கிடைத்ததை அமிருதமாக வெ

ண்ணி பக்ஷித்து திருப்தியாயிருந்தனர். அங்கு ஸ்திரீ புருஷர்கள் வந்து யாரென்று கேட்கினும் பதில் வார்த்தை சொல்லாமல் சும்மா விருந்தனர். சிலர் ஏகனுதராக யிருக்கலாமென் றெண்ணி அவர் பாட்டனுருக்குத் தெரிவிக்க அவர் தன் பத்தினியுடன் வந்து நின்றனர். ஏகநாத ரவர்களைப் பார்த்தவுடன் மனதில் தெண்டனிட்டு அவ்விடமிருந்து புறப்பட்டுப்போகச் சிந்திக்க, அக்கிழவ ரிருவரும் கண்களில் ஜலங் கலங்க போகக்கூடா தென்று ஜனர்த்தன ரெழுதிய பத்திரிகையைக் காண்பித்தனர். அது ஆசாரியர் கையெழுத்தென் றறிந்து தலைமே லிட்டுக்கொண்டு அவ்விடமே யுட்கார்ந்தார். பந்துக்கள், வீட்டிற் கழைத்தும் போகவில்லை. பூமிமீது மௌனத்தை யடைந் துட்கார்ந்திருக்க, ஜனங்க ளவரை சாதுபுருஷ ரென்று மன்னித்து வெகுபேர் பார்க்க வருவார்கள். சில ரவ்விடத்திலேயே போஜனம் கொண்டுவந்து சமர்ப்பிப்பார்கள். ஏகநாதர் சர்வமும் ஸ்ரீஹரி மயமென்றெண்ணி சீதோஷ்ணங்களை யடையாமல் மூன்றுநாள் வெட்ட வெளியிலே யிருந்தார். சில சுஜன ரதைக்கண்டு ஓர் பந்தலை யேற்படுத்த அவர் அதனிலிருந்தனர். பின்பு தனது மௌனத்தை விட்டு ஸ்ரீஹரி பஜனையைச் செய்துக்கொண்டிருக்க பிரஜைகள் பக்தரென்று மன்னித்தார்கள்.

சிலநாட்களி லவருக்கு கவித்வ தோரணையும் கானவித்தையும் பெருமாள் கிருபையா லுண்டாயிற்று. அனேகப் பிரகாரங்களாக ஹரிகுண வர்ணனையைப் பிரீதியுட னனேகருக்குச் சொல்லுவர். அக்கதைகளைக் கேட்பதற்கு அனேகர் வரத்தொடங்கினூர்கள். இடம் நெருக்கமா யிருந்ததால் விசாலமான வீடாக யதனைக் கட்டி புண்ணிய புருஷர்க ளப்போதுக்கப்போது பிராம்மண ஜனங்களுக்குப் போஜனமிட்டு வருவர்கள். பாட்டனும் பாட்டியு மவ்விடமே சேர்ந்தனர். ஏகாதசி தினத்தி லெம்பெருமான் திருநாமம் அவ்விடம் வெகுவாக நடக்கும். பருவகாலங்களில் போஜனம் பிரபலமாக நடக்கும்.

ஒரு வர்த்தகன் கிருஷ்ணாஷ்டமிக்கு உத்சவம் செய்யலுற்றான். இதை ஜனர்த்தனர் கேட்டுப் பிரீதியுடன் வருமளவில் தத்தாத்திரயர் துவாரபாலகராகி திரிசூலத்தை கையிற்றரித் திருக்கக்கண்டு ஜனர்த்தனர் வந்தனமிட்டு நிற்க, அவரோர் மானிட வுருவங் கொண்டு ஏகநாதரிடம் வந்து ஜனர்த்தனர் வந்தாரென் றறிவித்தனர்.

இவ்வசனத்தைக் கேட்டவுடன் ஏகநாதர் தெண்டன் சமர்பித்துக் கொண்டே ஆசாரியரிட மெதிர்கொண்டுசென்று வீட்டிற்குள்ளழைத்துவந்து மகா பிரேமையினால் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தனர். உத்சவ சமயம் வந்தவுடன் கிருஷ்ணபஜனை செய்து சம்பிரமத்துடன் பிராம்மணர்களுக்கு போஜன மளித்து ஹரிகுண கீர்த்தனம் இரவும் பகலு மிடைவிடாது நடந்துக்கொண்டிருக்க அதிக விநயத்துடன் குருசேவையை ஏகநாத ரிரவும் பகலும் செய்து வந்தனர். ஜனார்த்தனர் இதைக்கண்டு திருப்தி யடைந்து திரும்பி தனதிடம் போக எத்தனிக்க, பாட்டனும் பாட்டியு மவரிடம் வந்து, ஸ்வாமி! வம்ச விருத்திக்கு ஏகநாதர் ஓர் பெண்ணைக் கலியாணஞ் செய்துக்கொண்டு பிள்ளைகளைப் பெறவேண்டுமே! தேவரீரவருக்கு விவாக மொன்றைச் செய்து வைத்தால் விசேஷ சுகிர்த முண்டா மென்றனர். இவ்வார்த்தையைக் கேட்டு ஆசாரியர் ஏகநாதரைக் கண்டு நீர் பத்தினியைக் கைக்கொண்டு கிரகஸ்த தருமத்தை அவலம்பித் திருக்கக் கடவீரென்ன, அதற்கு ஏகநாதர் தேவரீர் திருவுள்ளத்தின் நியம னப்படி நடத்தக் கடவே னென்ன, ஆசாரியர் சந்தோஷித்து தனதிருப்பிடம் சென்றனர்.

பாட்டனும் பாட்டியும் பெண்ணுக்காக அங்குமிங்கும் தேடிக்கொண்டிருக்க, சமீப கிராமத்தி லொரு பிராம்மணன் தன்னுடைய கன்னியா விவாகத்திற்குப் பிள்ளையைத் தேடிக் கொண்டிருந்து தன்பெண்ணை சில பிள்ளைகளுக்குக் கொடுக்க யெத்தனித்தால் பொருத்த நிமித்தங்கள் சரிப்பட்டு வாராதிருந்தன. இதைப்பற்றி அவன் சிந்தையடைந்திருக்கப் பெருமாள் அவன் சொப்பனத்திற் சென்று உன்பெண்ணுக்குத் தகுந்த பிள்ளை, பைடன் புரத்தில் ஏகநாத னெனும் பக்தனிருக்கிறான் அலங்காரங்களூட னக்கன்னிகையை அவனுக்கு விவாகத்தி லர்ப்பணை செய்யென்று சொல்ல, இந்த சொப்பனத்தைக் கண்டு அருணோதயத்திலெழுந்திருந்து ஆச்சரியத்துடன் தன் மனைவியாருக்கறிவித்து பைடன் புரிக்கு வந்து, ஏகநாதர் வீட்டிற் பிரவேசித்து அவ்விடம் அவர் பாட்டனையும் பாட்டியையுங் கண்டு தான் வந்த வரலாற்றைச் சொல்ல, பகவானே விவாகத்தைச் சித்தபடுத்தினா ரென்று விருத்த ரிருவரும் பரமசந்தோஷத்தை யடைந்து புரோகிதரை வரவழைத்து பொருத்த நிமித்தங்களைப் பார்க்க சகலமும் சரி

யாயிருந்தன. உடனே முகூர்த்த நிச்சயம் செய்துக்கொண்டு ஒரு வருக் கொருவர் தாம்பூலங்களை மாற்றிக் கொண்டார்கள். வந்த பிராம்மணனுக்கு போஜனமளித்து விடை கொடுத்தனுப்பிப் பாட்டனும் பாட்டியும் விவாஹத்திற்கு வேண்டிய வஸ்துக்களை சேகரப்படுத்தினர்கள். பெண் வீட்டாரும் க்ஷேத்திரத்தில் விவாகம் செய்வது சிரேஷ்டமென்று தங்களாலியன்ற சாமக்கிரிகைகளைச் சித்தப் படுத்தினர்கள். பாட்டனும் பாட்டியும் பந்துக்களனைவரையு மழைப்பித்து சம்பந்திகளிருவருங் கூடி பிள்ளையையும் பெண்ணையையும் ஆசனங்களி லுட்காரவைத்து பிராம்மணர்களனைவரும் மங்களாஷ்டகங்கள் பாட ஸ்ரீவச்ச சின்னமுடைய சேஷசயனரே சுகங்களை யளிக்கக் கடவரென்று பலவிதங்களான ஆசிர்வசனங்களைச் செய்யவும் சர்வ ஜனங்களுங் கொண்டாடவும் பந்துக்களனைவருங் கூடி விவாஹத்தை முடித்தார்கள்.

ஏகநாதர் விவாஹத்திற்கு வந்திருந்த உத்தவனென்னும் ஓர் பந்து ஏகநாதருக்கு முக்கிய சிஷனாகி சேவை செய்யத் தொடங்கினன். அவன்தவிர மற்றவர்களனைவரும் தங்கள் தங்கள் வீட்டுகளுக்குச் சென்றனர். கிரிஜாபாயி யென்னும் பெயருடைய ஏகநாதர் மனைவி புருஷனுடைய பணிவிடைகளில் தற்பறையாயிருந்து அவர் பாட்டியார் பாட்டனார் இஷ்டத்திற்கும் அனுகுண்ணியமாக நடந்துவந்தாள். இது சுவிசேஷமென்று சந்தோஷத்துடனனைவரு மிருந்தார்கள். ஏகநாதரிருக்குமிடத்தில் அயாசிதமாகவே அன்னதானம் வெகுவாக நடந்துவரும். எல்லோரும் ஹரி சொரூபர்களென்று ஜாதிபேத மில்லாமல் ஏகநாத ரன்னமளிப்பர். அவர் பண்டரி நாதருடைய மூர்த்திக்குப் பூஜைகளைச்செய்து இரண்டாஞ் சாமத்தில் பிராம்மணர்களுடன் பக்ஷணைசெய்து மூன்றும் ஜாமத்தில் பாகவதத்தை முயற்சியுடன் சொல்லி இரவு காலங்களில் ஹரிகீர்த்தனையை இனிப்புடன் சொல்லி வருவர். கேட்பதற்கு அனுதினமும் அனேகர் வருவார்கள். இப்படியாக நடந்துவருங் காலத்தில் பாட்டியும பாட்டனும் பரலோக மடைந்தார்கள். சிலநாள் கழிந்தவுடன் ஜனார்த்தனர் தேகத்தை விட்டாரென்று தெரிய வந்தது. அப்பொழுது உத்தவனைக் கண்டு ஏகநாதர் சொல்லுவார், ஜனார்த்தன ஸ்வாமி பிறந்தநாள் பங்குனி மாசம் சுக்கில ஷஷ்டி திதியாகும். அந்த திதி

யிற்றுன் அவர் தத்தாத்திரயரிடம் தீக்ஷை யடைந்தது. எனக்குபதேச மானது மந்த திதியிற்றுன். அவர் பரமபதமு மந்த திதியிலேயே யடைந்தார். ஆனதா லவர் நிமித்தியம் ததீயாராதனை செய்ய வெத்தனித்தேன். நீ திரவியத்தைச் சேகரப்படுத்திக் காரிய சாதனம் செய்யவேண்டுமென்ன, உத்தவன் கையில் கொஞ்சம் திரவிய மிருந்தது. அது போராம லொரு வர்த்தகனிட மெழுனூறு ரூபாயை ஆசாரியர் பேரால் பத்திர மெழுதிக் கொடுத்துக் கடன் வாங்கி ஆடம்பரத்துடன் மூன்று நாள் பயரிந்தம் பெருமாள் திருவாராதனமும் ஆசாரிய ராராதனமும் பெரிய உத்சவமாகப் பிராம்மண போஜனமும் இரவு காலங்களில் ஹரி கீர்த்தனையும் செய்யப்பட்டன. அனைவருக்கு மதிக சந்தோஷமா யிருந்தது. சிலநாள் கழிந்த பிறகு வர்த்தகன் கடன் கேட்க வந்தான். உத்தவன் கையில் பணமில்லா திருப்பதை வர்த்தகன் கண்டு கடன்வாங்கி யிப்படியேன் கண்டபடி செலவு செய்தீர்க ளென்றுன். ஏகநாத ரவ்வேளையில் ஸ்நானம் பண்ணி சந்தியா வந்தனஞ் செய்துக்கொண்டிருக்க வர்த்தகன் அவரைக் கண்டு ஐயா! என் கடனைத் தீர்க்காமல் நீர் அன்னம் புசிப்பீரே லாணை யிருக்கிறதென்று சொல்லி தன் வீட்டிற்குப் போய்விட்டான். ஏகநாத ரிதைக்கண்டு ஸ்ரீஹரி கர்த்தாவென்று சொல்லி, தன் வீட்டிற்கு வந்த ஜனங்களுக் கன்னமிட்டுத் தான் கைநனைக்காம லுபவாசமாக விருந்தனர். உத்தவன் திரவியத்திற்காக எத்தனைப் பிரயத்தினஞ் செய்யினும் கிடைக்கா திருந்தது, அதனு லத்தியந்த துக்கிதனுகி ஒன்றும் தோன்றும விருந்தான். அவ்வேளையில் பெருமாள் உத்தவனுடைய ரூபத்தைக் கொண்டு ஜாமராத்திரியில் வர்த்தகன் வீட்டிற்குச் சென்று கதவைத்தட்ட, வவன் வெளியே வந்தான். அப்பொழுது பெருமாள் அவனை நோக்கி ஐயா! பணத்தை கொண்டு வந்தேன், அதை கைக்கொண்டு பத்திரத்தைக் கொடுவென்று கேட்டார். வர்த்தகன் நாளைக்கு வாங்கிக் கொள்ளுகிறே னென்ன, பெருமா ளிதற்காக ஏகநாதருக்கேன் ஆணையிட்டு வைத்தாய்? பணத்தை யிப்பொழுதே கைக்கொண்டு பத்திரத்தைக் கொடுவென்று கேட்க, வர்த்தகன் குணுங்கிக் கொண்டு வுள்ளே சென்று கணக்கைக் கொண்டுவந்து பணத்தைப் பெற்றுக் கொண்டு புத்தகத்தில் வரவிட்டு பத்திரத்தைக் கொடுத்து விட்டான். பகவா

னப்பத்திரத்தை ஏகநாதர் பாராயண கிரந்தத்தில் வைத்துச் சென்றனர். மறுநாள் வர்த்தகன் தனக்குள்ளே பரிதபித்து ஐயோ! நேற்று ஏகநாதருக்கு கோபத்துட னுணையிட்டு வந்தேனே யென்று அவர் வீட்டிற்குச் சென்று அவர் பாதங்களில் நமஸ்கரித்து ஸ்வாமி! நான் நீதியற்றவன், கடினசித்தன், உமக்கு தொந்தரையை கொடுத்தேன் க்ஷமிக்கக் கடவீர், உத்தவன் நேற்றிய இரவில் எனக்கு கொடுக்க வேண்டிய திரவியத்தைக் கொடுத்து விட்டா னென்றான். இதைக் கேட்டு ஏகநாத ராச்சரியப்பட்டு பெருமாள் அனுக்கிரக மென்றும் அவருடைய கிருபை யபார மென்றுஞ் சொல்லி வர்த்தகனைக் கண்டு ஐயா! நீ புண்ணியசாலி, ஸ்ரீஹரியை நீ சேவித்தா யன்றோ? என்று சொல்ல, அவன் சந்தோஷத்துடன் வீட்டிற்குச் சென்றான். பின்பு ஏகநாதர் தனது நியமங்களை முடித்துக்கொண்டு பிரசாதத்தைப் புஜித்தார். உத்தவனும் கிரிஜாபாயியும் பின்பு போஜனம் செய்தார்கள்.

ஏகநாதர் மகிமைகள் உலகில் விளம்பரமாகும் பொருட்டு பெருமானொரு பிராம்மண ரூபத்துட னவரிடம் நிவசித்து ஏகநாதருக்குப் பின்பக்க மிருந்து கீர்த்தனை செய்யும் பொழுது தாளம் போட்டுக்கொண் டிருப்பர். அதனால் கீர்த்தனை மாதுரிய மதிக மேன்மையாக விருக்கும். அனேக ஜனங்களதிக ஆவலுடன் வெகு தூரத்திலிருந்து அக்கதைகளைக் கேட்க ஓடிவருவார்கள். இதனால் ஏகநாதருடைய கீர்த்தி எங்கும் பரவிற்று. இப்படியிருக்க பண்டரிபுரத்தி லொரு பிராம்மணன் பெருமாள் பிரசன்னராம் பொருட்டு வெகுநாள் சன்னிதியில் தவத்தைச் செய்து வந்தான். சில வருஷங்க ளிவ்வாறு கழிய ருக்மணி பிராட்டி அவ்வந்தணன் சொப்பனத்திற் சென்று சொல்லுவாள், பைடன் புரத்தில் ஏகநாதரெனும் பக்தருடைய பரிசுத்த நிலையைக்கண்டு அவர் பகவத் கீர்த்தனை செய்யும் வேளையில் பாண்டுரங்கர் பிராம்மண வேஷத்துடன் விட்டலரெனும் நாமத்தையுடையராய்ப் பக்தர் பின்னின்று தாளம் போட்டுக்கொண்டிருப்பர். நீ யவ்விடம் சென்றால் பிரயாசையின்றி அவர் தரிசனங் கொடுப்பாரென்று சொல்லி பிராட்டி மறைந்தனள். இதைக்கேட்டு திடுக்கிட்டு உடனே பைடன் புரத்திற்கு பிரயாணமாகி அவ்வூரைச் சேர்ந்து ஏகநாதரிடம் சென்று விட்டல ரெங்கிருப்பாரென்று விசாரித்து, அவ்விடமவர்

பிராம்மண ரூபத்துட னிருக்கக் கண்டு திருவடிகளைப் பிடித்துக்கொண்டான். அப்பொழுது அவர் சதுர்ப்புஜங்களும் சியாமளரூபமும் சுந்தரத் திருமேனியுடன் சேவை சாதித்தருளி மறைந்தனர். இதைக்கண்டு அந்த வந்தண னாச்சரியப்பட்டு ஏகநாதரெவ்வளவு தன்னியரோ வென்று கொண்டாடினன். ஏகநாதரும் ஈஸ்வரனுடைய சௌலப்பியத்தைப் புகழ்ந்து அடியார்களுக்காக ஸ்ரீஹரி தானொரு அடியான் வேஷத்தைக் கொண்டனரன்றோ! அவரது சரிதைகளென்ன வற்புதமென்று கொண்டாடி சந்தோஷித்தனர். பன்னிரண்டு வருஷம் பெருமாள் பிராம்மணராக அவ்விடமிருந்து அந்த ரூபத்தை விட்டனர்.

ஒருநாள் உத்தவன் ஏகநாதரிடம் வந்து ஸ்வாமி! பாகவதத்தை சகல ஜனங்களு மறியும்படி வியாக்கியானம் செய்து சொல்ல வேண்டுமென்று வேண்ட, அவனுடைய ஆர்த்தியைக்கண்டு அதனைச் சொல்ல வாரம்பித்தனர். பக்தியுடைய ஜனங்க ளனைவரும் பாகவதார்த்தங்களைக் கேட்க வருவார்கள். பண்டரிநாதர் திரும்பி ஓர் விப்ர வேஷத்தைத் தரித்து அவ்விடம் வந்து ஏகநாதரைக் கண்டு ஸ்ரீபாகவதத்தை கேட்கப் பிரீதியுட னிவ்விடம் வந்தேன் உம்முடைய சேவையிலிருப்பது எனக்கு மேன்மையைத் தரும் என்பேர் கேசவனென்று தெரிவிக்க, ஏகநாத ரிதைக் கேட்டு இஷ்டப்படி இருக்கலாம், ஸ்ரீஹரி தாஸர்களுடைய திருவடிகளே அடியேனுக்கு ரக்ஷகமென்று சொல்லி யருளினர். சிரவண காலத்தில் கேசவ ரவ்விடம் சிரத்தையுடன் வந்திருந்து சங்கையுண்டாகு மிடங்களி லர்த்த சந்திகளைக் காண்பித்துக்கொண்டும் தானும் கேட்டுக்கொண்டிருப்பர். சிரவணத்திற்கு வரும் க்ஷேத்திர வாசிகளுக்கும் சத்பக்தியும், சாந்தியும், தாந்தியும், க்ஷமையும், விரக்தியு முண்டாயிற்று. அவ்விடத்திற்கு வருவோர் சத்திய வசனங்களே சொல்லுவார்கள். தர்ம மார்க்கத்திலேயே நடப்பார்கள். பெருமாளுடைய திருநாமத்தை பிரியத்துடன் சொல்லுவார்கள். இரவுகாலங்களில் ஹரிகீர்த்தனை விசேஷமாக நடப்பதால் வைதிக பிராம்மணர்களு மிதர ஜாதியரும் அதனையானந்தமாக கேட்பார்கள். சில பிராம்மணர்கள், துவேஷ புத்தியைக் கொண்டு காம்ய கர்மங்களை பிரஜைகள் விடுவதால் தங்கள் பிழைப்பு போயிற்றென்றும் பக்தி மார்க்கமே சிரேஷ்ட மென்று

தனுல் கருமங்கள் யாரும் செய்வதில்லை என்றும் வைதிக ஜீவன மெல்லாம் போய்விட்டதென்றும் தூஷித் திருந்தனர். இவை யெல்லாவற்றையும் ஏகநாதர் கண்டு சகித்துக்கொண்டிருந்து பாகவதார்த்தங்களைச் சொல்லி வருமளவில் வீட்டிற்கு வந்த ஜனங் களுக் கில்லையென்னும லன்னம் போடுவர். வஸ்திரம் முதலான துகளையுங் கொடுத்துக்கொண்டு வருவர்.

ஒருதடவை ஏழுநாள் மழை ஓயாமல் பொழிந்துக்கொண் டிருந்தது. தானியம் வீட்டிலிருக்கினும் விறகு அகப்படா திருந் தது. இராக்காலத்தில் நான்கு பிராம்மணர்கள் பசிபொறுக்காமல் பைடன்புரத்திலேகநாதரிடம் வர, அன்னத்தை விரும்பிவந்த அவ் வந்தணர்களைப் பார்த்தவுடன் அவர் தன் சதியை யழைத்து இவர்க ளுக்குச் சமையல் செய்து சாப்பாடு சாதிக்கச் சொன்னர். மனை யாள் கணவரை நோக்கி, ஸ்வாமி! விறகில்லையே யென்ன, ஏக நாதர் வீட்டைப் பிரித்து வேண்டிய காஷ்டங்களைக் கொள்ளென் ன, மனைவி ஸ்வாமி! அப்படி செய்ய காலவிளம்பமாமே யென்ன, அப்பொழுது அவர் உபயோகப்படுத்திருந்தக் கட்டிலைப் பிளந்துக் கொடுத்தார். அதைக்கொண்டு அம்மாது சமையல் செய்து பிரா ம்மணர்களுக் கன்னமிட அவர்கள் பக்ஷித்து ஏகநாதரை வெகு காலம் வாழ்ந்திருக்கக் கடவீரென் றுசீர்வதித்துச் சென்றுர்கள்.

இப்படி நடந்துவர ஒருகாலத்தில் ஏகநாதருடைய தாயார் திதி (திவசம்) வந்தபடியால் அவ்வூரிலிருக்கும் பிராம்மணர்களைச் சாப் பாட்டுக்கு வரும்படி ஏகநாதர் பிரார்த்திக்க அவர்களும் ஸ்நானஞ் செய்து வருவதாக ஒத்துக்கொண்டனர். பிறகு ஏகநாதர் தனது நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு பிராம்மணர்களுடைய வரவை எதிர்பார்த் திருந்தனர். அவ்வேளையில் மனனசீலரும் பகீர்களுமான மூன்றுபேர் துலுக்கர்கள் வந்து ஐயா! பசியி ஞல் வருத்த மடைந்தோம், அன்ன மளியுமென்று அர்த்திக்க, ஏகநாதர் அன்னத்தையும் பதார்த்தங்களையும் கொண்டு வந்து அவர்களுக்கிட, திருப்தியாக வவர்கள் பக்ஷித்து குதா (கடவுள்) உமக்கு கலியாணமாக கோரிக்கைகளைக் கொடுக்கக் கடவரென்று ஆசீர்வதித்துப் போஞர்கள். அச்சமயத்தில் பிராம்மணர்கள் ஸ்நா னம் பண்ணிவந்து துலுக்கர் சாப்பிட்டுப் போனதைக்கண்டு ஏக நாதருக்கு ஜாதிகட்டு செய்து பிரஷ்டஞனுயென்று சொல்ல, அவ

ரவ்வந்தணர்களுக் கடிபணிந்து ஸ்வாமிகளே ! சர்வ பூதங்களிலும் ஸ்ரீஹரி யிருக்கிறப்படியா லவர்களுக் கன்னமிட்டேன், அந்த சமை யலைத் தவிர்ந்து மறுபடியும் ஸ்தலசுத்தி செய்து புது ஜலத்தால் வேறு சமையலைச் செய்வித்தேன், அருள்புரியு மென்றார். அந்தப் பிராம்மணர்க ளனைவருங்கூடி தருமாதிகாரிக்குத் தெரியப்படுத்த அவனும் ஏகநாதர் பஹிஷ்கா காரத்தி லிருக்கக் கடவரென்று சொன்னான். பின்பு ஏகநாத ரவர்களிடம் சென்று அனேக விதங் களாகப் பிரார்த்திக்க அவர்க ளவரைக் கண்டு சாக்ஷாத் பிதுருக் களை நீர் அழைத்து சாப்பாடிடுமென்ன, அப்படியே யாகட்டுமென் று ஏகநாதர் தன் வீட்டிற்குவந்து பிதுர் தேவதைகளை ஆவாகனம் செய்தார். அப்பொழுது மூன்றுபேர் பிதுருக்க ளவ்விடம் தோ ன்றி அங்குள்ள பிராம்மணர்க ளனைவரும் கேட்க வேத பாடங் களைச் சொல்லிக்கொண்டு போஜனம் செய்து தாம்பூல தக்ஷிணை களை வாங்கிக்கொண்டு அந்தர்த்தான மானார்கள். பிராம்மணர் கள் வெட்கமும் விசனமு முடையவராகி விக்கையுடன் வீடுகளுக் குச் சென்றனர்.

## கிருஷ்ண தாஸன்.

கிருஷ்ண தாஸனெனும் ஒரு பிராம்மண னவ்வூரில் அம்பா பூஜையைச் செய்துக்கொண் டிருந்தான். அவனுடைய பரிசுத்த லக்ஷணங்களைப் பார்த்து தேவி பிரஸன்னமாகி என்ன அபேக்ஷிக் கிறாயென்று கேட்க, அவ்வந்தணன் கவிசெய்யும் திறமை வேண்டு மென்று கேட்க, அவ ளந்த வரத்தைக் கொடுத்து மறைந் தாள். பின்பு கிருஷ்ணதாஸன் இராம சரித்திரத்தை மஹாராஷ்ட்ர பாஷையில் கவிகளாகச் செய்யத்தொடங்கி அயோத்தியா காண் டம் முதல் யுத்தகாண்டம் வரைக்கும் செய்து வந்தான். சில பிராம்மணர்க ளேகநாதரிடம் சென்று கிருஷ்ண தாசருடைய கவித்வ லக்ஷணத்தைச் சிலாகித்துச் சொன்னார்கள். ஏகநாத ரதனைக் கேட்டு புஞ்சிரிப்புடையவராய் உலகத்தில் மகாத்துமாக்க ளெத்தனையோபே ரிருக்கிறார்கள், கவித்வம் நன்றாயிருக்கிறதென் று துவேஷ மெண்ணாமல் மேன்மைப் படுத்திச் சொல்ல, அவர்கள் தங்களிருப்பிடம் சென்றார்கள். தோஷமொன் றில்லாமல் கிரு ஷ்ணதாஸன், அந்தப் பெரிய கிரந்தத்தை எழுதிவர, அது பூர்ண மாகா முன்னமே ஒருநாள் அம்பாதேவி தோன்றி " மறுதினம்

சந்தியா காலத்தில் நீ மரணமடைவா" யென்று சொல்ல அதைக் கேட்டு கிருஷ்ணதாஸன் தொந்தரை யடைந்து கிரந்தமெப்படி நிறைவேறுமென்று யோசித்து ஒன்றுந் தோன்றாமல் ஏகநாதரிடம் வந்தான். அவரெதிர்க்கொண் டழைத்துவந்து மரியாதை செய்து சன்மானித்தார். கிருஷ்ணதாஸன் தனக்கு அம்பாள் சொன்ன குறிப்பை யறிவித்து மிகுதியாயிருக்கும் கிரந்தத்தை நீர் பூர்த்தி செய்யவேண்டுமென்று ஏகநாதரைப் பிரார்த்தித்தான். அப்பொழுது ஏகநாதரந்த கிரந்தத்தை முழுதும் பார்வையிட்டுக் கிருஷ்ணதாசை நோக்கி உம்முடைய வாக்தோரணையைக் கொண்டே கிரந்தத்தைப் பூர்த்தி செய்யவும், அது நிறைவேறும் பரியந்தம் நீர் பிழைத்திருப்பீ ரென்றார். அதைக்கேட்டு கிருஷ்ணதாஸன் கிரந்தத்தை யிவ்விடமே எழுதுகிறேனென்ன, ஏகநாதர் உமது வீட்டிற்கே சென்று அவ்விடமிருந்தே யெழுதும், காலன் [illegible]ரால் நானவ்விடம் வந்து உமது கோரிக்கையைச் சபல மாக்கு[illegible] னென்றார். கிருஷ்ணதாஸ னவ்வண்ணமே வீட்டிற்குச் [illegible] கிரந்தத்தை யெழுதிக்கொண் டிருந்தனன். மறுநாள் [illegible]மத்தில், பிராணனைக் கொண்டுபோக காலன் வந்தா[illegible] [illegible]வ்விடம் ஏகநாதர் குறுக்கே வந்து கிருஷ்ணதாஸ ருடை[illegible]டைச் சுற்றி கையைத் திருப்பி காலனைக் கண்டு இன்ன[illegible]ாள் இந்தப் பிராணி சஜீவமா யிருக்குமென்று சொல்ல [illegible]கட்டு அவ்வாக்ஞையை சிரசா வகித்து காலன் சென்றான். [illegible]ருடைய பெருமை யிதனால் பிரபலமாகி அனேக பிரஜைகள் காணவருவார்கள். பத்தாவதுநா ளந்த கிரந்தம் முடிந்தது. கிருஷ்ணதாஸன் அன்றையதினம் ததீயாராதனம் செய்வித்தான். மறுநாள் ஸ்நானஞ் செய்து நித்திய நியமங்களை முடித்துக்கொண் டிருக்க மரண சமயத்தில் ஏகநாதர் புஷ்பங்களேந்தி கிருஷ்ணதாசன் வீட்டிற்குச் செல்ல, அவன் நிலைதப்பாமல் நித்திய பதவியை யடைந்தான். விஷ்ணு பக்தர்களுக் கிவ்வித மகிமைகள் விளங்கிக்கொண்டிருந்தன.

## கன்னடி வர்த்தகன்.

கர்னடக தேசத்தில் வாசமாயிருந்த ஓர் வர்த்தகன் தன்னுடைய வீட்டில் திருவாராதனை செய்யும் பொருட்டு பாண்டு[illegible]ருடைய மூர்த்தியைச் செய்வித்தான். திருமுக மண்டலத்தில் [illegible]

...ம் புன்னகையுமுடையதாய் சுப்பிரஸன்னமாயிருந்தது. ...ண்டு வர்த்தகன் பிராண பிரதிஷ்டையும் பிராம்மண போ... செய்விக்க வேண்டுமென் றெண்ணி யிருந்தான். அவ்விர...ன நித்திரையி லிருக்க சொப்பனத்தில் ஸ்ரீஹரி சென்று ...த்ரெனும் ஓர் பக்த சிரோமணி பைடன்புரியிலிருப்பர், அவ...ந்த மூர்த்தியைப் பூஜிக்கத் தகுந்தவர், அவருக்கு நீ இதைக் கொடுக்கக்கடவை, சொன்னபடி செய்யாவிடில் நீ கஷ்டத்தை யடைவாயென்றார். அவனுடனே ஜாக்கிரதைக்கு வந்து தொந்தரையடைந்து பொழுது விடிந்தவுடன் பிராம்மணர்க ளனைவரை யழைத்து தன்னுடைய சொப்பன சங்கதியைத் தெரிவித்தான். அவர்களாலோசித்து மூன்று தினங்களுக்குள் திரும்பி பெருமாள் சொப்பனத்தில் வந்து சொல்லுவாராகில் இம்மூர்த்தியை ஏகநாதருக்கே செலுத்துவோமென்று சொன்னார்கள். இவ்வார்த்தையைக்கேட்டு வர்த்தக னப்படியே ஆகட்டுமென்றான். மூன்றாவதுநாள் பெருமாள் திரும்பி அவன் சொப்பனத்தில் வந்து முன்போலவே சொல்ல, வர்த்தகன் விழித்துக்கொண்டு இது விசித்திர மென்று பரிவாரத்துடன் பைடன் புரத்திற்குச் சென்றனன். அது திவ்ய க்ஷேத்திர மாதலால் பிராம்மணர்களுடைய தொந்தரைகளுக்குப் பொறுத்துக்கொண்டு அவ்வூரை வலமாக வந்து ஏகநாதரை அவர் வீட்டிற்கண்டு தெண்டன் சமர்ப்பித்துச் சுந்தரமான பாண்டுரங்க மூர்த்தியை அவ ரெதிரில்வைத்து தனது விருத்தாந்தம் யாவையுமறிவித்தான். ஏகநாதர் சந்தோஷத்துடன் அம்மூர்த்தியை எடுத்துக்கொண்டு கண்களி லானந்த பாஷ்பம் பொழிய, இருதயத்திலிருத்தி சச்சிதானந்தரே! புண்டரீக வரதரே! புருஷோத்தமரே! பாண்டு ரங்கரே! பரம புருஷரே! நீர் தயைபுரிந்து அடியேனிடம் வாஞ்சையை வைத்து வந்தீரன்றோ? அடியேனுடைய பாக்கிய மென்னென்று சொல்வேன், ஓ தயாநிதியே! தீனபந்துவே! என்று புகழ்ந்தார். பின்பு சாமக்கிரிகை யனைத்துஞ் சேகரப்படுத்தும் பொருட்டு உத்தவனுக்குக் கட்டளையிட்டு சோதிடரை யழைத்துப் பிராணப் பிரதிஷ்டையை அவ்விக்கிரகத்திற்குச் செய்ய முகூர்த்தத்தை நிச்சயித்தார். ஓர் சுபதினத்தில் பிராம்மணர்க ள... ...ரக்கூடி அபிஷேகமர்ச்சனை பூஜை முதலானதுகளைச் செய்து ...ாக... பிரதிஷ்டையை முடித்து பக்குவான்னங்கள் முதலான

நைவேத்தியங்களை பெருமாள்முன் வெகுவாக வைத்தார்கள். அப்பொழுது ஏகநாதர் வெண்ணெயைக் கையிலேந்திப் பாண்டு ரங்க மூர்த்தியின் வாயிலிட்டு கிருஷ்ணா! கோவிந்தா! முகுந்தா! முராரி! நாராயணா! நரஹரி! நீர் கோகுலத்தில் விசேஷமாக வெண்ணெயை அமுது செய்தீரன்றோ? இப்பொழுது அடியேன் பார்க்க நீர் புசிப்பீரேல் பிரஜைகளனைவரும் பரம விசுவாசத்தை வைப்பார்களென்று வேண்ட, சிரித்த முகத்துடன் அவ்வெண்ணெயை விழுங்கினார். அவ்வேளையில் ஹரிபக்தரெல்லோருங் கூடி ஹரி, விட்டல, ஜய, ஜய வென்று கைகளைக் கொட்டிக்கொண்டு அபாரமக வானந்தித்தார்கள். பின்பு மேன்மையான பிரேமையுடன் ஏகநாதர் மங்கள ஹாரதிகளைக் கொடுத்து இரண்டாம் ஜாமத்தில் பிராம்மணர்களுக்கு போஜனமளித்தனர். அப்பொழுது அனைவரும் சந்தோஷிக்க வர்த்தகனெழுந்திருந்து ஏகநாதருக்கு தெண்டன் ஸமர்ப்பித்து சொல்லுவான், அடியேனுடைய விண்ணப்பமாவது—நானொரு ருக்மணி பிராட்டி மூர்த்தியை என்னிடம் செய்விக்கிறேன். இந்தப் பாண்டுரங்கரை அவ்விடம் நீங்கள் கொண்டுவந்து விவாகத்தை செய்வித்து திரும்பிவரவேண்டும். இப்பொழுது விடை கொடுமென்று கேட்க, அப்படியே ஆகக்கடவதென்று ஏகநாதர் சொல்லி யருளினார்.

பின்பு வர்த்தகன் தன்னூரைச் சேர்ந்து பிராட்டி விக்கிரகமொன்றைப் பிரியமுடன் செய்வித்து ஏகநாதருக்கறிவிக்க, இவர் தனது பரிவாரத்துடன் பாண்டுரங்க மூர்த்தியை பல்லக்கில் வைத்து அனைவரும் சந்தோஷிக்க மேளவாத்திய கோஷத்துட னுத்ஸவரீதியாகச் சென்றனர். அவ்வர்த்தகனிருந்த வூரைச் சமீபிக்க, அவன் தனது பரிவாரத்துட னெதிர்க்கொள்ள வந்து பைடன்புரத்திலிருந்து வந்தவர்களனைவருக்கும் வந்தனமிட்டு வைபவத்துடன் பெருமாளைத் தன் வீட்டிற் கழைத்துவந்தான். பின்பு முகூர்த்த தினத்தில் பெருமாளுக்கு அவ்வர்த்தகன் விசேஷ வரிசைகளைக் கொடுத்து பெரிய பிரீதியுடன் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் கலியாணத்தை நடத்த, அந்த மகோத்ஸவத்தில் ஏகநாதர் மாதவனுடைய திவ்விய சரித்திரங்களைத் தெரிவித்தார். அனேக பிரஜைகள் வந்து மகத்தான ஆனந்தத்துடன் கேட்டுக்கொண்டிருந்தனர். அனந்தரம் வர்த்தகன் பிள்ளைக்கும் பெண்ணுக்கும் வஸ்திரமும்

தனமும் கொடுத்து ஒரு மாசபரியந்த மவ்விடத்தி லிருத்திக்கொண்டு பின்பு அனுப்பலுற்முன். கூடவந்த வனைவருக்கும் வஸ்திரங்களைக் கொடுக்க ஏகநாதர் வெகு சந்தோஷத்துடன் பைடன் புரத்திற்கு உத்ஸவ ரீதியாக பெருமாளையும் பிராட்டியையும் கொண்டுவந்து சேர்த்து ததீயாராதனை விசேஷமாகச் செய்வித்தார்.

ஏகநாதர் பிறந்ததுமுதல் பண்டரிபுரத்தைப் பாராம லிருந்தபடியால் பாண்டுரங்கரே பிரியத்துடன் தன்னிடம் வந்தனரென்றெண்ணி உத்தவனை யேகாந்தமாக அழைத்து பண்டரிபுரத்திற்குச் சென்று பாண்டுரங்கரைத் தரிசிக்கவேண்டு மாதலால் வழிக்கு வேண்டிய வஸ்துக்க ளனைத்தையும் ஜாக்கிரதை செய்யவேண்டுமென்று கட்டளை யிட்டார். உத்தவ னவரிஷ்டப்படி யாவும் சித்தப்படுத்த, ஏகநாத ருத்தவனை வீட்டிலிருத்தி மனைவியுடனும் பரிவாரத்துடனும் பிரயாணமானூர். அவர் போய் நன்கு மொவ்வொரு கிராமவாசிகளும் மரியாதைகளை நடத்தி, அவர் சொல்லும் ஹரிகுணனுபவத்தை யன்புடன் கேட்டு சந்தோஷத்துடன் வெகுமானங்களைச் செய்தனுப்புவர்கள். வழி நடக்குமளவில் ஏகநாதர் ஹரிகீர்த்தனையைப் பாடிக்கொண்டும் பகவத் கல்லியாண குணங்களை நினைத்து நினைத் தானந்தித்துக்கொண்டும் கிருஷ்ணு! கோவிந்தா! முகுந்தா! முராரி! யென்று பகவன் நாமத்தைச் செய்துக்கொண்டும் பிரீதியுடன் பண்டரிபுரத்தின் சமீபத்திற்கு வர, பெருமாள் அர்ச்சகர்களுடைய சொப்பனத்திற் சென்று ஏகாாதருக்கெதிர்கொண்டு செல்லக் கட்டளையிட, அவர்க ளெதிர்க்கொண்டு வந்து ஆடம்பரத்துட னேகநாதரை யழைத்து வந்தார்கள். ஏகநாதர் சந்திரபாகா நதியில் நீராடி, பெருமாள் சன்னிதிக்குச் சென்று பிரேமையுடன் பாண்டுரங்கரைச் சேவித்து கண்களி லானந்தபாஷ்பம் பொழியப் பாதங்களைப் பிடித்துத் தோத்திரங்களைச் செய்ய, சமரச நிலைமையை யடைந்தார். பின்பு சேவார்த்தராகி அம்மூர்த்தியை ஆலிங்கனஞ் செய்து சித்தத்தி லிருத்திக்கொண்டு சன்னிதி வலம் வந்து பண்டரிபுரத்திலிருக்கும் பிராம்மணர்க ளனைவரையும் போஜனத்திற் கழைத்து மூன்ருஞ் சாமமாகும் சமயத்தில் பகவன் நாமங்களை அனைவரும் சொல்லிக்கொண்டு பக்ஷணை செய்ய தானும் பக்ஷணை செய்திருந்தனர். அவ்விடத்திலுள்ள சஜ்ஜனர்கள் சிலர் கூடி ஏகநாதரிடஞ் சென்று, ஐயா! உம்முடைய கீர்

த்தி எங்கும் பரவியிருக்கிறது, ஹரிகுணனுவாதம், நீர் செய்ய நாங்கள் கேட்போமென்ன, ஏகநாத ரப்படியே ஆகுகவென்று அவ்விரவில் கதை செய்யும்பொருட்டு, பெருமாள்சன்னிதி முன் நின்று தலைமேல் இருகைகளைக் கூப்பி பாண்டுரங்கரை நோக்கி, கதையைச் சொல்லத் தொடங்கினர். அதாவது—சொல்பவனும், கேட்போரும், ஜனர்த்தனரேயென்று கைகளை கொட்டிக்கொண்டு ஸ்ரீதரா! மாதவா! கோவிந்தா! கேசவா! கிருஷ்ணா! கிருபாகரா! என்று சொல்லி வந்தனஞ் செய்து பானுதாஸருடைய சரித்திரத்தைச் சொல்லி முடித்தார். மதுர ரசமாயிருந்ததைக் கண்டு கேட்போரனைவரு மானந்த மடைந்தார்கள். ஏகநாதர் பின்பு பண்டரிபுரத்தின் பெருமையை வெகுவாகச் சொல்லி நிறைந்த பிரேமையுடன் ஸ்ரீஹரி ரூபத்தைச் சித்தத்தி விருத்திக்கொண்டு மறுதினமே பிரயாணமாகி வழி நடந்து சௌக்கியமாக பைடன்புர சமீபம் வர, அவ்வூரா ரனைவரு மெதிர்க்கொண்டு வந்தார்கள். உத்தவன் பக்தியுட னேகநாதர் திருவடிகளைப் பிடிக்க இவ ரவனை யெழுப்பி ஆலிங்கனஞ் செய்துக்கொண்டார். பின்பு அனைவருங் கூடி விபவத்துடன் வீட்டிற்கு வந்து விட்டல மூர்த்தியைச் சேவித்து விப்ர ஜனங்களுக்கு ஏகநாதர் வெகுவாக போஜன மளித்து வீற்றிருந்தார்.

### பிரதிஷ்டானி பரம ஹம்ஸர்.

பைடன் புரத்திற்கு பிரதிஷ்டானி யென்றும் பெயருண்டு. அவ்விடத்தி லொரு பிராம்மணர் பரமஹம்ச ஆச்சிரமத்தை வகித்து மகா விரக்தராகி காமக்குரோதாதிகளான ஆறுசத்துருக்களை ஜெயித்து எவ்விடத்திலும் ஸ்ரீஹரி பாவனையே யுடையவராகி உலகிலுள்ள சராசரங்க ளனைத்திற்கும் பண்டிதருக்கும், பாமரருக்கும், சண்டாளருக்கும், யானை, எறும்பு, கொசுகு, குதிரை, கழுதை, எலி முதலாகியவைகளுக்கும் பெருமை சிறுமை யென்று பாராமல் சாஷ்டாங்கமாக பூமிமேல் விழுந்து நமஸ்கரிப்பர். ஏகநாதர் செய்யும் ஹரிகீர்த்தனத்திற் கெப்பொழுதும் வருவர். இவ்வண்ணமிருக்க, ஓர்நாள் அவர் ஸ்நானத்திற்காக நதியிடஞ் சென்று நீராட அவ்விட மோர் கழுதைப் பிரேதத்தைப் பார்த்துச் சாஷ்டாங்கமாகநமஸ்கரித்தார். அங்கிருந்த பிராம்மணர்க ளிதைக் கண்டு விசித்திரமென்று சிரித்து எல்லோருங்கூடி அப்பரம ஹம்சரைப்


ప్రతిష్ఠానిపరమహంసుడు.
பிரதிஷ்டானிபரமஹம்சன்.
పైటను, అనామీకుడు.
பைடன் அனுமீகன்.
ప్రతిష్ఠాని బ్రాహ్మణుడు
பிரதிஷ்டானிபிராம்மணன்

பார்த்து ஸ்வாமி! கழுதையின் பிரேதம் கோதாவரி வெள்ளத்தி லடித்துக்கொண்டுவந்தது அதினிடத்தி லாத்மா இல்லாதபடியால் யாருக்கு நீர் நமஸ்கரித்தீர்? ஸர்வமும் ஹரியென்று பார்க்கும் ஸத்புருஷர் நீராவீர், அந்தக் கழுதைப் பிழைக்குமாயின் உமது நிச்சயம் நிலைமை யுடையதென் றெண்ணுவோம். இந்தப் பிரதீதி (உண்மை)யை யுள்ளபடி காட்டாவிடில் உம்மைச்சாதுவென் றெண்ணோ மென்றூர்கள். பரமஹம்சரிதற் கொன்றும் மாறுசொல்லாமல் பகவானைத் தனக்குள் நினைத்து, பரம புருஷா! பண்டரிநாதா! காருண்ணியமூர்த்தி! கருடத்துவஜா! செத்த கழுதைக் குச் செய்த வந்தனம் வீணுமோ! என்று வெகுவாக ஆர்த்தியுடன் பிரார்த்திக்க, அக்கழுதை மூச்சுவிட்டு எழுந்திருந்தது. பிராம் மணர்க ளிதைக் கண்டு ஆச்சரியப்பட்டு அப்பரமஹம்சருக்கு நமஸ்கரித்துத் தமக்குள்ளே சொல்லிக்கொள்ளுவார்கள், நம்மூர் பண்டிதர் ஏகநாதர், பாமர ஜனங்களுக்குப் பிரமஞானத்தை யுபதேசிக்கிறூர், ஆனு லிவ்வண்ணமான மகிமைகளை யவர் செய்ய யெங்கும் கண்டதில்லை யென்று மாற்ற முரைத்திருந்தார்கள். அவ்வேளையில் ஏகநாதர் ஸ்நானம் செய்ய அவ்வாற்றின் கரையைச் சேர்ந்தார். அவரைக் கண்டவுடன் பரமஹம்ஸர் நமஸ்கரித்தார். ஏகநாதரும் சாஷ்டாங்கமாக அவருக்கு நமஸ்கரித்து ஸ்வாமிகளே! விசேஷ மகிமையை இன்று காண்பித்தீர், இதனு லுமக்கு போக விக்கின முண்டானதுபோல் தோன்றுகிறது, இக்கலிகாலத்து மனிதர்கள் அதிக விகல்பத்தை யுடையோராவார்கள். கலுஷபுத்தி யுடையோரராய் காமங்களையே விரும்புவார்கள். எவனுக்காவது சாவு வந்தா லும்மிடம் வந்து செத்தவனை எழுப்பச்சொல்லி தொந்தரவு செய்வார்கள். இப்படி சித்திகளை விசேஷமாக வினியோகப்படுத்தினல் தபோமகிமை விட்டுப் போமென்று சொல்லப் பரமஹம்ச ரம்மொழிகளைக்கேட்டு நிதானமாக யோசித்து ஏகநாதரைக் கண்டு, ஐயா! நான் பரமபதத்தையடைய சமாதியைக் கொடுமென்று கேட்க, அவர் கொல்லத்துவேலை செய்பவர்களை அழைத்து ஓர் பள்ளம் வெட்டும்படி நியமித்தார். அப்பள்ளத்திற் பரமஹம்ஸ ருட்கார்ந்து தாரணையினல் விதேஹத்தை யடைய, ஏகநாதர் அவருக்குப் பூஜைகளைச் செய்து மண்ணைக் கொட்டி சமாதியை மூடி தன்னிருப்பிடம் சென்றூர்.

அவ்வூரிலிருந்த பிராம்மணர்க ளனைவரும் இச்சங்கதியைக் கேட்டு இது மகா பாபமென்று அங்கிருக்கும் சிவாலயத்திற்கு ஏக நாதரை யழைத்து ஜீவிதராயிருந்த பரமஹம்ஸரை நீர் சமாதி செய்தீர், அவரைக் கொன்றதனால் பிரமஹத்தி யுமக்கு நேர்ந்தது, விபரீதமான கருமங்களைப் பயமின்றிச் செய்கிறபடியால் உமக்கு பஹிஷ்காரம் (ஜாதிகட்டு) வைத்தோம். நீர் செய்த துஷ்கருமம் பகவானுக்கு உகப்பாக விருக்குமாயின் பரமசிவன் முன்னிருக்கு மிப்பாஷாண நந்தி புல்லைத் தின்னக்கடவது, இல்லையாயி னிந்த துஷ்கர்மத்தை நீர் போக்கவேண்டி வருமென்று சொல்ல, ஏக நாத ரவர்களுக்குத் தீர்க்க தெண்டனிட்டு அடியேன் மூடன், மந்த மதியானவன், சாஸ்திரங்க ளெவையு மறியேனென்று கூறி, விளை யாட்டைப்போ லவ்விருஷபத்தினிடஞ் சென்று அதனை நோக்கி, நந்திகேசுரரே! இத்தினத்தில் தேஹத்தைவிட்ட யதிசிரேஷ்டரான பரமஹம்சருக்கு சமாதியைத் தந்தேன், அதனால் தோஷமில்லா திருந்தால் பிரஜைக ளிடும் புல்லை புஜிக்கக் கடவீரென்று தீர்க்க நமஸ்காரஞ் செய்ய, நந்தியும் நாக்கை நீட்டி பிரஜைக ளிட்ட புல் லைப் புஜித்தது. பிராம்மணர்க ளிதைப் பார்த்து ஏகநாதரைக் கண்டு இன்றிட்ட பஹிஷ்கார முமக்கில்லை, விசித்திர செய்கை யைக் காண்பித்தபடியால் சம்மதித்தோம் சந்தோஷ மாச்சுதெ ன்ன, ஏகநாதர் அவர்களுக்கு நமஸ்கரித்து மகா விநயத்துடன் சொல்லுவார், பிராம்மணர்களுடைய பாத தீர்த்த மகிமையே அடியேனுக்கு ரக்ஷகமாகும், சத்புருஷர்களான தங்களுடைய சர ண பிரபாவமே அடியேனுக்கு சித்திகளைக் கொடுக்கின்றதென்று சொல்ல, பிராம்மணர்க ளேகநாதரைப் புகழ்ந்து அவர்க ளிருப் பிடம் போனார்கள். ஏகநாத ரிதைக்கண்டு தன் வீட்டுக் கெழுந் தருளினர்.

க்ஷேத்ர வாசிகளான இதர ஜனங்க ளிதைக் கேட்டு வேகத் துட னச்சிவாலயத்திற்கு வந்து நந்திமூர்த்தியைப் பார்த்து ஏக நாதருக்குத் திரும்பி பஹிஷ்காரம் வைத்து அவரை வரவழை த்து பரமஹம்ஸரை நீர் கொன்றபடியால் பிரமஹத்தி யுமக்குநேர் ந்தது, நந்திகேசுரர் செய்த செய்கையை நாங்கள் காணவில்லை, இப்போது நாங்கள் கொண்டுவந்த மிட்டாய் லட்டுக்களை இந்த நந்திகேசர் பக்ஷிப்பாராயின் எங்களுக்குச் சம்மதமாகும். உம

க்கும் நன்மையாம், அப்படி ஆகாவிடில் உம்மேல் பஹிஷ்காரமுண்டாமென்ன, ஏகநாதர் தேவரீருடைய அனுக்கிரகமென்று அந்த நந்தி விக்கிரகத்தினிடம் சென்று சொல்லுவார், ஓ பசவேஸ்வரரே! நீர் உமாரமணருக்கு உகந்தவராவீர், ஐயரே! இவ்வாறு மேய்ச்சலை எப்படி நித்தியமும் பக்ஷணை செய்வீர்? புரவாசிகளான பிரஜைகளனேகரிது நிமித்தமாகவே வருவார்கள். அவர்களுடைய கோரிக்கைகளைத் தீர்ப்பதற்கு மகிமைகளைக் காட்டவேண்டி வருமாதலால், எல்லோருமறியும்படியோர் யுக்தி செய்து உமது மகிமையைத் தெரிவிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, அந்த நந்தியெழுந்திருந்து உச்சுவாச நிச்சுவாசங்களை விட்டு அங்குமிங்கும் திரிந்து ஓர் குதி குதித்து கோதாவரி கங்கைக் கரையோரம் நின்றது. பிராம்மணர்களனைவருமிதைக் கண்டு ஆச்சரியமடைந்து பிற்காலத்திற்கிது ஓரடையாளமாமென்றெண்ணி, ஏகநாதர் பாண்டுரங்கருடைய கிருபா பாத்திரரென்று கொண்டாடிக்கொண்டு போய்விட்டார்கள். இப்போதைக்குமவ்விடத்திலிதை திருஷ்டாந்தமாகக் காணலாம். ஏகநாதர் பின்பு தன்னிருப்பிடம் சென்றார்.

ஏகநாதரொருநாள் ஞானதேவர் சமாதியைக் காண அளகாவதிக்கெழுந்தருளினர். ஞானதேவவர் சொப்பனத்தில் வந்து சமாதிக்குச் சமீபத்திற் செடியின் வேருகள் பெருகியிருக்கிறபடியால் அவ்வேர்களை வேறோர் மார்க்கத்தில் போகும்படி செய்ய வேண்டுமென்றார். அவ்விரவி லேகநாதர் விழித்துக்கொண்டு உதயமானவுடன் அவர் கட்டளையின்படி அந்த விருக்ஷத்தினடிவேரை எடுத்துவிட்டு சமாதிக்கோர் கெடுதலையில்லாமற் செய்தனர். அவ்விடத்தில் ஹரி குணானுவாதத்தை அவர் சொல்லவாரம்பிக்க, அனேக ஜனங்கள் வந்தார்கள். போஜனத்திற்கவ்விடமொன்றுங் கிடைக்காமையால் பாண்டுரங்கரொரு வர்த்தகராகி ஓர் கடையை வைத்து அரிசி பருப்பு முதலாகிய வனைத்துமவர்களுக்குக் கொடுத்து அவ்வஸ்துக்களின் விலையை மறுதினம் வாங்குகிறேனென்று சொல்லி இரண்டாநாள் மறைந்துவிட்டார். இது ஹரி விலாசமென்று ஏகநாதர் சொல்லிக்கொண்டு அவ்விடத்தை விட்டு பைடன்புரத்தைச் சேர்ந்திருந்தனர்.

ஞானதேவர்செய்த ஞானேஸ்வரி யென்னுங் கிரந்தம் அபூர்வமாக விருந்தது. அதில் காலாந்தரத்தால் பிழைகள் நிறைந்திருந்

தன. ஏகநாதரா லது சீர்திருத்தப்பட்டு லோகோபகாரமாயிற்று. அதனை யனைவரும் கேட்டு ஆனந்திப்பதற்கு ஏகநாதர் படிக்க வாரம்பித்தனர். கேசவரென்னும் பிராம்மணரும் உத்தவனும் அதி னருத்தங்களை வெகு சிரத்தையுடன் கேட்டார்கள். கிரந்தம் சமாப்தியானதே கேசவர் விடை பெற்றுக்கொண்டார். ஏகநா தரு மவரை அனுதாபத்துடன் பிரிந்தார்.

பைடன் அனுமீகன்.

பஞ்சம குலத்திற் பிறந்த ஒரு அனுமீகன் ஹரிபக்தனாய் பைடன்புரியில் வாழ்ந்திருந்தான். தன் மனையாளுடன் ஹரி குணானுவாதத்தைக் கேட்க ஏகநாதர் வீட்டிற்கு நிதம் வருவான். ஏகநாத ருதயகாலத்தில் ஸ்நானத்திற்காக ஆற்றுக்குச் செல்லும் வழியை அவ்வனுமீகன் தினமும்பெருக்கி வருவான். அவர் சா க்ஷாத் ஹரி சொரூப ரென்றெண்ணி மகா பிரீதியுடன் நமஸ்கரிப் பன். பக்தியுடன் சேவைகளைச் செய்ய எப்பொழுதும் கோரிக் கை யுடையவனா யிருப்பன். ஒரு சமயத்தில் ஏகநாதர் ஹரி குணானுவாதஞ் செய்யும் பொழுது பகவானுடைய விஸ்வரூபத்தை விசேஷமாக வர்ணித்தார். அவ்வேளையி லந்தவனுமீகன் பக் தியுட னேகநாதரைக்கண்டு ஸ்வாமீ! அர்ச்சுனனுக்கு ஸ்ரீஹரி தனது நிஜரூபத்தைக் காட்டுமளவில் நானவ்வேளையி லெவ்வித மாக எவ்விடத்தில் தங்கி யிருந்தே னென்று கேட்க, ஏகநாதர் ஹரிரூபத்தி லனன்னியமாயிருந்தா யென்றார். இதைக்கேட்டு அவ் வனுமீகன் ஹரிரூபத்தை மனதி லிருத்திக்கொண்டு நாமரூபங்க ளொன்றையுங் காணாமல் விபுவான நாராயணனிடம் பிரீதியை யமைத்து சற்றுநேரம் அறிவாகாரமாயிருந்து பின்பு வெளிநோக்கங் கொண்டுஏகநாதர் பிரமரூப (ஆத்மசாக்ஷாத்கார)ரென்று மகத்தான பிரேம பாவத்தை யவரிடம் வைத்திருந்தான். அவருடைய தரி சன மப்போதுக் கப்போதாகும் பொருட்டு தன் னிருப்பிடமான பறைச்சேரியை விட்டு ஆற்றின் கரையி லோர்வீட்டைக் கட்டிக் கொண் டவ்விடமே வாஸமா யிருந்தான். ஏகநாத ரவ்விடம் ஸ்நா னத்திற்காக அடிக்கடி வரும்பொழுது தரிசனம் செய்து வருவன். இவ்விதமாக தான் பத்தினியுடன் சிலகாலங்கழிக்க, ஒருநாள் புரு ஷனைப் பார்த்து மனைவி சொல்லுவாள், ஏகநாதர் ஹரிசொரூபியெ ன்று எவ்விடத்திலும் புகழ்பெற்றார். அவருக்கு நாம் போஜனமளிப்

பதற்கு ஒருநாள் அழைத்துவாருமென்று சொல்ல, அவனப்ப டியே ஏகநாதர் ஸ்நானஞ் செய்யுமிடத்திற்கு வந்து அவர் தனி த்து இருப்பதைக்கண்டு, ஸ்வாமி! அடியேனுடைய விண்ணப்ப ம்—தேவரீ ரொருநாள் அடியேனிடம் போஜனத்திற் கெழுந்த ருளவேண்டுமென்று அடியேனுடைய மனைவி சொல்லச் சொன் னாள். அதனை அங்கீகரிக்கும்படி பிரார்த்திக்கிறே னென்ன, ஏக நாத ரவனுடைய மனோபாவத்தை யறிந்துக்கொண்டு பெருமாள் கிருபையா லுன் மனோரதம் பூர்த்தியாகக் கடவதென்றார். அதைக் கேட்டு அனுமீகன் சந்தோஷத்துடன் தனது சதி யிடஞ் சென்று ஏகநாதர் சொன்ன வார்த்தையைத் தெரிவித்தான். அவ ளானந்த மடைந்து தரித்திர தசையி லிருக்கினுந் தகுந்த சாமக்கிரிகையைச் சேகரித்து விநயத்துடனும் ஆர்த்தியுடனு மவசரத்தைப் பார்த் திருந்தாள். அவர்கள் வீட்டினெதிரே துளசிவனம் சோபிதமா யிருக்கும். வெள்ளை வஸ்திரம் சுசியுடன் உலர்த்தப்பட்டிருக்கும். ஸ்ரீராமநாமத்தை யெப்பவும் இருவரும் பிரீதியுடன் சொல்லிக் கொண்டிருப்பார்கள். ஓர் ஏகாதசி தினத்தி லிருவரும் ஹரிகுணா னு வாதத்தை ஏகநாதரிடங்கேட்டு துவாதசி தினத்தில் வீட்டிற்கு வந்து மனைவி புருஷனைப் பார்த்து இன்றையதினத்தி லேகநாதரை போஜனத்திற் கழைத்தால் மேன்மை பெறுவோ மென்றாள். அதைக் கேட்டு அனுமீகன் நல்லதென்று ஸ்நான கட்டத்திற்குச் சென்றான். அவ்வேளையி லேகநாதர் ஸ்நானஞ் செய்ய வந்திருந்தா ர். மகாவினயத்துட னவருக் கவன் தெண்டன் சமர்ப்பித்து ஸ்வா மி! போஜனத்திற் கின்றையதினம் வரவேண்டும், அடியேன் ஈன ஜாதியிற் பிறந்தவ னாதலாற் சந்தேக மடைகின்றேன், இந்த விண்ணப்பத்தை யங்கீகரிப்பீரோ அல்லது அதற்கு கோபமுடைய வராவீரோவென்று பயப்படுகிறேனென்ன, ஏகநாத ரவனைக் கண்டு சொல்லுவார், உன்னுடைய பிரேம பாவம் பெருமாளுக்கு உகந்த தாயிற்று. வேத புராணங்கள் வாசித்த விப்ரர்கள், பகவத் பக் திக்கு விமுகர்களா யிருக்கின்றார்கள், அதினிட மவர்களுக்கு ஆத ரணையே யில்லை. அந்தியர் குலத்திற் பிறந்து அச்சுத பக்தியை யொருவ னடைவானாகில் அவ்வந்தணரைக் காட்டிலு மவனதிக னாவான். வெளி யலங்காரங்கள் வீணாகுமென்று ஸ்ரீ பாகவதத்தி லிருந்த ஓர் சுலோகத்தைச் சொல்லி மேற்சொன்ன அர்த்தத்தை

வெளியிட்டார். இதை அங்கோர் பிராம்மணன் கேட்டிருந்து, சற்று நேரத்திற் சஹசரிக ளனேகரைச் சேர்த்துக்கொண்டான். அனைவரும் குரோதங்கொண்டு ஏகநாதரைக் கண்டு துஷ்ட வார்த்தைகளைச் சொல்லி சுருதிகளின் பொருளை பறையனுக்குச் சொன்னீர், அவ்வாக்கியங்களை கேட்க அவன் தகுந்த வதிகாரியாவனோ? செய்யத்தகாத காரியத்தைச் செய்தபடியால் பாபம் நேர்ந்தது. இதனால் நீர் தோஷமுடையவரானீ ரென்றார்கள். ஏகநாத ரவர்களுக்கு நமஸ்கரித்து விநயத்துடன் சொல்லுவார், பெருமாளுக்கு பக்தனானவன் பறையனெப்படியாவான்? அல்பஜாதியான பறையனானு மவனுக்குச் சமானரிவ்விட மொருவருமில்லை. ஞானோபதேசத்திற்கவன் அதிகாரியாவான். பரிசுத்தமான மனதையுடையவனாகி பக்தியை யவலம்பித்துப் பெருமாளை தன் சுவாதீனஞ்செய்துக்கொண்டவனாதலால் அவனுடைய ஆர்த்தியைக் கண்டு சுலோகார்த்தத்தைச் சொன்னேன். இதினாற் கெடுதலை யொன்றுமில்லை, நீங்கள் செய்யவேண்டிய வேலையை செய்பலா மென்றார். அப்பொழுதந்த பிராம்மணரக ளனைவரு மேகநாதர் கையைப் பிடித்துக்கொண்டு கங்கைக்குச் சென்று பிராயச்சித்தங்களை செய்வித்தார்கள். இதைக் கண்ட வனுமிக னதிக வியாகூலத்தை யுடையவனாய் வீட்டிற்குச் சென்று மனைவியைப் பார்த்து என்னுடன் ஏகநாதர் வார்த்தையாடினா ரென்று விசேஷ பிராம்மணர்கள் கூடிவந்து அவருக்குப் பிராயச்சித்த விதிகளை முடித்தார்களென்றான். அவள் இதைக்கேட்டு மகாதுக்கத்தையுடையவளாய் கீழேவிழுந்து அழத்தொடங்கினாள். புருஷனவளைக் கண்டு ஏகநாதர் தீனஜனங்கள் மீது பரம கிருபையுடையவர். சொன்னபடி செய்தே முடிப்பர். நானே அவ்விடஞ் சென்று அவர் நிலைமையைக் கண்டறிகிறேன் நமக்காக அவரதிக கஷ்டங்களை அனுபவிப்பாராயின் நாமிவ்வுலகிலிருக்க முடியாது பிராணனை விடுவோமென்று சொல்லி கங்கைக்கரையிற் சென்று அவ்விடம் ஏகநாதரிருக்கக் கண்டு தெண்டனிட்டு போஜனத்திற்கு வரவேண்டுமென்று வேண்டினான். அவனுடைய சுத்த நிலைமையைக் கண்டு, விதிப்படி நித்திய பூஜையைச் செய்து வருவேனென்று ஏகநாதர் சொல்ல, அனுமிகன் சந்தோஷித்து வீட்டிற்குச் சென்று அளவற்ற ஆனந்தத்துடன் சதியுந் தானுங் கூடிச் சமையலைச் செய்தார்கள்.

ஏகநாத ரவ்வநுமிகனுக்குச் சொன்ன வசனங்களை அங்குள்ள பிராம்மணர்கள் கேட்டு ஏகநாதர் பறையனுடன் பேசினதற்குப் பிராயச்சித்த மிப்போதடைந்தாரன்றோ? எல்லோர்முன்பு பறையன் போஜனத்திற் கழைக்க வதற்கும் சம்மதிவசனங் கொடுத்தனரே! ஜாதிப்பிரஷ்டராம்போ லிருக்கிறதே? என்ன செய்வோமென் றெல்லோருங் கூடி ஏகாந்தத்தி லொவ்வொருவ ரவ்வவ்விடங்களிலிருந்து கண்ணுற்று நோக்கிக்கொண்டு அநுமிக னன்னத்தை அவரருந்தும் சமயத்திற் பிடித்துக் கொள்வோமென்று சொல்லி ஜாக்கிரதையாக யிருந்தார்கள். ஏகநாதர் தன் வீட்டிற்குச் சென்று பெருமாள் திருவாராதனை செய்து இரண்டாம் ஜாமத்தில் பாகவதத்தைச் சொல்லி போஜன வேளையில் பிராம்மணர்களை புசிப்பிட வழைக்க, அவ்வேளையில் அநுமிகன் வந்து பாகம் பூர்த்தியாயிற்று, கூப்பிட வந்தேனென்ன, ஏகநாதரிப்போதே வருகிறேன் நீ வீட்டிற்குப் போகலா மென்று சொல்லி பிராம்மணர்களுடன் தன் வீட்டி லனைவருங் காண, சாப்பிட உட்கார்ந்தார். பெருமாள் ஏகநாதர் வடிவங் கொண்டு பறையன் வீட்டில் பிரகடமானார். உடனே சதிபுருஷர்களிருவருமவர் திருவடிகளைக்கழுவி பாதஜலத்தைப் பானஞ் செய்து தெண்டன் சமர்ப்பித்து அபாரமாக சன்மானங்களைச் செய்து இலையைப் போட்டு சமையற் செய்த சகல பதார்த்தங்களையும் வட்டித்து வைக்க அவரும் கிருபாதிருஷ்டியுடனவர்களைப் பார்த்துக் கொண்டு பக்ஷணை செய்துக் கொண்டிருந்தார். அவ்வேளையி லொரு பிராம்மண னவ்விடம் வந்து ஏகநாதர் பக்ஷித்துக்கொண்டிருப்பதைக் கண்டு விசேஷ குரோதத்துடன் அனேகப் பிராம்மணர்களைச் சேர்த்துக்கொண்டு ஏகநாதர் வீட்டிற்குப் போகுமளவி லவ்விடத்தில் அவர் ஆர்த்தியுடன் பக்ஷித்துக்கொண்டிருக்கக் கண்டார்கள். இன்னும் சிலரநுமிகன் வீட்டிற்குச்சென்று பார்க்குமளவி லங்குமவர் பக்ஷித்துக்கொண்டிருந்தார். இங்குமேகநாதர், அங்குமேகநாத ரெப்படி இரண்டிடத்தி லிருப்பாரென்று மகத்தான வாச்சரியத்தையடைந்து ஒன்றும் தோன்றாமல் இங்குமங்குந் திரிந்துக் கொண்டு இரண்டு ஜாமமிருந்தார்கள். பெருமா ளவ்வநுமிகன் வீட்டில் வடைபணியாரங்களுடன் பக்ஷித்து கையலம்பித் தாம்பூலங் கொண்டு நிற்க, மகாபிரீதியுடன் புருஷனும் மனைவியு மவர் திருவடிகளைப் பிடித்து ஸ்வாமி! நாங்கள்

விசுவாசஹீனர்கள், பக்திஹீனர்கள், மகாபாபிகள், சேவாஹீனர்கள், ஜாதிஹீனர்கள், ஒருநேமமுமில்லாதவர்கள், எங்களுடைய வார்த்தியை நீர் பூர்த்திசெய் தீரன்றோ? நீர் தன்னியராவீர். தேவரீர் பாததூளியா லெம்முடைய வீடு இன்று பவித்திரமாயிற்று. என்றிவ்வாறு சொல்ல பகவான் பலமுறை ஆசீர்வதித்து அவ்விடமே அந்தர்த்தானமானார். அனுமிகர் அவ்வுச்சிஷ்டத்தை (எச்சிலை) பின்பு பக்ஷித்து அபாரமான வானந்தத்தை யடைந்திருந்தனர். பிராம்மணர்க ளனைவரு மேகநாதர் மாந்திரீக ராவாரென்றும், பிரஷ்டனுடைய முடிவு அறியக்கூடவில்லை யென்றும் துர்ஜனராகிச் சொல்லிக்கொண்டு அவ்வவர் வீடுகளில் விந்தையுற்றிருந்தனர்.

பிரதிஷ்டானி பிராம்மணன்.

பைடன்புரத்திலோர் பிராம்மணன் தாரா புத்திரர்களுடன் பிரபல கீர்த்தியும் மேன்மையு முடையவனாய் வாசஞ்செய்து வந்தான். ஏதோ ஒரு புண்ணிய விசேஷத்தால் பரிஸ வேதியை அவ னடைந்திருந்து அதனால் மிகுதியான சம்பத்தும் சௌபாக்கியத்தையு முடையவனாக விருந்தான். சிலகால மப்படியே நடந்தேறிவர மனையாளும் மக்களும் மரண மடைந்தார்கள். அதனாலவ னுதாசீனனாகி கங்கா ஸ்நானத்திற்குச்செல்ல விரும்பி பரிஸ வேதியை எங்கு பத்திரப் படுத்துவதென்று பரியாலோசனை செய்து ஏகநாத ராசையற்றவராதலா லவரிடம் வந்து தனித்திருப்பதைக்கண்டு நமஸ்கரித்து ஸ்வாமி! அருமையான வஸ்து வென்னிட மிருக்கிறது அதனை நீர் பத்திரப்படுத்தக் கடவீர், நான் யாத்திரைக்குப் போகிறேனென்ன, ஏகநாதர் சம்மதித்திருக்க, அந்த பிராம்மண னந்த வஸ்துவை அவர் கையிலிட, ஏகநாதர் பாஷாணம்போலிருக்கிறது இதென்னவென்று கேட்க, பிராம்மணனதுதான் இரும்பைப் பொன்னாக்கும் பரிசவேதியாகும், யாத்திரை செய்துவந்தபின் எனக்குக் கொடுக்கக் கடவீரென்றான். ஏகநாத ரதைப்பார்த்து மனையின்கீழ் வைத்தனர். அந்தப்பிராம்மணனேகநாதரிடம் விடைபெற்றுக்கொண்டு வூரைவிட்டு யாத்திரைக்குச் சென்றான். ஏகநாத ரந்தவஸ்து அருமையானதென்று பாராமல் மனைக்கீழ் வைத்ததை மறந்து விட்டார். பிராப்பிய பூமியை யடைந்தவர்களுக்குப் பொன்னும் மண்ணும் சமமாகும்.



பஞ்சகண்டியா கிருஷ்ணன். శ్రీ ఖుజూవక్రీష్ణుడు.



சிறைச்சாலை பறையன்.
చెరసాల అంత్యజుడు.



காசிமஹராஜு. కాశీమహారాజు.

ஒருவருஷம் கழிந்தபிறகு அந்த பிராம்மணன் திரும்பிவந்து ஏகநாதருக்கு பக்தியுடன் நமஸ்கரித்து தான் யாத்திரை செய்த சங்கதி யனைத்தையும் பைடன் க்ஷேத்திரத்தில் வந்து சேர்ந்ததை யும் தெரியப்படுத்தி, நாலுநாழி யுட்கார்ந்திருந்தான். ஏகநாதர் பரிசவேதி சங்கதி மறந்து அவனுக்கு ஒன்றும் சொல்லாம லிருந் தார். அது, முதல்நாளென்று அந்தப் பிராம்மணன் தன் வீடு சென்று மறுநாள் வந்து ஏகநாதரை நோக்கி பரிஸவேதியைக் கொ டுமென்று கேட்டான். சற்றுநேர மாலோசித்து ஏகநாத ரதை யெவ்விடம் வைத்தே னென்றார்? அப்போ தந்த பிராம்மணன் ஐயா! நீர் மணையின்கீழ் வைத்தீரென்ன, ஏகநாதர் மணையை யெடுத்துப் பார்க்கும் பொழுது அவ்விட மொன்று மில்லா திருந் தது. அதைக்கண்டு நிருமால்லியத்துடன் கங்கையி லெறிந்திருப் பார்களென்றார். இதைக்கேட்டு அந்த பிராம்மண னத்தியந்த வியாகுலனாகி அந்த பரிசவேதிக்காக இவ்விடம் திரும்பிவந்தேன். மனைவியு மக்களும் மாண்டுபோனபின் பந்தங்கள் விட்டுப்போயின வென்று பரிதபித்துச் சொல்ல, ஏகநாத ரந்த பிராம்மணனை யிட் டுக்கொண்டு ஆற்றினருகே சென்று அந்த பரிசவேதி நிர்மால்லி யத்துடன் கங்கையிலிருக்குமென்று அவ்வாற்றிலுள்ள மணற் கற் களை யோர் பிடி கையிலெடுத்துவந்து உம்முடைய பரிஸவேதியை நீர் கைக்கொண்டபின் மற்றவைகளை கங்கையில் பத்திரப்படுத்தி வைக்கிறேனென்று சொல்ல, அந்த பிராம்மணன் ஒருகல்லை கைக் கொண்டான். மற்றவையை ஏகநாதர் கங்கையி லெறிந்துவிட்டு ஸ்நானம் செய்து வீட்டிற்குச் சென்றார். ஏகநாதருடைய மகத் தான ஐஸ்வரியததை யாவரால் கொண்டாடப்படும்? உலகத்தை யே உத்தரிக்கவந்தவ ராவார்.

### துவாரகை பிராம்மணன்.

அருணோதயத்தில் ஏகநாத ரெழுந்திருந்து ஹரிநாம ஸ்மரணை செய்து சௌசத்திற்குச் சென்று கைகால் முகங்களைக் கழுவி ஆற் றிற்குச் சென்று நீராடி அர்க்கியமிட்டு வீட்டிற்கு வந்து பாண் டுரங்கரைப் பூஜித்து புராணத்தைச் சொல்லி சாதுஜனங்கள் வந் தால் சதாவர்த்தியைக் கொடுத்து பிதுரு தர்ப்பணஞ்செய்து பிரா ம்மணர்களுக்குப் பூஜை செய்து அவர்களுடைய பாததீர்த்தத் தைத் தானருந்தி அவர்களுக்கு அன்னமிட்டு பின்பு தான் பக்ஷி

ப்பார். நான்காம் ஜாமத்தில் பாகவதத்தைச் சொல்லி சாயங்கா லத்திற் கங்கைக்குச் சென்று சந்தியாவந்தனத்தை முடித்து வீட்டி ற்குவந்து ஹரிகதா காலக்ஷேபத்திலிருந்து இப்படி காலயாபனம் பண்ணிவருவர். பகவத்கதைகளை கேட்கும்பொருட்டு பக்தஜனங் கள் வெகுவாக வருவார்கள். அர்ச்சனை பூஜை முதலானதுகளை யுஞ் செய்து ஆர்த்தியுடன் ஹரிநாமத்தையுஞ் சொல்லிக்கொண்டு வருவார். இதுகளுக்காகச் செலவு விஷயங்களுக்கு ஈஸ்வர னனுக் கிரகித்துவருவார். இப்படி பரம திருப்தியுடன் ஏகநாத ரிருக்கும் பொழுது பெருமாள் சாதாரணமான ஓர் பிராம்மண வேஷத்தைப் பூண்டு அவரிடம் வந்து நமஸ்கரித்து ஐயா! உம்மிடத்தி லெனக்கு சாது சங்கமும் ஈஸ்வர பக்தியு முண்டாமென்றெண்ணி சேவை செய்ய வந்தேன். சம்பளம் கேட்க மாட்டேன். அன்னமிட்டால் போரும் என்றார். ஏகநாதர், பெயரென்ன ஊரென்ன? வென்று கேட்க பெருமாள் சொல்லுவார், நானொருவனாகவே எங்கு மிருப் பேன். ஸ்ரீகண்டியா வென்றென்னை அழைப்பார்கள். மனைவி மக்களிடத்தி லாசை யெதுவு மெனக்கில்லை. நான் ருக்வேதி பிரா ம்மணனென் றுரைத்தார். ஏகநாதர் கேட்டு அன்ன வஸ்திரங் களைக் கைக்கொண்டு சும்மாயிரும், சேவைகளைச் செய்யவேண்டா மென்ன, பிராம்மணர் சொல்லுவார், சரீரத்திற் சக்தியிருக்கிறது, இவ்விடத்திற் சும்மா யிருப்பது உசிதமல்ல, மனித தேகம் நிலை யற்றதாம், ஹரிபக்தருடைய சேவைகளால் பரமசுகத்தை யடை யலா மென்றார்.

பிரதி தினமும் உதயமானவுடன் ஸ்ரீகண்டியா பாத்திர பரிக ரங்களனைத்தையுந் துலக்கி, ஏகநாதர் பூஜை செய்ய புஷ்பமும் ஜல முஞ்வைத்து, சந்தனமரைத்து, தீபத்தை யேற்றிவைப்பார். சமை யல் வீட்டிலுள்ள வேலைகளெல்லாம் சலிப்பின்றி செய்துவருவர். கிராமவாஸிக ளனைவருங் கொண்டாடும்படி நடந்துக் கொள்வார். இப்படி பன்னிரண்டு வருஷம் நடந்தேறிவர துவாரகாபுரியில் ஒரு பிராம்மணன் பெருமாள் பிரஸன்ன ராகும்பொருட்டு தவத்தைச் செய்தான். பகவான் பிரஸன்னராகா திருந்தபடியால் அவ னன் னாஹாரமின்றி யுபவாசமிருக்க, ருக்மணி பிராட்டி சொப்பனத்தில் வந்து நீ உபவாசத்தால் தேகத்தை விடவேண்டாம். பைடன் புரத்தில் ஏகநாதர் வீட்டில் ஸ்ரீகண்டியா எனும்பெயரால் ஸ்ரீகிருஷ்

ண்ர் சேவைச் செய்துக்கொண்டு சுகமே விருக்கிருரென்று சொன்ளுள். இதைக்கேட்டு அந்தப் பிராம்மணன் பிரயாணமாகி பைடன்புரத்திற்குச் சென்று நதியில் ஸ்நானம் செய்யும் சமயத்தில் பெருமாள் அங்கு ஜலந்திரட்டிக்கொண்டே அவனைக்கண்டு இங்கு வெரண்டியாகச் சுகமே யிருந்தேனே! ருக்மணி பிராட்டி என்னை இருக்கவிடாமல் செய்தாளல்லவா! நான் போகும்படி நேர்ந்ததே! என்று சொல்லிக்கொண்டு காவடி ஜலத்தை வீட்டில் கொண்டு வந்து வைத்து சந்தன மரைக்க லுற்ருர். இதற்குள் துவாரகை பிராம்மணன் ஏகநாதர் வீட்டிற்கு வரவே ஏகநாதர் உகப்புடன் நமஸ்கரித்து ஆஸனத்தி லுட்காரச்செய்ய, அவன் விநயத்துடன் நமஸ்கரித்து ஐயா! ஸ்ரீகண்டியா எனும் பிராம்மண ரூபத்துடன் உமது வீட்டில் ஸ்ரீஹரி சேவைகளைச் செய்கிருராம். அவரைக் காண வந்தே னென்ன, ஏகநாதர் ஸ்ரீஹரி எவ்விடமும் வியாபித்திருப்பவ ரென்ன, பிராம்மணன், பெருமாள் சகுணரூபமே தனக்கு சுகமாகு மென்ருன். அப்பொழுது ஏகநாதர் உத்தவனைக் கண்டு ஸ்ரீகண்டியா எங்கே வென்ன, சந்தன மரைக்கிருரென்று உத்தரம் சொல்ல, ஏகநாத ரதைக்கேட்டு அந்தப் பிராம்மணனுடன் பூஜை வீட்டிற்கேக, அவ்விடம் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தி கிரீடகுண்டல கௌஸ்துப மாலைகளுடனும், கரசரணங்களிற் கங்கணமுஞ் சிலங்கைகளும் இடுப்பில் பீதாம்பரமும் சோபையுடன் கூடின சுந்தர திருமேனியுடன் பிரகடிக்க ஏகனுதர் தனது பார்வையை யவர்மேற் செலுத்தி அனுதாபத்துடன் ஹரி! கிருஷ்ணு! வென்று அஞ்சலியஸ்தராகி அடியேனுக்காக அளவிறந்த வேலைகளைச் செய்தீர், தேவரீர் மகிமை அபாரமாயிற்றே! சதுர்முகரும் சேஷமூர்த்தியும், வர்ணிக்க வல்லவரல்ல வென்ருல் அடியே னெம்மாத்திரம்! ஈசனே! தயாமூர்த்தி! தாமோதரா! பதிதபாவன ரென்னும் விருதை அடியேன் விஷயத்தில் வெளிப்படுத்தினீ ரென்று சொல்லி பிரியத்துட னனேக நமஸ்காரங்களைச் செய்யப் பெருமாள் ஏகநாதரை நோக்கி, சென்ற காலத்தில் விட்டல னெனும் பெயரை வகித்து கீர்த்தனையில் தாளம் பிடித்துப் பன்னிரண்டுவருஷ மிருந்தேன், கேசவ னெனும் பெயரால் பன்னிரண்டுவருஷம் பாகவதங் கேட்டேன், இப்பொழுது ஸ்ரீகண்டியா யெனும் நாமத்தால் பன்னிரண்டப்தங்க ளிருந்தேனென்று சொல்லி அந்தர்த்தானமானுர். துவா

ரகை பிராம்மண னிந்த விந்தையைக் கண்டு ஆச்சரியப்பட்டு ஏக நாதருக்குத் தெண்டன் சமர்ப்பித்து நிற்க, அநுதாபத்துடன் ஏக நாதர் சொல்லுவார், ஸ்ரீஹரி சமீபத்தி லிருக்க சத்கரிக்காம லிருந் தேனே! என்று பெருமாள் லீலைகளை யெண்ணி யெண்ணி பிரே மை மிகுதியால் சற்றுநேரம் தன்னை மறந்து பின்பு அந்த பிராம்ம ணரை போஜனத்திற் கழைத்து ஒருவரை யொருவர் புகழ்ந்து உசிதாஹாரத்தைக் கொண்டெழுந்தார்கள். அவ்விடத்திய சகல ஜனங்களும் ஸ்ரீஹரி கிருபையென்று சந்தோஷ மடைந்திருந்தனர்.

ஒருநாளிரவி லேகனாதர் கீர்த்தனை செய்யுமளவில் சகல ஜாதி யரு மவ்விடம் வந்து சத்கதைகளைக் கேட்கலுற்றார்கள். ஏகனாதர் ஆனந்தத்துடன் அச்சுதா! ரங்கா! ஹரி! அனந்தா! கேசவா! கோவிந்தா! முராரி! முகுந்தா! வென்று மெய்ம்மறந்து சொல் லிக்கொண்டிருந்தார். கேட்போரு மவ்வண்ணமே ஆனந்த பரவச ராயிருந்தனர். அவ்வேளையில் நான்கு திருடர்கள் வந்து பிறருக்குத் தோன்றாம லிருந்தார்கள். கதை கேட்கவந்தவர்க ளவ்வவர் வீட்டு களுக்குச் சென்றபின்பு உத்தவன் தெருக்கதவை சாற்றி நித்திரை செய்யச் சென்றான். கிரிஜாபாயி தன்னறையில் நித்திரை செய்யச் சென்றனள். ஏகநாத ராயாசமின்றி அவ்விடம் உட்கார்ந்து நாமஸ் மரணையி லிருந்தார். அவ்வேளையில் அத்திருடர்களவ்வீட்டுக்குள் நுழையவே கண்கள் காணாமல் வாசற்படிக ளிருப்பிடம் தெரியாமல் தடுமாறித் தலைகளை முட்டிக் கொள்வதும் தீபமிருப்பது தெரியாம லும் அவ்வீடெல்லாம் சுற்றி ஏகனாத ரிருப்பிடம்வர அவர்களுக்கு கண்கள் காணவந்ததனால் கபடத்தைவிட்டு அவருக்கு நமஸ்கரித்து அநுதாபத்துட னவரைத் தோத்திரஞ் செய்தார்கள். ஏகனாத ரவ ர்களைக்கண்டு நீங்கள் யாரென்று வினவ, அவர்கள், நாங்கள் திருட ர்களாவோம், விசாரணையின்றி இவ்விடம் வரவே கண்கள் தெரியா மற்போயின. தேவரீரைக் கண்டபோது கண்கள் வந்தன, துஷ்ட புத்திகளும் போயின, மனோசுத்தியை யடைந்தோ மென்ன, ஏக நாத ரவர்களைப் பார்த்து வெகு பிரயாசை யடைந்தீர்களே! என்று அவர்களை யழைத்துக்கொண்டு தானிய சால்கள் திரவியம் முதலானவைகளைக் காண்பித்து எவை வேண்டுமோ அவைகளைக் குறைவின்றி கொண்டுபோகலா மென்றார். அவர்க ளெண்ணங் கள் வேறாகி அன்னத்தைக் வேண்டினார்கள். இதைக் கேட்டு ஏக

நாதர் தன் மனையாளை யெழுப்பி சமையற் செய்யச் சொல்ல, அவள் புருஷனுக்கு நமஸ்கரித்து சீக்கிரத்தில் சாதமும் இரண்டு வித பதார்த்தங்களும் சமையல் செய்து இலைகளில் வட்டித்தாள். ஏகநாதர் வினயத்துடனவர்களை யழைத்து, சமுசாரிகள் தமது பந்துக்களை சன்மானிப்பதுபோல, நல்ல வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு அவர்களுக்கு பிரசாதமும் தீர்த்தமு மளித்து பக்ஷிக்கும்படி செய்ய, அவர்கள் திருப்தியுடன் புசித்து பகவத் பக்தியை அவலம்பித்து நன்னெறிகளை யுடையராய் பேர் பெற்றனர்.

சிறைச்சாலை பறையன்.

அவ்வூரிலோ ரனுமீகன் தரித்திரத்தின் கொடுமையால் அன்னியர் வீடுகளிற் சென்று தானியத்தைத் திருடிக்கொண்டிருப்பன். இப்படி செய்ய ஒருநா ளதிகாரிக ளவனைப் பிடித்து அடித்து கால் விலங்கு போட்டுக் காவலில் வைத்தார்கள். அவ்விடத்தி லவனுக் கன்னமிடாம லிருந்ததால் காயசோஷண முண்டாயிற்று. இதைக் கண்டு அவன் ஓடிப்போகானென்று அதிகாரிகள் விலங்கை நீக்கிவிட்டார்கள். இரவுகாலம் வந்தவுடன் அத்திருடன் தனக்கு விலங்கு நீங்கியதா லோடிப்போவது நன்மை யென்றும் அப்படி போவதற்குச் சக்தி யில்லையே என்றும் விசனத்துடன் எண்ணமிட்டுக்கொண் டிருந்தான். அவ்வேளையில் சிறைச்சாலை சமீபத்தில் ஹரிகுணனுபவம் நடந்துவருவதைக் கேட்டு மெதுவாக நகர்ந்துக்கொண்டு ஹரிகதை நடக்குமிடஞ் சென்று ஏகநாதரைக் கண்டு அங்கணத்தி லோர் பக்கத்தி லிருந்தான். கதை முடிந்த பின் ஏகநாதரைப் புகழ்ந்துக்கொண்டு கேட்கவந்தவர்க ளிருப்பிடங்களிற் சென்றார்கள். உத்தவன் கதவை மூடி படுக்கையிற் சேர்ந்தான். ஏகநாதர் ஹரிஸ்மரணை செய்துக்கொண்டு அங்கணத்தில் திருஷ்டியைச் செலுத்த, அவ்விட மோர் மனிதனைக் கண்டு பைத்தியக்காரனோவென்று சமீபத்திற் சென்று யாரென்று கேட்டார். அவன் மறுமாற்றஞ் சொல்ல சக்தியற்றவனாய் கைகளால் சைகைக் காட்டினன். ஏகநாத ருடனே வீட்டில் தனது மனையாளை எழுப்பி பசிநோயா லொரு மனிதன் நமதங்கணத்தில் வந்திருக்கிறான், நீ அவனுக் கன்னமிட வேண்டுமென்ன, அவள் தெண்டனிட்டுச் சமையல் அறைக்குச் சென்று அவனுக்காகச் சோற்றை வடித்து பாலும் சர்க்கரையு மன்னமும் பிசைந்து புருஷன் முன்னிட,

அதைத் தான் கைக்கொண்டு அன்னசோஷையென் றறிந்துக்கொண்டு அற்பாகாரமாக அத்திருடன் வாயில் விட்டனர். அவன் கொஞ்ச மருந்தியபின் ஜலத்தை சாப்பிடும்படி செய்தார். அவன் நிதானித்து தன் சங்கதியைச் சொன்னான். ஏகநாத ரதைக் கேட்டு அவனுக்கு தைரியஞ் சொல்லி தேகத்திற் சக்தி வரும் பரியந்தம் சௌக்கியமாக இவ்விட மிரவும் பகலும் அன்னத்தைச் சாப்பிட்டுக்கொண் டிருக்கலாமென்று வஸ்திரத்தைக் கொடுத்து படுக்கச் செய்தார். ஏகநாதர் பொழுது விடிந்தவுடன் தனது நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு ஓர் மனிதனிடம் சொல்லி சிறையிருந்தவ னொருவன் தன்னிடம் வந்தானென்று அதிகாரிக்குத் தெரிவிக்க அவ்வதிகாரியு மத்திருடனை ஏகநாத ரிஷ்டப்படி செய்யலா மென்றான். இதைக்கேட்டு ஏகநாத ரவனுக் கன்ன பானங்களை நடத்தினார். அவனுக்கும் தேகத்தில் வலிவு வுண்டாயிற்று. ஹரி கதையை கேட்டுக்கொண்டு வந்தபடியால் அவகுணங்க ளனைத்தும் போயின.

பறையனை வீட்டில் வைத்துக்கொண் டிருக்கிறாரென்று புரத்திலிருக்கும் பிராம்மண ஜனங்கள் ஏகநாதரை நிந்தித்துக்கொண்டிருந்தார்கள். ஒருநா ளேகநாதர் கங்கைக்குப் போகும் சமயத்தில் ஒரு பிரமராக்ஷசன் அரசு செடிமேலிருந்து கீழ் இறங்கி கைகளைக் கூப்பிக்கொண்டு சொல்லுவான், "ஸம்சாரபந்தத்திலிருந்து பிராம்மணத் துவேஷம் செய்தபடியா லிப்பிறப் பெனக்கு வந்தது. நீர் பிராம்மண ஜனங்களுக்கு வெகுவாக போஜன மளித்தீர், இதுவுமன்றி ஓரிரவில் அனாமிகனுக் கன்ன மிட்டீர், உம்மிடமிந்த விரண்டு சுகிருதங்க ளுண்டாயிருக்கின்றன, இவைகளில் நீரொன்றைக் கொடுப்பீரே லெனது ஜன்ம முத்தரிக்கப்படும், உமக்கும் கீர்த்தியுண்டா மென்றான்." இதைக்கேட்டு ஏகநாதர் நான் இஷ்டானிஷ்டங்களை யறியேன், உன்னிஷ்டப்படி நீயே கோரிக்கொள், நான் கொடுப்பேன், இது சத்தியமென்று சொன்னார். இதைக் கேட்டு பிரமராக்ஷசன் நீர் பறையனை இரக்ஷித்த ஓர் புண்ணியத்தைக் கொடுத்தருளுமென்று கேட்க, ஏகநாதர் தன் கைகளில் ஜலத்தை ஏந்தி அந்தப் புண்ணியத்தை அவ்னுக்குத் தாரை வார்த்தனர். அந்த ஜல மிராக்ஷசன் கரத்தில் விழவே அவன் மேலுக் கெழும்பி உமது தரிசனத்தாலும் அனுக்கிரகத்

தாலும் நான் நற்கதி யடைகிறேனென்று சொல்லி போய்விட்டான், ஏகநாதரை நிந்தித்த ஜனங்க ளனைவரும் தலைகளைச் சாய்த்துக்கொண்டார்கள். சிலபக்தர்க ளவருடைய சரிதைகளைக் கண்டு கொண்டாடினார்கள்.

காசீ மஹந்து.

சிலபக்தர்கள் பாகவ தார்த்தங்களை வெளியிடு மோர் கிரந்தத்தைச் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, ஏகநாதர் பாகவதத்தில் ஏகாதச ஸ்கந்தத்திற்கு, மராட்டி பாஷையில் வியாக்கியானம் செய்ய வாரம் பித்தார். அதிலிரண் டத்தியாயங்களை ஓர் பிராம்மண னெழுதிக்கொண்டு அவைகளை நித்தியம் பாராயணஞ் செய்பவனாய் யாத்திரா பரனாகி காசிக்ஷேத்திரத்திற்குச் சென்றான். அவ்விடம் கங்கையில் ஸ்நானம் பண்ணி மணிகர்ணிகை சமீபத்திலுட்கார்ந்து நாராயணனுடைய துவாதச நாமங்களைச் சொல்லி துவாதச புண்டரங்களைத் தரித்து பாகவத கிரந்தத்தி னவ்விரண் டத்தியாயங்களை படிக்க வாரம்பித்தான். அவ்விடத்திற்கு காசிமஹந்து சிஷ்யர்க ளிரண்டுபேர் வந்து வாசிப்பது என்ன கிரந்தமென்றவனைக் கேட்க அந்தப் பிராம்மணன் இது பாகவத மென்னும் மகா புராண மென்று சொல்ல, இதைக் கேட்டு வெறுப்புட னவ்விருவரும் தம தாசாரியரிடஞ் சென்று ஒரு பிராம்மணன் மராட்டிபாஷையில் பாகவதம் வாசிக்கிறானென்றும், பிராக்ருத பாஷைகளில் பதடீகா செய்து வாசித்தால், சம்ஸ்கிருத கிரந்தத்தை யாரும் படிக்க மாட்டாரென்றும் சொல்ல, ஆசாரிய ரதைக் கேட்டு படிப்பேரன் சிக்ஷைக் குட்பட்டவ னவானதலால் அவனை யழைத்து வாருங்களென்று சொல்ல அவர்க ளந்த பிராம்மணனை யழைத்துவந்து ஆசாரியர் முன்னிட்டார்கள். அந்தப் பிராம்மண னவருக்கு தீர்க்கதெண்டன் ஸமர்ப்பித்து நிற்க, மஹந்து அவனை நோக்கி இந்த கிரந்தத்தை யார் செய்தாரென்ன பிராம்மணன் ஸ்வாமீ! பைடனில் ஏகநாத ரென்பவ ரொருவருண்டு, அவருக்கு பகவானுடைய கிருபையால் கவித்வ தோரணை யுண்டாயிற்று. லோக ஹிதத்திற்கு பாகவதார்த்தத்தை தபிராகிருதபாஷையில் வெளியிட்டார், அதிலிரண் டத்தியாயங்களை அறிவீனனான நானெழுதிக்கொண்டு படிக்கத் தொடங்கினே னென்றான். மஹந்து இதைக்கேட்டு இவன்மேற் பிழையொன்றில்லை யென்றும் அவ்

ஓர் தர்மாதிகாரிக் கறிவித்துத் தகுந்த சிக்ஷை ஏகநாதருக்குச் செய்யவேண்டுமென்றும் சொல்லிக் கடிதங்களெழுதி சிஷ்யர்களிடங் கொடுத்துப் பைடன்புரத்திற்குப் போகும்படி கட்டளையிட்டார். அவ்விரண்டு சிஷர்களும் கூடிய சீக்கிரத்தில் வழிநடந்து பைடன் புரத்தைச் சேர்ந்து தர்மாதிகாரிக் கோர் பத்திரங் கொடுத்தனர். அனேக பிராம்மணர்களவ்விடம் கூடி யக்கடிதத்தைப் பார்த்து, செய்யத்தகாத காரியங்களை ஏகநாதர் செய்கிறாராதலால் தர்மாதிகாரிக் கிது வந்ததென்றார்கள். தர்மாதிகாரியும் வேதாந்தார்த் தங்களைச் சகல ஜனங்களுக்கும் விள்ளும்படி ஏகநாதர் செய்தது அகிருத்தியமாக தோணப்படுகிறதென்று அந்த சிஷ்யர்களைப் பார்த்து நீங்களே போய் ஏகனாதரிட மிதைக் குறித்துப் பேசலாமென்ன, அவ்விரண்டு சிஷ்யர்களு மனேக பிராம்மணர்களுடன் ஏகனாதர் வீட்டிற்கு வந்தார்கள். ஏகனாத ரவர்களுக்கு வந்தன வழிபாடுகள் வெகுவாகச் செய்து உட்காரவைக்க, மஹந்து எழுதிய பத்திரத்தை அவர்கள் ஏகனாதருக்குக் கொடுத்தார்கள். ஏகனாத ரதைப் படித்து சதாசிவ மூர்த்தி யென்னை வரச்சொல்லி எழுதினாரென்று, உத்தவனை அழைத்து சகல காரியங்களும் நித்தியப் படி நீ நடத்திவருவாய், நான் பெரியோரைச் சேவித்து வருவேனென்று சொல்லி அப்போதே பிரயாணமாய்விட்டார். கோபத்துடன் வந்த வச்சிஷர்களும் ஏகநாதர் திருஷ்டிபட்ட மாத்திரத்தில் பரமசாந்தி யுடையவர்களாயினார்கள். தனியாகவே ஏகநாதர் அவ்வித்தியார்த்திகளுடன் விஸ்வனாதரைச் சேவிக்கவேண்டுமென்று மாவலால் காசிபுரிக்கு வந்து சேர்ந்தார். வித்யார்த்திகள் தங்களாசாரியரிடம் சென்று விதிப்படி வந்தனாதிகளைச் செய்து ஸ்வாமி! ஏகநாதபண்டிதரை அழைத்து வந்தோம், என்ன வாக்கினையென்று கேட்க, மஹந்து அவர்களை நோக்கி அவனை வெளியிலிருக்கச் செய்யவும், நாம் பிக்ஷை (போசிப்பு) எடுத்துக் கொண்ட பிறகு விசாரிப்போமென்று கட்டளையிட, அவர்களப்படியே ஏகனாதரை மடத்திற்கு வெளியே நிறுத்தினார்கள். ஸ்ரீபாததீர்த்தரான வம்மஹந்து பிக்ஷைசெய்துவந்து மூன்னூறு பேரான தன் சிஷ்யர்களையழைத்து ஒவ்வொருவரும் அவ்வைந்தடி ஏகநாதரை தடியாலடிக்கவேண்டும். இதுதா னவனுக்கு சிக்ஷையாமென்றார். யதீஸ்வரரிட்ட உத்திரவின்படி சிஷர்களனைவரும் அவரை அடித்தால் பிரம

ஹத்தி சம்பவிக்குமென்றெண்ணி கலக்கமுடையவர்களாய் ஏகநா தரிருக்குமிடம் வர அவரந்த வித்தியார்த்திகளுடைய கண்களுக்கு கிருஷ்ண மூர்த்தியைப்போல் காணப்பட்டார். அப்பொழு தவர்க ளனைவரும் நமஸ்கரித்து எம்மை இரக்ஷிக்க வந்தீரோ! சுந்தரமுக முடைய சுதரிசனக் கையரே! ஸ்ரீசரே! தயாபரரே! சுகசொரூ பரே! என்று தோத்தரித்து யதீஸ்வர ராக்கினைக்கு உட்பட்டிருந் தால் அனர்த்தமா யிருக்கு மல்லவா? வென்றெண்ணி யிருக்கு மளவில் ஒருவன் மஹந்தினிடம் சென்று ஸ்வாமி! தேவரீ ராக் கினையை தப்பி சிஷ ரனைவரும் அனுசிதமாக ஏகனுதருக்குத் தீர்க்க நமஸ்காரம் செய்தார்களென்று சொல்ல மஹந்து குரோ தத்தை யுடையவராகி மந்திர வஸ்யங்களை கற்றுக்கொண்டு மனி தரை மோகிப்பிக்கச் செய்கிருன். இதுவு மொரு தந்திரமாகும். எம்முடைய தரிசனத்திற்கவன் யோக்கியனுகான். பாகவதார்த் தத்தை பிராகிருத பாஷையிற் பிரபலம் செய்தவனுடய முகத் தை நாம் பார்க்கக்கூடாது. 'திரையைப் போடக்கடவீ ரென்ருர். சில சிஷர்கள் ஆசாரியரிடம் வந்து ஏகனுதர் மகிமையை விசேஷ மாகச் சொன்னுர்கள். அதைக்கேட்டு யதீஸ்வரர் சந்தேஹ முற்று அவன் தந்திரவஸ்ய முடையவனென்று திரைக்குள்ளாக வே யிருந்தனர். ஏகனுதர் யதீஸ்வரர் முன்புவந்து உட்கார்ந்திருக்க யதீஸ்வரர் திரைக்குள் ளிருந்து சொல்லுவார், நாம் வாதத்தில் மேன்மை பெற்று இக்காசிபுரியில் வாசஞ் செய்வோம், இவ்விட மிருப்போ ரனைவரும் பார்க்க, உன்னை வாதம் செய்யாமலே சிக்ஷிப் பேனென்று அபிமானத்துடன் சொன்ன வார்த்தைகளை ஏகநாதர் கேட்டு சுத்த மனதுடையவராய் சாந்தியும் தயையும் வகித்து சா ஷ்டாங்கமாக நமஸ்கரித்து சொல்லுவார், ஸ்வாமிகளே! தேவரீர் சர்வ சிரேஷ்டர். அடியேன் ஐம்பது காதவழி அலைச்சலுடன் நடந்துவந்தேன். அடியேன் அனுதன், தீனன், ஞான ஈனன், பக்தி ஈனன், சாஸ்திரங்க ளொன்றும் படிக்கவில்லை. தேவரீர் கட்டளை யிட்டபடி வந்தேன். தேவரீர் ஞானபூர்ணர், திரையை நீக்கி சே வை தந்தருளும். தேவரீருடைய தாஸர்களுக்கு அடியேன் தாஸ னுவேன். அபசாரங்களை க்ஷமிக்கக் கடவீர். பாகவதத்தில் ஏகாத ச ஸ்கந்தத்தினுடைய சில வத்தியாயங்களை மராட்டி பாஷையில் வியாக்கியானஞ் செய்தேன். அது தேவரீர் மனதிற்கு உகப்பா

யிராவிடில் மணிகர்ணிகையி லதனைப் போட்டுவிடலாமென்று சொல்ல மஹந்து குணுங்கிக்கொண்டு மெதுவாகக் கோபத்தை யடக்கி ஏகநாதர் பகவத் கிருபா பாத்திரரென் றெண்ணித் திரையை நீக்கிக் காணுமளவில் பாகவதத்தில் வேதவியாஸர் புகன்றபடி திவ்யமங்கள விக்கிரக ரூபமுடைய ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியைப் போல் விளங்கக் கண்டார். அனுதாபத்துடன் யதீஸ்வர ரெழுந்திருந்து நமஸ்கரித்தார். அத்யந்த வினயத்துடன் ஏகநாதரவரை யெழுப்பினவுடன் ஏகநாதர், பிராம்மண ரூபத்தை யுடையவராகக் காணப்பட்டார். யதீஸ்வரர் ஜய ஜயசப்தங்களை சொல்லிக்கொண்டு திரும்பி நமஸ்கரிக்க ஏகநாதர் அவருக்குத் தெண்டன் சமர்ப்பித்து, ஸ்ரீபாத ஸ்வாமிகளே ! தேவரீருக்கிது உசிதமன்றென்று நைச்சியத்தை யனுசந்திக்க, மஹந்து தன்னிட மிருக்கும் பாகவத கிரந்தத்தை அவருக்குக் கொடுத்து அர்த்த நிருபணஞ் செய்யவேண்டுமென்ன, அப்புத்தகத்தி லொரு சுலோகத்திற்கு ஏகநாத ரர்த்த மருளிச்செய்தார். அது அகளங்கமாகியும் அசிந்தியமாகியு மிருந்தது.

அப்பொழுது மஹந்து ஏகாதச ஸ்கந்தத்தின் வியாக்யானத்தை குறைவின்றி நிறைவேறும்படி செய்யக்கடவீரென்று ஏகநாதரை வேண்ட அவரும் ஆறுமாசங்களவ்விட மிருந்து கிரந்தத்தை முடித்தார். யதீஸ்வரரவருக்கு வேண்டும் சாமக்கிரிகை முதலானவைகளைச் சமர்ப்பித்துக் கொண்டுவந்தார். பக்தஜனங்களுக் கமுதம் போலந்த மஹாராஷ்டிர கிரந்தமிருந்தபடியால் இராம ரசாயனமென்று ரக்தியுடன் வெகுபேர் கேட்டானந்தித்தார்கள். யதீஸ்வரரந்த கிரந்தத்தை மிகுதியாக மேன்மைப் படுத்தி உத்சவஞ் செய்யும் பொருட்டு அவ்விடத்திலுள்ள பிராம்மணர்களை அழைத்து தன் கருத்தை யறிவிக்க பண்டிதர்கள் கோபங்கொண்டு பிராக்ருத பாஷையிற் செய்த பாகவதத்தை மேன்மைப்படுத்துவது தகுதியல்ல, அதனை மணிகர்ணிகையில் எறிவதே எங்களுக்கு மேன்மையாகு மென்றார்கள். அதைக்கேட்டு மஹந்து சொல்லுவார், பகவத் கிருபையோடும் பிறந்தவராகிய ஏகநாதர் கிரந்தத்தைச் செய்தார். அதனை நாம் பூஜிப்போமாகில் நமக்கு பெருமாள் கிருபையுண்டாம். உங்களுக்குச் சுபமுண்டா மென்றார். இதைக்கேட்டு பண்டிதர்க ளனைவரும் வஞ்சனையுடன் பிரபலமான வப்புத்தகத்

தைக் கொண்டுபோய் அணுவளவு தயையின்றி கங்கையில் மூழ்க விட்டனர். அப்பொழுது கங்காபவானி தன்னிருகைகளாலு மதனை ஏந்திக்கொண்டிருந்தாள். இதைக்கண்டு அங்குள்ளோ ரனைவரு மாச்சரிய மடைந்து நிற்க, பக்தர்கள் ஜய ஜய சப்தங்கள் செய்தார்கள், யதீஸ்வரர் உடனே எழுந்திருந்து ஜலத்திற்குதித்து கிரந்தத்தை தன்கையிற் கொண்டுவந்து பண்டிதரிடம் வைத்து பக்தரான ஏகநாதர் செய்த பிரபந்தம் பரிசோதிக்கப் பட்டது. பாகீரதி யதனைக் காப்பாற்றின ளென்று அனைவரையு மழைத்துக்கொண்டு ஏகநாத ரிருப்பிடம் செல்லவே, அவரிவர்களுக்கு நமஸ்காரஞ் செய்து ஆஸனங்க ளளித்து உட்கார வைத்தார். இவர்கள் ஏகநாதரைக்கண்டு நீர் செய்த கிரந்தத்தை கங்கையிற் போட்டோம், அதனை கங்காதேவி வெளியில் வைத்திருந்தன ளாதலால் உம்மை யானைமேலேற்றி யூர்க்கோலம் செய்து வைப்போமென்ன, ஏகநாதர் சொல்லுவார், ஸ்வாமிகளே ! இது அனுசிதமான காரியம், அடியேனுக் கிந்த கௌரவம் வேண்டா மென்றார். மஹந்தும் பண்டிதர்களும் ஏகநாதரை சன்மான மடையும்படி பிரார்த்திக்க ஏகநாத ரவர்களை நோக்கி ஸ்வாமிகளான தேவரீர் சரணதாசியாக வடியேனிருக்கக் கடவேன். என்றைக்கேனு மிந்தப் பெருமை வேண்டேன். அந்தக் கிரந்தத்தை யானைமேல் வைத்து சன்மானப் படுத்தலா மென்றார். இதைக்கேட்டு மஹந்து முதலானோர் அவரிஷ்டப்படியே சாமக்கிரிகைகளைச் சித்தப்படுத்தி உத்சவத்தை யாரம்பித்து மேளவாத்திய கோஷங்கள் மிகுதியாக விளங்க அப்புத்தகத்தை யானைமேல் வைத்து மிருதங்க வாத்தியத்துடன் அடியவர்கள் ஹரிநாமங்களைப் பாடிக்கொண்டு அபாரமான ஜனசமூகத்துடன் ஏழுநாள் பரியந்த முற்சவத்தைச் செய்துக்கொண்டும் அனேகருக் கன்னதான மிட்டுக்கொண்டும் அவ்வாரணசியை பிரதக்ஷண மாகச் சுற்றி திருப்த்தியுடன் மடத்தைச் சேர்ந்து பகவானைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். கிரந்தபூஜை எல்லவருங் கூடிச்செய்ய ஏகநாதர் ஹரிகீர்த்தனை செய்தருளினார். அவ்விடத்திய ஜனங்கள் அத்தியானந்தத்துடன் ஹரிகுண கீர்த்தனத்தைக் கேட்டு அவர் பேரருளுடையவரென்று பெருமையுடன் கொண்டாடினார்கள். எவ்விடத்திலுள்ள பண்டிதர்கள் ஏகநாதர் செய்த பர்கவதத்தின் பிரதிகளை யெழுதிக்கொண்டு படிக்கத்தொ

டங்கினுர்கள். பின்பு ஏகனுதர் யதீஸ்வரருடைய வனுக்ஞையைக் கொண்டு தனதிருப்பிடம் செல்ல, வழியில் தாஸோபந்து எனும் பக்தரைச் சேவித்து அவரை கிருஷ்ணுஷ்டமிக்குத் தன்னிருப் பிடம் வரச்சொல்லி வேண்டிக்கொண்டு பைடன் சமீபத்திற்கு வந் தார். அனேக பக்தரவரை யெதிற்கொண்டுவர அவர் ஹரிநாமத் தைச் செய்துக்கொண்டு வீட்டைச் சேர்ந்தார். கிருஷ்ணுஷ்டமிவந் தவுடன் உத்சவத்திற்காக அமித ஜனங்கள் வந்தார்கள். தாஸோ பந்து என்பவரும் பல்லக்கு மீதேறி வந்தார். வாசர்ப்படியில் தத்தாத்திரயரை தான் கண்டு பயத்துட னவருக்கு தீர்க்க நமஸ் காரஞ் செய்து ஏகனுதர் வீட்டுக்குள் பிரவேசித்தனர். ஏகனுதரு மவருக்கு வந்தனவழிபாடுகள் வெகுவாகச் செய்து வுற்சவமாகும் பரியந்தம் தன்னிடத்தி லிருத்திக்கொண்டு அமித மரியாதைகளை யவருக்குச்செய்து வழிகூட்டி அனுப்பினுர்.

ஒருநாள் ஏகநாதர் கோதாவரியில் ஸ்நானஞ்செய்து வீட் டிற்கு வருஞ் சமயத்தி லோர் துலுக்க னெச்சிலை யுமிழ்ந்தான். அது ஏகநாதர் சரீரத்தின்மேற் பட்டது. திரும்பியு மவர் கோதா வரிக்குச் சென்று ஸ்நானஞ்செய்து வீட்டிற்குச் சென்று குரோத மெம்மாத்திரமு மில்லாமல் துலுக்கன்மேல் கருணை யுடையவராகி, ஹரீ! பாண்டுரங்கா! அந்தத் துலுக்கன் துர்க்கதி யடையாமல் நீர் காப்பாற்றக் கடவீரென்று பகவானை பிரார்த்தித்து பிரஸாதத் தை கைக்கொண்டு பிரீதியுடன் அந்த துலுக்கன் வீட்டிற்குச் சென்று இலையில் பிரசாதமும் பதார்த்தங்களையும் வட்டித்து அவ ன் முன் வைத்தார். துலுக்க னனுதாப முடையவனுய் ஐயா! நான் அநியாயம் செய்தேன், உன்மத்தன், நீசன், துர்மார்க்கன், உம்மே லெச்சிலைத் துப்பினேன், செய்த பிழையை க்ஷமித்தருளவேண்டு மென்று சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். ஏகநாத ரவனை யெ ழுப்பிச் சொல்லுவார், உன்னை யறியாம லுனக்கு தோஷம் வந்த தென்றும், பகவத் பிரசாதத்தை நீ புசிப்பையேல் அந்த பாபம் போகுமென்ற மெண்ணி அனுதாபத்துட னன்னத்தைக்கொண்டு வந்தேன், இதை நீ பக்ஷிப்பாயென்று சொல்லித் தன்னிருப்பிடம் சென்றுர். இதைக்கண்டு அப்புரவாசிகள் நிந்தித வசனங்களைச் சொல்லத் தொடங்கினுர்கள்.

பறையன் குழந்தை.

ஒருநாள் ஏகநாதர் மத்தியான்ன காலத்தி லொண்டியாய் சந்தியாவந்தனத்தைச் செய்ய கங்கைக்குச் சென்றார். அது வைகாசி மாசமாயிருந்ததால் வெய்யில் தீக்ஷண மதிகமாகயிருந்தது. ஓர் பாலகன் தலைமயிரலைய மணற்றுபத்தாலங்கழுதுக்கொண்டிருந்தான். ஏகநாதருடைய மனங்கறைந்து சிசுவை எடுத்துக்கொண்டு உபசரித்து கண்ணீர் துடைத்து வீடெவ்விட மென்று கேட்க, அப்பாலகன் கையினால் சைகை காண்பித்தான். அதைக்கண்டு பிரீதியுடன் அவ்வழியே நடந்து சென்றனர். வழியி லச்சிசுவின் தாயார் வரவே, அப்பாலகளைக் கீழே இறக்கினர். உடனே அவளோடிவந்து பக்தருக்குத் தெண்டனிட்டுக் குழந்தையை எடுத்துக்கொண்டாள். அவள் சக்கிலிச்சியா யிருந்தபடியால் ஏகநாதர் திரும்பி கங்கைக்குச் சென்று ஸ்நானம் ஈரவஸ்திரத்துடன் தனதிருப்பிடம் வந்தார். இச்சங்கதி அவ்விடத்திய பிராம்மணர்க ளெவற்கும் தெரியாதிருந்தது. பாண்டுரங்கரே அதனை வெளியிட்டார். திரியம்பகமெனும் க்ஷேத்திரத்தி லொரு பிராம்மண னிருந்தான். அவன் குஷ்டவியாதியால் கொடிய கஷ்டத்தை யடைந்துக்கொண் டிருக்கப் பாண்டுரங்கர் அவனை பார்வதிரமணரைக் குரித்துத் தவஞ்செய்யும்படி பிரேரேபித்தார். அவனப்படியே செய்துவர, சாம்பமூர்த்தி ஒருநாளிரவில் அந்த பிராம்மணனுடைய சொப்பனத்திற் றோன்றவே அவனனேகப் பிரகாரங்களாக தோத்திரஞ் செய்தான். பின்பு சாம்பமூர்த்தி யவனைக்கண்டுபைடன்புரத்திலேகநாதரெனும் பிராம்மண ரொருவருண்டு, அவர் பூர்ணபக்தராயிருப்பவர். ஒருகால் சக்கிலிக்குழந்தை ஆற்றின்கரையில் மணற்சூட்டால் தபித்துக்கொண்டிருக்க அவர் சுகிருதமென் றெண்ணி அவனை யெடுத்துக்கொண்டு போய் தாயாரிடம் சேர்த்தார். அந்தப் புண்ணியத்தை யுனக்கவர் கொடுத்தால் நீ ஆரோக்ய மடைவாய். நீ அவ்விடம் சென்றால் பிரயோஜனத்தை யடைவாயென்று சொல்ல, பிராம்மணன் விழித்துக்கொண்டு ஆச்சரிய மடைந்து பொழுது விடிந்ததே பிரயாணமாகி பைடன் புரத்தைச் சேர்ந்து ஏகநாதர் வீட்டுக்குப் போய் விசாரிக்கு மளவில் அவராற்றிற்குச் சென்று ரென்பதை யறிந்து அவ்வாற்றிற்கே தானும்வந்து ஏகநாத ராரென்று அங்கிருப்போரைக் கேட்க, சில பிராம்மணர்க ளவரைக் காட்டினர்

கள். அந்த பிராம்மணன் ஆற்றி லிழிந்து ஏகநாதரிடஞ் சென்று விநயத்துடன் நமஸ்கரித்து தன் சங்கதியையும் விஸ்வநாதர் கிருபையுடன் சொப்பனத்திற் சொன்ன வசனங்களையு மறிவிக்கக் கருணையுட னேகநாதர் கேட்டு, ஐயா பிராம்மணரே! நான் பிறந்தது முதற்செய்த சுகிருதங்க ளெல்லாம் உமது கோரிக்கை தீரும்படி கொடுக்கிறேனென்ன, அந்த பிராம்மண னவரை நோக்கி சுகிருதங்க ளனைத்து மெனக்கு வேண்டாம், அப்பாலகனை காப்பாற்றின புண்ணியத்தை மாத்திரம் நானடையக் கடவே னென்றான். ஏகநாதர் நல்லதென்று சொல்லி பிராம்மணர்க ளனைவரும் பார்த்துக் கொண்டிருக்க உதக பூர்வகமாக அப்புண்ணியத்தைத் தாரைவார்த்தார். அந்தப் பிராமணனுடைய குஷ்டரோகந் தீர்ந்தது.

சிலபக்தர்கள் ஏகநாதரைக்கண்டு ஸ்வாமீ! நீர்செய்த பாகவத ஏகாதச ஸ்கந்தத்தை நிதமும் சற்றுநேர மெங்களுக்குச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்க, அவர் சம்மதித்துச் சொல்ல வாரம்பிக்கவே கேட்பதற்கு ஜனசமூகம் கூடிவந்தது. கங்காபவானியு மொரு ஸ்திரீ ரூபத்தை வகித்து வஸ்திராலங் காரங்களுடன் புண்ணிய சீலையாய் வந்து ஏகநாதர் முன் உட்கார்ந்து பகவத் கதையை உன்னிப்புடன் கேட்பதும் ஆச்சரிய மொழிகளை யப்போதப்போது சொல்லிக்கொண்டும் பக்தி ரகசியங்கள் வந்த விடங்களி லானந்த பாஷ்பம் பெருகுதலும் முக்தி காந்தையைப்போல முகுந்தனுடைய சரணங்களில் மோஹமுடையவ ளாகுவதும் இப்படி ஆனந்தத்துடன் கேட்டு வருவாள். சிலர் கெடுகுணங்களையுடையோ ரக்கூட்டத்திலிருந்து அவள் மேல் கண்வைத்தவர்களாய் இவ்வூரி லிவள் யார்? என்று விசாரிக்க வெண்ணமுடையராகி கதை முடிந்த பிறகு அந்த ஸ்திரீயின்பின்னே தொடர்ந்தார்கள். கங்காபவானி ஸ்திரீ வேஷத்துடன் வந்தவளாதலால் கோதாவரிநதியிற் பிரவேசிக்க, இவர்க ளம்மாது நிமித்தியம் நெடுநேரம் கரைமேல் காத்திருந்து அவள் திரும்பி வருவதைக் காணமல் அவள் கங்காபவானி யென்று தீர்மானித்து அனுதாபத்துடன் வீடுகளுக்குச் சென்றனர். மறுநாள் கதையைக் கேட்க அம்மாது வாராதிருந்தபடியால் ஏகநாதர் அங்கு வந்தவர்களைக் கண்டு அவளேன் வரவில்லையென்று கேட்டார். விகல்ப மடைந்த வப்புரு

ஷர்கள் ஏகநாதரைக் கண்டு, தாங்கள் செய்ததைத் தெரியப்படுத்தி மகா பாபிகளானேமென்று நமஸ்கரித்தார்கள். ஏகநாத ரவர்களை நோக்கி நாராயணனுடைய கிருபையால் கங்கை, தரிசனங் கொடுத்தாள். பாவங்கள் போய்விட்டன. ஹரிபஜனையைப் பிரேமையுடன் செய்தால் சர்வேஸ்வரன் கருணை செய்வார். இனி சமுசயத்தை விட்டு சிரவணம் செய்யக்கடவீர். பக்தி குணங்களைப் பொருந்தி பதவி யடைவீர்களென்று அவர்களுக்குச் சொல்லி பாகவதார்த்தத்தைத் தினமும் சொல்லி முடித்தார்.

ஏகநாதர் வீட்டுக்குப் பக்கத்திலோர் பிராம்மணன் வாசஞ் செய்து பாவசுத்தி யில்லாமல் அவர் வீட்டிற் கெப்போதும் போகான். கிருஷ்ண கீர்த்தனை எப்பவுங் கேளான். கங்கா ஸ்நானம் தேகத்திற்குக் கெடுதலையென்று கோதாவரிக்குப் போகிறதில்லை. சந்தியாவந்தனம் ஜபம் முதலாகியவைகளையும் செய்வதில்லை. குடும்பத்தை மாத்திரம் போஷணை செய்துவருவான். இப்படி நெறிதப்பினவ னானாலும் ஒருநாள் வீதியிற் செல்லும்போது ஏகநாதர் கருணையுடன் அவனைக் கலந்து தான் தெண்டன் சமர்ப்பித்து ஐயா! உமக்கு பிள்ளைகளுண்டோ! குடும்பரக்ஷணமெப்படி நடக்கிறதென்று கேட்டார். அந்த பிராம்மணன் சொல்லுவான், பிள்ளைகளிருக்கிறார்கள், வர்த்தகனிடம் சேவகாவிருத்தி செய்துக்கொண்டு வருகிறேன், அவன் சம்பளம் கொடுக்கிறான், அதைக்கொண்டு சமுசாரத்தை நடத்துவேனென்றான். அதைக் கேட்டு ஏகநாதர் நானொன்று கேட்கிறேனென்ன, அவன் பயத்தினால் பேசாமலிருக்க, அதைக்கண்டு ஏகநாதர் நான் திரவியமொன்றுங் கேட்கவில்லை, ஹரிகீர்த்தனை கேட்பதற்கு உன் காலத்தை சற்று நேரஞ் செலுத்தவேண்டு மென்றார். அதற்கந்த பிராம்மணன் தனக்குப் பொழுதில்லை யென்றான். பின்பு ஏகநாதர் சஹஸ்ரநாம சுலோகங்களி லொன்றைச் சொல்லுகிறேனென்று எழுதிக் கொடுத்து தன்கையால் அவனுடம்பைத் துடைத்தவுடன் புத்தித் திரும்பி அந்த சுலோகத்தை வாசித்தான். மறுநா ளின்னமொரு சுலோகத்தை யவனே கொடுமென்று கேட்க அப்படியே ஏகநாதரெழுதிக்கொடுத்தார். தினந்தோரு மிப்படிசெய்து ஆயிரம் சுலோகங்களையும் வாசித்தான். பின்பு பகவானிடம் பக்தியுமுண்டாயிற்று, விடியற்காலத்தில் ஸ்நானஞ்செய்து ஸஹஸ்ரநாம சுலோகங்களை

வாசித்து ஏகநாதரிடம் வந்து தெண்டன் ஸமர்ப்பித்து பின்பு விவ காரத்திற்குச் செல்வான். விசேஷ வார்த்தைகளில்லாமல் கனி கரத்துடன் காலயாபனம் செய்துவர, மிருத்தியுகாலம் சமீபித் தது. சரமதசையிற் பேச்சில்லாமல் தன்னை மறந்திருந்தான். பந்துக்களனைவரும் பிராயச்சித்தம் செய்ய வெத்தனித்தார்கள். அப்பொழுது அவன் சஹஸ்ர நாமத்தைச் சொல்லத் தொடங்கி ஞன். அதுமுடியும் சமயத்தில் விஷ்ணுதூதர் வந்து சன்மானித்து சத்கதிக்குச் சேர்த்தனர். இது ஆசாரியரு பகிருதியென் றெல் லோரும் கொண்டாடினர்கள்.

## ஹரி பண்டிதன்.

ஏகநாதருக்கு ஒரு பிள்ளையும் இரண்டு பெண்களும் பிறந் தார்கள். பெண்களை சமீபக்கிராமத்திலிருக்கும் பிள்ளைகளுக்கு விவாகஞ் செய்துக் கொடுத்தார். ஹரி யெனும் குமாரன் வட மொழியில் (சமஸ்கிருதத்தில்) அளவிறந்த பாண்டித்திய முடைய வனுய் ஆறு சாஸ்திரங்களை வாசித்து அன்னியரான வந்தணரால் மகா பிரக்ஞனென்று பெயரிடப் பட்டிருந்தான். தகப்பன் செய்த பிராக்ருத கிரந்தங்களை அவன் பாராட்டுவதில்லை. ஒருக்கால் புத் திரன் தகப்பனை அன்னியர் வீட்டி லருந்துதல் செய்யக்கூடாதெ ன்று நிற்பந்திக்க, பிதா அதற்கு ஆமோதிக்காமலிருந்தபடியால் ஹரிபண்டிதன் தகப்பனுத்தரவின்றி காசிபுரிக்குச் செல்ல உத்தே சித்தான். ஹரிபண்டிதனுக்கு மூன்றுபேர் பிள்ளைகளுண்டு, அவர் களுக்குள் மூன்ருவது பிள்ளை பாட்டனுருக்குத் தகுந்த சேவை களைச் செய்துவருவான். அவனை மாத்திரம் வீட்டில் நிருத்தி மனைவி பிள்ளைகளுடன் ஹரிபண்டிதன் காசி நகருக்குச் சென்று தனது வித்தியாப் பிராவண்ணியத்தா லவ்விடமே அனேக பண் டிதர்களுடன் வாசம் செய்து வந்தான். ஏகநாதர் தன் பேர னை இராகோபா யென்பவனை வீட்டில் வைத்துக்கொண்டு சாஸ் திரங்களையும் வேதங்களையும் செம்மையாக அவனுக்குக் கற்பித்து ஸ்ரீஹரி சேவையில் ரக்தியுடையனுகச்செய்து தனது சேவையில் வைத்துக் கொண்டு அவனது தலைமீது தனது அஸ்தத்தை வைத் து அனுக்கிரகித்தார். அப்பிள்ளைக்கு ஞானமும் பக்தியு முண் டாகி வைராக்கியத்தையு மடைந்தான். அவ்விடத்திய ஜனங்க ளனைவரும் மகத்தான வானந்தத்தை யடைந்தனர்.

இப்படி சிலகாலங் கழிய ஏகநாதர் தன் குமாரன் காசிபுரியிற் சென்று கருமங்களைச் செய்வதிலே கருத்துடையவனாய் அந்த பிரமையிலே யிருந்து விடுவான்; இது தகாதென்றும் பிள்ளையை வீட்டிற் சேர்த்து தான் சரீரம் விடுவது யுக்தமென்று யெண்ணி தான் பிரயாணமாகி காசிபுரியில் பிள்ளை வீட்டிற்குச் சென்றார். புத்திரன் தகப்பனை சன்மானித்து கண்களில் ஜலம்பொழிய பிரியத்தைக் காண்பித்து போஜனாதிகளையிட்டு சுகத்துடன் வீட்டில் வைத்திருந்தான். பிரஜைகளனைவரும் ஏகநாதரைச் சேவிக்க வந்தார்கள். யதீஸ்வரரான மஹந்தும் தன் சிஷ்யர்களுடன் வந்து சேவிக்க, அனைவருக்கும் வந்தனை வழிபாடுகள் செய்து க்ஷேமத்தை விசாரித்துச் சத்கோஷ்டியுடனிருந்தார். சிலநாளவ்விடங் கழித்துப் பிள்ளையைக்கண் டொருதினம் அப்பா! எனதாயுள் கழிந்து விட்டது. இவ்வுலகி லினி அனேகநா ளிருப்பதில்லை. நீ வீட்டிற்கு வருவது யுக்தமாகுமென்று சொல்ல, பிள்ளைத் தகப்பனை நோக்கி நீர் அன்னியர் வீட்டில் புசிக்காமலும் சம்ஸ்கிருதத்தைத் தவிர அன்னிய பாஷைக் கிரந்தங்களை பாராட்டாதிருந்தால் வருவேனென்ன, ஏகநாதர் ஸ்ரீஹரி பக்தியால் சகல பாரமு மவனுடையதென்று சம்மதிவசனத்தைக் கொடுக்க, ஹரிபண்டிதன் தன்னிரண்டு பிள்ளைகளையு மவ்விடமே விட்டு தகப்பனுடன் பிரயாணமாகி சுகமாக பைடன்புரி வந்து சேர்ந்தான். அவ்வூரில் நல்லோ ரனைவரும் ஹரிகதையைக்கேட்டு ஆனந்திக்கலா மென்று சந்தோஷத்துடன் ஏகநாதர் வீட்டின் அங்கணத்தின் முன் வந்தனர். ஹரிபண்டிதன் சம்ஸ்கிருத புராணங்களைச் சொல்லிக்கொண்டிருக்க, ஏகநாதர் கேட்டுக்கொண் டிருந்தார். ஜனங்களுக் கது ருசிக்கவில்லை. பிரதி தினமும் ஹரிபண்டிதன் புராண சுலோகங்களை வாசித்துப் பின்னை அர்த்தம் சொல்லிக்கொண் டிருப்பன், கேட்குஞ் ஜனங்களுக்குப் பிரீதி யில்லாமல் நாளுக்கு நாள் பிரஜைகள் குறைந்துக்கொண்டு வந்தார்கள், ஏகநாதரும் ஈஸ்வர பக்திக் குறைந்துவிட்டதே யென்று நினைத்திருந்தார்.

அவ்வூரில் பணக்காரனான பிராம்மண னொருவ னிருந்தான். அவன் மனையாள், பிள்ளைக ளில்லையென்று பெருத்த கிலேசமுடையவளாய் ஒரு குழந்தை யுண்டானா லாயிரம் பிராம்மணர்களுக்கு அமுதளிப்பேனென்று பாண்டுரங்கருக்குப் பிரார்த்த

ளைச் செய்துக்கொள்ள அவரனுக்கிரகத்தா லொரு பிள்ளைப் பிறந் தான். சிலநாட்கழிய, புருஷ னிறந்தபடியால் தரித்திரதசை வந்தணுகிற்று. அத்துடன் கிழத்தனமுங் கூடியது. மோஹமும் மமதையுமுடையவளாகி கஷ்டப்பட்டு கூலிக்கு ஜலம் சுமந்துக் கொண்டு தன் பிள்ளையை வளர்த்தாள். பாண்டுரங்கருக்கிட்ட பிரார்த்தனைச் செலுத்த கையில் திரவியமில்லாமல் சக்தியற்றவ ளாய் விசனமுற்று காலத்தைக் கழித்துவந்தாள். ஒருநாள் சில பெரியோர்கள் அவ்விட மிருக்கக்கண்டு அவர்களிடம் தன்னு டைய குறையைச் சொல்ல அவர்க ளவளைக்கண்டு உலகில் நூறு பேர் பாமர பிராம்மணர்களைக் காட்டிலும் ஒரு வைதீகன் சிரேஷ் டம். நூறுவைதீகரைக் காட்டினு மொருபண்டிதன் சிரேஷ்டம். நூறு பண்டிதர்களைக் காட்டினு மோரனுஷ்டாதா சிரேஷ்டம். நூறுபே ரனுஷ்டார்தாக்களிலும் சம தமாதி குணங்களுடைய ஒருவன் சிரேஷ்டம். இவர்கள் நூறுபேரைக் காட்டினு மோர் ஹரிபக்தன் சிரேஷ்டம். இவனுக்கு சாந்தி குணங்கள்மேன்மை யாக நிறைந்திருக்கும். இவன் சத்துரு மித்துருக்களைச் சமமாக வெண்ணிச் சர்வமும் ஹரியென்றிருப்பன். அவனொருவனுக்கு நீ அன்ன மிடுவையாகில் பிரார்த்தனை செலுத்தியதாகும். அவ்வண் ணமான புருஷ னிவ்விடத்தில் ஏகநாதரென்று சொல்ல, அவள் பரம ஸந்தோஷத்தை யடைந்தவளாய் சங்கடமின்றி சாமக்கிரிகை களை சித்தப்படுத்தி ஏகநாதர் வீட்டிற்குச் சென்று ஏகாந்தத்தி லவரைக் கண்டு தன்னுடைய பிரார்த்தனை விஷயத்தைத் தெரிவித் து ஆயிரம் பேருக்குப் பதில் நீ ரொருவர் புசிப்பெடுத்துக்கொண் டால் பிரார்த்தனை நிறைவேறுமென்று சொல்லி அவரை யொரு வேளைக்குப் போஜனத்திற் கழைத்தாள். இதைக்கேட்டு ஏகநாதர் தன் பிள்ளையைக் கேளென்ன, அவ ளவனிடஞ் சென்று தன் சங்கதியைத் தெரிவித்தாள். ஹரிபண்டிதன் கேட்டு கோபமுற்று என் தகப்பன் யாத்திரை செய்ததுமுதல் அன்னியர் வீட்டிலன்ன மருந்துவதில்லை, அவர் வரமாட்டாரென்று சொல்ல, அவள் துக் கமடைந்து திரும்பியும் ஏகநாதரிடம் வந்து ஸ்வாமி! ஹரிபண்டிதன் ஆமோதிப்பதில்லை, இதற்கென்ன செய்வதென்று விசனமுற, ஏக நாதர் கருணை யுடையவராகித் தன் புத்திரனிடம் தானே சென்று ஆர்த்தியுடன் சொல்லுவார், அப்பா! அக்கிழவியின் பிரார்த்தனை

சபலமாம்பொருட்டு அவள் வீட்டிற் சாப்பிடுவது சுகிருதமாகும் அவளுக்கும் அது திருப்தியா யிருக்குமென்றார். இதைக்கேட்டு ஹரிபண்டிதன் அய்யரே! வாரணாசியில் நீர் கொடுத்த வாக்குத்த விரமாட்டீரென் றிவ்விடம் வந்தேனென்ன, ஏகநாதர் பிள்ளையை நோக்கி அப்பா! நீயே அவள் வீட்டிற்சென்று சமையல் செய்வை யாயின் நாமிருவரும் பக்ஷித்து வருவோ மென்றார். இதற்கு ஒரு வாறாக அவன் சம்மதிக்க, ஏகநாதர் தன்னிருப்பிடம் வந்து அம் மாதை அழைத்து சங்கதியைத் தெரிவித்தார். அவ ளதைக்கே ட்டு, ஸ்வாமி! அதிரசங்களு மப்பங்களும் முன்னமே பக்ஷணக் காக செய்து வைத்தேனே! என்று சொல்ல ஏகநாதர் இருவரும் போஜனத்திற் குட்கார்ந்த பிறகு நீ கொண்டுவந்து வட்டித்தால் கொள்ளப்படுமென்றார். இதைக்கேட்டு அதிக சந்தோஷத்துடன் அம்மாது வீட்டிற்கு வந்து பதார்த்தங்க ளனைத்தையும் சேகரித்து மறுதினத்தில் ஏகநாதர் வீட்டிற்குச்சென்று பயத்துடன் ஹரிபண் டிதனை அழைத்துக்கொண்டு தன் வீட்டிற்கு வந்து சாமக்கிரிகை யனைத்தையுங் கிட்ட வைத்துக் காண்பித்தாள். ஹரிபண்டிதன் ஸ்நானம் பண்ணி சமையலைச் செய்தான். போஜனசமயத்தில் ஏகநாதர் அவள் வீட்டிற்குச் சென்று அம்மாது கொடுத்த ஜலத் தால் ஸ்நானம் பண்ணி நித்திய நியமங்களை முடித்துக்கொள்ள, ஹரிபண்டிதன் வைஸ்வதேவ பூஜை பண்ணி இரண்டிலைகளில் அன்னத்தையும் பதார்த்தங்களையும் வட்டித்தான். அப்பொ ழுது ஏகநாதர் அந்த பிராம்மண ஸ்திரீயை கிட்ட அழைத்து ஸங்கல்பத்தைச் சொல்லி ஜனார்த்தனரே போக்தாவென்று அவ ள் கையில் நீரை விட்டனர். பின்பு தான் உட்கார்ந்து பாண்டு ரங்கரை பிரியத்துடன் தியானித்து பிரஸாதத்தை அவருக்கு நிவேதனம் பண்ணி கையில் ஜலத்தைக் கொண்டு ஆபோசன மிட்டு பிள்ளையுந் தானும் பக்ஷித்துக்கொண்டிருக்க, அம்மாது அதிரசங்களையு மப்பங்களையும் கொண்டுவந்து வட்டித்தாள். அப் போது பிள்ளை கோபத்தால் கரகரவென்று பற்களைக் கடித் தான். ஏகநாதர் இஷ்டத்துடன் சாப்பிட்டுக்கொண் டிருக்க, அம் மாது அவரைப்பார்த்து ஸ்வாமி! அத்யந்த கிருபையை அடியா ள்மேற் செய்தீர். மனோரதத்தை பூர்த்தி செய்தீர். மனது ஆனந்த மடைந்தது. அனாதநாதரே! பாகவதோத்தமரே! அடி

யாளுடைய குறையை நிவர்த்தி செய்தீரென்றாள். ஹரி பண்டித னவ்வேளையிற் றனது கோபத்தை யணைத்துக் கொண்டான். பக்ஷணையாவும் செய்தபின்பு தகப்பன் பிள்ளையைக்கண்டு எச்சிலி லைகளை எடுத்துவிடு என்று சொல்ல, ஹரிபண்டித னவைகளை எடுக்க வாரம்பித்தான். அப்பொழுது தகப்பன் சாப்பிட்ட இலையை யெடுக்க, அதின்கீழ் மற்றொருயிலை யிருந்தது. அதினடியில் மற்றொன்றாக விப்படி ஆயிரம் ஒன்றின்கீழொன் றிருக்கக்கண்டு ஆச்சரியமுற்று கையலம்பித் தகப்பனுக்குத் தெண்டன் சமர்ப்பித்து, ஸ்வாமி! சாதனைக ளறியாமல் தேவரீருக்கு அபசாரங்க ளனேகஞ் செய்தேன். பரம பக்தியும் பிரமஞ்ஞானமும் பாங்காக வடைந்த உமக்கு அடியேன் பரான்ன வர்ஜ்ஜனமும் பிராக்ருத கிரந்தங்களை பாராட்டாமல் பண்ணினதும் சரியல்ல. பகவதம்சராகப் பிறந்து பிரஸித்தி யடைந்தவர் நீர். அன்னியர் வீட்டில் சாப்பிடவும், அன்னிய பாஷா கிரந்தங்களைப் பார்க்கவு மாடங்கமில்லை. அடியேன்மீது கடாக்ஷம் வைத்துக் கருணைசெய்யக் கடவீரென்று கால்களில் விழ, ஏகநாத ரவனை யெழுப்பி ஆலிங்கனம் பண்ணிக் கொண்டு பிராம்மண ஸ்திரீ கொடுத்த தாம்பூலத்தை வாங்கிக்கொண்டு பிள்ளையுடன் தன் வீட்டிற்குச் சென்றனர். அம்மாது அவ் வெச்சிலிலைகளைக் கொண்டுபோய் கங்கையிற்போட, அவ்வூரார னைவரு மிச்சங்கதியைக் கேட்டு ஏகநாதரைப் புகழ்ந்தார்கள். ஏகநாதரும் சொரூபத்தில் நிலைமை பொருந்தி நின்றனர்.

## காவுபா விப்ரன்.

கோதாவரி தீரத்தில் (குலகர்ணி) பிராம்மண கணக்கனொருவன் குடும்பத்துட னிருந்தான். அந்த தம்பதிகளுக் கனேக பிள்ளைகளுண்டாகி தரித்திர பீடையால் தத்தளித்துக்கொண்டு வெகு தீனதசை யடைந்திருக்க, மற்றொரு பிள்ளைப் பிறந்தனன். அவனுக்கு காவுபாவென்று நாமம் வைத்தனர். அவன் ஊமையாய் வளர்ந்துவர, தாய்தந்தைக ளவனுக்கு உபநயனத்தைச் செய்தார்கள். ஹரி நாமத்தை யவன் சொல்லா திருந்ததால் பாப கருமத்தாற் பிள்ளைப் பிறந்தானென்று சோகத்தை யடைந்து, பிற்காலத்தி லவன் பிழைப்ப தெப்படியென்று தகப்ப னெண்ணமிட்டிருந்தான். ஒருநாள் அவன் சில பிராம்மண ஜனங்களுக்கு பக்ஷியங்களுடன் போஜன மளித்தான். ஊமைப்பிள்ளை பக்ஷயங்

களையே பெரும்பாலும் பக்ஷித்து, வயிற்றை நிறைத்துக்கொண்டான். மறுநாளும் அப்பிள்ளை பக்ஷயங்களையே கொடுக்கச்சொல்லி தாயாரைக் கேட்டான். அவள் உரியில் வைத்திருந்த சிலவற்றைக் கையில் கொடுத்தாள். மூன்றுநாளும் பக்ஷயத்தையே பிள்ளை கேட்க, இன்றில்லையென்று தாயார் சொன்னாள். அப்பிள்ளை கிழேவிழுந்து அழத்தொடங்கினான். அன்னத்தைப் பக்ஷியாமல் அதிக தொந்தரையைச் செய்யத் தாயார் தந்திரம் செய்து பைடன் புரிக்கு ஏகநாதரிட மப்பிள்ளையை அழைத்துவந்து அவருக்கு நமஸ்கரித்து பிள்ளையையு மவர் கால்களில் வீழ்த்தி தேவரீர் இப்பிள்ளையைக் கைக்கொள்ளும். ஒன்பது பிராயமுடையவனானாலும் ஊமையாயிருக்கிறான். பக்ஷய போஜ்யங்களை யெப்பொழுதும் வேண்டுகிறான். நீர் தயையுடையவரென்று பிள்ளையை யிவ்விடம் கொண்டுவந்தேன், இவனை நீர் இரக்ஷிக்கக் கடவீரென்று பலமுறை வேண்ட, ஏகநாதர் தன்மனைவியை யழைத்து இந்தப் பிள்ளையை நீ வைத்துக் காப்பாற்றக் கடவையென்றார். புருஷனுக்கினையை கைக்கொண்டு பிள்ளைக்கு உடனே அன்னமிட்டாள். அப்பிள்ளையின் தாயார் அவர்களை கொண்டாடி ஏகநாதராக்கினையைப் பெற்று தன்னூரைச் சேர்ந்து புருஷனைக் கண்டு பிள்ளையை ஏகநாதருக்குக் கொடுத்ததாகவும் அவன் புண்ணிய விசேஷத்தாலந்த இட மவனுக் ககப்பட்டதென்றும் சொல்லி புருஷனும் மனைவியும் மனதைச் சமாதானப்படுத்திக்கொண் டிருந்தார்கள்.

ஏகநாத ரப்பாலகனுக்கு வஸ்திரங்களைக் கொடுத்து அன்னமுமிட்டுவர அவன் வீதிகளில் விளையாடிக்கொண்டு அப்பம், பணியாரங்கள், அதிரசங்க ளப்போதைக் கப்போது வெகுவாகச் சாப்பிட்டுக்கொண்டு தாய் தந்தைகளை நினையாமல் சுகத்துடனிருந்தான். ஒருநாள் ஏகநாதர் பூஜாக்கிரகத்தி லொண்டியாயிருந்து அந்தப்பிள்ளையை அழைத்து இராமாவென்று உச்சரிக்கச்சொல்ல, அவன் வாய்திறவாமலிருக்க, ஏகநாதர் வாயைத்திறவென்று சொல்லித் தன்னைக் காண்பித்து பெயரைச் சொல்லென்றார். அப்பிள்ளை வாய்திறந்து "ஏகநாத்" என்று சொல்ல, அந்த நாமத்தை யுபதேசமாகச் செய்து எப்பொழுது மிதனையே ஜபம் செய்துக் கொண்டிருவென்று துளசி மணிமாலையைக் கொடுத்தார். அத்தின முதல் விளையாடுவதை விட்டு நாமத்தைச் சொல்லத் தொடங்கின

ன். வாயினு லின்னமொரு வார்த்தையை சொல்லாம லிருப்பான். இதர ஜனங்க ளிதைப்பார்த்து இது ஏகநாதர் மகிமையென் றறிந்தார்கள். தாய் தந்தைகள் வந்தால் பிரியமாக நாமத்தைச் சொல்லிக்கொண்டு அப்பாலக னவர்களிடம் போகிறதில்லை. இதைக் கண்டு அவர்களும் சந்தோஷித்துச் செல்லுவார்கள்.

சிலகால மிப்படி நடந்துவர ஒருநாள் ஏகநாதர் தியானத்திலிருக்க ஸ்ரீராம மூர்த்தி பிரஸன்னமானார். உடனே ஏகநாதர் நமஸ்கரித்து தயாமூர்த்தீ! தாடகாந்தகரே! ஜானகிநாதரே! ஆஞ்சனேய வரதரே! சுக்கிரீவப் பிரியரே! இராவண மர்த்தனரே! யென்று அனேக விதங்களாகத் தோத்திரஞ் செய்து நிற்க, பெருமாளவரை நோக்கி வால்மீகி செய்தாப்போல இராமாயணத்தைப் பிராக்ருதமான மராட்டி பாஷையில் செய்து பிரசுரப் படுத்து மென்ன, ஏகநாதர் பெருமாளை நோக்கி ஸ்வாமீ! ஆயுர்தாய மில்லையே! யென்று சொல்ல, பெருமாள் நீ பிராதக் காலத்திற் செய்யும் கருமங்களை பிரபலமாகச் செய்யாமல் எனது சரித்திரத்தைச் சொல்லவும், உனது பிராக்கிருத் வாக்கு எனக்கு பிரீதியாயிற் றென்று சொல்லி மறைந்தனர். பின்பு ஏகநாதர் கிரந்த மெழுத வாரம்பித்து நாள்தோறு மெழுதுவதை இரவில் கானரூபமாக ஜனங்களுக்குச் சொல்லிக் கொண்டு வருவர். இப்படியாக இராம சரித்திரத்தில் ஐந்து காண்டங்களைப் பூர்த்தியாகச் செய்து யுத்தகாண்டம் முக்கால்வரை யாயிற்று. நான்காம் பாகம் செய்யுமளவில் அவசானகாலம் சமீபித்த தென்றறிந்து அவ்விடத்திலுள்ள ஜனங்களை யாலோசனை செய்தார். அவர்கள் ஏகநாதரை நோக்கி, ஸ்வாமி! நீர் கிருஷ்ணதாஸரை மரணமடையாமல் பதினொரு தினங்கள் நிறுத்தினீரே! அப்படியே நீரும் பிராணனை நிறுத்தி கிரந்த சமாப்தியைச் செய்யு மென்றார்கள். ஏகநாதரதைக் கேட்டு அப்படி செய்வது செம்மையல்ல, காலனை வஞ்சித்துக் கிரந்தத்தை நடத்துவது சரியன்று. மீதி யிருக்குங் கிரந்தத்தை மேன்மையுடன் காவுபா பூர்த்தி செய்வானென்று சொல்லி அப்பிள்ளையை அழைத்து அவன் தலைமேல் தன் கையை வைத்து அவன் கையி லெழுத்தாணியைக் கொடுத்து என் மனதிலிருக்கும் கவித்வத்தை நீ திருத்தமாக வெழுதக் கடவாய் யென்று ஏட்டி லெழுதச் சொன்னார். அவர் கடாக்ஷ வீக்ஷணமான்வுடன் காவுபா

யெழுத வாரம்பித்தான். விசாலபுத்தியு முண்டாயிற்று. ஒரு அத்தியாயத்தை யெழுதி அதனை யெல்லோரும் கேட்கும்படி வாசித்தான். சகலருமதைக் கேட்க செம்மையா யிருக்கிறதென்று கொண்டாடினார்கள். காவுபா பின்பு யுத்த காண்டத்தையும் உத்தர காண்டத்தையும் பூர்த்தி செய்தான். அனேகரதனைச் சிலாக்கியமாக சொல்லிக் கொண்டார்கள்.

பங்குனிமாசம் பஞ்சமி திதி இரவில் ஏகநாதர் பக்தியுடன் கீர்த்தனை செய்து புரஜனங்க ளனைவருக்கும் பிரசாதம் கொடுத்து சொல்லுவார். அடியேன் பிரயாணமாகும் தினம் நாளையாம். நீங்க ளனைவரும் விடியற்காலத்தில் ஸ்நானம் பண்ணி பிரியமுடன் வர வேண்டு மென்று பிரஜைகளுக்குச் சொன்னார். இதைக்கேட்டனைவரும் உதயத்தில் ஸ்நானம் செய்து ஏகநாதர் வீட்டிற்குச் சென்றனர். அவ்வேளையில் மனதில் கிலேசமுண்டாக ஏகநாதர் மூர்ச்சை யடைந்திருந்தார். குடில ஜனங்கள் சிலர்கூடி ஏகநாதரிப்படி தொந்தரையடைந்து பிராணனை விடுவாராயின் அஸ்மதாதிகளைப் போலே இவருமாய்விடுவர். இதிலாதிக்கிய மென்ன வென்றவ்வவ்விடங்களிற் சொல்லிக் கொண்டிருந்தார்கள். சில சஜ்ஜனர்க ளவ்விடம் கூடி அவரது சுகுணங்களைக் கொண்டாடி ஸ்வாமீ! அளவிறந்த லீலைகளை யுலகத்திற்காண்பித்தீர், நால்வர் போலவே பிராணனை விடுவது நன்மையோ வென்று சொல்ல, நித்திரைச் செய்தெழுந்திருக்கிறவர்போ லெழுந்திருந்து உத்தவனை ஜலங் கொண்டுவரச் சொல்லி, ஸ்நானம்பண்ணி தாரக மந்திரத்தை சொல்லிக் கொண்டு துவாதசோர்த்வ புண்டரங்களைத் தரித்து ஜபத்தை முடித்து, ஹரி! பாண்டுரங்கா! வென்றுசொல்லி தாள வீணைகளை கையிலேந்தி "ஹரிவிட்டல" வென்று வீட்டைவிட்டு வெளியே புறப்பட்டு கங்கைக்குச் செல்ல, சகலரும் ஹரிநாமம் பண்ணிக் கொண்டு பின்றொடர்ந்தார்கள், அடிக்கடி பிரஜைக ளனைவரும் துளசிமாலைகளை அவருக்கு யிடுவார்கள். கந்தபொடியைத் தூவுவார்கள், இப்படி சகலாடம்பரத்துடன் கிராமவாசிக ளனைவரும் கங்கைக் கரையிற் சேர்ந்தனர். அப்பொழுது ஏகநாதரவர்க ளனைவரையு முட்காரச் சொல்லி யாவரும் கேட்டு ஆனந்திக்க ஹரி கீர்த்தனையை ஆரம்பித்தார்.

இக்கலிகாலத்திற் கோவிந்தனை யடைவதற்கு அவன் நாமத்தை

விட வேறு சாதனம் நடவாதென வறியக்கடவீர். சகல பூதங்களி லும் தயையுடையரா யிருக்கக்கடவிர். சமுசார சோகங்களை விட்டு ஸ்ரீஹரி பஜனையைச் சுத்தமனதுடன் செய்யக்கடவீர். லோக ஹிதத்திற்காக நான்வந்தேன். உள்ளிருக்கும் சித்துநான்: உல கில் தர்ம மார்க்கத்திற்குத் தவறு வருமாயின் பிறப்பை யெடுப் பேன். இதனை யுங்கள் மனங்களி லிருத்திக்கொண்டு எப்போதும் மாதவனைப் பாடக்கடவீர். சர்வ பூதங்களிலும் ஸ்ரீஹரி பாவனையே செம்மையான பக்தியாகும். இவ்வண்ணமான பக்திசெய்பவர்களை நாராயணன் காப்பாற்றுவார். சர்வபூதங்களிடத்தும் சமரசமும், சாந்தியும் தாந்தியு முடையவராகி எப்போதும் தர்மமார்க்கத் தைத் தப்பாமலிருக்கக் கடவீர். வேதம் சொல்லிய விதியே பெரி யது. விரோதமொன்று மில்லாமல் அதினிடத்தில் ஆதரணையு டன் இருக்கக்கடவீர். முடிவில் சொல்வதிதுதான், சாவதானமாக கேட்கக்கடவீர். விசுவமனைத்தும் கோவிந்தன் மயமென்றறிந்து நிலைமையற்ற விப்புவியில் நிந்திதமான பேதங்களிடாமல் சுகமா விருக்கக் கடவீரென்று ஏகநாதர் புகல, அவ்வேளையி லனைவ ருங் கூடி "ஹரி விட்டல" வென்று சொல்லிக்கொண்டிருந்தார் கள், அப்பொழுது பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஹாரதியைக் கொடுத்துக்கொண்டு ஹரியே ஜனார்த்தனரென்று சொல்லி, ஜய ஜனார்த்தன! ஜயஜனார்த்தன! ஜானகிரமணரே ஜயா! நீயே ஸர் வமுமாகி நானு பூதங்களில் பின்ன பின்னமாகத்தோன்றி, பிறகு அபின்னமு மாவாய். உன்னதமான சோதிக்கு எங்குமுஜ்வல சோதியா யிருப்பாய். பார்க்கப் பார்க்கப் பார்க்குமதுதனையே பார்க்கும்படி செய்வாய். நீ பூரண போதமாகி வேறுகாமலிருப் பாய். உள்ளதென்பது மில்லதென்பது மில்லாமல் சமரசமாயிருப் பாயென்று இவ்வண்ணமாகப்பாடிஹாரதியைக் கொடுத்து சக லருக்கும் தீர்க்க தண்டம் சமர்ப்பித்து அபசாரங்களை க்ஷமிக்கும் படி பிரார்த்தித்து எழுந்திருந்து ஹரி கோவிந்தா! வென்று சக லரையும் ஹரி நாமத்தை சொல்லச் சொல்லி, அனைவரும் ஆர்த்தி யுடன் நாமத்தைச் சொல்லிக் கொண்டிருக்க ஏகநாதர் கங்கை யில் வயிறளவு ஜலத்திற் சென்று ஹரி நாராயணுவென்று தேகத் தைவிட்டார். அச்சமயத்திற் தேவர் புஷ்பமாரி பொழிந்தார்கள். பின்பு தகப்பனுக்கு தகனக்கிரியைகளைத் தனயன் செய்தான். அவ்

ஆரி ிருக்கு மனைவரும் மகத்தான சோகத்தால் மருளடைந் திருந் தார்கள். தகனமான ஸ்தலத்திலோர் துளசி விருக்ஷமும், அஸ்வ த்த விருக்ஷமுமுண்டாயின. அவை யிப்போதைக்கும் பிரசித்தமா யிருக்கின்றன. அவைகளை அனுஸரித்தவர்களுக்கு இஷ்டசித்தி யைக் கொடுக்கின்றன. அவ்விரண்டு செடிகளையு மொன்றுய்ச் சேர்த்து பிருந்தாவன மென்று பெயரிட்டார்கள். சர்வேஸ்வர னுடைய கிருபையால் அரசும், துளசியும் சமமாகவிருக்கும். ஏக நாதருடைய பாதுகைகளை அவ்விடம் வைத்திருப்பர். பக்த ஜன ங்க ளவைகளைச் சேவித்து சுகமடைவார்கள். ஏகநாதர் சரித்தி ரத்தை எவராகிலும் கேட்பாராகில் அவர்களுடைய பாபங்கள் நசித்துவிடும். நரகத்தை யடையார். பக்தருடைய செவிகளுக்குப் பரம போக்கியமாக விருக்கும்.

## சமர்த்த ராமதாஸர் சரித்திரம்.

கோதாவரி நதிக்கு ஐந்து கோசு தூரத்தில் குருஜாம்ப க்ஷேத் திரமென் றொன்றுண்டு. அதிலோர் பிராம்மணர் ஸ்ரீஹரி பக்த ராகி சூர்யஜிபந்து என்றும் பேர் வகித்து ராணுவ யெனும் மனை வியுடன் வாழ்ந்திருந்தார். கிராம கணக்குகளை யெழுதும் விவ காரத்தை யுடையவராகி சிலகுணமும், தயையும் பொருந்தி, அன் னார்த்திகளுக் கன்னங்கொடுத்து வருவர். விடியற்காலத்தி லெழுந் திருந்து ஸ்நானஞ்செய்து கிழக்கை நோக்கி அர்க்கியமளித்து சூரி யோபாசனை செய்து அவரைத் தியானித்தும் பூஜித்தும் அனேக நமஸ்காரங்களை பிரதி தினமும் செய்துவருவர். இவ்விதமாக பன் னிரண்டு வருடங்கள் தவம்புரிய சூரிய நாராயணமூர்த்தி சகுண ரூபத்துடன் பிரஸன்னமானார். அப்பொழுது பக்தன் அனேக வித ங்களாக தோத்திரஞ் செய்து புத்திரன் வேண்டு மென்றான். அவ் வேளையிலவர் மனைவிவந்து ஸ்வாமி! நல்லபிள்ளையைக் கொடுக்கக் கடவீர். துஷ்டனான புத்திரனைப் பெறுவதைப்பார்க்கிலும் பிள்ளை யில்லாதிருப்பது நன்றென்றாள். சூரியநாராயண னவர்களை நோ க்கி உங்களுக கிரண்டு சத்புத்திரர்கள் பிறப்பார்கள். ஒருவன் லௌகிகனாகி யிருப்பன். மற்றொருவன் ஸ்ரீயப்பதிக்குப் பக்தனாகி சகஜதாஸ்யமான ஆத்ம சாக்ஷாத்கார ஞானத்தில் நடுபட்டிருப்ப னென்று சொல்லி மறைந்தருளினார். சிலநாட் கழிந்தபின் ராணுவ வெனு மம்மாது கர்ப்பவதியானாள். பத்தாவது மாசத்திற் பிள்ளை

யைப் பெற, புருஷன் சந்தோஷித்து ஜாதகருமங்களைச் செய்வித்து, தீட்டுக் கழிந்தபிறகு அப்பிள்ளைக்கு கங்காதரனெனும் நாமகரணமிட்டார்கள். சூரியன் கிருபையால் சம்பத்தும் குறைவின்றி இருந்ததால் ஐந்தாம்வயதி லப்பிள்ளைக்கு பிதா உபநயனம் பண்ணி பின்பு கலியாணத்தையும் செய்வித்தார்.

இதற்குள் அவரது மனைவி மற்றொரு கற்பத்தைத் தரித்து பத்தாவது மாசத்தில் புத்திரனைப் பெற்றாள். பன்னிரண்டாநாள் பந்துக்க ளனைவரும் கூடி தீட்டைக் கழித்து அப்பிள்ளைக்கு நாராயணனெனும் நாமத்தைச் சூட்டினார்கள். மனையாள், தன் புருஷனை அழைத்து சிசுவுக்கு சிறியதான ஓர்வால் இருக்கிறதென்று பார்க்கச்சொல்லிக் காண்பித்தாள். சூர்யஜீ, பகவான் வாக்கியங்களை நினைத்து இப்பிள்ளைமாருதி அம்சமாக யிருப்பான், ஆயினு மிதை யாருக்கும் சொல்லவேண்டாமென்று திட்டப் படுத்தினன். அக்குழந்தை நாளொருமேனியாய் திவ்வியதேஜசுடன் வளர்ந்துவர, தகப்பனார் மகிழ்வுற் றிருந்தார். இப்பிள்ளை வீட்டிலிராமலெப்பொழுதும் வெளியிலே விளையாடி விருக்ஷங்கள் மேலேறி குதிப்பதும் பாய்வதுமா யிருப்பார். ஐந்தாவது வயதில் வித்தை வாசிக்கும்பொருட்டு வாத்தியாரிட மனுப்பப்பட்டார். ஒருவருஷத்திற்குள் சகல வித்தைகளையும் அவர் கற்றுக்கொண்டார். ஏழாவது வயதில் உபநயனத்தை தாய் தந்தைகள் நடத்த, வேடிக்கையாக அப்பிள்ளை வேதாத்தியயனத்தைக் கற்றுக்கொண்டார்.

பெரிய பிள்ளை கங்காதரன் இராமசந்திரரை உபாசித்துக் கொண்டு லௌகிகத்தை நடப்பித்து வருமளவில் ஒருகால் ஸ்ரீராமமூர்த்தி சேவை சாதித்தருளினர். அவன் சந்தோஷத்தை யடைந்து பரவசனாகி கண்ணீரொழுக மனோசுத்தியுடன் மௌனமுற்று நிற்கப் பெருமாள் கிருபாநோக்கங் கொண்டு, உலகில் நீ "ராமதாஸ" னாகுவையென்று சொல்லி மறைய, அப்பிள்ளைக்கு காமரோஷங்கள் யாவும் கரைந்து போய் பூதகோடிக ளிடத்துக் கருணையும் பெருமாளிடத்தி லத்தியந்த பிரீதியு முண்டாயின. அவன் பரமார்த்தத்திற் சித்தத்தை வைத்து, பிரபஞ்சத்திற் றேகத்தை யிட்டு, நீ நானெனும் அவியக்தச் சுழலான சமுசாரத்தை இராமகிருபையால் நிரஸித்து சத்குணங்களை பிரகாசிக்க சகல விஸ்வமும் ஸ்ரீராம மயமென் றெண்ணியிருப்பன்.

மற்றொருபிள்ளை செடிகள் மேலேறி குதிப்பதும் அனேக சேட்டைகளைச் செய்வதுமா யிருக்க தாயார் ஒருநாள் அவரைக் கிட்ட வழைத்து குழந்தாய்! சேட்டைகளை விட்டுவிடு, அவைகளை விரும்பி வித்தையை மறந்து விட்டாயே! சமுசாரத்தை நீ பார்ப்பதில்லையே! நல்ல குணங்களைக்கொண்டு நல்லோருடன் சேரக்கடவை யென்று சொல்ல, அப்பிள்ளை யிதைக்கேட்டு ஓரிருட்டறையிற் சென்று தானிய உறையி லிறங்கி யாருக்கு மகப்படாம லுட்கார்ந்திருக்க தாயார் தேடித் தேடி தொந்தரை யடைந்தாள். சூர்யஜீயும் பிள்ளையைத் தேடப் பிரஜைகளை யனுப்பினார். அவர்கள் தேடி யலண்டு அகப்படாமல் வந்துவிட, அனைவரும் விசனமுற்றிருந்தார்கள். மறுநாள் தானியத்திற்காக தாயா ரவ்வுறையிடம் வர அங்கு பிள்ளையைக்கண்டு மேலுக்கெடுத்து என்னசெய்தாயென்று கேட்க சமுசார ஜனங்களை நான் பார்க்கச் சகிக்கமாட்டேனென்ன, தாயார் சிரித்துக்கொண்டு தகப்பனுக்குச் சொல்ல அவரும் சந்தோஷப்பட்டு இவன் பெரியவனானால் வெகு சமர்த்தனாவானென்றார். அதைக்கேட்டு பிள்ளைத் தாயாரைக்கண்டு சமர்த்தமாவதென்னென்ன, அவள் தனயனை நோக்கி, தானியத்தை விசேஷமாக சம்பாதித்து வீட்டிற்கு கொண்டுவந்தா லது சாமர்த்தியமென்று எல்லோரும் சொல்லுவார்க ளென்றாள். இதைக்கேட்டு அப்பிள்ளை யோர் கிணற்றின் கரையிற் சென்று தானிய மூட்டையொன்றங்கு விழுந்து கிடக்கத் தானே தலைமே லதனைவைத்துக்கொண்டு வந்தார். அது ஓர் மனிதன் சுமைக்கதிகமாக விருக்கக்கண்டு அனேக மனிதர் பின்னே ஓடிவந்தார்கள். ஓர் மனிதனதனை யெடுத்துவர சக்தியற்றவனாவானதலா லப்பிள்ளை அச்சுமையைத் தூக்கி வேகமாக நடந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். அக் குமரன் அதனை வீட்டிற்கு கொண்டுவந்து தாயாரிடஞ் சென்று தானிய மூட்டையைக் கொண்டுவந்தே னென்ன, தாயார் வெளியே வந்தவுடன் அம்மனிதர்க ளந்த மூட்டையைக் கேட்டு வாங்கிப் போயினும் இன்னொரு மூட்டை அத்தன்மையதே அவ்விடமிருந்தது. அதைக் கண்டு அம்மாது தன் புருஷனிடம் சென்று சங்கதியைத் தெரிவித்து இவன் சத்புத்திரன், விவாக மிவனுக் கிப்போதே செய்துவிடவேண்டுமென்று சொல்ல, புருஷனு மாமோதித்துப் பெண்ணை விசாரித்து சகல பதார்த்தங்களையும் வஸ்திரா லங்கா

ரங்களையும் சித்தப் படுத்தினர். பின்பு பந்துக்க ளனைவரும் கூடி நல்ல முகூர்த்தத்தில் பிள்ளையையும் பெண்ணையும் பந்தலில் மணை மேலிருத்தி பிராம்மணர்க ளனைவரும்கூடி மங்களாஷ்டகங்கள் சொல்லிக்கொண்டு வாத்திய கோஷங்கள் முழங்க, பிள்ளைக்கும் பெண்ணுக்கும் மத்தியில் திரைச்சீலையிட்டு 'சாவதானு' (ஜாக்கிரதை) யென்று அத்தேசமுரமைப்படி சொல்லத் தொடங்கினர்கள். கலியாணப்பிள்ளை அவ்வேளையில் உபாத்தியாயரைக் கண்டு "சாவதான" வென்று எல்லோரு மேன் சொல்லுகிருர்க ளென்ன, மச்சினன்மார் சிலர் அப்பிள்ளையை நோக்கி பரிஹாசமாக சம்சார பந்தமான விலங்கு உனக்கினி நேரிடப்போகிறதானபடியால் ஜாக்கிரதையாக இருக்கச் சொல்லுகிருர்களென்ன, கலியாணப்பிள்ளை அனுதாபத்தை யடைந்து ஸ்ரீரகுராமரை மனதிற் சிந்தித்து சீக்கிரத்திற் காப்பாற்று மென்றும் தாய்தந்தைகள் விரோதிகளென் றெண்ணிக்கொண்டும் யாருடனும் சொல்லாமல் ஒரே ஓட்டமாக ஓடி கானகத்திற் பிரவேசித்தார். பந்துக்க ளப்போதே கூடசென்று தேடத் தொடங்கினர்கள். தாய் தந்தைகள் தனையனைக்காணுமல் குதிரைகள்மேல் மனிதரை யனுப்பித் தேடச் செய்தார்கள். அவர்கள் பல இடங்களிலும் தேடி திரும்பிவந்து பிள்ளை அகப்படவில்லையென்று சொல்ல தாய் தந்தையரும், பந்துக்களும், துக்க சாகரத்தில் மூழ்கினர்கள். அவ்வேளையில் கங்காதர னவர்களைக் கண்டு அப்பிள்ளை மாருதி அம்சமாக பிறந்தவனுதலால் சமுசாரத்தை விரும்பான். விவாஹ யத்தனம் நீங்கள் செய்யா திருந்தால் அவன் நம்மைவிட்டு கானகத்திற் சேகான். சமுசாரத்தில் நுழையாமலும் வீட்டையும் விடாமற் பிடித்திருந் திருப்பான். இப்பவு மவ னனேக அமானுஷ கிருத்தியங்களைச் செய்து உலகத்தி லனேகரை உத்தரிப்பான். ஆசாரியபுருஷனுகி அனேக சிஷர்களைச் செய்வான். அவனுக்காக நீங்க ளலைச்ச லடையவேண்டாமென்று சொல்லத் தாய் தந்தைகள் பயமற்று சமாதான மடைந்திருந்தார்கள்.

கானகத்திற் சென்ற பிள்ளை நாராயண னென்பவன், பஞ்சரத்தி லிருக்கும் பக்ஷி வெளிப்பட்டு பறக்கலுற்றது போல, மனித சங்கத்தை விட்டுச் சென்றுர். அவர்கள் சங்கத்தால் வரும் பயம் கொடிய மிருகங்களுடன் கூடினும் வாராதென் றெண்ணி அரை

ஞானும் கௌபீனமு முடையராய், பிரபஞ்ச புத்தியைவிட்டு பரமார்த்தத்தை அறிவதற்கு எப்போது அனுகூலிக்கு மென்று பெருமூச்சு விட்டுக்கொண்டு மாருதிராயரை மனதி லெண்ணிக் கொண்டு தோத்திரம் செய்யலுற்றார். ஜயஜய பிராணேச நந்தனரே! அனாத ரக்ஷகரே! பக்தபூஷணரே! சீதாசோக விநாசரே! பதினோராவது ருத்திர மூர்த்தியான மாருதிராயரே! இராவணனுடைய மதத்தை யடக்கினவரே! லங்கையைத் தகித்தவரே! சஞ்சீவி பர்வதத்தைக் கொண்டுவந்து ஸ்ரீ லக்ஷ்மணரை எழுப்பினவரே! பரதேசியான என்னையே னிப்படி விட்டுவிட்டீர். என் இன்னும் வாராதிருக்கிறீரென்று கூப்பிட்டும் வாராமையால் தேகத்தின்மீ தாசையை விட்டால் தேவனைக் காணக்கூடு மென்று செடிகளிலிருந்து சில கொடிகளைக் கொய்து தன் பாதங்களிற் பிணைத்து விருக்ஷத்தின் கிளையி லதனைக்கட்டி தேகத்தை தொங்க விட்டுக்கொண்டு ஆஞ்சநேயரை மனதி லெண்ணி அழைக்கலுற்றார். ஸ்ரீராமர் திருவைகுண்டத்திற்குச் செல்லுமளவில் தேவரீரை அவருக்கு தாஸராக உலகிலிருக்கச் செய்தார். கிருபை அபாரமாக உடைய ஓ பரமமூர்த்தி! உலகத்தில் பக்தர்களுக்குச்சிநேகிதர் நீரே யாவீர், ஓ மாருதி நந்தனரே! மாதா பிதாக்கள்நீரேயென்று நம்பியிருக்கிறேன். நீ ரிப்பொழுது வாராவிடில் இச் சரீரத்தை மாய்த்துவிடுவேன். கருணைபாருமென்று அனேக விதங்களாகத் தோத்திரங்கள் செய்ய, ஆஞ்சநேயர் கிருபையுடையவராய் சூரிய னொளியைப்போன்ற திருமேனியுடன் தோன்றி கால்களில் கட்டி யிருந்த கொடிகளை அவிழ்த்து உடம்பை துடைத்து அணைத்துக் கொண்டு இவ்வள வாயாசமேன் எடுத்துக்கொண்டாயென்று கையைப் பிடித்து பஞ்சவடிக்குப் போவோமென்று வழி நடந்து வருமளவில் ஆஞ்சநேயர் அவரை நோக்கி என்னுடைய அம்சமாக நீ பிறந்தாய், சீதாராம ருனக்கு செய்யவேண்டிய ஹிதங்களைச் செய்வாரென்று சொல்லிக்கொண்டு பஞ்சவடியைச் சேர்ந்தனர். அவ்விடத்தில் சாயங்கால வேளையிற் ஜனங்க ளதிகமாகவும் பக்தஜனங்கள் பஜனை கீர்த்தனைகளைப் பாடிக்கொண்டும் யிருந்தார்கள். நடு ராத்திரியில் யாருமில்லாத வேளையில் ஏகாந்தத்தைக் கண்டு இருவரும் சன்னிதிக்குள்ளே சென்று பார்க்கு மளவில் வில்லம்புகளும் சகலாபரணங்களும்

கிரீடமும் சூரிய தீப்தியைப் போன்ற திருமேனி காந்தியும் கைகளில் கடக கங்கணங்களும், கழுத்தில் கௌஸ்துபமாலையும், இடுப்பில் அரைஞாணும் கால்களில் தண்டை சலங்கைகளும், மகா சோபையுடன் கூடின சுந்தரமான ரூபத்தை ஆஞ்சனேயர் கண்டு பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்க, பெருமாள் கிட்டிருக்கு மொருவனை யிவ்விடம் கொண்டுவந்த தென்னென்று கேட்க, ஆஞ்சனேயர் அவரைக் கண்டு ஸ்வாமீ! என்னுடைய அம்ஸமாக இவனிவ்வுலகிற் பிறந்தான். தேவரீருடைய கிருபையைக் காட்டி மேன்மை செய்யக்கடவீர். அவன் தேவரீர் திருவடிகளை சரண மென்றிருப்பவன். இரக்ஷிக்கக் கடவீரென்றார். பெருமாளுமாஞ்ச னேயரும் பேசின பேச்சுகள் அப் பிள்ளையின் காதிற்பட்டு பெரு மாள் சொரூபம் கண்களுக்குத் தோன்றவில்லை யாதலால் இதற்குக் காரண மென்னவென்று அப்பிள்ளை ஆஞ்சனேயரைக் கேட்க, அவர் சொல்லுவார், ஆசாரியன் தனது ஹஸ்தத்தை வுன் தலை மேல் வையாததால் கடவுள் ரூபம் கண்களுக்குத் தெரியவில்லை யென்று சொல்லிப் பெருமாளை நோக்கி ஸ்வாமி! இவனுக் குபதேசித் தருளுமென்றனர். அப்பொழுது பெருமாள்தன் கையை அச் சிறுவன்தலைமேல் வைத்துத் தாரக மந்திரத்தைச்சொன்னார். உட னே அப்பிள்ளை தாரக நாதனைக்கண்டு ஆனந்தத்துடனிருக்க, ஸ்ரீ ராம ரவனைப்பார்த்து உலகி லுன்னை ஜனங்கள் புகழ இராமதா சனென்று யிருக்கக் கடவாய். இராம நாமத்தை யுபதேசித்து அ னேக சிஷரை வஸ்ய மாக்கி பக்தியிற் பிரவேசிக்கச் செய்யக் கட வாய். மன்னிக்கத் தகுந்த வஸ்திரமொன்றுனக்குக் கொடுப்போம். அது நா மாரண்ணியத்திற்கு சென்றபோது உடுத்திக்கொண்டதா கும். இது வுனக்குத் தீக்ஷையாமென்றும் அதைக்கொண்டு நீ உல கத்திற்கு ஹிதத்தைச் செய்வாயென்றும் சொல்லி அவ்வஸ்திரத் தைக் கொடுத்தார். அப்பொழுது இராமதாஸர் பெருமாளைக் கண்டு ஓ சருவேஸ்வரரே! நீரஜநாபரே! உம்மைவிட்டு நானெப் படி போவேன்? உமது சொரூபத்தைச்சேர்ந்து அதனை விடுவதெப் படி? சகுண ரூபத்திற் சகல சேவைகளும் செலுத்தச் சுகமா கும். அநந்த கலியாண குணங்களுடைய தேவரீரை பக்தியுடன் பாடிக்கொண்டு இடைவிடா திருப்பது நன்மை, தேவரீர் தீன பந்துவெனும் விருதை அடியேன் விஷயமாய்த் தெரியப்படுத்

தினீர். தேவரீரிடமே அடிமை யிருப்பது சரியாகு மென்று சொல்ல பெருமா ளப்பிள்ளையை நோக்கி நா மெப்பொழுது முன்னிடமே யிருப்போம். நீ தியானம் செய்யும் சமயத்திற் பிரேமையுடன் வருவோமென்று சொல்லி ஆஞ்சனேயரைக்கண்டு இப்பிள்ளையினுடைய வாஞ்சிதார்த்தங்களை வஞ்சனையின்றி கொடுக்கக் கடவாயென்று சொல்லி அனுப்ப அவர்கள் பஞ்சவடியை விட்டு "டாகிலி" யெனும் கிராமத்தில் வந்து ஆஞ்னேய ரிராம சரித்திரத்தை இராமதாஸருக்குச் சொல்லத் தொடங்கினர், அது ஹனுமத் ராமாயண மெனும் ஸம்ஸ்கிருத காவ்யமாம். அதனைப் பகற் காலங்களில் வாசித்து இரவில் கதாரூபமாக ஜனங்களுக்கு இராமதாசர் வியாக்கியானம் பண்ணுவார். சிலநா ளவ்விட மிருந்தபிறகு ஆஞ்சனேயர் இராமதாசரால் சத்கரிக்கப்பட்டு சேதுவிற்குச் சென்றனர், போகுஞ் சமயத்தி லிராமதாஸரைக்கண்டு பூஜைவேளையில் நீ பாவபந்தத்தா லெண்ணினல் நான் வருவேன். நீ பயப்படவேண்டாமென்று சொல்லிச் சென்றனர்.

டாகிலியெனும் கிராமம் பஞ்சவடிக்கு ஐந்து கோசு தூரத்திலிருக்கும், அவ்விடத்திற்கு பண்டிதர்க ளப்போதைக் கப்போது வருவார்கள். இராமதாஸர் கீர்த்தனை செய்தால் பிரியத்துடன் கேட்பார்கள். இவருக்கு பிரேமை பக்தி மிகுதியா யிருப்பதைக் கண்டு மேன்மையுடன் கொண்டாடுவார்கள். அவர்களில் உத்தவனெனு மொருவன் இராமதாசருக்குச் சரணுகதியாக வந்தான். அவனிடத்தில் வைராக்கியமும், பக்தியும், ஞானமு மிருக்கக்கண்டு இராமருடைய கருணைக்குப் பாத்திர னென்று அனுக்கிரகம் செய்தார். நெறிதப்பாமல் சிஷனும் ஆசாரிய சேவைகளில் நிலைமை பொருந்தி யிருந்தான். அவ்விடத்தி லோர் ஆஞ்சனேய மூர்த்தியை இராமதாசர் ஸ்தாபித்து அபிஷேகம் முதலானவைகளை விசேஷமாகச் செய்வித்தார். பிராம்மண ஜனங்களுக்குப் போஜனமும் மிகுதியாக நடந்து வந்தது. மாருதியு மவ்விடத்தில் மூர்த்தீகராகி மகிமைக ளனேகமாகக் காண்பித்தார். ஓர்நாள் இராமதாஸர் உத்தவனைப் பார்த்து சொல்லுவார், உதய காலத்திலெழுந்திருந்து ஸ்நானம் பண்ணி நியமனத்துடன் பூஜையை ஆஞ்சனேயருக்குச் செய்து அக்ஷய பாத்திரத்தை ஏந்திக்கொண்டு பிச்சை வாங்கி அதிதிக்கு அன்னமிட்டு நீயும் பக்ஷிக்கக் கடவாய்.

யாவரேனும் விரும்பிப் பிரார்த்தித்தார்களாகி லவர்களுக்கு மந்திரோபதேசத்தைச் செய்யக்கடவை. இந்த நியமனத்துட னிருக்கவேண்டுமென்று திட்டப் படுத்தி இரவுகாலத்தி லெவர் கண்ணுக்கு மகப்படாம லரண்ணியத்திற்குச் சென்றனர்.

இராமதாசர் கோதாவரிக்கு தென்திசை யரண்ணியங்களிற் சஞ்சரித்துக்கொண்டு கிராமங்களில் தான் பிரவேசியாமல் கந்தமூல பலங்களைப் பக்ஷித்துக்கொண்டு பிசாச விருத்தியை அவலம்பித்து மனிதர் சன்மானத்திற்குத் தானுடன்படாமல் இராக்காலங்களில் துஷ்ட மிருகங்களி னடுவி லொண்டியா யிருக்கும் சமயத்தில் இராமரே எனது நர்தன், இராமரே எனது தனம், இராமரே தகப்பன், இராமரே தாயார், இராமரே எனது குருவு, இராமரே எனது மித்திரர், இராமரே எனது பந்து, இராமரே எனது குலதெய்வம், எனது குலகோத்திரங்களு மிராமரே, ஸ்ரீராமரைத் தவிர வேறொருவரு மில்லையென் றிவ்விதமாகத் தான் பாட்டுகளனேகமாகப் பாடிக்கொண்டு வழிநடந்து கிருஷ்ணா நதி தீரத்திற்குச் சென்றனர். எண்சித்திக ளெத்தனை வரினும் அவைகள் நரக ஹேதுவென்று வெறுத்திருப்பர். ஸ்ரீவைகுண்டம் கைலாசங்களை தான் அடைய வேண்டுமென்று சிந்தித்திரார், மோக்ஷம் வேண்டுமென்றும் கோரார். இவ்விதமான நிலையுடன் மஹேறெனும் க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்து ஒருநாள் நித்திய நியமனப்படி பூஜைகளைச் செய்து ஆஞ்சனேயரைத் தியானிக்க அவர் பிரஸன்னராகி பதின்மூன் றெழுத்துடைய பிரபல 'சரணுகெதி' மந்திரத்தைச் சொல்லி மூன்றறைகோடி ஜபம் செய்யவேண்டுமென்று கட்டளையிட்டுச்செல்ல, இராமதாஸர் மகத்தான தவத்தைச் செய்ய வாரம்பித்தார்.

இராமதாஸர் தைரியமுடையவராகித் தவத்தைச் செய்துக்கொண்டிருக்க தேவஸ்திரீகளைக் கண்டு தனக்குள், நான் தேவலோகத்திற்கு வருவேனென்று இப்பெண்களை யனுப்புவது இந்திரனுடைய வேலையென் றறிந்துக்கொண்டு, சற்றேனும் பயமின்றி தன் மனதைச் சமூலமாக இராமர்மேல் வைத்து, இராமரே ஸர்வமென்பது என் தருமமாகும், இராமரே தெய்வம், இராமரே நியமம், இராமரே சமுசார மோசகர், இராமரே தியானம், இராமரே சத்வம், இராமரே பார்வை, இராமரே ஆத்மா, இராமரையே

காண்பேன், இராமரே துணை, இராமரே பிரம்மம், இராமரே சர்வமும், இராமரைத்தவிர வேறென்றில்லை யென்றிவ்வித நிச்சயத்தை யுடையவராயிருக்க அப் பெண்களாடிக்கொண்டு மெதுவாகச் சமீபத்திற்கு வந்து கண் சைகைகளைக் காண்பிக்க இராமதாஸரவர்களைப் பார்த்துக் கிட்ட வரக்கூடாதென்று கட்டளையிட்டு, பிநுகபாணியைக் காமனடித்தான் அதனு லவ னனங்கனுன், சுகப்பிரம்ம ருஷியை தேவதா ஸ்திரீகள் வலையிற் போட எத்தனிக்க அவர் வைராக்கிய வாக்கியங்களால் தன்னை அணுக ஒட்டாமற் செய்தார், நீங்கள் துச்சர்கள், தூரத்தி லிருக்கக்கடவீர்களென்ன, அவர்கள் லஜ்ஜை யுடன் பராஜிதர்களாகி வந்த வழியே போய்விட்டார்கள். இராமதாஸ ரவ்விடம் பன்னிரண்டு வருஷந் தவத்தைச் செய்ய ஸ்ரீராமர் அவருக்கு பிரஸன்ன ராகாதிருந்தார். அப்பொழுது இராமதாஸர் ஆஞ்சனேயரைப் பிரார்த்திக்க அவர் பிரஸன்ன ராகவே, ஸ்வாமி! மூன்றரை கோடிக்கு மேலாக ஜபம் நடந்தது. பெருமாள் தரிசனங் கொடுக்கவில்லையே யென்ன ஆஞ்சனேயர் பிரீதியுடன் சொல்லுவார், சாதனபுத்தியைக் கொள்ளாமல் அதனை விட்டுவிடு. அனுதாப முடையவனுய் அவரைப் பிரார்த்தித்தாயாகில் ஸ்ரீராமருடைய கருணையை யடைவாயென்று புகல, இராமதாச ரப்படியே செய்வேனென்று சொல்ல மாருதி மறைந்தருளினர். அப்பொழுது இராமதாஸர் வரகவித்வங்களைச் சொல்லலுற்றுர்.

ஓ ஸ்ரீரகுராமரே! சித்தகல்மஷத்தைப் போக்குகிறவரே! அடியேன்மீது கிருபை செய்யவும். தேவரீரைத் தவிர மனது மற்றொன்றைக் கோருவதில்லை. அடியேனைக் கிருபையுடன் பாரும், ஓ ராமா! அடியேன் தேவரீருடைய ஆஸ்ரிதன். அரிஷ்ட வர்க்கங்களை அணுகாதபடி செய்யும், ஓ ராமா, பிரமைகொண்ட மனதிற்கு ஹிதமொன்றும் தோன்றவில்லை. பரமகடினமா யிருக்கிறதே! ஓ ராமா! இருளடைந்த தேகபுத்தி இறக்கவில்லையே! ஓ ராமா! உம்மிடத்தில் உபரதி சுகத்தையடைய விரும்பினேன். அதை தேவரீர் தந்தருளவேண்டும். நீர் சரண்ணியர், கிருபையுடனென்னை உமக் காக்கிக்கொள்ளும். நிமிஷ நிமிஷத்திற்கு மிராம ரூபத்தையே யென் மனதில் நிறுத்தும். தேவரீர் சர்வகாலமும் சமீபத்திலிருக்கின்றீர். அதனை நானறியக் கூடவில்லை. ஓ ராமா! நானே

னும் பாவனே என்னிட மிருக்கிறபடியால் நான் மகாபாவியாவேன், தேவரீர் பதிதபாவனரானபடியால் அடியேனே பாவனமாக்கக்கட வீர். ஜானகி ஜீவனரே! அடியேனுடைய மனதைத் திருப்பி யருளி ஞானகர்வத்தையு மபஹரித் தருளுமென்று வேண்ட, பெரு மாள் பிரஸன்னராகி இஷ்ட மென்னவென்று கேட்க, இராமதா ஸர் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, ஸ்வாமீ! தேவரீரை மறவா மல் சாம்பமூர்த்தி அனுதாபத்துட னிரவும் பகலும் நினைப்பில் வைத்திருக்கு மாப்போல் தேவரீருடைய திருநாமத்தை யென் வாக்கி லெப்பொழுது மிருக்கச் செய்யவும். இந்த இச்சையன்றி யும்மாணை மற்றொன்றில்லை யென்றார். பெருமா ளிதைக்கேட்டு சந் தோஷித்துத் திவ்ய ஞானத்தைப் போதித்துத் தெளிவை யுண் டாக்கிப் பின்னுஞ் சொல்லுவார், பிரஜைகள் அதிகாரிகளாகி வந் தால் தாரகமந்திரத்தை நீ யுபதேசித்து கிராம சமீபத்திற் பிக்ஷா டனே செய்துக்கொண் டிருக்கக் கடவாயென்று சொல்லி யருளி மறைந்துவிட்டார்.

பின்னர் வனத்தி னடுவி லிராமதாஸர் விசேஷ திருப்தி யடைந் தவராகி பூமியே ஆசனமாகவும், ஆகாயமே மண்டபமாகவுஞ் செய் துக்கொண்டு, விடியற்காலத்தி னீராடி பிக்ஷைக்காக கிராமத்திற் குச் சென்று பத்து வீடுகள் முன் நின்று "ஜயரகுவீர" என்று சப்தமிட்டு அவ்வீட்டார் கொடுக்கும் தானியத்தைக் கொண்டு வந்து கல்மே லரைத்து மாவாக்கி ஜலம் விட்டுப் பிசைந்து இலை களைச் சேர்த்து அதன்மேல் வைத்து அக்கினியை வளர்த்தி அத னுள் போடுமளவில் அது பாகமான உடன் அதனே கைக்கொ ண்டு ஒரிலையில் வட்டித்து தொன்னையிற் ஜலத்தைக் கொண்டு வந்து ஸ்ரீராமருக்கு அர்ப்பணம் பண்ணி இராம நாமத்தைச் சொ ல்லிக்கொண்டு பக்ஷணே செய்துவருவர்.

### சிவாஜி ராஜன்.

இவ்வித நியமத்துடனிருக்க ஒருநாள் சிவாஜியெனு மிராஜன் வேட்டை நிமித்தியம் காட்டிற்குவந்து துஷ்ட மிருகங்களை யடிக்க வவைகள் பயமடைந்து இராமதாசர் பின் வந்திருந்தன. அவரு மவைகளை வாருங்களென் றழைத்துச் சுற்றிலு மிருக்கச் செய்து தான் அந்த கோரமிருகங்களின் மத்தியி லுட்கார்ந் திருந்தார். அங்கு அரச னிராமதாஸரைக் கண்டு முன்னுக்குச் செல்லாமல்

நின்றுகொண்டு அம்மிருகங்களுடைய பயத்தினுற் சமீபம் போக சரிப்படாமல் மந்திரியை அழைத்து பின்பக்கமாகவே சைனியத்தைக்கொண்டு போம்படி கட்டளை யிட்டான். சாயங்காலம் வரைக்கும் அரச னவ்விடமே நின்றிருந்து வீட்டிற்குப்போகும் சமயத்திற் கிருஷ்ணுநதி பிரவாஹத்தி லோடும் சில ஓலைகளை யெடுத்துப் பார்க்குமளவில் நல்ல வர்த்தங்க ளடங்கிய சுலோகங்க ளவைகளில் எழுதி யிருக்கக்கண்டு, இவை இராமதாஸர் கவிகளே யாமென்றும் அவை தனக்கு கிடைத்ததால் தன்னிய னுனே னென்று மெண்ணி தன்வீட்டை யடைந்தான். மறுநாள் விடியற் காலம் ஸ்நானம்பண்ணி இராமதாசருடை தரிசனத்திற்குச் சென்ருன். அப்பொழுதும் அம்மிருகங்களின் மத்தியி லவரை யிருக்கக் கண்டு சமீபத்திற்குச் செல்ல சமயமன் றென்று அந்தத் தினமும் தன் வீட்டிற்குத் திரும்பிச் சென்ருன். இப்படியே பிரதி தினமும் பொழுது விடிந்தவுடன் கானகத்திற் கரசன் போவதைக் கண்டு மந்திரி முதலானோர்க ளனைவருங்கூடி அரசனை நோக்கி மஹாராஜரே! குடிகளுக்கு நன்மையாக ராஜ்ய பாரத்தை நடத்துவது க்ஷத்திரியருக்கு உத்தமான காரியமாகும். இதைவிட்டு கானகத்தி லிருக்கும் காட்டுமனிதரைக் காணச் செல்வது தகாதகாரியம். அவருடைய கவித்வம் உமக்கு பிரியப்பட்டாப்போல் காணுது, அதைக்காட்டிலு மதிகமாகக் கிரந்தார்த்தங்களைக் குதூஹலத்துடன் தெரியப்படுத்துவோம். அவ்விடமிருப்பவர் சாதுவானுல் நம்வீட்டிற்கு அவர் வந்தால் மன்னிக்கப்படுவார். இராஜனு யிருந்து தேவரீ ரவ்விடம் போவது தகுதியல்லவென்ருர்கள். இதைக் கேட்டு அரசனென்றுஞ் சொல்லாமல் இஷ்டசித்திக் கிடுபட்டவனுதலால் குருதரிசனத்திற்குப் போய்க்கொண் டிருந்தான். இப்படி யிருக்க ஒருநாள் இராஜன் தன் சேவகர்களைத்தூரத்தி லிருத்தி இராமதாஸரிடம் தனித்து செல்லுமளவில் இராஜனுக் கெதிராக அவர் வந்துக்கொண் டிருந்தார். அத்தருணத்தில் ஆஞ்சனேயர் வரவே, இராமதாஸ ரவருக்குப் பக்தியுடன் சேவைகளைச் செய்துக்கொண் டிருந்தார். ஆஞ்சனேயர் திருமேனி காந்தியினு லரசன் கண்கள் மூடப்பட்டன. உடனே கண்ணைத் திறந்தமாத்திரத்தி லிராமதாசரொருவரையே கண்டான். பின்பு அரசன் கைகளைக் கூப்பிக் கண்களிற் ஜலம் பெருக அவ்விடம் நிற்பைதக்

கண்டு மனோசுத்தி யுடையவனென்று இராமதாசர் வரச்சொல்லி கை சைகையா லழைத்தார். அரச னவரிடம் சென்று பூமிமேல் விழுந்து தெண்டன் சமர்ப்பித்து அடியேனுடைய வபராதங்களை தேவரீர் பாராமல் அங்கிகரித் தருளவேண்டும், திரிவித தாபாக் கினி யென்னைத் தகிக்க லுற்றதென்று சொல்ல, இராமதாச ரெழுந் திருமென்ன அரச னெழுந்திருந்து ஸ்வாமி! அடியேன் பதிதன், பாவனுகைச் செய்யக்கடவீரென்ன, இராமதாச ரரசனை நோக்கி, பாரமார்த்திகத்திற்கும் பிரபஞ்ச தருமமான வரசாக்ஷிக்கும் பிர பல விரோதமாமே! என்னிலும் ஸாரதமரான (மிக்க சாரமான) வாசாரியரை நீ யடைவது சௌக்கியமாம். போகங்களை யனுப வித்துக்கொண்டு சுகமுடனிருமென்று சொல்ல, அரசன் ஸ்வாமீ! இந்த சர்வ ராஜ்யமும் தேவரீ ருடையதே. ஆக்கினையை மீராமல் அடக்கமுட னிருக்கக்கடவேன். தேவரீருக்குச் சரண மடைந் தேன். சதாசாரியரே! கிருபை பாருமென்று பிரார்த்திக்க, சாந்தபுருஷனென்று இராமதாசர் கண்டு ஸ்நானம் செய்து வரச் சொன்னார். அதைக்கேட்டு அரசன் சந்தோஷித்து ஆற்றிற் சென்று நீராடி ஈரவஸ்திரத்துடன் ஆசாரியரிடம் வரும் வழி யில் வனபுஷ்பங்களை யோரிலையிற் கொய்து மாலையாகக் கட்டி வைத்துக் கொண்டு ஒரு தொன்னையிற் ஜலத்தை கைக்கொண்டு பயத்துடன் ஆசாரியரிடம் கொண்டுவந்து வைக்க இராமதாசர் பன்னிரண்டு நமஸ்காரங்களைப் போடச்சொல்லிக் கட்டளை யிட் டார். அப்படியே அரசனும் அர்த்தம் பிராண சரீரங்களாசாரி யாதீனமென்று நமஸ்காரங்களைச் செய்து பாதுகைகளைச் சிரசின் மேல் வையுமென் றுட்கார்ந்தான். அப்பொழுது ராமதாசர் தன் கையை அவன் தலைமேல் வைத்து இராம மந்திரத்தைச் சொல்லி அதினர்த்தத்தையு மறிவித்து பூதகோடிகளிடம் தயை வைக்கக் கடவாய். சாதுக்களைக் கண்டால் சரணமடையக் கடவாய். பகவத் பூஜையை பால்மாறுமற் செய்யக்கடவாய், ஏகாதசிவிரதம் பக்தியு டன் நடத்தக்கடவாய், அனுதினமும் ஆஞ்சனேயரைச் சேவித் து வரக்கடவை. இவ்விதமாக ஹிதபரனுகி யிருப்பாயென்ன அரசனப்படியே ஆக்கினையை மீறமாட்டேனென்று ஆசாரியர் திருவடிகளை யலம்பி அந்தத் தீர்த்தத்தைத் தானருந்தி புஷ்ப ஹாரத்தை அவர் கழுத்திற் போட்டுப் பூசித்தான். இராமதாஸ

ரும் மதுரமான ஓர் பழத்தைச் சாப்பிட அந்த உச்சிஷ்டத்தை அரசன் பிரசாதமாகக் கொண்டான். பின்பு ஆசாரியரை யரசன் பார்த்து ஸ்வாமீ ! இந்த ராஜ்யமெல்லாம் தேவரீர் கைக்கொண்டு அரசாக்ஷி செய்வீர், அடியேன் தேவரீருக்கு சேவை செய்துக் கொண்டிருப்பேன், கிருபை பாருமென்ன, ஆசாரியர் சொல்லுவார், அதுசரியல்ல இராஜ்ஜிய மென்னுடையதே, எனக்காக நீ யரசாக்ஷியைச் சீராகச் செய்யக்கடவாய், நீ புனிதனுனாய், பட்டணத்திற்குப் போகலாம், பொழுதாச்சுதென்று சொல்ல, குருவாக்கியத்திற்கு தடை சொல்லாமல் அவரை விட்டுப் போவதற்கு மனமில்லாமல் பயத்துடன் தெண்டன் சமர்ப்பித்து சேனைகளுடன் நகரத்தைச் சேர்ந்தான். பிரஜைக ளனைவரு மரசனி ராமதாசரை ஆசாரியராக்கிக் கொண்டானென்று சொல்லலுற்றார்கள்.

மறுநாள் ஆசாரியருடைய தரிசனத்திற்காக அரசன் பூஜைக்குத் தகுந்த வஸ்துக்களுடன் வந்துப் பூஜித்துச் சென்றான். தினதினமு மிப்படியே வஸ்துக்களைக் கொண்டு வந்து பூஜித்துப் போவான். புரஜனங்களு மக்கானகத்திற்கு வரத்தொடங்கினார்கள். இதை இராமதாசர் கண்டு சகிக்காம லின்னமொரு அரண்ணியத்திற்குச் சென்றார். மறுநாள் அரசன் ஆசாரியருடைய தரிசனத்திற்கு வனம் வந்து அவரைக் காணமல் தேடிக்கொண்டு மூன்று நாள் பட்டிணியாயிருந்து ஆயாசப்பட, ஆசாரியரிதை யறிந்து வருத்தமின்றி அவனிடம் வர, உடனே தெண்டன் சமர்ப்பித்து அனேக விதங்களாக பூஜைகளைச் செய்து ஸ்வாமீ ! அடியேனுக்குத் தரிசனத்தை நிதமும் கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க ஆசாரியர் சொல்லுவார். ஆற்றின் வெள்ளத்தி லடித்துக் கொண்டு போகும் ஓலைகளை வாசித்துக் கொண்டிரும். மானச பூஜையைசெய்யும்பொழுது என்னை நீ பார்த்துக்கொண்டிருப்பாய். விடியற்காலத்திற் றினந்தோறும் தரிசனங் கொடுப்பேன், இப்பொழுது வீட்டிற்குப் போவென்று பிரீதியுடன் சொல்ல, அவனவ்வாக்கினைப்படி நகரம் சென்றான். பின்பு இராமதாஸர் அங்கு சஞ்சரித்துக் கொண்டு மாஹோளி யெனும் கிராமத்திற்கு வந்தனர். அவ்விடத்தில் பிசாசவிருத்தியை அவலம்பித்து பிக்ஷாடனம் பண்ணிக்கொண்டு விசால விருக்ஷங்கண் மேற் குதிப்பதும் விநோத கிரீடைகளைச் செய்வதும் பிள்ளைக ளவர் பின்றொடர்ந்து கூச்சலிட

பெரிய விருக்ஷங்கண் மேலேறி கற்களை யெறிவதுமாக விருந்தார். சிலகால மிப்படியிருந்து பின்பு பாலவிருத்தியை யவலம்பித்து பிள்ளைகளுடன் விளையாடிக் கொண்டிருப்பர். ஒருநா ளாற்றின்கரை யோரத்திற் பாலகருடன் புள்ளாடிக் கொண்டிருக்க அப்புள் வேகத்துடன் வந்து இராமதாசர் நெற்றியிற் பட்டு இரத்தம்வர, நோயினால் மூர்ச்சை யடைந்தவர்போல கிழேவிழுந்து சமாதிநிலைமையினின்றார். பிள்ளைக ளனைவரும் பிராணன் போயிற்றென்றும் இதராளறிந்தால் நம்மை சிக்ஷிப்பார்க ளென்று மெண்ணி ஒருவருக்குஞ் சொல்லாமல் ஆற்றிலோர் பள்ளத்தை வெட்டி பிணமென்று புதைத்து விட்டு வீடுகளுக்குச் சென்றார்கள். அரசன் குருதரிசனத்திற்கு வனத்தைத் தேடிக்கொண்டு வந்தான். அவரைக்காணாமையால் குதிரைசவாரிகளை யனுப்ப, அவர்கள் நாலுதிக்குகளிலும் பார்த்து அவ்வூரைச் சந்து சந்தாகச் சோதிக்கத் தொடங்கி அவ்வூராரைக் கண்டு இராமதாச ரெவ்விடமிருப்பாரென்று கேட்க அவர்கள் சிலதினங்கள்முன் னிவ்விடம் பிள்ளைகளுடன் விளையாடிக்கொண் டிருந்தார், இப்பொழுதெங்கு சென்றாரோ தெரியாதென்றந்த சேவகர்களுடன் சொல்லி அனுப்பினார்கள். அவ்வூராரனைவரும் தங்கள் பிள்ளைகளை யழைத்து இராமதாசர் சங்கதியைச் சொல்லவேண்டுமென்று கேட்க அவர்க ளுண்மை சொல்லாமல் பயந்திருந்தனர். அவர்களி லொரு பிள்ளையை ஒருவ னொருபக்க மழைத்துப் போய் மேன்மைப் படுத்திச் சங்கதியைத் தெரிவிக்கச் சொல்ல அப்பிள்ளை யனைத்தையும் வெளியிட்டான். அம்மனித னிதர ஜனங்களுக்குச் சொல்ல எல்லோரும் பயமுடையவர்களாகி இராஜன் சிக்ஷித்துவிடுவானே! என்ன செய்வோமென்று ஏக்கமுற்றிருக்க அவர்களுக்குள் ஒருவன் சொல்லுவான்; அரசனுடைய குருவை புதைத்திருக்கிற ஸ்தலத்திற்கு நாமெல்லோரும் சென்று பிணத்தை வெளியிலெடுத்துத் தகனம் செய்துவிட்டால் தொந்தரை வாராதென்று யோசனை சொல்ல எல்லோரும் சம்மதித்து அந்தப் பிள்ளையைக் கூட அழைத்துக்கொண்டு அவரை புதைத்த யிடத்தில் மணலை நீக்கினார்கள். அம்மனிதர் கைப்பட்ட மாத்திரத்தில் இராமதாச ரெழுந்திருந்து ஓர் குதி குதித்து பிரஜைகள் பார்த்துக்கொண்டிருக்கக் காட்டிற்குச் சென்றார். ஏழுநாள் சமாதிகூடி அவரவ்விடமிருக்க அரசன் வனமெல்





ஜயராமர். జయరాముడు. தத்துராநாபிகன். దత్తునాంపికుడు. மஹோளிபிராம்மணன். మహోశిబ్రాహ్మణుడు.

லார் தேடிக்கொண்டிருந்து அன்னபானங்க ளெடுக்காமல் துக்கித்துக்கொண் டிருந்தான். அவ்வேளையி லிராமதாசர் வந்து அரசன் முன்னின்றார். இராஜனதிக சந்தோஷத்துடன் ஆசாரியரைப் பூஜித்து சமையற் செய்வித்து சகலரையும் பக்ஷணை செய்வித்து தானும் பக்ஷித்து ஆசாரியருக்குத் தெண்டன் சமர்ப்பித்து ஸ்வாமீ! தேவரீர் பட்டணம் வரவேண்டுமென்று பிரார்த்தித்தான். அதற்கு இராமதாஸர் நா னிஷ்டமானபோது வருவேன். நீ யிப்பொழுது நகரத்திற்குச் செல்லுவாயென்று கட்டளையிட்டனுப்பினர்.

ஜயராமர்.

அத்தேசத்தில் ஜெயராம ரென்றொருவர் ஸ்ரீகிருஷ்ணமூர்த்திமேலதிக பக்தியை செலுத்திக் கொண்டிருந்தார். அவர் இராமதாசருடைய செய்கைகளைக் கேட்டு பிரியமுடையவராகி அவரிடம் வந்து விநய விதேய பூர்வகமாய் பிரேமானந்தத்துடன் சொல்லுவார், நீர் ஆரியரிற் சிரேஷ்டராவீர், பூர்ணபக்தி யுடையீர், உம்முடைய சாங்கத்தியத்தை நான் கோரிவந்தேன், கிருபையுடனங்கிகரிக்கக் கடவீரென்ன, இராமதாச ரவருடன் கூடி பிரேமபாவத்தால் பகவத்குணங்களைப் பிரியத்துடன் சொல்லிக் கொண்டிருந்து, தான் பத்து வீடுகளில் பிக்ஷை வாங்கி வரும் அன்னத்தை இருவரும் பக்ஷித்துக்கொண் டிருப்பார்கள். அவ்வனத்திலிருக்கும் மிருகங்கள் தவிர மற்றொருவ ரவ்விடம் வாராமலிருந்தனர். இவ்வண்ண மவ்விருவரே அங்கிருக்க இராமதாசர் ஆயிரம் பிராம்மணர்களுக் கன்ன மளிக்கவேண்டு மென்ன, ஜயராமரும் பிராம்மணர்களை யழைத்துவாருமென்று சொல்ல, இராமதாஸர் சமீபத்திலிருக்குங் கிராமங்களிற் சென்று ஆயிரம் பிராம்மணர்களுக்கு அன்னமளிக்கப்படும், அனைவரும் வரக்கடவீர்களென்று பிராம்மணர்களுக்குச் சொல்லி தன்னிருப்பிடம் வந்தார். ஜயராமர் ஓர் பந்தலை யேற்படுத்தி சித்தியை விநியோகித்து சகல பதார்த்தங்களையும் சித்தப்படுத்தினார். பிராம்மணர்க ளனைவரு மக்காட்டிற் சென்று சௌக்கியத்துடன் பக்ஷித்து இராமதாசரால் பூஜிக்கப்பட்டு இருப்பிடங்களிற் சேர்ந்து அவருடைய கீர்த்தியை பிரபலப்படுத்தினார்கள். சிலகாலம் ஜயராம ரவரிடமிருந்து பின்பு விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடஞ் சென்றார்.

தத்து நாவிதன்.

அக்காட்டி லிராமதாசர் வசித்திருக்கு மளவில் தத்துவென்னு மோர் நாவிதனவரிடம் வந்து சரணுகதி யடைந்து நிற்க, இராம தாச ருபதேசம் செய்யேனென்ன, அவன் தேவரீருக்குச் சேவை களைச் சும்மா செய்துக்கொண் டிருப்பேனென்ன, இராமதாசர் நீ எப்பவு மிவ்விடமே வாசமாயிருப்பாயேல் நன்றுமென்ன, அவ னுமப்படியே யென்று சேவைகளைச் செய்துக்கொண்டு ஸ்ரீராம ரை சிந்தித்து பரிசுத்த மனதுடன் பிக்ஷைக்குச் சென்று தானி யங்களைக் கொண்டுவருவான். இராமதாச ரதனைப் பாகஞ்செய்ய இருவரும் பக்ஷித்து வருவார்கள். இப்படி சிலகாலம் நடக்க ஓர் நாள் இராமதாச ரவன்மே லனுக்கிரக முடையவராய் உபதேசத் தைச் செய்தருளினர். பட்டணத்தி லரச னொருநாள் குருவைத் தரிசிக்கவேண்டுமென்று விரும்பினன். அதை இராமதாசர் கண் டறிந்து அவ்விடம் செல்லப் பிரயாணமானர். நாவிதன் ஜோல்னு வுடன் பின்தொடர்ந்தான். இராமநாமத்தைச் சொல்லிக்கொண்டு, "சதாரா" வெனும் பட்டணத்திற்கு அவர் நடக்கத் தொடங்கி வழியில் ஸ்ரீராமருடைய குணசேஷ்டிதங்களைச் சிந்தித்துக்கொ ண்டும் பாடிக்கொண்டும் அபாரமான பிரம்மானந்தத்தி லமிழ் ந்து நடக்க அவ்விருவரும் பட்டணச் சமீபம் வந்தார்கள். அவ்வி டத்தி லோர் கிணற்றைக் கண்டு அதி லிராமதாசர் ஸ்நானம் செய் துக்கொண்டிருக்க, அதினருகி லோர் சோளக் கொல்லை கதிர்விட் டுப் பக்குவத்திற்கு வந்திருப்பதை நாவிதன் கண்டு, ஸ்வாமி! நாலு கதிர்களைக் கொண்டுவருகிறேன், பக்ஷிக்கலா மென்ருன். ஆசாரிய ரதைக்கேட்டு நமக்கிந்த வேலை கூடாது, சிக்கிரத்திற் பட்டணத் தைச் சேருவோம், அவ்விடத்திற் சாமக்கிரிகையைக் கொள்ள லாம், கதிர்களை அறுக்கவேண்டா மென்றுர். இப்படி கூடாதெ ன்று சொல்லியும் அவ னக்கதிர்களை அறுத்தான். அக்கொல் லைக்குக் காவலாளிக ளுடனே வந்து தட தட வென்று நாவிதனை அடித்து தியானத்திலிருக்கிற இராமதாசரையும் முதுகின்மேற் சவுக்கைக் கொண்டடிக்க அவர் சிரிக்கலுற்றுர். அக்காவலாளி கள் "மசோபா" தேவதைக்குப் பூஜை போடாமுன் தானியம் எச்சிலானல் அது வளராது, நீரேன் சிரிக்கின்றீரென்று சொல் லிக்கொண்டு தங்கள் மனதில்பக்தரை அடித்துவிட்டோமே யென்ற

அனுதாபத்துடன் போனார்கள். நாவித னதிக விசனத்துட னழுதுக்கொண்டிருக்க, இராமதாச ரேனழுகிறு யென்ன, நாவிதன் ஸ்வாமி! தப்பித மென்மீ திருக்க தேவரீர்மேல் தாடனங்கள் நேர்ந்தனவே! அதை நிவர்த்திக்க வென்றால் முடியாமற் போயிற்றே யென்ன, இராமதாசர் சொல்லுவார். இதற்கு விசன மேதுக்கு? இராம பக்தர்கள் மானவ மானங்களை எண்ணார்கள், ஒருவனடித்தாலும் தமக்கல்லவென் றிருப்பார்கள், உலகி லவர்கள் தைனியத்தை யடையார்கள், யாரேனும் திட்டினாலும் தாமதனை மனதிலெண்ணார்கள், திரவியம் சம்பத்து முதலாகியதுகளைத் திருடர் கொண்டுபோயினும் அவைகளைத் திரும்பி அடைய யத்தனியார்கள். பிரீதியுடன் இராமனைத் தொழுதுக்கொண்டு பெருமையுட னிருப்பார்கள். கதிர்களைத் தின்பதை சுகமென் றிருந்தா யன்றோ? அதனா லடிகளைப்பட்டு துக்கத்தை யடைந்தாய். இவ்விரண்டையும் போக்கடிக்கும் வைராக்கியத்தைப் பொருந்தக் கொள்ளவேண்டும். அப்பொழுது இராமருடைய கிருபை யுண்டாகும். இச்சங்கதியை அரசனுக் கறிவிக்கவேண்டாம், என்னுடைய ஆக்கினையிதுவென்றுசொல்லி நகரத்திற்கு சென்றனர். அரசனும் சேனைகளுடன் ஆசாரியரைக்காண நகரத்தைவிட்டு மார்க்கத்தில் வந்துக்கொண்டிருந்தான். தூரத்திற் றனது ஆசாரியரைக் காணவே பல்லக்கை விட்டிறங்கி அருகில் வந்து நமஸ்கரித்து அப்பல்லக்கி லவரை ஏற்றி வெண்சாமரங்களைத் தான் போட்டுக்கொண்டு தன் நகரத்திற் கழைத்து வருமளவில் சகல வாத்தியங்கள் முழங்கின. அஷ்டப்பிரதானிகளு மனேக வந்தணர்களும் பின் வந்தார்கள். இராஜன் பாதசாரியாய் நடந்தான். இவ்வைபவத்துடன் இராமதாசர் அரசனரண்மனைக்குட் சென்றார். அவ்விடத்தி லரசன் தன் கொலு மண்டபத்திற் கவரை யழைத்துவந்து தனது சிம்ஹாசனத்தின் மீது உட்காரவைத்து அமிதானந்தத்துடன் அனேகவித பக்ஷய போஜ்யங்களைச் சமையற் செய்வித்து சித்தப்படுத்தினன். பிராம்மணர்க ளனைவரும் ஸ்நானஞ்செய்து போஜனத்திற்கு வந்து, இலைகளில் விசேஷ பதார்த்தங்களைக்கண்டு சந்தோஷித்தனர். அரச னப்பொழுது ஆசாரியருக்கு வென்னீரால் தானே ஸ்நானம் செய்வித்து உடம்பைத் தேய்க்கு மளவில் தழும்புகளிருக்கக்கண்டு இதென்னவென்று கேட்க, ஆசாரியர், அதொன்றுமில்லை

காண் என்று சொல்ல, அரசனிதற் கேதோ காரணமிருக்கிறதெ ன்று மனதில் நினைத்து அவருக்கு ஸ்நானம் பண்ணிவைத்து திலக மிட்டு உயர்ந்த வாசனத்தி லுட்காரவைத்து திருவடிகளைக் கழுவி அத்தீர்த்தத்தைப் பானம் பண்ணி, இலையைப் போட்டுப் பக்ஷ்ய போஜ்யங்களை, பக்வான்னங்களை அனேகமாக வட்டித்து இதர பிரா ம்மணர்களையும் போஜனத்திற் குட்காரச் சொல்லி நியமித்து நிற்க, அப்பொழுது இராமதாசர் இராமார்ப்பணமென்று சொல்லி ஆபோசனத்தைக் கொள்ள சகலரும் பிரீதியுடன் பக்ஷித்தார்கள்.

அரசன் ஆசாரியருடைய எச்சிலிலையை கைக்கொண்டு தனி யே சாப்பிட வுட்கார்ந்து தத்துநாவிதனையு மழைத்து அவனுக்கு மோர் இலையைப் போட்டு பிரசாதத்தை வட்டிக்கச்செய்து அவனை நோக்கி ஆசாரியர் முதுகில் தழும்புக்கு ஏதுவென்னவென்று கேட்க, அவன் சொல்லக்கூடாதென்னு மாசாரிய ராக்கினையை அறிவித்து அதை நான் மீறமாட்டேன், அப்படி மீறி நடப்பது யாருக்கும் விதியாகாதென்று சொல்ல, அரசன் அப்படி நீ சொல் லாவிடில் அன்ன மருந்தேனென்ன, அவன் தலை குனிந்துக்கொண் டொன்றுஞ் சொல்லாமலிருந்தான். அரசன் திரும்பி நீ சொல்ல வேண்டுமென்று வற்புறுத்த அவன் சோளக் கொல்லையில் நடந்த சங்கதியைச் சமூலமாகச் சொல்லிவிட்டான். உடனே அரசன ந்த கொல்லைக் காவலாளிகளை யழைத்துவரும்படி குதிரைமேல் சேவகரை அனுப்பினன். பின்பு அரசனும் நாவிதனும் பக்ஷி த்து ஆசாரியரிடம் வந்தனர். ஸ்ரீராம கீர்த்தனையைச் சகலரும் கேட்டால் க்ஷேமகரமாமென்று மிருதங்கநாத சுஸ்வரங்களுடன் இராமதாசர் சொல்ல வாரம்பித்து இராமரே வாரும், இராமரே வாருமென்று பெருமாளை அழைத்து பிரஜைகளை நோக்கி இரா மரே சகலகாரணர், யானெனதெனும் நிந்தித பாவத்தை இராமரே நீராகச் செய்பவர். சாரங்களுக் கெல்லாம் சாரதமரானவ ரிரா மரே, அவரிடத்தில் சத்பக்தியைக் கோரிச்செய்தால், கிருபையுட னவர் நம்மிடம் கூடியிருப்பர். இராமரைச் சேவித்துக்கொண் டிருந்தால் கற்பகவிருக்ஷமும், சிந்தாமணியும், காமதேனுவு மிவ் வுலகில் அல்பமா மென் றிவ்விதமாகக் கீர்த்தனை செய்ய எல்லவ ருஞ் சந்தோஷித்தார்கள். அரசனும் சேவாதுரந்தரனுகி ஆனந் தத்துட னிருந்தான். கீர்த்தனை முடிந்தபின், மந்திரி இராஜனிடம்

வந்து கொல்லைக் காவலாளிகள் வந்தனரென்று தெரிவிக்க, இராமதாஸ ரிதைக்கேட்டு, அம்மனிதரைத் தன்னிட மழைத்து வரச்சொல்ல, அரசன் மந்திரிக்கு உத்தரவு செய்து அவர்களை வரவழைத்தான். இராமதாச ரவர்களுடைய பாசக் கட்டுகளை அவிழ்க்கச் சொல்லி அரசனை நோக்கி விலையுயர்ந்த வஸ்திராலங்காரங்களை அவர்களுக்குக் கொடுக்கவேண்டும், அவர்க ளிப்பொழுது உழுது பயிரிடும் பூமியை இனும் பூமியாக அவர்கள்பேரி லெழுதிக் கொடுக்கவேண்டும். இவைதா னெனக்கு நீ குருதக்ஷிணையாக செய்வதென்றார். இதைக்கேட்டு அரசன், ஸ்வாமி! தேவரீரை அடித்து அபசாரத்தைத்தேடிக்கொண்ட யிவர்களுக் கப்படி செய்வது தகுமா வென்ன, ஆசாரியர் சொல்லுவார், எனக்குப் பொறுமை குணம் இருக்கிறதோ இல்லையோவென்று பரிசோதனை செய்தார்கள். இம்மாத்திரமேயன்றி அவர்கள் சிக்ஷைக்கு உட்பட்டவர்களல்லவென்று சொல்ல, அரசனு மவ ரிஷ்டப்படியே நடத்தினன்.

பின்பு இராமதாசருக்கு அனேகர் வந்து பூஜைகளைச் செய்ய மூன்றுநா ளவ்விடமிருந்து மூன்றுநா ளிரவில் அவர் நாவிதனுடனரண்ணியத்திக்குச் சென்றார். பொழுது விடிந்தவுட னரசனெழுந்திருந்து ஆசாரிய ரிருந்தவிடஞ் சென்று பார்க்குமளவில் அவருக்குக் கொடுத்த வஸ்துக்க ளெல்லா மவ்விடமே யிருக்க அவர்மாத்திர மங்கில்லாதிருந்தார். அரசன் சேனைகளுட னரணியத்திற் சென்று தேடுமளவில் ஆங்கவரைக் கண்டு ஆனந்தத்துடன் பூஜை செய்து நிற்க, இராமதாசர் தான் பஞ்சவடிக்குப் போகிறேனென்ன, அரசன் அவரை நோக்கி, ஸ்வாமீ! நானுங் கூடவருவேனென்றும் இராஜ்ஜிய மனைத்தும் தேவரீருடையதா யிருப்பதால் இரத துரங்கங்களுடன் போவோமென்றும் சொல்ல, ஆசாரியன், பிரஜா பரிபாலனத்தை நீ செய்யக்கடவாய், பல்லக்கு குதிரைகளெனக்கேன் வேண்டும்? எனது நிஜானந்தம் ஸ்ரீரகுராமரே, சகல சுகங்களு மவர் தந்தருளுவ ரென்றார். அரச னவரை நோக்கி புண்ணிய ஸ்தலங்களில் தான தருமங்களைச் செய்வதற்கும் மேன்மையை கொண்டாடுவதற்கும் மந்திரியை யானை குதிரைகளுடன் அனுப்புகிறேனென்று சொல்ல, இதைக்கேட்டு இராமதாசர் உன்னிஷ்டமென் றிருக்க, அரசன், தீர்க்க தெண்டன் சமர்ப்பித்து விண்ணப்ப மொன்றுண் டென்றான். அதாவது புரவாசிகளும்

பண்டிதர்களும் தேவரீ ரெந்த வர்ணஸ்தரென்று கேட்கிறார்களென்ன, இதைக்கேட்டு இராமதாஸர் சிரித்து ரகுநந்தனர் வானரர்களை இழிவென் றெண்ணாமல் தன் சாங்கத்தியத்திற் கொண்டார். எனது சம்பத்து சீதாபதியாம். எனது குலகோத்திரமுமவரே, தாய், தகப்பன், அண்ணன் தம்பி யெல்லா மிராமரே. ஜாதி வர்க்கத்தை நான் சேரேனென்ன, அரசன் அவருக்கு நமஸ்கரித்து சேவகரையும் சேனைகளையும் திரவியத்துடன் மந்திரியையும் கஜதுரங்கங்களுட னனுப்பி யாவரு மாசாரியராக்கினைக் குட்பட்டிருக்கும்படி திட்டப்படுத்திப் பஞ்சவடிக்குப் பிரயாணப்படுத்தி, ஆசாரிய தரிசனத்தி லபிநிவேசமுடையவனாய் ஓர் காதம்வரை வழிகூட்டி கண்ணீர் பெருக அவரை விடுவதற்கு மனமில்லாமல் தாபத்துட னிருக்க, மகத்தான கிருபையுட னிராமதாச ரவனைக் கண்டு நாமெப்பொழுது முன்னிடமே யிருப்போம், மனதிற்குறையை வைக்கவேண்டா மென்று பலவாருகச் சொல்லி அரசனைத் திரும்பச் செய்தார்.

இராமதாசருட னனேக யாத்திரை செய்வோர் சேர்ந்தார்கள். தினந்தோறு மவர்களுக்குத் திவ்வியமான அன்னங்களை யளித்துக் கொண்டும் தான்மாத்திரம் பிக்ஷாடனையாற் சாப்பிட்டுக்கொண்டும் மார்க்கம் நடந்து பஞ்சவடியைச் சேர்ந்து ஸ்ரீராமபிரானைச் சேவித்துத் ததீயாராதனையில் நிரதராய்த் திரவியத்தைச் செலவு செய்தார். அவ்விடம் பாலகர்களுடன் விளையாடிக்கொண்டு வில்லில் மண்ணுருண்டைகளை வைத்து விருக்ஷங்களி லிலைகளை குறிப்புடனடிக்க அவைகள் கீழே விழுந்துக்கொண்டிருந்தன. இந்த சேஷ்டையால் வினோதத்தை யடைந்திருக்க ஓரவசரத்திலோர் பக்ஷி இலைமறைவி லிருந்தது. அதற் கவ்வடிபட்டு இலையுடன் கீழே விழுந்தது. இதைக்கண்டு இராமதாசர் ஐயோ! பக்ஷியை யறியாம லடித்துவிட்டேனே! என்று அங்குள்ள பிராம்மணர்களை யழைத்து நீங்கள் க்ஷேத்திர வாசிகளாக விருந்து சத்கருமங்களைச் செய்கிறீர்களன்றோ? இந்தப் பக்ஷியை நீங்கள் பிழைப்பித்தீராகில் உங்களைக் கொண்டாடி கோரின தனத்தைக் கொடுப்பேன் உம்முடைய கீர்த்தியை யெங்கும் பிரசித்தி யாகும்படி செய்வேன். சுகிருதமு முங்களுக் குண்டாகும். எனக்கும் தோஷ நிவர்த்தியாம். உங்களால் பிரபலகாரியம் செய்ததுபோ லாகுமென்று

சொல்ல, பிராம்மணர்க ளவரைக் கண்டு ஐயா! பக்ஷி, பிராணனை விட்டது. திரும்பி யதற்கு உயிர் வாராது, நீர், இந்திரிய ஜயமுடையவர். இராம சரித்திரங்களைச் சொல்லிக்கொண் டிருப்பீர். அவர் கருணையினால் சிலை பெண்ணாய் விட்டது. ஆஞ்சனேயரும் விபீஷணரும் சிரஞ்சீவி பட்டத்தை யடைந்தார்க ளாதலால் அவ்வண்ணமான இராமரைச் சிந்தித்து பக்ஷியை யெழுப்பு மென்றார்கள். இராமதாச ரப்பொழுது இராமபிரானா லாகாத காரியமென்ன விருக்கிறதென்று செத்துக்கிடந்தப் பக்ஷியைப் பிடித்து "இராமா" வென்று சொல்லி ஜலத்தினாற் சிரசைத் துடைக்க, அப்புள் பறந்துபோயிற்று. இதைக்கண் டனைவரும் இராமா வென்று சொல்லவே பக்ஷி எப்படி பறந்ததென்று ஆச்சரியமடைந்து இராமதாசர் மஹானுபாவரென்று கொண்டாடினார்கள்.

பின்பு இராமதாஸர் திரியம்பகேசுரருடைய தரிசனத்திற்குச் சென்று ஒருமாச மவ்விடமிருந்து பஞ்சவடிக்கு திரும்பி வந்து இராம க்ஷேத்திரத்திலுள்ள ஜனங்களுக்கு ரம்யமாக போஜனமளித்து சில மாசங்க ளவ்விடமிருந்து ஸ்ரீராமருடைய திவ்விய நாமத்தாற் சேரும் பிரயோஜனத்தை கீர்த்தனைகளில் பிரஜைகளுக்குப் பரக்கச்சொல்லி அபாரவாத்திய கோஷங்கள் ஆகாயமெங்கும் நிறைய அவ்விடம் விட்டு பிரயாணப்பட்டு பிரஜைகளுடன் டாகிலி கிராமத்தைச் சேர்ந்தார். அவ்விடம் உத்தவனெனும் சிஷ்யன் வந்து நமஸ்கரித்தான். பின்பு ஆஞ்சனேயருடைய சன்னிதியை அனைவரு மடைந்தார்கள். இராமதாச ரம்மூர்த்திக்குத் தெண்டனிட்டு பிராம்மணர்களுக்குப் போஜன யத்தனஞ் செய்து தான் பிக்ஷை யெடுத்துவந்து அனைவரும் பக்ஷணை செய்தபிறகு, தான் பக்ஷித்தார். அவ்விரவிற் றான் ஆஞ்சனேயர் சன்னிதி முன்னின்று அனேக ஜனங்கள் வந்து கேட்க ஹரிகீர்த்தனைச் சொல்ல வாரம்பித்தார், ஓ பக்தஜனங்களே! கேளுங்கள். எப்பொழுது மிராம நாமத்தை ஒருவன் வாய் உச்சரித்தும், மனது அவருடைய ரூபத்தை தியானித்தும் இராமர்மேல் மருளடைந்திருக்கக் கடவன். அவ ரெந்த இடத்திலும் நிறைந்திருப்பவர். ஒருவரே யொருவராகி லோகநாயகராகி மேலுங் கீழும் பூரணராகி சகலமுந் தானாகி ஆனந்த ரூபரா யிருப்பர். அனுதினமும் ஸ்ரீராமரை ஆர்த்தியுடன் பஜிக்கக்கடவீர். விக்கினங்கள் வரவொட்டாமலிருக்க

ஆஞ்சனேயரைத் தரிசிக்கக்கடவீர். இப்படி செய்வீராயின் பாபங்கள் போய்விடும், இஷ்டசுகங்கள் கைகூடும், பிறகு இராமருடைய கிருபையுண்டாகி ஹரிபதவியை அடைவீர்களென் றிவ்வண்ணமாகக் கீர்த்தனை செய்து அவ்விடத்தை விட்டு நீங்கி தாய் தந்தைய ரிருக்கும் ஜன்ம பூமியான ஊரை பரிவாரத்துடன் சென்றார்.

ஊருக்கு வெளிபிற் றனிறங்கி தனது சேவகர் சிலரை அழைத்து அந்த கிராமத்திலிருக்கும் மணியக்காரனையும் கணக்கனையுமழைத்து வரச்சொல்லி கட்டளையிட, அவர்க ளவ்வூரிற் சென்று அவ்விருவரையுங் கண்டு இராஜனுக்கு குருவாகும் இராமதாஸர் உம்மை அழைத்தார், வரவேண்டுமென்ன, அவர்க ளிருவரும் புரோகிதரைக் கூட வழைத்துக்கொண்டு புறப்பட்டு வருமளவில் பரிவாரங்களுடைய படாடோபத்தைக் கண்டு பயந்து நடுக்கத்துடன் இராமதாசரை நமஸ்கரிக்க, இராமதாசர் அவர்களின் தீனதசையைக் கண்டு பிரீதியான நல்வார்த்தைகளா லவர்களைத் தேற்றி ஆசனங்களி லிருக்கச்செய்ய, புரோகித னவருடைய குறிப்புகளைக் கண்டுஇவர் சூர்யஜீயின் பிள்ளையாவார், இதிற் பிசகில்லையென் றிராமதாசருடன் தன் நிச்சயத்தைச் சொல்லி உமது தாய் தந்தைகளை அழைத்து வருவே னென்றான். இராமதாச ரதைக்கேட்டுச் சொல்லுவார், அவர்களிடம் நானே சென்று பார்ப்பேன். இவ்விடத்திலவர்களை யழைப்பதற் கிஷ்டமில்லையென்று அந்நால்வருமெழுந்திருந்து வார்த்தையாடிக்கொண்டே தகப்பன் வீட்டைச் சேர்ந்து அங்கணத்திற் செல்ல, அவ்விடந் தன் பிதா விருக்கக்கண்டு இராமதாசர் நமஸ்கரித்தார். உடனே தகப்பன் வாரிக் கட்டியணைத்துக்கொண்டு மேன்மை யாயிற்றென்று ஆனந்த நிமக்னரா யிருந்தார். தாயாரு மப்பொழுது சமீபம் வர, இராமதாசர் தெண்டன் சமர்ப்பித்தார். அவளெடுத்து மார்பி லணைத்துக்கொண்டு கண்களிற் ஜலம் பெருகி குமாரன்மேல் விழ ஆனந்த நிமக்னளாகி மயிர்க்குச்சலிப்புடையவளாய் ஒன்றும்பேசாமல் சற்றே நிதானித்து பின்பு பிள்ளையைப் பார்த்து மகனே! விவாஹசமயத்தில் வைராக்கியத்தைக்கொண்டு எம்மை விட்டுச் சென்று சமுசார தருணோபாயத்தை நாடி காட்டிற் திரிந்து இராமதாசனாகி வந்தாயன்றோ? வென்று சொல்ல பிள்ளை சொல்லுவார், சர்வ காலங்களிலும் சௌக்கியமென்பது சமுசாரத்திலில்லை, கர்வமும் காமமு மபிமானமு மதி

னுண்டாயிருக்கும், அவை நன்மை செய்யா, பூதகோடிகளுக்குப் பிறப்பது துக்கம், இறப்பது துக்கம், தேகத்தின்மீதும் தாரா புத்திரர்மீதும் பிரியத்தை வைக்கவேண்டாம். தான் மேன்மை யடையும்பொருட்டு இராம பக்தியை சௌக்கியமாகச் செய்யவேண்டும். ஆசைகளனைத்தையுங் கண்டித்து இராமபிரானைச் சரண மடைய வேண்டும். இராமர்மேற் பிரியம் வைத்தா லவர் பிரியராகி சுகமளிப்பார். இதைத் தவிர மற்றவையெல்லாம் அவித்தை சம்பந்தமாதலால் சிரமத்தைக் கொடுக்கும். ஸ்ரீரகுராமருடைய சத்பக்தியைச் செய்யும் மனிதரே எனக்குச் சுகத்தைச் கொடுக்கு மவரும் வந்திக்கப்படுபவருமா மென்றார். தாய் தந்தைக ளிந்த வாக்கியங்களைக் கேட்டு திருப்தி யடைந்தவர்களாகி சீதாபதியின் கிருபையா லென் குலமெல்லாம் சீர்பெற்ற தென்றார்கள், இராமதாஸர் பின்பு போஜனத்திற் கவ்விடமே சித்தப்படுத்தி பந்துக்களு மிதர ஜனங்களும் பக்ஷித்துக்கொண்டிருக்க தான் பிக்ஷை வாங்கிவந்து அவர்களுடன் சாப்பிட்டார். மூன்று நாளவ்விட மிருந்து தாய் தந்தைகளையு மண்ணனையு மழைத்துக்கொண்டு "சதாரா" பட்டணம் வந்து அம்மூவரையும் யானைமே லேற்றிக் கொண்டு மெதுவாக நகரத்திற்குட் செல்ல அரசனெதிர்க் கொண்டு வந்து நமஸ்கரித்து பிரேமையுடன் வீட்டிற் கழைத்துவந்து ஆசாரியரை சிம்மாஸனத்தின்மீது உட்காரவைத்து வெகு விதங்களாகப் பூஜித்தான். இராமதாசர் தன் தாய் தந்தையரை இராஜனுக்கு காண்பிக்க அவர்களுக்கு அரசன் தெண்டனிட்டு வெகுவாகக் கொண்டாடி குரு தாயாருக்கு குறைதீர தனத்தைக் கொடுத்து பிராம்மண போஜனத்தை விசேஷமாகச் செய்வித்தான். இராமதாஸரும் ஸ்ரீராமமூர்த்தி திவ்விய சரிதைகளைத் தினந்தோறும் சொல்லிக்கொண்டு வர, அனைவரும் அத்தியானந்தத்தை யடைந்தார்கள். இராமதாசர் சிலநாளிருந்து அவ்விடத்தை விட்டுப்போக விரும்புமளவில் அரசன் குரு பந்துக்களுக்கு மரியாதைகளைச் செய்தனுப்ப அவர்கள் திருப்தியடைந்து தங்க ளிருப்பிடஞ் சென்றார்கள். இராமதாசர் நாவிதனுடன் இரவுகாலத்திற் வனத்திற்குச் சென்றார். அரசன் விடியற்காலத்தி லவரிருந்த இடஞ் சென்று பார்க்க தான்கொடுத்த திரவியம் மாத்திர மவ்விட மிருந்தது, அவரைக் காணுமற் கிலேசமடைந்து ஆசாரியரைக் கண்டு சேவிக்க யத்த

ணித்தான். இராமதாசரும் காட்டிற் தசாத ராமனைத் தியானித்துக்கொண்டு பயங்கரமான மிருகங்கள் மத்தியில் பரம சுகத்தை யடைந்திருந்தார்.

மாஹோளி பிராம்மணன்.

மாஹோளியி லொரு பிராம்மண னிருந்தான். அவன் அக்ஷரக் குறிப்பில்லாதவனாகி இஷ்டப்பிரகாரம் வீடு வீடாகத் திரிந்துக்கொண்டிருந்தும் தனம் கிடைக்காத ஹேதுவினால் தாம்பத்தியம் (கலியாணம்) இல்லாதிருந்தான். அழையாமுன்னமே போஜனத்திற்குப் போவான். சௌக்கியமான அன்ன மகப்பட்டால் சந்தோஷப் படுவான். அன்ன மகப்படாத தினத்தி லங்கு மிங்கும் திரிந்துக்கொண்டு வெகுவாக துக்கத்தை யடைவான். இராமதாசர் நிமித்தியம் அரசன் பிராம்மண போஜனஞ் செய்வான். அவ்வேளையி லந்த பிராம்மணன் வந்து வெகுவாக சாப்பிடுவான். இந்த ருசியைக்கண்டு இராமதாசரிடம் சேர்ந்தால் இஷ்டப்பட்ட வன்னம் எளிதி லெப்பொழுதுங் கிடைக்குமென் றெண்ணி அவரிடஞ் செல்ல அங்கு குரூர மிருகங்க ளனேகமாக யிருக்கக்கண்டு சமீபத்திற்குப் போக தைரிய மில்லாமல் தூரத்தில் தைனியத்தை யடைந்திருக்க இராமதாசர் பயமின்றி வரச்சொல்லிக் கட்டளையிட்டார். அவ னவர் சமீபத்திற் சென்று நமஸ்கரித்து நிற்க, அவர் யாரென்று கேட்டார். பிராம்மணன் சொல்லுவான், ஸ்வாமி! நானுலகி லன்னமின்றி கஷ்டப்படும் பிராம்மணன், பந்துக்கள் யாரு மிப்புவியி லெனக்கில்லை. நான் கிருதார்த்த னாகும்பொருட்டு உம்மையடைய வந்தேன். சச்சங்கத்தாலன்ன வஸ்திரங்கள் சௌக்கியமாக நடக்குமென் றெண்ணி பந்தங்க ளொன்று மில்லாதபடியால் உச்சாகத்துடன் வந்தேனென்றான். பரமார்த்தத்தை யடைய வேண்டுமென்னு மெண்ண மிலேசமாகிலும் கொள்ளாமல் பிராம்மணன் வந்தானென்றும், மேலும் மேலும் லௌகீகங்களை வெகுவாக சம்பாதித்து போகாபேக்ஷை யுடையவர்களாகி சத்பாவத்தை யடையாமல் தர்மாதர்மங்களை யறியாமலே உலகில் ஜனங்களனேகர் கர்மாகர்மங்களைச் செய்துக்கொண்டு கலக்கமுற்று பந்தமுடையாராவார்களென்றும், இத்தன்மையோருக்கு உபதேச மெப்பொழுதுஞ் செய்யத் தகாதென்று இராமதாசர் எண்ணி யிருக்கினும், மழை எல்லாவிடங்களிலும் பேய்வதுபோல இந்தப் பிராம்

மணனுக் குபதேசஞ்செய்து பார்ப்போமென்று ஸ்நானம் செய்து வரச்சொல்ல, அவனப்படியே சென்று நீராடி வழியில் புஷ்பங்களைக் கொய்து மாலையைக்கட்டி இராமதாசரிடம் வந்து விதிப்படி தீர்க்க தெண்டன்களைச் சமர்ப்பித்து நிற்க, அவரவனுக்கு மந்திரோபதேசஞ் செய்தருளினர். இதற்குள் நாவிதன் பிக்ஷை யெடுத்துத் தானியத்தைக் கொண்டு வந்தான். ஆசாரிய ரதனை மாவாக்கி ரொட்டிகளைச் செய்து இருவருக்குங் கொடுததார். நாவிதனும் இராமதாசரும் சௌக்கியமாக பக்ஷித்தார்கள். அந்தப் பிராம்மணன் தடமாடிக்கொண் டிருந்தான். அவ்வேளையி லரசன் வந்து நமஸ்கரித்து அனேக நைவேத்திய வஸ்துக்களைக் கொண்டு வந்து ஆசாரிய ரெதிரே வைத்தான். ஆசாரியர் சிஷர்களுக்கு அதனைக் கொஞ்சமாகக் கொடுத்து மற்றவையைக் குரங்குகளுக்கிட்டனர். ஆசாரியர் செய்த ரொட்டியிற் கொஞ்ச மரசனுக்குக் கொடுத்தார். அதனை மகாப்பிரசாதமென்று அவன் பக்ஷித்தான். அந்தப் பிராம்மண னிதைப்பார்த்து விந்தையடைந்து அரசன் ரொட்டியை எப்படி பக்ஷித்தான். மதுரமான திரவிய மெல்லாம் குரங்குகளுக்காக குருசுவாமி போட்டு விட்டாரே! எனக்குக் கொடுக்காமற் போனரே! இது வென்ன விசித்திரமென் றெண்ணியிருக்க, ஆசாரிய ரரசனைப் போகச்சொல்லி வுத்தரவு செய்தார். வெகு துக்கத்துடன் இந்த பிராம்மண னவ்விட மிராமதாசருடனிருந்தான். மறுநாள் பிக்ஷைக்கு நாவிதனு மாசாரியரும் போகும்பொழுது இந்தப் பிராம்மணனு மவர்கள் கூடச் சென்றான். இராமதாஸர் வனத்திற்றனே இருக்கச் சொல்ல மிருகங்களுடைய பயத்தால் அவ்விடமிருக்க மாட்டே னென்று அவர்களுடன் லஜ்ஜையுற்று பிக்ஷைவாங்கி விசனத்துடன் திரும்பிவந்தான். பின்பு இராமதாஸர் தானியத்தை மாவாக்கி ரொட்டி செய்து சிஷர்களுக்குக் கொடுத்து தானும் சுகமாகப் பக்ஷித்தார். பிராம்மணன் வெகு துக்கத்துடன் பக்ஷித்து அவ்விரவை யவ்விடம் கஷ்டத்துடன் கழித்து மூன்றுநா ளாசாரியரிடம் வந்து ஸ்வாமி! இவ்விடத்திலென் மனது சந்தோஷத்துட னிருக்கவில்லை வேறோர் இடத்திற்குப் போகிறேனென்ன, இராமதாச ரவனை நோக்கி நீ அப்படிப் போனாலும் என்னிடம் வருவதும் போவதுமாக இருவென்று சொன்னர்.

அந்தப் பிராம்மண னவ்விடத்தை விட்டு ஸௌக்கியமான போஜனத்திற்காக கிராமத்திற் சென்று சந்து சந்தாக திரிந்துக் கொண்டிருக்க, ஒரு கிரகஸ்தன் குருபதேசமடைய ததீயாராதனஞ் செய்வதைக் கண்டு அவர்கள் சாப்பிடும் சமயத்தில் அவன் பந்தியி லுட்கார்ந்து வயிர்நிறையப் பக்ஷித்து அன்றையதின முபதேசித்த சாதுபுருஷனைக் குருவாகச் செய்துக்கொண்டா லிஷ்டபோஜனங் கிடைக்குமென் றெண்ணி அந்த சாதுசன்னிதியிற் சென்று நமஸ் கரிக்க, அவர் என்னுடனென்ன வேலையென்று கேட்டார். அவன், ஸ்வாமி! நான் ஒண்டியான பிராம்மணன். இராமதாசரை ஆசா ரியராகச் செய்துக்கொண்டு அதிக தொந்தரை யடைந்து மனோ வருத்தமுற்று உம்முடைய திருவடிகளை ஆஸ்ரயிக்க நினைத்திருக் கிறேன், அதற்காக வந்தேனென்ன, அந்த சாது அவனை நோக்கி அப்பா! ஒருவருடைய சம்பந்த மடைந்த பிறகு மற்றொருவரைத் தேட வெண்ணுவது உலகத்திற் சரியன்று, தாயார் துர்பலத்தை யடைந் திருந்தாலும் தனய னின்னொரு ஸ்திரீயைத் தாயாராகச் செய்யக்கூடுமோ? முதற்குருவை விட்டு மற்றொருவரை ஆஸ்ரயித் துக்கொள்வது இருதகப்பன்மாருக்குப் பிள்ளையானாற் போலாகும். இராமதாஸருடைய சாங்கத்தியம் கஷ்டமானாலு மவர் சொன்ன மந்திரத்தை இடைவிடாமல் மனதிற் றரித்துக்கொண்டு சஞ்சரிக்க வும். தன் குருவை விட்டு வேறொரு குருவைக் கோரக்கூடாதென் றார். அவன் திரும்பியும் தெண்டன் சமர்ப்பித்துப் பாதங்கள் மேல் விழ சாது புருஷர் தடுக்க, பிராம்மண னுபதேச மடையா மற் பாதங்களை விடேனென்று பிடித்திருக்க, சாது வவனை நோக்கி இராமதாச ருபதேசம் செய்த மந்திரத்தைத் திரும்பி அவரிடங் கொடுத்து வரக்கடவை யென்ன, அந்தப் பிராம்மணன் வனத் திற்குச் சென்று இராமதாசரைக் காணும லனேகநாள் திரிந்து ஒருநா ளவரைக் கண்டு ஸ்வாமி! நான் வேறோர் குருவைத் தேடிக்கொள்ளுகிறேன், நீர் கொடுத்த மந்திரத்தைத் திரும்பியும் கைக்கொள்ளுமென்று சொல்ல, அவ ரவனை நோக்கி உன்னைப் போன்ற நல்ல சிஷனை நான் காணவில்லை. என்னிட மென்ன அவகுணத்தைக் கண்டாயென்று கேட்க, அவன் சொல்லுவான், ஸ்வாமி! உம்முடைய பாரமார்த்திக மெனக் கதிக கடினமாக விருக்கிறது, அதனா லும்மை விடுகிறே னென்ன, இதைக்கேட்டு

இராமதாஸ ரவன் வாயிற் ஜலத்தை கொப்பளிக்கச் சொல்லி அதை உமிழும்படி செய்ய அது பதின்மூன் றெழுத்து மந்திர மாகப் பூமிமேற் பதிந்திருந்தது. அதைக்கண்டு இராமதாச ரவ் வந்தணனை நோக்கி நீ மற்றொரு குருவை அனுசரிக்கலா மென் று சொல்லி யனுப்பிவிட்டார். பின்பு அந்தப் பிராம்மணன் கிரா மத்திற்கு வந்து அந்த சாதுபுருஷரைக் கண்டு நடந்த சங்கதியைப் புகல அவர் கேட்டு சொல்லுவார், அதிவிராகராய் அரண்ணியங் களிற் சஞ்சரித்து பக்தி பூர்ணராகி பகவானை இருதயத்திற் பிர சன்ன ராக்கிக்கொண்டு ஆனந்தத்துட னிருக்கும் இராமதாச ருடைய சம்பந்தத்தை விட்டு என்னிடம் வந்தாய், நா னுன்னைச் சேர்க்கமாட்டேன். மந்திராக்ஷரங்களை மாற்றச் செய்யும் மகானு பாவரைப் பார்க்கிலும் பெரியோ ரிவ்வுலகி லிரார்? நீ செய்தது சரியல்லவென்று போகச்சொல்லி அனுப்பிவிட்டார். அவ்வந் தண னிரண்டிடத்திலும் நசையற்று நிந்திதனாய் விட்டான். இத னாலறியத்தக்கது—நாராயணனுடைய திருவடியை அடைய விரும் பினவன் நாக்குருசியான உணவை நத்தலாகாது.

விட்டல பிராம்மணர்.

இராமதாசர் அக்காட்டில் வாசமாயிருக்க அவ்வழியாக சில பிரஜைகள் நடந்து செல்லத்தொடங்கினார்கள். அவர்களை இராமதா சர் நோக்கி எவ்விடம் போகிறீர்களென்ன, அவர்கள் ஐயா! பண் டரியாத்திரையாக நாங்கள் போகிறோம், அவ்விடத்திற் ஸ்ரீபாண்டு ரங்கரை நேத்திரோச்சவமாகப் பார்ப்போம், நீர் வைராக்கியத் துடன் வனத்திலிருக்கின்றீர், அவ்விடம் வந்துபாரும், இருகரங் களையு மிடுப்பின்மேல் வைத்துக்கொண்டு பக்தஜனங்களைக் காப் பாற்றும் பரம மூர்த்தியாம், அவரைப் பார்த்த மாத்திரத்தில் மே லான சௌக்கியத்தைப் பெறலா மென்றார்கள். இதை இராமதா சர் கேட்டு இவ்வுலகி லெனக்கு இராமர்தான் தெய்வம், அவரே குலகுரு, அவரே சர்வமுமாவார். அவரைத் தவிர வேறொருவரை என் மனது கோருவதில்லை, பண்டரிக்குப் போவது புண்ணிய மென்று மனதிற் கிச்சை பிறக்கவில்லை யென்றவர்களுக்குச் சொ ல்லி, பகவானை உத்தேசித்து, ஓ அயோத்தியாதீசரே! ஆஞ்சனேய வரதரே! கருணாகரரே! இரகுநாதரே! உம்மை யிருதயகமலத்தில் நேத்திரோச்சவமாக கண்டுகொள்வே னென்றார். இதைக் கேட்டு

அவர்கள் ஏகநிஷ்டராயிருப்பவரென்று எண்ணி பண்டரிபுரத்திற்குச் சென்றனர். மறுநாள் சில ஜனங்கள் போய்க்கொண்டு இராமதாஸரை வழியிற் கண்டு பாண்டுரங்க மூர்த்தியைப் பார்க்க வாருமென்று கூப்பிட இராமதாஸ ரவர்களை நோக்கி ஐயா! அவ்விடம் ஸ்ரீராமரைக் காணமாட்டேனே என்ன, அவர்கள் ஸ்ரீ ராமர், ஸர்வவியாபியா யிருப்பர், சத்திய ஞானாநந்தரூபரை ஞான திருஷ்டியினாற் சௌக்கியமாகக் காணலாமென்றார்கள். அதைக் கேட்டு இராமதாசர் சொல்லுவார். இராமமூர்த்தி பஜனையே எனக்குத் தியானமும், ஞானமுமாகும், இராமரை வர்ணித்தால் விதேஹ ஸ்திதி உண்டாகி சகஜமாகவே தன்மய லக்ஷிய முண்டாகின்றது. என்னிடத்தே இராமரூப முஜ்வல்மாகத் தோன்றுகிறது, அவர் திருநாமத்தைத் தவிர வேறு கதியில்லை. இதுவே யெனக் கிவ்விடத்திற் சுகமாக இருக்கின்றது. இது எனது நிச்சய மென்று சொல்ல, அவர்க ளாச்சரியமடைந்து பண்டரிபுரத்தை நோக்கிச் சென்றனர்.

பின்பு பாண்டுரங்க ரோர் பிராம்மண வடிவங்கொண்டு பசியுடையவரைப்போல இராமதாசரிடம் வந்து பிரசாதம் வேண்டுமென்றார். அப்படியே கொடுப்பேனென்று நீராடி வரச் சொல்லி பிக்ஷா தானியத்தை அரைத்து ரொட்டிகளைச் செய்து அதிதியாய் வந்தவருக்கு இலையில் வட்டித்து சிஷனுந் தானும் வட்டித்துக் கொண்டு சந்தோஷத்துட னனைவருஞ் சாப்பிட்டு கையலம்பி அவ்விடம் உட்கார்ந்தார்கள். பின்பு இராமதாச ரதிதியைக் கண்டு எவ்விடமிருந்து வந்தீரென்ன அதிதி சொல்லுவார், நான் பண்டரியில் வாசம் செய்பவன், எனக்குக் குடும்ப முண்டு, பிக்ஷையினாற் பிழைத்துவருவேன், என்னுடைய எஜமான்க ளேழைகள். அவ்வவ் விடங்களிற் சென்று காத்திருந்து வரும் எஜமான்களை பண்டரிபுரத்திற்குச் சேர வழைத்துக்கொண்டு போவேன், உம்மைப் போன்ற எஜமானரை நானெங்கும் கண்டதில்லை நீரும் பண்டரிக்கு வந்தால் நலமாகு மென்றார். இதைக்கேட்டு இராமதாசர் இராமரைத் தவிர மற்றெவரு மெனக் கிஷ்டமாகாரென்ன, அதிதி சொல்லுவார், ஆஞ்சனேய ரவ்விடமிருந்து இராமரைக் கூப்பிடுகிறாரென்ன, இதைக் கேட்டு இராமதாசர் கலங்கின மனதுடையவராகி பண்டரிக்குப் போகவெண்ணி உடனே தத்தாவெ

ன்னும் நாவிதனை யழைத்து ஜோல்னுவை அவன் கையிற் கொடுத்துப் பிரயாணமானார். பிராம்மண ரவர்களுடன் வழிநடந்து நித்தியமு மவர்களிடம் பிக்ஷான்னத்தை சுகமாகச் சாப்பிட்டுக் கொண்டு வழியி லவ்வவ்விடங்களி லவர்களுக்குச் சகாயஞ் செய்துக் கொண்டு பண்டரிபுரத்திற் கழைத்துச்சென்றார். வழியி லிராமதாசர் காலில் முள்ளு தைக்க வதனை அப்பிராம்மணரே கையால் பிடுங்கினார்.

பண்டரிபுரியிற் ஜனங்க ளனைவரும் பாண்டுரங்கரையே சராசரங்க ளெல்லாவற்றிலும் கண்டுகொண்டிருப்பார்கள். அவ்விடத்திற் சங்கையின்றி ஒருவற்கொருவர் நமஸ்கரிப்பர். அனேக க்ஷேத்திரங்க ளுலகிலிருக்கினு மபிமானத்தை விடுவிக்கும் க்ஷேத்திர மதுவாகும். அதனை இராமதாசர் கண்டு கலியுக வைகுண்டமாமென்று களிப்புற்றார். கூடவந்தப் பிராம்மணர் போய் வருகிறேனென்றுசொல்லி மறைந்தார். சத்புருஷர்களுடைய கூட்டத்தை இராமதாசர் கண்டு சொக்கி யொன்றையுங் காணாதிருந்தார். சற்று நேரம் நிதானித்து நாவிதனைக் கண்டு பிராம்மண ரெவ்விட மென்று கேட்க அவ னவர் போய்விட்டா ரென்றான். அதைக்கேட்டு பாண்டுரங்கர் என்னை மருளடையச்செய்து இவ்விடம் கொண்டுவந்தாரென்று சொல்லிக்கொண்டு கருட ஸ்தம்பத்தைப் பார்த்துவருமளவில் கூட்டங் கூட்டமாக ஹரிதாஸர்கள் நிறைந்திருந்தார்கள். "ஹரீ, விட்டலா"! யென்னும் ஓசை அபாரமாகவுண்டாக, அதைத்தான் கேட்டுக்கொண்டு இராமபிரானிடம் பிரீதியுண்டாகி இராமா இராமா வாரும் வாருமென்று பிரேமை மேலிட்டு கூப்பிட்டு உம்மையன்றி யானிங் கெவரைப்பாடுவேன். நீ நானென்பதைப் போக்கடிக்கும் ஓ பத்ரகிரீசரே ! தரிசனந் தந்தருளுமென்று சொல்லிக் கொண்டும் தாள வாத்தியங்களுடன் நாம கோஷத்தைக்கண்டு நன்று நன்றென் றானந்தத்துடன் புகழ்ந்துக்கொண்டும், சாதுக்க ளனைவருக்கும் நமஸ்கரித்துக்கொண்டும் முன்னுகச்செல்ல, மாருதிராய ரவ்விட மிருக்கக்கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துச் சொல்லுவார்.

ஸ்வாமி! ஆஞ்சனேயரே! சீதாராம ரெவ்விடம்சென்றார். நீ ரிவ்விட மிருக்கின்றீர். என்னுடன் வார்த்தையாடிக்கொண்டு பண்டரிநாத ரிவ்விடமென்னைக் கொண்டுவந்தாரென்றார். ஆஞ்ச

னேய ரதைக்கேட்டு சொல்லுவார், அயோத்திராம ருலகில் வந்து அனேக சுகிருதங்களைச்செய்து திரிபாத்விபூதிக்குப் போகும் சமயத்தில் நா னவரை திரும்பி எப்போது பார்ப்பேனென்று கேட்டேன், அவ ரப்பொழுது தான் ஸ்ரீகிருஷ்ணராக அவதரிக்கு மளவில் தரிசனங் கொடுப்போமென்று சொல்லி யருளி ஸ்ரீவைகுண்டத்திற் கெழுந்தருளினர். சேதுபந்த ராமேசுரத்தில் வெகுகால மிருந்து சீதாராமரைச் சிந்திந்திருக்குமளவில் நாரதர் தோன்றி யருளினர். அவரை இராம தரிசன மெப்போ தாகுமென்று கேட்க, யாத்திரை செய்யும்படி சொல்லிப்போனர். அவர் சொற்படி சகல தேசயாத்திரை செய்துக்கொண்டு துவாரகாபுரத்தை பார்க்கும்பொழுது அது சொர்ணபுரமான இலங்கையைப்போ லிருக்கக்கண்டு இலங்கை அவ்விட மெப்படி வந்ததென்று வாலினலப்பட்டணத்தைச் சுற்ற யத்தனிக்க, நாரதர் வந்து அது இலங்கை யல்ல, பலராம ரரசாக்ஷி செய்யும் துவாரகா பட்டணமென்று சொல்லிப் போனர். சாக்ஷாத் ஸ்ரீராமருடைய நாமத்தை யிவனெப்படி வைத்துக்கொள்ளுவானென் றெண்ணி நான் அவ்விடத்திலுள்ள உபவனத்திற்குச் சென்று விருக்ஷங்களை யெல்லாம் பிடுங்கி காவலாளிகளான சிலரைக் கொன்று சிலருடன் பலராமரெனும் பெயரை விடவேண்டும், அல்லாவிடில் சைனியத்துடன் சண்டைசெய்ய வரவேண்டுமென்று சொன்னேன், அவர்கள் ஸ்ரீகிருஷ்ணரிடம் சென்று சங்கதியைத் தெரிவித்தார்கள். அவ ரப்பொழுது கருடனை யழைத்து வானர னொருவன் பட்டணத்திற்கு வந்திருக்கிறன், அவனை மன்னித்து அழைத்துவா வென்று சொல்லி அனுப்ப, அவ னென்னிடம் வந்து பலராமரும் கிருஷ்ண மூர்த்தியும் அழைத்து வரும்படி கட்டளை யிட்டார்களென்ன, அவன் தவடையிற் கையா லொரு அறை யறைந்தேன். அவ்வடிக்குத் தான் மூர்ச்சை கொண்டு நிதானித்து எழுந்திருந்து திரும்பித் துவாரகாபுரியைச் சென்று தானடி யுண்டதைக் கிருஷ்ணமூர்த்திக் கறிவித்தான். அப்போது ஸ்ரீகிருஷ்ண பகவான் பிரத்துய்மனனைப் பார்த்து பிரபலமாகச் சேனையைக் கொண்டுபோய் விதியுக்தமாக அந்த வானரனை கட்டிச் சீக்கிரம் கொண்டுவரச் சொல்ல, அனேக சேனையுட னவன் வரவே என்னுடைய வாலினலவர்க ளெல்லோரையுஞ் சுற்றி ஆகாயத்தில் சுழற்ற, அவர்கள்

மிருதியாக கூச்சலிட்டார்கள். அதைக்கண்டு ஸ்ரீகிருஷ்ணர் கருடனைப்பார்த்து சீக்கிரத்தில் வானரனிடம் சென்று ஸ்ரீராமரழைக்கிறாரென்று சொல்லி விகிதப் படுத்திக்கொண்டு உடனே அழைத்துவா வென, கருடன் சொல்லுவான், ஓ மாதவா! கிருஷ்ணா! என்னை மன்னிக்கவும், நானவ்விடம் போனால் கோபத்துடனென்னை யடித்துக் கொல்லுவா னென்ன, ஸ்ரீகிருஷ்ணர் சொல்லுவார், அவன் ராமபக்தன், மகா தைரியசாலி, திவ்வியக்ஞானியும் ஹரிதாஸனுமாவான், இராமரெனும் வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் தாழ்ந்து மன்னித்து வருவானென்றார். அதைக்கேட்டப்படியே செய்வேனென்று கருடன் வந்து ஸ்ரீராமமூர்த்தி அழைக்கிறாரென்ன, மாருதி இதைக் கேட்டவுடனே தெண்டன் ஸமர்ப்பித்தார். இருவரும் வழியில் வந்துக்கொண்டிருக்க கிருஷ்ணமூர்த்தி துவாரகையில் சத்திய பாமாவை யழைத்து சீதாதேவியின் ரூபத்தை நீ வகித்து வரக்கடவை யென்ன, அவ ளனேக ஆபரணங்களைத் தரித்து கிருஷ்ண மூர்த்தியிடம் வர, நீ சீதாதேவி யாகா யென்று கிருஷ்ணமூர்த்தி சொல்ல, பின்னே என்ன செய்வதென்று கேட்க, நீயும் பதினாயிரம் ஸ்திரீகளும் ருக்மணியிடம் சென்று அவளை வேண்டினால் அவள் சீதையின் ரூபத்தை வகிப்பாளென்று சொல்ல, அவர்க ளப்படியே அவளிடம் சென்று வேண்டினார்கள். ருக்மணிபிராட்டி உடனே சீதா ரூபத்தை வகித்து வந்தாள். கிருஷ்ணமூர்த்தி இராமராகத் தோன்றப்பட அவ்வேளையில் நானும் போனேன், இராமபிரானைக் கண்டேன் ஆனந்தத்துட னனேக நமஸ்காரங்களைச் செய்தேன். பகவா னப்பொழுது, முன்பு நா முமக்கு கிருஷ்ணாவதாரத்தில் நம்முடைய ரூபத்தைக் காண்பிப்போமென்று சொன்னோம். அது இப்பொழுது சபலமாயிற்று. அவதார லீலைகளில் நீ வேறு பாவத்தை வைக்கவேண்டாம், உலகில் பரதத்துவ மொன்றே யென்று சொல்லி இராமர் கிருஷ்ண ரூபத்தைக் கொண்டனர். அதுமுதல் இராம கிருஷ்ணாளிருவரையு மர்ச்சித்து வருவேனென்றார்.

இக்கதையைச் சொல்லி ஆஞ்சனேய ரொன்றும் பேசாமலிருந்தார். இராமதாசர் மண்டபத்திற்கு வந்து எதிரில் நின்று, பாண்டுரங்கர் செங்கல்களின்மீது வீற்றிருப்பதைப் பார்த்து கைகளைக் கூப்பி ஓ சர்வேசுவரரே! ரகுநாதரே! கையில் தரித்த

வில்லம்புகளெவ்விடம் சென்றன, சரயூ நதியும் அயோத்தியுமெங்கு சென்றன, வானர சேனைகளுக்குள் மாருதி யொருவரே இவ்விட மிருக்கின்றார், ஜானகி பிராட்டி எங்கு சென்றாளோவென்று ஆர்த்தியுடன் கண்களில் நீர் பெருகச் சொல்லிக்கொண்டிருக்க, அவருடைய சங்கற்பத்தைப் பூர்த்தி செய்யப் பாண்டுரங்கப் பெருமாள் இராம ரூபத்தை வகித்து சரயூ நதியையு மயோத்தியா புரியையு மவ்விட மிருக்கக் காட்டினார். வானரர்களு மமிதமாக யிருக்கக் கண்டு இராமதாசர் ஆனந்தத்தை யடைந்து ஆதித்தியகுல பாவனரே! அயோத்தியாதீசரே! இராவணாந்தகரே! இரகுகுலதிலகரே! இராமசந்திரரே! ரகுவீரரே! தயாநிதியானவரே! தசரத ராமரே! வென்று அனேக விதங்களால் தோத்திரங்களைச் செய்தார். சில பக்தர்களுடைய கண்களுக்கு இராமமூர்த்தியாகவே காணப்பட, பாண்டுரங்க ரிராமதாசர் நிமித்தியம் உருவத்தை மாத்தினா ரென்று இராமதாசரைப் புகழ்ந்து நிஜரூபமான பாண்டுரங்க ரூபத்தை யனைவரும் பார்க்கும்படி இராமபிரானை தோத்திரம் பண்ணக்கடவீரென்று அவரை வேண்டினார்கள். அவருமப்படியே பிரார்த்திக்க, ஸ்ரீஹரி முன்போல தனது நிஜரூபத்தை வகித்தனர். இதைக்கண்டு பக்தர்களனைவரும் பூர்ணானந்த முடையவர்களாய், இராமதாசர் புண்ணியமூர்த்தியென்று சிலாகித்தார்கள். ஹரி குணானுவாதத்தைச் செய்யும்படி இராமதாசரை அனைவரும் பிரார்த்திக்க, மண்டபத்தில் தான்நின்று அவ்விடத்திலந்தரங்கரான ஹரிபக்தர்களுட்கார்ந் திருக்கக்கண்டு இராமதாசர் சொல்லலுற்றார். நீங்களனைவரும் சாது புருஷர்கள், இராமரை உங்களுக்குட் காணவல்லீர்கள், வேதவேதாந்தங்களை யறிந்து பக்தி நிஷ்டையுடன் விளங்குவீர்கள். அடியேன் வனங்களில் மிருகங்களுடன் கூடி வாசமா யிருந்தவன், புராணங்களையும் சாஸ்திரங்களையும் படிக்காமலே யிருந்தவன், சங்கீத சாகித்தியங்களை யானறியேன், சபைகளிற் சாராசார விசாரணை யின்னதென்று சொல்லவறியேன், வேதாந்தார்த்தங்களையும் தாள சுவரங்களின் விவரமும் நானறியேன், பசுசமானன், ஈனன், இதற்கு ஸ்ரீஹரி சாட்சி யாகுவரென்று அநிநைச்சியத்தை யனுசந்தித்து கதை சொல்லத் தொடங்கி பகவானுடைய நாமத்தைச் சொல்லிப் பாடுவது மாடுவதுமாக சற்றுநேர மிருந்து, பின்பு சகலரையும் நோக்கி, கலியுகத்தில்

ஸ்ரீ ஹரி நாமமே விருப்பமுடன் கொண்டாடத் தகுந்தது. பூர்வ காலத்தில் அஜாமீளனும், கணிகா ஸ்திரீயும் அந்நாம மகிமையால் ஹரிபத மடைந்தார்கள். வாலாகோளி யெனும் வேட விருத்தி யுடையோன் வால்மீக ரெனும் முனிசிரேஷ்டனானன், தாரக மந்திர மவ்வேடனைத் தரிக்கச் செய்தது. மந்திரங்களுக் கெல்லா மிராம தாரகம் மூலமந்திர மாகும், இதனை விட்டு எந்திர தந்திரங் களை யனுசந்தித்தால் பிரயோஜனமில்லை, மிக்க சாரமான இராம நாமத்தை ஜபம் செய்துவந்தாற் சமுசார சமுத்திரத்தைத் தாண்டி ஸ்ரீ ஹரி பதத்தை யடையக் கூடுமென் றிவ்வண்ணமாக ஹரி கதையைச் சொல்ல, அனைவரு மானந்தித்தார்கள். பின்பு அர்ச்சகர் பெருமாளுக்கு ஹாரதியைக்கொடுக்க "விட்டல" நாமத்தை சகலரு முச்சரித்தார்கள். ஏழுநா ளவ்விட மிராமதாச ரிருந்து பின்பு கோபா புரத்திற்குச் சென்று அவ்விடம் கிருஷ்ண மூர்த்தியை முன்னிட்டு பக்தர்க ளாடுவதும் பாடுவதுமான பிரபலக் கிரீடைகளைக் கண்டு அத்தியானந்தத்தை யுடையராய் திரும்பிப் பண்டரி புரத்திற்கு வந்து ரதோச்சவத்தைச் சேவித்தார். பின்பு யாத்திரையாகவந்த சகலரும் திரும்பிப்போக யத்தனிக்க, இராமதாஸர் அர்த்த ராத்திரியிற் பாண்டுரங்கர் சன்னிதியிற் சென்று நிற்க, தாப்பாள் கீழே விழுந்தது, உடனே கதவைத் திறந்து உள்ளே பிரவேசித்து பண்டரி நாதருடைய திருஉருவத்தைக்கண்டு திருவடிகளுக்குத் தெண்டனிட்டு திருமுன்னின்று விடைகொடுத் தருளுமென்று வேண்ட, திரும்பி எப்போ வருவாயென்று பெருமாள் கேட்க, இராமதாச ரதற்குக் காரணம் தேவரீரே யன்றோ? பதிதபாவனா! பாண்டுரெங்கா! கிருபா மூர்த்தி! நீரே பிராம்மணராகிவந்து பண்டரி புரத்திற்கு என்னைக் கொண்டு வந்தீரே! அடியேனுடைய காலில் முள் தைக்க அதனை தயையுட னெடுத்தீரே! இவ்விடத்திற் சஜ்ஜனர்களுடைய சமுதாயத்தை சௌக்கிய மடையக் காண்பித்தீர், அதனால் பரமசுக மடைந்தேன். ஓ கோவிந்தா! கருணாநிதி! மூன்றுலகங்களிலும்தேவரீர்பிரேமை மகிமையைச்சொல்லமுடியாதன்றோ? தேவரீரை அடியேன் கேட்பதொன்றுண்டு, அதாவது ஸ்ரீவத்சமெனும் சின்னத்தை தேவரீரிடை விடாது தரித்திருப்பது போலும் செங்கற்களை சரணங்களினின்று விடா திருப்பது போலும், என்னை மறவா திருக்கக் கடவீரென்றார். இதைக்கேட்டு

விட்டல மூர்த்தி நாமெப்பொழுது மறவாம லிருப்போ மென்று சொல்ல, இராமதாசர் ஸ்ரீ ருக்மணி பிராட்டியிடம் சென்று விடை பெற்றுக்கொண்டு பிரயாண மாகவே, கதவுகளில் தாப்பாள் முன் போலவே பூட்டிக்கொண்டன. பின்பு இராமதாசர் வழி நடந்துக் கொண்டு சகலமு பிரம மயமென்றும் வேறின்றி இங்கு மங்கும் விஷ்ணுமயமென்றும் ஏகரீதியாக எங்கு மிராமரே ஏற்பட்டிருக் கிறாரென்று மெண்ணிக்கொண்டு ஆனந்தத்துடன் மஹோளி கிராமத்தைச் சேர்ந்தார். அரச னுசாரியர் வந்ததைக் கேட்டு அப்பொழுதே வந்து வழக்கப்படிப் பூஜைகளைச் செய்தான். ஒருமாசம் பரியந்தம் குருவானவர் வெளியிற் சஞ்சரித் திருந்தமையால் அரசனதுவரையில் பலஹாரமே செய்துக்கொண் டிருந்தான். அரசனுசாரியரைச் சேவித்து எவ்விடம் சென்றீ ரென்று கேட்க, இராமதாசர் சொல்லுவார், பாண்டுரங்கரே என்னிடம் வந்து பண்டரிபுரத்திற் கழைத்துக்கொண்டு போனார். நீ உபவாசமாக யிருப்பாயென் றெண்ணி சீக்கிரத்தில் வந்தேன். இப்பொழுது வீட்டிற்குச் சென்று பாரணஞ்செய்யக் கடவாய். உபவாசமாக நீயே னிருந்தாய்? அது உனக் குசிதமல்லவென்றும், யாத்திரை சௌக்கியமாக நிறைவேறிற் றென்றும் சொல்லி, அரசனுக்கு விடை கொடுத்தனுப்ப, அவன் வீடுவந்து சேர்ந்தான்.

அக்காலத்தில் துலுக்கவரசன் அரங்குஜிபுஷா அனேக ராஜ்யங்களை வசப்படுத்திக்கொண்டு மாஹோளி யெனும் கிராமத்திற்கு ஓர் ஜில்லேதாரை யனுப்பினான். அதற்கு சமீபத்தி லிருக்கும் வனங்களி லிராமதாசர் சஞ்சரித்துக்கொண் டிருக்க, அந்த ஜில்லேதாரும் வில்லம்புகளை ஏந்திக்கொண்டு ஒருநா ளவ்வனத்தில் வந்து குறியிட் டடிக்கத் தெரியாம லிருந்தான். அவ்வேளையி லிராமதாசர் வந்து குறியை யடித்துக் காண்பித்து அவனை நோக்கி ஐயா! சரத்தைவிட்டு கையா லதனைப் பிடித்துக் கொள்ள வேண்டு மென்றும் இதுதான் தீரத்வமென்றும் சொல்ல, அத்துலுக்கன் இது அசாத்தியமென்றான். இராமதாசர் நான் செய்கிறே னென்றார். அப்போதவன் வில்லை யிழுத்து சரத்தைப் போடும் பொழுது இராமதாசர் வேகத்துடன் சென்று அச்சரத்தை தான் பிடித்துக்கொண்டு வந்தார். அத்துலுக்கன் உன்னைப்போ லிப்படி யாரும் செய்யார்களென்ன, இராமதாசர் சூரனானவன் சரத்



அம்பாஜி. ஸம்பாஜி.



ஷாபுர்கிரகஸ்தன். ஸ்ரீபுருஷோத்து.



வேணுபாயி. வீஸாபாஸா.

தை தூரத்திற் செல்லச் செய்வானென்று அம்பை ஓர் விருக்ஷத்தின்மீது தொடுத்தார். அச்சர மந்தசெடியைப் பிளந்துக்கொண்டு வெகுதூரம் சென்றது. இதைக்கண்டு அத்துலுக்க னுச்சரியப்பட்டு இந்த பூமண்டலமனைத்தையும் நீ கெலிப்பாய், நீ புண்ணிய மூர்த்தியென்று சொன்னான். பின்பு இராமதாச ரவனை நோக்கி சர்வ கடங்களிலும் சைதன்னியமே யிருப்ப தாதலால் துலுக்கரும் ஹிந்தூக்களும் சமமாக யிருப்பார்கள். ஆகச்சே துலுக்கரை ஈஸ்வரன் சிருஷ்டித்தாரென்றும் இந்தூக்கள் சோர சிருஷ்டியென்றும் உங்களுடைய குரானி லெழுதப்பட் டிருக்கிற தென்று குரோத புத்தியினாற் சத்பாவ மில்லாம லாயாசப் படுவீர்கள். வேஷ பாஷைகளால் வேறாயினும் விகிதமின்றி வைர பாவமும் விஷயாசக்தியும் வாஞ்சையுடன் செய்துக்கொண்டு மேலான ஞானமில்லாமல் தங்கள் ஹிதத்தை விட்டுவிடுவீர்க ளென்றார். இதைக்கேட்டு அத்துலுக்கன் அவர் கால்களில் விழுந்து வுமக்கிஷ்டமேதென்று கேட்க இராமதாஸர் சொல்லுவார், நாமிருவரு மிவ்விடம் விளையாடிக்கொண் டிருந்தபடியா லிந்த வயல் பாழடைந்தது. குடியானவனுக் கிந்த பூமியை இனமாக கொடுக்கவேண்டு மென்ன அவனப்படியே செய்து அவ்வனத்தை விட்டுச் சென்றான்.

## அம்பாஜி.

பின்பு இராமதாச ரவ்விட மோர் கிராமத்தைச் சேர்ந்து ஹரிகீர்த்தனைச் செய்துக்கொண் டிருக்க, அங்குள்ள ஜனங்களுக்கு ஹரிபக்தி யுண்டாயிற்று. சிலரவருடைய திருவடியை அனுசரிக்க அவர்களுக்கு தாரக மந்திரத்தை யுபதேசித்தார். அவர் செய்த கவித்வங்களை வேத துல்லியமாக வெண்ணிப் படித்துவருவார்கள். இராமநாம மகிமையை அவ்விடம் சொல்லிக்கொண்டிருந்து பின்பு ஷாபுர மென்னும் கிராமத்திற்குச் சென்றார். அந்த கிராமாதிபதியின் குமாரத்தி இராமதாசரிடம் வந்து ஸ்வாமி! அடியாள் பரமார்த்தத்தைக் கோரிவந்தே னென்ன, இராமதாச ரவளுடைய மனோபரிபாகத்தைக்கண்டு தாரகமந்திரத்தை யுபதேசித்தார். சிலநாளவ்விடமிருந்து அரண்ணியத்திற்குச் சென்றார். சிஷர்கள் தேடிக்கொண்டுவந்து அவருக்கு பக்தியுடன் பூஜைகளைச் செய்தார்கள். சிரபுர மெனு மோர் கிராமத்திற் பிக்ஷாடனஞ் செய்து அவ்விரவி லந்த

லூரில் ஹரிகதையைச் சொன்னார். அனேக ரவ்விடம் வந்து கேட்டிருந்து அனுதாபமுடையவர்களாகி அவர் பாதங்களைப்பிடித்தார்கள். அவ்விடத்திற் கணக்கனுக்கு அம்பாஜி யெனும் புத்திரனிருந்தான். அவன் மதிமயக்கத்தாற் றுர்ந்தரை யடைந்திருக்க தாய்தந்தைகளிருவரும் குமாரனை கையிற் பிடித்துக்கொண்டு இராமதாசரிடம் வந்து நமஸ்கரித்துப் பிள்ளையை அவர் பாதங்களில் விழச்செய்து ஸ்வாமி! இந்தப்பிள்ளை யும்முடையவன், இவனை தேவரீர் கைக்கொள்ளுமென்று பிரார்த்திக்க, இராமதாச ரதைக்கேட்டு பூதாவரண மிவனுக் குண்டாயிற் றென்றும் சத்குருநாம மிருக்கும்பொழுது பூதமும் போய்விடுமென்றும் பஞ்சாக்ஷரத்தால் பஞ்சபூதங்களைப் பரிசுத்தமுடைய ஆத்மானுபவ முடையோர் பரக்கடிப்பார்களென்றும் புகன்று ஐந்து சுலோகங்களை யப்பிள்ளையை உத்தேசித்துச் சொல்ல, அம்பாஜி மனோசுத்தி யுடையவனாகி இராமதாஸர் திருவடிகளைப் பிடித்தான். மதிமயக்கமும் போய்விட்டது. ஆசார்யருடைய சேவையி லமர்ந்திருந்தான். இதைக்கண்டு தாய்தந்தைகள் சந்தோஷப்பட்டு தமது இருப்பிடம் சென்றார்கள். இராமதாசர் அம்பாஜிக்குத் தாரக மந்திரத்தை யுபதேசித்தார். அதனால் வைராக்கியமும், பக்தியும், ஞானமுடையவனாய் சகலார்த்தங்களையு மறிந்து சுவர, ராக, தாளங்களைக் கற்றுக்கொண்டு ஆசாரியர் செய்யும் கவிதைகளை அப்போதைக் கப்போ தெழுதிக்கொண்டிருப்பான். சிஷ்யன் சேவா நிரதனாகி அவ்விட மிருக்க, இராமதாஸர் அரண்ணியத்திற்குச் செல்ல நின்றார். அவ்வேளையில் கிராமாதிகாரியின் குமாரத்தி ஆகாபாயி யென்பவ ளவ்விடம் போக யத்தனித்தாள். வனவாச மலைச்ச லுடையதால் வரவேண்டாமென்று இராமதாசர் சொன்னார். சரீரத்தையும் மனதையும் பிராணன்களையும் ஆசாரி யார்ப்பணம் செய்தே னுகையால் வனத்திற்கு தேவரீர் கூடவருகிறேனென்று ஆகாபாயி வேண்டிக்கொண்டாள். இதைக்கண்டு இராமதாசர் உன் மத்தரைப்போல சேட்டைகளைச் செய்து உன்னுடைய சொத்தை யனைத்தையும் பங்கிடுமென்று சொல்ல, அவ ளப்படியே செய்து இராமதாசர் சரணங்களையே பிடித்திருந்தாள்.

பின்பு சிஷ்ருடன் இராமதாச ரரண்ணியத்திற் சென்று ஓர் கிணற்றி னோரத்தில் திருப்தியடைந் துட்கார்ந் திருந்தார். சிஷர்க

ளொவ்வொரு வேலையாக செய்ய வாரம்பித்தார்கள். அக்கிணற்றி னருகில் ஓரால விருக்ஷம் கிளைகளுடன் பெருகி வளர்ந்திருந்தது. இதைக்கண்டு இராமதாசர் கிணற்றின் பக்கமிருக்குங் கிளையை வெட்டினுல் கிணற்றினீர் வெகுபேருக்குதவும்படி யெப்பவும் பாங் காக யிருக்குமென்று அந்த கிளையை வெட்டுவதற்கு சிஷர்களை ஆக்கினைசெய்ய, அம்பாஜீ சமீப கிராமத்திற்குச்சென்று கோடாலி யைக் கொண்டு வந்தான். அக்கிளையின்கீழ் இராமதாச ருட்கார்ந் துக் கொண்டு ஹரிசிந்தனையி னின்ருர். கயிற்றைக்கட்டி அச் செடிமேலேறி அம்பாஜி இராமதாஸரை நோக்கி ஸ்வாமி! விரு க்ஷத்தின் கிளையைப் பார்த்துசற்று ஒத்தி யுட்காருங்க ளென்ன, ஆசாரியர் சொல்லுவார். உன்னுடைய புத்திபலத்தைக் காண் பிக்கக்கடவை யென்ருர். இதைக்கேட்டு நாம் கிளையைவெட்டினு லாசாரியர்மே லதுவிழுந்தால் யான் சகிக்கமாட்டேன், எனக்கு துக்கம்வந்தால் நானெண்ண மிடேனென்று சொல்லி அக்கிளை யின்மேலே தானுட்கார்ந் திருந்து அதனை வெட்டினுன். பெரி யதான வக்கிளை இராமதாஸர் பக்கத்தில் பூமிமேல் விழுந்தது. கிணற்றுக்குள் சிஷன் விழுந்தான். அதில் நீரதிகமாக விருந் தது. சிஷ்ய ரனைவரு மவ்விடமே பார்த்துக்கொண் டிருந்தார் கள். அவ்வேளையிற் பாகம் சித்தமாயிற்றென்று ஆகாபாயி சொ ல்ல, போஜனத்திற்கு இராமதாச ரெழுந்திருந்தார். சிவாஜியு மவ்வேளையில் வர, ஸ்ரீகுருநாத ரவனைப் பந்தியிலுட்கார்ந்து சாப் பிடச் சொல்ல, மகாபிரசாதமென்று அரச னுட்கார்ந்தான். அனை வரும் பக்ஷிக்க யத்தனித்திருக்கும்வேளையில் ஆகாபாயி பரிதாபத் துடன் ஐயோ! பரமபக்தனை அம்பாஜி செடியினின்றும் விழுந் து கிணற்றில் மூழ்கிப்போனுனே! என்று சொல்ல, இராமதாசர் புகலுவார், அம்பாஜி சற்றுதூரம் வேலையாகச் சென்ருன், பின் னுலே வருவான். அன்னமிடும்படி ஆசாரியர் சொல்ல, அவளப் படியே செய்தாள். பின்பு இராமதாசர் சிஷரை நோக்கி நானு காஷ்டங்க ளோராற்றின் வெள்ளத்தி லொருமித்துச் செல்ல, ஒரு சுழியி லகப்பட்டால் வெவ்வேறு வழிகளா யவை போய்விடுவது போல ஜன்மமுள்ள வரைக்கு மொருவரும் துணையாகார். சன் மானத்துடன் வளர்த்த தாயும் காலத்திற்குள்ளாகி களேபரத்தை விடுவள். வேதோக்தமாக விவாகத்திற் கொண்டமனைவியும் புரு

ஷன் செத்தால் விதவையாய் விடுவாள். இதர பந்துக்களில் யாருக்கா ரிவ்வுலகி லிருப்பவர்? இதனை எப்பவு மிவ்வாறெண்ணி சர்வேஸ்வரனையே சிந்தை செய்யத்தக்கது. சம்பத்தும் வைபவமும் சரசமான பதார்த்தங்களும் சௌக்கியமாக விருக்கிற வரைக்கும் ஒருவன் என் வீடு என்மாடென்றிருந்து கடினகாலம் வந்தவுடன் திகிலடைந்திருப்பான். நான்கு நாட்களின் ருணுனுபந்தத்தால் அம்பாஜி நம்மிடமிருந்தான். அவனர்? நாமார்? ஸ்ரீரகுராமரை மனதி லெண்ணிக்கொண்டு சிந்தனை விடுவது சௌக்கியமென்று சொல்லிக்கொண்டு சிஷ்ர்க ளனைவரையும் சாப்பிடச்செய்வித்து, தானும் பக்ஷணைசெய்தார். ஆசாரியர் மகிமையைக் கண்டுகொண்டு அரசன் நகரத்திற்குச் சென்றுன். இராமதாசரும் யாருக்கும் அறிவிக்காம லின்னமோ ரரண்ணியத்திற்குச் சென்றுர்.

ஆறுதினங்க ளங்கு மிங்கும் திரிந்துக்கொண்டு இராமதாசரிருக்க, கிராமவாசிகளான ஜனங்க ளவர்மேல் நிந்திதமான வார்த்தைகளைச் சொல்ல வாரம்பித்தார்க்ள். ஏழாநாள் திரும்பி அந்த கிணற்றினருகே இராமதாசர் இராமநாமத்தைப் பாடிக் கொண்டுவர, சிஷ்ரும் கூடச்சென்று சேவைகளைச் செய்துக் கொண்டிருந்தார்கள். இராமதாசர் தியானத்தில் மனதொன்றுகச் செய்து உட்கார்ந்திருந்தார். பாகம் பூர்த்தியாகும் சமயத்தில் அரசன் வந்து பூஜைகளைச் செய்ய, ஆசாரியருக்கு மிதர சிஷ்ர்கள் அனைவருக்கும் ஆகாபாயி இலைகளைப் போட்டு அன்னத்தை வட்டித்தாள். அப்போது இராமதாஸர் கிணற்றினருகே சென்று அம்பாஜி! யென்றழைக்க " கல்லியாண " யெனும் சத்தத்தை கேட்டு வுடனே வரச் சொல்லி வுத்தரவு செய்ய, ஜலத்திலிருந்து அம்பாஜி வெளிவந்து பக்ஷணைக் குட்கார்ந்தான். இதைக் கண்டு அரசனு மிதர சிஷ்யவர்க்கமு அமிதானந்தத்தை யடைந்தார்கள். அனைவரும் பக்ஷணை செய்தபிறகு அரசன் பட்டணம் சென்றுன். இராமதாஸர் சிஷ்ருடன் மற்றோ ரரண்ணியத்திற்குச் சென்றுர். அத்தினம் முதற்கொண்டு அம்பாஜியை ஆசாரியர் கல்யாணு வென்றழைத்தனர். பின்பு இராமதாசர் ஷாபுர் கிராமத்திற்குச் சென்று அவ்விடத்தில் தாஸபோதமெனும் கிரந்தத்தைச் செய்தார். அதனைக் கலியாணன் வாசிக்கப் பிரஜைக ளனைவரும் வந்து கேட்பார்

கள், ஸ்ரீஹரி பக்தியும் வைராக்கியமும் அதனைக் கேட்ட மாத்திரத்தி லுண்டாம். மோஹமெனும் பாழ்கிணற்றில் முழுகினவர்களுக்கு அது முக்கியோத்தாரகமாகவிருக்கும்.

ஷாபூர் கிருகஸ்தன்.

அந்த கிரந்தத்தை வாசித்தால் அனேக ரவ்விடத்திற்கு வந்து கேட்பார்கள். அங்கோர் கிரகஸ்த னதைக்கேட்டு அதிகமாக அனுதாபத்தை யடைந்து இராமதாசருடைய திருவடிகளைப் பிடித்துக்கொண்டு ஸ்வாமி! அடியேனை யாட்கொள்ளும், சரணாகதி யடைந்தேனென்று வேண்ட, அவர் சொல்லுவார், அப்பா! உனக்கு குடும்பபாரம் பிரபலமாய் வளர்ந்திருக்க என்னுடன் வனத்தி லெப்படி யிருப்பாய்? வீட்டிற்குப் போகச்சொல்லி உத்தரவளித்தார். சில தினங்கள் இராமதாசர் அவ்விடமிருந்து அரண்ணியத்திற்கு செல்ல அந்த கிருகஸ்தனுங் கூடவே போனான். அவ்வனத்தி லிராமதாசர் ஹரிநாமத்தை அபாரமாகப் பாடிக்கொண்டு ஒரு செடி நிழலி லுட்கார்ந்துக்கொண் டிருக்க, கிருகஸ்த னவ்விடம் சென்று நமஸ்கரித்தான். இராமதாசர் அவனை நோக்கி அப்பா! உனக்குப் பிரிய மிரண்டிடத்தி லிருக்கின்றது, குடும்பத்திலும் வாஞ்சைவைத்துக் குருபதத்திற்கும் வாஞ்சை கொள்ளுகிறாய், அரண்ணியத்தி லதிக வைராக்கியத்தைக் கைக்கொண்டிருக்க வேண்டுமே! ஹரிபக்தி யுனக்கெப்படி யுண்டாமென்று கேட்க, கிரகஸ்தன் சொல்வான், உமது சாங்கத்தியத்தால் மாயை விட்டுப் போம், ஞானஸ்பூர்த்தியு முண்டாமென்றான். இராமதாச ரதைக் கேட்டு உனக்குப் பூர்ண விசுவாசமுண்டாம் பரியந்தம் கடினமாகும். கலிகாலத்திற் சுகமெளிதிற் கிடைக்காதென்றார். அதற்கவன் ஸ்வாமி! தேவரீ ராக்கினைக்கு மீறி நடவே னென்றான். அச்சமயத்தி லொருதடாகத்தி னருகிலிருந்த "தரடி" விருக்ஷத்தினடியி லிராமதாஸ ருட்கார்ந்திருந்தார். அந்தகிருகஸ்தனை நோக்கி அச்செடியின்மீ தேறவேண்டு மென்றார். அவனப்படியே செய்ய, கைகளால் கிளையைப் பிடித்து, கால்களை விடுவென்றார். அவனப்படியே செய்ய, இராமதாஸர் செடியின்கிளை யுன்னைப் பிடித்ததாவென்று கேட்க அவன் நான் அக்கிளையைப் பிடித்தே னென்றான். அப்பொழுது இராமதாசர் சமுசார முன்னைப் பிடிக்கவில்லை. நீயே சமுசாரத்தைப் பிடித்தாய். மனதே சமுசயத்திற் கேதுவாய்

யுலகில் விரோதியாகவு மிருக்கும். இரண்டுகைகளையும் விட்டுவிடு. பயமடைய வேண்டாமென்ன, அவன் கீழே ஜலத்தைக் கண்டு சிந்தை கலங்கி நிற்க, இராமதாசர் விடு விடென்று சொல்லியு மவன் விடாதிருக்க, அவர் சொல்லுவார், கிளி பஞ்சரத்தி லகப் பட்டுக் கலங்குவதுபோல் நின்றாய், கிளையைவிட்டு கிணற்றில் நீ விழுவையாயின் கிருபா மூர்த்தியான ஹரி ரக்ஷிப்பார். நம்பின வர்களை அவர் கைவிடார். என் வார்த்தையை நம்பக்கடவை யென்றார். இதைக்கேட்டு அவன் கைகளைவிட கிணற்றில் விழு ந்து முழுகினன். அவ்வேளையி விராமதாஸர் தியானத்தி னின்று ஏகாக்கிரமாக யிருந்தார். ஜலத்தில் முழுகின வந்த கிருகஸ்த னோர் பெரியப் பட்டணத்தை அவ்விடங் கண்டான். அங்கு ஸ்ரீராம தாச ரோர் மடத்திலிருந்து தாஸபோத மெனுங் கிரந்தத்திற்கு தாற்பரியம் சொல்லிக்கொண் டிருக்க அனேக ஜனங்க ளவ்விடம் வந்து கேட்டுக்கொண் டிருந்தார்கள். கிருகஸ்த னவ்விடம் ராம தாசரைப் பார்த்து ஸ்வாமி! காமாதி குணங்களாற் றபிக்கப்பட்டு அந்த தொந்தரை நிவர்த்தியாம்பொருட்டு சரணுகதனை வென் னைக் கைக்கொள்ளவேண்டு மென்று பிரார்த்திக்க, இராமதாசர் தாரக மந்திரத்தை யுபதேசித் தருளினார். அவ னவ்வேளையில் தெண்டன் சமர்ப்பித்து நிற்க, இராமதாசர் கிணற்றின் கரையோ ரத்தி னின்று, "இப்போதே வரக்கடவை" யென்று ஆக்கினை செய்ய, அவ னக்கிணற்றினின்றும் வெளிவந்து ஆசாரியர் சரணங் களை அன்புடன் பிடித்தான். கிணற்றிலென்ன கண்டாயென் றிராமதாசர் கேட்க, அவ்விடத்திய விசித்திர மனைத்தையும் விச தமாகச் சொன்னான். அரச னவ்வேளையில் வர, அனைவரு மிச் சங்கதியைக் கேட்டு, சுவிசேஷமென்று கொண்டாடி யாவரு மிராமதாசர் புகழைச் சொல்லிக்கொண் டிருந்தார்கள்.

அரசன் நகரத்திற்குச் செல்ல மறுதினம் இராமதாசர் வே றோ ரரண்ணியத்திற் சென்று சஞ்சரித்துக் கொண்டிருந்து சாப லூரெனுங் கிராமத்திற் பக்ஷித்து அதற்குச் சமீபமோர் பர்வத மி ருக்க அவ்விடம் போய் உட்கார்ந்திருந்தார். அவ்வேளையில் மந் திரியு மரசனுந் தேடிக்கொண்டுவந்து பாதசாரியாகி பர்வதத்தை ஏறிவர தாகமடைந்து ஆகாபாயியைக் கண்டு ஜலத்தைக் கொடு வென்று கேட்டு உடனே இராமதாசரைக் கண்டு நமஸ்கரித்துப்

பூஜைகளைச் செய்தான். அவ்வேளையில் சிஷர் பிக்ஷை தானியத்தைக் கொண்டு வந்தார்கள், அவர்களைக் கண்டு ஆகரபாயி அரசனுக்கு ஜலம் வேண்டுமாம், தாகத்தாற் தொந்தரை யடைந்திருக்கிறானென்ன, இதைக்கேட்டு இராமதாசர் சற்றுதூரஞ் சென்று தன்னுடைய யோகதண்டத்தா லவ்விடமோர் சிறு பள்ளத்தைச்செய்ய, அதிலூற்றுநீ ருண்டாகி ஜலதாரை சமுருதமாக வந்தது. இப்போதைக்கு மவ்விடத்திற் ஜலம் தடாகமாக நிறைந்திருக்க பிரஜைகள் காண்பார்கள். பின்பு சிஷர்கள் அரசனுக்கு ஜலபானம் பண்ணிவைத்தார்கள். இராமதாச ரிராஜனைக்கண்டு இருப்பிடத்தி லிருந்துக்கொண்டு எண்ணத்தை யென்மேல் வைக்கக்கடவாய், இவ்வளவு தொந்தர வேனெடுத்துக் கொள்ளுகிறாய்? விசேஷ பிரயாசைகளை யெடுத்துக்கொள்ள வேண்டாமென்று சொல்லிக்கொண்டிருக்க, சிஷர்க ளனைவரும் ஸ்நானஞ்செய்து சமையல் செய்ய அரசனுட னெல்லவரு மப்பொழுது பக்ஷித்தார்கள். அரசன் தன்னிருப்பிடம் சென்றபிறகு இராமதாஸர் சிஷர்களுடைய சாதனைப் பிராவண்ணியத்தை சோதித்தார்.

பின்பு இராமதாசர் வில்லம்புகளைக் கைக்கொண்டு காடுகளிற் கிரீடை செய்துக்கொண்டு செடிகளி னிலைகளின் மீதும் பக்ஷிகண் மீதும் விநோதங்களைச் செய்து வருவர். ஜடாதாரிகளான சில கோசாயிகள் சிவாஜி அரசனிடம் சென்று உமது முன்னோ ரெம்மை குருக்களாக நியமித்து விசுவசித் திருப்பர். ஆரண்ணிய பூமிகளில் பைத்தியக்காரரைப்போல அங்கு மிங்குந் திரியு மிராமதாசரைப் பிடித் தெம்மை விட்டுவிட்டீர். இது சீர்மை யல்லவென்று சொல்ல அரச னதைக்கேட்டுச் சும்மாவிருந்தான். பின்பு கோசாயிகளிற் றலைவன் இராமதாசரிட மோர் மனிதனை யனுப்பி அவருடைய சரியைகளைக் கண்டு வரச்சொன்னான். அவ னப்படியே சென்று வில்லம்புகளுடன் அவர் விளையாடிக்கொண்டிருப்பதைக்கண்டு திரும்பிவந்து தன் தலைவனுக்கதை யறிவித்தான். அந்த மஹந்து அரசனிடம் வந்து ஆசாரியர் செய்கைகளை அறிவித்து அவரிடம் சென்று பார்ப்போம் வாருமென்ன, அரசனு மாமோதித்துச் சேனைகளுடன் சென்றான். இவர்கள் வருவதைப்பார்த்து இராமதாசர் வில்லம்புகளாற் பக்ஷிக் கூட்டங்களை யடித்துக் கொண்டிருந்தார். அவைகள் கீழவிழுவே இராமதாசர் அவை

களைக் கையிலெடுத்து பார்த்திருந்தனர். இதை யரசன் கண்ணு ரக்கண்டு இழிவென் றெண்ணும லிஷ்டபூஜைகளைச் செய்தான். இராமதாசரு மவ்விட முட்கார்ந்து கோசாயிகளைக் காணலுற்றார். அவ்வேளையில் கோசாயி மஹந்து இராமதாசரைக் கண்டு பக்ஷி களைக் கொல்வது பாதக மன்றோ வென்ன, இராமதாசர் சொல் லுவார், கொல்பவ ரிராமரே, சிருஷ்டி கர்த்தாவே லயகர்த்தா வாம், அப்படி யல்லாவிடில் நீங்க ளிப்பக்ஷிகளைச் சிருஷ்டி செய் யக் கடவீர்களோ வென்றார். அதற் கவர்கள் பேசாமலிருக்க, இராமதாசர் அரசனைப் பார்த்து இப்பக்ஷிகளை நெருப்பிற் சுடுவது நன்மையென்று விறகைக் கொண்டுவந்து நெருப்புண்டாக்கி அப் பக்ஷிகளை யதனிற்போட அவையாவும் ஜீவித்து பறந்து போயின. பக்த ரனைவரும் ஜய ஜயவென்று சொல்லி ஓசை யிட்டார்கள். கோ சாயிகளும் மஹந்தும் கொந்தளிப்பற்று சென்றனர். அரச னுசாரி யருக்குப் பூஜைகளைச் செய்து அரண்மனைக்குச் சென்றான். இராம தாசர் சிஷர்களுக்குச் சாதனங்களை சொல்லிக்கொண் டிருந்தார்.

வேணுபாயி.

ஒருநாள் இராமதாசரிட மோர் கிருகஸ்தன் வந்து நமஸ் கரித்துச் சொல்லுவான், கோலாபுரத்தில் லக்ஷ்மி யுபாசனையை ஜனங்கள் செய்துக்கொண் டிருப்பர்களென்றும் இராமநாமம் மேன்மையைக் கொடுக்காதென்று அவ்விட மெவரு மதனை நினை ப்பதில்லை யென்றும் அது அந்திய காலத்தி லுச்சரிக்கத் தகுந்த நாமமென்று சொல்லுவார்களென்றும் புகன்றான். இதைக் கேட்டு இராமதாசர் சிரித்து பிரம்மமே இராமராவார். பிராட்டி அந்த பிரம்மத்திற்குச் சாயையா யிருப்பள். அவள் பூமி ஆகா யங்களால் அவரை மறைத்திருந்து ஆவரணத்தா லிந்த ஜக த்தை சுவாதீனமாக செய்துக்கொண்டாள். ஸ்ரீ ரகுராமரைப் பஜிக்கும் பிராணிக ளந்தப் பிரமத்தைச் சேருவார்கள். விஸ்வ மோகினி யானவள் பிராணிகளை யிவ்விஷயத்தில் வஞ்சனை செய் திருக்கிறா ளென்று ஸ்ரீராமருடைய ஆக்கினையைத் தான் மனதி லெண்ணித் தனது சிஷ்ய வர்க்கத்துடன் கோலாபூருக்குச் சென் றனர். பிராசையை வகித்து நித்திய திருப்தியுடன் நாராயண குண கதைகளை அவ்விடத்திற் சொல்ல பிரஜைகள் வைராக்கியமும் பக் தியு முடையராகி அதனை கேட்கவந்தார்கள். அவர்களில் வேணு

பாயி யெனும் விதவை ஸ்திரீ இராமகுண கீதங்களைக்கேட்டு இராம தாசருக்கு நமஸ்கரித்து அடியாளை யங்கீகரிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, அவரு மவளுடைய மனோ பரிபாகத்தைக் கண்டு தாரக மந்திரத்தை யுபதேசித் தருளினார். அப்பொழுது அவள் அனேக விதமான அன்னங்களைச் செய்து அந்தணர்களுக் களித்தாள். அவ்வேளையி லவளுடைய சுத்தமனதைக் கண்டு ஆஞ்சனேய ரவ்விடம் வர, அவருடைய மங்கள ரூபத்தைக்கண்டு அவள் மூர்ச்சித்திருக்க, இராமதாச ரெழுப்பினார். அவ்விரவில் இராம தாசர் ஹரிகீர்த்தனையை அதிக மதுரமாகச் செய்யவே, அனேக பிரஜைகள் வந்து அதனை கேட்டு அவர்களுடைய மனங்கள் கரைந்து சிலநாளவ்விட மிருக்க வவரை வேண்டிக்கொண்டார்கள். அப்படியேயென் றவ்விட மிருக்க, வனேக ரவருடைய சரணங்களை யாஸ்ரயித்தார்கள். அவரும் மனோ பரிபாகத்தைக்கண்டு தாரக மந்திரத்தை யுபதேசித்தார். மூன்றுநா ளிருந் தவ்விடத்தை விட்டு கானகத்திற்குச் செல்ல, வேணுபாயியும் கூடவருவதற்கு ஆக்கினையைக் கேட்டாள். அவரதற்கு சம்மதிக்காமல் சொல்லுவார், சாகா முன்பே செற்றுக் கிடந்தாலென் சாங்கத்தியம் சரிப்படும். நீ வீட்டிலிருந் தென்னை நினைத்திருவென்று சமாதானத்தைச் சொல்லி ஷாபூருக்குச் சென்றனர். சிலநாட் கழிந்தபின் வேணுபாயி ஆசாரியரிடஞ் சென்று அவரைச் சேவித்துத் திரும்பி வீட்டிற்கு வர, இனத்தா ரனைவரும் கண்டு இது பாபகருமமென்றும் துர்நிமித்தங்க ளுண்டாமென்றும் பலமுறைச் சொல்ல, அதனை தாய் தந்தைகள் கேட்கச் சகிக்காமல் வேணுபாயிக்கு விஷத்தைக் கொடுத்து சாப்பிடச் சொன்னார்கள். அவ ளதை சாப்பிட்டவுடன் வயிற்றிலெறிச்ச லுண்டாகி தொந்தரவு பட்டு ஆசாரியர் திருவடிகளை மனதி லிட்டுக்கொண்டு, ஸ்வாமி! இரக்ஷியுமென்று மனதை ஏகாக்கிரப் படுத்திப் பிராணனை விட்டாள். சித்தி மகிமையா லிராமதாச ரப்போ தவ்விடம் வந்து இராம பஜனையைச் செய்யலுற்றார், இராவணமர்த்தனரே! இராமசந்திரரே! தசரத நந்தனரே! ஜானகிஜீவனரே! வாரும் வாரும், இவ்விஷத்தைப் போக்குமென்று அனேகப் பிரகாரங்களாகத் தோத்திரஞ்செய்து தன் பிரம்பினா லப்பிரேதத்தை தீண்டவே உடம்பை அசைத்தெழுந்திருந்து ஆசாரியர் பாதங்களைப் பிடித்து, ஸ்வாமி! விஷத்

தை வைத்த இவர்களுடையசங்க மினிவேண்டேனென்று மோஹ மமத்வங்களை விட்டு ஆசாரியருடன் சென்ருள். சாபல கிராமத் திற் சேரவே அவ்விடத்தில் சச்சிஷ்ய ருடைய கூட்டத்தைக்கண்டு வேணுபாயி மகத்தானவா னந்தத்தை யடைந்து ஆசாரிய ரருளால் ஞானத்தைப்பெற்று அவ்விடமே யிருந்தாள். அரசன் தரிசனத் திற்கு வந்தபொழுது சீஷர்கள் பிக்ஷைதானியத்தைக் கொண்டு வந்து கொடுக்க ஸ்திரீகள் சமையற்செய்து பாதார்த்தங்களுடன் அனைவரும் பக்ஷணை செய்வார்கள்.

இவ்விதமாக இராமதாசர் திருப்தியுட னவ்விடமிருந்து இராஜயோகத்தை அனுசரித்தார். துளசி செடியினிடம் சிம்மா சன மொன்றுண்டாக்கி அதன்மே லிராமதாசர் வைபவத்துட னுட்கார்ந்தார். பரிவாரமனைத்தும் சபையாராகச் செய்தனர் சீஷர்கள் பாடிக்கொண்டிருக்க ஆகாபாயி ஹரிகதைச் சொல்லிக் கொண்டிருந்தாள். ஆசாரியர் முறை முறையாகக் கதைசொல்ல வேண்டுமென்று ஆக்கினை செய்ய, பின்பு வேணுபாயி சற்றுநேரம் தன் வாக்கிய சரளியை வெளிப்படுத்தினள். அதன்பின் கல்யாணன் ஆத்மஞானத்தை ஆர்த்தியுடன் வெளிப்படுத்த, இராஜன் அதைக்கேட்டு சமாதியில் இரண்டுநாட்பரியந்தம் தேகநோக்கமில் லாம லிருந்தான். அவ்விரண்டு நாட்களுக்குள் தாஸபோதமெ னுங் கிரந்தத்தை கலியாண னெழுதலுற்றான். ஓரிரவெல்லா மெழுத, கண்களினொளி மறைந்தது. இராமதாசருடைய கை ஸ்ப ரிசையினுல் கண்களெப்பொழுதும்போல் வந்தன. அவ்வேளையி லரசனெழுந்திருந்து ஆசாரியருக்கு நமஸ்கரித்து அதிகபிரேமை யுட னிருந்தான். அப்பொழுது இராமதாச ரபேக்ஷையுட னந்த கிரந்தத்தை அரசனுக்குக்கொடுத்து, உலகத்திற் பக்தியுடன்கூ டின உபாஸனையும், உபாசனையுடன்கூடின ஞானமும் உசிதமாகு மென்றும், முமுக்ஷுவுக்கு விவேகத்துடன் கூடின வைராக்கிய மிருக்கவேண்டுமென்று மிந்த அர்த்தங்களனைத்தும் தாசபோதத் திற் பிரதிபாதிக்கப்பட் டிருக்கிறதென்று சொல்லி யருளினர்.

### காகாபண்டிதன்.

இப்படி சிலகாலங்கழிய அரசனும் ஆசாரியருடைய தரிச னத்திற்கு அடிக்கடிபோவான். காகாயெனும் பண்டித னரச னிடமிருந்து பாகவதார்த்தங்களை அவனுக்குச் சொல்லிக்கொண்டு

தனது ஜீவனத்தை நடத்திவருவான். ஒருநா ளரசன் தன் பூஜா கிரகத்தில் தாஸபோதமெனும் கிரந்தத்தை வாசித்துக் கொண் டிருக்க பண்டித னவ்விடம் வந்து அதென்ன கிரந்தமென்று அர சனைக் கேட்க, இராஜன் "தாஸபோதம்" என்று சொல்ல, பண்டி தன், பிராக்கிருத கிரந்தங்கள் சாமானியமானவை, அவைகளை வாசித்தால் வெகு தோஷமாம், அவை ஸம்ஸ்கிருதமாமா? விகார மானவைகளை வாசிக்கக்கூடாது, அவை சூத்திர கவித்வமாகும், வியாசர் செய்த கிரந்தங்களே வாசிக்கவும் கேட்கவுந்தகும். இவ் விதமான பிராகிருத கிரந்தங்களை யெப்பவும் பார்க்க வேண்டா மென்றான். அரச னிதைக்கேட்டு அவை பிராகிருதமாயினும் சுருதிசாஸ்திரங்களி னர்த்த விசேஷங்களையே சொல்லும், அதை வாசிக்க வெனக்கு பிரீதியுண்டாயிற்று, நீரு மதனைப்பாருமென்ன, பண்டிதன் குரோதமுடையவனாகி இனி புராணம் சொல்லேனென் று உடனே வீட்டிற்குச் சென்றான். அரசன் கோபங்கொள்ளாம லிருந்தான். இராமதாச ரிச்சங்கதியைக் கேட்டு பண்டிதன் இப் படி யிருப்பது உசிதமன் றென்று பரிவாரத்துடன் பட்டணத் திற்கு வந்தார். அரசனு மாசாரியரைக் காணவெண்ணி யிருக்க, பரிசாரக ரிராமதாசர் தோட்டத்தி லிறங்கி யிருக்கின்றாரென்ன, அரசன் சேனைகளுட னவரிடம் செல்ல, அவர் பாதசாரியாய் வரக் கண்டு விநய விதேயத்துடன் பூஜைகளைச் செய்து வெகு சம் பிரமத்துடன் பிரஜைகளைக் கூட்டிக்கொண்டு அவரை பட்டணத் துள் பிரவேசிப்பித்து தன் இருப்பிடத்திற் சேர்த்தான். காகாஜி இச்சங்கதியைக் கேட்டு சகிக்காமல் அவ்விடம் வாராதிருந்தான். அரசன் தூதரை யனுப்பி அவனை அழைத்து வரும்படிச் சொன்ன தற்கு பண்டிதன் கீர்த்தனை காலத்தில் வருவேனென்று சொல்லி யனுப்பினான். ஆசாரியருக்கு அரச னனந்தவிதமாக பூஜைகளைச் செலுத்தி அன்றைய தினம் பிராம்மண போஜனமும் பிரபலமாக செய்வித்தான். அனைவரும் பக்ஷித்த பின்பு பயபக்தியுடன் கூடின வர்களாகி இராமதாசருடைய கீர்த்தனையை கேட்க வேண்டுமென் னும் விருப்பத்துடன் பிராம்மணர்களும் மற்றவர்களும் உட்கார்ந் திருந்தார்கள். உட்கட்டில் இராமதாச ரிருக்க சிஷ்யர்கள் வெளியி லிருந்து கீர்த்தனையைச் செய்துகொண்டிருந்தனர். இதற்குள் இராமதாசரே அவ்விட மெழுந்தருள காகாஜி தவிர மற்றெல்

லோரு மெழுந்திருந்து மரியாதையைச் செய்தார்கள். அப்பொழுது இராமதாசர் சகலருடைய மத்தியினின்று தசரதராமரைத் தியானித்து தோத்திரங்கள் செய்து, முற்காலத்திற் கிருஷ்ண மூர்த்தி உத்தவருக்குச் சொன்னபடி பாகவதார்த்தத்தை பிரபலப் படுத்திச் சொல்லிக்கொண்டு வர கேட்போ ரனைவரும் தடஸ்தராகி விநயத்துட னிருக்க, காகாஜி அப்பொழு தெழுந்திருந்து இராமதாசர் கால்களைப் பிடித்துக்கொண்டார். உடனே அவ ரப் பண்டிதனை யாலிங்கனஞ்செய்து அவன் கையைப் பிடித்து உட்காரவைத்துச் சொல்லுவார், சகல சாஸ்திரங்களின் சம்மதியாகவே சகலார்த்தங்களை யனேக பாஷைகளிலே யுரைத்து பகவான் முன்பு பிரகடப்படுத்தினர். பாமரர்களுக்கு கீர்வாணத்திற் பாண்டித்திய மில்லாமையால் எல்லோரு மறியும்படி பிராகிருத கிரந்தங்களைச் செய்வித்தார். பெரியோர்கள் மேலான கிரந்தங்களை சம்ஸ்கிருதத்திற் சொன்னார்கள். அவைகளைப் பண்டிதரானோர் இதர பாஷைகளி லருளிச்செய்தார்கள். அவை அன்னிய பாஷையி லிருக்கினும் தாற்பரிய பேதமிராது. சேஷசயனனுடைய கருத் திதுவென்று இராமதாசர் சொல்லி யருளினர். சபாஜனங்களனைவரும் சந்தோஷித்தார்கள். காகாஜி பண்டிதனும் பிரியத்தைக் காண்பித்தான். விபவத்துடன் கதை முடிந்த பிறகு பிரஜைக ளிருப்பிடஞ் சென்றார்கள்.

அன்றிரவே இராமதாசர் அரண்ணியத்திற் பிரவேசித்து சிஷருடன் ஆளந்திக்குச் சென்று ஞானதேவருடைய சமாதியை நமஸ்கரித்து அவ்விடம் பிராம்மணர்களுக்கு பக்ஷணை செய்வித்து மூன்றுநா ளவ்விடமிருந்து கீர்த்தனை செய்து பின்பு பைடன்புரிக்குச் சென்று ஏகநாதர் வீட்டில் விட்டல மூர்த்தியைத் தரிசித்து அவர் சமாதியையும் துளசி அரசு விருக்ஷங்களையு மன்புடன் சேவித்து நிற்க ஏகாந்தத்திலே ஏகநாதரும் தரிசனங் கொடுத்தார். அவ்விடமிருந்து பின்பு சிஷருடன் பஞ்சவடிக்குப் பிரயாணமாகிச் சகோர பக்ஷிகள் சந்திரனைப் பார்க்க வபேக்ஷிப்பது போல, இராம தரிசனத்தை அபேக்ஷித்துச் சென்று அபார பிரீதியுடன் சேவித்து ஆர்த்தியுட னவ்விடம் கீர்த்தனை செய்ய, சகல ஜனங்களும் கதை கேட்க விரும்பி வந்தனர். அப்பொழுது இராமதாசர் இராமாவேசத்தை யுடையராய் அவர் கலியாண குணங்களைச் சொல்ல,

கதை ரம்மியமாயிருந்தது. சோமசேகரர் முதலான தேவர்களும் சுகமாகக் கேட்க லுற்றார்கள். அமலமான வத்தியாத்ம ஞானத்தை அவ்விடத்தில் விளம்பரப்படுத்த அருணோதய மாயிற்று. அப்பொழுது ஹாரதியைக் கொடுத்தார்கள். சிலநா ளவ்விடம் கதா பிரசங்கம் செய்துக்கொண்டிருந்து ஓர்நாள் பெருமாளிடம் சென்று தான் திரும்பிப் போக ஆக்கினையைக் கேட்டு, கிருஷ்ண தீரத்திலோர் அர்ச்சா விக்கிரகத்தை ஸ்தாபனை செய்யும்பொருட்டு கட்டளை யிடவேண்டு மென்ன, பெருமா ளாமோதித்து, அவரை இருப்பிடம் செல்ல ஆக்கினை தந்தார்.

அனந்தரம் இராமதாஸர் கிருஷ்ண தீரமான தமதிருப்பிடம் வந்து ஆஞ்சனேயரைத் தியானிக்க அவர் பிரஸன்னமாகவே இராமதாசர் நமஸ்கரித்து ஸ்வாமி! ஸ்ரீராமபிரானுடைய அர்ச்சா விக்கிரக மெங்கு கிடைக்குமென்று கேட்க, அவர் சொல்லுவார், இவ்விடத்திற் கேழு கோசு தூரத்தி லோர் கிராமமுண்டு, அவ்விடம் இராம விக்கிரகமும் சீதை விக்கிரகமு மிரண்டு மிருக்கின்றன, அவைகளை யெடுத்து வரலாமென்று சொல்லி மறைந்தனர். இராமதாச ரோரிரவி லவ்விடம் சென்று அவ்விக்கிரகங்களைக் கைக்கொண்டு வந்து கிருஷ்ண தீரத்தி லிருத்தினார். அந்தக் கிராமத்தில் மூர்த்திகளைக் காணமல் கிராமவாசிக ளனேக ரவ்விடம் தேடிக்கொண்டிருக்க இராமதாசர் செய்கைகளைக் கேட்டு அவரிடஞ் சென்று ஸ்வாமி! தேவரைப்போலொத்த சாதுக்கள் திருட்டுத்தனமாக விக்கிரகங்களை யெடுத்து போவது நியாயமா? என்று கேட்க இராமதாசர் சொல்லுவார், இராம மூர்த்தி ஆக்கினையைக் கொண்டு செய்தேன் அவைகளை நீங்கள் வேண்டுமென்றால் கொண்டு போகலா மென்று சொல்ல, அனேகரொன்றாகக் கூடி அம்மூர்த்திகளை எடுக்க முயன்றாலும் தங்களா லாகாமல் பெருமாள் திருவுள்ளமென்று அவர்க ளிருப்பிடஞ் சென்றார்கள். பின்பு அவ்விடத்திலோர் ஆலயத்தைக் கட்ட இராமதாச ராரம்பித்தார். சிஷர்க ளனைவரும் கற்களைக் கொண்டுவந்து சேர்த்தார்கள் சில நாட்களுக்குள் கோயிலும் பிராகாரமு முடிந்தன. சிஷருடன் கூடி இராமதாசர் அவ்விரு மூர்த்திகளையு மவ்விடம் ஸ்தாபித்தார். அரசனும் சந்தோஷத்துட னனேக காணிக்கைகளைக் கொடுத்தான். பெருமாளு மம்மூர்த்தியிற் பூர்த்தியாக

ஆவகித் திருந்தார். ஐந்து நாள் வரைக்கும் பிராம்மண போஜனம் வெகுவாக நடந்துவந்தது. அமிதப் பிரபாவத்தை பெருமாளுங் காண்பித்துக் கொண்டு வந்தனர்.

பின்பு இராமதாசர் மூன்று ஆஞ்சனேயர் விக்கிரகங்களை அவ்வாலயத்தி னருகே ஸ்தாபித்தார். அஞ்சலி ஹஸ்தராயிருக்கும் ஆஞ்சனேயர் மூர்த்தியை பெருமாள் சன்னிதி முன்பாக ஸ்தாபித்தார். சௌரிய பராக்கிரமங்களுடன் கூடிய மாருதி மூர்த்திகளைத் தூரத்தில் ஸ்தாபித்தார் அவை அபார மகிமைகளை உலகத்திற்குக் காண்பித்து மனிதரை புனிதராகச் செய்தன. ஆஞ்சனேயருடைய பூஜையைச் செய்கிற விதத்தை இராமதாஸ ரறிவித்தார். ஒருபுருஷ ஞஞ்சனேயரை ஆராதிக்க யத்தனித்தால் பிரம்மசரிய விரதத்தை கைக்கொண்டு சுசியாயிருந்து கொண்டு மூர்த்திக்குத் தைலாப்பியஞ்சனம் பண்ணி ஜலத்தை விட்டு சிந்தூரலேபனம் செய்து ஊர்த்வபுண்டரஞ் சாற்றி புஷ்பமும் தூபமும் தீபமும் கொடுத்து முக்கியம் வடைகளும் தயிரும் நைவேத்திய மிடவேண்டும். பதினாறுநாட்க ளிப்படிசெய்தால் மனோரதம் பூர்த்தியாகும். இராமதாசர் பன்னிரண்டு இடங்களிற் மாருதிமூர்த்திகளை ஸ்தாபித்தார். ஓரிடத்தி லாஞ்சனேயர் விக்கிரகத்தை ஸ்தாபிக்கு மளவில் நூறுபேருக்கு சமையற் செய்விக்க ஆயிரம் பேர் வந்துவிட்டார்கள். அப்பொழுது ஆகாபாயி பிரசாதம் போராதென்றாள். அதைக்கேட்டு இராமதாசர் ஆஞ்சனேயர் சரிப்படுத்துவாரென்றார். வந்தவர்க ளனைவரும் திருப்தியாகப் பக்ஷித்துப் பிரசாதம் வெகுவாக மீதியாயிருந்தது.

ஆஞ்சனேயரைக் குறித்து இராமதாசர் அடிக்கடி தோத்திரங்களைச் செய்துக்கொண் டிருப்பர். தனக்கு ஜீவாதார மவரே என்று சொல்லுவார். உலகத்திற் தாய் தகப்பன் ஆப்தவற்கமு மவரே வென்பர். சதாசாரியராகிச் சகலத்தையு மறிவித்தன ரென்று புகழ்வர். அவர் மூலமாக ஸ்ரீராமரைக் கண்டேன், அதிக திருப்தியை யடைந்தே னென்னும் ஹிதவசனங்களைச் சொல்லிக் கொண்டு சஞ்சரித்து வருவர். இப்படியிருக்க கிருஷ்ணாநதி யோரிடத்தி லிரண்டாகப் பிரிந்து மத்தியில் லிங்கமென் றொரு விசால பூமி யிருந்தது. அவ்விடத்தில் பூர்வத்தில் மாருதிமூர்த்தி யிருந்ததாக்வும் அது ஆற்றில் முழுகிப்போனதாகவு மவ்விடத்திலுள்ள

ஜனங்கள் சொல்லிக்கொண் டிருந்தார்கள். அவ்விடத்திற்கு இராமதாஸர் தொந்தரையுடன் சென்று பெரிய ஓசையுடன் ஆஞ்சனேயரே! வாருமென்று கூப்பிட, நீ நீரிலிழிந்து இவ்விடத்தைப் பார்க்கக்கடவை யென்று மாருதி சொல்ல, ஆழமான வம்மடுவிலிராமதாசர் குதித்து ஏழுநா ளதற்குள்ளிருக்க வெளியில் மனிதரனைவரும் இராமதாசர் மடுவில் விழுந்து மடிந்தன ரென்றனர். ஏழாநாள் மூர்த்தியை கைக்கொண்டு ஆற்றின்கரை வருமளவில் ஆஞ்சனேயர் வேறொரு உருவத்தை வெளியில் ஸ்தாபித்து அந்த விக்கிரகத்தை ஜலத்திற்றானே விட்டுவிடென்றார். இராமதாச ரதனைக்கேட்டு தன் கைகளா லவ்வோரிரவில் மாருதி மூர்த்தியை ஏற்படுத்தி பொழுது விடிந்தவுடன் பிராம்மணர்களை அழைத்து ஆஞ்சனேய மூர்த்தியை அவ்விடம் ஸ்தாபிக்கச் சொல்ல, அவர்களுமப்படியே யென்று, விதியுக்தமாக சம்புரோக்ஷணை செய்தார்கள். இராமதாசர் அன்னசாந்தி வெகுவாகச் செய்து தக்ஷிணைகளைக் கொடுத்து ஹரிகீர்த்தனை நடத்தினர். அவ்விக்கிரகம் மூர்த்திகரித்திருந்தபடியால் காம்யார்த்தமாக வனேக ரவ்விடம் வருவார்கள். அபேக்ஷைக ளனைத்து மானுகூல்யமாய் விடும்.

பிறகு இராமதாசர் சாபல கிராமத்திற்கு வந்து அவ்விடத்திலிராமருடைய உச்சவத்தைச் செய்ய சிந்தித்து சிஷ்ர்க ளனைவரையுமழைத்து உச்சவத்திற்கு வேண்டும் வஸ்துக்களை பிக்ஷை யெடுத்து கொண்டுவரக் கட்டளை யிட்டார். அரச னங்குவந்து சாமக்கிரிகை யனைத்தையும் நான் சமர்ப்பிப்பே னென்ன, இராமதாசரதைக்கேட்டுச் சொல்லுவார், நீ அப்படி கொடுப்பது சரியல்ல, பெரியோர்க ளக்ஷய பாத்திரத்தைப் பரமபாவனமென்று பிடிப்பார்கள், அனேக ஜீவர்க ளந்த சுகிருதத்தை யடைய வேண்டுமானதால் நால்வருடன் நீயும் செலவை நடப்பிப்பா யென்றார். அரச னதற்குச் சம்மதித்து அபேக்ஷிதமான வஸ்துக்களைக் கொடுத்தான். சிஷர்கள் பட்டணங்களிலுங் கிராமங்களிலுஞ் சென்று அமுதுபடி முதலான அனேக வஸ்துக்களைக் கொண்டுவந்தார்கள். பின்பு அனேக ஜனங்க ளவ்விடம் வந்து சன்னிதியை சகலாடம்பரங்களால் சிங்காரித்து ஸ்ரீராமர் விக்கிரகத்தை ஆடை ஆபரணங்களா லலங்கரித்து பூஜைகளை வெகுவாகச் செய்து பிராம்மணர்களுக்கும், இதர ஜனங்களுக்கு மன்னதான மளித்து ஒன்

பது நாள் பிரஜைக ளனைவருங் கூடி ஸ்ரீராமருக்கு சிரேஷ்டமாக உச்சவத்தை நடத்தினர்கள். பெருமாள் கைங்கரியத்திற்கு தானியம் முதலானவை கொடுத்தப் பிரஜைகளை இராமதாச ரழைத்து வருஷந்தோறு மிவ்வண்ணமே உச்சவத்தை நடப்பிக்கக் கடவீர்களென்று திட்டப்படுத்தினர். அந்த நிர்ணயப்படியே இப்போதைக்கும் நடந்தேறி வருகின்றது. பத்தானுள் பிரஜைக ளனைவரும் போய் விட்டார்கள். இராமதாச ரரண்ணியத்திற் சென்று ஓர் மலையுச்சியி லிருந்தனர்.

ஆஞ்சனேய ஜயந்தியில் இராமதாசர், தான் ஆங்காங்கு ஸ்தாபித்த ஆஞ்சனேய விக்கிரகங்க ளனைத்தினுக்கும் பிரஜைகள் மூலமாக உச்சவங்கள் நடக்க சிஷ்ய வர்க்கங்களை யனுப்பி தானியத்தை வரவழைத்து புஷ்பம் சந்தனம் முதலாகிய வஸ்துக்களால் பூஜைகளைச் செய்வித்து ஆஞ்சனேயப் பிரீதியாக அன்னதானமனேகருக் கிடும்படி செய்வித்தார். சாபல கிராமத்தி லோர்நாள் கீர்த்தனை செய்யலுற்றார். அதில் ஆஞ்சனேயருடைய பிரபாவத்தை அதிகமாக வர்ணித்தார். அப்பொழுது அரச னவ்விடமிருந்து ஆஞ்சனேயர் குரங்குரூப மாவதற்குக் காரண மென்னென்று கேட்டான். அதற்கு இராமதாசர் சொல்லுவார். ஒரு காலத்தில் உருத்திரமூர்த்தி திருவேங்கடத்தி லுமையவளுடன் வீற்றிருந்தனர். அவ்விடத்தி லோர் வானரம் ஸ்திரீயுடன் போகித்துக்கொண் டிருந்தது. அதனை ருத்திரமூர்த்தி பார்த்திருந்து உமையவளை வானரரூப மடையும்படிச் செய்து அவரும் வானரராகி இருவரும் கிரீடைகளி லிருக்க, அவர் வீர்யம் கீழே விழுந்தது, அதனை வாயுபகவான் கைக்கொண்டு தவத்திலிருக்கு மஞ்சனீதேவி காதில் வீழ்த்த அந்த வீர்யத்தி னம்சத்தால் வானரரூபமுடைய பிள்ளை பிறந்தனரென்றார். இதைக்கேட்டு சபையிலுள்ளவெல்லவரும் சமாதானத்தை யடைந்தனர். அவ்வேளையிற் சிலர் வந்து இராமதாசர் முன் நின்று ஸ்வாமி! இன்னேரூரில் நீர் ஆஞ்சனேய ருச்சவத்தை விபவத்துடன் செய்துக்கொண் டிருந்தீரே! அவ்வூரை யெப்போது விட்டீ ரென்றார்கள். சிஷ ரவர்களைக் கண்டு இராமதாச ரிவ்விடமே இருந்தா ரென்றார்கள். இன்னமோரூரைச் சேர்ந்த சில ரவ்விடம் வந்து இராமதாசரை ஹனுமஜ்ஜயந்தியிற் றங்களூரிற் கண்டோமென்றார்கள். இப்படி பதினே ரிடங்க

ளிலும் அத்தினத்தி லிராமதாஸர் தாமேயிருந்து விபவத்துட னுச்சவங்களை நடத்தினர். சிஷர்க ளாசாரியரைக்கண்டு ஸ்வாமி! ஒரு புருஷ னனேக விடங்களி லோர் வேளையி லெப்படி யிருப்பா னென்று கேட்க, ஆசாரியர் இது இராம மூர்த்தியுடைய லீலையாம். கிருஷ்ணவ தாரத்திற் கன்றுக்குட்டிகளையும் கோப பாலரையும் சதுர்முகன் திருடிக்கொண்டுபோக கோவிந்தனே கோவத்சங்களும் கோப பாலருமாகி நிற்கக்கண்டு பிரஹ்ம தேவன் அவர் பாதங்களில் விழுந்தான். அவ்வண்ணமான சர்வேஸ்வரனுடைய அளவற்ற செய்கைகளை எவரால் சொல்ல முடியுமென்று சொல்லியருளினர். இதைக் கேட்டு பகவானுடைய லீலைகளைக் கொண்டாடிக்கொண்டு அவரவ ரிருப்பிடங்களைச் சென்றனர். இராமதாஸர் சாஸ்திரவாதஞ் செய்யவந்த சிலருடைய கர்வத்தை யணைத்து கோலாபுரத்திற்குச் சென்று சிலநா ளங்கிருந்து பின்பு தீர்த்தாடனஞ் செய்து சாபள கிராமத்திற் கெழுந்தருளினர்.

மாஹோளியில் உத்தவனென்னுஞ் சிஷ்யன் மாருதியைப் பூஜித்துக்கொண்டு மோஹா வேசத்துடன் கீர்த்தனையை யொருநாட் செய்ய, ஒரு துலுக்கப்பிரபு தொந்தரையைச் செய்து கதையை நிறுத்தும்படி பண்ணி உத்தவனைக் கட்டிக் காவலி லிருக்க வனுப்பினன். கிராமவாசிக ளனைவரும் உத்தவனை விடுவிக்கும்படி வேண்டியு மவனவர்களைத் துரத்திவிட்டு காஜியை அழைத்து பிராம்மணனான உத்தவனை துலுக்கனாகச் செய்யவேண்டுமென்றான். இதைக்கேட்டு உத்தவன் ஆசாரியரை ஆர்த்தியுடன் நினைத்திருக்க உடனே இராமதாச ரவனிடம் சென்று நின்றார். அவ்வேளையில் காஜி சுன்னத்துசெய்ய யத்தனித்தபோது இராமதாசர் பத்து பீரங்கிக் குண்டுகளுக்குச் சமமான ஒ ரோசையைப் போட, துலுக்க னிதைக்கேட்டு விந்தையுடன் மூர்ச்சை யடைந்தான். ஒரு ஜாமங் கழிந்தபிறகு எழுந்திருக்கு மளவில் இராமதாசரைத் தன்முன் கண்டான். பின்பு அத்துலுக்கன் உத்தவனை காவலிலிருந்து விடுவித்து இனி சங்கட்டமின்றி கீர்த்தனை செய்யலாமென்று சொல்லி இராமதாசருக்குத் தெண்டனிட்டுச் சென்றான். பின்பு இராமதாச ராஞ்சனேய ராலயத்திற்கு வர, ஊரா ரனைவரு மவருக்கு அதிக பூஜைகளைச் செய்தார்கள். அவ்விட மோர்நாளிருந்து சாபுல கிராமத்திற்கு வந்து சிஷர்க ளனைவர்களுக்கும்

சகல தேசங்களிலும் சென்று நாம மகிமையை பிரீதி யுடையவர் களுக்குப் பிரசித்தப்படுத்தும்படிக் கட்டளையிட் டனுப்பினர்.

பாகாநகரத்திற் கேசவ ஸ்வாமி யென்றொரு பக்தர் ஸ்ரீ ஹரி பஜனையை சிறப்புடன் செய்துக் கொண்டிருப்பர். இராமதா சருடைய கீர்த்தியை அனேகர் வர்ணிக்க அவர் கேட்டிருந்து நேராக அவரிடம்போய் தரிசிக்க வனுகூலப்படாம லிருந்தபடியா லோர் பிராம்மணன் கையில் பத்திரிகையைக் கொடுத்து நமஸ் கரித்ததாகச் சொல்லுமென்று ஒருசேர் அரிசியை சாப்பாட்டுக் குக் கொடுத்தனுப்பினர். பதினைந்து நாள் வழிநடக்க அந்த ஒருசே ரரிசியே அக்ஷயமாக விருந்தது. பின்பு அவன் இராம தாசரிடம் சேர்ந்து நமஸ்கரித்து அப்பத்திரிகையை கொடுக்க அவ ரவனைப் பூஜித்து வந்தனம் பண்ணி கடிதத்தைப் படிக்க லுற்றூர். அதிலெழுதிய சங்கதி, "ஸ்ரீராமதாச ஸ்வாமிகளுக்கு நமஸ்கார பூர்வகமாக எழுதிக்கொண்ட விண்ணப்பம். பதத் திரய ரூபரான வும்மை பாஞ்ச பௌதிக தேகத்துடன் வந்து சேவிக்கக் கூடவில்லை யாதலால் ஆனந்தாவ லோகனம் செய்வீ ரென்று பிரார்த்திக்கிறேன். ஹீனஞன யென்னுடைய விண்ணப்ப மிது" வென்று சுலோக ரூபமாக முடித்தார். சீட்டைக் கொண்டு வந்த பிராம்மணனுக்கு இராமதாசர் வஸ்திரங்களைக் கொடுத்தார். அரசனும் தனத்தை திருப்தியாகக் கொடுத்தான். இராமதாச ரக்கடிதத்திற்கு பதிலெழுதி ஒருசே ரரிசி அந்த பிராம்மணனிடம் சாப்பாட்டுக்குக் கொடுத் தனுப்பினர். அவைகளைக் கொண்டு அவன் தனது கிராமத்தைச் சேர்ந்தான். அவன் வூரைச் சேரும் வரை அந்த அமுதுபடி அவன் போஜனத்திற்கு சரியாக வந் தது. கேசவ ஸ்வாமி கையி லக்கடிதத்தைக் கொடுக்க அவர் கீழ்வரும் சங்கதி யடங்கி யிருக்கக்கண்டார். "வந்தனம் சமர்ப் பித்த விண்ணப்பமாவது, பதாதீதமான வர்த்தத்தை பரிசோதிக் கும் சமாதியில் அக்ஷராதீதம் சதானந்தமாகி போதபூர்ணமாயிருக் கும். அப்பொழுது கேசவனுடைய சங்க மடியேனுக்காகும், அதற்குமேல் வருத்தவிதைபோல் ஜன்மபீஜ முண்டாவதில்லை." இவ்வர்த்தமடங்கிய சுலோகத்தைக் கண்டு கேசவஸ்வாமி இன்புற் றிருந்தனர். இருவருடைய மகிமைகளையு மவரவர் கொடுத்த அமுதுபடி அளவுகளா லறிந்துக்கொள்ளலாயிற்று.

பண்டரி பஞ்சமன்.

இராமதாச ரொருநாள் சாபலகிராமத்தி லிருக்குமளவில் சிஷருடன் பண்டரீ புரத்திற்குப்போகப் பிரயாணப்பட, அரசனும் கூடத் தொடர்ந்தான். கார்த்திகைமாசம் ஏகாதசியில் யாத்திரைஜனங்கள் வெகுவாக பண்டரிக்கு வந்திருந்தார்கள். தூரத்திற் சிகர கலசங்களைக் கண்டவுடனே இராம தாசர் நமஸ்கரித்து பரிவாரத்துடன் ஆலயம் வந்து பாண்டுரங்கரைச் சேவித்து அத்யானந்தத்துடன் ஆலிங்கனஞ் செய்துகொண்டு ருக்மணி பிராட்டியையும் சேவித்து கோயிலை வலமாக கருடக் கொடியினிடம் வந்து அனேக பக்தர்களைக் கண்டு ஒருவருக் கொருவர் வந்தனங்களிட்டுக்கொண்டு பிரேமையுட னிருந்தார். அவ்வேளையில் துகாராமர் கீர்த்தனை செய்துக் கொண்டிருக்க இராமதாச ரவ்விட முட்கார்ந்தார். அரசனு மன்புடன் பண்டரிநாதரைச் சேவித்து கீர்த்தனையைக் கேட்க அவ்விட முட்கார்ந்தான். அந்த கீர்த்தனை அதிமதுரமாக விருந்தது. கண்ணிமை போடாமல் அபிமானங்களை விட்டு பிரஜ்ஞைக ளிருந்தனர். சாயங்கால மாகும் சமயத்தில் துகாராம் ஹாரதியைக் கொடுத்து கதையை முடித்தார். அப்பொழுது பக்தர்களனைவரும் பெருத்த ஓசையுடன் ஹரி நாமத்தைச் சொல்லி தங்க ளிருப்பிடங்களிற் சேர்ந்தார்கள். அவ்விரவி லிராமதாசர் ரமணீயமான புண்டரீகனுடைய ஸ்தலத்தி லிராம குணானுவாதத்தைச் செய்தார். அனேகபக்தர்கள் கனிகரத்துடன் கேட்டுக்கொண் டிருக்க அவர்களுடைய மனங்கள் சொக்கி நின்றன. அருணோதயத்தில் "ஹரிவிட்டல" வென்று அதிதமாக கர்ஜனை செய்து ஹாரதியைக் கொடுத்துக் கதையை முடித்தார். துவாதசி தினத்தி லரசன் ததீயாராதனையும் பாண்டுரங்கருக்கு சோடசோபசார பூஜைகளையும் பக்தியுடன் செய்தான். பிராம்மணர்க ளனைவரும் பக்ஷித்த பிறகு தக்ஷிணைகளை வெகுவாக கொடுத்தான்.

அப்பொழுது இராமதாச ரவ்விட முட்கார்ந்து தாஸபோத கிரந்தத்தை சிஷ்யன்படிக்க அதினர்த்தத்தை அவர் சொல்லிக் கொண்டுவந்தார். சில பண்டிதர்க ளதனைக் கேட்டு, ஐயா! உமது சிஷனொருவ னிதற்குமுன் இந்த கிரந்தத்தை யிவ்விட மொருக்கால் வாசிக்கத் தொடங்கி பதினைன்கு பிரம்மங்களைச் சொன்

னான். அது பிராகிருத கிரந்தமாக விருந்தது. சமுசய நிவர்த்தி அவன் செய்யாதபடியால் அது மன்னிக்கப் படாதென்று சொன்னனென்றார்கள். இதைக்கேட்டு இராமதாசர் ஓர் பக்கமாக திரும்பி நோக்க, ஓர் விறகுதலையன் சுமையைத் தூக்கிக்கொண்டு அவ்வழியிற் போகலுற்றான். அவனை இராம்தாசர் கூப்பிட்டார். அவன் தன் சுமையை இறக்கி தூரத்தி லிருந்து தெண்டன் சமர்ப்பித்தான். நீ யாரென்று இராமதாசர் வினவ, அவன் பஞ்சமனென்று சொல்ல, அவர் பூமிமேலோர் கோட்டைக்கீறி அவன் புனிதனாக வேண்டுமென்று சங்கற்பித்து அவனை அக்கோட்டுக்குள் வரச்சொல்ல, அவ னதில் வரவே யாரென்று கேட்க, துலுக்கனென்றான். இவ ரின்னமொரு கோட்டைக் கீறி அதற்குள் வரச்சொல்லி யாரென்று கேட்க சூத்திரனென்றான். இன்னமொரு கோட்டைக் கீறி அதனுள் வரச்சொன்னார். அவ னதனுள் வந்து வைசிய னென்றான். இப்படியே அவன் க்ஷத்திரியனாகி பிராம்மணனாகி பிரகாசத்துடன் விளங்க, இராமதாசர் கிட்ட வழைத்து இந்த பண்டிதர்களுக்குச் சமுசய நிரசனத்தைச் செய்யவேண்டுமென்று கட்டளையிட, அவர்க ளனைவரும் கேட்க, அவன் சொல்லத் தொடங்கினான்.

சுலோகம்.

శబ్దఆద్య మోమిత్యే కాక్షరం ఖంసర్వతోముఖం ।
చైతన్యంచైవ సత్తాచ సాక్షి సగుణమేవచ ।
నిర్గుణం వాచకం చైవానుభవా రుద్రసంఖ్యకం ।
ఆనందశ్చ తదాకార మనిర్వాచ్యం చతుర్దశం॥

சப்த ஆத்ய மோமித் யேகாக்ஷரம் கம் சர்வதோமுகம்
சைதன் யஞ்சைவ சத்தாச சாக்ஷி சகுணமேவச
நிர்க்குணம் வாசகஞ்சைவா நுபவா ருத்ரசங்கியகம்
ஆனந்தஸ் சததாகார மனிர்வாச்யம் சதுர்தசம்.

முதல் சப்தப்பிரம்மம், உ. ஓமித்யேகாக்ஷரம் பிரம்மம், ௩, கம் பிரம்மம், ௪. சர்வம் பிரம்மம், ரு. சைதன்னியம் பிரம்மம், சு. சத்தாபிரம்மம், எ. சாக்ஷி பிரம்மம், அ. சகுணப்பிரம்மம், கூ. நிர்க்குணப் பிரம்மம், ௰. வாக்கியப்பிரம்மம், கக. அனுபவ பிரம்மம், கஉ. ஆனந்தப்பிரம்மம், க௩. ததாகார பிரம்மம், க௪. அனிர்வாச்சிய பிரம்மம். (ஒருவஸ்துவையே பதிநான்காக விவரித்தார்).

இராமதாசருடைய கருணை யுண்டாகவே அப்புருஷன் அர்த்த விசேஷங்களை வெகுவாக விரித்துச் சொல்ல, பிரஜைக ளனேகர் கொண்டாடினார்கள். பண்டிதர்கள் கர்வபங்கத்தை யுடையவர்களாய் இராமதாசரை நமஸ்கரித்தார்கள். பக்தர்க ளனைவரும் பிரேமையுட னிராமதாசரைக் கொண்டாடிச் சந்தோஷ மடைந்தார்கள். பின்பு இராமதாசர் அப்புருஷனைக் கண்டு உன்னுடைய வம்ச பூர்வமென்னவென்று கேட்க, அவன் சொல்லுவான், நான் மலய னெனும் கந்தர்வனாகி சொர்க்கத்தி லிருந்தேன். மத்திய பானம் பண்ணி ஸ்திரீகளுடன் கூடி ஜலக்கிரீடை செய்துக்கொண்டு அம்மணமாகி மந்தமதியாயிருக்க, அவ்வேளையில் நாரதமுனி வந்து என்னுடைய விஷய லோலத்தைக் கண்டு மூன்று ஜன்மம் வரைக்கும் நிஷித்த யோனிகளிற் சஞ்சரித்து பூர்வ ரூபத்தை யடைவா யென்று சாபமிட்டுப் போயினர். அப்படியே நான் முதற் ஜன்மத்தில் குதிரையாகி முகுந்தராஜனெனும் பிராம்மணனுடைய கரஸ்பரிசத்தால் முதல் ஜன்மத்தை நிவர்த்தி செய்தேன். இரண்டாவது ஜன்மத்தி லோர் பிராம்மணன் வீட்டில் எருமைக்கடாவாகப் பிறந்து ஞானதேவர் கரஸ்பரிசத்தால் சுருதிகளைச் சொல்லி, சிலகாலங் கழிய அந்தச் சரீரத்தை விட்டு இந்த ஜன்மத்தில் பறையனாகப் பிறந்தேன். தேவரீர் கிருபையினால் புண்ணிய சீலனானே னென்றான். பவிஷ்யோத்தர புராணத்தில் வியாச ரிவ்விதமாக உரைத்தார். அது அர்த்த சித்தமாகி அனுபவத்திற்கு வந்தது. இதைக் கேட்டு இராமதாசர் வேத ரகசியத்தை அவனுக்கு இஷ்டத்துடன் சொல்ல, அவனுடைய சிரசு வெடிக்கப்பட்டு சொர்க்கத்திற்குச் சென்றான். பிராம்மணர்க ளனைவருமிதைக்கண்டு தைனியத்தை யடைந்தார்கள். பக்தர்க ளனைவரும் இராமதாசரைக் கொண்டாடினார்கள். உச்சவமான பிறகு பாண்டுரங்கருடைய வனுமதியைப் பெற்று சாதுசங்கத்தால் வந்த சந்தோஷத்தை மேற்கொண்டவராய் இராமதாசர் யாத்திரைவந்த அவ்வூரைவிட்டு சாபல கிராமத்திற் சேர்ந்தனர். அரசனும் நகரத்திற்குச் சென்றான்.

ஜயராமனெனு மொருபக்தன் ராமதாசரிடம் வந்து ஸ்வாமி! கிருஷ்ணஜயந்தி உச்சவத்திற்கு தேவரீர் என் னிருப்பிடத்திற்கு வரவேண்டுமென்று பிரார்த்தித்து, இரதோச்சவத்திற்கு இரத

மில்லே, இது குறையென்று சொல்ல, இராமதாச ரிதைக்கேட்டு நான் ரதத்தைச் செய்து என்னுடன் கொண்டுவருகிறே னென்ன, ஜயராமன் தன்னிருப்பிடஞ் சென்றான். பின்பு இராமதாஸர் தனது சிஷர்களால் மங்களகரமாக இரதத்தைச் செய்வித்து உச்சவதினத்தில் ஜயராமனிடம் இரதத்துடன் சென்றார். அவன் வாத்திய கோஷங்களுட னெதிர்வந்து அழைத்துக் கொண்டு போய் பூஜித்தான். கிருஷ்ணமூர்த்திக்கு உச்சவமெல்லாம் பெருமையுடன் நடப்பித்து சாது சமாகமத்தை விசேஷமாகச் செய்துக்கொண்டிருந்து பின்பு தன் னிருப்பிடம் சென்று சாபலூரிலும் இராமோச்சவத்தைச் செய்தருளினார்.

இராமதாஸருடைய ஓர் சிஷனான நாவிதனுக்கு உன்னதமான ப்க்தியுண்டாகி உபரதி ஞானமவனுக்கு பெருகியிருக்க இதையொரு பிராம்மணன் கண்டு அவனிடம் உபதேசத்தைக் கோரினான். அந்த நாவித னிராமதாசருடைய அனுமதியைக் கொண்டு தாரகமந்திரத்தை அந்தப் பிராம்மணனுக் குபதேசித்தான். சிஷனும் குருவினுடைய சேவாநிரதனாக விருந்தான். சில நாட்கழிந்த பின் நாவிதன் ஸ்ரீஹரி பதத்தையடைய, அந்தப் பிராம்மண சிஷன் ஆசாரியனுக்குச் சமாதிகாரியங்களைச் செய்து வைத்து பன்னிரண்டு நாளான் பிறகு பிராம்மணர்களுக்குப் போஜனமிட யத்தனிக்க அவர்கள் வரமாட்டோ மென்றார்கள். இதைக் கேட்டு அந்தப் பிராம்மண னிராமதாசரிடம் வந்து, சங்கதியை அறிவிக்கத் தனது கிருபைவெளியாக அந்தப் பிராம்மணர்களுக்கு மகிமையைக் காண்பித்தனர். அதாவது, இராமதாசர் தோளின்மேல் ஆஞ்சனேயரும் அந்தப் பிராம்மணனுடைய தோளின்மே லிராமபிரானுமிருக்க அவர்களுக்குத் தோன்றினார்கள். இதைக் கண்டு அந்தப் பிராம்மணர்க ளனைவரும் போஜனத்திற்கு வந்தார்கள். அவர்களுக்குப் போஜனமளித்து அந்த பிராம்மணன் தீரனாகி நின்றான். இவ்விதமாக இராமதாச ரக்காரியத்தை நிறைவேற்றினார்.

இராமரை மனதிலெண்ணி இராமதாசரிரவும் பகலும் பர்வத சிகரத்தின் மீதிருந்துக்கொண்டு இராமரே சகலமென்று பிரீதிவகித்திருப்பார். ஓர் நாள் ஸ்நானஞ்செய்து தூரமாக உட்கார்ந்திருந்தனர். சிஷர்க ளனைவருங்கண்டு வெளியிலிருப்பதென்னென்ன, அண்ணனிறந்தானாதலால் பத்துநாள் சூதகமிருக்கவே

ண்டும் இது தர்மமென்றார். அந்த சங்கதி சொன்னவர்கள் யாரென்றுரிஷிகள் கேட்க, ஹரி அனுக்கிரகத்தா லறிந்துக்கொண்டேனென்றார். இதை அரசன் கேட்டு தூதரைக் கிராமத்திற் கனுப்ப, அவ்விடமிருந்து வந்த மறுகடிதத்தினு லிராமதாஸர் வாக்கியஞ் சத்தியமாயிருந்தபடியால் இராமதாசர் சூதகத்தை நடத்தி கடைசி தினத்தில் கருமங்களை ஆசாரவிதிப்படிச் செய்தருளினார்.

அரசனொர்நா ளாசாரியரிடம் வந்து ஸ்வாமி! ஸ்ரீராமருக்காக பட்டணத்திலோர் மடத்தைக் கட்டினேன். அதில் லக்ஷம் பிராம்மணர்களுக்குப் போஜன மிடவேண்டும். தேவரீர் நக்ஷத்திரங்களிற் சந்திரரைப்போ லவ்விட மெழுந் தருளவேண்டு மென்றான். இதைக்கேட்டு இராமதாச ரரசனைநோக்கி இவ்விடமிருக்குமனைத்தும் ஸ்ரீராமருடைய ஐசுவரியமென் றெண்ணவேண்டும். தன்னுடையதென் றெண்ணக்கூடாது. பக்தி நிஷ்டை யுடையவனுய்ப் பகவானைக்கண்டு பிரபஞ்சத்தில் மமத்வத்தை விடவேண்டும். ரக்தியற்றவையான இங்குதோன்று மனைத்தின்மீது திருஷ்டி வையாமல் இராம ரொருவரையே காணவேண்டுமென் றிப்படிச் சொல்லிக்கொண் டவ்வரசனுடைய மனோபிஷ்டத்தை நிறைவேற்றப் பட்டணம் வந்தார். அரச னுசாரியருக்குப் பூஜாவிதிகளை முடித்துநிற்க, அவர் துகாராமர் முதலான சாதுக்களை அழைக்கும்படி ஆக்கினை செய்தார், அரசன் மனிதரைக்கொண்டு சாதுக்களுக்கு விண்ணப்ப மனுப்ப வெகுதூரத்தி லிருந்து துகாராம் முதலான வனேக சாதுக்கள் இராமதாசருடைய சச்சங்கத்தைக் கோரி விருப்பத்துடன் வந்தார்கள். ஹரிதாசர்களும் பிராம்மணர்களு மனேகமாக வந்தார்கள். அரச னவர்களுக்கெல்லாம் பூஜைகளைச் செய்து பக்ஷயங்களுடன் போஜனமளிக்கத் திருப்தியாக அனைவரும் உண்டு வீற்றிருந்தார்கள். அன்றிரவில் ஹரிதாசர்க ளனைவரும் ஹரிகதைகளைப் பாடிக்கொண்டிருக்க, இராமதாச ரரசனை நோக்கி ஸ்ரீஹரி கீர்த்தனையை சொல்லச் சொன்னார். அவ்வேளையி லரச னெழுந்திருந்து ஹரி கீர்த்தனை செய்து நிருத்தியமுஞ் செய்தான். இதைக் கண் டனேக பக்தர்கள் அரச னபிமானத்தை விட்டானென்று தோத்திரஞ் செய்தார்கள். துகாராம ரவ்விடம் சிலநாளிருந்து கீர்த்தனை செய்ய அனேகரக்கீர்த்தனையைக் கேட்டு மெய்மறந்திருந்தார்கள். உல்லாசத்துடன் பக்தர்க ளனைவரும் ஹரி கதா சல்லாபங்

களைச் சொல்லிக்கொண்டு ஒருமாசம் வரைக்கு முச்சவம் செய்து அந்த மடத்திற்கு "சஜ்ஜனகடி" யென்று பெயரிட்டு அவாளவா ளிருப்பிடங்களுக்குச் சென்றார்கள். பின்பு அரச னிராமதாசரைப் பார்த்து, சரீரமிருக்குமட்டுந் தேவரீ ரிவ்விடமே யிருக்க வேண் டுமென்று பிரார்த்தித்தான். இராமதாச ரதைக்கேட்டு ஓரிடத்தி லிருந்தால் பந்தமுண்டாம். அப்போதைக் கப்போது நான் வரு வேனென்றார். மனது மிராமரே! பூமியு மிராமரே, மாதா பிதாக் களு மிராமரே, ஜனமு மிராமரே, வனமுமிராமரே, சராசரங்களு மிராமரே, எவ்விட மிருக்கினுமென்ன? என்று சொல்லிக்கொண்டு நிர்ப்பரராய் அங்குமிங்குந் திரிய, சிஷர்கள் சேவைகளைச் செய்துக் கொண்டிருந்தார்கள்.

ஓர்நா ளிராமதாசர் ஏவத்யாயெனும் ஊருக்குச் சென்றார். அவ்விடத்திற் சாம்பமூர்த்தியின் கோவிலைக்கண்டு ஓர் சுலோகம் அவர்மேல்பாட, அவர் மிகுதியாகக் கிருபை செய்தருளினார். திரும் பிக் கவிகளைப் பாடிக்கொண்டு அவ்விடம் விட்டு, சஜ்ஜனகடிக்கு வந்து ஒருநாளிருக்க, சாவித்திரி யெனும் அம்பிகாதேவி இரவி லவ ரிடம் வந்து, எல்லோர் மீதும் நீர் கவித்வங்களைப் பாடினீர், பிர ஜைக ளனைவரு மறிய என்மீது மோர் கவித்வத்தைப் பாடுமென் று கேட்க, அதற்கு இராமதாசர் ஓர் முத்துக் கடுக்கனை நீ கொடுப் பாயானால் உன்மேற் பாடுகிறே னென்ன, அப்படியே யாகக் கடவ தென்றாள். இராமதாச ரந்த பவானி கோயிலுக்கு மறுநா ளிர விற் செல்ல, அம்பாதேவி இவ்வேளையி லெப்படி வந்தீரென்று கேட்க, இராமதாசர் நீ வந்த வழியாக நானும் வந்தே னென்றார். அப்பொழுது பவானி இராமதாசர் காதுகளிற் கடுக்கனைப்போட லுற்றாள். இராமதாசரும் அத்தேவிமீது சுலோகங்களைப் பாடி னார். பின்பு யாருமறியாம லிருக்க இராமதாசர் சஜ்ஜனகடி யில் வந்திருந்தார். மறுநா ளர்ச்சகர் தேவிகழுத்தி லிருக்கும் முத்துஹாரத்தி லிரண்டு முத்துகள் குறைந் திருப்பதைக் கண்டு அரசனுக் கறிவிக்க, அவனுக் கொன்றும் தோன்றாமலிருந்தான். அன்றிரவில் தேவியார் அவனுக்குச் சொப்பனத்தில் சங்கதி தெரி வித்தாள். மறுநாள் அவன் சஜ்ஜனகடிக்குச் சென்று ஆசாரிய ருக்குப் பூஜைகளைச் செய்யுமளவில் காதுகளிற் கடுக்கனைக் கண் டான். அப்பொழுது இராமதாசர் அம்பிகாதேவி செய்த செயல்

களைச் சொன்னார். அதற்கு அரசன் கதவிலிருந்த பூட்டை எப்படி நீக்கினீரென்ன, இராமதாசர் சொல்லுவார், ஒரு புருஷன் ஸ்ரீராமரை சர்வப் பிரதேசங்களிலும் கண்டுகொண் டிருந்தால் அவர் கிருபையால் லோகாந்தரங்களிலும் பிரவேசங் கூடும், பிரசஸ்தமான மனதிற்கது தெரியும், எவ்விடத்தும் பந்தம்விட்டுப்போமென் றருளினார். இதைக்கேட்டு அரசன் சந்தோஷத்துடன் சென்றான்.

சஜ்ஜனகடியி லொருநா ளிராமதாச ருட்கார்ந் திருந்தார். அவர் திருவடியை யாஸ்ரயித்திருந்த ஓர் வாணியன் வர்த்தகத்திற்கு கப்பற்களில் தனதானியங்களுடன் தீவாந்தரங்களிற் செல்லுமளவில் அக்கப்பல்கள் சமுத்திரத்தில் முழுக சித்தமாகவிருந்தன. வாணிய னதைக்கண்டு கப்பல்கள் முழுகா திருக்குமாயின் பத்திலொரு பங்கைக் குருவுக்குக் கொடுப்பதாகப் பிரார்த்தித்துக் கொண்டான். அவ்வேளையி லிராமதாச ரவ்விடம் சென்று கப்பல்களை கரை யொதுங்கும்படி செய்தார். சிலநாட் கழிந்தபின் அவ்வாணியன் பதினாயிரம் ரூபாய்களை கொண்டுவந்து இராமதாசருக் கற்பித்துச் சொல்லுவான், ஸ்வாமி! கப்பல்களை முழுக வொட்டாமல் நீர் சமுத்திரத்திற்கு வந்து கிருபையுட னன்று காப்பாற்றினீ ரன்றோ? என்றான். இராமதாச ரந்த திரவியத்தைக் கைக்கொண்டு பிராம்மணர்களுக்குத் தானம் செய்து விட்டார். இச்சரிதையைப் பிரஜைகள் கேட்டு விநோத மடைந்திருந்தனர்.

அரங்கஜீப் என்னு மோர் துலுக்க வரசன் அபார சேனைகளுடன் வந்து பீரங்கி குண்டுகளை சஜ்ஜன கடிமேல் விட்டுக்கொண்டிருந்தான். பிரஜைக ளனேகர் தொந்தரை யடைந்திருக்க இராமதாசர் பரிதபித்து ஆஞ்சனேயரைத் தியானம் செய்யத் தொடங்கினார். அப்பொழுது அனேக வானரர்க ளவ்விடம் வந்து விரோதி சேனைமேல் விழுந்து மூக்குகளையுங் காதுகளையுங் கடித்தும், கற்களா லடித்தும், சிலரைக் கொன்றும் அல்லகல்லோலப் படுத்திச் சேனையைத் துரத்த விரோதிகளும் முடியாத காரியமென்று ஓடிப் போனார்கள். விரோதி பலத்தை வானர சேனைக ளோட்டிவிட்டதை அரசன் கேட்டு இராமதாசரிடம் வந்து மகா விநயத்துடன் நமஸ்கரித்தான்.

இராமதாசர் கிருபையுட னரசனைப்பார்த்து இனி இந்த வரசாக்ஷியை உன் குமாரனுக்கு நீ ஒப்புவித்து பின்பு இராம பிரானை

நீ நிச்சிந்தையாக நினைத்திருந்தால் தேகம் விழுந்துபோம் ஆனந்தத்துட னிருப்பாயென்று சொல்ல, அரசன் சந்தோஷத்துடன் வீட்டிற்குச்சென்று பிள்ளைக்கு ஓர் சுபதினத்தில் ராஜ்யாபிஷேகம் செய்வித்து நிச்சிந்தையாக இராமரைத் தியானம் பண்ணிக்கொண்டிருக்க ஆசாரியர் சொற்படி தேகம் விட்டு ஆவி ஆனந்தத்தி லமிழ்ந்தது. அரசனுடைய குமாரன் சம்பாஜி யென்பவன் தகப்பனுக்குச் சரமக்கிரியைகளைச் செய்து பதின்மூன்றுநாள் ஆசாரியரிடம் வந்து நமஸ்கரித்தான். இராமதாச ரவனுக்குத் தைரியஞ் சொல்லி, உலகிற் பிறந்தவ ரனைவரும் மரண மடைவரென்று நீ யறியக்கடவாய், பகவானுடைய அவதாரங்களே புவிமே லில்லாமற்போயின, மனித ரெம்மாத்திரம், சமுசார பந்தத்தைப் போக்கும் ஸ்ரீராம நாமத்தை நீ சிந்தித்துக்கொண்டு சோகத்தை விட்டு இராஜ்ஜியத்தைச் சுகமாக பரிபாலனஞ் செய்வாயென்று சொல்ல, சம்பாஜியும் பாக்கிய மென்றிருந்தான்.

சிலகாலங் கழிந்தபின் இராமதாசர் சீஷர்களை யழைத்து தனக்கு பரமபதம் போகும் காலம் சமீபித்ததென்று சொல்லி அவர்களைக் கொண்டு சகல சீஷர்களுக்குங் கடிதங்க ளெழுதி யனுப்ப, அனேக ராசாரிய தரிசனத்திற்காக வந்தார்கள். கங்காதர னெனுஞ் சீஷனை யழைத்து தன் (காதீ) ஆசனத்தி லிருக்கச் செய்து, சிஷ்ய சமூஹத்தைக் கூட்டிச்சொல்லுவார்—கேளுங்கள்! உண்மையான ஆத்மாவை யுள்ளபடி யறிந்தாலும் சகுண பக்தியைச் செய்து சார்வதா பூஜா விதிகளில் நிரதராக விருக்க வேண்டும். பவித்திரமான பிக்ஷாடனையால் ஜீவனத்தை நடத்த வேண்டும். இராமபிரா னருளைக் கொண்டு அகங்காரத்தை விட வேண்டும். இராம கதையை விற்று ஜீவனஞ் செய்யாதிருக்கவேண்டும். நீங்களும் நாமத்தை மறவாமல் இதர ஜனங்களுக்கும் நாமத்தில் ருசியுண்டாக்கி அதனை யனுஷ்டிக்கச் செய்யவேண்டும். தாஸபோதமெனும் கிரந்தத்தை தப்பாமல் வாசிக்கவேண்டும். மடத்திற் கீர்த்தனை விசேஷமாகச் செய்யவேண்டும். இராம பஜனையை சர்வ காலத்திலும் ரம்மியமாகச் செய்தால் காம குணங்களான மாயா ஜாலங்கள் காணுமற் போய்விடும். இது என்னுடைய இரகசியமாம். இப்படி நீங்கள் நடத்தினுல் மனோ பரிபாகத்தை யடைந்து சுகமடைவீர்க ளென்ருர். இதைக்கேட்டு சீஷர்

கள் ஆசாரியருக்கு நமஸ்கரித்து அவருடைய வற்புத செய்கைகளை யெண்ணி யெண்ணி அழத்தொடங்கினார்கள். ஆசாரியர் அவர்களை சமாதானப்படுத்தி தனக்கு சமாதிசெய்யக்கூடாதென்று சொல்ல, அனைவரும் துக்க மடைந்தனர். அவ்வேளையில் சத்து நாவிதன் நமஸ்கரித்து நிற்க, ஆசாரிய ரென்னவென்று கேட்க, சமாதிக்கு ஆக்கினைக் கொடுக்கவேண்டுமென்று பயத்துடன் சொல்ல, இராமதாசர் சமாதியைக் கட்டினால் இராமபூஜைக்கு ஆடங்கமுண்டாம். நூதனமாக ஓர் சிலாசமாதியை பூமிக்குள் நாட்டி அதன்மேலோர் ராமவிக்கிரகத்தை வைத்து பூர்ண பக்தியுடன் பூஜை செய்யக்கடவீரென்று சொல்லி யருளினார்.

ஏழுநாட்கழிய சகல திசைகளி லிருந்தும் பிரஜைக ளனேகமாக வந்தார்கள். சிஷர்கள் பிக்ஷாடனஞ் செய்து சகலருக்கு மன்னமளித்து இராமகதையை இரவுகாலங்களிற் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அந்திமதினத்தி லிராமதாசர் ஸ்நானஞ் செய்து துவாதச புண்டரங்களையும் துளசிமாலையையும் தரித்து பத்மாசனமிட்டு ஸ்ரீராமருடைய விமல ரூபத்தை மனதிலிருத்தி ஓ கருணாகரரே! ஓ ரகுனந்தனரே! இச்சமயத்தில் வாரும், உம்மைத் தவிர வேறொருவ ரெனக்கில்லை, தாயும் நீரே, தகப்பனும் நீரே, இவ்வுலகத்தி லிதுவரைக்கு மடியேனைக் காப்பாற்றினீர், உம்முடைய கீர்த்தியைப் புகழும் பொருட்டு நீ நா னெனும் பாவனையை நிறுத்தி யிருந்தேன். ஓராமா! தேவரீரைப் பார்த்துக் கொண் டிருந்தே தேகத்தை விடவேண்டும். அந்திம ரக்ஷணத்திற்கு ஆதிமுதற் கொண்டு உம்மைப்பஜித்தேன். தேவரீருடைய சொரூபத்தி லெனக்கிடங் கொடுக்கக் கடவீரென்று, இவ்விதமாக ராமதாசர் கவிகளைச் சொல்ல, இராமமூர்த்தி யவரிஷ்டப்படி பிரகடமாகவே இராமதாசர் "ஜய ரகுவீரா" யென்று சரீரத்தை விட்டு சொரூபத்திற் அந்தர்ப்பூதமானார். அவ்வேளையிற் பிரியத்துடன் சிஷர்கள் இராம நாமத்தைச் சொல்ல லுற்றார்கள். அனேக லீலைகளைச் செய்து அந்தியத்தில் ஹரியை அடைந்தாரென்று தேவர்கள் குப்தராகி புஷ்பமாரி பொழிந்தார்கள். சிஷர்க ளனைவரும் அச்சரீரத்தை அக்கினி சம்ஸ்காரம் பண்ணினார்கள். சமாதி செய்து வைப்போமென்று சிஷர்கள் ஏற்பாடு செய்துக்கொண்டிருக்க மூன்றுநாள் தகனம் செய்த விடத்தில் ஓர் சிலைசமாதி யிருக்கக்

கண்டு பிரேமையுட னழத்தொடங்கினார்கள். அப்போதந்த சமாதியினின்றோ ரோசை யுண்டாயிற்று, அதாவது ஓ கல்யாணு! நான் சொல்லும் கவியை ஜாக்கிரதையா யெழுதக்கடவாய் என்றார். இதைக் கேட்டவுடன் சிஷன் எழுத்தாணியு மோலையுங் கையிலெடுக்க அவர் ஓர் கவியைப் பாடினார். அதிலடங்கிய அர்த்தமாவது--என்னுடைய சரீரமானது போய் விட்டாலும், நித்தியமாக நான் ஜகதாகாரமாக நின்றேன். ஹிதத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். உலகத்தி லிருக்கும் வரைக்கும் சந்தேஹங்கள் வரவொட்டாமல் தாஸபோதமெனும் கிரந்தத்தைச் சந்ததமும் பார்க்கக் கடவீர். வேறு சேஷ்டைகளைச் செய்யவேண்டாம், அதிற் சொன்னபடி யனுஷ்டித்தால் சாயுஜ்ஜியத்தை யடையலாம், பிராரப்தத்திற்கு வேறாக பிரவர்த்தனை யில்லாமல் மிக்க சாரமான ஸ்வ ஸ்வரூபத்திற் சதானுசந்தானத்துடன் ஸ்ரீரகுராமரை யெப்பொழுதுந் தியானஞ் செய்துக்கொண்டு தைரியத்துட னெவ்விடமும் சஞ்சரித்துக்கொண்டிருக்கலாமென்றார். இவ்வர்த்தமுடைய கவித்வத்தை இனிமையோ டெழுதிக் கொண்டு பிரேமையுடன் பக்தர்க ளனைவரும் படனை செய்தார்கள்.

சிலைசமாதி பாதுகையுடன் இருக்கக் கண்டு சாஸ்திர யுக்தமாக வதனை சிஷர்களனைவரும் ஸ்தாபனை செய்தார்கள். பக்தர்களனைவரும் பாடவு மாடவு மிருந்து அத்யானந்தத்தை யடைந்தார்கள். அரசன் தானமும் தருமமும் பிராம்மண போஜனமும் அபரிமிதமாகச் செய்வித்தான். சீதாராமருடைய விக்கிரக மவ்விடத்தி லிறுத்தி ஆஞ்சனேயர் மூர்த்தியையு மவ்விடம் ஸ்தாபித்து சதானந்தமாக இராமதாசர் சரித்திரங்களைச் சகல ஜனங்களும் பாடிக்கொண்டிருந்தார்கள். சிஷர்களும் ஹிதோபதேசம் செய்துக்கொண்டு சுகமுடன் வீற்றிருந்தார்கள். பரமபக்தியை வகித்துப் பரோபகாரத்தினின்ற இராமதாசர் சரித்திரம் படிப்போரை பாவனமாக்கும்.



## துகாராம் சரித்திரம்

### விஸ்வம்பரன்.

தேஹு-யெனும் கிராமத்தில் விஸ்வம்பர னெனும் வைசியரொருவ ரிருந்தார். அவர் தன சம்பத்துக்களை யுடையவராய்

தரும நெறி தவறுமல் சுகுணசம்பத்தியுடன் சாதுக்களைப் பூஜித்து அச்சுதனை ஆராதித்துக்கொண்டு வர்த்தக ஜீவனத்தால் குடும்ப போஷணஞ் செய்து வந்தார். ஒருநா ளவருடைய தாயாரவரை நோக்கி அப்பா! நீ பண்டரி புரத்திற்குச் சென்று பாண்டுரங்கரைச் சேவித்து வரக்கடவை யென்றுள். இதைக் கேட்டு குமாரர் சம்மதித்து இதர ஜனங்களுடைய துணையைக்கூடி பண்டரி புரத்திற்குச் சென்று சந்திரபாகா நதியில் ஸ்நானஞ்செய்து பக்தியுடன் பாண்டுரங்கரைச் சேவித்து கோவில் வலம்வந்து கிராம பிரதக்ஷணம் பண்ணி ஐந்துநா ளவ்விட மிருந்து மாதவருடைய ரூபத்தை மனதிலே நிறுத்தி சாதுக்களுடைய கூட்டத்துடன் வழி நடந்து திரும்பி தன் வீட்டைச் சேர்ந்து தன் தாயாருக்கு விட்டல மூர்த்தியின் விபவங்க ளனைத்தையும் விசதமாக வெளியிட்டார். க்ஷணம் க்ஷணமும் பண்டரி க்ஷேத்திரத்தைச் சிந்தனை செய்துக்கொண்டு எப்பொழுது நான் பாண்டு ரங்கரை பார்ப்பேனென்று ஏக்கமுற்றிருக்க, யாத்திரைக்கு நடப்பவர் சிலர் சேர்ந்தார்கள். அவர்களுடன் விஸ்வம்பரரும் சென்று பண்டரிபுரத்தைச் சேர்ந்து பாண்டுரங்கரைச் சேவித்து அவ்விடத்தில் மூன்றுநா ளிருந்து பெருமாளிடம் விடைகொள்ளும் சமயத்தில் கண்களில் நீர் பெருக, ஓ கருணாமூர்த்தி! உமது வியோக மெனக்கு நேரிடாதிருக்கச் செய்வீர். ஓ மாதவரே! முகுந்தரே! அடியேனை அனுக்கிரகிக்கக் கடவீரென்று பிரார்த்திக்க அசரீரிவாக்காக பெருமாள் சொல்லுவார், எவ்விடத்தும் நாமிருப்போம் விஸ்வத்திற்குள்ளும் புறம்பு மிருப்போம் உன்னுள்ளு மிருப்போமென்ன, விஸ்வம்பரர் சொல்லுவார், தேவரீருடைய சகுண ரூபத்தையே சர்வகாலமும் பார்க்க விரும்புகிறேன், நீர் சர்வ லோகங்களுக்கும் கர்த்தாவாவீர், அடியேனைக் கருணையுடன் காப்பாற்று மென்ன, பெருமா ளவரை நோக்கி, எமது நாமத்தை நீ யெப்பொழுது முச்சரித்துக்கொண் டிருப்பாயாகில் உனக்கு நாம் காணப்பட்டுக்கொண்டிருப்போம், இது வுண்மையென்று சொல்ல, விஸ்வம்பரர் வந்தனமிட்டு வழிநடந்து வீடுவந்து சேர்ந்தார்.

உச்சவ ஏகாதசி தினத்தில் தப்பாமல் பண்டரி புரத்திற்கு விஸ்வம்பரர் போய் வருவார். இப்படி அனேக வருஷங்கள் நடக்க அவருக்கு வார்த்திகம் வந்தது, அப்பொழுது பெருமா ளவர்

சொப்பனத்தில் வந்து இனி நீர் பண்டரிபுரத்திற்கு வர வாக்கினை யில்லை, உமது கிராமத்தில் நாமெழுந்தருளினோம். மாந்தோப்பி லெம்மை நீர் பார்க்கக் கடவீ ரென்றார். இதற்குள் விஸ்வம்பரர் விழித்துக்கொண்டு, தன் னிஷ்டஜனங்களை யழைத்து மாந்தோப்பிற் சென்று பார்க்குமளவி லவ்விடத்தி லொன்றையுங் காணாமல் பரிமளம் மாத்திரம் வீசிக்கொண்டிருந்தது. அதற்குக் காரணத்தை விசாரித்துத் தேடிக்கொண்டிருக்க, ஓரிடத்திற் கந்தபொடி யிருக்கக்கண்டு அங்குற்ற பூமியை தோண்ட யத்தனித்தார். அப்பொழுது "ஆயுதங்களின்றி கைகளால் தோண்டவேண்டு"மென்று அம்பரத்தி லோசை யொன் றுண்டாயிற்று. அவ்விதமாகவே அவர் கைகளால் தோண்ட பாண்டுரங்க விக்கிரகமொன் றகப்பட்டது. இதைக்கண்டு ஜனங்க ளனைவரும் அத்தியானந்தத்தை யடைந்து "ஹரி விட்டல" வென்று ஆதரத்துடன் சொல்லத் தொடங்கி அவ்விக்கிரகத்தை யெடுத்தார்கள். பின்பு அதனை விஸ்வம்பரர் கிராமத்துக்குட் கொண்டுவந்து இந்திராயணி நதி தீரத்தி லோராலயங் கட்டிப் பிராம்மணர்கள் மந்திரங்களை யுச்சரிக்க அவ்விக்கிரகத்தை அவ்விடம் ஸ்தாபித்தார். பக்தர்க ளனைவரும் ஜய ஜய சப்தங்களைச் சொல்லிக்கொண்டு ஹரிநாமத்தைக் கொண்டாடினார்கள். விஸ்வம்பரரும் பெருமாளுக்கு பிரீதியுட னுபசார பூஜைகளைச் செய்துக்கொண்டு வந்தார். ஏகாந்தத்தி லோர்நாள் பெருமாளைத் தோத்திரஞ் செய்துக்கொண்டிருக்க அவர் சகுண ரூபத்துடன் பிரசன்னராகி வரங்களைக் கேள் கொடுப்போ மென்றார். அதற்கு விஸ்வம்பரர், எனக்கும் எனது வம்சத்தாருக்கும், சாதுக்களுடைய சங்கமும் ஹரிபக்தியும் உமது கிருபையு மிருக்கும்படி வரமளிக்க வேண்டுமென்ன, பெருமாளு மவ்வண்ணமே ஆகக்கடவதென் றனுக்கிரகித்து மறைந்தார். பின்பு அவ்விடத்தி லனேகர் பக்தி நிலைமையில் நின்றார்கள். விஸ்வம்பரரும் பெருமாளை மனதிலிருத்தி அந்திய காலத்தில் ஹரிபத மடைந்தனர்.

### நாமா பாயி.

விஸ்வம்பரர் மனைவியான நாமாபாயி ஹரி பக்தியைச் செய்து சமுசாரத்தை நடப்பித்துக் கொண்டு வந்தாள். ஸ்ரீ ஹரியானவர் தயையுடன் சகல சம்பத்தையு மவளுக்குக் குறையின்றி நடத்தி வந்தார். இப்படி விசேஷ சௌக்கியத்தை யடைந்திருப்பதால்

அவள் பிள்ளைகள் பெருமாளை மறக்கும்படியானார்கள். விஷயாரோ பணம் விஞ்சினபடியால் அனுதாபம் போயிற்று. உடனே பாபமு முள்ளே நுழையலாயிற்று. நாமாபாயிக்கு ஹரி யென்றும், முகுந்தனென்று மிரண்டு பிள்ளைக ளிருந்தார்கள். அவர்கள் ஹரி பக்தியி லீடுபடாம லிஷ்டப்படி சஞ்சரிக்கத் தொடங்கி வீட்டி லெதுவும் குறைவில்லாமல் ஜீவனத்திற்கிருந்தும் ஓரிடத்தி லிருவரும் கூடி நமக்கு குதிரைகள் பல்லக்குக ளிருக்கவேண்டு மென்னு மபேக்ஷையினல் இராஜசேவை யிச்சித்து இராஜனிடம் சென்று வுத்தியோகங்களை வேண்ட, அவனிவர்களுடைய சௌரிய தைரியங்களைப் பார்த்து தகுந்த உத்தியோகங்களைக் கொடுத்தான். சம்பத்துந் தனமும் மிகுதியாக உண்டாகவே அவர்களுடைய பெண்சாதிமாரை தமதிடத்திற் கனுப்பும்படி தாயாரை வேண்டிக் கொண்டார்கள். தாயார் பெருமாள் சன்னிதிக்குச் சென்று ஸ்வாமி! உம்மை நானெப்படி விடுவே னென்று சொல்லிப் பிள்ளைகளுடைய வேண்டுகோளால் அவர்களிருக்கும் பட்டணத்திற்கு சதிகளுடன் சென்று இருந்தாள். சிலகால மானபிறகு பெருமாள் நாமாபாயி சொப்பனத்தில் வந்து, தனசம்பத்தைக் கண்டு இவ்விடத்திற்கு வந்தாய், இனி தெஹு கிராமத்திற்கு வரக்கடவா யென்றார். இந்தச் சொப்பனத்தைக் கண்டு தன் குமாரர்களை யழைத்து கோவிந்தன் வாக்கியத்தைத் தெரிவிக்க, அவர்கள் சொப்பன வாக்கியங்கள் சத்தியமாகா என்றார்கள். பின்னும் சிலதினங்கள் கழிய தாயார் திரும்பியும் பிள்ளைகளை நோக்கி பெருமாள் தெஹு கிராமத்திற்கு இந்தச் சம்பத்தை விட்டு வரச் சொன்னாரென்ன, அவர்களுக் கதுவும் சத்தியமென்று மனதிற் படவில்லை. நாலுநாள் பின்னுங் கழிந்தபிறகு பெருமாள் திரும்பியும் நாமாபாயி சொப்பனத்தில் வந்து இன்றையதின முனது புத்திர ரிருவரும் சாவார்களென்று சொல்ல அதனை யவள் தன்பிள்ளைகளுக்கு அறிவித்தாள். இதையும் அவர்கள் கேளாமற் சந்தோஷத்துட னிருக்க அரச னவர்களை யழைத்து யுத்தத்திற்குப் போகும்படி கட்டளை யிட்டான். அவர்களு மரசனுக்கிணைப்படி யுத்தத்திற் சென்று போர்செய்ய, கத்தியடிகளால் நறுக்குண்டு, குத்துயிராயிருக்குஞ் சமயத்தில் பாண்டுரங்கர் வாக்கியத்தை நாம் கேளாமற் போனோமேயென்று பரிதாபத்துடன்

விட்டலரங்கனைத் தியானஞ் செய்துக்கொண்டு உயிர்களை விட்டார்கள். அந்தச் சங்கதியை அவ்விடத்திலுள்ள ஜனங்கள் நாமாபாயினிடம் வந்து சொல்ல அதைக்கேட்டவுடனே தாயாரு மிரண்டு மருமக்களும் மிகுதியாக அழுதார்கள். இரண்டாவது மருமகள் உடன்கட்டை யேறி மாய்ந்தாள். சம்பத்தனைத்துங் கொள்ளை போயிற்று. எதிரிகளுடைய சைனியத்தால் பயமடைந்து தாயார் தெஹூ கிராமத்திற்கு வர, மூத்த மருமகளும் கர்ப்பிணியா யிருந்தபடியால் கூடவேவந்தாள். நாமாபாயி அவ்விடம் விட்டலரங்கரை விசுவாசத்துடன் சேவித்து விசேஷமாக அழத்துடங்கினள். பெருமாள் பிரீதியுடன் பிள்ளைகள் விதிப் பயனுற்பேச்சைக் கேளாமற் செத்தார்கள், உனக்குக் குறையொன்றில்லை யென்று சொல்ல, அவள் பிரீதியுடன் தெண்டனிட்டாள்.

மருமகள் தன் தாயார் வீட்டிற்குச்சென்று அங்கோர் பிள்ளையைப் பெற்றாள். நாமாபாயிக்குக் கிழத்தனம் வந்தபடியால் நயனங்கள் மத்திபமாகி யிருந்தன. பெருமாள், மருமகள் ரூபமாக வந்து அவளுக்குச் சேவைகளைச் செய்துக்கொண்டிருந்தார். இப்படி ஒரு குறைவின்றி சிலவருஷங்கள் பெருமாள் நிர்வகித்துவர, அவள் ஜாக்கிரதை யுடையவளாகி சர்வ காலத்திலும் ஸ்ரீஹரியை நினைத்துக்கொண்டிருக்க அந்திய காலத்தில் ஹரிபத மடைந்தாள். அப்பொழுது பெருமா ளவளுக்குச் செய்யவேண்டிய கிரியைகளெல்லாஞ் செய்தார். மாமியார் மாண்டாளென்னும் சங்கதியைக் கேட்டு மருமகள் தன் தாயார்வீட்டிலிருந்து வந்தாள். இவள் வந்தவுடன் பெருமாள் மறைந்தனர். மருமக ளவ்வூராரைக்கண்டு மரண தசையில் மாமியாருக்கு நான் சேவை செய்யாமற் போனேனே வென்ன, அவர்கள் நீதானே இவ்விடமிருந்து வேலைக ளனைத்தையுஞ் செய்தாயே யென்ன, அவள் நான் தாயார்வீட்டி லிருந்தேனேயன்றி இவ்விட மில்லையென்ன, அவர்க ளனைவரு மிது விட்டல மூர்த்தியின் வேலையா மென்றார்கள். மருமக ளிதைக்கேட்டு விந்தை யடைந்துப் பாண்டுரங்கர் கிருபையென்று பக்தியுடன் சன்னிதிக்கேகி தினமும் பூஜை செய்து வருவாள். அவள் குமாரன் விட்டல னென்பவன் சரி வயது வந்ததுமுதல் குறி தப்பாமல் கோவிந்தனைப் பஜித்து பண்டரி யாத்திரை செய்து வருவான்.

பெருமாளு மவனுடைய குடும்பக்ஷேமங்களைப் பூர்த்திசெய்து வந்தார். அவருடைய கருணையா லவனுக்கோர் பிள்ளை பிறந்தது. அப்பிள்ளை பதாஜி யென்னும் பேருடையவனாகி பாண்டுரங்கருடைய சேவையை நித்தியமும் செய்துவந்தான். சரி வயதுடையனாய் விவாகஞ் செய்துக்கொண்டு சங்கரனெனும் புத்திரனைப் பெற்றான். இவனும் பக்தி நிஷ்டனாயிருந்து கானியா வெனும் பிள்ளையைப் பெற்றான். இவனுக்கு போளோபாவென்பவர் பிறந்தார்.

போளோபா, கனகாயி யென்பவளைக் கலியாணஞ் செய்துக்கொண்டு, புத்திர காமத்தை யுடையவராய் பெருமாளை சேவித்தும், சாதுக்களுக் கன்னமிட்டும், சஜ்ஜன சாங்கத்தியஞ் செய்தும், பொய் சொல்லாமலும், ஸ்ரீஹரிநாமத்தை யெப்பவும் சொல்லிக்கொண்டும், பூதங்களிடத்தில் தயையை வைத்தும், பண்டரி யாத்திரைக்குப் பக்தியுடன் போய்க்கொண்டும் காலயாபனம் செய்து வருவார். இப்படி இருபத்துநான்கு வருஷங்கள் கழிய, மும்மூர்த்திகளு மவர் சொப்பனத்தில் வந்து கோரிக்கைகளைத் தீர்ப்போமென்ன, போளோபா அனேக பரியாயங்கள் அவர்களுக்கு நமஸ்கரித்துப் பிள்ளைகளை வேண்டுமென்றார். குணவான்களான பிள்ளைகளைக் கொடுத்தோமென்று அவர்கள் மறைந்தார்கள். அனந்தரம் அவரது மனைவி சில மாசங்களின் பிறகு ஒரு மகனைப் பெற்றாள். வர புத்திரனுவா னென்று தாய் தந்தையர் கொண்டாடி சாவஜி யென்று நாமத்தைச் சாற்றி மேன்மையுடன் வளர்த்து வந்தார்கள்.

துகாராமர்.

சிலகாலங் கழிந்தபின் திரும்பி போளோபாமனைவி கர்ப்பத்தைத் தரிக்க அதனை நாமதேவ ரம்சமாகும்படி ஸ்ரீஹரி சங்கற்பித்தார். அந்தக் கர்ப்பத்தைத் தரிக்குமளவில் கனகாயி சூரிய தேஜஸைப்போல விளங்கிக் கொண்டிருந்து ஒன்பது மாசம் பூர்ணமானவுடன் பிள்ளையைப் பெற்றாள். அக்குழந்தை மாயா ஜாலத்தை யடையா முன்னமே மாதவன் வந்து அச்சிசுவை நோக்கி நேசத்துடன் லௌகிகஸ்திதியில் வர்த்தித்தும் பிரபஞ்ச விருத்தியைப் பிரஜைகளுக்குக் காட்டியும், பிரபல விவேகத்தோடும் அபார வைராக்கியத்தைக் கொண்டும் அமல பக்தியை யடையக் கடவாயென்று ஸ்ரீஹரி சொல்லவே பாலகனை மாயை வந்

தனுகிற்று. தாயா ரிவ்வாக்கியங்களைச் சொப்பனங் கண்டது போல கேட்டிருந்தாள். பின்பு பாலகனுடைய அழுகுரலைக் கேட்டு அனேக பந்துக்கள் வந்தார்கள். போளோபா ஆனந்தத்தை யடைந்து தீட்டு கழித்தவுடன் குழந்தையைப் பாண்டுரங்கர் சன்னிதியிற் கொண்டுபோய் வைக்க, அப்பாலகனை ருக்மணிதேவி யெடுத்து கனகாயி கையிற் கொடுத்தாள். பின்பு அனைவர்களும் பெருமானுக்குப் பூஜைகளைச் செய்து வீட்டிற்கு வந்தார்கள். ருக்மணி பிராட்டி ஓர் சுமங்கிலி ரூபத்தைத் தரித்து அவ்வீட்டிற்கு சென்று பதின்மர் ஸ்தீரீக ளவ்விடம் சேர்ந்திருக்க அக்குழந்தையைத் தொட்டிலி லிட்டு உஞ்சற் பாட்டுகளைப் பாடித் "துகாராம்" என்று பெயரிட்டுச் சென்றனள். மற்றவரு மவா ளவாள் வீடுகளுக்குச் சென்றார்கள். தாய்தந்தைக ளிருவரும் சந்தோஷத்துடன் சாந்தசித்தராகிப் பிள்ளையை வளர்த்தார்கள்.

சிலகாலங் கழிந்தபின் கனகாயி திரும்பி கர்ப்பவதியாகி ஒன்பது மாசமான பிறகு ஓர் பிள்ளையைப் பெற்றாள். அப்பிள்ளைக்கு கான்னியா வென்னும் நாமத்தை வைத்து கனிகரத்துடன் தாய் தந்தைகள் வளர்த்தார்கள். அம்மூன்று பிள்ளைகளும் திரிமூர்த்திகளுடைய வரங்களாலே பிறந்தவர்க ளென்றும் சம்பத்தும் கூடியிருந்தபடியாலும் தாய் தந்தையர் சந்தோஷத்தை யடைந்திருந்து பந்துக்க ளனைவரும் மெச்சும்படி அம்மூவரையும் பிரேமையுடன் வளர்த்து வந்தனர். பிள்ளைகளுக்கு வயது வந்தவுடன் விவாகங்களைச் சீராகச் செய்தார்கள். அவர்கள் மூவரும் கூடி வர்த்தக வியாபாரங்களை விசேஷமாகச் செய்து வந்ததனால் பந்துக்களுடைய மான்னியத்தையும் சினேகிதருடைய சிறப்பும் மேன்மையா யிருந்தன. அக்காலத்திற் றகப்பனுக்கு வார்த்திக தசை வந்தது. முதற்பிள்ளைக்கு விவகாரத்தில் மனம்பொருந்தாமல் யாத்திரையாய் செல்லுகிறே னென்றான். இரண்டாவது பிள்ளை வியாபாரத்தைக் கைக்கொண்டு வெகு சாதுரியத்துடன் சகல காரியங்களையும் நடத்தி வருவார். இவர் மனைவி ரோகபீடிதையா யிருந்தபடியால் தகப்பனா ரின்னொரு விவாகத்தைச் செய்து முடித்தார். இரண்டு மனைவியரோடும் துகாராம ரிருந்தும் பெரியோர்கள் மெச்சும்படி பிரபஞ்ச ரீதிக்குப் பெருமையுடையவராய் கீர்த்தி யடைந்திருந்தார். விவகாரமும் பெருத்து வந்து

விசேஷ மான்னியதையுடன் வெகுகாலங் கழிந்தது. அந்நாளில் கருப்பு வந்து கெடுதலைக்கு இடங் கொடுத்தது. கிழத்தனத்தால் தாய் தந்தைக ளிருவரும் மாண்டார்கள். அண்ணன் மனைவியும் ஹரிபத மடைந்தாள். அதைக்கண்டு தமையன் வைராக்கியத்தை யுடையவனாய் தீர்த்த யாத்திரைக்குச் சென்றான். சமுசார பாரந் துகாராமர்மேற் சமூலமாகச் சாய்ந்தது. வியாபாரங்களிலும் நஷ்டங்கள் வந்தன. நாணயத்தைக் காப்பாற்றிக்கொண்டு காலங் கழிப்பது துகாராமருக்கு கஷ்டமாயிற்று. கடன்வாங்கி வியாபாரத்தை நடப்பித்துக்கொண் டிருந்தாலும் நஷ்டங்களே வரக் கண்டு, ஒன்றுந் தோன்றாமல் ஹரிநாமத்தை அன்புடன் துகாராமர் சொல்லிக்கொண்டு நியமத்துட னவரைச் சிந்தித்து சில நாள் கழிக்க, கடன்கொடுத்த வர்த்தகர்க ளனைவரும் வீட்டிற்கு வந்து கணக்குகளைப் பார்க்குமளவில் கையி லிருப்பில்லாததைக் கண்டு, சத்தியத்தைத் தவறாமல் வியாபாரத்தை நடத்தின லுனக்கு நஷ்டமே யுண்டாகும். 'இது எங்களுக்குத் தெரிந்தது. சமுசாரத்தை நடப்பிக்கும் யுக்தியை நீ நன்றா யறியாமல் கோவிந்தனை யெண்ணியிருப்பதால் நீ கஷ்டத்தை யடைந்தாய், ஸ்ரீஹரியைப் பஜித்து வந்தால் கடனே அதிகமாகச் சேரும். இதிற் சங்கையில்லை, எங்கள் சொற்படி நீ நடப்பாயானால் அரிஷ்டங்க ளொன்னை அணுகாவென்று சொல்லிப் போனார்கள். வீட்டில்லாளும் புருஷனைக் கண்டு, பாண்டுரங்கரை நீ பிடித்தது முதல் கஷ்டங்களே வெகுவாக வருகின்றன. நால்வரில் நாணயமுந் தப்பித்து, சோறில்லாமல் நாக்கு உலர்ந்துபோகிறது. ஆனதால் ஹரிநாமத்தை நீ பிடித்திருப்பது நன்மையல்லவென்று சொல்லலுற்றாள். இவ் வாக்கியங்களை துகாராமர் கேட்டு ஈஸ்வர பஜனையில் மிகுதியாக பிரேமை யுடையவராய் பாவனமான திருநாமத்தை எல்லவரும் கேட்கப் பிரபலமாகச் சொல்லிக்கொண் டிருப்பர். துஷ்ட வசனங்க ளெத்தனைபே ரெவ்வளவு சொன்னாலும் துச்சமென்று தானெண்ணாமல் சர்வேஸ்வரனுடைய நாமத்தை சதானுசந்தேயஞ் செய்து வருவர்.

சில வர்த்தகர்களுடைய சகவாசத்தைக்கூடி வேரோரூரில் வியாபாரஞ்செய்ய துகாராமர் எருதின்மேற் கோணியையிட்டு அதனை யோட்டிக்கொண்டு சென்றார். வழியிற் போகும்பொழுது ஹரி!

கோவிந்தா! அச்சுதா! கிருஷ்ணு வென்று பெரிய ஓசையுடன் சொல்லிக்கொண்டு நடப்பர். கூடவந்த வர்த்தகர்க ளிதைக்கண்டு கோபத்தை யுடையவர்களாய், ஒய் துகாராமரே! ஸ்ரீஹரிநாமத்தை காலவேளை யொன்றில்லாமற் சொல்வதனல்வரும் பிரயோஜன மென்ன? இரவு காலத்தில் எங்களுடைய நித்திரை தப்பிப் போகிறதே! நன்மை சொன்னல் நீ கேட்பதில்லையே! இது எங்களுக்குச் சரிப்படாதென்று சொல்லி அவர்கள் தங்க ளெருதுகளை யோட்டிக்கொண்டு அவரை பின்னே விட்டுப் போனர்கள். அனந்தரம் துகாராமர் ஒண்டியாக போம்பொழு தோர் பள்ளத்தி லெருது விழுந்தது. கோணியுங் கீழே விழுந்தது. எடுக்கச் சக்கியமாகாமல் தொந்தரை யடைந்துக்கொண் டிருக்க காற்றும் மழையும் மின்னலும் இடியுமுண்டாகி அஸ்தமானமாகி இருளும் மூடிக்கொண்டது. ஜாம ராத்திரியில் ஒருவராகக் காட்டில் சபலத்தை யடைந்து பிரேமையுடன் பாண்டுரங்கரைப் பஜனை செதுக்கொண்டு அவரை வரும்படி அழைக்கலுற்ருர். ஓ கோவிந்தா! கோணியை எடுக்க மனித ரெவரு மில்லை. தீனனுகி இந்தச் சம்சார போஷணத்திற்காக திரிந்துக்கொண்டிருந்து உனது நாமத்தைச் சொல்வதால் அனைவரு மென்னைவிட்டு விட்டார்கள். இவ்விடத்தில் நான் ஒண்டியானேன். அடியேனைக் காப்பாற்றுமென்று பிரார்த்தித்தார். இதைக்கேட்டு பண்டரிநாத ரோர்வழிக் காப்போன் போலே வந்து இந்த இரவில் வழியைத் தடுத்திருப்பவர் யாரென்று கேட்க, துகாராமர் சொல்லுவார் ஐயா! என்னேடுகூட விருந்தவர்கள் இவ்விட மென்னை ஒண்டியாக விட்டுப் போனர்கள். மழையும் வந்தது. எருதுமேலிருந்த கோணி கீழே விழுந்தது. அதனை யெடுப்பவர் யாருமில்லை யென்ருர். பெருமா ளக்கோணியை எருதுமே லிட்டு நடக்கச் சொன்னர். துகாராமர் சந்தோஷித்து இருட்டா யிருக்கிறது, வழிதெரிய வில்லையேயென்ன, பெருமான் நான் வழிகாண்பிக்கிறேன், வருவா யென்ன, துகாராமரும் எருதுடன் வெகுதூரம் செல்ல, ஒரு நதி குறுக்கே வந்தது. அது நிறைவெள்ளமா யிருந்தபடியால் தாண்டச் சக்கியமாகாம லிருந்தது. கரையோரத்தில் துகாராம ரிருக்க, பண்டரிநாதர் தன் சக்கரத்தை ஜலத்தில் வைத்து அதின்மீதில் நடந்து வரச்சொன்னர். துகாராமரு மப்படியே எருதை யோட்டிக்கொண்டு நதியைத்

தாண்டினர். கோணி நனையாம லிருந்ததைக்கண்டு சந்தோஷித்து இது சர்வேஸ்வரன் கிருபையென் றெண்ணி வழி நடக்கத் தொடங்கினர். மின்னலின் வெளிச்சத்தில் பெருமாள் வழி காட்டிக் கொண்டு செல்ல சதுர்ப்புஜரூபமான திவ்வியமங்கள விக்கிரகத்தை யுடையராக துகாராமருக்குக் காணப்படுவதும் திரும்பி அப்படி காணும விருப்பதுமாக இருவரும் நடந்து வீட்டிற் சேர்ந்தார்கள். அப்பொழுது விடியற்கால மாயிற்று. பெருமாளும் மறைந் தருளினர். அவ்விடத்திய ஜனங்க ளனைவரும் துகாராமரிடஞ் சென்று துர்வார்த்தைக ளாட வாரம்பித்தார்கள். உன்னிடத்தில் நான்கு எருதுக ளிருந்தனவே! அவைகளில் மூன்று செத்துப் போயின, இது பெருமாளை பஜித்ததால் வந்த பயனு மென்றுர் கள். ஆவுலியு மவர்களுடன் சேர்ந்துகொண்டு பாண்டு ரங்கரைப் பிடித்திருப்பதால் சமுசாரம் பழுதாயிற்று. கடனை வாங்கி யனேகரை முழுகடித்தாய், இதுவன்றோ ஹரிநாமத்தின் பிரயோஜனம்? எவ்வளவு சொல்லினும் வெட்க மென்பதில்லை, சொன்னாலும் கேட்பதில்லை யென்று நிந்தித்தாள். இந்த வாக்கியங்களை துகாராமர் கேட்டு வியாகூல சித்தராகி இனி என்னசெய்வேன்! சமுசார தொந்தரை அதிகமாயிற்றே! ஒ பாண்டுரங்கரே! பரம புருஷரே! இதை விடுவிக்கு முபாயத்தை எனிதி லுணர்த்தக் கடவீ ரென்றுர்.

அனேக விதங்களா லனுதபித்துக்கொண்டு, ஹரிபாண்டு ரங்கரையே சிந்திக்க துகாராம ரோர் யோசனைசெய்து தன்னிடத்திற் கொஞ்சம் திரவிய மிருக்க அதற்கு மிளகாயை வாங்கிக் கோணிகளில் நிறைப்பி, கொங்கண தேசத்திற் சென்று விக்கிரயப்படுத்தலாமென்று பிரயாணப்பட்டார். சமுசார தொந்தரையும் இதனல் சற்று சமனமடையுமென் றெண்ணினர். மார்க்கத்தில் ஹரி! விட்டல! கோவிந்தா! வென்று சொல்லிக்கொண்டு அபாரமான பக்தி பண்டரிநாதர்மே லுடையவராகி வழி நடந்து சென்று ஊருக்கு வெளியி லோர் சிவாலயத்திற் றுனிறங்கி விட்டல நாமத்தை விசேஷமாகச் சொல்லிக்கொண்டு கோணிகளை யவிழ்த்தார். சிலர் வந்து மிளகாய் விலை யென்னவென்று கேட்டால் துகாராமர் வேண்டிய வண்ணம் கொள்ளலா மென்று சொல்லி அவர் தூக்கில் மிளகாய்களை நிறுத்துக் கொடுத்தார். வேண்டிய

வரை யவர்கள் வாங்கிக்கொண்டு ஓரணுவும் ஓர் படி அமுதும் கொடுத்தார்கள். அதை சரியென்று வாங்கிகொண்டு கொசுறு காய்களைக் கொடுவென்றால் நீங்களே வேண்டுமளவு கொண்டு போகலா மென்றார். அவர்களு மப்படியே இஷ்டத்தின்படி கொண்டுபோனார்கள். மற்றொருவன் ஆறு பைசா துகாராமருக்குக் கொடுத்து மிளகாயை கைக்கொண்டு போய் துகாராமருடைய ஔதார்யத்தை கிராமத்திற் றெரிவித்தான். அனேக ஜனங்க ளக்காய்களைக் கொண்டுபோகவந்து கடனாகக் கொடுக்கச் சொல்லிக் கேட்க அப்படியே யாகக்கடவ தென்று துகாராமர் காய்களைத் தூக்கில் நிறுத்துக் கொடுத்தார். வெகுபேர் வந்து ஒரே தடவையிற் காய்களைக் கொடுவென்று கேட்க, அனைவருக்கும் தூக்கில் நிறுத்துக் கொடுக்க சக்கியமாகாம லவர்களை நோக்கி நீங்களே கொண்டுபோகலா மென்று சொல்ல, அவர்கள் தங்க ளிஷ்டப்படிக் கொள்ளை யடித்துக்கொண்டுச் சென்றார்கள். ஒரு துர்மார்க்கன் ஓர் கோணி மிளகாயை ஒருவனே யெடுத்துக்கொண்டு போனான்.

துகாராம ரப்பொழுது தான் கொண்டுவந்த காய்களெல்லாம் விலையாய் விட்டனவென்று சந்தோஷித்துப் பெருமான், மேன்மை செய்தாரென் றெண்ணி, தன்னிடமிருக்கு மமுதுபடியையும் ரொக்கத்தையு கண்டு சமையல் செய்வோமென்று யத்தனித்து பாத்திரசுத்திசெய்து ஸ்நானம்பண்ணி விறகைத்தேடி பாகஞ் செய்யத் துடங்கினார். கடன்கொடுத்த மிளகாயிக்கு துகாராமர் பணத்தை கேட்கா ரென்று பெருமா ளெண்ணிக்கொண்டு தானோர் சேவக னுருவைத் தரித்து கடனாகக் கொண்டுபோன ஜனங்க ளனைவரிடத்துஞ் சென்று அவாளவாள் கொண்ட மிளகாயிக்குச் சரியான விலையைக் கேட்கலுற்றார். அவர்களும் தாங்கள் கொண்டுவந்த மிளகாயை நிறுத்துப்பார்க்கச் சரியா யிருந்தது. சிலர் துட்டைக் கொடுத்தார்கள். சிலர் கொடுக்காமல் தடைசொன்னால், சேவகர் கொடுக்கவேண்டு மென்று வற்புறுத்தி வாங்கினார். அனைவரிடத்திலும் பணத்தை வசூல்செய்து ஒரு கோணி மிளகாயைக் கொண்டுபோன துஷ்ட னிடமுஞ் சென்று கடன் வாங்கிய துட்டைக்கேட்க, வவன் யாரென்று வினவ, துகாராமருடைய சேவக னென்று பெருமாள் சொல்ல,

துஷ்டன் கொடுக்கமாட்டேனென்று புகல, விநயத்துடன் சில நல்ல வசனங்களால் விட்டலமூர்த்தி வினவ அவன் துர்வார்த்தைகளை விசேஷமாகச் சொல்ல, பெருமாள் துட்டை நீ கொடுக்காவிட்டால் நானிவ்விடந் தூக்குப்போட்டுக் கொள்வேனென்று ஓர் கயிற்றை உரியாகக்கட்டி அதை கழுத்திலிட யத்தனித்துச் சொல்லுவார், பாரும்! நானிவ்வூரை பஸ்மமாகச் செய்துவிடுகிறேனென்றார். இதைக்கண்டு புரஜனங்க ளந்தத் துஷ்டனையடித்து மிளகாய் விலைக்குச் சரியான பணத்தை கொடுவென்று வற்புறுத்த அந்தத் துஷ்டன் துட்டைக்கொடுத்துவிட்டான். கடன் தொகையைப் பெருமாள் துகாராமரிடம் கொண்டுவந்து தான் "சௌதரி" யென்று சொல்லி மூட்டைக் கட்டிக்கொடுத்து, ஐயர்! நீர் கடனாகவிற்ற மிளகாயின் பணத்தை தண்டல் செய்து கொண்டுவந்தே னென்றார். அதைக்கேட்டு துகாராம ரவர்களுக்கு நான் பங்கிட்டுக் கொடுத்தே னென்று சொல்ல, பெருமாள் "சௌதரி" கிரகஸ்தன் நானிருக்க, அவர்களுக்கு வெறுமை யேன் கொடுக்கவேண்டும்? அனைவருஞ் செல்வத்துடன் வாழ்பவராயிற்றே! என்று சொல்லி அவ்விடத்தி லோர் மூலையி லுட்கார்ந்தார், துகாரா மவரைக்கண்டு ஐயா! நெய்யைக் கிண்ணத்தில் விலைக்கு வாங்கிவாருமென்ன, நல்லதென்று சௌதரி நெய்யைக் கொண்டுவந்தார். பின்பு துகாராமரவரை நோக்கி நா னன்னத்தைச் சமைத்தேன், நீருங் கூட சாப்பிடுவீரே லெனக்கு மெத்த சுகமாகு மென்றார். அதற்கு சௌதரி, மாறுசொல்லாமல் பக்ஷிக்க ஒத்துக் கொண்டார். அவ்வேளையிற் பினாகபாணியும் அதிதியாய் வர, துகாராமரும் போஜனத்திற் கெழுந்தருளுமென்று பிரார்த்தித்தார். அப்பொழுது மூன்றிலைகளில் பெருமாளும் பினாகபாணியும் துகாராமரும் பக்ஷித்துக் கையலம்ப, இவர் வெற்றிலைப்பாக்கைக் கொடுத்துநிற்க, அவ்விருவர்கள் மறைந்தார்கள். அந்த கிராமத்திற் ஜனங்கள் துகாராமரிடம்வந்து அவருடைய சேவகன் செய்தவேலைகளைத் தெரியப்படுத்தி, நீர் ஹரிபக்தரென்றெண்ணியிருந்தோம், உம்முடைய சேவகன் மகா கெட்டிக்காரன், யாவரிடத்திலும் பணத்தை வசூல்செய்து பாங்காக காரிய சாதனம் செய்தானென்றார்கள். இதைக்கேட்டு துகாராமராச்சரியப்பட்டு இது ஈசனுடைய கிருபையென்றெண்ணி பாண்டுரங்கர் பேரைச் சொல்லிக் கொண்டு வீட்டிற்குச் செல்ல பிரயாணமானார்.

வழிநடந்துக் கொண்டிருக்கு மளவில் போக்கிரி யொருவன் விகிதனுகி பித்தளைத்துண்டுக்குப் பொன் முலாம் பூசி பொன் துண்டிதுவென்று துகாராமருக்குக் காண்பித்தான். அவரதைக் கண்டு அதன் விலைப் பூர்த்திக்குப் பணமில்லை யென்ன, போக்கிரி எவ்வளவு திரவிய மும்மிட மிருக்குமோ அவ்வளவே கொடும், மீதி திரவியத்தை மெதுவாக வெனக்குக் கொடுக்கலா மென்றான். மனிதருடைய கபட கிருத்தியத்தைப் பாராமல் துகாராமர் தன்னைப்போலவே இதர ஜனங்களையு மெண்ணி அந்த போக்கிரி கேட்டபடி தன்னிட மிருந்த திரவியத்தைக் கொடுத்து பித்தளைத்துண்டை கையிற் கொண்டு துகாராமர் நடந்துக்கொண்டிருக்க, அந்த போக்கிரி சற்றுதூரம் கூடவந்து வேறு வழியாய்ப் போய்விட்டான். துகாராமர் வீட்டிற்கு வந்தவுடன் வர்த்தகர்கள் வந்து கடன் தீரும்பொருட்டு காசுகொடு மென்ன, அவர் பொன் துண்டை அவர்களுக்குக் கொடுக்க, அவர்கள் சந்தோஷித்து உறைகல்லி லுரைத்துப் பார்க்குமளவில் மோசம்போய் விட்டோமென்று, துகாராமரிடந் திரும்பிவந்து, இது பொன்னல்ல பித்தளைத் துண்டென்று திருப்பிக் கொடுத்துவிட்டு, தங்கள் நெற்றித் தலங்களி லடித்துக்கொண்டு சென்றார்கள். மனைவி புருஷனைப் பார்த்து பண்டரிபதியை யெண்ணி யெண்ணி பாபியாகி காரியங்களனைத்தையும் பாழாக்கினாய், போக்கிரியுடன் சகவாசம் பொருந்துதலாமோ? விவேகத்தைக் கொண்டு யுக்தியை விநியோகப் படுத்தாமற் போனாயே! சமுசாரத்தை நானெப்படி நடப்பிப்பேனென்று பரிதபித்திருந்தாள்.

துகாராமருக் கிருந்த இரண்டு பாரியாக்களுள் முதல்மனைவி ருகுமாயி, இரண்டாவது மனைவி அவுலியென்னும் பேருடையவள். இந்த இரண்டாவது மனைவியே சமுசாரத்தைப் பார்த்துவருவள். புருஷன், ஸ்ரீஹரி பஜனையே உலகத்தில் புருஷார்த்த மென்று இருக்கிறபடியால், அவர் செய்யும் வியாபாரங்களுக்கு லாபங் கூடி வருவதில்லை யென்று இரண்டாவது மனைவியான ஆவுலி தனவான்களிடம் சென்று தன் பெயரால் இருநூறு ரூபாய் கடனைக் கேட்க, அவர்க ளவளுக் கந்த மொத்தத்தைக் கொடுத்தார்கள். அதை அவள் கொண்டுவந்து புருஷனிடங் கொடுத்து, இதை யென் பெயரால் வாங்கி வந்தேன், இதின்மூலமாக வர்த்தகத்தைப்

பெருக்கி இதரமான வியாபாரிகளுடன் ஜாக்கிரதையா யிருந்து தூரதேசத்தில் வியாபாரத்தைச் சரியாகச் செய்துவரக்கடவை யென்றாள். துகாராம ரப்பொழுது உப்பை கோணிகளிற் நிறைப்பிக்கொண்டு பாலாகாட்டிற்குச் சென்று அதனை யவ்விடம் விற்று அதற்குப் பதில் வெல்லம் வாங்கி அதனை பட்டணத்தில் விக்கிரயித்து திரவியத்தைச் சேர்த்தனர். துகாராமர் இதர வர்த்தகர்களுட னிருந்து காரிய சாதனஞ்செய்தார். பொய்சொல்லும் வியாபாரிகளில் துகாராமர் சத்திய சீலராவார். இதைக்கண்டு இதர வர்த்தகர்கள் பலபல வாக்கியங்களைப் பேசினார்கள். ஹரி நாமத்தின் ருசியே துகாராமருக்கு அபாரமாக விருந்தபடியால் அவர்களுடைய வார்த்தைகளை அவர் கேளாமல், நரஹரி! நாராயணா! கோவிந்தா! கோபாலா! பண்டரிநாதா! பண்டுரங்கா! வென்று சொல்லிக்கொண் டிருப்பர். இவ்விதமாக அந்த வியாபாரிகளுட னிவ ரிருந்து திரவியத்தை ஜாக்கிரதையாகக் கைக்கொண்டு அவர்களுடன் தானும் இருப்பிடம் வர திரும்பினார். வழியி லோர் கிராமத்தி லனேவரு மிறங்கி யிருக்க ஓர் பிராம்மணன் சட்டையினாற் செய்த ஓர் சின்ன கலப்பையைக் கழுத்திற்றூக்கி தலைமயிரை வளர்த்தி பிக்ஷாடனத்தா லிங்குமங்குமாகத் திரிந்துக் கொண்டிருந்தான். ஒரு ரூபாயில் வீசம் அரைக்கால் காலிவ்வித மாகப் பிரஜைகள் தானங்கொடுத்துக்கொண் டிருந்தார்கள். துகாராமர் அவனைக்கண்டு இப்படி நீர் தொந்தரை யடைய காரண மென்னவென்று கேட்க, அவன் அவரை நோக்கி ஐயா! தாயாதிக ளென்னுடைய நிலத்தைப் பிடுங்கிக் கொண்டு நீதியைத் தப்பி லஞ்சத்தைக் கொடுத்து, என்னைச் சிறைச்சாலையில் வைத்தார்கள். பஞ்சாயதி செய்யுமளவில் அதிகாரிகள் என் சிறையை யொழித்தார்கள். ஆனால் முன்னூறு ரூபா தண்டகைப் போட்டார்கள், அதில் ஐம்பது ரூபாய் கொடுத்தேன், இன்ன மிருநூற்றைம்பது ரூபாய் கொடுக்கவேண்டி யிருக்கிறது, அதை இவ்விதமான பிக்ஷையினால் வசூல் செய்துக் கொடுக்கத் திரிகிறே னென்ன, துகாராமருடைய மனது கரைந்து தன் கையிலிருந்த திரவியத்தை அவன் கையிற் கொடுத்து அவன் மனையாளை யழைத்து சமையற் செய்வித்து நாவிதனைக்கொண் டவனுக்கு க்ஷவரஞ் செய்வித்து ஸ்நானமானபிறகு பத்துபேர் பிராம்மணர்களுடன் போஜ

னஞ் செய்வித்தார். அந்தப் பிராம்மணன் திரவியத்தைக் யாச னுக்குக் கொடுத்துத் தொந்தரையை நிவர்த்தி செய்துக்கொண்டு துகாராமரைக் கண்டு பன்னிரண்டு வருஷந் திரிந்து மிந்த தனம் கிடைக்கா திருந்தது. நீ ரதனை கிருபை செய்தீ ராதலால் வேங் கடாசலபதி உம்மை ரக்ஷிப்பார், சகல சுபங்களையும் ஸ்ரீபாண்டு ரங்க ருமக்குச் செய்தருளுவா ரென்றான். துகாராமர் சத்கர்மத்திற் றிரவியத்தைச் செலவழித்தேன், வீட்டில் மனையாள் சொல்லாத வார்த்தைகளைச் சொல்லுவாளே! யென்று பயத்துடன் வழி நடந் தார். பெருமாள், திரவியத்தைக் கைக்கொண்டு கடன் கொடுத்த தனவானிடஞ் சென்று துகாராமரைப்போல தோன்றி வட்டி யுடன் முதலைச் செலுத்திவிட்டு ஐந்து வராகன்களைக் கொடுத்துத் தனது மனைவிக்குக் கொடுக்கும்படிச் சொல்லி மறைந்தனர். அந் தத் தனவான், பக்தன் வீட்டிற்குச் சென்று, ஆவுலியைக் கண்டு வட்டியும் முதலும் வந்துவிட்டது, துகாராமர் ஐந்து வராகன்க ளுனக்கு கொடுக்கச் சொன்னாரென்று கொடுத்தான். ஆவுலி அதனைக் கைக்கொண்டு சந்தோஷித்திருந்தாள். துகாராமர் கூடச் சென்ற வர்த்தகர்கள் வந்து ஆவுலியைக் கண்டு துகாராமர் திரவி யத்தை தானம் பண்ணின சங்கதிகளைச் சொன்னார்கள். ஆவுலி யதைப் பொய்யென்று மன்னிக்காம லிருந்தாள். துகாராமர் பயத்துடன் வீட்டிற்கு வருமளவில் சங்கதி யறிந்துக்கொண்டு ஸ்ரீஹரி தயையுடன் தப்பிவித்தாரென் றெண்ணியிருந்தார்.

இப்படியிருக்க அந்த நாட்டில் கருப்பு வெகுவாக நேர்ந்தது. மழையில்லாமல் விலைக ளதிகமாகி நின்றன. ஜனங்கள் அன்ன மகப்படாம லுபவாசத்தா லவஸ்தைப்பட் டிருந்தார்கள். துகா ராமரும் குடும்பத்திற்காக வெகு தொந்தரை யடைந்திருந்தார். முதற் பெண்சாதி அன்ன மில்லாமலே மிருத்திவுக் கிரையா னாள். அவளுக் கிருந்த ஒரே பிள்ளை அவ்வாறே போனான். துகா ராம ரதிக விசனத்துடன் அன்னத்திற்காக தானிய மகப்படாம லலைச்ச லடைந்தார். கோணி முதலாகிய சில வஸ்துக்களை விற்று கொஞ்சம் தானியம் வாங்கி அதைக்கொண்டு சிலநாட் கழித்து பின்பு குடும்ப போஷணத்திற்கு விசன முற்று ஒருவரிடந் தானியத்தைக் கேட்கினும் கிரியை காணமல் சகல ஜனங்களாலும் நிந்திதராகி நிலைமை தப்பலாயினர். பொருத்த மில்லாமல் மனைவி

பூர்ண துக்கத்திற் காஸ்பதமானுள். சர்வ விதங்களாலும் சமுசாரத்திற் சங்கடமே உண்டாமென்று மிதனை நிர்வகிக்க முடியாதென்றும், இந்த சரீரமு நிலையற்றிருப்பதென்றும், ஆயு ளிப்படியே போய்விட்டால் ஹரியைக் காண்ப தெப்போ வென்றும், துகாராமர் விசாரித்து "பாம்பநாத்" என்றோர் மலைமேற் சென்று பாண்டுரங்கரை நினைத்துச் சொல்லுவார்—அடியேன் தீனன். தேவரீரை பஜிக்கும் தெளிவு எனக்கில்லை. சதுர்முகன் முதலான தேவர்களும் சாம்பமூர்த்தியு மும்மைக் காணும் பொருட்டு தேடிக்கொண் டிருப்பார்கள். ஓ ஈஸனே! தயாளோ! நா னெம்மாத்திரம். ஓ பாண்டு ரங்கரே! நீரென்மனதி லிருக்கக் கடவீரென்று ஏழுநாள் அன்னபானங்க ளில்லாம லவ்விடத் திருக்க, மனது ஏகாக்கிரமாகி விஸ்மிருதி யடைந்திருந்தது. அவ்வேளையிற் பாண்டுரங்க ரோர் சர்ப்பாகாரமாகி பெரிய உருவத்துடன் வந்து காலகூட விஷத்தைக் கக்கிக்கொண்டு மலையை சுற்றி நின்றனர். அப்பொழுது ஆகாய வீதியில், ஹரிபக்தரே! கண்களைத் திறக்கக் கடவீர், ஸ்ரீஹரியே சர்ப்பமாகி யிவ்விடம் வந்தனரென்று ஓசையுண்டாக, துகாராமர் பெருமாள் சர்ப்பமாகி இவ்விடமேன் வந்தாரென்றும் தயையுடைய ஸ்ரீஹரி தனது நிஜரூபத்தைக் காண்பிக்கக் கடவரென்றுஞ் சொல்லி கண்களைத் திறவாம லிருக்கச் சர்வேஸ்வரன் சதுர்ப்புஜ ரூபராகி அவர் முன்னின்று, தாயார் குழந்தையை யெடுப்பது போல, பெருமா ளவரை யெடுத்து கக்கத்திலிட்டுக்கொண்டு கருணையுடன் தன்னைப் பார்க்கச் சொன்னுர். அப்பொழுது அவர் கண்திறந்து ஸ்ரீஹரி ரூபத்தைப் பார்த்து சந்தோஷ மடைந்து, கண்களில் நீர்ததும்ப அவரையே பார்த்துக்கொண் டிருந்தனர். அவ்வேளையில் துகாராமர் தம்பி கான்னியா வென்பவன் ஏழுநாளாக தமயனைத் தேடிக்கொண் டிருந்து, அவ்விடம்வந் தவ் விருவரையுங் கண்டான். பகவான் துகாராமரைக் கண்டு வரங்களைக் கொடுக்கிறோம் கேளுமென்று சொல்ல, துகாராமர் பெருமாளை நோக்கி, ஸ்வாமி! தேவரீரை மறவாம லிருக்கும் வரத்தைத் தந்தருளு மென்றார். பெருமாளு மப்படியே தந்தோமென்று அந்தர்த்தானமானுர். பெருமாள் திருவடிகளை அவ்விடத்தில் கான்னியா நோண்டி வைத்தான். அதனை யிப்பொழுதும் லோகத்தார் காண்பார்கள்.

அனந்தரம் அண்ணனுந் தம்பியு மிருவருங்கூடி கிராமத்திற்கு வந்து நதி தீரத்திற் பக்ஷணை செய்தார்கள். பின்பு துகாராமர் கணக்கு புத்தகங்களையும் கடன் பத்திரங்களையும் தம்பி மூலமாக வரவழைத்து தமக்கு வெளியார் கொடுக்கவேண்டிய கடன் பத்திரங்களை ஆற்றிற்போட யத்தனிக்க, தம்பி அப்படியேன் செய்கிறீ ரென்று தமயனை கேட்க, அவர் சொல்லுவார், இதர ஜனங்கள் நமக்குக் கொடுக்க வேண்டியதை இனி கொடுப்பாரோ, கொடாரோ, ருணத்திரவியம் கிடைக்குமென்னும் ஆசை விட்டுப் போவதற் கிவ்விதம்செய்ய வெண்ணினே னென்ன, தம்பி, விரக்தி யால் நீர் இப்படி செய்வீராயின் சமுசாரியாயிருக்கு மெனக்கு வழி யென்ன வென்று கேட்க, துகாராமர் தம்பியை நோக்கி, பாதி பங்குக்கு நீ கர்த்தாவான படியா லதனை நீ வைத்துக் கொள் ளலாமென்று பாதிதொகை பத்திரங்களை அவனுக்குக் கொடுத்து தனது பாகத்தை ஆற்றில் முழுகடித்து, ஈசனே எனக்கு கர்த்த னுவா ரென்றும் பிக்ஷாடனையால் காலயாபனம் பண்ணுவே னென் றும் பெருத்த வியாபாரங்களை நீயே செய்யக் கடவையென்றும் தம்பிக்குச் சொல்லி பருவதத்தின் மேற்சென்று அவ்விடத்தி லேகாந்தமாக விருந்து நாம ஸ்மரணையை மறவாமல் நாராயணு! நரஹரி! இராமச் சந்திரா! இராஜீவாக்ஷா! பாண்டு ரங்கா! பண்டரி நாதா! ஸ்ரீஹரி! விட்டலா! என்று சொல்லிக் கொண்டு நாமமே எனக்கு ஜபமாகும். நாமமே தெய்வமாம். நாமமே விரதமாம். நாமமே குலாசாரமாம். நாமமே தருமமாம். நாமத் தால் தான் பாவம் போம். நாமமே விஸ்ராந்தியுமாம். நாமத்தை தவிர வேறு ஆதார மிப்புவியி லெனக்கில்லை, நாமமே தனமா கும், நாமமே வித்தமாகும், சம்பத்தும்நாமமே யாகும். அந்த நாமமே சமுசார சாகரத்தி லிருந்து தறிக்கச் செய்யும் என்று இவ்விதமாகத் தான் தினமும் சொல்லிக்கொண்டு சாயங்காலத் திற் சன்னிதிக்கு வந்து ஆடுவதும் பாடுவதுமாக அவ்விடமிருந்து ஹரி! விட்டல! வென்று சொல்லிக்கொண் டிருப்பர். இந்தச் சேட்டைகளை உலகத்தார் பார்த்து வெகுவித வார்த்தை களைச் சொல்ல லாற்றார்கள். துகாராமர் அவைகளைத் தான் கேளாமல் துச்சமான வகங்காரத்தை அதன் விகாரங்களுட னடிக்கீழணைத்து ஹிதமான சாந்தியை யுடையராய் ஆசையையும் மோஹத்தை



துகாராமர். [illegible]

துகாரர்மனைகாவலாளியாகவைத்ததடியானவன். [illegible]

பிராம்மணஸ்திரீ. [illegible]

யும் மாயையையும் அவலம்பிக்காமல் பாண்டுரங்கரைப் பூஜித்துப் பின்பு கிராமத்திற்கு வெளியிற் போவார். பகற்காலத்தில் ஏகாந்தமாக பகவன் நாமத்தைச் சொல்லிக்கொண்டு மஹத்தான பிரேமையுடனிருப்பார்.

### கரஞ்சா குடியானவன்.

ஒருநாட் கரஞ்சா வெனும் ஸ்தலத்தி லிருந்து பகவன் நாமத்தைச் சொல்லிக்கொண் டிருந்தார். அவ்விட மோர் குடியானவன் வயலிற் பயிரிட்டு பார்த்து வருவான். அதில் பயிர் பாங்குடன் கதிர்கள் விட்டிருந்தன. அக்குடியானவன் துகாராமரிடம் வந்து நீ ரிந்த வயலுக்குக் காவலா யிரும், பயிர் பலிதத்திற்கு வந்தபின் அரைமணுகு தானியத்தைக் கைக்கொள்ளக் கடவீர், அதனு லுமது குடும்ப ரக்ஷணமாம், நீர் சும்மா விருந்தால் சமுசார மெப்படி நடக்கும்? இவ்வயலினி லுள்ளிருக்கும் மஞ்சைமீதுட்கார்ந்து மாதவனுடைய நாமத்தைச் சொல்லிக்கொண்டிரும், உம்முடைய ஆதீனமாக இந்த சோளக் கொல்லையை விட்டேன், அதனை நீர் காப்பாற்றக் கடவீர், பக்ஷிகளைத துறத்துவதற்கு (கோபணம்) கவண்டுங்கொடுத்து அவ்விட மிருக்கச்சொல்லி நியமித்து அவன் வேறு கிராமத்திற்குச் சென்றான். துகாராம ரக்கொல்லைக்கு காவலிருக்கு மளவில் பக்ஷிகள் கதிர்கள்மே லுட்கார்ந் திருக்கக்கண்டு இவையனைத்து மீசனுடைய ஜீவர்கள். இவைகளை யோட்டினால் கிராமத்திற்குச் சென்ற குடியானவனுக்கு பாபம் நேரிடுமே! பக்ஷிகள் கருப்பி லன்ன மகப்படாமல் கஷ்டப்பட் டிருந்தனவே! இவைகளை நிஷ்காரணமாக அடித்தால் நிந்திதனுவே னென்று சொல்லி மஞ்சத்தின் மீதிருந்து பாண்டுரங்கரை இருதயத்திற் சதா நோக்கிக்கொண்டு ஹரிநாமோச் சாரணத்துடன் சந்தோஷமுற்றிருந்தனர். உச்சிப்பொழு தானவுடன் பக்ஷிகளைப் பார்த்து, ஓ பக்ஷிகளே! பூர்ணமாக தானியத்தைப் புசித்தீர்க ளாதலால் நீரருந்தப் போகவேண்டு மென்று பெரிய ஓசையுடன் பிரஜைகளனைவரும் கேட்க பகவன் நாமத்தைச் சொல்லிப் பக்ஷிகளை யோட்டுவார். வீட்டில் மனையாள் புருஷன் வரவில்லையென்று புரஜனங்களைப் பார்த்து சொல்லுவாள், என்து கணவன் தனியாக எவ்விடத்தி லெந்த வனத்திற் சஞ்சரித் திருப்பாரோ? சமுசாரத்தை நீராக்கினரே! பாண்டுரங்கர் சன்னிதியிற் பஜனைசெய்வ

தும் ஆடுவதுமாக விருப்பாரே! எனக்கு பசி அதிகமாக வெடுத் ததே! அவரையன்றி நான் புசிக்கேனே! என்று தன் குமாரத் தியை யழைத்து வெளியிற்சென்று உன் பிதாவைப் பாரென்றாள். அப்பெண் தேடிக்கொண்டு போக, கொல்லைப் பயிரிடம் தகப்ப னைக்கண்டு, வீட்டிற்கு வரச்சொல்லிக் கூப்பிட்டாள். அப்பொ ழுது குடியானவன் செய்து போன ஏற்பாட்டைத் துகாராம ரவ ளுக் கறிவித்தார். குமாரத்தித் தாயாரிடம் வந்து சங்கதியைச் சொன்னாள். தாயா ரப்பொழுது குமாரத்திவசம் போஜன பதா ர்த்தத்தைப் புருஷனுக்காக அனுப்பித் தான் பின்பு பக்ஷணை செய்தாள். துகாராமர் பக்ஷித்து மஞ்சைமீ திருந்தார். பக்ஷிகளும் தானியத்தைப் புசித்துக் கொண்டிருந்தன. சாயங்காலமான வாறே துகாராம ரந்த பக்ஷிகளைப்பார்த்து இரவுகாலத்திலுங்களு குக் கண்தெரியாது, இப்பொழுது நீங்கள் போய் உதயமானபோ து திரும்பியும் வரலாமென்று ஒருமுறை யவைகளைப் பறக்கடித் து, இரவுகாலத்தில் தான் சன்னிதிக்கு வந்து ஆடவும் பாடவு மிரு ந்து உதயத்தி லெழுந்திருந்து பகவானுக்குப் பூஜைக ளனைத்தை யுஞ் செய்து திரும்பி கொல்லைக்கு வந்து மஞ்சைமீ துட்கார் ந்து கோவிந்த நாமத்தைக் கூவிக்கொண்டிருப்பார். தனித்திருந்து பக்ஷிகளி னொழுக்கத்தைக் கண்டு விந்தையடைந்து, இவைகள் தானியத்தை வீடுகளுக்குக் கொண்டு போவதில்லையே! இவைக ளுடைய குணமெனக் கெப்போது வாய்க்கும்! ஒ விட்டலா! ஸ்ரீ ஹரீ! எனக்கு நானெனும் நினைப்பெப்பொழு தொழியும்? அனை வரையு மாத்ம பாவனையிற் பார்ப்பது எப்போ? பந்துக்க ளென் னைப் பொருளன்றென் றெப்போ தெண்ணுவர்கள்? உலர்ந்தஇலை கள் காற்றிற் பறந்துபோவது போல் நானெப்போது பரதந்திர னாவேன்? ஒ ஈசனே. இந்த சராசரங்க ளனைத்தும் உம்முடைய ரூபமாகுமெனும் சமத்வ நோக்க முண்டாகச் செய்யவும். நிந்தாஸ் துதிக ளெனக்கு லக்ஷியத்திற்கு வாராதபடி செய்யவும். உம்மு டைய குண கீர்த்தனையை யெப்பொழுதும் பாடும்படி செய்ய வும். இதுதான் அடியேன் தேவரீரை கேட்கும் தானமாகும். அதனை நிர்வகித்தருள வேண்டுமென் றிவ்விதமாக ஈஸ்வரனு டைய பஜனையைச் செய்துக் கொண்டு மனதை அவரிடஞ் சேர்த் திருந்தார்.

இவ்வாறிருக்க கிராமத்திற் சென்ற குடியானவன் வந்து அங்குமிங்கும் திரிந்து தனது கொல்லையைப் பார்க்கும்பொழுது பக்ஷிக் கூட்டங்கள் பகர்ந்துக்கொண் டிருக்கக் கண்டான். நான்கு திக்குகளினு மோடியோடிப் பார்க்க கதிர்களிற் றுனியமே யில்லாதிருந்தது. மஞ்சத்திற் றுகாராமர் மாதவா! முகுந்தா! கிருஷ்ணு! கோவிந்தா! வென்று சொல்லிக் கொண்டிருந்தார். குடியானவ னவரைக் கண்டு கோபங்கொண்டு, நானுன்னை யிவ்விடம் காவலாக வைத்திருக்க தானியத்தை யெல்லாம் பக்ஷிகளுக் கிட்டு என்னை மோசஞ்செய்தாயென்று துகாராமரைப் பிடித்து கீழே வீழ்த்தி அதிகாரிகளிடங் கொண்டுபோய் நெற்றித் தலத்தி லடித்துக் கொண்டு துகாராமர்மேற் பேசாதப் பேச்சுகளை வெகுவாகப் பேசினுன். அதிகாரிகள் துகாராமரைக் கண்டு சங்கதி யென்ன வென்று விசாரிக்க, அவர் சொல்லுவார், குடியானவ னென்னை மஞ்சத்தின் மீதிருந்து பக்ஷிகளைப் பார்த்து காவலி லிருக்கச் சொன்னுன். அவன் சொற்படி செய்தேன். பக்ஷிகள் தானியத்தை பக்ஷித்துக் கொண்டிருக்க அவைகளை யடித்தால் பிராணங்கள் போய்விடுமென்னும்பயத்தா லடிக்காமலிருந்தேன். அவைகள் வீடுகளிற்கு தானியத்தைக்கொண்டு போகவில்லை யென்று சொல்ல, அவ்விடத்திலுள்ள ஜனங்க ளனைவரும் சிரிக்கலுற்றுர்கள். அதிகாரிக ளக்குடியானவனைக் கண்டு அக்கொல்லைப் பயிரின் பலித மெம்மாத் திரமாகுமென்று கேட்டார்கள். அதற்கு அவன் இரண்டு மணுகு தானியமாகுமென்றுன். அதிகாரிக ளிதைக் கேட்டு பயிரனைத்தும் பலிதத்திற்கு வந்தபின்பு துகாராமருனக்கு இரண்டு மணுகு தானியம் கொடுக்கும்படி தீர்மானித்தோம். இதற்கிப்போழுதே துகாராமரிடம் பத்திரம்வாங்கிக் கொள்ளு மென்ன, உடனே பத்திரமெழுதி துகாராமர் கையெழுத்து வாங்கிக் கொண்டார்கள். அவ்விடத்தி லனைவரும் துகாராமரைக் கண்டு அக்கொல்லையை உம்மாதீனத்தில் வைத்துக்கொள்ளுமென்ன அவர் அன்னியருடைய கொல்லை தன்னுதீனத்தில் வேண்டாமென்றுர். அப்பொழுது அதிகாரிகளே கூலிமனிதரைவைத்து அதனைக் காப்பாற்றினுர்கள். அது பலிதத்திற்கு வருமளவில் கதிர்களிற் றுனியம் கனத்திருந்தது. குடியானவ னிரண்டு மணுகு தானியமென்று சொல்ல, அதற்கு பத்துபங்கதிகமாக இருக்கிற

தை அவ்வூரார் பார்த்து இது பண்டரிநாதருடைய கிருபையென்றெண்ணியிருந்தார்கள். குடியானவ னதிகாரிகளிடஞ் சென்று கொல்லையைத் தன் சுவாதீனமாக்கும்படி கேட்க அவர்கள் தீர்ப்புக்கு விரோதமாக செய்யவொண்ணதென்றார்கள். அறுப்பான பின்பு அந்தத் தானிய மம்பாரமாக தோன்றி அளவுக்கு பதினேழு மணுகு தானியமாயிற்று. குடியானவனுக்கு இரண்டு மணுகு தானியத்தை கொடுத்து மற்றதைத் துகாராமரைக் கொள்ளச் சொல்ல, அவர் வேண்டா மென்றார். நிரபேக்ஷையே மேலான வைராக்கியம், நிரபேக்ஷையே ஞானமாகும், நிரபேக்ஷையே மேலான உபரதி சுகமாகும், நிரபேக்ஷையே ஆனந்த மாகுமென்று துகாராம ரிச்சையற்றவரா யிருக்குமளவில், அவ்விடத்திய மணியக்காரன் "தாஜி" யென்பவன் பெருமாள் கிருபையால் வந்த தானிய மாதலா லது ஏதோ சமயத்தில் அவர் கைங்கரியத்திற்குதவுமென்று தன்வீட்டில் பத்திரப்படுத்தி வைத்திருந்தான்.

துகாராமர் ஸ்ரீஹரி பஜனையை எப்பொழுதும் சுகமாகச் செய்துக்கொண்டு பிரேமையுட னிருக்க அவர் மனைவி அந்த தானியத்தை வேண்டி அதிக வார்த்தைகளைச் சொல்ல, துகாராமர் சந்தோஷத்துடன் பஜனையில் நின்றனர். பண்டரிநாதருடைய ஆலய மவ்விடத்தில் வெகுகாலங் கண்டதாகி சிதிலமாகி யிருந்தது. துகாராம ரதனைக்கண்டு சீர்ப்படுத்த யத்தனித்து மண்வெட்டியையும் கூடையையுந் தானே கைக்கொண்டு ஒருவராகவே தினந்தோறும் வேலைசெய்துவர, பெருமாள் மணியக்காரர் சொப்பனத்திற் சென்று உன் வீட்டிலிருக்குந் தானியத்தை ஆலயத்தைச் சீர்திருத்த வினியோகப் படுத்துமென்று சொல்ல, அவன் கிராமஸ்தர்களுக்குத் தெரிவித்தான். அனைவரு மதைக்கேட்டு சந்தோஷத்துடன் சம்மதித்து வேலைக்காரரை வரவழைத்து ஆலயத்தைச் சீர்படுத்தத் தொடங்க துகாராம ரானந்த மடைந்தனர். சில நாட்களில் வேலை முடிந்தது. திரவிய மில்லாததினால் அங்குள்ளோர் சம்புரோக்ஷணை செய்யா திருந்தார்கள். அதனாற் றிரும்பி மணியக்காரன் சொப்பனத்திற் பாண்டுரங்கர் திவ்வியசரீரமுடைய ஓர் வைஷ்ணவ ரூபத்துடன் சென்று சொல்லுவார். இவ்விடத்திலுள்ள அதிகாரஸ்தர்கள் அநியாய முடையவர்கள், பாபத்தை யடைவார்கள். குடியானவன் அரை மணுகு தானியத்தை வயலைக்

கார்க்கும் பொருட்டு கூலியாக துகாராமனுக்குக் கொடுக்க உடன் பட்டிருந்தா னன்றோ! அதனைக் கைக்கொண்டு ஆலய சம்புரோக்ஷணை செய்யச் சொன்னார். மணியக்காரன் கிராமஸ்த ரனைவருக்கு மிந்த சொப்பனத்தை சொல்லி அக்குடியானவனை யழைத்துத் தானியத்தைக் கேட்க அவனு மரைமனுக்கு தானியத்தைத் தந்தான். பிரஜைக ளனைவரும் பருப்பமுது வெல்லம் காய்கறி முதலானதுகளைக் கொடுக்கக் கோயிலைச் சம்புரோக்ஷணை செய்து முடித்தனர். துகாராமரும் சந்தோஷப்பட்டு சர்வேஸ்வரனுடைய நாமத்தைச் சொல்லிக் கொண்டு ஆனந்த மடைந்திருந்தார்.

துகாராமர் ஹரி குணனுவாதஞ் செய்ய இச்சித்து கிரந்தங்களை விசேஷமாகப் பார்த்து பாடம் பண்ணத் தொடங்கினார். பாகவதம், இராமாயணம், பகவத்கீதை, வாசிட்டம், ஞானேசுவரி, ஏகநாத பாகவதம், இதரமான கிருதிகள் முதலானவைகளைப் படித்து அவைதனை மனனஞ்செய்ய பர்வதத்தின் மேற்செல்லுவார். இப்படியிருக்க ஒருநாள் தான் வீட்டிற்கு போஜன நிமித்தம் போகாமலிருக்க அவர் மனைவி பிரசாதத்தையும் ஜலத்தையும் கைக்கொண்டு அவ ரிருப்பிடத்திற்குச் செல்லும் பொழுது வெய்யில் விசேஷமாகி மத்தியானத்திற் பூமி பாதங்களைச் சுட கஷ்டத்துடன் பர்வதத்தை ஏறிக்கொண்டிருந்தாள். வழியில் ஓர் முள்காலில் தைத்தது. அத்தொந்தரவால் மூர்ச்சை யடைந்துவிழ, பாத்திரத்திலிருந்த ஜலம் போயிற்று. வேதையடைந்துத் திரும்பி எழுந்திருந்து காலி லிரத்த மொழுகக் கண்டு முள்ளை யெடுக்கத் தன்னாலாகாமல் சொல்லுவாள், முன்னுக்குப் போவதெப்படி? எனக்கு துகாராமர் நிந்திக்கத் தகுந்த விரோதியாக நேரிட்டார். சமுசாரத்தை நீராக்கி அதனை யென் தலைமேற் போட்டுப் பெருமானைச் சேவித்துக்கொண்டு எனக்குக் கடினமானவராகி தொந்தரவு செய்கிறார். விஸ்வம்பரன் விவேக ஈனராகி விட்டல மூர்த்தியை யிவ்விடத்திற்கு கொண்டுவந்தார். யானை குதிரை முதலான சம்பத்தெல்லாம் போய்விட்டன. விட்டல! பாண்டுரங்கா! வென்னும் பிராந்தியி லென் புருஷன் விழுந்தார். அந்த கரிய மூர்த்தியான கிருஷ்ணனால் தரித்திரம் வந்து நேர்ந்தது. பெண்கள் பிள்ளைகளுடைய பெரிய குடும்பத்தை என் புருஷன் தனக்குப் பிரியமாக்காமல் அவர்களை விட்டு மலைமேலே

வீற்றிருக்கிறார். இதனாலெனக்குத் தொந்தரை யுண்டாயிற்று. நான் பூர்வஞ்செய்த கரும மிவ்வண்ணம் பலிதமாயிற்று. தனத்தை வெகுவாகச் செலவழித்து என் தகப்பன் விவாகஞ் செய்தார். எனக்கிந்தப் பிசாசரூபமான புருஷ னகப்பட்டார். வயிற்றிற்குச் சாப்பாடு அகப்படுகிறதில்லை. எனக்குச் சிரேஷ்டவிரோதி பாண்டுரங்கர், நா னவஸ்தைப் படுவதை யவர் பார்ப்பாராகில் சிரிப்பாரே! உயிருள்ள வரைக்கும் நா னவரை நிராகரிப்பேன் சரண மடையமாட்டே னென்று முள் தைத்ததினால் தொந்தரை யடைந்து அழத் தொடங்கினாள். அப்பொழுது பெருமாள் நிஜ ரூபத்துட னவ்விடம்வர ஆவுலி யவரைப் பார்த்து ஏன் வந்தீர்? ஹாசியம் செய்ய வந்தீரோ? நீரென் புருஷனை பைத்தியக் காரனாகச் செய்வது நியாயமா? என்று வினவ, பெருமா ளவளை நோக்கி செடிமே லொரு பழம் பூர்த்தியாகப் பழுத்திருந்தால் காற்றடித்துக் கீழ விழுந்த உடன் அதனை லோகத்தார் பார்ப்பார்கள். அப்படியே துகாராமர் பக்குவமாய் விட்டார். ஆரண்ணியத்தி லவ ருட்கார்ந் திருக்கிற படியால் நீ யவர் பின்திரியலானாய். நானும் தானியத்தை உங்கள் சாப்பாட்டுக்காகக் கொடுத்தேன், அதனை உன் பர்த்தா கைக்கொள்ளாமல்விட்டுவிட்டார். நீ இதை தவறாமல் நானிருக்க என்மேல் நீ நிமித்தத்தை வைக்கிறாய்? என்று பிரீதியுட னிவ்விதமாகச் சொல்லி அவளுடைய காலைத் தன் துடைமேல் வைத்துக்கொண்டு தொந்தரை யின்றி முள்ளை யெடுக்கவே வெகு சந்தோஷத்துட னவ ளெழுந்திருந்து அந்த பைத்தியக்காரர் பசியுடனிருப்பாரே! யென்று சொல்லிக்கொண்டு மலைமே லேறிவர பெருமாளும் பின் றொடர்ந்தார். துகாராம ரிதைக் கண்டு வெளிச்சமு மிருட்டு மோரிடம் சேர்ந்தாப்போ லிருக்கிறதே! வென்றார். ஆவுலி ஹரிமேல் விரோதத்தை அவ்வேளையில் விட்டிருந்தாள். இருவரும் துகாராம் சமீபத்திற்குப் போக, அவ ரெழுந்திருந்து பெருமாளுக்குத் தெண்டன்சமர்ப்பித்து அவ்விட முட்காரச் செய்தார். மூவருமுட்கார் ந்திருக்க துகாராமர் தன் மனைவியைப் பார்த்து பெருமாளுக்கு பக்ஷணைக்குக் கொடு வென்று சொல்ல, அவள் தனக்குள் ஒரே பக்ஷிய மிருக்கிறதே! இந்த கரியநிறத்தவ ரிப்போது என் வெட்கத்தைவாங்க வந்தாரே! யென்று மனதிற் கஷ்டமுடையவளாய் சமூலமாக அந்த பக்ஷிய

மொன்றை அவருக்கே இட்டாள். பெருமாள் தனக்கு வஞ்சனை யின்றி அன்ன மிட்டாளென்று கூடையை துணியால் மூடி துகாராமருக்கும் அன்ன மளிப்பா யென்ன, அவள் வெட்கமுற்று கூடையை மூடியிருந்த வஸ்திரத்தை எடுத்துப்பார்க்க, அதிற் பக்வான்னங்கள் பூர்த்தியா யிருக்கக் கண்டு ஆச்சரியமுற்று என் குலதெய்வமோ, பவானியோ, பைரவனோ, யாரோ ரக்ஷித்தார்களென்று ஒவ்வொருவருக்குந் தெண்டனிட்டாள். இதைக்கண்டுப் பாண்டுரங்கர் யாமே இவ்விடத்திலன்னத்தை யேற்பாடு செய்தோமென்ன, அவ ளிதைக்கேட்டு நான் நம்பமாட்டேன். சபரியிட்ட பழங்களை நீர் சாப்பிட்டீரன்றோ? உமக்குச் சாமர்த்திய முண்டாயிருந்தால் ஒருவராகி வனவாசத்திற் கேன் சென்றீரென்று பலவாறுகச் சொல்லிக்கொண்டு பக்ஷிய போஜ்யங்களை யிருவருக்கும் கிரமமாக வட்டித்தாள். மலையேறும் பொழுது ஜலம் நழுவிப் போனதால் தாகசாந்திக்காக அவள் தீர்த்த மில்லாமற் றெருந்தரைபடைய, பெருமாளவளை நோக்கி அம்மலைமேல் ஜல மகப்படாதென் றறிந்து, கொஞ்சந்தூரம் போய் பார்த்தா லகப்படுமென்று சொல்ல, அவ ளப்படியே போய் பார்த்தாள். அவ்விட மோர் ஊற்றிருக்கக்கண்டு சந்தோஷித்து, ஓர் நொடியில் இப்படி விசித்திரச் செய்கைகளைச் செய்து என் பர்த்தாவை பைத்தியக்காரராக்கிவிட்டாரென்று சொல்லி ஒருசொம்பு ஜலங் கொண்டுவந்து அவர்க ளிருவருக்குங் கொடுத்தாள். பின்பு ஆவுலியையுங் கூட வைத்துக்கொண்டு அனைவரும் பக்ஷித்தார்கள். அப்பொழுது பெருமா ளோர் கவாள மன்னத்தைக் கைக்கொண்டு, துகாராமரை நோக்கி இதை நீ கொள்ளக்கடவா யென்று வாயிற் போட்டு யோகலக்ஷண முனக்குக் கைகூடுமென்று சொன்னர். அவ்வேளையில் புஷ்பமாரி பொழியப்பட்டது. பெருமாள் கிருபையால் மகத்தான சுகத்தைத் துகாராம ரடைந்திருந்தார். கையலம்பிய பின்பு பெருமாள் துகாராமரைக் கண்டு சகலமும் பிரஹ்ம மயமாக எப்பவும் பிரகாசம் பொருந்தி யிருக்கிறது. பொன் பூஷண மானுப்போல ஜனங்க ளனைவரிலும் ஜனார்த்தனன் சைதன்னியமாகயிருப்பர். என்னைவிட ஜகத்து வேறே இல்லையென்னும் நியாயத்தால் நீ யிருந்து அனுபவ மாம்படி பார்க்கக் கடவை. இனி இம்மலைக்கு நீ வரவேண்டாம். உன் மனையா ளிவ்

விடம் வருவது தொந்தர வாகுமென்று சொல்லத் துகாராமர் பாண்டுரங்கர் சரணங்களைப் பிடித்துக்கொண்டு, ஸ்வாமி! அடியேன் மதிஹீனன், மூர்க்கன், துர்மார்க்கன், மந்தபுத்தி யுடையோன், பதிதபாவன னெனும் விருது என்விஷயத்தி லும்மால் பரிபாலிக்கப் பட்டது. தேவரீ ரென்னை இரக்ஷித்து கைக்கொண்டீ ரென்றார். பண்டரி நாதர் ஞானமுத்திரையினால் லக்ஷ்யத்தைக் காண்பித்தார். அப்பொழுது துகாராமர் வெளிநோக்க மில்லாமல் நின்றார். பகவ தனுபவத்தை யுடையவராய் விஸ்ராந்தி யடைந்து பின்பு தேகபாவனையை மெதுவாகக் கொண்டுப் பாண்டுரங்க மூர்த்தியை முன்னிற்கண்டு பக்தியுடன் நமஸ்கரித்து அவ்வேளையி லவர்மே லோர் கவிபாடினார். அதற்கு பெருமாள் அவரைநோக்கி உம்மிடம் நாமெப்பொழுது மிருப்போமென்று சொல்லி மறைந்தார். பின்பு தம்பதிக ளிருவரும் வீடுவந்து சேர்ந்தார்கள்.

## பிராம்மண ஸ்திரீ.

துகாராம் சாதுக்களுடைய சேவையில் தற்பரராய் ஹரிகீர்த்தனை செய்யும் பக்தர்களுட னிருந்துக்கொண்டு தாளம் போடுவதும் தீவட்டி பிடிப்பதும் கதை கேட்பவருடைய பாதரக்ஷைகளைக் காப்பாற்றுவதும் இன்னு மிதர ஜனங்களுக்கு உபகார மெப்பவும் செய்துக்கொண் டிருப்பர். எவ்வேளையிலு மெல்லாம் ஸ்ரீஹரி மயமென்று சுகமாகப் பார்த்துக்கொண் டிருப்பர். ஒரு தினத்தில் வீட்டிற்குள் மனையாள் ஸ்நானஞ் செய்யும் பொழுது அவளுக் கிருந்த ஒரே புடைவையை ஆலச் சுவரின்மேல் வைத்து நீராடிக்கொண் டிருந்தாள். துகாராமர் ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டு வெளியி லிருந்தார். அச்சமயத்தி லோர் ஏழைப்பிராம்மண ஸ்திரீ வந்து அவரை நோக்கி ஐயா! எனக்கு வார்த்திகம் வந்தது, வேறு வஸ்திர மெதுவுங் கிடையா தாதலா லோர் வஸ்திரத்தைக் கொடுக்கச் சொல்லிக் கேட்டாள். அதைச் செவியேற்றி, துகாராமர் அவளை நோக்கி ஆவுலியின் புடவையைக் கைக்கொள்ளென்று சமிக்ஞைக் காட்டினார். அந்த ஸ்திரீ புடைவையைக் கைக்கொண்டு ஆசீர்வதித்துச் சென்றாள். துகாராமரும் பாண்டுரங்கருடைய நாமத்தைச் சொல்லிக்கொண்டு அவ்விடத்தை விட்டு வேறிடஞ் சென்றனர். ஆவுலியானவள் நிதானமாக ஸ்நானம்பண்ணி ஆலச்சுவர்மேல்

வைத்த புடவையைக் காணுமல், யுக்தமொன்றும் தோன்றவில்லையே! தாஸிஸ்திரீ சாணத்திற்குச்சென்ருள். குழந்தைகள் விளையாட்டிற் கேகினர்கள். பிள்ளைக ளிருவரும் ஸ்நானஞ் செய்யும் பொருட்டு ஆற்றிற்குச் சென்றுர்கள். பர்த்தாவே புடவையை தானம் செய்ததுபோற் ரேணுது. பிராம்மண ஸ்திரீ தானங் கேட்க நான் கேட்டிருந்தேன். பர்த்தாவும் வஸ்திரத்தைக் கொடுத்து எவ்விடம் சென்ருரோ தெரியவில்லை. கரியமேனியருடைய திருநாமத்தைச் சொல்லிக்கொண் டிருந்ததைக் கேட்டேன். பைத்தியக்கார ரெவ்விடஞ் சென்றனரோ! புடவையை இழந்தேனே! பூர்வஜன்ம விரோதத்தா லவ ரெனக்குப் புருஷராகப் பிறந்தார். சர்வ காலமும் துக்கத்தையே கொடுத்தாரே! ஒரு வஸ்திரமே இருந்தது. அதுவும் போயிற்றே! நான் வெளியிற் புறப்பட நேர்மையில்லையே! என்று சொல்லிக்கொண்டிருக்க, சில தேகபந்துக் களவள் வீட்டிற்கு வந்து பந்துக்களுடைய விவாகத்திற்கு வருவாயோ வென்று கேட்டார்கள். ஆவுலி அம்மணத்துட னுள்ளிருந்து அதிக வெட்கத்தைக் கொண்டு ஐயோ! பந்துக்கள் வந்தனரே! உபாயமென்ன விருக்கிறது? ஏதுசெய்வேன்! எவ்விடம் போவேன்! ஒன்றுந் தோன்றவில்லையே! யென்று சொல்லுமளவில், ஆவுலி படு மவஸ்தையைக் கண்டு பெருமாள் தனது பீதாம்பரத்தை அவள்மேற் போற்றினர். இது ஹரியினுடைய காரியமென்றவளறிந்து எனது பர்த்தாவை பைத்தியக் காரராகக்கி பெருத்த இம்மகிமைகளைக் காண்பிக்கிருரென்றெண்ணி வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு வாசலில் வர பந்துக்க ளப்புடவையைப் பார்த்து ஆச்சரியப் பட்டுத் துகாராமர் எவ்விடத்திலிருந்து இவ்வஸ்திரத்தைக் கொண்டுவந்தாரோ? உலகி லெங்கு மகப்படாத வஸ்திர மிவளுக் கெப்படிவந்ததென்று பலவிதங்களாகப் பேசிக்கொண்டு, ஆவுலியைக் கண்டு பந்து விவாகத்திற்கு வருவையோ வென்ன, அவ ளிதைக் கேட்டு எனக்குத் தெரியாது, சமுசாரத்தைவிட்டு என் பர்த்தா, வைகுந்த நாதன்மேல் வாஞ்சைவைத்து, விதேகியாயிருக்கிருர். இந்த, துர்ப்பலமான சமுசாரத்தில் பந்துக்களுக்குக் காணிக்கை நானெவ்விட மிருந்துகொண்டு வருவேன். பெருத்த ஆசைகள் பந்து வர்க்கங்களுக் கிருப்பது பிரஸித்தந்தானே! அனுகூலமா யிருந்தால் பின்னர் வருகிறேனென்று சொல்லப் பந்

துக்கள் வெற்றிலைப் பாக்கை வைத்து விட்டுச் சென்றனர். அன்று பகல் முழுமையும் துகாராம ரரண்ணியத்திலே இருந்து இரவு காலத்தில் கோயிலுக்கு வந்து கிருஷ்ணகதை செய்ய, அச்சங் கதியை ஆவுலி கேட்டு பக்ஷணத்தை யனுப்பினள். பெருமாள் வஸ்திரங் கொடுத்தாரென்று சொல்லா திருந்தாள்.

ஸ்ரீஹரி சிந்தனை செய்துக் கொண்டிருந்து ஒருநாள் துகாராமர் பெருமானை உத்தேசித்து, ஸ்வாமீ! அடியேன் பாபராசிகளுடைய உருவமாவேன், சேவாஹீனன், ஓ பாண்டுரெங்கா! அபிமானத்தைக் கண்டனம் பண்ணவும், அடியேன் பொய் சேஷ்டைகளை பொருந்தச் செய்பவன், வேறுபோக்கில்லாத வென்னை கருணைப் பாரும், அதிகுரூரமான வகங்காரத்தை யொழித்து ஆத்மசாதனத்திலென்னை நிறுத்தக்கடவீரென்று பிரார்த்தித்து, ஆயாசமின்றி ஹரி கீர்த்தனைச் செய்தும், இரவில் நித்திரை செய்யாமல் புத்தகங்களைப் படித்தும், சகலேந்திரியங்களைத் தன்வசஞ் செய்துக் கொண்டும், கேட்கத்தகுந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டும், பார்க்கத்தகாததை பார்க்காமலுஞ் சாப்பிடத்தகாததைச் சாப்பிடாமலும், இதர ஜனங்களுக்கு இதத்தைச் செய்ய வபேக்ஷித்தும், இப்படி நியதத்துட னிருப்பார். ஜன்மாந்திரத்திலோர் புருஷன் பரோபகாரம் வெகுவாகச் செய்திருந்தானாகில் வியாதியின்றி யிருந்து விஷ்ணுபஜனைச் செய்து வருவன். இதை யறிந்துத் துகாராமர் பரோபகாரத்தை விசேஷமாகச் செய்யத் தொடங்கினர். அன்னியருடைய சுமையைத் தான் கூலிவாங்காமற் சுமந்து போவதும், மழையில் நனைந்தவர்களை வீட்டிற் கழைத்து வந்து உபசரிப்பதும், யாத்திரை செய்து வந்தவர்களுக்குக் கால்கள் வீங்கினால் கருணையுட னவர்களுக்குச் சிகிச்சை செய்வதும், எறும்பு புற்றுக்களிற் றுனிய நொய் போடுவதும், மிருகங்களி னுடம்பைத்தேட்டமாகத் தேய்ப்பதும், எவர் அழைத்தாலும் "ஹரீ" யென்று சொல்லிக்கொண்டு அவர்கள் சேவைகளில் நிரதராயிருந்தார்.

ஒருநாள் வர்த்தகர்கள் சந்தைக்கூட்டத்திற்குச் செல்ல, துகாராமரையுங் கூடவழைத்தார்கள். அவருமவர்கள் பின் செல்ல, வழியிலோர் கிழப்பிராம்மணஸ்திரீ வருத்தத்துடன் வழிநடந்து சென்றாள். துகாராமர் பரிதாபத்துடன் அவளிடஞ் சென்று ஆயீ! என் முதுகின்மீதேறி வரலாமென்ன அவளவரை நோக்கி அப்பா!

கிழத்தனத்தால் நடக்க சக்தியற்றவளாக விருக்கிறேன். ஒரு குடுவை எண்ணையைக் கொண்டு வந்து கொடுமென்ன, அப்படியே செய்வேனென்று குடுவையும் துட்டையுங் கைக்கொண்டு சந்தைக் கூட்டத்திற்குச் சென்று எண்ணெய் வாங்கிவந்து அந்தப் பிராம்மணக் கிழவியினிடம் சேர்த்தனர். அவளும் வெகு சந்தோஷத்துடன் வாங்கிக்கொண்டாள். சிலநாட் கழிந்தபின் அந்த பிராம்மண ஸ்திரீ இதர ஜனங்களைக்கண்டு துகாராமர் கொண்டுவந்த எண்ணெய் விருத்தி யடைந்திருக்கக் கண்டேன். எட்டு நாட்களுக்குச் சரியாகு மெண்ணெய் அனேகநாட்கள் வரைக்கும் அமைதியாயிற் றென்றாள். இதைக் கேட்டுப் பிரஜைக ளனேகர் துகாராமரிடஞ் சென்று எண்ணெய் எங்களுக்குங் கொண்டு வந்து கொடுமென்று பாத்திரங்களைக் கொடுக்க அவரும் நல்லதென்று அவைகளைக் கைக்கொண்டு இதர வர்த்தகர்களுடன் சென்று அவர்களுக் கனேக விதங்களிற் சகாயமாக விருந்து எண்ணெய் விற்குமிடஞ் சென்று பாத்திரங்களையும் ஊரார் கொடுத்தப் பணத்தையு மவ்வர்த்தகனுக்குக் கொடுத்து உனக்கிஷ்டமானபடி தைலத்தை அந்தந்த பாத்திரங்களி னிறைத்து வையென்றார். இதற்குள் கூடவந்த வர்த்தகர்கள் கூப்பிட, துகாராம ரவ்விடம்போய் அவர்களுடைய வேலைகளைச் செய்துக் கொண்டிருக்க இரவாயிற்று. பரோபகாரத்தைச் செய்துக் கொண்டு பாண்டுரங்கா! ஹரி! யென்று வாயினாற் சொல்லிக்கொண்டு ஆசையற்று நல்லவரென் றெல்லோராலும் புகழப்பட்டு அவ்விர வவ்விடமே கழித்தார். அருணோதய மாம்பொழுது வர்த்தகர்கள் போகும் சமயத்தி லவர்களுக்கு சரக்கு மூட்டைகளை கட்டிக் கொடுத்து எண்ணெய் வர்த்தகனிடஞ் சென்று பாத்திரங்களிலெண்ணெயை நிறைத்துக்கொண்டு அவையனைத்தையுங் கைக்கொண்டு பெரிய பளுவுடன் வீட்டை நோக்கிச் சென்றார். யாரார் கொடுத்த பணத்திற் கெவ்வளவு எண்ணெய்ச் சேரவேண்டுமோ அவ்வவ்வளவே பாத்திரங்களில் ஈஸ்வர மாயையால் சரியாயிருந்தது. அனேக ஜனங்க ளெண்ணெய்ப் பாத்திரங்களை அவரிடங் கொடுத்திருந்தபடியால் அவர்க ளனைவரு மெண்ணெயைக் கைக்கொள்ள துகாராமர் வீட்டிற்கு வந்தார்கள். துகாராமர் மனையாள் வீட்டிற்கு வந்த பிரஜைகளைப் பார்த்து எனது பர்த்தா பைத்தியக்காரர், ஓர் எருது சுமையை சுமந்து வந்தார், அந்த

பனுவால் வழியி லவ ரிறந்தாராயி னவரை நீங்கள் பார்ப்பீர் களோ! இப்படி செய்வது உங்களுக்கு நியாயமா? இவ்விதமாகக் கூலியின்றி உங்களுடைய வேலைகளை என் பர்த்தா செய்தால் உங்களுக்குக் கனிகரமில்லையோ! என்று அவர்களைக் கேட்க விவேக சீலனாகிய ஒருவன் சொல்லுவான், பக்தியுடன் கூடின பரோபகார மெங்க ளனைவருக்கும் நேர்ந்தது. அவர் கொண்டுவரு மெண் ணெய்க்கு விருத்தியுண்டாயிருக்கிறதென் றறிந்து இது ஆச்சரிய கரமென்று குடுவைகளைக் கொடுத்தோம். எங்கள்மேல் நிமித்தம் வைப்பது தகுதியல்லவென்ன, ஆவுலி சும்மாவிருந்து வீட்டிற்குச் சென்றாள்.

ஒருநாள் துகாராமருடைய வீட்டில் பெரியோர் திதி நேர்ந் தது. பாரியாள் புருஷனைப் பார்த்து சொல்லுவாள், இன்றைய தின முமது தகப்பனார் திவசமா யிருக்கிறது, வீட்டில் பதார்த்த மொன்றுமில்லை, எவ்விடமாவது தானியத்தைச் சம்பாதித்துக் கொண்டுவரச்சொன்னாள். இதைக்கேட்டுத் துகாராமர் காட்டிற் குச் சென்று கீரையைக் கொண்டுவருகிறேன், நீ பிதுரு தேவ தைகளுக்குச் சிரார்த்தத்தைக் கொடுக்கலாமென்று சொல்லி கிருஷ்ணா, ராமா, கோவிந்தா வென்று சொல்லிக்கொண்டு, ஆனந் தத்துடன் கிராமத்திற்கு வெளியாகச் சென்றார். கோதுமைப் பயி ரைச் சில ரவ்விட மறுத்துக்கொண்டிருக்க, அங்கிருந்த கூலியாட் கள் துகாராமரைக் கண்டு சிரித்து நீரும் வந்து பயிரை அறுக்க லாமே யென்றார்கள். அதைக்கேட்டு நல்லதென்று துகாராமர் ஹரீ! விட்டலா! ஹரீ! விட்டலா! வென்று வாயாற் சொல்லி மனதில் ஹரிரூபத்தை நினைத்து ஆவுலி சொன்ன சங்கதியை மறந்து அறுக்கத் தொடங்கி கூலிமனிதர் அறுப்புக் கதிகமாக அறுத்தார். ஆவுலி தன் வீட்டி லிதர ஜனங்களைப் பார்த்து, என் பர்த்தா திருடராகி காட்டிற்குச் சென்றார். அன்னவஸ்திரங்களை யெனக்குக் கொடுக்கிறதில்லை, அன்னியருக்கு வேலைசெய்வதி லதிக விருப்பமுடையராக விருக்கிறார், என்னிட மவருக்கு ருணானுபந்த மில்லைபோல் காண்கிறது. இன்றையதினம் பெரியோருடைய திவசமாயிற்று. ஏழையான நானென்ன செய்யப்போகிறே னென்று விசனமுற்றிருந்தாள். அவ்வேளையிற் பண்டரிநாதர் சாமக் கிரிகை மூட்டையைத் தலைமே லிட்டுக்கொண்டு துகாராமர்போல

வந்து வீட்டிலிறக்கி ஆவுலியைப் பார்த்து சமையல் சீக்கிரத்திற் செய்யச்சொல்லிப் பாத்திரங்களை யிதர ஜனங்களிடத்தி லிருந்து கொண்டுவந்து ஆவுலியிடங் கொடுத்தார். அவள் மூட்டைகளை யவிழ்த்துப் பார்க்குமளவில் பதார்த்தங்க ளனைத்தும் பூர்த்தியாக விருக்கக்கண்டு சமையற்செய்ய வாரம்பித்தாள். பெருமாள், துகாராமர் வேஷத்துடன், பந்துக்களுடைய வீடுக ளனைத்திற்குஞ் சென்று, இன்று என் தகப்பன் திவசமாதலால் சாப்பாட்டிற்கு வர வேண்டுமென் றழைக்க, அவர்கள் பைத்தியக்காரனுக்கு தெளிவு உண்டாயிற்று, இது உண்மையோ அல்லவோ பார்ப்போமென்றிருந்தார்கள். வீட்டிற் சமையல் பூர்த்தியானவுடன் பெருமாள் வெய்யலில் வீடு வீடாகத் திரிந்து பந்துக்களைத் திரும்பி அழைத்தார். அவர்க ளனைவரும் ஸ்நானஞ் செய்து வந்தவுடன் அவர்களுக்கு மரியாதைகளைச் செய்து, தீனபந்துவான பரமாத்மா அனன்னிய பக்தருடைய கருமங்களை அன்புடன் தானே பூர்த்திசெய்து, பந்துக்களை யெல்லாம் பக்ஷணைக்கு எழுப்பி, பதார்த்தங்க ளெல்லாந் தானே வட்டித்து மதுர வசனங்களைச் சொன்னார். போஜனம் மதுரமா யிருந்தது. பந்துக்களும் சௌக்கியமாக பக்ஷித்தார்கள். பின்பு அவர்களுக்குத் தாம்பூலங்களைக் கொடுத்து மன்னிக்க, அவர்கள் ஆவுலியைக்கண்டு உன் புருஷ னிதுமுதல் விவேக சீலனாகி சமுசாரத்தைச் செய்து வருவாரென்று விளம்ப, அவ ளவர்களை நோக்கி நம்பிக்கை யில்லையென்று சொன்னாள். அவர்க ளனைவரும் சந்தோஷத்துடன் தங்கள் தங்கள் வீடுகளுக்குச் சென்றார்கள். பெருமாள், அன்னத்திற்கு வந்த ஏழைகளுக் கன்னமளித்து ஆவுலி பக்ஷித்தபின்பு கொஞ்ச மன்னம் மீதியாயிருக்க, அதனை இலைகளில் வைத்து பாத்திரங்க ளனைத்தையுந் துலக்கிக் கழுவி உடையவர்களிட மவைகளைச் சேர்த்து வேலையெல்லாம் சரிப்படுத்தி மறைந்தனர்.

வயலிற் றுகாராமர் அறுப்பறுத்ததற்குக் கூலியாக குடியானவன் சில கதிர்களைக் கொடுத்தான். அவைதனை அவர் தலைமேல் வைத்துக்கொண்டு வீட்டிற்கு வருகிற வழியில் தேனீக்க ளவர் தேகத்தைச் சூழ்ந்து கடிக்கத் தொடங்க, அவைகளை பறக்கடிக்காமல் பிதுருதேவர்க ளிந்த ரூபத்துடன் வந்தார்களென்றும், இச் சரீரம் பரோபகாரத்திற் கிருப்பதாகி பிரம்மார்ப்பண மாகுமென்

றும் எண்ணியிருக்க, பெருமாள் குப்த ரூபராகி ஈக்களையெல்லாம் ஓட்டினர். அதனுற் சரீர சுகத்தை யுடையராகி வீட்டிற்கு வந்து மனையாளைக்கண்டு இன்றைக்கு கோதுமை தானியங் கிடைத்தது. அதனைப் பாகஞ் செய்து பிதுருக்களுக் கர்ப்பணை செய்யென்றார். இதை ஆவுலி கேட்டு நீர் பைத்யெக்காரர்போல் காண்கின்றீர். இதுவரைக்குமே பிதுரு கருமத்தைச் செய்து பந்துக்களுக்குப் போஜனமு நடத்தினீரே என்று நடந்த சங்கதி யனைத்துஞ் சொல்ல, அதனைத் துகாராமர் கேட்டுக் கஷ்டமடைந்து, ஹரி! ஹரி! யென்று ஆவலுடன் கூப்பிட்டு விட்டல மூர்த்தி வாராராயின் நான் பக்ஷணையை விரும்பே னென்று ஹரிநாராயணு! அச்சுத கிருஷ்ணு! மாதவ முகுந்தா! புருஷோத்தமா! புண்டரீக வரதா! என்று பூரண பிரேமையுடன் கத்கத கண்டராகிக் கூப்பிட, பெருமாள் பக்த பராதீனராதலால் பிரசன்னமாகவே துகாராமர் பிரீதியுட னவர் பாதங்களுக்கு நமஸ்கரித்தார். அவ்வேளையி லாவுலி பக்ஷணை செய்யும் பொருட்டு இலைகளைப் போட்டுப் பிரசாதத்தை வட்டித்தாள். பெருமாளும் பக்தரும் பக்ஷணை செய்து கைக ளலம்பினர்கள். உபசாரங்களால் பெருமாள் பரிதிருப்தரா யிருந்ததை ஆவுலி கண்டு ஆச்சரியப்பட் டிருந்தாள். துகாராமர் பாண்டுரங்கருடைய கருணையைக் கண்டு வெகுவாகப் பிரார்த்தனைச் செய்ய பெருமாளும் பிரேமையைக் காண்பித்து மறைந்தனர்.

### மம்பாஜி பண்டிதன்.

துகாராமர் பரோபகார விஷயத்திற் றனது சக்தியைப் பிரபலமாக விரயப்படுத்தினர். பிரதி யுச்சவத்திற்கும் பண்டரிபுரத்திற்குப் போவார். இதுவே அவருக்கு காயிகமான தவமாயிற்று, ஹரிநாமத்தை யிடைவிடாம லுச்சரித்துக்கொண்டிருத்தலே வாசிக தவமாயிற்று, ஹரி யுருவத்தை இருதயத்தி லிருத்திக்கொண் டிருத்தலே மானசிக தவமாயிற்று. இத்தவங்களுக்குப் பெருமா ளுகந்து கவித்வப் பிரக்ஞையும் புத்திபலமுங் கொடுத்தார். ஒருக்கால் துகாராம் கினவில் பெருமாள் வந்து, நாமதேவர் சதகோடி கிரந்தஞ் செய்ய வாரம்பித்து அதுசமாப்தி யாகுமுன்பே ஸர்வேஸ்வரனுடைய பதத்திற்குச் சென்றார், நமக்காக அந்தக் கிரந்தத்தை நீ பூர்த்தி செய்யக்கடவாய், ஐந்துகோடி ஐம்பத்தொரு லக்ஷஞ் சுலோகங்களை நீ செய்வையாயின் அந்தக் கிரந்தம் சமாப்தியா

கும், வரகவித்வத்தை நீ யிப்பொழுது உலகத்தா ரீடேறும்பொ ருட்டு சொல்லக் கடவாயென்று சொல்லி மறைந்தார். துகாரா மிந்த சொப்பனத்திற்குச் சந்தோஷித்திருக்குமளவில், நாக்கில் சரஸ்வதி நிற்கவே செம்மையா யெழுத தெரியாதிருந்தாலும், லீலையாக கையி லெழுத்தாணியைக் கொண்டு கிரந்தங்களை யெழுதத் தொடங்கினர். ஹரிவிஜய மெனுங் கிரந்தத்தை கவித்வ ரூபமாகச் செய்யப் பிரஜைகள் பார்த்து ஆச்சரியப் பட்டார்கள். ஹரி கீர்த்தனையை யனுதினமுஞ் செய்துக்கொண்டிருக்க அதின் மாதுரியத்தைக்கண்டு அனேகர் கேட்க வருவார்கள்.

சிஞ்சவடி யெனுங் கிராமத்தில் மம்பாஜியெனும் பிராம்மண சிரேஷ்ட னிருந்தான். அவனவ் வூரைவிட்டு தேஹு கிராமத்தில் வந்து குடியிருக்கச் சில சிஷர்க ளவனுடைய யோகக்ஷேமங்களை நடப்பித்து வந்தார்கள். துகாராம ரவ்வூரில் விசேஷ கீர்த்தியை யடைந்திருப்பதைப் பார்த்துப் பொறாமையால் துகாராமர் சூத்திர ரென்றும் சாஸ்த்திரார்த்தங்களை யறியாதவரென்றும் வாசிப்புடைய நானிருக்க வென்னை விசாரிக்காம லவரிடம் ஜனங்கள் போகிறார்க ளென்றும் சொல்லிக்கொண்டு துவேஷத்தை யதிகமாகவைத்து சமயம்பார்த்து அவருக் கவமானஞ் செய்ய வேண்டுமென்று மனதி லெண்ணிக்கொண்டு வெளிக்கு மாத்திரம் விரோத மில்லாததுபோற் றோன்றி துகாராமர் சொல்லுங்கதையைக்கேட்க வருவான். துகாராமர் சத்துருக்களையும் மித்துருக்களையும் சமமாகப் பார்த்துவருவர். ஒருநாள் துகாராமருடைய பசு, மேய்ச்சலுக்குப் போகும்சமயத்தில், வழிதப்பி மம்பாஜிதோட்டத்திற் சென்று செடிகளை மேயப்புக, நிந்திதமான வனேக வாக்கியங்களை அவன் துகாராமரைச் சுட்டிச்சொன்னான். சில நாட்கழிய ஏகாதசி தினத்தில் பகவத்கதையை கேட்க வனேகர் ஆலயத்திற்கு வந்தார்கள். அதனை வலம்வரும்வழியில் வேலம் முட்கள் மம்பாஜியால் நடப்பட்டிருந்தன. துகாராம ரவ்விடஞ் சென்று முட்களைப் பார்த்து அவைகளை யெடுத்துவிட்டு பிரஜைகளுக் கனுகூலப்படுத்தினர். அதைக்கண்டு மம்பாஜி வேலம் முள் மிலாறைக் கைக்கொண்டு துகாராமர் முதுகின்மேல் வெகுவாக அடித்து அதனாற் கையலண்டு வீட்டிற்குச் சென்றான். துகாராம ரொன்றுஞ் சொல்லாமல் விட்டலமூர்த்தி சந்நிதிக்கு

வந்து ஸ்வாமீ! தேவரீ ரென்றால் நற்காரியங்களைச் செய்வித்தீர். துஷ்டர்களுடைய சகவாச மெனக்கில்லாமற் செய்யக் கடவீரெ ன்று பிரார்த்தித்தார். தேகத்தில் முட்கள் தைக்கப்பட்டு அவ் வவ்விடங்களி லிரத்தங் கட்டியிருப்பதை ஜனங்கள் கண்டு வெகு விசனமடைந்திருந்தார்கள். அவ்வேளையில் ஆவுலி வந்து பார்த்து யாரோ விப்படி யடித்தார்களே யென்று விசனத்துடன் முட்களை பிடுங்கினாள். பெருமாள் கிருபையுமுண்டாகவே ஆரோக்கியத் துடன் ஹரிகதைச் சொல்ல வாரம்பித்து, விட்டலநாமத்தை முன்பு சொல்லிச் சபையாரை நோக்குமளவில் மம்பாஜி கதைக்கு வர வில்லை. ஓர்மனிதனைவிட்டு கூப்பிட்டழைக்க அவன் உடம்பு செவ்வை யில்லை யென்று சொல்லி யனுப்பினான். துகாராமரே அவனிடம் சென்று நமஸ்கரித்து அவனுடைய உடம்பைத் தானே நோவு போகப் பிடித்து, அடியேனுடைய பசு உமது தோட்டத் தில் நஷ்டத்தை யுண்டாக்கினது, அபசாரமென்றால் நேர்ந்தது, தேவரீர் க்ஷமிக்கக்கடவீர், ஆயாச மின்றிக் கதைக்கு வரும்படி யழைத்தார். இவ்வுபசாரத்தைக்கண்டு மம்பாஜி வெட்கமுற்றுக் கதைக்கு வந்து ஓரிட முட்கார்ந்து விசனத்துட னிருந்தான். பின் பு துகாராமர் கதைசொல்ல வாரம்பித்து அச்சுதா! அனந்தா! ஆனந்தகந்தா! ஆதிபுருஷா! கோவிந்தா! முகுந்தா! கருமங்களை நிர்மூலமாக நீர் செய்யக்கடவீர். கர்மகதியால் காலச் சக்கரத்திற் பிரமிக்கப்பட்டு கஷ்டப்படுகிறேன். வாசுதேவா! ஹரி! யென்று ஹரிகுணானுவாதத்தைச் செய்ய கதாமதுர மதிகமாக விருந்தது. ஆவுலி தன் வீட்டில் நித்திரையி லிருந்தாள். அவ்வேளை யிரண்டு திருடர்கள் துகாராமருடைய பசுக்களைத் திருடிக்கொண்டு போ னார்கள். அவைகளின் கன்றுகள் கூச்சலிட வாரம்பித்தன. பெரு மா ளிதைக்கண்டு ஓர் விகார புருஷ வேஷத்தைத் தரித்து ஓர் உலக்கையை கையிலேந்தி அவர்கள் பின்தொடர, பயத்தினா லத் திருடர்கள் வேறோர் வழியா லோட வாரம்பிக்க, அவர்கள் எவ்வெ வ்விடங்களிற் றிரிந்தாலும் பின்புறத்தில் விடாமலே யிருக்கக்கண்டு கலக்கமுற்றவர்களாய் பிரமராக்ஷசனோ! காலபுருஷனோ! என்று தம்முள் நினைத்து, துகாராமர் பாண்டுரங்கருடைய பக்தரா யிருப் பதால் அவர் பசுக்களைத் திருடுவது உசிதமல்லவென்று கருதி துகாராமர் வீட்டிற்கே அவைகளைக் கொண்டுவந்து கட்டிவிட்டு

வெளியிற் செல்ல அந்த பயங்கர வுருவங் கூடவேயிருந்தது. ஊர் முழுக்கச் சுற்றியு மவ்வுருவம் போகவில்லை. இதனால் விசனமுற்று ஹரி கீர்த்தனை செய்யுமிடஞ் சென்று துகாராமரைக் கண்டு ஐயா! உமது பசுக்களைத் திருடிக்கொண்டு போனேம், ஓர் விகார புருஷன் கூடத்தொடர்ந்து பசுக்களை விடுவித்து உமதுவீட்டிலெப் போதும்போ லிருக்கச்செய்தான். நாங்களுமது வீட்டிற்கு வெளி வந் தெங்குபோயினு மந்த பயங்கரமனித னெங்களை விடாமலிருக்கிறான். எங்களுக் கோர்வழி காட்டுமென்று பிரார்த்தித்தார்கள். துகாராம ரிதைக்கேட்டுப் பெருமாளைத் தியானிக்க பாண்டுரங்கர் வெளியிற் றிரிகிறாரென் றறிந்து ஹரி! கோவிந்தா! ஏகாதசி ஜாகரணத்தில் நாங்களிருக்க, நீர் ஆரண்ணியங்களில் அங்கு மிங்குமேன் சஞ்சரிக்கின்றீர். பசுக்களைக் காப்பாற்றுவது பூர்வத்திலிருந் துமக்குப் பெருத்த வேலையா யிருக்கிறது, உம்மை நாங்கள் இவ்விடத்தில் வர்ணித்துக்கொண்டிருக்க, நீர் விகார ரூபத்தை வகித்து திருடர்களுக்குத் தோன்றி நின்றீர். இது சோத்தியமாக விருக்கிறது, இனி யிவ்விடம் வாரும், வேடிக்கையுடன் திருடரைத் துரத்திக்கொண்டு அவர்கள் பின் திரிந்தீர். நீ ரிவ்விட மில்லாமையால் கீர்த்தனையின் மாதுரியம் நின்றுவிட்டது. ஓ தேவ தேவரே! ஸ்ரீஹரி! வாருமென்று கூப்பிடப் பெருமாள் பின் பக்கத்திலிருந்து வந்தார். துகாராம ரந்த திருடரைப் பார்த்து நீங்களென் பசுக்களை யோட்டிக்கொண்டு போகலா மென்ன எங்களுக்குப் பசுக்கள் வேண்டாமென்று திருட ரோடிப்போனார்கள். விகார ரூபமும் மறைந்தது. இம்மகிமைகளை அங்கிருக்கு மவர்கள் கண்டு "ஹரி விட்டல" என்ற ஓசை யபாரமாகச் செய்தார்கள். மம்பாஜி யிதைக்கண்டு அனுதாபத்துடன் மகிமை மேன்மை பெற்றதென்று துவேஷ புத்தியை தொடராம லிருந்தான். அபக்தர்க ளிருக்கிறபடியால் பக்தர்களுடைய மகிமை பிரசித்திக்கு வருகின்றது. துகாராம ருதய காலத்தில் பெருமாளுக்கு ஆரதியைக் கொடுத்து நமஸ்கரித்தார். உதயமானவுட னிந்திராயணி நதியிற் ஸ்நானஞ்செய்து பெருமாள் சன்னிதிக்கு வந்து பூஜைகளைச் செய்தார்.

ஆவுலி திருடருடைய சங்கதியைக் கேட்டு சந்தோஷத்துடன் துகாராமருக் கன்னமும் பாலும் கொடுத்தாள். அவர் பாலைக்

கொண்டுபோய் பாண்டுரங்கருக்குக் கொடுத்தார். இந்தப் பிரகாரமே தினந்தோறும் பாலைப் பாண்டுரங்கருக் கற்பித்து வருவார். சிலநா ளிப்படி நடக்க ஆவுலி பாண்டுரங்கர் பாஷாண (கல்) மூர்த்தியாயிற்றே! பாலையருந்த மனிதனல்லவே! என்று பல கா லெண்ணியிருந்து ஒருநாள் தன் குமாரத்தியை நோக்கி விக்கிரக மெப்படி சாப்பிடு மென்றாள். அவ ளதற்கு பாண்டுரங்க மூர்த்தி பாலருந்துகிறா ரென்றாள். இதைக்கேட் டாச்சரிய முற்று தான் பார்க்கவேண்டு மென்று ஒருநாள் ஆவுலி துகாராமரைக் கண்டு தானே பெருமாளுக்குப் பாலைக் கொடுப்பே னென்றாள். அவ ரதற் காமோதிக்க, கொதித்துக் கொண்டிருக்கும் பாலைப் பாத்திரத்திற்கொண்டு பெருமாள் சமீபத்திற்குச் சென்று அதனை அவர் உதடில் வைக்க அவர் அதனை யருந்தினர். உஷ்ணம் உறைத்தபடியால் விக்கிரகமசைவுற்றது. ஆவுலி யிதைக் கண்டு கறுத்த கல்லுக்கு ஜீவத்வ மிருக்கிறதென்றும் துகாராமர் நித்தியம் பால் கொடுத்து வருவது நிஜமென் றறிந்து வீட்டிற்கு வந்தாள். பெருமாள் துகாராமர் தியானத்திற் சென்று கொதிக்கும் பாலை ஆவுலி தனக்குக் கொடுத்தா ளென்று சொல்ல, அவர் தன் மனைவியைக் கண்டு பால் சுட சுட வேன் பாண்டுரங்கருக்குக் கொடுத்தா யென்று கேட்க, அவள் சொல்லுவாள், பெருமாள் கோகுலத்தில் தாவாக்கினியை விழுங்கினவ ரென்பது நீரும் கேட்கவில்லையோ? இப்பொழுது நான் கொடுத்த பாலினால் வாயிற் கொப்பளங்க ளுண்டாயிற்றோ வென்ன, துகாராமர் ஹரி சன்னிதிக்குச் சென்று பார்க்குமளவில் உதடுகளிற் கொப்பளங்க ளுண்டாயிருக்கக் கண்டு கண்களிற் ஜலம் பெருக, பெருமாளை வெகுவாகப் பிரார்த்தித்தார். கொப்பளங்க ளப்பொழுது போயின. பக்தர்களுடைய பிரபாவம் வெளியாம் பொருட்டு பிரஜைகளுக்கு சாக்ஷியாக உதடு தடிப்பாக விப்பொழுதும் பிரஸித்தமாக விக்கிரகத்திற்கு காணப்படுகின்றது.

ஒருநாள் துகாராமர் வெற்றிலை தோட்டத்திற்குச் செல்ல, அவ்விட மனேக வண்டுக ளிவர் சரீரத்தை மொய்த்துக் கொண்டு கடிக்கத் தொடங்கின. அப்பொழு தவர் இந்தத் தேகம் பரோபகாரமென்று அவைகளை யடிக்காமல், விரோதமேன் பாராட்ட வேண்டு மென்று சும்மாவிருக்க அவை கொடுக்குகளால் கொட்டி

தொந்தரை செய்தன. பெருமாள் ஓர் வழிநடப்பவர் போல ரூபத்தைக் கொண்டு ஈச்சஞ்செடி மிலாறைக் கைக்கொண்டு அவ்வண்டுகளைப் பறக்கடித்து பெற்ற தாயைப்போல காப்பாற்றினர்.

மஹா தேவனென்றும் விடோபாவென்றும் இரண்டுபிள்ளைகள் துகாராமருக் கிருந்தார்கள். முதற்பிள்ளை வியாதிகளால் விசேஷமாகத் தொந்தரை யடைந்திருந்தான். அவிழ்தங்களை ஆவுலி அப்போதைக் கப்போ கொடுத்துக் கொண்டுவந்தும் வியாதி தீராமல் விருத்தி யடைந்தே வந்தது. குலதேவதையான கண்டோபாவுக்கு முடிப்பெடுத்துக் கட்டி அவனுடைய விபூதியைக் கொண்டுவந்து அடிக்கடி பிள்ளைக் கிடுவாள். பூதங்களின் தொந்தரவென்று இதர பிரஜைகள் சொல்ல, அவைகளுக்கும் பூஜைகளை வெகுவாகச் செய்தாள். அந்த வியாதி எதினாலும் போகாமல் பிரதிபந்தமாகவே விருந்தது. துகாராமர் உதாசவிருத்தியை வகித்து ஏகாந்தத்தில் ஸ்ரீஹரி பஜனையில் நிரதராயிருந்தா ரதலால், அக்கம்பக்க மிருக்கு மவர்கள் துகாராமருடைய வீட்டிற்குச் சென்று பிள்ளையைப் பார்த்து இனி ஔஷதங்கள் பயன் படா. கைகளும் கால்களும் சுப்பல்களைப் போலாயின. வீணில் மருந்துகளை இனிச் செலவிடுவதிற் பிரயோஜன மில்லை. உனது பர்த்தா பாண்டுரங்கரை எப்பவும் பஜித்துக்கொண்டிருப்பதால் உனக்குச் சமுசாரத்தில் ஆபத்துக ளதிகமாக வருகின்றன. ஹரி சரணங்களைப் பிடித்தது முதல் அஷ்ட கஷ்டங்க ளனுபவிக்க லாயின. முதல் பாரியாளும் பிள்ளையு மந்த ஹேதுவினாலே இறந்தார்களென்று பலவாறுகச் சொல்ல, ஆவுலி இதைக் கேட்டு தன் பர்த்தாவின்மேலதிக கோபங்கொண்டாள். தெய்வத் துரோகம் முன்பே இருந்தது, இந்த வாக்கியங்களைக் கேட்கவே அது ஸ்திரமாய் விட்டது. உடனே பற்களைக் கடித்து நன்று சொன்னீர்களென்று அவர்களைச் சிலாகித்து, நானென்செய்வேன்! இப்படிச் சம்பவித்ததே! பிள்ளைச் சாக சித்தமா யிருக்கிறனே! இதற்குக்காரணம் பாண்டுரங்கரே யாதலால் இப் பிள்ளையைக் கொண்டுபோய் அவராலயத்தில் வைத்து விடுகிறேன். அவ்விட மிப்பிள்ளை இறந்தால் ஹத்தி பாண்டுரங்கரைச் சேருமென்று தீர்மானித்து அப் பிள்ளையை கையிலெடுத்துக் கொண்டு ஒரு செருப்பையும் பிடித்து கரியவரை யடிப்பேனென்று சீற்றத்துடன் போக, பெருமாள் ருக்மணி பிரா

ட்டியை நோக்கி, ஆவுலி அடிப்பாளாகி லபகீர்த்தி யுண்டாகும் இதற்கென்ன செய்யலாமென்ன, ருக்மணி பிராட்டி பெருமாளை நோக்கி, ஸ்வாமி! தேவரீர் சிருட்டி திதி சம்மாரங்க ளென்னும் முத்தொழில்களைச் செய்பவர். பக்தியுடைய வவள் மேல் கடாக்ஷத்தைச் செலுத்துவீரென்று சொல்லிக்கொண்டிருக்க, ஆவுலி ஸன்னிதிக்கு வருங் காலோசையைக் கேட்ட மாத்திரத்தில் ருக்மணிபிராட்டி அவளைத் திக்கரித்து, என்னடி! உலகில் வேறோராலய முனக்கில்லையோ? சிறியவனுடைய வியாதி செம்மையாய்விடும். வீட்டிற்குப்போ வென்ன, உடனே பிள்ளை மூத்திரத்தை விட்டான். சன்னிதியை விட்டு வெளியி லவள் வரவே சாதமளிக்கும்படி பிள்ளை கேட்க உடனே தாயார் வீட்டிற்குக் கொண்டுவந்து அவனுக்கிஷ்டமான போஜனத்தை யளித்தாள். பெருமாளுடைய கிருபை யுண்டாகவே தேகத்திலிருந்த குடிலங்க ளனைத்தும் போயின, சரீரம் சௌக்கியமாயிற்று.

துகாராமருக்கு கங்காதர னென்றும் சந்தாஜி யென்று மிரண்டு சிஷர்களிருந்தார்கள், துகாராமர் சொல்லும் கவிதைகளனைத்தையுங் கங்காதர னெழுதுவான். கீர்த்தனை செய்யும் பொழுது இவர்களிருவரும் தாளம் போடுவார்கள். ஹரி குணானுவாத மதிக மதுரமாகி சிறப்புற்றிருக்கும். ஒரு நாள் துகாராமர் கீர்த்தனை செய்யும்பொழுது அச்சுதா! கிருஷ்ணா! ஹரி! கோவிந்தா! வென்று ஆடவும் பாடவுமாக விருந்து ஸ்ரீஹரியை உத்தேசித்து ஸ்வாமி! அடியேனை யங்கீகரிக்கக்கடவீர். அனாத பந்துவென்னு முமது நாமத்தை அடியேன் விஷயத்திற் பலிதமாக்கி என்னை புனிதனாகச் செய்யவும். ஓ பாண்டுரங்கா! ஓ புராணபுருஷா! என்றிப்படிப் பலமுறை பிரேமையுடன் பாடுமளவில் தன்னை மறந்துவிட்டார். பகவானும் தனது தேவலக்ஷணத்தைப் பாராதிருந்தார். துகாராமர் சமரசத்தில் நிற்க, ஸ்ரீஹரி தனது சங்கற்பத்தால் அவரது பரிசுத்த மனதின் வெளி நோக்க முண்டாக்கினார். அப்பொழுது துகாராமர் பண்டரீபதியை வெகுவாக தோத்திரஞ் செய்தார். அத்வைத சாஸ்திரத்தி லவருக் கமைதி யுண்டாகவில்லை. தான் ஆத்மானுபவத்திலிருந்து ஸ்ரீஹரி திவ்யமங்கள விக்கிரக நோக்கமே தனக்கு சௌக்கிய மென் றிருப்பார். ஆசாரியராக ஒருவரைச் சிந்திக்காமல் ஹரியையே சிந்தித் திருப்பார். மாசி

மாசம் சுத்த தசமிதிதி குருவாரத்தில் பெருமாள் பிராம்மண ரூபத்துடன் சொப்பனத்தில் வந்தார்; அப்பொழுது துகாராமரும் (சொப்பனத்தில்) ஸ்நானஞ் செய்து துளசியைக் கொண்டுவரும் தருணத்தில் அந்த பிராம்மண ரெதிரே வர, துளசி பத்திரத்தை அவருக்குக் கொடுத்துத் தெண்டனிட்டார். பிராம்மணர் தன் கரத்தை அவர் தலைமேல்வைத்து இராமா கிருஷ்ணவெனும் மந்திரத்தைச் சொல்லி குருபரம்பரையையும் வெளியிட்டு இராகவ சைதன்னிய ரென்றும் கேசவ சைதன்னிய ரென்றும் பாபாஜி தானென்றும் உபாசனையைச் செய்யவேண்டு மென்றும் சொல்ல, துகாராமர் கேட்டுச் சந்தோஷித்து வீட்டிற்கு வரச்சொல்ல, அந்தப் பிராம்மணர் காற்சேர் நெய் வேண்டுமென்ன, துகாரா மப்படியே கொடுக்கிறே னென்று அவரை வீட்டிற் கழைத்துவந்து மனையாளை நோக்கி அமுதுபடி பருப்பு முதலானவைகளைக் கொடுக்கச் சொன்னர். ஆவுலி யிதைக்கேட்டு கோபங் கொண்டு சொல்லாத வார்த்தைகளைச் சொல்லலுற்றுள். இதைப் பிராம்மணர் கண்டு அவ்விடம் விட்டு போய்விட்டார். இதற்குள் துகாராமர் விழித்துக் கொண்டு ஸ்ரீ குருநாதர் தருணோபாயத்தைத் தானே சிந்தித்துச் செய்தார். வீட்டாள் கலகஞ் செய்ததால் வீட்டைவிட்டு போனு ரென்றெண்ணி யிருந்தார். துகாராம ராசாரியரைக் கண்ட மார்க்கமிதுவாகும். இவ்வுலகி லவருடைய சிஷருக்கும், சொப்பனத்திற் றுனுபதேசித் தருளுகிருர்.

## ஆவுலி.

ஒருகாலத்திற் றுகாராமர் தனது மனையாளுடைய போரைச் சகிக்க மாட்டாமல் ஒருவராக வனத்திற்சென்று தனக்குள் சொல்லுவார். மனையாள் சொப்பனத்தி லாகிலும் ஹிதவார்த்தையைச் சொல்லாள். திட்டுவதும் சண்டை செய்வதுமே தினமு மவட்கு நியம மாயிற்று. தீராத தொந்தரை யிதுவென்றெண்ணி ஸ்ரீஹரியைப் பூஜித்துக்கொண் டிருப்பர். இரவுகால மானவுடன் ஆலயத்திற்குப் போய் பாண்டுரங்கருக்குப் பூஜை செய்து, ஹரி விட்டலா! வென்று ஸ்மரணை செய்துக்கொண் டிருப்பர். எவரேனும் பக்ஷணத்திற்குத் தந்தால் பக்ஷிப்பார். வீட்டிற்குப் போகாமல் வெளியே நித்திரித்திருந்து பொழுது விடிந்த வுடன் ஸ்நானஞ் செய்து பாண்டுரங்கரைப் பூஜித்து சர்வேஸ்வர னுடைய திருவுள்ள

மென்று காட்டிற்குப் போய் நாமோச்சாரணை செய்துக்கொண்டு இரண்டுமாச மிப்படி யிருந்தார். ஒருநாள் ஸ்நானஞ்செய்ய ஆற்றிற்கு வந்தபொழுது ஆவுலி ஜலத்திற் கவ்விடம் வந்து பர்த்தாவைப் பார்த்து அவர் மடியைப் பிடித்து இரண்டு மாசமாக வீட்டை விட்டு வெளியிற் சஞ்சரித்திருந்தீர். நான் யாருக்கு மனைவியாயிருப்பேன். சமுசார மெப்படி நடக்குமென்று கேட்கத் துகாராமர் சர்வேஸ்வரனுடைய பாரமாகும், பாண்டுரங்கரும் ருக்மணி பிராட்டியும் நமக்குத் தாய் தந்தைகளாக யிருந்து ரக்ஷிக்கிறார்கள், நீயு மவர்கள் திருவடிகளை நினைத்திரு வென்றார். ஆயினும் வீட்டிற்கு வரச்சொல்லி ஆவுலி யழைக்க, அவர் என் சொற்படி நீ கேட்பையாகில் வருவேனென்ன, ஆவுலி யதற்குச் சம்மதித்து வீட்டிற் கழைத்து வந்தாள். துகாராமர் துளசி வனத்திலுட்கார்ந்திருந்தார். அன்றைய தினம் ஏகாதசியா யிருந்தபடியால் ஜனங்கள் ஹரிகதையைக் கேட்க வந்தார்கள். ஆவுலி யவர்களைக் கண்டு கலக வார்த்தைகளைச் சொல்லலுற்றாள். துகாராமரிதைக்கண்டு மனைவியை நோக்கி, யார் வீட்டிற்கு யார் வருகிறார்கள்? இந்த பிரம்மாண்ட மனைத்தும் சர்வேஸ்வரனுடையது, அதி லடங்கிய சகலப் பிராணிகளு மெனக்குப் பந்துக்களாகவிருப்பார்கள். வந்தவர்களுக்கு நல்ல வார்த்தையைச் சொல்லி விகிதஞ் செய்தனுப்புவது நன்மையாகும். அவர்கள் தங்கள் காரியங்களை விட்டு நம்மிடம் வருவது நமக்குப் பூஷணமாகும். பலவகையான துர்வார்த்தைகளை யவர்களுக்குச் சொல்லுவது பாங்கல்ல வென்றார். அதைக்கேட்டு ஆவுலி சும்மாவிருந்தாள். பின்பு துகாராமர் ஆவுலியை யழைத்து உட்காரச்செய்து சொல்லுவார், எண்பது ரூபாய் திவான்தாரனெனும் அதிகாரிக்குக் கொடுக்கவேண்டும். நாம் தேஹு கிராமத்தி லிருக்கிறபடியால் கொடுக்காவிடில் காலனன ஹுலேதார் கனிகரமின்றி நம்மைக் கஷ்டப்படுத்துவான். இக்கடனுக்காக பத்து ரூபாய் கொடுத்தேன், மீதி எழுபதுக்கும் அதிகாரியான விட்டல மூர்த்தி பின் தொடர்ந்திருக்கிறார். அதை வசூல் செய்ய தவலைச்சொம்பை விற்கச் சொல்லுகிறார். முன்னமே பூமியை நாம் உழுவாம லிருந்தால் முதலுக்கு ஹேதுவரா திருந்திருக்கும். நீ யிப்பொழுது உதாச விருத்தியை வகித்து என்னை யிக்கடனிலிருந்து விடுவிக்க

வும். உதயத்தில் துவாதசி யாதலால் பர்வகாலமா யிருக்கிறது. நீ ஸ்நானம்பண்ணி நம்மிடமிருக்கும் சர்வத்தையும் கொள்ளை யிடவும், அன்ன வஸ்திரங்களின் சிந்தையை நீ யடையவேண்டாம். நம் தலைமேற் பாண்டுரங்க ரிருந்து நலத்துடன் காப்பாற்றுவார். வேறு வஸ்துக்களி லாசையை விட்டுவிடக் கடவாய். ஹரி தாசர்களிட மதிக சேவைகளைச் செய்யக்கடவாய். சுத்த மனதுடன் வைஷ்ணவ தாஸியாகிப் பக்தர்களுக்குச் சரண மடைந்திரு. பால்மாறுமல் ஹரிநாமத்தைப் பக்தியுடன் சொல்லிக்கொண்டிரு. மேற்சொன்ன பத்துரூபாய் ஞானபஞ்சேந்திரிய தமனமாம். அவை சுவாதீனமானல் கர்மேந்திரியங்கள் ஸ்ரீஹரி மார்க்கத்தில் ஸ்திமிதமடைந் திருக்கும், என்றிப்படியாக ஹரி கதையைச் சொல்லி அருணோதயத்தில் ஹாரதியைப் பெருமாளுக்குக் கொடுத்தார். அவ்வார்த்தைகளைக் கேட்டு, மனைவி விரக்தி யடைந்து பொழுது விடிந்ததே பிராம்மணர்களை அழைத்து வீட்டைக் கொள்ளை யிட்டாள். ஜனங்க ளனேகர் வந்து சாம்பலையும் விடாமல் கொண்டுபோனார்கள். பழைய வஸ்திரங்கள் பிறைக்கடையிலிருந்தன. ருக்மணி பிராட்டி யோர் பறைச்சியைப்போல் வந்து அவைகளைக் கொடுக்கச்சொல்லத் துகாராமர் அவைகளையுங்கொடுத்து மற்றொருவருக்குச் சொல்லவேண்டாமென்றார். அந்த ஸ்திரீ அத்துணிகளைக் கொண்டுபோம்பொழுது ஆவுலி பார்த்திருந்து சொல்லிக்கொள்ளுவாள், பிரபஞ்ச விருத்தியி லிதர ஜனங்களிருப்பதைக் கண்டு பர்த்தாவை வீட்டுக் கழைத்து வந்தேன், எத்தனையோ விதங்களாக எனக்குப் போதித்து வீட்டை நீராக்கிச் சென்றார். அன்னவஸ்திரங்கள் பெருமாள் கொடுப்பாரென்றும் அவர் பாதங்களை நினைக்கும்படியும் சொன்னார். அவர் வாக்கியத்தை மன்னித்து ஹரி சரணங்களை இரண்டு விசை மனதி லெண்ணினேன், இஹலோக சம்பத்து யாவும் போயிற்று. பிள்ளைகளுக்குச் சோறில்லை, என் செய்வதென்று, ஓர் கல்லைத் தலைமே லிட்டுக் கொண்டு பெருமாள் சன்னிதிக்குப் போக, ருக்மணி பிராட்டி பெருமாளுக் கென்னசெய்ய வந்தாயென்ன, ஆவுலி பிராட்டியை நோக்கி உன் பர்த்தா காதகனானர், அவர் திருவடிகளின்மேற் போடுகிறேன். எனது புருஷன் ஹரிபாதங்களை நினைக்கச் சொன்னார். ஒருவிசை நினைக்கவே சகல வஸ்துக்களும் வீட்டினின்று

போயின. நான் தொந்தரை யடைகிறேன். புருஷன் விரக்த ராகி சமுசாரத்தைப் பார்ப்பதில்லே. நான் தாபத்தை யடைந் தேன். செய்வதென் னென்றுள். அப்பொழுது பிராட்டி அவளே நோக்கி, இனி உனது சந்தாபங்க ளெல்லாந் துலேந்துவிடும், யோக க்ஷேமங்களின் சிந்தையை வைக்கவேண்டாம், அவை கள் சீராக நடந்தேறி வருமென்று சொல்லி ஓர் பிடி மோருக்க ளேக் கொடுத்து புடவையும் ரவிக்கையுங் கொடுக்க அவைகளே கைக்கொண்டு சன்னிதி வெளியே வருமளவில் துகாராமர் கண்டு மோருக்களேக் கொடுத்து ஆவுலியின் தொந்தரையை பெருமாள் நிவர்த்தித்தாரென் றெண்ணி தீனஜனங்களே அழைத்து அவர் களுக்கு பங்கிடுவென்று மனேயாளுக்குச் சொல்லி தான் நிராசை யுடன் கூடி ஹரிபஜனேயைச் செய்தார். இவருடைய கீர்த்தி எவ் விடத்தும் பிரசித்தமாயிற்று.

### சிந்தாமணி பிராம்மணர்.

சிஞ்சவடி யென்னும் கிராமத்திற் சிந்தாமணி யெனும் பிராம் மண ரொருவருண்டு. அவர் கணபதி உபாசகராகி அவர்மீது பக்தி யதிகமாகச் செய்து வருவார். துகாராமருடைய கீர்த்தியை அவர் கேட்டு தன்னிட மவரை வரவழைக்க மனிதனே யனுப்பினுர். துகா ராமர் பிரீதி யுடையவராகி சிந்தாமணிசுவாமி அழையாமுன்னமே அவரிடம் செல்லலுற்றுர். வழியி லம்மனிதன் துகாராமரை சந்தித்து விண்ணப்பத்தை யறிவித்தான். அவ்விடமே வருகிறே னென்று துகாராம் சொல்லி அவ்வூரைச் சேர்ந்து கணபதி மூர்த் திக்கு நமஸ்கரித்து வெளியில் நின்றுர். அவ்வேளேயில் சிந்தா மணிசுவாமி மானச பூஜையில் மௌனமாக விருந்து சித்தத்தை ஒருமிக்கச் செய்யாமல் புஷ்பத்தோட்டத்திற் சிந்தை செலுத்தி மனேராஜ்ஜியம் பண்ணிக்கொண்டிருந்து பூஜை முடித்து துகா ராமரை நோக்கி எப்போது வந்தீரென்றுர். துகாரா மவரை நோக்கி நீர் மனேமார்க்கமாகத் தோட்டத்தை விசாரித்திருந்த போது வந்தே னென்றுர். சிந்தாமணி இவரை பரிக்ஷிக்கும்பொ ருட்டு போஜன வேளேயில் இலேயைப்போட்டு துகாராமரை அழை க்க, அவர் இரண்டிலேகளேப் போடச் சொன்னுர். சிந்தாமணி அப்படியே செய்து அவ்விலேக்கு மற்றொருவரை அழையுமென் றுர். துகாராம ரவரை நோக்கி பாண்டுரங்கர் வருவார், கணபதி



சிந்தாமணி  చింతామణి.



ராமேச்வர்பட்டர்.  అనகடஷா
రామేశ్వరభట్టు.  అనగడషా.



சிவாஜிதட்டான். శివాజీకంసాలుడు.

மூர்த்திக்கும் ஓர் இலையை வட்டித்து அவரையும் நீர் கூப்பிடுமெ ன்றார். சிந்தாமணி இலையை வட்டித்து அதன்மேற் காயத்திரி மந்திரத்தாற் புரோக்ஷணை செய்து பக்தியுடன் நிவேதனஞ்செய் தார். அதைக்கண்டு துகாராமர் சொல்லுவார், கணபதி யிப்போ திவ்விடமில்லை, ஒரு பக்தன் சமுத்திரத்தில் முழுகிப்போக, அவனை யெடுக்கச் சென்றார், சற்றுநேரம் நிதானித்தா லீர வஸ்திரத் துடன் வருவாரென்று சொன்னார். பின்பு அப்படியே கணபதி வந்தார். பீதாம்பர மீரமாயிருந்தது. அதனைப் பிழிந்துப்பார்க்க ஜலம் உப்பாயிருந்தது. துகாராமர் சிந்தாமணிசுவாமியை நோக்கி வேதாந்தியரான நீர் போஜனத்திற்கு விநயகரைக் கூப்பிடு மென் றார். இதைக்கேட்டுச் சிந்தாமணி சொல்லுவார். கணபதி நை வேத்திய பதார்த்தங்களின் வாசனையைக் கொள்ளுவார். விக்கி ரக மெப்படிப் பக்ஷிக்கு மென்று சொல்ல, துகாராம ரவரை நோக்கி, நிக்கிரகமான பக்தியுபாசனைக்கு தெய்வம் பிரத்தியக்ஷ த்தில் நிற்கு மென்ன, சிந்தாமணி சொல்லுவார், பெருத்த உபா சனை செய்யினும் கணபதி பக்ஷிப்பதைக் காண்பதில்லை, பண்டரீ நாதர் உம்மோடு பேசுவதாக இதரஜனங்கள் சொல்லக் யுற்றேன். அவரையுங் கணபதியையும் கூப்பிடு மென்று படியே செய்கிறே னென்று கணபதியை தோத்திரஞ் செ றார், ஜய லம்போதரரே! பூரண சம்பத்தை யுடையவரே! இவ்வி டத்திற்கு வாரும், பதினான்கு வித்தைகளைப் பாங்குடனறிந்தவரே! சகல சித்திகளுக்குங் கர்த்தா நீரன்றோ! உமது தாண்டவத்தைக் காண உலகெல்லாம் மோகனமாய் விடுமே! எவர்மே லுமது கிருபா திருஷ்டியுண்டோ அவருடைய விக்கினங்க ளனைத்தும் விட்டுப்போமே! யாவருக்கும் வந்தனீய ராவீர் சங்கட காலங்க ளில் பக்தரைச் சம்ரக்ஷணை செய்வீர். அடியேனுடைய விண்ணப் பத்தைக் கேட்டு பக்ஷிக்க வாரும், மலடு பசுவினிடம் பால் கறப் பதுபோல அடியேனுடைய பக்தி அற்பமாகி பிரயோஜன மில்லா ததாகும், சிந்தாமணிசுவாமி பக்தி நிமித்தியமாகச் சேரவாரும். ஓ கணபதி ஸ்வாமி! சித்தமாயிருக்கும் அன்னத்தை பக்ஷியும், பொழுதாயிற்று, சீக்கிரத்தில் வாருமென்று பிரீதியுடன் வேண்ட, கணபதி எழுந்தருளினார். பின்பு தன் மனதிற் பாண்டுரங்கரைத் தெண்டனிட் டழைக்க நிஜரூபத்துட னவ்விட மவரு மெழுந்தரு

ளினர். இருவரு மவர்களுக் கிட்ட இலைகளி னுட்கார்ந்திருக்க, துகாராமருக்கும் சிந்தாமணிக்குமே கண்காட்சியாக நின்றார்கள். வட்டித்த பதார்த்தங்களை வாஞ்சையுடன் பக்ஷித்து கரசுத்திக்காக ஜலத்தைக்கொண்டு தாம்பூலத்தையுங் கொண்டு ஆனந்தத்துடன் மறைந்தனர். சிந்தாமணிசுவாமி துகாராமர் திருவடிகளுக்கு வந்தனஞ் செய்ய, இவர் வேண்டாம் வேண்டாமென்று தான் பின்னடைந்து ஸ்வாமீ! தேவரீர் சரணப் பிரதாபமே இப்படி மேன்மையடைந் திருந்ததென்றார். சிந்தாமணிசுவாமி துகாராமரை யனேக விதங்களாக தோத்திரஞ்செய்து நான் புனிதனானேன், பகவத் தரிசனத்தை யெனக்குப் பொருந்தச் செய்வித்தீரென்று கொண்டாட, துகாராம ரவரிட மாக்கினைப்பெற்று நாமத்தைச் சொல்லிக்கொண்டு நடந்து தன் கிராமத்தைச் சேர்ந்தார்.

துகாராமருக்கு காசியென்றும் பகீரதி யென்றும், கங்காவென்றும் மூன்று புத்திரிக ளிருந்தார்கள். இவர்கள் வளர்ந்து வயசுடையவராயிருப்பதை ஆவுலிப்பார்த்துஇவர்களுடைய விவாகமெப்படி நடக்குமென்று சிந்தித்துப் புருஷனுக்குத் தெரிவிக்க இதைக்கேட்டுத் துகாராமர் வெளியிற் சென்று தன் குலத்திற் பிறந்த மூன்று பிள்ளைகள் வீதியில் விளையாடிக்கொண் டிருக்க, அம்மூவரையும் தன் வீட்டிற் கழைத்துவந்து அன்றையதினமே [illegible]நிதியாகி யமர்ந்திருந்ததால் அவர்களுடைய வஸ்திரங்களுக்கு மஞ்சளைப் பூசி, புரோகித ரவ்வேளையில் வர மூன்று குமாரத்திகளுக்கும் மங்கள சூத்திரங்களைக் கட்டும்படி செய்து விசேஷமாகப் பாலன்னத்தை அருந்தச் செய்தார். மறுநாள் புத்திரர்களுடைய பந்துக்கள் கேட்டுவந்து, மரியாதையுடன் விவாகத்தைச் சாங்கமாக நடத்த யத்தனிக்க, பக்தர்க ளனைவருங்கூடி வெகுவாக சாமக்கிரிகைகளைச் சேர்த்து ரக்தியுடன் கலியாணங்களை நடப்பித்தார்கள். பெருமாள் கிருபையா லனுகூலங்க ளமர்ந்திருந்தன. பர்த்தா செய்த வேலைக்கு ஆவுலி பரமசந்தோஷத்தை யடைந்திருந்தாள்.

## பீடு தேசபாண்டியா.

பீடெனுமோர் கிராமமிருந்தது. அவ்விடத்தில் தேசபாண்டியா (சில கிராமங்களுக் கதிகாரி) வித்தியாப்பியாசம் செய்ய விருப்புற்று வடமொழியில் நாடகாலங்காரங்களை வாசிக்கக் கோலி

பண்டரீ புரத்திற்கு வந்து அன்ன மருந்தாமல் பத்துநாள் தவ மிருக்கப் பெருமாள் சொப்பனத்தில் வந்து ஆளந்தியிற் சென்று நீ ஞானதேவரை யாராதிப்பாயாகி லேதாகிலும் நன்மையுண்டா மென்ன, அவன் விழித்துக்கொண்டு மறுநாள் பிரயாணமாகி ஆளந்தியைச் சேர்ந்து பன்னிரண்டுநாள் தவத்தைச் செய்தான். கர்மகதி வேறாயிருக்க காயதண்டனைச் செய்தானென்று ஞானதேவ ரவன் சொப்பனத்திற் சென்று தெஹு வென்னுங் கிராமத்தில் துகாராமரென்னும் மகா பக்தரிருக்கிறார். நீ அவரிடம் சென்று உன் கோரிக்கையைத் தெரிவித்தா லுபாய மருளுவர். அவர் வார்த்தையை நீ விசுவசித் திருப்பாயாகில் உனது கோரிக்கை நிறைவேறு மென்றார். இதைக்கேட்டு விழித்துக்கொண்டு மன தில் குறையுடையவனாகி துகாராமரிடஞ் சென்று சங்கதியனைத்தை யுந் தெரியப்படுத்தினன். அவரதைக் கேட்டு களங்க ரகிதரான ஞானதேவரா லாகாமலென்னிட மனுப்புவது ஆச்சரியமாயிருக்கி றதே! என்க்கென்ன தெரியுமென்று மராட்டி பாஷையில் பதி னொரு சுலோகங்களை ஓலையில் எழுதிவைத்து ஓர் தேங்காயுட னவ னுக்குக் கொடுக்க, இவை பிராகிருதமான தேசபாஷை சுலோ கங்க ளெனக்கென்ன செய்யுமென்று அந்த பிராம்மணன் நம் பாமல் ஆளந்திக்குத் திரும்பிப்போய் ஓரிரவு அவ்விடந் தங்க, ஞானதேவ ரவன் முதுகின்மே லடித்தார். துகாராமரும் அந்த பிரா ம்மணன் செய்த சேஷ்டைகளை ஞானதேவருக்குத் தெரியப்படுத் தி ஆக்கினைப்படி நடந்தும் அந்த பிராம்மணனுடைய தரித்திர கரும மெதிர் நோக்கிற்றென்றார். அந்த சந்தர்ப்பத்தில் கொண் டோபாவென்னு மெழுத்தறியாத ஓர் பிராம்மணன் துகாராமரிடம் வந்து நமஸ்கரித்து நிற்க, அந்தச் சுலோகங்க ளடங்கிய ஓலையை அவனுக்குக் கொடுத்தார். அவன் விசுவாசத்துட னவைகளை கற் றுக்கொண்டு பின்பு எழுத வாரம்பித்து பண்டிதனாகி சிவாஜி மகா ராஜனிடம் பிரபலத்திற்கு வந்தான். அத்தருணத்தில் அமுதா பாக்கமெனும் பட்டணத்தி லோர் சவுகார் ஏதோ காமியார்த்த மாக ஆளந்தி ஞானதேவரிடம் பிரார்த்தித்தான். அக்காரிய மவ னுக்கு நிறைவேறினதால் ஆயிரம் கணக்காகத் திரவியத்தைக் கொண்டுவந்து அவருக்குச்சமர்ப்பிக்க அவ்வர்த்தகனுடைய சொப் பனத்தில் ஞானதேவர் சென்று அந்தத் திரவியத்தை துகாராம

ருக்குக் கொடுக்கும்படிக் கட்டளை யிட்டார். வர்த்தக னப்ப டியே அவரிடம் கொண்டுவந்து ஞானதேவ ராக்கினையைத் தெரி வித்து ஐயா! திரவியத்தை கைக்கொண்டு மன்னித்தருளவேண்டு மென்றான். அவ்வேளையி லந்த தேசபாண்டியா அவ்விடம் வர, துகாராம் அந்தத் திரவிய மனைத்தையு மவனுக்குக் காட்டி இந்த ஜன்மத்தி லுனக்கு வித்தை பிராப்த மில்லை, ஞானதேவ ரரு ளால் திரவியங் கிடைத்தது, இதை நீ கொண்டுபோவென்று கொ டுத்தனுப்பினார். துகாராமர் கீர்த்தி எங்கும்பரவி இராஜன் செவிக் கெட்டியது.

லோஹகாமெனும் ஊரில் துகாராமருடைய கீர்த்தியை அங் குள்ளோர் கேட்டு அவரை யவ்வூருக் கழைத்துக் கொண்டுபோய் அனேக மரியாதைகளை யானந்தத்துடன் செய்துவருவார்கள். அவ் விடத்தில் துகாராமர் ஹரிகுண கீர்த்தனையைச் செய்ய, அனை வரும் சந்தோஷ மடைந்து அவர் திரவியத்தைக் கோராதவ ராதலால் அனுதினமும் பிராம்மண போஜனம் விசேஷமாக நடத்து வார்கள். ஒவ்வொருவ ரொவ்வொருநாள் தங்கள் தங்கள் வீடுக ளில் ஹரி கதையை நடப்பித்து வருவார்கள். ஒரு கிழப் பிராம் மணஸ்திரீ துகாராமரிடம் வந்து ஐயா! எனது கிரகத்திற் பக்ஷ ணை செய்து கீர்த்தனை செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, அவ ரவளுடைய ஆர்த்தியைக் கண்டு நீ யென்றைக்கு வரச் சொல்லு கிறாயோ அன்றைக்கு வருகிறே னென்று விடை கொடுத் தனுப்பி னார். பின்பு அவள் கூலி செய்து பணத்தைச் சம்பாதித்து ஒரு நாள் பத்து பிராம்மணர்களுக் கன்னமிட யத்தனப்பட்டாள். இதற்குள் மழை அதிகமாகப் பொழிய அவள் குடியிருக்கும் வீட் டின் சுவர் ஜலமூறி நனைந்திருந்து விழச் சித்தமாயிருந்தது. அந் தப் பிராம்மண ஸ்திரீ அழுதுக்கொண்டு துகாராமரிடஞ் சென்று வீட்டு சுவர் நனைந்துவிழச் சித்தமா யிருக்கிறது. போஜன சாமக் கிரிகையைச் சித்தஞ் செய்துவிட்டேன். பெருமாளுடைய காரிய மெப்படி யாகுமோவென் றிருக்கிறேனென்ன, துகாராம ரவளை நோக்கி, அம்மே! அச்சுவர் போஜனத்திற்குமுன் விழாது, போஜன மானபின் விழுமென்றார். அதைக்கேட் டவள் சந்தோஷத்துடன் சென்று துரிதத்திற் சமையற்செய்து இலைகளி லன்னமும் பதார்த் தங்களும் வட்டிக்க பிராம்மணர்க ளனைவரு முட்கார்ந்து பக்ஷித்

துக்கொண் டிருந்தார்கள், அவர்களுடன் துகாராமரும் ஹரி நாமோச்சாரணத்துடன் பக்ஷணை செய்தார். அனைவரும் பக்ஷித்து எழுந்திருந்து அவ்விடத்திலுள்ள பாத்திரங்களை யெடுத்தவுடன் சுவர் விழுந்தது. அவ்வோசையைக் கேட்டு அக்கம்பக்கத்தார் விசாரிக்க வந்தார்கள். வேறோரிடத்தி லன்றிரவு துகாராமர் கீர்த்தனைசெய்ய அனேக ஜனங்க ளதனைக் கேட்க வந்தார்கள். ஓர்மாசம் வரைக்கு மவ்விட மிருந்து திரும்பி தேஹு கிராமத்திற்கு துகாராம ரெழுந்தருளினர். இவருடைய கீர்த்தியைக்கேட்டு துன்மார்க்கர் பொறாமைகொண்டிருந்தார்கள்.

இராமேச பண்டிதன்.

வாகோலி யெனும் கிராமத்தில் இராமேசனெனும் பிராம்மணன் வசித்திருந்தான். சாஸ்திரங்க ளனைத்தையுஞ் செம்மையா யறிந்தவனென்று அத்தேசத்து அரசனு மவனை மன்னித்து வருவான். அவன் துகாராமருக்குக் கெடுதலைச்செய்ய வெண்ணங்கொண்டு அதிகாரிகளிடஞ்சென்று அவர்களைப் புகழ்ந்து துகாராமர்மேற் கோள்களைச் சொல்லத் தொடங்கி, துகாராமர் சூத்திரனாகிப் பிறந்து சுருதிகளிற் சொன்ன வர்த்தங்களை ஹரிகதையென்று பேரிட்டு அனைவருக்கும் வெளிப்படுத்துகிறான். மனிதர் செய்யவேண்டிய கர்ம தர்மங்களை முழுக்கடித்து பகவன்னாமத்தைப் பலப்படுத்தி பக்தியை விசேஷமாகச் சொல்லி பாஷண்டஞானத்தை வெளிப்படுத்துகிறான். ஜனங்க ளதனால் மோஹமடைந்து கர்ம பிரஷ்டர்க ளாகின்றார்கள், இதனாற் கெடுதி யுண்டாமென்று சொல்ல, மூர்க்கனாகிய வதிகாரி துகாராமரை யவ்வூரைவிட்டுத் துறத்திவிடச்சொல்லி தேஹு கிராமத்தின் மணியக்காரனுக்கு வுத்தரவை யனுப்பினான். அதனை அக்கிராமத்தி லிருப்போர் கண்டு துகாராமரிடங் காண்பிக்க அவரதை நோக்கிப் பரமாத்மாவான நாராயணன் நியமித்தபடி இவ்விடத்திற் சஞ்சரித்திருந்தேன். இனி என்ன செய்வேன் எவ்விடம் போவேன் யாவர் பிக்ஷை யிடப்போகிறா ரென்று திகைத்து நிற்க, கிராமவாசிகளுங் கலக்கமுற்றனர். பின்பு செய்யவேண்டிய தென்னவென்று சிந்தித்து இராம நாம கர்ஜ்ஜனையுடன் இராமேச பண்டிதனிடஞ் சென்று நமஸ்கரித்து ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டு ஹரி கீர்த்தனை செய்யத் தொடங்கி பெருமை பொருந்திய பிர

சாதவாணியால் பகவத்குண கீர்த்தனையைப் பாடினார். பண்டிதன் பார்த்து நீ சூத்திரனாக விருந்து அனேக கவித்வங்களைச் சொல்லுகிறாய் அவைகளிற் சுருதியர்த்தங்களை நிறைத்திருக்கச் செய்கிறாய். அதற்கதிகாரியாகாத நீ அப்படி சொல்வது அமித தோஷமாகும். அதனால் நரகமடைய வேண்டிவரும். அந்தச்சொற்களைக் கேட்போரு மப்படியே நரகத்தைப் பெறுவார்கள். இனி கவித்வங்களைச் சொல்லவேண்டாம். கழிந்த காலத்தில் நீ செய்த கவித்வத்தை ஜலத்தில் போட்டுவிடென்று சொல்லத் துகாராமரிதைக்கேட்டு உம்மிஷ்டப்பிரகாரமே செய்கிறேனென்று சொல்லி தேஹூ கிராமத்திற்கு வந்து பாண்டுரங்கரைக் கண்டு அடியேன் பாமரன், மூடன், தேவரீ ராக்கினையைக் கொண்டு உலகத்தாருக்காகக் கவிகளைச் சொன்னேன். அவை விகடமோ அல்லது விகாசமோ அடியேனுக்குத் தெரியாது, அந்த கவித்வங்களனைத்தையும் ஜலத்தில் விட்டுவிட நீர் ஆசை கொண்டீரோ வென்று சொல்லிக்கொண்டு அந்தக் கிரந்தங்களை ஓர் கல்லைச்சேர்த்து துணியிற் கட்டி ஆற்றிற் போட்டுவிட்டு, விட்டல! விட்டல! என்று சொல்லிக்கொண்டு ஆற்றின் கரையிற் சேர்ந்தார். சஜ்ஜனர்கள் துக்கமடைந்தார்கள். துர்ஜனர்கள் சந்தோஷித்து நாம் விஜயத்தைக் கொண்டோமென்று பலவாறு சொல்ல, துகாராம் மனவருத்தமடைந்து பகவானுடைய சத்தா (சாமர்த்தியம்) பிரமாணமாகுமென்று நினைத்து மோஹத்தைவிட்டு விட்டல நாமத்தை விடாமற் சொல்லிக்கொண்டு ஐந்து நாளிருக்க, துஷ்டரான பிராம்மணர்க ளவ்விடம் வந்து ஓய்! துகாராமரே! சென்ற காலத்தில் பணத்தின் பாக்கிபத்திரங்கள் பாழாம்படி ஜலத்திலெறிந்துவிட்டீர். அதனால் உம்முடைய பிரபஞ்ச விவகாரமெல்லாம் பாழாய் விட்டது. இப்பொழுது நீர்செய்த கவித்வங்க ளெல்லாம் கங்கையில் விட்டீர். இதனால் மேலான பரமார்த்தமும் போய் விட்டது. இதைக் காட்டில் மரணமடைவது மேலாயிருக்கும். நால்வர் முன்பு முகத்தைக் காண்பிப்பது நியாயமல்லவென்று சொல்லிப் போனார்கள். துகாராம ரிதைக்கேட்டு மனதிற் றுந்தரை யடைந்து பிராணத்தியாகம் பண்ணினேனாயின் ஆத்மஹத்தி அனிவாரமாக வந்துவிடுமென்றெண்ணி அன்னத்தை யதுமுதல் விட்டுப் பாண்டுரங்கர் சன்னிதிக் கெதிரில் பிருந்தா வனத்தி லிருந்து

பெருமாளை நோக்கி ஸ்வாமீ! ஏகாதசி தினங்களிற் ஜாகரணமிருந்து கீர்த்தனை செய்தபல மிவ்வண்ணமாயிற்றே! ஓ விட்டலமூர்த்தி! எத்தனை யவஸ்தைகள் வரினும் தேவரீரை மறக்கமாட்டேன். லோகத்தாருடைய சகவாசத்தை நிவர்த்தி செய்யவும், தைரியத்தைக்கொடும். ஓ பரமபுருஷரே! இவைதானும்மை வேண்டுவது. அனேக பிரகாரங்களாக நீரென்னை இரக்ஷித்தீர். இப்போது சரீர மலண்டு விட்டது, ஓ பக்தவரதரே! அடியேனைப் புனிதனாகச் செய்யவும். உம்மை யடைய விரும்பினேனென்று அனேக விதங்களாக ஸ்தோத்திரஞ் செய்துக்கொண்டு சக்தியற்றவராகிக் கிடந்திருந்தார். அப்பொழுது பண்டரிநாதர் பாலகனைப்போ லவ்விடம் வந்து உன் பக்கத்திலிருந்து காப்பாற்றுகிறேம், பக்தியுடன் நாமத்தைச் சொன்னால் பிரபல கருமங்களெல்லாம் நீங்கிவிடும், ஆபத்துக்க ளனைத்து மடியோடேதுலையும், முற்காலத்தில் இரணியகசிபனால் பிரஹலாதன் இம்சிக்கப்பட்டான். அவனுபத்தைப் போக்கிக் காப்பாற்றினேம். அப்படியே உனக்கும் விபத்துக்க ளெல்லாம் விட்டுப்போம். சிந்திக்கவேண்டாமென்று சொல்லி பாலகன் மறைந்தனர்.

இராமேசபண்டிதன் பக்தனுக்கு துவேஷியானதால் பகவானுடைய நிக்கிரகத்திற்கு பாத்திரனு யிருந்தான். அவன் புனநகரத்திற்குப் பார்வதி ரமணரைப் பார்க்க வந்தான். அவ்விடம் நாகநாதரெனும் லிங்கமூர்த்தி நானுவித மகிமைகளை யுடையவரா யிருந்தார். இராமேச பண்டிதனும் பிரதி சோமவாரம் அவ்விடம் வந்து பூஜைகளை வெகுவாகச் செய்து வருவான். அன்று அவன் வந்து துலுக்கன் தோட்டத்திலிருந்த ஓர் கிணற்றி லிறங்கி நேமத்துடன் ஸ்நானஞ் செய்யலுற்றான். அவ்விடத்திலோர் மசூதிலிருக்கும் துலுக்கப் பகீர் தண்ணீ ரோசையைக்கேட்டு என் கிணற்றில் பிராம்மணன் நீராடுகிறவன் யார்? நிமாஜு நிமித்தியம் நிர்மலமாக ஜலத்தை வைத்திருந்தேன், எவனே அதைக்கெடுத்தான், அவன் சரீரத்திற் றாபமுண்டாகக் கடவதென்று சாபமிட்டான். அதைக் கேட்கவே பண்டிதன் அந்நீரிலிருந்து வெளி வந்தான். உடனே உடம்பெங்கும் தாப முண்டாயிற்று. அதனாற் சங்கடப்பட்டு கூடவந்த வித்தியார்த்திகளைக் கண்டு ஆலோசனை யென்னவென்று கேட்க, அவர்கள் பண்டிதரைக்கண்டு ஐயா!

இவ்விடத்தி லிருப்பவர் "அனகட்ஷா" எனும் சித்தபுருஷ ரென்று கேள்விப்பட்டோம். அவர் பிரயோகம் செய்தாற்போல் தோணுகிறது. அவரிடத்தில் நாம் போவோமானல் தாபம் போமென்றார்கள். பண்டித னிதனைக்கேட்டு, இதற்காக ஹீனஜாதியனுக்கு நான் நமஸ்காரம் செய்யேனென்று அதிக துக்கத்துடன் வீட்டிற்குத் திரும்பிவந்து தாபத்துடன் ஈரவஸ்திரத்தை எப்பொழுதும் போர்வையாக உடையவனாய் படுத்தாலும் மெழுந்திருந்தாலும் நடந்தாலும் பிரபல தாபமுடையவனாய் அவஸ்தை யடைந்திருந்தான். தேவதானுஷ் டானங்களைச் செய்தினு மவை பிரயோஜனப் படாமற் போயின. மேலான மேன்மையை அடைந்திருந்து மிதற்கோ ருபாயத்தைக் காணுமலிருந்தான். தனமும் சம்பத்தும் தாரா புத்திரர்க ளிருந்தும் அவை தனக்கு ஹிதமாகாமையைக்கண்டு ஞானதேவர் வாசமான ஆளந்தி ஸ்தலத்திற்கு வந்து அஜானவிருக்ஷத்தின்கீ ழுட்கார்ந்து தேகவிபத்துக்கென்ன காரணமோ தெரியவில்லை யென்று மந்திரானுஷ்டானஞ் செய்யத் தொடங்கினன். சிலநாளிப்படி செய்ய சொப்பனத்தில் ஞானதேவர் வந்து, உனக்கு பாகவதாபசார மேற்பட்டிருக்கிறது. பகவத்பக்தரான துகாராமரை நீ பிரபலமாக நிந்தித்தபடியால் விடாத வியாதி உனக் குண்டாயிற்று. அவருக்கு நீ சரண மடைவாயாயின் வியாதி துலையும், அப்படி நீ செய்யாவிடி லெவ்விதத்திலு மிது போகாது. மந்திர கிரியைகளால் மாளாதென்று சொல்லி மறைந்தார். பண்டித னிதைக்கேட்டு பச்சாத்தாப மடைந்து ஓர் பத்திரிகையை எழுதி மகாபயத்துடன் துகாராமரை தோத்திரங்கள் செய்து ஓர் வித்தியார்த்தி கையிற் கொடுத்து அவருக்கனுப்பினன்.

தேஹூ கிராமத்தில் அனேக ஜனங்களுடைய சொப்பனங்களில் பகவான் தோன்றி துகாராமர் செய்த கிரந்தங்க ளனைத்தும் நாளையதினம் நதியில் மிதந்துக்கொண்டு வரும். உதயமானவுடன் அவ்விடம் நீங்கள் சென்று அவைகளை கைக்கொள்ளக் கடவீர்களென்று சொல்ல, அனேக ரவ்வண்ணமாகவே பொழுது விடிந்தவுடன் ஆற்றின் கரைக்குச் செல்ல, கட்டின வண்ணமாக இருந்த அந்தக் கிரந்தங்கள் ஜலத்தின்மேல் மிதந்துவருவதை ஜனங்கள் பார்த்து கைகளி லேந்தித் துகாராமரிடம் கொண்டுவந்து

வைத்தார்கள். அவ்வேளையிற் றுகாராம ரதிபலஹீனராகி பதின்மூன்று நாட்களாக பக்ஷணை பான மொன்று மில்லாம லிருந்து மெதுவாகக் கண்திறந்துப் பார்க்க கிரந்தங்களைக்கண்டு கனக்க சந்தோஷித்து ஸ்ரீஹரி கருணையைச் சிந்தித்து பிரீதியுடன் சொல்லத் தொடங்கினர். ஓ பாண்டுரெங்கரே! நான் துஷ்டர் வார்த்தைகளைக்கேட்டு துரிதப்பட்டுக் கிரந்தங்களை ஆற்றில் விட்டுவிட்டு அநியாயத்தை இவ்வண்ணமாகச் செய்தேன். தேவரீர் பிரயாசைப் பட்டு என்னை யோர் பக்கத்திலும் கிரந்தங்களை யோர் பக்கத்திலும் ரக்ஷித்துக் கீர்த்தியை நிலை நிற்கச் செய்தீரென் றனேக விதங்களால் தோத்திரங்களைச் செய்தார். அவ்வேளையி லிராமேசனுடைய சீஷ னவ்விடம் வந்து சங்கதியைச் சொல்லி பத்திரிகையைக் கொடுக்கத் துகாராம ரதனை வாசித்து சங்கோசிக்காமல் தானோர் சுலோகத்தை யெழுதி தன்னுடைய தயாகுணத்தை யதனில் வெளிப்படுத்தி அவன் கையிற் கொடுத்தனுப்ப அந்த சீஷன் பண்டிதனிடம் வந்து கடிதத்தைக் கொடுத்து அங்கு நடந்த சங்கதியைத் தெரிவித்தான். துகாராமர் கருத்தை பண்டிதன் கண்டு கொண்ட பொழுதே தா னடைந்திருந்த தாபம் நீங்கிற்று, தேகத்தி லிருந்த கொப்பளங்கள் குறைந்து வந்தன. பத்து கொப்பளங்கள் மாத்திர மிருக்கக்கண்டு துகாராமர் பாதங்களை அவன் நினைத்து நமஸ்கரித்து, எல்லோரு மறிய வேத சாஸ்திரங்களின் விவேக மெனக் கிருக்கிறது. ஆனா லிப்படி ஜலத்தில் கிரந்தங்களைப் போட்டு அவை நனையாம லிருக்கச் செய்யும் வித்தையை நானறியேன், துகாராமரைக் காண வேணுமென்று அவ ரிருப்பிடத்திற்குப் போகப் பிரயாணப்பட்டான். பண்டிதன் தன்னிடம் வருவதை துகாராமர் அறிந்துக்கொண்டு தானும் பிரீதியுடனெதிராகச் சென்றார். நடுவழியி லிருவரும் சந்தித்து யொருவருக் கொருவர் நமஸ்கரித்தார்கள். பண்டிதனவரை நோக்கி நான் வழிதப்பி உமக்கு வருத்த முண்டாக்கினேன். நீர் பக்திமகிமையைப்பிரபலப்படுத்துவதற்கு உலகிற் பிறந்தீர். நீ ரெழுதி யனுப்பிய சுலோகமென் சரீரத்தைச் செம்மைப்படுத்திற் றென்று சொன்னான். அதற்கு துகாராமர் தெண்டன் சமர்ப்பித்து அது தேவரீ ரனுக்கிரகமேயாம். அடியேன் பாமரன். உமது கிருபைக்குப் பாத்திர னாவேனென்று சொல்ல, பண்டிதன் திரும்பி அவருக்கு நமஸ்

கரித்தான். தினந்தோறும் துகாராமருடைய சகவாசத்தைசெய்தால் அஹங்காரந் தொலையுமென்று அவர் கூடவே இருந்தான்.

அனகட்ஷா.

துகாராமர் ஆளந்திக்குச் செல்ல அனேகரவர் பின்றொடர்ந்துச் சென்றூர்கள். ஞானதேவருடையப் பிரீதியை தான் பெற்றுக்கொண்டு திரும்பி தேஹூ கிராமத்திற்கு வந்தார். இராமேசபண்டிதனும் துகாராமரை விடாமல் பிரேமையைக் காண்பிக்க, அவனுடைய வபிமானந் தூரமாகப் போயிற்று. தரணோபாயத்திற்கு ததீய சேவையைக் காட்டில் வேறில்லையென்று அவரையே தொடர்ந்திருந்தான். இச்சங்கதி புனுவில் அனகட்ஷா பகிர் கேட்டு பிராம்மணனுக்குச் சாபமிட்டேனே! அவன் நம்மிடம் வராமலே துகாராமரால் சீர் பெற்றூனென் றறிந்து அவரைக் காணவேணுமென்று பிரயாணப்பட்டு சதானந்தத்தை யுடையவராகி சிஞ்சவடி கிராமத்திற்கு வந்து கணபதி ஆலயத்திற் கெதிரிலிருக்கும் பெரிய வீட்டிற் பிரவேசித்து ஒரு கொட்டாங் கச்சியைக் காட்டி அதினிறையத் தானியத்தைக் கொடுமென்று பிக்ஷையைக் கேட்டார். பரிசாரகன் வந்து அனேக மணங்குகளளவாக தானியத்தைப் போட்டாலு மது நிறையாம லிருந்தது. அவ்வீட்டுக் கதிபதி சிந்தாமணி வந்து தன்கையால் தானியத்தைப் போடவே அக்கொட்டாங்கச்சி நிறைந்தது. இதைக்கண்டு பகிர் தேஹூ கிராமத்திற்குச் சென்று துகாராமர் வீட்டில் நின்று பிக்ஷயிட வேண்டுமென்று கூச்சலிட்டார். ஆவுலி யவரைக்கண்டு கடின வார்த்தைகளைச் சொல்லி தனது குமாரத்தியை அழைத்து பாவசுத்தியுடனோர் பிடி தானியத்தை அவள்கையிற் கொடுத்துப் போடச்சொல்ல, அவளு மப்படியே பகிருக்கு பிக்ஷைப் போட்டாள். அவருடைய கொட்டாங்கச்சி நிறைந்து விட்டதைக்கண்டு அதிகமாகச் சந்தோஷித்து தனதுச் சித்திக ளிவ்விடம் கவையாகா வென்றெண்ணித் துகாராம ரெவ்விடஞ் சென்றூரென்ன, அக் குமாரிகை சன்னிதியிற் பண்டரிநாதருக்குப் பூஜை செய்கிறு ரென்ன, அவ்விடத்திற்குப் பகிர் சென்று நிற்கத், துகாராம ரவரைக்கண்டு விநயத்துடன் மன்னித்து இரண்டுநாளவ்விடம் வைத்துக்கொண்டு போஜனமளிக்கப் பகிரும் ஹரிகுணுனுவாதத்தைக் கேட்டு அதிக சந்தோஷத்துடன் தன்னிருப்பிடஞ்சென்றூர்.

## சிவாஜி தட்டான்.

தினந்தோறும் தேஹூ கிராமத்தில் கீர்த்தனை நடந்துக்கொண்டுவரும். சத்கதைகளைக் கேட்க வனேக ஜனங்கள் சேருவார்கள். காமினியான வொரு ஸ்திரீ அக்கதையை தினமுங் கேட்க வருவாள், ஒருநாள் அவள் துகாராமர் பின்சென்று ஒருவருமில்லாதிருப்பதைக்கண்டு தன்னைச் சேரவாருமென் றவரைக் கூப்பிட்டாள். துகாராம ரிதைக்கண்டு மிகவும் நடுங்கி அவளை நோக்கி தாயே! பரஸ்திரீக ளனைவரு மெனக்குத் தாய்போல பாவிக்கப்படுவார்கள். என் சத்துருக்க ளறுவரையும் நான் சர்வேஸ்வரனுடைய சரணங்களி லர்ப்பணஞ் செய்துவிட்டேன். மகா சித்திகளையும் மறுதலித்தேன் என் சரீரத்தையும் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு ஹரித்தியானஞ் செய்வேன். இனி நீ போகக் கடவாயென்று சொல்லி மற்றொருருக்குச்சென்று பாண்டுரங்கரைப் பஜனை செய்துக்கொண்டு பிரேமையுட னிருந்தார். பிரஜைக ளனேகர் பக்தியுடன் வந்து கதையைக்கேட்டு ஆனந்திப்பார்கள். அவர்கள் பிராம்மண போஜனமும் உல்லாசத்துடன் செய்விப்பார்கள். அவ்வூரில் துர்மார்க்கனான ஓர் தட்டான் சமுசார லுப்தனாகி துகாராமரை நிந்தித்துக்கொண்டிருந்தான். ஒருநாள் துகாராம ரவனைக் கூப்பிடும்படி மனிதனை அனுப்ப, அவ னவரை வெகுவாக தூஷித்து வரமாட்டே னென்றான். இப்படிக் கிருக்க ஆளந்தியி லொரு பிராம்மணன் பதினாயிரம் ரூபாய ருணந் தீருவதற்கு ஆறு மாசமாக தவமிருந்து அனுஷ்டானஞ் செய்துவர ஞானதேவர் சொப்பனத்தில் வந்து துகாராமரிடஞ் சென்றால் ருணம் சீக்கிரத்தில் நிவாரணமாய்விடுமென்று சொல்ல, அவன் துகாராம ரிருப்பிடம் விசாரித்துவந்து அவரைககண்டு ஞானதேவர் சொன்ன சங்கதியைத் தெரிவித்தான். இதைக்கேட்டு துகாராம ரவ்வூரி லிருக்குமவர்களைப் பார்த்து அந்த பிராம்மணனுக்கு திரவியத்தைக் கொடுக்கச்சொல்லிக் கேட்டார். அவர்க ளனைவருந் தங்களுக்குத் தோன்றின மாத்திரஞ் சொற்ப திரவியத்தைக் கொடுத்தார்கள். சிவாஜியென்று மந்த தட்டானையு மவ்வந்தணன் கேட்கக் காட்டுத்தீ போற் கடுகடுத்து இரண்டு துட்டைக் கொடுத்தான். அதைக்கொண்டுவந்து அவ்வந்தணன் துகாராமரிடங் கொடுக்க அவர் அதுகளை ஓரோட்டாங்குச்சுனல் தேய்க்க அந்தத் துட்டுகள் பொன்

ணுய் விட்டன. அதனை யந்த பிராம்மணனுக்குக் கொடுக்க அவன் அது போதாதென்றான். பின்பு துகாராமர் தாம்ர பாத்திரங்களைக் கொண்டுவரச்சொல்லி அவைக ளெல்லாவற்றையும் பொன்னுக்கிப் பிராம்மணனுக்குக் கொடுக்க வவன் சந்தோஷத்துடன் ஆளந் திக்குச் சென்றான். துகாராம ரந்த ஓட்டாங்குச்சுவை கிணற்றிற் போட்டுவிட்டார். அவ்விடத்திலுள்ள ஜனங்க ளனைவரு மிதைக் கண்டாச்சரியப்பட்டார்கள். அந்த தட்டான் துகாராமரிடம் பொன்வித்தை யிருக்கிறதென்றும் அதனை சாதித்தால் சமுசாரம் செம்மையா யிருக்குமென்று மெண்ணி பக்தனைப்போல நடித்து தினந்தோறும் துகாராமரிடம் வந்து ஸ்ரீஹரி கதைகளைச் செம்மையாகக் கேட்டுக்கொண் டிருப்பான். வஞ்சக மனதுடையவனு யிருந்து ஓர் வருஷ மிப்படி கேட்டுக்கொண்டு வர சச்சங்கத்தால் சர்வேஸ்வரனுடைய கிருபை உண்டாகி அவன் குணங்கள் மாறின. அவன் ஒரு மனிதனிடஞ் சில எருதுகளை இரவல்வாங்கி பம்பாயிக்கு அனுப்பினான். அவை யனேகச் சரக்குகளைக் கொண்டுவந்தன. பின் பவ்வெருதுகளைச் சொந்தக்காரனிட மனுப்ப வவன் தன்னுடையவை அல்லவென்றும் சிவாஜிதா னவ்வெருதுகளுக் குடையவனென்றுஞ் சொன்னான். இதைக்கண்டு சந்தோஷிக்காம லந்தத்தட்டானுச்சரியப்பட்டுத் துகாராமரிடம் வந்து சங்கதியைச் சொல்லி இவ்விஷயத்தி லென்ன செய்வதென்று கேட்க அவ ரவனை நோக்கி சர்வேஸ்வரன் கொடுத்தா ராதலால் அவைகளால் வரும் திரவியத்தை நல்ல விஷயத்தி லுபயோகப்படுத்து மென்றார். அவன் பிரஜைகளுக் கன்னதானத்தை யானந்தத்துடன் செய்தான். அதுமுத லந்தத் தட்டான் விரக்த சித்தனுகி வீட்டை விட்டுத் துகாராமரை விடாமலிருந்தான். இதைக்கண்டு அவன் மனைவி துகாராமரிடங் குரோதமுடையவளாகி தன் பர்த்தாவை வைத்தியக்கார னுக்கிவிட்டாரென்று பலதரஞ் சொல்லி நான்கு சால் நிறைய ஜலத்தைக் கொதிக்கக் காயவைத்து துகாராமரை அழைத்து ஸ்நானஞ் செய்யச் சொன்னாள். இதைக்கண்டு துகாராமர் ஹரி நாமத்தைச் சொல்லவே ஜலம் சீதளமாயிற்று. பின்பு அவர் ஸ்நானஞ்செய்து இருப்பிடம் போனார். அனந்தரம் அந்த ஸ்திரீ வியாதியினுல் பீடிக்கப்பட்டு ஒருநாள் சகிக்காமற் பர்த்தாவைப் பார்த்து தேகம் அசௌக்கியமா யிருக்கிறதென்று சொன்னாள்.

அவ னவளுடம்பைப் பார்க்குமளவில் குஷ்டரோகமாகத் தோன்றிற்று. இதை யவன் ராமேச பண்டிதனுக்குத் தெரிவிக்க அவன் தட்டானைப் பார்த்து ஐயா! துகாராமர் ஸ்நானம் செய்யும்பொழுது அவ்விடத்திலிருக்கும் மிருத்திகையை (மண்ணை) யெடுத்து உடம்புமேல் தேய்த்தால் வியாதிபோய் உடம்பு சௌக்கியமாமென்றான். அந்தப்படியே அந்த ஸ்திரீயும் செய்யுமளவி லிஷ்டசித்தியை அடைந்தாள். பின்பு பகவத்குண கீர்த்தனையைக் கேட்டு பரிசுத்த மனதை யுடையவளானாள்.

துகாராமருடைய கீர்த்தி தேசங்களிற் பிரகடமாகவே சிவாஜி அரசன் அவர்மேற் பிரீதி யுடையவனாகி துகாராமரை யழைத்துவர ஒருமனிதனையுங் குதிரையும் அனுப்பினான். இதைத் துகாராமர் கண்டு பெருமானை நினைத்து ஸ்வாமி! அபிமானம் இடம்பம் முதலான துர்க்குணங்க ளடியேனுக் கில்லாமற் செய்யவும், இதனாற் சுகத்தை யடைவேனென்று வேண்டி தனக்கு அபேக்ஷைக ளொன்று மில்லையென்று ஓர் சுலோகத்தை எழுதி, வந்த மனிதனிடங் கொடுத்து அவனை அக்குதிரைமே லேற்றிக்கொண்டு போய் அரசனிட மதனை கொடுக்கச் சொன்னார். அவ னவரை நோக்கி ஐயா! இது துஷ்டக்குதிரை, யாரையு மேற விடங்கொடுக்கிறதில்லை யென்ன, துகாராம ரிதைக்கேட்டு அக்குதிரைமேற் றனது கையை வைத்துத் தட்விக் கொடுத்து ஏறிக்கொண்டுபோவென்றார். அது சாந்தகுணத்தை வகிக்க, அம்மனித னதின்மேலேறிக் கொண்டு இராஜனிடம் வந்து பத்திரிகையைக் கொடுத்து நமஸ்கரித்தான். அரச னவரது நிரபேக்ஷையைக் கண்டு விசேஷ வஸ்திர பூஷணங்களுடன், தான் துகாராம ரிருக்குமிடம் வந்து கீர்த்தனை செய்யும் வேளையில் அவர்முன் அவைகளை வைத்து நமஸ்கரித்துப் பூஜைகளைச் செய்தான். துகாராம ரிதைக்கண்டு கோராதது வந்ததே! எனக்கு திரவியமேன்? எப்பவும் விட்டல நாமத்தால் திருப்தி யடைந்து சதானந்த பூர்த்தியாக விருப்பேனே! ஹரிநாம மொன்றையே என்மனது விரும்பிற்று, வேறொன்றையுங் கோரவில்லை, உலகில் சூரியனைக்காணத் தீவட்டி வேண்டுமோ? என்முன் வைத்தத்தனம் கோ மாம்சத்திற்குச் சரியாகும், நீர் ஏகாதசி விரதத்தை யனுஷ்டித்துத் துளசிமாலையைக் கண்டத்திலச..ந்துக்கொண்டிருந்தா லெனக் கது திருப்தி யாகுமென்று

சொல்ல, அரச னந்தத் தனத்தை யெல்லாம் பிராம்மணர்களுக்குப் பங்கிட்டுத் துகாராமர் சொல்லுங் கதையைக் கேட்டுக்கொண்டிருந்தான். ஹரிகுணுநுவாதத்தை சுஸ்வர கானத்துடன் அவர் செய்துக்கொண் டிருக்கக் கேட்போருக்கு மதுரமாகியும் பெருமான்மீது பிரீதியு முண்டாகச்செய்தது. அவருடைய கதானு சந்தானமாவது—விட்டலரே தாயார். விட்டலரே தகப்பனார். விட்டலரே சம்பத்து. விட்டலரே பந்துவு. விட்டலரே சிநேகிதர். விட்டலரே தனம். விட்டலரே ஆத்மா. ஏகாந்தமும் விட்டலரே. எங்கும் விட்டலரே. உள்ளும் வெளியும் விட்டலரே. லோகாந்தத்திலும் விட்டலரே. விட்டலரைத் தவிர இதரத்தைப்பார்த்தாலென்கண்கள் கெடக்கடவன. விட்டலரைத்தவிர எனது நாக்கு வேறொன்றைத் தோத்திரஞ் செய்யாது. விட்டலரைச் சொல்லாத பிரமஞான மிவ்விடத்தில் விகித மாகாது. அவநம்பிக்கையற்று ஸ்ரீவிட்டலரைச் சேவித்தால் பிரமை நிவர்த்தியாய் விடும். சொல்பவனும் விட்டலரே, கேட்பவனும் விட்டலரே, என்றிவ்வாறு கீர்த்தனை செய்ய அரசன் கேட்டு விரக்தி யடைந்திருந்தான். ஆருணுதபத்தி லாரதியைக் கொடுக்க அரச னெழுந்திருந்து மந்திரிகளைப் பார்த்து நான் வனத்திற்குச் செல்லுகிறேன், நீங்களென்னிடம் வரவேண்டா மென்று தெரியப்படுத்த அவர்க ளரசன் தாயாருக்கு கடித மெழுதிச் சங்கதிகளைத் தெரிவித்தார்கள். அவ ளதைப் பார்த்துப் பல்லக்கிலேறித் துகாராமரிடம் வந்து நமஸ்கரித்து முந்தானை (முன்றானை) யை விரித்து கண்களிற் ஜலம் பெருக என் குமாரனை எனக்குத் தாரும், அரசாக்ஷியைச் செலுத்த வேறு பிள்ளைக ளில்லை. இவனுக்கும் இனி இராஜ்ஜியத்தைப் பரிபாலனஞ் செய்ய பிள்ளைகளில்லை, இவன் விரக்தசித்தனாய்க் கானகத்திற் சென்றால் அரசாக்ஷி எப்படியாகுமென்று பரிதபித்தாள். துகாராம ரிதைக்கேட்டு அரச னிரவிற் கீர்த்தனைக்கேட்க வருமளவில் பாண்டுரங்கருடைய கருணை யுண்டாகும்படி சிலவார்த்தைகளைச் சொல்லுகிறேனென் றவளுக்குச் சமாதானப்படுத்தி யனுப்பினார்,

இரவுகால மானதே அரசன் கதையைக் கேட்கவந்தான். அப்பொழுது துகாராம் கர்ம மார்க்கத்தைச் சொல்ல ஆரம்பித்து சம்சாரத்தி லிருந்து தரிப்பதற்குச் சத்கருமங்களை வெகுவாகச்



காவஜ்ஞமாலி. సంజ్ఞమాలి.

விவேகசிந்து விப்பிரன். వివేకసింధు విప్రుడు.

லோகஜ்ஞகாம் பிராம்மணன். లోకజ్ఞకాం బ్రాహ్మణుడు.

செய்யவேண்டும், சுவதருமத்தை யவலம்பித்து சத்தியத்திற்கு விரோதமின்றி நடக்கவேண்டும். இதர தருமங்களை யுத்தமமெ ன்று கொள்வானாயின் அவை தருமோபாயங்களாகா. நீரை விட்டு மச்சங்கள் நெய்யிலிருக்கக் கூடுமா? சர்வேஸ்வரன் வைத்த விதத்தில் நாமிருந்தே சத்கதி யடைய வேண்டும். வேத வசனங் களுக்கு விரோதஞ் செய்யாமல் விகிதமான பிரவர்த்தனையி லிருந் தால் பண்டரிநாதன் பதத்தை யடையலாம். பர தனத்தை விஷ துல்யமாகவும் பரஸ்திரிகளைத் தாய்மாராகவும் பார்த்து வர்ணா ஸ்ரம விதியை நடப்பித்துக்கொண்டு சத்தியத்தைத் தவறாமல் இராம நாமத்தைப் பிரீதியுட னுச்சரித்துத் துஷ்ட ஜனங்களோடு கூடாமல் சர்வபூதங்களிலும் கருணை யுடையவனாகி சமுசாரத்தி லிருப்பதைப் பார்க்கிலும் சாதன மெதுவுமில்லை. சமுசாரத்தை நல்லதன்றென்று அதனை விட்டிருப்பது தகாதென்று அனேக விதங்களாகத் துகாராமர் சொல்ல அரசன் கேட்டு சந்தோஷித்து நான்கு தினங்க ளவ்விட மிருந்தான்.

நாவஜி மாலி (தோட்டக்காரன்.)

துகாராமர் ஹரிகீர்த்தனைச் செய்யுமளவில் நாவஜி யென்னு மோர் தோட்டக்காரன் ஆனந்தத்துடன் நடனஞ் செய்துவருவான், அதைக்கண்டு அவ்விடத்திலுள்ள ஜனங்கள் சந்தோஷ மடைவார் கள். பெருமாளுக்கும் பிரியம் மிகுதியாக விருந்தது. பகற் காலத் திற் புஷ்பமாலைகளைக் கட்டி ஹரிகீர்த்தனை சமயத்தி லனைவருக் கும் ஹிதபரனாகி அம்மாலைகளைப் பிராம்மணர்களுக்குப் போட்டுத் துவாரகையி லிருந்த சரக்கு பண்டரி புரத்திற்கு வந்ததே! இது வாச்சரிய மல்லவா! நமக் கெவ்வளவு மேன்மை யாயிற்றென்று சிரிப்புடன் நடனம் பண்ணுவதாக விருப்பான். ஒரு பிராம் மணன் விடியற்காலத்தில் ஸ்நானத்திற்காக அம்மாலி (தோட்டக் காரன்) யிருக்குந் தோட்டத்திற்குச் சென்று அவனைக்கண்டு துவா ரகையி லிருந்து சரக்கு வந்ததைப் பார்க்கவில்லை, நீ பொய் சொல் லுகிறாயாதலால் அதோகதிக்குப் போகவேண்டிவரு மென்றான். மாலி யிதைக்கேட்டு இன்றுமுத லப்படிச் சொல்வதை விட்டுவிடு கிறேன். மேன்மை யாயிற்றென்று தனது நாக்கைப் பிடுங்கிவிட்டு, அன்றிரவில் ஹரிகீர்த்தனைக்குப் பிரீதியுடன் வந்து பேசாமலிருந்து நடந்த சங்கதியை எழுதி காண்பித்தான். ஜனங்க ளதைக்கண்டு சரி

யென் றிருந்தார்கள். அவ்வேளையி லொரு குடியானவன் வெள்ளரிக்கா யொன்றைக் கொண்டுவந்து துகாராமர் முன்பு வைத்துத் தெண்டனிட்டான். அவனுடைய சத்பாவத்தைக் கண்டு அந்தக் காயை நாலு துண்டாக அறுத்து மூன்று துண்டைத் துகாராமர் பக்ஷித்து ஒருதுண்டை யவ்விடம் வைத்தார். அவ்விடமிருந்த பண்டிதர்கள் பிரசாதத்தைக் கொடுமென்று கேட்க, அதுநீங்கள் சாப்பிடத் தகுதியான தல்லவென்று மாலிக்குப் பாதி துண்டைக் கொடுக்க, அவன் பக்ஷித்துப்பேசலுற்றான். இதைக்கண்டு யாவருமாச்சரியப் பட்டார்கள். மீதி அரைக்கால் துண்டை யனைவருக்கும் பங்கிட்டுக் கொடுக்கக் கசப்பென் றெல்லோரு முமிழத்துடங்கினார்கள். அந்த வெள்ளரிக்காய் கசப்பென்று விசேஷபாகத்தைத் துகாராமரே பக்ஷித்தார். நாவஜி அப்பொழுது சந்தோஷத்துடன் கூடி நடனஞ்செய்ய வாரம்பித்தான். அரசனுமந்த விந்தையைக்கண்டு சந்தோஷித்து அரசாக்ஷிக்குப் பிள்ளையுண்டாகப் பிரசாதத்தைக் கேட்க, அப்படியே யாகக்கடவதென் றோர் தேங்காயைக் கொடுத்தருளினார். அரசனும் நமஸ்கரித்து நகரத்திற்குச் சென்றான். துகாராமரும் தேஹூ கிராமத்திற்கு வந்தார்.

சிஞ்சவடியில் நிவசித்திருந்த சிந்தாமணி ஸ்வாமி யாத்திரை செல்ல யத்தனித்து வழியில் தேஹூ கிராமத்தில் வந்திறங்கினார், துகாராம ரவரைக் கண்டு தெண்டன் சமற்பித்து நிற்க, சிந்தாமணி சுவாமி போஜனமளிக்கும்படி வேண்டினார். துகாராமர் சம்மதித்துத் தன் வீட்டிற்குச் சென்று ஒருவருக்கு வேண்டிய சாமக்கிரிகையைக் கொண்டுவந்து கொடுத்தார். அது தனக்கும் தன்னுடனிருக்கும் பிராம்மணர்களுக்கும் போராதென்று சிந்தாமணி ஸ்வாமி சொல்ல, துகாராமர் சர்வேஸ்வரனை நினைத்துச் சாமக்கிரிகைக் கொஞ்சமாகக் கொண்டுவந்தேன், அனேக ஜனங்கள் வந்ததால் ஓ பண்டரிநாதா! அது அனைவருக்கும் பூர்த்தியாகும்படிக் கருணைசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்தார். இதைக் கேட்டு பாண்டுரங்கர் மறைந்திருந்து சகலருக்கு மது பூர்த்தியாகும்படி செய்தருளினார். சிந்தாமணிசுவாமி தெண்டனிட்டு இந்த விந்தையான செய்கைக்கு ஆச்சரியப்பட்டு ஓரிரவவ்விட மிருந்து கீர்த்தனையைக் கேட்டு சந்தோஷத்துடன் யாத்திரைக்குச் சென்றார்.

ஒரு பிராம்மணன் திரவியாபேக்ஷையால் ஞானதேவரிடம்

தவத்தைச் செய்துக்கொண்டிருக்க, அவர் அவன் சொப்பனத்தில் வந்து துகாராமரிடம் செல்வையேல் உனக்கு வேண்டும் திரவியத்தை யடையலாமென்று சொல்ல, அவன் சந்தோஷித்துத் துகாராமரிடம் வந்து சொப்பனத்திற் கண்டதைத் தெரிவித்தான். அவர் வெகுவாகக் கவலித்து உலகிலிந்த உபாதி எனயிற்றென்று அவனை நோக்கி லோஹகாமுக்கு நீ போனல் அவ்விடம் சிவாஜி தட்டானுனக்குப் பொன்னைக் கொடுப்பானென்ருர். இதைக்கேட்டு அவன் லோஹகாமுக்கு வந்து அந்த தட்டானிடஞ் சென்று துகாராமர் சொன்ன வார்த்தையை வெளியிட்டான். அந்தத் தட்டான் மூன்று இரும்பு தடிகளைக் கொடுத்தான். அந்தப் பிராம்மணனிவை இம்சாயோக்கியமான கருவிகள், எனக்கென்ன உபயோகமென் றிரண்டை காட்டிற் போட்டு ஒன்றுடன் துகாராமரிடம் வந்தான். அவரிடம் போனமாத்திரத்தில் அது சுவர்ணமாயிருந்தது. இதைக்கண்டு துகாராமர் யாருக்கும் சொல்லவேண்டாம், ஞானதேவர் கொடுத்தார், நீ போகக் கடவையென்று சொல்ல, அவன் திரும்பி காட்டிற் சென்று அவ்விடம் போட்ட இரும்புதடிகளிரண்டையும் தேடுமளவில் காணமற் போயின. நமக்கிம்மாத்திரந் தான் பிராப்தமென்று பிராம்மணன் தன் வீட்டைச் சேர்ந்தான்.

ஊமைப் பிள்ளை.

மூலாநதியும் பீமாநதியும் சங்கமாகுமிடத்திற்கு ஓர் பர்வகாலத்தி லொண்டியாகத் துகாராமர் சென்ருர். வழியில் பெரிய ஆரண்ணியத்தில் நடந்து செல்லும் பொழுது காட்டு நாய்கள் பின்றொடர்ந்தன. அவைகள் மனிதரைக் கடித்து இரத்தத்தைப் பானஞ் செய்துக்கொண் டிருக்கும். அனேக நாய்கள் துகாராமரிடம் வந்து மேலேவிழ அவைகளை யவர்கண்டு "குர குர" வென்னுங் கோப லக்ஷண மெனக்கில்லை, நீங்களே கோபங்கொண்டிருக்கிறீர்க ளென்றுசொல்ல, அவை சாந்தத்தை யுடையவைகளாய் முகத்தைப் பார்த்துக் குலைக்காமல் பூமிமேற்றலைகளைவைத்தன. அவர் சங்கமத்திற் சென்று ஸ்நானம் பண்ணி பிரீதியுடன் பண்டரிநாதருடைய தியானத்திலிருந்து மத்தியான வேளையில் இராஞ்சணகா மெனும் ஊருக்கு பிக்ஷைக்கு செல்ல அவ்விடம் பண்டிதனுன ஒரு பிராம்மண னன்னமளித்தான். அதிதி, ஹரி

பக்தனென்று தன் மனதிலெண்ணிச் சந்தோஷித்து, அவரைநோக்கி ஐயா! எனக்கொருபிள்ளை யிருக்கிறான். எட்டுவருஷ மாயிற்று. எதுவும் பேசுகிறதில்லை, அவனூமையென்று உபநயனமுஞ் செய்யாதிருக்கிறோம். அவனைக் கருணைப் பாருமென்று வேண்டினான். அப்பொழுது துகாராமர் அப்பிள்ளையைச் சமீபத்தில் அழைத்து விட்டல விட்டல, என்று உச்சரியுமென்றார். இந்த அனுக்கிரகவசனந் துகாராமர் சொன்னவுடன் அப்பிள்ளை விட்டல சப்தத்தைச் சொல்லி வார்த்தையாடத் தொடங்கினான். மறுநாளவ்விடமிருந்து அப்பிள்ளைக்கு உபநயனஞ்செய்வித்தார். ஜனங்களனைவரும் ஸ்ரீ ஹரி கிருபை யென்று துகாராமரைப் புகழ்ந்தார்கள். அவ்விடமிருந்து வழிநடந்து வரும்பொழுது அந்த நாய்களனைத்தும் பிரியமுடையவைகளாய்க் கூடவே வீட்டிற்குச் சென்றன. ஏகாதசி தினத்தி லன்னமருந்தாமல் தினமுங் கீர்த்தனையை கேட்டுக் கொண்டிருந்தன.

ஒருநாள் நெலதூர் என்னுங் கிராமத்திற்குத் துகாராமர் சென்றார். அவ்விடம் மாலஜியென்னு மொருபக்தன் துகாராமரிடம் வந்து தனக்கு ஹிதமாக நித்தியநியமனத்தைச் சொல்ல வேண்டுமென்று கேட்டான். அதற்குத் துகாராமர் பகவத்கீதையை அவனுக்குப் போதித்து அதனை நீ வாசித்துவந்தால் அசுபமடையாயென்று சொன்னார். அனைப்படியே பாராயணஞ் செய்து வர, ஒரு பிராம்மண னவனிடம் வந்து, நீ அபசப்தமாக வாசிக்கிறாய், அதனாலுனக்கு நரகமுண்டாகுமென்ன, அதுமுதல் மாலஜி பாராயணத்தை நிறுத்திவிட்டான். அந்தப் பிராம்மண னிந்த விகல்பத்தையுண்டாக்கித் தன் வீட்டிற்குச் செல்ல, பாண்டுரங்க ரவனுடைய சொப்பனத்திற் சென்று நான் சந்தோஷிக்கும்படி மாலஜி கீதையை வாசிப்பான். அதைநீ கெடுத்தாய். இது வுனக்குத்தகுதியல்ல. அவன் வீட்டிற்குச் சென்று அவனை வாசித்து வரும்படி செய்யக்கடவாய். இப்படி நீ செய்யாவிடில் உனக்கு சிக்ஷையாகுமென்றார். இதைக்கண்டு பிராம்மண னுதயமானவுடன் மாலஜி யிடஞ்சென்று எப்பொழுதும்போல கீதாபாராயணத்தைச் செய்துவருவா யென்றுச் சொல்லி செம்மையாகக் கற்றுக் கொடுத்து தன் வீட்டிற்குச் சென்றான். மாலஜியும் பின்பு விசேஷ பக்தியை மாதவனிடம் வைத்து விளங்கினான்.

துகாராமர், ஸ்ரீகிருஷ்ண சரித்திரத்தைக் கவித்வகாவியமாகச் சொன்னார். அதில் கிருஷ்ண லீலைகளை வர்ணிக்கு மளவில் யசோதைப் பிராட்டி, கிருஷ்ணமூர்த்தி மலின முகத்தோ டிருப்பதைக் கண்டு தோள்மே லெடுத்துக் கொண்டா ளென்னும் சுலோகத்தைப் பார்த்து, இராமேச பண்டித னிதுசரியல்ல வென்று திருத்தினான். கிருஷ்ணமூர்த்தி அவன் சொப்பனத்தில் வந்து பாலியத்தில் நான் மண்ணைத் தின்றேன் அதினா லென் முகம் மலினமாயிற்று, ஆனதால் துகாராமர் சொல்லியதே சத்தியமாகும், அதில் தப்பொன்றில்லையென்று சொல்ல, அவன் விழித்துக்கொண்டு இதர ஜனங்க ளனைவருக்குஞ் சொல்லித் துகாராமரைக் கொண்டாடினான்.

ஒருநாள் துகாராமர் சங்கரசிகர மென்றோ ரூருக்கு சாம்பமூர்த்தியைச் சேவிக்கச் சென்றார். இரண்டுபேர் சிஷரும் ஹரி நாமத்தை கூடச் சொல்லிக்கொண்டு சென்றனர். பர்வத சிகரத்திற் சாம்பமூர்த்தி யிருப்பதால் அவ்விடஞ் ஜல மகப்படாதென்று மலை யடிவாரத்திலேயே சாம்பமூர்த்தி யாராதனையைச் செய்து பின்பு மலை யேற நிச்சித்து நான்கு பேருக்காகு மவ்வளவு அன்னத்தைச் சமைத்து புசிப்பதற்கு இலைகளைப் போட்டார்கள். அவ்வேளையில் திகம்பரி யொருவர் வந்து போஜன மிடும்படிக் கேட்டார். அதிதிக்கு முன்ன மன்ன மிடும்படி துகாராமர் சொல்ல சிஷ்யர்களும் அப்படியே யென்று திகம்பரிக்கு அன்ன மளிக்க அவர் சமைத்த தெல்லாவற்றையும் வயிறு நிறைய பக்ஷித்து கையலம்பி வெற்றிலைப்பாக்கையுங் கைக்கொண்டு கல்யாணமாகக் கடவதென்று சொல்லிப்போனார். பாத்திரத்தில் அன்ன மில்லாததைக்கண்டு சிஷன் சாமக்கிரிகைக்காக கடைவீதிக்குச் சென்றான். பாத்திரங்களில் ஈக்கள் மொய்க்காம லிருக்க வஸ்திரத்தால் மூடி, சாமக்கிரிகை கொண்டுவந்த பின்பு பாத்திரங்களைத் துலக்க வஸ்திரத்தை நீக்குமளவி லதி லன்ன மிருக்கக்கண்டு சோமசேகரருடைய அனுக்கிரகமென்றும் அவரே அதிதி ரூபமாகவந்துச் சாப்பிட்டாரென்றுஞ் சொல்லி மூவரும் பக்ஷித்துப் பின்பு மலைமேலேறி விசேஷமாகத் தோத்திரங்களைச் சொல்லி ஐந்துநா ளவ்விட மிருந்து அதைவிட்டு சிஷரும் துகாராமரும் ஹரி நாமத்தைச் சொல்லிக்கொண்டும் மனதை ஹரி

திருவடிகளி லிருத்தியும் வழிநடந்து தேஹு கிராமத்திற்கு வந்தார்கள்.

துகாராமர் பிரஜைகளைக் கண்டு ஓர் சுலோகத்தைச் சொன்னார். அதிலடங்கிய பொருளாவது ஹரிநாமத்தைச் சொல்லிக் கொண்டு ஒரு புருஷன் நடப்பானாகில் ஒவ்வொரு அடிக்கும் யக்கியம் செய்தபலம் சித்திக்குமென்று சொல்லி யருளினார். இது சத்தியமென்று ஒரு பிராம்மணன் நம்பி அடிக்கொரு ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டு ஒருகயிற்றிலொரு நாமத்திற் கொரு முடிப்போட்டு வருவான். இப்படி ஓர் வருஷம் கழிந்துவர, ஒரு கிரகஸ்தனுக்குப் பிரம்மராக்ஷஸக் கிரகம் பிடித்து விசேஷ வுபத்திரவத்தைச் செய்ய, ஹரிஹரக்ஷேத்திரத்திற்கு அவன் சென்று வெகுகாலம் பெருமாளை யாராதித்தான். அப்பொழு தந்த கிரகம் ஒரு யக்கிய பலத்தைக் கொடுத்தால் போகிறேனென்றது. அதைக்கேட்டு தேச தேசங்களி லந்த கிரகஸ்தன் யக்கிய பலத்தை யக்கியஞ் செய்தவர்களை யாசித்துத் திரிந்தான். எங்கும் கிடைக்காமலிருந்தது. லோஹ கிராமத்திற்கு அவன் வந்து விசாரிக்குமளவில் அடிக்கொரு ஹரி நாமஞ் செய்யும் பிராம்மணனிதைக்கேட்டு அந்த பிரம்மக்கிரகம் பிடித்த பிராம்மணனைத் தன் வீட்டிற் கழைத்துவந்து தன்னிட மிருக்கும் முடிக்கயிற்றைக் காண்பித்து வுன்மேலிருக்கும் கிரகம் போய்விடுமென்று ஓர் முடியை அறுத்து ஜலத்திற் போட்டு அந்த ஜலத்தைக் குடிக்கும் படிசெய்து ஹரிநாமத்தைச் சொல்லவே, கிரகம் போய்விட்டது. அந்த நாமோச்சாரணையில் யக்கியஞ் செய்த பிரயோஜன மிருந்தபடியால் அது பலிதமாயிற்று.

பிரதி வருஷமு மிரண்டு பரியாயம் துகாராமர் பண்டரிபுரத்திற்குப் போய்வருவர். ஒரு வருஷம் சீத ஜ்வரத்தாற் சரீர மிளைத்திருந்தபடியா லுபாய மொன்றுந் தோன்றாமல் விசன முற்றிருக்க ஆயிரத்து நானூறு கொடி மரங்கள் விளங்க, அனேக வாத்தியங்கள் முழங்க யாத்திராபரர்கள் வந்தார்கள். இப்படி பிரஜைக ளனைவருங் கூடி யிருக்க அவர்களுடன் துகாராமர் போகச் சக்கியமாகாமல் இருபத்து நான்கு சுலோகங்களைப் பெருமாளுக் கெழுதி அவர்கள் கையிற் கொடுத்தனுப்பினார். அந்த சுலோகங்களி லடங்கிய முக்கியசங்கதியாவது—ஸ்ரீஹரி! தேவரீர்

திருவடிகளுக் கனேக நமஸ்காரம். ஓ நாராயணா! விட்டல! நடப்ப தற்கு சக்தி எனக் கிப்பொழுதில்லை. உலகில் நீர் ஜீவர்களுக்கு ஜீவாதாரராகி பூர்ணப் பிரம்மசொரூபராவீர். தேவரீருடைய திரு முக கமலத்தைச் சேவிக்க அடியேனுக் கனுகூலப்படவில்லை, க்ஷே மமாகும்படி கிருபா கண்ணோக்கஞ் செய்யவும். ஸ்ரீஹரி! கிருஷ் ணா! ஜலத்தை விட்ட மீன்களுக்குப் பூமிமேல் நிலமை நேரிடாது. ஓ மதுசூதனா! தேவரீர் முகத்தைக் காணும லதிக தாபத்தை யடைந்தேன். என்று பலவாறாக எழுதி யிருந்தார். அப்பத் திரிகையைக் கைக்கொண்டு விட்டல! விட்டல! என்று அந்த பிரஜைக ளனைவரும் பண்டரிபுரத்தைச் சேர்ந்து பெருமாளை யன்புடன் சிந்தித்து பீமாநதியில் ஸ்நானம் பண்ணி பாண்டுரங்க ரைத் தரிசித்துத் துகாராம ரெழுதிக்கொடுத்த சுலோகங்களைப் பாடினார்கள். மகாபிரேமையுடன் மாதவ னதைக்கேட்டு ருக்மணி பிராட்டியைக்கண்டு நாமிருவரும் துகாராமனிடம் போவோமென் றார். அதைச் செவியேற்றின, பிராட்டி யாத்திரை (திருவிழா) யை விட்டு அவ்விடம் போகத்தகாதென்றும் கருடனை யனுப்பி துகாரா மனை யிவ்விடம் வரவழைக்கலாமென்றும் சொல்லியருளினார் ... னே பெருமாள் கருடனை நோக்கி நீ தேஹு கிராமத்திற்குச் ... று துகாராமனை அழைத்துவா வென்ன, அவர் பகவா னுக் ... யை சிரசாவகித்து தேஹு கிராமத்திற்கு வந்து துகாராமரைக் கண்டு, பெருமா ளும்மைப் பண்டரி புரத்திற்குக் கொண்டுவரச் சொல்லிக் கட்டளை யிட்டார், என்மீதேறி வாருமென்றார். அவ் வேளையிற் துகாராமர் ஊருக்கு வெளியில் வந்து பண்டரிபுரத் ... குப்போன பாகவதர்கள் இன்னம் வரவில்லையேயென்று ஆவலு ... தூரதிருஷ்டியால் பார்த்துக்கொண்டிருந்தார். கருடபகவான் ... பெருமாள் சொன்ன வார்த்தைகளைச் சொல்ல, துகாராம் தெ ... ன் சமர்ப்பித்து அவரைக் கொண்டாடி ஸ்வாமீ! அடியேன் ... திரன், ஈனன், உம்முடைய முதுகின்மேல் நானெப்பவு மேற ... டேன், நீர் கடாக்ஷிக்கக் கடவீர். நீர் பெருமாளிடஞ் சென்ற ... விடத்திற் கவரை அழைத்துவாரு மென்று பிரார்த்திக்கக் ... பகவான் பெருமாளிடம் வந்து ஸ்வாமீ! தேவரீரை அவ்விடம் வரும்படி துகாராமர் சொல்லி யனுப்பினார். பாவபந்தத்தா லென் மேலேற அவருக்குத் தகாதென்று பக்தி நிஷ்டையுடன் கூடினவ

ராகிநின்றூரென்று சொன்னூர். யாத்திரை வந்தப் பிரஜைகள் பெருமாளுக்குப் பூஜைகளனைத்துஞ் செய்து விடைகொண்டு செல்லாநிற்கப் பெருமா ளவர்களை நோக்கி உமது பின்னுலே நாம் வருகிறேமென்று துகாராமனுக்குச் சொல்லு மென்றூர். இதைக் கேட்டு அவர்கள் பிரிய முடையவர்களாய்த் தெண்டன் சமர்ப்பித்து அவ்விடம் விட்டு தேஹு கிராமத்திற்கு வந்தார்கள். துகாராம ரின்னம் பெருமாள் வரவில்லையே வென்று எட்டி எட்டிப் பார்த்துக்கொண்டு தொந்தரவுட னிருந்தார். யாத்திராப்பரா ளவ்வேளையில் வந்து, பண்டரிநாதர் பின்னே வருவாரென்று சொல்ல, பெருத்த பிரீதியுடன் பெருமாள் வரவுக் கெதிர்ப் பார்த்திருந்தார். அத்தருணத்தில் கருடபகவான் முதுகின்மேல் பெருமாள் பிரியத்துடன் வந்தார்: துகாராமர் நமஸ்கரித்து நிற்க, கோவிந்தன் துகாராமர் கையைப் பிடித்துக்கொண்டு அவர் கிரகத்திற்கு வந்து பசி அதிகமா யிருப்பதால் போஜனமளிக்கச் சொல்லிக் கேட்டார், அப்பொழுது துகாராமர் தன் மனையாளைக் கண்டு சீக்கிரத்திற் சமையலைச் செய்யென்றும் வேறென்றையு மெண்ணுமல் பெருமாளுக் கென்றே செய்ய வேண்டு மென்றும் திட்டப்படுத்தினூர். சமையலான பின்பு மனையா ளிலைகளிற் பிரசாதத்தை வட்டித்தாள். இருவரும் பக்ஷித்தபின் பெருமாள் மறைந்தருளினூர்.

### விவேகசிந்து விப்பிரன்.

ஒரு பிராம்மணன் விவேகசிந்து வெனு மோர் கிரந்தத்தைப் பார்த்து துகாராமருடைய கீர்த்தனை பிரசங்கம் துச்சமென்றுச் சொல்லி பகவான் தனக்குள் ளிருக்க அங்குமிங்கு மேன் திரிய வேண்டுமென்றும், துகாராமருக் கிதை தெரிவிப்போமென்றும் அவரிடம் வந்தான். அவ்வேளையில் நதி தீரத்திற் றுகாராமர் நாம பஜனை செய்துக்கொண்டிருந்தார். அந்தப்பிராம்மணன் தன்னிடம் வந்ததைக்கண்டு ஒருவருக் கொருவர் வந்தன வழிபாடுகள் செய்தார்கள். பின்பு பிராம்மணன் சொல்லுவான், முகுந்தராஜரெனும் முனிவரா லோர் கிரந்தம் செய்யப்பட்டிருக்கிறது. அது மேன்மை பொருந்தி, விவேகசிந்து வெனும் நாமத்தை யுடைத்தாய் விசேஷார்த்தங்க ளடங்கி யிருக்கின்றது. அதனை சொல்லுகிறேன் நீ கேட்பாயாக வென்று புகல, துகாராம ரந்த பிராம்மணனை மன்

ணிக்கும் பொருட்டு அப்படியே யாகட்டு மென்று ஓர் கோணியை முக்காடிட்டுக்கொண்டு சராசரங்களைக் கண்டால் மனது சலன மடையும், வேறு சிந்தையின்றி கேட்கக் கடவேனென்று கண்களை மூடி பிராம்மணன் முன் உட்கார்ந் திருந்து புத்தகத்தை அவன் வாசிக்கு மளவில் அவர் மௌனமுற் றிருந்தார். அவனு மொவ்வொரு பதத்திற்கும் அர்த்தங்களை விஸ்தரித்து விசதமாக ஒரு ஜாமம் பரியந்தம் சொல்லிச் சொல்லி அலண்டு, துகாராமருடைய முட்டாக்கை யெடுத்துப்பார்க்கு மளவில் அவர் காதுகளை மூடிக் கொண்டு கிரந்த நுட்பங்களைக் கேளாமலே யிருந்ததாக வறிய லுற்றான். இதைக்கண்டு அந்த பிராம்மணன் ஐயோ! வீணிலே நா னிதுவரை வியாக்கியானஞ் செய்தேனே! இதனை நீ கேட்பா யென்று வெகுதூரத்தி லிருந்து வந்தேனே! என்று சொன்னான். துகாராம ரவனை நோக்கி ஐயா! ஈஸ்வர பக்தி ரஹிதமான இந்த பிரம்மஞானம் ருசியற்றிருக்கும், இதனால் அவன்விஷயமான தாஸ்ய ரசம் விக்ஷேபிக்குமென்று அதனைச் கேட்க விருப்பமற் றிருந்தேன். பிரஜைக ளனேகர் ஜகத்தை யெல்லாம் பிரம்ம மென்று சொல்லிக்கொண்டு ஒவ்வொரு காசுக்கும் விவாதங்களைச் செய்துக்கொண்டு, விபரீதமான வாசைகளி லிருப்பார்கள், எல்லா மவன்மயம், பேச்சுக் கிடமில்லையென்று சொல்லுவார்கள். இது சொல்மாத்திரமே யொழிய கிரியை யாகமாட்டாது. தேக மிருக்கும் பரியந்தம் தேவனென்றும் பக்த னென்றும் மரியாதை யை வைப்பது மகா மேன்மையாகுமென்று துகாராம் சொல்ல, அந்த பிராம்மணன் சர்வாத்மனான ஸ்ரீ நாராயணனுடைய சொரூப ரூப குண விபூதிகளை யனுபவத்திற் பெற்று பூர்வாசாரியர்கள் செய்த பிரபந்தங்களை வாசித்து ஸ்ரீஹரி பக்தியிற் சிறந்தவனானான்.

### லோஹகாம் பிராம்மணன்,

துகாராமர் லோஹகாமி லிருந்துக்கொண்டு கதை செய்துவந் தார். ஆங்கோர் உப்புநீர் கிணற்றில் ஸ்நானஞ்செய்ய அது நல்ல ஜல மாயிற்று. ஸ்ரீஹரிதாசருடைய ஸ்பரிசத்தால் அதனில் மகிமைகாண ப்பட்டது. அவ்வூரிலோர் பிராம்மணன் துகாராமரிடம் மிகுந்த பக் தியுடையனாய் சாஸ்திரங்க ளனைத்தையுஞ் செம்மையாக வாசித்து வெறுப்புடன் வீட்டை விட்டு ஏகபக்தியாக ஸ்ரீஹரி பஜனையி லீடு பட்டிருந்தான். ரூபவதியான வவனுடைய மனைவி விரோதத்தைப்

பாராட்டித் தன் புருஷனை துகாராமர் கெடுத்தாரென்று தூர்ப்புத்தியைத் தான் கொண்டு துகாராமரைப் போஜனஞ் செய்யும்பொருட் டொருநாள் தன் வீட்டிற்கழைத்து வெள்ளரிக்காய்களைச் சாப்பிடக் கொடுத்தாள். துகாராமர் சந்தோஷத்துட னவைகளைக் கைக்கொண்டு பக்ஷித்தார், அவை கசப்பான காய்கள், கசப்பென்றறியாமல் ரசனேந்திரியத்தை ஜயித்தாராகி சுகமாகச் சாப்பிட்டுத் தன் னிருப்பிடஞ் சென்றார். அந்தப் பிராம்மண ஸ்திரீக்குக் குன்மவியாதி யுண்டாயிற்று. கெடுதலை எண்ணமுந் துஷ்கருமமுமுடையவ ளாதலால் சிகிச்சைக ளெத்தனை செய்தாலும் வியாதியதிகமாயிற்று, அதனு லவள் கஷ்டத்தையே யடைந்திருந்தாள்.

விரத விப்ரன்.

ஆத்மசுத்தியுடைய ஓர் பிராம்மணன் துகாராமரைப் போஜனத்திற் கழைத்தான். அவன் ஆவணி (சிராவண) மாதத்திற் சோமவார விரதத்தை நிஷ்டையுட னனுஷ்டித்து வருவான். பர்த்தாவும் மனைவியுந் துகாராமருடன் பக்ஷித்துக்கொண்டிருக்கு மளவில் அவ்விடத்தி லேற்றிவைத்த விளக்கில் எண்ணெய்க் குறைவானதால் அணையச்சித்தமா யிருந்தது. அப்பொழு தந்தப் பிராம்மணன் மனையாளைக்கண்டு தைலங்கொண்டுவா வென்ன, அவள் வீட்டிற் றைல மெம்மாத்திரமு மில்லை யென்றாள். இதைக்கேட்டு அந்தப் பிராம்மணன் கடைவீதிக்குச் சென்று கொண்டு வருகிறேனென்றான். அதற்கு அவள் கடைவீதி வெகுதூரத்தி லிருக்கிறதென்றாள். இவ்விதமாக சதி பதிக ளிருவருஞ் சொல்லிக்கொண்டிருக்கத் துகாராம ரவர்களைக் கண்டு பாத்திரத்திற்குள் எண்ணெயிருக்கும், பார்க்கக் கடவீர்களென்ன, அப்பொழு தம்மாது எழுந்திருந்து அப்பாத்திர மிருக்குமிடத்திற்சென்று பார்க்குமளவி லெண்ணெய் அதில் நிறைந்திருந்தது. இதைக்கண்டு சதிபதிக ளிருவரு மதிகமாக சந்தோஷித்து அம்மாது விளக்கி லெண்ணெவிட்டாள். துகாராமருடன் அனைவரும் சௌக்கியமாகப் பக்ஷித்தார்கள்.

அவ்வூரில் பள்ளிக்கூடமொன் றிருந்தது. அவ்விடத்தி லோர் சகடத்தை யூரார் வைத்திருந்தார்கள். அந்தச் சகடத்தி னருகில் துகாராமர் சில சமயங்களில் உட்கார்ந் திருப்பார். அப்போதொருவன் சுரைக்காய் குடுக்கை வைத்துக்கொண்டு துகாராமர் முன்பு கூத்தாடிக்கொண்டிருந்தான். அதைக்கண்டு அவ ரென்ன



சோமவாரவிரதபிராம்மணன்.
సోమవారవ్రతద్విజుడు.

லோஹகாம்பு ரோஹதன்.
లోహకాంభ రోహతుడు.

ஊமைப்பிள்ளை.
మూఁగపుత్రుడు.

வேண்டுமென்று அவனைக்கேட்க அவன் கையிலிருந்த இரும்பு தடியை பக்கமிருந்த பாறைமேல் வைத்து அவரை நோக்கி, இந்தவூரெங்கு மாறுமாசமாகத் திரிந்தேன், சுரைகுடுக்கை கிறையவில்லையென்று ஆடிக்கொண்டிருக்கிறேன் என்று சொன்னான். துகாராமர் கையாலந்த இரும்புதடியைத் தொட்டபோதே அது சொர்ணமாயிற்று. அவனதிக சந்தோஷத்தை யடைந்து அதை கைக்கொண்டு தன்னிருப்பிடஞ் சென்றான். உலகத்தார் துகாராமரை விசேஷமாகக் கொண்டாடினார்கள்.

லோஹகாம் புரோகிதன்.

அவ்வூரி லிருக்கும் புரோகிதன் துகாராமர்மே லதிகப் பிரீதியுடையவனாய் சார்வதா கீர்த்தனைக்கு நியமந்தப்பாமல் வந்து பிரேமையுடன் ஹரி கதையைக் கேட்டுக்கொண் டிருந்தான். ஒருகாலத்தி லவனுடைய சிசுவு அதிக நோயால் வருத்தப்பட்டுக்கொண்டிருக்க அன்றிரவி லோர் ஜாமராத்திரியிற் கலங்கின மனதுடன் புரோகிதன் கதையைக் கேட்க வந்தான். அச்சமயத்திற் சிசுவு வீட்டில் மரணமடைய, அதின் தாயா ரச்சவத்தைக் கையி லேந்திக்கொண்டு துகாராமரிடம் வந்து அழுதுக்கொண்டு சொல்லுவாள், உமக்கு பகவானிடம் பக்தி உண்மையாக யுண்டாயிருந்தால் இச்சிசுவை எழுப்பவும். இல்லையெனி லது டாம்பீகமேயாம், எனது பர்த்தா உம்மை யனுசரித்ததுமுதல் ஆபத்துக்களே அதிகமாக வருகின்றனவென்று சொன்னாள். துகாராம ரதைக்கேட்டு கண்களை மூடிக்கொண்டு தியானத்திலிருந்து சற்றுநேரங் கழித்து பின்னைவருங் கேட்க, ஓ புராண புருஷா ! பாண்டு ரங்கா ! ஸ்ரீஹரி ! பூர்வகாலத்தில் பக்தர்கள் நிமித்தியமாக நீர் செய்த சரிதைகளை இப்போ தென்விஷயத்திற் காண்பிக்கக் கடவீரென்று அனேக விதங்களாக ஹரியைப் பஜித்துக்கொண்டு ஆர்த்தியுடன் கண்களில் நீர் பெருகி நிற்க, பெருமாள் ஆவிற்பவித்து நாமத்தை உச்சரிக்கச் சொல்லி உத்தரவு செய்தார். அப்பொழுது சபாஜனங்களனைவரையுந் துகாராமர் கண்டு பரிசுத்த மனதுடனும் பக்தியுடனும் விட்டல நாமத்தைச் சொல்லக் கடவீர்கள், நாமம் சஞ்சீவனமாகுமென்று நுவல, சகல ஜனங்களும் விட்டல! விட்டல! என்று சொல்லத் தொடங்கினார்கள். அதனால் பெருத்த ஓசையுண்டாயிற்று. அச்சமயத்தி லவ்விடத்தி லனைவருக்கு விஸ்முருதி (மறதி)

யுண்டாயிருந்தது. குழந்தையு முயிருடையதாகி எழுந்திருந் துட்கார்ந்து, அனைவருடன் தானும் பஜனை செய்யத் தொடங்கிற்று. இதைக்கண்டு தாயார் வியப்புற்று சந்தோஷத்தை யடைந்து நேமத்துடன் ஹரிநாமத்தைச் சொல்லுற்றாள். அப்பொழுது இரண்டு ஜாம மிராத்திரியாய் விட்டது. அவ்வேளையில் தண்ட கமண்டலங்களுடன் ஸ்ரீபாதஸ்வாமி யெனுமோர் சன்னியாசி ஹரிகதையைக் கேட்கவந்துட்கார்ந்தார். துகாராமர் முக்கியமாக ஹரி நாமப் பிரபாவத்தைச் சொல்லத் தொடங்கி அது சந்தேகமின்றி சாரத்திற் கெல்லாஞ் சாரமாக விருக்கும். சகல கருமங்களுக் காதியில் ஸ்ரீஹரி நாமமே சொல்லப்படும். கர்மத்திற்கு முடிவி லந்த நாமமே சிரேஷ்டமாக உச்சரிக்கப்படும். நாமமே பிரமமாகும். நாமமே கர்த்தாவாம். நாமமே சகலமாம். நரர்களுக்கு நாமமே கதியாம். அதனை நீங்களனைவரும் உச்சரிக்கக் கடவீர்களென்று சொல்லி விட்டல! விட்டல! ஹரீ! நாராயணா! என்று விசேஷமாகத் தானும் கர்ஜனைச்செய்து அனைவரையும் சொல்லச் செய்தார்.

## ஸ்ரீபாதஸ்வாமி.

ஸ்ரீபாதஸ்வாமி இவ்விதமான ஹரிகதையைக் கேட்டு சூத்திரன் முகத்தால் ஹரிகதையைக் கேட்கக் கூடாதென்று சொல்லி புனபட்டணத்திற்குச் சென்று அவ்விடத்திய வதிகாரியைப் பார்த்துத் துகாராமன் கர்ம மார்க்கத்தை மூழ்கடித்தான், கலிகாலத்திற் கிது விபரீதமாம், மமத்வ மின்றி யிருப்பதும் நாம மகிமையைச் சொல்வதும் உலகத்திற்கு மிகுதியான விக்கினங்களாம், அவனுக்கு பிராம்மணர்க ளனைவரும் நமஸ்கரித்து வருகிறார்களென்று பிரபுவுக்குச் சொல்லுமளவில் அவனந்த சன்னியாசியைப் பார்த்து! நான் துகாராமரை வரவழைத்துச் சங்கதியை விசாரித்து சிக்ஷைக் குட்பட்டவர்களைச் சிக்ஷிக்கிறேன். நீர் சொஸ்தமாகப்போமென்று சொல்லி தேஹு வூரிலிருக்கும் பிராம்மணர்களுக்கு பத்திரிகையெழுதி அதி லைம்பது ரூபாய் அபராதமென்றுக் காட்டி சர்க்கார் சேவகனிட மனுப்பினன். சர்க்கார் சேவகனை அவ்வூரார்கண்டு அவன் கொண்டுவந்த பத்திரத்தைப் பார்த்து விசனமுடையவர்களா யிருந்தார்கள். அபராத விஷயமாயிருப்பதைத் துகாராமர் கேட்டு பெருமாள் நம்பக்கலிலிருக்கப்

பயமேதுக்கு? தண்டனை திரவியத்தைப் பிரபுமுன்பாக வைப் போமென்றுசொல்லி அனைவரும் நாமத்தைச் சொல்லிக்கொண்டு பூனா பட்டணத்திற்குச் செல்லத்தொடங்கினார்கள். அவ்வூருக்குச் சமீபத்தில் இரண்டு நதிகள் சேருந் தலத்திற் றுகாராமரிறங்கி சந் தோஷத்துடன் ஸ்நானம்பண்ணி பூஜைகளை முடித்துக்கொண்டு தாளம் வீணை மிருதங்கங்களுடன் தாமோதரனைப் பாட வாரம் பிக்க, அமித ஜனங்கள் காணிக்கைகளுடன் வந்தார்கள். வெகுபேர் துகாராமரைப் பார்க்கப் போவதை பிரபுவானவன் கேட்டு விசே ஷப் பிரீதியுடன் கனிவர்க்கங்களையும் புஷ்பமாலைகளையுங் கைக் கொண்டு தானும் அவ்விடம்செல்ல வெத்தனிக்க, சன்னியாசி குறுக்கேவந்து நீர்போவது சரியல்ல வென்றான். அதற்குப் பிரபு சொல்லுவான், உலகத்தாரைப்போல நானும் அவரைப்பார்த்துப் பட்டணத்திற்கு வரவழைத்து விசாரணை செய்வேனென்று சொல் லித் துகாராமரிடம் சென்று தெண்டன்சமற்பித்து மதுரமான ஸ்ரீஹரிகீர்த்தனையைப் பிரீதியுடன் கேட்டுக்கொண்டிருந்தான். அவ்வேளையி லோர் புருஷன் திகம்பரியாகி விபூதியை உடம்பெங் கும் பூசிக்கொண்டு பிரகாசம் பொருந்திய உருவத்துடன் துகாரா மரிடம் வந்து தெண்டன் சமர்ப்பித்துப்போய்விட்டார். அங்குள் ளோ ரனைவரு மிதைக்கண்டு சாம்பமூர்த்தியா யிருக்கவேண்டு மென்று சிலர் சொன்னார்கள். தத்தாத்திரய ரென்றுஞ் சிலர் சொன்னார்கள். அப்பொழுது துகாராமர் சத்தா தாரகமான ஹரி கீர்த்தனையை முடித்தார். அந்த பிரபு துகாராமரை பட்டணத் திற்கு வரும்படிப் பிரார்த்திக்க அவர் பிரபுவுடன் கூடிப் பட் டணஞ்சென்றார். அந்த தினத்தில் நகரவாசிகளும் சவுகார்களும் துகாராமர் நிமித்தியமாக இரண்டாயிரம் பிரஜைகளுக்குப் போ ஜனம் நடப்பித்தார்கள். மூன்றாஞ் சாமத்தில் துகாராமர் கீர்த் தனை செய்ய முன்னிற்க, அனேக ஜனங்கள் அக்கீர்த்தனையைக் கேட்க வந்தார்கள். ஸ்ரீபாதஸ்வாமிகளைப் பிரபுவானவ னழைத்து வாதஞ் செய்யச்சொல்லிக் க்கட்டளையிட்டு, தோற்றுப் போனவர் களை யுடனே சிக்ஷிப்பேனென்றான். குடிலர்களான சன்னியாசி கள் சிலர், ஸ்ரீபாதஸ்வாமியுடன் சேர்ந்து அவ்விடம் வந்து சந்தேக மின்றி நாமே கெலிப்போமென்று நம்பிக்கையுட னிருந்தார்கள். துகாராமர் ஹரிநாமத்தை கர்ஜித்து கதையைச்சொல்ல வாரம்

பித்தார். அதாவது இச்சரீரம் நிச்சயமென் றெப்பவு மெண்ணக் கூடாது, நிமிஷ நிமிஷத்திற்குங் காலன் ஆயுளைப் பக்ஷித்து வரு கிறான். கண்காக்ஷியாகக் காணப்பட்ட சகலமும் முடிவையுடை யதா யிருக்கிறது. ஸ்ரீஹரிபஜனையைச் செய்யாதிருந்தால் நரகம் சித்தமாகும். மோக மமத்வங்கள் போகாமையால் நித்தியசுகம் முழுகிப்போகின்றது. ஹரிநாமந்தா னிந்த கலியுகத்தி லதிக சார மாயிருப்பது. இதைச் செய்துவந்தால் சமுசாரப்பிரமை தீர்ந்து போமென்று அனேகப் பிரகாரங்களாகச் சொல்லி ஹரி பரதந்திர ராகித் துகாராமரிருக்க, சன்னியாசிக ளவருக்குச் சரணமடைந் தார்கள். அதிகாரி யவ்வேளையி லவர்களைப்பார்த்து இப்படிசெய் வதென்னவென்று கேட்க, அவர்கள் சொல்லுவார்கள், துகா ராமர் ஸ்ரீஹரி ரூபத்துட னெங்களுக்குக் காணப்பட்டா ரதனால் தெண்டன் சமர்ப்பித்தோ மென்ன, பிரபு அவர்களை நோக்கி நீங்கள் சிக்ஷைக்குட்படுவீர்க ளென்று சொல்லி சபாஜனங்களைப் பார்த்து இவர்களை கழுதைகள் மேலேற்றித் துறத்திவிடவேண்டு மென் றான். துகாராம ரப்பொழுது கதையைமுடித்து, துக்கிதராகி சன் னியாசிகளை சிக்ஷிப்பது நீதியல்லவென்று வெகுவிதங்களாகச் சொ ல்லி அவனை வேண்டிக்கொண்டு சிக்ஷையை நிவர்த்திப்பித்தார். அதிகாரியு மரசனுக்குக் கடிதமெழுதி சங்கதியை அறிவித்தான். சிவாஜி ராஜனும் கடிதங் கண்டவுடன் புனவுக்குவந்து தருணோபா யமென்று துகாராமருக்குத் தெண்டன் ஸமர்ப்பித்தான். அன்று ஹரிதினமா யிருந்தபடியால் துகாராமர் இரவில் கீர்த்தனை செய்ய வாரம்பித்தார். அது பரம சுகமாயிருந்தபடியால் பக்தியுட னர சன் கேட்டுக்கொண்டிருந்தான். சிவாஜிக்கு சத்துருராஜன், சிவா ஜியைப் பிடிக்கவேண்டு மென்றெண்ணி, இவ்விடத்திற்தாசி ரவண த்தி லிருக்கிறா னென்பதையறிந்து, அவ்வீட்டுக்கு வெளியிற் சே னையைச் சூழும்படிச் செய்தான். அரசன் இதையறிந்து துகா ராமருடைய ஆக்கினையைக் கேட்கத் துகாராமர், சர்வேஸ்வரனை நினைத்து என்சாவுக்கு நான் பயப்படுவதில்லை. அன்னியருக்கு ஹிம்சை நேர்ந்தா லதைப் பார்க்கச் சகியேனென்று அரசனை நோக்கி நீ ரிங்கிருப்பது விசேஷபிக்கு மானால் நான் செற்றதுபோ லாகும், பெருமா ளுமக்கு நேர்ந்த விக்கினத்தை நிவர்த்தி செய்வா ரென்று சொல்ல, அப்போது சர்வேஸ்வரனே சிவாஜி ரூபத்தை

மேற்கொண்டு அந்த துலுக்கர் சேனைமத்தியில் துரிதமாகப் போகத்தொடங்கினர். அந்த சத்துருசேனை சிவாஜியைப் பிடிக்கவேண்டிப் பார்த்துக்கொண்டிருக்க, வேகமாக நடக்கிறவன் சிவாஜியென்று அர்க்காரன் சொல்ல சேனையனைத்து மவனைப் பிடிக்கவேண்டு மென்ற ஆவலால் பின்னே தொடர்ந்தது. ஓரிடத்திற் பெருமாள் பிரகடமாவதும் ஓரிடம் மறைவாகிறதும் ஓரிடம் சமீபத்திலிருப்பதுபோலக் காண்பித்தலும், ஜனங்கள் பிடிக்கப் போகால் ஓரே ஓட்டமாக ஓடுவதுமாக விருந்தார். துலுக்கரனைவரும் கூடவே ஓடினார்கள். இந்தப் பிரகாரமாக அந்தச்சேனையை ஓர் ஜாமத்திற்குள் இருபது கோசுதூர மிழுத்தார். வழிதெரியாம லிருட்டுவேளையில் ஆரண்ணியத்தில் சேனைதொந்தரை யடைந்து முட்கள்பட்டு வஸ்திரங்கள் கிழிந்து கால்களிலு முட்கள்தைத்து அவர்க ளவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்க, ஸ்ரீஹரி அதிருஸ்யராய் விட்டார். துகாராமர் ஸ்ரீஹரி கதையைச் சிருடன் செய்ய அபாரமான வானந்தத்தை யனைவரு மடைந்தார்கள். சத்துருசேனையாவும் சிதறி யோடினார்களென் றரசன்கேட்டு பய ரகிதனுகி பாண்டுரங்கர் கதை பூர்த்தியாகுமளவு மிருந்தது துகாராமர் அருணோதயத்தி லாரத்தியைக் கொடுக்க அடைவுடன் தெண்டன் சமர்ப்பித்தான். ஹரி பக்தர்களுடைய சங்க முண்டானதால் ஆபத்துக்கள் போயினவென்று அரசன் ஹரிபிரசாதத்தைக் கொண்டுசென்றான்.

## கோண்டோபா.

அனந்தரம் துகாராமர் லோஹகாமுக்குச் செல்ல, கொண்டோபாவெனும் பிராம்மணன் வந்து நமஸ்கரித்து ஐயா! சிவபெருமானைச்சேவிக்க காசிக்குச் செல்லவேண்டும் செலவுக்கில்லை யாதலாற் கருணைசெய்யவேண்டுமென்ன, அப்பொழுது துகாராமர் தன் ஆசனத்தின்கிழ் கையை வைத்து ஒரு பொற்காசை யெடுத்துக்கொடுக்க, அது போராதென்று கொண்டோபா சொல்ல, தினந்தோறும் செலவுசெய்து ஒருதுட்டை மீத்திவைத்தா லது பொற்கா சாகுமென்றும் இதை இதரஜனங்களுக்குச் சொல்லவேண்டா மென்றும் திட்டப் படுத்தினர். அவனதை பரிக்ஷைசெய்து பார்க்குமளவில் அவர் சொன்னபடியே யாயிற்று. அதற்கு வெகு சந்தோஷத்தை யடைந்து துகாராமரிடம் விடைபெற்றுக் கொண்டுபோக யத்தனிக்க அவர் மூன்று சுலோகங்களை யெழுதி கல்

காபவானிக்கு ஒன்றும், விஸ்வநாதருக் கொன்றும் கயை க்ஷேத்திரத்தில் ஸ்ரீஹரிக்கு ஒன்றுங் கொடுக்கச்சொல்லி திட்டப்படுத்தி அனுப்பினர். அந்தப் பிராம்மணன் வழிநடந்து சத்பாத்திரத்தில் திரவியத்தைச் செலவழித்துக்கொண்டு விசுவநாதர் முதலானரைச் சேவித்து திரும்பி துகாராமரிடம் வர, அவரந்த பொற்காசைக் கொடுக்கச் சொல்லிக் கேட்டார். அதற்கு கொண்டோபா தெண்டனிட்டுச் சொல்லுவான் ஐயா! கங்காஸ்நானம்பண்ணி அந்த கங்கையை உத்தேசித்து, தாயே! சகலதீர்த்தங்களையும் பாவனஞ் செய்பவளே! துகாராமர் சீட்டை அனுப்பினரென்றேன், அவள் அதற்கு காந்தியுடைய கடக, கங்கணங்களால் சோபிக்குங் கையை நீட்டினள். அனேக பிரஜைகள் பார்த்து பாகிரதி வந்தாளென்றார்கள். அவர்களிற் சில ரக்கையில் துட்டை வைத்தார்கள். சிலர் ரவிக்கை புடைவைகளையுங் கொடுத்தார்கள். யாவரெத்தனை கொடுக்கினும் கைவெளியே யிருக்கக்கண்டு நான் பத்திரிகையை கொடுத்தேன். அதை யவள் வாங்கிக்கொண்டபின் கை மறைந்தது. அனந்தரம் அவளைத் தோத்திரஞ்செய்து விஸ்வநாதரிடஞ் சென்று அவர் சன்னிதியில் நீரெழுதிய சுலோகத்தைப் படித்தேன். அதற்கு அவர் வில்வதளத்தைக் கொடுத்தார். அதை கைக்கொண்டு கயை க்ஷேத்திரத்திற்குச் சென்று விஷ்ணுபாதத்தில் பிண்டம் போட்டு சீட்டைக் கொடுத்து வந்தேன். நீர்கொடுத்த பொற்காசியின லன்னதான மனேகருக்குச் செய்தேனென்று சொல்லி துகாராமரை வெகுவாக வெளிக்குக் கொண்டாடி அதனைத் திரும்பி துகாராமருக்குக் கொடுக்க மனம் வராமல் தெண்டன்சமர்ப்பித்தான். பொற்காசைக் கொடுக்கும்படி துகாராமர் மறுபடியும் கேட்க பிராம்மணன் கலக்கமுற்று தான் அதனை போக்கடித்து விட்டதாகச் சொன்னன். துகாராம ரதற்கு சம்மதித்துச் சும்மாயிருந்தார். கொண்டோபா தன்னகஞ்சென்று அதனைப்பார்க்குமளவில் துணியிற்போட்ட முடி யப்படியே இருக்க, பொற்காசு அதனி லில்லாமற்போயிற்று. இதற்கு ஆச்சரியமுற்றவனுகி கொண்டோபா மௌனமுற் றிருந்தான். துகாராமர் அணுமாத்திரமாவது ஆசையின்றி வர்த்திப்பார். அல்பாஹாரமே ஹரிநாமத்துடன் கொள்ளுவார். ஸ்ரீஹரி பஜனையை விடாமற் செய்துக் கொண்டிருப்பர். இரவுகாலங்களில் பகவத் குணனுபவத்தைப்

பால்மாறுமற் செய்வர். ஒருநாள்கீர்த்தனை செய்யும்போது உபாதி சுகத்தை அவரடையுங்கால் கைதீவட்டி யணைந்து விட்டது. துகாராமர் சரீரத்திலே, தீவட்டியைப் போலே வேறோர் தேஜஸ்ஸு பிரகாசமாயிற்று. கதை முடிந்தபின் துகாராம ருட்கார்ந்தார். அப்போது இருட்டு தோணப்பட்டு தீவட்டியை யேற்றினார்கள்.

துகாராமருக்கு நாம ஸ்மர்ணையில் நாக்கு ரமித்திருந்தது. அவருடைய சரீரமும் விகாரமற்றதா யிருந்தது. ஓரிடமிராமல் ஒருவருக்கும் சொல்லாமற் றானே நடந்துபோவார். சமீபத்திலிருப்போ ரெவ்விடம் போகிறீரென்று கேட்டால் வைகுண்டத்திற்குப் போகிறே னென்பர். இஷ்டமான இடத்திற்குத் தான் போனால் அவர் சிஷர்கள் பதினான்குபேர் தேடிக்கொண் டிருப்பார்கள். உலகத்தா ரவரை விசேஷபூஜைசெய்யத் தொடங்கவே ஒருவருக்குஞ் சொல்லாமல் தேஹு கிராமத்தில் பாண்டுரங்கர் சன்னிதிக்குச்சென்று கண்களில் நீர் பெருக இவ்வுலகில்வந்து அனேக விளையாட்டுகளைச் செய்தேன், அவைகுறைவின்றிச் சரியாயின, மகத்வ பூஜைகள் மிகுதியாய்விட்டன, இனி இஜ்ஜகத்திலிருப்பது சரியன்று, ஓ கருட்வாஹனரே! வைகுண்டத்திற் கென்னைச் சேர்த்தருளு மென்றுசொல்ல இதைக்கேட்டுப் பகவான் சிரித்து அப்படியே செய்கிறேன் பயமற்றிரும் கால னும்மைக் கண்ணெடுத்துப் பாரானென்றார். இதைக்கேட்டுத் துகாராமர் கண்களில் நீர்சொரிய ஈஸ்வரனுடைய பஜனையிலிருந்தார்.

துகாராம ரொருநாள் ஞானதேவர் சமாதியைக்காண ஆளந்திக்குச் சென்றனர். அவ்விடத்தில் அஜான விருக்ஷத்தின்கீழ் பக்ஷிக ளனேகமாக இரைதேடிக்கொண்டிருந்தன. துகாராமரவ்விடம் போகவே அவையனைத்தும் பறந்து போவதைக்கண்டு தனக்குள் எண்ணத்தொடங்கினர், எனது சித்தம் சமத்வத்தை யடைந்திருந்தால் இப்பக்ஷிக ளென்னைக்கண்டுப் பறந்துப் போகாவே! ஆறுசத்துருக்களையு மணைத்து ஆத்மபாவனையை யுலகெங்கும் செய்தது வியர்த்தமாயிற்றே! இப்பக்ஷிகளேன் பறந்தன? வைராக்கியத்தைப் பிடித்து தேகத்தை பிரம்மாக்கினியிலோமம்பண்ண அது பிரேதம்போலாயிற்று. பண்டரி நாதருடைய சரணங்களிற் றேஹமெனும் பாண்டமுடைந்து போயிற்று. தேஹபாவனை போய்விட்டது, அதனால் நாமரூபங்கள் கரைந்து

பே-யின. ஆயுளளவு மீதியாயிருந்தபடியால் அதுவே இரக்ஷணத்திற் கிணையாயிற்று. ஸ்ரீ ஹரியே எனது சரீரத்தில் தீபத்தை ஏற்றினர். இப்படியிருந்தவையெல்லா மிவ்விடத்தில் வீணாயிற்றே! ஓ பாண்டுரங்கரே! அனாத நாதரே! கேசவரே! அச்சுதரே! அடியேன், கண்ணுடையவனாகிக் குருடனைப்போல வேறுவழிச் செல்லாமல் பரமார்த்தமான மார்க்கத்திலேயே நடந்துக்கொண்டிருக்க இஷ்டமாகாத குறுக்குவழியிலே காலைவைத்தேனோ? ஹரி! விட்டல! இரக்ஷியுமென்று தோத்திரஞ் செய்து கண்களை மூடி நிச்சலனாகி பிரீதியுட னிருக்க, ஹரிகிருபையால் அப்பக்ஷிகளனைத்துமவர்மே லிறங்கின. துகாராம ரசைந்தாலு மவரை யவைகள் விடாதிருந்தன. துகாராம ரிதைக்கண்டு இப்பொழுது சர்வ பூதங்களிலும் சமபுத்தியைக் கண்டேனென்று ஞானதேவருடைய சமாதிக்கு நமஸ்கரித்து நின்றார். சிஷர்க ளிவரைத்தேடிக்கொண்டுவர அப்பொழுது அவர்மேலிருந்த பக்ஷிகள் பறந்தன. அது ஏகாதசி தினமானதால் துகாராம ரவ்விடம் கீர்த்தனைச்செய்யச் சகல பிரஜைகளும் கேட்க வந்தார்கள். அச்சுதா! நரஹரி! கிருஷ்ணா! கேசவா! ஆதிபுருஷா! கோவிந்தா! சத்தியஞானா நந்தா! சர்வேசுவரா! முகுந்தா! இரக்ஷிக்கக் கடவீரென்று சொல்லி ஞானதேவர்மேற் கவித்வங்களை பிரேமையுடன் பாடி விடியற்கால வேளையில் ஹாரதியைக் கொடுத்து துவாதசியிற் பாரணைசெய்து தேஹூ கிராமத்திற்கு வந்தார்.

சிந்தாமணிதேவ ரிந்த சங்கதியைக்கேட்டு துகாராமரைக் கூப்பிட மனிதனை யனுப்பினர். அம்மனிதன் துகாராமரிடம் வந்து ஹரிகுணானு வாதத்தைக்கேட்டுச் சொக்கிநின்றான். மனிதன் திரும்பி வாராதிருந்தபடியால் சிந்தாமணிஸ்வாமி தானே புறப்பட்டுவரத் தொடங்கினர். துகாராம ரிதனை யறிந்துக்கொண்டு அவருக்கெதிரே தான் சென்றார். நடுவழியி லவர்க ளிருவரும் சந்திக்க, சிந்தாமணிதேவர் துகாராமருக்கு நமஸ்கரித்தார். துகாராமரு மவருடைய திருவடிகளைப் பிடித்தார். இருவரு மொருவர்க்கொருவ ராலிங்கனஞ் செய்துக்கொண்டு ஆங்கோரிடத்தி லுட்கார்ந்து மகத்தான பிரிய வசனங்களைப் பேசிக்கொண்டிருந்து சிந்தாமணி துகாராமரைப்பார்த்து, உமக்குப் பாண்டுரங்கர் வசமாகயிருக்கிறபடியா லுலகத்தி லும்முடைய புகழ் பிரபலமாயிற்று.

உம்முடைய மகிமைகள் மனித செய்கைகளுக்கு மிஞ்சியிருக்கின்றன. நீர் யாரோ தெரியப்படுத்துமென்று கேட்க, துகாராமரோர் கத்தியைக்கொண்டு தன் தொடையைக் கீறினர். அதனைப் பார்க்குமளவி லதிற் பஞ்சு நிறைந்திருந்தது, இரக்த மாம்சங்களில்லா திருப்பதைக்கண்டு சிந்தாமணி ஆச்சரியப்பட்டு நமஸ்கரிக்க, துகாராம ரவரை மறுத்து, ஸ்வாமி! நீ ரப்படி செய்யத்தகாது. நான் தேவரீருடைய தாஸனுவே னென்று அவருக்குத் தெண்டனிட்டு சிஞ்சவடிக்குச்சென்று மூன்றுநா ளவ்விடமிருந்து ஹரிகதையைச் செய்துத் திரும்பி தேஹூகிராமத்திற்கு வந்தார். அவர் ஹரிபஜனையி லமைந்திருந்து எங்கும் ஹரிபாவனையைப் பொருந்தி தேவனொருவரே இரண்டு பாகங்களாக சுகவிஸ்ராந்தியை தெரியப்படுத்துவா ரென்றும், பகவானுகியும் பக்தனுகியும் ஜகத்திற்ருனே காண்கிருரென்று மிவ்வாருன தன்மையை வகித்திருந்தார்.

லோஹகாமெனுங் கிராமத்தில் ஜனங்கள் துகாராமரை யனுசரித் திருந்ததாலும் அவருடைய பஜனையைக் கேட்டுகொண்டிருந்ததாலும் சுகிருதங்களுண்டாகி சுகத்தையும் சௌபாக்கியமெனும் சம்பத்தையும் வெகுவாக யடைந்திருந்தார்கள். ஒருகால் ஒருமாசம் வரைக்கு மவ்விடந் துகாராம ரிருந்து கீர்த்தனை செய்துக்கொண் டிருந்தார். சத்துரு ராஜனுடைய சேனை யவ்விடம்வந்து கொள்ளை கொண்டார்கள். அறிஞர் சிலர் நஷ்டமடைந்துங் திகிலடையாமலும், சில ரந்த நஷ்டத்திற் கழுதுக்கொண்டு மிருந்தார்கள். துகாராம ரவர்களைக்கண்டு போனவற்றைக் குறித்துப் புலம்ப வேண்டாம், அவையாவும் ஹரியை யடைந்தன, அக்கினியில் விழுமன்னம் ஹரியற்பணமாக வெண்ணப்படு மன்ருே? அப்படி நீங்களனவரு மவை ஹரி அற்பண மாயிற்றென்று நினைத்து தாபங்களை விட்டு ஸ்ரீ ஹரியைச் சரண மடைவது நலமென்றுசொல்லி சமாதானப்படுத்தினர். பின்பு தான் உதாஸவிருந்தியை வகித்து தேஹூ கிராமத்திற்குச் சென்றுச் சதானந்தராகி பஜனை செய்துக்கொண்டிருந்தார். தினந்தோறும் தரிசனத்திற்காக பிரஜைகள் வந்துக்கொண்டிருப்பார்கள். பெருமாள் துகாராமரை வைகுண்டத்திற் சேர்க்கவேண்டு மென்று எண்ணி ஜகத்தினிடத் தவருக்கிருக்கும் மோஹத்தை விடுவித்து

உபாய மாகவே அவரை நித்திய விபூதியிற் றருவிப்போமென் றிருந்தார்.

வைகுண்டத்தில் பெரிய பிராட்டியார் பெருமாளைப் பார்த்து துகாராமரைத் தேஹுத்துட னிவ்விடங் கொண்டு வாருமென்றார். பெருமா ளவ்வாறெ ஆகுகவென்றும் பூர்வஜன்மத்தி லிவர் நாமதேவராகி வெகுவித செய்கைகளைச் செய்தாரென்றும், அவரை யிவ்விடம் கொண்டு வருகிறேமென்றும் சொல்லி விமானத்தின் மீது பெருமாளும் பாரிஷதரும் (வைகுண்டத்தில் காவலாளிகள்) தேஹு கிராமத்திற்கு பங்குனிமாசம் சுத்த ஏகாதசி தினத்தில் வந்தார்கள். பெருமாள் துகாராமரை நோக்கி அனேக ஜனங்களுக்கு நீர் நாமசாதன மமையும்படி செய்தீர், விசேஷ ஜனங்களைப் பக்தியில் வீற்றிருக்கச்செய்தீர், இனி பரம பதத்தைக்காணும்பொருட்டு வரக்கடவீரென்று சொல்லி, அஷ்டசித்திகளைப் பார்த்து வைகுண்டத்திற்குச்சரியான இரசனையை யிவ்விடத்திற் செய்து போஜனபதார்த்த சாமக் கிரிகைகளைச் சித்தப்படுத்தச் சொல்ல, அந்த சித்திகளும் பலவாறான பக்குவான்னங்களைச் செய்வித்து மகத்தான பவனத்தில் மங்களக் கோலங்களிட்டு அலங்கரித்து ஒரு வஸ்துவுங் குறைவின்றி யிருக்கச் செய்தன. வைகுண்ட வாசிகளான வனேக ரவ்விடம் வந்திருந்தனர். இலைகளைப் போட்டு அறுசுவை யன்னத்தை யனைவருக்கும் வட்டிக்கத் துகாராமர் பந்தியிலனைவருடனு முட்கார்ந்திருந்தார். பகவா னப்பொழுது பக்தர்க ளனைவருக்கும் பூஜைசெய்யத் தொடங்கி சந்தனம் அக்ஷதை புஷ்பங்க ளனைவருக்குங் கொடுத்து சங்கல்ப நீரைவிட்டார். பிராட்டியாரே பிரசாத மெவருக்கும் வட்டித்தார். பக்தஜனங்கள் பிரம்ம ரசத்தாற் பரிதிருப்த்தி யடைந்தனர். இப்படி ஐந்துநாள் நடக்கத் துகாராமருக் கொருவருக்கு மாத்திரமே இந்தசேவை தோன்றப்பட்டுக்கொண்டிருந்தது.

இதரஜனங்க ளனைவரும் பக்தியுடன் கதையைக் கேட்கவந்தார்கள். பெருமாள் துகாராமரைப் பார்த்து பங்குனிமாசம் பிரதமை திதி (பாட்டியமி) இரவில் பரமமான வைகுண்டத்திற்குப் போவோம், நீர் பிராணத்தையும் தேகத்தையு மெமக்குப் பலிதானமாகக் கொடுத்தீர். மனதை நிறுத்தி காமக்குரோதங்களைக்கண்டனஞ் செய்தீர். அபரோக்ஷமாக ஆத்மப் பிராப்தி

யனுபவமா யிருந்தாலும் அதனை மீறி நிஜதாஸ்யத்திலேயே இருக்கிறீர். சித்திகளைக் கொடுத்தாலு மவைகளை விட்டு முக்தியையும் வேண்டாமென்றால் இனி உமக்கென்னத்தைத் தருவேன். அதிக நிரபேக்ஷயா யிருந்து விட்டீரென்ன, துகாராமர் சொல்லுவார், ஸ்வாமி! பண்டரிபுர மிவ்விடமிருக்கத் தூர ஏன் போகவேண்டும், இவ்விடமே பஜனைசெய்யப் பக்திபிரீதியைக் காண்பேனென்று சொல்ல, பெருமாள் துகாராமரை நோக்கி க்ஷீராப்தியிலிருக்கு மைசுவரியத்தை நீர் பார்க்கக்கடவீர். நீரும் நாமு மெவ்விடமும் வியாபகமாக விருந்தாலும் இஹலோகத்திலேயே யிருந்தால் ஜனங்களுக் காற்றுமைத் தோன்றாது. நாம் சொற்படி நீர் வைகுண்டத்திற்கு வாருமென்னத் துகாராமர் பெருமாள் திருவடிகளைப் பிடித்து மாறுசொல்லா திருந்தார். துகாராமருடைய கண்கள் ஹரி ரூபத்தி லிருந்தன. அவர் மனது ஹரிபாதங்களிற் கரைந்தன. பிரீதி ஹரி கீர்த்தனையிலிருந்தது. அவருடைய வாக்கு ஹரிநாமத்தி லிருந்தது. இப்படி எல்லாவற்றையும் ஹரியினிடம் வைக்க பண்டரிபதி தானானர். அனந்தரம் துகாராமர் ஜனங்களுக்கு மோக நிவர்த்திசெய்யும்பொருட்டு மதுரமாகிய தன் கவித்வ தாரையை மேன்மையாகச் சொல்லி வேதாந்தார்த்தங்களை வெளியிடத் தொடங்கினர். எனது மரணத்தை நான் கண்டுகொண்டேன். அது உவமைசொல்ல வரிதாயிருக்கிறது. அது இந்த முவ்வுலகத்திலும் பரானந்தமாய் நிறைந்தது. சர்வாத்மகத்வத்தால் சகல போகங்களும் கைகூடியிருந்தன. எல்லோரு மறிய வென்னுடைய வகங்காரம் போகவே சுகாலமாயிற்று. நானெனதென்பவை போகவே ஜனனமரண சூதகங்கள் கழிந்தன. ஹரிசர்வேஸ்வரன் ஆங்கெனக்கு ஸ்தலத்தைக் கொடுத்தார். பாவ சுத்தியா லவரது சரணங்களைப் பிடித்தேன். மனசு பிரம்மாத்மகமாயிற்று. சாவதானமாக சௌக்கியாங்கத்தைக் கைக்கொண்டேன், சமரசத்திலிருந்தேனென் றிப்படி யனேக விதங்களாகத் துகாராமர் சொல்லிக்கொண்டிருக்கத் தேவர்க ளவ்வசனங்களைச் சந்தோஷத்துடன்கேட்டு, துகாராமர் நாமகீர்த்தனையைச் செய்யச் செய்ய நரசரீரம் பிரம்மமாய் விட்டது, பிரேம மிகுதியால் இவ்வைஷ்ணவ முக்கியர் தன்னியரானரென்று சொல்லத் துகாராம ரவர்களுக்கு சந்தோஷத்துடன் நமஸ்கரித்தார். துகாராம் அங்

குள்ள ஜனங்களைப் பார்த்து நான் சொல்லுகிறதைக் கேளுங்கள். உங்களுக்கு சௌக்கியமுண்டாம். தற்கவாதிகளுடைய சங்கத்தை விட்டு ஸ்ரீஹரியைச் சிந்தித்திருக்கக்கடவீர்கள். இதைவிட்டு மதாந்தரத்திற் போகவேண்டாம். கலிகாலத்தில் உங்களுக்கு ஹிதமாக விதைச் சொன்னேன். அந்தியத்தில் ஹரிநாமத்தைச் சொல்லுங்கள், வைகுண்டத்திற்குப் போகிறேன் ஹரி! ஹரி! விட்டல! என்றார். ஸ்ரீஹரி அவ்விடத்தில் விமானத்திற்கு வரச்சொல்ல துகாராம் மனைவியைத் தன்கூடவருவதற்குக் கூப்பிட்டார், அவள் தன் வீட்டிற் குழந்தைக ளழுவார்களே! ஒண்டியாக சமுசாரத்தை நடப்பிக்கிறேனே, எப்படி வருவதென்றாள். இதைக்கேட்டு துகாராமர் வீட்டின் மமத்வ மிதுவரைக்கும் போகவில்லை, மாயையின் பிரபாவம் விசித்திரமுளதாய் தெரியவந்ததென்று சொல்லி, பிரஜைகளைப் பார்த்து நீங்கள் பெரியோர்களுக்குப் பக்திசெய்து, ஈக்கள் மதுரத்திற்கு மகிழ்ந்தோடுவதுபோல ஹரியை பஜியுங்கள். சென்ற ஒருநாழிகைகாலந்திரும்பி வரமாட்டாது. கங்கைஜலஞ் சமுத்திரத்திற் கலந்தால் திரும்பிவரமாட்டாது. இது புத்தியிற் றங்கத்தக்கதென்று சொல்லிக்கொண்டு அனைவருக்கும் தெண்டன் சமர்ப்பித்து நாமத்தைச் சொல்லிக்கொண்டு ஊருக்கு வெளியில் வந்தார். கேட்பவர்க ளனைவருங் கண்களிற் ஜலமொழுக இவர் இமகிரி பர்வதஞ் செல்வரோ, பதரிகாச்சிரமத்திற்குப் போவரோ வென்று எண்ணி, எப்படியாயினும் நாமவரைப் போகவொட்டாம லிவ்விடமே இருத்துவோமென்று சொன்னார்கள்.

பின்பு துகாராமர் நதிதீரத்திற்கு வந்து சுலோகங்களைப் பாடினார். அவை அமிருதரசத்திற்குச் சமமான வாக்கியங்க ளாதலால் கேட்போர்கள் சுகத்தை யடைவார்கள். அக்கவிகளின் விவரமாவது—நாமமே பதியாகும் நாமமே ரதியாகும் எனக்கிவ்விடம் சர்வமும் நாமமேயாகும். இது எனக்கு நேமமாகி ஹரியினிடம் நிலைமைவிடாமல் பொருந்தச் செய்தது. அவருடைய அங்க சங்கமுண்டாக்கிப் பயசிந்தனையைப் போக்கிவிட்டது. நீங்கள் என்மீதபேக்ஷையை வைக்கவேண்டாம். கண்கள் காண்கிறவைகளாயில்லை. காதுகள் கேட்கிறவைகளா யில்லை. நாக்கும் சொல்லுஞ் செயலை யுடைத்தானதாயில்லை. இன்று ஸ்ரீஹரி சித்தத்தி லுட்கார்ந்தார். இனி பிரியமாட்டார். தேகத்திற்றுன் கூடிகலந்து ஒன்றாகத்

திடப்படுத்திக் கொண்டார். அவருக்குச் சமானமான பலசாலி உலகிலெவருமில்லை. நாராயணனெனக்கு வேறாக நிற்கமாட்டார். அபார கைங்கரியத்தை யவராயிருந்து செய்தருளினர். பதியான ஸ்ரீ ஹரி என்னைப் பாவனனாகச்செய்து தனக்காக்கிக்கொண்டார். நீங்கள் ஹிதமென்றெண்ணி இனிமேலென்கூடவருவது சரிப்படாது ஆசாமோஹங்களிருக்கும் பரியந்தம் ஹரிசுகங் கிட்டாது. அவைகளை நீங்கள் விட்டீர்களாகில் சுகத்தை யடையக்கூடும். ஆசாத்தியாகமாகும் பரியந்த முலகிலெப்பொழுதும்போல் சஞ்சரித்திருக்கக் கடவீர்கள். வெறுப்பின்றி ஸ்ரீராமநாமத்தை விசேஷமாகச் செய்யக்கடவீர்கள். இதுவரைக்குமெனக்கு முங்களுடன் ஆடல்பாடல்களமைந்திருந்தன, இன்று குலத்தோடு மனைவி துலைந்தன. ஹரியினுடைய குலமெனக் குண்டாயிற்று. சாகுமுன்னமே நான் செத்திருந்தேன். மனதிற் பயம்போயிற்று. இப்படியிருக்கிறபடியானும்மோடு சங்கமெனக்கெப்படி கூடும். ஹரியை அறியவெத்தனித்தால், தான் றன்னைவிடவேண்டும், நான் போகிறேன். நீங்கள் கிருபைவையுங்கள். ஹ்ரிபாண்டுரங்கரென்னை அழைத்துக் கொண்டுபோக வந்திருக்கின்றார். அவர் வைகுண்டத்திற்கு வரச்சொல்லி அழைக்கிறார். அந்தியகாலத்திலவருடைய வனுமதியால் சரீரத்துடன் குப்தமானேனென்று சாரமான வாக்கியங்களை துகாராமர் சொல்லி விமானத்திற் பிரவேசிக்க விசித்திரமான ஓர் பிரகாசம் விண்ணிலுண்டாயிற்று. அந்த விமானத்தின் பிரபையால் பிரஜைகளுடைய கண்கள் மூடப்பட்டன. உடனே அவர்கள் கண்திறந்துப் பார்க்குமளவில் துகாராமர் காணாதிருந்தார். ஆவுலி இதைக்கேட்டு அதிக சோகத்துடன் மாரடித்துக் கொண்டாள். ஹரிகீர்த்தனையைக் கேட்க அவ்விடத்தில் வந்திருந்த வினைகளுனங்கள் அதிக விசனத்தை யடைந்தார்கள். திரும்பி வருவாரென் றவ்விடமே காத்திருந்து சாயங்காலத்தில் வீடுகளுக்குச் சென்றார்கள்.

பதினொன்று சிஷர்கள் மாத்திரம் வீடுகளுக்குப் போகாமல், ஒரு பரியாயந் துகாராமருடைய தரிசனமானால் ரக்ஷகமாகுமென்று சொல்லிக்கொண்டு கவித்வரசனையாற் றோத்திரங்களை வெகுவாகச்செய்து ஐந்துநா ளவ்விடமிருக்க ஆகாயத்திலிருந்து துகாராமருடைய அங்கவஸ்திரமும் கரதாளமும் கீழேவிழுந்தன. அவைகளைக் கண்டவுடன் துகாராமர் ஸ்ரீவைகுண்டத்திற் கெழுந்தரு

ளிறுரென்று சீஷர்களனைவரும் தீர்மானித்து ஸ்நானம்பண்ணி பண்டரிநாத ராலயத்திற் கவ்வஸ்துக்களைக் கொண்டுவருமளவில், ஜனங்க ளனேக ரவைகளைப்பார்த்து அன்றே அனேக பிராம் மணர்களுக் கன்னதான மிட்டார்கள். முக்கிய சிஷ்யனான ராமேச பண்டிதனே சொல்லுவான், துகாராமருடைய சரீர மிவ்விடத்தில் விழாதபடியாற் சரம கிரியாகருமங்கள் செய்யவேண்டி யில்லை. வைஷ்ணவி மாயையை தூரப்படுத்தி இன்புற்றவரென்று சொன் னான். சிஷரனைவருங்கூடி மூன்றுநாள் ஹரிகுண கீர்த்தனையும் பிராம்மண பக்ஷணையும் செய்வித்து ஆனந்தத்தை யடைந்திருந் தார்கள்.

துகாராமருடைய பிள்ளைகளில் மூன்றாவது குமாரன் நாரா யணனென்று பெயரை வகித்து விரக்தராயிருந்து துகாராமருடைய கவித்வங்களை பாராயணமாகப் படித்துப் பிரபலமாகப் பஜனை செய்துவந்தார். அண்ணன்மார் அவருடைய வாக்கினைக்குட்பட்டு அடங்கி யிருந்தார்கள். லோகத்தாருக்கு ஹிதத்தைச் செய்பவ ராகி நாராயணரென்பவர் கீர்த்தியடைந்திருந்தார்.

உண்மை நம்பிக்கையுடைய ஜனங்களுக்குத் துகாரமர் சொப் பனத்தில் வந்து உபதேசத்தைச் செய்தருளுவர். தம்பியாண கானி யாயென்பவனுக்கு மப்படியே கருணித்தார். "கபா" யென்னு மோர் கன்னடி வர்த்தகன் துகாரம ரிப்புவியிலிருக்கும் பொழுது வந்து சேவைகளைச் செய்திருந்து தனது அந்தியகாலத்தில் தரிசனங் கொடுக்கும்படி வேண்டிக்கொண்டு தன்னிருப்பிடஞ் சென்றான். பின்பு துகாராமர் ஹரிபதமடைந்தார். சிலநாட் கழிந்தபின் னவ் வர்த்தகனுக் கந்தியகாலம் சம்பவித்தது, அப்பொழுது தேஹூ கிராமத்திற் கவன் மனிதரையனுப்ப சீஷருடன் நாராயண பக் தர் வழிநடந்து கபா வீட்டிற்கு வர, அவ னனைவரையு மன்புடன் பூஜித்து நிற்க, துகாராம ரவ்விடத்திற் கபாவுக்குக் காணப்பட் டார். கபா குசும மாலையைக் கண்டத்திற் போட்டுக் கொண்டாடு மளவில் அம்மாலை ஆகாயத்திலே நின்றதுபோல இதர ஜனங்க ளுக்குக் காணப்பட்டது. ஹரிபக்தர்க ளனைவரும் ஜய ஜய சப்தத் தைச் சொல்லி ஹரிநாமத்தைக் கொண்டாடினார்கள். பிரிய பக்தர்கள் பாட்டுகளைப்பாடி மேன்மையைப் பாராட்டினார்கள். ஸ்ரீராம கிருஷ்ணனுடைய சரிதங்களைப்போலிது கேட்க ரம்மிய

மாகும். இதைப் படிப்போருங் கேட்போரும் பக்தி நிலைமையை யடைவார்கள்.

## உரோஹிதாசர் சரித்திரம்.

சர்மகாரராகி ஜன்மமடைந்த உரோஹிதாசரெனும் பெயருள்ள ஓர் ஹரிதாசர் சர்வகாலமும் பரிசுத்த மனதுடன் கிருஷ்ண பூஜை செய்துக்கொண்டு கீர்த்திப் பெற்றிருந்தார். அவர் பரோபகாரம் அதிகமாய்ச் செய்துக் கொண்டிருப்பார். யாத்திராபரர்களுக்குப் பிரதிதினமு மோர் மிதியடியைத் தானங்கொடுத்து வருவார். பாத்திரமறிந்து பிச்சையிட்டுப் பாகவதர்களைச் சேவிப்பார். விடியற்காலத்தில் ஸ்நானஞ்செய்து விஹிதபக்ஷணையைச் செய்து பின்பு தேவபூஜையைச்செய்ய வாரம்பிப்பார். கலியுகத்தி லன்னத்தாற் பிராணன்கள் நிலைநிற்குமாதலாலும், போஜன மில்லாவிடிற் பசியினாற் சித்தஞ் சிதறிக்கொண் டிருக்குமாதலாலும், புதையற் பொருளைக் கொள்ளவேண்டுமென்றால் அதையடையுமுன் பலிதானங் கொடுப்பதுபோல பசியை யாற்றியபின் அவர் ஓர் சர்மாசனத்தின்மீது சாளக்கிராமத்தை வைத்து பிரீதியுடன் நித்தியமும் பத்திரபுஷ்பங்களையிட்டுப் பூஜித்துவருவார்.

இப்படியிருக்க ஒருநா ளொரு பிராம்மணன் உரோகிதாசரிடம் அருத்தியா யாசிக்கவந்தான். அவரவனைக் கண்டவுடன் விநயத்துடன் நமஸ்கரித்து உட்காருமென்றார். அப்பொழுதந்த பிராம்மணன் சர்மாசனத்திற் சாளக்கிராம மிருப்பதைக்கண்டு ஓ உரோஹிதாசரே! சர்மத்தின்மீது சாளக்கிராமத்தை வைப்பது சரியன்று, ஸ்ரீஹரி தத்ஸ்வரூபராவர். அகிலாண்டக்கோடி பிரம்மாண்டங்களுக்கு கர்த்தராவார். அமரர்களா லாராதிக்கப்படுவார். பாற்கடலிற் பன்னகசாயியாகிப் படுத்திருக்கும் பரமபுருஷர். இவ்விதமானவரைச் சர்மாசனத்தின்மேல் வைப்பது தகுதியல்லவென்றான். உரோஹிதாச ரதைக்கேட்டு, ஸ்வாமி! பூமியிற் சகலபதார்த்தங்களுஞ் சர்மத்துடன் கூடியே யிருக்கின்றன. பசுவுக்குச் சர்மமுண்டு, பசுவின்பால் நெய்யாகும், அது பவித்திரமான பஞ்சாமிருதத்திற் சேரும். சதுர்வர்ணத்தாரும் சர்மத்துடன் கூடி சிருஷ்டிக்கப்பட்டார்கள். சுருதிகளும் அத்தியயனமும் பிராம்மணர்களுடைய சர்மவாக்கினாற் சொல்லப்படுகின்றன. சர்மத்தினாற் செய்யப்பட்ட செவிகளாற் கேட்கின்றீர். சர்ம கைகளாற் ஸ்ரீஹரி

பூஜையைச் செய்கின்றீரென் றுரைக்க, பிராம்மண னவரை நோக்கி, ஜீவனிருக்குமளவிற் சர்மம பவித்திரமாகுமென்றான். உரோகிதாச ரதைக்கேட்டு ஈஸ்வரனெவ்விடமு மிருக்கிறபடியா லெவையும் பவித்திரமாகுமே! ஜீவனிருக்கிலும் சர்மத்திற்கு சுசியெப்படியுண்டாம்? பிரவிடை ஸ்திரீ சோணிதத்தில் ரேதஸ்ஸை வைக்கப்பட் டிந்த தேகமுண்டாயிற்று. இது முழுதும் நீசமென்றே சொல்லப்படும். வியாபகனுகி ஸ்ரீ ஹரியிருக்கு முலகிற் சகலமும் பிரம்மமயமாமன்றோ! என் று சொன்னார். பிராம்மணன் பக்தரைப்பார்த்து சாளக்கிராம பூஜையை நீ செய்யத்தகா தென்று கூறினன். உரோஹிதாசர் மற்ற யார்தான் செய்யத்தகுந்தவ ரென்று வினவ, பிராம்மணன் கோபங்கொண்டு, அடா! மூர்க்கமனிதனே! துஷ்ட குண முடையவனே! அச்சுதனை ஸ்ரீஹரியை அந்தணனே பூஜிக்க வேண்டும். நான்கு வர்ணத்தாரிலும் பிராம்மணன் சிரேஷ்டம். சாளக்கிராமத்தையு மவன்தான் பூஜிக்கவேண்டும். யக்கியோபவீதத்திற்கு அவன்தான் அதிகாரியாவான். இதரஜனங்கள் பூஜிக்கத் தகுந்தவ ரல்லவென்று சினத்துட னுரைத்தான. உரோகிதாச ரவனுக்கு சாஷ்டாங்க தெண்டனிட்டு ஸ்வாமி! என் பூணுநூலைப் பாருமென்று தன்னுடைய மார்பை அரத்தாற் கிறி உள்ளிருந்த வதனைக் காட்டினர். இதைக்கண் டாச்சரியமுற் றவ்வந்தணன், நீர் ஞானி! விஷ்ணுபக்தர் எப்பொழுதும் ஸ்ரீஹரி பூஜையைச் சந்தோஷத்துடன் செய்துவருவீர் என்று சொல்லி ஏகினன் இதைக்கேட்டு அவ்வூரார் ஆச்சரியப்பட்டு மேலான மகிமையென் று உரோஹிதாஸரைப் புகழ்ந்துக்கொண் டிருந்தார்கள்.

உரோஹிதாசர் பஞ்சாயதன பூஜையைச் செய்துக்கொண்டு கிருஷ்ணன்மேல் பக்திவைத்து விளங்குவதைக்கண்டு யாவரு மவரைக் கொண்டாடிக்கொண் டிருந்தார்கள். இதைக் கபீர்தாசர் கேள்விப்பட்டு உரோஹிதாசரிடம் வந்தார். கபீர்தாச ரிதரதேவதைகளை நோக்காமல் ஸ்ரீராமரையே பூஜித்துக்கொண் டிருப்பர். உரோஹிதாசர் பூஜாக்கிரகத்திற் பஞ்சாயதனம் இருக்கக்கண்டு கபீர்தாசர் நமஸ்கரிக்காம லுட்கார்ந்தார். உரோகிதாச ரதனைக் கண்டு, "அர்ச்சாவிக்கிரகங்களுக்கேன் தெண்டன்சமர்ப்பிக்க வில்லையென்று கேட்டார்" அதற்கு கபீர் இராமனைவிட இதர தெய்வங்களை நான்பாரேன், துவாபரயுகத்திற் கிருஷ்ணன் பிறந்து

அனேக ஸ்திரீகளைச் சேர்ந்திருந்தார். அவருடைய பராக்கிரம மென்ன பிரபலம்? நான் பஜிக்கும் இராமர் சூரியவம்சத்திற் பிறந்து தானமானங்களுடன் பிரபுவாயிருந்து இராஜ்யத்தைப் பரிபாலனஞ் செய்தாரென்றார். இதைக்கேட்டு உரோஹிதாசர் சொல்லுவார். இராம ரோர் மிருகத்தின் பின்சென்று சீதையைப் பிரிந்துத் துக்கப்பட்டா ரென்றார். அதைக்கேட்டுக் கபீர் கிருஷ்ணனுரலிற் கட்டப்பட்டு அழுதார். சீதாபிராட்டி பக்தியிற் சிறந்தவளென்று மனங்கலங்கி அழுதாரென்ன, ரோஹிதாசர் கபீரை நோக்கி ஸ்ரீராமர் பிரபுவாகியிருந்தாலும் காயக்கிலேசத்தையடைந்து சீதைக்காக குரங்குகளுடன் திரிந்துகொண் டிருந்தார். ஸ்ரீ கிருஷ்ணர் தனது சௌலப்பியத்தைக் காண்பிக்கும் பொருட்டு தாயாருக்கு வசமாகியும் பரமாத்துமாவாகியுமிருந்து கோவர்த்தனமெனும் பர்வதத்தை யெடுத்து பசுக்களையும் மனிதரையும் பாதுகாத்தா ரென்றார். அதற்கு கபீர் சொல்லுவார், ஸ்ரீராமர் குரங்குகளாற் பர்வதங்களைக் கொண்டுவரச்செய்துச் சமுத்திரத்திற்குச் சேதுவைக் கட்டினார். ஸ்ரீகிருஷ்ண ரென்ன செய்தார்? இராம நாமத்தால் ஜனங்க ளனைவரும் முக்தராயின ரென்றார். உரோஹிதாச ரதைக்கேட்டு ஸ்ரீராமர் வனத்திற்குச் சென்றபோது அவர் தகப்பன் இராமருடைய நாமத்தைச் சொல்லிக்கொண்டு உயிரை விட்டாரென்றார். கபீ ரிதைக்கேட்டு கிருஷ்ணமூர்த்திக்காக வசுதேவரும் தேவகியும் கால் விலங்குடன் சிறைச்சாலையி லிருந்தார்கள். பின்னும் ஜாரசோரனாகி சஞ்சரித் திருந்தார். ஸ்ரீ ரகுராமர் சீதையைக்கூடி ஸ்திரமாக விரதநிஷ்டராயிருந்தா ரென்றார். இவ்வாக்கியங்களுக் கவர் மாறுசொல்லாமலிருக்க, கபீ ரவரைநோக்கி யென்னுடன் வார்த்தை நிறுத்துவதேனென்று கேட்டார். இதற்குள் பெருமாள் கணபதியை யழைத்து கபீர்தாசருக்கும் உரோஹிதாசருக்கும் நடக்கும்வாதத்தை நீர் சென்று நிவர்த்திக்கவு மென்றார். அப்படியே என்று கணபதி வந்து பக்த ரிருவரையுங்கண்டு உலகில் கிருஷ்ணோபாசனை உசிதமாகுமென்றார். அதற்குக் கபீர் சொல்லுவார் அது பொய்வார்த்தை. நான் கேளேன். பஞ்சாயூதன் பூஜையி லும்மை உரோஹிதாசர் பணிந்திருக்கிறா ராதலா லவர்பக்ஷமாகவே சொன்னீரென்ன, விநாயகர் விடை பகராம லிருந்துவிட்டார். இதைக்கண்டு

பெருமாள் சூரியனை அவ்வாதத்தைத் தீர்க்கவனுப்பினர். அவர் பிராம்மண வேஷம்பூண்டு அவ்விருவரிடம் வந்து உரோஹிதாசர் நிஷ்டை சிலாக்கியமென்று சொல்லக் கபீர் சொல்லுவார், உமது வம்சத்திலெனது ரகுநாதர் பிறந்திருக்க நீரிவ்விடம்வந்து கிருஷ்ணனையே புகழ்ந்தீர். இதைக்கேட்டு சூரியன் மௌனமாயிருக்க பெருமாள் தேவியை ஏவினர். அவள்வந்து இவ்வாதத்தைக்கேட்டு உரோஹிதாசர் நிஷ்டையை சிரேஷ்டப்படுத்திச் சொல்ல, கபீர் சொல்லுவார், நான் வைஷ்ணவன் உன் வார்த்தையைக் கேளேனென்றார். பெருமாள் திரும்பியு மிவ்வாத நிரசனத்திற்கு சாம்பமூர்த்தியை விடுத்தனர். அவரு மவ்விடஞ் சென்று கோகுலத்தில் கிரீடைசெய்த கோவிந்த னுபாசனேயே பெரிதென்றார். அதற்கு கபீர் வியாகூலசித்தராகி நீர் பெரியவராகி உலகில் விக்கியாதியடைந்து இராமநாமத்தை இரவும்பகலு மனுசந்தித்துக்கொண்டு விஷானலத்தை விழுங்கி இராமருடைய விமலநாமத்தைச் சொன்னதால் துன்பமின்றி சீதளத்தை யடைந்தும் லஞ்சம் வாங்கிக்கொண்டு வெட்கமின்றி அவரை லக்ஷியப்படுத்தாமற் போனீர். உம்முடைய நியாயத்தை நான் விரும்பேனென்றார். சங்கரமூர்த்தி மாற்றுரைகூற அசக்தராய் யிருந்தனர்.

விஷ்ணுபக்தராகி இருவரும் ஸ்ரீஹரி பக்தியும் ஞானமும் பிரமநிஷ்டையும் பரிபூர்த்தியாக வடைந்திருந்தும் உபாசனுபேதத்தால் வாதம் செய்தார்கள். மத்தியஸ்தரும் கைவிட்டார்கள். இதைப் பெருமாள் கண்டு உரோஹிதாசரிடஞ் சென்று சங்கமும் சக்கரமும் ஸ்ரீவச்சமும் சதுர்ப்புஜங்களும் பீதாம்பரமும் பூர்ணகாந்தியுடன் பிரகாசித்துக்கொண்டு பிரகடமானர். உடனே அவ்விருவரும் நமஸ்கரித்தார்கள். இராமரூபத்தை கபீர்தாஸர் கண்களுக்குக் காண்பித்துக் கொண்டிருந்து உடனே கிருஷ்ணரூபத்தை வகித்தார். அப்பொழுது பெருமாள் அவ்விருவருடைய சமுசயத்தை நிவர்த்தித்து பிரீதியுடன் புகல்வாராயினர். இராமரே கிருஷ்ணன் இதற்கு நீங்களிதுபரியந்தம் வாதாடிக்கொண்டிருந்தீர்கள். அன்புட னிருவரையும் சமமாகப் பார்க்கக் கடவீர்களென்று திருவாய் மலர்ந்தருளினர். பக்தரிருவரும் பெருமாள் பாதங்களுக்குத் தெண்டன் சமர்ப்பித்து பார்த்துக்கொண்டிருக்க அவர்கள் பகவா னிதரதேவர்களுட னந்தர்த்தானமானர். பக்தர்களிரு

வரும் ஹரிதரிசனத்தினல் ஆனந்தமடைந்திருக்க உரோஹிதாசர் கபீர்தாசரை நமஸ்கரித்து அவருக்குப் போஜனமளித்து தாம்பூலத்தையுங் கொடுத்தனுப்பினர். அவர் போகும்பொழுது உரோஹிதாசரை நோக்கி பூர்ணபக்தியுடன் ஸ்ரீஹரியை நீ பூஜித்திருக்கக்கடவாய். வேறு தேவதைகளை விஸ்வசித்தால் விபசரித்தது போலாகும். ஹரி பக்தர்களுக்கிந்த நேமமே மாதிலமைந்திருக்கவேண்டுமென்று சொல்லி பகவானைப் பஜித்துக்கொண்டே சென்றனர். இவருரைத்தவாறே உரோஹிதாசரும் ஸ்ரீஹரி பஜனையைச் செய்துவந்தார்.

இவருலகிற் சர்மகாரராகி பிறந்ததற்குக் காரண மென்னெனின் பூர்வ ஜன்மத்திலிவர் பிராம்மணப் பிரம்மசாரியாகி ஸ்ரீராமானந்தருடைய திருவடியை ஆஸ்ரயித்திருந்தார். சிஷனுடைய நற்குணங்களைக்கண்டு ஆசாரியர் பிக்ஷைவாங்கி வரும்படிக் கட்டளையிட அவரு மக்ஷயபாத்திரத்தால் மாதுகரமெடுத்து அதனல் வந்த தானியத்தைச் சமையற்செய்து ஆசாரியருக் கிட்டுவருவார். அது பவித்திரான்னமென்று இராமானந்தரு மதனைப்பரிக்கிரகித்து வருவார். ஒருநாளந்த சிஷர் பிக்ஷைக்காகச் செல்லும்பொழுது வழியில் மழைபிடித்து ஓயாமல் பேய்ந்தது. ஓர் கோமட்டி வீட்டில் தான் நின்று விடாமழையினு லதைவிட்டுப்போகச் சரிப்படாமலிருந்தார். இதைக்கண்டு அந்த கோமட்டி வேண்டிய அமுதுபடியைக் கொடுத்தான். அதைக்கொண்டுவந்து சமையற்செய்து ஆசாரியருக் களிக்க, அவரதனைப் பெருமாளுக் கற்பணை செய்ய, இது சுசியான வன்ன மன்றென்று ஸ்ரீஹரி யதனைத் தள்ளிவிட்டார். ஆசாரியர் தோஷான்னமென்று சிஷரைத் தூறி எவ்விதமாக பிக்ஷையைக் கொண்டுவந்தாயென்று கேட்க அவர் ஓர் கோமட்டிக் கொடுத்தானென்று நடந்த சங்கதியைச் சொன்னர். அதைக்கேட்டு ஆசாரியர் சிஷரை நோக்கி நடந்த சங்கதியை நீ முன்னதாகத் தெரிவிக்கவில்லை யாதலால் பூலோகத்திற் பஞ்சமவர்ணத்திற் பிறக்கக்கடவை யென்று சபித்தனர். அப்பொழுது பிரம்மசாரி அவர்பாதங்களில் விழுந்து பிரார்த்திக்க, ஆசிரியர் அந்த ஜன்மத்தை நீ வகித்தவனயினும் ஹரிபக்தியோ டமைந்திருப்பா யென்றார். சிலகாலங் கழிந்தபின் சிஷன் ஜ்வரதாபத்தாற் படுக்கையிலிருந்து வாதையடைந் திருந்தான். அந்த ஜ்வரம் வரா

முன்னமே ஓர் புது செருப்பைக் கொண்டுவந்து இறவானத்தில் தன் கண்ணெதிரில் வைத்திருந்தார். அதனைப் பார்த்துக்கொண்டிருந்து குரு தியானத்துடன் தேகத்தை விட்டார். இதனாற் ஜாதி ஹீனராகிப் பிறந்தார்.

இவ்வண்ணம் உரோகிதாசர் பகவத் பக்தியை வகித்துப் பாகவதர்களைப் பூசித்து பிரசித்தியான கீர்த்தியை யுடையவராக விருந்தார். ஒருநாள் சில பாகவதர்கள் கங்கா யாத்திரைக்குச் செல்ல, வழியி லிவரைவந்து சேவித்தார்கள். அன்றையதின மவர்களை தன்னிடம் நிறுத்தி அவரவர்களுக்கு விசேஷ பூஜைகளைச்செய்து போஜன மளித்து மறுநாட் போகும் பொழுது ஒரு துட்டை பக்தர் அன்புட னவர்களிடங்கொடுத்து பாகிரதி நதிக்குச் சமர்ப்பணைச்செய்து அவள் பிரசா தத்தைக் கொண்டுவரச் சொன்னார். அவர்களும் நல்லதென்று வழிநடந்து வாரணாசிக்குச் சென்று கங்கையி லவர்களனைவரும் முழுகி கங்கை பூஜைசெய்து உரோகிதாசர் கொடுத்தக் காணிக்கையை கங்கையிற் போடுமளவில் "இந்த சுவர்ண கங்கணத்தை யவருக்குக் கொடுக்கவேண்டுமென்று" உதகத்தி லோரோசை யுண்டாயிற்று. உடனே கங்கணத்தை அந்த பாகவதர்கள் அவ்விடத்தி லிருக்கக்கண்டு வியப்புற்று அதனைக் கைக்கொண்டு அவ்விடத்தைவிட்டு வழிநடந்து உரோஹிதாசரிடம் வந்து ஐயா! உமது பாவசுத்தியைக் கண்டு கங்காதேவி உமது துட்டைக் கைக்கொண்டு கங்கணத்தைக் கொடுத்தாள். இது மகாப்பிரசாதமாகும். நீர் புண்ணியபுருஷ ரென்றுசொல்லி அதை அவரிடங் கொடுத்து அவர்கள் தங்க ளிருப்பிடங்களுக்குப்போய்விட்டார்கள்.

உரோஹிதாச ரந்த இரத்தின கங்கணத்தை உகப்புடன் கைக்கொண்டு வீட்டில் வைத்திருந்தார். அது இரவுகாலங்களிற் பிரகாசத்தைக் கொடுத்துக்கொண் டிருந்தது. இப்படி யிருக்க ஓர் காலத்தில் சாதுக்கள் வீட்டிற்கு வந்தார்கள். அவர்களுக் கன்ன மிடத் தன்னிடம் திரவிய மில்லாதபடியால் அந்தக் கங்கணத்தை யோர் தட்டான் வீட்டிற்குக் கொண்டுபோய் ஹரிதாசர்களுக்குப் போஜன சாமக்கிரிகைகளுக்காக அதனை விக்கிரயஞ்செய்து சாதுக்களுக் கன்னமளித்தார். தட்டானந்தக் கங்கணத்தின் விலை விசேஷமென் றறிந்து உரோகிதாசரை வஞ்சித்து குடிலபுத்தியுட னரசனிட மதைக் கொண்டுபோய்க் கொடுத்து உரோஹிதாசரிடம்

இருக்கும் இரண்டாவது கங்கணத்தை கைக்கொள்ளு மென்று சொன்னன். இதைக்கேட்டு அவ்வரச னோர்மனிதனை யனுப்பி உரோஹிதாசரை வரவழைத்து இரண்டாவது கங்கணத்தைக் கொடுக்கச்சொல்லிக்கேட்டான். அந்த பக்த ரவ்வரசனை விநயத்துடன் கண்டு ஐயா! கங்காதேவியெனக் கொரே கங்கணத்தைக் கொடுத்தாள். சாதுக்களுக் கன்னமிடும்பொருட்டு சாமக்கிரிகைகளுக்காக விற்றேன். இரண்டாவது கங்கண மென்னிட மில்லையென்று சொன்னர். அரச னிதைக்கேட்டு விஸ்வசிக்காமல் சீக்கிரத்தி லதனை கொண்டுவர வேண்டுமென்று வற்புறுத்தினன். உரோஹிதாசர் அரசனைநோக்கி ஐயா! கங்காதேவியை நான் கேட்டு, கொண்டுவருகிறேன். வீட்டிற்கு நீர் வந்தால், உமதிஷ்டப்படி காண்பிப்பேன். இப்போதிருக்குங் கங்கணம் போய்விட்டால் என்னைக் கேட்கக்கூடாதென்றும் இரண்டாவது கங்கணம் வருமானல் கைக்கொள்ளலாமென்றுஞ் சொல்ல, அரச னிதைக் கேட்டுஉரோஹிதாசர் வீட்டிற்குத்தானே வந்தான். அப்பொழுது உரோஹிதாசர் தனது தோட்டத்திலோர் தொட்டியிற் ஜலமிருக்கக்கண்டு அவ்விடத்திற்கு கங்காபவானியை யழைக்கத்துடங்கினர் ஓ தேவீ பவித்திரமானவளே! ஸ்ரீவாமன மூர்த்திப் பாதங்களிற் பிறந்தவளே! பார்வதிநாதர் ஜடையிலிருப்பவளே! பாகிரதி! சீக்கிரத்தில் வாருமென்று பிரார்த்திக்கக் கங்காபவானியும் கங்கணத்துட னிருக்குங் கையை ஜலத்திற்குமேல் காண்பித்தாள். அனைவரும் கண்ணாரப் பார்த்துக்கொண் டிருக்குமளவி லரசனிடமிருந்த கங்கணமும் ஜலத்தின்மேல் கண்டதும் மறைந்து போயின. அரச னிந்த ஆச்சரியத்தைக்கண்டு உரோஹிதாசருக்கு நமஸ்கரித்து தன்னிருப்பிடஞ் சென்றான். உரோஹிதாசர் மோஹத்தை விட்டு முகுந்தசரணங்களி லிடைவிடாது பக்திசெய்து ஆனந்தத்துடன் அடியார்களுடைய கைங்கரியத்தி லீடுபட்டிருந்தார்.

---

## பிபாஜி ராஜன் சரித்திரம்.

கடேமண்டலமெனும் பட்டணத்தில் மகத்தான சௌரிய தைரியங்களால் பிரக்கியாதி யடைந்த பிபாஜியென் றமரசனெருவனிருந்தான். அவன் சம தமாதி குணங்களை யுடையவனுகி சாது சேவாதத்பரனுய் சக்தியுபாசனை யவலம்பித்து ராஜ்யபரிபாலனஞ்

செய்துக்கொண்டு வந்தான். தினந்தோறும் பிராதக்காலத்தி லெ ழுந்திருந்து ஸ்நானுனுஷ்டானங்களைச் செய்து தன்னிஷ்டதேவ தையான ஜகதம்பாளுக்கு அர்க்கிய பாத்தியாதி சோடசோப சாரங்களா லருச்சனைப் புரிந்து அன்னத்தை யன்புடன் நைவேத் தியஞ்செய்ய அத்தேவியாரு மரசனுடைய அன்புக்கிரங்கி அப் போனகத்தை யமுதுசெய்து வருவாள். பின்பு பிபாஜி உணவு கொள்ளுவான். இங்ஙியமத்துட னவன் சுகமாக ராஜ்யபரிபாலனஞ் செய்யும் நாளி லோர்நாள், விஷ்ணுபக்தர்களான பாகவதர்கள் சிலர் ஆசையை அறுத்தவர்களாய்ப் பூமியைப் பவித்திரம் பண் ணும்பொருட்டு சஞ்சாரஞ் செய்துக்கொண்டு யாத்திரைப்பரா ளாய், அந்நகரத்தி லிறங்கினார்கள். இராஜ சேவகர்கள் தங்க ளரச னுக்கிளைப்படி பிபாஜீ ராஜனிடம் வந்து சாதுஜனங்க ளப் பட்டணத்தில் வந்திருக்கிறார்களென்ன, அவர் அம்பாதேவிக்கு ஆராதனமானவுடன் வந்து பார்ப்பேனென்று சொல்லித் தன் பூஜாக்கிருகஞ் சென்று நியமப்படி பூஜைவிதிகளைச்செய்து பிர சாதத்தை அம்பிகைமுன் வைக்க அவ ளமுதுசெய்யாமல், அர சனே ! இவ்வூரில் வந்திருக்கும் பக்த சிரோமணிகளைச் சேவித்துப் பூஜித்து அன்னம் பரிமாறி ஆராதித்து வந்தால் யானு முன்னுரா தனைக் குகந்து அமுதுசெய்வே னென்றனள். அவ னிதைக்கேட் டு ஆச்சரிய மடைந்து இரண்டு கரங்களையுங் கூப்பிக்கொண்டு அம் பிகையை நோக்கி தேவி ! உலகத்தி லுன்னைவிடச் சிரேஷ்டமானத் தெய்வ முண்டோவென்று கேட்டான். அதற்கம்பிகைச் சொல்லு வாள், ஒ அரசனே ! எவனது மஹிமையைப் பிரம்மதேவன் முத லானோ ரறியார்களோ, எவன் திரிவிக்கிரமாவதாரஞ் செய்து மூவு லகளந்தனனோ எவன் அண்டசராசரங்களுக்குப் பிரபுவாய் லீலை புரிகின்றானோ எவன் திருப்பாற் கடலில் யோகுதுயில் கொண் டவனாய் ஆஸ்ரித ரக்ஷணார்த்தமாக அனேகாவதாரங்க ளெடுத்து தர்மத்தை நிலைநிறுத்துவனோ எவன் பரமபதநாதனு யிருந்து ஸ்ரு ஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்துவருகின்றனனோ அப்புரு ஷோத்தமனே சகல தேவர்களுக்கும் பிரபு, அவனருளாலே சக லரும் சகல மேன்மைகளைப் பெறுவார்களாதலால் நீயு மப்பரந் தாமனையே சரணமடைவா யென்றனள். அதைக்கேட்டு அரசன் அப்படியாயினடியேனப்பெருமாளது திவ்விய ரூபத்தைக்காணக்

கிருபை செய்வாரென்றுப் பிரார்த்திக்கப் பவானி சொல்லுவாள். அகிலபோக பாக்கியங்களும் அரசச் செல்வமும் அதற்கனுகூல மான சௌரிய தைரியங்களு மென்னுற் றரத்தக்கவை யல்லாமல் எம்பெருமானது திவ்விய ரூபத்தைக்காணச் செய்யும் சக்தி எனக் குக் கிடையாது. அவனடியாரான பாகவதர்கள் திருவடிகளை யாஸ்ரயித்து அவர்களருளால் பெருமாளைத் தரிசித்து ஆனந்த மடைவாய். சரணுகதி ரக்ஷணமான ஷட்குணபூர்த்தி ஸர்வேஸ்வர ணுகிய ஸ்ரீயப்பதிக்கே யுள்ளது. அவனே பக்தபராதீனனுதலால் அவர்களை யாஸ்ரயிப்பாய், அவ்வண்ண மடிய ரிவ்விடம் வந்தன ரென்று சொல்ல, அரச னிதைக்கேட்டு அப்பாகவதர்க ளிருந்த விடஞ் சென்று அடிபணிந்து அவர்கட்குச் செய்யவேண்டியவ னந்தவித கைங்கரியங்களையுஞ் செய்து அறுசுவையோடுங் கூடிய வடிசிலை அமுது செய்வித்து ஆசனத்திலிருத்தி தாம்பூல மளித்து அவர்களுக் கெதிரில் அஞ்சலி ஹஸ்தனுகி நின்று அனுதாபத் துடன், அடிகளே! நீங்க ளிராமபிரானை யன்புட னர்ச்சித்து அன வரத மவனுடைய சேவையைக்கண்டு ஆனந்த மடைகின்றீர்க ளென்று அம்பிகை சொல்ல வறிந்தேனுகையா லவ்விறையோன் சேவை யடியேனுக்கு மாகும்படி யனுக்கிரகித் தருளவேண்டுமெ ன்று விநயமாய்ப் பிரார்த்தித்தான். அந்தப் பாகவதர்க ளிதைக் கேட்டு நீர் இராமானந்தரிடம் செல்லும், அவர் நிகம சாரமான தாரக மந்திரத்தை யுபதேசிப்பார். இப்போதே அவரைச் சரண மடைவாயாகி லவருடைய வனுக்கிரக வரத்தினுல் மேலான நன் மையை யடைவாயென்று சொல்லி அரசனிடம் விடைபெற்றுச் சாதுக்கள் சென்றனர்.

அனந்தரம் பிபாஜி அனுதாபத்தை யடைந்து மந்திரியை அழைத்து இராஜ்யத்தை கைக்கொள்ளென்று சொல்லி க்ஷேத்திர புத்திரகளத்திராதிக ளனைத்தையு மடியோடே துறந்து ஆசாரியரை த்தேடிப் புறப்பட்டார், அவ்வேளையி லரசனது பட்டமகிஷியான சீதாபாயி யென்பவளும் மற்றுமுள்ள மனைவிகள் ஐந்நூறுபேரும் பின்தொடரப் பிபாஜி அதிக கிலேசத்தை யடைந்து அவர்களை நோக்கிப் பெண்காள்! நீங்க ளணிந்திருக்கும் அதிக விலைபெற்ற வாடை யாபரணங்களை விட்டு வந்தால் வரலாமென்ன, ஐந்நூறு பேரு மவமானத்துக்கஞ்சி நின்றுவிட, சீதாபாயி யொருத்தியாத்தி

ரம் ஒற்றை வஸ்திரத்துடன் சென்றாள். இவ்வாறு அவ்விருவர்களு மாசாரியரிடம் வந்து அவரது பாதசேவையே யாத்திரையா யனே கவிதங்களா லவருக்குக் கிருபை வரும்படி சிஸ்ருஷைகளைச்செய்ய, இராமானந்த ஸ்வாமி இவர்களிதத்தையே நோக்கு மவராதலா லிவர்களுடைய வதிதீவரமான பக்குவத்தைக் கடாக்ஷித்து இரக்க முள்ளவராகி இராமதாரக மந்திரத்தை யுபதேசித்து அம்மந்திரார்த்தத்தையு மதின் மகிமையையு மருளிச்செய்து அவர்களிடம் பூரண கிருபை வைத்தருளினர். அவர்களு மத்தாரக மந்திரத்தை யனவரத மனுசந்தித்து வந்ததால் அதிசீக்கிரத்திலேயே தங்களையுந் தங்களுக் காதாரமானத் தலைவனையுங்கண்டு எவ்விடமு மெக்காலமு மிராமபிரானே யென்றறிந்து அசஞ்சல சுபாவரா யிருந்தார்கள்.

அவ்விருவரும் பக்திஞான வைராக்கியங்களிற் பூரணராகி சில காலம் ஆசாரிய சன்னிதியில் சிஸ்ருஷைகளைச் செய்துக்கொண்டிருந்து ஒருநாள் தாங்கள் துவாரகையைச் சேவிக்கவேண்டும் விருப்பத்தை ஆசாரியருக்குத் தெரிவிக்க அவர் சம்மதித்து விடைகொடுத் தனுப்பினர். இருவரும் மிகக்களிப்புடன் துவாரகைக்குச் சென்று கோமதி யென்னும் மகாதீர்த்தத்தில் ஸ்நானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு துவாரகாநகரத்தைச் சேவித்து ஆனந்தமடைந்து அவ்விடமிருந்த அர்ச்சகர்களை நோக்கி, அடிகளே! ஸ்ரீ பாகவதாதி கிரந்தங்கள் பூர்வம் துவாரகை ஸ்வர்ணகசிதமா யமைந்த கோபுர மண்டபப் பிராகாரங்க ளுடையதென்று அறிவிக்கிறபடியா லடியோ மவற்றைக்கண்டு சேவிக்க ஆவல்கொண்டு வந்தோம், அவைகளைத் தரிசிக்கும்படி கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அர்ச்சகர்க ளதனைக்கேட்டு ஸ்ரீகண்ணபிரான் பரமபத மடைந்த பின்னர் துவாரகாபுரியை யப்பகவா னாக்கினையின்படி சமுத்திரராஜ னாக்ரமித்து விட்டாராம். கரையிலிருந்து பார்த்தால் பக்தஜனங்களான யாரோ சிற் சிலருக்குமாத்திரம் கலசங்கள் வரைக்கும் காணப்படு மென்றுஞ் சொல்லுகிறார்கள். நீங்கள் பக்தர்களைப்போல் காட்டுவதா லொருக்கால் கண்டாலுங் காண்பீரென்று சொல்ல, அரசனு மக்கணமே போகத் துணிந்தான். அவர்க ளிருவர்களுடைய பக்தியின் வைபவத்தை யறியாதவராதலால் பிபாஜியை நோக்கி அது பூர்வத்தில் நடந்த சங்கதி

கண்ணபிரானோடே போயிற்று. இப்போது நீங்களிருவரும் விபரீதமாய்ப் பிராணத்தியாகம் பண்ணிக்கொள்வது யுக்தமல்லவென்றனேக விதங்களாய்த் தடுத்துங் கேளாமல் பெருமாளைத் தரிசிப்பதே யரும்பயனு யெண்ணி அலையடிக்கிற கடலி லார்த்தியுடனிறங்கினார்கள்.

அவ்வரசனுடைய தைரிய தாந்திமங்களைக்கண்டு எம்பெருமான் கடாக்ஷித்து உவமை ரஹிதமான சோபையுடன் கூடிய துவாரகாபட்டணத்தை அவர்கள் காணும்படி கிருபைசெய்து அதில் தாமும் யாதவர்களுடன் உக்கிரசேனன் உத்தவர் முதலான இனத்தோர் புடைசூழ சிம்ஹாசனத்தில் வீற்றிருந்த கோலமாய்ச் சேவை சாதித்தருளினர். அவ்வரிய சேவையைக் கண்ணுற்றுப் பிபாஜி நமஸ்காரஞ்செய்து எழுந்திருந்து அனேக விதங்களாகத் தோத்திரஞ் செய்து நின்றனன். ஸ்ரீருக்மணிபிராட்டி, சீதாபாயியைத் தன்னருகி லழைத்து உட்காரச் செய்தாள். இருவரையு மாசனங்களி லிருத்தி பகவான் அரசனை நோக்கி உங்கள் வரவாலின்றெமக்குச் சுதினமாயிற்று. உங்கள் நிச்சய மிதராளுக்கு வரமாட்டாது. வெகுதூரம் பிரையாசைப்பட்டு வந்தீர்கள், எமக்கென்னகொண்டு வந்தீர்களென்று கேட்டார். அதற்குப் பிபாஜி அஞ்சலி ஹஸ்தனாய் (தேஹயாத்திரை யென்னும்) வழியில் (ஆசாரியோபதேசத்தால் வந்த சுகுணங்க ளென்னும்) திருடரடித்து (ஆசைக ளென்னும்) வுடைமையாவையுங் கொள்ளை கொண்டார்கள். அடியோம் அகிஞ்சனராகி வந்தோமென்றான். அதைக் கேட்டு பகவான் மந்தஹாசஞ்செய்தருளி அந்தப்புறத்திற்கு அவர்களுடன் எழுந்தருளி பலவித பலஹாரங்களுடன் கூடிய பரமான்னத்தை யமுது செய்வித்து பலவித சல்லாபங்களுட னவ்விடமேழுநாள் நிலவிக்கச்செய்து தம்முடைய சக்ராங்கித முத்திரைகளைப் பிபாஜிக்குப் பிரசாதித்து அவைகளின் பிரபாவத்தையு மவற்றால் முத்திராங்கிதமானவர்களுக் குண்டாகும் பக்தி விசேஷத்தையு மனுக்கிரகித்து உலகத்திலுள்ள ஆத்மகோடிகளை வாழ்வித்தருளும்படி வாழ்த்தி விடைகொடுத்தருளினர்.

புரஜனங்களனைவரும் பிபாஜிராஜன் மனைவியுடன் சாகரத்தில் விழுந்து செத்தார்களென் றெண்ணி யிருந்தனர். ஏழுநாள் பின்னரவர்க ளிருவரும் சமுத்திரத்தை விட்டு வருவதைக்கண்டு அனை

வரு மாச்சரியமடைந்து கொண்டாடினர்கள். பின்பு பிபாஜி தான் பெருமாளைக்கண்டு அவரா லாதரணை யடைந்தும் திரு விலச்சினங்களுடைய சங்கதியு மவர்களுக் கறிவித்தான். கோர பாபங்களா லடியுண்ணும் இக்குடில மனிதருக்கெல்லாம் இந்த தப்த முத்திரைகள் தாரகமா மென்னும் பகவத் வாக்கியத்தையு மறியப்படுத்தினன். இதைக்கேட்டு அவ்விடத்திலுள்ள சாதுக்க ளனைவரு மானந்தமடைந்து திருவிலச்சினங்கள் தமக்கு ரக்ஷகமா மென் றெண்ணி பாவசுத்தியுடன் தப்த முத்திரைகளை யடைந் தார்கள். அக்காலத்தில் தப்த வியதையுந் தாங்காமலிருந்த தாத லா லனேகரவைகளை யடைந்தார்கள். பிபாஜிராஜனு மந்த தப்த முத்திரையைப் பெற்று நான்குமாதங்க ளவ்விடமிருந்து பின்பு காசிபுரிக்குத் தன்மனைவியுடன் செல்லப் பிரயாணப்பட்டான்.

அவ்விருவரும் வழிநடந்துப் போகுஞ்சமயத்தில் பிரபலமான வாரண்ணியத்தைக் கண்டார்கள். பிபாஜி முன்னும் சிதாபாயி பின்னுமாக அதிற் பிரவேசித்துப் போய்க்கொண்டிருக்க இரு வர் மத்தியி லோர் புலி தோன்றிற்று. அதனைக் கண்டவுடன் சிதாபாயி பீதியடைந்து கூச்சலிட்டாள். பிபாஜி திரும்பிப் பார்த்து மனைவியை நோக்கி நீ பயமடைய வேண்டாம். வந்தபுலி சிதாராமரே யாவாரென்று சொல்லவே அப்புலி இவ்வசனத்தைக் கேட்டவுடன் பிபாஜிக்குத் தெண்டன் சமர்ப்பிக்க அவரதற்குத் தாரக மந்திரத்தையுபதேசித்தருளி ஹிம்சா கருமத்தையும் மாம் ஸபக்ஷணமுஞ் செய்யாமலிருக்கக் கடவாயென்று ஹிதவசனத் தைச் சொன்னர். அப்புலியு மிராம மந்திரத்தி லிரதியை யுடைத் தாய் நேமந் தப்பாம லோர்வாரம் வரையி லவ்வாரண்ணியத்தி லுள்ள இலைசருகுகளைத் தின்றுத் தேகத்தைவிட்டுப் பிராம்மண வமிசத்திற் ஜனனமெடுத்து பக்தி நிஷ்டையாற் பரமமான பதத் தை யடைந்தது.

## சிந்திடியா.

பின்பு பிபாஜி தன்மனையாளுடன் மார்க்கத்திற் சென்று சில நாள் நடக்க ஓர் நாளோர் பட்டணத்தைக் கண்டார்கள். அவ்விட த்திற் சிந்திடியாவெனும் பக்தர் வாசமாயிருந்தார். அவர் பெரு மாள் மீது பிரீதியும் வைராக்கியத்தையு முடையவராய்ப் பற்றின் றிக் குடும்பத்துட னிருந்தும் விஷய கோரிக்கைக ளில்லாமற் சாது

ஜனங்களைப் பூஜித்துக்கொண்டு சத்தியசீலையான சதியுடன் சமு சாரியாக விருந்தார். சாதுக்க ளவர்வீட்டிற்கு வருவார்களாயின் அதிக சந்தோஷத்தை யடைந்திருப்பர். தரித்திர தசையாற் பிடிக்கப்பட்டாலும் தாமோதரனைத் தியானத்திலிட்டு இருப்தி யுடன் பகவத்பஜனையைச் செய்துக்கொண்டிருந்தார். பிபாஜி பக்தர் தனது மனைவியுடன் அவரைக் காணச்சென்றார். சிந்திடி யா அவர்களைக் கண்டவுடன் சிரசாஷ்டாங்கமாக நமஸ்கரித்து விநயத்துட னர்க்கிய பாத்தியங்களளித்து ஆசனமிட்டு உட்காரச் செய்து, ஸ்வாமி! தேவரீ ரிவ்விடம் வந்தது அடியேனுக்குச் சுவர்க் கப்பிராப்தி சமானமாயிற்றென் றிவ்வாறான வார்த்தைகளைச் சொ ல்லிக்கொண் டிருக்குமளவில் சிந்திடியார் மனைவி அவ்விடம்வந்து தெண்டஞ் சமர்ப்பித்தாள். சிந்திடியார் அவ்விரண்டு அதிதிகளை யும் புஜித்துப் போகும்படி பிரார்த்தித்தார். பிபாஜியு மவருடைய சுத்தபாவத்தைக்கண்டு அவர் வேண்டுகோளுக் கிசைந்தனர். பின் பு சிந்திடியார் தன் மனைவியிடஞ்சென்று விசாரிக்க, வீட்டில் சாமக் கிரிகை கொஞ்சமேனு மில்லாதிருக்க அதிக விசனமடைந்து நமது பாக்யோதயத்தால் பக்தர்கள் நம்முடைய வீட்டிற்கு வந்திருக்கி றார்கள். அவர்களுக்குச் சாமக்கிரிகைக் கொடுத்து சன்மானிக்க வேண்டும். அக்கம் பக்கத்தார் கடனும் கொடார்களே! என்ன செய்வோ மென்றுசொல்ல மனைவி சொல்லுவாள், எனக்கு ஒரே வஸ்திர மிருக்கிறது, அதனை விற்று, வந்த பெரியோருக்குப் போ ஜன சாமக்கிரிகை யளிக்கக்கடவீர். இதில் வஞ்சனையில்லை விச னப்படவேண்டாமென்று சொல்லிப் புறக்கடையிற் சென்று, பக் கத்து வீட்டாளான தனது சகியை யழைத்து அவளுக்குத் தான் கட்டியிருந்த வஸ்திரத்தை விற்று அதின் கிரையமான பணத்தை அச்சகி கொடுக்க அதைத்தான் கொண்டுவந்து, வாசற்படிமேல் வைத்து அம்மணமா யறைக்குட் பிரவேசித்திருந்து பர்த்தாவை யழைத்தாள். அவர் வந்து வெளியிற் பணம் வைத்திருப்பதைக் கண்டு அதனைக் கையி லேந்திக்கொண்டு கடைக்குச் சென்று சாப் பாட்டுச் சாமக்கிரிகையைக் கொணர்ந்துவந்து அவ்வதிதிகளுக்கு அளித்தார். அப்பொழுது சீதாபாய் சீக்கிரத்திற் சமையற் செய்து தனது பர்த்தாவான பிபாஜிக்கும், சிந்திடியாருக்கும், இரண்டிலை களைப் போட்டு வட்டித்தாள். அவ்விருவரும் சுகமுடன் பக்ஷித்த

பின்னர் சிந்திடியார் பிபாஜி பக்தருக்குத் தாம்பூல மளித்தனர். அவரதனைப் பெற்றுக்கொண்டு அத்தியானந்தத்தை யடைந்திருந்தார்.

பின்னர் சீதாபாயி சிந்திடியார்மனைவியைக் கூப்பிட்டு பாகஞ் செய்ய பொழுதாயிற்று, நாமிருவரும் பக்ஷிப்போம், வாருமென்று அழைக்க அவள் வஸ்திரஹீனையாய்க் கதவை மூடிக்கொண்டு வெட்கமுற்று உள்ளே உட்கார்ந்திருந்து அம்மா! சீதாபாயி! நீர் சாப்பிடும், நான் பிறகு உண்கிறேன், அடியேன் விண்ணப்பத்தைக் கேட்கக்கடவீரென்ன, சீதாபாயி அவளை உத்தேசித்து நோக்கி உம்மைவிட்டு நான் போஜனஞ்செய்யேன், சீக்கிரத்தில் வாருமென்று அழைத்தும் வாராமையால் சீதாபாயி தானே சென்று கதவைத் திறந்து பார்க்குமளவில் இருட்டறையி லாடையில்லாமலும் உத்வேக சிந்தைகளையும் விட்டு ஹரியைப் பஜித்துக்கொண் டிருப்பதைக்கண்டு காரணத்தை வினவ, அவள் நடந்த சங்கதியைச் சொன்னாள். இது மகத்தான சுகிருத மாகுமென்று சீதாபாயி சொல்லி தன்னுடையிற் பாதியைக் கிழித்து அவளுக்குக் கொடுத்து அவளதை உடுத்திக்கொண்டபின் அன்புடன்அவள் கையைப் பிடித்து வெளியில் கொண்டுவந்து தாமிருவரும் பக்ஷணை செய்தார்கள். இதனைப் பிபாஜியறிந்து தன் மனையாளை நோக்கி இவர்களிருவரும் பூரண நிரபேக்ஷை யுடையவர்கள் இவர்களுக்காகத் தனத்தை சம்பாதித்துக் கொடுப்போமென்று சொல்லி இருவரும் பட்டணவீதியிற் பிரவேசித்து வீணையை கையிற்கொண்டு விஷ்ணு கீர்த்தனைகளை விநோதமாகப்பாட, புரஜனங்க ளனைவரும் மோஹமடைந்து மிகுதியாகத் திரவியங் கொடுக்க அதை யனைத்துங் கொண்டுவந்து சிந்திடியாருக்குக் கொடுக்குமளவில் அவர் பயமடைந்து மனைவியுடன் வீட்டைவிட்டு வெளியிற் சென்றனர். இதைக்கண்டு பிபாஜி அந்தத் தனத்தை யெல்லாமேழைச் சாதுக்களுக்குப் பங்கிட்டுச் சிந்திடியாரையும் அவர் மனைவியையும் திரும்பி வீட்டிற் கழைத்துப் பயத்தைநீக்கி ஸ்ரீஹரிபக்தியிற் சிறந்தவர்களாகி வெகுகால மிருக்கக்கடவீர்க ளென்று அன்புடன் ஆசீர்வதித்துப் பிபாஜியு மவர் மனைவியும் பிரயாணமாகி ஸ்ரீரகுராமருடைய செய்கைகளைப் பாடிக்கொண்டு வழிநடந்து காசிபுரியைச் சேர்ந்து நித்திய சுகத்துடன் வாழ்ந்திருந்தார்கள்.

## நரசிமெஹதா சரித்திரம்.

பிபாஜியெனும் புண்ணிய புருஷனல் பவித்திரத்தை யடைந்த வப்பெரியபுலி ஜுனுகடியெனும் கிராமத்திற் பிராம்மண குலத்திற் பிறந்தது. பிறந்த அக்குழந்தைக்குத் தாய் தந்தைகள் நரசிமெஹதாவென்று நாமகரணஞ் செய்துத் தகுந்த வயதுவந்தவுடன் உபநயனஞ் செய்வித்தார்கள். பிள்ளையினுடைய ஏழாவது வயதிற் பெற்றோர்கள் பரமபத மடைந்தார்கள். அவ்விடத்திலுள்ள பந்துக்க ளனைவருங்கூடி அப்பிள்ளையைக் காப்பாற்றி வருமளவில் இதர பாலகருடன்கூடி அப்பிள்ளை யெதையும் படிக்காமலிருந்தான். அந்தப் பிள்ளைக்கு அத்தையானவள் அவனுக்கு ஹிதஞ் செய்பவளாகி அப்பா! இப்படி விளையாடிக்கொண்டிருந்தா லெப்படி நீ முன்னுக்கு வருவாய், பசியெடுக்கும்போ தன்ன மருந்தி உன்காலத்தை விளையாட்டில் கழித்துவிட்டால் நீ பெரியோனுகி லுன்பிள்ளை பெண்ஜாதிகள் கதி எப்படியாமென்று சொல்ல, இவ்வார்த்தைகளைக்கேட்டு கோபங்கொண்டு அப்பிள்ளை அரண்ணியத்திற்குச் சென்றார். தெய்வாதீ [illegible] ஓர் சிவாலய மிருந்தது, அச்சன்னிதியிற் [illegible] சிரசாஷ்டாங்கமாக நமஸ்கரித்து விவரமெ [illegible] விஸ்வநாதரே! ஓ உமாரமணரே! ஓ பரமசிவரே! அநாத ரக்ஷகரே! அடியேனை யாதரிக்க வேண்டுமென்று தன்னுடைய அங்கத்தை யெழுநாள் அந்தசிவலிங்கத்தின் மேலிட்டு அன்னபானங்களை மறந்திருந்தார். பரமசிவமூர்த்தி பரிதிருப்தியடைந்து தனக்குள் ளெண்ணத் தொடங்கினர். என்னைப் பார்க்கவிரும்பி பக்தர்களனேகர் வெகு விதங்களான வஸ்துக்களைச் சமர்ப்பிப்பார்கள். தேகத்தை எனக்குச் சமர்ப்பித்தவன் தேவலோகத்திலும் பூலோகத்திலுமில்லை. இது பெரிதான தவமாகுமென்று பரமசிவன் பிரசன்னராகி ஓ பாலகனே! உனது பக்தி மேன்மை யடைந்தது. எமக்கு உகந்ததாயிற்று உனக்கிஷ்டமான வரங்களைக்கேள் நாமளிப்போமென்ன, நரசிமெஹதா சொல்லுவார், ஸ்வாமி! அடியேன் பாலகன், வேண்டும் வஸ்துக்களை ஆசக்தியுடன் கேட்கப் புத்திபோதுமானதாயில்லை. தேவரீருக் கிஷ்டமான பதார்த்தத்தைக் கொடுக்கக் கடவீரென்றுன். சங்கரமூர்த்தி போக்கின்றி, செம்மை யிருக்கிறதே! என்றுசொல்லி அப்பிள்ளையை நோக்கி,

அடா பாலகா! நான் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியின் இராசக்கிரீடா விலாசத்தை எப்பொழுதும் பிரீதியுடன் பார்த்துக்கொண் டிருப்பேன். எனக்கிஷ்டமான பதார்த்தமதுதான். அதை உனக்குக் காண்பிப்பேன். அவனுடைய விலாசத்தை நீ திருப்தியாகப் பார்க்கக் கடவாய், எனக்கு எது ஜீவகோப்பியமா யிருக்கிறதோ அதை என்னைக் கேட்டாய், இது எப்படி யிருக்கிறதென்றால் இராஜனிடஞ் சென்று இராஜ்யத்தைக் கேட்ட விதமாயிருக்கிறது. ஆகிலு முனக்குக் காட்டுகிறேனென்றுரைத்து அப்பிள்ளைக்கு ஸ்திரீ வேஷத்தைத் தரிக்கச்செய்து பிருந்தாவனத்திற்குக் கொண்டுவந்தார்.

அந்தப் பிருந்தாவனத்திற் கோபிகைகளனைவருங் கிருஷ்ண மூர்த்தியுடன் கூடி லீலைகளைச் செய்துகொண்டிருக்க பெருமாள் இராசக்கிரீடையி லிரம்மியதை யடைந்திருந்தார். அவ்வவசரத்தில் சாம்பமூர்த்தி அத்யானந்தத்துடன் ஹரியைக்கண்டு வந்தனஞ் செய்ய, ஸ்ரீகிருஷ்ணர் நகைத்து நூதனமான கோபிகையை எவ்விடமிருந்து கொண்டு வந்தீரென்ன, சாம்பமூர்த்தி யவரை நோக்கி, இச்சிறுவன் வனத்தி லன்னபானங்களின்றி ஏழுநாள் அங்க சமர்ப்பண மெனக்குச் செய்தான். பூர்வபவத்திற் புலியாயிருந்து [illegible]யினுற் றாரகமந்திரத்தைப்பெற்று அத்தேகத்தைவிட்டு பின்பு பிராம்மண குலத்திற் பிறந்து தாய்தந்தைகளை யிழந்து பந்துக்களனைவரும் படிக்கச்சொல்லிவற்புறுத்த அவன் கேளாம லாரண்ணியத்திற்குச் சென்று அருமையான தவத்தைச் செய்தான். அதற்கு நான் அவனை வரங்களைக்கேளென்று லென் னிஷ்டப்படிக் கொடுக்கச் சொன்னான். உம்முடைய சித்விலாசமான விந்த இராச லீலையை யெப்பொழுதும் பார்த்துக்கொண் டிருப்பதன்றோ எனக்கிஷ்டம்? அதனைக் காண்பிக்கும் பொருட் டிவனைக் கொண்டுவந்தே னென்றார்.

அச்சமயத்தில் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அதிசயமான ரூபத்துடனிருந்தார். திருவடிகளிற் சிலங்கை யுடையராய் ஓசைக் கிளம்ப மிருதுவான நாட்டியத்தை ஸ்திரீகளுடன் மெதுவாகச் செய்துக் கொண்டிருந்தார். பீதாம்பரத்தைத் தரித்தும் இடுப்பில் அரைஞாண் கயிறும் மார்பில் ரத்தினங்களி னிழைத்தப் பதக்கமும் திக்குகளெங்கும் காந்தியைக் கொடுக்கும் மணிஹாரமும் வைஜயந்தியும் வக்ஷஸ்தலத்திற் ஸ்ரீவத்ஸமும் சகல ஜனங்களும் கொண்டாடும் சுந்

தரிகள் கரங்களைப் பிடித்திருக்குங் கைகளும், ஆனந்தமான அதரோஷ்ட்ரமும் சொகுசான மூக்கும் சரசிஜ நேத்திரங்களும் விசாலமான நெற்றியும் இரம்மியமான திலகமும் இரத்தினங்களிழைத்தக் குண்டலங்களும் மயூர பிஞ்சமும் மணிமயமான இரத்னகிரீடமுமுடையராகி கோபிகா ஸ்திரீகளுடன்கூடி வெகுவிதமான லீலைகளைச் செய்துக்கொண்டிருந்தனர். சாம்பமூர்த்திக் கொண்டுவந்தச் சிறுகோபிகையும் சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்க, உமாபதி பெருமாளை நோக்கி இப்பிள்ளைமேல் கிருபையருள்வீரென்றார். அப்பொழுது பெருமாள் தனது ஹஸ்தத்தை அப்பிள்ளையின்மேல் வைத்து என்னுடைய லீலைகளை நீ கண்ணாரக் கண்டபடிக் கிரந்தத்தைச் செய்து பிரஜைகளுக்கறிவித்து எமது பக்திமார்க்கத்தைப் பிரகடம் பண்ணக் கடவாய், சுஜனர்களுக்குட் சிரேஷ்டனாகி யிருப்பாயென்று சொல்லி சங்கரமூர்த்தியைப் பார்த்து பாலகனை கைக்கொண்டு போமென்றார். அவ்வண்ணமே சிவபெருமான் அவனையச்சிவாலயத்திற் கொண்டுவந்து அபயங்கொடுத்து அந்தர்த்தானமாய்விட்டார. உடனே அப்பிள்ளைக்கு க[illegible]
டாகி ஹரிகுணானுவாதமான பாடல்களைப் ப[illegible]
மிருக்க அப்பாட்டினோசையை சில இடைய[illegible]
யைக் கோயிலிற்கண்டு கிராமத்திற் சென்று பிள்ளையின் சங்கதியைத் தெரிவித்தார்கள்.

இதற்குமுன் நரசிமெஹொதாவின் பந்துக்கள் நகரத்தி லவனைக் காணாமல் நான்கு பக்கங்களிலுந் தேடிக்கொண்டிருக்க அவ்விடையர் சொன்ன வார்த்தைகளைக் கேட்டவுட னவ்வனத்திற் கேகிச் சிவாலயத்தி லச்சிறுவனைக்கண்டு அவனை வீட்டிற் கழைத்து வந்தார்கள். சில சஜ்ஜனர்கள் அப்பிள்ளையின்குணம் சாத்வீகமாயிருக்கக்கண்டு ஓர் கன்னிகையை யவனுக்கு விவாகஞ் செய்துக் கொடுத்தனர். பக்திநிஷ்டையைக்கூடி யப்பிள்ளை வளர்ந்து வந்தனர். வயது வந்தபின் ஓர் பிள்ளையையு மோர் பெண்ணையும் பெற்றார். பெருமாள் கடாக்ஷத்தால் கிருஷ்ணலீலைக ளவருக்குக் காணப்பட்டுக்கொண்டிருக்கும். அவர் கண்ணாரக் கண்டபடி ஸ்ரீகிருஷ்ணருடைய லீலைகளை கானரூபமாக பிரபந்தத்தைப் பாடினார். குஜராத்தி பாஷையி லிப்பொழுது மனேக ரந்த பாட்டுகளைப் பாடுவார்கள். தாளவீணைகளைக் கைக்கொண்டு தாண்டவஞ் செய்

வதும் வேளைவேளைக்கும் பக்திப் பிரபலத்தால் விரகதர்பங் கொள்ளுவதுமாயிருப்பார். பிரஜைக ளனைவரு மவருக்குத் தானியத்தைக் கொடுக்க வதனுற் போஷணம் நடந்து வந்தது. நர ஸமூஹத்தால் மன்னிக்கப்பட்டு ஈரா... ...டைய ஸ்மரணையினல் திருப்தி யடைந்திருந்தார்.

ஜூனுகடிக்குச் சமீபத்தில் சியாமளரூபமெனும் கிராம முண்டு. அவ்விடம் நரசிமெஹதா ஸ்வசாகையிற் சேர்ந்த திரிபுராந்தகனெனு மோர் பிராம்மண னிருந்தான். அவனிட மோர் பெண் விவாகத்திற் கிருந்தது. அவன் தன் புரோகிதனை யழைத்துப் பெண்ணுக்கு மாப்பிள்ளையைத் தேடச்சொல்லி யனுப்பினன். அப்புரோகிதனு மங்குமிங்கும் பார்த்து ஜூனுகடிக்குவந்து நரசிமெஹதாவைக்கண்டு தனக் கெஜமானுன் திரிபுராந்தகன் புத்திரியை யுமது பிள்ளைக்கு விவாகம் பண்ணிக்கொடுப்பிக்கலா மென்று நிச்சயித்தேன். பொருத்தங்க ளிருவருக்குஞ் சரியாயிருக்கின்றன வென்றுசொல்லி முகூர்த்த தினத்தையும் நிச்சயித்து எஜமானனை திரிபுராந்தகனிடஞ் சென்று தான் நியமித்தப்பிள்ளையை யவனுக்குத் தெரிவித்தான். அவன் குடிலபுத்தி யுடையவனுகி இந்த சம்பந்தங் கூடாதென்றும் பிக்ஷாடனஞ் செய்து வயிற்றை வளர்த்து பெருமாளைப் பாடி விக்ஷேபித்திருக்குஞ் சமுசாரத்திற்குப் பெண்ணைக் கொடேனென்றும் சொன்னுன். அதைக்கேட்டு புரோகிதன் ஐயா! புராதன தேசாசாரத்தின்படி பலாத்காரமாகப் புத்திரியை விவாஹகஞ் செய்விப்பே னென்றான். திரிபுராந்தகன் புரோகிதனை நோக்கி ஐம்பது யானைகள் ஐம்பது குதிரைகள் ஐம்பதுபல்லக்குகள் இதுவன்றி ஆடையாபரணங்கள் முதலானவைகளைக் கொண்டுவந்தா லன்றிப் பெண்ணைக் கொடேனென்றுகூற வப்புரோகிதன் பிரியமாகாமல் பதார்த்தங்க ளெல்லாவற்றையு மவர் கொண்டுவருவார் விவாகமு மாகும் நீ பார்ப்பாயென் றுரைத்து ஜூனுகடிக்குச்சென்று நரசிமெஹதாவுக்குச் சொல்லுவான், புத்திரனுடைய பாணிக்கிரகணத்தைச் சித்தப்படுத்தி யிருக்கிறேன், முகூர்த்த தினத்திற்குமுன் விவாக சாமக்கிரிகையுடன் சியாமளரூபக்கிராமத்திற்கு வரக்கடவாயென் றுரைத்து திரிபுராந்தகனிடஞ் சென்று குமாரி விவாகத்திற்குச் சாமக்கிரிகைச் சித்தப்படுத்தச் சொன்னுன். அவன் புரோகிதனை நோக்கி இந்த விவாஹம் நிறை

வேறக்கூடாதென்றே அக்காணிக்கைகளைக் கேட்டேன். அதி தரித்திரரான அந்தணர் வீட்டிற் கென் பெண்ணைக் கொடே னென்று கூற, புரோகித னவனை நோக்கி நீ துஷ்டன், தெய்வ முனக் கவமானத்தைக் காட்டிக் கொடுக்கு மென்றுத் தன்வீட்டிற் கேகினன். புரோகிதன் சொற்படி நியமித்ததினத்தில் நரசிமெஹ தா ஸ்நானஞ்செய்து நித்திய நேமங்களை முடித்துக்கொண்டு விவா கத்திற்காக புறப்பட்டுவாத்தியகோஷங்கள் முழங்க வைஷ்ணவர் களுடன் ஸ்ரீஹரி சகலகாரணரென்று அவன் திருநாமத்தை நவின் றுக்கொண்டு ஆடுவதும் பாடுவதுமாக ஆனந்தத்துடன் வழிநடந் துச் சென்றார். அப்பொழுது துவாரகையிற் பெருமாள் பிராட் டியைப் பார்த்து நரசிமெஹதாபக்த ரின்றையதினம் தன் குமா ரன் விவாகத்திற்காகப் போகின்றா ராதலால் அவருக்குச் சகாய மாக நாம் போகவேண்டுமென்று பக்தர்களனைவரும் வரவேண்டு மென்ன, உத்தவர் அக்ரூரர் முதலானோர் வந்து சேர; அவர் களை யழைத்துக்கொண்டு மாறுவேஷங்களுடன் பிராட்டியோடு பாகவதருட னிருக்கும் நரசிமெஹதாவைக்கூடி திரிபுராந்தகன் சொன்னபடி காணிக்கைகளை கைக்கொண்டு அபாரமான வாத் தியங்களுடன் பக்தர் மூன்பு பகவான் நடனஞ்செய்துக்கொண்டு சென்று சியாமளரூபமெனு மூரை யணுகினார்கள். கிராமச் சமீ பத்தில் பரிவாரத்தை நிறுத்திப் பெண்ணை அழைத்துவரும்படி திரிபுராந்தகனிடம் பெருமாள் தூதனை யனுப்பினர். தூத னவ னிடஞ் சென்று சங்கதியை யறிவிக்க வவன் கேட்டு ஆச்சரிய மடைந்திருந்தான். அப்பொழுதந்த வூராரனைவருந் திரிபுராந் தகனை நோக்கி ஐயா! மிகுதியான மகோச்சவத்துடன் கலி யாணப்பிள்ளை வந்திருக்கின்றனரே! நீர் யேன் சும்மாயிருக்கின் றீர் என்று வினவினார்கள். புரோகிதனும் புண்டரீகாக்ஷரான பெருமாள் கடாக்ஷித்தாரென்று பூர்ணானந்தத்தை யடைந்திருந் தான். இதற்குள் ஸ்ரீஹரி சகல பதார்த்தங்களையு மிச்சாமாத்திரத் தாலுண்டாக்கினர். மண்டபசாலைகளுமாயின. தேவகன்னிகை களை யழைப்பித்துத் திவ்விய நடனங்களைச் செய்வித்தார். கலி யாணப்பிள்ளைக்கு வஸ்திராபரணங்களை யளித்தனர். அப்பொ ழுது திரிபுராந்தகன் தன் பந்துக்களைச் சிலரைக் கூட்டிக்கொண்டு கலியாணப் பெண்ணை இட்டுக்கொண்டுவந்தான். பெருமா ளவனைப்

பார்த்து நீ மகா பாக்கியவானுனாய், பரம பாகவத ருனக்கு பந்துவாக நேர்ந்தார். இது நீ செய்த மேலான புண்ணியமாகும். பரிசவேதியுடன் சேர்ந்த யிரும்புப் பொன்னுமாப்போ லுனக்கிந்தச் சம்பந்த முண்டாயிற்றென்றுகூற திரிபுராந்தக னவரைநோக்கி ஐயா! நீர் யார்? எவ்விடமிருந்து வந்தீரென்ன, பெருமாள் உரைக்கலுற்றார், நான் துவாரகையினின்று வந்தேன். சியாமளனென்றென்னைக் கூப்பிடுவார்கள். வர்த்தகத்தொழிலைப் புரிவேன். நரசிமெஹெதாவுக்கு குமாஸ்தாவாவே னென்றார். திரிபுராந்தக னவருடைய வைசுவரியமும் சம்பத்தையுங்கண்டு தான் கொண்டுவந்த சொல்பசாமக்கிரிகையைக்காண்பிக்க வெட்கமுற்றிருந்தான். இதைக்கண்டு பெருமாள் ஸ்ரீமந்தானுடைய சம்பந்தம் பிரயாசையென்று பயப்பட வேண்டாம். இவ்விடம் குறையொன்றின்றி எல்லா விபவங்களும் ஏற்பட்டிருக்கின்றன. நீ கொண்டுவந்த சாமக்கிரிகையுமிவ்விடம் வைக்கக்கடவா யென்றார். அவனுஞ் சொற்படிக் கேட்க பெருமா ளவையெல்லாவற்றையுங் கைக்கொண்டு விவாகத்தை யதிக மேன்மையுடன் நடத்தினர். சகல ஜனங்களுக்கும் வஸ்திரங்களைக் கொடுத்தார். பிராம்மண ஜனங்களுக்குத் தக்ஷிணை வெகுவாக வளித்தார். நடனகான வேடிக்கைகளை விசேஷமாகச் செய்வித்தார். பணியாரங்களும் பக்ஷியபோஜ்யங்களும் பாயசான்னங்களும் பத்துவித காய்கறிகளுடன் சகல ஜனங்களுக்கும் ஐந்து நாள் பரியந்தம் போஜனமளித்து திருப்தி செய்தார். நாலுவித முக்திகளும் ஸ்திரீ ரூபங்களை வகித்து நடனஞ் செய்தன. பக்தஜனங்க ளனைவரும் பஜனைசெய்துக் கொண்டு பாடுவது மாடுவதுமாக விருந்தார்கள். ஐந்தாநாள் திரும்பியு மனைவருக்கும் வஸ்திரங்களை யற்பித்து பக்தரான நரசிமெஹெதாவுக்கு மிகுதியான பிரியத்தைச் செய்தருளினர். விவாக மனைத்தும் ஒழுங்காக நடந்தபின் கலியாணப் பிள்ளையையும் பெண்ணையும் நரசிமெஹெதா வீட்டிற் சேர்த்து பிரேமையுட னவரிடம் வந்து சங்கடகாலத்திலென்னை நீ நினையென்று இரஹசியமாகச் சொல்லிப் பரிவாரத்துடன் பெருமாள் துவாரகைக்குத் திரும்பினர்.

அனந்தரம் நரசிமெஹெதா பெருமாள் மீது அதிகப் பிரீதியுடையராய் சிதசிதாத்மகமான ஜகத்தில் ஸ்ரீஹரியையே கண்டுகொண்டிருந்தார். சில யாத்திராயராள் துவார்கைக்குப் போகப்

பிரயாணப்பட்டு வழியில் சூனகடியிற்றங்கினர்கள், அவர்களிற் கேசவனெனு மொருவ னவ்வூராரைப்பார்த்து எனக்குத் துவா ரகைக்கு உண்டிபத்திரம் வேண்டுமென்றான். குசோத்தியமாக சிலர் நரசிமெஹெதாவின் கிரகத்தைக் காண்பித்தார்கள். (சராசர மெலாமீசுர சிருட்டியாகும். சுவாபிமானம் ஜீவசிருஷ்டியாகும். பக்தர்கள் ஈஸ்வர சிருஷ்டியி லிருப்பார்கள். அபக்தர் ஜீவசிரு ஷ்டியி லிருப்பார்கள்.) அப்படியான அபக்தர்களுடைய வார்த் தையைக் கேசவன் கேட்டு நரசிமெஹெதாவினிடஞ் சென்றான். அவ்வேளையி லவர் துளசிவனமத்தியி லுட்கார்ந்திருந்து நிலைமை யுடன் நரஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டு அவரையே நினைத் திருந்தார். கேசவ னவ்விடஞ் செல்லவே நரசிமெஹெதா அவனை யாதரித்து உட்காரவைத்து எவ்விடத்திலிருந்து வந்தீர் எவ்விடம் போகிறீரென்று கேட்கக் கேசவ னவரைநோக்கி ஐயா! நான் துவாரகாபுரிக்குப் பிரயாணமாகப் போகிறேன். வழியிற் றிருடர் பயமுண்டென்று சிலர் தெரிவித்தார்கள், இவ்வூரில் ஹூண்டிபத்திரம் யாராவது கொடுப்பார்களோவென்று சிலரைக் கேட்க, அவர்கள் நீர் கொடுப்பதாகச் சொன்னார்கள். அதனு லும்மிடம் வந்தேன். இதோ எழுநூறுவராகன்களைக் கைக் கொண்டு ஹூண்டி யெழுதிக் கொடுமென்று கேட்டான். நரசிமெ ஹெதா இதனைச் செவியேற்றி ஊராருடைய விகடவார்த்தைகளை நினைக்க வேடிக்கையா யிருக்கிறதே யென்றும் ஆயினும் ஸ்ரீ ஹரி கருணை யெவ்வண்ண மானதோவென்றும் நினைத்துத் திரவியத் தை வைக்கச்சொல்ல, கேசவன் அப்படியே செய்து துவாரகை யிற் சாவகார்பெய ரென்னவென்று கேட்க, நரசிமெஹெதா சியா மளரெனும் நாம மவருக்குண்டு, சதுர்முகன் சாம்பமூர்த்தி முத லானோ ரவருக்கு வந்தனஞ் செய்வார்கள். அவருடைய கீர்த் தியை வேதங்கள் வர்ணிக்கும். திருப்பாற் கடலிலும் ஸ்ரீவை குண்டத்திலும் பிருந்தாவனத்திலும் துவாரகாபுரியிலும் திருமலை யிலும் பண்டரிபுரத்திலும் தகுந்த கடைகளவருக்குண்டு. அவ்வி டங்களிலுள்ள வர்த்தகர்கள் வியாசர், வால்மீகர், உத்தவர், அக்ரூரர் முதலானோர், ஹரிகீர்த்தனை யெனுந் தானியத்தை அளவுகளில் விற்க, அதனை வாங்குவோர் கபீர்தாசர், நாமதேவர், ஞானதேவர், துளசிதாசர் முதலானோராவார்கள். இவர்களிடத்திலிருந்து உலக

த்திலுள்ள பக்தரனேகர் அந்த தானியத்தை வாங்கி பாபங்களைப் போக்கி உஜ்ஜீவனம் செய்துக் கொள்ளுவார்கள். கேசவனிந்த வாக்கியங்களை யறிய சக்தியில்லாதவனாகி வராகன்களை அவ்விடம் வைத்தான். அப்பொழுது நரசிமெஹெதா பிரேமையுடன் பத்திர மெழுதத் தொடங்கினர் "அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகா! ஆதிகாரண கர்த்தராகி அனந்தரூபராகி உலகமனைத்தையு முமது பார்வையால் ரக்ஷணை செய்துக்கொண்டு தீனஜனங்களை யுத்தரிக்கும் தீக்ஷையினால் துவாரகாபுரியில் வாசமாயிருக்கும் சியாமள பிரபுவின் திவ்விய சன்னிதிக்கு நரசிமெஹெதா அனேக நமஸ்காரங்களைச் செய்து எழுதிக் கொண்ட விண்ணப்பம். இந்தப் பத்திரத்தைக் கொண்டுவரும் கேசவனெனும் பிராம்மணனிடம் எழுநூறு வராகனைக் கைக்கொண்டேன். அந்த பொற்காசை யவனுக்குச் செலுத்தி விடவும், ஓ ஸ்ரீ ஹரி! உபமன்னியனெனு மோர் சிறு பிள்ளை, பால் வேண்டுமென் றும்மைக் கேட்க நீர் கிருபைசெய்து அவனுக்குப் பாற்கடலையே காண்பித்தீர். குழந்தையான துருவனுக்கு கிடைக்கத்தகாத பதவியை யளித்தீர். உம்முடைய ஔதார்யத்தை யாவரால் வர்ணிக்கக்கூடும். ஆனபடியாலடியேனைக் கருணைக்கண்ணாற் கடாக்ஷித்து காரிய சபலஞ்செய்யவும், தேவரீர் திருவடிகளுக்கு அனேக நமஸ்காரங்களுடன் தாசன் செய்யும் விண்ணப்பமிது" தானென்று இவ்விதமான பத்திரிகையை வரைந்து அதனை யவன்கையிற் கொடுத்து சாது ஜனங்களை யழைத்து அவன் தன்னிடம் வைத்த திரவியத்தைப் பங்கிட்டு விட்டார். அந்தப் பிராம்மணன் உண்டியை கைக்கொண்டு வழிநடந்துக் கொண்டு ஆச்சரிய சித்தனாகி இந்தஉண்டி வியர்த்தமாய் விடுமோ? அத்யந்த விரக்தியுடன் ஹரி! கிருஷ்ணா! யென்று சொல்லிக் கொண்டு ஆர்த்தியுடனிருக்கும் பக்தராகியும் சந்ததமும் தரித்திரதசையி லிருக்கு மவர்கையில் சுவர்ண திரவிய மனைத்தையுங் கொடுத்து விட்டேனே! அவரு மந்த திரவியத்தைக் கிருஷ்ணார்ப்பணமாக அனைவருக்கும் பங்கிட்டு விட்டாரே! அபேக்ஷையில்லாதவர்போல் தோன்றுகின்றதே என்று சிந்தை கலங்கினவனாகி துவாரகாபுரியைச் சேர்ந்தான். அவ்விடத்திற் கோமதியில் ஸ்நானம் செய்து ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைத் தரிசித்து அவர் திருநாமத்தைச் சொல்லிக்கொண்டு நமஸ்கரித்து, அனாத ரக்ஷகரே! ஆர்த்த

சரண்ணியரே! ஹரிஸ்ரீரங்கா! அச்சுதரே! அடியேனை ரக்ஷித்தருளுமென்று சொல்லி அர்ச்சகனைப்பார்த்து சியாமள ரென்பவ ரெவ்விட மிருப்பாரென்று விசாரிக்க, அவன் கேசவனைப்பார்த்து அப்பெயருடையவ னிவ்வூரி லில்லை; ஆயினும் பட்டணத்திற்போய் விசாரித்தாற் றெரியுமென்றான். கேசவன் கடைவீதியிற் சென்று சியாமள ரிருப்பிடத்தை விசாரிக்குமளவி லெங்கு மகப்படவில்லை. அவ்விடத்தில் சந்துகளிற் சென்று அந்த சௌகா ரிருக்குமிடத்தைக் கேட்டு மகப்படாமல் விசனமுற்றவனாகி திரவியமெல்லாம் கிருஷ்ணார்ப்பணமாய் போயிற்றே! நரசிமெஹதாவு மந்தத் திரவியத்தை நாராயணனுடைய தாசர்களுக்குக் கொடுத்துவிட்டனரே! திரும்பிப்போய் அவரிடத்தில் திரவியத்தைக் கேட்க மார்க்க மில்லையே! என்னசெய்வதென்று ஏக்கமுற்றிருந்து துவாரகா நாதருக்குச் சரணமடைந்தே னென்று நமஸ்கரித்துச் சித்தங் கலங்கிக் கடைவீதியில் நிற்க ஸ்ரீஹரி சியாமளரெனும் பெயர்கொண்டு அவ்விடம் வந்தார். நீண்ட அங்கியை யுடையவராகியும் இரத்தினங்க ளிழைத்த கலிகதுராயைத் தரித்தும் அனேகவாபரணங்களைப் பூண்டும் சுந்தரமான ரூபத்துடன் இரதத்தின் மீதேறி உத்தவரைக்கூட அழைத்துக்கொண்டு சாரதியைப்பார்த்து கைசைகையா லந்தப் பிராம்மணனைக் கிட்ட அழைக்கும்படிச் சொல்ல, சாரதி கேசவனைக் கூப்பிட்டுக் கிட்டவரச் சொன்னான். அவனருகில்வரவே சியாமள ரவனை நோக்கி ஏன் விசனப் படுகிறீரென்று கேட்க, அந்தப் பிராம்மணன் சொல்லலுற்றான். ஐயா! ஜூனகடி கிராமத்தில் நரசிமெஹதா யென்பவர் சியாமள னெனும் நாமமுடையவருக்கு உண்டியைக் கொடுத்தார், அந்தப் பெயருடையவ ரிவ்வூரி லகப்படவில்லை, அதனு லொன்றுந் தோன்றாமல் விசனத்துட னிவ்விடத்தி லிருக்கின்றே னென்றான். உடனே பெருமாள் நான்தான் சியாமளனென்று சொல்ல அவனந்த உண்டிப் பத்திரத்தைக் கொடுத்தான். பெருமாள் பாக்கியமென்று சொல்லி அந்த பத்திரத்தை சிரசின்மேல் வைத்துக்கொண்டுபொற்காசு மூட்டையை அந்த பிராம்மணனுக்குத் தந்தருளினர். அவ்வந்தண னதனை கைக்கொண்டு ஆனந்த மடைந்தவனாய் பெருமானை நோக்கிப பெருத்த சம்பத்துடன் நீரிருக்க உம்முடைய எஜமானனான நரசிமெஹதா நித்திய தரித்திரத்துட னிருக்கிறா

ரே? அது நியாய விரோதமாக விருக்கிறதேயென்ன, பெருமாளவனை நோக்கி ஐயர்! நரசிமெஹெதா பகவத்தாசராகி அபேக்ஷக ளொவையு மில்லாமல் அவருடைய சம்பத்தையும் தனத்தையு மெங்களுக்குக் கொடுத்து திருட்தரா யிருக்கின்றார். தாய் தந்தைகள், தம்முடைய தனசம்பத்துகளைத் தனயருக்குக் கொடுக்குமாப்போல் அவர் தனது சௌபாக்கியத்தை எங்களுக்கிட்டுத் தான் மேன்மையை யடைந்திருக்கிறாரென்று சொல்லித் தான் மறைந்தார். பின்பு கேசவ னந்தத் திரவியத்தை யெண்ணுங்கால் கணக்குக்கு மிஞ்சியிருந்தது. அனேகருக்கு ஆனந்தத்துட னன்ன மிட்டு விசேஷ விபவங்களை ஸ்ரீகிருஷ்ணருக்குச் செய்துக்கொண்டு துவாரகையிற் சிலநா ளிருந்து, திரும்பித் தான் வீட்டிற்குச் சேரப் போம்பொழுது வழியிற் ஜுனகடிக்கு வந்து நரசிமெஹெதாவைக்கண்டு சங்கதியைத் தெரிவித்தான். உண்டி பத்திரத்தைப் பெருமாள் சிரசின்மேல் வைத்துக்கொண்டா ரென்னும் சங்கதியைக் கேட்டவுடன் அபாரமான பிரேமையுடன் ஆனந்த பாஷ்பங்களை பொழிய மயிர்க்குச்சியில் சிலிர்ப்புடையராய் ஓ புராண புருஷரே! புண்டரீகதள நயனரே! துவாரகா நிலயரே! தாமோதரரே! தீனனுன வென்னைப் பரிபாலித்தீ ரன்றோ! உமது மகிமையு முமது சௌலப்பியமு மடியேனு லெண்ணத்தகுமோ? ஓ தீனபந்து! பதிதபாவனரே! சர்வேஸ்வரரே! ரக்ஷியுமென்று நமஸ்கரித்து ஆனந்தநிர்ப்பரராகி சஹஜதாஸ்யத்திற் பிரீதிசெய்து சர்வேஸ்வரனை மனதி லிட்டிருந்தார்.

நரசிமெஹெதாவின் குமாரத்தி ருதுமதியானுள், பலசோபனத்தைச் செய்யும் பொருட்டு அப்பெண்ணுக்கு மாமியார் வீட்டார் அந்த பக்தருக்குக் கடிதமெழுதினூர்கள். அதைக்கண்டு அவர் மனையாள் பர்த்தாவைப்பார்த்து குமாரத்திக்கு வரிசைச் சடங்குகளைச் செய்யவேண்டும், சமான பந்துக்களிடஞ் சும்மா போகக்கூடாதென்றாள். பக்தர் தனது பாரியையைக்கண்டு கமலாபதி நாமமே நமக்குக் காணிக்கையாமென்றுசொல்லி தாள வீணைகளையேந்தி தாமோதரனைப் பாடிக்கொண்டு சம்பந்தி வீட்டிற்குச் சென்றார். அப்பொழுது அங்கிருக்கும் பந்துக்க ளனைவரு மிது வென்னவென்று ஹேளனஞ் செய்து உலகநீதிக்கு விரோதமில்லாமல் கடிதமனுப்பினேம். கையில் திரவியமில்லா திருந்தால்

பந்துக்களுடைய வீடுகளுக் கிப்படி வருவது தகுதியல்லவென்று சிந்திக்கத் தொடங்கினர்கள். அப்பொழுது குமாரத்தி தன் தகப்பனை யேகாந்தத்திற் கழைத்து அப்பா! உம்மைக்கண்டு அனைவரும் நிந்தித வார்த்தைகளைச் சொல்லிச் சிரிக்கிறபடியா லெனக்கு வெட்கமா யிருக்கிறதென்றாள். அதைக்கேட்டு நரசிமெஹெதா பந்துக்களைப்பார்த்து வரிசைக்காக வேண்டிய பதார்த்தங்களை யோரோலையி லெழுதி வைக்கும்படிச் சொன்னர். இதைக்கண்டுப் பந்துக்களனைவரும் வெகுவாகச் சிரித்துக்கொண்டிருக்க ஓர் குடிலன் ஓலையைக் கைக்கொண்டு மருமகப்பிள்ளைக்கு நகைகளும் வஸ்திரங்களும் சால்வை மோதிரங்களும், குமாரத்திக்கு கனகபூஷணங்களும் புடைவை, ரவிக்கைகளும், இதர பந்துக்களுக் கிஷ்டபதார்த்தங்க ளெல்லா மதிலெழுதிவர நரசிமெஹெதா அக்குடிலாளனை நோக்கி உனக் கிஷ்டமேதென்ன, ஓர் பாராங்கல்லு வேண்டுமென்றான். அதைக்கேட் டெல்லோரும் சிரிக்கத் தொடங்கினர்கள். அவனதையு மதிலெழுதி வைத்தான். தீர்த்த க்ஷேத்திரங்களை நிந்திக்கிறவனும் தாய்தந்தயர்களை நிந்திக்கிறவனும் தெய்வநிந்தகனும், சாதுநிந்தகனும் உபயோகமான ஜீவியாகாமல் நூறு ஜன்மங்க ளெடுத்துக்கொண் டிருப்பான். பின்பு நரசிமெஹெதா அனேகப் பிரகாரங்களால் நாராயணனை யுத்தேசித்து ஓ பரமபாவனா! பக்தவத்சலா! அடியேனை இரக்ஷிக்கக் கடவீர். தீனர்களுக்கெல்லாந் தீனனாகி தேவரீருடைய ரக்ஷகத்தை நாடினேன். ஓ மாதவா! கிருஷ்ணா! மதுசூதனா! தடையின்றி இரக்ஷிக்கக் கடவீரென்று, அனேக விதங்களாகப் பிரார்த்திக்க பெருமாளோர் பிராம்மண வேஷத்தைத் தரித்துச் சேவகரைப்போல சிரசின்மேல் துணிமூட்டையை வைத்துக்கொண்டு அவ்விடம்வந்து நரசிமெஹெதா எங்கிருப்பரென்று கேட்க ஆங்குற்ற ஜனங்கள் எவ்விடத்தி லிருந்து வந்தாயென்றும் பேருரென்ன வென்றும் அவரைக் கேட்கப் பெருமாள் சொல்லுவார், துவாரகாபுரி யென்னுடைய யிருப்பிடமாகும் என்பேர் சியாமளன், நரசிமெஹதாவுக்கு குமாஸ்தாவாகி நாநாவித வர்த்தகங்களைச் செய்து வருவேன். அவருடைய குமாரத்திக்கு ருதுசாந்திக்காக வரிசைகொண்டு வந்தேனென்றார். நரசிமெஹெதா இதைக்கேட்டு வெளியில்வந்து அந்த மூட்டையுடன் பெருமாளை யுள்ள வரவழைத்து உட்காரச்

செய்து பந்துக்க ளனைவரையு மழைத்து வெகுவிதமான வரிசைகள் நீங்கள் கோரியபடிக் கைக்கொள்ளுங்களென்று சொல்லி முன்னெழுதிய ஓலையைப் பெருமாள் கையிற் கொடுத்து அதிலெழுதிய வண்ணம் பந்துக்க ளனைவருக்கும் வரிசைகளைக் கொடுத்தருள வேண்டுமென்றார். அப்பொழுது பெருமாள் மூட்டையை அவிழ்த்து முக்கிய பந்துக்க ளனைவருக்கும் நியமித்தப் பிரகாரம், வஸ்திராலங்காரங்களைக் கொடுத்தார். இதர ஸ்திரீகளுக்கும் வஸ்திரங்களைத் தந்தனர். அவர்களு மதிக சந்தோஷமாக உடுத்திக் கொண்டார்கள். நரசிமெஹெதா மகளுக்கும் மருமகனுக்கும் சரிகை புடைவையும் இரவிக்கையும் சரிகை தோவத்தியும் பூஷணங்களுங் கொடுத்தார். எழுதிய குடிலனுக்குப் பாராங்கல்லையுங் கொடுத்தார். இதைக்கண்டு அவன் பரிதாபத்துடன் துக்கமடைந்திருந்தான். அனைவரும் சந்தோஷ மடைய பெருமாள் பலசோபன காரியத்தை நிறைவேற்றிச்சென்றார். நரசிமெஹெதாப் பகவானை வெகுவிதங்களாகப் பாடித் தோத்திரஞ் செய்துக்கொண்டுத் தன் கிரகத்திற்குச் சென்று பின்னும் ஹரிநாமத்தை கர்ஜ்ஜனை செய்து அபாரமான வானந்தத்துடன் பகவானுடைய கலியாண குணங்களைப் புகழ்ந்துக்கொண்டிருக்க பெருமாள் சந்தோஷத்தை யடைந்து அவ்விடத்திலுள்ள பிரஜைக ளனைவரும் பார்த்துக்கொண்டிருக்க ஓர் துளசிமாலையை பக்தனுடைய கழுத்திற் போட்டார். சஜ்ஜனர்க ளனைவரும் சேவித்துச் சந்தோஷமடைந்தார்கள்.

பிரதி தினமுமிப்படி பஜனைசெய்யு மளவில் பெருமான் புஷ்பமாலையைப்போட்டுக்கொண்டுவருவர். ஜனங்களுமனேகரவ்வேளையில் வந்திருந்து சேவித்துக்கொண் டிருப்பார்கள். இச்சங்கதியை மண்டூகனெனு மவ்வூரரசன் கேட்டு இது கிருத்திரிமம் (பொய்) என்றும் கலிகாலத்தில் விக்கிரஹ பூஜையு முபசாரமேயாமென்றும் விஷ்ணுமூர்த்தி காணப்படாரென்றுஞ்சொல்லி நிக்கிரகபுத்தியுடையவனாகி நரசிமெஹெதாவிடம் கீர்த்தனை வேளையில் வந்து உட்கார்ந்து பக்தரைக் கண்டு நீர் குடிலபுத்தியுடன் மனிதர் மயங்கும்படி மகிமைகளைக் காண்பிக்கிறீர். இவ்வேளையி லுமது கண்டத்தில் மாலைவராவிடில் சிக்ஷிப்பேனென்று சொல்ல அப்பொழுது நரசிமெஹெதா நாராயணனை மனதிற் தியானித்துக்கொண்டு

அவருடைய நாமங்களை வெகுவாகச் சொல்லி ஹரிகுணனுவாதத்தை யபாரமாகச் செய்தும் துளசிமாலை கழுத்தில் வாராதிருந்தது. அப்பொழுது நரசிமெஹெதா கண்களில் நீரொழுக நாராயணு! ஹரி! யென்று சொல்லிக்கொண்டு மயிர்க்குச்சில் சிலிர்ப்புடையராய் பக்திபரவசராய் பெருமாளை யுத்தேசித்து ஒவ்வொரு யுகத்திலு மவதாரங்களை நீர்கொண்டு பக்தஜனங்களை இரக்ஷித்து பாவியானவர்களைக் கொன்றுத் தருமத்தை நிறுத்தினீர். கஜேந்திராழ்வரின் பிரஹலாதாழ்வான் முதலானோரை இரக்ஷித்தீர். இன்றையதின மோர் புஷ்பமாலையை வேண்டினல் நீர் குடுக்காமலிருக்கின்றீ ரென்று பிரார்த்தித்துக்கொண் டிருக்குமளவில் அரசன் குபிதனாகி அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கச் சிக்ஷிப்பே னென்று கர்ஜ்ஜனைசெய்யத்தொடங்கினன். அப்பொழுது நரசிமெஹெதா பெருமாளை யுத்தேசித்து, ஓ ஸ்ரீதரா! மாதவா! கேசவா! ஓர்மாலையைக் கொடுத்தால் உமதப்பனுடைமை யழிந்துபோமோவென்று வெறுத்துச்சொன்னமாத்திரத்தில் புஷ்பமாலை பக்தன் கழுத்தி லிருக்கக் கண்டார்கள். அப்பொழுது அரசனு மவ்விடத்து ஜனங்களும் பிரீதியுட னவருக்கு நமஸ்கரித்து மேன்மையாயிற்றென்று விடைகேட்டுக்கொண்டுத் தங்களிருப்பிடஞ் சென்றார்கள். பக்தர்களுடைய மகிமையைப் பகவானே யறிவார். இதரஜனங்க ளறிமாட்டார்கள்.

---

## டாகூர் இராமதாசர் சரித்திரம்.

துவாரகா புரிக்குக் கிழக்கே பதினைந்துகாத தூரத்தில் டாகுரெனுங் கிராம மிருக்கிறது. அதிலோர் பிராம்மண னிராமதாசரெனும் பெயருடையராகி மகத்தானப் பிரேமையுடன் கிருஷ்ண பூஜைச் செய்துக்கொண்டு சார்வதா நாமோச்சாரணையில் பிரியமுடையராகி அதனையே செய்துவருவர். நிராசையினல் திருப்தியடைந்தவராகி சித்தசலன மில்லாமல் நிதானமாகப் பிக்ஷாடனை செய்துக்கொண்டு சமுசாரத்தை நிருவகித்து வருவார். பதினைந்து நாட்களுக் கொரு பரியாயம் பெருமாளைச் சேவிக்கும் பொருட்டு அவரை தன்னிருதயத்தில் லக்ஷித்துக்கொண்டு துவாரகைக்குப் போவார். தொட்டியி லோர் துளசிச்செடியை வைத்து அதை ஜலத்தைவிட்டு வளர்த்துக்கொண்டு அதனைக் கையிற் பிடித்துச் செல்லுவார். சன்னிதி சிகரத்தைப் பார்த்தமாத்திரத்திற் சாஷ்

டாங்கமாக நமஸ்கரிப்பார். மாமியார்வீட்டு மருமகள் தன் தாய் வீட்டிற்குச் செல்லும்போது மகத்தான சந்தோஷத்தை யடையு மாப்போலே இராமதாசர் சந்தோஷத்துடன் துவாரகையை யணு கிக் கோமதி தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து தனது மானசபூஜை யை முடித்துக்கொண்டு பக்தியுடன் பெருமாள் சன்னிதிக்குப் போய் தேகத்தின்மீதி லபிமானத்தைத் தவிர்த்து தீர்க்கதெண் டன் சமர்ப்பித்து மோகத்தைத் துறந்து அனன்னிய சரணாகி பெருமாளை உத்தேசித்துத் தான் ஜனனமரணங்க ளடையாமலிருக் கப் பிரார்த்தித்து பின்பு தான் கொண்டுவந்த துளசி விருக்ஷத்தின் தளங்களை அறுத்து மாலையாகக்கட்டி அதனைச் சந்தோஷத்துடன் மாதவன் கழுத்திற் போட்டு ஸ்வாமி! அனாதனாதலா லிது அற்ப மான வென்னுடைய பூஜையாகுமென் றுரைத்து பெருமாளுக்குத் தெண்டன் சமர்ப்பித்து உடனே டாகூருக்குப் பிரயாணமாகி வரு வார். ஏழுநாள் வழிநடந்து டாகூரி லொருநா ளிருந்துத் திரும்பி துவாரகைக்குப் பிரயாண மாவார். இப்படி அடிக்கடி பிரதி ஏகா தசிக்குப் போய்க்கொண்டு இருபத்தைந்து வருஷம் கடந்தபின் னொருநாள் பெருமாள் முன்னின்று ஓ ஸ்வாமி! தேகத்தில் வலிவு குறைந்தது. ஓ தீனரக்ஷகரே! க்ஷேமமாம்படி அடியேன்மீது நேசமுங் கருணையும் வைத்தருளும். வார்த்திகத் திசையினு லுமது சரணங்களை இனி சேவிக்க நேரிடாதென்று கண்களில் நீர் பெருக நமஸ்கரித்தார். இந்த வசனங்களைப் பெருமாள் செவி சாற்றி உமது பின்னே நாம் வருகிறோம் உம்முடைய சேவாருணம் நம்மேலேறி யிருக்கிறது. அதை நாம் செலுத்தவேண்டும். குதி ரைகள் பூட்டின ஓர் இரதத்தை யின்றிரவிற் கொண்டுவாருமெ ன்ன பக்த ரதிக சந்தோஷத்துடன் நடுராத்திரியி லிரதத்தைக் கொண்டுவந்தார். அவ்வேளையிற் பெருமாள் விக்கிரகத்தை இர தத்தின்மீது வைத்துத் தன்னிருப்பிடமான டாகூருக்குக்கொண்டு வருமளவில் இராமதாஸர் தனக்குள் ளெண்ணத் துடங்கினர். துவாரகானாதன் தயையுட னென்னுடன் வந்தார். அவரை நானெ ங்கு ஒளித்துவைப்பேன்; அர்ச்சகர்கள் விக்கிரகத்திற்காகத் தேடி வந்து அவரைக்கொண்டு போவார்களே! என்று நினைத்துக்கொ ண்டு டாகூர் கிராமத்தைச் சேர்ந்து அவ்விடத்தி லோர் புஷ்கர ணியில் விக்கிரகத்தை வைத்திருந்தார்.

துவாரகாபுரியில் பிராம்மணர்க ளனைவரும் விக்கிரகத்தை சன்னிதியிற் காணமல் இங்குமங்குமாக பார்த்து மகப்படாமல் பூமிமேற் சக்கரத்தடி பதிந்திருப்பதைப் பார்த்து இராமதாசரே இரதத்தில் வைத்துக்கொண்டுச் சென்றூர்ப்போ யிருக்கிறதென்று அவர்கள் மெதுவாக நேமிவழியே டாகூர் வந்து இராமதாசர் வீட்டிற்குச் சென்று விக்கிரகத்தைக் கொடுக்கச்சொல்லிக் கேட்டார்கள். இராமதாசர் இதைக்கேட்டு விக்கிரகத்தைத் தான் கொண்டுவரவில்லை யென்றூர். பின்பு அவர்கள் அவ்வூரில் வீடுகளி லெங்குந்தேடியுங் காணமல் அவ்விடத்திலுள்ள புஷ்கரணியிற் பரிசோதனைசெய்து பார்க்குமளவில் ஜலத்தி லிருந்தவதனைக் கண்டுபிடித்து வெளியிலெடுக்கவே இராமதாசர் உதாசீனராகி ஒ கிருஷ்ணு! தேவகிநந்தனு! அர்ச்சகர்க ளும்மைக் கைக்கொண்டார்களே! என்னை விட்டுப்போவீரோ! உம்மைவிட்டு நான் பிழைத்திருக்கமாட்டேன். உமக்காக ஓர் பொய்யையுஞ் சொன்னேன். ஓ தீனவத்சலரே! தீனனுன வென்னை யிரக்ஷிக்கக் கடவீரென்று தியானஞ்செய்ய, ஆகாயத்தி லோரோசை யுண்டானதுபோல ஸ்ரீஹரி சொல்லுவார்—மனதிற்குறையை நீ நிவர்த்திச் செய்வாய் நாமிவ்விடமே இருப்போம். புண்டரீகன் நம்மைப் பூஜித்தாப் போலே நீர் நம்மை பூஜைசெய்யும். நீ ரர்ச்சகர்களிடஞ்சென்று விக்கிரக பாரத்திற்கு தகுதியானப் பொன்னை நீர் கொடுப்பதாகவும், அந்த விக்கிரகத்தை உமக்கு கொடுக்கவேண்டு மென்றுங் கேட்டு வாங்கிக் கொள்ளவும். உம்முடைய மனையாள் நத்துபாரத்திற்கு நாம் சரியாக விருப்போமென்றூர். இதைக்கேட்டு சந்தோஷத்துட னவரர்ச்சகரைப் பார்த்து இந்த விக்கிரக பாரத்திற்குச் சமமான சுவர்ணத்தை யுமக்கு நான் கொடுக்கிறேன், பெருமாள் மூர்த்தியை எனக்கு கொடுங்கோளென்று கேட்டார். இது பெருத்த துணிவென்று நோக்காமல் உடனே அர்ச்சகர்கள் சம்மதிக்கவே இராமதாசர் இதரஜனங்களை சாக்ஷியாக வைத்து நின்றூர். அவ்வேளையிற் குடிலஜனங்கள் சிரித்துக்கொண்டு குடும்ப போஷணத்திற்குப் பிக்ஷையெடுத்துக் கொண்டிருக்க, விக்கிரக பாரத்திற்குச் சரியான சுவர்ண மெவ்விடத்தி லிருந்து கொண்டுவருவார். வயிற்றிற் கன்னமில்லாமல் தரித்திர தசையாற் பீடிக்கப்பட்டவராயிற்றே என்றூர்கள். இதைக்கேட்டு இராமதாச ரவர்களை நோக்கி

ஸ்ரீயப்பதியான சர்வேசுவர னென் இல்லத்திற்கு வந்தவன்றே எனது வறுமை நீங்கிற்று. இதை நீங்க ளறியக்கடவீர்க ளென்ன, அவ்விடத்தி லனைவரும் சோத்தியமடைந்து நிறைகோலான ஓர் தூக்கைக் கொண்டுவந்து அந்த மூர்த்தியை யோர் பக்கத்தில் வைத்து மற்றொரு பக்கத்திற் சுவர்ணத்தை வைக்கச்சொல்லி அவ்வர்ச்சகர்கள் கேட்டார்கள். அப்பொழுது இராமதாசர் தன் மனைவியிடஞ்சென்று அவள் நத்தைக் கொடுக்கச்சொல்லிக் கொண்டுவந்து தன்கையில் வைத்துக்கொண்டு பெருமாளைப் பிரார்த்திக்கலுற்றார். ஓ கிருஷ்ணா! சத்தியபாமையானவ ளும்மை நாரதமகாமுனிக்கு விக்கிரயஞ்செய்த காலத்தில் ஸ்ரீருக்மணிபிராட்டி துளசிதளத்திற்குச் சரிபாயிருந்தீரன்றோ? அந்தப்பிராட்டியாரினு மதிகதீனனான என்னுடைய ஆர்த்தியான மு... கேட்டருளக் கடவீரென்று அந்தச் சுவர்ணத்தை அந்தத் தூக்கில் வைத்தார். எவனுடைய உதரத்தி லிந்த பிரம்மாண்டமெல்லா மிருக்குமோ அப்பரமபுருஷன் அவனடியார் நிமித்தியும் ஒரு துலாம் பொன்னுக்குச் சரியா யிருந்தார். அப்பொழுது பக்தர்கள் கைகளைக்கொட்டி ஜயஜய சப்தங்களைச்செய்தார்கள். பிரியமான பக்தி லக்ஷணத்திற்குப் பெருமா ளுட்பட்டிருந்தாரென்று பக்த ஜனங்களுக்குப் பிரீதி அதிகமாயிற்று. அர்ச்சகர்கள் அம்மூர்த்தியை அவ்விடமேவிட்டு துவாரகாபுரிக்குத் திரும்பிச்சென்று வேறொரு மூர்த்தியை ஸ்தாபனஞ் செய்துக்கொண்டார்கள். மகத்துவ மதிகமாகிடாகூரில் பெருமாள் வெகுஜன சேவ்யமா யெழுந்தருளியிருந்தார். துவாரகைக்குப் போகும் யாத்திராபரர்கள் டாகூரிற் சென்று ஹரிமகிமைகளைச் சொல்லிப் பெருமாளைச் சேவித்துப் போவார்கள்.



## பிரம்மசாரீ கலியாணர் சரித்திரம்.

இராமநாதபுரத்தில் சேது ஸ்நானம் பண்ணும் பொருட்டு இரண்டு பிராம்மணர்கள் ஒருபெரிய சத்திரத்தி லிறங்கி யிருந்தார்கள். ஒருவனை யொருவ னுமது தேசமெது வென்று வினவ, ஹரித்துவாரத்தி லிருப்பதாகவும் குடும்பியா யிருந்து யாத்திரை நிமித்திய மவ்விடம் வந்ததாகவும் தனது நாமம் கலியாண னென்றும் ஒருவ னறிவித்து மற்றொருவனை உமது ஊரும் பெயருமென்

னவென்று கேட்க, கௌடதேசத்துப் பிராம்மண னென்றும், தாய் தந்தையர்கள் நாராயணனே'யென்றும் தன்பெயர் பிரம்ம சாரியென்றும் சகல தீர்த்த யாத்திரைகளைச்செய்ய அவ்விடம் வந்தேனென்றுந் தெரிவித்தான். அதுமுதற்கொண்டு ஒருவ ருக்கொருவர் சினேகஞ் செய்துக்கொண்டு இருவரும் துணை யாக சகல க்ஷேத்திரங்களைப் பார்ப்பதும், விபவத்துடன் ஹரி விலாசத்தை யிருவரும் வேடிக்கையாகப் பாடுவதும் பகவன் னாம த்தைச் சொல்லிக்கொண்டும் பக்தி ரசத்தில் மூழ்கி வடமதுரை யைச் சேர்ந்தார்கள். அவ்விடத்தில் யமுனாஸ்நான மிருவருஞ் செய்து மாதவப் பெருமாளைச்சேவித்து மூன்றுநா ளங்கிருக்க கலியாணனுக்குக் குளிர் ஜுரம் வந்தது. எத்தனை விதங்களா லுபசாரங்களைச் செய்தும் அது போகாம லிருந்தது. கலியாணனு க்குத் துக்க மதிகமாக யிருக்கக்கண்டு பிரம்மசாரி பின்வாங்காமல் ஔஷத பத்தியங்களை அவனுக்குச் செய்வித்து அத்யந்த விசுவா சத்தை யுடையவனாகிக் கொஞ்சமேனு மிடைவிடாமல் அவனுக்குத் தொண்டுசெய்து வருவான். பெருமாள் சன்னிதிக்குச் சென்று ஓ கஞ்ஜதளா க்ஷரே! ஓ காருண்ணிய மூர்த்தியே! கலியாணனு க்குவந்த வியாதியைக் கண்டித்தருளும் அடியேனுடைய விண்ண ப்பத்தைக் கேளுமென்று பிரார்த்தித்து வருவான். ஆறுமாச ங்கள் ஔஷத பத்தியங்களைச் செய்துக்கொண்டுவர வியாதி கொஞ்சங் கொஞ்சமாகக் குறைவாகத் தேகம் செம்மைப்பட்டு வந்தது. கலியாண னிதைக்கண்டு பிரம்மசாரியுடன் சொல்லு வான். ஐயா! நீர்தா னெனக் கிஷ்டமித்திரன். வேறொருவருமி ல்லை. எனக்குத் தாராபுத்திரர்களிருந்தும் நான் துக்கதசையி லிருக்குமளவி லென்னை நீ காப்பாற்றிக்கொண் டிருந்தாய் இது பகவான் முகோல்லாசமன்றோ? ஒரு கன்னிகை என்வீட்டி லெனக்குப் பிறந்திருக்கிறாள். அவளையுனக்கு விவாகஞ் செய்து க்கொடுக்கிறே னென்றான். இதைக்கேட்டு பிரம்மசாரி அவனை நோக்கி ஐயா! நானோர் சமுசாரத்தை நடத்தி அதினால்வருஞ் சுக துக்கங்களை அனுபவிக்க எனக் கிச்சையில்லை. இதுவன்றியும் நீர் விருத்தப் பிராயத்தை யுடையவர். உமது வாக்கியங்களை உம து மனையாள் கேட்கமாட்டாள். இது ஓர் பந்தமாக என்னுடைய பிரம்மசரியத்திற்கு விகற்பமாகு மென்றான். இதைக்கேட்டு கலி

யாணன் ஈஸ்வரன்ருனே அனைவரையும் போஷித்து வருவர், நீர் மனதிற் சமுசய மடையவேண்டுவ தில்லையென்று மாதவப் பெருமாளுடைய சன்னிதிக்குவந்து பிரம்மசாரிக்கு நான் கன்னிகாதானங் கொடுக்கிறேன் ஓ கிருஷ்ணமூர்த்தி! நீரிதற்குச் சாக்ஷியாவீரென்று கையாற் ஜலத்தைத் தாரைவார்த்தான். பின்பு பெருமாளுக்கு தெண்டன் சமர்ப்பித்து இருவரு மவ்விடத்தைவிட்டு மூன்றுவாரங்கள் வழிநடந்து ஹரிதுவாரத்தை யடைந்தனர்.

கலியாணன் தனது வீட்டைச்சேர்ந்தது அவன் மனையாளுக் கிஷ்டமில்லாமல் பர்த்தாவைக்கண்டு பிரபலமான அந்த ராமேசுர யாத்திரையில் நீர் பிராணனை விட்டிருப்பீராகிற் சுகுருதமாக விருக்குமல்லவா? நீர் திரும்பிவந்தது விகுருத மாயிற்றென்று சொன்னாள். பிள்ளை தன் பிதாவைப்பார்த்து தேசாந்தரத்திற் றேகத்தை விடாமற் றிரும்பி யேன்வந்தீர்? ஆசை யுடையவராகி யோரந்தணனைக்கூட அழைத்து வந்தீரே யென்ருன். இப்படி சதிசுதர்களிருவரும் வெறுப்புற்றவரா யிருக்கினும் கலியாணன் ஏகாந்தத்திற் றனது மனைவியைப் பார்த்து நான் யாத்திரையிலிருக்குமளவில் மதுராபுரியில் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைச் சேவித்துக்கொண்டுச் சிலநாளவ்விடமிருக்க ஜுரத்தால் மகத்தான வாதையை யடைந்தேன். அப்பொழுதிந்தப் பிரம்மச்சாரி மிகுந்த ஆதரத்துடன் ஔஷதபத்தியங்க ளாறுமாதகாலம் நடப்பித்து வந்தான். அபார பிரயாசையுடன் சேவைகளைச் செய்து பரிபாலித்த பரோபகாரத்தின் நிமித்தம் பெருமாள் சன்னிதியில் கன்னியாதானஞ் செய்வேனென்று ஸ்ரீஹரியைச் சாக்ஷியாக வைத்துக் கரத்திற் ஜலத்தை விட்டேன். என்னுடைய பிரதிக்கினையை நீ பரிபாலிக்கக்கடவாயென்று சொல்ல, பாரியாள் ரோஷமுடையவளாகி என் கன்னிகையைக் கிணற்றிற் றள்ளிவிடுவேனேயன்றி அந்த வந்தணனுக்கு அளிக்கமாட்டேன். நீர் வேறொரு விவாகத்தைச் செய்துக்கொண்டு மற்றுமோர் புத்திரியைப்பெற்று அவளையந்த பிரம்மசாரிக்குக் கொடுக்கலாமென் றுரைக்க புருஷன் மறுபடியும் அவளை நோக்கி அடி! பாக்கியசாலி! அந்தப் பிரம்மசாரி பகவத்பக்தன், ஹரிதாசனுகும், அவனுக்குக் கன்னிகையைக் கொடுப்பாயானல் பகவானுக்கு வெகு பிரீதியாகுமென்ருன், அவளதற்கும் சம்மதிக்கவில்லை. கலியாணன், தனது குமாரனை யிதைப்பற்றி

விசாரிக்குமளவி லவனுங் கூடாதென்றான். இவ்வசனங்க ளனைத்தையும் பிரம்மசாரி கேட்டு கலக்கமுற் றிருந்தான்.

அநந்தரம், கலியாணனும் பிரம்மசாரியு மவ்வூ ரரசனிடஞ் சென்று தெண்டன் சமர்ப்பித்துக் கலியாணன் தன் சங்கதியனைத்தையு மறிவித்து ஐயா! எனது மனையாளும் பிள்ளையு மென்னுடைய சங்கற்பத்திற்குத் தடைசெய்கிறார்கள். என்பேச்சை அவர்கள் கேட்காமலிருந்தால் நான் நரகத்தை யடைவேன். நீ ரவர்களிருவரையும் வரவழைத்துச் சமாதானப்படுத்திக் காரியத்தை நிறைவேற்றவேண்டு மென்று வேண்ட, அரசன் அவனை நோக்கி உன்னுடைய சாக்ஷியை அழைத்துவாவென்று சொன்னான். அதைக்கேட்டு பிரம்மசாரிச் சொல்லுவான். இந்த பிரம்மாண்டங்களுக்கெல்லாம் காரணகர்த்தாவான கிருஷ்ணனுடைய பாதமே சாக்ஷியாகுமென்றான். அதைக்கேட்டு அரசன் ஸ்ரீ ஹரி இவ்விடம் வந்து சாக்ஷியாக சத்தியத்தைச் சொல்லுவாராயின் விவாகத்தைச் செய்விக்கிறேனென்றான். இதைக்கேட்டு பிரம்மசாரி மதுராபுரிக்கு வந்துப் பெருமாளைச் சேவித்து, ஓ தேவதேவரே! நீர் சாக்ஷி சொல்லு நிமித்தியம் ஹரித்துவாரத்திற்கு எழுந்தருளவேண்டும். ஓ தீனதயாளா! பக்தவத்ஸலா! பரமபுருஷா! கோவிந்தா! நீரிப்பொழு தவ்விடம் வாராதிருந்தால் அடியேனுடைய பிரம்மச்சரிய நியமம் பிரஷ்டமாய்விடும். ஓ கிருபாமூர்த்தி! கருணைசெய்தருளுமென்ன அவனுடைய சுத்தபாவத்தைக் கண்டு பெருமாளவனைநோக்கிப் பாஷாணவிக்கிரகம் பிரயாணப்பட்டெப்படி வருமென்று கேட்க பிரம்மசாரி அவரைநோக்கி ஓ ஸர்வேஸ்வரரே! தயாநிதியே! தீனரக்ஷகரே! ஸ்ரீ ஹரி! தேவ்ரீர் திருவாக்கினால் பேசுகிறவண்ணம் நடக்கவுங்கூடும். தேவரீ ராஸ்ரயத்தைநம்பி மனதிலும்மை யிருத்திவந்தேன். மாயா ரகிதரே! என்பின்வந்து கோரிக்கையைத் தீர்க்கக்கடவீரென்றுப் பிரார்த்திக்க பெருமா ளதற்கிசைந்து நீ திரும்பிப் பாராமல் முன்னதாக நடக்க வேண்டுமென்றுக் கட்டளையிட ஓரிரவில் மார்க்கம் நடந்துசென்றார்கள். கமனவேளையில் ஸ்ரீ ஹரி கால்சிலங்கைகள் கல்கல்லெனு மோசைவிளங்க விசேஷ காந்தி வியாபிக்க ஹரித்வாரத்திற் கரைகோசு தூரத்திற் செல்லும்போது அந்தப் பிராம்மணன் பின் திரும்பிப் பார்த்தான். பெருமாளு மவ்விடமே நின்று பிராம்மணனைப்பார்த்து நீ

என் சொல்லை மறுத்தாய், முன்னுக்குவரமாட்டேன், நீ அரசனிடஞ்சென்று அவனை யிவ்விடம் வரச்சொல்லி அழைத்துவா வென்றுக் கட்டளையிடப் பிராம்மணன் நல்லதென்று அரசனிடஞ் சென்று ஹரிசருவேசுரர், மதுரா வாசியான மாதவப்பெருமாள், மகத்தான கிருபையுடன் சாக்ஷி நிமித்தியம் வந்திருக்கிறார். அவரை எதிர் கொள்வதற்கு ஆடம்பரத்துடன் போகவேண்டுமென்று கூப்பிட்டான். இதைக்கேட்டு அரசன் சந்தோஷித்து ஆச்சரிய மடைந்து மந்திரிகளுடன் மிகுதியான வாடம்பரத்துட னவ்விடம் வந்து நாராயண மூர்த்தியை நமஸ்கரித்து பைராகிகளைக்கண்டு இவ்விக்கிரஹமெவ்விட மிருப்பதென்று கேட்டான். அவர்கள் மதுராவாசியான மாதவப் பெருமாளென்றுரைக்க அரசனவ்விடத்திலுள்ளப் பிரஜைகளை யழைத்து லக்கின நிச்சயஞ் செய்வித்து அவ்வூரிலிருக்கும் வர்த்தகர்களை அழைத்து அந்தப் பிராம்மணன் குமாரத்தியை நீங்களனைவருங்கூடிக் கலியாணப் பெண்ணாகச் செய்வதற்குச் சகல சாமக்கிரிகைகளைத் திட்டப்படுத்தச் சொல்லி கலியாணப்பிள்ளை விஷயத்தில் நானே முன்நிற்பேனென்று சொல்ல வர்த்தகர்கள் பதார்த்தங்க ளனைத்தையுஞ் சேகரித்து மகத்தான வாத்திய கோஷங்கள் முழங்கக் கலியாணப் பெண்ணை அழைத்துவந்து ஸ்ரீஹரிசன்னிதியில் பிரம்மசாரியுடன் சேர்த்து அரசனும் மற்றவரும் அலங்காரங்க ளதிசயிக்கச்செய்து விவாஹத்தை நடத்தினர்கள். பெருமாளு மவ்விடமே யிருந்துவிட்டார். மதுராபுரியில் வேறோர் மூர்த்தியை மாதவப் பெருமாள் சம்மதிமேல் ஸ்தாபித்தார்கள்.

---

## சூரதாசர் சரித்திரம்.

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி துவாரகாபுரியில் சகல வைபவங்களுடன் வீற்றிருக்குங்காலத்தில் ஓர்நாள் அக்ரூரர் சத்தியபாமைவீட்டிற்குச் செல்லஅவள்விதியுக்தமாகவவரைபூஜித்து கிருஷ்ணமூர்த்தித்தன் விஷயமாய்ச் செய்யும் செய்கைகளைச் சொல்லத்தொடங்கி அவர், தன் வீட்டிற்கு வருவதில்லையென்றும் அதனல்தான் விரகதாபத்தை யடைந்திருப்பதாகவும் அவர்வாராமையால் ஸ்திரீகளில் தான் வியர்த்தஜீவி யானளென்றும் முறையிட்டுப் பின்னும் நீர் ஹரி பாதபக்தியிற் சிறந்தவர், பூஜிதை யடைந்தவர், அவரிவ்விடத்

திற்கு வரும்படி நீர் விஹிதோபாயத்தைச் செய்யக்கடவீரென்ருள். விரகதாபம் விசேஷமாக யிருக்கிறதென்று அக்ரூரர் கண்டு பெருமாள், வருவதற்காவது, அழைத்து வருவதற்காவது ஆலசியமாகுமென்றும் அவர் வாராவிடி லவள் பிராணத்தியாகஞ்செய்துக்கொள்வளென்றும் மனதிற்கருதி ஸ்ரீகிருஷ்ண ரூபத்தைத் தானேவஹித்து அவள்வீட்டிற்குவர, சாக்ஷாத் கிருஷ்ணரே அவ்வேளையில் வந்து அக்ரூரரை நோக்கி, வேறுரூபத்தை வஹித்திருப்பதை ஆக்ஷேபித்து இப்படி யிருப்பது உசிதமாகுமா? மற்றவரிதைப்பார்த்தால் மெச்சுவரோ! ஆனதால் உலகில் நீர் குருடராய்ப்பிறப்பீரென்று சொல்ல, விநயத்துட னக்ரூரர் ஸ்ரீஹரியை நோக்கி பதிதபாவனு! பரமதயாநிதி! பரிசுத்த மனதுடன் செய்யும் விண்ணப்பத்தைக் கேளும், சத்தியபாமையின் பிராணங்களைக் காப்பாற்றும் பொருட்டு இந்த ரூபத்தை வஹித்தேன். தேவரீரடியேன் சித்தத்திலிருந்து சகலத்தையு மறிந்திருப்பீர். கிருபைசெய்தருளுமென்று வேண்டிக்கொள்ள, கிருஷ்ணமூர்த்தியவரை நோக்கி கலியுகத்தில் பிரஜைகளைப் பக்தியில் நிறுத்தும்பொருட்டு இதை ஒரு ஹேதுவாகச்செய்து உம்மை உலகிலவதரிக்கும்படி அபேக்ஷித்தோமென்று பெருமாள் கடாக்ஷித்தருள அவராமோதித்து நின்றனர். சத்தியபாமையைப் பெருமாள்கண்டு நீ குருடியாக வுலகத்திற் பிறந்து அவரை யெதிற்கொண்டு சந்திக்குஞ் சமயத்தில் எனது ரூபத்தி லுனக்கு சங்கமமுண்டாமென்ருர். பெருமாளிச்சைப்படி சூர்தாசர் அக்ரூராம்சமாகப் பிறவிக் குருடராய்ப் பிறந்து அனுதினமும் ஹரிபஜனையைச் செய்துவருவர். மேலான கவித்வங்களைச்செய்து கமலேசன் கீர்த்தனைகளைப்பாடி வருவார். பரந்தாமரான ஸ்ரீஹரிமேல் பிரபந்தங்க ளனேகமாகச் செய்து மதுரைக்குச்சென்று மாதவப் பெருமாள் சன்னிதிமுன் நின்று நமஸ்கரித்து வணக்கத்துடன் சொல்லலுற்ருர். பூர்வஜன்மத்தில் நா னபசாரங்கட் செய்யாதிருக்க இப்பூமியிற் பிறக்கும்படி சாபமிட்டீர். விசாரித்துப்பார்க்குமளவி லோரபசாரம் மாத்திரம் நான் பிருந்தாவனத்திற் செய்தேன். ஓ கிருஷ்ணு! உம்மை நான்வ்விடமிருந்து அழைத்து வரும்போது யசோதைப் பிராட்டியும் கோபிகாஸ்திரீகளு மென்னைக்கண்டு வியோக தாபத்திற்கு ஹேதுவானேனென்று அவர்கள் மனம்கலங்கி இருந்தார்கள். அவர்களுடைய

கோப மிகுதியாலிந்த வீணைஜனன மெடுக்கலாயிற்று. ஓ சத்ஸ்வ ரூபரே! சத்தியபாமையை நான் கோரவில்லை. ஓ பத்மநாபா! அச்சுதா! கிருஷ்ணா! வாசுதேவா! ஹரி! யென்று சூரதாஸர் வெகுவாக ஸ்தோத்திரஞ்செய்து கண்களிற் ஜலம்பெருக கத்கத கண்டத்துடன் கமலேசனைப் பஜித்தார். அப்பொழுது பெருமாள் அவருடைய கண்களுக்குப் பார்க்குஞ் சக்தியை உவகையுடனீய்ந்து சதுர்ப்புஜங்களுடன் சங்குசக்கரங்களைத் தரித்து கௌஸ்துப மாலையுங் குண்டலங்களும் விளங்க சியாமளரூபராகி பீதாம்பரத்தை யுடையவராகி சகலாலங்காரங்களுடன் சந்திரசூரியர்களின் பிரகாசத்தைக் காட்டிலும் சுவிசேஷமாகத் தோன்றிநின்று வரங்களைக் கொடுப்போம்கேளுமென்று சூரதாசருக்குச் சொல்ல அவர்தெண்டன் சமர்ப்பித்து ஸ்வாமி! முன்போற் குருடனாகவே அடியேன் யிருக்கவேண்டும். பிறந்ததுமுதல் பாஹ்யவிஷயங்களைப்பார்க்காமலிப்பொழுது நான் தேவரீர் திவ்விய விக்கிரகத்தைக் கண்டேன், இதை யென்மனதில் நிறுத்திக்கொண்டேன் அன்னிய பதார்த்தங்க ளெவையு மென்மனதிற்கொவ்வா. கிருபை செய்தருளுமென்றார். இதைக்கேட்டு பெருமாள் சூரதாசரை முன்போலவே அந்தகனாக்கிவிட அவர் தன்னிருப்பிடஞ் சென்றார்.

அவந்தியென்னுமோர் பெரிய பட்டணமுண்டு, அதை யோரரசன், அறநெறிவழுவாம லரசாக்ஷி செய்துவந்தான். அவனிடத்திற்சங்கீதபாடகர்கள் ஐந்நூறுபேரிருந்தார்கள். அவர்களுள்தான் சேனென்பவன் சமர்த்தனாய்ச் சங்கீதவித்தையிற் பாண்டித்தியம் வெகுவாக உடையவனாக இருந்தான். அவன் சங்கீதத்தை பாடினால் அணைந்ததீபமு மப்போதே பிரகாசத்துடன் விளங்கும். அரசனொருநாள் தான் சேனனை மிகப்புகழ்ந்து உனக்குச் சமமானச் சங்கீதவித்வா னெங்குமிரானென்றான். அதைச் செவியேற்ற தான்சேன் அரசனை நோக்கி யுலகத்தி லொருவருக் கொருவர் வித்தையி லதிகராயும் எவ்விடத்தும் விசேஷப் பிரக்ஞையுடையராயும் மனனசீலராயு மிருப்பார்கள். பிரம்மதேவ னொருக்கால் கர்வமடைய விஸ்வாமித்திர ருஷியினால் உலகில் வஸ்து பூர்த்தியைப் பெருமாள் செய்வித்தார். சமுத்திரராஜன் தன்னுடைய கம்பீரம் பெரியதென்று கர்வமடைய அகஸ்திய முனிவருடைய ஆசமானத்தால் அவன் கர்வபங்க மானான். நாரதமகாமுனி சங்

கீதத்தில் நைபுண்ணியமுடையவரென்றெண்ண அஸ்வலனெனும் பல்லூகத்தால் பெருமாள் கர்வபங்கம் செய்வித்தார். ஆஞ்சனேயர் பலவானென்று தான் கர்வத்தையடைய பரதனாலவர் பங்கமடைந்தார். இது பகவானுடைய சித்திரமாகும். சங்கீதவித்தையி லதிக சாதுர்யமுடையவ ரிப்பொழுது மதுராபுரியில் அக்ரூரராம்சராகப்பிறந்து சூரதாசரெனும் நாமத்தையுடையராய் விளங்கியிருப்பாரென்றுசொன்னான். அரச னதைக்கேட்டு சன்மானத்துடனவரைத் தன்வீட்டிற்கு வரவழைத்து அதிகமான வாதரணையுடன் பூஜித்து பொற்பீடத்தின்மே லவரை உட்காரவைத்து மன்னிக்க சபையி லிதரசங்கீத வித்வான்களுடன் தான்சேனு முட்கார்ந்திருந்து சூரதாசரை நோக்கி ஓ மஹானுபாவரே! உம்முடைய சுந்தரமான சங்கீதத்தைக் கேட்கும் பொருட்டு பெருத்த பிரீதியுடன் அரசரான பிரபு உம்மை யிவ்விடத்திற் கழைத்தாரென்று சொல்ல, சூரதாசர் சொல்லுவார். அடியேன் விஷ்ணுதாசன் கிருஷ்ண சரிதைகளைப்பாடுகிறேன் கேட்கக் கடவீரென்று வீணையைக் கைக்கொண்டு ஸ்ரவங்களை சரிப்படுத்தி கனத்தராகத்துடன் கானஞ்செய்யத் தொடங்க கஜானனர் பின்வந்து தாளம்போட சரஸ்வதியும் ஸ்வர வீணையை வெளிப்படுத்த யோகியற் கெட்டாத ஸ்ரீயப்பதியான ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி நடனஞ்செய்யத் தொடங்கி கீர்த்தனையிலாடினார். இவ்வண்ணமாக சூரதாசர் பிரதி தினமும் ஸ்ரீ ஹரியைப் பஜித்துக்கொண்டிருக்க ஓர் மாதம் கழிந்தது, இதனுள் ஸ்திரீகளும் புருஷர்களு மேகமனத்தராகிப் பெருமாளைப் பஜிக்கத்தொடங்கினார்கள்.

அரசனுடைய மனைவிகள் சூரதாசருடைய சங்கீதப் பிராவண்ணியத்தைக் கேட்டு அந்தகரான வப்பாடகரை அந்தப்புரத்திற் கழைக்கும்படி அரசனைப் பிரார்த்தித்தார்கள். அப்படியே செய்கிறேனென் றவர்களுக்குச்சொல்லி நாடகசாலைக்கு சூரதாசரை யழைத்துவந்து மனைவிகளையெல்லாங் கூட்டமாகச்சேர்த்து கானத்தைக் கேட்கச் செய்தான். அரசன் மனைவிகளெல்லாரு மவ்விடங் கூடியிருக்க அவர்களுடைய சமுகத்தில் சாபத்தை மேற்கொண்ட சத்தியபாமையு மவ்விடம் தாசியாயிருந்தாள், சூரதாசருடைய சுந்தரமான சங்கீதத்தை யனைவரும் விருப்பத்துடன் கேட்டுக்கொண்டிருக்க அந்தச் சத்தியபாமையான தாசி தேஹத்தைமறந்து ஸ்தல

மென்னும் ஜலமென்னு மறியாமலிருந்து இவர் கண்களுக்குத் தோன்றினுள். பின்பு ஸ்திரீக ளனைவர்களைப் பார்த்து விஷயதண்டமிவ்விடத்தில் நிறைந்திருக்கிறதென்று விளம்பரப்படுத்த அரசன் மனைவிக ளனைவரு மிவர் குருடரல்லரென்று அந்தப்புரத்தில் சென்றனர். ஏகாந்தத்தைக்கண்டு ஸ்ரீகிருஷ்ண ரவ்வேளையி லவ்விடம்வந்து அவ்விருவரையுந் தனக்குள் லீனப்படுத்திக்கொண்டார்.

---

## சேனுநாவிதர் சரித்திரம்.

ஹிந்துஸ்தானத்திற் சேனுயெனு மோர் அம்பட்ட பக்தரிருந்தார். அவர் சமுசாரத்தை யனித்தியமென்றெண்ணி ஹரிபக்தியை யவலம்பித்து ஹரியையே ஆராதித்து வருவர். சுந்தரமான சதுர்ப்புஜங்களுடைய ஓர் பெருமாள் விக்கிரகத்தைத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டு பிரீதியுடன் நேமந்தப்பாமற் பூஜைகளைப்புரிந்து அவருக்கே சரணுகதி யடைந்திருப்பார். விடியற்காலத்தி லெழுந்திருந்து ஸ்நானஞ்செய்து ஸ்ரீஹரியைப்பூஜித்து பின்பு ஜீவன தொழிலுக்குச்செல்வர். சேவகனுடைய விருத்தியைக்காட்டிலும் க்ஷௌரகவிருத்தி மகாநீசமாகும். கிராமஜோஷி (புரோகிதன்) வேலையும், தட்டார்வேலையும், கிராமசக்கிலிவிருத்தியும், பசுஹத்திசெய்து மாம்சம் விக்ரயிக்கும் கசாருகன் விருத்தியும், உலகில் நிந்திதமாகவிருக்கும், இவைகளைச்செய்பவர்கள் தயையில்லாதவராகி பாபகிருத்தியங்களையே யெப்பொழுதும் பிடித்திருப்பார்கள். அவர்கள் பரமபுருஷனுன ஸ்ரீஹரிபஜனையை யெப்பொழுதுங் கைக்கொள்ளார். கெட்டவிருத்திகளை யவலம்பித்தால் கெடுதலையான பாபங்களே வந்துசேரும். இந்த ஜாதிகளிற் பிறக்கும் ஜன்மங்கள் பகவத்பஜனையை செய்யாதிருந்தால் பவசக்கிரம் தொலையாதென்று சேனுநாவிதர் மனதிலெண்ணிக்கொண்டு பகவானை சரணடைந்ததனுல் தோஷங்க ளனைத்தும் போய்விட்டன. ஜலதாரைநீர் பாகிரதியில்விழுந்தா லது புனிதம்பெறுதோ?

ஓர்நாள் அவ்வூரரசன் (துலுக்கன்) தனக்கு க்ஷௌரஞ் செய்யும்பொருட்டும் எண்ணெய் தேய்க்கும்பொருட்டும் ஓர் மனிதனை விட்டு சேனு நாவிதரை அழைத்துவரச் சொன்னுன். அவ்வேளையிற் சேனுநாவிதர் ஸ்ரீஹரிபூஜையைச் சுகமாகச் செய்துக்கொண்டி



அரசன். சேனநாவிதன். சாத்வீகராஜன். ஸ்ரீரங்கராஜு. கர்மாபாய்.

ருந்தார். அவர் மனைவி மனிதன் வருவதைக்கண்டு தன்பர்த்தா வீட்டி லில்லையென்று சொல்லியனுப்பினள். அச்சேவகனு மரசனிடஞ்சென்று அம்பட்டன் வீட்டி லில்லையென்றான், பின்பு வேறோர் மனிதனை அரசனனுப்பினன். அவனும் வந்து சேனாவிதரை அழைக்க அவர்பத்தினி வீட்டிலில்லையென் றனுப்பிவிட்டாள். மறுபடியு மரசன் வேறிருவரையனுப்பி அம்பட்டனைக் கொண்டு வரச்சொல்லி கட்டளையிட்டான். அவர்மனைவி அவர்களுக்கும் தன் பர்த்தா வீட்டிலில்லை யென்றனள். அவ்வேளையி லவ்விடமிருக்கு மக்கம் பக்கத்தா ரரசனிடஞ்சென்று சேனாவிதன் வீட்டிலேயே யிருந்துக்கொண்டு பகவத்பூஜைச் செய்கிறானென்றார்கள். அதைக்கேட் டவ்வரசன் கோபமுடையவனாகி துலுக்கஜவான்களை யனுப்பி கைகால்களை இழுத்து கயிறுகளால் இறுகக்கட்டி ஆழமுடையவாற்றிற் போட்டுவிட்டு சீக்கிரத்தில் வரக்கடவீர்களென்றான். பக்தனை தொந்தரைசெய்ய நினைக்கும்பொழுது பகவான் சேனாவித ரூபத்துடன் அரசனிடஞ்சென்றார். சேஷசயனனான பரமபுருஷன் அக்களி லடைப்பத்தை வைத்துக்கொண்டார். கருடவாஹனரான பகவான் கால்களால் நடந்துசென்றார். தேவர்கள் ரிஷிகளுடைய தியானங்களுக்கு விஷயமான தாமோதரரும் வேதங்களாற் பரிசோதிக்கப்படுமவரும் சர்வருக்கும் உன்னதருமான ஸ்ரீஹரி சேனாவிதர் வுருவத்துடன் இராஜன்முன்சென்று நிற்கவே அவன் சாந்தியுடையவனானன். அந்த நாவிதர் முககெக்ஷௌரமும் தலைகெக்ஷௌரமும் செய்யுங்கால் அரசன் முககாந்தி யுடையவனாகி அவரைநோக்கி கெக்ஷௌரவேலையில் நீ சாதுரியமுடைவனா யிருக்கிறாய். என்னிடமே எப்பொழுது மிருக்கக்கடவாயென்று பிரீதியுடையவனாய்ச் சொல்ல, பெருமா ளவனைநோக்கி பிரம்மாண்டத்தில் பூரணவியாப்தி யடைந்து உள்ளும் புறம்பு மொருவனாகவே நிறைந்திருப்பேன். போக்கு வருத்துக ளெனக்கில்லை பக்தர்களுக்காக சாகாரத்தைத் தரிப்பேன், க்ஷணத்திற்கொரு ரூபமெடுப்பேன், ஆயினு மென்னுடைய அவ்வியக்த லக்ஷணத்தை விடேனென் றிவ்விதமாகப் பெருமாள் உரைத்தருள அரசனுக் கது விளங்காமையால் அப்பியஞ்சனத்திற்கு தைலத்தை அரசனழைப்பித்து சுவர்னபாத்திரத்தி லதனை தன்முன்னிட்டு பொற்பீடத்திலுட்கார்ந்துக்கொள்ள பெருமா ளவன் சிரசிற் றைலத்தைத் தேய்

க்க வாரம்பித்தார். அரசன் தன் திருஷ்டியை தைலபாத்திரத்தில் வைத்தான். அதனுள் ஸ்ரீஹரியினுடைய திவ்வியமங்கள ரூபத்தைச் சேவித்தான். கிரீடகுண்டலங்களும், கடக கங்கணங்களும், கேயூர வனமாலைகளும், சதுர்ப்புஜங்களும், ஸ்ரீவத்சமும், பூணூலும், பீதாம்பரமுமுடையராகி ஸ்ரீயப்பதி அக்கிண்ணத்திலிருக்குந் தைலத்திற் பிரதிபலித்தார். அந்தப் பிரதி பிம்பத்தைப்பார்த்து ஆச்சரியப்பட்டு அதனையே பார்த்துக்கொண்டு திரும்பி தன்னைப் பார்த்தும் மறுபடியுங் கிண்ணத்தைப் பார்க்கத் திவ்வியரூபமே தோன்றப்பட்டு அதினிடத்தே அரசன் மனதைநாட்டிவிட்டு பார்க்கப் பார்க்கச் சகலத்தையு மறந்தான். அவ்விடத்திலுள்ள ஜனங்களனைவரும் அரசனுக்குப் பைத்தியமென்று சொல்லலுற்றார்கள். சபா ஜனங்க ளனைவரு மிராஜன் மனோமார்க்கத்திற் சஞ்சரிக்கிறானென்று சிரித்திருந்தார்கள். விபஜனையின்றி இப்படி சொல்லிக் கொண்டிருக்க இரண்டு ஜாமம் காலதாமஸமாயிற்று. இதனால் இராஜனுடைய பந்து ஜனங்கள் பயமுற்றவராகி பொழுதாயிற்று எழுந்திருமென்று சொல்ல, அப்பொழுது சமாதிவிட்டெழுந்திருந்து அரசனனைவரும்பார்க்க நாவிதருக்கு வராகன்களைக் கொடுத்து க்ஷணமிவ்விடத்தே யிருக்கக்கடவையென்றுசொல்லி மங்கள ஸ்நானஞ் செய்துக்கொண்டிருக்கப் பெருமாள், சேனநாவிதர் வீட்டிற்குச் சென்று அடப்பத்தை அவ்விடம் வைத்து வராகன்களை அங்குள்ள குட்டிச் சுவர்மேல் வைத்து மறைந்தனர்.

அரசன் உட்கட்டில் ஸ்நானஞ்செய்து வெளிவந்து சேன நாவிதனை அழைத்துங் காணமல் அமிதமான வியாமோஹத்தால் அன்னத்தைப்புஜிக்கவு மறந்துபிராணங்கள் அலகல்லோலமாயிருக்கச் சேவகர் சேனவீட்டிற்குவந்து வரச்சொல்லி அழைக்க அவன் பயமுற்றவனாகி அடப்பத்தைக் கையிலேந்தி அரசனிடம்வர அரசன் விநயத்துட னெழுந்திருந்து அவரை நோக்கி எனக்கு முன்பு தரிசிப்பித்த தேஜோரூபத்தை தயையுடன் காட்டவேண்டு மென்றுத் திரும்பி பாத்திரத்தில் தைலத்தை வார்த்துச் சபையிற் கொண்டுவந்து வைத்தான். சபையோ ரனைவரும் பார்த்து சிரிக்கும்படி அரசன் அந்த நாவிதருக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து பிரதி பிம்பத்தைக் காட்டுமென்று கேட்டான். சேனநாவிதர் இதென்ன பிரபாவமென்று ஒன்றுந்தோன்றமல்ஆச்சரியத்துடன்

நிற்க, அக்கிண்ணத்தில் அரசன் அவருடைய பிரதிபிம்பத்தைப் பார்த்து முன்கண்ட உருவமகப்படாமல் விசனமுற்றுப் புலம்பலுற்றான். நாவிதருக்கு நடந்தசங்கதியைச் சிலபேரறியச் சொல்ல ஸ்ரீபகவானே தன்னுருவத்தை வகித்துவந்து சேவைசெய்தாரென்று சேனஅறிந்து ஆர்த்தியுடனச்சுதரை மனதிலெண்ணி கண்களிற் கண்ணீர்பொழிய ஸ்ரீஹரியைக்குறித்துகீர்த்தனைச் செய்யலுற்றார். ஓ பதிதபாவனரே! பண்டரிநாதரே! உம்முடைய பாரத்தை உலகிலெவருமறியார். அடியார்களுக்கு ஹிதஞ்செய்யும்பொருட்டு நீசகாரியத்தை இன்றுசெய்தீர். ஓ சியாமள சுந்தரரே! ஆர்த்த ரக்ஷகரே! சாதுபோஷகரே! அடியேனுக்குத் தரிசனந்தந்து ரக்ஷிக்கக் கடவீரென்று பலதரஞ்சொல்லி விசுவாசத்துட னழத்தொடங்கினான். அப்பொழு தரசன் பிரியத்தை யுடையவனாய் சேனநாவிதரை நோக்கி உம்முடைய சங்கத்தால் உவமைக்கெட்டாத சுகத்தை யடைந்தேனென்று அவருடைய பாதங்களைப் பிடித்துப் பக்திசெய்து சாதுசங்கத்தால் ஸ்ரீகிருஷ்ணனைக் கண்டேனென்று மனதிலெப்பொழுதும் மாதவரைச் சிந்தித்து மகிழ்ந்திருந்தான். சேனநாவிதர் வீட்டிற்குச்சென்று ஸ்ரீஹரி வைத்துப்போன வராகன்களை விப்ரஜனங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து விசேஷ பக்தியுடன் ஸ்ரீஹரிஸ்மரணையைச்செய்து வாழ்ந்திருந்தார்.



## சாத்வீகராஜன் சரித்திரம்.

ஜகன்னாதத்தில் சாத்வீகனெனு மரச னொருவனிருந்தான். பிரஜைகளைத் தர்மநீதியுடன் பரிபாலனம் பண்ணிக்கொண்டு சத்திய சீலனாகி சர்வேஸ்வரனுக்குப் பக்திசெய்து வருவன். அவ்விடத்திலுள்ள க்ஷேத்திரத்தை கலியுக வைகுண்டமென்று ஆரியர்சொல்லுவார்கள். அவ்விட மரசாக்ஷிசெய்யும் பிரபுக்களைச் சாத்வீகரென்று நாமமிட்டழைப்பார்கள். பெருமாளந்த க்ஷேத்திரத்தில் நித்திய நிவாசஞ்செய்து பக்தஜனங்கள்மேற் கிருபாவீக்ஷணமுடையராயிருப்பார். அந்த அரசன் மூன்றுகால பூஜைகளிலும் பெருமாள் சன்னிதிக்குவந்து தீர்த்தமும் பிரசாதமும் வாங்கிக்கொண்டு பின்பு வீட்டிற்சென்று புசிப்பெடுத்துக் கொள்ளுவான். பெருமாளுக்குப் பிரியத்துடன் மேலான வஸ்திரங்களும் மிகுதியான ஆப

ரணங்களும், அமிதமாக அன்னநிவேதனங்களும் அனுதினமுங் கொடுத்துக்கொண்டு மாதவரிடம் மேலான பிரீதியுட னிருப்பான்.

இப்படியிருக்க ஒருநாளரசன் ஹரிசன்னிதிக்குச்சென்று அவ்விட முட்கார்ந்துக்கொண்டு பொழுதைப்போக்குவதற்கு சொக்கட்டா னுடிக்கொண்டுத் தன்னிஷ்டனுயிருந்தான். அவ்வேளையிற் பரிசாரகர்கள் பிரசாதத்தைப் பங்கிட்டுக்கொண்டிருக்க அரசன் இடதுகையால் வாங்கப்போக பரிசாரக னதைக் கொடுக்காமலவ்வாறே போய்விட்டான். சொக்கட்டானுட்டம் முடிந்தபிறகு அரசனவ்விடத்திலுள்ள ஜனங்களைக்கண்டு பெருமாள் பிரசாதமெங்கேயென்று கேட்க, அவர்க ளரசனைநோக்கிநீர்பிரசாதத்திற்காக இடதுகையை நீட்டினபடியால் பரிசாரகர்க ளுமக்குக் கொடுக்காமற் கொண்டுபோனுர்களென்றுர்கள். இதைக்கேட்டு அரசனனுதாபத்தையடைந்து இது விபரீதமாயிற்றே! கவையற்ற இச்சூதாடுங் கருமத்தை இவ்விடமேன் செய்துக்கொண்டிருந்தேன்? இது எப்படியிருக்கிறதென்றுல் விலையுடைய அமிருதத்தைவிட்டு வீணுனகள்ளைக்குடித்தாப்போ லாயிற்றே! ஹரிசன்னிதியில் நானிருக்கத்தகுந்தவ னல்லவென்று ஆலயத்திற்கு வெளியேவந்து அவனுடைய மந்திரியை அழைத்துச் சொல்லுவான். நான் படுக்கைவீட்டிற் பஞ்சணைமேற் படுத்துக்கொண்டிருக்கும்போது பிசாசு வந்து கவாட்சிதுவாரத்திற் கையை வீசுகின்றது. இன்றிரவு நீ அவ்விடம்வந்து அதினுடைய கையை வாளினுல் வெட்டிவிடு, மறக்கவேண்டாமென்று கட்டளையிட்டு அரசன் தன்வீட்டிற்குச் சென்று கைகளல்லவா யிந்தவபராதஞ் செய்தன? அவை சிக்ஷைக்கு உட்பட்டனவென்று நிச்சயித்திருந்தான்.

இரவுகாலமானபின் அரசன் சயனவேளையிற் பள்ளியறைக்குப்போக மந்திரியும் பிசாசு வாதையை நிவர்த்திசெய்ய அவ்விடம் வந்தான். ஒரு ஜாம ராத்திரி யானபின் இருட்டறையி லரசன் படுத்திருந்து மந்திரி வந்திருப்பதைக்கண்டு கவாக்ஷியினிடம் கையைச் சுற்றினுன். அதனை பிசாசியின் கரமென்றெண்ணி மந்திரி கட்கத்தால் நறுக்கிவிட்டான். அஸ்தி, மாம்சத்துடனக்கை கீழேவிழ மந்திரியும் திடுக்கிட்டு விளக்கேற்றிப் பார்க்குமளவி லது அரசனுடைய கையாகக் காணப்பட்டது. உடனே மந்திரி பூமிமேல் விழுந்து அழத்தொடங்கி துக்கமுற்றவனுனுன். அவ்வே

ளையி லரசன்வந்து, இந்த ஹஸ்தம் அபசாரஞ்செய்தது. அதனு லதைக் கண்டித்துவிடும்படி கட்டளையிட்டேன். நீ கலக்கமடைய வேண்டாமென்று மந்திரிக்குச் சொல்லி, ஒருசேவகனை அழைத்து அபசாரஞ்செய்த விந்த ஹஸ்தத்தை ஓர்பல்லக்கில் வைத்து ஜகன் ஞதருடைய சன்னிதியிற் சேர்த்து இது கொடிய தப்பிதத்தைச் செய்தது. துர்மதத்தாற் சூதாடிக்கொண்டிருந்து தீர்த்தப் பிரசா தத்தை மறந்ததென்றும தர்மத்தைச் செய்யாமல் துராசாரங்களை த்தொடர்ந்திருந்த தென்றும், பகவதர்ச்சனை, பக்தஜன சேவைச் செய்யாமல் கர்வத்துட னிருந்ததென்றும் விண்ணப்பத்துடனர்ப் பித்து வரச்சொல்லிக் கட்டளையிட அச்சேவக னந்த வாக்கினை யைச் சிரசாவகித்து அக்கையைப் பல்லக்கிலிட்டுப் பெருமாள் சன் னிதியில் வந்து அரசன் விண்ணப்பத்தை யறிவித்தான்.

அவ்விடத்து வைஷ்ணவர்கள் அத்யானந்தத்துடன் ஹா! ஹா காரஞ்செய்து அரசனை சிலாகித்து அவனுடைய சாஹசத் திற் குகந்து ஜகன்னதனுடைய சன்னிதி முன்பு ஜயஜயவென்று சொல்லிக்கொண்டு ஸ்ரீ ஹரியினுடைய கலியாண குணங்களைப் புகழ்ந்து பிரார்த்தனைசெய்ய, அந்தக்கை புஷ்பமஞ்சரியைப்போல் தவனமாயிற்று. அன்றையதின் மர்ச்சகர்கள் பெருமாள் பிர சாதத்தை அரசனுக்குக்கொடுக்க அவன்பூர்வம் கையிருந்ததுபோ லப்பாவித்து பிரசாதத்திற்குக் கையை நீட்டினப்பொழுதே அது முன்போல உண்டாயிற்று. அசமானமாகு மிம்மகிமையைக்கண்டு ஹரிகோவிந்தா அச்சுதாவென்று பகவானைச் சகலருங் கொண் டாடினார்கள்.

---

## கர்மாபாயி சரித்திரம்.

ஜகன்னதத்தை ஹரிக்ஷேத்திரமென்று ஜகமனைத்துங் கொ ண்டாடும். அனேக பக்தர்க ளவ்விட மமைதியுடனிருப்பார்கள். கர்மாபாயியெனும் ஸ்திரீ கர்ப்பத்துட னிருக்குமளவில் கர்மவசத் தா லவள்கணவன் காலகதியடைந்தான். அதனு லவள் மனக்கக் கிலேசித்து ஒன்பது மாசங்கள் கழிந்த உடனே பாலனைப் பெற் ருள். ஜகன்னத ஸ்வாமி சம்ரக்ஷணைசெய்ய அப்பிள்ளை வளர்ந் தது. பதினுருவதாண்டி லப்பிள்ளைக்கு விவாஹமாயிற்று. மரும கள் கர்ப்பமாகவிருக்குந் தருணத்தில் குமாரன் காலகதி யடைந்

துவிட்டான். இதனு லதிகதுக்கத்தை யடைந்திருக்க மருமகள் ஆண்பிள்ளேயைப் பெற்ருள். பிறந்தசிசுவை செம்மையாகப் பரி பாலித்துவந்தாள். சிலகாலமைப்படி கழிந்துவர அப்பேரனும் மரித்தான். இதனுல் பாட்டியா ரதிக வியாகூலத்தை யுடையவ ளாகிக் கொடுமையான துக்கத்துடன் கர்மாபாயி காலங்கழித்துக் கொண்டு எப்பொழுதும் விட்டலரங்காவென்று விடாமல் சொல்லி கொண்டு வெகு துக்கங்களுடன் கூடின இச்சமுசாரத்தில் விழுந் தேன், ஸ்ரீஹரி என்னே இரக்ஷிக்கக்கடவரென்று பெருமாளேச் சிந் தித்துக்கொண்டிருப்பாள்.

இப்படியிருக்கச் சிலசாதுக்க ளவ்வூரில்வந்து கர்மாபாயினு டைய வீட்டையடைய, அவளவர்களுக்கு விடுதி இடத்தைக்கொடு த்து வந்தனஞ்செய்து அவர்களுக்கு நல்லவார்த்தைகளேச்சொல்ல, அந்த சாதுக்கள் கர்மாபாயியை நோக்கி அம்மா ! உன்முகம் விச னமுற்றிருக்கிறதே ! அதற்கென்ன காரணமென்று கேட்க வவள் தன்னுடைய துக்கங்களனைத்தையுந் தெரிவித்தாள். இதைக்கேட்டு சாதுக்கள் சொல்லுவார்கள். ஓ பாக்கியசாலி ! பேரிவாத்தியத் தின்மீதோர் கட்டிலேப்போட்டு அதின்மேற்படுத்தால் நித்திரை வாராதல்லவா ? தாகமுடையவன் கானற்சலத்திற் சென்ருல் தண்ணீர் அவனுக்குக்கிட்டுமோ? அதைப்போல இவ்வுலகிற் சமு சாரமானது சுகத்தைக்கொடாது நீயுந் துரிதத்திற் சாக்கிரதை யுடையவளாக யிருக்கக்கடவாய். மாயாபிரமையைப் போக்கிவி ட்டு மாதவர் பாதத்தைச் சேர்ந்திருக்கக்கடவை, ஸ்ரீஹரிப் பிராப்திக்குச் சாதுக்களுடைய சேவையே க்ஷேமகரமான மார்க் கமாம், மோஹ மமதைகளே விட்டு முகுந்தனுடைய சேவை களிலிருக்கக்கடவாய். சாதுக்கள் சாந்தி தாந்திகளே யுடையவ ராகி சர்வேஸ்வரனேயே யாராதித்து பாபநாசத்தைக்கருதி சஞ்ச ரித்து வருவார்கள். அத்தன்மையோரை நீ அனுதினமும் ஆர்த் தியுடன் சேவித்து அவர்களுக் கன்ன வஸ்திரங்களேக் கொடுத்து ஆதரிக்கக்கடவை, இப்படி நீ செய்வையாயின் பெருமாள் சக் கரத்தைக்கொண்டு சகல கல்மஷங்களேச்சேதிப்பார். சித்தத்தை வேதிக்கும் சிந்தனேயுந் தீருமென்றுசொல்லி ஓர் கோபால விக்கிர கத்தைக் கொடுத்து இதனேப் பூஜித்து வருவையாகில் க்ஷேமமா மென்று அனுக்கிரகித்துப் போனர்கள்.

பின்பு கர்மர்பாயி மனதிற் கிலேசமடையாமல் அந்த மாதவ மூர்த்தியைப் பெருமை கொண்டாடி பூஜைகளைச் செய்துஅவனுடைய சேவையில் நிரதையா யிருப்பள். குழந்தைகளுடன் விளையாடுவதுபோல அவ்விக்கிரகத்துடன் ஆடிக்கொண் டிருப்பாள். இதரஜனங்கள் பார்த்தால் அம்மூர்த்திக்கு திருஷ்டிசுத்திப் போடுவாள். விக்கிரகத்தைத் தன் கால்கள்மேலிட்டுக்கொண்டு உடம்பைத் தேய்த்து சுடுஜலத்தினால் ஸ்நானஞ் செய்வித்து வெள்ளை வஸ்திரத்தை யுடுத்தி விகிதமாக நித்திரை செய்விப்பள். வியாமோஹத்தால் ஆபரணங்களை விசேஷமாகப்போட்டு சின்ன கிண்ணத்தில் தயிர்சாதத்தைச் சேர்த்து அதனை விக்கிரகத்தின் முன் வைத்து முத்துகிருஷ்ணா! என்னப்பா! மெதுவாகச் சாப்பிடும், பசிதீரும், ஓ கிருபாமூர்த்தி! கோகுலவாசா! ராஜீவ நேத்திரா! ரமேசா! சேஷசயனா! சர்வேசா! அன்னம் சுடுகையாயிருக்கிறது. அருந்துமென்று பிரார்த்திக்கு மளவில் பெருமா ளவளுடைய சுத்தபாவத்தைக்கண்டுப் பிரசாதத்தைப் பக்ஷித்துவருவார். இவ்வண்ணம் மகத்தான சிரத்தையுடன் கிருஷ்ணமூர்த்திக் கனுதினமு மகிழ்ச்சியுடன் போஜனமிட்டு வருவாள்.

அனேகநாளிப்படி கழிய சில அக்கினிஹோத்திரப்பிராம்மணர்கள் (எக்கியம் செய்தவர்கள்) யாத்திராபரர்களாகி ஜகன்னாத க்ஷேத்திரத்தை யடைந்து கர்மாபாயினிடம் வந்தார்கள். அவளுமவர்களை மரியாதையுடன் வரச்சொல்லி நிருமலமன்றுடனவர்களுக்கு விடுதி விட்டு வேண்டியவைகளைக் கொடுத்து உபசரித்தாள். மறுதினம் விடியற்காலத்தி லெழுந்ததே பெருமாளுக் கன்னமிடத் தொடங்கினள். வந்தபிராம்மணர்க ளிதைக்கண்டு ஓஅம்மே! பகவத்பூஜை ஸ்நானஞ்செய்தே பண்ணத்தகும். அசுசியாக செய்யக்கூடாதென்ன, அவள் மனதில் பயத்தை யுடையவளாகி மறுநா ளெழுந்திருந்து வீடுவாசலை மெழுகி வேறு ஜலங் கொண்டுவந்து ஸ்நானம்பண்ணி சமையற்செய்யத் தொடங்க பெருமாளுக்குப் பிரசர்த மற்பிக்கப் பொழுதாயிற்று. அதனல் அவர் பசியுடையவராகி சன்னிதியில் அர்ச்சகனுக்குச் சொல்லுவார், சில கர்மநிஷ்டரான பிராம்மணர்கள் கர்மாபாயினிடம் வந்து நிர்மலமான மனதில் விகற்பத்தை யுண்டாக்கினர்கள். ஸ்நானவிதிகளைச் சொன்னபடியால் வீட்டில் சகலவேலைகளைச் செய்யு

மளவில் பிரசாத நைவேத்தியத்திற்குப் பொழுதாயிற்று. ஆன படியால் நீ கர்மாபாயினிடஞ்சென்று நான் கர்மாதீதனென்று தெரிவித்தும் பாவசுத்தியான பக்தியொன்றே வேண்டுவதென்று தெரியப்படுத்தும்படி கட்டளையிட அர்ச்சகன் பெருமாளை வெகுவாக தோத்திரம்பண்ணி கர்மாபாயினுடைய கிரகத்திற்குவந்து பெருமாள் சொன்னதை யறிவிக்க, நைவேத்தியத்தை அனைவரும் காண கர்மாபாயி பெருமாள் சமுகத்தில் வைத்தாள். பராத்பரரான பெருமாள் எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்க பிரசாதத்தைப் பக்ஷித்தார். பக்தரனைவரும் ஜய ஜயவெனுஞ் சப்தங்களால் கொண்டாடினார்கள். பக்தி மகிமைக்கு முடிவில்லையென்று கர்மாபாயி பாதங்களி லனைவரும் விழுந்து நமஸ்கரித்து ஆசக்தியுட னவள்செய்யும் விதியை அனேக ரவலம்பித்தார்கள்.

---

## ஜனஜசாவந்தன் சரித்திரம்.

ஹிந்துஸ்தானி தேசத்தில் ஜனஜசாவந்த ரென்பவர் வர்த்தக விவகாரிகளிற் சிரேஷ்டராயிருந்தார்: அவர் மகத்தான தனத்தையுடையவராகி சாதுபூஜைகளைப் புரிந்து ஸ்ரீராமரை யனுதினமும் சிந்தித்து ஹரிதாசர்களைக் கண்டால் அடியாருக் கடியராகிப் பாதங்களைப்பிடித்து நமஸ்கரித்து ஆனந்தத்துட னறுசுவை யன்னமவர்களுக் களித்து, நித்திரையும் சோம்பலுமின்றி இராமநாமத்தைச் சொல்லிக்கொண்டு சகல யாசகர்களையுஞ் சுகிக்கச்செய்து சத்துக்களுடைய கிருபையை யடைந்து தருமநெறியைத் தவறாமற் காலயாபனஞ் செய்துவருவார். அவருக் கைந்துபிள்ளைகளிருந்தார்கள். அவர்கள் வயதுவந்தவுடன் பிதாவினிடம் பிரியத்தைப் பாராட்டாமல் துஷ்டர்களாகிச் சகலதனத்தையுமவர் செலவு செய்துவிடுகிறாரென்று சத்துருபுத்தியை அவரிடங் கொண்டார்கள். பௌலஸ்தியனுக்கு இராவணாசுரன் பிறந்தாற்போலும், சந்திரவம்சத்தில் துரியோதனன் பிறந்தாற்போலும் அவ்வர்த்தகருக்கு அந்தப்பிள்ளைகள் பிறந்து பாபசித்தர்களாயும் பூர்ண துர்மார்க்கர்களாயும் தகப்பனை நிந்தித்து அவர் தனது தனத்தை தர்மத்தில் செலவழிப்பதைப்பார்த்து அவருக்குப் பைத்தியம் பிடித்ததென்று ஆலோசித்து சிலதனத்தை அவர்கள் திருடிச் சேகரப்படுத்திக்கொண்டார்கள்.

இப்படி செய்துவந்தும் திருப்தியடையாமல் அக்குமாரர்கள் பிரபுவான வரசனிடஞ் சென்று நமஸ்கரித்து ஓ மஹாராஜரே! எங்களுடைய விண்ணப்பத்தைக், கேட்டருளும். எங்களுடைய தகப்பனான ஜனஜசாவந்தனென்பவர் தன்னிடமிருக்குந் தனத்தையெல்லாம் அன்னார்த்திகளுக்கும் அங்குமிங்கும் திரியும் சாதுக்களுக்குஞ் செலவழிக்கிறார். எங்களுடைய ஆதீனத்தி லத்தன மிருந்தால் உமக்கோர் காலத்தி லுபயோகமாகும். அவரைப் பிடித்துக்கட்டிப் பிராணஹானி செய்யவேண்டும். தேவரீ ரிந்த வேலையைச் செய்தீராகில் திரவியங் கைகூடுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள். பிரபுவும் பணத்தை விரும்பினவனாதலால் சேவகரை யனுப்பி ஜனஜசாவந்தரை யழைத்துவரச் சொன்னான். துஷ்டவரசனுக்கு நீச்சருடைய சங்கம் தைரியத்தை யுண்டாக்கும். அவிவேகனான வரசனும் அதமனான மந்திரியுமிருக்கு மூரிலிருப்பது தகுதியல்ல. அரசனுடையசேவக ரவ்வர்த்தகரை யழைத்துவந்தார்கள். அரச னவரை நோக்கி உம்மிடமிருக்கும் திரவிய மனைத்தையும் உமது புத்திரர்களுக்குக் கொடுக்காமல் நீர் யாசகஜனங்களுக்குக் கொடுத்துவிடுவது உசிதமன்று, புத்திரருக்கு உபயோகமான வந்ததனத்தை பைத்தியக்காரராகி செலவுசெய்து புத்திரரைத் தரித்திரராக்குவது உமக்கு யுக்தமாமோ? பணத்தைப் பிரஜைகளுக்குத் தானமளிப்பது பிரயோஜன மன்றென்று சொன்னான். வர்த்தக ரதைக்கேட்டு அரசனைநோக்கி ஓ மகாராஜரே! எனக்கிருக்கும் திரவிய மனைத்தையும் வெகு பிரயாசைப்பட்டுச் சம்பாதித்தேன். அது பிரயோஜனமாம்படி சாதுஜனங்களுக்குச் செலவு செய்கிறேன். வீணில் செலவுசெய்ய வில்லையென்றார். இதைக்கேட்டு அரசன் கோபித்து அப்பிள்ளைகளை நோக்கி உங்கள் பிதா நான்கேட்டகேள்விக்குச் சரியான உத்தரமளிக்கவில்லை. உங்களுடைய சம்மதத்தா லவர் சிக்ஷைக்குப் பாத்திரராவாரென்ன, இதைக்கேட்டு அப்பிள்ளைக ளனைவரு மொருமை மனதுடன் சொல்லுவார்கள். ஓ மகாராஜரே! இவரெங்களுக்குத் தகப்பனாகமாட்டார், பகையாளி யாவாராதலாற் சிக்ஷைக்கு உட்பட்டவராவர். கயிற்றால் கைகால்களைக்கட்டி ஓர் பெரியதடாகத்திற் போட்டுவிட உத்திரவு செய்யவேண்டுமென்றார்கள். அரசனவ்விதமாகவே சிக்ஷிக்க வாக்கினைசெய்ய, சேவகர்கள் கயிறுகளைக் கொ

ண்டுவந்து அவ்வர்த்தகருடைய கைகால்களைக்கட்டி அரசன் பார்த்துக்கொண்டிருக்க தடாகத்திற்கு கொண்டுவந்து ஓர் பாராங்கல்லைக் கட்டி அவரை ஆழ்ந்தஜலத்திற் போட்டார்கள்.

பக்தருடைய தாபத்தைப் பரிகரிக்கும்பொருட்டு பகவானான இராமபிரான் ஓர் கூர்மரூபத்தை வகித்து தன் முதுகின்மேலந்த பக்தரை ஏற்றுக்கொண்டு முழுகவொட்டாமற் றடுத்தனர். இதைக்கண்டு அவ்வர்த்தக ரரசனைநோக்கிச் சொல்லுவார், ஓ மஹாராஜரே ! சந்திரனுக்கும் சூரியனுக்கும் தேஜஸைக் கொடுத்த சர்வேஸ்வரனான ஸ்ரீஹரி என்னை இரக்ஷிக்கும்பொருட்டு உடனே வந்தார், பாரும் ! கல்லைப் பெண்ணாக்கிய காகுத்தர் பிரீதியுடனிவ்விடம் பெரிய கூர்மமாகி இரக்ஷிக்கவந்தார். ஓ அரசனே ! ஸ்ரீஹரி கருணைக்கு ஈடென்னவிருக்கிறது, கிருபாமூர்த்தியின் பெருமையைக் காணவாருமென்று சொல்ல, உடனே அரச னவரைக் கண்டு ஓர் படவின்மீதேறி அவரிருக்குமிடத்திற் சென்றுபார்க்க வியப்புற்று உடனே பக்தருடைய கட்டுகளை யவிழ்த்து அவரை அப்படவின்மேலேற்றி கரைக்குக் கொண்டுவந்து அவருக்குத் தெண்டன் சமற்பித்து அபராதத்தை க்ஷமிக்கவேண்டுமென்று அதிவிநயத்துடன் வேண்டிக்கொண்டு அவ்வர்த்தகருடைய துர்மார்க்கரான பிள்ளைகளை யழைத்து தகுதியான சிக்ஷைகளைச்செய்து தகப்பனார் கால்களில் விழும்படிபண்ணி அனைவரையும் விடைகொடுத்தனுப்பினான். இராமமூர்த்திக்கிருபையா லப்பிள்ளைகளும் பக்திலக்ஷணத்தி லீடுபட்டவர்களாகித் தகப்பனாரே தெய்வமென்று தீர்மானமாக வெண்ணி ஸ்ரீராமமூர்த்தி கருணைக்குப் பாத்திரராகி சீர்பெற்றிருந்தார்கள்.

---

## சூர்மனமோஹனர் சரித்திரம்.

அகுபரு பாதுஷாவெனு மோர்துலுக்க வரசன் ஹஸ்தினாபுரத்தி லரசாக்ஷி செய்யுங்காலத்தில் சூர்மனமோஹனனென்னு மொருவ னவனிடத்திற் சேவகாவிருத்தியி லிருந்தார். அச்சேவகருடைய நற்குணங்களைக்கண்டு அரசன் மதுராபுரத்திற் கதிகாரியாகச் செய்தனுப்பினான். அவரு மவ்விடஞ்சென்று பிரபுத்துவத்தை வகித்துப் பணத்தை வசூல்செய்து அரசனுக் கனுப்புவார்: கோகுலமும், மதுரையும், பிருந்தாவனமும், கோவர்த்தனமுமாகிய

இவ்விடங்கள் பெருமாளான ஸ்ரீகிருஷ்ணர் பிறந்து வளர்ந்த பிரபலஸ்தலங்கள், அவ்விடங்களிற் சாதுக்களுடைய கூட்டங்கள் சதாவாசமாயிருக்கும். அக்காரணத்தாலவை புண்ணியபூமிகளாகி புகழ்பெற் றிருப்பனவாம். தனயருக்கு வஸ்திர பூஷணங்களை யளித்தால் தாயார் சந்தோஷ மடைவதுபோல சேஷபூதரான வைஷ்ணவர்களுக்கு சேவைசெய்தால் ஸ்ரீஹரி சந்தோஷிப்பாரென்று சூர்மனமோஹனர் தெரிந்துக்கொண்டவராகி சாதுக்களைச் சேவித்தும் அவர்களுக் கறுசுவை யன்னமளித்தும் வஸ்திரங்களளித்தும் தன்னுடைய சம்பத்தனைத்தையுஞ் செலவு செய்து விட்டார்.

பொருளனைத்தையுஞ் சத்பாத்திரத்தில் நிஷ்காமியமாக வினியோகப் படுத்தியதால் பெருமாள் திருப்தி யடைந்திருந்தார். பின்னிட்டு ததீயருக்கு (பாகவதர்களுக்கு) அன்னமிடுவதற்கு தனமில்லாதிருந்தபடியால் அதிக அனுதாபத்தை யடைந்து இராஜத்திரவியந் தன்னிட மிருக்கக்கண்டு சாதுக்களுக்கதனை வினியோகப்படுத்தினால் சார்வபௌமனுன அக்பர் ராஜன் கோபமடைந்து என்னைக்கொன்றால் நான் கிருதார்த்தனுவேனென்று தான்மனதிலெண்ணி பயப்படாம லிராஜத் திரவியத்தைப் பாகவதாராதனையில் வினியோகப் படுத்த வாரம்பித்து பக்வான்னங்களை வெகுவாகச் செய்து பாகவதர்களுக் களித்தும் அவர்களிருப்பதற்கு உன்னதமான சாலைகளை ஏற்படுத்தியும் வஸ்திரங்களை விசேஷமாகக் கொடுத்தும், சொம்பு தவலைப் பாத்திரங்களைச் செய்துக்கொடுத்தும், படுக்கைக்குப் பாய் முதலானவைகளை வாங்கிக்கொடுத்தும் இன்னு மனேகமான கைங்கரியங்களை பாகவத விஷயமாகச்செய்துவர, இராஜனுடைய திரவியம் எண்பத்திரண்டு லக்ஷம் செலவாயிற்று. சூர்மனமோஹனரிடத்திலிருக்கு மொருவன் ஹஸ்தினுபுரத்திற்குச் சென்று அக்பர் ராஜனைநோக்கி விஸ்தாரமான வீண்செலவுகளை சூர்மனமோஹனர் செய்து சர்க்காருடைய விசேஷதனத்தைச் செலவழித்தாரென்று சொல்ல, அவ்வரசன் கேட்டுத் தூதர்களையனுப்பிவசூல்செய்தசர்க்கார்தனத்தையெல்லாங்கொண்டுவரச்சொல்லிக்கடிதமெழுதியனுப்பினுன். அச்சேவகர் சூர்மனமோஹனரிடஞ்சேர்ந்து இராஜாக்கினையை யறிவித்துக் கடிதத்தையுங் கொடுத்து வரச்சொல்லி வற்புறுத்தினர்கள். அந்தப் பக்தரவர்களைக்கண்டு சொல்லுவார். அகுபர்

ராஜனுக்கு அபரிமிதவிலையுள்ள ஆபரணங்க ளனேகமாகவாங்கி, னேன். பாதுஷாவுக் கதனையனுப்பினால் பிரபலமாகச் சந்தோஷிப்பர். அது இரெட்டிப்பான விலையுள்ளதா யிருக்குமென்று அந்த தூதர்களுக் கிஷ்டமாகச்சொல்லி வீட்டிற்குட்சென்று ஏகாந்தமாக மனைவியொடு இரண்டு பெட்டிகளிற் கற்களை நிறைப்பி அரசனுக் கோர்கடித மெழுதினர். அதிலரசனுக்கு வந்தனங்களுடன் செய்த விண்ணப்பமாவது வசூலான பணமெல்லாம் வாசுதேவருடைய பக்தஜன கைங்கரியத்தில் வினியோகப்படுத்தினேன். சகலதிரவியமும் பெருமாளர்ப்பணமாகச் செலவாயிற்று. நான் பலாயனமாகப் போகிறேனென்று பத்திரிகையெழுதி ஓர் பெட்டியில் வைத்து பூட்டைப்போட்டு சேவகரைச் சத்கரித்து அன்னமிட்டு சால்வைகளைக் கொடுத்துச் சந்தோஷப்படுத்தி அவர்கள்முன் அந்தப் பெட்டிகளைவைத்து சூர்மனமோஹன் ரன்றிரவே காட்டிற்குச் சென்று மிகுந்த பக்தியுடன் மாதவனைப் பஜித்திருந்தார்.

மறுநாள் விடியற்காலத்தி லத்தூதர்கள் சூர்மனமோஹனரைக்காணுமல் இரவில் யாத்திராபரராய்ச் சென்றிருப்பாரென்றெண்ணிப் பாரமுடைய வப்பெட்டிகளை கைக்கொண்டு வழிநடந்து அகுபரரசன் முன்வைத்து பயத்துடன் தெண்டனிட்டு கைகூப்பிச்சொல்லுவார்கள். ஸ்வாமி! சூர்மனமோஹனர் நல்ல குணமுடையவர் நாணயத்தைக் காப்பாற்றிக்கொள்ளத்தக்கவர். விலையுயர்ந்த வஸ்துக்களை யுங்களுக்காக இவ்விரண்டு பெட்டிகளி லனுப்பியிருக்கிறார். அவர் பக்தியுட னும்மைச்சேவிக்க யிச்சித்திருந்தார். நாங்களேசென்றோமாதலால் எங்களிடத்திலே அந்தத்திரவியத்தையனுப்பி அவர் யாத்திரைக்குச் சென்றாரென்றார்கள். அரச னிதைக்கேட்டு ஆச்சரியப்பட்டு மந்திரியை அழைத்து அவன்முன் னந்தப்பெட்டிகளைத் திறக்க அவைகளில் நிறைய கற்களும் ஒருபத்திரமு மிருந்தன அப்பத்திரத்தை மந்திரி படித்துக்காட்டினான். அகுபர் பாதுஷா அதைக்கேட்டு சூர்மனமோஹனன் சாதுக்களுடைய சேவையில் செலவழித்தான். அதனா லெனக்கவன் மேன்மையான சுகிருதத்தை நேரிடச்செய்தான் அவர்மேல் கோள்சொன்னவன் பொய்யை யுரைத்தானென்று கோபித்து அவனை சிக்ஷித்து சூர்மனமோஹன் தான் செய்தகாரியத்திற்குப் பயமுற்றுக் காட்

டிற்குச் சென்றுதலின் அவரை வரவழைக்க வேண்டுமென்று கட்டளையிட்ட மாத்திரத்தில் எல்லவருக்கு மது க்ஷேமகரமாகவிருந்தது. மந்திரியு மரசனிஷ்டப்படிப் பத்திரங்களையெழுதிப் பிரதானமான விஷ்ணு ஸ்தலங்களுக் கனுப்பினான். சிலநாட்களி லிச் சமாச்சாரஞ் சூர்மனமோஹனருக்கெட்டவே விந்தையடைந்து மதுரையைச்சேர்ந்து நாராயணனுடைய கிருபையென் றெண்ணி ஹஸ்தினபுரிக்குச்சென்று அரசன் சன்னிதியில் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு நிற்க, அரசனவரை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு உன்னுடைய சாங்கத்தியத்தா லெனக்கு சுகிருதமுண்டாயிற்று. திரவியத்தை நல்லவினியோகமாக்கி எனக்கு நன்மைசெய்தாய், உன்போற் புண்ணியவான்க ளிவ்வுலகி லகப்படார். முன்போலவே நீ மதுரையிலிருந்து தனத்தை பகவத்தாசர்களுக்குத் தானஞ்செய்துக்கொண்டு பெருமாள் பக்தர்களைச் சேவித்துக்கொண்டு பிரபுவாக யிருவென் றுக்கினை செய்தார். அரசனுடைய சினேகபாவத்தைக்கண்டு சூரமனமோஹன ரத்தியானந்தத்தை யுடையவராயிருந்தார். அரசனும் சன்னதை (உத்தரவு) யொன்றெழுதிக் கொடுத்து அவரை கௌரவப் படுத்தினான். பின்பு மதுராபுரத்திற்குச் சூர்மனமோஹனர் வந்து சேர்ந்து நிர்ப்பயராய் பக்தஜனங்களுக்குப் போஜன மளித்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியினிடமதிக பிரீதியுடையவராகி அவருடைய ரூபத்தை இருதயத்திலிருத்தி இரவும் பகலும் நாமஸ்மரணையில் நிலைமை பொருந்தி விவகாரங்களை நிர்வகித்து வந்தார்.

அவர் பெருமாள்மீது கவித்வங்களை வெகுவாகப் பாடிக் கொண்டு ஆனந்தித்திருப்பர். துர்ஜனர்கள் சிலரக் கவித்வத்திற்குக் குறைவுசொல்லி நிந்திப்பார்கள். அவர்களெப்படி சொல்லினும் மனதிற் குறையெண்ணுமல் பகவானைக் கவிகளாற் றோத்திரஞ் செய்துக்கொண்டிருப்பர். சாதுபுருஷ ரொருவர் சூர்மன மோஹனரைச்சோதிக்கவேண்டுமென்று மாதவப்பெருமாள் சன்னிதிக்குமுன் தான் நின்றிருக்க அந்த பக்தரான சூர்மனமோஹனர் பெருமாளைத் தரிசிக்கச் சன்னிதிக்கு வந்தார். அவ்வேளையிலந்த சாதுபுருஷர் தன் பாதுகைகளை அவர்கையிற் கொடுத்து நான் மாதவரைத் தரிசித்துத் திரும்பிவரும் வரைக்கு மிப்பாதுகைகளைப் பார்த்துக்கொண்டிருக்கக் கடவையென்றார், அவரும்

பல்லக்கிலிருந்து கீழிறங்கி சம்பிரமத்துட னந்த பாதுகைகளை கையிற்கொண்டு இவ்வண்ணமான சேவையெனக் கெப்பொழுது கிடைக்குமென் றெதிர்பார்த் திருந்தேனென்று கூறி பல்லக்கை வீட்டிற் கனுப்பிவிட்டு சன்னிதிமுன்பு அவர் நின்றிருந்தார். அந்த சாதுபுருஷர் சன்னிதிக்குட்சென்று பஜனை செய்துகொண்டு உதயமுத லிரவு காலமாகும்வரை வெகுநேரம் பூஜைசெய்து பின்பு வெளிவரும்பொழுது பாதுகைரக்ஷரான சூர்மனமோஹனரைக்கண்டார். அப்பொழுது அந்தசாதுபுருஷர் வந்தபோதே அன்புடனவர் பாதுகைகளை அவர்முன்வைத்தார். இதையந்த சாதுபுருஷர் நோக்கி அவர்தலைமேல் தன்கையைவைத்து "சுகிபவ" யென்றுசொல்லி யும்முடைய கவித்வத்தில் நீர் சாதுசேவை செய்பவரென்று கவிபாடினீர். அது அனைவருங்காண இன்று சத்தியமாயிற்று. உம்மை பரிக்ஷிக்கும் பொருட்டு நான் செய்தவேலையாகும். நீர் பக்தர். என்னை க்ஷமிக்கக்கடவீரென்று சொல்லிப்போய் விட்டார். இவ்வார்த்தைகளைக்கேட்டு அனுதாபத்தையுடையவராய் சமுசாரதரணமென்று தனது சம்பத்தனைத்தையும் சகலருக்கும் பங்கிட்டுவிட்டு உபாதியற்று வூர்ஜிதப் பிரேமையுடன் பெருமாளைத் தொழுதுவர, அபாரமாக ஸ்ரீஹரிகிருபையுமவருக்குண்டாகி இவ்வவனியி லதிக கீர்த்தியை வகித்திருந்தார்.

---

## ரசிகமுராரி சரித்திரம்.

சாயன நகரத்தில் முராரிதாசரென்றோர் பிராம்மண சிரேஷ்டரிருந்தார். அவர்பெருமாளுக்குப் பிரியமுடைய பக்தராகிப் பெருமைபொருந்தி ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியை பூஜித்தும் தரிசித்தும் ஹரி குணனுவாதம் பண்ணியும் சந்தோஷத்தை யடைந்துச் சொக்கியிருப்பார். ஹரிதாசர்கள்மீது அபாரமான பக்தியைச் செலுத்துவர். அவர்களைக்கண்டால் சினேகத்துட னுபசரித்து அவர்கள் திருவடிகளை ஜலத்தாற் கழுவி அத்தீர்த்தத்தைதான் தினமு மருந்தி, பின்பு அவர்களுக்குப் பணியாரங்களுடன் போஜனமளித்துச் சத்கரித்து அவர்களை விஷ்ணுரூபிக ளென்றெண்ணி விகிதபூஜைகளைச் செய்து அச்செய்கைக ளனைத்தையுங் கிருஷ்ணார்ப்பண மென்று நியமந்தப்பாமல் நிறைவேற்றி வருவர். இவருடைய நல்லொழுக்கத்தைக்கண்டு அனேக ரவருக்குள் ளடக்

கமுடையவர்களா யிருந்தனர். சிஷ்யவர்க்கங்கள் கிருஷ்ணபூஜைக்கு வேண்டிய சாமக்கிரிகைகளைக் குறைவின்றிக் கொடுத்துக் கொண்டு வருவார்கள். முராரிதாசரும் ஹரிகிருஷ்ணவெனும் நாமஸ்மரணையை மறவாம லெப்பொழுதுஞ் செய்துவருவார்.

கால மிவ்வண்ணமாகக் கழிய ஒருநாள் சில பாகவதர்கள் முராரிதாசரிடம் வந்தார்கள். அவர்களைச் சன்மானித்து உட்காரவாசனங்களளித்துத் தன் சிஷர்களை நோக்கி நீங்கள் பாகவதர்களுடைய பாதங்களைக் கழுவி தீர்த்தத்தைக் கொண்டுவாருங்கள் என்று அன்றையதினங் கட்டளை யிட்டார். அவர்க ளப்படியே சாதுக்களுடைய சரணங்களை ஓர் பாத்திரத்தில் ஜலத்தாற் கழுவி வருங்கால் ஒருவருடைய பாதம் வெடிப்புற்றிருக்க அதனைக் கழுவச்சகிக்காமல் மற்றவைகளைக்கழுவி பாத்திரத்தில் ஜலத்தையெடுத்துவந்து ஆசாரியரிடம் வைத்தனர். அந்தத் தீர்த்தத்தை அவர் உட்கொள்ள அது உருசியாயிராமல் சப்பிட்டிருக்க சிஷர்களை யழைத்து சரணதீர்த்தம் ருசியற்றிருப்பதற்கு காரணமென்ன? கழுவினவர்கள் கபடபுத்தியுட னிருந்தாற்போற் காண்கிறது, உண்மையை யுரையுங்களென்று வினவியமாத்திரத்தில் அவர்கள் பயமுற்று ஓர்சாதுவின் வெடிப்புள்ள பாதத்தைவிட்டு மற்றதைக் கழுவினோமென்ன முராரிதாச ரிதைக்கேட்டவுடன் அந்த சாதுவினிடம்வந்து அவர் சரணங்களைப் பிரீதியுடன் கழுவி அவைகளைத் தன்னிருதயத்தி லிருத்திக்கொண்டுப் பிரீதியுட னந்த தீர்த்தத்தை யருந்தி இப்பொழுது அது மதுரச்சுவை யளித்ததென்றுச் சொல்லி மகிழ்ந்திருந்தனர். அவ்விடத்திலுள்ள பாகவதர்க ளனைவரு மாச்சரியப்பட்டு முராரிதாசருடைய முக்கியபாவ மெவருமறியார், புராரியான சாம்பமூர்த்தியே இராமநாம மகிமையைப் பூர்த்தியாக யறிவதுபோல முராரிதாச ரொருவரோ சாதுக்களுடைய பாததீர்த்த மகிமையை அறிபவராவார். பாததீர்த்த ருசியைக் காண்பவராதலாலும் பக்தர்களுடைய ரசிகரானதாலும் ரசிகமுராரி என்று அவருக்குப் பேரிட்டு வுலகெங்கும் பிரசித்தப்படுத்திச் சென்றார்கள்.

முராரிதாசருக்கு ஆசாரியரான தயார்ணவரென்பவர் சற்றுதூரத்தி லோர் கிராமத்தில் வாசமாயிருந்தார். அவர் ஸ்ரீஹரிபக்தியை விசேஷமாக உடையவராய் சாந்தியும் பொறுமையும்

பிரமஞானமும் பூர்த்தியாகக்கொண்டு ஓர் சாளக்கிராமத்தைத் தன்னிடம் வைத்துப் பூஜித்துவருவர். அவ்வூரரச னவருடைய நிஷ்டைக்குச் சந்தோஷித்துப் பெருமாள் பூஜையையும், சாதுக்களுடைய பூஜைகளையும் செய்யும் பொருட்டு நான்கு கிராமங்களைக் கொடுத்து விசேஷமாக வவரை மன்னித்துப் பிரீதிசெய்ய, தயார்ணவஸ்வாமி தசரதராமருடைய தயவு தனக்குண்டாயிற்றென்று நினைத்து நியமத்துடன் பூஜைகளை நிதமுஞ்செய்துவருவார். இப்படி வெகுகாலம் நடந்துவர ஒரு துஷ்டன் திரவியத்தைக் கொடுத்துத் தேசத்தை இஜாரா (குத்தகை) எடுத்தான். அவன் தயார்ணவருடைய கிராமங்களை ஜப்திசெய்தான். அவ்வூரா ரெவ்வளவு சொல்லியுந் தயையுடையவனாகவில்லை. இதைக்கண்டு தயார்ணவர் முராரிதாசரைத் தன்னிடஞ் சீக்கிரத்தில் வரும்படி ஒரு நிருபமெழுதி யோர் மனிதனிடங் கொடுத்து விரைந்துசென்று அவரிடங் கொடுக்கச்சொன்னார். அம்மனித னதி சீக்கிரமாகவந்து முராரிதாசர் சாப்பிடும் சமயத்திற் சீட்டைக் கொடுத்தான். அதனைத்திறந்துப் பார்த்தவுடன் மடித்துணியோ டெழுந்திருந்து கையலம்பாமல் ஆசாரியரிருக்குங் கிராமத்திற்குச் சென்று உடனே குருவினுடைய வீட்டிற் பிரவேசித்து அவரைக்கண்டுத் தெண்டன் சமர்ப்பித்துநிற்க, கை எச்சிலாக யிருப்பதைக்கண்டு ஆசாரியர் காரணத்தை விசாரிக்க, ஸ்வாமி ! சாப்பிடுஞ் சமயத்தில் தேவரீராக்கினைப்பத்திரம் வந்தது அப்பொழுதிருந்த விதமாகவே வந்தேன், அடியேன் செய்யவேண்டும் வேலையைச் சொல்லியருளவேண்டுமென்றார். ஆசாரிய ரிதைக்கண்டு அதிகப் பிரியத்தைக் காட்டி சிஷரைக் கொண்டாடி கையலம்பச்செய்து கருணித்துச் சொல்லத் தொடங்கினார். துஷ்டனொருவன்வந்து தேசகுத்தகையைக் கொண்டு கிராமங்களைத் தன்வசம் பண்ணிக்கொண்டதால் ஹரியாராதனைக்கு ஆடங்கமாயிற்று. நியாயங்களை யெத்தனைச் சொல்லினு மவன் கேட்கவில்லை. நீ ஸ்ரீகிருஷ்ண நாமத்தைச் சொல்லிக்கொண்டு அவனிடஞ் சென்று அந்தக் கிராமங்களைப் பெருமாள் பூஜைக்காகத் திரும்பி அவனிடமிருந்து கிரகித்துக் கொண்டு சரிப்படுத்துமென்று சொன்னார்.

அப்பொழுது ஆசாரியருடைய வாக்கினையைச் சிரசாக்கொண்டு முராரிதாச ரந்த ஜிலேதாரனிருந்த வூருக்குச்சென்று ஓர்

விடுதிவீட்டி லிறங்கி அவ்விடத்திற் சில சஜ்ஜனர்களைக் கூட்டங் கூட்டி ஐயா! பெருமாள் கைங்கரியத்திற்காகக் கொடுத்த கிராமங்களை ஜில்லேதாரன் கைக்கொண்டான், அவனிடம் போவோமென்று கூறவே அவர்கள் நாங்களே போய்ச் சொல்லுவோம், ஆனால் அவன் விஷ்ணுதுரோகியா யிருப்பதால் அவ் விஷயமான வார்த்தைகளைக் கேளான், அதிக கஷ்டமாகுமென்று வருத்தமுற் றுரைத்தன ராதலின் முராரிதாச ரய்யமுற்றிருந்தார். சிலர் ஜில்லேதாரரிடஞ் சென்று ஐயா! தயார்ணவ ஸ்வாமி சிஷர் முராரிதாசரென்பவ ரதிசமர்த்தர். ஆசாரியருடைய கிராமங்களனைத்தையுமவர் கைக்கொள்ளுவார். ஜனங்களை மோஹிக்கச் செய்யுந் தன்மையை யுடையவர். அவரிவ்விடம் வந்திருக்கிறார். ஹரிநாமத்தை விசேஷமாகச் சொல்லுவாரென்றுரைக்க, ஜில்லேதார் கேட்டு யானையோட்டும் மாவிட்டிக்காரனை யழைத்து அவனிடஞ் சொல்லுவான். "சேவகஜனங்களுடனும் மதயானையோடுஞ்சென்று முராரிதாசரை யானையால் மிதித்துவிடும்படிச்செய்யக் கடவாய். அப்படி நீ செய்வாயாயின் தனத்தை வெகுவாகக் கொடுப்பேன்" என்றான் அதைக்கேட்டு மாவுத்தன் மத்தகஜத்தை மார்க்கத்தில் நடப்பித்துக்கொண்டு போகுமளவில் முராரிதாசருந் தன்னுடைய சிஷர்களை யழைத்துக்கொண்டு பெருமானைப் பஜித்து எதிரில் ஜில்லேதார் வீட்டுக்கு நடந்துக்கொண்டிருந்தார். ஹரிகீர்த்தனையைக்கேட்கப் புரஜனங்களனைவரும் கூட்டமாகக் கூடியிருந்தார்கள். முராரிதாச ரவ்வேளையில் ஓ முகுந்தா! கேசவா! மாதவா! கிருஷ்ணா! மோஹன ரங்காவென்று ஆனந்தமாக ஹரிகுணானு வாதத்துடன் சென்றனர். மத்தகஜமும் முராரிதாசருக் கெதிராக வந்துக்கொண்டிருந்தது. அவ்வேளையில் முராரிதாசருகி லொருவன்வந்து ஜில்லேதார னும்மைக் கொல்வதற்கு யானையை அனுப்பினான் பாருமென்று இரகசியமாகச் சொன்னான். அதனைக்கேட்டும் முராரிதாச ரதற்கெதிரே சென்றனர். சிஷரனைவரு மாசாரியரை நோக்கி ஸ்வாமி! யானை நம்மைக் கொல்வதற்கு வருகின்றது, நாங்க ளோடிப்போவோமென்று சொல்ல ஆசாரிய ரவர்களைநோக்கி குருபதேசத்தைக் கைக்கொண்டும் நீங்கள் தேஹங்கள்மீது ஆசையை வைத்துக்கொண்டு ஓடிப்போகயத்தனிக்கிறீர்கள் கழுத்திற்கட்டியிருக்குங் குருசூத்திரங்களைக் கழற்றி

விட்டுப் போகலாமென்று கூறினர். அவர்களு ம்ப்படியே செய்ய, முராரி யவர்களைக்கண்டு உங்களுடைய சம்பந்த மெனக்கு விட்டுப் போயிற்று. நீங்கள் போகலாமென்று சொல்ல, அவர்களும் பின் னுக்குச் சென்றோடினார்கள். அப்பொழுது முராரிதாச ரொரு வரே யானைக்கு எதிரே நடந்து சர்வத்திலும் ஸ்ரீயப்பதியான சர் வேஸ்வரரே யிருப்பர். அவரே யாவற்றையும் நிர்வகிப்பரென்று சித்தத்தை அவரிடஞ் சேர்த்துச் சென்றார். மதயானை நேராக முராரிதாசரிடம் வந்து தெண்டன் சமர்ப்பித்தது, அப்பொழுது அவரந்த யானைக்கழுத்திற் றனது சிஷர்களுடைய துளசிமாலை களைப் போட்டு அதற்குத் தாரக மந்திரத்தை யுபதேசித்தார். அவ்வானைக்கிருந்த குரூரகுணங்க ளனைத்தும்போய் மதமுமடங்கி அன்னுட்டொடங்கி சத்வகுணத்தை யுடையதாய்ச் சாதுமார்க் கத்தில் நின்றது. அவ்விடத்திய ஜனங்களனைவரும் ஆச்சரியமடை ந்தனர். சேவகர்கள் ஜில்லேதாரனிடஞ் சென்று மதகஜத்தை முராரிதாசரிடங் கொண்டுபோனவளவி லது அவர் திருவடிகளுக் கு நமஸ்கரித்து நின்றதென்றார்கள். இதைக்கேட்டு ஜில்லேதாரன் திடுக்கிட்டு பயமுடையவனாகி முரார்ரிதாசரிடம் உடனேவந்து தெ ண்டன் சமர்ப்பித்து அறியாமற் பிழைசெய்தேன். பதிதனுவேன். க்ஷமிக்கக்கடவீர். நீர் ஸ்ரீஹரிபக்தர் உமக்கு வேண்டுவதைக் கொ ள்ளுமென்ன முராரிதாச ரவனைநோக்கி பகவத்கைங்கரிய நிமித்தம் தயார்ணவர் வசமிருக்குங் கிராமங்கள் எப்பொழுதும்போ லவருக் காக ஏற்படுத்த வேண்டுமென்று கேட்க. அப்படியேயென்று ஆசா ரியன் பேர்மேல் உடனே சன்னது (பட்டா) எழுதி முராரிதாச ரிடங் கொடுத்து சன்மானித் தனுப்பினான். அவரும் தயார்ணவ ரிடம்வந்து தெண்டன் சமர்ப்பித்து அப்பத்திரத்தைக் கொடுக்க ஆசாரியர் பரமானந்தமடைந்தார்.

அந்தயானை முராரிதாசரை விடாமற் பின்தொடர்ந்து எப்ப வும் கிருஷ்ண கீர்த்தனையைக் குறிப்புடன் கேட்டுக்கொண்டும் விடி யற்காலத்தி லரண்ணியத்திற்குச் சென்று விறகு முதலானவை களைக் கொண்டுவந்து கொடுத்துக்கொண்டும், பக்தஜனங்களிடம் ப்ரேமை செய்துக்கொண்டுமிருக்கும். பின்னும் வைராக்கியத்தை யுடையதாய்த் தன்சக்திக்கேற்கச் சாதுக்கள் விஷயத்தில் சேவை களைச்செய்யும். வெகுநா ளிவ்விதமாக நடந்துவர ஓர்கால் பக்த

ஜன சமூகத்தரனைவரு மொருங்கச்சேர்ந்து பஜனை செய்துக்கொண்டு யாத்திரையாகச் சென்றார்கள். இந்தயானையு மவர்களுடைய வஸ்துக்களனைத்தையுஞ் சுமந்துக்கொண்டு அவர்கள் கூடவே சென்றது, திருடர்கள் பாதையில்வந்தா லவர்களைத் துரத்தியோட்டும். எவரேனுந் துளசிமாலையும் ஊர்த்வ புண்டரமும் தரித்து இராமநாமத்தை ஜபித்துக்கொண்டிருந்தால் அவரைக் கருணையுடன் தரிசித்துச் சேவைசெய்யும் அக்குறிக ளில்லாதாரை நிஷேதிக்கும். இவ்விதமாக அந்தச்சாதுக்கள் யானையுடன் குருக்ஷேத்திரமணுகினார்கள்.

குருக்ஷேத்திரப் பிரதேசத்தில் அருணவதியெனு மோர் நகரில் அச்சாதுக்க ளிரங்கியிருந்தார்கள். அவ்விடத்தில் துர்ஜனனென துலுக்க னரசு புரிந்திருந்தான். சிலர் அவனிடஞ்சென்று ஹரிதாஸர்க ளோர் யானையுட னிவ்வூருக்கு வந்திருக்கிறார்கள் அது சாதுக்களை சத்கரிக்குமென்று சொல்ல அவ்வரச னந்தயானையைத் தான் கைக்கொள்ள விருப்பங்கொண்டு துலுக்கச் சிபாயிகளையனுப்பினான். அவர்கள்வந்து அந்த சாதுக்களைக்கண்டு யானையை அரசன் கைக்கொள்ள விரும்புகிறான், அதனைத் தரக்கடவீரென்ன, சாதுக்க ளச்சிபாயிகளை நோக்கி அந்தயானை அபக்தரை மன்னிக்காது, எங்களுடைய் சேவையி லீடுபட்டிருப்பதால் எப்படி எங்களைவிட்டுப் பிரியுமென்றார்கள். இதைக்கேட்டு அச்சேவகர்க ளரசனுக்குச் சங்கதியைத் தெரிவிக்க, அவன் மாவுத்தனையழைத்து நீ கபடவேஷங்கொண்டு அந்த கஜத்தை யெப்படியாயினுங் கைப்பற்றி வரவேண்டும் என்றுக் கட்டளையிட்டான். அப்பொழுதந்த மாவுத்தன் துளசிமாலையைப்பூண்டு ஊர்த்வ புண்டரத்தைத் தரித்து ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டு அந்த யானையினிடம்வர அது இவனிடத்தில் சிநேகத்தைக் காண்பித்தது. உடனே அவன் அதன்கண்டத்தின்மீ துட்கார்ந்து அரசனிடங்கொண்டுவந்தான். அது தன்மனதில் இது கபடவிருத்தியென்றறிந்தும் அம்மாவுத்தன் ஸ்ரீஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டிருந்தபடியால் அவனுக்குக் கெடுதலைச்செய்யக் கோராமல் பிரபலமான சாதுக்களுடைய சேவையை யிழந்தது. அது ஓர் கொம்பிற் கட்டப்பட்டாலும் கோபமில்லாமல் ஓர் வாரம்வரைக்கு மவ்விடமிருந்துக்கொண்டு ஏழாநாள் மாவுத்த னதனை கங்கைக்குக் கொண்டுவர

அது தான் சீர்தப்பியிருப்பது சரியல்லவென்று ஸ்ரீஹரிநாமத்தைச் சிந்தித்துக்கொண்டு அக்கங்கையில்முழ்கிப் பிராணனைவிட்டு வைகுண்டத்தையடைந்தது. அது மிருகமாயிருந்தும் சாது சாங்கத்தியத்தால் மேலானபதத்தை யடைந்தது. விவேகத்துடன் கூடின மனிதர்கள் சாதுசங்கஞ் செய்து சதாசாரத்தை யுடையவர்களானால் பெரும்பதத்தை யடையலாமென்று பெரியோர் கூறுவர்.

---

## மீராபாயி சரித்திரம்.

உதாபுர மென்னும் பட்டணத்தில் இராணனென்றோ ரரசன் இராஜ்ய பரிபாலனஞ் செய்துக்கொண்டு விஷ்ணு பக்தனுகிச் சாதுக்களுக்கு வஸ்திரான்னங்களைக் கொடுத்து ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைப் பூஜைசெய்துக்கொண்டு மகா கீர்த்திமானுக விருந்தான். அவன் நித்திய திருவாராதனையாக ஸ்ரீகோபாலமூர்த்தியை வைத்துப் பிரீதியுடன் தினமும் சோடசோபசார பூஜைகளைச்செய்து சரச பதார்த்தங்களு மன்னமும் அற்பணஞ்செய்து பின்பு தான் புசிப்பான். இந்தநிஷ்டையுடன் வெகுநாள் பெருமாளைத் தொழுதுக்கொண்டுவர, அவனுக்கு ஓர் கன்னிகாரத்தினம் பிறந்தாள். பன்னிரண்டு நாள் கழிந்தபிறகு தாய்தந்தைக ளிருவரு மச்சிசுவைப் பெருமாள் சன்னிதியில்வைத்து மீராபாயி என்று நாமகரணஞ் செய்தார்கள். அப்பெண் வளர்ந்து நாளுக்குநாள் பெரியவளாகி வெகு சுந்தரரூபத்தை யுடையவளானுள். அரச னனுதினமும் திருவாராதனை தான் செய்யும்போது குமாரத்தியையும் கூடவைத்துக்கொண்டிருப்பன். அந்த ஸ்ரீகிருஷ்ண விக்கிரகமு மதி சுந்தரமாகவிருந்தது. கிரீடமும், கௌஸ்துவமணியும், கடககங்கணங்களும், கேயூரமும், வனமாலையும், வைஜயந்தியும், பீதாம்பரமும் அவ்விக்கிரகத்திற்குத் தரிக்கச்செய்ததால் அதிக லாவண்ணியத்துடன் ஸ்ரீஹரி தரிசனந் தந்தருளுவர். அரசன் குமாரத்தியான மீராபாயி, அம்மூர்த்தி அழகி லாழங்கால்பட்டவளாகி அவள் மனது அவரழகால் கவரப்பட்டதினுல் பிரீதியடைந்ததாகி அந்த ஹரிவிக்கிரகத்தைத் தவிர வேறோர் பர்த்தாவை விரும்பேனென்று கண்ணேக்க மவரிடத்தே வைத்துச் சிந்தித்துக்கொண்டிருப்பள்.

ஒருநாளவ்வரசன் தன் மனையாளிடம் வந்து தமது குமாரத்திக்கு விவாக மமையும் வயது வந்ததே! அவளுக்கிணையான புருஷனைத் தேடவேண்டுமே என்றான். இதைக்கேட்டு மீராபாயி தகப்பனைநோக்கிச் சொல்லுவாள். நான் புருஷனை விசாரித்துக்கொண்டேன். அவர் யாரென்றால் எந்த தெய்வத்தை நீரனுதினமுமாராதிக்கின்றீரோ அவர்தா னெனக்குப் பர்த்தாவாவார். வேறோர் புருஷனை இவ்வுலகில் நான் இச்சியேன், ஆனதா லென்மீது கருணைவைத்துக் கமலேசரான கண்ணபிரானுக்கு என்னை அர்ப்பணை செய்யுமென்று புகல, அரசன் இதைக்கேட்டு குமாரத்தியை நோக்கி இந்த கலியுகத்தில் பெருமாள் பௌத்தரூபத்தை வகித்திருக்கிறார், அது ஜீவரகிதமான சிலாமூர்த்தியாயிற்றே! நீ சங்கதியறியாமல் அதனிடம் பிரியம் வைப்பது சுககரமாகா தென்றான். மீராபாயி அதைக்கேட்டு ஓ பிதாவே! கிருஷ்ணனைக் காட்டிலும் வேறோர் தெய்வ முலகிலில்லை, இந்த புண்டரீகாக்ஷனையே யென் மனது நாடியிருக்கின்றது. பிரம்மாவுக்குத் தகப்பனாகி பிரகிருதிக்குப் பரனாகி பரமசிவ மூர்த்தியா லெப்பவும் ஜபிக்கப்பட்டவனாகி பராத்பரனாகியிருப்பன். இவ் வண்ணமானவன் பாஷாணமென்று சொல்வது பிசகாகும், பிரஹலாதன், பகவானுக்குச் சேஷத்வத்தை யடைந்திருந்ததால் பெருமாள், கம்பத்தினின்று வெளியாகி பக்தனைக் காப்பாற்றினார். இந்த கலியுகத்தில் பக்தஜனங்களுக்காகப் பெருமாள் துவாரகையி லிருந்து டாகூருக்குச் சென்றார். நாமதேவருடைய அபார பக்தியைப்பார்த்துப் பண்டரிபுரியில் பெருமா ளவருடன் பக்ஷித்தார். பக்தஜனங்களுடைய சுத்த பாவமே பகவத் ரூபமாகும். ஆசக்தியுட னவனைப் பாடிக்கொண்டிருந்தால் ஹரிசர்வேசுவரன் பிரசன்னமாவான். கலியுகத்திற் கிருஷ்ணபக்தியை கைக்கொள்ளாத ஜனங்களுக்கு ஸ்ரீஹரி தெரியவொண்ணாமல் மௌனத்தை வகித்திருப்பார். அனன்னிய பக்தியோடும் கூடினவர்களிடத்தில் ஹரிகோவிந்தன் வார்த்தையாடிக்கொண்டிருப்பர். ஆனதைப்பற்றி என் விண்ணப்பத்திற் கிணங்கி என்னை அந்த கஞ்சாக்ஷனுக் கற்பணைசெய்யக் கடவீரென்றாள். இதைக்கேட்டு தகப்பனாச்சரியப்பட்டு மாறுத்தரமொன்றுஞ் சொல்லாமல் இவளுக் கிவ்விதமான ஞான மெப்படி வந்ததென்று மனதிலெண்ணி அந்தக் கோபால மூர்த்தியை அவளுக்குக் கொடுத்து

உன் னிருப்பிடமான அந்தப்புரத்திற்குக் கொண்டுபோய் விஹித பூஜைகளைச்செய்து வருவாயென்றான்.

மீராபாயி வெகு சந்தோஷத்துட னம்மூர்த்தியைக் கைக் கொண்டு தன்னிருப்பிடஞ் சென்று அதனை யோர் சிறு வீட்டி லமைத்துத் தான் ஸ்நானஞ்செய்து நியதமான ஹரிநாமஸ்மரணை யைச்செய்து வீணையைக் கைக்கொண்டு ஹரிபிரீதியாகப் பாடிப் பெருமாள் மூர்த்திக்குப் பூஜைகளைச்செய்ய வாரம்பித்து சுகந்த தைலமிட்டு சுஜலத்தாலும் பஞ்சாமிருதத்தாலும் சுத்தோதகத் தாலும் ஸ்நானஞ் செய்வித்து வஸ்திரத்தால் துடைத்துப் பட்டு வஸ்திரத்தைக்கட்டி கிரீட குண்டல கடக கங்கண கேயூரங்களுடன் சரணங்களிற் சிலங்கைகளும் கைமோதிரமும் கௌஸ்துவ மாலையும் அரைஞாண் கயிறு முதலானவைகளை அணியச்செய்து நெற்றி யிற் கஸ்தூரி திலகமிட்டு இளந்துளசி மாலையைக்கட்டி கழுத்திற் போட்டு அலங்கரிக்க, சியாமள வர்ணத்துடன் கிருஷ்ண மூர்த்தி சுந்தரமாகச் சேவை சாதிப்பார். பின்பு தசாங்கதூபத்தை யற்பித்து பக்வான்னங்களை விசேஷமாகச் செய்வித்து பெருமாள் முன்வை த்து மங்கள ஹாரதியைக்கொடுத்து ஸ்ரீஹரி! கோவிந்தா! வென் று சொல்லி நமஸ்கரிப்பாள். பின்பு பாகவதர்களை யழைத்து அன் புட னாராதித்து அவர்கள் போஜனஞ் செய்தபிறகு தான் புசிப் பாள் மூன்றாஞ் சாமத்தில் சாதுக்கள் கிருஷ்ணனுடைய கலி யாண குணங்களைப் புகழ்ந்து பாகவத புராணத்தைச் சொல்லக் கேட்பாள்.

சாதுக்கள் ஆசையை விட்டிருப்பதால் வைராக்கியத்தைக் காண்பித்து ஹரியை யறிவது ஆத்மலாபமென் றுரைத்து, தங்கள் தரிசனாதிகளால் பூமியைப் பவித்திரஞ்செய்து பண்டிதரும் பா மரர்களுமான சகலருக்கும் பிரிய முடையவர்களாகி விஷ்ணு கதை களைச் சாதுக்களிற் சிலர் சொல்லுவதும் சிலர் கேட்பதுமாக அவ் விடம்வந்திருப்பார்கள். மீராபாயி நாம ஸ்மரணையை இடை விடாது செய்து வருவாள். அனேகமான சுகுணங்களை மீராபாயி பூஷணமாக வுடையவளாகி, கவித்வங்களைப் பெருமாள்மீது பாடிக்கொண்டு வருவள். பாகவதர்களும் பகவத் சன்னிதிமுன் பாடிக்கொண்டிருப்பார்கள். இதற்குத் தகுதியான சாமக்கிரிகை யனைத்து மரசனளித்துவருவான்.

இவ்விதமாக மீராபாயி காலத்தைக் கழித்துக்கொண்டு வர துஷ்டரான சில மனிதரிதைக்கண்டு பொருமையுற்று அரசனுடைய பெயரை யவன் குமாரத்தியே கெடுக்கிருளென்றும் பைராகிகளுடனுடுவதும் பாடுவதுமா யிருக்கிறளென்றும் சுந்தரமான சரீரத்தை யுடைய பெண், களங்கத்தை யடையனுற்றுளென்றும், அரசன், தனது நிஜபுத்திரி துர்வழியிலிருக்க இதரஜனங்களைத் தண்டிக்கிருனென்றும், அவளைத் தண்டிக்கிறதில்லை யென்றும் பலவாருக ஜனங்கள் பேசினுர்கள். அவ்வார்த்தைகளை யரசன்கேட்டுக் கோபங்கொண்டு மனைவியைப்பார்த்து புரஜனங்கள் நமது புத்திரியைவெகுவாக நிந்திக்கிருர்கள். சரியானவயதில் புத்திரி விவாகஞ்செய்துக்கொள்ள வேண்டுமென்றும் இதை மீராபாயிக் கறிவித்து அவளிஷ்டத்தைத் தெரியப்படுத்தும்படியும் சொன்னுன். இராஜன் மனைவி ராஜாக்கினையை மீராபாயிக் கறிவித்து உன் கருத்தென்ன வென்று கேட்க, மீராபாயி தாயாரை நோக்கி, நான் கிருஷ்ணனைத் தவிர வேருேர் புருஷனைக் கோரமாட்டேன். இதரஜனங்களை உன்னைப்போலப் பாவிப்பேன். கிருஷ்ணகதைகளை கீர்த்தனஞ்செய்துக்கொண்டு நான் சுகமுற்றிருக்க விஷ்ணுபக்தரும் பிரம்மஞானிகளும் வேடிக்கையுடன் கேட்டுப் புகழ்ந்துக்கொண்டிருப்பார்கள். நிந்திக்கும் நீசஜனங்கள் நரகத்தை யடைவார்கள், சுக்கியானிகள் சந்தோஷிப்பார்கள். ஞானமெனும் சஸ்திரத்தைக் கைக்கொண்டு கனத்த பக்தியுடன் வெளிப்பட்டேன். மலினத்தைப்போக்கு மிராமநாமத்தை மதுரமென்று கைக்கொண்டேன். பயப்படவேண்டாமென்று சொல்லி நீ இச்சங்கதியைத் தகப்பனுக்குத் தெரிவிக்கும்படி வேண்டினுள். அவள் இவ்வசனங்களைக்கேட்டு புருஷனிடம் வந்து பிராணநாதரே! புத்திரிக்குப் பலவாருன புத்திகளை உரைத்துங் கேட்கவில்லை, அவள் தன்மனதையெல்லாம் மாதவன்மேல்வைத்திருப்பதாகக் கூறினுளென்று புத்திரிவசனங்களை யறிவித்தாள். இதைக்கேட்டு அரசன் நிந்தைக்குட்பட்டிருக்குங் குமாரத்தியை நீக்கி விடுவது யுக்தம், அவள் பிழைத்திருப்பது சரியல்லவென்று அவளைக்கொல்ல விஷத்தை யோர்கிண்ணத்திலிட்டு வெறுப்புடனுலக நிந்தைக்குச் சகியாமல் மனையாளிடந்தந்து மீராபாயிக்குக் கொடுக்கச் சொல்லி யனுப்பினுன். மனையாள் புருஷனுக்கினைக்கு மாறுசொல்லாமல் அதிக துக்கத்தை யடைந்து பூஜாக்கிரகத்

திற்சென்று புத்திரியைப்பார்த்து நீ சாகும்பொருட்டுக் கொடிய விஷத்தைத் தகப்பனனுப்பினன். மிருதுவான உன்னுடைய சுந்தர வுருவ மெனக்குக் கோரினுலுங் கிடைக்குமா? என்று கண்களிற் ஜலம் தாரை தாரையா பொழுகப் பெற்றவயிறு குழம்பி கலக்கமுறும் தாயைக்கண்டு மீராபாயி சொல்லுவாள், இந்த நர தேகம் நித்தியமானதல்ல, நிற்கத் தகுந்ததன்று, இது நிச்சயமென்றறிவாய், சர்வேஸ்வரனுன ஸ்ரீஹரி நிமித்தியம் நான் தேகத்தை விடுவது சிலாக்கியமாகும், கானற் ஜலம்போலிருக்கு மிக்காயத்தைக்குறித்துச் சிந்திப்பது மேன்மையன்று, மலடிமகன் கலியாண விக்கினத்திற்கு மிகுதியாக சோகிப்பானேன்? விருக்ஷத்திற் பழம்ப ழுத்தால் அப்பழம் பூமிமேல் விழுமாப்போல பந்தங்களனைத்தும் போகும்படி ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதங்களில் விழுந்தேன். சுவர்ணத்தி லிரத்தினத்தைச் சேர்த்தா லலங்காரமாவதுபோல் யதுகுல நாயகனுன அந்த சர்வேஸ்வர னென்னை பிரீதியுட னுட்கொண்டான். பந்தத்தைத்தரு மிந்தப் பிரபஞ்ச மாயைக்குப் பரிதாபப் படவேண்டாமென்று சுத்தமனதுடன் சொல்லிப் பெருமானை நோக்கி வந்தனஞ்செய்து ஓ வனமாலாதரனே! வாரிஜாக்ஷனே! எனக்காகத் தொந்தரை யடைந்து தகப்ப னென்னைக்கொல்ல விஷத்தை யனுப்பினன். உனது கிருபையினுல் நான் ஸ்ரீவைகுண்டத்தைச் சேருகிறேன். உன்னுடைய பூஜையையார் செய்யப் போகிருர்கள்? உலகில் துர்ஜனர்கள் என்னுடைய பிராணனுனக்காகப் போயிற்றென்று உன்னைச் சன்மானஞ் செய்யார்களே! தகப்பனு முனது பூஜையைவிட்டு விட்டாரே! ஓ ஸ்ரீயப்பதி! இந்த சிந்தைதான் யெனக்கேன்? நீ சித்ரூபன் அனேக பக்தர்களுடைய சங்கடங்களைத் தீர்த்து இரக்ஷித்தாய், பிரஹலாதன் முதலான வனேக பக்தர்களை பாலித்தருளினுய், ஆலகால விஷத்தைச் சாம்பமூர்த்தி சாப்பிட்டு அமலமான வுனது நாமத்தைச் சொல்ல சீதளத்தை யடைந்தார். அந்தநாமமே எனக்குங் கிடைத்தது, அதுவே பிராப்பியமென்று அவள் அதனை ஸ்திரப்படுத்திக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணமூர்த்திமுன் அந்த விஷக்கிண்ணத்தை வைத்துப் பெருமானுக்கு நிவேதித்து போக்தா ஸ்ரீஹரியென்றும் இது பவசமுத்திரத்தை தாண்டச்செய்யு மென்றும் புகன்று சாப்பிட்டாள்.

மீராபாயிக்கு அந்தவிஷம் அமிருத சமானமாயிருந்தது.

ஆனந்தத்துடன் விஸ்மிருதி யடையாமல் ஹரிசன்னிதியிற் பாடிக் கொண்டிருக்க, அனைவருங்கண்டு ஆச்சரியப்பட்டார்கள். ஹரிவிக்கிரகம் மாத்திரம் கருநிறத்தை யடையக் கண்டார்கள். அரசனும் தன் மனைவியை நம்பாம லிரகசியமாகப் பூஜாக்கிரக சமீபம் மறைவில் நின்று சகல விசித்திரத்தையும் சாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருந்து ஐயோ! நான் பெருமாளுக்கு விஷத்தைப் பானம்பண்ணி வைத்தேனே! என்று குமாரத்தியினிடம்வந்து அவள் கால்களில் விழுந்து நமஸ்கரிக்க, அவளும் தகப்பனை யெடுத்து அவருக்குத் தெண்டன் ஸமர்ப்பித்து, ஸ்ரீகிருஷ்ணனை யெனக்குக் கருணையுடன் கொடுத்த கிருபாமூர்த்தி நீராயிற்றே! யென்றுசொல்ல அரசன் குமாரத்தியை நோக்கி ஸ்ரீகிருஷ்ண விக்கிரகம் கருநிறத்தை யுடையதாய் நின்றபடியால் நான் கிலேசமடைகிறேன், அம்மூர்த்தியை முன்போல விருக்கச்செய்யவேண்டுமென்று வேண்ட, மீராபாயி ஸ்ரீகிருஷ்ண மூர்த்திமுன் அஞ்ஜலி அஸ்தையாய் நின்று, ஓ ஹரி! ஜகநாதா! சிதானந்தரூபா! இந்த சுவல்ப விஷத்தா லுன் ரூபமானது பேதித்ததே! முற்காலத்தில் காளிங்கன்மேல் நடனஞ் செய்தாய், உன்னுடைய நாமமே விஷங்க ளெல்லாவற்றையும் நிவர்த்திசெய்யுமே! இப்பொழுது என் விஷயமாக அது அமிருதமாய் விளங்கினது பிரசித்தமாயிற்றே! முற்காலத்தில் பார்வதி நாதர், விஷத்தைப் பக்ஷிக்க உனது பாவன நாமமன்றோ அதனை நிவர்த்தித்தது? இன்றையதினம் விஷகளங்கந் தோன்றுவது விசித்திரமாக விருக்கிறது, அதனா லென்மனது அதிக தொந்தரை யடைகின்றது. அல்லும் பகலு மிராம நாமத்தில் ரக்தியடைந்த பக்தர்களுக்கு காமமோஹங்களால்வரும் பாபங்கள் சொப்பனத்திலுங் காணப்படா, இந்தவிஷபான முனக்கென்ன செய்யும்? இவ்விடத்திலுள்ளப் பிரஜைக ளனைவருக்கும் கௌதுகமான கிரீடையாகச் செய்கிறாயென் றென்மனதி லெண்ணுகிறேன், ஓ கிருஷ்ணா! ஜகதீசா! உன் திருவுருவத்தை முன்போலவே யாவரும் பார்க்க நீ திருவுள்ளம் கொள்ளவேண்டுமென்று வேண்டினாள். பெருமா ளப்பிரார்த்தனையைக் கேட்டு பூர்வம்போ லாயினார்! ஆனால் கழுத்தில் மாத்திரம், கருநிறங் காணும்படி வைத்துக் கொண்டார். இப்போதைக்கு மவ்விடம் போகுஞ் ஜனங்கள் விக்கிரகத்திற்கு அக்கருநிறத்தைக்கண்டு வருவார்கள். அனந்தரம்

அரசன் தன் குமாரத்தியைக்கண்டு அத்யானந்தத்தை யுடையவனாகி என்னுடைய வமிசத்தை நீ உத்தரித்தாய், துஷ்டர்க ளவர்களே கெட்டுப் போகிறார்களென்று சந்தோஷத்துடன் அவ்விடமிருந்த பக்தஜனங்களைக் கூட்டிக்கொண்டு பெருமாளுடைய லீலைகளை வெகுவாகப் புகழ்ந்து கொண்டாடினான். மீராபாயியும் பக்திமார்க்கத்தை பிரபலப்படுத்திப் பிரீதியுடன் வீற்றிருந்தாள்.

---

## கானோபாத்திரை சரித்திரம்.

பண்டரிபுரத்திற்குத் தெற்குதிக்கில் மங்களவேடை யென்றொரு கிராமமிருந்தது. அவ்விடத்தில் வேசிகளுடைய குலத்திற் சியாமா யென்றொரு வேசி யிருந்தாள். அவள் கற்பத்தில் மகா சுந்தரமான ஓர் பெண் பிறந்தாள். அவளுக்கு கானோபாத்திரை யென்று பெயரிட்டு கனிகரத்துடன் வளர்த்துவர அவளும் நாளுக்குநாள் மிகுந்த ரூபவதியாகத் தோன்றி அதிக லாவண்ணியத்தை யுடையவளாக விருந்தாள். இஜ்ஜகத்தில் மனித சிருஷ்டியில் அவளிவ்வண்ணமான ரூபத்தை யுடையவளா யிருப்பதை தேவ ஸ்திரீகளேகண்டு வெட்கப் படுவார்கள். சங்கீத வித்தையிலும் நாட்டிய வித்தையிலும் சிறந்தவளா யிருந்தாள். தாயார் மகளைக் கண்டு நாம் அரசனிடஞ் சென்றா லவனலங்காரங்க ளனேகமாகக் கொடுப்பான். அவைகளை யணிந்தால் வெகு சோபையாயிருக்குமென்றாள். இதைக்கேட்டுக் குமாரத்தித் தாயாரைநோக்கி எனக்குச் சரியானபுருஷ னிவ்வுலகத்திற் றேடினு மகப்படான். சகல குணங்களிலும் நிறைந்திருப்பவர் சர்வேஸ்வரனே யென்றும் தன்னுடைய நிச்சய மிதுதானென்றுஞ் சொல்லிக்கொண்டு அவ்விடத்திலேயே யிருக்க, இதைக்கண்டு தாயார் பரிதாபப் பட்டுக்கொண்டிருந்தாள். இப்படியிருக்கச் சிலபக்தர்கள் கேசவா! கிருஷ்ணா! கோவிந்தா! வென்று சொல்லிக்கொண்டு வாத்திய கோஷங்கள் முழங்க ஹரிநாமத்தைப் பாடிக்கொண்டு பண்டரிபுரத்திற்குப் போய்க்கொண் டிருந்தார்கள். கானோபாத்திரை யவர்களைப்பார்த்து அவர்கள் கால்களில் விழுந்து நமஸ்கரித்து எவ்விடத்திற்குப் போகின்றீர்களென்று பக்தியுடன் கேட்க, அவர்கள் பண்டரி யாத்திரைப் போகின்றோ மென்றும், பகவான், புண்டரீகருக்காக அவ்

விட மெழுந்தருளினரென்றும் பிரம்மதேவன் முதலாகிய தேவர்களாற் பிரார்த்திக்கப் படுகிறவரென்றும், உன்னதமான விக்கிரக சௌந்தரியத்தை யுடையவரென்றும், சூரியனுடைய ரூபத்திற்குத் தேஜஸ்ஸைக் கொடுத்த திவ்ய தேஜஸ்ஸை யுடையவரென்றும், பெருமையுடைய அவரைப் பார்க்கும் பொருட்டுப் போகின்றோமென்று சொன்னார்கள். அதைக்கேட்டு அவள் அவர்களைநோக்கி ஐயா! அந்த ஹரிசர்வேஸ்வர னென்னை யாதரிப்பாரோ வென்று வினவ, அவர்கள் கானோபாத்திரையைக் கண்டு, முற்காலத்தில் குரூபியாயிருந்த குப்ஜதாசியை கிருபையுட னங்கீகரித்தார். மகா பாபியான அஜாமேளனை ஆதரித்தார். பறையனான் சோகாமேளனை அங்கீகரித்த தயாநிதியாவர், பாவிகளுடைய பாவங்களைப் போக்கடிக்கும் பதிதபாவனனெனும் நாமத்தை யுடையாரென்று சொல்ல, இதைக்கேட்டவுடன் கானோபாத்திரை தாயாரிடஞ்சென்று நமஸ்கரித்து அவ ளனுமதியுடன் வீணையைக் கையிற்கொண்டு பண்டரிபுரத்திற்குச்சென்று பாண்டுரங்கரைச்சேவித்து பக்தியுடன் சொல்லுவாள். தேவரீருடைய மேலான கீர்த்தியைக்கேட்டு இவ்விடம்வந்தேன். ஷட்குணைஸ்வரிய சம்பத்தியை நீருடையவராயிருக்கின்றீர். மனோவிருத்திகளைக் கண்டித்துச் சரணாகதி யடைந்தேனென்று சொல்லி சத்பாவத்தால் சர்வேஸ்வரனைப் புகழ்ந்து அவர் சன்னிதியிற் சங்கீதம் பாடிக்கொண்டு அவ்விடமே நிவாசமா யிருந்தாள்.

ஜலத்திலிருக்கும் மீன்கள் ஜனங்களை வாதிக்காமலிருக்கச் செம்படவர்க ளவைகளைப் பிடித்துக் கொல்லுவார்கள். அப்படியே கானோபாத்திரைக்கு விரோதிகள் பிதர் பட்டணத்திற்குச்சென்று அவ்விடத்திற் றுலுக்க வரசனான பாதுஷாவைக்கண்டு தேவதாஸ்திரீயைப்போல தேஜஸ்ஸை யடைந்து திவ்விய சரீரத்தையுடையவளாய்ப் பண்டரிபுரத்தில் நிவாசமாகி பாண்டுரங்கர் சன்னிதியில் பக்தியுடன் சங்கீதகானஞ் செய்துக்கொண்டு வேசியாயிருந்தும் வேறுமனிதரைக்கூடாமல் நியதவிருத்தியுடன் ஓர்மாது இருக்கிறாள், அவ்வண்ணமான ஸ்திரீயை யிவ்வுலகி லெங்குங் கண்டதில்லையென்று சொல்ல, விதைக்கேட்டு அரச னவளை தன்னிட மழைத்துவரும்படி தூதர்களை யனுப்பினான். அவர்கள் பண்டரிபுரஞ் சென்று அவளைப் பாண்டுரங்கர் சன்னிதியில் பாடிக்

கொண் டிருக்கக்கண்டு அவளுக்கு இராஜனுடைய ஆக்கினையைத் தெரிவித்தார்கள். அவள் பகவானுடைய பாதங்களைப் பிடித்து, ஸ்வாமி! எனக்கு தேவரீரைத் தவிர அன்னியனான இஷ்டன் வேறொருவனில்லையென்று உம்மைப்பிடித்தேன். நீரேகதியென்று சரணமடைந்தேன். என்னைக் கைவிடவேண்டாம். உம்மைச் சரணுகதியடைந்த வென்னை இவ்விடமிருந் தனுப்புவ துமக்குப் பெருமையல்ல, உம்முடைய விருதுக் கது குறையுண்டாக்கும். நீர் தயாநிதியாய்ச் சகலரையுங் காப்பாற்றினவர். கபோதபக்ஷி சரணமடைய அதனைக் காப்பாற்றினீர். அம்பரீஷ மகாராஜனையும், அஜாமேளனையும், கஜராஜன் முதலானோரையுங் காப்பாற்றினது பிரசித்தமாயிருக்கிறது. உமக்கே யாட்பட்ட நான் நீசலரை யெப்படி கோருவேன். இதரஜனங்கள் சிரிக்கவொண்ணுதபடி இவ்வேளையி லென்னைக் காப்பாற்றி யருளவேண்டும். துர்ஜனர்களுடைய சாங்கத்தியந் தொலையும்படிக் கருணைசெய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க, அவ்விடத்திலுள்ள பக்தஜனங்களனைவருங்கூடி பாண்டுரங்கருடைய நாமத்தைச்சொல்லி கர்ச்சித்தார்கள். அவ்வேளையிற் பெருமா ளவளுடைய ஆத்மாவை யாகர்ஷித்துக்கொள்ள சரீரங் கீழே விழுந்தது. இதை அர்ச்சகர்கள் கண்டு அவள் சரீரத்தைக் கொண்டுபோய்த் தெற்குதிக்கி லோரிடம்வைக்க அது "தரடி" விருக்ஷமாய் விளங்கிற்று. பண்டரிபுரியி லிப்போதைக்கு மது சாக்ஷியாகக் காணப்படுகின்றது.

அரசனுடைய சேவகர்கள் ஆலயத்திற்கு வெளியிலிருந்து அவ்விடத்திலுள்ள அந்தணர்களைப் பார்த்து கோயிலுக்குட்சென்ற காஞேபாத்திரை திரும்பி வெளியே வரவில்லை, எங்குசென்ருளோ தெரியப்படுத்துமென்ன அவர்கள் பெருமாளுக்குள் அவள் லீனமாய் விட்டாளென்று அச்சேவகர்களுக்குச் சொல்ல, அவர்கள் அவளுடம்பைக் காண்பியுமென்ன, அதற்கு அவள் மரமாய் விளங்கினுளென்று விடைகொடுக்க, அச்சேவக ரிது ஆகாதகாரியமென்று அவ்வந்தணர்களைக் கைப்பிடியாகப்பிடித்து அரசன்முன் கொண்டுவந்து நிறுத்தி மஹாராஜரே! இவர்கள் காஞேபாத்திரையை மறைத்துவைத்து மரித்துப் போனுளென்று சொல்லுகிருர்களென்று விண்ணப்பஞ் செய்ய அவ்வேளையி லரசனுக்கு அர்ச்சகர்கள் புஷ்பம் முதலான ஹரிப்பிரசாதத்தைக் கொடுக்க

வந்தப் புஷ்ப்பத்தி லோர் மயிரிருக்கக்கண்டு அரசன் கோபித்து புஷ்பத்தில் மயிரிருப்பதற் கென்ன காரணமென்ன, அவர்கள் ஐயா! பெருமாள் சிரசில் கேசங்க ளிருக்கின்றன வென்றுசொல்ல விதைக்கேட்டு விந்தை யடைந்து பாண்டுரங்க ருருவத்தில் கானொபாத்திரையெப்படிச்சேர்ந்தாளென்ன, பிராம்மணர்களரசனை நோக்கி, சமுத்திரத்தில் லவணம் சேர்ந்தாப்போல் பகவானில் கலந்துவிட்டா ளென்றனர். இதைக்கேட்டுப் பண்டரி பதியைப் பார்க்கவேண்டுமென்று பாதுஷா பிரயாணமானுன். அந்தப் பிராம்மணர்கள் இதனை கண்டு பெருமாளை யுத்தேசித்து பிரபத்திப் பண்ணத் தொடங்கினுர்கள். ஓ சுஜன ரக்ஷகரே, பிரஹலாதனை யக்காலத்திற் காப்பாற்றினீர். பாண்டவர்களை வெகுவிதங்களால் ரக்ஷணை செய்தீர், கோபகோபீ ஜனங்களை தாவாக்கினி தகிக்க அவ்வக்கினியை விழுங்கி அவர்களைப் பாதுகாத்தீர். பெருத்தமழை பொழிய கோவர்த்தன பர்வதத்தை ஓர் விரலிற் ருக்கிக் கோபகோபீ ஜனங்களை யிரக்ஷித்தீர். நீர் சர்வேஸ்வரர். ஓ மாதவா! ஓ கிருஷ்ணு! எங்களை யிரக்ஷிப்ப துமக்கு மேன்மையை யுண்டாக்காதோ வென்றுப்பிரார்தித்துக்கொண்டு மகத்தான பயத்துடன் சென்றுர்கள். பின்பு அரசன் வழிநடந்து பண்டரீ புரஞ்சென்று ஆலயத்திற் பிரவேசித்து எதிர் மண்டபத்தினின்று பெருமாளைச் சேவிக்குமளவில் கேசகுரலங்களை யுடையராய் சுந்தரமுகமும் சரசிஜநேத்திரங்களும், மகர குண்டலங்களும் மணியாரங்களும் பீதாம்பரமும் புன்சிரிப்பான முகமும் சுகுமாரராகி இரண்டு கைகளையு மிடுப்பின்மே லிட்டுப் பெரிய புஜங்களுடன் பாப நிவிருத்தி செய்யும்ரூபத்துடனிருக்கக்கண்டு அரசன் அனுதாபத்துடனஞ்சலி செய்து அவ் வந்தணர்களைக்கண்டு நீங்க ளுரைத்தபடி பாண்டுரங்கரைக்கண்டேன், என்கோரிக்கை தீர்ந்தது, கானோபாத்திரை, சுகிருத விசேஷத்தால் கேசவரைக் கலந்தாள். நானிராஜ்யமதமுடையவனுகி ஈனபுத்தியா லவளுக்குமனவருத்தமுச்றசெய்தேன். அவள் சரீரம் விருக்ஷமா யிருப்பதைக் காண்பிக்கக் கடவீர்களென்ன, அவர்க ளப்படியே அச்செடியைக் காண்பித்தார்கள். அவ் விருக்ஷத்தைப்பார்த்து அவள் பாக்கியசாலியென்று சொல்லி அரசன் தன்னிருப்பிடஞ் சேர்ந்தான்.

---

## தாமாஜி சரித்திரம்.

பிதரெனும் பட்டணத்தில் தாமாஜி யென்றொரு பிராம்மண ரிருந்தார். அவர் வித்தையில் வியுற்பத்தி ஞானமுடையவராகி அரசனிடத்திற் சேவகா விருத்தியைச் செய்துகொண்டு சாந்தியும் தாந்தியும் சத்விருத்தியுமுடையவராகி யரசன் வேலைகளைப் பராமரிக்கையின்றிச் செய்துக்கொண்டு பிரீதியுட னிருந்தார். சிலநா ளிப்படியிருக்க அரச னவருடைய தெளிவைக்கண்டு பண்டரிபுரத்திற்கு இருகாத தூரத்திலிருக்கும், மங்கள வேடையெனும் கிராமத்திற் கதிகாரியாகச்செய்து அவ்விடம் போகச்சொல்லிக் கட்டளையிட்டான். அவ்விடத்திற்குத் தாமாஜி மனையாளுடன் சென்று ஜாக்கிரதையாக வேலைகளைச் செய்துக்கொண்டும் அதிதிகளுக் கன்னமிட்டுக்கொண்டும் சர்வகாலங்களிலும் பாண்டுரங்கர் மேல் பக்தியுடையவராயும் வெகுகாலங் கழித்துவந்தார். இப்படியிருக்க அவ்விடத்திற் பெ... கருப்பு சம்பவித்தது. அதினால் ஜனங்களுக்கும் மிருகங்களுக்குஞ் சேதமுண்டாயிற்று. சிலர் தானிய மகப்படாமல் வேறு தேசங்களிற் சென்றார்கள். ஜல மகப்படாம லத்தியந்த சங்கடத்தை யடைந்தார்கள்.

பண்டரி புரத்திலும் பிரபல கடினமாகி ஜனங்கள் வருத்த மடைய; ஒரு பிராம்மணன் பசிநோயால் பொறுக்கச் சக்தியற்றவனாய் ஹரி! கிருஷ்ண! இன்றைக்கி அன்ன மகப்படுமாவென்று சொல்லிக்கொண்டு மங்களவேடையில் தாமாஜிவீட்டின் வாசற்படியில் சென்று நிற்க, வந்தபிராம்மண னன்னார்த்தியென் றறிந்து அவனை ஸ்நானம்பண்ணி வரச்சொல்ல, அவன் சந்தோஷத்துட னாற்றில் நீராடிவந்தான். யாசக ஜனங்களுக்கு நல்ல வசனங்களைச் சொல்லவேண்டும். அவர்கள் கையிற் கொடுத்தனுப்ப யாதொன்று மில்லாவிட்டாலும் நல்ல வசனங்களைச் சொல்லி ஆதரிக்க வேண்டும். யாசகஜனங்களை ஹிம்சை செய்தால் நரக போகங்களை யடையவேண்டிவரும். இதை தாமாஜி கண்டறிந்து ஜனங்களுக்கெப்பவும் மரியாதை வார்த்தைகளைச் சொல்லிவருவார். பண்டரி பிராமமணன் பக்ஷணஞ்செய்ய பந்திபி லுட்கார்ந்தான். அன்னமும் பதார்த்தங்களும் இலையில் வட்டிக்கப்பட்டிருந்தன. சர்வேஸ்வரன் போக்தாவென்று பிராம்மணர்கள் சங்கல்பத்தைச் சொல்லி ஜலம் விட்டார்கள். அந்தப் பிராம்மணன் போஜனஞ்செய்யாமல்

விசேஷமாக அழத்தொடங்கினான். தாமாஜியிதைக்கண்டு இச்சமயத்திலேனழுகிறீரென்று வினவ, அந்த பிராம்மணன் சொல்லுவான், ஐயா நான்கு தினங்களாகத் தாராபுத்திரர்களுபவாசத்தால் வருந்திக்கொண்டிருக்க தயாஹீனனை நானிவ்விட முண்ண வுட்கார்ந்தேன், என்னுடைய நினைப்பு அவர்கள்மேற் சென்றதால் துக்கமுண்டாயிற்றென்று விடைபகன்றான். இதற்கு தாமாஜி அவனை நோக்கி ஓர்வருஷகாலம் சாப்பாட்டுக்கு தானியத்தைக் கொடுக்கிறேன், இப்பொழுது நீர் விசனப்படாமல் சௌஸ்தமாகச் சாப்பிடக் கடவீரென்று சொல்ல, அவன் திருப்தியாக பக்ஷித்து வேதசூத்திரங்களைச் சொல்லி விதிப்படி ஆசீர்வசனத்தைச் செய்தான். தாமாஜி தலையாரியை அழைத்து இரண்டுமணங்கு தானியத்தையந்த பிராம்மணன் வீட்டிற் சேர்க்கும்படி திட்டப்படுத்தினான்.

அந்தப் பிராம்மணன் தானியத்துடன் பண்டர்புரம் பிரவேசிக்கவே அவ்விட மனேகர் பட்டினியா யிருந்தபடியால் அத்தானியத்தைப் பலாத்காரமாகப் பிடுங்கிக்கொண்டு எவ்விடத்திலிருந்து கொண்டு வந்தாயென்று அவர்கள் கேட்க அந்தப் பிராம்மணன் மங்கள வேடையில் தாமாஜி யென்பவர் கொடுத்த தானியமாகும், பூர்வகர்மகதியாக புரஜனங்க ளனைவருங் கொண்டுபோனார்கள், தாரா புத்திரர்களின் துரதிருஷ்டத்தால் தானிய மனைத்தும், போயிற்றென் றதிக துக்கத்தை யடைந்திருந்தான். அவ்வூரிலிருக்கும் பிராம்மணர்க ளனேகர் தாமாஜியிடம் வர அவரவர்களைக் காணவே அடிபணிந்து நின்றனர். அவ்வந்தணர்க ளனேகமாக ஆசீர்வசனங்களைச்செய்து ஐயா ! இது கடினகாலமாக நேர்ந்தது. பசிக்கவன்ன மகப்படுவதில்லை, தாங்களந்தப்பிராம்மணனுக்கு அன்னங்கொடுத்த சங்கதியைக்கேட்டு பாகவத ஜனங்களைத் தாங்கள் போஷணை செய்வீர்களென்று தங்களிடம் வந்தோம். உதாரகுணத்தைக்கொண்டு எங்கண்மேல் கிருபைகூர்ந்து தானியத்தைத் தாங்கள் கொடுத்தால் ஸ்ரீஹரி தங்களுக்கு சாசுவதமான சுகத்தைக்கொடுப்பார். நாங்கள் பண்டரி க்ஷேத்திரத்தைச் சேர்ந்தவர்களென்று சொன்னார்கள். தானத்திற்கு பாத்திர பூதரர்களென்று தாமாஜி அவர்களை யுட்காரச்செய்து. தன் மனையாளிடஞ் சென்று பண்டரி பிராம்மணர்கள், பசிநோயால் வருத்தப்பட்டு தானியத்தைக் கொடுக்கச்சொல்லிக் கேட்கிறார்கள், கருப்புகா

லத்தில் தூரத்திலிருக்கிற பிராம்மணர்கள் கஷ்டப்பட்டு தைனியத்துடன் வந்திருக்கிறார்கள். அவர்களைப் போகச்சொன்னால்சத்வ ஹானி நேரிடும். இராஜனுடைய தானியமிரண்டு அம்பாரங்கள் நம்மிட மிருக்கின்றன. அவைகளை பாண்டுரங்கப் பிரீதியாகப் பிராம்மண ஜனங்களுக்குக் கொடுத்து விடுவோம், அரசன் கேட்டால் என் தப்பிதத்திற்குப் பிராணனை வாங்கிவிடுவான், நாம் சரீரத்தின்மீது நோக்கம் வைத்தா லித்தனை ஜனங்களும் மரித்துப் போவார்கள். இப்படி யிருக்கிறபடியா லென்னசெய்யலாமென்று கேட்க, மனையாள் பர்த்தாவை நோக்கி தீரவிசாரித்துப் பார்க்குமளவில் பிராம்மண ஜனங்களைப் பரிபாலிப்பதே மேன்மையைத் தருமென்றாள்.

தாமாஜி தன்மனைவி சொன்னவார்த்தையைக் கேட்டு தானியராசிகளிடம்வந்து பிராம்மணர்களுக்கு வேண்டிய தானியத்தைப் பங்கிட்டுக் கொடுத்தார். அவர்க ளதனைச் சந்தோஷத்துடன் கொண்டுபோகப் பண்டரிபுரத்தி லிதரஜனங்களும் தானியத்தைத் தாமாஜி கொடுக்கிறாரென்று அவ்விடத்திலிருந்து அனேகர்வந்து தாமாஜியை நோக்கிப் பெருமாள் தங்களை யெப்பொழுது மாதரித்து இரக்ஷிக்கக் கடவரென்று ஆசீர்வதித்து தானியத்தைக் கொண்டுபோனார்கள்: பஞ்சமர் முதலான பேருக்குங் கொடுக்கத் தொடங்கினார். அதனாலவ ரபிமானரகிதரென்று அனேகர் புகழ்ந்தார்கள். ஜாதிபேதங்களைத் தான் பாராமல் தானியத்தைத் தான் கொடுத்தாலும் நான் கொடுத்தேனென்றவகங்கார மவர்க்கில்லை. தேசதேசங்களி லிவருடைய கீர்த்தி சென்றது. துஷ்டர்கள் சிலரிராஜ திரவியத்தைச் செலவுசெய்து விட்டாரென்றார்கள். தாமாஜி யிதைக்கேட்டாலும் வருத்தமடையாதிருப்பர். ஒருமாதம் பரியந்த மிவ்விதமாகத் தானியத்தைக்கொண்டு போனார்கள்.

தாமாஜியிடத்தில் கன்னடி பிராம்மண னொரு வுத்தியோகஸ்தனிருந்தான். அவனரசனுக்கு தாமாஜி தானியத்தைச் செலவழித்த சங்கதி யாவற்றையு மெழுதித் தெரியப்படுத்தினான். அரசன் குரோதமுற்று தாமாஜியினிடந் தூதரை யனுப்பி யவரைப் பிடித்து வரும்படி கடிதமெழுதினான். தூதர்கள் ராஜாக்கினையை வகித்து மங்கள வேடைக்குவந்து தாமாஜிக்குக் கடிதத்தைக் கொ

டுத்தார்கள். தனக்கிது வருமென்று முன்னமே தெரிந்திருந்தவ ராதலால் சிந்தனையொன்றுமின்றி அவர் சீட்டைக் கைக்கொண்டு கிலேசத்தை யடையாம லந்தூதருடன் பிரயாணமானார். அவ்விடத்திலுள்ள ஜனங்க ளனைவரு மிவர் அரசனுக்கு பெருத்த வபசாரஞ் செய்ததனால் அவன் தூதரை யனுப்பி வரவழைத்துக் கொல்ல நினைத்தானென்றார்கள்.

பிதருக்குப்போகும் மார்க்கத்திற் பண்டரிபுர மிருந்தது. அவ்விடம் தாமாஜி தூதர்களுடன் சென்று பீமாநதியில் ஸ்நானம் பண்ணி சன்னிதியிற் சென்று பிரீதியுடன் பாண்டுரங்கருக்குத் தெண்டன் சமர்ப்பித்து திவ்ய மங்களவிக்கிரகத்தைத் திருத்தமாகச் சேவித்துத் திரும்பியும் நமஸ்கரித்து அஞ்சலியஸ்தராய் இருகரங்களுந் தலைமே லிட்டுக்கொண்டு ஓ ஸ்ரீஹரி! நீர் அஸ்தங்களிரண்டையு மிடுப்புமே லிட்டுக் கருணையுடன் ஜனங்களைக் கடாக்ஷித்துப் பக்தஜனங்களைப் பரிபாலிக்கும் தீக்ஷையைப் பிடித்திருக்கின்றீரல்லவா! நானரசனுக்கு அபசாரங்களை மிகச்செய்தேன், என்னை சிக்ஷிக்கும் பொருட்டு சேவகரைவிட்டு அழைத்துவரச் சொன்னான். இப்போது தூதருட னவனிடஞ் செல்கின்றேன். அவன் சிரச்சேதஞ் செய்து விடுவான். ஸ்ரீகிருஷ்ணா! அச்சுதா! ரங்கா, இது தேவரீரைக் கடைசியாகச் சேவிப்பதாகும், அடியேன்மீது கடாக்ஷம் வைக்கக் கடவீரென்று அழுத கண்ணீருடன் பிரார்த்தித்து, ருக்மணி பிராட்டிக்குந் தெண்டன் சமர்ப்பித்து, பண்டரிபுரத்திற்கு வலம்வந்து ஹரிநாமத்தை யிடைவிடாது சொல்லிக்கொண்டு பெருமாள்மீது சகல பாரத்தையுமிட்டு நடந்தார்.

பாண்டுரங்கர் தனக் கற்பிதமாகத் தாமாஜி தானியத்தைக் கொள்ளையிட் டளித்தனனென்று உணர்ந்து தானோர் பஞ்சமனுடைய வேஷத்தைப் பூண்டுக் கந்தையைத் தலையிற் கட்டிக்கொண்டு குண்டுமணி ஹாரத்தைக் கழுத்திற் றரித்து ஓர் கௌபீனத்தை யுடையவராய் தடியைக் கையிலேந் திசெல்ல இருக்குங்கால், கமலாதேவி கண்டு இவ்வேஷத்திற்குக் காரண மென்னவென்று கேட்டாள். பெருமாள் பிராட்டியை நோக்கி தாமாஜியை இரக்ஷிக்கும் பொருட்டு இவ்வேஷத்தைத் தரித்தேனென்று சொல்லி, தாமாஜி யெழுதி னதுபோற் கடிதமொன் றெழுதி மோராக்களை மூட்டைக் கட்டிக்கொண்டு அரசன் பெயரால் முத்திரையைப் போட்டு சீக்

இரத்திற் பிதர் பட்டணத்திற்குச் சென்று அவ்விடத்திய துவார பாலகரைக்கண்டு மங்களவேடையி லிருந்துவந்தே னென்று பிரபுவுக்குத் தெரியப்படுத்தச் சொன்னார். அச்சேவகரி லொருவ னரசனிடம் வந்து அவ்வார்த்தையை யறிவிக்க, அழைத்துவாவென்று அரசன்சொல்ல சேவக னவரைச் சபையி லழைத்துவந்தான். அப்பொழுது பெருமாளரசனைப்பார்த்து இராஜா! இராஜ நரேந்திரா! இராஜமார்த்தாண்டா! இராஜபூஜிதா! ஓ! தாய்தந்தையரே! யென்று தோத்திரஞ்செய்ய, மந்திரி அவரை நோக்கி உன் பேரென்ன, வூரென்னவென்று மன்னவன்முன் கேட்க பிரியவாக்கியங்களால் பெருமாள் சொல்லலுற்றார். நான் மங்களவேடையி லிருக்கும் பஞ்சமன், தாமாஜியிடம் ஊழியஞ் செய்பவன். என்னுடைய பெயர்விட்டு நாயகனென்று சொல்லுவர்கள். அவருமக்குக் கடித மனுப்பினாரென் றக்கடிதத்தை அரசன் கையிற் கொடுக்க அதைப் பிரித்துப் பார்க்குமளவில் தாமாஜி கையெழுத்தென்று மந்திரி அரசனுக்கறிவித்து, அதிலடங்கிய சங்கதி "இராஜாதி ஸ்ரீராஜ பூஜித மகாராஜ, பிதருராஜ்ஜியத்திற்குப் பிரபுவான தங்களுக்கு தாமாஜி சிரசாஷ்டாங்கமாக நமஸ்கரித்து விநயவிதேயத்துடன் செய்யும் விண்ணப்பம். நம்முடைய தேசத்தில் மகத்தான கருப்பு சம்பவித்து ஜனங்களைப் பிடிக்குமளவில் எழுநூறு கண்டி தானியத்தை நான் பாயிலிக்கொருரூபாய் விழுக்காடு விக்கிரயஞ் செய்து திரவியத்தை விட்டு நாயகன் வசமனுப்பினேன், கணக்குப்பிரகாரம் பணத்தைப்பெற்றுக்கொண்டுப் பற்றுச்சீட்டு அனுப்பவேண்டும் அனேக தெண்டன் சமர்ப்பித்தே" னென்று கடிதமெழுதினதை அரசன் கண்டு கன்னடப்பிராம்மணன் பேச்சின்மீது தாமாஜியை சிக்ஷை செய்வதற்காகச் சேவகரைக்கொண்டு அவரை யழைத்துவரச் சொன்னோம், அவன் பேச்சுப் பொய்யாகத் தோன்றுகிறதேயென்று சிந்தித்துக்கொண்டிருக்க, கணக்கெழுதுவோர் வந்து நமஸ்கரித்து எண்பதினாயிரம் மோராக்கள் கணக்காயிற்று, பூர்த்தியாகத் திரவியம் வந்ததென்றார்கள். அவ்வேளையிற் பெருமாள் அங்கணத்தில் (முற்றத்தில்) நின்று ஐயமாரே! காசு சேர்ந்ததென்று கருணையுடன் ஒருகடிதத்தைக் கொடுங்களென்றார். அவர்க ளப்படியே பத்திர மெழுதிக்கொடுத்து, கோள்சொன்ன கன்னடப் பிராம்மணனைக் கைதியாக வைக்கவேண்டுமென்றும் மங்கள வேடையில் வெகுகாலம் சுகமாக

விருக்கவேண்டுமென்றும் சால்வைகளும் பூஷணங்களுங் கொடுத்து விட்டுநாயகனுக்கு வஸ்திரங்களைக் கொடுத்துக் கௌரவப்படுத்த, அவர் இராஜனுக்குப் பூமியு மிராஜ்யமும் பிரபலமாகக் கடவதென் றுசொல்லி பத்திரிகையை கைக்கொண்டுப் பிரயாணப்பட, பல்ல க்கு யானை குதிரைகளையும் பிரபுவான வரசன் தாமாஜிக்கு அனு ப்பினான். பகவானிப்படி பிரபல லீலைகளைச் செய்து மங்களவே டைக்கு நடந்தார்.

தூதர்கள் தாமாஜியை யொரு திருடனைக்கொண்டு வருவது போல அழைத்து வந்தார்கள். பெருமாள் வேறு மார்க்கமா கச் சென்றபடியால் இவர்கள் அவரை சந்திக்கவில்லை. தூதர்கள் தாமாஜியைக் கொண்டு வந்தார்களென்று அரசன் கேட்டுப் பிரி யத்துட னெதிர்கொண்டுபோய் விசேஷமாக மரியாதைகளைச் செய்து விட்டுநாயகன் வந்த சங்கதியைச் சொல்லிக் கணக்குப் பிர காரந் திரவியத்தைக் கொடுத்து பற்றுச்சீட்டு வாங்கிக்கொண்டு சென்றான். சாலுவை பூஷணங்களையும் யானைகுதிரைகளையு மும க்கனுப்பினேன். கன்னடப் பிராம்மணனுடைய பேச்சைக்கேட் டுக் கோபத்தையடைந்து வும்மைக் கூப்பிட்டேன், இப்போ தென் குறைகள் தீர்ந்தனவென்று சொல்ல, தாமாஜியிதைக்கேட்டு வியப் படைந்து பணம் நிறைந்த பைகளைச் சுமந்துக்கொண்டு சிரமையு டன் ஸ்ரீஹரி வந்தனரோ! சுந்தரமான கிரீட குண்டலங்களைக் கழ ற்றிக் கடக கங்கணங்க ளொன்றுமில்லாமல் கந்தல்களைச் சிரசிற் றரித்துக் காச்சாமணிகடுக்கனும் கையிற் றடியுங்கொண்ட பஞ்சம ஜாதி ரூபத்தை வகித்து ஓர் தூதராகத் திரவியத்தைக் கொண்டு வந்தாரோ! கமலாக்ஷனன சர்வேஸ்வரனுக்கு நான் கஷ்டங் கொ டுத்தேனேயென்று புளகிதாங்கராய்ச் சொக்கினார். அரசனும் பரி வாரமு மிதைக்கண்டு தடஸ்தராகி நின்றனர். பெருமாள் செய்த கிருத்தியங்களுக் கனைவரு மானந்த மடைந்து இவ்வளவு பார மான திரவியத்தை யொருமனித னெப்படி சுமப்பான்? இந்த பாரக்கிரமம் [illegible]ஷாத் ஸ்ரீஹரியினுடையதே யாகும். இத்தனை வேலையு மவரே செய்தா ரென்றார்கள்.

பின்பு தாமாஜி அனுதாபத்துடன கூடினவராகி பூமிமேல் விழுந்து விசேஷ தொந்தரையை விட்டல ரூரத்திக்குக் கொடுத் தேன் இராஜ சேவையை யினி நான் செய்யேன் பண்டரிபுரத்

தில் வாசமாயிருப்பதே பிரயோஜனமாமென்று சொன்னார். அரசன் தாமாஜியைக்கண்டு உம்முடைய கூட்டுறவினால் ஹரியைக் கண்டேன், எனது ஜன்மம் சபலமாயிற்றென்றான். அனந்தரம் தாமாஜி அரசன் சேவையைவிட்டு பண்டரி புரியிற் சேர்ந்து பாண்டுரங்கருடைய திருவடிகளுக்கு நமஸ்கரித்து ஸ்வாமி! அபராதங்களுக்கெல்லா மாலயமான வென்னை யாதரித்தருளினீர். பறையர் குலத்தொருவராகி யென்னைப் பாதுகாத்தருளினீர். நீர், சிவ சனகாதிகள் தோத்திரஞ்செய்யும் ஸ்ரீபாதங்களுடையீர், பவித்திரமான கங்கைக்கு பாவன தாயாராகுவீர், பிரம்மதேவனுக்குப் பிதாவாவீர், அவ்வளவு மேன்மையடைந்த தேவரீர் ஓரந்திமன் வேஷத்தைப்பூண்டு அரசனுக்கு வூழியக்காரனென்று உகப்புடன் சொன்னீர். இந்த காருண்ணியமும் இந்த சௌலப்பியமு மெவ்வளவென்று நான் வர்ணிப்பேன். ஸ்ரீரங்கா! விடோபா! உமது ஸ்ரீ பாதங்களுக்கு நமஸ்கரிக்கிறேனென்று சொல்லி தாராபுத்திரருடன் பண்டரிபுரியிலிருந்து பெருமாள் சேவையிற் றற்பரராய் விளங்கினார். புரஜனங்க ளனைவரு மவருடைய பக்தி லக்ஷணங்களுக்குச் சந்தோஷித்துப் பரம பக்தரென்று சிலாகித்தார்கள்.

---

## மிருத்தியுஞ்சயன் சரித்திரம்.

பிதர் பட்டணத்திற் சாந்தபிரம்மணி யென்றோ ரரசனிருந்தார். அவரொருநா ளரண்மனையி லுப்பரிகையிலிருந்த ஓர் கட்டிலின்மே லுட்கார்ந்து தனது மனையாளுடன் லீலைகளைச் செய்துக்கொண்டு அவ்வீட்டில் யாரையும் வரவொட்டாமற் காவலைவைத்து கவாக்ஷத் துவாரத்தினிட முட்கார்ந்து வாழைப்பழங்களை யுரித்து சர்க்கரையுடன் சாப்பிட்டு அப்பழத்தோலைக் கீழே எறிந்துக் கொண் டிருந்தார். கீழேவிழுந்த அந்த வாழைப்பழத்தோல்களை யோர்மனிதன் பக்ஷணை செய்துக்கொண் டிருந்தான். இதை யரசன்மனைவிப் பார்த்து பரபுருஷ னிவ்விடம் வந்தானென்று பர்த்தாவைக் கண்டுசொல்ல அவரவனைக்கண்டு துவாரத்திலிருக்குஞ் சேவகரை யழைத்து நீங்கள் காவலிருக்க அன்னிய புருஷனிந்த அந்தப்புரத்திற் கெப்படிவந்தானென் றவர்களை யடிக்கப் புக அக்காவலாளிக ளந்த வாழைப்பழத் தோல்களைப் பக்ஷிக்கு

யவனை யுதைப்பது மடிப்பதுமாக தொந்தரைச்செய்தார்கள். அவனடியுண்டுச் சிரிக்கலுற்றான். அவ்வடிக ளரசன்மேற் பட்டன. இதைக்கண்டு அரசன் அவனையடிக்காமல் தன்னிடம் கொண்டுவரக் கட்டளையிட்டார். ஆக்கினைப்படி அவனை அவர்கள் கொண்டுவந்து அரசன் முன்விட, அரச னப்புருஷனை நோக்கி காவலாளிகளுன்னை யடிக்க நீ தொந்தரை யடையாமல் சிரித்துக்கொண்டிருப்பதற் கென்ன காரணமென்று கேட்க, அப்புருஷ னரசனை நோக்கி ஐயா! தங்கள்வீட்டி லரைநாழியிருந்து தாங்களுரித்துப்போட்ட வாழைப்பழத்தின் மேல்தோல்களைச் சாப்பிட்டேன், இதற்காக என்னுடம்புமே லடிக ளனேகமாக விழுந்தன. தாங்களோ மிகுதியான போகங்களை எப்பொழுது மனுபவித்துக்கொண்டிருப்பீர்கள். தங்களுடைய கதி எப்படி யாமோவென்னு சிரித்தேன். கோதுமைமாவி னுருண்டைகளால் உலகத்தார் மீன்களைப் பிடிப்பார்கள். ஜீவரகிதமான மாவினுல் மச்சங்கள் மரணமடைகின்றன. ஜீவசகிதமான ஜந்துக்களைக் கொன்று அவைகளின் மாம்சத்தைப் புசிக்கின்றீர்கள், என்னசிக்ஷை தங்களுக் கேற்பட்டிருக்கிறதோ அறியே னென்று சொல்ல உடனே அரசன் வைராக்கியத்தை யுடையவராகி இராஜ்ஜியத்தை விட்டு ஆரண்ணியத்திற்குச் சென்றார்.

அரசன் ஆரண்ணிய வாசியாகி சாதுக்களுடைய சங்க மெப்போதகப்படுமென்றும், ஈஸ்வரபஜனை யெப்படி செய்வதோவென்றும், யோகாப்பியாச மெப்படியோவென்றும், பாசமோஹங்களெப்படிப்போமென்றும், தீவிர வைராக்கியம் வரும் விதமெப்படியென்றும் அனுதாப மெப்படிப்பட்ட தென்றும் ஹரிகிருபை யெவ்வண்ணமான தென்றும் ஹரியை பூஜிப்பதெப்படி யென்றும், ஜன்மசபல மெப்படியாமோ வென்றும் ஹரியை யெப்படி சேவிப்பதோவென்று மிவ்வாருன சிந்தையைத் தானுடையவராகி அவ்விடமிருக்க, ஆவணிமாதத்தில் பண்டரி யாத்திரைக்குப் பிரஜைகள் போகலுற்றார்கள். அவர்கள் வாத்திய கோஷங்களுடன் ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டு நடக்க அரச னவர்களைச் சேர்ந்து நாம் இச்சித்தது தானே சித்தித்ததென்று, சந்தோஷித்து, பிரியத்துடன் பண்டரிபுரத்தைச் சேர்ந்தார். அவ்விடம் சந்திரபாகாநதியில் ஸ்நானம்பண்ணி யூரை வலம்வந்து பாகவத ஜனங்களை யார்த்

தியுடன் நமஸ்கரித்து புண்டரீகரைப் பூஜித்துப் பெருமாள் சன்னிதியில் நின்று அபாரமான ஹரிநாமகர்ஜ்ஜனையைக்கேட்டு ஆனந்தித்து அனேக தீர்த்தங்க ளுலகத்திலிருக்கினும் பிதைப்போலெங்குமில்லையென்று சொல்லி விஷ்ணு பக்தர்களுக்கு வந்தனங்க ளிட்டு மண்டபத்தினின்று பாண்டு ரங்கருடைய விக்கிரகத்தைக்கண்டு சத்பாவத்துடன் மனதில் நமஸ்கரித்து அச்சுதா! கிருஷ்ணா! ஹரி! ரங்கா! என்று அபார பிரீதியுடன் சொல்லி ஸ்வாமி! தேவரீருடைய கீர்த்தியைக் கேட்டுவந்தேன், குருதரிசனத்தை வேண்டுகிறேன், அதை யெனக் கருள்செய்து என் மனக்கவலையைத் தீர்த்தருளும், ஓ கிருஷ்ணகிருபாளோ வென்று வேண்டி ஓர் விடுதி வீட்டை யேற்பாடு செய்து அன்னபானங்களின்றி அவ்விடத்தில் வீற்றிருந்தார். இப்படி மூன்றுநாளிருக்க கடைசிநாளிரவில் பெருமாள் அவர் சொப்பனத்திற் சென்று சகஜானந்த ருனக் குபதேசிப்பாரென்று சொல்லி விவேகசிந்து என்னு மோர் கிரந்தத்தைக் கொடுக்க அவர் விழித்துக்கொண்டுப் பார்க்குமளவில் கிரந்தத்தைமாத்திரந் தன்னிட மிருக்கக்கண்டு பண்டரிநாதரைக் காணவில்லை. அதனாற் கிலேசமடைந்து பிரேமையுடனந்த கிரந்தத்தைப் பூர்த்தியாக மனனஞ்செய்து வந்தார். சிலகால மிப்படிச் செலுத்தி ஸ்ரீஹரி ஆக்கினைப்படி ஆசாரியரைத் தேடிக்கொண்டு கல்லியாணி யெனுங் கிராமத்திற்கு வந்தார. அவ்விடத்தி லவரைக்காணுமற் திரும்பி பண்டரிபுரத்திற்குச் சென்று ஆங்கு ஆசாரியரைத் தேடிக்கொண்டிருக்க உச்சவகாலத்தி லவ்விட மவரும்வந்தார். இதை யறிந்து சகஜானந்தரிடஞ்சென்று சொப்பன சங்கதியை அவருக் கறிவிக்க அவர் நல்லதென்று தானிருந்த கல்லியாணியெனுங் கிராமத்திற்கே அவரை அழைத்துச்சென்று தாரகமந்திரத்தை யுபதேசித்தருளி மிருத்தியுஞ்சய னென்னுந் திருநாமத்தைச்சாற்றினர். அச்சீஷர் சிரவணஞ்செய்தவுடன் மனனத்தைப் பூர்ணமாகப்பண்ணி நிதித்தியாசனத்தில் ஸ்ரீஹரியைத் தன்னிடத்திலே சாக்ஷாத்காரமாகக் கண்டார். பின்பு இஷ்டமான இடத்திற் சஞ்சரிக்கத் தொடங்கினர்.

ஓர் பட்டணத்திற் றுனெருகால் வாசமாக விருக்க அவ்விடம் ஜங்கம ஜாதியனுன பவாராய னென்றெருரு சஜ்ஜனன் மிருத்தியுஞ்சயருடைய நிஷ்டையை யறிந்து சரணமடைந்தான். அவர் அஜ்

ஜங்கமனுடைய குணங்களைச்சோதித்து அதிகாரியென் றறிந்தபின் னுபதேசத்தைச் செய்தார். அவ்விடத்திற் ஜங்கமஜாதிய ரனேக ரிருந்தார்கள். அவர்களிற் சிரேஷ்டன் சமுச்சய னென்பவன் பவ ராயனைப் பலவாறாக நிந்தித்து கிரமத்தைத்தப்பி இதரஜாதியிற் குருவைத்தேடின யாதலா லுனக்குப் பஹிஷ்காரமா மென்று ஜாதிகட்டுச் செய்தான். பவராய னசாரியரிடம் வந்து அவர் திரு வடிகளில் நமஸ்கரித்து சமுச்சயன்செய்த செய்கையை அறிவித் தான். ஆசாரிய ரவனை யாதரித்து பெருமாள்மீது நம்பிக்கை யை வைத்து பிரீதியுடன் பக்திசெய்துவரக் கடவையென்று சொ ல்லி யருளினர்.

அந்நகரத்திற் றெளிவுடையவனான ஓரரசன் காசிபதியென்று பெயருடையனாகி சாம்பமூர்த்தியைத் தொழுது சிவனடியாருக் கறுசுவை பதார்த்தங்களோட னன்னமளித்து வருவான். இப்படி யிருக்க ஒருநாளிவ னனேக சிவனடியார்களான ஜங்கமர்களுக்குப் போஜனமளிக்க எத்தனித்து சமையற் செய்வித்து வெகுவிதமான பதார்த்தங்களையும் பணியாரங்களையு மிலைகளில் வட்டித்து பந்தியில் சிவனடியார்க ளனேகரை யுட்காரச்செய்து சாப்பிடுகிறதற்குமுன் அவரவர்கள் லிங்கக்காய்களி லிருக்கு மிலிங்கங்களுக்கு அன்னத் தை யற்பணம் பண்ணும் பொருட்டு அவர்களுடைய லிங்கக்காய்க ளைத் திறக்க அவைகளில் லிங்கங்க ளில்லாதிருந்தன. இதைக்கண்டு மனவருத்த மடைந்து ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துப் பயமும் வெட்கமு முடையராய் தெய்வமே யில்லாவிட்டால் தேவ பூஜை யெப்படி செய்வது? அன்னத்தையும் சாப்பிட வொண் ணாது. இனி கிலேசத்துடன் பிராணன்களை விடவேண்டும். பரம சிவனே போனபடியாற் பிராயச்சித்தமாவது ஜீவத்தியாகமேயா கும். இதுதான் சாஸ்திர சித்தமென்று சிலர் சொன்னார்கள். அனைவருக்கு மிதேகதியானாற் சிக்ஷை யாருக்கு விதிப்பதென்று சிலர் சொன்னார்கள். இப்படிப் பிராந்தியடைந்து பலபல விதங்க ளாகச் சொல்லிக்கொண்டு ஒன்றுந் தோன்றாமலிருக்க அரசனவ ர்களை நோக்கி அறியாமையால் சாதுபுருஷனை யாரோ வேதனை செய்திருக்கிறான்; அதனாற் பரமசிவன் நம்மைவிட்டு நீங்கினர், இவ்வபசாரத்தை செய்தவர் முன்வந்து சொல்லக் கடவரெ ன்று அடிக்கடி கேட்க, ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக்

கொண்டிருந்தார்கள். அப்பொழுது சமுச்சயன் அரசனை நோக்கி பவராயன் மிருத்துஞ்சயனைக் குருவாகச் செய்துக்கொண்டதற்கு பஹிஷ்காரம் வைத்தோம். அதனாற் பரமசிவன் கோபித்தாற் போ லிருக்கிறது, என்னசெய்வதென்று கேட்க, அரச னவர்களை நோக்கி மிருத்துஞ்சயரிடம் நீங்களனைவருஞ் சென்று வேண்டினால் நம்முடைய வேதனை யொழியுமென்றான். அதைக்கேட்டு அவர்களனைவரு மவரிடம் சென்று தெண்டன் சமர்ப்பித்து மகா விநயத்துடன் முன்னின்று பவராயனை நிந்தித்தபடியால் பரமசிவன் எங்கள் கண்களுக்குக் காணாமலிருக்கிறார். நீர்கருணையுடன் ரக்ஷிக்கக்கடவீரென்று பிரார்த்தித்தார்கள். அப்பொழுது அவர் சொன்னதாவது தன்னிடத்தில் வேதாந்த மென்றும் சித்தாந்தமென்று மிரண்டுநாய்க ளிருக்கின்றன. இவைகளந்த லிங்கங்களை கைக்கொண்டதுபோற் காண்கிறது, ஆயினும் பார்ப்போமென்று, ஓ வேதாந்தமே! என்றழைக்க ஓர்நாய் வந்தது, அதனைநோக்கி இந்த சிவனடியார்களுடைய லிங்கங்களை யெடுத்திருந்தாற் கொடுத்துவிடக் கடவையென்று கட்டளையிட, அந்தநாய் ஐயாயிரம் லிங்கங்களைக் கக்கிற்று, பின்பு அவர் ஓசித்தாந்தமே! என்று கூப்பிட, வேறோர் நாய்வந்து ஐயாயிரம் லிங்கங்களைக் கக்கிற்று. அந்த சிவனடியார்களிந்த விந்தையைக்கண்டு அதிகமாக தோத்திரங்களைச்செய்து ஐயா! முற்காலத்திற் சிறியாளனுக்குச் சாம்பமூர்த்தி நூற்றெட்டு சிலைகளைக் காண்பித்தார். அப்பொழுது தன்னுடைய சொந்தசிலை யின்னதென்று அவனுக்குத் தெரியாமற் போயிற்று. எங்களுக்கு மின்று அவ்வண்ணமே யாயிற்றென்று மகிமையைக் கொண்டாட அவர் சங்கற்பித்த மாத்திரத்தி லவரவர் லிங்கங்க ளவரவர்களிடஞ் சேர்ந்துவிட்டன, பின்பு அந்த ஜங்கமர்கள் ஞானசாகரரென்று அவருக்கு நாமஞ்சாற்றி வெகுவாகக் கொண்டாடி அரசனிடஞ் சென்று நடந்த சங்கதியை அவனுக்குத் தெரிவித்து சிவபெருமானுக்கனைவரும் நைவேத்தியம் சமர்ப்பித்து சாதுக்களுடைய மகிமையைச் சிந்தித்து புசிப்பெடுத்துக் கொண்டார்கள்.

---

## பானுதாசர் சரித்திரம்.

பிரதிஷ்டானியெனும் பட்டணத்தி லோர் பிராம்மணர் சூரியோபாசனை செய்துக்கொண் டிருப்பர். அந்த சூரியநாராயண



இராமராஜா. రామరాజు.    பானுதாசர். భానుదాసు.    மிருத்திஞ்சயன். మృత్యుంజయుడు.    பஹிரம்படு. బహిరంభటు.

னுடைய கிருபையா லவருக்கோர் பிள்ளைப் பிறந்தது. தாய்தந்தைக ளப்பிள்ளையை வளர்ந்து சரிவயது வந்தவுட னுபநயனத்தைச் செய்தார்கள். தகப்பன் வேதங்களைக் கற்பிக்கத் தொடங்கினான். ஓர்நாள் பிள்ளைப் படிக்காமலிருக்கப் பிதா கோபித்ததனால் குமாரன் பயமடைந்து கிரகத்தைவிட்டு ஒளித்திருக்க ஓர் ஸ்தானத்தைத்தேடி காட்டிற்குச் சென்றான். அவ்விடம் தனக்கு அதிசயம் விளைவிக்கும்படி பூமிக்குள் ஜனசஞ்சார மில்லாதிருந்த ஓராலயத்தைக் கண்டான். அவ்வாலயத்திற்குள் புக சூரிய நாராயணனுடைய மூர்த்தியொன் றிருந்தது. அதனை இந்த பாலகன் பார்த்துத் தெண்டஞ் சமர்ப்பித்தான். அப்பாலகனுடையச் சுத்தமான மனதைச்சூரிய நாராயணன்கண்டு பிரசன்னனாகிப் பிராம்மணவேஷத்துடன் வந்துகின்னைத் தலவனுக்கு பாலைக்கொடுத்து மனோபயத்தைவிட்டு மாதவனை ஸ்மரித்திரு. சங்கடத்தி லிரக்ஷிக்கக் கடவோம் சந்தேகிக்கவேண்டாம். இரவும் பகலும் "விட்டல" நாமத்தைச் சொல்லிக்கொண் டிருவென்று ஹிதவசனங்களைச் சொல்லி அந்த பிராம்மணன் மறைந்தான்.

தாய்தந்தைக ளிருவரும் தனயனைக்காணுமல் கிலேசமுற்று பட்டணமெங்கும் பரிவுடன் தேடினார்கள். ஏழாநா ளப்பாலகன் வெளிவர, அவ்வேளையி லோர் பிராம்மண னவ்விட மிருந்தவனைக் கண்டான். உடனே அப்பாலகன் சுரங்கத்துட் சென்றான். அந்த பிராம்மண னப்பிள்ளையின் தகப்பனிடஞ் சென்று தான் அந்தப் பிள்ளையைப் பார்த்ததையும் அவன் சுரங்கத்திற் பிரவேசித்ததையுந் தெரிவித்தான். அப்பொழுது தகப்பன், தனக்குச் சமான ஜனங்களை யழைத்துக்கொண்டு கானகத்திற் சென்று குப்தமான கோயிலைக்கண்டு சுரங்க மிருட்டா யிருந்தபடியால் தீவிட்டியைக் கொண்டு உள்ளே பிரவேசித்துப் பார்த்தவளவி லப்பாலகன் பயமற்று நித்திரை செய்துக்கொண் டிருக்கக்கண்டார்கள். அப்பொழுது தாய்தந்தைக ளப்பிள்ளையை யெழுப்பி யெப்படி ஜீவித்திருந்தாயென்ன அப்பாலகன் ஓர் பிராம்மணர் பாலைக்கொடுக்க அதை யருந்தி யிங்கிருந்தேனென்றும், அவர் தன்குழந்தையை ரக்ஷிப்பதுபோல வென்னை ரக்ஷித்துக்கொண் டிருந்தாரென்றும் சொன்னான். இதைக்கேட்டுத் தாய் தந்தைகள் பிள்ளையை உபலாலித்து இவன் பாக்கிய மேதோவென்று நினைத்துப் பானுவினு லிரக்ஷிக்கப்

பட்டப்படியால் பானுதாசனென்று பெயரிட்டு பிள்ளையை வீட்டிற் கழைத்துவந்து வித்தைக்காக சிந்தைசெய்ய ஸ்ரீஹரியே இரக்ஷணையை கைக்கொண்டாராதலால் அவனுக்கு ஸ்ரீயப்பதியே துணையென்றுமோஹமமத்வத்தால்பிள்ளையைசிக்ஷிக்காமல்சர்வேஸ்வரனுதவியால் பிராப்தமாவருவது கிடைக்குமென்று விசேஷவித்தைகளாற் றேர்ந்தனை யிடுவது விகிதமல்லவென் றெண்ணியிருந்தார்கள். சிலகாலங் கழிந்தபின் தாய்தந்தைகள் பிள்ளைக்கு விவாகத்தைச் செய்தார்கள். சந்ததமும் ஸ்ரீரம பஜனையை பானுதாசர் செய்து வருவார்.

கால நியமனத்தால் தாய்தந்தைக ளிருவரும் தேகத்தை விட்டனர். பானுதாசர் பின்பு பயமற்றவராகி பாண்டுரங்கருடைய சேவையில் பக்தி செய்வதும், குடிலஜனங்களுடன் கூடாமலும் உபார்ஜனையும் செய்யாமல் கொடுக்கல் வாங்கல் வியாபாரமும் செய்யாமல் சேவகாவிருத்தியும் செய்யாம லிருப்பார். மனைவி மக்க ளுபவாசமாக விருந்தால் மனதிற் றேர்ந்தனை யடையார். ஆரியர்களுக்கு அனுகுணமான நடையை யுடையரா யிருந்தார். இப்படியிருக்கக் குலத்தோர் பதின்மர் கூடி பானுதாசரைக் கண்டு நீர் பாரியாள் புத்திரருடனிருந்து வித்தையை வாசிக்காம லிருந்தபடியால் காலத்தைக் கழிப்பது கடினமாக விருக்கிறது நாங்களனைவரும் நூறுவராகன்களைச் சேர்த்துக் கொடுக்கிறோம். அதற்கு நீர் வஸ்திரங்களை வாங்கி லாபத்திற்கு விற்று அதனால் வீட்டு செலவு நடத்திக்கொண்டு அசல் திரவியத்தை யெங்களுக்குக் கொஞ்சங் கொஞ்சமாகக் கொடுக்கலாமென்று சொல்ல வதற்கு பானுதாசர் சம்மதிக்க அந்த கிரகஸ்தர்கள் வஸ்திரங்களைவாங்கி பானுதாசரை யவ்விடத்திய வர்த்தகர்களுட னிவரைச்சேர்த்து விற்பனை செய்யும் விதத்தை இவருக்குக் கற்பித்துக் கொடுக்கும்படி யவர்களைக் கேட்டுக்கொண்டார்கள். பானுதாசருமவர்களைக் கிட்டினார். அவர்கள் வர்த்தகஞ் செய்யும் விதத்தைத் தெரிவிக்கத் தொடங்கி, வஸ்திரங்களை வாங்குவோருக்கு அசத்தியத்தைச் சொன்னால் அதிக லாபங் கிடைக்குமென்றார்கள். இதைக்கேட்டு பானுதாசர் அசத்தியத்தை நான் சொல்ல ஒப்பமாட்டேனென்ன, அவர்களதைக் கேட்டு சிரித்து, பிக்ஷாடனைச் செய்வதே யிவர் நெற்றியி லெழுதியிருக்கிற தென்று சொல்ல, பானுதாசர் எத்தனை விபத்துக்களை

னக்கு சம்பவித்தாலும் சத்தியத்தை நானெப்பொழுதும் விடே னென்றுச் சொல்லி பானுதாசர் வர்த்தகஞ்செய்ய உட்கார்ந்தார். வாங்குவோருக்குத் தான் வாங்கினவிலையையுந் தனக்கு கிடைக்க வேண்டிய லாபத்தையுந் தெரிவித்து சத்திய வசனத்தையே சொல்லிக்கொண்டு வியாபாரத்தை நடத்தினார். சத்தியவாதி யென்று உலகோரெல்லா மவரிடம் வஸ்திரம் வாங்கிவருவார்கள். அப்படி வாங்க வந்தவர்களுக் கோரே வாக்கியத்தைச் சொல்லிவிட்டு அச்சுதா! கிருஷ்ணா! ஹரி! கோவிந்தா! வென்று சொல்லிக்கொண்டிருப்பர். இதனால் பானுதாசர் பொய்சொல்பவ ரல்லவென்று உலகத்திற் பிரசித்தியடைந்து கொஞ்சகாலத்திலேயே வெகுவாகத் தனத்தைச் சேகரித்தார். வாங்குவோ ரனைவரு மிவரிடத்திற்கே வருவார்கள்.

இதைக்கண்டு அக்கம்பக்கத்து வர்த்தகர்கள், த்வேஷ புத்தியுடையவர்களாகி பானுதாசரிடம் பொறாமைகொண்டு ஓர் காசுக்குதவாத புத்தியற்ற பானுதாசன் நம்முடைய சகாயத்தால் மேன்மையடைந்து நமக்கே கெடுதலையுண்டாக்கினன். உலகத்தாரை மோகிக்கச் செய்வதால் சொன்னவிலைக்கு மாறென்றும் பேசாமல் பணத்தைக்கொடுத்து வஸ்திரங்களை வாங்கிக்கொள்ளுகிறார்கள். நாம் அசத்தியத்தைச் சொல்லுகிறோமென்று அவனிடமே போகிறார்கள். இப்படி பலவாறாகச் சொல்லிக்கொண்டு குரோதத்தை யுடையவரா யிருந்தார்கள்.

ஒருநாள் வர்த்தகர்க ளனைவருங்கூடி வேறோர் கிராமத்தில் நடக்கும் சந்தைக் கூட்டத்திற்குச் சென்றார்கள். அவர்களுடன் பானுதாசரும் சென்றார். ஆங்கு கொடுக்கல் வாங்கல் விவகாரங்களை முடித்துக்கொண்டு எல்லோரும் ஓராலயத்தி லிறங்கினார்கள். அவ்வேளையி லொருவன் வந்து அன்று ஏகாதசியா யிருந்ததால் ஹரிகதை அவ்வூரிலோரிடத்தில் நடக்கிறதென்று சொல்லிப்போனான். அப்பொழுது பானுதாச ரிதைக்கேட்டு ஹரிதினத்தில் ஹரிகீர்த்தனையைக்கேட்டு ஆனந்தித் திருப்போமென்று, கூடவந்த வர்த்தகர்களைக்கண்டு, இவ்விடத்தில் மூட்டைகளை வைக்கிறேன், அவைகளைப் பார்த்துக்கொண்டிருங்களென்று பிரார்த்திக்க, அவர்களதற்கு நாங்களப்படி செய்யோம், ஹரிகதை கேட்பதி லென்ன[illegible]யும், உமது மூட்டைகளை யுமயிடத்திலேயே வைத்துக்கொள்ளு

மென்றார்கள். பானுதாசரதைக்கேட்டு பண்டரிநாதரென் மனதி னிடமிருக்கிறார், தணிமூட்டைகளிருந்தாலும் போனாலு மென க்கு சமாதானந்தா னென்றுசொல்லி அப்போதே ஹரிகுண கீர்த் தனையை கேடகச் சென்று அவ்விடத்தில் ஹரிதாசர்களுக்குத் தெண்டன் சமர்ப்பித்து விஷ்ணுகதைக ளவர்கள் சொல்ல, விநோ தத்துடன் கேட்டிருந்து கிருஷ்ணநாமத்தை தானும் குறிப்புடன் செய்துக்கொண்டிருந்தார்.

ஆலயத்திலிறங்கிய வர்த்தகர்களனைவரு மாலோசித்து பா னுதாசருடைய மூட்டைகளைச் சேர்த்து ஓர் பள்ளத்திற் போட்டுக் குதிரையையு மவிழ்த்து வயல்களி லோட்டிவிட்டு சந்தோஷத்துட ன் வார்த்தையாடத் தொடங்கி நாமெல்லோரும் பானுதாசர்வந்த வுடன் மூட்டைகளைத் திருடர்கள் கொண்டுபோனார்களென்று சொ ல்லி, பின்பு அவ்வஸ்திரங்களை நாம் பங்கிட்டுக்கொள்ளுவோம். அவ னின்றுமுதல் நஷ்டத்தையடைந்து விடுவானென்று சொல்லிக் கொண் டிருந்தார்கள். அவர்கள்மேல் ஸ்ரீஹரி தயையில்லாதிருந் ததால் திருடர்கள் வந்து வர்த்தகர்களுடைய சரக்குகளையும் குதி ரைகளையுங் கைக்கொண்டுபோக, இவ்வர்த்தகர்கள் திருடர்களைத் தடுக்க அவர்க ளிவ்வர்த்தகர்களைத் தடிகளாலடித்து ஹிம்சித்தார் கள். அவ்வடிகளால் தலைகளைச் சாய்த்துக்கொண்டு தைன்யித் துடனிருந்து பானுதாசருக்கு நாம் கெடுதிநினைக்க ஈஸ்வர சிக்ஷா வை நம்மேலேற்பட்டதென்று அதிகதுக்கத்துடனிருந்தார்கள்.

பானுதாசர் ஸ்ரீ ஹரிகதைகளைக் கேட்டிருந்து அருணோதய சமயத்தில் ஹரிதாசர்கள் ஆரதியைக்கொடுக்க அஞ்சலிசெய்து, விடு திக்கு வந்துக்கொண்டிருக்க பெருமாள் மாறுவேஷத்துடன் குதி ரையை பிடித்துக்கொண்டு அவ்வழியில் நின்றிருந்தார். பானுதாச ரிதைக்கண்டு ஆச்சரியமடைந்து தன்குதிரை யிவ்விடம் வருவதற் குக் காரண மென்னவென்று நினைக்க பிராம்மண வேஷத்தைப் பூண்ட பெருமாள் தன் னங்கவஸ்திரத்தாற் கட்டியிருந்த வக்குதி ரையை யவர்கையிற் கொடுத்து சீக்கிரத்திற் சென்றார். பானுதாச ரக்குதிரையுட னாலயத்தில்வந்து பாறகுமளவில் வர்த்தகர்களனை வரும் வேதனையா லழுதுக்கொண் டிருந்தார்கள். இதைக்கண்டு பானுதாச ரேனழுகிறீர்களென்று கேட்க அவர்கள் சொல்லுவார் கள், நாங்கள் வஞ்சனையுடையவர்களாய் நீர் துக்கத்தை யடையும்

பொருட்டு உம்முடைய மூட்டைகளனைத்தையும் நாங்களபகரிக்க வேண்டி யோர் பள்ளத்திற் போட்டோம். பெருமாள், தலையில்லாதபடியால் திருடர்கள் எங்களுடைய வஸ்திரமூட்டைகளைத் திருடிக்கொண்டு சென்றார்கள். உடம்புகள்மேலடிகள் விசேஷமாக விழுந்தன. மரணதசை மாத்திரம் தப்பிற்று. எங்களுடைய குதிரைகளை யவர்கள் கொண்டுபோனார்கள். உன் குதிரையை அத்திருடர்கள் வாரா முன்னமே அவிழ்த்துவிட்டோமாதலால் நீர்பிடித்துவந்தீர். எங்களுடைய கருமங்கள் விபரீதமாயின. இனி குடும்ப போஷண மெப்படி நடக்கும்? சொத்துக்கள் யாவும் போய்விட்டனவே! நிலைமைதப்பி விட்டதே! பெருமாள் உமது துணிமூட்டைகளைப் பத்திரப்படுத்தினார், உமக்கொன்றும் பயமில்லையென்று சொல்ல, பாநுதாசர் கலக்கமடைந்து தனக்குட் சிந்திக்குமளவில் அசுவத்தைப் பிடித்திருந்தவர் சாக்ஷாத் ஹரியேயென்று காண்கிறேன், சர்வேஸ்வரனுக்கு தொந்தரவுகொடுத்த இந்த ஜன்மம் சாம்பராகப் போகக்கடவது, வேதாதீதரான விஷ்ணுமூர்த்தி விஸ்வமனைத்திலும் நிறைந்திருப்பர், சியாமளரூபராகி சுந்தரமான சுகுமாரவேஷத்தை யுடையவர், அவர் ஓரந்தணவேஷத்தைக்கொண்டு அசுவத்தைப் பிடித்தனரே! பண்டரிநாதருக்கு தொந்தரவை வெருவாகக் கொடுத்தேனே! இனி நான் வியாபார கருமத்தைச் செய்யேனென்று அவ்வர்த்தகர்களைப்பார்த்து மனோதுக்கங்களை நீங்களடையவேண்டாம் மகத்தான வென்னுடைய உடமையை உங்களுக்கே கொடுக்கிறேனென்றுசொல்லி வெளியேவந்து பள்ளத்திலிருந்த தன்னுடைய துணிமூட்டைகளை அவிழ்த்து அவர்களுக்குப் பங்கிட்டு குதிரையையும் திரவியத்தையு மவர்களுக்குக் கொடுத்து ஸ்ரீ ஹரி நாமத்தை பிரீதியுடன் சொல்லிக்கொண்டு வீடுவந்து சேர்ந்தார். ஒருவருடைய ஆர்ஜனையைத்தான் வேண்டாமல் அதிகமான பிரேமையுடன் ஹரியை பஜித்துக்கொண்டு ஆனந்தமடைந்து நித்தியமும பாண்டுரங்கர்மீது கீர்த்தனைகளை பாடிக்கொண்டுபிரீதியும் திருப்தியு மடைந்திருந்தார். அவர்சொல்லும் ஹரி சரித்திரங்களை ஜனங்களனைவருங் கேட்டுக்கொண்டிருப்பார்கள். யாரேனு மெதைக் கொடுப்பார்களோ அதைக்கொண்டு திருப்தியடைந்து குடும்பத்துடன் கிரகத்தி லிருந்தும் பிரபலமான வைராக்கியத்துடன் பண்டரிநாதரை பஜித்திருப்பார்.

## இராமராஜா.

பண்டரி புரத்தில் வாசஞ்செய்யு மோர் பிராம்மணன் அனேக தேசங்களுக்கு யாத்திராபரனாய்ச் சென்று வித்தியாநகர மெனும் பட்டணத்தைச் சேர்ந்தான். அவ்விடம் ஸ்நானசந்தியானுஷ்டானங்களைச் செய்து அரசன்வீட்டிற் புகுந்து காவலாள ரனுமதிமேலந்தப்புரத்திற்குச் சென்றான். அரசனவனை சன்மானிக்க, அதிக சந்தோஷத்தை யடைந்து இராஜனை நோக்கி ஓ கிருபாமூர்த்தியே! தருமமூர்த்தியே! சத்குணங்களை யிடைவிடாது பரிபாலிக்கும் பிரபுவே! என்று சிலாகிக்க அரச னவனைநோக்கி உன் ஊரேதுவென்ன பண்டரிபுரமென்றும் உமது கீர்த்தியைக் கேட்டுவந்தேனென்றும் பிராம்மணன் சொல்ல, அரசனவனைநோக்கி நான் ஸ்நானஞ்செய்து வந்து சியாமலாம்பாவுக்குப் பூஜையைச்செய்வேனப்பொழுது உனக்கு சம்பாவனை (தக்ஷிணை) யைக் கொடுப்பேனென்று சொல்ல, பிராம்மணன் சந்தோஷித்து அவ்விடம் வீற்றிருந்தான். அரசன் நீராடி தேவீபூஜைக்குப் போகும்பொழுது அந்தணனுங் கூடச்சென்றான். அந்தப் பவானிதேவியின் கோவி லதிக ரம்மியமா யிருந்தது. உட்புறத்தில் வெகுவிநோதமாகப் புஷ்பங்களா லலங்கரிக்கப் பட்டிருந்தது. அனேகவித வாத்தியங்க ளவ்விடத்தில் முழங்கிக் கொண்டிருந்தன. வேதங்களறிந்த வேதியர்கள் விசாலாக்ஷியைக் குறித்து வேதங்களைச் சொல்லிக்கொண் டிருந்தார்கள். அரசனே அம்பாதேவிக்குப் பிரஜைகள் கொண்டாடப் பூஜைசெய்து வந்தான். பிரசாத மனைத்தும் பங்கிட்டபின் பிராம்மணனை யவ்வரச னழைத்து ஐயா! பிராம்மணரே! இவ்வுலகி லம்பாதேவி விசேஷமான கியாதியையுடையவளா யிருப்பள். மகத்தான மகிமையுடன் கூடினவள். குலதேவதையாக ஆராதிக்கப்பட்டவள். அவளை ஜனங்களனைவரும் விசேஷமாகச் சேவித்து வருவார்கள். எனது கைகளால தேவிக்குப் பூஜைகளைச்செய்து இரவும்பகலு மலங்காரங்களைத் தொடுத்து ஆர்த்தியுட னிருப்பேன். பண்டரிபுரத்தில் அரசர்கள் யாரும் பாண்டுரங்கரை அர்ச்சிக்கமாட்டார்க ளல்லவா! பிராம்மணர்கள் தானே அவ்விடம் பூஜைசெய்வோர்? பிராம்மணர்கள் தற்பலரானபடியால் திவ்வியபூஷணாலங்காரங்களையிடாரல்லவா! இந்த அம்பாதேவிக் கிருக்கும் வைபவங்க ளவ்விடம் பாண்டுரங்கருக் கில்லையல்லவா? என்று அர

சன் சொல்ல, அந்தணனுக்குக் கோப முண்டாகி ஓ அரசனே! கேளும், பண்டரி புரத்தைப் பாராமல் பவானியைச் சிலாகிப்ப துமக்கு நியாயமல்ல, உம்முடைய அம்பா தேவியின் கோவில் வெள்ளிநீரால் முலாம்பூசப்பட்டு தளுக்கையடைந் திருக்கிறது, பண்டரிநாத ராலயம் அவ்வண்ணமானதல்ல, சுவர்ண ரத்தினங்களாற் சேர்த்துக் கட்டப்பட்டு விஸ்வகர்மாவால் நிர்மாணமானதாகும், காமதேனுவும் கற்பக விருக்ஷமும் சிந்தாமணியு மவ்விடமுண்டு, பிரேமையுடைய பக்தர்கள் மதுரமாகப் பாடிக்கொண்டிருப்பார்கள். பீமாநதி யவ்விடம் நிறைவெள்ளத்துட னிருக்கும், பக்தஜனங்களுக்கு நித்தியமங்களமாக விருக்கத்தக்கது, கந்தருவரவ்விடமிருந்து பாடிக்கொண் டிருப்பார்கள், சிவபெருமா னவ்விடம் தாரக ஜபத்தைச் செய்துகொண் டிருப்பர். பிரம்மதேவன் முதலான தேவர்கள் அஞ்சலி அஸ்தராகி சலனமின்றி சர்வேஸ்வரனைத்தோத்திரம் பண்ணிக்கொண் டிருப்பார்கள். பரமாத்மாவே ஸ்ரீபாண்டுரங்கராகி பக்தரக்ஷணை செய்துவருவார். அந்த பண்டரிபுரம் வைகுண்டத்திற்குச் சமமாகும். பெருமாளுடைய விபவத்தைச் சொல்லத்தரமா? பவானியு மக்கோயி லங்கணத்திற் பெருக்கிக்கொண் டிருப்பளென்று சொல்ல, அரசனுக்குவதிககோபமுண்டாகி ஓ அந்தணரே! பண்டரிகோயில் சொர்ணத்தால் செய்யப்பட் டிருக்கிறதென்று நானெப்பவுங் கேட்டதில்லை. மூலபீடத்தில் வசித்து மும்மூர்த்திகளுக்கும் ஆதியான தேவியை தாசியாவாளென்று நீ சொல்லக்கேட்டேன் உன்னைச் சிக்ஷித்துக் காட்டிற் கலுப்புவேனென்று சொல்லப் பிராம்மணன் பயப்படாமல் பண்டரிபுரத்திற் பாண்டுரங்கரை பிரத்தியக்ஷமாகப் பார்ப்பீராகில் குணாதிகத்தை யுடையதாகக் காணப்படும், நானுண்மையைச் சொன்னேன், நீர் கண்ணாற்பார்த்து என்னை சிக்ஷிக்கவும், நீர் பாண்டுரங்கரைப் பார்ப்பீராகில் பவானிபூஜையைவிட்டுவிடுவீர். வேதாந்தத்தைக் கேட்காதிருக்கும் பரியந்தம் வேறுசாஸ்திரங்களைப் பார்க்க விருப்புண்டாவதுபோல நாதாதீதரான ஸ்ரீஹரியைப் பார்த்தால் சமுசயங்கள் நிவர்த்தியா மென்றான். இதைக் கேட்டு அரசன் அப்படியே செய்வேனென்று சேனையைக்கூட அழைத்து மந்திரி பரிவாரங்களுடன் பண்டரிபுரியை நோக்கிச் சென்றான்.

பண்டரி பிராம்மண னிதைக்கண்டு வெகுதொந்தரை யடைந்து பாண்டுரங்கரை நினைத்து நாராயணா ஹரி! இன்று என்னைப் பாதுகாத்து ரக்ஷியும், நான் சொன்னவிதமாகப் பண்டரி புரியை அரசனுக்குக் காண்பிக்காவிட்டா லென்னையவன் சிக்ஷித்து விடுவான். ஸ்ரீசனே! முகுந்தா! தயாளா! வெகு துக்கத்துட னடிக்கடி யும்மைப் பிரார்த்திக்கிறேன். உலகத்திற் சாதுக்கள் சொன்னபடி அரசனுக் கறிவித்தேன். ஸ்ரீ வைகுண்டத்தைப் போலப் பண்டரிபுரியை அரசன் பார்க்காவிட்டால் பிராணஹானியான சிக்ஷை செய்வான். ஓ அனுதநாதா! அச்சுதா! கிருஷ்ணா! ஆபத்பாந்தவா! என்று வெகுவிதமாகத் தோத்திரங்களைச் செய்ய, பாண்டுரங்கர் ருக்மணியைப்பார்த்து பண்டரிபிராம்மண னிராமராஜனிடம் நமது புரத்தை வெகுவாக வர்ணித்திருக்கிறான், அரசன் சேனையுட னிவ்விடம் வருகிறான் அவன் கண்களுக்கு துவாரகாபுர மிருந்தாப்போலிப் பண்டரியை யொருமுகூர்த்தம் வரைக்குமிருக்கச் செய்யவேண்டும். இதனாலந்தப் பிராம்மணனுடைய கோரிக்கை நிறைவேறும், நமக்கும் மங்களமாமென்றார். ருக்மணி பிராட்டி சங்கற்பித்த மாத்திரத்தில் பண்டரிபுரம் துவாரகைக்குச் சமமாக விருந்தது.

அரசன் வழிநடந்து பண்டரிபுரச் சமீபத்தில்வந்து யானைமீதேறிக்கொண்டு பிராம்மணனை யழைத்து நீர் சொன்னாப்போல் பண்டரிபுரியை நான் பார்க்காவிடி லுன்னை சிக்ஷிப்பேனென்றான். பின்பு சற்றுதூரஞ் சென்றபின் அவன்கண்களுக்கு மகத்தானதேஜசுடன்கூடியகோயிலின் சிகரங்களைப் பூர்ணசந்திரகாந்தியைப்போலிருக்கக்கண்டு, யானைவிட்டிறங்கி பிரியத்துடன் கீழவிழுந்து நமஸ்கரித்து பிராம்மணனைக்கண்டு நீசத்தியத்தைச் சொன்னாய், உன்னை முன்பு நான் வீணாக நிந்தித்தேன், க்ஷமிக்கவேண்டுமென்று நமஸ்கரித்தான். இதைக்கண்டு அந்த பிராம்மணன் ஸ்ரீஹரி யென்னை யிரக்ஷித்தாரென்று பிரேமபாவனையினால் கோவிந்தனை மனதிலெண்ணி சம்பிரமமாகச் சந்தோஷத்துடன் போக அரச னவ்விடத்தில் காமதேனுவையும் கற்பக விருக்ஷத்தையும் சிந்தாமணியையுங் கண்டான், பக்ஷிகள் விருக்ஷங்கள்மேலிருந்து பாடிக்கொண்டிருந்தன. நிறை வெள்ளத்துடன் நதிஜல மோடிக்கொண் டிருந்தது. ஹம்ச பக்ஷிகளும் மயில்களும் அங்கங்கே யாடிக்கொண்

டிருந்தன. அப்சரஸ்திரிகள் நிருத்தங்களைச் செய்துக்கொண்டிருந் தார்கள். பகவத் பக்தர்கள் பாடிக்கொண்டு மாடிக்கொண் டும் பிரம்மானந்தமாக விருந்தார்கள். அவர்கள் ஹரிநாமத் தைக் கொண்டாட அதனைக்கேட்க வினிப்பா யிருந்தது. சுவர் ண மயமாயும், மாணிக்கமயமாயும், துவாரகாபுரிக்குச் சமமாக பண்டரிபுர மிருந்தது. முக்கிய தீர்த்தங்களனைத்தும் மூர்த்திகரங்க ளாகி பீமாநதியில் முழ்கின. இவ்வதிசய மனைத்தையு மவ்வர சன் பார்த்துச் சந்தோஷ மடைந்து சந்திர பாகாநதியில் ஸ்நான ம்பண்ணி பாண்டுரங்கருடைய சன்னிதிக்குச் சென்றான். அவ் விடத்தி லிந்திரன் முதலான தேவர்கள் பாண்டுரங்கரைச் சேவிக் கவும் அஷ்டமாசித்திக ளங்கணத்தை (திருமுற்றத்தைப்) பெருக்க வும், தன்னிஷ்ட தெய்வமான அம்பா பவானியு மவ்விடம் ஸ்ரீயப் பதியைச் சேவித்திருக்கக்கண்டு அரச னிங்கேன் பெருக்கிறுயென் று கேட்க, சர்வேஸ்வரன் சன்னிதியி லனந்தசத்திகள் கூடியிருப் பார்கள், அவர்களில் நாடுெருத்தி யாவேன். இதரதீர்த்தங்களனை த்து மிவ்விடம் வந்துபாவனமடைந்து போகின்றன. இது விசேஷ மகிமையை விளங்கியிருக்குமென்ன, அரசன் மகத்தான வாச்சரி யத்தை யடைந்தான். அவ்விடத்தில் நாரதரும் தும்புருவும் சங் கீதங்களைப் பாடிக்கொண் டிருந்தார்கள். சங்குசக்கரங்களுடன் ஜயவிஜயா ளிருந்தார்கள். ககனமார்க்கத்திற் கருடக்கொடிகள் காந்தியுடன் விளங்கி யிருந்தன. இவைகளை யெல்லாம் கோவில் பிராகாரத்திற்கண்டு அரசன் தெண்டனிட்டு கோயிலுக்குட் புகுந்து ஆர்த்த ரக்ஷகரும், ஆனந்த மளிப்பவரும், அமல விக்கிரகரும் சியாமள சுந்தர சுகுமாரரும், புஞ்சிரிப்பான முகமுடையவரும், கோரிக்கைகளைக் கொடுப்பவரும், கைகளை யிடுப்பில் வைத்திருப் பவரும், பக்தரக்ஷணையைப் பார்த்திருப்பவரும், பரப்பிரம்மசொ ரூபரும், முக்த புருஷருக்கு மோகத்துடன் முகங்காட்டுகிற விஸ்வ ரூபரும், அனுபவ ஞானிகள், தங்களுக்குள்ளாராயும் சொரூப முடையவரும், வாக்கினுல் வர்ணிக்க எட்டாதவரும், இவ்வண்ண முவமை ரகிதமான ஈஸ்வரனை அரசன் பார்த்து பக்தியுடன் பாதங் களில் மஸ்தகத்தை வைத்து நமஸ்கரித்துப் பிராம்மணனுடைய கிருபையால் பாண்டுரங்கரைச் சேவித்தேன், இது அவனுடைய கருணையே யென்று கோவிந்தனை வெகுவாக தோத்திரஞ் செய்து

இந்திரன் முதலானோரையுங் கண்டேன், சித்திகளனைத்தையுங் கண்டேன், சந்திரகாந்தியைக்கூடின வைகுண்டத்திற்குச் சமமான பண்டரிபுரியையுங் கண்டேன். பாவனனுனேன், ஓ பிராம்மணரே! நீர் மன்னிக்கக் கடவீரென்று இவ்வண்ணமாகச் சொல்லுமளவில் அந்த இரசனை (அணிவகுப்பு)யாவும் போயிற்று.

ஈஸ்வரமாயையாலந்த இரசனை மறையவே அரசனாச்சரியப் படும்படி பண்டரிபுரமோர் கிராமம்போல் விளங்கிற்று. இந்தச் சித்திரத்தை அரசன் பார்த்து சகல காரணரான ஸ்ரீஹரியினிடஞ் சித்தத்தைச் சேர்த்து பவானியிடமிருந்த பக்தியைவிட்டுப் பண்டரி நாதரைப்பார்த்து அவாப்த சமஸ்தகாமரே! தேவரீரென்னுடைய ஆர்த்தவசனங்களை தயையுடன் கேளும், சரணாகதனாகி யும்மிடஞ் சேர்ந்தேன். ஸ்ரீஹரீ! நீர் கருணிக்கவேண்டும். தேவரீர் வித்தியாநகரத்திற்கு வருவது சிலாக்கியமாகின்றது. பக்தர்களுடைய வாஞ்சையைப் பூர்த்தி செய்வது வுமக்கு மேன்மையன்றோ? மோக்ஷத்திற்காக தேவரீருடைய சரணசேவையையே ஆசக்தனாகிச் செய்வேன். ஓ காருண்யாலயரே! கிருபைபாரும், தேவரீருடைய கைங்கரியத்தில் நிரதனாயிருப்பேனென்று வேண்டிக்கொள்ள, பாண்டுரங்கர் பிரசன்னராகி நான் வருகிறேன், ஆனால் பூமிமேலென்னை வைக்காமல் கொண்டுபோகக் கடவாய், விஷ்ணுதாசர்கள்மேல் நீதியைத் தப்பி நீ நடப்பையேலவ்விடத்தில் நானிருக்க மாட்டேனென்றுசொல்ல, நரபதி சம்மதித்து சந்தோஷித்து மனிதர்களை மார்க்கத்தில் தன் பட்டணம் வரைக்கும் நிற்கவைத்து அந்த விக்கிரகத்தை கைகளிற் கொண்டு கிரமமாக தன்னிடம் சேர்த்தான். பண்டரிபுரத்தில் அரசனுக்குப்பயந்து அர்ச்சகர்கள் ஒன்றும் சொல்லாதிருந்தார்கள். அரசனந்த விக்கிரகத்தை தன் பட்டணத்தில் ஸ்தாபித்து நிஜபக்தனாகி சகல பூஜைகளும் தானே செய்து கௌரவத்துடன் சகலருங் கொண்டாடும்படி சேவித்து வந்தான்.

இப்படியிருக்கப் பண்டரிபுரியில் ஆவணிமாசத்தி லுச்சவத்திற்கு அனேக பாகவதர்கள் வந்தார்கள். அவ்விடத்தில்ஸ்ரீஹரியைக் காணாமலவர்களுக்குள் ளனுதாபத்தை யுடையவர்களாய் பெருமாள் பண்டரியைவிட் டெப்படி சென்றாரென் றொருவருக்கொருவர் பேசிக்கொண்டு, பண்டரிபுர மிப்பொழு தெப்படியிருக்கிறதெ

ன்றால் சகலாலங்காரங்களையுடைய ஸ்திரீ, தன் புருஷனை விட்டுபோ லிருக்கின்றது, எனசெய்வோமென் றனைவரும்கூடி அவர்களுக்கு ஒன்றுந் தோன்றாமலிருக்க பிரிய பக்தரான பானுதாசரவ்வேளையி லெழுந்திருந்து சொல்லுவார், வித்தியாநகரத்திலிருந்து விட்டலரங்கரை அடியேன் கொண்டு வருகிறேன், அப்படிச் செய்யாவிடில் பிராணனைவிட்டு விடுகிறேனென்று சொல்லி பிரயாணமாகி நடந்து வித்தியாநகரத்திற் சேர்ந்தார். அவ்விட மோர்விடுதியி லிறங்கி பாண்டுரங்கரை நானெப்படி சேவிப்பேனென்று அவ்விடத்திலுள்ள பிரஜைகளைக்கேட்க அவர்கள் சொல்லுவார்கள், ஐயா! அரசன் பாண்டுரங்கமூர்த்தியை தன்னுடைய வீட்டுப் பிராகாரத்துள் வைத்துக்கொண்டு பூஜித்து வருவான், பூஜைவேளையிற் பிரஜைக ளவ்விடஞ்சென்று தரிசித்து வருவார்கள், அரசன் சேவகர்களெப்பவும் கதவை சாத்தியே வைத்திருப்பார்களென்றார்கள். பானுதாசரிதைக்கேட்டு நடுராத்திரியி லிராஜனுடைய கிரகத்திற்குச்சென்று காவலாளிகள் நித்திரையால் தங்களை மறந்திருக்கக்கண்டு கதவைத் தீண்டினவுடன் பூட்டு கீழேவிழுந்தது. பின்பு கோயிலுக்குள் அவர் பிரவேசித்து பாண்டுரங்கருக்குத் தெண்டன் சமர்ப்பித்து பெருமாள் மூர்த்தியைப் பக்தியுடன் பார்த்து பிரேமாதிசயத்தால் பாதங்கள்மேல் தலையை அன்பு பெருக வைத்து நாராயணா! நந்தநந்தனா! மதுசூதனா! மாதவா! இவ்வரசனிடம் நீரேன்வந்து சேர்ந்தீர்? பண்டரிபுரத்தி லனேக பக்தர்கள் வந்துகூடி யிருக்கிறார்கள், தேவரீரை யவ்விடங் காணாமல் கிலேசத்தை யடைந்திருக்கிறார்கள் ஓ கோவிந்தா! உமது கிருபையை அவர்கள் விஷயத்திற் காண்பியும், அடியேன் ஊரைவிட்டு தேவரீரிடம்வந்தேன் என்னுடன் நீர்வாரும் இவ்விடம் வருவதற் கென்னகாரணம்? தேவரீருக் கிஷ்டர்க ளிவ்விடத்திற்கு வாரார்களே! ஓ விட்டலமூர்த்தி! அவ்விடத்தில் நாமசங்கீர்த்தனை சர்வகாலங்களிலும் நடப்பதால் அதைக்கேட்க சகிக்காமலிவ்விடம் வந்தீரோ? அவர்களுக்குப் பிரீதியை காண்பிக்காம லிவ்விடம் ஓடிவந்தீரோ! ஒருகால் யாத்திரை வேளையிற் ஜனங்க ளனேகமாக சேருகிறார்களென்று சிரமை யடைந் திவ்விடம் வந்தீரோ? இவ்விடத்தி லொண்டியா யொருவருக்குந் தெரியாம லிருக்கின்றீரே! என்று சொல்லி பகவத் சரணங்களைப் பிடிக்க, பாண்டுரங்கர் சொல்லலுற்றார்.

நீங்க ளாசைகளனைத்தையும் விட்டு எம்மை விதியுடன் சேவித் திருப்பதற்கு நாம் ஸந்நிதிகளைக் கொடுப்போமென்று சொன்னாலும் வேண்டாமென்கிறீர்கள், ஒருகோரிக்கையுமில்லாதிருக்கின்றீர்கள், இதனால் எம்மேல் பெரியருணம் நேர்ந்தது, சேவாருணத்தை நாம் தீர்க்கமாட்டோமென்று நீங்களும் கைவிட்டீர்களாதலா லிவ்விடம் வந்துசேர்ந்தேன், பண்டரிவிட்டதுமுதலிது சிறைச்சாலைபோலிருக்கிறது, நீங்களு மிதுபரியந்தம் வாராமல் போனீர்கள், உதயமானபின் பூஜைவேளையிலுன்னை நான் பார்க்கிறேன், இதிற் சமுசயமில்லையென்று இரத்தின கண்டாபரணத்தை பானுதாசர் கழுத்திற் போட்டு விடைகொடுத்தனுப்பினார். இவர் வெளியேவந்த மாத்திரத்தில் முன்போலவே கதவு சாத்தப்பட்டு பூட்டும் போடப்பட்டது. அனுதினமு மரச னதிகாலையி லெழுந்திருந்து பெருமாளுக்கு ஆரத்தியைக் கொடுத்து வருவான். அன்றையதினமும் மங்களாரத்தியைக் கொடுக்க, கண்டஹாரம் பெருமாள் கழுத்தி லில்லாததைக்கண்டு அரசன் அர்ச்சகர்மேற் கோபித்து திருட்டை அறிந்துக்கொள்ள தேடும்பொருட்டு மனிதர்களை யனுப்பினான். அவர்களும்பற்பல இடங்களில்தேடினார்கள். அப்பொழுது பானுதாசர் நதியில் ஸ்நானம்பண்ணி ஹரியைப் பஜித்துக்கொண் டிருந்தார். அவர்கழுத்திற் பெருமாளுடைய கண்டஹார மிருப்பதைக்கண்டு திருட னகப்பட்டானென்று கயிறுகளால் அவரைக்கட்டி இராஜனிடங் கொண்டுவந்து, உடனே ஹாரத்தை அரசனுக்குக்கொடுத்து இந்த திருடனுக் கென்ன சிக்ஷையென்று கேட்டார்கள். அரசன் திருட்டை விசாரிக்காமல் கோபமுடையவனாகி சூலத்திற்போட்டுவிடும்படி கொடிய சிக்ஷையை விதித்தான். இதைக்கண்டு பானுதாசர் தூதர்களைநோக்கி என்னுடைய ஆயுளிப்போது நிவர்த்தியாய் விடுகிறது, ஸ்ரீபாண்டுரங்கரைச் சேவித்து வருகிறேன், அவரை யெனக்குக் காண்பியுமென்று கேட்க அரசனுக்கினையைக் கைக்கொண்டு பெருமாள் சன்னிதிக்கு அவரை அழைத்துவந்தார்கள். பானுதாசர் பாண்டுரங்கரைக்கண்டு ஸ்வாமி! தேவரீரைக் கைக்கொண்டு போவதற் கிவ்விடம்வந்தால் அடியேன் கழுத்தில் ஏகாந்தமாக ஹாரத்தைப் போட்டீர், அரசனென்னுயிரை வாங்கவிருக்கிறான், எனது பிராணன்போனால் நீர் சுகமேயிரும், தேவரீர் மனதி லிந்த விசாரத்தை வைத்துக்கொண்டு இவ்விதமான தந்திர

த்தைச் செய்தீர், பத்து ஜன்மங்களாயினும் தேவரீரை நான் விடமாட்டேன், ஓ நாராயணுவென்று சொல்லிக்கொண்டிருக்க அரசனுடைய சேவகர்கள் சீக்கிரத்தில் வரச்சொல்லி வற்புறுத்தி வெளிக்கிழுத்து சூலத்தை அவர் தலைமேல் வைத்து நடக்கச்சொல்லி அதிக துன்பங்களைச் செய்துக்கொண்டிருக்கப் பிரஜைக ளனேகர் பார்க்கவந்தார்கள். அனைவரும் ஊருக்குவெளியிற் சென்று பளுவான சூலத்தை தூதர்கள் அவ்விடத்தில் நட்டு பக்தரை அதன் முன்னிற்கச்செய்ய, பக்தர் ஸ்ரீ ஹரியை உத்தேசித்துசொல்லுவார், ஓ பதிதபாவனு! முராரீ! உம்மை நான் மனதிலிட்டுக்கொண்டேன். என்னை காப்பாற்றவேண்டும் ஆகாயமும் பூமியுந் தலைகீழாகுலும் சப்த சமுத்திரங்கள் சமரசமானுலும் அடியேன் நிலையைவிடேன் தேகத்தைதேவரீருக்குத் திருஷ்டிசுற்றிப் போட்டுவிடுகிறேன், பிரளயத்திலுந் தேவரீரையேபிடித்திருப்பேன், தேவரீர் பிராணபூதர்பிராணநாதர் பரமபுருஷர்என்று சொல்ல, அச்சூலத்திற்கு துளிருண்டாகியுடனே பல்லவங்கள் இலை,காய்களுடன் பெரிய விருக்ஷமாயிற்று. இதைக்கண்டு அனேக ர்ராஜனிடஞ் சென்று தெரிவிக்க, அவனுச்சரியப்பட்டு அவ்விடம்வந்துபார்த்து பயமடைந்து பக்தரான பாநுதாசர் பாதங்களைப் பிடித்து அடியேன் பதிதன் அவிவேகத்துட னபசாரங்களை யறியாமற் செய்துவிட்டேனென்று அவரை யழைத்துக்கொண்டு பெருமாள் சன்னிதிக்கு வந்தான். உடனே பாநுதாசர் பாண்டுரங்கர் சரணங்களைப் பிடித்துநிற்க, அவர் மோஹத்துடனவருக் கனுமோதத்தைக்காட்டி, யுமதுதோள்களிலென்னைச்சுமந்துக்கொண்டு புண்டரீகனுச்சிரமமான பண்டரிபுரத்திற்குச் செல்லுமென்றூர். அரச னதைக்கேட்டு ஸ்ரீ ஹரீ! நீ ரிவ்விடம்விட்டுப்போவது தகுதியோவென்ன, பண்டரிபதி யவனைநோக்கிநீ நீதியைத் தவறினபடியால் பாகவதாபசாரம் நேர்ந்தது, இனிநானிவ்விடமிரேன், ஏதோ சுகிருதத்தை நீ செய்திருந்த படியால் நானித்தனைகால முன்னிட மிருந்தேன், எனது உருவத்தை உன்மனதில் வைத்துக்கொள்ளக் கடவாயென்றூர். அப்பொழுது பாநுதாசர் பகவானைக்கண்டு பளுவான விக்கிரகத்தை நானொருவனுகி யெப்படி சுமப்பேன்? சாமார்த்திய மில்லையே! என்றூர். அதைக்கேட்டுப் பெருமா ளவரைநோக்கி உன் சுவாதீனமாக வமர்ந்திருப்பே னென்று சூக்ஷ்மரூபத்தைத் தானடைய, பாநுதாசர்

தேவதார்ச்சனை (திருமண்) பெட்டியி லவரைவைத்து அதைத் துணியால் சுற்றிக் கக்கத்திலிட்டுக்கொண்டு துரிதமாக நடந்து பண்டரிபுரம் சமீபத்திற் பத்மாலயத்திற்குச் செல்ல, பெருமாள் மூர்த்தியை அவ்விடத்தில் வைத்து ... போய் திரும்பிவருமளவில் அவர்பெரியமூர்த்தியாக வளர்ந்திருந்தார். பானுதாசர் பார்த்து ஸ்வாமீ ! தேவரீரை பண்டரிபுர மெப்படிச் சேர்ப்பேனென்று கேட்க, பெருமா ளவரைநோக்கி நீர் சாதுஜனங்களிடஞ் சென்று அவர்க ளனைவரையு மிவ்விடம் வரச்செய்து சமாரம்பத்துடன் சுதினமானவின்று பண்டரிபுரியிற் சேர்க்கச்செய்யவும் யாவருக்கும் பரம சுகமாகுமென்றார்.

பானுதாச ரிதைக்கேட்டு சந்தோஷத்துடன் பண்டரிபுரத்திற்குச் சென்றார். அவ்விடத்தில் பக்தர்களனைவருந் தியான நிஷ்டராகி பானுதாசரை யெதிர்பார்த் திருந்தார்கள். இவர்போனவுட னவர்களனைவரும் க்ஷேமாலிங்கனம் பண்ணிக்கொள்ள பெருமாள் பத்மாலயத்திற்கு வந்திருக்கிறாரென்று பானுதாசர் தெரிவிக்க, அவ்விடத்திலுள்ள ஜனங்களு மர்ச்சகர்களு மதிக சந்தோஷத்தை யடைந்து பச்சிலைதோரணங்களால் வீடுகளை யலங்கரித்து மேளவாத்தியங்களுடன் "ஜயஸ்ரீ விட்டல" வென்று ஹரிநாமத்தை கர்ஜித்துக்கொண்டு பத்மாலயத்திற்குவந்து பெருத்த உச்சவங்கொண்டாடி இரதத்தின்மேல் பாண்டுரங்கரை எழுந்தருளச்செய்து மகத்தான வைபவத்துடன் பண்டரிபுரத்திற் பிரவேசிக்கச் செய்தார்கள். தேவாலயத்திற்கருகி லனைவரும் சந்திரபாகாநதியில் ஸ்நானஞ்செய்து பல்லக்குமேற் பெருமானை யாரோகணிக்கச்செய்து ஆலயத்திற்குள் கொண்டுபோய் ஆசனத்தின்மேற் பெருமானை யெழுந்தருளச்செய்து விப்பிரர்கள் வேதமந்திரங்களை விதியுக்தமாகச் சொல்லி ஸ்ரீ ஹரிக்கு அபிஷேகங்களைச்செய்ய அவர் பூஜைக ளனைத்தையும் புஷ்பஞ்சலிகளையு மடைந்து, சுகாசீனராகி க்ஷேமகரமாக சுந்தர சரீரத்தை யுடையவராக வீற்றிருந்தார். பண்டரிபுரத்திற் சகல ஜனங்களும் அத்யானந்தத்தை யடைந்தார்கள். சர்வேஸ்வரனுடைய சித்திரமான லீலைகளைச்சொல்லி வர்ணிக்க சேஷமூர்த்தியினுலுமாகாது.

---

## பஹிரம்பட்டு சரித்திரம்.

வைடணுபுரத்தில் பஹிரம்பட்ட ரென்றொரு பிராம்மணரிருந்தார். அவர் சாஸ்திரங்களை விசேஷமாக வாசித்துச் சகலராலும் பெரியவரென்று மதிக்கப்பட்டு வித்தியார்த்திகளுக்கு வித்தையைச் சொல்லிக்கொண்டு வேதசாஸ்திரங்களை வாசிப்போருக் கவைகளைக் கற்றுக்கொடுத்து பிரதிதினமு மக்னிபூஜையை பக்தியுடன் செய்துவருவார். விசேஷ பாண்டித்தியத்தை யுடையவரானலு மிராஜ தரிசனத்தை விரும்பார். அயாசக விருத்தியால் ஜீவனத்தை நடப்பித்துக்கொண்டு நியமத்துடன் தினமும் கோதாவரியில் ஸ்நானம்பண்ணி இரண்டுஜாமம் வரைக்கும் தேவபூஜையைச்செய்து பின்பு வைச்வதேவ நிவேதனம்பண்ணி அதிதிகளுக்கு ஈஸ்வர பிரீதியாக போஜனமளித்து தானும் புஜித்து பின்பு பாகவதபுராணத்தைச் சொல்லுவார்.

இவ்விதமான தன்னுடைய ... நக்க ஒர்நாள் பிராம்மணர்களுடன்தான் பக்ஷிக்குஞ் சமயத்தில பாரியாள் பதார்த்தங்களை வட்டித்து வந்தாள். அப்பொழுது பர்த்தா மனைவியைக்கண்டு பச்சடியி லுப்பு குறைவென்றார். மனையாளிதைக்கேட்டு உமது வயது அறுபதாண்டுக்கு மிஞ்சிவிட்டது, நாக்கின் ருசியை நீர் இன்னம் விடவில்லை யென்றாள். கடினமான விவ்வார்த்தையை பஹிரம் பட்டு கேட்டு வெட்கமுற்று அநுதாபத்தை யடைந்து தன்னுடைய ஹிதத்தைத்தான் தேடிக்கொள்ள வேண்டுமென்கிற யத்தனமுடையவராய் தன்னுடைய மனையாளுக்குத் தெண்டனிட்டு ஒ தாயே! உனது வார்த்தையை நான் முக்கியமாக வெடுத்துக்கொண்டேன். பூர்வத்தில் நான் சுகிருதங்கள் செய்திருந்தபடியால் உன் வாக்கியத்தா லெனக்கு வைராக்கிய மிப்போதுண்டாயிற்று. இது மிகு நலமென்று சொல்லி தனக்குள் ளாலோசனையைச் செய்யத் தொடங்கினர். இப்போதிருக்கிற வண்ணமாகவே ...ண்ணியத்திற்குச் சென்றால் பந்துக்கள் மறுபடியு மழைப்பார்கள். ...ன்னியா...ம் வாங்கிக்கொண்டால் சகல ஜனங்களும் பூஜிப்பார்கள். பரமஹம்சாச்சிரமத்தைப் பிடித்தால் பிரம்ம சொரூப னென்று பிரஜைகளெண்ணுவார்கள். நால்வர் நம்மை நிந்திக்கும்படியான யத்தனஞ் செய்வோமாயின் இச்சரீரம் பாவனத்தை யடையுமென் றெண்ணி துலுக்கருக்கு குருவான காஜியிடஞ் சென்று ஐயா! நான்

துலுக்கனாவதற்கு வந்தேனென்றார். காஜி அவரை நோக்கி நீர் பண்டிதராயிருந்து எங்கள் ஜாதியிலேன் கலக்கிறீர், உமக்கே தேனுங் கோரிக்கை யிருந்தால் கொடுக்கிறோமென்ன பண்டிதர் அவனைநோக்கி ஐயா! நான் கோரிக்கையுடையவனல்லவன், சர்வேஸ்வரனை யடையு முபாயமுமுடைய கிரந்தங்களில் விசேஷமாகச் சொல்லியிருக்கிறதென்று வந்தேனென்ன, நல்லதென்று காஜி பிரீதியுடன் சுன்னத்து செய்து துலுக்க னாக்கினான்.

ஊராரனைவரு மிதைக்கேட்டுப் பலவாறான வார்த்தைக ளெவ்வளவு சொன்னாலும் பஹிரப்பட்டு கலக்கமடையாமற் காரியத்தின்மேல் கண்வைத்திருந்தார். ஒருநாள் நதிதீரத்திற் பிராம்மணர்களனைவரும் சேர்ந்திருக்கும் சமயத்தில் இப்புது துலுக்க னவ்விடம் சென்று அழத்தொடங்கினார். அவர்கள் பச்சாத்தாப மடைந்து நீர் துலுக்கஜாதி தெளிவானதென்றதனைக் கைக்கொண்டு நம்முடைய ஜாதிசெம்மையல்லவென்று விட்டீர்; அப்படிச்செய்ததனால் நீரென்ன சுகத்தை யடைந்தீர்? சொல்லுமென்ன, அவ ரவ்வந்தணர்களை நோக்கி, பிரம்மஞானத்தைப் பாங்காக யடையும்பொருட்டும் தருமமிவர்த்திக்கும் அந்த ஜாதியிற் சேர்ந்தேன். அவிவேகத்தா லப்படி செய்துவிட்டேன். அங்குசென்றதி லாத்மஞானமு மடைந்ததில்லை, ஜீவப்பிராந்தியும் போகவில்லையென்று சொல்லப் பிராம்மணர்களனைவரு மாலோசித்து பஹிரம்பட்டு பண்டிதராயிருந்து பரவசத்தால் துலுக்கனானார், தகுந்த பிராயச்சித்தங்களைச் செய்து நம்முடைய ஜாதியிற் சேர்த்துக்கொள்வது மேன்மையாகும். அன்றியல் தலங்களில் நடக்குமபசாரங்க ளிவ்விடந் தீருகின்றன வாதலால் நாமு மிவருடைய ஆபத்தைத் தீர்ப்பது தகுதியாமென்று சொல்லி அனைவருங்கூடி திரவியத்தைச்சேகரித்து பிராயச்சித்த கருமங்களைச்செய்து பிராம்மண ராக்கினார்கள்.

துலுக்கர் பலிஷ்டராகி இச்செய்கைக்கு சகிக்காம லரசனிடஞ் சென்று பிராம்மணர்கள் செய்த செய்கையை விண்ணப்பஞ்செய்ய, அவன் பஹிரம்பட்டையும் பிராம்மணர்களையுந் தன்னிடம் வரச்செய்தான். அப்பொழுது பஹிரம்பட்டு துலுக்கரைப் பார்த்து, எனக்கு காரின் சந்திரமப்படியே யிருக்க நான் துலுக்க னெப்படியானேன். சுன்னத்தை நீங்கள் போக்கடிப்பீராகில் நான் துலுக்கனாயிருக்கலாமென்று சொல்லிப் பிராம்மணர்களைப் பார்த்து

சாஸ்திரங்களைக் கொண்டு அனேகமான பிராயச்சித்த கருமங்களைச் செய்வித்தும் பிரயோஜனப்படவில்லை, ஏனெனில் சுன்னத்து செய்த சர்மந் திரும்பி வளராமற் போயிற்று. பஸ்மத்தாலும் கோமயத்தாலும் பவித்திரமெப்படி யாயிற்று? என்கிற சந்தேகமிந்த சமுசயமிருக்கிறது, ஆனதால் நான் துலுக்கனாமலேன் பிராம்மணனுமாகேனென்றார். அதுக்கவர்களும் பிராம்மணர்களு மிதைக்கேட்டு மறுமொழிச் சொல்லத் தெரியாமலிருந்தார்கள். பஹிரம்பட்டு எந்த ஜாதியானென்றுந் தோன்றுமற் சமுசயத்தை யுடையவராகி பார்ப்போ ரனைவரையும் "நான் பிராம்மணனோ? அல்லது துலுக்கனோ?" வென்று கேட்டுவருவர். இதனால் பயித்தியக்கார பஹிரனென்று பேர் பெற்று இந்தமனோசமுசயத்தை யார் நிவர்த்திப்பாரென்று பெருத்த கோரிக்கையுட னிருந்தார்.

அவர் நமக்கெங்கே குருவு கிடைப்பாரென்று தேடி சில காலஞ் சஞ்சரித்து வடவாளமெனுங் கிராமத்திற்குவந்தார். அவ்விடமோர்மடமும் கோயிலுமிருக்கக்கண்டு நாகநாத சித்தரவ்விடம் சிஷ்யர்களுடனும் சாதுக்களுடனும் வீற்றிருப்பதைக் கண்டார். இதன்றி அவ்விடமோர் சமாதியைக் கட்டிக்கொண் டிருந்தார்கள். அது வெல்லப்பாடா யிருப்பதுமன்றி பள்ளத்தி லெறும்புக ளிருக்க சற்கரையைப்போட்டு அதின்மேல் கற்களைப் பரப்பி வைத்தார்கள். பஹிரம்பட்டு நாகநாதரைக்கண்டு இவர் நமது சமுசயங்களைச் சரிப்படுத்துவார், ஆகையால் சதாசாரியராவாரென்றெண்ணி சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, ஸ்வாமி! நான் துலுக்கனோ பிராம்மணனோ தெரியப்படுத்துமென்று கேட்க, நாகநாதர் காதண்டத்தை கையிலெடுத்தி தாலுகையோ லோரடி யடிக்க மூர்ச்சை யடைந்து கீழேவிழுந்தார். இவருக்கு சமுசயநிரசனம் சதாசாரியர் செய்யவெண்ணி அவர் சரீரத்தை சிஷ்யரைக்கொண்டு அடிப்பித்து ஒருருண்டையாகச் செய்வித்து தன் கையாலதை மூர்த்தியாகப்பண்ணி நெருப்பிலிட்டார். அக்கினி சாந்தியான பிறகு சதாசாரியருடைய கிருபை விளங்கவே சரீரத்திற் சைதன்னியம் சஞ்சரிக்கும் படியும் துரியத்தி ஐஸ்வரியவஸ்தை யடைந்த யோகியைப்போலவும் பாபமெல்லாம் பரிஹாரமாகி பரிசுத்தராயிருப்பதையுங்கண்டு நாகநாதர் நீ யாரென்று வினவ, பஹிரம்பட்டு மௌனியாகி பேசாமலிருந்ததை நாகநாதர்பார்த்துசமுசயங்

கள் போய்விட்டனவென்றும் அவயவங்க ளனைத்தும் பூர்த்தியாக வும் விச்... னமில்லாம லிருப்பதையுங்கண்டு ஆசாரியர் தனது அ...த ...தை ...ஷனுடைய தலைமேல்வைத்து தாரக மந்திரத்தை யுப...சித்தார். உடனே பஹிரம்பட்டு ஞானியாகி பகவத்பஜனை யைச்செய்... ப்ரம்மானந்தத்தை...யடைந்தார். அந்த ச...குரு மகி மையைச் சொல்லத் தரமோ? ஞானத்தை யறிவிக்குங் குருக்களனேக ரிந்த ஜகத்தி லிருப்பார்கள். ஆனால் சரீரத்தை விடுவித்து வேரோர் சரீரத்தைக் கொடுப்போரைக் காண்கிலம், பஹிரம்பட்டு பின்பு பண்டரிக்குச் சென்று பாண்டுரங்கர் சன்னிதியி லுல்லா சத்துடன் அவரைக்குறித்து பிரபலமான கவித்வங்களைப்பாடி அவர் முகோல்லாசத்திற் குட்பட்டிருந்தார்.

---

## பாபாஜி சரித்திரம்.

பார-மதியெனும் க்ஷேத்திரத்தில் தாமாஜியென்னு மோர் பிராம்மண ரிருந்தார். அவ ரவ்வூருக்கு கணக்கராகி மனையா ளுடன் கிரகஸ்த தருமத்தை யவலம்பித்து சிலமும், தைரியமும், இராஜ மான்னியதையும், சம்பத்து மிருந்து பாலகரில்லாமல் ரிக்த கிரகமா யிருப்பதைப் பலமுறைகண்டு சதியும் புருஷனும் தங் கட் குலதெய்வமான மார்த்தாண்டரைக் குறித்து வெகுவாகப் பூஜைகளைச் செய்தும் அனேகவருஷங்கள் பக்தியுடன் பஜித்துக் கொண்டு மிருக்க அவர் பக்தனுக்கு பிரசன்னராகி உன் மனோரதத் தைப் பூர்த்திசெய்கிறேன், வரங்களைக் கேளென்றார். தாமாஜி அவருக்குத் தெண்டன் சமர்ப்பித்து சுந்தர மிகுதியாயிருக்கு மவ ருடைய ரூபவிலாசத்தைப் பார்த்து பிரீதராகி குலதீபம்போன்ற ஓர் பிள்ளையை எனக்குக் கருணைசெய்யு மென்று வேண்ட, அவர் தாமாஜியை நோக்கி சத்பச்...னும் சாதுபூஜ்யனுமான ஓர் புத்தி ரனை யுமக்குக் கொடுத்தோமென்று சொல்லி அந்தர்த்தானமானார். சிலநாள் செல்ல மனையாள் கற்பவதியா யிருந்து ஒன்பது மாதங் கழிந்தபின் அவளோர் குமாரனைப் பெற்றாள். தாமாஜி பின்பு ஜாதகர்மங்க ளனைத்தையும் நடத்தி பன்னிரண்டு நாளான பிறகு ததீயாராதனை செய்து அப்பாலகனுக்கு பாபாஜியென்று பெய ரிட்டுத் தன் குலதெய்வத்தை லக்ஷித்து பிள்ளையை லாலிதமாக தாய் தந்தைகள் வளர்த்து வந்தார்கள்.



பாபாஜி. బాబాజీ.　　வேணுபாய். వేణుబాయి.

சிவாஜி மகாராஜன் தாமாஜிமேல்பிரீதியுடையவனாகி சிலசேனைகளுக்கு அவரைப்பிரபுவாகச்செய்ய சம்பத்துங்கைகூடிற்று. அதைக்கொண்டு தகப்பன் பிள்ளைக்கு வித்தைகளை யதிகமாகக் கற்பித்துக்கொடுத்து, பதினாறு வயதானவுடன் பந்துவர்க்கங்களனைவரையுங் கூட்டி பிள்ளைக்கு தாய்தந்தைகள் விவாகத்தைச் செய்தார்கள். சில வருஷங்கள் கழிந்தபின் தகப்பன் பிள்ளையை நோக்கி, பிள்ளாய்! எனக்குக் கிழத்தனம் வந்தது. நீ அரசனிடஞ்சென்று தெண்டன் சமர்ப்பித்து அவ்விடம் சேவைசெய்து இந்த சமுசாரத்தை நிர்வஹித்துக் கொள்ளக்கடவாயென்று சொல்ல, பாபாஜி இராஜனிருப்பிடத்திற்குச் சில சிபாய் சவார்களுடன் சென்று அரசனுக்குத் தெண்டனிட்டுநிற்க, இப்பிள்ளையின் குறிகளையும் நடத்தைகளையும் இராஜன் பார்த்து சேவகத்திலமைத்து சிலசேனைகளுக்குத் தலைவனாக்கி யுத்தத்திற்குப் போகும்படி கட்டளையிட்டான்.

பாபாஜி ரணகளத்திற் சென்று சத்துரு சேனைகளுக்கு முன் நடக்க தனக்குச் சினேகிதர்களான சிலர் செத்துவிழுவதைக்கண்டான். துர்த்தர்களான அவ்வெதிரிகளுடைய குண்டுகளும் கத்தியடிகளு மிவர்கள்மேல்விழ அனேக ருயிரைவிட்டார்கள். இதுகளை பாபாஜிகண்டு திகிலடைந்து அநுதாபத்துடன் தனக்குள்ளெண்ணத் தொடங்கினான். இந்த மானிடசரீரம் அருமையாக நமக்குக் கிடைத்தது. இவ்வண்ணமான சரீரத்தைச் சமுசாரத்திற்காகவே கழித்து விடுவோமாயின் வயிற்றிற்காகவே தேகத்தை விக்கிரயஞ் செய்தாப்போலாகும், நாம் பார்த்துக்கொண் டிருக்கும்பொழுதே பிராணிகள் போய்விட்டார்கள். இதிற் பிரயோஜன மொன்றுமேயில்லை. இவர்கள் மரித்ததுபோலவே யானுமிந்த ரணக்களத்தில் விழுந்துபோவேன். காலனுடைய ஆக்ஞை வருவதற்குமுன் பரமார்த்தத்தைக் காணவேண்டும். இப்படி செய்வதே மேன்மையென் றெண்ணும்பொழுது குதிரை அதிர்ந்து திரும்பிற்று. தனக்கு ஜகதீசரே ரக்ஷகரென்று குதிரைமேலிருந்து பயமின்றி பின் திரும்பினவண்ணம் அரண்ணியத்தி லோடிச்சென்றான். இப்படி வெகுதூரஞ்சென்று குதிரையை கைவிட்டு ஏகாந்தமாகவோரிடத்தை யேற்படுத்திக்கொண்டு ஓதேவ தேவரே! உம்மைக் காண்ப தெவ்வண்ணம்? சிரவண மெவ்வண்ணமானது? மனன மெவ்வண்ணமானது? சாதனமொன்றுந் தெரியவில்லையே! ஆரா

தனைக் கனுதணமான விடமெதவோ தெரியவில்லையே! என்று யோசிக்குமளவில் சப்தசுருங்கியென்று நாமத்தை வகித்த பவானி யாலயம் ஒன்று வெகுவாக மகிமையுடைதென்று தனக்கு சிறு பிராயத்தில் சில பிராம்மணர்கள் சொன்னசங்கதி ஞாபகத்து வந்து அவ்விடஞ் சென்றார்.

சப்தசுருங்கியில் பவானி ஆலயத்தில் தேவியைக்கண்டு நமஸ் கரித்து, இருபத்தொருநாள் அன்னபானங்களின்றி தவத்தைச் செய்ய மனது ஏகாக்கிரமாகி கண்டகதப் பிராணமான சமயத்தில் தேவி பிரசன்னமாகி வரத்தைக் கேளென்றாள். அதற்குப் பாபாஜி ஸ்ரீமந்நாராயணனை சேவிக்க விரும்புகிறேனென்ன, அத்தேவி இதனைக்கேட்டு அவரென் சுவாதீனமானவரல்ல, என்னைப்போன்ற சக்திகளனேகரவரிடம் சேவைசெய்திருப்பார்கள். உனக்குவேண் டுமாயின் திரவியம் கீர்த்தி இவைமுதலானதுகளைக் கொடுக்கக்கட வேன். ஸ்ரீஹரி, மாயாதீதர், மாயிகசாதனையைவிட்டு மனவாக்குக் காயங்களைச் சுத்தப்படுத்தினால் பெருமாள் காணப்படுவார். ஆனு லு முனக்கோருபாயஞ் சொல்லுகிறேனதை நீ செய்தாலவரை நீ காணலாம். குண்டோகாமுக்கு நீ போய் அவ்விடமிருக்குமோர் பர்வதத்தின்மீது வீற்றிருக்கும் சடலேசுவரரெனுமோர் லிங்கத் தைச் சேவிக்கவும். அதனிடமோர் சரோவர (தடாகம்) முமிருக் கும், மாண்டவ்விய மகாருஷி அவ்விடத்தி லனுஷ்டானஞ் செய்ய சுவாமிதரிசனங் கொடுத்து தபசியைக் காப்பாற்றினர். வேஷ்கு மஹமதெனுந் துலுக்க னவ்விடம் சாதனஞ்செய்து இக்கலியுகத் திற் பலசித்தி யடைந்தானென்று சொல்லி பகவத் கீதபுஸ்தகத்தை கொடுத்து அந்த திருக்குளத்தில் ஸ்நானம்பண்ணி இதனை வாசிப் பாயென்று கட்டளையிட்டு மறைந்தாள்.

பாபாஜி இதைக்கேட்டு சீக்கிரத்தி லவ்விடஞ்சென்று அனு தினமு மந்த தேவியார்ச் சொன்னப் பிரகாரம் அனுஷ்டித்து வந் தார். வைராக்கியமும் பகவானைக் காணவேண்டுமென்னும் வாஞ் சையுண்டானதால் நிராசையையுடையராகி அன்னத்தை அருந்தா மல் ஹரியின்மீது நினைப்பைவைத்து தவத்தைச்செய்து வந்தார்.

பாராமதியில் பாபாஜி தகப்பனாரான நாமாஜி யுத்தத்திற் பிள்ளை பலாயனமாகச் சென்றானென்பதைக் கேட்டு அதிக துக்கத் தை யடைந்து நாலுதிக்குகளிலுஞ் சேவகர்களை யனுப்பிச் சாருக்

கள் சஞ்சரிக்கு மிடங்களிற்சென்று சோதிக்கக் கடவீர்களென்று ஆக்ஞைச்செய்தார். அவர்களு மப்படியே போய் பார்க்கு மளவில் பாபாஜியைக்கண்டு மௌனலக்ஷணத்தி லிருந்தமையாற் பேசவொண்ணாமல் தாமதித்துத் திரும்பிவந்து சங்கதியைச் சொன்னார்கள். குன்றோரத்தில் மௌனியாகி தன்குமாரனிருக்கிறானென்பதைக்கேட்டு தாய தந்தைகள் சந்தோஷித்து அவன் சத்புத்திர னென்றும் குலதேவதையான மார்த்தாண்டர் சொன்ன மார்க்கத்தி லிருப்பானென்றும் மெண்ணி யிருந்தார்கள். அவ்வேளையில் மருமகள் வந்து மாமியார் மாமனுரைக்கண்டு தான் புருஷனிடம் போவதற்கு உத்தரவு கேட்டாள். அதற்கு அவர்கள் பாபாஜி, குறையொன்றும் வராமல் இவ்விடம் தானே வருவான், யௌவனபருவமுடைய நீ தனியாய்த் தூரஞ்செல்வது தகுதியல்ல வென்றார்கள். வேணுபாயி அவ்வார்த்தைகளைக் கேளாம லொண்டியாகவே புறப்பட்டாள். இதைக் கண்டு மாமனு ரோர் குதிரையையும் மனிதனையுங் கூடக்கூட்டி அனுப்பினார். அவள் தினந்தோறும் வழிநடந்து குன்றோரமைச் சேர்ந்து அவ்விடம் தபசியாகியும் இளைத்த சரீரமுடனுமிருந்த தன் கணவனைக் கண்டாள். பர்த்தா, அவளைப் பார்த்து இவ்விடத்திற்கேன் வந்தாய்? பெரியோரான தாய்தந்தைக ளிருக்கு மூருக்குப் போகக்கடவாய், நீ இங்கிருந்தால் நானு மிவ்விடத்தைவிட்டு நீங்கிப்போவே னென்றார். அவள் மறுமொழி பகராமல் மாதவரை மனதிலிருத்தி தூரத்திலுட்கார்ந்து புருஷனை பார்த்துக்கொண்டு திரும்பிச்செல்லச் சற்று மனமில்லாதிருந்தாள். மகாவிரக்தரான பாபாஜி அவளருகிற் சென்று கற்களை யவளைச்சுற்றிலும் வைத்து குகையைப்போ லுண்டாக்கி வழியொன்றும் வைக்காமல் கற்களால் அவளை பூர்த்தியாக மூடிவிட்டு தன்வேலையிற் றனித்தார். வேணுபாயி அக்குகைக்குள்ளிருந்து ஸ்ரீஹரி! விட்டலா! என்று சொல்லிக்கொண்டு இந்த வனித்தியமான தேகத்தி லாசக்தியை வைத்தால் ஹரிபதத்தை அடையமாட்டோ மென்றும் விசேஷமான பக்தியிலிருந்தால் விட்டலமூர்த்தியே காப்பாற்றுவாரென்றும் பர்த்தாவே குருவாகி குகையில் வைத்தாரென்றும் அர்த்தமுங் காயமு மாசாரியாதீனமென்றுஞ் சிந்தித்துச் சமாதியி லிருந்தாள்.

பாபாஜி பிரபஞ்ச மமத்வங்களை யடையாமல் பெருமானை மன

தில்சேவித்துக்கொண்டு சித்தத்தை ஏகாக்கிரப்படுத்திச் சரீரநாட்டமில்லாதிருந்தார். அவ்வேளையிலோர் வேடன், வனத்திற் றிரிந்துக்கொண்டு வருகையில் கைபாற் செய்யப்பட்ட அக்கற்குகையைக் கண்டான்; அதனைச் சுற்றிப்பார்த்து வருமளவில் நீலவர்ணமுடைய வஸ்திர மிருப்பதாக கல்சந்துகளிற்கண்டு இதில் திருடர்கள் தனத்தைக் கொண்டுவந்து ஒளித்துவைத் திருப்பார்களென்று நினைத்து அதனை யபகரித்துக்கொள்ள அக்கற்களை ஒவ்வொன்றாக எடுக்கலுற்றான் உள்ளிருந்தவள் கையை யாட்ட கையிலிருந்த கங்கண ஓசையைக்கேட்டு யாரோமனித னிருக்கிறானென்று அந்த கற்களை மெதுவாக ஒவ்வொன்றாக எடுத்து வைத்தான். பின்பு அதனுள் சுந்தரமான ஒருஸ்திரீ இருந்ததைபபார்த்து யாரென்று வினவ அவள் தன்சங்கதியைத் தெரிவித்தாள். அவ்வேட னிதைக் கேட்டு ஆச்சரியப்பட்டு அவளுக்கு வந்தனமிட்டுச் சென்றான். பின்பு அவள் தன்கணவ னிருக்குமிடத்திற்கு மெதுவாக வந்து சேர்ந்தாள். புருஷ னவளைப்பார்த்து இத்தனைநாள் பிழைத்திருந்தாயோ யென்ன, தேவரீர் கிருபையிருந்தபடியால் திரும்பிவந்தேனென்ன, புருஷனவளை நோக்கி என்னுடைய சாங்கத்திய மிவ்விட முனக்கு வெகுகஷ்டமாகும் தாயார் வீட்டிற்கு நீ செல்வது சுகமென்ன, மனையா ளவரைநோக்கி இவ்வுலகில்யார் அன்னை? யார் பிதா? இச்சரீரத்தை விட்டு ஜீவன் நீங்குங்கால் அவனுடன் செல்லவல்லவரெவருமில்லை பிராணிகள் சுகத்தையடைந்திருக்கும் பரியந்தம் சுற்றத்தார் சேர்ந்திருப்பர் அந்தியகாலத்தில் யாரும் துணைவாரார், பாரமார்த்தகமெனுஞ் சம்பத்தை நானடையும் வண்ணம் நான் உம்மோடிருக்கும்படி கருணைசெய்யவேண்டும், பூர்வஜன்மத்தில் நான் எவ்வளவோ சுகிர்தங்கள்செய்து இப்பிறப்பில் உங்களை என் கணவராகப் பெற்றேன் ஆதலின் என்னை அலையவிடாமல் உமது கிருபாதிருஷ்டியினு லருகிலிருத்திக் கொள்ளுமென்று பிரார்த்தித்தாள். இதைக்கேட்டு அவரிவ்விடத்தி லிருக்கும் இலைசருகுகளைப் பக்ஷித்துப் பஜனைசெய்துக்கொண்டிருக்கக் கட்டளையிட, அவள் கணவனுக்கு நமஸ்கரித்து எனக்கு கதி நீரே யென்றிருந்தாள்.

பாபாஜி அவ்விடம் பன்னிரண்டு வருடங்கள் பரமநிஷ்டையுட னனுஷ்டித்து வந்தார். ஒருநாள் அவர் கீதையை வாசித்துக் கொண்டிருக்க பெருமாளொரு புலிரூபத்தை யடைந்து ஓசை

யுடன் வாயைத் திறந்துகொண்டுவந்து அவர்முன் சற்றுநேர முட்கார்ந்துப் போய்விட்டார். ஓரிரவில் பெருமாள் மகா சர்ப்ப மாகி வந்து அந்த பக்தருடம்பை முற்றிலும் சுற்றிக்கொண்டுக் கடிக்கத்தொடங்கினர். பாபாஜிஸ்திமிதமனதையுடையவராகிஹரி நாமத்தைச்சொல்லிக்கொண்டிருக்க இதைப்பெருமாள்கண்டு தன் னுடைய நிஜரூபத்தைத் தான்வகித்து நித்தியமங்கள விக்கிரகராகி விஜய ஹஸ்தங்களிற் பஞ்சாயுதங்கள் விளங்க கடக கங்கண கிரிட் ஹாரங்களும் கௌஸ்துபமணியும் பீதாம்பரமும் பத்மமாலையு முடையராய் சேவை சாதித்து அபயமென்று பெருமாள் சொல்ல அப்பொழுது பாபாஜி கண் திறந்து பெருமாளுடைய சௌகு மாரிய சுந்தரரூபத்தைப் பார்த்து மயிற்குச்சிலிர்ப்புடையராகி நமஸ் கரித்துநிற்க பெருமா ளவரைநோக்கி வேண்டிய வரங்களைக் கே ளென்றார். பாபாஜி அதைக்கேட்டு ஸ்வாமி! தேவரீருடைய தரி சனத்தா லெனக்கிஷ்ட சித்தியாயிற்று கிருதார்த்தனானே னென் றார். அவ்வேளையில் வேணுபாயிவந்து பெருமாள் திருவடிகளில் நமஸ்கரித்து ஸ்வாமி! தேவரீருக்குச் சமானமான தெய்வமுண் டோ? என்று பிரீதிவிசேஷத்தால் நமஸ்கரித்து அடியற்ற மரம் போல் நின்றாள். சர்வேஸ்வர னவர்களைக்கண்டு சொல்லுவார். நீங்க ளிதுமுதல் அயாசிதமான விருத்தியுடன் சுகமாக வூரிலிருக்கக் கடவீர். அனுதாபத்துடன் சரண மடைந்தவர்களுக்கு ஹரி நாம மந்திரத்தைச்சொல்லி என்னுடைய குணானுவாதத்தை அவர்களுக்குப் போதித்துப் பாடிக்கொண்டிருக்கக்கடவீர். புண் டரீகன் நிமித்தியம் பூவைகுண்டமான பண்டரிபுரத்தில் வந்து நிஜ பக்தர்களை பார்த்துக்கொண் டிருக்கிறேன். பிரதிவருஷமும் பண் டரி புரத்திற்குவந்து அவ்விடத்தில் பக்தர்களைப் பார்த்துவரக் கடவீர். சத்சங்கத்திற்குச் சமானமானது வேறொன்றில்லை. நாமத் தை மறவாமலிருக்கக்கடவீ ரென்று சொல்லி நாராயணமூர்த்தி மறைந்தருளினர். பக்தரிருவரு மதிகப் பிரியத்துடன் ஸ்ரீஹரி! விட்டலா! அச்சுதா! முகுந்தா! அரவிந்தாக்ஷா! லக்ஷ்மீபதி! ஆதிபுருஷா! கோவிந்தா! என்று சொல்லி சந்தோஷிக்க, அங் கங்களனைத்து மதிக சுந்தரமாயின. பெருமா ளாக்ஞைப்படி அவ் விடம்விட்டுநீங்கி பட்டணத்திற்சென்று தங்க ளாயுளைக் கழித்து வர, வார்த்திகம் வந்ததே பெருமாளாக்ஞையைக் கொண்டு தம்

ஹூரில் விட்டலமூர்த்தியை ஸ்தாபித்து ஹரிகுண கீர்த்தனையை அதிகப் பிரீதியுடன் செய்துவந்தார்கள்.

---

## முகுந்தராஜுன் சரித்திரம்.

ஜயதுபாலனென்றோரரசன் சௌராஷ்டிர தேசத்திற்கு அதிபதியாகிப்பிரஜைகள்மேற் பிரீதியுடன் இராஜ்யபரிபாலனம்பண்ணி வருவான். விலாசபுருஷர்கள் தங்களவயவங்களை விதியுடனிரக்ஷிக்கிறதுபோல குலாசார தர்மங்களிற் குறைவுவராமல் அரசாக்ஷியை நிறைவேற்றி வருவான். ஓர்நாளவ்வரசன் புராணத்தைக்கேட்டுக்கொண்டிருக்க சகல சாதனங்களைச் செய்தாலுஞ் சற்குரு கிருபையின்றி பவதரண மாகாதென்றுச் சொல்வதைக்கேட்டு தனக்கது அநுபவமாம்படி சதாசாரியரை யடையவேண்டுமென்று மனதிலெண்ணி, பூரண பிரயத்தினத்தை பின்வருமாறுச் செய்யலாயினன். ஆசாரியராகி வருபவருக்கு தானங்கள் தக்ஷிணைகள் வெகுவாக கொடுக்கப்படுமென்று விளம்பரப்படுத்தினன். இதைக் கேட்டு அளவற்ற பேர்ஆசையால் ஏவப்பட்டவர்களாகி உபதேசங்களைச்செய்ய வல்லவரென்று அரசன்முன் வந்தார்கள். அவர்களனைவரும் ஞானத்தைச் சொல்லுகிறோமென்று தெரிவித்தபோது அரச னவர்களுக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து, ஸ்வாமிகளே! இதற்குத்தா னுங்களை அழைத்தேன். மனவாக்குக் காயங்களா லுங்களைச் சரண மடைகிறேன். அநுபவஞான மமையும்படி அனுக்கிரகிக்கவேண்டும். வாசாஞானம் வேண்டாம். வஸ்துவானுபவத்தைக் காண்பிக்க வேண்டுமென் றுரைத்தான். அவர்களதற்குப் பழமையான சாஸ்திர லக்ஷணங்களும், உபாசனைகளும், யோக லக்ஷணங்களும் தெய்வ மந்திரங்களும் உசிதங்களென்று சொல்லி அர்த்தங்களை யறிவிக்க அரசனவை செம்மையல்லவென்று சொல்லிவிட்டான்.

சிலர் சுருதிகளுக் கர்த்தங்களைச் சொல்லி வேதாந்தத்தை விவரித்துச்சொல்ல அநுபவத்தைக் காட்டுமென்று அரசன் வினவ, அவர்கள் சமாதானஞ் சொல்லச் சக்தியற்றவ ரானார்கள். ஜங்கம குருக்கள் சிவபூஜைகளையே செய்யுமென்று கூற அப்பூஜைகளினாலநுபவ முண்டாவதுபோற் காணவில்லையென்று அரசன் சொன்னான். கோசாயிகள் அலகுநிரஞ்சன் என்னும் சதாசிவனைச் சேவிக்கச்சொ



முகுந்தராஜன். ముకుందరాజు. — போதலர். — விடலமூர்த்தி. విఠలుడు. — ருக்குமணி. రుక్మిణి.

ன்ஞர்கள். பௌத்தகுருக்கள் பாரச நாதரைப் பஜிக்கச் சொன்ஞர்கள். துலுக்க குருக்கள் நிராகாரத்தை நோக்கச் சொன்ஞர்கள். இப்படி யனேகர் தமதிஷ்டப்படிச் சொல்ல அரசனிவர்களனைவரையும் பார்த்து நீங்கள் பகல்வேஷக்கார ராவீர்கள், ஆசையினுற் கட்டுண்டவர்கள், அவித்தையினுல் சூழப் பட்டவர்கள், அனுபவம் சற்றுமில்லாதவர்கள் என்றுகூறி அவர்களுடைய சொத்துகளனைத்தையும் பற்றிக்கொண்டு நீங்களனைவரும் சிறைச்சாலையிற் செல்ல வேண்டுமென்று சொல்ல, அவர்க ளனைவரும் மனக்கலக்கமுற்று ஓ அரசனே! எங்களைப் பரீக்ஷைசெய்யும், வேதாந்தத்தில் அறியத்தகுந்த அர்த்தங்க ளனைத்தையும் உமக் கறிவிப்போம். எங்களைச் சிறைச்சாலையில் ஏனிடுகிறீரென்று வினவ, அரச னவர்களைநோக்கி அனுபவ ரகிதமான வாக்கியங்க ளனைத்தும் உப்பில்லாத உணவுபோலாம், நீங்கள் பதினெண் வர்ணத்தாருடைய குருக்களாவீர்கள், என்னுடைய சமுசயத்தைப் போக்கடிக்க வல்லவரல்லரென்று விடைபகர்ந்து அவர்களைச் சிறைச்சாலையில்வைத்து அவர்களைக்கொண்டு ஒரேரியைக்கட்ட வாரம்பித்தான். குருக்கள்மார்களும் பெரியோர்களுமான வவர்கள், மண்வெட்டிகளையும் கூடைகளையும் கைக்கொண்டு மண்ணைத்தோண்டி ஏரியைக் கட்ட வாரம்பித்தார்கள். இந்த உபாதியை யாருடன் சொல்லுவோம்? எப்படிச் செய்வோம்? ஏதுவுந் தோன்றவில்லையே என்று ஏங்கி அரசனுக்கினைக்கு அவர்க ளுட்பட்டிருந்தார்கள்.

அரச னதிக பிரதாபத்தையும் வெகு சுகீர்த்தத்தையு முடையவனுக விருந்தான். குருக்கள்யாருடைய சாமர்த்தியம் இவன்முன் போரவில்லை யாதலால், தீனர்களாகி அவனுக்கினைக்குட் பட்டார்கள். அரசன் சமுசாரத்தைவிட்டு ஸ்ரீஹரியை மனதிலெண்ணி நமஸ்கரித்து ஓ சர்வேஸ்வரனே! ஸ்ரீரகுராமா! ஸ்ரீகுருநாதரைச் சீக்கிரத்தி லனுப்புமென்று அதிதீவரமாண சன்ஞஹத்தை (பிரயத்தனத்தை)த் தான் கொண்டு உபசாரங்க ளெவையுஞ் சகிக்காமலும் உலகில் நன்மையொன் றில்லையென்றும் பார்த்து சதாசாரியரை யெப்போது அடைவேனென்றும் உள்ளத்திலுள்ளபடி காண்பதெப்போதென்றும் ஏகநிஷ்டையுட னரசனிருந்தான். சிறைச்சாலையிலும் குருக்க ளனைவருங் கூடிப் போக்கற்றுப் புலம்பத் தொடங்கினர்கள். தானதக்ஷிணைகளை அரசன், அதிகமாகக் கொ

டுப்பானென்று நாமிவ்விடம்வர அவன் குரூரனுகித் தடாகத்தைக் கட்ட மண்ணைத்தோண்டச்செய்தான். வீடுகளில் தாராபுத்திராதிகளெவ்வளவு கிலேசத்தை யடைந்தார்களோ? ஸ்ரீஹரி எப்பொழுது காப்பாற்றுவாரோ தெரியவில்லையே! அச்சுதா! கிருஷ்ணு! அப்பிரமேயவரதா! நீர், தருமத்தை ஸ்தாபிக்கும் பொருட்டு அவதாரங்களெடுக்கின்றீர். ஓ பரந்தாமா! தெய்வம் நீயென்று நாங்கள் நம்பினோம் சீக்கிரத்தில் வந்து எங்களுடைய சிறையைக் கண்டித்து காப்பாற்றுமென்று சிறைச்சாலையிலிருந்து விடுதலையடைய இவர்கள் ஸ்ரீஹரியை பஜித்தார்கள்.

இவ்விருதிறத்தார் முறைகளைக்கேட்டுப் பெருமாள் பிரியத்துடன் கமண்டலத்தைக் கையிலேந்தி பூணூலும் கடிசூத்திரமும் கௌபீனமும் ஒருவஸ்திரத்தை போர்வையாக வுடையவராகிப் பிராம்மணப் பிரம்மசாரியாகத் தோன்றப்பட்டு முகுந்தராஜரெனும் பேரால் அந்தஏரி சமீபத்தில்நின்று அவ்விடம்வேலைசெய்யும் பெரியோர்களுக்குத் தெண்டன்சமர்ப்பித்து ஸ்ரீயப்பதிக்குச் சேவகராகியும் பிராம்மணர்களாயிருந்தும் இந்தவேலையை இப்படி செய்துக்கொண்டு இவ்விடமேன் இருக்கிறீர்களென்று கேட்க, வாமனரூபராகியும் சுந்தர திருமேனி யுடையரும், அழகுபொருந்திய திருமுக மண்டலமும் ஷட்குணபூர்த்தியுமான மங்கள மூர்த்தியைக் கண்டு அவர்களனைவரு மிந்த சிறைச்சாலைக்கு நீரேன் வந்தீர்? எங்களுபதேசங்கள் வியர்த்தமென்று அரசன் கோபித்து எங்களைச் சிறையில்வைத்தான். உம்மையும் பார்த்தாலுயின் திரஸ்கரிப்பானே! என்றார்கள். அதைக்கேட்டு முகுந்தவாமனர். முன்பாக உங்களை விடுவிப்பேன். நீங்கள் வேலைகளைவிட்டென்பின் வாருங்களென்றார். அவ்வண்ணமே அவர்களும் வேலைகளைவிட்டு வந்தனர். அரசனுடைய சேவகர்கள் போகக்கூடாதென்றுத் தடுக்க முகுந்தரவர்களை நோக்கி உங்கள் வேலைக்கு விக்கினம் வாராமல் பார்க்கக்கடவீர்களென் றுரைத்தருளினர். மண்வெட்டி கூடை முதலானவைகளெல்லாம் அவைக்கு அவையே வேலைகளைச் செய்துக்கொண் டிருந்தன. சேவகர்களிந்த விந்தையைக்கண்டு அரசனிடஞ் சென்று ஸ்வாமி! ஓர்பிரம்மசாரி பிராம்மணர் ஏரியினிடம் வந்து வேலைசெய்துக்கொண்டிருந்த அக்குருக்கள்மார்களைத் தன்னிடத்திற் கழைத்துக்கொண்டார், ஆயுதங்களனைத்தும் மவைக்கு

அவையே வேலைகள் செய்கின்றன வென்றனர். இதைக்கேட்டு அரசன் வியப்புற்று உடனேவந்து பார்த்து ஆச்சரிய மடைந்து அந்த பிரம்மசாரிக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, ஸ்வாமி! வீட்டிற்குச் செல்வோம் வாருமென் றழைக்க, அவ ரரசனைநோக்கி யிக்குருக்களனைவரையும் சிறைச்சாலையிலிருந்து விடுதலை செய்து அவர்களுக்கு தனத்தையுங் கொடுக்கவேண்டுமென்று சொல்ல அரசனவரிஷ்டப்படி அவர்களை சிறையிலிருந்து விடுவித்து யாவரையும் சன்மானித்துத் தகுதியாகத் திரவியத்தையுங் கொடுத்தனுப்பினான்.

பின்பு அரசன் முகுந்தராஜரைநோக்கி, ஸ்வாமி! நான் குதிரையேறு மவசரத்திற்குள் குருபோதை அனுபவமாக அடியேனுக்குண்டாகும்படி அனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்க, அப்படியேயென்று குதிரையை யழைப்பித்து அரசனை யதின்மீதேறச்சொல்லி அவனேறுஞ் சமயத்தில் குதிரையை ஐம்பத்திரண்டடி யடிக்கவே அரசன் தேகத்தை மறந்தான். குதிரையுங் கீழேவிழுந்தது. ஆசாரியர் கடாக்ஷிக்கவே அரசன் ஜாக்கிரதைக்குவந்து நமஸ்கரித்து அதிக பிரேமையுடனிருந்தான். பின்பு முகுந்தர் கவித்வ இரசனையால் தத்துவத்தை அரசனுக்குச் சொன்னார். அதனாலிந்த விஸ்வம் ஹரிமயமென்று அரசனனுபவத்திற் கண்டான். அக்குதிரை பூர்வ ஜன்மத்தில் கந்தர்வராஜனாக விருந்து சாபஹேதுவால் குதிரை ஜன்மத்தை வஹித்து முகுந்த ராஜரால் சாபவிமோசனத்தைப் பெற்றது.

---

## போதலர் சரித்திரம்.

தாமணகாமென் றேரூரில் போதலரெனுங் குடியானவரிருந்தார். பூவைசிய விருத்தியிலிருந்து நேமந் தப்பாமல் பாண்டுரங்கர் மேல் பக்திசெலுத்தி வருவார். அவருக்கு உபநாமம் (மாறுபேர்) ஜகதாபரென்றும் சொல்லுவார்கள். அவர்மனைவி அபசாரங்களுக்கு அதிக அச்சத்தை யுடையவளாகி மமதாயீயெனும் நாமத்தைப் பெற்றிருந்தாள். பிள்ளை யாமாஜீ யென்றும் மருமகள் பகீரதியென்றும் நால்வரும் ஏகமனதாயிருந்து ஈஸ்வரனுடைய தியானத்தில் தற்பரரா யிருந்தார்கள், பிரபஞ்சவிருத்தியி லவர்களுக்கு விரக்தியே மேலிட்டிருக்கும். தனம், சம்பத்து, பசுசமுருத்தி, கௌரவமிவையாவு முண்டாயிருந்தும் பக்தியுடன் பாண்டுரங்கனை யனு

தினமும் பஜித்து வருவார்கள். பிரதி ஏகாதசியிலும் போதலர் பண்டரி புரத்திற்குச்சென்று துவாதசி பாரணஞ்செய்து அனேகருக் கன்னமிட்டு மறுநாள் தாமணகாமுக்குத் திரும்பி வருவார். இந்நியமத்தை வெகுகாலமாக நடப்பித்து வந்தார்.

இப்படியிருக்க ஓர்காலத்தி லத்தேசங்களிற் கருப்புகாலம் வந்தது, அதனாற் சகலஜனங்களு மன்னத்திற்குச் சங்கடப்பட்டுக் கொண்டிருக்க போதலரிதைக்கண்டு புராண புருஷரான பகவான் யாவரிடத்து மிருப்பவரன்றோவென்று மனைவியைக்கண்டு ஏகாந்தத்திற் சொல்லலுற்றார். பசியுடையோருக் கன்னமளிக்கவேண்டும், உலர்ந்தசெடிகளுக்குத் தண்ணீரை விடவேண்டும், குளிர்காலத்திலேழைகளுக்கு வஸ்திரங் கொடுக்கவேண்டும், பரவாவிகளுக்குத் திரேகம் அசௌக்கியமாயின் ஔஷதபத்தியங்களைக் கொடுக்கவேண்டும், ஜலத்தில் அமிழ்ந்து போகிறவர்களை மேலுக் கெடுக்கவேண்டும் ஏழைப்பிராமணர்களுடைய விவாகத்தைச் செய்விக்கவேண்டும் ஒருவர் வீட்டிற்கு நெருப்புப் பிடித்தா லுடனே அணைக்கவேண்டும் தாகமெடுத்தவர்களுக்குத் தண்ணீர்கொடுக்கவேண்டும் யாசகருக்கடங்கி நல்வார்த்தைச் சொல்லவேண்டும். இவ்விதமாகச் செய்துவந்தால் அக்ஷயபுண்ணியமமையும், அதனால் சத்துவகுணந் தலையெடுக்கும், அதனால் வைராக்கியமுண்டாம், அதனால் விக்கினங்களான விஷயங்கள் விட்டுப்போம், அதன்வழியால் விவேகமுண்டாம், அதனால் தன்னையறியலாம், பின்புதனக்காதாரத்தலைவரான ஸ்ரீராமரை யறியலாம். இப்படி விவேக வைராக்கியத்தோடுங் கூடி காலயாபனஞ் செய்தால் ஹரிபதமடையப்படுமென்றார். மனையாளு மிவ்வசனங்களைக்கேட்டுப் பரோபகாரத்தை மிகுதியாகச் செய்துவருவாள்.

போதலரந்த கருப்பு காலத்தில் அன்னதானத்தை யமிதமாகச் செய்துவருவார். ஏகாதசி தினத்தில் பண்டரிபுரத்திற்குச் சென்று அனேகஜனங்களுக் கன்னமிடுவார், இப்படி வெகுநாட் செய்துவரத் தன்னிட மிருந்த தனமனைத்துஞ் செலவாய் விட்டது. தானியங்களையும், வஸ்திரங்களையும், பசுமாடுகளையும் விற்று அன்னதானஞ் செய்துவருகையிற் பணமில்லாமல் தரித்திரத்தாற் பிடிக்கப்பட்டு கூலிக்கு தேககஷ்டஞ்செய்து அதினால்வரும் திரவியத்தால் குடும்ப ரக்ஷணை செய்துவருவார். இப்படி கஷ்ட

காலம் வந்தும் ஹரி! விட்டல! என்று ஸ்மரணை செய்துக்கொண்டு ஏகநிஷ்டராயிருக்கப் பாண்டுரங்க ரப்போதைக்கப்போது தரிசனங்கொடுத்துக் கொண்டிருப்பார்.

ஒருதடவை யவர் ஏகாதசி தினத்தில் பண்டரி புறத்திற்குப் பிரயாணமானூர்; கையிற் பொருளில்லாததினுல் காட்டிற் சென்று விறகைச் சேர்த்துச் சுமயாகக்கட்டி அச்சுமையைத் தன்தலைமேல் வைத்துக்கொண்டு அவமானத்தைவிட்டு பண்டரி புரவீதியி லதை விற்று மூன்றுதுட்டை கைக்கொண்டு சந்திரபாகாநதிக்கு வந்து ஸ்நானம் பண்ணுவதற்கு சங்கல்பஞ் சொன்ன பிராம்மணனுக் கொருதுட்டைக் கொடுத்து சுகந்த புஷ்பங்களுக் கொருதுட்டைக் கொடுத்து, ஆலயத்திற் சென்று ஹரியைபஜித்துப் பிரபலமான பக்தியைப் பாண்டுரங்கரிடஞ் செய்தார். அன்றிரவில் ஹரிகுண கீர்த்தனையைக் கேட்டிருந்து அருணோதய சமயத்தில் நதிக்குச் சென்று நீராடி கடைவீதியில் வந்து ஓர் கோமட்டியினிடம் ஓர் துட்டுக்கு மாவை வாங்கிக்கொண்டு திரும்பி ஆற்றின் கரைக்குச் சென்று அந்தமாவை எந்த பிராம்மணனுக்குக் கொடுக்கவேண்டு மென்றாலும் பருப்பு உப்பு ஒன்றுமில்லாம லதனைவாங்க யாருமொப்பாம லிருந்தார்கள். போதல ரப்பொழுது பிராம்மணர்களை நோக்கி நான் ஏழை, என்னுடைய தானத்தையார் கொள்வார்கள், தனவந்தர்கள் வெகுவாக அன்னதானங்களைச் செய்வர் அனுதனை வென்னுடைய அன்னதானத்தையார்கேட்கப் போகிறார்களென்று அனுதாபத்துடன் ஹரி! கிருஷ்ண! கோவிந்தா! வென்று அவ்வாற்றின் கரையே யுட்கார்ந்திருந்தார். அப்பொழுது பெருமாளொரு விருத்தப் பிராம்மண வேஷத்தைப்பூண்டு கையிலோர்தடியை பிடித்து கிழிந்த வஸ்திரமும் தலையிலோர் குல்லாவுமுடையராய் போதலரிடம் வந்து நீரெனக்கு புராதான எஜமானராவீர், பெரிய பிராம்மணர்கள் பெரிய எஜமான்களைக் கூடியிருப்பார்கள் நான் தரித்திரனுதலா லொருவரு மன்னத்தைக்கொடார். பசியுட னும்மிடம் வந்தேன் உம்மிட மிருக்கிற எதையாகிலும் நீர் கொடுமென்று கேட்க போதலர் சந்தோஷத்துடன் அவர்முந்தாணியில் முடிந்திருந்த மாவைக் கொடுத்து அதிக விநயத்துடன் ஸ்வாமி! பருப்பு உப்பு வொன்றுமில்லையே! என்று சொல்ல பெருமா ளவரைநோக்கி சமயோசிதமான பதார்த்தமெதுவோ அது

வேதனக்குப் போதுமென்றும் இதற்கே திருப்தியடைந்தேனென்றும் ஆலயத்தில் தானிருப்பதென்றும் அவ்விடஞ் சமையற்செய்ய ஸ்தலமில்லையென்றும் ஆற்றினிடமே சமையற்செய்வேனென்றுஞ் சொன்னார்.

பகவான் போதலரைநோக்கி விறகைத் தேடிக்கொண்டுவரச் சொல்ல, போதலருடனே அங்குமிங்குமிருக்குஞ் சுப்பல்களைப்பொறுக்கி அந்தபிராம்மணரிடங் கொடுக்க அவர்ஸ்நானம் பண்ணிஅக்கரையோர முட்கார்ந்து மாவை பிசைந்துக்கொண்டிருக்க போதலர் நெருப்பைக் கொண்டுவந்து கொடுத்தார். அவ்வேளையில் ருக்மணிபிராட்டியும் ஓர் விருத்தஸ்திரீ வேஷத்தைத் தரித்துக் கணவனிடம்வந்து ஓ பிராம்மணரே! எஜமானரைக் கண்டவுடனென்னைக் கோயிலி லொண்டியாக விட்டுவருவது உமக்கு நியாயமா? எனக்குப் பசியாயிற்று. நான் சமையற் செய்கிறேனென்று அவள் ஸ்நானம்பண்ணி அடுப்பினிடஞ் சென்று சமையலைச் செய்யத் தொடங்கினாள். போதல ரதைக்கண்டு தம்பதிகளிருவரும் பக்ஷணசெய்வது தனக்குப் பிரியமாயிருந்தும் இருவருக்கு மன்னம் போராதேயென்று அநுதாபத்துட னிருந்தார். அனந்தசித்திகளுக் காதாரரூபியான ருக்மணி பிராட்டியின் கைப்பட்டமாத்திரத்தில் பிரசாதம் சமுருத்தியாயிற்று. அப்பொழுது இலைகளில் பிரசாதத்தை வட்டித்து பெருமாள் போதலரைநோக்கிப் போஜனத்திற்கு வாருமென்றழைக்க அவரவ்வந்தணரை நோக்கி தேவரீருச்சிஷ்டத்தைப் பின்னிட்டு புசிப்பே னென்றார், பின்பு பெருமாளும் பிராட்டியும் பக்ஷித்துப்போனவுடன் போதலர் தமதுள்ளத்தில் நம்மிட மனோபிஷ்டத்தைப் பூர்த்தி செய்ய பெருமாளும் பிராட்டியும் வந்தார்களென்று தெரிந்துக்கொண்டு அவர்களுடைய உச்சிஷ்டத்தை மஹாப்பிரஸாதமாக தான் பக்ஷித்து திருப்தரானார்.

அநந்தரம் போதலர் தேவாலயத்திற்குச் சென்று பெருமாள் திவ்விய ரூபத்தைக் கண்டு ஓ பாண்டுரங்கரே! பக்தவத்ஸலரே! பரமபுருஷா! கோவிந்தா! என்று தோத்திரஞ் செய்து ஸ்வாமி! தேவரீர் இன்றையதினம் உப்பு பருப்பில்லாத வெறுமன்னத்தை யுண்ணீரோ! அடியேனைத் திருப்திசெய்ய வந்தீரன்றோ? ஓ தயாநிதியே! என்று பிரேமவாக்கியங்களைச் சொல்லப் பிரியத்துடன்

பெருமாளவரைநோக்கி பணத்தில் மேன்மை யுடையவர்களிடம் போஜனமிடுகிறதில்லை, கௌதுகமொன்றைக் காண்பிக்கிறேன் வாருமென்று அழைத்துக் கூடயிட்டுக்கொண்டு பெருமாளோர் பிராம்மண ரூபராகி கிழிந்த வஸ்திரங்களும் கையில் ஊன்றுகோலுமுடை கிழவயருடைய வேஷமும் நடுக்கமுற்றச் சரீரமும் ஏழைத் தன்மையைக் காண்பித்தும் அவ்வூரிற் சென்றார். அத்தினத்தில் ஒருகிரகஸ்தன் ஆயிரம் பிராம்மணர்களுக்குப் போஜன மளிப்பதற்கு தீர்மானித்து முன்னாளே பிராம்மணர்களனைவரையு மழைத்து ஓர் ஜாபிதாவி லவர்கள் பேர்களை யெழுதிவைத்து மறுதினத்தி லிலைகளைப் போட்டுப் பிரசாதத்தை வட்டித்து பேர்களின் பிரகாரமவர்களை யழைத்து ஒவ்வொருவரையு முட்காரச் செய்தான். பிராம்மண வேஷங்கொண்ட பெருமாளவ்விடத்திற்சென்று ஐயா! மகத்தான பசியால் வருந்தி வந்தேன், பக்ஷணையிடச் செய்யுமென்ன, அதற்கவன் அவரைநோக்கி யழையாப் பிராம்மணர்களுக் கிவ்விடத்திலிட மில்லையென்ன, அதற்குப் பெருமாளாயிரம்பேருக்குச் சாப்பாடிடுமளவி லொருவருக்குப் போஜனம் கிடையாதோவென்று பலாத்காரமாக வோரிலையி லுட்கார்ந்தார். அப்பொழுது அவ்விடத்திலுள்ள ஜனங்களவர் கையைப்பிடித்து அடஞ்செய்யும் பிராம்மணனென்று வெளியிற் கொண்டுவந்து விட்டார்கள். இதை போதலர் கண்டு ஐயோவென்று ஆர்த்தியையுடையவரானார். பிராம்மணர்கள் கடைவீதியில் திரைகளைப்போட்டுபோஜனத்திற்குஉட்கார்ந்தார்கள். ஆபோசனத்தைக்கொண்டு பக்ஷிக்குஞ்சமயத்தில் பெருத்த மணற்காற்றுஅடித்து அவ்விடத்தில் போட்ட இலைகளைப் பறக்கச்செய்தது, திரைகளாற்கட்டின வஸ்திர மண்டபம் கீழேவிழ வட்டித்த பதார்த்தமனைத்தும் மண்ணாய்விட்டது. பெருமாளொருவரில்லா திருந்ததாற்போஜனமனைத்தும் புழுதியிற் கலந்தது பெருத்த சமாராதனையா யிருந்தும் பிரயோஜனமில்லாமற் போயிற்று. அப்பொழுது பகவான் போதலரைப்பார்த்துபாவசுத்தியின்றி பக்தியற்று டாம்பீகருடையபிராம்மண போஜன மிவ்வாறும், நீர் நல்லமனதுடன் கொடுத்த அன்னமெனக்குசுகமாயிருந்ததென்றுசொல்ல, போதலர் மகத்தான சந்தோஷத்தை யடைந்துபெருமாளை நோக்கி தேவரீரளவுபடாத செய்கைகளைச் செய்வீரென்று திருவடிகளைப்பிடிக்க, பெருமாள் கோயிலுட் சென்றார்.

பின்பு போதலர் பொழுது விடிந்தவுடன் சாமண்கார்முக்குப் போகத் தொடங்கினார். வழியில் பசியாலும் வெய்யிலினாலும் வருத்தமடைந்து நடந்துக்கொண்டிருக்கப் பெருமாளிதையறிந்து மார்க்கத்திலோர் பெரியதோட்டத்தை யுண்டாக்கி அத்தோட்டக்காரன் தானாகி கவலை யடித்துக்கொண் டிருந்தார். போதலர் பெருமாளையே நினைத்திருந்து மனதிற் சிதோஷ்ணங்களைக் கொண்டாடாமல் வழியி லத்தோட்டத்தைப் பார்த்தும் அதனுள்ளே பிரவேசியாமற் போய்க்கொண்டிருக்க, அத்தோட்டக்காரர்மனைவி போதலரிடம்வந்து ஐயா! தோட்டத்திற்குள் வாருமே! ரொட்டியுங் கந்தமூலங்களையும் பக்ஷித்துப்போமே! தோட்டக்காரரும்மை தூரத்திற் பார்த்து சீக்கிரத்திற் கூப்பிடச்சொன்னார். இவ்வழியிலிருக்குமெங்களுடைய குடிசையையும்முடைய பாதஸ்பரிசத்தினால் பவித்திரஞ் செய்யவாரு மென்றாள். இதைக்கேட்டு போதலர் தோட்டத்திற்குட் சென்று தன்னிஷ்டப்பிரகாரம் பக்ஷித்து ஜலபானம் பண்ணி வழிநடந்து சென்றார். சற்றுதூரம் போனபின்பு திரும்பிப்பார்க்குமளவில் அவர் ஒன்றையுங் காணவில்லை. இது பகவானுடையச் செய்கையென்றறிந்து தன் வீடுசேர்ந்தார்.

போதல ரொருகால் தனது கொல்லைப்பயிரைச் செய்துவர, அது கதிர்கள்விட்டு பக்குவமாகுந் தருணத்தில் தானோர் மஞ்சைமேல் வழக்கப்படி பக்ஷிகளை யோட்ட உட்கார்ந்து தனக்குள்ளெண்ணத்தொடங்கினார். இந்தப் பக்ஷிகளை யேன் ஓட்டவேண்டும்? அவைகள் தங்கள் வீட்டிற்குத் தானியத்தைக் கொண்டுபோனால்தைத் திருடென்று சொல்லப்படும். அவைகள் துக்கத்தையடைய அடித் தோட்டுவது சரியல்ல. சகல பூதங்களிலும் சர்வேஸ்வரிருப்பாரென்று அவைகளை யடிக்குஞ் ஜாட்டியைக் கண்டத்திற் சுற்றிக்கொண்டு ஹரி! நாராயணா! கோவிந்தா! வென்று சொல்லிக்கொண்டு அவ்விடஞ் சும்மாயிருந்தார். அவ்வேளையில் மனையாள் ரொட்டியைக் கொண்டுவந்து அவருக்குக் கொடுத்துப் பிராணநாதரே! நமக்கோர் வருஷம் வரைக்கும் போஜனத்திற்கு தானியம் வேண்டும், சர்க்காருக்குகிஸ்தி கட்டவேண்டும். ஆகையால் பாசகர்களுக்குக் கதிர்களை கொடுக்கவேண்டாம். அப்படி செய்வீராகிற் றரித்தரை யுண்டாம். நீருமவைகளைத் தீண்டிவீராகில் பெருமாள்மே லாணையென்று சொல்லி அவள் போனாள். பின்பு சில சா

துக்கள், விட்டல! விட்டல! என்று சொல்லிக்கொண்டுப் பண்டரி யாத்திரையாய் புறப்பட்டு அவ் வழியில் வந்தார்கள். போதலரவர் களைப்பார்த்து மஞ்சையை விட்டிறங்கி பக்தியுடன் தெண்டஞ் சமர்ப்பித்துநிற்க, சிலபேரவரை நோக்கி, ஐயா! கருப்புகாலத்தில் நீர் கூப்பிட்டு அன்னமிட்டப் பெரியவரல்லரோ? இப்பொழுது சில கதிர்களைக்கொடுத்தால் பசிதீருமென்று சொல்ல, நீங்களே அறுத்துக்கொண்டுப் போகலாமென்று போதல ருரைத்தார். அவர்க ளப்படியே சிலவற்றை யறுத்து சந்தோஷத்துடன் சாப் பிட்டுச்செல்ல, அவர்கள் பின்னாலேயே வெகுஜனங்கள் வந்து பக வத் ப்ரீதியாக அன்னதானத்தைக்கேட்க ஆனந்தத்துடன் போத லர் தடையின்றி உங்கள் கைகளால் அறுத்துக்கொண்டு போகலா மென்றார். இருநூறுபேர் வந்து அக்கொல்லைமுழுதுங் கொள்ளை கொண்டு தானியஞ் சற்றேனு மில்லாமற்செய்து வெளிவந்து பக வந்நாமத்தைச் சொல்லிக்கொண்டு கதிர்களை பக்ஷித்துப் போனார் கள். போதலர் தான்செய்த காரியத்திற்கு அஞ்சி வீட்டிற்கு வரா ம லவ்விடமே யிருந்தார், கொல்லையனைத்துங் கொள்ளை போன தைக் குமாரன் கேட்டு மெதுவாக அவ்விடம் வந்துபார்த்து விசனத் தையடைந்து எப்படி செய்வதென்று சிந்தித்திருக்க, தகப்பன் குமா ரனை நோக்கி, தேனீ, உபவாசமிருந்து தான் சேர்க்குந் தேனை வேடனுக்கு பறிகொடுத்து தொந்தரை யடைவதுபோல், லோபி கள் சமுசாரத்தி லதிகதனத்தைச் சேர்த்துவைக்கத் திருடர்தைக் கொள்ளைகொண்டுபோக வேதனை யடைந்திருப்பார்கள். ஆன தால் நீ லோபத்தை யடைவது லாபமாகாது இன்றையதினம் சத் பாத்திரத்திற் புண்ணியத்தை யிட்டேன், தொந்தரை யடைய வேண்டாமென்று சொல்ல, குமாரன் தகப்பனுக்கு நமஸ்கரித்து அவர் கையைப்பிடித்துக்கொண்டு வீட்டிற்குச் சென்று தாயாருக் குச் சங்கதியைச் சொல்ல அவளும் பகவத் பக்தர்களுக்குத் தானி யத்தை தானஞ்செய்தா ராதலால் பெருமா ளதற்குத் தயைசெய் வாரென்றெண்ணி யவர்மேல் பாரத்தைப்போட்டு இருவரும் ஸ்ரீஹரியே ரக்ஷகரென்று தைரியராகி யிருந்தார்கள்.

அவ்வூரிற் குடிலபுத்தியுடைய சிலர், கிராமாதிகாரியிடஞ் செ ன்று போதலர் தன்கொல்லையைக் கொள்ளையிட்டார். ஏழுவார கன் கொடுப்பதாக வாயிதாபத்திர மெழுதிக்கொடுத்திருக்கிறார்.

அந்த தீர்வைப்பணத்தை நீங்கள் வாங்கிக்கொண்டால் பின்பு நாங்கள் தீர்வையைக் கொடுப்போ மென்றார்கள். இதைக்கேட்டு அவ்வதிகாரி வராகன்களை கொண்டு வரச்சொல்லி போதலரிடம் தூதரையனுப்பினன். அவர்கள் வந்து போதலரை வராகன்களைக் கொடுக்கச்சொல்லி தொந்தரைச்செய்ய அதற்குத்தன்னிடம் மூன்றுவராகனிருந்தது. மிகுதி பணத்திற்கு எவ்விடம் பிரயத்தினப் பட்டும் கிடைக்காமையால் நகரவர்த்தகனிடஞ் சென்று, ஐயா! என்கொல்லையை யுனக்கடகு வைக்கிறேன், நான்கு வராகன் கடன் கொடுமென்றுகேட்க அவன் மறுநாள் கொடுப்பேனென்று சொல்லி தன் பணத்தைப் பூமியிற் புதைத்துவைத் திருந்தபடியால் அவ்விடமிருந்து நான்குவராகனை மேலே யெடுத்துவைத்திருந்தான். சிலரவனிடஞ்சென்று போதலருடைய கொல்லையனைத்தும் கொள்ளை போயிற்றென்று சொல்ல, மறுநாள் அவன் போதலருக்குப் பணங்கொடுக்கமாட்டேனென்று சொன்னன். போதல ரிதைக் கேட்டு வும்முடைய வார்த்தையை நம்பி நான் அதிகாரிகளுக்கு வாக்குதத்தஞ் செய்தேன். இவ்வூரில் வேறொரு வர்த்தகரு மில்லையே! என் செய்வதென்று சொல்லி மனையாளிடம்வந்து மீரளவென்னுங் கிராமத்திற்குச் சென்று அவ்விடமோர் பெரிய வர்த்தகனிடம் பணத்தைக் கேட்டு கொண்டுவருகிறேனென்று தெரிவித்து ஹரி! கோவிந்தா! அச்சுதா! கிருஷ்ணா! வென்று சொல்லிக்கொண்டு சென்றார். இதைக்கண்டு போதலர் பலாயனமானரென்று கிராமவாசிகள் அதிகாரியினிடஞ் சொல்ல, அவன் போதலர் வீட்டிற்கு காவலாளிகளை யனுப்பி யவ்வீட்டாருக்கு நெருப்பும் தண்ணீரும் கொடுக்க வொட்டாமல் நிர்ப்பந்தப் படுத்திப் பிள்ளைப் பெண்டுகளை தொந்தரவுப் படுத்தினன். சர்வேஸ்வர னவ்வேளையில் அவ்வூர் பறையன் ரூபத்தை வகித்து "விடூ" யென்னும் பெயருடன் ஏழுவராகனையும் கைக்கொண்டு சாவடிக்கு வந்து போதல ரனுப்பினரென்று அதிகாரிகையிற் கொடுத்தார்.

அப்பொழுது அதிகாரி இதரஜனங்களைப்பார்த்து போதலருடைய பணம் வட்டி முதலுடன் வந்தது. நீங்க ளனைவரும் வரி பணத்தைக் கொடுக்கக் கடவீர்களென்று நிர்ப்பந்தப் படுத்தினன். மறுநாள் வீட்டிற்கு போதலர் வருமளவில் அவ்விடத்திற் றொந்தரவு வொன்றுமில்லா ததைக்கண்டு, சாவடிக்குவந்து விசாரிக்க விடூ

என்னும் பெயரையுடைய பறையன்மூலமாய்ப் பணம் சேர்ந்த தெனுஞ் சங்கதி யறிந்து போதலர் விடு என்பவனை யழைத்து அவனை பணத்தை யெப்படி கொடுத்தாயென்று கேட்குமளவில் ஸ்வாமி! ஒருநாள் சாப்பிட சோறில்லாத நான் திரவிய மெங்கிருந்து கொடுப்பேனென்று சொல்ல அவர் வியப்புற்று இது பாண்டுரங்கருடைய வேலையாகுமென்று மனதிலெண்ணி கண்களில் நீரொழுக ஸ்ரீஹரி! கிருஷ்ணா! கஞ்சதளாக்ஷா! உன்னையே நம்பினேன் என்மனம் உன் திருவடிகளையே வாஞ்சைசெய்தது. அநாதநாதரே! ஆபத்பாந்தவரே! தேவரீரேன் பறையனுடைய ரூபத்தை வகித்தீர்? அடியேன் பிரபஞ்ச மமதைகளைவிட்டு உம்முடைய பஜனையே முக்கியமென்று நம்பியிருக்கிறேன் ஓ பாண்டுரங்கரே! நீர் தரிசனங் கொடுத்தருளுமென்று பிரார்த்திக்கப் பெருமா ளவ்விடம் மெழுந்தருளின வுடனே போதலர் சிரசாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, ஸ்வாமி! வரிபணத்தை யெங்கிருந்து கொண்டுவந்தீரென்ன, பெருமாள் அவ்வர்த்தகனுடைய நான்கு வராகன்களையும் உன்னிடமிருந்த மூன்றையும் கைக்கொண்டு வரிக்காகச் சாவடியிற் செலுத்தினேனென்று சொல்லி பெருமாள் மறைந்தருளினார். பின்பு போதலர் தனது வயலை யறுத்தவுடன் தானியம் அதில் நிறைந்திருக்கக்கண்டார். பெருமாள் கிருபையால் தானியம் தனக்குக் கிடைத்ததென்று சந்தோஷித்து உதாரகுணத்தை யுடையவராய் பக்தர்களை யழைத்து கோவிந்தன் பிரீதியாகத் தானியத்தை தாராளமாகக் கொடுத்தார்.

ஹாஸீ தாஸி.

போதலரிருக்கும் ஊருக்கு அரைக்காதவழிதூரத்தில் ராளேர[illegible]மோர் கிராமமுண்டு. அதில் போதலருக்கு மாமியார் வ[illegible]து. தன் மாமனார் ஹரிபதமடையவே அவன் புத்திரர்க[illegible]ம் துரபிமானிகளாகி போதலர் விஷயத்தில் உபேக்ஷை[illegible] நந்தார்கள். அவர்களிடம் ஹாஸீயென்றோர் தாஸி (அடி[illegible]) ருந்தாள், அவள் ஸ்ரீஹரி பக்தியைச் செய்துக்கொண்டுபெ[illegible] மேல் பிரீதியுடையவளாய் அப்போதுக் கப்போது போத[illegible]ம் வந்து ஹரிகுண வர்ணனையைக் கேட்டுப் போவாள், ஒரு[illegible] போதலருடைய சரணத்தைக் கெட்டியாகப்பிடித்து பவ(சமு[illegible]) தரணத்திற் கோருபாயத்தைச் சொல்லுமென்று பிரார்த்

சித்தாள். அதைக்கேட்டு போதலர் தாஸி ஜனங்களுக்கு விசேஷக்ஷேமங்கள் அருவியாமென் றெண்ணி அவளை நோக்கி நீ சமுசாரத்தில் இருக்குமளவில் சர்வேஸ்வரரான பாண்டுரங்கரை சதா கண்ணத்தில் வைத்துக்கொண்டிரு, அவருடைய நாமத்தை எப்பொழுதும் உச்சரி, ஏகாதசி விரதமிரு, அன்றிரவில் ஹரிகதை யைக்கேள், இச்செய்கைகளுடன் நீயிருப்பையேல் ஸ்ரீஹரி சரணத்தை யடைவா யென்றார்.

இவ்வாறு அந்ததாஸியான வளவர் சொன்னபடி பக்தியைச் செய்துக்கொண்டு வந்து பிரதி ஏகாதசியிலும் போதலருடைய வீட்டிற்குவந்து ரம்மியமான கதைகளைக் கேட்டுப் போவாள். இதர ஜனங்களு மனேகா வநது விட்டலமூர்த்தியினுடைய கீர்த்தியைக் கேட்டுப்போவார்கள். ஒருநாளந்த ராமேஸ்ரா கிராமத்திலிருந்து வெகுஜனங்க ளிராத்திரிகாலத்தில் கீர்த்தனைக்கேட்கப் போகும் பொழுது வழியி லொருவனைப் பாம்பு தீண்டிற்று. அவனை ஹரி கீர்த்தனைபி லிதரஜனங்கள் கொண்டுவரவே அவனுடைய பிராணன் போயிற்று; ஆனபோதிலும் வெளிப்படுத்தாம லிருந்தார்கள். போதல ரவ்விடம்வந்த ஜனங்களை வெகுவாய் மன்னித்து, நாம மகிமையைச் சொல்லிக்கொண்டு ஜனங்களை நோக்கி, ஓ சோதரர்களே! நீங்களனைவரும் இராமா இராமா வென்று சொல்லுங்கள், விமலமான நாமத்தையுச்சரித்தால் விஷமாயினு மமிருதமாய்விடும், எவ்விடத்திலும் பக்தர்களுடைய பிரியமான அனுபவ மிதுவாகும், ஓ ஜனங்களே! கேளுங்கள், பரிசுத்தமான நாமத்தை நீங்கள் சொல்லுவீர்களாகில் பரிசுத்தமான சுபாவங்களை யடைவீர்கள். க்ஷேமமுண்டாகும். இந்த நாமம் மதுரத்தில் அமிருதத்தைக் காட்டிலு மதுரரசமா யிருப்பது. இராமநாமத்தைச் சொல்லிக் கொண்டுகையைக் கொட்டுங்களென்று சொல்ல, இதைக்கேட்டோ ரனைவரும் இராம நாமத்தைச்சொல்லி கைகளைத் தட்டினார்கள். செத்தவன், நாமத்தைச்சொல்லா திருப்பதைக்கண்டு அவனை நோக்கி அப்பா! இந்த நரதேஹத்தைப் பெருமாள் நமக்குப் பிரசாதித்தார். சுதந்திரத்தை விட்டு அவனுடைய நாமத்தை நான் கேட்கும் படி சொல்லக்கடவா யென்று வேண்ட, பெருமா ளவ்வேளையில் பஜனையின் மாதுரியங் கேட்டுப்போமென்று மரண மடைந்தவனுக்குப் பிராணனைக் கொடுத்து அவன்வாயால், அச்சுதா! கிருஷ்ணா! ஹரி!

இராமா வென்று சொல்லச் செய்தார். இதைக்கண்டு அவனையழைத்துவந்த ஜனங்களுக்கு ஆச்சரியமுண்டாகி அவர்களச்சபையி லிருந்தெழுந்திருந்து நடந்த சங்கதியைச் சொல்லி போதலருக்கு நமஸ்கரித்தார்கள். இதைக்கேட்டு அனைவரும் ஆனந்தம் ஆனந்தமென்று மேன்மை கொண்டாடினார்கள். போதல ரப்பொழுதுக் கண்களில் நீர்கொண்டு பெருமாளைச் சிந்தித்து, ஓ பாண்டுரங்கரே! என்னைக் கருணித்தீரன்றோ! தீமையை யெனக்குத் தெரிய வொட்டாமலே கடாக்ஷித்தருளினீரே! ஓ பண்டரிநாதா! ஓ பரமபுருஷா! பக்தவத்ஸலா! என்று தோத்திரங்களைச்செய்து ஹாரதியைக்கொடுத்தார்.

இதைக்கண்டு ஹாஸ்தாஸிக்குப் போதலரிடம் பிரேமையதிகமாகி அவள் நியமத்தை தப்பாமல் நடந்துவந்தாள். மூன்று வருஷங்கள் கழிந்தபின் அந்த ஸ்திரியின் எஜமான்களுக்குள் பங்கு பாக முண்டாகி ஹாஸீதாசியை அவர்கள் விக்கிரயிக்க யத்தனித்தார்கள். அவ ளிதைக்கேட்டு போதலரிடம்வந்து சங்கதியை யறிவித்தாள். அவரும் பிராப்த மெப்படியோ வப்படி நடக்க வேண்டிவரும். இதற்குச் சிந்தைசெய்வானேன். பாண்டுரங்கரோர் சமுத்திரம்போ லிருப்பவர். அந்தசமுத்திரத்தி லலைகளைப் போல் நாமெல்லோரு மிருப்போம், அவ்வலைகள் சமுத்திரத்தை யன்றி வேறன்றே! அப்படியே நமக்கும் ஹரியைவிட்டு வேறு நிலைமை யமையாது, இதை நாம் கண்டறிவோமாகில் வேறுபடும் கொள்கை நம்மை வாதிக்காதென்று சொல்ல, அவளவரைநோக்கி ஸ்வாமி! இதற்கெனக்குத் துக்கமுண்டாகவில்லை, தேவரீருடைய சஹவாசம் விட்டுப் போமேயென்று விசனப்படுகிறேனென்று சொல்லி மூர்ச்சையடைந்து திரும்பியெழுந்திருந்து மமதாயினிடஞ் சென்று சங்கதியனைத்தையுந் தெரிவித்து நீங்களென்னை விலைக்கு வாங்கிக்கொண்டு மேன்மை செய்யுங்கள் என்று வேண்டிக்கொண்டாள். மமதாயி புருஷனிடம்வந்து பிராணநாதரே! இவள் நம்மையே ரக்ஷகமாக சரணமடைந்தாள். ஆனதா லிவளைக்காப்பாற்ற வேண்டும். என்னுடைய சொந்தபூமியைவிற்று இவளை வாங்கிக் கொள்ளலாமென்று சொல்ல, அவரு மாலோசித்து அவளுக்கிரு வரும் அபயங்கொடுத்துப போகச் சொன்னார்கள். பின்பு போதலர் தன் மைத்துனர்களிடஞ்சென்று ஹாஸீதாசியை நீங்கள் விற்க எண்ணங் கொண்டதாகத் தெரியவந்தது, அவளை நீங்களே

னக்கு விக்கிரயம் செய்வது மேன்மையாம். கிரயத்தைச் சொல்லக் கடவீரென்ருர். அவர்க ளதைக்கேட்டுப் பந்துக்களுக்கு நாங்கள் கொடுக்கோமென்று கடிந்துரைத்த வசனங்களைக் கேட்ட ஹாவீ அழத்தொடங்கினாள். பிறகு போதலர் அவளைக்கண்டு ஸ்ரீஹரியைப் பிரார்த்தித்து அவரைக்கொண்டு உன்னையழைப்பிக்கிறேனென்றுசொல்லி வீட்டிற்குவந்து நடந்த சங்கதியை மனையாளுக் கறிவித்தார்.

அண்ணனுந்தம்பியு மத்தினமே அத்தாசியை இருபது வராகனுக்கு அந்நியருக்கு விற்றுபணத்தைப்பெற்றுக்கொண்டு அவளை பராதீனப்படுத்தி விட்டார்கள். அப்பொழுது, ஹாவீ பெருமாளை உத்தேசித்து விட்டலா ! ஹரி ! ஓ வேங்கடகிருஷ்ணரே ! என்றழுதுக்கொண்டு, இப்பொழுது நீர்வராவிட்டால் பிராணனை விட்டு விடுவேன், போதலர் போகும்போது வருத்தப்பட்டுக்கொண்டு உம்மை யனுப்புவதாகச் சொல்லிப் போனார். ஓ அச்சுதரே! கேசவரே ! அவ்வசனங்களை யுண்மையாகும்படிச் செய்யுமென்று பரிசுத்தமனதுடன் ஓலமிட்டழுதனள். உடனே பெருமாளொரு பிராம்மணனைப்போல்வந்து ஹாவீயைப்பார்த்து உன்னைப் போதலர் அவரிடம் வரச்சொல்லி யழைத்தாரென்ன அவளந்த பிராம்மணர் பாதங்களில் விழுந்து எழுந்திராதிருந்தாள். அவ்வேளையிலனைவரும் பார்க்க இருவரும் மறைந்தார்கள். அத்தாசிக்கிருந்த ஓர் சிறியபெண்ணும் காணமற் போனாள்.

வர்த்தகர்கள் அந்த தாசியை விற்றவர்களை சங்கதி என்னவென்று வினவ அது எங்களுக்குத் தெரியாதென்ருர்கள். அந்ததாசியினிமித்தியங் கொடுத்தபணத்தைத் திரும்பிக்கொடுக்கச் சொல்லி கேட்க, ஹாஸீயை யழைத்த அந்தப் பிராம்மணன் சொற்படி போதலரைக் கேளுமென்ருர்கள். வர்த்தகர்கள் அதைக்கேட்டு போதலர் ஹாவீக்காகப் பெருமாளை அனுப்புவதாகச் சொல்லிப்போயிருக்க எங்களுக்கு அவளையேன் விற்றீர்கள் ; ஆனதால் எங்கள் பணத்தைக் கொடுக்கவேண்டு மென்றும் போதலரிடம் எங்களுக்கு வேலையில்லையென்றும் சொல்லிப் பணத்தைப்பெற்றுக்கொள்ள வெகு தொந்தரவு செய்துக்கொண் டிருந்தார்கள். பகவானென ஸ்ரீஹரி பக்தஜனங்களைப்பார்த்து ரக்ஷிப்பர். ஹாஸீ தாசி வைகுண்டத்திற் சேகினாள்.

### தாமணகாம் பஞ்சமன்.

தாமணகாமத்திலோர்பறையன் போதலரிடம் வந்து தனக்கனுகூலமானதைக் கோரி உபதேசஞ் செய்யும்படி வேண்டினான். அதற்குப் போதல ரவனைநோக்கி பாண்டுரங்கரைக் கேட்டுத் தெரியப்படுத்துகிறே னென்றுசொல்லி ஒருநாள் பெருமாளை விசேஷமாகப் பிரார்த்திக்கத் தொடங்கினார். பெருமாள் பிரசன்னமாகவே பஞ்சமன் சொன்ன கருத்தைப் போதலர் வெளியிட, பெருமாள் சொல்லுவார், துஷ்டஜனங்களுக் குபதேசஞ் செய்யக்கூடாது, அந்த பஞ்சமன் கெட்டநடத்தை யுடையவன், அதையுனக்குத் திருஷ்டாந்தமாகக் காண்பிக்கிறேன், பயிருக்கு முதற்பூஜை போடுகிற தினத்தி லோர் பசுங்கன்றை யவனை வெட்டச்சொல்லி யதைச் சமையற்செய்து நீ பந்துக்களுக்குப் போஜனமிட்டு கன்றுக்குட்டியைக் கொன்றதை யாருக்குந் தெரிவிக்க வேண்டாமென்று அப்பஞ்சமனுக்குச் சொல்லும், அவ னதை கோப்பியமாக வைப்பானாயின் மந்திரத்தைச் சொல்லலா மென்றார். இதைக்கேட்டு போதலர் பெருமாளை நோக்கி ஸ்வாமி! ஹிம்சையான கருமத்தைச்செய்ய வெனக்கிஷ்டமில்லை யென்றார். பெருமாள் சமுசயிக்காமற் செய்தால் சௌக்கியமாகுமென்று சொல்லி மறைந்துவிட்டார். மறுநாள் போதலரிடமந்தப்பஞ்சமன் வந்து உபதேசத்தைக் கேட்க அவனைநோக்கிபயிர்ப்பூஜைக்கு நம்சேங்கன்றைப்பலியிட்டு இதை நீ யாருக்குஞ் சொல்லாதிருந்தால் உன்னை நல்ல சிஷனாக வெண்ணி யுபதேசிப்பே னென்றார். அப்படியே செய்கிறேனென்று பயிர்ப்பூஜைபோட்டு அவன் சேங்கன்றைக்கொன்று மாம்சத்தை செம்மைசெய்து கொடுத்தான். அதை போதலர் சமையற்செய்து தன் குலத்தாரனைவரையும் பக்ஷிணை செய்விக்க அழைத்துப் பதார்த்தங்களை பிலையில் வட்டித்தார். குலத்தாரனைவரும் மாம்சமிருப்பதைக்கண்டு போதலருடைய விருத்தித் திரும்பிவிட்டதே! யென்றும், அதனை ஆட்டிறைச்சி யென்றும் யெண்ணித் திருப்தியாகச் சாப்பிட்டுப்போனார்கள். போதலர் பஞ்சமனைக்கண்டு சேங்கன்று தலையையுந் தோலையும் உமியில் மறைத்துவைத்து ஒருவர் கண்ணுக்கு மகப்படாதிருக்கச் செய்யவேண்டுமென்று திட்டப்படுத்தினார். அவனப்படியே செய்து மறுநாள் உதயமானதே குடியானவர்கள் வீட்டுகளிற்போய் உட்கார்ந்தான். அவர்க ளிவனைக்

கண்டு உள்ளேயேன் வந்தாயென்று கேட்க உங்களுக்கு மெங்களுக்கும் பேதமொன்று மில்லை. நேற்று போதலர் சேங்கன்றைக் கொன்று வுங்களுக்கெல்லாம் சமையற்செய்து அன்னமிட்டார். அதை நீங்க ளனைவரும் பக்ஷித்தீர்களன்றோ? என்னை தூரப்போகச் சொல்லுவது யுக்தமோவென்று ஒவ்வொரு குடியானவன் வீட்டிற்கும் சென்று சொல்லிக்கொண்டு திரிந்தான். குலத்தாரெல்லவரும கோபமுடையவர்களாகிஜாதிப் பிரஷ்டமாய் விட்டதேயென்றிருக்க, அந்தப் பறையன் நீங்களுண்மையை அறியவேண்டுமென்றால் எருதின்தோலையும் தலையையுங் உமியில் மறைத்துவைத்திருக்கின்றன, அவைகளை காண்பிக்கிறே னென்றான். அவர்க ளனைவரும் போதலரைக் கொல்லவேண்டுமென்று தடிகளைக் கைகளிலேந்திக்கொண்டுவர, போதலர் தன் குடிசையில் தியானத்தி லிருந்தார். சிலரவரை யடிக்க வெளியே யிழுத்துவரச் சொன்னார்கள். அதைக்கேட்டு அவரே வெளியேவர ஓய்! போதலரே! நீர் ஜாதிப்பிரஷ்டத்தைச் செய்தீர். உம்மை சிக்ஷைசெய்வோமென்று மேல் விழப்போக, அவ்வேளையிற் போதலர் ஹரி! ரங்கா! வென்று அச்சுத நாமத்தைச்சொல்ல அவர்கள், அப்பறையனை எருது தலையையும் சர்மத்தையுங் காண்பிக்கச்சொல்ல, அவனந்த உமியில் மறைத்த சர்மத்தையுந் தலையையும் அனாயாசமாக வெளியே யெடுக்க, அவை ஆட்டின்தோலும் சிரமுமாக விருந்தன. பறையன பசுங்கன்றை நானே கொன்றேன் ஆட்டின்தலை யெப்படி வந்ததோ தெரியவில்லை விசித்திரமாக விருக்கிறதேயென்று சொல்ல, கிராமவாசிகள் போதலரைப்பார்த்து உம்முடைய சேங்கன்று எங்கே? காண்பியு மென்ன, போதலர் சிந்தையடைந்திருக்கப் பாண்டுரங்கர் செத்துபோன சேங்கன்றை ஜீவிதமாகும்படிச் செய்தார். அதைக்கண்டு குலஸ்தரனைவரும் பறையனை சிக்ஷைச் செய்யவேண்டுமென்று யத்தனிக்க அவன் போதலருக்கு நமஸ்காரம்பண்ணி அபராதத்தை க்ஷமிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். போதலர் கிராமவாசிகளைக்கண்டு நீங்கள் கருணித்து அவனை க்ஷமிக்கவேண்டு மென்று பிரார்த்தித்தார்.

அவ்வூரிலோர் வருஷம் மழைக்காலத்தில் முதலில் மழையில்லாமற் பயிர்கள் விருத்தியடையாமலிருந்து கார்த்திகை மாசத்தில் மழைபொழிய போதலர் பூமியை உழுது பயிர்செய்வதற்கு விதை

யைக்கொண்டுவந்தார். அவ்வேளையிற் டண்டரிபாயாத்திரைக்காக ஜனங்கள் பகவன் நாமத்தைச் சொல்லிக்கொண்டு அனேகர் போய்க்கொண்டு அவ்விடத்தில் நிற்க, போதல ரவர்களுக்குத் தெண்டன் சமர்ப்பித்தார். அவர்க ளவரைக்கண்டு ஐயா! நீர் கருப்பு காலத்தி லன்னமிட்டீர், இப்போ தெங்களுக் கொருவேளை புசிப்புக் கன்னங் கொடுத்தால் மேன்மையாமென்று சொல்ல, போதலர் தன்பிள்ளையை நோக்கி ஏகாந்தத்திற் சொல்லுவார், நம்வீட்டில் தானியமில்லை, விதை தானியத்தைக்கொண்டுவந்து அரைத்து மாவாக்கிப் பாண்டுரங்கர் பிரீதியாக இவர்களுக்குப் பொசிப்புக்குக் கொடுவென்றுகூறி பின்னுஞ் சொல்லுவார், ஜீவமில்லாத பூமியிலிட்ட தானியம் ஒன்று பத்துநூறாகக் கொடுக்கிறது. ஜீவரூபான இவர்களுதரத்தி லந்த தானியங்கள் சேர்ந்தால் கணக்கற்ற பிரயோஜனத்தைக் கொடுக்குமென்றார். மகத்தான சந்தோஷத்துடன் தகப்பனுக்கிணைப் பிரகாரம் குமாரன் விதை தானியத்தை யவர்களுக்குக் கொடுத்தான். தாங்களுழுத பூமியிற் பேய்சுரைக்காவிதையை போதலர் விதைத்தார். அதுவளர்ந்து பச்சை பச்சையாக விருப்பதைக்கண்டு பலருஞ் சிரித்தார்கள். ஓர் குடிலபுத்தியுடையவன் அதிலோர் காயை யுடைத்து பார்க்குமளவில் கோதுமை நிறைந்திருந்தது. அதைக்கண் டனைவரு மாச்சரியப்பட்டு போதலரைக் கொண்டாடினார்கள்.

அவ்வூரிலதிகாரியான வொருவ னிந்த விந்தையைக்கண்டு அரசனுக் கறிவித்தான். அவ்வரசன் சேவகரைவிட்டு போதலரை வரவழைத்து கர்வத்துட னவரைநோக்கி பேய்சுரக்காயில் கோதுமை யெப்படி சேர்ந்திருந்ததென்றுகேட்கப் போதலரவனைநோக்கி இது பண்டரிநாதருடைய பிரபலச் செய்கையாகுமென்ன, துச்சனு னவ்வரச னவரைத் அனுக்ஜாதியிற் சேர்ப்பதற்குப் பச்சை மாமிசத்தைக் கொண்டுவந்து அதைப் பக்ஷிக்கும்படி வேண்டினான். அப்பொழுது பகவானுடைய கருணையினா லது பழமும் புஷ்பங்களுமாக விளங்கிற்று. இதைக்கண்டரச னவருக்கு வந்தனமிட்டு உமக் கிஷ்டமானதைக் கொடுக்கிறேன் கேளுமென்றான். அதற்கு பக்தரரசனை நோக்கி ஓ பிரபுவே! எந்தவபேக்ஷையு மென்னை வாதைப்படுத்துகிற தில்லையென்றுகூறி அவ்விடம் விட்டு தன்னுடைய வூருக்குவந்து தைரியத்துடன் ஹரியைப் பஜித்துக்கொண்டு அகங்

காரத்தை அடியுடன்களைந்து சார்வதா ஹரிநுணுவாதத்தால் தன்னூரை பண்டரிபுரத்திற்குச் சமானமாகச் செய்துக்கொண்டு பகுப்பிராயரான பிராணிகளை பாண்டுரங்கருடைய பக்தியிலிருத்தினர்.

---

## கணேசநாதர் சரித்திரம்.

சாரச யுஜ்ஜயனியெனுங் கிராமத்தில் கணேசநாதரெனுமோர் பக்தரிருந்தார். அவர் மகத்தான வைராக்கியத்தை யுடையவராகி பகற்காலத்தில் அரண்ணியங்களில் திரிந்துக் கொண்டு இராக்காலங்களில் கிராமங்களில் வந்து கீர்த்தனை செய்து ஒரு கோரிக்கையுமில்லாமற் போய்விடுவார். தனமுஞ் சம்பத்தும் லௌகிகபூஜை முதலான டாம்பிகங்க ளில்லாமல் மனத்தை யெப்பவும் பெருமாள் மீதுவைத்து மதுரமான கவித்வங்களைச் செய்துக்கொண்டிருப்பர். ஒருகாலத்தி லவர் பண்டரிபுரத்திற்கு வந்திருக்குமளவில் சேனசமூகத்துடன் சிவாஜிராஜனு மவ்விடம் வந்திருந்தான். கணேசநாதர் கீர்த்தனை செய்ய அதை யரசன் கேட்டுக்கொண்டிருந்தான். சர்வேஸ்வரனுடைய குணுனுவாதத்தைக் கேட்டுச் சகலரும் சந்தோஷமடைந்தார்கள். சிவாஜிஅரசன் தான் சயனிப்பதற்கு ஓர் கட்டிலைச் செய்வித்தான். அதின்மீது கணேசநாதரை முதலில் படுக்கவைக்க வேண்டுமென் றெண்ணி அதிக விநயவிதேயத்துடன் அவருக்கு நமஸ்கரித்து ஸ்வாமீ! தேவரீர் அடியேன் கிரகத்திற்கு ஒருநாள் வந்து அருள்புரிய வேண்டுமென்று கேட்க, அவ்வேண்டுகோளுக்கு இசையமனமில்லா திருந்தும் அவனுடைய வார்த்தையைக் கண்டு சம்மதித்தார். இதைக்கண்டு சிவாஜிராஜன் சந்தோஷித்து, கணேச நாதரைப் பல்லக்கில் வைத்துக்கொண்டு வீட்டுக்குவந்து வெகுவித சேவைகளைச்செய்து அன்றிரவில் கணேசநாதரை யக்கட்டிலின்மேற் படுத்திருக்கச் செய்தான். அவர் கற்களைக் கொண்டுவந்து அப்படுக்கைமேற் போட்டு அனுதாபத்துடனவர் படுத்துக்கொண்டிருந்து அருணோதயத்திற் கெழுந்திருக்க, அரசன்வந்து தரிசித்து நமஸ்கரித்தான். அப்போது கட்டிலின்மீது கற்கள் நிறைந்திருப்பதைக் கண்டு அரசனவரைப்பார்த்து இந்தக்கற்க ளிவ்விடமேன் வந்ததென்று கேட்டதற்கு கணேசநாதர் அக்கட்டிலின்மீது படுத்திருந்தால் கனத்த



கணேசநாதர். గణేశనాథు



கோமாயி. గోమాయి.



கேசவஸ்வாமி. కేశవదాసు.

LITHO. M. MEENAKSHIAMMAH PRESS MYLAPORE 1907.

நித்திரைவரும், உனது விருப்பத்தைப் பூர்த்திசெய்ய அக்கட்டிவில் நான் சயனித்தேன்; சாதுக்கள்சுகத்தை அனுபவித்தால் துக்கத்தையு மனுபவிக்க வேண்டிவரும். சொறிசிரங் குடையவனுக்குச் சொறியும் பொழுது சுகமாக யிருக்கும், உடனே அவன் துக்கத்தை யடைவான். அப்படியே எனக்கும் விஷயபோகங்களைக் காண வதிக பயமாக யிருக்கும். என்னுடைய நிலைமையிதுவென்று சொல்ல, அரச னனுதாபத்துடன் விரக்தியடைந்து அது முதல் சயனசுகத்தைவிட்டு சஜ்ஜன சகவாசத்தி லிருந்தான்.

கணேசநாதர் காட்டுகளிலே வெகுவாக வாசஞ்செய்து வருவார். ஜனங்க ளவருடைய கீர்த்தியைக்கேட்டு ஆரண்ணியத்திலவரிடம்வந்து சுசுருஷைகளைச் செய்து உபதேச மடைவார்கள். அவருடனந்த ஜனங்களும் ஆரண்ணியத்திற் சஞ்சரித்து வருவார்கள். துராசாரரா யிருப்போரு மவருடைய கரஸ்பரிசத்தால் துற்குணங்களைவிட்டு நிராசையைப்பூண்டு வைராக்கிய முடையவராவார். முன்னூற்றிருபது சிஷரை யிவ்விதமாகச் செய்ய அவ்விடத்து துற்ஜனங்க ளிது மாயாஜாலமென்றும் சம்சாரிகளை காட்டுச் சஞ்சாரிகளாகச் செய்தாரென்றும் இது ஹிம்சையல்லவா வென்று மவர்களெண்ணி யொருநா ளனைவருங்கூடி அக்காட்டிற்குச் சென்றுக் கணேசநாதரைப் பார்த்தார்கள். அவர் சிஷர்களனைவரையு மழைத்து தன்னிடம் வந்த இவர்க ளனைவருக்கு முபதேசஞ் செய்யவேண்டு மென்றுசொல்ல அந்தஜனங்க ளிவ்வசனத்தைக் கேட்டு ஐயா! உமது சாங்கத்தியத்தால் அனேகருடைய சமுசாரங்களுக்கு ஹானிவந்தது. புரஜனங்களுக் கிது வெகுகஷ்டமாயிற்று. பார்க்கப்பட்டவைக ளனைத்து முமது திருஷ்டிக்குச் சமமாயிருக்கின்றன வாதலால் இவ்விடமிருக்கும் விருக்ஷங்களுக்குபதேசஞ் செய்யுமென்றார்கள். இதைக்கேட்டு கணேசநாத ரவ்விடத்தோர் மாமர மிருக்க அதற்கவர் தாரகமந்திரத்தை யுபதேசித்தார். துர்ஜனர்க ளனைவரு மவரைப் பார்த்து மனிதர்களுடைய பிராந்தியைப் போக்கடித்து அவர்களை யும்மைப்போலே செய்கின்றீர், விருக்ஷத்தையும் அம்மாதிரிசெய்து வுமது பெருமையைக் காண்பியுமென்றார்கள். அச்சமயத்தில் சிஷர் பதார்த்தங்களுடனன்னங் கொண்டு வந்தார்கள். அதனை கணேசநாதர் கையிற் கொண்டு அவ்விருக்ஷத்தைப்பார்த்து இது பெருமாள் பிரசாதம்,

நீ வாயைத்திறந்து யாவருங்காணப் பக்ஷிக்கக் கடவாயென்று சொல்ல, மரத்தின் அடிவாரத்தில் வேரொ பிளப்புண்டாக அதன்மூலமாக வம்மரம் பிரசாத மன்னத்தையும் உண்டு யதாஸ்திதியாய்விட்டது. இது ஆச்சரியகரமானதென்று சொல்லிக்கொண்டு அந்த துர்ஜனர்கள் போய்விட்டார்கள்.

கணேசநாதரோர்காலத்தி லைரண்ணியத்தி லதிகமாகக் கீர்த்தனைசெய்யப் பண்டித பிராம்மணர்களு மிதரஜனங்களும் விசேஷமாக வந்தார்கள். தாள மிருதங்க வாத்தியங்களுடன் நாமோச்சாரணை செய்ய அந்த நாதமானது ஆகாயமெங்கும் பரவியது. அவ்விடம்வந்த ஜனங்களைக்கண்டு பிரேமத்துடன் நீங்களும் நாமத்தைக் கைதட்டிச் சொல்லுங்களென்று தானும் கைகளைத் தட்டிக்கொண்டு நாமத்தைச் சொன்னார். இதைக்கேட்டு பிராம்மணர்க ளவரை நோக்கி நாங்கள் சிரேஷ்டஜாதியார், நீர் ஹீனஜாதியர், நீரெங்களுக்குச் சொல்வது சரியல்லவென்ன, கணேசநாதரவர்களை நோக்கிப் பனைமரம் நீண்டுவளர்ந்தாலும் அது யாருக்கு முபயோகமாகாது, அதுபோல அக்கிரவர்ணர்களுடைய கைகள் ஹரிபஜனைக்கு அனுகூலமாகிறதில்லை. பூமிமேலும் பர்வதங்கள் மேலு மிருக்கிற கற்கள் பகவத் பஜனையைச் செய்கின்றன நீங்கள் பார்க்கக்கடவீர்களென்று சொல்ல, அவ்விடத்திலுள்ள சிலைக ளொன்றின்மே லொன்று இன்புடன் தாக்க தொடங்கி பஜனைசெய்யுந் தாளத்திற்குச் சரியாக பெருத்த ஓசையைச் செய்தன. அதைக்கண்டு ஆச்சரியப்பட்டு பிராம்மணர்களும் கைகளைத் தட்டிக்கொண்டு, விட்டலா! விட்டலா! வென்றுச் சொல்லத் தொடங்கினார்கள் சத்பாவத்தைக் கொண்டாடச் சகல ஜனங்களுஞ் சந்தோஷித்தார்கள். பஜனை முடிந்தவுடன் ஸ்ரீஹரிக்கு ஹாரதியைக் கொடுத்து தங்கள் தங்க ளிருப்பிடஞ் சென்றார்கள்.

---

## கேசவஸ்வாமி சரித்திரம்.

பீஜாபுரத்தில் பிராம்மண குலத்தில் கேசவரென்றொருவரிருந்தார். அவர் பாண்டுரங்கரிடத்தில் பிரீதிவைத்து பக்திசெய்து வந்ததனால் வைராக்கியஞான முடையவராகி, ஹரிகுண கீர்த்தனை விசேடிமாகச் செய்துவருவார். ஒரு ஏகாதசி தினத்தில் ஹரி

குணுனுவாதஞ் செய்துக்கொண் டிருக்குமளவில் வைதிக பிராம் மணர்களும் சாதுஜனங்களும் கதையைக்கேட்க வந்திருந்தார்கள். கதாமிருதம் கனத்த ருசியைக் கொடுத்துக்கொண்டிருந்தது. தாள மிருதங்கங்களும் சுஸ்வரமான பாட்டும் நடனமும் சுகத்தைக்கொடு த்தன. இரவுகாலத்தில் பெருமாள் நிவேதனத்திற்குச் சுக்கும் சற் கரையுங் கொண்டுவரச்சொல்லி ஒரு சிஷனை கடைவீதிக் கனுப்ப, அவன் கடைக்குச் சென்று ஒரு கோமுட்டி நித்திரையி லிருக்க அவனையெழுப்பி சுக்கும் சற்கரையுங் கொடுக்கச்சொல்லிக்கேட்டா ன். கடையில் விளக்கில்லாமலே அக்கோமுட்டி சரக்குகளிருக்கும் பைகளை யெடுத்து வசநாபியை (நஞ்சு) ச்சுக்கென் றெண்ணி சற் கரையுடன் கொடுத்து தன் குமாரன் கிராமத்திற்குச் சென்றதனுல் கதைகேட்க வரவில்லையென்றும் அனேகரவ்விடம் கதை கேட்க வந்திருப்பார்களாதலால் இன்னம் கொஞ்சம் சுக்கைக்கொண்டு போகலாமென்றுஞ் சொல்லி வசநாபியை அதிகமாகக் கொடுத்தா ன்: சிஷ்யன் அதைப் பாராமல், கொண்டுவந்து சூரணஞ் செய்து சற்கரையிற் கலந்து பெருமாளுக்கு நைவேத்தியமாக வைக்கப் பக வானவ்வேளையி லிது அனேகருக்கு வெகு கெடுதலைசெய்யுமென் றும் உபவாசமாக விருந்தவர்களுக் கது ஒவ்வாதென்று மெண்ணி விஷத்தை தானருந்தினர். கேசவஸ்வாமியும் கிருஷ்ண கதை களை அவ்விரவெல்லாஞ்சொல்லி அருணோதயத்தில் ஹாரத்தியைக் கொடுத்தார். பிரசாதத்தைப் பங்கிடுமளவில் பக்தியுடன் சிலர் அதனை பக்ஷித்தார்கள். சிலாதனை மூட்டைக் கட்டிக்கொண்டுச் சென்றூர்கள். பொழுதுவிடிந்தபின் கோமுட்டி கடையைத்திறந்து பார்க்கத் தான் தெரியாமல் வசநாபியைக் கொடுத்ததாகக் கண்டு ஐயோ! அனர்த்தமாயிற்றே! அனைவரும சாவதற்கு வசநாபி யைக் கொடுத்து விட்டேனே! பட்டணத்திலிந்த வர்த்தமான மனைவருமறிந்தால் எனக்கே சாவு சித்தமாகுமே! நரகத்திற்குப் போகவேண்டி வருமே! கழுதையினுங் கடையனுய் விட்டேனே! பெருத்த பாபத்தைப்பண்ணினேனே! நதியில் விழுந்து சாவுதலே நன்மையென்று தீர்மானித்து வெளியில்வந்து அவ்விடமிருக்குஞ் ஜனங்களை விசாரிக்குமளவில் யாரும் மரணசங்கதியைச் சொல்ல வில்லை. ஹரிகீர்த்தனை நடந்தவிடத்திற்குச்சென்று ஆங்குச் சில ரைக்கண்டு பிரசாதத்தைக் கொடுக்கச்சொல்லிக் கேட்க அவர்கள்

ஆஹாரமின்றி யிருந்தபடியாலு மிதரஜனங்களும் பக்ஷிக்கும்படி சொன்னபடியாலும் அதனை அப்போதே பக்ஷித்தோமென்றார்கள் சிலர் அதனை சாப்பிடாமல் பக்ஷிக்கச் சொன்னாலும் நாங்க ளென்னுார்த்திகளாமோ. இன்னமொருகா ருபவாசமிருக்கச் சக்தியுடையோமென்றுசொல்லி மூட்டைக் கட்டிகொண்டு போனார்களென்றார்கள். இதைக்கேட்டு அர்ச்சகன் சுடுகாட்டுக்குச் சென்று பார்க்குமளவி லவ்விடத்திலு மவர் பிரேதமாகிலுங் காணாதிருந்தான். இதனைக்கண் டாச்சரியமடைந்து ஓ ஈஸனே! தயாமூர்த்தீ! அனேகருடைய தீமையை யன்புட னணைத்தீரோ! என்று பகவானைக் கொண்டாடினான்.

கேசவஸ்வாமியும் ஸ்நானஞ்செய்து பெருமாள் திருவாராதனத்தைச் செய்யப்புக, அவ்விக்கிரகம் வர்ணபேதமுடையதாயிருந்தது. அவ்வர்த்தகனு மிதரஜனங்களைக் கூடிக் கேசவஸ்வாமியிடஞ் சென்று ஸ்வாமீ! இருட்டில் சுக்கென்று நினைத்து வசநாபியைக் கொடுத்தேன். அந்த அரிஷ்டத்தினின்றும் ஹரிசர்வேஸ்வரர் நிவர்த்தி செய்தார். நா னபராதத்தைச் செய்தேன் அதற்கு பிராயச்சித்தத்தைக் கிருபையுடன் சொல்லக்கடவீ ரென்றான். பக்தரிதைக்கேட்டு மனதுகரைந்து பிரேமாதிசயத்தால் கண்களிலிருந்து ஜலம்பெருகிவர பெருமாளை யுத்தேசித்துத் தேவரீருடைய விருதை யுண்மையாகும்படிச் செய்தீர். உமக்குப் பிரியரான தாசர்களைக் கிருபையுடன் நோக்கிப் பெரிய அரிஷ்டத்தை விலக்கினீர் ஸ்ரீஹரி! விட்டலா! நீரந்த விஷத்தைப் புஜித்ததனால் உமது திருமேனி கறுப்பாயிற்றே! தேவரீர் திருநாமத்தைப் பிரஹலாதன் சொல்லுமளவில் அந்த விஷமே அமிருதமாயிற்றே! இந்த விஷமும்மை யெப்படி பாதிக்கும்? நீர் அவ்வயர் ஆதிநாராயணர் உம்முடைய அளவிறந்த குணங்களைச் சொல்ல என்னாலாகுமோ? ஓ பரமபுருஷா! எந்த விஷபாதையு மும்மை அணுகவொட்டாதிருப்பரைன்றோ! உம்முடைய அடியார்களுடைய மகிமைகளை வெளிப்படுத்த இந்த லீலையை யுலகில் காண்பிக்கின்றீர், முன்னிருந்த ரூபத்துடன் விளங்கும்படி கருணைசெய்யு மென்றார். இவ்வண்ணமாக பிரார்த்திக்கப் பகவா னருள்புரிந்து களங்கத்தை நிவர்த்தி செய்துக்கொண்டார்.

கலியுகத்தில் ஹரிகுணகீர்த்தனை சுகத்தைக் கொடுக்குமெ



கோபீசந்து. ஸ்ரீஸிம்மண்டுராஜு. ஜாலந்தர்நாத். கானீபனாத் சாபட்டரிஷி. (பரத்திரிஅரசன். பஞ்சவனம்.)

ஸ்ரீ கேசவஸ்வாமி ஆத்மஞானத்தி லதிக நைபுண்ணிய முடையவராயினும் சகுணத்தி லதிக பிரேமை யுடையவராவர். ஆத்மபாலனையு மாசாரிய நிஷ்டையும் பொருந்தி ஹரிநாமத்தி லதிகப் பிரீதியையுடையவராகி கவித்வங்களை விசேஷமாகச்செய்து மனிதருக்கு மதுரரச முண்டாகும்படி ஹரி கதைகளைச் சொல்லுவார். பிரதிஷ்டை யதிகமாக நேரிடவே அவருக்கது சரிப்படாததினால் ஒருவருக்குஞ் சொல்லாம லிரவுகாலத்தி லொண்டியாக கிருஷ்ணவேணியில் ஸ்நானம் பண்ணும் பொருட்டு ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டும் அதின் மதுரத்தை பானஞ்செய்துக்கொண்டும் வழிநடக்க ஸ்ரீஹரி அப்பக்தரின் புஜங்கள்மேல் வீற்றிருந்து கீர்த்தனையைக்கேட்டுக் கொண்டிருந்தார். அவ்வழியி லோர் வயற்காவலாளி சுந்தர ரூபத்தோடும் சௌகுமார்யத்தோடுமிருக்கு மப்பாலகனவர்மே லிருக்கக்கண்டு அவருடன் பேசுவோமென் றெண்ணி மஞ்சையை விட்டுக் கீழேயிறங்கி வருவதற்குள் கேசவர் வெகு தூரஞ் சென்றார். அவரை யனுகச்செல்ல நேரிடாமல் தன் சொஸ்தானத்திற்குச் சென்றான். கேசவதாஸர் கிருஷ்ணாநதிக்குச் சென்று மூன்றுநா ளவ்விடமிருந்து திரும்பி கிருஷ்ணகுண கீர்த்தனையைப் பாடிக்கொண்டு மார்க்கத்திற் சென்றனர். அந்தக்காவலாளித் திரும்பி யவரைப்பார்த்து தெண்டனிட்டு இரண்டு கைகளையுங் குவித்து, ஸ்வாமி! தேவரீர் போகுஞ் சமயத்தி லதிக லாவண்ணியமான பாலகனை யுமது கழுத்தின்மே லுட்கார்ந் திருக்கக் கண்டு அவனிட மதிகமோஹத்தைச் செலுத்தினே னென்றான். இதைக்கேட்டு கேசவர் பாலகனை நானெப்பவு மெடுக்கவில்லை, இது சத்திய மென்றார். அக்காவலாளி யவரைநோக்கி நான் சத்தியமாகப் பார்த்தேன், அப்பாலகனை எங்கு விட்டீரென்றுகேட்க, கேசவஸ்வாமி ஆச்சரியப்பட்டு காட்டிற்குச்சென்று ஆர்த்தி யுடையவராகி, ஓ கிருஷ்ணா! உலகிலடியே னுமது நாமத்தைச் சொல்லிக்கொண்டு சகல பாரங்களையு மும்மேல் வைத்திருக்க அடியேன் புஜத்தின்மீதில் நீரிருந்து அடியேனுக்குத் தரிசனங்கொடாமல் வழியில் காவலாளிக்குத் தரிசனங் கொடுப்பதென்ன நியாயமோ? ஓ ஈசனே! தயாமூர்த்தியே! இப்பொழுது நீர் வாராவிடில் பிராணனை விடுவேனென்று ஓர் பிடியாகப் பிடிக்கப் பெருமாளு மவ்விடம்வந்து சொல்லுவார், உனது புஜத்தின்மேல்

நான் உட்கார்ந்தபொழுது நீ தேஹத்தை மறந்திருந்தா யாதலால் உனக்குத் தெரியாம லிருந்தது. இப்பொழுது நீ பீஜாபுரத்திற்குச் சென்று சுகமே யிருக்கக்கடவையென்று சொல்லி மறைந்தார்.

பின்பு கேசவர் பீஜாபுரத்திற்குச் சென்று அங்கே தன்னை ஜனங்கள் கொண்டாட விசேஷப் பிரீதியுட னிருந்தார். அவ்வூரிலொரு வர்த்தகன் மிகுதியான தனத்தை யுடையவனாகி எண்பதினாயிரம் ரூபாய் செலவழித்து ஓர் வீட்டைக்கட்டி அன்னசாந்தியும் தானங்களும் விசேஷமாகச் செய்து அதிற் பிரவேசித்தவுடன் ஓர் பிரஹ்ம ராக்ஷச னதிலிருந்துக்கொண்டு இரவில் அவ்வர்த்தகன் படுத்துக்கொண்டு நித்திரையிலிருந்தா லவனை வெளியில் தள்ளிவிடுவான். வர்த்தக னந்தவீடு சரிப்படாதென்று விட்டுவிட்டு மந்திரமும் ஜபமு மனேகமாகச்செய்வித்தான். அவைகளுக்கு அவன் விரவாது குடியிருந்தவர்களுக்கு மகத்தான பயத்தை யுண்டாக்கினான். அனேகர்கூடி தந்திரத்துடன் கேசவஸ்வாமியை அவ்வீட்டிற்கு வரும்படி யழைக்க, அவர் ஹரீ! நாராயணா! அச்சுதா! கிருஷ்ணாவென்று சொல்லிக்கொண்டு அவ்வீட்டிற்பிரவேசிக்கவே அந்த பிரஹ்மராக்ஷசன் புனிதனானேனென்று நமஸ்கரித்து அவ்வீட்டைவிட்டு நீங்கினான். அவ்வூரில் துலுக்கஜாதியிற் படான் பாஜி யென்று பெயர்கொண்டு ஒருவனிருந்தான். அவன் மகாத்னவானாகி மரணசங்கதி யின்னதென்று தெரியாமல் மகாசுகியாக விருந்தான். அவனுக்கோர் காலத்தில் வேறுகிராமங்களுக்குப் போகும்படி நேர்ந்தது. அப்பொழுது ஒரு ஒட்டகம் சுமையைச் சுமந்து நடந்துக்கொண்டிருக்க அது பளுவினால் கீழேவிழுந்து பிராணனை விட்டது. இதைக்கண்டு பாஜிபடான் அங்கிருப்போரைப்பார்த்து ஒட்டகமேன் நடக்கவில்லை? யென்றான். அவர்களவனைநோக்கி ஐயா! ஒட்டகத்தின் பிராணன் போயிற் றென்றார்கள். இதைக்கேட்டு பாஜீ தனக்கு மிவ்வண்ணமே ஒருநாளைக்கு உயிர்போய் விடுமல்லவாவென் றறிந்து பரமார்த்தத்தை யடையவேண்டுமென்று கேசவஸ்வாமியின் திருவடிகளைப் பிடித்தான். ஹரிகிருபையா லவனுக்கு அகண்டஞான முண்டாயிற்று. கேசவஸ்வாமி ஹரிபக்தியை எல்லவருக்கும் போதித்து அவனியை, பவித்திரஞ் செய்தார்.

---

## கோமாயீ சரித்திரம்.

கோமாயீ யெனு மோர் பிராஹ்மண ஸ்திரீ விதவையாயி பிக்ஷையெடுத்து ஜீவித்துக்கொண்டு பண்டரிபுரம் யாத்திரைசெய்ய வெகுதூரத்திலிருந்து நடந்துவந்து சந்திரபாகாநதி கரையிற் சேர்ந்தாள். அவ்விடத்திலிருந்துகொண்டு அக்கரையைச் சேர்ப்போர் யாவரென்று சிந்தித்திருந்து அங்குள்ள தோணிக்காரர்களைக்கண்டு ஐயா! என்னை அக்கரை கொண்டுபோய் சேர்த்துவிடுங்களென்று வேண்டினள். அனேகர் யாத்திரைக்கு வந்தபடியா லவள்பேச்சை யவர்கள் காதிலிடாமல் துட்டுடையவர்களை மாத்திரம் படவுகளிலேற்றிக்கொண்டுபோக அவர்களுடன் கோமாயியும் படவிலேறினள். இதை அந்நாவீகர்கள் கண்டு அவளை ஜலத்தில் தள்ளிவிட்டார்கள். திரும்பியுங் கோமாயீ கரைக்கு வந்து அழத்தொடங்கி என்னை யக்கரைக்கு யாவர் சேர்ப்பார்களென்றுச்சொல்ல நாவிகர்க ளவளைக்கண்டு துட்டைக்கொடுத்துப் படவை ஏறுமென்றார்கள். அதற்கவள் பிடிமாவு கொடுக்கிறேன் தயைபாருமென்று வேண்ட அவர்களுக்குக் கருணை பிறக்கவில்லை. அவளு மவ்விடத்தி லொண்டியாய் ஓ கிருஷ்ணா! கிருபாளோ! பாண்டுரங்கா! பண்டரீசா! உம்முடைய தயவு என்மீதில்லை. நானநாதையானேன். சரீரத்தை யுமக்கிவ்விட மர்ப்பித்துவிடுகிறேன். ஓ விட்டலரங்கா, ஹரி! வரதா! தயைபாரும், கடினசித்தரான விந்நாவிகர்களுக்குக் கருணையுண்டாவதில்லை அவர்கள் நிர்த்தயராயிருக்கிறார்கள், தேவரீர் சகாயத்தை வேண்டுகிறே னென்றாள். அப்பொழுது பெருமாளொருநாவிகனாகி அவ்விடம்வந்து கரைக்காய் குடுக்கைகள் சிலவற்றைச் கரைமேல் வைத்து கோமாயியைக் கண்டு, அம்மா! உன் கோரிக்கை நிறைவேற ஆற்றைக்கடக்கச்செய்கிறேனென்ன, அவளவனைநோக்கி என்கையில் பிடிமாவைத்தவிர வேறுதிரவிய மில்லையேயென்ன, பெருமா ளவளைநோக்கி நான் இந்தமங்குத் திரிபவரைக் கரைசேர்க்கும்பொருட்டு பண்டரிபுரத்தில் வாசமாயிருப்பவனென்றார். அதைக்கேட்டு கோமாயி எனக்குக்கட்ட வேறுவஸ்திர மில்லை இப்பொழுதே ஜாமராத்திரியாயிற்று. என்ஸ்நிதியைப் பார்க்கத்தேவை வென்றாள். பெருமாளதற்கு உன்வஸ்திரத்தில் நீரொட்டாமல் அக்கரைக்குங் கொண்டுபோய்ச் சேர்க்கிறேனென்ன, கோமாயீ அதற்குச் சம்மதிக்க அவளைப்

பாண்டுரங்கர் கைக்கொண்டு அக்கரையிற் சேர்த்தார். பின்பு கோமாயி பெருமாளைக்கண்டு சொல்லுவாள் ஜலம் உடம்பில் படாமலிக்கரையில் என்னைச் சேர்த்தாயே! இது ஆச்சரியமா யிருக்கிறதென்ன, பெருமாள் சொல்லுவார், நான் இதர நாவிகரைப்போல் பவனல்ல, தாசஜனங்களை யிந்த பவசமுத்திரத்திலிருந்துத் தரிக்கச்செய்கிறவனுவேனென்ன, கோமாயீ தன்கையிலிருக்கும் மாவைக்கொடுக்கப் பெருமாள் யாரிடத்திலும் நானென்றும் வாங்குகிறதில்லை, அந்தமாவை நீயே வைத்துக்கொண்டு துவாதசி தினத்தில் பிராம்மணர்களுக்குக் கொடுவென்று சொல்லி அந்தர்த்தானமானர்.

கோமாயீ ஏகாதசிதினம் பெருமாளைச் சேவித்து அன்றிரவில் ஹரிகதையைக் கேட்டு துவாதசியி லாற்றில் நீராடி அந்தணர்களை யழைத்து பாரணைக்கு இம்மாவைக் கைக்கொள்ளத்தயைபாருமென்ருள். அவர்க ளிதைக்கண்டு வெறும் மாவு வேண்டாம் வேண்டா மென்றும் மொட்டைப் பாப்பாத்தி அவசகுன முடையவ ளென்றும் பிராம்மணர்களவளைத் தூஷித்தபோதிலும் அம்மாவை யங்கீகரிக்கும்படி மிகவும் பிரார்த்தித்தாள். அவர்கள் அதனை அங்கீகரிக்காமற் செல்லவே அவள் பெருமாளை நினைத்து ஓ பாண்டுரங்கா! இந்த துவாதசி தினத்தில் பிராம்மணர்க ளிந்த மாவை கொள்ளாவிடில் நான் புசிப்பதில்லையென்று வைராக்கியத்துட னிருக்க இதைப் பெருமாள்கண்டு ஓர் பிராம்மண ரூபத்தைத் தரித்து அவளிடம் யாசகராகவந்து பக்ஷிப்பதற்குப் போஜனமளிக்கச் சொல்லிக் கேட்டு, தேவாலயத்தில் நானிருப்பது, பசியா லிவ்விடம் வந்தேனென்ன, அவள் மாவைக்கொடுக்க, அந்தமாவை ரொட்டிசெய்துக் கொடுப்பையாகில் பக்ஷித்து பசியை யாற்றுவேனென்றுசொல்ல, அவளும் தன்னியளானேனென்று விறகுச்சுப்பல்களைச் சேகரப்படுத்தி ஸ்நானஞ்செய்து மாவைப்பிசைந்து ரொட்டிகளை ப்பண்ணி இலையில்வட்டிக்க, தள்ளாதகிழவியைப்போல் ருக்மணிபிராட்டி அவ்விடம்வந்துபகவானைக்கண்டு என்னைவிட்டுவந்தீரே! இது நன்ருயிருக்கிறது! எனக்கும் அன்னமிடு மென்ருள். பகவான் கோமாயீயைக்கண்டு சிரித்துச் சொல்லுவார், உனக்கு விசேஷபுண்ணிய முண்டாயிற்று, சுமங்கிலிஸ்திரீயும் வந்தாளென்ருர். இதைக்கேட்டு கோமாயீ மூன்றிலைகளைப்

போட்டு பிரசாதத்தை வட்டித்தாள். மூவரும் பக்ஷணஞ்செய்து கொண்டிருக்கப் பெருமாள் கிருபையா லன்னம் வளர்ந்தது அவர்கள் திருப்தியாகப் புசித்தபின் பெருமாள் முகசுத்திக்காக துளசி பத்திரத்தைக்கொண்டு தானும் ருக்மணிபிராட்டியு மவ்வேளையில் மறைந்தார்கள். கோமாயீ இதைக்கண்டு வியப்புற்றிருந்தாள்.

---

## லதீபுஷா சரித்திரம்.

துலுக்கஜாதியில் லதீபுஷாயென்பவ ரிருந்தார். அவர் ஹரி பக்தியை யுடையவராகி பகவத்கீதையையும் பாகவதத்தையும் பாராயணஞ் செய்து வருவார். இராமபஜனையில் தற்பரராய் ரம்மியத்துடனிருக்க சில துலுக்கர் அரசனிடஞ் சென்று லதீபுஷா துலுக்கமதத்தை விட்டு ஹிந்துமதத்தை யவலம்பித்தான், சிக்ஷைக்கு பாத்திரவான் என்றுசொல்ல, அரசன் கோபித்து விவேகமின்றி அவன்வீட்டைக் கொள்ளையடிக்கும்படி தூதர்களை ஏவினன். அவர்கள் அப்படியே செய்யவந்தபொழுது லதீபுஷாவின் கண்பார்வை அவர்கள்மேற் பட்டமாத்திரத்தில் அவர்கள் பரிதாபத்தை யடைந்து சாந்தியைவகித்து பகவத்கீதை சுலோகங்களைக் கேட்டுக்கொண்டு காலங்கழிப்போம், இராஜசேவையைவிட்டு இராமனைப் பஜிப்போமென் றவ்விடமே யிருந்தார்கள். அனுப்பப்பட்ட தூதர்கள் திரும்பி வராதிருப்பதைக்கண்டு அரசனின்னுஞ் சிலரை அனுப்ப அவர்களும் வந்து லதீபுஷாவினிடத்திலேயே நின்றுவிட்டார்கள்.

இதைக்கண்டு அரசன் சீற்றங்கொண்டு தானே சென்றான். அவ்வேளையில் லதீபுஷா அனேகபிரஜைகள் கேட்க துளசிவனத்தில் பாகவதார்த்தத்தை வெளியிட்டுக்கொண் டிருந்தார். புஷ்பக் கொடிகளும் புஷ்பச் செடிகளும் -டி அந்தவிடம் மனோஹரமாக விருந்தது. வேலிச் சுவரில் பகவத் சம்பந்தமான சித்திரங்களெழுதப்பட் டிருந்தன. தசாவதாரங்களும் தீர்த்த க்ஷேத்திரங்களும் இராமருடைய சரிதமும் இராதாகிருஷ்ணலீலைகளு மெழுதப்பட்டிருந்தன, இவைகளெல்லாவற்றையு மரசன்பார்த்து ராதாகிருஷ்ண லீலையைக் குறித்து லதீபுஷாவைப்பார்த்து இராதா சித்

திரத்தின் கையிலிருக்கிற தென்னவென்று கேட்டான். அதற்கு லதீபுஷா சொல்லுவார், இராதாகையில் தாம்பூல மிருக்கிறது அதைக் கிருஷ்ணனுக்குக் கொடுத்துக்கொண் டிருக்கிறுளென்று சொல்ல, அரசனவரை நோக்கி இராதாதேவி தாம்பூலத்தைக் கொடுக்க கிருஷ்ணனேன் வாங்கவில்லை? அவளெப்படி தெய்வமாவாள்! என்று அரசன் சொன்னதைக்கேட்டு லதீபுஷா அஞ்சலி ஹஸ்தராகி ஹரியை மனதிலெண்ணி ஈசனே! தயாளோ! சர்வேஸ்வரா! ஸ்ரீகிருஷ்ணு! அச்சுதா! விட்டலா! அனந்தா! பக்தவைவாரா! இராதாதேவி தேவரீர்முன் தாம்பூலத்தை ஏந்திக்கொண்டிருக்கிறுள், நீர் கருணையுடன் வாயைத்திறந்து அதனைக் கொள்ளுமென்று சொல்லப் பக்தனுடைய பிரீதியைப் பகவான் கண்டு அந்த கிருஷ்ணசித்திரம் வாயைத்திறக்க இராதா சித்திரம் அந்தாம்பூலத்தை வாயிற் கொடுத்தது. இதை அந்தவரசன் பார்த்திருந்தான். பின்பு இராதா சித்திரத்தின் கையிலிருந்த பச்சைவர்ணமான வெற்றிலைமடிப்பு இல்லாமற் போயிற்று, இந்த விந்தையைக்கண்டு அரசன் பக்தருக்கு நமஸ்கரித்து சுகத்துடன் சென்றுன். பக்தர்களுக்காகவே பகவான் அனேக ஆகாரங்களை தரித்தார்.

---

## சந்தோபாபா சரித்திரம்.

சந்தோபாபா, சிவாஜி அரசனிடம் இருநூறு குதிரைகளுக்கு சர்தாராகி ராஞ்சணகாமென்றவூரில் அதிகாரியாய் விசேஷ நிலங்களும் சம்பத்தும் மேன்மையையு முடையவராய் கீர்த்திபெற்றிருந்தார். அவருக்கு ஏசுபாயியென்னும் மனையாள் சுசீலையாகப் பதிவிரதா தருமத்தை யவலம்பித் திருந்தாள். சந்தானமில்லாதிருந்தபடியால் புருஷனைப்பார்த்து நீர் வேறொரு விவாகஞ் செய்துக்கொள்ளும் அதனுல் வம்சவிருத்தியாகுமென்று சதிசொல்ல, பர்த்தா வேறுவிவாகம் வேண்டியதில்லை யென்றும் தம்பிப்பிள்ளைக ளிருவரையும் வளர்க்கலாமென்றுஞ் சொல்லி, எழுவயதும் ஐந்தாவயதுமுள்ள பிள்ளைகளை தான் கைக்கொண்டு யோர் உபாத்தியாயரிடம் வாசிக்க அனுப்பினர். லலிதத்துட னவர்களை வளர்த்துக்கொண்டுவர, ஒருநாள் சந்தோபாபா உபாத்தியாயரிருக்கு மிடத்திற்கு

வந்தனர். அவ்வேளையில் உபாத்தியாயர் ஸ்நானம்பண்ணி ஜபம் செய்துக்கொண்டிருந்தார். சந்தோபாபா அதைக்கண்டு ஜபமென்பது என்னவென்று கேட்க உபாத்தியாயரது சற்குருவுபதேசித்த பரமமான மந்திரமென்றார். அதைக்கேட்டு சந்தோபாபா அம்மந்திரத்தைத் தனக்கு சொல்லுமென்று கேட்டார் அதற்கு உபாத்தியாயர் சதாசாரியரைக் கொண்டு மந்திரத்தைப் பெற்றுக்கொள்ளுமென்றும், நானுமது சேவகன், வயிற்றின் கொடுமைக்கு இருக்கிறவனென்றுஞ் சொல்ல, சந்தோபாபா கண்டு இச்சமயந்தப்பினாற் சித்தஞ் சபலமாய் விடும், இதுவே வேளையாகும் சொல்லுமென்றார். அப்பொழுது நல்லதென்று குருபூஜைக்காக சாமக்கிரிகைகளைக் கொண்டுவரச் சொல்லிக் குருமந்திரத்தை உபாத்தியாயரவருக்குச்சொன்னார். பின்பு வேறொருவரை யுபாத்தியாயராக ஏற்பாடு செய்து ஆசாரியருக்கு விசேஷமாகத் திரவிய பூஷணங்களைச் சமர்ப்பித்து அவரிருக்க ஓர் வீட்டைக் கொடுத்து அவருக்குச்சமையற்செய்ய ஓர் பிராஹ்மணனை ஏற்படுத்தி சேவை செய்ய தாசதாசி ஜனங்களையு மேற்படுத்தி சுகத்தி லமைத்தார்.

அரசனுடைய கட்டளையால் சந்தோபாபா யுத்தத்திற்குப் போகும்படி நேரிட்டது. ஆசாரியருக்குச் சாப்பாடுமுதலான செலவுகளை நடத்தத் தன் மனையாளுக் காக்ஞைச் செய்து சென்றார்? அவரதே சமயம்போகவே துர்மதத்தால் ஆசாரியர் தன்னிடமிருந்த தாசி ஸ்திரியை வரித்து அவளுடன் கூடியிருந்தார். சிலர், ஏசுபாயினிடஞ் சென்று ஆசாரியர் நடத்தையைத் தெரிவிக்க, அவள் தன்னுடைய பதியாக்ஞையைக் கடந்து நடக்கமாட்டே னென்று எப்பொழுதும் போலவே குருசேவையை நடப்பித்து வந்தாள். சந்தோபாபா ஒருவருஷம் வெளியூரிலிருந்து தன்வீட்டைச் சேரவந்தார், உடனே ஆசாரியரிடஞ்சென்று தரிசனஞ் செய்துக்கொண்டு மறுதினத்தில் குருபூஜையை மஹாவிபவத்துடன் செய்தார். துர்ஜனர்கள் சிலர் ஆசாரியர் தாசியுடன் கூடியிருக்கிறாரென்று தெரிவிக்க சந்தோபாபா மாதுரு சேவையும் லபித்தது மஹானந்தமாயிற்றென்று ஆசாரியரையு மவருடைய வைப்பாட்டியையும் விசேஷமாகப் பூஜித்து வந்தார். தன் மனையாளுக்கு பூஷணாதிகளைச் செய்தவண்ணமாகவே அவளுக்கும் செய்வித்தார். நூதன வஸ்திரங்களும் வேண்டிய வண்ணங்கொடுத்து பிராம்மண போஜ

ண/் பெருக்கச் செய்வித்து தக்ஷிணைகளும் விசேஷமாகக் கொடுத்தார்.

இப்படி யாசாரியரை யனேகவிதங்களாகப் பூஜிக்க இந்த குரு பக்தியைக் கண்டு பெருமாள் சந்தோஷித்து வைராக்கியத்தைக் கிருபை செய்தார். ஓர் ஹரிகீர்த்தனையில் துகாராமர் செய்த சுலோகத்தை சந்தோபாபாக் கேட்டு அதிற் சொன்னபடி சுகுணங்களை வகித்து, இந்த நரசரீரம் நாசமாகத் தக்கது. நாராயணனை யடைவதே சுகத்தைக் கொடுக்குமென்று வுத்தியோகத்தையும் சம்பத்தையும் விட்டு தன்னிடமிருந்த திரவியத்தை ஏழைகளுக்குக் கொடுத்துப் பிரியத்தைப் பெருமாள்மேல் வைத்து வீட்டை விட்டுச் சாதுவேஷத்தைப்பூண்டு விட்டல! விட்டல! வென்று சொல்லிக்கொண்டு உபாதிகளனைத்தையும் விட்டு பீமாயென்னும் கமடாயென்னு'மிரண்டுநதிகள் சேரும் அரண்ணியமான விடத்தில் பேடாவரமென்றோர் சிவஸ்தலத்திற் சேர்ந்து ஸ்ரீஹரிபஜனையைச் செய்யத்தொடங்கினர். சந்தோபாபாவின் தாயாரிதைக்கண்டு விசனமடைந்து அவர் மனையாளுக்குச் சகலாபரணங்களையும்பூட்டி நல்லவஸ்திரங்களைத் தரிக்கச்செய்து யௌவனமான ஸ்திரீயைப்பார்த்து திரும்பி வீட்டிற்கு வருவானென்று தாயாரெண்ணி அவளை தன் பிள்ளையினிட மனுப்பினள். அவளவ்விடம் போய் புருஷனைக் கண்டவுடன் அவர் இவ்விடமேன் வந்தாயென்றார். அவள் பர்த்தாவை நோக்கி பதிவிரதையானவளுக்குப் பர்த்தாவை விட்டால் பரகதி யெப்படியடைவாளென்று சொல்ல, புருஷன் ஹிதபாராகி நான் விராகியாக இந்த வேஷத்திலிருப்பதும் நீ யாபரணங்களைப் பூட்டிக்கொண்டிருப்பதும் சரிப்படாது, இவைகளனைத்தையும் மிதரஜனங்களுக்கு கொடுத்துவிடக்கடவை, இவைகளை வைத்துக்கொண்டிருந்தால் அனர்த்தங்கள் நேரிடுமென்று சொல்ல அவளிதைக்கேட்டு ஆபரணங்களனைத்தையும் ஆற்றிற் போட்டுவிட்டாள். பின்பு பர்த்தா தன்னுடைய அங்கவஸ்திரத்திற் பாதியைக்கிழித்துக் கொடுக்க அதனைக் கட்டிக்கொண்டாள்.

இவ்விதமாக அவ்விருவருமவ்விடத்தில் ஹரிபஜனை செய்துக்கொண்டு சந்தோஷத்துட னிருக்கப் பசியுண்டாயிற்று. பர்த்தா தன் மனையாளைப்பார்த்து சமீபத்திலிருக்குங் கிராமத்திற்குச் சென்று பிக்ஷைவாங்கி வரக்கடவை. இவ்வியான்னங்களை பந்துக்கள்

கொடுத்தால் அவைகளை நீ கொண்டுவரவேண்டாம், பகவன்னாம த்தைச் சொல்லிக்கொண்டே போகக்கடவையென்று கட்டளை யிட அவள் பிரியத்துடன் விட்டல! விட்டல! வென்று சொல்லிக் கொண்டு கிராமத்திற்சென்று வீடுகள்தோறும் பிக்ஷையைக்கேட்டு அகஸ்மாத்தாக நாத்தனார் வீட்டிற்புகுந்தாள். அவள் ஏசுபாயி யைக் கட்டியணைத்துக்கொண்டு அழுது சுகுமாரியான நீசம்பத்தை யெல்லாம் விட்டு உதர போஷணத்திற் கிவ்விதமாக யெப்படி பிக்ஷையெடுப்பாய்? வெறும் ரொட்டியை இப்படிக் கேட்டுத் தின் பது சௌக்கியமாமோ? என்று பூரியை சர்க்கரைநெய்யுடன் கொ டுக்க அதனை ஏசுபாயிக்கண்டு என் கணவனுக்கிது இஷ்டமாகாது, வேண்டாம், வேண்டாமென்று தடுத்தாலும் நாத்தனாரவளைநோ க்கி நான் மமத்வத்தை வைத்து நல்ல வன்னத்தைக் கொடுத்தேன், அதை நீ கொண்டுபோகாவிடில் உன்மேல் ஆணை என்று சொல்ல வே, ஏசுபாயியொன்றுஞ் சொல்லாமல் தன்புருஷனிடஞ் சென்று தான் கொண்டுவந்ததை யவர்முன் வைத்தாள். அவரதில் நெய் சர்க்கரை அப்பங்க ளிருக்கக்கண்டு இவை எங்கனம் வந்ததெ ன்ன, ஏசுபாயி நடந்த சங்கதியைச் சொன்னாள். இதைக்கேட்டு சந்தோபாபா அனுதாபத்தை யுடையவராகி திரும்பி கிராமத்திற் குச் சீக்கிரமாகச் சென்று பூரி யப்பங்க ளனைத்தையும் இட்டவர்க ளிடங் கொடுத்துவிட்டு திரும்பிவந்தபின் பொசிப் பெடுப்பேனெ ன்றார். ஏசுபாயி புருஷனுக்கினைப்படி நாத்தனார்வீட்டிற்கு மறு படியும் வந்து அப்பூரி சர்க்கரையை அவளிடம் திரும்பி கொடுத் துத் தன் பர்த்தாவினிடம் வரும் சமயத்தில் மேகங்கள் மூடிக்கொ ண்டு சூரியாஸ்தமானமாகி இரவும்வந்துவிட்டது. அபாரமான மழை பொழிந்து பீமாநதியில் வெள்ளம் பூர்த்தியாகப் போய்க்கொண்டிரு ந்தது. ஆற்றைத்தாண்டச் சக்தியற்றவளாகி பர்த்தாவிட மெப்படி சேருவேன்? என்னசெய்வேன்? ஈசனே! தயாளோ! விட்டலரங் கா! வேங்கடநாயகா! விஸ்வோத்தாரா! இந்தவேளையி லென்னை இரக்ஷியும் எனக்கு வேறு திக்கு யாருமில்லையென்று பிரார்த்திக்க ஓர் நாவிக னவ்விடம் வந்தவளைப்பார்த்து உனது பர்த்தாவான சந் தோபாபா அக்கரையி லிருக்கிறார், இவ்வாற்றைக்கடந்து அவ்விட முன்னைக் கொண்டுபோய் சேர்க்கிறே னென்றார். அவள் அவனை நோக்கி என்னை தர்ம பகினியாக (உடன்பிறந்தாளாக) வெண்ணி

இவ்வாற்றைக் கடக்கச்செய்து பர்த்தாவினிடம் சேர்க்கக்கடவீரென்றாள். அப்படியே செய்கிறேனென்று அவளை தன் புஜத்தின்மீதில் வைத்துக்கொண்டு ஒரு நிமிஷத்திற்குள் அக்கரையிற் சேர்த்து, அதோ உன் புருஷனிருக்கிறாரென்று காட்டி யதிரிசியமானார். பின்பு ஏசுபாயி புருஷனிடஞ்சென்று நடந்த சங்கதியைத் தெரிவித்தாள். இதையவர்கேட்டு பாண்டுரங்க ருனக்குப் பிரசன்னமானார். நான் கதியுமில்லாம லவரையுங் காணமல் கலக்கத்தை யடைந்தேன். பாண்டுரங்கர் பிரசன்னராகும் பரியந்தம் பக்ஷணை செய்யேனென்று பகவன் னாமத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

இப்படியிருக்கச் சாபலகாமெனு மோரூரில் வர்த்தகனொருவன் பாண்டுரங்கருடைய அனுக்கிரகத்தை யடையும்பொருட்டு பக்தியுட னவரைப் பஜித்துக்கொண்டிருப்பான். பெருமாள் அவன் சொப்பனத்திற் சென்று சந்தோபாபா இரண்டாற்றின் சங்கத்திலிருக்கின்றான், அவனுக்கு பக்வான்னங்களை பக்தியுடன் செய்துக்கொண்டுபோய்க் கொடுக்க கட்டளையிட்டார். இதைக்கண்டு அவ்வர்த்தக னுடனே எழுந்திருந்து சமையர்ச்செய்வித்து பணியாரங்களும், பதார்த்தங்களும், பக்வான்னங்களும் கொண்டுவந்து பெருமாளிட்ட ஆக்கினையைத் தெரிவித்து சந்தோபாபாவைப் புசிக்கும்படி வேண்டினன். அவர் இதைக்கேட்டு தன்னிடம்வந்து பெருமாள் சொல்லாமுன் சாப்பிடேனென் றுறுதியாயிருக்க இவருடைய ஸ்திமிதமனதை சர்வேஸ்வரன்கண்டு தனது நிஜரூபத்தை யவருக்குக் காட்டி அனுக்கிரகித்துப்போக பின்புதான் பக்ஷித்து பெருத்த வைராக்கியத்துடன் சாந்தியும் பக்தியுமுடையவராய் காலயாபனம் பண்ணிக்கொண்டிருந்தார்.

### சாபலகாம் பிராம்மணன்.

சாபலகாமென்னு மூர் சந்தோபாபா வசித்திருந்த இடத்திற்குச் சமீபமாகவிருந்தது. அவ்வூரிலோர் பிராம்மணன் வாசமாயிருந்தான். அவன் பகவத்பக்தி யில்லாதவன். மனையாளுட னெப்பொழுதும் கலகம் செய்வதும், துர்ப்பாஷைகளால் திட்டுவதுமாக விருப்பான். மனையாள் மாறு சொல்வாளாயின் சந்தோபாபாவைப்போல் நானு மாய்விடுவேனென்றும் சமுசாரத்தை விட்டபிறகு நீ யவஸ்தைப்படுவதைப் பார்ப்பாயென்றும் பயமுறுத்துவான். அவள் இதற்குப்பயந்து சும்மாயிருந்து விடுவள். இப்

படியிருக்க ஒருநாள் சந்தோபாபா அவ்வூருக்குப் பிக்ஷக்குவந்து இந்தப் பிராம்மணன் வீட்டிற்குச்சென்றபோது அவன்மனையாள் பிக்ஷையைக்கொண்டு வந்துபோட்டு கணவன் தன்னுடன் போர் செய்யுஞ்சங்கதியை யாவுஞ்சொல்ல அவரனைத்துங்கேட்டு இன்னமொருதடவை யுன் பர்த்தா கோபித்து உன்னுடன் சண்டைசெய்வானேல் என்னிடமனுப்பு, நான் குருபதேசஞ்செய்து உன்னிடமனுப்புகிறேனென்ன, அவள் நமஸ்கரித்து விடை கொடுத்தனுப்பினள். சந்தோபாபா தன்னிருப்பிடஞ் சென்றார். சிலநாட்கழிய ஒருதினத்தில் அந்தப்பிராம்மணன் தொந்தரையடைந்து மனையாளைப்பார்த்து துர்வசனங்களைச் சொல்ல வாரம்பித்தான். அடி! பசிவேளைக்கு நீ போஜன மளிப்பதில்லை, நீ மகாபாபியாவாய், நான் சமுசாரத்தை விட்டு சன்னியாசங்கொண்டு சந்தோபாபாவைப்போ லாய்விடுகிறேன் நீ பின்னர் ஆயாசத்தை யடைவாயென்ன, மனையாளு மப்படியே போகலாமென்ன, இதைக்கேட்டு கோபங்கொண்டு விசனத்துட னினி பிழைத்திருப்பது சரியல்லவென்று ஒருசொம்பை கையிலேந்திக்கொண்டு, பேடாவரத்திற்குச் சென்றுச் சந்தோபாபாவைக் கண்டு, ஐயா! சமுசாரத்தைவிட்டு உம்மைப்போல் நானு மானேன், பரமார்த்தத்தைச் சொல்லுமென்று கேட்க, இதைக்கேட்டு அவர் சொல்லுவார், உம்முடைய சாங்கத்திய மெனக்கு மேன்மையாயிற்று, உம்மைப்போல விராகபுருஷன் கோரினாலு மகப்படான். வஸ்திரங்க ளிவ்விடமிருந்தால் திருடரடிப்பார்கள், ஆனபடியால் வஸ்திரங்களைக் களைந்துவிட்டு கோமணத்தைக் கட்டுமென்று சுரைக்காய்குடுக்கையைக் கொடுத்து அதில் நீரைக் கொண்டுவரச்சொன்னார். அந்தப் பிராம்மணன் ஜலத்திற்குச் செல்லவே அவன் வஸ்திரங்க ளனைத்தையுந் தான் கிழித்து அவன் சொம்பையும் நதியிற்போட்டு நாராயணனை பஜித்திருந்தார். அந்தப் பிராம்மணன் ஜலத்தைக் கையிலேந்திக்கொண்டுவந்து அதிகமான பசியினால் பீடிக்கப்பட்டவனாய் சந்தோபாபாவை நோக்கி பசியெடுக்கிறதென்று சொன்னான். வேப்பஞ்சக்கையை சதிபதிகளிருவரும் சாப்பிட்டு அவனுக்கு மதனைத் தந்தனர். அவன் செம்மையாயில்லை யென்று அதனைப் போட்டுவிட, சந்தோபாபா அவனை நோக்கி இராமரைப் பிடித்த பிறகு இரசவிஷயமுமக் கென்னத்திற்கு? வேப்பிலையைக் கொள்ளென்று

அதனைக்கொடுக்க அதுவும் சரிப்படாமல் எவ்வளவு துர்க்கதியை யடைந்தேன் ? வீட்டில் பருப்பும் ரொட்டியும் சுகமாகப் பக்ஷித் திருந்தேனே ! இந்தக் கசப்பு வஸ்துக்களைத் தின்னச் சகிக்கவில் லையே! பிரபஞ்ச ரீதிக்குப் பாரமார்த்திகம் வேறுயிருக்கிறதே ! குளிருக்கு நடுங்கிக் கொண்டும் பசியால் பாதைப் படும்படியா யிற்றே ! என்று சொல்லிக்கொண்டு துக்கத்தையடைய, சந்தோ பாபா சொல்லுவார், உதவியில்லாத சமுசாரத்தைத் தைரியத் துடன் விட்டேனென் றேன்சொல்லிவந்தீர் ? அப்படி செய்வது தருமா ? என்று கேட்க அவனவரை நோக்கி பாரியாளென்னுடன் போர்செய்தாள், அதனாற் றுக்கத்தை யடைந்து வந்தேன். உம் முடைய சகவாசம் கஷ்டமான தென்று தெரிந்தது, திரும்பிப் போகலாமென்றெத்தனித்தால் வஸ்திரமும் போய்விட்டது இரவு காலத்திலு மிந்தவேஷத்தைப்பார்த்து மனையாள் மன்னிக்கமாட் டாளென்று சொல்ல, அவரவனை நோக்கி மனைவியிடமேன் கல கஞ்செய்கிறீர் ? என்போல விரக்தியடைந்து சமுசாரத்தை விடு கிறேனென் றேன்சொல்லுகிறீர் ? இனிமே லுமது மனையாளுடன் போர்செய்வீராயின் உம்மேல் ஆணையிருக்கிறது ஒருவருக்குந் தெ ரியாமலுமது வீட்டிலும்மை விடுகிறேனென்றுசொல்ல பிராம்மண னிதைக்கேட்டு சந்தோபாபா பாதங்களில் தெண்டன்சமர்ப்பித்து இனிநான் ஜாக்கிரதையாயிருந்து சமுசாரத்தை நிர்வகித்து வரு வேன், மனைவியுடன் சண்டைசெய்ய மாட்டேன். இது சத்தியம், பாண்டுரங்கரிதற்கு சாக்ஷிபாவாரென்று சொன்னான். பின்பு அன் றையதினம் சந்தோபாபா பிக்ஷைக்குச்சென்று அந்த பிராம்ம ணன் வீட்டில் பிரவேசித்து, அம்மாதைக்கண்டு மந்திரசிக்ஷை யுன் புருஷனுக் கின்றையதினஞ் செய்தேன், இன்றிரவில் கோமணத் துடன் வருவார், வஸ்திரத்தைக்கொடுத் துபசரி என்று சொல்லித் தன்னிருப்பிடஞ் சென்று பிராம்மணனை நோக்கி உமது வீட்டிற்கு நீர்போம், உம்மை மனையா ளாதரிபபாள், திரும்பி நீர் சண்டை செய்வீராகில் நானவ்விடத்திலுள்ள பிராம்மணர்களுடன் சொல்லி பஹிஷ்காரஞ்செய்து விடுவேனென்று சொல்லி இரவுகாலமான பொழுது வீட்டிற் கனுப்பினார். அந்தப் பிராம்மணன் தெண்ட னிட்டு ஒருவருக்குந் தெரியாமல் வீட்டிற்குச்சென்று சுகமேயிருந் தான்.

ஆஷாடமாசத்தில் சந்தோபாபா பண்டரியாத்திரைப் போக வேண்டுமென்றெண்ணியிருக்க இரண்டாயிரஞ் ஜனங்க ளவருடன்கூடி கிருஷ்ணா! இராமா! என்று பாடிக்கொண்டு மாடிக்கொண்டும் பிரீதியுடன் பஜனை செய்துக்கொண்டுப் பிரயாணமாகிச் சென்றார்கள். தசமி வரைக்கும் நடந்து நரசிங்கபுரத்தைச் சேர, அவ்விடத்திற் பீமாநதி பூரண பெருக்கெடுத்திருந்தது. சர்வேஸ்வரனை ஏகாதசியிற் காணச் சரிப்படாதே! படவு ஒன்றிருந்தால் ஆற்றை யெளிதிற் கடக்கலாமேயென்று பிரஜைகளனைவரும் சொல்ல, சந்தோபாபா இதைக்கண்டு தேகாபிமானத்தைக் கொன்று தேவனைக் காணவேண்டும், நம்மை இவ்வாற்றைத் தாண்டச் செய்தாலும் அல்லதிதிற் சாகச்செய்தாலும் ஸ்ரீ ஹரியே கர்த்தாவாவா ரென்றும் விட்டலரங்கருடைய பெயரைச்சொல்லிப் போவோமென்றும் எண்ணி ஜயஸ்ரீவிட்டல! என்று சொல்லிக்கொண்டு சந்தோபாபா ஜலத்தி லிறங்கினர். இதாஜனங்களும் பயமடையாமலாற்றிலிறங்கினர்கள். அதிற்போகப் போகத் துடையவ்வளவு ஜலமே யிருந்தது. அனைவரும் தாண்டி அக்கரைச்சேர்ந்தார்கள். ஹரிசர்வேஸ்வரன், ஆமையுருவத்துட னதிலிருந்து அனைவரையுந் தன் முதுகின்மேல் நடந்துபோகச் செய்தார். பெருமாள் தன்பக்தர்களுடைய எண்ணங்களைப் பாங்காக்கி வருவர். ஜனங்களனைவரும் இராமா! கிருஷ்ணா! வென்று பாடிக்கொண்டும்பிரியத்துடன் ஸ்ரீஹரிகருணையைப் புகழ்ந்துக் கொண்டும் துன்பங்களைப் போக்கினரென்றுங் கொண்டாடி அக்கரையிலிருக்கச் சந்தோபாபாமாத்திரம் ஸ்ரீஹரி ஆமைரூபத்தைத் தரித்திருந்ததைக் கண்டார். பண்டரி புரத்தைச் சேர்ந்தபின்பு சந்தோபாபா பாண்டுரங்கரைக்கண்டு நிறைந்த பிரேமையுடன் கண்களிற் ஜலம் பெருக, ஓஸ்வாமி! அடியே னுமதுபுகழை யெவ்வள வென்று கொண்டாடப்போகிறேன். மகத்தான கருணையுடன் ஆமைவடிவைக் கொண்டு அனைவரையுந் தாண்டச்செய்தீர். உபேயமான உமது ரூபத்தைக் காணச்செய்தீர். உமது சரணங்களி லெனக்கிடங் கொடுக்கவேண்டு மென்று விசேஷமாகப் பிரார்த்திக்க பாண்டுரங்க ரந்த தம்பதிக ளிருவரையுந் தன்னிடத்தி லிருக்கக்கடவீர்களென்று கருணித்தார்.

---

## நிளோபா சரித்திரம்.

நிளோபா வெனும் பிராம்மணர் துகாராமரிடம் விசுவாசத்தை வைத்து ஆசாரிய கடாக்ஷத்திற் கெதிர்பார்த்துக் கொண்டு விஷ்ணு பக்தியை யிடைவிடாமற் செய்துவந்தார். அவர் சொப்பனத்தில் துகாராமர் வந்து உபதேசித்தருளினர். அதுமுதற்கொண்டு ஞானமும் வைராக்கியமும் ஸ்ரீ ஹரிமேல் அபாரமான பக்தியுமுண்டாயிற்று. முற்காலத்திலிருந்த அடியார்களுடைய சரித்திரங்களை இதரஜனங்களுக்குச் சொல்லிக்கொண்டு தாராபுத்திரருடனிருந்தும் பாரத்தைப் பெருமாள்மே லிட்டு நான், எனது, எனும் அகங்கிருதியைவிட்டு அயாசித விருத்தியினாற் றன்னுடைய குடும்ப போஷணையைப் பண்ணிக்கொண்டு வருவார்.

இப்படியிருக்க தன்னுடைய குமாரத்திக்கு விவாகம் தடஸ்தமாயிற்று. வீட்டிலொரு வஸ்துவுமில்லை. பாரியாள் தன்பதியைக் கண்டு பாண்டங்க ளனைத்தும் சூனியமா யிருக்கின்றனவே அற்ப மனிதரா லவமான முண்டாகுமே! நீரோ விசாரமில்லாமல் உதாசவிருத்தியை வகித்திருக்கின்றீர்! என்னசெய்வே னென்று அவளுக்கொன்றுந் தோன்றாமலிருக்கப் பெருமா ளொரு கிழப்பிராம்மணரைப்போல் வந்து கிழிந்ததோவத்தியு மங்கவஸ்திரத்துடன் ஏழ்மை லக்ஷணங்களைக்காட்டி ஓர் சின்ன மூட்டையை கக்கத்திலிட்டுக்கொண்டு நிளோபாவினிடம் வந்து ஐயா! கொஞ்சம் சாமக்கிரியை நான் கொண்டுவந்தேன் சமையற்செய்து பாயசம் வடைகளுடன் போஜனமளிக்கக் கடவீரென்று விண்ணப்பஞ்செய்ய, அவர் தன்மனையாளை யழைத்து, இந்தப் பிராம்மணருடைய மூட்டையை நீ வைத்துக்கொண்டு நல்ல போஜனத்தை யளிப்பாயென்று சொல்லி அந்தப் பிராம்மணரைக்கண்டு ஏன் சாமக்கிரிகையைக் கொண்டுவந்தீர்? பகவானுக்காகச்செய்த பிரசாதத்தை பக்ஷிக்கலாமென்ன, மனையாளு மந்த பிராம்மணரை நோக்கி சாமக்கிரிகையுங் கொஞ்சமாகவிருக்கிறது. போஜனபூர்த்திக்குப் போராதென்றுசொல்ல, அந்தப்பிராம்மணர் வஞ்சனையின்றி யென்னிடமிருந்ததிதுதான், இவ்வஸ்துக்களை விவாக சாமக்கிரிகைகளுடன் வைக்கக் கடவீர், உமதுவீட்டி லிப்பொழுதுசெய்தச் சாப்பாடு பதார்த்தங்களைப்போடும், உமக்கும் அது நன்மையைக்கொடுக்கும். நான் கொண்டுவந்த சாமக்கிரிகையை நீர் கைக்கொள்ளாவிடில் நானிவ்வி



கிலோபா. విఠోబా.　　உத்தவசித்கனன். ఉద్ధవచిద్ఘనుడు.　　விசோபாசராபு. విసోబాసరాపు.

டம் பக்ஷணைசெய்யேனென்றார். இதைக்கேட்டு நிளோபா, மனை யாளைக்கண்டு சமையலை செய்யச்சொன்னார். அந்தப் பிராம்மண ரதைக்கேட்டு மறுபடியு சமைபற்செய்ய ஆலசியமாகும். இப்போ தே பக்ஷிப்பே னென்றனர். அப்படியே யாகட்டுமென்று அந்த இல்லாள் ஆராதனையானவுட னிருவருக்கு மிலைகளைப்போட்டு அ ன்னத்தை வட்டித்தாள். அவ்விருவரு மதிக ப்ரீதியுடன் பக்ஷித் தார்கள். பின்பு அந்த அதிதி நிளோபாவைப்பார்த்து விவாகத்தி லுமது வீட்டிற்கு ஜலம்கொண்டு வருகிறேன்; பக்ஷிய போஜ்யங் களைப் பிரதிதினமும் பக்ஷிக்கிறேன், நானிருப்பது உமக்குபயோ கமாகும், உம்முடைய இஷ்டத்தைத் தெரியப்படுத்தவும், ஈஸ்வ ரப் பிரீதியாக நான்கு தினங்களும் இந்த சேவையை நான் செய் வேனென்று சொல்ல, நிளோபா சம்மதித்து அப்படியே யிருக் கச் சொன்னார்.

அருணோதயத்தி லந்தப்பிராம்மண ரெழுந்திருந்து தன் கை யால் வீடெல்லாம் மெழுகி விவாஹத்திற்குச் சித்தப்படுத்த கலி யாணப்பிள்ளை அனேக சுமங்கிலிகளுடன் வந்தான். ஐந்துநாள் விவாஹம் வேடிக்கையுடன் நடக்க விவேக சீலரான அப்பிராம் மணர் வேலைகளை வெகுவாகச் செய்தார். சகல பிராம்மணர்களும் பக்ஷணைசெய்தும் சேகரித்த சாமக்கிரிகைக் குறையாம லிருந்தது. நிளோபா திருப்தராகி அந்தப் பிராம்மணரை நோக்கி நீர் சஜ்ஜ னர்களிற் சிரேஷ்டர், இந்த விவாஹப் பிரயோஜனத்தைச் செம் மையாகச் செய்வித்தீர். உமது பெயரென்னவென்று கேட்க அவர் "விடோபா" யென்று சொல்லி ஐந்துநாளாக பக்குவான்னங்கள் செம்மையாகச் சாப்பிட்டேனென்றும் தெரிவித்தார். நிளோபா இதைக்கேட்டு ஓர் வஸ்திரங்கொடுக்க நினைத்து தனது பந்துவர்க் கங்களுக்கு மரியாதைசெய்து அவர்களை அனுப்பிவிட்டு பக்தருட் கார்ந்துக்கொண்டிருக்கப் பிராம்மண ரூபரான பெருமாள் பூஜா கிருகத்திற்குச்சென்று மறைந்தருளினார். நிளோபா அந்த பிராம் ம ணரை ஓ விடோபா வென்றுக்கூப்பிட்டு வஸ்திரத்தைக்கொண்டு போவென்றார். அழைத்துங்காணுமலிருந்தபடியா லிது பிரியரான பெருமாள் செய்கையென்று தனது கண்களில் நீர்கொண்டு சர்வே சுவரனைக்குறித்துப் பிரார்திக்க அவர் சொப்பனத்திலெழுந்தருளி நாமெப்பவுமும்மிட மிருப்போமென்று சொல்லி மறைந்தார்.

## உத்தவ சித்கனர் சரித்திரம்.

தாரூரெனும் பட்டணத்தில் உத்தவ சித்கனரென்றொரு பிராம்மணரிருந்தார். அவர் ஸ்ரீஹரிபஜனையை உத்தம தருமமென்று விசேஷமாகச் செய்து பகவான்மேல் கவித்வங்களைச் சொல்லி பிரஜைகளுக்குமிகுந்தபக்தியை யுண்டாக்கி சந்தோஷித்திருப்பர். உலோகோபகாரமாக சஞ்சாரஞ் செய்துக்கொண்டு சித்திரை மாதம் பிரதமை தினத்தில் பீதர் பட்டணத்திற் பிரவேசித்து அன்றையதின மவ்விடத்தில் ஹரிகுணானுவாதத்தைச் செய்தார். அவ்விடத்திய ஜனங்கள் கதா மதுரங் கனத்திருந்தபடியால் தங்களிடத்திலேயே யிருக்கச்சொல்லி வேண்டினார்கள். அதைக்கேட்டு உத்தவ ரிராமநவமிக்குத் தான் வூருக்குப் போகவேண்டுமென்றார். அதற்கு நவமியை இவ்விடத்திற்றானே நடப்பியு மென்று அங்கிருந்தோர் கேட்க அவர் சம்மதித்து அப்படியே யிருந்தார், அப்பொழுது அவ்விடத்திய ஜனங்களனைவருங்கூடி ஓர்மண்டபத்தை யுண்டாக்கித் தோரணங்களைக் கட்டி அலங்காரங்களை வெகுவாகச்செய்ய உத்தவர் இராமபிரானுடைய விக்கிரகத்தை அவ்விடத்திற்கொண்டுவந்து வைத்து ஆடையாபரணங்களைச் சாத்தி பிரதிதினமும் ஹரிகதைகளைச் செய்து பிராம்மணர்களுக்குப் போஜனமளித்து உச்சவங் கொண்டாடி வருவார். அவ்வூரிலுள்ள பாகவதர்களும் ஹரிதாஸர்களும் அமித ஜனங்களுடன் கொடிமரங்கள் விளங்க வாத்திய கோஷங்கள் முழங்க வீதிகளிற் சமாரம்பத்துடன் போக அனேக துலுக்கர்க ளொன்றாகக் கூடி துர்மார்க்க வர்த்தனையுடையவர்களாகி தங்கள் மசூதிற் கெதிரில் ஹரிதாசர்களைப் போகக்கூடாதென்று தடுத்து அவர்கள்மேல் கற்களையும் சாணத்தையு மெறிந்தார்கள். அந்த ஹரிதாசர்களனைவரு மடியுண்டவர்களாகி உத்தவ சித்கனரிடத்திற் சென்று தாமடைந்த விபத்தை யவருக் கறிவித்தார்கள். அந்த பக்த ரிந்த சங்கதியைக் கேட்டு அதிக துக்கத்தை யடைந்து இராமபிரான் சன்னிதியிற் சென்று ஓ பதித பாவனரே! தீனபோஷகரே! தேவரீருடைய உச்சவவைபவ முமக்குச் சம்மதியன்றாயின் அடியேன் அதனை யேன் கைக்கொண்டேன்? நீர் விசுவாத்மரூபர் பராத்பரர் எல்லோரிடமு நீரிருப்பதால் விசனத்தை நானேன் கைக்கொள்ளவேண்டும்? என்றிவ்வாறு சொல்லிக்கொண்டு அவ்விக்கிரகத்தைப்

பெட்டியில் வைத்துப் பந்தலை அவிழ்க்கும்படி உத்திரவுகொடுத்து ஹரிதாசர்க ளனைவருக்கும் தெண்டன் சமர்ப்பித்து அச்சுதா! கிருஷ்ணா! இராமா! வென்று பகவன்னாமத்தைச் சொல்லிக்கொண்டு தீனராகி உட்கார்ந்திருந்தார்.

ஆஞ்சனேய ரிதைக்கண்டு கோபமுடையவராகிப் பட்டணத்தை நீறுக்குகிறேனென்று பெரிதான அந்த மசூதிமேலேறிக்கொண்டு தன்கால்களா லதனை அசையச்செய்ய, அவ்விடத்திலோர் துலுக்க பகீர் சாதுமார்க்கத்திலிருந்து ஞானவானாகியிருந்தார். அவர் ஆஞ்சனேயருடைய செய்கையைக்கண்டு ஓ மாருதிராயரே! உமது திருவடிகளுக்கு யான் நமஸ்கரிக்கிறேன். அடியேனுடைய குடிசையை மிதிக்கவேண்டாமென்று அந்தரத்திலிருந்த மாருதிக்கு நமஸ்கரிக்க, இதர துலுக்க ரனைவரு மாகாயத்திற்கு தெண்டன் சமர்ப்பித்ததால் பைத்தியக்காரரென்று சொல்ல, அந்தப்பகீர் மசூதி விழுந்துபோம் பாருங்களென்றார். அவர்கள் பார்த்துக்கொண்டிருக்க அனைவருக்கு மாச்சரியமுண்டாகும்படி ஆஞ்சனேய ரம்மசூதியைக் கீழே உதைத்துத் தள்ளினார். அது கீழேவிழுந்த பெருத்த ஓசையை அரசன் கேட்டான். உடனே அந்தப்பகீர் அரசனிடஞ் சென்று ஓ ராஜனே! இது ஆஞ்சனேயருடைய பெருத்த செய்கை யாகும். உத்தவரென்றோர் பக்தருடைய உச்சவத்தை துலுக்க ரனைவரும் நடத்தவொட்டாமல் தடைசெய்தார்கள். அதனா லாஞ்சனேயர் கோபமுடையவராகி இந்தவேலையைச் செய்தாரென்று சொல்ல அரசனிதைக்கேட்டு உத்தவ சித்கனரிடம் வந்து ஆயிரம் ரூபாயை அவர் திருவடிகளில் வைத்து நமஸ்கரித்து தேவரீ ரெங்களை க்ஷமித்து உச்சவ வைபவத்தைக் கொண்டாடக்கடவீர். இப்பூமி பாவனமாகும். உமக்கு தொந்தரவு கொடுத்த அனைவரும் துர்தசையை யடைந்தார்கள். நான் சிரமாயிருக்க ஸ்ரீ ஹரியை நீர் பிரார்த்திக்கக் கடவீரென்று மன்றாடி அரசன் தன்னில்லஞ் சென்றான்.

அனந்தரம் பாகவதர்களும் ஹரிதாசர்களும் இன்னு மிதர ஜனங்களுங் கூடி மேலான வைபவத்துட னுச்சவத்தைக் கொண்டாடினார்கள்! துவாதசி தினத்தில் தாளவாத்திய கோஷத்துடன் வீதிகளில் சம்பிரமத்துடன் உலாவி அனைவரு மானந்த மடைய உச்சவத்தைப் பூர்த்தி செய்தார்கள். ஸ்ரீராமபிரானுடைய திரு

வடிகளைச் சிந்தித்திருந்தால் சிரேயஸ்கரமான காரியங்களுக்கு விக்கினஞ் சேரா. பின்பு உத்தவ சித்கனர் தன்னிருப்பிடஞ்சென்று சுகமே யிருந்தார்.

---

## விசோபா சராபு சரித்திரம்.

பண்டரீபுரத்தில் விசோபா வென்றொரு பிராம்மண ரிருந்தார். அவர் பாண்டுரங்கரைப் பஜித்து மேலான பக்தியுடனவருடைய நாமத்தைச் சொல்லிக்கொண்டு சத்தியத்தைத் யவலம்பித்துக் கொடுக்கல் வாங்கல் வியாபாரத்தி லிருந்து அதிதி வந்தா லன்னமிட்டு தாராபுத்திரர்களுடன் காலயாபனஞ் செய்து வருவார். இப்படி நடந்துவர அத்தேசத்தில் கருப்புண்டாயிற்று; அதனால் ஜனங்களுக்கு சோறும் நீரு மகப்படாமல் சிரமையுற் றிருந்தார்கள். திருடருடைய பயமுந் தீராததா யிருந்தது. அன்னத்தை விரும்பும் அனேக பிராம்மணர்கள் விசோபாவை யாசிக்க, அவர்களுக்குப் போஜனமளித்துப் பிரீதி செய்துவருவார். இப்படி செய்ய சிலநாட்களில் தன்னிடமிருந்த சகலத் திரவியமும் செலவாயிற்று, சொர்ண நகைகளும் பித்தளை பாத்திரங்கள் முதலானவைகளும் போயின. இத்தன்மையாகத் தேஹ மனித்தியமென்றெண்ணி தீனஜனங்களுக் கன்னமளித்ததினாலும் சகல சொத்தும் செலவாய் விட்டதினாலும், பரபத்தியம் போய்விட்டது. பிரஜைக ளனைவரு மவரைப் பிரயோஜன மற்றவரென்று கடன் கேட்கினுங் கொடுக்கா திருந்தார்கள்.

கானேகாமெனுமூரில் துலுக்கபடா ரொருவனிருந்தான். அவன் தனவானாகிக் கொடுக்கல் வாங்கல் வியாபாரஞ் செய்துவருவான். அவனிடத்தில் விசோபா சென்று எழுநூறுபணத்தை வட்டிக்குக் கொடுக்கும்படி வேண்டி அதற்கு ரெட்டிப்புப்பணத்தைக் கொடுப்பேனென்று பத்திர மெழுதிக்கொடுத்து அந்தத் திரவியத்தைக் கொண்டுவந்து பசியுடைய ஜனங்களுக்குப் போஜன மளித்தார். இப்படியிருக்க ராம்புரிபாவா வென்னும் சத்புருஷ ரொருவர் பண்டரி புரத்திற்குவந்து விசோபாவின் சங்கதியைக்கேட்டு அவரைப் பரிசோதிக்க யெண்ணி கிழிந்த கோமணமும் அழுக்கடைந்த தேஹத்துடன் விசோபா வீட்டிற்குவந்து பசியாயிருக்கிறது அன்னம்

கொடுமென்று பெரிய ஓசையுடன் கேட்க விசோபா இதனைக்கே ட்டு வெளியில்வந்து பார்த்து சீக்கிரத்தில் வீட்டிற்குள் ளழைத்துத் தான் தன் மனையாளுட னவருக்கு ஸ்நானஞ்செய்வித்து பவித்தி யக்காரரென்று பராமுகமாகயிராமல் பூர்த்தியாகப் போஜனமளித் தார். அந்த சத்புருஷர் விசோபாவை நோக்கி நீர் புண்ணிய புருஷரென்று ஆசீர்வசனஞ் செய்துச் சென்றனர். சில துர்ஜனர் கள் துலுக்கபடானிடஞ் சென்று விசோபா தன் திரவிய மனைத் தையுஞ் செலவுசெய்துவிட்டான் கையிருப்பில்லாதவன். உன் திரவியத்தை நீயேன் கொடுத்தாயென்று சொல்ல, இதைக் கே ட்டவுட னவன் திடுக்கிட்டு விசோபாவின் வீட்டிற்கு வுடனே பிர யாணமாகிவந்து இப்பொழுதே கடன்வாங்கின திரவியமனைத்தை யுங் கொடுக்கவேண்டுமென்று அவர் மடியைப்பிடித்து அடியெ டுத்துவைக்க விடாமல் பலவாறான கடினவார்த்தைகளைச் சொல்ல, விசோபா தைரியங்கொண்டு விநயத்துட னவனை நோக்கி எழுநாட் களில் கொடுத்துவிடுகிறே னென்று சொல்ல படானதற்குச் சாக்ஷி வைக்கும்படி கேட்டான். விசோபா நல்லதென்று நால்வரை அழை த்துவந்து அவன் முன்னிற்கச்செய்ய அவர்களந்த துலுக்கனை நோ க்கி விசோபா தனது கடனனைத்தையு முண்மையாகவே கொடுத்து விடுவார் நீர் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று சொல்ல, அவ னவர் களைப்பார்த்து நான் தூரகிராமத்தில் வாசஞ்செய்பவனாதலால் பணத்தைச் சொன்னகெடுவுக்குள் வீட்டிற் கனுப்பிவிடவேண்டுமெ ன்று சொல்லித் தன்னிருப்பிடஞ் சென்றான்.

விசோபா சிந்தை யடைந்தவராகி தன்னிடமிருக்கும் சொத் துக்கும் கடனுக்குஞ் சரிப்படாம லிருப்பதைப்பார்த்து ஒன்றுந் தோன்றுமலாறு நாட்பரியந்தஞ் சும்மாயிருந்து பெருமானை நினைக் கவொண்ணும லந்த துலுக்கபடானையே நினைத்திருந்து ஜென்ம மெடுத்ததுமுதல் பொய்சொல்லாமலிருந்து இப்பொழுது நான் சொன்னவார்த்தை பொய்யாகும்படி நேர்ந்ததே! திரவியத்திற்காக படான் எதிர்பார்த்துக்கொண்டும் திட்டிக்கொண்டு மிருப்பானே, நா னென்செய்வேனென்று அதிக கிலேசத்தை யடையலுற்றார். பக்தன்படும் வருத்தத்தைப் பகவான் கண்டு விசோபாவின் பழைய குமஸ்தா (கணக்கெழுதுகிறவன்) வேஷத்தைத்தரித்து கடன்தொ கையை வட்டியுடன் கைக்கொண்டு அந்த துலுக்கபடான் வீட்டிற்

குச்சென்று மூட்டையை அவிழ்த்து படான்முன்பு பணத்தைக் கொட்டி அவன்வசத்திற் சேர்த்து நான்குபேர் சாக்ஷிகளைவைத்து அவன் கைசிட்டைப் பெற்றுக்கொண்டு திரும்புந் தருணத்தில் படா னவரை நோக்கிப் பணமெவ்விட மகப்பட்டது? விசோபா சத்தியத்தையே சொல்லிக்கொண் டிருப்பரென்று சிலாகிக்க, பெருமா ளவ்விடத்தைவிட்டு விசோபா வீட்டிற்குவந்து அவரிடமிருக்கும் பத்திரத்தைக கிழிந்துவிட்டு தான் கொண்டுவந்த சீட்டை பகவத்கீதா பாராயணக் கிரந்தத்தில் வைத்து மறைந்தருளினர்.

விசோபா பகவத்கீதையைப் பாராயணஞ் செய்யத்தொடங்குமளவில் தான் முன்பு படானுக்கு கொடுத்த பத்திரம் கிழிந்திருக்கவும் புது ரசீதையும் பார்த்து படானுக்குப் பணத்தைக் கொடாதிருக்க இவ்விரண்டுமிங்கெப்படி வந்தனவென்று தன் மனைவியைக் கேட்க அவள் தனக்குத் தெரியாதென்றாள். பின்பு விசோபா அந்தப் பத்திரங்களைக் கையிலேந்திக்கொண்டு படானிடம் வந்து நான்பணத்தைக் கொடாதிருக்கப் பத்திர மெப்படி யென்னிடம் வந்ததென்று வினவ, அந்தப்படா னவரைநோக்கி ஐயா! உமது பழைய குமஸ்தா பணத்தை வட்டியுடன் சாக்ஷிகள்முன்பாகக் கொடுத்துச் சென்றானென்று சொல்ல அவர் சாக்ஷிகளை விசாரிக்குமளவி லவர்களு முண்மை யென்று வெளியிட்டார்கள். விசோபா திரும்பிப் பண்டரிபுரம் வந்து தன்னுடைய பழைய குமஸ்தாவிடஞ் சென்று சங்கதியை விசாரிக்கத் தனக்குத் தெரியாதென்றான். இதைக்கண்டு விசோபா வியப்படைந்து பண்டரிநாதரே இப்படி செய்தாரென்று பக்தியுட னவரை சன்னிதியிற்சேவித்து பிரேமையினால் கண்களில் நீர்பெருக தோத்திரஞ்செய்து ஸ்வாமி! அடியேனுக்காக தேவரீர் தொந்தரை யெடுத்துக்கொண்டீரேயென்று தெண்டஞ் சமர்ப்பிக்க பெருமாளவர்மேற் கருணையுடையவரா யிருந்தார். பண்டரிபுரத்தி லிவ்வார்த்தையை அனைவருங்கேட்டு ஆச்சரிய மடைந்தார்கள்.

---

## பரத்ரிராஜன் சரித்திரம்.

அவந்தியெனு மோர்பட்டணத்தில் பரத்ரியெனு மரசன் பிரஜைகளைப் பரிபாலித்து வருவான். அவனுடைய தம்பி விக்கிர

மார்க்க னென்பவன் இளவரசனாகி சகல காரியங்களையும் பார்த்துக்கொண்டுபோவான். பத்ரிஅரசன் மிகவும் தருமமுடையவனாய் நிலைபெற்ற சுகத்தை யடைந்திருந்தான். அந்தத் தேசத்தில் ஏழ்மை ஜனங்களும் யாசகர்களு மில்லா திருந்தனர். அவ்வரசன் மன்மதனைப்போல மகத்தான சௌந்தரியத்தையுடையவனாகி பிரபலமான அழகைப் பொருந்திய பிங்களையெனும் பாரியையுடனிருந்து அவள்மேலிருந்த பிரீதி விசேஷத்தால் ஓர் சித்திரகாரனையழைத்துத் தன்மனையா ளுருவம்போல எழுதும்படிச்செய்து அப்படத்தைகொலுமண்டபத்தில் தன்னெதிரேவைத்திருந்து பார்த்துக்கொண்டிருப்பன். அவ்வரசன் சகலவித்தைகளையும்சீருடன் கற்றுக்கொண்டு மேலான கவித்வங்களை மிகுதியாகச் செய்யும் திராணியுடையவனாகி, வடமொழியில் நீதிசதகமொன்றைச் செய்தான். சிலநாட்களுக்குப்பின் போகவிலாசமான சிருங்கார சதகமொன்றைச் செய்தான். இத்தனை லக்ஷணங்க ளவனிடத்திலிருந்தும் அவன் மனையா ளவனுக் கிசைந்தவளாகாமல் வெளிக்குத் தன் பர்த்தாவின் மேற் பிரீதியைக் காண்பித்து பரபுருஷன்மேற் பிரீதியுடையவளாகி ஜாரஸ்திரீயாக விருந்தாள். சகல சாதுரியங்களை அரசன் பொருந்தி யிருந்தாலும் தன்மனையாள் குணத்தைக் கண்டுகொள்ளாம லிருந்தான். இதனால் இஹலோகத்தில் கீர்த்தியும் யசசும் குறைவாகும்படி நேர்ந்தது.

அரசன் சரபடநாதரெனும் சித்தபுருஷருக்குச் சரணாகதி யடைந்து அவரிடத்திற் றுனுபதேசத்தைப் பெற்றுக்கொண்டான். பக்தியும் விரக்தியுமில்லாத ஞானத்தை பரத்ரி அரசனடைந்து விஷயவாசனைக்கு உட்பட்டவனாகி இராஜ்யபாரத்தைச் செலுத்தி வந்தான். ஆசாரியரோ ஞானபூர்த்தி யுடையவராகி லோகங்களெங்கும் சஞ்சரித்துப் புண்ணிய புருஷருக்கு மாத்திரமே தன் புனிதவுருவத்தைக் காண்பிப்பர். இப்படி பல இடங்களிலுந் திரிந்துக்கொண்டு அமராவதிக்குச் சென்று அவ்விடத்திற் பரத்ரி அரசனுடைய ஞாபகம் வந்து அவனுக்காக ஓர் அமிருத பலத்தைக் கொண்டு அவந்திநகரத்திற்கு வந்தார். அரசன் ஆசாரியருடைய வரவைக்கண்டு நமஸ்கரித்து சகலவித பூஜைகளைச்செய்து அவரை நோக்கி ஸ்வாமி! இன்று சத்குருசேவை கிடைத்தது. ஜடலக்ஷணமுடைய ஜீவர்கள் சமுசாரமெனுஞ்சேற்றி லமிழ்ந்திருப்பர். அவ்

வண்ணமானவர்களைத் தேவரீர் புனிதராக்கி ஆட்கொள்ளுபவராவீரென்று அனேக விதங்களாகத் தோத்திரஞ்செய்ய, ஆசாரியர் அந்த அமிர்தபலத்தை அவனுக்குக்கொடுத்து இந்திரபுரியான அமராவதிக்கு நான் சென்றபோது இது கிடைத்தது, அதனை இவ்விடங் கொண்டுவந்தேன். இப்பழத்தை நீ பக்ஷிப்பாயாகில் உன்னுடம்பு அமரகாயமாய்விடும், சீக்கிரத்திற் பக்ஷியுமென்றுசொல்ல அரசன் அவருக்கு நமஸ்கரித்து ஸ்வாமி ! பாதிபழத்தைப் பாரியாளுக்குக் கொடுக்கிறேனென்ன ஆசாரியரதற்கு மௌனத்தை யுடையவராகி சஞ்சித கருமத்தின்படி நடக்குமென்று சொல்லி அவரிருப்பிடஞ் சென்றார்.

பின்னர் அரசன் பழத்தைக் கையிலேந்திக்கொண்டு தன் பத்தினியிடம்வந்து போகநிவாசத்திற்குச்செல்ல அவள் தன்கணவன் சரீரத்தைக் கைகளாற்றடவி காமத்தை யுண்டாக்கினாள். தனது பிரீதியை வேறுமனிதனிடம் வைத்து வெளிக்கு அரசனிட மன்பைக்காட்டி வெற்றிலைப்பாக்கை மடித்துக்கொடுத்து மோஹாதிசயத்தால் மன்னனைப்பார்க்க அவன் காமாதுரனாகிக் கட்டி அணைத்துக்கொண்டு உன்னை நான்பாராத நிமிஷம் யுகமாகக் காண்கிறதே ! உன் சுந்தரத்தை நானெங்குங் கண்டதில்லையே ! நானும் நீயுஞ் சாகாமலிருக்கச் சரபடனுதர் அமிருதபலத்தைக் கொடுத்தார். அதை நீ பார்க்கக்கடவையென்று காண்பிக்க, அவளதைக் கைக்கொண்டு ஜாரபுருஷனுக்கிது செம்மையா யிருக்குமென்றெண்ணி அரசனை நோக்கி பிராணநாதரே ! நாம் ஸ்நானஞ்செய்து சுசியாகி நல்லமுகூர்த்தத்திற் பக்ஷிப்போமென்று சொல்லி அவள் தன்பெட்டியிற் பத்திரப்படுத்தினாள். பின்பு படுக்கையி லரசனைப் படுக்கச்செய்து கிரீடைகளைச் செய்ய அன்றிரவு முழுது மரசன் விஷய சுகங்களை யனுபவித்துக்கொண் டிருந்தான். பொழுது விடிந்தவுடன் இராஜன் நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு கொலு மண்டபத்திற்குச் சென்றான். அவனுடைய மனையாள் பரபுருஷனை யழைத்து ஏகாந்தமாக அந்தபழத்தைக் கொண்டுவந்து அவனிடங் கொடுத்து இதை பக்ஷிப்பையாகில் சாகாத சரீரத்தை யுடையவனுவாயென்று சொல்ல அவனதைக் கைக்கொண்டு தனக்கொரு வைப்பாட்டி யிருந்தபடியா லவளுக் கதைக்கொடுத்தால் சந்தோஷப்படுவாளென் றெண்ணி இராஜஸ்திரீயைப் பார்த்து நான் ஸ்நா

ஞ்செய்து சாப்பிடுவோ மென்று கையி லதை வைத்துக்கொண்டிருக்க, பிங்களை அதைக் கொடுக்கச்சொல்லி வற்புறுத்தினால் அவன்போய்விடுவானென்றெண்ணி சும்மாயிருந்துவிட்டாள். அஸ்வசேவகனான அந்தப் பரபுருஷன், பழத்தைக் கையிலேந்திக்கொண்டு தன் வீட்டிற்குவந்து தன் வைப்பாட்டியான புலிந்தையை நோக்கி ஓ பாக்கியசாலி! இந்தப்பழத்தை நாமிருவருமுண்டு வெகுகாலஞ் ஜீவித்திருக்கலா மென்றதனை யவள்கையிற் கொடுத்தான். அதையவள் கைக்கொண்டு பரபுருஷனைப் பார்த்து நாம் சேவகாவிருத்தியி லிருந்து வெகுகாலம் பிழைத்திருப்பது தகுதியன்று, இதை யரசனுக்குக் கொடுப்போமாயி னனைவருக்கும் நன்மையாம். புண்ணியசீலனும் தர்மாத்மாவுமான அவ னிப்பூமியை யரசாண்டு வந்தால் பிரஜைகளனைவருக்கும் சத்பரிபாலன முண்டாம். நாம் சாகாமலிருந்தாற் குதிரை சேவையே செய்யவேண்டும். ஆதலாலிப்பழத்தை யிராஜனுக்கே கொடுப்பது யுக்தமென்றாள். அந்த ஜாரனும் சந்தோஷிக்காமல் ஸ்நேஹங் கெடுமென்ற பயத்தாற் சும்மாயிருந்தான்.

அனந்தரம் புலிந்தையானவள் ஊருக்கு வெளியிற் சென்று கூடையிற் சாணத்தை நிறைத்து அதன்மேலந்தப் பழத்தை வைத்து இராஜ வீதியாக நடந்துவருகையில் அரசன் அப்பழத்தைக் கண்டு ஓர் தூதனை யனுப்பி அவளைச் சமீபத்திற் கழைத்து வரச்சொல்லிப் பழத்தைப்பார்க்குமளவில் தன்னாசாரியரனுக் கிரகித்ததென்றறிந்தான். பின்பு அரசன் புலிந்தையை நோக்கி யிப்பழமெவ்விடத்திய தென்றுகேட்க, அவள் அஸ்வசேவகன் தனக்குக் கொடுத்தானென்றாள். அதைக்கேட்டு அஸ்வசேவகனை அரசன் அழைத்து உனக்கிந்தப்பழமெவ்விடங்கிடைத்ததோ சத்தியமாகச் சொல்லென்ன அவன்மௌனமாக விருந்தான். அதைக்கண்டு அரசனவனை யடிக்கும்படி கட்டளையிட்டான். அப்படியேசேவகரடிக்கத் தொடங்க, அவன்வதனியத்தையடைந்து துக்கித்துக்கொண்டு தெரியப்படுத்துகிறேன், கருணிக்கவேண்டுமென்றான். அரசனதைக்கேட்டுநீ பயப்படவேண்டாம் நானுன்னைக் கொல்லமாட்டேனென்று சொல்ல, அவன் நமஸ்கரித்து பிங்களைக் கொடுத்தாளென்றான். அரசனதைக்கேட்டு அமரர்களுக்கும் கிடைக்கவரிதான பழத்தை யுனக்கெப்படிக் கொடுத்தாளென்ன, அவனதிகபயத்தைக்கொண்டு

ஏகாந்தத்திலவளென்னை யணைந்துவருவாள் இப்பழத்தை யிருவரும் பக்ஷித்து சுகமேயிருக்கலா மென்றென்னிடங் கொடுத்தாள். இச்சங்கதி வெளியாரறிந்தால் பிராண ஹானியென்று பயத்துடன் அனுபவிக்கும்போகத்தைக்காட்டிலும் புலிந்தையுடன் பிரேமையுற்றிருப்பது சுகமென்று அவளை வைப்பாட்டி யாக்கிக்கொண்டு அவளிட மிப்பழத்தைக் கொடுத்து இருவரும் பக்ஷிப்போமென்று சொன்னேன், அவளென்னை நோக்கி சேவகா விருத்தி நமக்கமைந்திருக்க வெருகாலம் ஜீவிப்பதிலென்ன சுகமென்றும் இராஜனுக்கு கொடுத்தாலுலகமுழுமையும் க்ஷேமத்தையடையுமென்றும் சொல்லி தங்களிடங்கொண்டுவந்தாள், இது உண்மையான சங்கதியென்றறிவித்தான்.

இதைக்கேட்டு அரசன் அனுதாபமுடையவனுகி ஐயோ! இதுவரைக்கும் ஹரிஸர்வேஸ்வரனை நினையாமல் சமுசாரத்தில் விழுந்து அதனுட்பக்கி வியர்த்தமாகக் காலத்தைக் கழித்தேனே! நரகஹேதுவான நிந்திக்கத்தகுந்த சுகத்தில் நினைப்பைமூட்டினேனே! மைதுனசுகம் துச்சமென்று அதைதவிர்த்து இச்சரீரத்தை விஷ்ணுசேவையில் வைக்காமல் வீண்காலத்தைப்போக்கினேனே! இனி எனக்கு ஹரிசரணங்களே இரக்ஷகமாகுமென்று அதிகவைராக்கியத்தை யடைந்து கண்களில் நீர்பெருக வைராக்கிய சதகமெனுமோர் நூலை அப்பொழுது இயற்றி தன்மனையாளை ஜாரபுருஷனுக்குக் கொடுத்து அவர்களை நோக்கி இனி நீங்களிருவரும் பயத்தைவிட்டு கலக்கமின்றி காரியசாதனஞ் செய்துக்கொள்ளலாமென்று சொல்லி யந்தப்பழத்தைத்தானே பக்ஷித்து விக்கிரமார்க்கனுக்கு அரசாக்ஷியைக் கொடுத்து கானகத்திற்குச்சென்றுர். ஆசாரியரிதைக்கேட்டு அரசனிடம்வந்து ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை விவரமாக வுபதேசித்துக் கிருதார்த்தனுக்கினுர். பரத்ரி அரசனும் சித்தபுருஷனுகி கோரக்ஷர் மச்சிந்திர நாதர்களைச் சேர்ந்திருந்தான்.

---

## கோபீசந்து சரித்திரம்.

கௌட பங்காளா தேசத்தில் காஞ்சனபுரியெனும் பட்டணத்தில் திரிலோக சந்திரனெனு மோரரசன் மிகுந்த பிரதாபத்தை

யுடையவனாகி யரசாக்ஷி செய்துவந்தான். அவன் மனையாள் மைனு வதியென்பவள் மேலான சுகுணங்களை யுடையவளாகி அவனிஷ்டப்படி நடந்துவந்தாள். வெகுகால ராச்ய பரிபாலனஞ் செய்து காலகதியடைய அவனுடைய குமாரன் கோபிசந்தென்பவ னரசாக்ஷியைக் கைக்கொண்டு ஆயிரத்திருநூறு பத்நிமார்களுட னிருந்து விஷயசமேராவரத்திற் கிரீடைசெய்து வருவான். இவர்களன்றி ஆயிரத்தறுநூறு சுந்தரகாமினி ஸ்திரிகளை நாடகசாலையில் வைத்து மகத்தான சம்பத்துடன் சுகபோகங்களை யனுபவிப்பான். மந்திரிமார்களும் மன்னனுக் கனுகூலராகி இருப்பர். இவ்வளவைஸ்வரிய மிருந்தபோதிலும் மைனுவதி தன்பர்த்தாவின் வியோகத்தால் அதிக கிலேசமுடையவளாகி ஓர்நாள் மாளிகைமீதேறி அங்குமிங்கும் பார்த்துக்கொண் டிருக்குமளவில் ஓர் புருஷன் விறகு சுமையைத் தலைமேலிட்டு அதின்பாரத்தை நந்தலைதாங்காமலும் நடந்து வருமளவில் அவர் நிழல் பூமிமேல் விழாமலு மிருக்கக்கண்டாள். இவர் ஜாலந்தர நாதரெனுஞ் சித்தபுருஷர். அவர் சாத்வீக குணத்தை வகித்து, மாயாம்மைதகளைவிட்டு ஆத்மசுகத்தை யடைந்து "ஆலக்" எனும் சப்தத்தைச் கூவி பிக்ஷையினு லன்னத்தை சம்பாதித்து அதைப்பக்ஷித்து இரவில் நெருப்புச்சட்டிக்காக கானகத்திற் சென்று விறகைக் கொண்டுவந் திவ்வண்ணம் காலயாபனஞ் செய்துவருவார். இவரைக்கண்டு மைனுவதி ஈஸ்வராவதாரமானவரென்றும் அவரை ஆசாரியராகவடுத்து அனுக்கிரகத்தைப்பெற்று லிங்க தேகமெடுத்ததற்குச் சார்த்தகமாமென்று மனதிலெண்ணி அவரையே குறிவைத்திருந்து அப்பட்டணத்தி லவர் தங்குமிடத்தைத் தான் மேடைமே லிருந்தே கண்டுகொண்டாள்.

அனந்தரம் மைனுவதி ஆசாரியருடைய பூஜை நிமித்தியம் வேண்டிய திரவியங்களை [illegible] ண்டு ஜாலந்தர்நாதரிடம்வந்து நமஸ்கரித்து ஸ்வாமி! தேவரீர் சமுசார துக்கமெனுந் தரித்திரத்தை நாசஞ் செய்பவராவீர், அடியாளை கிருபாகண்ணோக்கத்துடன் கடாக்ஷித்து நாமஸ்மரணையை அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தாள். இதைக்கேட்டு ஜாலந்தர் நாதரவளை நோக்கி நான் யோகிஸ்வரனென்று பவரோகத்தை யுடையவனுகி பஸ்மத்தைத்தரித்து இங்குமங்குந் திரிபவனுமவன், நீயோ அரசனுடைய

தாயார், பெரியவர்களான சாதுக்களைப்பார்த்து அவர்களுக்குச் சரணம்புக்கக்கடவை. நான் முத்திரைலக்ஷியங்களொன்று மறியேன், லௌகிகவிருப்புமொன்று மில்லேன், தங்குமிடமில்லாதவன். எப்பவும் பசியுட னிருப்பவன், புல்லே படுக்கையாக வுடையவன். என்னை ஆசாரியனாக ஏன் விரும்புகிறாயென்றார். அதைக்கேட்டு மைனாவதி திரும்பி நமஸ்கரித்துச் சொல்லுவாள். ஸ்வாமி! தேவரீரிடம் மகிமையைக்கண்டு மனம்வாக்கு காயங்களால் தேவரிடத்திற் சரணமடைந்தேன். சீதகால மதிகமாயில் ஜலசரங்களுக்குப் பயமுண்டோ? சூரியனுடைய உஷ்ணகிரணங்களால் கமலங்கள் நீரில் வாடுமோ? அவைபோல லோகாபவாதத்திற்கு சங்கோசிக்கவில்லை. தேவரீர் கிருபைசெய்ய வேண்டுமென்றாள். இதைக்கேட்டு ஜாலந்தர்நாதரவளுடைய பரிசுத்த மனதைக்கண்டு பரம [illegible] தாரகமந்திரத்தை யுபதேசித்தருளினர். இவளம்மந்திரத்தை யனுஷ்டித்துவர மனது வுன்மனியில் (துரியத்தில்) ரமித்திருந்தது, நான் நீயெனும் பாவனைபோயிற்று. தேஹாபிமானம் நீங்கினது. உள்ளில் விவேகம் விகசிக்க, ஜன்ம மரணமெனும் பவ சமுத்திரத்தைக் கடந்தவளாகி ஆத்ம சுகத்தை யடைந்து ஸர்வவியாபகனான ஸர்வேஸ்வரனை அவள் அனுபவத்திற் கண்டாள்.

ஜாலந்தர்நாதர் உதாஸவிருத்தியை யுடையவராகி அக்காஞ்சனபுரியிற் சிலகாலம் வாசமாயிருந்தார். மைனாவதி அவருடைய சாவகாசத்தைக்கண்டு அப்போதைக் கப்போது அவரிடஞ் சென்று நல்லவார்த்தைகளைக்கேட்டு வருவாள். இப்படியிருக்க ஒருநாள் அரசன் கோபிசந்து தன் கொலுமண்டபத்தி லிருந்து போகாபேக்ஷையுடன் பத்தினியிடஞ் செல்ல அவளு மனேக வி[illegible]ர்களான விலாச வஸ்துக்களை சித்தப்படுத்தி பஞ்சணை மெத்தையை அலங்கரித்துப் புருஷனுக் கெதிர்பார்த் திருந்தாள். இருவரு மேகாந்தமாக விருக்கிற சமயத்தில் மனையாள் மன்னனுக்குத் தாம்பூலத்தைக் கொடுத்துக்கொண்டு சொல்லுவாள். ஓ பிராணநாதரே! அடியாள் சொல்லைச் செவியேற்கக்கடவீர், தேவரீர் தாயார் மைனாவதி, இப்பட்டணத்தி லிருக்கும் ஜாலந்தரநாதரென்னு யோகியினிட மடிக்கடிச் செல்கிறாள். அவரிடத்தி லவளுப தேசத்தைப் பெற்றுக்கொண்டு பிரீதியுட னேகார்த்தத்தி லிருவரு மிருக்கிறார்களென்றும இது விபரீத செய்கையென்றும் உலகத்தார் சொல்லு

கிருர்கள். பூமண்டலத்திற் கெல்லாம் மன்னராகிய தங்களுக் கிது களங்கத்தை யுண்டாக்குவதன்ருே! நீங்களே யிதை யோசிக்கவேண்டுமென்று சொல்ல, அரசனிதைக்கேட்டு ஜகத்தில் துப்புகளைப் போல ஸ்திரீசாங்கத்தியத்தால் தன் விவேகநீதி யாவற்றையும் இழந்து குரோதத்தை மேற்கொண்டான். அன்றிரவு தான் போகங்களை யனுபவித்து பொழுது விடிந்தவுடன் நித்திய கிரமங்களை முடித்துக்கொண்டு கொலுமண்டபத்திற்கு வந்து மந்திரிகளைநோக்கி இப்பட்டணத்தில் ஜாலந்தரநாதரெனும் யோகி வெகுகாலமாய் யிருப்பதாக கேள்வியுற்றேன், அவரைப் பல்லக்கின்மேலேற்றி அழைத்துவந்தால் அவருடன் சிலவார்த்தைகளைச் சம்பாஷிக்க விருப்பங்கொள்ளுகிறே னென்ருன்: மந்திரிகளதற்கிசைந்து மேளவாத்திய கோஷங்களுடன் ஜாலந்தர நாதரிடஞ் சென்று நமஸ்கரித்து ஸ்வாமி! கோபிசந்து அரசனுங்களை தரிசிக்கவிரும்பி பல்லக்கிலெழுந்தருளுவித்து அழைத்துவரும்படிச் சொன்னனென்ருர்கள். இதைக்கண்டு ஜாலந்தர நாதருடைய மனதுவிசேஷமடைந்தது. ஜனக்கூட்டத்தின் மான்யதை சுகங்கொடாதென் றெண்ணி அம்மந்திரிகளை நோக்கி நாங்கள் சங்க ரகிதராகி உதாச விருத்தியுடனிருக்கு மவர்கள் எங்களை அரசனேன் கூப்பிடுகிருன். என்னை அரசனிடங் கொண்டுபோவீராகில் இராஜ னரசாக்ஷியை இழந்து விடுவானென்றுசொல்லி எழுந்திருந்து பல்லக்கி லுட்காராமல் கால்நடையாகிச் சென்ருர். அரசனவரைக் கண்டவுடன் தெண்டனிட்டு ஸ்வாமி! தேவரீ ரிவ்விட மொருநாளிருந்து போஜனம் முதலாகிய பூஜைகளைக் கைக்கொண் டருளவேண்டுமென்று அதிக வினயத்துடன் பிரார்த்திக்க இவ்வதிசயத்தைக்கண்டு ஜாலந்தர் நாதர் சம்மதித்தார். அரசன் கபடத்தை யுடையவனுகி வெளிக்குவெகுவிதவுபசாரங்களைச்செலுத்திப் பூஜித்தான். இரவானவுடன் திவ்வியமான போஜனத்தை அவருக் களித்து சுகமான சயனத்திற் படுக்கச்செய்ய அவர் நடுராத்திரியி லுன்மனியில் மனதைச் செலுத்தித் தன்னை மறந்திருந்தார். அவ்வேளையி லரசன் சேவகர்களை யேகாந்தத்திலழைத்துகட்டில்மேல் ஜாலந்தரநாதரைக் கொண்டுபோய்க கிணற்றில் விட்டுவிடுங்க ளென்றுசொல்ல அவர்களு மப்படியே செய்து ஓர் கல்லை கிணற்றின்மேல்மூடி சேற்றையதன்மேற் பரப்பி பூமியைப்போ லாக்கினர்கள். ஜாலந்தர் நாதர் ஜலத்தில் மூழ்காமல் கிணற்றில் அந்தரத்தி லிருந்தார்.

மைனாவதி தனது ஆசாரிய ரவ்வூரி விருப்பதைக்காணமல் அதிசிந்தை யுடையவளாகி பிரேமாதிசயத்தா ழுத் தொடங்கினுள். படுக்கையிற் படுத்தால் நித்திரைவாராமல் ஓ ஜாலந்தர நாதரே! தேவரீர் சரணத்தைத் தரிசிக்கச் செய்யுமேயென்றுக்கூவிக் கிலேசத்துட னிருப்பள். லோபி தன்னுடைய தனத்தை யிழந்தால் தொந்தரைப் படுவதுபோல மைனாவதி மனவருத்தமுற்று எப்போது குரு சரணங்களைக் காண்பேனென்று ஏக்கமுற்றிருந்தாள்.

ஜாலந்தர் நாதருடைய சிஷர் கானீபா நாதரென்பவர் எழுநூறு சிஷருடன் ஆசாரியருக்காக ஐம்பத்தாறு தேசங்களில் சஞ்சரித்துத் தேடிக் கொண்டிருந்தார். இப்படி அனேகநாள் கழிய ஒருநாள் இரத்தினாசனத்தில் கோபீசந்து உட்கார்ந்திருக்க, ஓர் நாவிதனெண்ணெயைத் தேய்த்துக்கொண்டிருந்தான்; அந்தத் தைலமனேக சுகந்த பரிமள திரவியங்களுடன் கூடியிருந்தது, காமினீ ஸ்திரீகளனேகர் உபசாரங்களைச் செய்து அரசனுடைய கடாக்ஷவீக்ஷணத்தைப்பெற்று அவனை சூழ்ந்திருப்பார்கள். அரசனும் மவ்விபவங்களைக்கண்டு ஆனந்தமடைந்து இதுவே மேலான சுகமென்றெண்ணி யிருப்பன். மேடையின்மீதில் மைனாவதியிருந்து புத்திரனுடைய வைபவத்தைக் கண்டு மகோஹர மானசுந்தரரூபத்தை யுடையவனாயிருந்தாலும் காலன் கொண்டுபோய்விடுவானே! இதற்குப்பரிஹார மென்னவென்று அழத்தொடங்கினள். அவள் கண்களினின்று சிந்தினநீர் காவலன் முதுகின்மேல் விழுந்தது. அவன் திடுக்கிட்டு யவ்விடத்திலிருந்து அந்த ஜலபிந்து விழுந்ததென்று மேற்பக்கம் நோக்கித் தன் தாயார் அழுதுக்கொண்டிருப்பதைக் கண்டு ஓ தாயே! உன்னை யெந்தமருமகளென்ன நிஷ்டூரவார்த்தைகளால் தொந்தரைசெய்தாளோ தெரியப்படுத்தினுலுடனே சிக்ஷிப்பேனென்று சொல்லத் தாயார் புத்திரனை நோக்கி எனக்கு யாரும் நிஷ்டூர வார்த்தைகளைச் சொல்லவில்லை, உன்னுடைய ரூபலாவண்ணியங்களைக்கண்டு முப்பத்திரண்டு லக்ஷணங்களுஞ் சரியாயிருக்கும் மன்மதனுடைய ரூபமாகத் தோன்றுகிறதே! இதனையுங் காலன் கொண்டு போவானே! சுந்தரமான இந்த வுருவத்தை அக்கினியிற் போட்டால் சாம்பலாய் விடுமல்லவா என்னும் எண்ணங்களென்னைவாட்ட, அழத்தொடங்கினேன், உன்பிதாவு மிவ்வண்ணமாகவே ரூபலாவண்ணியங்களை யுடைத்தாகி காலன்வசமாய்விட்

டார், இந்த இராஜ்யசம்பத்து புத்திரர் தனம் யாவும் நாசமடை யத் தக்கவை. கானல் நீரைக் கண்டு மான் ஜலமென்று பிரமித்து ஓடுவதுபோல நீ விஷயசேவையாற் கண்குருடாகி அந்தபோகத் தையே நாடியிருக்கிறாய். நரதேஹம் வாய்த்தபின் நாராயணனை பஜிக்காதவன் பவசக்கரத்திற சுழன்று என்பத்தி நான்கு லக்ஷம் யோனிகளை யநுபவிக்க வேண்டிவரும்; ஆனதால் நீ மாயா மமதைகளை விட்டு ஜாக்கிரதை யடைந்து சற்குருவினிடஞ் சரண மடைவையாயின் நீ அமரகாயத்தை யடைவாய், உலகத்தில் அரசர்களெத்தனையோபேர் மாண்டார்களென்று அன்னையுரைக்க நரசரீரம் வந்தபின் போகானுபவம் நைஜமாக விருக்கிறதே! நா னென்னசெய்ய வேண்டுமென்று புத்திரன் கேட்க தாயார் மைனு வதி ஜாலந்தர்நாதரிருந்தா லவரா லுனதுசரீரத்தை அமரகாயமாக் கி விட்டிருப்பேன். அவர் தேஹத்தோடிருந்தும் தேஹமற்றிருப் பவர். சரீரமிருந்து மதின் நிழலில்லாதவர். அவர் மஹாபுருஷர். பன்னிரண்டு வருஷமாக அவரெங்கு சென்றாரோ தெரியவில்லை. நீ அதிருஷ்டஹீன னாதலால் அவருன்னை விட்டுப்போய் விட்டார். நீயொருநாள் பல்லக்கையனுப்பி அவரை யழைத்துவரச் சொன் னாய், அன்றுமுத லவரெங்கு போனாரோ வறியேன் என்று சொன் னாள். இதைக்கேட்டவுடன் அரசன் திடுக்கிட்டு கலக்கமுடையவ னாகி மௌனமாக விருந்தான். பின்னர் அவன் ஸ்நானஞ்செய்து அந்தப்புரத்திற்குச்சென்று அநுதாபத்துடன் விசனமுற்று நான் அவிவேகியாய்க் கொடியபாபத்திற் குட்பட்டேனே! விசாரிக்கா மல் ஸ்திரீவார்த்தையை நம்பி ஜாலந்தர் நாதரை கிணற்றிற் போ டும்படி செய்தேனே? அனியாயம் நடந்ததே! பரிஹாரத்திற்கிட மில்லையே! யென்று தாயார் வார்த்தையினால் பயமுற்றவனாகி யிருந்தான்.

மைனாவதி ஆசாரியரைத் தேடும் விஷயத்தில் மனதை அதிகமா கச் செலுத்திக் கானீபாநாதரெப்போ வருவாரென் றெதிர்பார்த் திருந்தாள். கானீபாநாதரும் மஹத்தான புண்ணிய க்ஷேத்திரங் களையும் மஹா பர்வதங்களையும் தபசிகள் வாசஞ்செய்யுங் குகை களையும் தேடி, கயா, பிரயாகை, கங்கோத்திரி, காசி, சப்தபுரிகளை யும் மார்வாடி, குஜராதி முதலான தேசங்களையும் தேடிக்கொண்டு வருமளவில் விஷ்ணு அம்ஸரான கோரக்ஷநாதரைக்கண்டு ஒருவருக்

கொருவர் வந்தன வழிபாடுகளைச் செய்து இருவரும் சித்தபுருஷ ரானதால் பிரீதியுடையோராகி வார்த்தையாடிக்கொண் டிருக்க கோரக்ஷகர் கானீபா நாதரை நோக்கி விநோதமாகச் சொல்லு வார், நீர் குருபக்தராயிருந்து ஸ்வாமி காரியததை மறந்தீர்; கோபீ சந்து அரசன் உன்மத்தனாகி ஜாலந்தர நாதரைசேவகர்களைக்கொண்டு ஏகாந்தமாக ஓர்கிணற்றிற் போட்டு செத்தையை அதன்மேற் பர ப்பச்செய்தா னென்றார். இதைக்கேட்டு கானீபாநாதர் பன் னிரண்டு வருஷம் சஞ்சரித்ததற்குப் பிரயோஜனமாக ஆசாரிய ரிருக்குமிட மறிந்தேனென்று சந்தோஷித்து டச்சிந்தரநாத ரிருக்கு மிடத்தைக் கோரக்ஷகருக் கறிவித்து, ஜாலந்தர் நாதர் அமரகா யத்தை யுடையவராதலால் நான், காஞ்சனபுரிக்குச் சென்று செய் யவேண்டிய பிரயத்தினங்க ளனைத்தையுஞ் செய்து கிணற்றிலிருந் து ஆசாரியரை வெளியேவரச் செய்வேனென்றுசொல்லி அவரிடத் தில் விடைபெற்றுக்கொண்டு கௌட பங்காள தேசத்திற்குவந்து கோபீசந்து அரசாக்ஷி செய்யும் பட்டணத்தைச் சமீபித்து புஷ்ப பலங்கள் நிறைந்த விருக்ஷங்களை யுடைய ஓர் உபவனத்திற் றன் எழுநூறு சிஷர்களுட னிறங்கினார்.

உடனே அவர் இரண்டுசிஷர்களை மைனாவதியிட மனுப்பித்தன் வரவைத் தெரிவித்தார். அவ ளச்சங்கதியைக் கேட்டு கண்களில் நீர்கலங்க ஜாலந்தர் நாதரைக்குறித்து பன்னிரண்டு வருஷம் சஞ்சரி த்துபிரயோஜன மாயிற்றோவென்று சிஷர்களைகேட்க அவர்களவளை நோக்கி அவரிருப்பிட மறிந்தோம், சீக்கிரத்திற் றரிசனங் கொடுப் பா ரென்றார்கள். இதைக்கேட்டவுட னனந்த மடைந்து கோபீ சந்தனிடஞ் செல்ல, அவன்பயமின்றி பத்தினிமாருடன் படுக்கையி லிருந்தான். தாயாரவனை நோக்கி ஓ மூடனே! காலன் வருவதை நீகாணாமலே யிருக்கிறாயே! சதி சுத சம்பத்தனைத்தும் நீசாகுமள வில் கூடவாரா. இந்தப் பிண்டம் நிலையற்றது போல பிரம்மா ண்ட முநிலையற்றதே. ஆனதா லனுதாபத்தை யுடையவனாகி எழுந்திரு. உன்னுடைய பாக்கிய விசேஷத்தால் கானீபாநாதரி ந்தப் பட்டணத்திற் கெழுந்தருளி யிருக்கிறார். அவர் ஜாலந்த ருடை சிஷ்யராவார். நீ அவரை சரணமடைந்து அவினாசபதவி யையடையக்கடவை. மந்திரிகளுடனும் கிராமவாசிகளுடனுஞ் செ ன்று அவரை பூசிக்கவும். நீ விஷயாதுரனாயிருப்பதைக் கண்டு

அவர் கோபங் கொண்டாலும் நீபெருத்த சாந்தியை வஹித்திருக்கக்கடவை, சாதுக்களுள்ளன்புடையவர்கள். நீ மறுமொழி சொல்லாய விருக்கக்கடவையென்றுசொல்ல, அரசன் மந்திரிகளையழைத்து இச்சங்கதியைத் தெரிவித்தூச் சதுரங்க சேனையுடன் காநீபா நாதரை வீட்டிற் கழைத்துவரவேண்டுமென்று உத்தரவு செய்ய அவர்கள் அதேதப்பிரகாரம் சேனுபரிவாரங்களுடனிராஜனிடம்வர இவன் அனுதாபத்தை யடைந்த மனதுடையவனாகி கால்களாலே நடந்துச் சென்று காணிக்கைகளை முன்வைட்டு கானீபாநாதருக்கு சாஷ்டாங்க நமஸ்க்காரஞ் செய்தான். அதைக்கண்டவர் நீயாரடா? என்று கோபத்துடன் கேட்டார். அதற்கு அடியேன் கோபீசந்தென்று அதிகபயத்துடன் சொல்லி தேவரீர் சமர்த்தரான யோகிராஜர், அடியேன்மீது கிருபைசெய்யவேண்டுமென்ன, கானீபாநாதரவனைநோக்கி யாரடா, உனக்கு கோபீசந்தனெனும் நாமத்தைக் கொடுத்தவர்? பைத்தியக்காரனை மகாபுருஷனென்று சொல்லுகிறாப்போலும் மதுபானத்தை அமிர்தமென்றுச் சொல்லுகிறுப்போலு முனக்கந்தப் பேரிட்டிருக்கிறது, திரிலோகசந்திரனுடைய கற்பத்தில் நீ பிறந்து நரகத்திற்கேகும் சாதனத்தை நீ செய்ததனே, விவேக நீதியைவிட்டு மாயாஜாலத்தில் விழுந்தனை, விஷய சக்தியையுடையவனாகி மனையாள்வார்த்தையை உண்மையென்றெண்ணி சற்குருமூர்த்தியான ஜாலந்தர் நாதரை கூபத்திற் வீசினையன்றோ? உன்னுயிர் போய்விடுமாயின் இராஜ்ய சம்பத்துமுதலான வனைத்துமிவ்விடமே நின்றுவிடும், சூரியசந்திரர்களிருக்கும்வரை ரவரமான கும்பிபாகநரகத்தை நீயடையவேண்டிவரும், ஜாலந்தர நாதரையெந்த ஆதாரத்தைக்கொண்டு நீதுன்பப்படுத்தினையென்று கேட்க, அரசன் பயத்தால் நடுக்கலுற்று அடியேனுண்மையாகவே அபராதியானேன், தேவரீர் சரணத்தைத்தவிர வேறுரக்ஷகரில்லையென்று திரும்பியும் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். அவ்வேளையில் தாயார் மைனுவதி வந்து கானிபா நாதருக்கு நமஸ்கரிக்கவே அவருடைய கோபந்தணிந்தது, மைனுவதியானவள் கோபி சந்தை கைபிடிப்பிடித்து வந்து கண்களில் நீர்பெருக கானீபா நாதர் சரணங்களிற்போட்டு, ஸ்வாமி! இவன் மஹாபராதி, இவனை தேவரீருடைய குழந்தையாக எண்ணி மன்னித்தருளவேண்டுமென்று வேண்ட, அவர் கருணையுடையவராகி நின்றார், தாயார் தந்தையுமவரைநோ

க்கி வீட்டிற் கெழுந்தருளி தேவரீர் திருவடி ஸ்பர்சத்தால் பவித்தி ரஞ் செய்தருளுவீரென்று பிரார்த்திக்க அவர்களுடைய சத்பா வத்தைக்கண்டு எழுநூறு சிஷ்யவர்க்கங்களுடன் கானீபாநாதர் அரசன் வீட்டிற்கு வந்தார். இராஜனு மவரை இரத்தினங்களி ழைத்த ஆசனத்தி லுட்காரவைத்து சர்வோபசார பூஜைகளைச்செ ய்து பக்குவான்னங்களுடன் போஜனமளித்தான்.

அனந்தரம் கானீபாநாதர் க்ஷமா சாந்தியுடையவராகி கோபீ சந்தை நோக்கி ஜாலந்தரநாதரை யெவ்விடத்திற் சேர்த்திருயெ ன்று கேட்க அவனதிகபயத்தையுடையவனாகி இராஜ்யமதத்தால், கிணற்றிற் போட்டேன். நரக சாதனத்தைச் செய்துகொண் டேன். இதை நிவர்த்திசெய்ய உபாயமேதுமறிகிலேன், கடத் தேறு மார்க்கத்தைக் காட்டவேண்டுமென்றும் பிரார்த்தித்தான். கானீபாநாதரவனை நோக்கி உன்னுடைய உருவம் போல செம்பி லும் பித்தளையிலும் இரும்பிலும் வெள்ளியிலும் நான்கு விக்கிரகங் களைச்செய்து தன்னிடங்கொண்டுவரச் சொல்லி யுத்தரவுசெய்ய அவனவ்வண்ணமே செய்து கானீபாநாதரிடங் கொண்டுவந்து கொடுத்தான். அவரவைகளை கைக்கொண்டு ஜாலந்தரநாதரிருக்குங் கிணற்றினருகேவந்து அதன்மேற் போட்டிருக்கும் செத்தையை நீக்கிக் கல்லைப்பெயர்த்து பார்க்குமளவில் ஜாலந்தர நாதரை யத னுள் ளிருக்கக்கண்டார். நகரவாசிகளனைவரும் பார்க்கவந்தார் கள். அப்பொழுது கானீபாநாதர் இரும்பினாற்செய்த பொம்மை யை அக்கிணற்றின்மேல் வைத்து அரசனை நோக்கி "ஆதேச்" என்று கூவச்சொன்னார். அவனப்படியே செய்ய உள்ளிருக் கும் ஜாலந்தர் நாதர் யாரென்று கேட்டார்! அதற்கு அரசன் கோபீசந்தனென்று சொல்லவே அவர் பஸ்மமாகக் கடவையெ ன்று சாபமிட்டார். உடனே அந்த விக்கிரக மெரிந்துவிட்டது. பின்பு தாம்பிரவிக்கிரகத்தை வைக்க அதனையு மவ்வாறே பஸ்ம மாகும்படி சாபமிட்டார். அப்படியே மற்ற இரண்டு விக்கிரகங்க ளும் பஸ்மமாயின. பின்பு ஐந்தாவதுவிசை கானீபாநாதர் கோ பீசந்தை கிணற்றின்முன்னிற்கச் சொல்ல அவனதிக பயத்துடன் முன்னின்று "ஆதேச்" என்றான் அவர் நீயாரென்றுகேட்க அடி யேன் மைனாவதி குமாரனை கோபீசந்தனென்றான். இதைக்கே ட்டு அவர் நீ இன்னம் பிழைத்திருக்கின்றாயோ? நீ அமரகாயத்

தை யுடையவனுவாயென்று கிருபையைக் காட்டினர். இதைக் கேட்டு ஜனங்க ளனைவரும் சிஷர்களும் ஜயஜய வென்றுச் சொல் லத் தொடங்கினர்கள். உடனே கானீபாநாத ரவரை வெளியே யெடுத்துப் பார்க்குமளவில் சூரியனைப்போலப் பிரகாசத்துடன் விளங்கினர். கானீபாநாதரு மவர்சிஷர்க ளெழுநூறு பேரும் அவரை நமஸ்கரித்தார்கள். மைனுவதி கண்களிற் ஜலம்பெருக அவர் திருவடிகளை யக்கண்ணீரால் நனைத்தாள். கானீபாநாதர் தன் உபாய விசேஷத்தால் கோபீசந்தை பஸ்மமாக்கச் செய்யா மல் அமரகாயத்தை அடையும்படிச் செய்தார்.

அரசனு மனுதாபத்தை யடைந்த சத்குரு மகிமை தன்னிய தை யடைந்ததென்று தான் சமுசார மாயையையவிட்டு மந்திரிமுத லோர் முன்னில் புத்திரனை யரசாக்ஷி யுட்கார வைத்து ஜாலந்தா ரைநமஸ்கரித்துக் கைகளைக் கூப்பிச் சொல்லுவான், ஸ்வாமீ! தே வரீருக்கு அடியேன் சரணமடைந்தேன். யோகசிக்ஷை அடியேனுக் குச் செய்யவேண்டுமென்றுப் பிரார்த்தித்தான். ஜாலந்தர் நாத ரவனைநோக்கி, விஷத்தைத்தின்றுப் பிழைத்திருக்கலாம், ஆகா யத்தில் நடக்கலாம், சமுத்திரத்தை வற்றச்செய்யலாம் ஆனல் வைராக்கியத்தை நிறைவேற்றுவது வருத்தமாகும். நானுனக்கு ஆசிர்வாதஞ்செய்தபின் நீ அமரகாயத்தை யுடையவனுனயாதலால் வைராக்கியத்தை வகித்து என் வருத்தப்பட வேண்டுமென்ன, கோபீசந்து அவரை நோக்கி ஸ்வாமி! தேவரீர் கிருபையுண்டா னுல் அசாத்திய மொன்றுமில்லை யென்றான். அதை ஆசாரியன் கேட்டு அரசன் அனுதாபத்தை அதிகமாக உடையவனென் றறி ந்து வைராக்கிய வேஷத்தைத் தரிப்பித்துப் பிக்ஷைவாங்கி வரும் படி கட்டளையிட்டார். அவனவ்வண்ணமே தன்மனையாளிடஞ் சென்று "ஆலக்" என்ற சப்தத்தைக்கூவித் தாயே! யென்று பிக்ஷையிடச்சொல்லி வாங்கினான். மனையாளும் ஐயோ! விப ரீதமாயிற்றேயென் றழத்தொடங்கினள், கிராமவாசிக ளனைவரு மாச்சரியப்படத் தொடங்கினர்கள். ஆசாரியகடாக்ஷ மானவுடன் மனது உன்மனியில் நின்றது. ஆத்மசொரூபத்தி லனுசந்தான முண்டாயிற்று. பகவ தனுபவத்தால் நீ நானெனும் வேற்றுமை போயிற்று வீட்டுவீட்டுக்குப் பிக்ஷைவாங்கிக்கொண்டு தாயாரிட ம் வந்து பாலுஞ் சோறும் போடுமென்று கேட்டான். இதைக்

கண்டு தாயார் சந்தோஷித்து என்று வயிற்றிற்பிறந்து குலத்தை யுத்தரித்தா யென்றும் இது ஆசாரியருடைய அருளென்றுஞ் சொல்லி ஆசிர்வதிக்க அவன் பன்னிரண்டு வருஷம் யாத்திரைசெய்து, பின்பு வருவேனென்று சொல்லத் தாயாரவனை நோக்கி நீ உன் தங்கையான சம்பாவதியினிடம் செல்லவேண்டாம். அவளுன்னை மாயாஜலத்தில் வீழ்த்துவாளென்றாள். இதைக்கேட்டு மௌனத்தை யுடையவனாகி அவ்வூரைவிட்டு சகலதேசங்களையுஞ் சுற்றிக்கொண்டு சம்பாவதி யிருக்குமிடஞ் சென்று பிக்ஷைக்கேட்டான். அவளிவனைக் கண்டமாத்திரத்தில் தமையனென் றறிந்து மோஹத்தால் கண்களில் நீர்விட்டு ஐயோ! இந்த வைராக்கிய வேஷத்தையேன் கொண்டீர்! இந்திரபதவிக்குச் சமமான இராஜ்ய சுகத்தை யேன்விட்டீர்? இரத்தின கசிதமான மடத்தை கட்டிக்கொடுக்கிறேன், இவ்விடமிருமென்று மாயாஜலத்திற் போட மிகவும் எத்தனித்தாள். கோபீசந்து அதற்கொன்றிற்கு மிசையாமலுடனே அவ்விடத்தைவிட்டு சஞ்சரித்துக்கொண்டிருந்து பன்னிரண்டு வருஷ மானபிறகு சுதேசத்தை யடைந்து தன்மனையாள் வீட்டிற்குப் பிக்ஷைக்குச் சென்றான். அவள் கணவனை நோக்கி மகததான கிலேசத்துடன் ஸ்வாமி! உமது கால்களை யாவரலம்புவாரென்ன கோபீசந்தவளை நோக்கி கங்கை யமுனை முதலான நதிகளலம்புமென்ன, உம்முடன்கூட யார் படுப்பாரென்ன அரசன் அங்கவஸ்திரமும் ஜோல்ணாவுங் கூடவே யிருக்குமென்ன, அவளும்முடன் யார் வார்த்தைச்சொல்லுவாரென்ன, அரசன் தன் கிண்ணாரம் வார்த்தைச் சொல்லுமென்றான், மறுபடியுமவள் எந்தபாத்திரத்தில் சாப்பிடுவீரென்ன அரசன் உன்னைப்போல தாய்மார் வீட்டு வீட்டுக்கு பிக்ஷைப்போடுவார்கள், கரதலத்திற்சாப்பிடுகிறேனென்று சொல்லி அவ்விடத்தைவிட்டு தாயாரிடம் வந்து பிக்ஷைகேட்ட மாத்திரத்தில் பாலுஞ் சோறுங் கொண்டுவந்து கொடுத்தாள். அதனை உண்டு பின்பு சித்த ஜனங்களுடைய கூட்டத்திற் கலந்து காலனை வென்று அமர காயத்தை யுடையவனானான். இந்த கோபீசந்துடைய சரித்திரத்தைப் படிப்போர்க்கு பவபந்தனம் விட்டுப்போம்.

---

## நாகநாதர் சரித்திரம்.

மானூரென்னும் பட்டணத்தில் சாம்பமூர்த்தி யம்சமாக நாகநாதரென்னும் புண்ணிய புருஷர் பிறந்து வளர்ந்து தபோவிக்கினமாகுமென்றெண்ணி ஞானத்தையுஞ் சாம்பலையுஞ் சரீரத்தி லணிந்து ஈக்கூட்டங்க ளனேகமாக மொய்க்க மலினத்வத்தை யடைந்தவர்போல் காணப்படுவார். பூதகணங்களும் பிசாசுகளுமவரைச் சுற்றி விளையாடிக்கொண்டிருக்கும். சர்ப்பங்களவரைச்சூழ்ந்து சஞ்சரித்துக்கொ[illegible]ம் தேள்களனேக மவர் சரீரத்தின்மேற் சஞ்சரித்துக்[illegible]ருக்கும். பிரஜைக ளவரைக்கண்டு பயமுற்றவராகி மோ[illegible]திரத்தை வசம்பண்ணிக்கொண்டா ரென்பர். அவரிட[illegible]ல் சமுசாரங் கெட்டுப்போமென்பர் சிலர், அமங்களரெ[illegible]லர் சொல்லுவார்கள். சிலர் பாபரகிதரென்றும் பரமஞா[illegible]ஞ் சொல்லுவார்கள். இவ்விதமாக வனேகவிதமாகச் [illegible]போதிலும் நாகநாத ரவர்களுடைய வாக்கியங்களைத் தா[illegible] [illegible]ல் தியாகசீலராகி வைராக்கியத்தை வகித்துச் [illegible]தைச் செய்துவருவார். குளிர்காலத்தில் வஸ்திரத்தைத் [illegible]மலும் மழைக்காலத்தில் பர்ணசாலையிற் போகாமலும் வெப்பற்காலத்தில் நிழலைத்தேடாமல் விரக்த சித்தராகச் சஞ்சரித்துக்கொண் டிருப்பர்.

ஏகலிங்க[illegible]மோர் புருஷன் காட்டிற் சென்று நாகநாதரையொருநாள் [illegible] அதிகப் பிரீதியுடன் தெண்டஞ் சமர்ப்பித்து ஸ்வாமி! [illegible]ானுதன், தீனன், மூடன், தேவரீ ரடியேனைப் புனிதனுக்[illegible]வேண்டுமென்று வேண்டி மனவாக்குக் காயங்களால் சரணமடை[illegible]. அவரு மதிகாரத்தை நோக்கி கிருபாவீக்ஷணத்தால் [illegible]கித்து அவன் உபாசிக்கும்பொருட்டு ஓர் மந்திரத்தை யுபதே[illegible]. ஏகலிங்க னதை அநுஷ்டித்துவந்து ஹரிபஜனையில் வி[illegible]மாக விளங்கினன். அனன்னியப் பிரீதியுடனாசாரியர் கால்[illegible]த்துவருவா[illegible], மலையாள் மதுரமான [illegible]ங்களை [illegible]று அக்காட்டிற் கொண்டுபோய் அவ்விருவருக்கும் [illegible]வர்கள் திருப்தியாகப் [illegible]னமெடுத்துக் கொள்ளுவ[illegible] ஏகலிங்கன் ஆசாரியரே ஹரியென்று நிச்சயித்து சேவை[illegible]மாகச் செய்துவருவான். ஜபமுந் தப

மும் சாதனத்திற்குப்பலமு மச்சேவையே யென்றிருப்பன். பிரபஞ்ச காரியங்களை நடத்திவந்தாலும் பிரேமையுட னுசாரியரிடஞ் சென்று சேவாதற்பரனுகி வெகுகாலமிருந்தான்.

அந்த இடத்திற் சிலவந்த னென்றொரு வர்த்தக னதிகசம்பத்துடன் வாழ்ந்திருந்தான். அவன் குமாரத்தி பதினாறு வயதுடையவளானபோதே மகத்தான வியாதியால் மரண மடைந்தாள். அற்பாயுளினுல் அபமிருத்தி யடைந்தாளென்று மாயாமமதையினுற் பந்துக்க ளனைவரும் மகத்தான துக்கத்தை யடைந்து பிரேதத்தை சுடுகாட்டுக்குக் கொண்டுபோகும்போது ஏகலிங்கன் தனதாசாரியரிடஞ் சென்று அவ்வழியாகத் திரும்பி வந்துக்கொண்டிருந்தான். சவத்தைப்பார்த்து பூமிமேற் றனது விரலைத்தேய்த்து அவ்விடத்திலுள்ள மண்ணைக் கொஞ்சமாக எடுத்து அச்சவத்தின் நெற்றியிலிட்டு நாகநாத சற்குரு உன்னை அவரிடம் நடக்கச்சொன்னுரென்று சொல்ல, உடனே அப்பெண் உயிரைப்பெற்று ஏகலிங்கன் பின்னே சென்றுள். இதை யனைவருங்கண் டாச்சரியமுற்றிருந்தார்கள். சிலர் குருவும் சிஷ்னுங் கபடிகளென்றும் அவர்களிடம்போய்க் காண்பது தகுதியல்லவென்றும் பலவாருகச்சொல்லிக்கொண்டும் பிரஜைகளனைவரும் தங்கள் வீடுகளுக்குப்போனுர்கள்,

ஏகலிங்க னப்பெண்ணுடன் தனதாசாரியரிடந் திரும்பிவந்து நமஸ்கரிக்க, அவர்நடந்த சங்கதியைக் கண்டுகொண்டார். அக்கன்னிகை யாசாரியர் கிருபையால் ஆத்மஞானத்தை யடைந்து தியாகபுத்தி யுடையவளாய் ஸ்திரீயென்றும் புருஷனென்றும் விகற்பத்தை யடையாம லம்மணமாயிருந்து குருசேவையை மிகப் பிரேமையுடன் புரிந்துவந்தாள். பரம்பொருளே எங்குமுள்ள தென்னு மனுபவத்தால் மனது விஷயநோக்க மற்றிருந்தது. பரமாத்மாவினிடம் பரமப்ரீதியுடைய பக்த சிரேஷ்டர்களை யெந்த விஷயவாசனையு மணுகாது. பேதரகிதமாகி "வர்தமை" யெனு மக்கன்னிகை ஆசாரியர்சேவையிலிருப்பது அநேக தேசங்களிற் பிரகடமாயிற்று நவநாத சித்தர்க ளிச்சங்கதியைக்கேட்டு சிம்மங்களின் மீதேறி நாகநாதரைத் தரிசிக்கும் பொருட்டு வரத்தொடங்கினர்கள். அவர்கள் வருஞ்சங்கதியை இவரறிந்துக்கொண்டு சீஷனை நோக்கி நவநாத சித்தர்கள் வருகிருர்கள், அவர்களை நீ எதிர்க்கொண்டுபோய்

அழைத்துவாவென்று ஆக்ஞைச்செய்ய, அவ்வேளையி லேகலிங்கனுர் சுவரை மண்ணையுங் கல்லையுங்கூட்டி கட்டிக்கொண்டிருந்ததைவிட்டு சிஷ்ஷன்போகவே சுவரும்பின்றொடர்ந்தது, நவநாத சித்தர்களிதைக்கண்டு ஆச்சரியமுற்று நிர்ஜீவமான சுவரை நடக்கச்செய்ய தங்கட்கு சக்திபோராதென்று சிம்மவாஹனங்களை விட்டுப் பூமிமேற் கால்களால் நடந்துவந்தார்கள். ஏகலிங்க னவர்களுக்கு நமஸ்கரித்து ஆச்சிரமத்திற் கெழுந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க அவர்கள் ஏகலிங்கனை நோக்கி அற்புதமான வித்தையை நீ காட்டினுய் நாகநாதருடைய தரிசனத்தை எங்களுக்குக் காண்பியுமென்ன அவர்களை ஏகலிங்கன் தனதாசாரியரிடங் கொண்டுவந்துவிட்டான். நாகநாதர் உடனே எழுந்திருந்து வந்தவாகளைச் சன்மானித்து நமஸ்கரித்து அவர்களை ஆஸனங்களிலுட்காரச்செய்ய, அவர்கள் நாகநாதரை நோக்கி உம்மிடத்திலோர் ஸ்திரி திகம்பரியாகவிருந்து சேவைகளைச் செய்கிறுளென்று கேட்டு அதனைக் காணவேண்டி வந்தோமென்ன, நாகநாதர் நல்லதென்று ஆச்சிரமத்திற் கப்புறமிருந்த "வர்தமை" யிடஞ் சென்று அவளுடம்பைத் தன்கையாற்றடவிக்கொடுக்க அவள் ஸ்திரீ ரூபத்தைவிட்டு புருஷரூபத்தை வகித்தாள். ஆசாரியர் வரதபகவனெனும் நாமஞ்சாற்றியருளினுர். நவநாதர்களிதைக்கண்டு நாகநாதர் சாம்பமூர்த்தி அவதாரமென்றெண்ணி ஒன்றுஞ் சொல்லாமல் அவர்களிருப்பிடஞ் சென்றுர்கள்.

ஹேரகரசனெனும் பிராம்மணன் மோஹனமெனுமூரில் நிலமையாசனின்று கொடுக்கல் வாங்கல் வியாபாரத்துடன் காலயாபனஞ் செய்துவருவான். அவன் தியாக புத்தியுடையவனுகி நாகநாதரிடம் வந்து ஸ்வாமி! அடியேன் பதிதன், தேவரீர் திருவடிகளைப் பிடித்துச் சமுசார சமுத்திரத்தைக் கடக்க எண்ணங் கொண்டேன். அடியேனுக்கு உபதேசத்தைக் கொடுத்து தேவரீர் கைகளை யென் தலைமேலிட்டு தாரக மந்திரத்தை யனுக்கிரகிக்கக் கடவீரென்று வினயத்துடன் பிரார்த்திக்க, அவனுடைய சித்தசுத்தியைக் கண்டு நாகநாத ருபதேசத்தைச் செய்தார் (உலகத்தில் விசுவாச முடையவனுக்கு விசேஷமாகத் தனத்தைக் கொடுக்கலாகும்) ஹேரகரசன் சத்பாவத்தை யுடையவனுகி நிஷ்கபடமாக விருந்தவ னுதலால் சற்குரு கருணைக்குப் பாத்திரனுகி நின்றுன். அவன் அன்று

ஆசாரியரை நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு வீட்டிற்குச் சென்றான்.

சில நாட்களிற்குப் பின்பு ஹேகரசன் ஒருநாளாசாரியரிடஞ் சென்று அவரைத் தன் வீட்டிற்கு வரும்படிப் பிரார்த்தித்தான். ஆசாரியரதைக்கேட்டு நீ யென் குறிப்பை யறிவையோ? என்றார். சிஷனதைக்கேட்டுக் குழந்தை தாயாரையறியாதிருக்குமோ? தாயார் குரூபியாயிருந்தாலும் சிசுவு அவளைவிடுமோ? அப்படியே தேவரீர் தரிசனந் தந்தருளுவீரென்று பிரார்த்தித்து தெண்டஞ் சமர்ப்பித்து மோஹோள் கிராமத்திற்குச் சென்று ஆசாரிய சரணங்களி லபார பிரீதியுடையவனாகி யிருந்தான்.

அநேக நாட்கள் கழித்தபின்பு ஆசாரியரொருதினத்தில் வைத்தியக்கார வேஷத்தைப்பூண்டு விகார ரூபராகி மத்தியபானத்தை விசேஷமாகச்செய்தவரைப்போலக் காண்பித்து மாம்சபக்ஷணையைச் செய்துக்கொண்டு உலகத்தார் பிசாச ரூபியென்று சொல்லி அவரைத் திரும்பிப்பார்க்காமற் போய்விடும் லக்ஷணத்தையுடையவராய் சஞ்சரித்துக்கொண்டு மோஹள கிராமத்திற்குச் சென்றார். விகாரவேஷத்துடனிருந்தாலும் ஆசாரியரை சிஷன் கண்டுபிடித்துத் தன் வீட்டிற் கழைத்துவந்தான். அவ்வூரிலிருக்கு மிதரஜனங்கள் ஹேகரசன் செய்கையைப்பார்த்து பிரஷ்டனானென்று நிந்திக்கத் தொடங்கினார்கள். சிஷனாசாரியரைப் பிரீதியுடன் பூஜித்து அவர் திருவடிகளைக் கழுவி தீர்த்தத்தைஸ்வீகரித்து ஏகநிஷ்டையுடன் அவர் பாதங்களைப் பிடித்துக் கண்களிலொற்றிக் கொண்டு ஆனந்த பாஷ்பங்கள்பொழிய நின்றான்.

அவ்வூரில் பிராம்மண ஜனங்களனைவரும் ஹேகரசனுக்கு பஹிஷ்காரஞ்செய்து ஒருவரு மவன் வீட்டிற்குப் போகாமலிருந்தார்கள். பந்துக்கள் மித்துருக்களனைவருந் தூரமாய் நின்றுவிட்டார்கள். இதுவே பிராயச்சித்தமாகக்கடவதென்று அவனை யூரார் நோக்காமலேயிருந்தார்கள். இவ்வண்ணமான பிரபந்தங்களைத்தனை செய்யினும் தைரியத்தைவிடாமல் விவேகசீலனாகி ஆசாரிய சேவா தற்பரனாயிருந்து தன் வீட்டிலவரை வைத்துக்கொண்டு புனிதனாகியிருந்தான். ஒருநாள் ஹேகரசனுடைய பிதுருதிவசம் வந்தது, சிஷனாசாரியரை நோக்கி ஸ்வாமி! இன்றைக்குப் பிதுரு திதி நேர்ந்தது பிராம்மணர்கள் யாரும் போஜனத்திற்கு வரார்களே

ண்ண, சாக்ஷாத் பிதுருக்களே போஜனத்திற்கு வருவார்கள் சமையலைச் செய்யென்று ஆசாரியர் கட்டளையிட்டார். சிஷனதேப்பிரகாரமாகப் பலவித பக்வான்னங்களுடன் சமையலைச் செய்வித்தான். ஊராரனைவரும் போஜனத்திற்கு நாங்கள்யாவரும் வாராமலிருக்க ஹேமகரசனென் சமயற்செய்கிறனே தெரியவில்லையென்று "சித்தெடக்க" மென்றுமவன் வீட்டிற்குச் சமீபமான ஓரிடத்தில் பரிசோதிக்கச் செய்யவுட்கார்ந்தார்கள். மத்தியான்னமானபோது நாகநாதர் போஜனத்திற்காக பிதுருதேவதைகளை யழைக்கவே அவர்களெல்லாம் வந்து இலைகளின் முன் உட்கார்ந்தார்கள். ஹேமகரசனவர்களுக்கு தூபதீபம்முதலான பூஜைகளை விசேஷமாகச்செய்து சாஷ்டாங்கமாக கீழேவிழுந்து நமஸ்கரித்து ஸர்வேஸ்வர சொரூபிகளென்று அவர்களுக் கன்னமளிக்க அவர்கள் திருப்தியாகப் பக்ஷித்து வெளியேவந்து கைகளைச் சுத்திசெய்ய, அவ்விடத்திலுள்ள பிராம்மணர்களனைவரும் குரோதத்துடனவர்களைப் பிடிக்கப்போக, அந்தத் தேவர்களனைவரும் தங்கடங்கள் தகப்பன் பாட்டன்மாராகக் காணப்பட்டார்கள். உடனே பிரீதியுண்டாகி ஒருவருக் கொருவர் வார்த்தையாடிக் கட்டியணைத்துகொண்டார்கள். பின்பு அவர்கள் அப்பேரன்மார்கள் வீடுகளுக்கும் பிள்ளைகள் வீடுகளுக்குஞ்சென்று பிரேமையைக் காண்பித்து மூன்றுநாட்களிருந்து பின்பு தங்கள் லோகந்திற்குச் சென்றார்கள். ஹேமகரசனை அவ்வூரா ரனைவருங் கொண்டாடிப் பூஜித்தார்கள். இப்படி நாகநாதர் செய்கைகள் மகிமைகளையுடைத்தாய் பிரசித்தமாயிருந்தன.

---

## விட்டலதாஸர் சரித்திரம்.

ஹிந்துஸ்தான் தேசத்தில் தமயனும் தம்பியுமாக இரண்டு பிராம்மணர்கள் ஓரரசனிட முபாத்தியாயர்களாய் விசேஷத் திரவியவான்களாகி வாழ்ந்திருந்தார்கள். நெடுநா ளிப்படி நடந்தேறிவர அவர்களிருவரும் விகற்பசித்தராகி வேறுபடுவதற்கெண்ணி தனத்தையும் சம்பத்தையும் பங்கிடுமளவில் ஒருவருக்கொருவர் விரோதத்தைப் பாராட்டி உபாத்தியாயர்களாக விருக்கும்படியா லன்னியர் வார்த்தைகளைக் கேளாமல் கர்வமு மபிமானமு மேற்கொண்டு ஒருவருக் கொருவர் பலிஷ்டராகி அடிதடி சண்டையைச் செய்து இருவரு மாண்டார்கள். பௌருஷ புத்தியாலும் அதிக தனமே

க்ஷையாலும் பிராணன்களை விட்டார்கள். இதைக்கேட்டு அரசனு மதிகக் கிலேசத்தை யடைந்தான். தமபனுக்குச் சந்ததியில்லை, தம்பிக்கு விட்டலனென்னுமோர் பிள்ளை யிருந்தது. பாலப்பிராயத்திற் றகப்பன் மாண்டுபோனபடியால் தாயா ரப்பிள்ளையை விசேஷப் பிரீதியை வகித்து வளர்த்தாள். பிள்ளை பெரியவ ரானபின் தாயாரை நோக்கித் தகப்ப னெவ்விடம் போனாரென்று விசாரிக்கத் தாயார் பிள்ளையை நோக்கி தகப்பன் தனலோபத்தா லிறந்தாரென்றாள். விட்டலதாச ரிதைக்கேட்டு அனுதாபத்தால் பிரபஞ்சம் துக்கரூபமென்று தெரிந்துக்கொண்டு ஸ்ரீஹரி! கிருஷ்ணா! நரஹரி! நாராயணா! அடியேனை யிரக்ஷியுமென்றுப் பிரார்த்தித்துத் தாயாரை நோக்கி, தாயே! அரசனிடம் புரோகித விருத்தியை யவலம்பித் திருத்தல் அனுசிதமாதலா லதனை நான் வேண்டேன். அத்தொழில் விபரீதத்தைக் கொடுக்குமென்று சொல்லி ஸ்ரீஹரியைச் சரணாகதி யடைந்து அவரே இரக்ஷகரென்று அவரையே அனுதினமும் பஜனைசெய்து காலத்தைக் கழித்துவருவார். அவர் விரக்தி யுடையவரென் றறிந்து தாயார் விவாஹத்தைச் செய்து வைத்தாள். விட்டலதாச ரெப்பொழுதுஞ் சாதுசேவையிற் றனது பிதுரார்ஜிதமான தனத்தையெல்லாஞ் செலவுசெய்தார். ஸ்ரீஹரி பூஜையில் விசேஷப்பிரீதியை வகித்துப் பஜனைசெய்வதும் அச்சுதா! கிருஷ்ணா வென்றும் ஹரிநாமங்களைச் சொல்லத் தொடங்கவே பிரேமை மிகுதியால் தேஹத்தை மறந்து மூர்ச்சையை யடைந்து பூமிமேல் விழுவதுமாக இருப்பார். ஓர்ஜாமம் வரைக்கும் அவ்வண்ணமாக விருந்து திரும்பி யெழுந்திருப்பார், உடனே பிரீதி அதிசயமாகவே ஹரிநாமங்களை மேன்மையுடன் சொல்லத் தொடங்குவார். இவ ரிப்படியிருப்பதை சஜ்ஜனர்கள் கண்டு நிஷ்டாவந்தரென்று கொண்டாடுவார்கள். துர்ஜனர்கள் டாம்பிகமென்று தூஷிப்பார்கள்.

இப்படியிருக்க அரச னொருநாள் மந்திரியை நோக்கி நமது புரோகிதருக் கொருபிள்ளை யிருந்ததாக கேள்வியுற்றோமே! இப்பொழு தப்பிள்ளை யெவ்வண்ணமாக விருக்கிறதென்று கேட்க, மந்திரி யரசனைநோக்கி ஓ பிரபுவே! அவ ரிப்பொழுது சாதுமார்க்கத்தை யவலம்பித்து ஸ்ரீஹரிபஜனையைச் செய்துக்கொண்டிருக்கிறதாகவும் தன் தந்தையின் கதியைத் தான்கேட்டு தனத்

தை விரும்பாமல் அநுதாபத்துடன் மமதைகளைவிட்டு ஹரிதி யான தற்பரராயிருக்கிறாரென்றும் சொல்ல அரசன் மந்திரியை நோக்கி விட்டலதாஸரைத் தன்னிடத்திற் கழைத்துத் தனத்தை யுந் தானியத்தையுங் கொடுக்கவேண்டுமென்று சொல்ல, மந்திரி, அரசன் கட்டளைப்படி விட்டலதாசரை யழைத்துவர தூதரை யனுப்பினான். அவர்கள் விட்டலதாசரிடஞ் சென்று அரசன் ஆக் கினையைத் தெரிவிக்க, அரசனிடத்தில் தனக்கு வேலையொன்று மில்லையென்று விட்டலதாசர் சொல்ல அவ்வார்த்தையை இராஜ னுக் கறிவித்தார்கள். அரசன் சந்தோஷித்து சில சத்புருஷர்களை விட்டலதாசரிட மனுப்பினான். அவர்கள் விட்டலதாசரிடம் வந்து வரச்சொல்லி யழைக்க பெரியோர்களுக்கு மறுத்துச் சொல்லாமல் ஹரிநாமங்களைச் சொல்லிக்கொண்டு அவர்களுடன் அரசனிடத் திற்கு வந்தார். அரசனவரைக் கண்டவுடன் சன்மானித்து ஹரி கீர்த்தனையைக்கேட்க விரும்புகிறேனென் றவரை கீர்த்தனைச்செய் யச்சொல்லிப் பிரார்த்தித்தான். விட்டலதாசர் அரசன் கருத்திற் கிசைந்து கீர்த்தனை செய்யச் சம்மதித்தார். துஷ்டர்கள் சிலர் கெட்ட நினைப்புடன் இரத்தினக்கம்பளியை மேடைமேல் விரித்து சபைக்கூட்ட முட்காருவதற்குச் சித்தப்படுத்த, அனேகர் ஹரி கீர்த்தனையைக் கேட்கவந்தார்கள். அப்பொழுது விட்டலதாச ரெழுந்திருந்து கிருஷ்ணா! கோவிந்தா! முகுந்தா! நரஹரி! நா ராயணா! பரமபுருஷா! பக்தவத்ஸலா! என்று பெருமாள் நாமத தைப் பூர்ணபக்தியுடன் கண்ணீர்மல்க உச்சரித்துக் கொண்டு கால் களிற் சலங்கையுடன் நடனஞ் செய்துகொண்டே மேடைமே லிருந்து கீழேவிழுந்து மூர்ச்சை யடைந்தனர். அவ்வேளையி லனை வரு மிதைக்கண்டு ஹா! ஹா! என்று ஓலஞ்செய்யத் தொடங்கி னார்கள். இந்த வனர்த்தத்தைக்கண்டு துர்ஜனர்கள் சந்தோஷத் தை யடைந்தார்கள். அரச னப்பொழுது கனிகரமுடையவனாகிக் கீழேயிறங்கிக் கையைப் பிடித்துப் பார்க்குமளவில் தேகஸ்மிருதி யும் சுவாஸமு மில்லாதிருந்தபடியால் கலக்கமுற்று துஷ்டர்களனை வருங்கூடி கெடுதிசெய்ய எண்ணங்கொண்டு மேடைமேற் கீர்த் தனையை வைத்தார்கள், இப்போது நம்மனை வருக்கும் கஷ்டம் வந்ததேயென்று பல்லக்கின்மேல் விட்டலதாஸரையேற்றி கன தாசாரியர் பத்தினியினிட மவரைச்சேர்த்து சங்கதியாவுந் தெரி

வித்து அதிக தூக்கத்தை யடைய, விட்டலதாஸருடைய் தாயார் தன் துடைமேல் புத்திரன் தலையைவைத்து விசேஷமாக அழத் தொடங்கினாள். அப்பொழுது அரசனவளுக் கனேகவிதங்களாக சமாதானஞ் சொல்லிக்கொண்டு தனத்தை விசேஷமாகக் கொடுத்துத் தன்வீட்டிற்குச் சென்றான்.

விட்டலதாஸர் பிழைப்பாரென்று தாயாரழுதுக்கொண்டிருந்து அவர்மேல் வஸ்திரத்தைப் போர்த்து வைத்தாள். தினந்தோறும் மூர்ச்சித்து எழுந்திருப்பது வழக்கமாயிற்றேயென்று மூன்றுநாள் தைரியத்துடனிருக்க மூன்றுநாளவரெழுந்திருந்து தாயாரைப்பார்த்து இவ்விடத்திற் கென்னை யார்கொண்டுவந்தார்கள் ? இது இராஜ கிரஹமல்லவேயென்று கேட்க தாயார்சந்தோஷித்து அரசன் சொன்னசங்கதியனைத்து மவருக் கறிவித்து அவன்கொடுத்தத் தனத்தையுங் காண்பித்து இது உத்தமமன்றோவென்றாள், விட்டலதாச ரனுதாபத்தை யடைந்து, தாயாரை நோக்கி நீ யென்னைத் தனலோபத்தால் அரசனுக்கு விக்கிரயஞ் செய்தாய். உனக்குத் தனமே பெரியதாயிற் றென்றுசொல்லி இரண்டுஜாம மவ்விடமிருந்து ஒருவருடனுஞ் சொல்லாம லெவ்விடமோ சென்றார். அரசனுக் கிதுதெரிந்து அவரைத் தேடும்பொருட்டுத் தூதர்களை யனுப்பினான். அவர்க ளனேக இடங்களிற்றேடியுங் காணமற் றிரும்பிவிட்டார்கள். தாயா ரிதைக்கண்டு திகிலடைந்து மூன்றுநாள் வரைக்கும் போஜனஞ் செய்யாமலிருக்க மதுராபுரியி லிருப்பதாக சொப்பனங்காண அது பெருமாள் வாக்கியமென்றெண்ணி குடும்பத்துடன் மதுரைக்குச் சென்று தன் குமாரரை அவ்விடங்கண்டு அவரிடமே சகலருஞ் சேர்ந்திருந்தார்கள்.

மதுரையில் விட்டலதாசர் க்ஷேத்திர வாசியாகி முக்காலங்களிலும் பெருமாளைச்சேவித்து பகவத் பஜனையைச்செய்து பாகவதர்களுக் கன்னமிட்டு ஹரிஸ்மரணையை ஊர்ஜிதமாகச் செய்துக்கொண்டு காலயாபனஞ் செய்துவந்தார். ஒருவருஷம் பெருத்த மழை பொழிந்தது. அவரிருந்தவீட்டின் சுவர் ஓர் பக்கத்தில் விழுந்துவிட்டது. அதைச் சீர்திருத்த அவர் மனையாள்மண்வெட்டியால் பிழக்கலடையிலோர் பள்ளத்தை வெட்டினாள். அப்பள்ளத்தில் விஷ்ணுமூர்த்தி விக்கிரஹ மொன்றகப்பட்டது. அதனடியில் அபாரத்திரவியத்தைக்கண்டு வியப்புற்று கணவருக்கிது தெரிந்

தால் காட்டிற்குச் செல்வாரே! அவர் தனந்தைக்கண்டு தாயாரை யே விட்டவரன்றோ! தாசியானவென்னை விட்டுப்போவது தனக்கு நுப்பன்றோ வென்றெண்ணி கணவரிடஞ் சென்று சங்கதியைத்தெ ரிவிக்க அவரவளை நோக்கிப் பொன்னும் ஓடும் எனக்குச் சமமா கத்தோன்றுதலால் பிரியமில்லாத இந்தத்திரவிய மெனக்கென்ன த்திற் கென்றும் திரவியத்தால் நமக்கு மஹாவிக்கினங்கள் வரு மென்றுஞ்சொல்லி அவ்வீட்டிற்குச் சொந்தக்காரனை யழைத்து நீர் திரவியத்தைக் கைக்கொள்ளும் என்று சொன்னார். அவனு ந்தனக் கதைவேண்டாமென்றும் அது தன்னுடையதாயிருந்தாற் றனக்கே யகப்பட்டிருக்கு மென்றும் அதை நீரே கைக்கொண்டு பெருமாளுக்கு வினியோகப்படுத்துமென்றும் உம்முடைய பக் திக்கு விஷ்ணுமூர்த்தி விக்கிரஹ மகப்பட்டபடியால் ஓராலயத் தைக் கட்டி அதனுள்ளவ்விக்கிரஹத்தை ஸ்தாபனஞ்செய்யக்கடவீ ரென்றும் அவ்விக்கிரஹத்தை நீரே பூஜித்து வரக்கடவீரென்றும் சொன்னான். அவ்வூரிற்பெரிய மனிதர் சிலரிச்சங்கதியைக்கேட்டு விட்டலதாசரிடம் வந்து ஆலயத்தைக் கட்டும்பொருட்டு ஒரு பா கந் திரவியத்தைச் செலவழித்து மூர்த்தி சம்புரோக்ஷணைக்கும் பிராம்மணபோஜனம் முதலானவைகளுக் கொருபாகமு செலவு செய்து நித்தியவிதி திரிகாலபூஜைக்கு ஓர் பாகத்தை வைத்து ஏற் பாடுகளைச்செய்து முடித்தார்கள்.

விட்டலதாசருஞ் சந்தோஷத்தை யுடையவராய் அனேக துக்களுக் கன்னமளித்து ஹரிகுணானுவாதஞ் செய்துவர அனேக ஜனங்கள் புனிதராகி ஹரிபக்தியை அவலம்பித்தார்கள். அவ யடுத்தவர்களுடைய வதிகாரத்தன்மைகளைப்பார்த்து அனுக்கிரகஞ் செய்ய, அனேக சிஷ்யர்களவரைச் சூழ்ந்திருப்பார்கள். குடும்ப கருமங் கருமமூலமென்று வைராக்கியத்தை யுடையவராகி சமு சார தருமத்திலிருக்க, ஓர்புத்திரன் பிறந்தான். சிஷ்யவர்க்கங்களி தைக்கேட்டுக் களிப்புற்று பன்னிரண்டாநாள் பிரபலவுச்சவங் கொண்டாட அனைவருங்கூடி வாத்தியங்கள் முழங்க நாட்டியப்பெ ண்கள் நடனஞ்செய்ய சபையில் சேர்ந்திருந்தார்கள். அப்பொ ழுது விட்டலதாசரை சிஷர்களனைவரும் சபையிலுட்காரச் செ ய்து சிசுவை அவரெதிரிற் கொண்டுவந்து வைத்து விலையுயர்ந்த வஸ்த்துக்களை விசேஷமாகச் சிஷர்கள் காணிக்கையாகக் கொடு

த்து இன்னும் பலவாறான வைபவங்களையுண்டாக்கினார்கள். அவ்வேளையில் நாட்டியப்பெண்கள் நாராயணனுடைய குணானுவாதத்தை யதிகமதுரமாகப் பாடிக்கொண்டு உன்னதமாக நடனஞ்செய்து வந்தார்கள். அங்கிருந்த சிஷர்களப்பெண்களுக்குப் பரிசு கொடுக்க விலையுயர்ந்த வஸ்திர பூஷணங்களைவாங்கி வைத்திருந்தார்கள் விட்டலதாசர் ஹரிகுணவர்ணனையைக் கேட்டு அமிதமான பிரீதியுடையவராகித் தன்னை மறந்து தன் சிசுவை வேசிகையிற்கொடுத்து விட்டார். அப்போது ஜனங்களனைவருமிதைக்கண்டு ஐயோ! விபரீதமாயிற்றே! வேசியினுடைய நீசவிருத்திக்குக் குழந்தை அவளிடமிருக்கத் தகுந்ததன்றே! என்றனைவருஞ் சிந்தாக்கிராந்தராகி குருவின்முன் ஒன்றுஞ்சொல்லாதிருந்தார்கள்.

வேசியானவள் விசேஷ சந்தோஷத்தையடைந்துக் குழந்தையுடன் தன்வீட்டிற்குச் சென்றாள். ஆசாரியர் வீட்டில்சிஷர்களனைவரும் விசனப்பட்டு மங்களகரமான விஷயத்தில் அமங்களமுண்டாயிற்றே! பலாத்காரமாக வப்பாலகனைக் கொண்டுவருவோமாயின் ஆசாரியருக் காயாசம்வருமே! யென்று உபாயமொன்றையுஞ் செய்யத் தோன்றாதவர்களாக விருந்தார்கள். இப்படியிருக்க அவ்விடத்தில் அரங்கராயியெனு மிராஜகுமாரத்தி யொருத்தி விட்டலதாசருடைய திருவடியை யாஸ்ரயித்திருந்தாள். அவளிச்சங்கதியைக் கேட்டு அவ்வேசியினிடஞ் சென்று உன் கோரிக்கை யெதுவோ அதனைக்கேட்டா லுனக்குக்கொடுக்கிறேன், ஆசாரியருடைய குழந்தையை எனக்குக் கொடுக்கவேண்டுமென்று எத்தனை யுபாயங்களாற் கேட்கினுங் கேளாமலிருப்பதைக்கண்டு விசனமுற்று ஆசாரியரிடம் வந்து உட்கார்ந்திருந்தாள். அவ்வேளையில்வேசியு மச்சிசுவை விட்டலதாசரிடங் கொண்டுவந்தாள். இதுசமயமென்று இராஜகன்னிகை வாத்தியங்கள் முதலியவற்றை வரவழைத்து அதிக சாதுரியத்துடன் அரிகுணலீலைகளைப் பாடிக்கொண்டு நிருத்தஞ்செய்யத் தொடங்கினாள். அபார ரசத்துடன் பாடவும் ஆடவுமாகவிருக்க அவ்வேசிக்குக் கருணைபிறந்து சிசுவை அக்கன்னிகையிடங் கொடுத்தாள். இதைக்கண்டு பிரஜைகளனைவரும் பரமானந்தத்தை யடைந்தார்கள். அவ்விராஜகன்னிகை வெட்கத்தை விட்டு குலதருமத்தையும் பாராமல் ஆசாரியருக்காக நாட்டியஞ் செய்து அனைவருக்கு மானந்தத்தையுண்டா

க்கினள். இதனு லக்கன்னிகை விசேஷ கீர்த்தியைப்பெற்று உல கில் வாழ்ந்திருந்தாள். வேசியானவள் விட்டல தாஸருடைய திருவடிகளுக்கு வந்தனம் புரிந்து தன் வீட்டிற்குச் சென்றாள். விட்டலதாஸர் விஷ்ணுபக்தியிற் சிறந்தவராகி வைராக்கிய சீலராகி வெகுகாலம் வாழ்ந்திருந்தார.

---

## முராரிதேவ சரித்திரம்.

படோதாவெனு மோர் பட்டணத்தில் பிராம்மண வம்சத்தில் முராரிதேவ ரென்றொருவரிருந்தார். அவ ரல்லும்பகலும் ஹரிகீர்த்தனைசெய்து அவர் காலத்தை ஓர் நிமிஷ சமானமாக வெண்ணிக் காலங் கழிப்பர். மகத்தான விபவத்துடன் விஷ்ணுபூஜையைச்செய்து மிகுந்த பிரீதியைச் செலுத்தி ஹரிநாமத்தை யிடைவிடாது பஜித்து மேலான கீர்த்தியை யடைந்திருந்தார். இவரருளிச்செய்யும் ஹரிகுணனுவாதத்தைக்கேட்டு அனேக ரவரைச் சரணமடைந்தார்கள். அதிகாரானு குண்ணியமாக அவர்களுக் குபதேசத்தைச்செய்து அனேக ஜனங்களை பக்திநிலையில் நிற்கச்செய்தார். இவருடைய சற்குண கீர்த்தியைக்கேட்டு அவ்வூரரச னவருக்குச் சரணுகதி யடைய அவனுக்கு முபதேசித் தருளினர். இதனுற் பிரஜைக ளனைவரும் அவரை மேன்மையுடன் சன்மானிக்க கீர்த்தியுங் கௌரவமும் மிகுதியாக நேர்ந்தன, வருஷத்திற் கொருவிசை ஸ்ரீராமநவமி உத்ஸவம் விசேஷ வைபவத்துடன் அவர் கொண்டாடுவார். சாதுஜனங்க ளனேகர்வந்து சர்வேஸ்வரனுடைய குணகதைகளைப்பாட நாதப்பிரம்மம் ஆகாயவீதியில் நிறைந்திருக்கும். ஒன்பதுநாள் மஹோத்சவத்தை மிகுந்த பிரீதியுடன் செய்து வருவர். இதற்கு அரசன் திரவிய சகாயத்தைச்செய்து வருவான். வந்தவர்களுக்குக் காணிக்கைக் கப்பங்களையும் வெகுமானங்களையுங் கொடுத்து கௌரவப்படுத்தி பிரீதிசெய்து வருவார்.

அவ்வூரில் ரோகிதாசன் சீஷனொருவ னிருந்தான். அவன் சர்மகாரர் வீதியில் வாசஞ்செய்து ஸ்ரீஹரியை அன்புடன் பஜித்து வருவான். பொழுதுவிடிய ஸ்நானஞ்செய்து நித்திய நேமத்துடன் சோடசோபசார பூஜைகளை ஸ்ரீஹரிக்குச்செய்து தீர்த்தப்பிரசாதத்தை கையிற்கொண்டு வீதியில்வந்து அதிகாரிகளாக வருபவர்களுக்குத் தடையின்றி தீர்த்தங்கொடுக்கப்படுமென்று கூச்சலிட்டு

அழைக்க அனேகர்வந்து அதனை வாங்கிக்கொண்டுபோய் அதனால் பக்திமார்க்கத்தில்நிலைமைபொருந்தி யிருப்பார்கள். ஒருநாள் தீர்த்தத்தை கைக்கொண்டு வெளியேவந்து ஹரிதீர்த்தத்திற் கதிகாரிகளைக் கூப்பிடுஞ் சமயத்தில் முராரிதேவ ரவ்வழியாக போய்க்கொண்டிருந்து அவ்வார்த்தையைக்கேட்டு அந்த சர்மகாரனிடஞ் சென்று தீர்த்தத்தைத் தனக்குக் கொடுக்கச்சொல்லி வேண்டினார். அவனிதைக்கேட்டுப் பயந்து பக்தியுடனும் விநயத்துடனும் சொல்லுவான். ஸ்வாமி! தேவரீர் பிராம்மணர் அடியேன் கீழ்ஜாதியிற் பிறந்தவன், நான் தீர்த்தங்கொடுப்பது அநுசிதமாகும். அரசனறிந்தால் பெருத்தசிக்ஷைக்கு என்னை உள்ளாக்குவானென்று பீதியுடன் சொல்ல முராரிதேவரிதைக்கேட்டு ஐயா! அரசனுக்குமெனக்கு மிவ்விஷயத்தி லென்ன சம்பந்தமுண்டு? நான் தாராளமாக தீர்த்தத்தைக் கைக்கொண்டு போகிறேன். அனைத்தையும் விட்டு நான் விஷ்ணுதீர்த்தத்தையே அபயமென்று கண்டிருப்பேன். சாதுக்களுக்கு ஜாதிவித்தியாசமில்லை. பகவத்தீர்த்தத்தில் உதகமெனும் புத்தியை விட்டிருக்கவேண்டும். இது உண்மையாகும். நீ மனதிற் குறையையாமல் தீர்த்தத்தைக் கொடுக்கக்கடவை. சர்மகாரவிருத்தி நீசமென்று சொல்லுவையாயின் சகலபதார்த்தங்களும் சருமத்தால் மூடப்பட்டிருக்கின்றன. காதுகளும் சருமமே, நாக்குஞ் சருமமே, கைகளுஞ் சருமமே, பகவத்சம்பந்தமான கருமங்க ளிவ்விந்திரியங்களா லாகின்றன. நீ ஹரிபக்தன். உன் கை தீர்த்தம் பவித்திரமாகும். ஆனதா லித்தீர்த்தபானத்தா லெனக்குக்கொஞ்சமேனுந் தோஷமுண்டாகாது. நீ யெனக்கதனைக் கொடுக்கக்கடவாய். அநுமானிப்பாயாயின் என்னை ஹரிபக்த னல்லவென்றும் எனக்குத் தீர்த்தத்தைக் கொள்ள அதிகாரமில்லையென்னுஞ் சொல்லுமென் றியம்பினார். இதைக்கேட் டந்த சருமகாரன் மாறுத்தாஞ் சொல்ல அசக்தனாகி தீர்த்தத்தைக்கொடுக்க முராரிதேவ ரதை ஸ்வீகரித்துச் சென்றார் இதை அவ்விடத்திலனேகர் ஆச்சரியத்துடன் கண்டுகொண் டிருந்தார்கள்.

முராரிதேவர் தன்னிருப்பிடத்திற்குச் சென்றார். பிரஜைகளனைவரும் அநுசிதகருமத்தை ஆசாரியர் செய்தாரென்று பரஸ்பரம் இரகசியமாக வார்த்தைகளாடிக்கொண் டிருந்தார்கள். அரசனுக் கிதை ஜனங்களறிவிக்க அவனுமிது நலமல்லவென்று

அன்றிரவு குருதரிசனத்திற்குச் சென்று வெளிக்கு ஒன்றுஞ்சொல்லாமல் குணபேதத்துடன்கூடி யிருந்தான். அரசன் விகல்ப சித்தத்தை யுடையவனானானென்று முராரிதேவர் மனதி லறிந்துக்கொண்டு அன்றிரவி லொருவருடனும் வார்த்தைச் சொல்லாமல் கௌரவத்தையும் நாணயத்தையும் மஹாத்மியத்தையும் ஆகிய எல்லாவற்றையும் விட்டு அப்பட்டணத்தையும் விட்டு ஒன்றையுங் கோராமல் வேறுதேசத்திற்குச் சென்று அவ்விடத்திற் சஜ்ஜனங்களுடன் சேர்ந்து சயாதாரத்தை யடைந்திருந்து சற்குண சீலராகி ஸ்ரீயப்பதியின் திருநாமத்தை யிடைவிடாமற் சொல்லிக்கொண்டு ஆனந்தத்துட னிருந்து தனக்குள் ளெண்ணத்தொடங்கினர். அரசர்களுக் குபதேசிப்பது உபாதிக்கே இடமாகும். விநயத்துடன் கூடினவர்கள் ஏழைகளாயிருந்து சாதுமார்க்கத்தை யவலம்பித்து சாதகராகி அனேகர் கிருதார்த்த ராவார்கள். தனவான்களுக் குபதேசித்தால் ஸ்ரீமந்தனுடைய குருவென்று உலகத்தார் சொல்லுவார்கள்; இவ்வாறான ஜனங்களுக் கனுக்கிரகிப்பது ஹரிநாமத்தை விக்கிரயஞ்செய்வதுபோலாகும், இந்தப் பெருமைதனக்கு வேண்டியதில்லையென்று அவ்விடத்திலேயே சுகமா யிருந்துவிட்டார்.

ஆசாரியர் ஊரைவிட்டுப் போய்விட்டாரென்ற சங்கதியைக் கேட்டு அரச னதிக சிந்தையுடைத்தாய் அபசாரப் பட்டேனென்றனுதாபத்தை யுடையவனாகி, ஆசாரியரால் ஹரிகுணகீர்த்தனையை அபாரமாகக் கேட்டுக்கொண்டிருந்தேனே ! அவரிவ்விடத்தைவிட்டுப்போனதுமுதல் அந்த சத்காலக்ஷேபம் இல்லையென்று கிலேசமுற்று, தூதரை அஷ்டதிக்குகளுக்கு மனுப்பினன். அவர்களுமெங்குந் தேடித்திரிந்து பார்த்துங் காணாமல் திரும்பிவந்துவிட்டார்கள். ஆசாரிய ரகப்படவில்லையென்னுஞ் சிந்தை அரசனுக்கதிகமாக விருக்க இராமஜயந்தியுஞ் சேரவந்தது. வழக்கப்படி சாதுஜனங்கள் வெகுபேர் வந்தார்கள். முராரிதேவ ரவ்விடமில்லாதிருப்பதைக்கண்டு மனமின்புறாமல் நிராபேக்ஷையாற் திரும்பிப்போகத் தொடங்கினார்கள். அரசனவர்களை யழைத்து முராரிதேவ ரிருக்குமிடத்தைத் தெரிவித்தால் தானவ்விடஞ் சென்று அழைத்து வருவதாகச் சொல்ல அவர்களிற் சிலர் நாங்கள் காண்பிப்போமென்ன அரச னதற்கிசைந்து அவர்கள்பின் செல்ல அவர்

ளாசாரிய ரிருக்குமிடத்திற் சேர்ந்தார்கள். அரசனுசாரியரைக் கண்டு நமஸ்கரித்து அபராதத்தை க்ஷமிக்கக் கேட்க அவர் மறுமொழிச் சொல்லாமல் முகத்தை மற்றொரு பக்கத்திற் றிருப்பிக் கொண்டார். அரசன் திரும்பி எதிரில் நின்று ஆசாரியரைக்கண்டு ஸ்வாமி! குடத்தில் நீரை நிறைவாக விடாவிடிற் ஜலம் ஏற்றக் குறைச்சலாற் றளும்பும். இது குடத்தின் தப்பிதமல்ல. அன்னீரைக் குடத்தி லெவர் விட்டனரோ, அவர்தானதற்குக் கர்த்தாவாவார். ஞானபோதம் நிறைவுபெறு திருந்தபடியால் சமூலமாக பேதம்விடாம லிருந்தது. கிரமக் கிரமமாக இப்பொழுது தேவரீர் கிருபையால் குறைவு நிவர்த்தியாய் விட்டது, கருணித்தருளுவீரென்று பிரார்த்திக்க ஆசாரிய ரரசனுக்கு ஹிதபரராகி அவனிஷ்டப்படி பட்டணத்திற் கெழுந்தருளினர்.

அரசனு மாசாரியரை வீட்டிற் கழைத்துவந்து குருசேவையை அதிகமாகச் செய்தான். ஆசாரியரு மிராமஜயந்தி உச்சவத்தை நடத்த வாரம்பித்தார். இவர்மேல் நிந்திதவார்த்தைகளைச் சொன்ன சகலரும் சிரங்கீழாச் சாய்த்துக்கொண்டார்கள். அனந்தரமுச்சவத்திற்கு விசாலமான மண்டபங்களைப் போடச்சொல்லி அலங்காரங்களை விசேஷமாகச் செய்வித்து முராரிதேவர் ஸ்ரீராம விக்கிரஹத்தை யவ்விடத்திலிட்டு பிரதி தினத்திலு மன்னதானம் பிரபலமாகச் செய்து ஹரிதாசர்களைக்கொண்டு ஹரிகீர்த்தனைகள் விசேஷமாகச் செய்வித்து மகத்தான விபவத்துடன் ஒன்பதுநாளுமுச்சவத்தை மேன்மையாகக் கொண்டாடி நடத்திவந்தார்.

நவமிதினத்தில் முராரிதேவர்தானே இராமகதையைச் சொல்லத் தொடங்கி. இராமநாமத்தை விசேஷப் பிரீதியுட னுச்சரித்து கண்களி லானந்த பாஷ்பங்கள் பெருக தோத்திரஞ் செய்து சொல்லுவார். பேரறிவே இராமபிரம்மமாகி அவரது கருணையேயோர்ஆகாரத்தை யடைந்து பக்தசனங்களை ரக்ஷிக்கும் பொருட்டு பகவானென சர்வேச்வரன் உலகத்தி லவதரித்து சாதுக்களனைவரும் புகழும்படி சன்மார்க்கமான வனேக செய்கைகளைச் செய்தருளினர். பிரம்மதேவன் குமாரன் புலஸ்தியன். அவனுக்கு விச்ரவசனெனுமோர் பிள்ளை பிறந்தான். இவன் கைகேயியெனுங் கன்னிகையைப் பாணிக்கிரகணம் பண்ணினன். இவள்வயிற்றில், இராவணன், கும்பகர்ணன், விபீஷணன், என்று மூன்று பிள்ளைகள்

மகா கீர்த்திமான்களாகப் பிறந்தார்கள். பிரதமபுத்திரன் பிரம்மதேவனைக் குறித்து தவம்புரிந்து பலத்தையுஞ் சம்பத்தையு மடைந்தான். இரண்டாவதுபிள்ளை நித்திரையை வேண்டுமென்று கோர அவ்வரத்தை வானவன் கொடுத்தான். மூன்றாவதுபிள்ளை விஷ்ணுபக்தியைக் கோர சதுர்முகன் சந்தோஷித்து, அவ்வரத்தை யளித்தான். பிரமதேவன் கொடுத்த வரத்தைக் கொண்டு இராவணாசுரன் உலகங்களனைத்தையுஞ் ஜயித்துக் குபேரனிடத்திலிருந்த இலங்கையைப் பிடுங்கிக்கொண்டான். தேவலோகத்திற்குச் சென்றுத் தேவர்களை ஜயித்துத் தன்வச மாக்கிக்கொண்டான். இராக்ஷசர்க ளனைவரும் பிரஜைகளை அதிகமாகப் பீடிக்கத் தொடங்க அதர்மம் விசேஷித்து அதனாற் பூமிதேவி நடுநடுங்கிப் பிரம்மதேவனிடஞ் சென்றாள். இந்திரன் முதலானோரும் பூமிதேவியும் சதுர்முகனும் க்ஷீராப்திக்குச் சென்று விஷ்ணுமூர்த்தியை அனேக விதங்களாகத் தோத்திரஞ் செய்ய அவர் பிரசன்னராகி அவர்களுடைய முறையைக்கேட்டுதேவர்களனைவரும் வானரர்களாகிப் பிறக்கக்கடவர்களென்றும் தசரத மஹாராஜனுக்குத் தான் நான்கு அம்சங்களாக பிறந்து [illegible]சகண்டனான இராவணனைச் சம்ஹரிப்பதாக வாக்குதத்த மளித்து ம[illegible]ந்தார். அயோத்தியாபுரியிற் றசரதமகாரா[illegible]னுக்குப் பிள்ளைகளில்லா திருந்ததால் புத்திரகாமேஷ்டி யாகத்தை வசிஷ்டரைக்கொண்டு செய்விக்க, அ[illegible]பகவான் பாயஸத்தைத் தந்தருளினார். தசரதன த்தைக் கைக்கொண்டு கௌசல்யைக்குங் கைகேயிக்குங் கொடுத்தார், சுமித்திரையெனும் மற்றொரு மனையாளுக்கு மே[illegible]சான்ன அவ்விருவரும் தங்களுடைய பாகங்களிற் பாதிபாதிகொடுத்தார்கள். மூன்று மனைவிகளும் புஜித்து கர்ப்பவதிகளானார்கள். கௌசல்வியைக்கு ஸ்ரீஹரியே இராமபிரானாகி முதல் அவதரித்தார். கைகேயிக்குப் பரதர் பிறந்தார். சுமித்திரைக்கு இரட்டைப்பிள்ளைகள் இலக்ஷ்மணனும் சத்ருக்கினனும் பிறந்தார்கள், அப்பொழுது தசரத மஹாராஜன் தான தரும[illegible]களை வெகுவாகச்செய்து ஜாதகருமங்களையு முடித்தான். நாளுக்கு நாள் பிள்ளைகள் பெரியவர்களாக வசிஷ்டமஹாரிஷி அவர்களுக்கு சாஸ்திரங்களையும் [illegible]த்தைகளையும் கற்பித்தார். தனுர் வித்தையிலும் அவர்கள் நிபுணராகி நின்றார்கள். இப்பிள்ளைகளின் றன்மையு மொழுக்கமுங் குணங்களையுங் கண்டு தகப்ப னதிகப் பிரீதி

யடைந்திருந்தார். அவ்வேளையில் விஸ்வாமித்திர மஹரிஷி தசரத ராஜனிடம் வந்து தன்னுடைய யாக ரக்ஷணைக்காக இராமரும் இளையபெருமாளும் வேண்டுமென்று அவனைக்கேட்க அவர்களை அரசனனுப்பத் தன்னுடைய ஆஸ்ரமத்திற்கு அழைத்துக்கொண்டு செல்லுமளவி லிராமர் வழியி லொருபாணத்தாற் றாடகியெனு மிராக்ஷஸியைத் தரணிமேல் விழச்செய்தார். விஸ்வாமித்திருடைய ஆச்சிரமத்தைச் சேர்ந்தபின் யக்கிய விக்கினஞ்செய்பவர்களை இராகவர்வென்று யாகபூர்த்தியைச் செய்வித்து அவ்விடத்திலிருந்து விஸ்வாமித்திரருடன் கௌதமருடைய ஆச்சிரமத்திற்குச் சென்று அஹலிகை சாபத்தை நிவர்த்திசெய்து மிதிலாபுரிக்குச்சென்று மஹேஸ்வரர் வில்லைக் கண்டித்து சீதாபிராட்டியைக் கல்யாணஞ் செய்துகொண்டு அயோத்திக்கு வருமளவில் வழியிற் பரசுராமருடன் வாதங்களாடி அவர் மதத்தை யணைத்து அயோத்தியா நகரைச் சேர்ந்து சீதையுடன் சுகமாக வீற்றிருந்தனர். சிலகாலஞ்சுழிய தசரதன் தன் புத்திரனுன இராமபிரானுக்கு பட்டாபிஷேகஞ்செய்ய எத்தனிக்க தேவர்களுடைய பிரேரேபணையால் விக்கினங்களுண்டாயின. தசரத மஹாராஜனிடமிரண்டு வரங்களை கைகேயி பூர்வத்திலேயே கேட்டிருந்தாள். அவை நியாசமாக விருந்தன. அத்தருணத்தி லிராமாபிஷேகத்திற்கு விக்கினஞ் செய்து ஒருவரத்தால் பரதருக்கு இராஜ்யமும் மற்றொரு வரத்தா லிராமர் சகலத்தையும் விட்டு வனத்திற்குச் செல்லவும் வரங்களைக்கேட்டாள். சத்தியத்தைப் பரிபாலனஞ் செய்யவேண்டுமென்று தசரதமஹாராஜன் அவ்வரங்களைக்கொடுத்து விசேஷ சோகத்தைத் தானடைந்து தனயரான இராமபிரானுக்கிதைத்தெரிவிக்க அவரதற்கொரு ஆக்ஷேபணையுஞ் சொல்லாமல் தயையுடன்கூடி தகப்பனுக்குச் சமாதான வசனங்களைச்சொல்லித் தாயாருக்கும் ஹிதோபதேசஞ்செய்து சீதையுடன் வனத்திற்குச்செல்ல லக்ஷ்மணப் பெருமாளும் பின்றொடர்ந்தார். இதைக்கேட்ட தசரதன் கனத்த சோகத்தை யடைந்து களேபரத்தை விட்டான்' முராரிதேவ ரிந்த சந்தர்ப்பத்திற் கதையைச் சொல்லிக்கொண்டே வந்து இராமபிரானிடத்திற் பிரீதியை யிடைவிடாமல் மிகுதியாக வைத்து ஆத்மாவுக்குப் பிரியரான ஸ்ரீஹரியையே சேர்ந்து சரீரத்தை விட்டார். சபாஜனங்க ளனைவரும் ஹாஹாஎன்று சப்தம்

செய்பத் தொடங்கினுர்கள். சர்வேஸ்வரனுடைய திருவுள்ள மிது வென்று சகலரு மாச்சரிய மடைந்தார்கள். ஆசாரியருடை சரம கைங்கரியத்தை அரசன் செய்துவைத்து அப்படியே அவரு டைய புண்ணிய திதிகளேயு நடப்பித்து வந்தான். முராரிதேவரி ராமாயண கீர்த்தனையெனும் கிரந்தத்தைச் செய்தார். அத்தே சத்தி லந்தகிரந்தம் பிரசித்தமாக விளங்கிவருகின்றது.

---

## ஜயமல்லராஜன் சரித்திரம்.

ஜயமல்லரெனுமரச னெருவர் இராஜ்யத்தைப் பரிபாலனஞ் செய்து தயையும் சத்தியமு முடையவராகி ஜனங்களே சம்ரக்ஷ ணச் செய்துவருவார். பகவானிடத்திற் பக்தியும் சாதுக்களுடை ய சேவையும் சீருடன் செய்து மோஹஜாலத்தில் விழாமல் விஷ் ணுபக்தியில் விசேஷப்பிரீதி வைத்திருப்பார். தான் அரசாக்ஷிசெ ய்யும் பட்டணத்தில் சிலவீடுகள் உயர்ந்து அளாவியிருந்தன. மந்திரி யை அழைத்துப் பெருமாள் சன்னிதியிருக்குமிடத்தில் பிரஜைக ளுடைய வீடுகள் ஆகாயத்தை யளாவியிருப்பது சரியன்று. தேவ தாசிகள் அலங்காரங்க ளதிகமாக தரித்திருந்தாலும் பதிவிரதை களுக்குச் சமான மாகார்கள், பனைமர முயர்த்தியாய் வளர்ந்தா லும் உலகத்தாருக் கது நிழலைத் தருவதில்லை, அப்படியே பிர ஜைகளுடைய வீடுகள்பெரியனவா யளாவியிருந்தால் பிரயோஜனமி ல்லை இவ்விடத்தில் ஹரிசன்னிதியை அதிகவுயர்வாகக்கட்டினுல் பிர ஜைகளனைவருக்கும் பரமோத்தாரகமாக விருக்குமானதா லிப்போ தே அதனைக்கட்ட ஆரம்பிக்கக்கடவாயென்று ஆக்கினை செய்யவுட னே மந்திரி, சாமர்த்தியமுடைய சிற்பியரை யழைப்பித்து அபூர்வ மான சிறந்த ஓ ராலயத்தை ஹரிக்குக் கட்டக்கடவீர்களென்ன, அவர்களும் வேலையை ஆரம்பித்துக்கட்டத்தொடங்கினுர்கள். அர சனு மதற்கு வேண்டிய பொருளைக்கொடுத்து வந்தான். சிலநாட் களிற் சிற்பிய ரனேகர்கூடி கோயிலை நேர்த்தியாகக் கட்டினுர்கள். ஏழு அடுக்குகளுடைய மேடையாயிருந்து எந்தப் பக்கத்திலுந்துவா ரமின்றி சொர்ணத்தாலும் மணிகளாலுங் கூடினதாகியிருந்தது. விஷ்ணு மூர்த்தி விக்கிரஹத்தை அவ்வாலயத்தில் வைக்காமல், கயி றுகளா லோரேணியைச்செய்து அதின்மேலேறி கோயிலுக்குள்ள ரசன்போவார். ஸ்நானஞ்செய்து ஏகாந்தமாக இருகரங்களையுந்

தலைமேலிட்டு மனதிற் ஸ்ரீஹரியைச் சதுர்புஜ ரூபராகவும் சங்குசக்கரங்கள் கைகளி லுடையவராகவும் கண்டத்திற் கௌஸ்துப ஹாரமும் வக்ஷத்தில் ஸ்ரீவச்சமும் கமலம்போன்ற நாபியும் அரைஞாண் கயிறும் பீதாம்பரமும் சுகுமாரமான புஜங்களும் அழகான சலங்கைகளும் பிரகாசம் பொருந்திய நகங்களும் சங்குசக்கரம் பத்மரேகைகளமைந்து உலகங்களிலுள்ள தீர்த்தங்களுக்கெல்லாம் நிஜஸ்தானமாகும் திருவடிகளுமுடைய திவ்வியமங்கள விக்கிரஹத்தைத் தியானித்து அரசன் ஏகாக்கிரசித்தத்தை யுடையவராகி வெகுநேர மிருந்து பின்பு தோத்திரஞ் செய்யத்தொடங்கி ஜயஜய கிருஷ்ணா! ஜயஸ்ரீரங்கா! ஜயகேசவா! கோவிந்தா! ஜயலக்ஷ்மீபதி! ஜயபராத்பரா! ஜயரகுநாதா! முகுந்தா! அனேகரூபங்களை வகித்து அடியார்களை யிரக்ஷிக்கின்றீர். சனகசனந்தாதிகளுடைய மனங்களில் நித்தியவாசஞ் செய்பவரே! தேவரீருடைய திருவுருவத்தைக்காட்டி யருளுமென்று துதித்து வருவார். இவ்விதமாக அனேகநாட்கள் நிஷ்டை புரிந்திருக்க ஹரிசர்வேஸ்வரர் தனது சகுணரூபத்தைக்காட்டி அருள அரசன் கண்களாரப் பார்த்துத் திருவடிகளின்மேல் விழுந்து மஹத்தான பிரேமையைக் காண்பித்து பிரியவசனங்களைச் சொல்லலுற்றார். ஓ தீனதயாளோ பக்தவத்ஸலரே! நீரேகதியென் றிருக்கும் பக்தர்களுக்கு நீர் சுலபரா யிருப்பீரன்றோ! அவர்களுக்குத் தேவரீர் கருணையைக்காட்டியருளுவீரன்றோ! தேவரீருடைய தரிசனத்தால் அபாரசுகத்தை யடைந்தேனென்று ஸ்ரீஹரியை சிம்ஹாசனத்தி லுட்காரவைத்து ஏகாந்தத்தி லுவமையற்ற பக்தியினால் தூபதீப நைவேத்தியங்கள் முதலான சகலபூஜைகளைச் செய்து ஹாரதியைக்கொடுக்க சபாஸ்தலத்திற் பதுமைகள், தாளவீணைகளைக்கொண்டு தொனியைச் செய்தன. பின்பு அரசன் பிரீதியதிசயத்தால் அபாரமாக தோத்திரஞ் செய்து புஷ்பாஞ்சலியிட்டு நமஸ்காரஞ் செய்து ஓர் படுக்கையிற் பெருமாளை யெழுந்தருளவித்து அவர் சயனிக்கவும் கால்களை பிடித்திருந்து பெருமாள் நித்திரை யடைந்தாரென்று அரசன் அறிந்தபின் சன்னிதியைவிட்டுத் தன்வீட்டுக்கு வருவார்.

இப்படியே தினந்தோறும் ஸ்ரீஹரி பூஜையைச் செய்துவர உலகத்தாரனைவரும் மானசபூஜையை மன்னன் செய்து வருகிறாரென்று சொல்லிக்கொண் டிருப்பார்கள். தனித்து செய்யுமிப்

பூஜையை பார்க்க விரும்பி ஒருநாள் அரசன் மனைவி அவருக்குப் பின்னே சென்றாள். அவ்வறையதிராத்திரியிலரசன் கோயிற்சுவரை யேறி அதனுட் பிரவேசிக்குமளவில் கயிறேணியை யெடுக்க மறந்தார். அவர்மனைவி அக்கயிறேணிமேலேறி உள்ளே சென்று அரசன் ஸ்ரீஹரி சேவையை மனவாக்குக் காயங்களால் மகத்தான பிரீதியுடன் செய்து வருவதைக்கண்டாள். பெருமாளுடைய சௌந்தர்யமும் ரூபகுணங்களையும் தூரத்திலிருந்து அவள் சேவித்து மறவாமல் அவ்வுருவத்தை மனதிலிருத்திக்கொண்டு கிருதார்த்தத்தை அடைந்தேனென்று பூரித்தச் சிந்தையுடன் யாருக்குந் தெரியப்படுத்தாமற் றிரும்பி வீட்டிற்குவந்து படுக்கையிற் சயனித்திருந்தாள். அரசனுஞ் சகலசேவைகளைச் செய்து வீட்டிற்குவந்தார். புருஷன் வரவைக்கண்டு மனையாள் அவருக்கு தெண்டனிட்டுப் பெருமாளைக் கண்டேனென்றாள். அதைக்கேட்டு மனையாளை நோக்கி நீ மாதவனைச் சேவித்தாயாதலாற் கிருதார்த்ததை யடைந்தாய். சமுசார பயத்தை நீ யடையமாட்டா யென்றார். பெருமாளுடைய திருநாமம் சியாமளரென்று அரசன் சொல்லிக் கொண் டிருப்பார்.

அவ்வரசனுக்கோர் தம்பியுண்டு, அவன் தன் தமயனார்மேல் விசேஷவைரத்தைப் பாராட்டி வருவான். தான் பாதிராஜ்யத்தைக் கைக்கொள்ளும் நிமித்தம் தூரதேசத்திற்குச் சென்று அளவிறந்த சேனைகளைச் சேகரித்துக்கொண்டு தன் சகோதரர் பூஜை செய்யுஞ் சமயத்தில் வந்து பட்டணத்தை முற்றுகைப் போட்டான். இதைக்கண்டு மந்திரி சேனைகளைச் சேகரித்து யுத்தத்திற்கெதிர்நின்று அதிகமாகப் போர்செய்து ; ன்னால் முடியாமற் பலாயன மானான், இதைக்கேட்டு அரசனுடையதாயா ரவ்வாலயத்தை யேறி குமாரனிடஞ் சென்று சங்கதியைச் சொன்னாள். அதைக் கேட்டு அரசன் "சியாமள" வென்று சொல்லி ஹரிபூஜையி லிருந்தார். அவ்வேளையில் கிருஷ்ணமூர்த்தி ஓ ரிராஜவடிவத்தைக்கொண்டு குதிரையேறி நகரத்திற்கு வெளியில் வந்து யுத்தஞ்செய்ய சத்துரு சைனியங்க ளனைத்துஞ் சிதறத்தொடங்கின. உடனே அவ்வரசனுக்கு சத்துருவான தம்பியைக் கைப்பிடியாகப் பிடித்துச் சிறைச்சாலையிற் போட்டு பெருமாள் மறைந்தருளினார், இதை அவ்வூர் ஜனங்கள் அனைவருங்கண்டு ஆச்சரியமடைந்தார்கள்.

அரசன் ஹரிபூஜையை முடித்துக்கொண்டு வீட்டிற்குவர, தன் தம்பி சிறைச்சாலையி லிருப்பதைக்கேட்டு திடுக்கிட்டு ஆச்சரியமடைந்து இது ஸ்ரீ ஹரி செய்கையென் றறிந்து ஐயோ! பதிதபாவனரான பெருமா ளெனக்காக வெகு பிரயாசை எடுத்துக் கொண்டாரென்று கலங்கி ஓ தயாளா! என் தம்பிக்கு நீர் தரிசனங்கொடுத்தீர், என்மீதென்ன தப்பிதமிருக்கின்றது, கிருபை செய்யக் கடவீரென்று ஐந்துநா ளுபவாசமிருக்கப் பெருமாள் பிரசன்னராகியாதரித்தார். சிறைப்பட்டிருந்த சகோதரனும் தன் தமயனுருக்குச் சரணுகதி யடைய, அவனைச் சிறைச்சாலையிலிருந்து விடுவித்து உனக்கும் பெருமாள் தரிசனங் கொடுத்தார், ஆதலால் நீ தன்னியனுயென்று சொல்லி வஸ்திராலங்காரங்களை அரசனளித் தாதரிக்க அவனு மன்றுமுதல் ஹரிபக்தனுகி விரோதபாவத்தை விட்டு விஷ்ணு நாமத்தையே பஜித்துக்கொண்டு வந்தான். அரசன் அகண்டமான பக்தியை வகித்து கலிகாலத்திற் பெருமாளைப்பிரஸன்ன ராக்கிக்கொண்டு வெகுகாலம் வாழ்ந்து பின்பு வைகுண்டத்தை யடைந்தார்.

---

## சதுர்ப்புஜராஜன் சரித்திரம்.

மதுராபுரத்தில் சதுர்ப்புஜனென்னு மோரரச னிருந்தார். அவர் சாதுசேவையில் நிஷ்டாகரிஷ்டராகி தன்பட்டணத்திற் கெட்டுத் திக்குகளிலும் வார்த்திகர்களை வைத்திருந்தார். சாதுக்கள் வந்தார்களென்று அவ்வார்த்திகர்களாற் றெறிந்துக்கொண்ட மாத்திரத்தில் அரசனவர்களுக் கெதிராகச் சென்று நமஸ்கரித்து தேவரீர்கள் வரவா லடியேன் மேன்மை பெற்றேனென்று நகரத்திற்கு வரவழைத்து வீட்டிற்குக் கொண்டுவந்து சுகாசனத்திலிருத்தி திருவடிகளைத் துலக்கி தீர்த்தத்தைத் தான் பானம்பண்ணி திலகத்தை அவர்கள் நெற்றியில் வைத்து உடம்பிற் சந்தனத்தைப்பூசி புஷ்ப ஹாரங்களைக் கழுத்திற் போட்டு தூபங்காட்டி மங்கள ஹாரதி கொடுத்து இலையைப்போட்டு மதுரமான பணியாரங்களும் ஷட்ரசோ பேதமான அன்னமும் பிரீதியுடன் வட்டித்து அவர்கள் புசிப்பெடுப்பது பெரிய புண்ணியமென்று ருசியாயிருக்கும் பதார்த்தங்களையளித்து புசித்தபின் விநயத்துடன் தாம்பூலத்தைக் கொடுத்து சத்கரித்துவருவார். இவ்வள வுபசாரங்களைச்செய்துப்பின்னு

மவர்களை நோக்கி இவ்விடத்தி லுங்களுக் கெவ்வளவுகால மிருக்க விச்சையுண்டோ அதுவரைக்கு மிருக்க ஓர் தடையு மில்லையென்று சொல்ல, அவர்கள் சாதுர்மாசங்க ளிருப்பார்கள். அனந்தர மவர்கள் போகுஞ்சமயத்தில் அரசனவர்களுக்கு இராஜ விபவங்க ளனைத்தையுங் காண்பித்து அவைகளி லுங்களுக்கேதேனு மிச்சை யான வண்ணங் கொண்டு போகலாமென்று சொல்லி அவர்கள் கேட்டவைகளைக்கொடுத்து வருவார். இவ்வாறுசெய்துவர சகல தேசங்களிலு மிவருடைய கீர்த்திப் பிரபலமாகப் பரவிற்று. அவ் வரசன் தன்னகரத்தில் சாதுக்க ளநேகரை வைத்திருப்பார்

மாண்டலிக னென்னு மோரரசன் சதுர்ப்புஜ ராஜனுடைய கீர்த்தியைக்கேட்டுத் தன் மந்திரியை யழைத்து இவ்வித ஆச ரணையைக்குறித்து வேதத்தி லெங்குஞ் சொல்லப்படவில்லையே! அரசனுக் கித்தகையான தருமங்க ளுபயோகப்படுமோ? வேஷ தாரியொருவன் வந்து இராஜ்ஜியத்தைக்கொண்டுபோய் விடுவான். இது சரியல்லவென்று தன்னிட மிருக்கப்பட்ட அகசியஞ் செய்வோ ர்களிருவரை அழைத்து நீங்களிருவருஞ் சதுர்ப்புஜ ராஜனிடஞ் சென்று கற்றவித்தைக ளனைத்தையு மவருக்குக் காண்பித்துப் பின்பு வைஷ்ணவ வேஷத்தைப்பூண்டு சாதுக்களிட மவர்செய்யும் விசுவாசத்தைக் கண்டுகொண்டு திரும்பி யிவ்விடம்வந்து தெரிவிக் கக்கடவீர்களென்று சொன்னான். அவர்களப்படியே சதுர்ப்புஜரா ஜன் பட்டணத்திற்குச் சென்று தங்களுடைய வித்தைக ளனைத் தையுந் தெளிவாகக் காண்பித்துக்கொண்டு சிலநாளிருந்து பின்பு பைராகிகளைப்போல வைஷ்ணவ சின்னங்களுடன் நூதனமாக வேஷத்தைத் தரித்து கோபிசந்தன திலகமும் பெரிய துளஸி மாலைகளு முடையவர்களாய் இராஜன் சன்னிதிக்குவர அவரிவர் களைக் கண்டமாத்திரத்தில் பக்தியுடன் பிரணமம் பண்ணி அவர்க ளுடைய சரணங்களை யலம்பி அத் தீர்த்தத்தைப் பானம்பண்ணி அகசியஞ்செய்யும்பட்டர்களாயிருந்தும் பரந்தாமனுடைய கிருபை இவர்கள்மேல் பிரஸரித்ததென்றும் தங்களுடைய தருமத்தை விட்டு ஸ்ரீஹரிபக்தியிற் றற்பரரானார்களென்றும் ஸ்ரீவைகுந்தத் தைக் கூடினவர்களானார்களென்று மெண்ணி பூஜைகளைச் செய்து செம்மையாகப் போஜனமிட்டு அவர்கள்முன்பு தான் கால்களிற் சலங்கை கட்டிக்கொண்டு பாடிக்கொண்டு கூத்தாடத் தொடங்கி

இன்றைக்குச் சாதுக்கள் வந்தார்கள், சுதினமென்று சொல்லுவார், கண்களி லானந்தபாஷ்பஞ் சொரிய ஹரிகுணங்களைப் பாடி ஆனந்தத்தால் நிர்ப்பரரா யிருப்பார். அரசன் செய்யுஞ் செய்கைகளுக்கு வேஷதாரிகள் வெட்கமடைந்து ஐயோ! நாங்கள் ஹீனத்தொழிலுடைய ஊழியக்காரராயிற்றே! எங்களிடத்தில் விவேகமுமில்லை வைராக்கியமு மில்லையே! அரசன் செய்யு முபசாரங்களாலெங்களுக்கிருக்கும் சிரேயசு குறைந்துவிடுமே! இவ்விடத்திலிருக்கத் தகாதென்றெண்ணி அரசனைக்கண்டு நாங்கள் எங்கள் நிஜநிவாஸத்திற்குப் போகவேண்டுமென்ன, அவர் தன்சம்பத்தனைத்தையுங் காண்பித்து இவ்வரசாக்ஷி யனைத்துந் தங்களுடையதே, தனராசியையுங் காண்பித்து உங்களுக்கு வேண்டிய வஸ்துக்களைக் கொண்டுபோகலாமென்ன, அவர்கள் நான்குபிடிப் பணத்தைக் கையிற் கொண்டு போகுஞ் சமயத்தில் மந்திரி அவர்களையழைத்து அரசனுக்கறிவிக்காமல் பிரகாசம் பொருந்திய ஓர் சின்னப் பெட்டியை அவர்கள்கையிற் கொடுத்து மாண்டலிக ராஜனுக்குச் செலுத்தச்சொல்லி யனுப்பினன். அவர்கள் சந்தோஷத்துடன் தங்களரசனுன மாண்டலிகனிடம் வந்து சதுர்ப்புஜரைப் போன்றவரை இவ்வுலகிலாகிலும் பொன்னுலகிலாகிலுங் காணப்பெறேம். பகவத்பக்தரான பாகவத கைங்கரியத்திற் பெருத்த நிஷ்டையுடையவரென்றும் அதனைப் பரிக்ஷிக்க எங்களாலாகாதென்றுஞ் சொல்லி அவ்வூர் மந்திரிகொடுத்த அருமையான பெட்டியை அரசன் கையிற்கொடுத்தார்கள்.

மாண்டலிகவரச னப்பெட்டியைக் கையிலேந்திக்கொண்டு அதனைத்திறந்து பார்க்க அதனுள் சரிகையினுற் சுற்றப்பட்ட ஓர் மூட்டை யிருந்தது. அதை அவிழ்த்துப் பார்க்குமளவி லதிலோர் பலகரை யிருந்தது. இதின் கருத்துத் தெரியவில்லையென்று அரசன் சபையாரைக் கேட்க அவ்விடமிருந்த சில விவேகிகள் மன்னனை நோக்கி நாமனுப்பின அவ்விரண்டுபேரும் [illegible]ர்களாகவிருந்து பக்தியுடையவர்களைப்போல வெளிக்கு வேஷத்தைக் காண்பித்தார்கள். உள்ளிருந்த கல்மஷவிருத்திகளைப் போக்காமல் வஞ்சித்தார்களென்று அவ்வரசனுடைய பிரதானி கண்டுகொண்டு இந்தப்பெட்டியை யுமக்காக வனுப்பினர். அது வெளிக்குப் பிரகாசம் பொருந்தியும் உள்ளே பிரயோஜன மில்லாதிருந்த

தென்று தெரியப்படுத்தினனென்று சொன்னார்கள். திரும்பியும் பட்டர்களரசனை நோக்கி ஸ்வாமி! சதுர்ப்புஜன் புண்ணிய மூர்த்தி, ஏகபத்னி விரதமுடையவன், அந்நகரத்திலுள்ள ஜனங்களனைவரு மிரவும் பகலும் ஸ்ரீராமரையே நினைத்திருப்பார்கள். துஷ்டர்களு மவ்வரசனைப் பார்த்தமாத்திரத்திற் சாத்வீக ராவார்கள். அவ்விடத்திலுள்ள பக்ஷிகளனைத்தும் ஹரிராமா! என்று சொல்லும், அந்த நாமத்தைக் கேட்டமாத்திரத்தில் காமக் குரோதங்களெப்பவு மில்லாமற் போய்விடுமென்று சொன்னார்கள். இதைக் கேட்டு மாண்டலிகவரசன் பண்டிதர்களை யழைத்து நீங்கள் சதுர்ப்புஜ வரசனிடஞ் சென்று அவருடையபக்தி எவ்வண்ணமோ, ஸ்திதி எவ்வண்ணமோ பார்த்துவரக்கடவீர்களென்று அனுப்பினான்.

சதுர்ப்புஜ வரசனிட மப்பண்டிதர்கள் வரவே அவர்களுக்கு அரசன் நமஸ்கரித்துத் தகுந்தபடி பூஜித்து சரணதீர்த்தத்தை தான் கைக்கொண்டு சுகமான போஜனத்தையு மவர்களுக்களித்து சில நாட்க ளிங்கிருக்கவேண்டுமென்றுப் பிரார்த்தித்தான். அப்பண்டிதர்க ளதற்குச் சம்மதித்து அந்நகரத்திலிருந்து சதுர்ப்புஜன் ஸ்ரீஹரியை ஸ்திரமாகப் பிடித்தானென்று கண்டுகொண்டு சிலநாள் கழிந்தபின் தங்களூருக்குப்போக வரசனை உத்தரவு கேட்டார்கள். அவரப்பண்டிதர்களை நோக்கி நான் சரணாகதனானவன், எல்லாம் ஸ்வாமி சொத்தா யிருக்கிறது. இவ்வீடத்திலுள்ள சொத்துகளினுங்களுக் கெது வேண்டுமோ அவைகளை நீங்கள் கொண்டுபோகலா மென்றுச்சொல்ல அவர்களரசனைநோக்கி, ஓ மஹாராஜரே! எங்களுக்குத் திரவியமுங் கனகமும் வேண்டியதில்லை. உம்மைப் பார்க்கவந்தோம். நாங்கள் தன்னியரானோம். உமக்குச் சமானவர்க ளிவ்வுலகி லெவருமில்லை என்று கூறிக்கொண்டிருக்குந் தருணத்தி லோர் பஞ்சரத்தில் மைனாபக்ஷி பஜனை செய்துக்கொண்டிருந்ததை அப்பண்டிதர்கள் கண்டு அதனை கொடுக்கும்படி அரசனைக்கேட்க அவ்வாறே அவரும் கொடுத்தார்.

பண்டிதர்களப் பக்ஷியைப் பஞ்சரத்துடன் மாண்டலிக ராஜனிடம் கொண்டுவர அரசனவர்களைநோக்கி என்ன பரிக்ஷை செய்தீர்களென்று கேட்டான். இதைக்கேட்டு அந்த மைனாப் பக்ஷி மாண்டலிகனை நோக்கி ஓ! அரசனே! இவ்வுலகில் நீ முழு

மூர்க்கனைப்போலக் காணப்படுகிறாய். சதுர்ப்புஜ வரசன் சர்வ காலங்களிலும் சாந்தியுடன் சர்வேஸ்வரனையே பூஜித்து வருவார். அவரை நீ பரிக்ஷையேன் செய்கிறாய்? உனது ஹிதத்தை நீ பார்த்துக்கொள்ளக் கடவை. லோகோபகாரரான சாதுக்களை எள்ளளவேனும் ஏளனஞ்செய்யவேண்டாம். ஆயுள் முடியும் பொழுது எமனுயிரைக் கொண்டுபோய்விடுவான். விடாமற் ஸ்ரீஹரி பக்தியை யெப்பொழுதுஞ் செய்யக்கடவாய். சாதுக்களை நிந்திப்பதினால் தேகபுத்திச் சாகிறதில்லை. அதனால் நீ பயத்திலிருந்து விடுதலையாகி பரத்தைக் காண சக்திபற்றவனாவாயென்று சொல்ல, இவ்வார்த்தைகளை யாவருங்கேட்டு வியப்புற்றார்கள். அரசனந்த பக்ஷிக்கு அஞ்சலிசெய்து நீதானெனக்கு குருவென்று சொல்லி குறிப்புடன் ஹரிபஜனையைச் செய்து கிருதார்த்ததை யடைந்தான். மந்திரிமுதலானோ ரனைவரும் மாதவன் பக்தியி லிழிந்தார்கள். ஜனங்களனைவரும் சிரத்தையுடன் ஸ்ரீஹரிநாமத்தைச் சொல்லத் தொடங்கினார்கள். மைனுபக்ஷி சகலரையும் சாது சேவையில் நிருத்தியது.

---

## பரசுராமன் சரித்திரம்.

பரசுராமரெனு மோர்பக்தர் மிகுந்ததனவானாகி கௌரவமும் பிரதிஷ்டையும் பிரபலமாக உடையவராயி விருந்தார். இரகுநாதரெனும் வைஷ்ணவ ஞானியினிட மவர் உபதேசத்தைப் பெற்றுக்கொண்டு அவ்வுபதேசார்த்தத்தை அனுஷ்டித்து வந்ததால் பாபங்க ளனைத்தும்போய் பிரஹ்மஞான மெப்பொழுதும் ஸ்திரப்பட் டிருந்தது. ஆசாரியருடைய ஹஸ்தம் தலைமேற்பட்ட மாத்திரத்திற் கோரிக்கைகளனைத்துந் தீர்ந்தன. வீட்டிலிருந்துங் குடும்பவாஞ்சை யில்லா திருந்தனர். பூர்வகர்மங்களாற் றொடர்ந்த பந்தங்கள் போகாவென் றெண்ணிச் சர்வகாலங்களிலும் நானெனும் பாவனையை விட்டு கர்த்தாபோக்தா ஸ்ரீஹரியென்று விகற்பங்களை யடையா திருந்தார். சமுசாரத்திற் பிரவிருத்தி யிருந்தும் சற்றேனும் வாசனையற்று சகலபோகங்களிருந்து மவைகளிட மபேக்ஷையை வைக்காமல் ஸ்ரீஹரியே சர்வமென்று அமிதமான பிரேமையுடனிருந்தார்.

ஒருநாளவருடைய குருபந்துவான சன்னியாசி வீட்டிற்கு வந்தார். பரசுராமரெழுந்திருந்து தெண்டஞ் சமர்ப்பித்து ஆசனங் கொடுத்து உட்காரச்செய்ய, வெண்சாமரங்கள் போடுவார் சிலரும், வெற்றிலைப்பாக்குமடித்துக்கொடுப்போர் சிலரும், பஞ்சாரத்திகளை கொடுப்போரான ஸ்திரீகள் சிலரும், சுகந்தசந்தனமும் புஷ்பஹாரங்களும் கொண்டுவந்து கொடுப்போர் சிலருமாக விருந்தார்கள். புராணச் சிரவணமு மேராளமாக நடந்துக்கொண் டிருந்தது. இந்த வுபசாரங்க ளனைத்தையுங்கண்டு அந்த குருபந்து தனக்குள் திகிலடைந்து ஐயோ! இந்த பரசுராமன் போக போக்கியங் களையனுபவித்துக்கொண்டு அதோகதி யடைந்துவிடுகிறானே! என்று உபசாரங்களைத் தான் சகிக்காமல் அவரை நோக்கி ஓ பரசுராமரே! நான் விரக்தியடைந்து பிரபஞ்ச சம்மந்தத்தை விட்டு சன்னியாசி யானேன். நீர் பிரபஞ்ச பாதையும் விஷயானு பவத்தையும் அதிகமாக வைத்துக்கொண்டு சமுசாரத்தி லழுந் திருக்கின்றீர். நீர் பிரஷ்டனாய் விட்டீர். நிஜசுக மும்மைவிட்டுப் போயிற்று. ஒரு ஆசாரியருடைய குருபுத்திரராக நாமிருவரு மிருக்க ஒவ்வொருவருக்கும் பின்னமார்க்கங்கள் நேர்ந்திருக்கின் றன. மாயையில் நீர் அகப்பட்டிருக்கிறீர், நான் மாயையைக் கடந் திருக்கிறே னென்றார். பரசுராம ரிதைக்கேட்டு மெய்யாகவே நான் மாயையி லழுந்தினேன். நீரென்னை வெளியிலெடுத்தருளுவீ ரென்று பிரார்த்திக்கிறேன். பிராரப்தமெனுஞ் சங்கடத்தால் பந் தங்களைப் பிடித்திருக்கிறேன். நீங்க ளிதிலிருந்து நிவர்த்தியாக்கி என்னை மேன்மை செய்தால் முக்கிய பந்துவாக வெண்ணுவேன், பிராரப்தத்தைப் போக்கடித்து சுகத்தில் வைக்கவேண்டும், தங்க ளாக்கினைப்படி நான் கேட்பேன் என்றார். இதை குருபந்து கே ட்டு பகற்காலத்தில் வீட்டை விடுவோமாயின் பந்துக்க ளனைவ ருங்கூடி நம்மைப் போகவொட்டார்கள். இரவி லிரண்டு ஜாம மானபிறகு இவ்விடத்தைவிட்டுச் சென்று உச்சிமலையில் யோகா ப்பியாசஞ் சாதிப்போ மென்றார். பரசுராம ரிதைக்கேட்டு நன் றென்று சம்மதித்து இரவுகாலத்திற் கௌபீனத்தைத் தரித்து இருவரும் சகல சம்பத்தையும் வீட்டையும் விட்டு காட்டிலோர் பர்வத சிகரத்தைச் சேர்ந்து அவ்விடத்தி லேகாந்தமாக விருந் தார்கள்.

பரசுராமர் தன் சுபாவ சொரூபமான பிரத்தியகாத்மாவாக யிருந்தபடியால் பட்டணத்தை விட்டுக் காட்டிற்கு வந்தோமென்று மெண்ண மடையாதவரா யிருந்தார். சீதோஷ்ணங்களும பசிதாகங்களு மவரை யடையவில்லை, வெய்யிலுங் காற்றும் வந்திய நிந்தியங்களுஞ் சமமாக விருந்தன. வீட்டிற் சுகசம்பன்னனாகி யிருந்தே னென்னும் குருபந்து என்னை விசனமடைய வனத்திற்குக் கொண்டுவந்தாரென்னு மெண்ணந் தனக்கு வாராதிருந்தது. சொரூபத்தில் ஸ்திதியடைந்து இரண்டுஜாம மவ்விடமிருந்தும் பசிநோயினால் பாதையடைந்தாரில்லை. குருபந்துவான வச்சன்னியாசிவிராகியாகாமல் விசேஷபசியா லவஸ்தயடைந்து ஐயோ! நானொருவனுயிருந்து பிக்ஷை செய்துக்கொண்டு சுகமாயிருந்தேனே? கூட ஒருவனை நானென் கொண்டுவந்தேனென்று விசனமுற்று ஜோல் நாவைக் கக்கத்திலிட்டு உபாதானங் கேட்க ஊருக்குட் போவோமென்று வெகுதூரம் நடந்து ஓர் கிராமத்தைக்கண்டு சஞ்சித கர்மத்தால் வீடுவீடாய்ச் சென்று அன்னமளிக்கும்படி கேட்க வாரம்பித்தார். சில அபக்தர்கள் துர்நீதி யுடையோராகி நாயைப் போலக் கடுஞ்சொற்களைச் சொன்னார்கள். இவைகளைக் கேட்டுப் பூர்வஜன்மத்தில் நானன்னதானஞ் செய்யாதிருந்தேன். அதனு லிஜ்ஜன்மத்தில் வீடுவீடாகத் திரிந்து பலபேர் துர்வார்த்தைகளைச் சொல்ல நான் கேட்க நேரிட்டது. இது பிராரப்தபோக மல்லவா என்று தனக்குள் யெண்ணி பிக்ஷைவாங்கிக் கொண்டிருந்தார்.

பரசுராமர், பர்வத சிகரத்தின்மேல் எல்லாமிருந்தும் நிரபேக்ஷராகி விசேஷ விரக்தி யுடையராய் கருப்புகாலத்தில் தரித்திர மெவ்வண்ணமானது மறியாமலிருந்தவர், அப்பொழுதுஞ் சந்தோஷத்துட னிருந்தார், அவ்வேளையி லோர் பாக்கியவானை லம்பாடி (தான்னியங்களைக் கொண்டுபோகிறவன்) அப்பர்வதத்தின் வழியாய்ப்போனான். அவனவ்விடத்தில் பரசுராமரைக்கண்டு நமஸ்கரித்து பல்லக்கி லவரை உட்கார வைத்துக்கொண்டு மலையடிவாரத்திற்குக் கொண்டுவந்து சேவக ஜனங்களைவிட்டு பிரீதியுட னுபசாரங்களை யவருக்குச் செய்ய நியமித்தான். அவர்களுடனே வஸ்திரமண்டப மொன்றைப்போட்டு அதிலுட்காருவதற்கு ஆசனங்களிட்டு அவருக்கு ஸ்நானஞ் செய்வித்து வெள்ளை வஸ்திரத்தைக் கொடுத்து அத்தர் பன்னீர் புஷ்பம் கந்தம் முதலானதுகளைத் தரிப்

பித்து பக்குவான்னங்களுடன் பக்ஷணை செய்வித்து அவர் மஹா புருஷரென்று மஞ்சத்தின்மீ தவரை உட்காரவைத்து மெத்தை திண்டு முதலியவைகளையிட்டு வெண்சாமரங்களைப்போட அந்த லம்பாடி தாம்பூலங் கொடுக்க அவர் வேடிக்கையுடன் வீற்றிருந்தார்.

குருபந்து பிக்ஷைவாங்கிக்கொண்டு பர்வத சிகரத்தின்மேல் வந்து பரசுராமரைக் காணுமல் அங்குமிங்கும் விசாரித்துக்கொண்டு மலையடி வாரத்தில் ஜனசமூஹத்தைக்கண்டு இவ்விட மோர் அதிதி வந்தனரோவென்று கேட்க அவர்களாமென்று சொல்ல, பரசுராம ரிதைக்கேட்டு அவரை யுள்ளவரும்படி யழைக்க அச்சன்னியாசி உள்ளே புகுந்தமாத்திரத்தி லவ்விடத்திலுள்ள விபவங்களனைத்தையுங்கண்டு வியப்புற்றார். வுடனே அந்த லம்பாடி பக்குவான்னங்களுடன் போஜன மளிக்க, திருப்த்தியாகச் சன்னியாசி பக்ஷித்து உட்கார்ந் திருந்தார். சன்னியாசி பின்பு எஜமானனை அந்த லம்பாடிக்குச் சகல சங்கதியுந் தெரியச்சொல்லி பூர்வ ஜன்மத்தில் பரசுராமர் விசேஷ சுகிருதத்தைச் செய்து சுக போகங்களை யடைந்து சுகியாயிருக்கின்றார். அனைத்தையும் விட்டு பிக்ஷாடனை செய்வது என்னுடைய பிரரப்தமாயிற்று. பரசுராமர் விவேகசீலராகி சாந்திசுகத்தை வேறுபாடின்றி யடைந்தவரென் றறிந்து அவரை யவர்வீட்டிற் கழைத்துவந்து சேர்த்தார். பின்பு இருவரும் ஹரி பரதந்திரராகியிருந்து அகில சுகத்தை யனுபவித்து வந்தார்கள்.

---

## கூபாருயவர் சரித்திரம்.

மார்வாடி தேசத்தில் சீதடியெனும் பட்டணத்தில் கூபரயென்னுங் குயவபக்தர் வீற்றிருந்தார். அவர் பிறந்ததுமுதல் ஸ்ரீ ஹரியை மறப்பின்றி நினைத்திருப்பார். நாமதேவர், கபீர்தாஸர்களைப் போ லிவரையுங் கணக்கிடலாம். கலியாணஞ் செய்துகொண்டு பூரியெனும் பாரியையுடன் வாழ்ந்திருந்து சமுசார சாகரத்திற்குத் தரணோபாயமென்று சார்வதா ஸ்ரீ ஹரியை பக்திசெய்துவருவார். மாசமொன்றுக்கு முப்பது பானைகளைச் செய்து பிரஜைகளுக் கவைகளைவிற்று தனது ஜீவனத்தை நடத்துவர். விவகாரஞ் செய்வதில் பொய் சொல்லாமலும் க்ஷமை, சாந்திகளுடன் ஹரிகீர்த்தனையை

ப் பாடிக்கொண்டும் சுகதுக்கங்கள் தன்னை அணுகவொட்டாம லும் சமயத்தில் அதிதிவந்தா லன்னமளித்துப் பலாபேக்ஷையைக் கோருமலும் காலயாபனஞ் செய்துவருவார். அவர்செய்த பாண் டத்தி லன்னத்தைச் சமையற்செய்து சாப்பிட்டால் ஸ்ரீஹரி பக்தி யை யடைவிக்கும்.

இப்படி யிருக்க ஒருநாள் பத்து பானைகளுக்காக இராஜதண் டனை பலமாக அவ்விடம்வர, அவைகளை இராஜனுக்குக் கொடுத்து விட்டு இராமபிரானை நினைத்திருந்தார். பெருமாள் பானைகளை நிர்மாணஞ் செய்து அவர்வீட்டில் வைத்தார். இதைக்கண்டு குயவ ராச்சரியத்தை யடைந்து ஐயோ! ஸ்ரீஹரிக்கு நான் தொந்தரை யிட்டேனே! இது கெடுதலேயான பிரபஞ்சமென்று அம்மஹிமை யைக்கண்டு அனுதாப மடைந்திருந்தார்.

ஒருகாலத்தி லிருநூறு வைஷ்ணவோத்தமர்கள் யாத்திரா பராளாகி அந்தப்பட்டணத்திற்குவந்து பசியினால் வருத்தமுற்று அன்னத்தை விரும்பினவர்களாகி இத்தனைபேருக்கு மன்னமளிக் குந் தாதா இவ்விட மிருப்பரோ வென்று கேட்க சில வர்த்தகரவர் களை நோக்கி உங்களுக் கன்னம் கூபாகுயவர் கொடுப்பா ரென்றார் கள். இதைக்கேட்டு அவர்கள் கூபாவீட்டிற்குவந்து "ஜயசீதர ராமா" வென்றுக் கூவினார்கள் கூபா அவர்களைக்கண்ட மாத்தி ரத்தில் தெண்டஞ் சமர்ப்பித்து, ஸ்வாமிகளே! அடியேனலா கவேண்டியதை யருளவேண்டுமென்று பிரார்த்திக்க அவர்களின் றையதின மித்தனைபேருக்கு மன்னமளித்து திருப்தி செய்யவே ண்டு மென்றார்கள். கூபா அதைக்கேட்டு அப்படியே யாகக்க டவதென்று வீட்டுக்குட் சென்று பார்க்குமளவில் தானியமில்லாதி ருந்தது. என்னசெய்வேனென்று ஏக்கமுற்றுப் பெருமாளை யுத் தேசித்து ஓ ஜகதீசரே! பரமபுருஷரே! பக்தவத்ஸலரேயென்று பிரார்த்தித்து கடைவீதிக்குச் சென்று வர்த்தகனைநோக்கி ஐயா! இன்றையதினத்தில் வைஷ்ண வோத்தமர்கள் யாத்திரை செய்துக் கொண்டு நம் வீட்டிற்கு அன்னத்திற்காக வந்தார்கள். அமுதுபடி பருப்பு முதலியவைகளை யவர்களுக்குக் கொடுத்து என்மேற் கண க்கெழுதி வைத்தால் தப்பாமற் பணத்தை தருணம் வரும்பொழு து கொடுத்துவிடுகிறே னென்றார் வர்த்தக னவரை நோக்கிப் பணம் உன்னிடத்தில் வாஸ்தவமா யில்லாதிருக்கும்பொழுது

அமுதுபடி சாமக்கிரிகைகளைக் கொடுக்கச் சரிப்படாது, பணத் திற்குப்பதிலாக ஓர் கிணற்றை வெட்டுவையாயின் சாமக்கிரிகை களைக் கொடுப்பேன். சந்தேகமின்றி நீ வர்க்குதந்தஞ் செய்வை யேல் உமது கோரிக்கையை நிறைவேற்றுகிறே னென்றான். குயவ ரதைக்கேட்டு உன்னிஷ்டப்படியே கிணற்றை வெட்டித் தருகிறே னென்று சொல்ல வர்த்தகன் வேண்டிய சாமக்கிரிகைகளைக் கொ டுத்தான். கூபாபக்த ரவைகளைக் கொண்டுவந்து சாதுஜனங்களுக் குக் கொடுக்க அவர்கள் சமையற்செய்து திருப்தியாகபக்ஷித்து குயவரை ஆசிர்வதித்துச் சென்றார்கள்.

கூபா குயவர் தான் வர்த்தகனுக்குச் சொன்ன வாக்கின்படி கிணறுவெட்டத் தொடங்கி மண்வெட்டியையுங் கூடையையுங் கொண்டுவந்து தான் மண்ணைவெட்டவும் தனது மனையாள் மண் ணையெடுத்து வெளியிற்போடவு மிப்படி யிருவருங்கூடி வேலைசெ ய்து வந்தார்கள். வெகுநாட்க ளிவ்விதமாக வெட்டிக்கொண்டுவர அதில் ஜலம் சமுர்த்தியாக வந்தது. புருஷன் மண்ணைவெட்டிக் கொண்டிருக்க மனையாள் கூடையில் மண்ணைக்கொண்டு வெளியில் வந்தாள். மண் மிருதுவாக யிருந்தபடியால் நான்குபக்கங்களிலு மிருந்தமண் கூபா குயவர்மேல் சாய்ந்துவிட்டது. அவரும் மண் ணால் மூடப்பட்டார். மனையா ளிதைக்கண்டு ஒவென்று வாயடித் துப் புருஷன் மண்ணினால் மூடப்பட்டாரென்று கூச்சலிட் டழத் தொடங்கினாள். அவ்விடத்திலிருந்த சிலஜனங்களும் வர்த்தகர் களும் பயந்து கிணற்றண்டைச்சென்று பார்க்குமளவில் பக்கத் துமண்ணனைத்தும் கிணற்றில் விழுந்து கூபா பக்தரை மண்மூடி யிருப்பதைக்கண்டு ஐயோ! அனர்த்தமாய் விட்டதே! கூபா குயவ ரப்போதே பிராணனை விட்டிருப்பார். கிணற்றில்விழுந்த மண்ணை யெடுப்பதற்கு வெகுநாள் செல்லும் பிராப்தானுபவ மிருந்தபடி நடந்தது, ஆனதால் குயவர் மனையாளை நோக்கி வீட்டிற்குப்போ கச் சொன்னார்கள் பூரி இதைக்கேட்டு அழுதுகொண்டு அனாதை யாய் விட்டேனேயென்று வீட்டிற்குத் திரும்பினாள் சிலநாட்கழிய வே பிரஜைகளக்குயவரை மறந்துவிட்டார்கள். ஒரு வருஷத்திற் குள் அக்கிணறுதூர்ந்துபோய் பூமி மட்டமாய்விட்டது.

வழிநடப்போர் சில ரொருநாளவ் விடத்திலிறங்கினார்கள். படுக்கைகளை இரவுகாலத்திலவ்விடம்போட்டு நித்திரைசெய்யுமவ

சரத்தில் தாள வீணை மிருதங்கத்துடன் சுஸ்வரகானத்தை அவ்விடங் கேட்கலுற்றூர்கள் இதரஜனங்களுமவ் விடம்வந்துகேட்டு விந்தையடைந்தார்கள், உதயமானவுடனே பிரஜைகளனேகரவ்விடம் வந்து அங்குண்டாகும் பாட்டோசையைக்கேட்டு விசித்திரமாகவிருக்கின்றதென்று சொல்லிக்கொண்டு போவார்கள். அவ்வூரரசனிச் சங்கதியைக்கேட்டு அவ்விடம் வந்து இனியகானத்தைத் தானுங்கேட்டு அவ்விடத்திய பிரஜைகளைப்பார்த்து இதற்கு முன்னிவ்விடத்தில் நடந்த சங்கதியென்னவென்று விசாரித்தான். அவர்களரசனை நோக்கி மாஹாராஜரே! இவ்விடத்தில் கூபாயெனுங் குயவர் கிணறு வெட்டும்பொழுது கிணற்றின்மண் சாய்ந்து அதனலவர் மூடப்பட்டாரென்று சொல்ல அரசனனேக ஜனங்களை யழைப்பித்து மண்ணனைத்தையு மெடுக்கச்செய்தான். இரண்டு ஜாமங்களுக்குள் மண்ணையெடுத்துப் பார்க்குமளவில் சுந்தரமான பெருமாள் விக்கிரகத்தின் முன் கூபாபக்தர் பாடவு மாடவுமாக விருந்து மோஹ மமத்வங்களை விட்டு ஸ்ரீஹரிசேவைகளைச் செய்துக் கொண்டிருந்தார். அனேக ரிவ்வாச்சரியத்தைக் கண்டதிசயமுற்று அரசனும் மற்றவரும் குயவருக்கு தெண்டஞ் சமர்பித்து அவர் கேவல மனிதரன்றென்றெண்ணி வெளியில் வரச்சொல்லி விசேஷமாகப்பிரார்த்திக்க அவருமதற்கிசைந்து கிணற்றிற்கு வெளியில் வந்தார். ஜனங்களனேகரவரைச் சிறப்பித்து ஸ்தோத்திரஞ் செய்தார்கள்.

அரசனவரது மகிமையைக் கண்டு பெரியதான ஓர் மடத்தைக் கட்டிக்கொடுத்துத் தினந்தோறும் தரிசனத்திற்கு வருவான், தனத்தையுந் தானியத்தையுங் குறைவின்றிக் கொடுத்துவருவான். வந்தவர்களுந் தங்களாலியன்றமட்டும்பொருள்கொடுத்து வருவார்கள் பிரதிதினமு மிரண்டாயிரம் பிராம்மண போஜனமவ்விடத்தில் நடக்கும். இதர ஜாதியருமனேகர் பக்ஷிப்பார்கள். கூபாகுயவர் ஹரிகுணனுவாதத்தைச்சொல்லி அனேகரை பக்தியிலிருக்கச் செய்தார். இவருடைய கீர்த்தி வெகுதூரஞ்சென்று விளம்பரமாயிற்று. பட்டணவாசிகளனைவரும் பிரபலமாக அவரை தோத்திரஞ் செய்யபாரியாளிச்சப[illegible]த்தை யடைந்திருந்தும் திருப்தியடையாதிருந்தாள். ஒவ்வொருகாலத்திலவர்களைக்கண்டு எனக்கோர்சுகமுங் கிடையாது. இரவிலிரண்டு ஜாமம்வரைக்கும் கண்ரெப்பைப்போ

டக் காணமாட்டேன். பசியுடையோருக் கன்னமளித்துப் பகவானுக் குபசார பூஜைகள் செய்யவேண்டும். எப்பொழுதுங் கஷ்டத்தையே யடைந்திருக்கின்றேன் என் கர்மகதி யென்னென்றுச் சொல்லுவேனென்று விளம்பரப்படுத்திக்கொண்டிருப்பாள். இப்படியிருக்க ஒருநாள் அவள்பந்து தன்னிடம் வந்தான். அதற்கு சந்தோஷமடைந்து உபசாரங்களைச்செய்து சிலநாள் வைத்துக்கொண்டு ஒருநாள் தன் பந்து நிமித்தம் பால்சோற்றை மூடிவைத்திருந்தாள். சாது ஜனங்கள் சாப்பிடுஞ்சமயத்தி லதனைமறைத்து வேறு அன்னத்தைவட்டித்து பின்பு ஏதோ ஒருவேலையின் நிமித்தம் வெளியே போனள், அவ்வேளையி லொரு சாது அன்னமளிக்கச் சொல்லிக் கேட்டான். கூபா பக்த ரிதைக்கேட்டுத் தானே வட்டிக்கும் பொருட்டு எழுந்திருந்து மடப்பள்ளிக்குள் போய்ப் பார்க்குமளவில் பாற்சோறு மறைத்து வைத்திருந்தது. இதைக் கண்டு கோபமுடையவராகி சாதுக்களை வஞ்சித்து பந்துவுக்காக மனைவி பாற்சோற்றை மறைத்துவைத்தா ளன்றோ! இது சுபத்தைக்கொடாது, பாபத்தைத் தருமென்று அந்தப்பால்சோற்றைக் கொண்டுவந்து சாதுக்களுக்கு விநியோகப் படுத்தினர். அவர்களனைவரும் பக்ஷித்தபின் பூரி மடப்பள்ளியில் வந்து தன் பந்துவை யழைத்துப் போஜனத்திற் குட்காரும்படி நியமித்து பாற்சோற்றை வைத்தவிடத்தில் பார்க்க, அது அவ்விடமில்லா திருந்தது. அதைக்கண்டு அவள் மாரடித்துக்கொண்டு ஐயோ! சுகம் லேசமுமில்லையே! தேசாந்தரத்து சாதுக்களைக் கணவன் தன்னிடத்திற் சேர்த்துக்கொண்டு அவர்களுக்குப் பணிவிடைகளைச் செய்ய வெனக்குக் கஷ்டத்தைக் கொடுத்து எனது பந்து சன்மானத்திற்கு எடுத்துவைத்த பாற்சோற்றை யவர்களுக்கு விநியோகப் படுத்தி விட்டாரே. இது அவருக்குத் தருமமாவென்று சொன்னாள். இதைக்கேட்டு கூபாபக்த ரவளைநோக்கி நீ அதிதிகளை வஞ்சித்துப் பந்துவை யாதரித்தாய், இது வுனக்கு சுகத்தைக் கொடுக்காதென்று சொல்ல, இதுகண்டு அவளிவ்விட மிருக்கமாட்டேனென்று தாயார் வீட்டிற்குச் சென்றாள். அவள்போய் விட்டதைக் கண்டு கூபாபக்தர் சந்தோஷித்திருந்தனர்.

அனந்தர மவ்விடத்தில் கூபா பக்தருடைய சிஷ்யர்களனைவருஞ் சேர்ந்து கைங்கரியத்திற்குக் குறைவு வராமல் சாமக்கிரி

கை யனைத்தையும் சித்தப்படுத்திப் பிரஜைகளுக் கன்னத்தைப் பரிமாறி வருவார்கள். இதனு லவ்வூரா ரனைவருஞ் சாதுக்கள் நிமித்தம் கூபாபத்தர் தனது சதியை விட்டனரென்று சொல்லிக் கொண் டிருப்பார்கள். அவ ரனுவளவு விகல்பமின்றி ஹரியைப் பஜித்துச் சுகமே யிருப்பர். இப்படி யிருக்க அத்தேசத்தில் கருப்புகாலம் வந்தது. ஜலமகப்படுவது கடினமாய் விட்டது. பிரஜைகளனேகர் கூபாபக்தர் மடத்திற்குச் சென்றூர்கள். அவர்களைக் கூபாகுயவர் நோக்கி நீங்களனைவரும் பக்ஷணசெய்து ஸ்ரீஹரிபஜனையைப் பக்தியுடன் கேட்டுக்கொண்டிருக்கக்கடவீர்கள். அக்ஷயமாக ஹரிசர்வேஸ்வரன் அன்னமளித் தருளுகிருரென் றவர்களை யாதரித்தார்.

பூரியானவள் தன் தாயார் வீட்டிற்குச் சென்று வேறு புருஷனை விவாகஞ் செய்துக்கொண்டு கருப்புகாலத்தில் பக்ஷிப்பதற் கொன்றுங் கிடைக்காமல் தரித்திர பீடையால் புருஷனுந் தானும் பிரபல துக்கத்தை யடைந்தார்கள். சந்ததியு மதிகமாக வுண்டாயிற்று அதனுல் விசனத்தைப் பொறுக்காமல் புதிய பர்த்தாவைப் பார்த்து எனக்கு முன்னிருந்த பர்த்தாவே நல்லவராக விருந்தார். நூதனமான புருஷனைக் கைக்கொண்டதால் அதிக துன்பத்திற் கிடமுண்டாயிற்று. இனிநாமனைவரு மவரிடம் செல்வோமென்று குழந்தைகளுடன் பட்டணவீதியில் வந்துக்கொண் டிருந்தார்கள். அவர்களை அப்பட்டணத்தார் பார்த்து பன்றிகள் கங்கோதகத்தைச் சுகமென்றெண்ணுமல் வீட்டு சலதாரை நீர் துர்க்கந்தமாயினு மதனையே குடிக்கும். அமிருதத்தைவிட்டு சாராயத்தைக் குடித்தாற்போல் வைஷ்ணவ முக்கியரான கூபா பக்தரைவிட்டுப் பூரியானவள் வேறோர் புருஷனை விரும்பினுளே ! இது நன்மையல்லவென்று சொல்ல பூரி அதற்குமாறுத்தரங் கொடாமல் அந்த பக்தரிடஞ் சென்று பசியுட னிருக்கிறேம் போஜனங் கொடுமென்று கேட்க, கூபா அவர் மனைவியை நோக்கி வெளியிலிருக்கக் கடவையென்று சொல்லி, பின்னும் நீ வேறோர் பர்த்தாவைக் கைக்கொண்டாய், நான் விஷ்ணுமூர்த்தியைக் கைக்கொண்டேன். இதில் பாக்கிய விசேஷம் யாருடையதோ நீ கண்டுகொள்ளக் கடவையென்று சொல்லி அனைவருக்கு மன்னமளித்தார். அவர்களுந் தைனியத்தை வகித்து வெகுநாள் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள்.

அப்பட்டணத்திற்குச் சமீபமான ஓர் கிராமத்தில் புராதன்மான விஷ்ணு ஆலயத்தில் விக்கிரகம் பூஜையின்றி யிருந்தது. அந்தக் கிராமவாசிகள் கூபா பக்தரிடம் வந்து ஸ்வாமி! எங்கள் கிராமத்திலிருக்கும் மூர்த்தியை மடத்தில் கொண்டுவந்து வைத்தால் அம்மூர்த்தியினிடத்து மஹிமைக ளுண்டாகுவதன்றி உமது கீர்த்தியும் பிரசித்தியாகும், இக்காரியஞ்செய்யக் கேட்டுக்கொள்ளுகிறோமென்று சொல்ல, கூபாபக்தர் சம்மதித்து அப்படியே விக்கிரகத்தைக் கொண்டுவரச்சொன்னார். அதைக்கேட்டு அந்தக் கிராமவாசிக ளந்த விக்கிரகத்தைப் பெயர்க்க எவ்வளவு முயற்சிசெய்யினுந் தங்களா லாகாமற் றிரும்பிவந்து தங்களால் மூர்த்தியைப் பெயர்க்கச் சாத்தியப் படவில்லையென்று தெரிவிக்க, கூபாபக்தரவ்விடஞ்சென்று அம்மூர்த்தியை நோக்கி ஓ சர்வேஸ்வரரே! ஸ்ரீஹரீ! நீர் கருணாலயரன்றோ! குணாதீதரன்றோ! கஞ்சதளாக்ஷா! கிருஷ்ணா! என்றசொல்லைச் சொன்னமாத்திரத்தில் நீர் அபரிமிதமான கிருபையைக் காட்டுவீர்! சகலஜகத்து முனது ரூபமாக சர்வகாலங்களிலு மிருக்கும். அளவிறந்த உமது குணங்களை வர்ணிக்க அடியேனாற் கூடுமோ? பக்தர்களுடைய எண்ணத்தின்படி சகுணராகிக் காணப்படுகின்றீர். பக்தியற்று விசுவாசமில்லாதவர்களுக்குப் பாஷாணம்போற் காணப்படுகின்றீர். இப்பொழுது தேவரீர் மடம்வரைக்கு மெழுந்தருள் வேண்டுமென்னு மபேக்ஷையை மகத்தாக அடைந்திருக்கின்றேன். தடையின்றி என் கோரிக்கை நிறைவேறும்படி தேவரீர் கருணைக் கண்களுடன் கடாக்ஷித்தருளுமென்று பிரார்த்தித்துக் கைகளா லம்மூர்த்தியை சுலபமாக எடுத்தார். பின்பு சந்தோஷத்துடன் தலைமே லிருகரங்களைக் குவித்து ஜய ஜய சப்தங்களைக்கூவி மனிதர்கள் கையிற்கொடுக்க அவர்க ளவ்விக்கிரஹத்தைச் சுமந்துக்கொண்டுவந்து மடத்திற் சேர்த்தார்கள். அனந்தரம் அவ்விடத்தில் மந்திர கோஷங்கள் பிராம்மணர்க ளுச்சரிக்க அம்மூர்த்தி ஸ்தாபனமாயிற்று. அனேகப் பிரஜைகள் விஷ்ணுபக்தியை யடைந்து தயை, சாந்திகளை யுடையவராகி புனிதரானார்கள். ஆனதாற் சாதுசமாகதம் யெப்போதும் பெருமாளிடத்தில் பிரீதியை விளைவிக்கும்.

---

## நிம்பராஜு சரித்திரம்.

தைவதைடனெனுங் கிராமத்தில் நிம்பராஜு யென்றொரு பிராம்மண ரிருந்தார். ஸ்ரீஹரிபக்தியிற் சிறந்தப் பிரீதியைவைத்துப் பாகவத சேவையிற் றற்பரராயிருப்பர். அந்தக் கிராமத்திற் றுன் கணக்கராயிருந்து குடும்ப போஷணையை நடத்தி தீர்த்தயாத்திரைக ளனைத்தையுஞ் செய்து சப்தபுரிகளையும் தரிசித்து வீட்டிற்குத் திரும்பிவந்து விட்டலமூர்த்தியைத் தன்னிருதயத்தி லிருத்திக்கொண்டு பகவத்கதையில் ருசியுண்டாகி தான் சுயமாக கீர்த்தனைசெய்ய எத்தனித்து ஸ்ரீஹரியை அநுமித்தம் பிரார்த்தனை வெகுகாலஞ் செய்துவந்தார். பெருமாள் க்ருணித்துக் கணபதியை யழைத்து நீர் நிம்பராஜுக்கு ஹரிகீர்த்தனைச் செய்ய சாமர்த்திய முண்டாகும்படி வரமளிக்க வேண்டுமென்றார். இதைக்கேட்டு கணபதி யொருநாள் பிராம்மண ரூபத்துடன் நிம்பராஜு சொப்பனத்திற் சென்று வரத்தைக் கைக்கொள்ளுமென்று வெற்றிலைப் பாக்கை அவர்கையிற்கொடுக்க அவரதை வாங்கிக்கொண்டு பக்ஷித்தார். உடனே கணபதி அவரை நோக்கி உமக்கு பகவத்கதையைச்செய்யும் பிராவண்ணிய முண்டாகுமென்றுசொல்லி மறைந்தார். நிம்பராஜு விழித்துக்கொண்டு இது ஸ்ரீ ஹரி கிருபையென்றெண்ணி ஹரிகதையைச்செய்யுஞ் சாமர்த்தியந் தனக்குண்டானதைக்கண்டு ஆசாமோஹங்களையு மபிமானங்களையும் விட்டு பாசபந்தங்களையும் நீக்கி பண்டரிபுரத்திற்குச்சென்று பீமாநதியில்ஸ்நானம் பண்ணி பிரியத்துடன் சன்னிதிக்குச் செல்லுஞ் சமயத்தில் பிராட்டி மாலாகாரியைப்போல் வேஷத்தைத் தரித்து செம்முள்ளங்கியை விற்றுக்கொண்டிருந்து வழியில்போகுமிவரைநோக்கிஐயா! வீட்டிலெனது குழந்தை முலையுண்ண அதிகமா யழுகின்றது, வீட்டிற்குச்சென் றிப்போதே குழந்தையைக் கொண்டுவருகிறேன், நான் வருமளவு மிம்முள்ளங்கிக் கிழங்குகளைப் பார்த்திருமென்று வேண்டி அவள் கிழங்குகளை வஸ்திரத்தில் கட்டிவைத்து, கோயிலுக்குச் சென்றாள். நிம்பராஜு தொந்தரை யொன்றின்றி அப்படியே அவ்விடமிருந்தார். இரண்டு ஜாமம் வரைக்கு மவ்விட முட்கார்ந் திருந்து மவள் வரவில்லை. அந்தபக்தர் வஸ்திரத்தை யவிழ்த்துப் பார்க்குமளவில் அவை சொர்ணகட்டிகளா யிருக்கக்கண்டார். ஓஹோ! ஆதிமாயை என்னை மோசஞ்செய்யும் பொருட்டு அனர்த்தமான

இக்கனகத்தை எனக்குக் காண்பித்தாள். இது எனக்கேன் வேண்டுமென்று அனுதாபத்துடனாலயத்திற்குட் சென்று பாண்டுரங்கருக்குப் பிரணாமம்பண்ணி ஓ ஸ்வாமி! தேவதேவரே! இவ்வண்ணமான சோதனைகளேன் செய்கிறீர். தேவரீர் கிருபையொன்றே நானிச்சித்தேனல்லது மற்றொன்றும் நான் வேண்டிலனென்று தெண்டஞ் சமர்ப்பித்து ருக்மணி பிராட்டிக்கும் நமஸ்கரித்துத் தன் விடுதிவீட்டைச் சேர்ந்து ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

பிராட்டிப் பெருமாளை நோக்கி ஸ்வாமி! நிம்பராஜு ஆசைகளுக்குட்பட்டவனல்லன், சம்பத்து தனம் முதலானவைகளி லாசையிலனாய் அவைகட் சமீபமும் செல்கிறவ னல்லனென்று சொல்லப் பெருமாள் சிரித்து என்னையடைய வேண்டுமென்று கோரிக்கையுடைய என் தாசர்கள் தங்கள்மனதிலிருக்கு மாசைகளனைத்தையும் விட்டு ம்மத்வத்தையும் லோபத்வத்தையும் வேரற நீக்கினவர்களாய் சதாசந்துஷ்டராகி யிருப்பார்க ளென்றார்.

மறுதினத்தில் நிம்பராஜு ஸ்நானஞ்செய்ய ஆற்றிற்குச் சென்று நீராடி நிற்குஞ் சமயத்தில் பெருமா ளோர் பிராம்மண வேடம்பூண்டு துளபமாலையும் மேகலையும் சரிகை குல்லாயும் மார்பிற் சந்தனத்தையுந் தரித்து அவ்விடம் வந்து நிம்பராஜுவை நோக்கி ஐயா! இவ்விடத்திற் றிருடரனேகர் திரிவார்கள். இந்த வஸ்துக்களை யும்மிடம் வைக்கிறேன். நீராடித் திரும்பி வருகிறேனென்று மேகலையும் மாலையையும் சரிகை குல்லாவையும் வைத்திருவென்று கொடுத்து எகினர். நிம்பராஜு அவ்விடமோர்ஜாமம்வரைக்கு மிருந்து அந்தப் பிராம்மணன் திரும்பிவாரா திருப்பதைக்கண்டு அவ்விடமிருந்த சாதுக்க ளனைவரையுங்கண்டு ஸ்வாமிகளே! இவ்வஸ்துக்க ளிவ்விடமே யிருக்கின்றனவே! என்ன செய்வதென்று கேட்க, அவர்கள் இது ஸ்ரீஹரி கிருபையாகும், அவரே யுனக்குக் கொடுத்தாரென்று சொல்ல, அங்குள்ள ஜனங்க ளனைவருங்கூடி பகவானை தோத்திரஞ் செய்து மாலையும் மேகலையும் டோபியு மவருக்குப் போட்டுப் பெருமாள் சன்னிதிக்கு அழைத்துப்போய் ஸ்ரீஹரி கதையை இத்தினத்திற் செய்யவேண்டுமென்று சாதுக்களனைவரும் பிரார்த்தித்தார்கள். அவரு மதற்கிசைந்து பெருமாளுடைய குணவர்ணனையை மிகுந்த பிரீதியுடன் செய்து பிரேமா

னந்த இலகரி(வெறி) யுடன் பிரியவாக்கியங்களைச் சொல்ல அனேக ஜனங்கள் ஆனந்த பரவசராகி நின்றார்கள். கோவிந்தா! ஹரி! கிருஷ்ணா! அச்சுதா! கோபவல்லபா! புராண புருஷா! உலகத்தில் ஜனங்களைக் காப்பாற்றக் கடவீர். தீனதயாளா! தீனபந்து! என்று கண்களில் நீர்பல்க மதுரரசத்துடன் மாதவனைப் பாடியாடிக்கொண்டிருக்க பெருமாளொரு பாலகனுடைய ரூபத்தை வஹித்து இதரஜனங்கள் கண்களுக்குப் புலப்படாமல் வெண்சாமரங்களைப் போட்டுக்கொண்டு நிம்பராஜு ஆயாசப்படாமலிருக்கச் சேவைசெய்து வந்தார். பகவான் றனது நிஜகளையோடு மவ்விடம் பிரீதியுட னிருந்ததினால் கதையைக் கேட்போர் மோஹங்களைவிட்டு ஹரிகுணானுவாதத்தைக் கேட்டுக்கொண் டிருந்தார்கள்.

அருணோதயத்தி லொரு ஸ்திரீ அவ்வழியாக ஸ்நானஞ் செய்யச் சென்றாள். பெருமாள் வெண்சாமரங்களை அந்த பக்தருக்குப் போட்டுக்கொண்டிருக்கத் தான் பார்த்தமாத்திரத்தில் சொக்கி அந்த ரூபத்திலேயே நாட்டங்கொண்டிருக்க, அவ ரந்தர்த்தானமானார். அந்த ஸ்திரீயானவ ளப்பொழுதே அந்த ஜனக்கூட்டத்திற் புகுந்து ஆர்த்தியுடன் நிம்பராஜு பாதங்களைப்பிடித்து அழத்தொடங்க, இதற்கென்ன காரணமென்று விசாரிக்கப் பெருமாள் ஓர் பாலவேஷங்கொண்டு பூர்ண விக்கிரகராகி பக்தருடைய கழுத்தினிடமிருந்து மயிற்பீலி வெண்சாமரங்களை வீசிக்கொண்டிருந்தார். அந்தபக்தர் புஜத்திலணிந்த சந்தனத்தின்மீது பெருமாளுடைய பாதசின்னங்களைக் கண்டு குதூஹலத்துடன் அனைவருங் கூடிக்கொண்டாடத் தொடங்கி, விட்டல! விட்டல! என்று நாமத்தை யுச்சரித்து விசேஷமான சந்தோஷத்துடன் தலைமேற் கைகளைக் குவித்துத் தோத்திரஞ் செய்து பகவானுடைய கிருபையைக் கண்டு மிகப்புகழ்ந்து நிம்பாஜுவை சிலாகித்து ஹரி சர்வேஸ்வரருக்கு ஹாரதிகளைக் கொடுத்தார்கள். அப்பக்தர் மூன்றுநாள் பண்டரிபுரத்தி லிருந்து முகுந்தரைத் தொழுது அவருடைய திருநாமத்தைப் பாடிக்கொண்டு வீட்டிற்குச் சென்று அவரையே புகழ்ந்து நாமசாதனத்தைச் செய்துவந்தார்.

---

## வல்லபாசாரி கோவிந்ததாசர் சரித்திரம்.

பிருந்தாவனத்தில் வல்லபாசாரியரென்றொரு பிராம்மணர் வாசமாயிருந்தார். அவர் ஸ்ரீஹரிமேல் பக்தியுடையவராகி அவரை அர்ச்சிப்பதும் சாந்தி, க்ஷமை, அத்தியாத்ம ஞானம், தாந்தி, ஒடுக்கம், சர்வபூதங்களிலுந் தயையு மிவையனைத்து முடையவராகி யிருந்தார். அவருடைய போதனாசக்தியா லனேகரைப் பகவத பக்தியி லிருக்கச்செய்து மேன்மையுடன் ஸ்ரீஹரி கீர்த்தனையை மிகுதியாகச் செய்துவருவார். சிரவணமும், ஹரிகீர்த்தனமும், ஸ்மரணையும், பாதசேவையும், ஹரியர்ச்சனமும், வந்தனமும், ஹரி தாஸ்யமும், அவன் சினேஹமும், ஆத்மநிவேதனமு மிவைகளை நவவித பக்தியாகச் சொல்லப்படும். கடந்தயுகங்களிலிருந்த பிரஜைக ளிவைக ளனைத்தையுஞ் செய்தார்கள். கலியுகத்தில் ஹரி நாம ஸ்மரணையொன்றே போதுமானது, கணக்கற்ற ஜனங்கள் ஹரிநாம ஸ்மரணையாற் றரிக்கப்பட்டார்கள். வல்லபாசாரியும் கிரமத்துடன் பெருமாளுக்கு ஷோடசோபசார பூஜைகளைப் பிரீதியுடன் மூன்றுகாலங்களிலுஞ் செய்ய ஸ்ரீஹரி அப்போதைக்கப் போது சாக்ஷாத்கரித்து வருவர். அதனால் உத்தரோத்தரமாக பக்தி யதிகரித்துவந்தது.

அவ்வூரிலேயே இராதாகுண்டமென்றோ ரிடமுண்டு. அவ்விடத்தி லோர் பக்தர் வாசமா யிருந்தார். சாதுக்க ளனைவரு மவரை கோவிந்ததாசரெனச் சொல்லி பெயர் வழங்கச் செய்தார்கள், தாயாரும் பிள்ளையு மிருவரே அவ்விடத்திலிருந்து ஹரியை நினைத் திருப்பார்கள். அனேக ஜன்மங்களிற் சாதித்த தபோபலத்தா லப்பிள்ளைக்கு அனுயாசமாக ஹரிதரிசன மகப்பட்டுக்கொண்டிருந்தது. எவ்விடத்தி லெதைப் பாவித்தாலு மீசனைக் கண்டுகொண் டிருப்பார். கபடமின்றி ஹரியைப் பஜித்த ஞானிகளிற் சிரேஷ்டராயிருப்பர். பெருமாள், கோவிந்த தாசருடன் நிதமும் பேசிக் கொண் டிருப்பார். கிருஷ்ணாவதாரத்தில் கோபபாலருடன் லீலையாக விளையாடினதைப்போல பெருத்த வபேக்ஷையுடன் பெருமாள் கோவிந்ததாசருடன் விளையாடி வருவார். அப்பாலகருடன் கோலியாடுவார், அவர்மேற் றொருபாலகனாகி ஏறித்திரிவர். "பலிசிக்கென்னும்" விளை யாட்டை யிருவரு மாடுவார்கள். இன்னு மனேக லீலைகளைச்செய்து விளையாடுவார். ஒருவருக்கொருவ ரடித்

துக் கொள்ளுவார்கள். சிறப்புடன் சிரித்து நீ தோற்றுப்போனு யென்பார்கள். பெருமாளோடினுல் பக்தரு மவர்பின்னே யவரைப்பிடிக்க ஓடுவார். பெருமாளைப் பிடித்துக்கொண்டு பக்தர் சந்தோஷ மடைவார். ஞானபூரணரான சில பக்தர்கள் பெருமாளிப்படி யாடுவதைக் கண்டு ஸ்ரீஹரி சின்மய ரூபரென்றும் பிள்ளை விளையாட்டிற்குப் பிரீதியுட னுட்பட்டா ரென்றும் பரந்தாமராகியும் நிரஞ்சனராகி பிரம்மாவுக்குப் பிதாவாகியு மிருந்து பாலசேஷ்டையைக் கைக்கொண்டு ஆட்டத்திற்குட்பட்டது சித்திரமென்றுப் பிரீதியுடையவர்களாகிச் சென்றூர்கள். இவ்விதமாக இருவரும் விளையாடிக்கொண்டே வெகுகாலங் கழித்தார்கள்.

ஒருசமயத்திற் பெருமாள் கோவிந்த தாசரை அடித்து ஓடத் தொடங்கினர், அவரைப்பிடிக்க தாசர் பின் தொடர்ந்தோடினூர். பெருமா ளப்பொழுது ஏழுவயதுடைய சிறுவர்போலிருந்தார். அத்திருக்கோலத்துடன் வல்லபாசாரி வீட்டிற்கு புகுமளவில் அவராச்சரியப்பட்டுப் பெருமாள் திருவடிகளைப்பிடித்து நமஸ்கரித்தார். கோவிந்ததாசரும் அவர்பின்னுலேவந்து என்முதுகிலடியடித்து ஓடிவந்தனையே! உன்னை விடுவேனே! வெளியே வாவென்று வர்புறுத்திச் சொல்லிக்கொண்டு வல்லபாசாரியார் வீட்டிற்கு வெளியில் நின்றூர். வல்லபாசாரி கோவிந்ததாசர் வார்த்தையைக் கேட்டு அங்கிருந்த பக்தஜனங்களை நோக்கி இந்த விந்தையைக் கேட்டீர்களோ! சதுர்முகனும், சாம்பமூர்த்தியும் யாருடைய குறிப்பை மறவாமல் மனதிலிடுவர்களோ அந்த லக்ஷ்மீபதியை விதவைப்பிள்ளையான இவனடிக்கவேண்டுமாம், அவனைத் துரத்திவிடுங்கள் அடியுங்களென்றுசொல்ல ஜனங்களவனைத் துரத்தி அடித்தார்கள். பக்தர் வெளியிலிருந்து அழுதுக்கொண்டு என்னையே அடித்து என்னைப் பின்னும் மற்றொருவரைக்கொண்டு அடிக்கும்படி செய்வித்தான். இது அநியாயம் அல்லவா! அனைவரும் பாருங்களென்றுசொல்லிப் பெருமாள் வெளியே வருவாரென்று குணுகுணுங்கிக்கொண்டு அவ்விடத்தி லுட்கார்ந் திருந்தனர். வல்லபாசாரியர் பெருமாளுக் கர்ச்சனையும் உபசார பூஜைகளையுஞ் செய்து நைவேத்தியத்திற்குப் பிரசாதத்தை முன்வைக்க அவரதை அங்கீகரிக்காமல் இருதயத்திற் றுபமுடையவராக யிருந்தார். இதைக் கண்டு வல்லபாசாரியர் அதிக துக்கமுடையவராகி அவரெதிரில்

கின்று தேவரீர் பக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். பெருமா ளவரைநோக்கி நான் கோவிந்தனுடன் பாலகனுகி விளையாடிக்கொண் டிருப்பேன், அச்சிறுவ னிப்பொழுது அடிபட்டுத் துக்கத்தை யடைந்திருக்கிருன். அவனுடன்கூட நான் பக்ஷணை செய்யாவிடில் எனக்கு அன்னம் ஹிதமாக இராது நீர் அவனிடஞ்சென்று அவனைச் சமாதானப்படுத்தி யழைத்துவாருமென்று கட்டளையிட வல்லபாசாரி ஆச்சரிய மடைந்து கோவிந்ததாசரிடஞ் சென்று அனேகவித நட்புவார்த்தைகளைச் சொல்லிச் சமாதானப் படுத்திக்கொண்டு பெருமாள் செய்தது தப்பிதமே, ஆனலவர் உம்மைவிட்டுப் போஜனஞ் செய்யே னென்கிருர் சீக்கிரத்திலும்மை வரச்சொல்லி யழைக்கிருர் நீர் பெருத்த கிருபை கூர்ந்து பெருமாளிடம் வரக்கடவீரென்று பலவாருன மிருது வாக்கியங்களைச் சொல்லி யவர் கையைப்பிடித்துப் பெருமாளிடங் கொண்டு வந்து இருவரையுஞ் சினேஹப்படுத்திப் பக்ஷணை செய்யுங்களென்று பதார்த்தமனைத்து மவ்விடம் வைத்து திரைச்சீலையைப் போட்டு வல்லபாசாரி வெளியில் நின்ருர். நிதானமாக பெருமாளும் பக்தரும் பக்ஷணைசெய்ய, கோவிந்ததாஸர் முன்பு அடியுண்டதினுல் வந்த கோபத்தையு மருவருப்பையும் விட்டு ஸ்ரீ ஹரியினுடைய ரூபகுணங்களையும் சினேஹச் சொற்களையுங்கண்டுங் கேட்டனுபவித்து சுகமடைந் திருந்தனர். இருவரும் பக்ஷணைசெய்தவுடன் வல்லபாசாரி தாம்பூலத்தைக் கொடுத்தார். பின்னர் பெருமாளந்தர்த்தானராகித் தோன்ரும லிருந்தார். கோவிந்ததாசர் தனியே தன்வீட்டிற்குச் சென்ருர்.

திரும்பிப் பெருமாள் கோவிந்த தாசருடன் கூடிக்கொண்டு விளையாடத் தொடங்கினர். பாலசேஷ்டைகளா லொருநா ளவ்விருவரு மொருவர்மே லொருவர் விழுந்து அடித்துக்கொண்டிருக்கக் கோவிந்ததாசர் தாயார் பிள்ளையைத்தேடி வெளியேவந்து பார்க்குமளவில் சதுர்ப்புஜங்களுடன் ஸ்ரீ ஹரியை அவ்விடங்கண்டு மெதுவாகப் பிள்ளையினிடம் வந்து அவனையெழுப்புஞ் சமயத்திற் பெருமா ளந்தர்த்தானமானுர். அவள் தன்குமாரனைப் பிடித்துக்கொண்டு வீட்டிற்குவந்து பிரீதியுடன் பிள்ளையை நோக்கி, குழந்தாய்! உன்னுடன்கூடி விளையாடுகிறவர் சாக்ஷாத் விஷ்ணுமூர்த்தி, உன்னுடைய புண்ணியபலத்தா லவருனக்குப் பிரசன்ன

மானார். சதுர்முகன், சாம்பமூர்த்தி, இந்திரன் முதலானோருக்கு மெட்டாத சர்வேஸ்வரன், அவரை நாமெப்பொழுதுஞ் சேவிக்க வேண்டும்; உன்சமானரென் றவரை யெண்ணவேண்டாம், இனி நிதமு மவருடன் விளையாடுவதை விட்டுவிடு, அவர் தேவர்களுக் கெல்லாந் தேவரானதால் நீ யவரைப் பஜிக்கவேண்டும், அவர் சத்திய ஞானானந்த சொரூபர், ஸ்நானஞ் செய்யாம லவரைத் தீண்டவேண்டாமென்று போதிக்க புத்திரன் தாயாரை நோக்கி, தாயே! நான், ஸ்நானஞ் செய்யாமல் அசுசியா யிருக்கும் பொழு தே என்னை அவரேவந்து தீண்டுகிறார், அவரை நீ ஈஸ்வரனென் றும் பரமாத்மாவென்றுஞ் சொல்லுகிறாய், எப்பொழுது மென் னுடன் விளையாடிக்கொண் டிருப்பர். நானடித்தாலு மவர்பொ றுத்துக்கொள்ளுவர், திட்டினாலுஞ் சிரித்துக்கொண் டிருப்பர், அவரிடத்தில் மரியாதையை யெப்படி வைப்பது நீயே சொல்லு மென்று கேட்கத் தாயா ரவனைநோக்கிக் கடந்துபோனதைக் குறித்து நீ கலக்கமுறவேண்டாம், இதுமுதல் நீ ஹரித்யான த்தைச் செய்யக்கடவாயென்று சொல்ல, புத்திர னிதைக்கே ட்டு ஸ்நானம்பண்ணி ஆசன மொன்றைப்போட்டு அவ்விடத்திற் றியானத்தி லுட்கார்ந் திருந்தார். ஸ்ரீகிருஷ்ணர் சேஷ்டைக ளைச் செய்துக்கொண்டு அவ்விடஞ் சேரவந்து கையி லோர்கட் டையை ஏந்தி கோவிந்ததாசரைப் பார்த்து அடா கோவிந்தா! பெருந்தன்மையைக் காண்பித்து இன்றைக் கிப்படி யிருப்பதேன்? நீ கும்பிடுஞ்சாமி எதுவோ! உன் கோரிக்கை யெதுவோ! சொல் லுமென்று பெருமாளே அவரை யுட்காராமற் செய்ய, கோவிந்தர் தாயாரையுத்தேசித்துப் பார்! பார்! ஸ்ரீஹரிதானே வலிய ஆட்டத்தி ற்கிழுக்கிறார். நான் மரியாதை யெப்படி வைப்பது? ஹரியினுடைய குண்டித சரியைகளைப் பார்க்கும்படி சொல்லத் தாயார் பார்த்த வுடன் பெருமா ளந்தர்த்தான மானார். திரும்பியும் கோவிந்தன் தியானத்தி லிருந்தார். உடனே ஸ்ரீஹரி பிரகடமாகி, அடா கோ விந்தா! எழுந்திரு, எவருடைய தியானத்தி லிருக்கின்றாய்? விளை யாடுவதற்கு வா, சாதுவேஷம் சுந்தர மானதுதான், போரும் போ ருமென்று சொல்ல அச்சிறுவர் கோபத்துடன்கூடி விகடவார்த் தைகளைச் சொன்னார். பெருமா ளதற்குச் சந்தோஷித்து விளை யாடும்பொருட் டெழுப்பினார். சாஹசமான கிரியைகளைச் செய்

துக்கொண்டு பலவாறான சம்பாஷணைகளுடன் அங்குமிங்குந் திரிந்துகொண்டிருந்தார்கள். அவ்வேளையில் வல்லபாசாரியருடைய சிஷ்யன் பெருமாளுக்குப் பிரசாதத்தைக் கொண்டுபோகுஞ் சமயத்தில் வழியி லவர்களதைத்தீண்டிவிட்டார்கள். பிரசாதமனைத்துந் தீண்டலாயிற்றென்று அந்த சிஷ்யன் அப்பாலகருக்கே யதைக் கொடுத்துத் தன்னுடைய ஆசாரியரிடஞ் சென்று வழியிற் பிரசாதங் கொண்டுவருமளவில் கோவிந்த னதைத் தீண்டினான், அவனுக்கே அதைக் கொடுத்துவிட்டு வந்தேனென்றான். இதைக் கேட்டு வல்லபாசாரி, கிலேசமடைந்துப்பெருமாளை நோக்கிக்கோவிந்தனிடத்தில் விசேஷமாகப் பிரீதிசெய்வதே அனர்த்தமாயிற்றே! ஹரி! கோவிந்தா! தேவரீராக்கினை யென்னவென்று கேட்க பெருமா ளவரைப்பார்த்து கோவிந்தனுக்கு நீமுன்ன மன்னமிட்டு பின்பெனக்குப் பிரசாதத்தைக் கொடுக்கக் கடவாயென்று கட்டளை யிட்டார். வல்லபாசாரிய ரப்படியேசெய்து தன்காலத்தைக் கழித்தார்.

டில்லிநகர வரசனுக் கிச் [illegible] கோவிந்த தாசரைத் தன்னிட ம [illegible] யனுப்பினான். அவர்கள் மதுராபட [illegible] தாசரைக்கண்டு அரசனிடம் வரச்சொல்லி யழைக்க இதைத் தான் கேட்டமாத்திரத்தி லெல்லோர் முன்பே அதிருஸ்யராகி யாருக்கு மகப்படாமலிருக்க சேவகர்கள் விசேஷமாகத் தேடியுங் காணாதிருந்தார்கள். இதனால் கிலேசமுற்று என்னசெய்வோமென்று ஏங்கியிருக்குந் தருணத்தில் கோவிந்த தாசர் நேராக அரசனிடஞ் சென்றார். அவ்வேளையி லவன் கட்டிலின்மேற் சயனித்திருந்தான். அவ்விடத்தில் தான் பிரகடமாகி மார்பின்மே லவனை ஒரு அடி அடித்தார், அதனாலவன் திடுக்கிட்டுக் கீழேவிழுந்து யாரும் வரக்கூடாத ஏகாந்தமான இடத்தி லிந்தமனிதனெப்படிவந்தானென்று அரசன் தொந்தரை யடைந்து நிதானித்துப் பார்க்குமளவி லவ்விடத்தோர் புருஷனைக் கண்டான். அரச னவர்முன்னின்று விஸ்மயத்துட னவரைநோக்கி நீர் யார்? என்னையே னடித்தீரென்று கேட்க, அவர் நான் கோவிந்ததாசன், நீ அழைத்ததினால் வந்தேன் என்று பிரத்தி யுத்தரம் கொடுத்து பெருமாளுடன் நான் விளையாடுகிறேன், அதனாலுனக் கென்னலாப நஷ்டங்களாயின?

ீ இராஜமதத்தா லன்றோ என்னை வரச்சொல்லிச் சேவகர்களை யனுப்பினு யென்றுசொல்ல அரசனஞ்சலி அஸ்தனுகி ஸ்வாமி! தேவரீரஸ்தத்தை என்றலைமேல் வைக்கக் கடவீர். தேவரீருடைய ஆக்கினைப்பிரகாரம் வஞ்சனையின்றி நடந்துக்கொள்ளுவேனென்று சொன்னன். கோவிந்ததாசரிதைக்கேட்டு அரசனைப்பார்த்து சேவகர்களைத் திரும்பிவந்த உன்னிடத்திற்கு சேரும்படிக் கடிதமெழுதிக் கொடுவென்று கேட்டார். அரசனப்படியே யென்று கடிதமெழுதிக் கொடுத்தான், அக்கடிதத்தைக் கைக்கொண்டு மதுரையிற் பிரகடமாகி நின்றார். இராஜ முத்திரையுடன் கூடின கடிதத்தை இராஜதூதர்கள் கண்டு அவர் மஹாபுருஷரென்று பூஜித்துப் பட்டணத்திற்குத் திரும்பிச் சென்றார்கள். கோவிந்ததாஸருக்குப் பெருந்தன்மையும் பிரதிஷ்டையும் அதிகமாக வுண்டாயிற்று. அதுமுத லவர் ஒருவர்கண்களுக்கு மகப்படுகிற தில்லை. சிரஞ்சீவியாகி மதுரையி லிருக்கிறாரென்றுச் சான்றோர் சொல்லுவார்கள்.

---

## பிரேமநிதி சரித்திரம்.

அஸ்தினுபுரியில் பிரேமைநிதி யென்றொருவ ரிருந்தார். அவர்ஸ்ரீராமபூஜையை அதிகப்பிரீதியுடன் செய்துவருவார். சிஷர்கள் நமக்குச் சாமக்கிரியைகள் கொடுத்துவந்தால் அவர்களுக்கு நாம்வச்யராகி நாம் செய்த புண்ணியத்தை அவர்களே கொண்டு போவார்களென்றும் தமக்கு சுகிருதங் கிட்டாதென்றும், காசு கொண்டு வேலைசெய்தது போலெண்ணத் தகுமென்றும் நினைத்து பகவத் பிராப்தி சாதகர்கள் பரஹஸ்தங்களாற் சேவைகளைக் கொள்ளார்கள். ஏனெனில் சுகிருதம் விபாகமாய் விடுமென்று நினைத்திருப்பார்கள். இவ்விதமாகச் சிந்தித்து பிரேமநிதி ஈஸ்வரனுடைய பூஜைக்காகத் தானொருவரே வேண்டியவேலை யனைத்தையுஞ்செய்து வருவார். இதனால் சுகிர்தமனைத்துந் தன்னுடையதாகவே யிருக்குமென் றெண்ணமுடையவரா யிருப்பார். புராதனமான ஸ்ரீராம விக்கிரஹத்தை அவர் பூஜித்துவருவார். அதற்காக ஒரு ஜாமராத்திரியில் கங்கைக்குச் சென்று ஸ்நானம்பண்ணி பெருமாள் பூஜைக்கு ஜலந்திரட்டி வருவார். புட்பங்களை கொய்துக்கொண்டுவந்து மாலைகளைக் கட்டுவார். சாத்துப்படிக்காக ஸ்ரீசந்

தனத்தை யரைத்து வைப்பார், இராமபிரான் மூர்த்திக்குத் திருமஞ்சனத்தைச் செய்து அலங்காரங்களைப்பூட்டி. அர்ச்சனை முதலாகிய சகல வுபசாரங்களைச் செய்து வருவார். இவ்விதமாக வனேக நாட்கள் நடத்திவர இராமபிரான் சேவாருணஸ்தராகிசாக்ஷாத்கார சேவையைக் காண்பித்து வருவார். உலகிலோர் புருஷனுக்கு வேறோர் புருஷன் உபகாரத்தைச் செய்துவந்தால் அவன் தனது சிநேஹிதனென்றெண்ணப் படுவான். தசரதராமரை திருத்தமாக ஆராதித்தால் அவருடைய கருணையை யடையாமலிருப்பரோ! பகவானைத் தொழுதுவந்தால் பாராவார (அமித) சுகத்தை யடையலாம்.

ஒருகாலத்தில்-ஹஸ்தினபுரியில் பெருத்தமழை பெய்ந்தது. வழியிற் சேறு விசேஷமாய் இருந்தது. மேகத்தினால் மூடப்பட்டு இரவுகாலம் சால இருட்டை உண்டாக்கியது. மழைதூற்றலாகவுமிருந்தது. அவ்வேளையில் பிரேமநிதி எழுந்திருந்து கங்கைக்குப் போவோமென்றும், உதயமானபிறகு போனால் துலுக்கர் முதலானோர் தீண்டுவார்களென்றும். அந்த ஜலம் ஸ்ரீராம ரபிஷேகத்திற்குச்சரிப்படாதென்றும் இப்போதே போய் ஜலங்கொண்டு வரவேண்டுமென்றுமெண்ணி பாத்திரத்தைக் கையிலெடுத்துக்கொண்டு வெளியில்வந்து பெருத்த இருளில் வழியில் சேற்றினால் சேறு சறுக்க கால்கள் சிதற ஒருவனாய் நடந்துபோக, சீதாராமரோர்மனிதருபத்தை வஹித்து கைதீவட்டியைப் பிடித்துக்கொண்டு பிரேமநிதிக்கு வழி தெரியும்படி முன்னின்று நடந்து சென்றார். இராமநாமத்தை யுச்சரித்துக்கொண்டு பிரேமநிதி வழிநடந்துக்கொண் டிருந்தார். தன்னெதிரில் தீவட்டியிருப்பதைப்பார்த்து, விந்தையடைந்து தனிகனான பிரபு எவனோ தீவட்டியுடன் தனதுவீட்டிற்குப் போகிறானென்றும் அது எனக் குபகாரமாக விருக்கிறதென்றும் மனதிலெண்ணிக்கொண்டு கங்கையைக்கிட்டி அவ்வாற்றில் ஸ்நானம் பண்ணி பாத்திரத்தில் ஜலத்தை நிறைப்பிக்கொண்டு திரும்பிப் போக எத்தனித்தார். காகுத்தர் கைதீவட்டியை கிரமமாகப் பிரகாசிப்பிக்கச்செய்து பிரேமநிதிமுன் அவரும் பிரயாணமானார். பாத்திரத்திற் ஜலத்தை நிறைப்பி தலைமேல் தூக்கிக்கொண்டு பக்தன் தனது வீடுவந்து சேர்ந்தார். உடனே தீவட்டியும் அதைப்பிடித்தவரும் பக்தர் பார்த்துக்கொண் டிருக்கும்போதே

மறைந்தனர். அப்பொழுது பிரேமநிதி தீவட்டி பிடித்தவர் தசரதராமரென் றறிந்து அபசார மதிகமாக ஹரிசர்வேஸ்வரன் விஷயத்தி லாயிற்றென் றனுதாபமடைந்து, சனகசனந்தாதிகள் யாரைக்காண யோகநிஷ்டையைச் செய்வார்களோ அப்பரமபுருஷ ரெனக்காக தீவட்டி பிடித்தாரே! என்று கிலேசித்து பெருமாள் சன்னிதிமுன் சென்று விநீதனுகி ஸ்வாமீ! சேவாஹீனன், ஞான சூன்யன், பக்திஹீனன், வைராக்கிய மில்லாதவன், உன்பாத பூஜை நானெப்படி செய்வேன். ஆசக்தியுடன் நீயே அதனைப் பூர்த்திசெய்துக்கொள்ளுகிறுய், ஓ சர்வேஸ்வரனே! நானென்ன சொல்லப் போகிறேன். ஒருவனுகி கைங்கரியஞ்செய்ய வுசித மல்ல வென்று தெரிவிக்க நீர் கண்காக்ஷியாக எனக்கு ஓர் உதா ஹரணத்தைக் காண்பித்தீர், ஸ்ரீரகுராமா! நித்தமு மனமுன்மேற் சேர்ந்திருக்ககிருபைபாரு மென்று பிரேமநிதி பக்தியைச்செய்து யிருந்தார்.

இப்படி வெகுகாலமாக நடக்க இரவுகளிற் பிரேமநிதி பிரியத் துடன் ஹரிகுண கீர்த்தனையைச் செய்துவருவார். வைஷ்ணவர்க ளான சாதுக்களும், மற்றவர்களும் ஸ்திரீகளு மவருடைய அன்பு நெறியைக்கண்டு அதனை கேட்பதற்குவந்து பிரஜைகளைத் தரிப்பிப்ப தற்கே இக்கலியுகத்திற் பிரேமநிதி பிறந்திருக்கிறுரென் றுக் கொண் டாடிக்கொண் டிருப்பார்கள்; குடிலஜனங்க ளொன்றுய்க்கூடி இந்த பிரேமநிதித் தன்வயிற்றை நிறைக்கப் பணத்தை அபேக்ஷித் து நாள்தோறும் ஹரிகதையைச் செய்து ஸ்திரீஜனங்களைச் சேர்த் துக்கொண்டு கீதங்களைப் பாடுவதும் சமயமானபோது அவர்கள் கையைப்பிடிப்பதுமாக விருப்பார்; ஆகையால் இவரை சிக்ஷைசெய் விப்பது நன்மையென்று ஆலோசித்து அப்பட்டணத் தரசனிடஞ் சென்று கோள்சொல்லத் தொடங்கினுர்கள். ஓ மஹாராஜரே, பிரேமநிதி பெண்டுகளுடன் பரிஹாசங்களைச்செய்து அவர்களுக் குப் பாட்டுகளைச்சொல்லி வருவார். எங்களுக்கவர் சோதரராயி னும் செய்யத்தகாத காரியங்களைச் செய்கிறபடியால், தாங்கள் விசாரித்து சிக்ஷைசெய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டார் கள். இதைக்கேட்டு அவ்வரசன் கோபமுடையவனுகி தன்முன் பிரேமநிதியை அழைத்துவரும்படி தூதரை அனுப்பினுன். ஜாம ராத்திரி யானபோது தூதர்க ளவரிடம் வந்தார்கள். அவ்வேளை

யில் பிரேமநிதி பகவத்கதையை பிரபல மதுரத்துடன் சொல்லிக் கொண்டிருக்கப் பிரஜைக ளனேகர் கேட்டுக்கொண்டிருந்தார்கள், ஸ்ரீராமசந்திரரே பிராணபூதர், அவரேபந்து பிராதாவு மிராமரே தகப்பனு மிராமரே! சினேகிதரு மிராமரே! தாயாரு மிராமரே! சகலபந்துக்களு மிராமரே! இராமரில்லாம லிச்சரீரமிராது. இராமரே பிரமஞானம், நிக்ஷேபதன மிராமரே, மோக்ஷசாதனமு மிராமரே! கண்களிராமரையே பார்த்திருக்கவேண்டும். கைக ளிராமரையே அர்ச்சிக்கவேண்டும். வாக்கு இராமரையே வசனிக்க வேண்டும், காதுக ளிராமகதையையே கேட்கவேண்டுமென்று இராமபக்தியில் மக்கினமடைந் திருக்கவேண்டுமென்னு மிவ்விதமான வனுசந்தானத்தைப் பிரேமநிதி சொல்லிக்கொண்டிருக்க சேவகர்கள் வந்து அரசனுக்கினையைச் சொல்லி உம்முடைய சோதர ரிராஜனிடம் வந்து துர்வார்த்தைகளை உம்மேற் சொன்னார்கள். நீரிப்பொழுதே வரவேண்டும். இல்லாவிடில் பலாத்காரஞ் செய்வோமென்றார்கள். அதற்குப் பிரேமநிதி அவர்களைக்கண்டு நடுராத்திரியி லிராமபிரானுக்கு ஜலத்தைக்கொடுத்து வருவேனென்றார். இதைக்கேளாமல் தூதர் பலாத்காரமாகப் பிடித்துப்போவோமென்றார்கள். பிரேமநிதி அப்பொழுது தான் சொல்லிக் கொண்டிருக்குங் கதையை நிறுத்தி வெளியில்வந்து ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டு அத்தூதருடன் சென்றார். ஹரிகதையைக் கேட்கவந்த ஜனங்க ளனைவரும் தங்கள் தங்கள் வீடுகளுக்குச் சென்றார்கள்.

பிரேமநிதி பயமின்றி அரசன் வீட்டிற்குச் செல்ல அச்சமயத்தி லிராஜ னந்தப்புரத்தில் தாஸீஜனங்களுடனிருந்தான். சேவகர் பிரேமநிதியைக் கொண்டுவந்தோமென்றுச் சொல்லியனுப்பினார்கள். அரச னவரைக் காவலில் வைத்திருக்கக் கட்டளையிட்டு விடியற்காலத்தில் விசாரணை செய்வதாகச்சொல்லி கட்டிலின்மேல் நித்திரைசெய்யத்தொடங்கினான். சேவகரவ்வரசனுக்கினைப்படி பிரேமநிதியை காவலில் வைத்தார்கள். அப்பொழுது பக்தர் தனக்குள்ளே எண்ணுவார், ஐயோ! பெருமாளுக்குப் பெரிய சேவையின்று அந்தரித்தது. ஸ்ரீராமருக்குத் தீர்த்தம் வைப்பதற்குச் சரிப்படாம லிரவு மிஞ்சிற்று. என்னைப்போல் சேவாஹீன னுலகி லிருக்கமாட்டானென்று பாவபந்தத்தாற் கலக்கமுற்று பிரபல

மாகக் கிலேசித்தார். அச்சமயத்தி லிராமபிரா னிராஜன்மேற் கோபங்கொண்டு துலுக்கருக்குக் குருவான காஜிரூபத்தை வஹித்து அரசனிடஞ் சென்று மார்பி லோருதையை யுதைத்தார் அவன் உடனே கிழேவிழுந்து கண்களை விழித்துப்பார்க்கத் தனது குலகுருவான காஜியைக்கண்டான். இவர் குரான் கிரந்தத்தை கையிலேந்தி அரசனைநோக்கி அடா பூபதி! நீ உன்மத்தனாகி நித்திரை யடைந்தாயன்றே! தாஹத்திற்கு நான்தடமாடி உன்னை யுதைத்தேனென்று சொல்ல, உடனே அரசன் ஜலத்தைக்கொடுத்துச் சாப்பிடச் சொன்னான். காஜி அவனைநோக்கி எவனை நீ யிப்பொழுது காவலில் வைத்திருக்கின்றனையோ அவன் நீரைக்கொண்டுவந்தாற் பானஞ் செய்வேனென்று சொல்லி மறைந்தருளினர். அரசனிந்த சூசனையைக் கண்டுகொண்டு பிரேமநிதியை வுடனே காவலிலிருந்து, விட்டுவிடும்படி ஆக்கினைச் செய்தான். அப்பொழுது காவலாளிகளவரை விடுதலைச் செய்து வீட்டிற்குப் போகச்சொல்ல பக்தன் சுகமாக தன்வீட்டிற்குவந்து சேர்ந்தார். இது ஸ்ரீரகுராமருடைய செய்கையென்று தன்னுள் சிந்தித்து ஜலத்தை இராமபிரானுக்குக் கொடுத்துத் தான் நித்திரை செய்தார்.

பொழுது விடிந்தவுடன் அரசன் பிரேமநிதியைக் காணவந்து உவமையற்றவரான இராமமூர்த்தித் தன்னிடம் வந்து அவ்விரவிற் செய்த செயல்களை அவருக்குத் தெரிவித்து விசேஷமாக தனதான்னியங்களைக் கொடுத்து தீர்க்கதெண்டஞ் சமர்ப்பித்து தன்னிருப்பிடஞ் சென்றான். பிரேமநிதி ஆசைகளனைத்தையு மறுத்து இராமபிரானையே தன்மனதி லிட்டுக்கொண்டு அந்தியத்திலிராமரூபத்திலேயே அந்தர்ப்பவித்தனர்.

---

## பகவான்தாஸ் சரித்திரம்.

ஹஸ்தினபுரத்தி லரசனாயிருந்த ஒருவன் பகவான்தாஸெனு மொருவரை குவாலேர் தேசத்திற்கு பிரபுவா யிருக்க நியமித்தான். இவர் ஸ்ரீஹரிபக்தியை யடைந்து சகல சுகுணங்களைச் சூழ்ந்திருந்த சாதுக்களுடைய பூஜையும் சதாசாரமும் சத்சங்கமுமுடையராய் குடும்பமிருந்தும் ஆசையற்றவராகி சம்ஸ்கிருதபிராக்கிருத பாஷைகளில் நைபுண்ணிய முடையராய் கோவிந்தனை மனதிலிருத்திப் பஜனைசெய்வதில் தத்பரரா யிருப்பார், தெய்வ

யோகத்தால் மிதமான தன மவரிடத்தி லிருந்தது. அதைக் கொண்டு பரோபகாரமே பிரபலமாகச் செய்துவருவார்.

பிருந்தாவனத்தில் விட்டலாசாரிய ரென்று விஷ்ணுபக்தரிருந்தார். அவர் ஞானியாகியும், நிந்தாஸ்துதிகளில் நினைப்பை செலுத்தாமலும் மகத்தான வைராக்கியத்துடனுங் கூடியிருந்து அனேகருக்கு ஹிதத்தைப் போதித்து அவர்களை பக்திமார்க்கத்திற் பொருந்தச் செய்தார். அவரிடத்தில் சிஷ்ய ஜனங்களும் அதிகமாகச் சேவித்திருந்தார்கள். பகவான்தாஸ ரிவரிடத்திற்கு வந்து பக்தியுடன் சரணாகதிசெய்து, தனு, மன, தன்ங்களை ஆசாரியர் திருவடிகளிற் சமர்ப்பணஞ்செய்து நின்றார். ஆசாரியரு மிவருடைய பாவசுத்தியைப் பார்த்து பரமமான தாரக மந்திரத்தை யுபதேசித்தார். சிஷருஞ் சமாதானமடைந்து ஆசாரியருக்குநமஸ்கரித்து வீட்டிற்குத் திரும்பிவந்து பரிசுத்த சித்தத்தால் பகவானைப் பஜித்துக்கொண் டிருந்தார். அவர் பிரபஞ்ச காரியங்களைத் தான் நிறைவேற்றினருமளவிலும் பக்தியுடன் சாதுக்களுடைய பூஜைகளைச் செய்தும் குருவே தெய்வமென்றும் காலங்கழித்து வருவார். தன் ஆசாரியரிருக்கும் பிருந்தாவனத்தினின்று யாவர்வரினும் சந்தேஹமின்றி அவர்களைக் குரு ரூபரென்று சன்மானிப்பர். தினந்தோறுமவர் ஸ்நானஞ்செய்து ஏகாந்தத்திற் சற்குருவை தியானித்தும் மனதினுற் சோடசோபசார பூஜைகளை மகாபிரீதியுட னற்பித்தும் ஆசாரியர் சேவையி லனவரதமு மிருக்கவேண்டுமென்று மறவாம லெப்பொழுதும் மனதில் நினைத்தும், அவரை எப்பொழுது பார்ப்பேனென்ற ஏக்கமு முடையராயும் குருவே க்ஷேத்திரமும், குருவே தெய்வமும், குருவே தீர்த்தமுமென் றெண்ணி குருவைத்தவிர வேறுசாதனம் வியர்த்தமென்றும் இத்தகைய குறிப்புடனிருத்தலே நன்னெறி யென்றுமிருந்தார். அவருடைய மனையாளவரிஷ்டப்படி நடப்பவளா யிருந்தாள். காமகுணங்களை விட்டுத் தருமசிந்தனையி லிருந்து சிலருக்கு வஸ்திரான்னங்களைக் கொடுப்பள், சிலருககு விவாஹங்களைச் செய்விப்பள், சிலருடைய கடன்களைத் தீர்ப்பாள், சிலருக்குத் தொந்தரைகளை நீக்கி சௌக்கியப்படுத்திவருவாள்.

பகவான்தாஸருடைய பிரபல செய்கைகளைப் பிருந்தாவனத்தில் குருசன்னிதியிற் சிலர்போய்ச் சொல்ல, அவர் தனது சிஷனை

எப்போது பார்ப்பேனென்றெண்ணி யிருந்து ஒருநாளவருடைய பாவார்த்தத்தைக் கண்டு வரவேண்டுமென்று குவாலேர் ஜில்லாவுக்குப்போகத் தொடங்கினர். சிலர் பகவான்தாசரிடஞ் சென்று ஆசாரியர் வருகிருரென்று தெரிவித்தார்கள். அவரிதைக்கேட்டவுடன் அமிதமாக ஆனந்தத்தை யடைந்து ஆசாரியருக்கு எந்தச் சேவையைச் செய்வதென்று ஒன்றுந் தோன்ருமற் றன்மனையாளிடஞ் சென்று சங்கதியைத் தெரிவிக்க, அவள் கணவரைநோக்கி ஓ பிராணநாதரே! நம்முடைய தேஹமனங்களையும் ஐசுவரியத்தையும் பூர்வமே ஆசாரியருக்குத் தத்தஞ்செய்திருக்கிறேம். அவராலே நாம் நிலை நின்றவர்களாகச் சொல்லப்படும். அவருடைய சொத்தை யவருக்குக் கொடுப்பது அவசியமாகும். வேறெந்த யோசனையும் பயன்படா தென்ருள். இதைக்கேட்டு பர்த்தாவும் சந்தோஷித்து குதூஹலத்துடனிருக்க இச்சங்கதியைச் சிலராசாரியரிடஞ் சென்று தெரிவித்தார்கள். இதைக்கேட்டு விட்டலாசாரியர் சொல்லுவார். பகவான்தாஸ் வீட்டிற்கு நாம்போவோமாகிலவர் சகலத்தையும் சமற்பணை பண்ணிவிடுவார். கலியுகத்திற் தேடினுலு மவனைப்போல சீஷனகப்படமாட்டான். அவனுக்கு ஹிதமான புருஷார்த்தமே நன்மையென்று குவாலேருக்குப் போகாமல் தன் னிருப்பிடமான பிருந்தாவனத்திற்கே திரும்பிப்போய் விட்டார்.

இச்சங்கதியை பகவான்தாஸர் கேட்டு அவருக் கடிமையான வென்னை அவர்பாராமற் றிரும்பிப்போவதுத் தகாதென்று கிலேசப்பட்டுக்கொண்டிருக்க மனையாளவரை நோக்கி நாம் மோஹத்தைவிட்டுச் சம்பத்தையுந் தனத்தையுங் கைக்கொண்டு ஆசாரியரிடஞ் செல்வது யுக்தமாகுமென்று சொல்ல புருஷனுமப்படியே தன்னிடத்தி லிருந்த சம்பத்தும் வைபவமனைத்தையுங் குருவுக்கற்பணஞ்செய்யும்பொருட்டு கைக்கொண்டு பிருந்தாவனஞ்சென்று ஆசாரியரைச் சேவித்து அவருக்கனைத்தையுமற்பணைசெய்துவிட்டார். பின்பு உபாதியற்றவராகி தைன்னியத்தை வஹித்து ஸ்ரீ ஹரிநாமத்தைச் சர்வகாலங் களிலுஞ் சொல்லிக்கொண்டு குருகைங்கரிய நிரதராகி காலயாபனஞ்செய்து தம்பதிகளிருவருஞ் சுகமே வாழ்ந்திருந்தார்கள்.

பகவான் தாஸருடைய தகப்பன் மாதவதாஸ ரென்பவர்

"நாகர்யா" யெனும் கிராமத்தில் விஷ்ணுபக்தராக விருந்தார். அவருக்கு வார்த்திக்கியதசை யதிகமாகி வியாதியினாற் பீடிக்கப் பட்டதை பகவான் தாஸர் கேள்வியுற்று பிருந்தாவனத்தை விட்டு தகப்பனரிடங் குடும்பசமேதராகச் சென்று பார்க்குமளவில் அவருக்குச் சரமதசையாகக் காணப்பட்டது. பேசுவதற்குச் சக்தி யற்று பிரபலவியாதியினாற் றுன்பப்பட, பகவான்தாசர் அவரை பிருந்தாவனத்திற்குக் கொண்டுபோனால் மேன்மையாகுமென் றெண்ணி, பல்லக்கி லவரையிட்டு அவ்விடத்திற்குக் கொண்டுபோம்பொழுது வழியிற் றகப்பன் ஸ்மரணைக்குவந்து பிள்ளையைப்பார்த்து எவ்விட மென்னைக்கொண்டு போகிறாயென்று கேட்க, புத்திரன் பிதாவை நோக்கி தேவரீர் இந்தச் சரீரத்தை பிருந்தாவனத்தில் விடுவது யுக்தமென்று அவ்விடத்திற்குக் கொண்டுபோகிறேனென்று சொல்லத் தகப்பன் புத்திரனை நோக்கிப் பிள்ளாய்! இந்ததேஹம் அமங்களமானது துர்க்கந்த முடையது அறிவற்ற ஜடபதார்த்த மாகும் மோஹமும் மமதையும் மிகுதியாக வுடையது மலமூத்திரங்களுடைய் அழுக்குப்பாண்டம். இவ்வண்ணமான சரீரத்தை மஹா க்ஷேத்திரத்தில் விடுவது அபராதமாகும். வீட்டுவாய்க்கால் நீரைக் கொண்டுவந்து பகீரதியிற் சேர்ப்பதுபோலாம். ஆனதால் நீ பல்லக்கைத்திருப்பி கிராமத்திற்குக் கொண்டுபோகச்செய். பாவ சுத்தியுட னிச்சரீரத்தை அவ்விடம் விட்டுப் பகவானைக்கண்டு விநாசமற்றவனுகி, மதுராநாதரையும் அவசியமாகப் பார்ப்பேனென்ன, புத்திர னப்படியே கிராமத்திற்குத் திரும்பிச்செல்ல, அவ்விடஞ் சேர்ந்தவுடன் தகப்பன் ஹரீ! யென்று தன்தேகத்தை விட்டனர். புத்திர னவருக்குச் செய்யவேண்டிய கருமவிதிகளை சம்பூர்ணமாக நிறைவேற்றி, மதுரை க்ஷேத்திரத்திற்கு வந்துசேர, அவ்விடத்திலுள்ள பக்தர்க ளனைவருங்கூடி அவரிடம்வந்து உமது தகப்பனரான மாதவதாஸரை பிருந்தாவனத்தில் ஹரிசன்னிதியிற் பக்தி செலுத்திக்கொண்டிருக்கக் கண்டோமென்றார்கள். இதை யனைவருங்கேட்டு அமிதாச்சரியத்தை யடைந்தார்கள். பகவான்தாஸரவ்விடத்தில் சாதுபூஜையும், சற்குருசேவையும் செய்துக்கொண்டு பூர்ணநிஷ்டையுட னிருந்தார்.

---

## சனாதனன் ரூபா சரித்திரம்.

சனாதனரென்பவர் பங்காளாதேசத்திற்குப் பிரபுவாயிருந்து சங்கீதம் முதலாகிய போக்கிய வஸ்துக்களிற் சித்தம் இரமிக்காமல் விரக்தி லக்ஷணத்தை யுடையவராகி கிருஷ்ணோபாசனையை விஹிதமாகச்செய்து பெருத்த நிஷ்டையுடன் பக்தியைச்செலுத்தி அவரையேதொழுதும் அவரையே பாடுவதுமாக விருந்தார். சனாதனருக்குத்தம்பி ரூபா யென்பவர் அண்ணனுக் கிஷ்டமுடையராய்ப் பிரியராகி அயிஷ்டமொன்று மில்லாமல் நிலைபொருந்திய சினேகத்தை யிருவருஞ்செய்து வருவார்கள். தம்பி இராதாதேவி பூஜையைத் தற்பரராய்ப் பிரீதியுடன் செய்துவருவர். இருவரும் சாந்தி, பொருமை முதலாகிய சற்குணங்களை யுடையவராகி தந்தமக்கு நேர்ந்த உபாஸனைகளில் விருப்புற்றவர்களாகி காந்தக்கல்லிரும்பைச் சலிப்பச்செய்வதுபோல அவர்கள் செய்யு முபாசனைகள் சித்தசலனத்தை சிதறச்செய்தன. விஷயவாஞ்சைக ளொன்று மின்றி விசேஷபக்தியைச் செய்வதனால் உபாசனமூர்த்திக ளிருவருக்கும் பிரசன்னரா யிருந்தார்கள். தனம் சம்பத்துமுதலானவைகள் அவர்களுக்கு விஷதுல்லியமாகத் தோன்றுதலால் அவைகண்மே லாசையைவிட்டு அகில க்ஷேத்திரங்களைப்பார்க்கப் புறப்பட்டு அவ்வவ்விடங்களிற் சஞ்சரித்து பிருந்தாவனத்திற் றங்கினார்கள்.

பிருந்தாவனத்திற் சாது கூட்டங்களுடன் சேர்ந்து அவர்களிடம் பகவத் குணானுபவத்தைக் கேட்டுக்கொண்டிருந்து இருவருடைய மனங்களிலும் விகல்ப துவேஷமில்லாமல் வேறுவேறாக நிவாசஞ்செய்து வந்தார்கள். இப்படியிருக்க ஜயசிங்குயென்னுமரசன் யாத்திரை நிமித்தம் பிருந்தாவனத்திற்குவந்து அவ்விடஞ் சிலநாள் வாசஞ்செய்து திரும்பிப்போக எத்தனித்து யமுனாநதியைத் தாண்டுவதற்குப் படவுகளை யேற்படுத்தினன். அவைகளிலனைவருமேறித் தாண்டுவது சாத்தியமாகா திருந்தது. வெள்ளத்தின் வலிவுப் படவுகளைப் போகவொட்டாமற் றடுத்ததாதலால் அரசனுபாசமடைந்து இப்படிப் பிரயாணந் தடையாவதற் கென்ன காரணமென்று வெகுவிதமாக தர்க்கித்துக்கொண்டிருக்க, அவ்விடமிருந்த சில சாதுக்க ளவ்வாசனை நோக்கி ஓ மஹாராஜரே! இவ்விடத்தில் சனாதனனென்னு மோர்பக்த சிரேஷ்டர் வாசஞ்செய்

கிறார். அவருக்குப் பகவான் பிரசன்னராகியிருக்கிறாரதலா லவ ரைக்கேட்டால் சொல்லுவாரென்றார்கள். இதைக்கேட்டு நல்ல தென்று அரசன் படவுகளைவிட்டு சனாதனரிடம்வந்து விநயத்து டன் தெண்டஞ் சமர்ப்பித்து நதியைத் தாண்டவென் லாகாமல் தங்களிடம் வந்தேன், படவுகளைப் போசவொட்டாமற் றடைசெ ய்வதற்குக் காரண மேதென்று வினவ, சனாதனர் சர்வேஸ்வர ரான ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கு ஒரு கோயிலைக் கட்டிப் பக்கத்தி லிருக்குங் கோவிந்த மூர்த்தியை அக்கோவிலில் ஸ்தாபித்து வுன் னுரைச் சேருவையே யுனக்குச் சுகமுண்டாகுமென்று சொல்ல, அப்படியே யாகக்கடவதென்று திரவியத்தையும் வேலைக்காரரை யுந் தருவித்துச் சிலநாட்களில் கோயிலைக் கட்டிவைத்து ஸ்ரீகிருஷ் ண விக்கிரஹத்தை யவ்விடம் ஸ்தாபித்துத் தன்வீட்டிற்குச் சென் றான். இதனாற் சனாதனர் சர்வேஸ்வரனுடைய கிருபையை யடைந் தவரென்று சகலருஞ் சொல்லுமற்றார்கள், தேசதேசங்களிற் பிரக் கியாதி யதிகமாயிற்று.

ஸ்ரீபாகவதத்தில் பாலக்கிரீடையு மிராசலீலையும் சொல்லிய வண்ணம் சனாதனர் ஸ்ரீகிருஷ்ண வேஷத்தைப்பூண்டு அனேக வித நடனங்களைச்செய்துச் சுகசந்துஷ்டியுட னிருந்து ஓர்நாள் தம்பி வீட்டிற்குச்சென்று மிகுந்த பிரீதியடைந்திருந்தரர். அண் ணன் வந்தாரென்று ரூபா எழுந்திருந்து நமஸ்கரிக்க அண்ணன் தம்பியை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு உனது ஸ்திதி யெவ் வண்ணமானதோ தெரியப்படுத்தவேண்டுமென்று சனாதனர்கேட்க தம்பி தன் மனதில் நினைத்ததாவது நான் அரண்ணியத்தி லொண் டியாயிருத்தலால் அண்ணனர் பக்ஷிப்பதற் கெதைத்தருவேன், பா லொன்றே யிருக்கிறது, அதை அவருக்குச் சாப்பிடக் கொடுப்போ மென் றெண்ணுமுற, இராதாதேவி பதார்த்தங்களையும் பக்குவா ன்னங்களையும் பாங்காக நிமிஷத்திற்செய்து பாத்திரங்களில் வை த்தாள். அவ்வன்னத்தை அண்ணனுக்குப் பரிமாறுமளவில் அவ ரதைப் பக்ஷித்து அமிருதசமானமாக விருந்ததென்றும் அதிக ருசியா யிருந்ததென்லுந் தெய்வ போக்கியமாயிருந்ததென்றுஞ் சொல்லி யிந்தபாகத்தை யார் செய்தனரென்றுகேட்க, ரூபா அண் ணனைநோக்கி இராதா தேவியே குமாரி ரூபத்துடன் செய்து வைத்தா ளென்றார். சனாதன ரிதைக்கேட்டு அனுதாபமடைந்து

இப்படிச்செய்வது சரியல்ல, இராதாதேவிக்கு நீ தொந்தரைபைக் கொடுத்தாய், ஒருதர மவளுக்குத் தொந்தரையைக் கொடுத்தா லின்னொருசமயத்தி லவள் பிரகடமாகாமல் காரியம் வியர்த்தமாம். ஆசையுடையவர்கள் ஆஸனங்களின்மே லுட்கார்ந்திருந்து பக்தியைச் செய்வார்கள். அவர்களைப் பெருமாள் கடன்காரரென்று வஞ்சித்திருப்பார். காமிகளாக அர்ச்சனைசெய்தால் காம்யத்தை யடையலாகும். சர்வேஸ்வரருக் கிது சரிப்படாதென்று பிரசித்தமாகக் காணலாம். ஆசைக்குள்ளாகி யோகிகளும் முனிகளும் இவ்வுலகில் சமுசாரவலையிற்சிக்கி யுழல்வார்கள். ஆசையை அகற்றினுற் சுகமடையலாமென்று சான்றோர் சொல்லுவார்கள். சிலர் பக்திசெய்து மோக்ஷத்தைக் கோருவார்கள். இதுவும் பெருமாளுக் கிஷ்டமானதல்ல, உலகி லிச்செய்கை வைஷ்ணவமென்று சொல்லப்படாது. எல்லாவற்றிலும் நிராசையுடையவனாகி ஸர்வபாரங்களையும் ஸ்ரீஹரிமேல் வைத்து ஜன்மமிருக்கும்வரை ஸ்வஸ்திரமாக விருக்கவேண்டுமென்றார். ரூபா அநுதாபத்துட னண்ணன் வசனங்களைக் கேட்டு அவருக்கு நமஸ்கரித்து பெருத்த வுபகாரத்தை நீர் செய்தீரென்று பிரீதியுடன் கொண்டாடினர். சனாதனர் பின்பு விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடஞ் சென்றார்.

புனிதரான ரூபா பக்தரும் தியானத்திலிருந்து முத்திரையடைந்த மனதால் தாரணை செய்தார். அப்பொழுது அந்த ஸ்திதியில் இராதா தேவியைத் தனதுபாவத்திற் பார்த்திருந்தார். அபாரமான பிரேமையை யுள்ளத்திலடைத்து வீணையைக் கைக்கொண்டு கிருஷ்ணலீலைகளைப் பிரீதியுடன்பாடிக் கண்களில் நீர்பெருகக் கற்கதகண்டராசி மஹத்தான மோஹத்தைக் கொண்டாடச் சொர்ணச்சாயையுடன் கூடின சுந்தர திருமேனியுட னிராதாதேவி பிரசன்னமாக அவர் கண்டுகொண்டு நமஸ்கரித்துத் தனது தப்பிதத்தை மன்னித்தருளும்படிப் பிரார்த்தித்து தாயே! அண்ணனிவ்விடம்வந்ததினம் அன்னத்திற்காக உனக்கு சங்கடத்தைக் கொடுத்தேன், இதுவன்றி அனேக வபராதங்க ளுலகிற் செய்திருக்கிறேன். அவைகளனைத்தையுஞ் க்ஷமித்து ரக்ஷித்தருள வேண்டுமென்று அஞ்சலி அஸ்தராகி தேவிமூர்த்தியைத் தான் பார்த்துக்கொண்டிருக்க இருவரும் பிரீதியுடனிருந்தார்கள். அவ்வேளையில் சனா

தனர் தன்வீட்டில் பெருமாளைப் பூஜித்துக்கொண்டிருக்க ஸ்ரீஹரி அவரைநோக்கி இராதா எவ்விடஞ் சென்றுளோ! நானொண்டியா யிருக்கச் சரிப்படவில்லை. நீர்போய் அவளை யழைத்துவந்து என்னிடஞ் சேர்ந்திருக்கச் செய்யுமென்று சொல்ல சனாதனர் ரூபாயிடஞ் சென்று பார்க்குமளவில் அவர் தேஹபாவத்தை அடையாதிருந் தார். சனாதனருக்கு உபாயமொன்றுந் தோன்றாமல் ரூபாவின் தேஹத்திற்குட்புகுந்து சித்தத்தை வெளிமுகமாக்கினார். தம்பி அப்பொழுது அண்ணனைப்பார்த்துத் தெண்டஞ் சமர்ப்பிக்க தமயனார் தம்பியைக் கட்டியணைத்துக்கொண்டு நீ அபூர்வமான ரூபத்தைக் கண்டுகொண்டு பிரம்மானந்தத்திற் சலனமின்றி நான்காண அமிழ்ந்திருந்தாயென்று தம்பிக்குத்தான்சொல்லித் தன் வீட்டிற்கு வந்து பெருமாளுக்குத் தெண்டனிட்டார். ஸ்ரீஹரி ராதாதேவியைக்கூடி சித்விலாசங்களைச் செய்யலுற்றார், சாஹச கிருத்தியங்கள் பக்தர்கள் செய்ய ஸ்ரீஹரி சர்வகாலமும் பார்த்திருப்பார்.

ஒரு காலத்தி லிராதாதேவி பெருமாள் வியோகத்தை பொறுக்கமாட்டாமல் சனாதனரைநோக்கி ஸ்ரீ ஹரி எவ்விடஞ்சென்றாரோ தெரியவில்லை அவரைக்காணமற் சகிக்கக்கூடவில்லையென்ன, சனாதனர் பெருமாளெண்ணத்தை யறிந்தவராகி இராதாதேவியைக்கூட அழைத்துக்கொண்டு இராதாகுண்டத்திற்கு வந்தார், ஸ்ரீ ஹரி அவ்விடத்தில் விலாசயுக்தராகி வீற்றிருந்தார். இராதாதேவிப் பிரேமையுடன் கிருஷ்ணமூர்த்தியைப்பிடித்து விடாதிருந்தனள். இவ்விதமாக சனாதனரும் ரூபாவும் பக்திசெலுத்திக் கிருதார்த்தரானார்கள்.

---

## மஹார்ஜனன் சரித்திரம்.

குவாலேர் தேசத்தில் வைசியர்குலத்தில் மஹாஜனரென்பவர் வாழ்ந்திருந்தார். அவர் குணதோஷ மொன்றுமில்லாமலும் குடும்பியாகவும் சம்பத்தும், மான்னியதையும் அதிகமாகவிருந்தும் சாது சேவாதற்பரராகி யிருந்தார். வேஷதாரிகளாகி வைஷ்ணவ சின்னங்களை யுடையராய் வெளிக்குச் சாதுவேஷத்தைக் காண்பித்து உள்ளில் கபடமிருக்கினும் மஹாஜனர் மனதில் விகற்பமின்றி அவர்களுக்கு வந்தனமிட்டு தோஷகுணங்களை நோக்காமல் அவர்களுடைய கைங்கரியத்தில் நிரதராயிருந்து அவர்களை

ஹரிதாசர்களென்று நினைத்து சேவை செய்துவருவார். தோஷ மேதேனு மவர்களுக்கிருக்கினு மவை ஹரிதங்களிற் சேராவென் றும்பெரியதிருவடி பாம்புகளைப் பக்ஷித்தாலும் பகவானுக் கனு கூலராகின்றானன்றோ? வென்று அடியார்க்கள்மீது ஹரியெப்பவுந் தயைசெய்வாரென்று மஹாஜனர் எண்ணியிருப்பார். கிஞ்சித்துகப டம் வையாமல் விநயத்துடனவர்களுடைய சேவையையுஞ் செய்து வருவார். பாகவதர்களைப் பார்த்தமாத்திரத்திலவர்கள் பாதங்களை ப்பிடித்து நமஸ்கரித்து அவர்கள் கால்களை அலம்பி அத்தீர்த்தத் தை ஸ்வீகரித்து வெகுவித பூஜைகளைச்செய்து அவர்கள் வேண்டின படி ருசியுடைய அன்னமளித்து அவ்வூரிலவர்களிருக்குமட்டுமுபச ரித்துவருவார். வெகுநாளிப்படி நடந்துவர பாண்டுரங்கர் பித்தனைப் போல் திரிந்து வைஷ்ணவ வேஷத்துடன் திலகமிட்டு துளபமாலை யைக் கழுத்திலணிந்து அவ்வர்த்தகரிருக்கு மிடத்திற்றோன்றினார். மஹாஜனரவரைக் கண்டவுடன் தெண்டனிட்டு மஹந்து(கிருஷ்ட ரே)சாதுக்களுக்குப் பூஜைசெய்வதுபோல பாவளாவெனும்பெய ருடைய அந்த சாதுவை சத்கரித்து அனேக விதங்களா லாராதித் தார். உலகத்தார் மஹாஜனரைக்குறித்து மலினத்துடன் கூடின மனிதனைவீட்டிற்குள் வைத்துக்கொண்டு வெகுவித உபசாரங் களைச் செய்துவருவதிற் பயனென்னவென்று சொன்னார்கள். இப் படியிருக்க ஒருநாள் வர்த்தகர்தன்னுடைய குழந்தைக்குப் பிரீதி விசேஷத்தா லாபரணங்களனேகமாகப் பூட்டினார். பாவுளாசாது அக்குழந்தையை யெடுத்துக்கொண்டு வூருக்குவெளியிற் சென்று அந்த நகைகளணைத்தையுந் தான் கழற்றிக்குழந்தையைக்கொன்று துணியிற்சுற்றி அவ்விடத்திலோர் பள்ளத்திற் புதைத்தார். அத ற்கு சற்றுதூரத்திலோர் குன்றிருந்தது, அதன்மேல் வாசஞ்செய் துக்கொண்டிருந்த ஓர் யதீஸ்வரர் இச்செய்கையைப் பார்த்திருந் தார். ஊருக்குள் சகல ஜனங்களின்முன் பாவுளாசாது வந்த வுடன் குழந்தை யெங்கேயென்று கேட்டார்கள். தனக்குத்தெரி யாதென்று அவர்சொல்ல அனைவருங்கிலேசமுற்று ஒவ்வொரு வீட்டையுந் தேடினார்கள் தாயாராக்கிரந்தத்துடனழுதுகொண் டிருக்கச் சகல ஜனங்களும் பாவுளாசாதுவைக் குழந்தையைக் குறித்துக்கேட்கக் குழந்தையை கொன்றே னென்று சொல்ல, மஹாஜனர் சாதுபுருஷனவிதவாகச் செய்யானென்றார். அரசன்

இதைக்கேட்டு நகரத்தில் நான்குபக்கங்களிலுங் குழந்தையைக்கொன்றவன் யாரென்று பறையடிக்கச்செய்ய மேல்சொன்ன யதீஸ்வரர் அரசன் முன்வந்து பாவுளாசாது அப்பிள்ளையைக் கொன்றாரென்றும் அக்குழந்தையைப் புதைத்த விடத்தையும் பிரகடப்படுத்த, தாய் தந்தைகளிருவரு மவ்விடம் வந்து பார்க்குமளவில் பள்ளமிருக்கக்கண்டு மண்ணையெடுத்து பார்க்கும்பொழுது பிள்ளையின் சரீரமும் நகைகளுங்கிடைத்தன பின்பு என்ன செய்வோமென்று உலகத்தாருடனழுதார்கள். அவ்வேளையில் மஹாஜனரிடமரசன்வந்து உன்வீட்டில் வாசமாயிருக்கும் பாவுளாசாது சிசுவைக்கொன்றானென்று சொல்ல மஹாஜனர் அரசனை நோக்கி ஓ ராஜனே பாவுளாசாது மஹாவிரக்தர் அவரப்படிசெய்யார். சஹஜ சத்வகுணத்தையுடையவர். சாந்தியை வகித்தவர் சாதுக்களுடைய மனசு நோவுமானல் ஸ்ரீஹரி சந்தப்த்ராவாரென்று சொல்லி அக்கினி சம்ஸ்காரம் குழந்தைக்குக் கொடுத்து வீட்டிற்குச் சென்றார்.

ஊராரனைவரும் யதீஸ்வரர்மேல் நிந்தைச்சொல்ல மஹாஜனரதைக்கேட்டு நான் செய்த கருமமெனக்குப் பலித்திருக்க யதீஸ்வரர்மேலும் பாவுளாமேலும்நிந்தையையேன்சுமத்துகிறார்கள்? கன்மத்தின் நியதிப்படி ஸ்ரீஹரி சகலஜனங்களையும் நடப்பிக்கிறார்; ஆனதாலனுதாபத்தை யடையவேண்டுவதில்லையென்று தீர்மானித்திருந்தார். இப்படியிருக்க சிலபே ரவ்விடத்திற்சேர்ந்து பாவுளாசாது யெவ்வளவேனும் தயை பாராமல் ஆபரணங்களுக்காக வப்பாலகனைக் கொன்றான். சுகமாகச் சாப்பிடவும், சௌக்கியமாக நித்திரைசெய்யவு மிருந்து தகாதவேலையைச்செய்த பாபியாவானென்று சொன்னார்கள். இதைக்கேட்டு பாவுளா மஹாஜனரை நோக்கி இவ்விடத்தி லென்மேல் நிந்தைவந்தது இனி யிங்கிருக்க மாட்டேனென்றுசொல்ல, வர்த்தக ரவனைநோக்கி வணக்கமுற்று, தயையே உருவமாகவிருக்கு மும்மா லென்பிள்ளை யெப்படி கொல்லப்படுவான். கிரியாகலாபமில்லாத ஜனங்களுட னுமக்கென்ன கவையிருக்கிறது. என்மேற் கிருபாகண்வைத்துச் சேவைகளைக் கைக்கொள்ளவேண்டும். தங்களைப்போன்ற பாகவத ஜனங்களுடைய திருவடிகள் எங்களையொத்த ஏழைகளுக்கு உண்மையை யடைய யுபாயமா யிருக்கும். என்னுடைய விண்ணப்பமொன்றிருக்கிறது அதை உமக்குத் தெரியப்படுத்துகிறேன், அதனை

அங்கிகரித்தருளவேண்டும். அதாவது என்னுடைய கன்னிகையை உமக்கு விவாஹஞ்செய்து கொடுக்கிறேன், அதனு லெனக்கு நன்மையுண்டாமென்று பிராம்மண ஜனங்களை யழைத்து லக்கின நிச்சயஞ்செய்து விவாஹ பத்திரங்களை யனைவருக்கு மெழுதி விவாஹத்திற்கு வேண்டிய பதார்த்தங்க ளனைத்தையும் விசேஷமாகச் சேகரப்படுத்தினுன். இதைக்கேட்டு லோகத்தாரனைவரு மாச்சரியப்படத் தொடங்கினுர்கள். பாவுளாசாதுவும் வீணில் நிந்திக்கப்பட்டா ரென்று சொல்லிக்கொண் டிருந்தார்கள்.

பகவானுன பாண்டுரெங்கர் மஹாராஜனரை இவ்விதமாகப் பரிக்ஷித்துப்பார்த்து மோஹமடையாதவரென்று அவருடைய ஆசாரியர் சொப்பனத்திற் சென்று உனது சிஷ்யனுன மஹாராஜனன் தனது பாலகனுக் கெந்தவிடத்தி லக்கினி ஸம்ஸ்காரஞ் செய்தானே அந்தயிடத்தி லென்னுடைய சஞ்சீவன நாமத்தை நீ சொல்லுவையாயின் மிருத்துவடைந்த வப்பாலகன் திரும்பி வருவான் மிகுதியான பிரேமை யுண்டாகுமென்று ஹிதவசனங்களைச் சொல்லி மறைந்தார். தேவகுருவென்று பெயர்வகித்த இவ்வாசாரியரும் மஹாஜனரிடம் வந்து பிரியத்துட னவரைநோக்கி சொப்பனத்திற் முன்கண்ட சங்கதியைச் சொன்னுர். தானெண்ணும லிருக்கத் தனக்குத்தானே வந்த பகவத்கருணையை மஹாஜனர் கண்டு ஆசாரியர் சொற்படி அனைவரும் மயானக்கரையிற் சென்றுநிற்க ஆசாரியரா சைக ளனைத்தையு மொழித்து அதிகமானப் பிரீதியுடன் ஹரி! இருஷ்ணு! முகுந்தா! கேசவா! மாதவா! கோவிந்தா! நீரஜநாபா! நீலமேகசியாமா! வாசுதேவா! நாராயணு! வாரும் கருணைபாரும், பக்தவச்சலரே! விசுவம்பரரே! பத்மநாபரே! ஸ்ரீரங்கநாதரே! சீக்கிரத்தில் வாரும், விஸ்வமனைத்து நிறைந்த விஷ்ணுமூர்த்தியும் ஜகத்குருவும் நீரேயாவீர். விட்டலமூர்த்தி! வீரராகவா! நீர் கிருபைசெய்து குழந்தையைக்காட்டி இரக்ஷித்தருளுமென்று தாளவீணை மிருதங்கங் களுடன்சுஸ்வரமாக அவ்விடத்திற் பாடிக்கொண்டும் நடனஞ்செய்துக்கொண்டும் ஆர்த்தியுடனிருக்க, சகலாபரணங்களையுந் தரித்து அப்பாலக னவ்விடமாடிக்கொண் டிருக்கக் கண்டார்கள். அவ்வேளையில் பக்தாக ளனைவருங் கூடி ஜய ஜப சப்தங்களைச்செய்து ஹரி நாமத்தை விசேஷமாகக்கொண் டாடி பகவத்பஜனையைச் செய்துக்கொண்டு குழந்தையுடன் விட்

டிற் சேர்ந்தார்கள். பாவுளாசாது மறைந்தருளினர். அன்ந்தர மவ்வூரிலுள்ள ஜனங்களனைவரும் சாக்ஷாத் பகவானே அவ்வி தமாகவந்து மஹாராஜனரை பரிக்ஷித்தா ரென்று சொன்னர்கள். அவரும் சாதுசேவா தற்பரராகி சகலருங் கொண்டாட காலங் கழித்தார்.

---

## திரிலோசனதாசர் சரித்திரம்.

ஸ்ரீஹரிபக்தர்களிற் சிரோமணியாகி திரிலோசனதாசரென் பவ ரிருந்தார். அவர் மோஹ மமதைகளை விட்டவரும் முகுந்த சேவாதற்பரரும் வைராக்கியத்தோடு தினமும் பஜனை செய்பவ ரும், சகலரிடத்தும் அனுரக்தியுடன் சினேஹபாவம் வைப்பவரும், தயை, சாந்தி, க்ஷமையுடையவரும், எம்பெருமானுக்குப் பிரிய பக்தர்களைப் பூஜைசெய்பவரும் சகல பூதங்களிடத்தும் பிரீதி செ ய்பவருமா யிருந்தார். இவரைப் பரிக்ஷிக்கும்பொருட்டு சாக்ஷாத் வைகுண்டநாத ரெழுந்தருளி தரித்திரனைப்போல வேஷத்தைத் தரித்து ஓர் கறுப்புக்கம்பளியைப் போர்த்துக்கொண்டு திரிலோ சனதாசரை நோக்கி ராம்ராம் சீதாராமென்று தெண்டஞ் சமர்ப் பித்துநிற்க அவரைக் கிட்டவரச்சொல்லி நீயார்? இவ்விடமேன் வந்தாய்? பெயரென்ன? ஜாதியென்ன? வென்று திரிலோசன தாசர்கேட்க, பகவான் சொல்லுவார். நான் ஜாதிகுலமில்லாதவன், என்னுடைய ஜாதி விஜாதியமாக யிருக்கும், தாய்தந்தைகளை நா னறிந்திலன். உலகத்தி லெவ்விடத்து மிருப்பேன். சத்பாவ மும், பக்தியு மெவ்விட முண்டோ அவ்விடத்திற்கு நானேடிச் செல்லுவேன். என்னைபிர்த்தியாயென்று சகலரு மழைப்பார்கள். பதினன்குவித்தைகளு மென்னிடம் பூரணமாக விருக்கின்றன. எவ்வேலையைச் சொன்னலு மதைவிடாமற் செய்வேன். உழுவ தும் விரையை நடுவதுவும் ஆகிய தொழிலை நானறிவேன். எந்த ருதுக்களிலும் வேகமாகப் பயிரை விளையச்செய்வேன். சமையற் பாத்திரங்களைத் துலக்கி வஸ்திரங்களைச் சுத்தமாகத் துவைத்து வைப்பேன், தையல்வேலையு மறிவேன், பெருத்தசாஸ்திரங்களையு மறிவேன், சங்கீதத்தைப் பிறருக்குக் கற்றுக்கொடுக்க வல்லமை யுடையேன் சாஹித்ய மப்படியே அறிவேன். நடனஞ் செய் வேன். புராணங்களையுஞ்சொல்லுவேன். கொடுக்கல் வாங்கல் வவி

ஹாரங்களைச்செய்வேன், தூரச் சங்கதியைத் தீவிரத்திற் கொண்டு வருவேன், நான் நாவித வேலையொருவனுக்குச் செய்தால் நவமன் மதரூபத்தை யடைவான், யுத்தத்தில் (ரணாரங்கவித்தையில்) என க்கு விசேஷ சாமர்த்தியமுண்டு, இச்சித்த வஸ்துவைக் குறைவின் றிக் கொடுக்கக்கூடிய வனுவேன், சொல்லும் வேலை யனைத்தை யுஞ் செம்மையாகச் செய்வேன் இதிற்சமுசயமில்லை; ஆனுலொ ருகுறைவு என்னுடைய குணங்களிலுண்டு, அதென்னவென்ருல், அபரிமிதாமன வன்னபக்ஷணை அனுதினமுஞ் செய்வேன். எப் போது எனக்கு அன்னமிட உன்மனையாள் வெறுப்படைவளோ அப்பொழுதே போய்விடுவேன். இது நிஜமென்று பெருமாள் சொல்லத் திரிலோசனதாசர் மிகுதியாகச் சந்தோஷித்து தெய்வ யோகத்தா லிவ்வண்ணமான புருஷன் கிடைத்தானென்று நினைத்து வேலையில் வைத்து, மனையாளை கூப்பிட்டு பிர்த்தியாயெனு மிப்புரு ஷன் பரதேசியாய் வந்தான், பெருத்த குணங்களை யுடையவனுக விருக்கிறுன், அருமையான காரியங்களை ஒரு கணத்திலேயே முடிக்கவல்லவன், சம்பளமின்றிச் சாப்பாட்டுக்கே வேலைகளைச் செய்வான், பிரியத்துடனிவனுக்கு வயிறு நிறைய வன்னத்தை அளிக் கக்கடவை, பசியுடனவனை வைக்கவேண்டாம், வீட்டு வேலைக ளனைத்தையும் வெறுப்பின்றி செய்வான், எப்பொழுது மவனு க்குத் திருப்திசெய்யக் கடவாயென்று சொல்ல, அவள் பதிவசனப் படி சமையற்செய்து, ஓ பிர்த்திபா! யென்றவனை யழைத்து இலையிற் பதார்த்தங்களை வட்டிக்க, அவைகளைப் பார்த்து பக்தஜனங்களு டையப் பிரீதியையுங் கண்டு மிகுந்த பசியை யுடையவரைப்போல் தோற்றி கவளகவளமாகப் பக்ஷணைசெய்து வந்தார். எவருடைய சஹவாசத்தை ஸ்ரீசாம்பமூர்த்தியும் சதுர்முகனு மபேக்ஷிப்பார்க ளோ; எவனுடைய பிராப்தி நிமித்தம் யோகிகள் வஜ்ராசனங்க ளில் நிர்ப்பரோ அந்த விபுவான சர்வேஸ்வரன் பக்தன் வீட்டி னூழியக்காரனுக வமைந்திருந்தார். இதனுற்றன்னுடைய சௌ லப்பியத்தைத் தனது பக்தரிடங் காண்பித்தார்.

அந்த இல்லாள் ஒருபானை நிறையவன்னத்தை வடித்திருந் தாள். அதையனைத்தையும்வட்டித்தாள், அவரதையாவும்பக்ஷணை செய்ய, வம்மாது குண்டிதமனதுடையவளாய் படி யன்னத்திற்கு குறைவின்றி பாகஞ்செய்தேனே! யென்று பாயசான்னமும் பணி

யாரங்களும் வட்டித்தாள், பக்ஷியத்தையும் பரிமாறினன். அவை யனைத்தையும் பக்ஷித்துச் சங்கோஷித்து அன்ன மின்னுங்கொண்டு வாவென்று கேட்க, அவள் வெட்கமுற்று இவனுக் கெதைக் கொண்டுவந்து வைப்பேன்? வெறும்பானையாயிற்றே! உறியிற் சர்க்கரைபானை வைத்திருந்தது, அந்த சர்க்கரையுங் கொண்டுவந்து வட்டிக்க, அதனையும் பக்ஷித்து அன்னத்தை இன்னமுங் கொண்டுவரச் சொன்னர். அதற்கு அம்மாது பச்சைக்கடலையும் வெல்லத்தையுங் கொண்டுவந்து வைக்க அவைகளையும் பக்ஷித்து இன்னும் அன்னமிடச்சொல்லிக் கேட்க இவரை அவள் இராக்ஷசனென்றெண்ணி கம்பும் துவரையுங் கொண்டுவந்து வைத்தனள் அவைகளையும் பக்ஷித்து ஜலத்தைக் கேட்டார். உடனே ஜலங்கொடுக்க அவரதைக் குடித்தபிறகு அவரைநோக்கி ஓ பிர்த்தியா! நம்முடைய வயலிற்பயிரிட்டு பத்து நிமிஷத்திற்றானியத்தை சேர்செய்துக் கொண்டுவரச் சொல்லிக் கட்டளையிட்டாள். அப்படியே செய்வேனென்று, பிர்த்தியா அம்மாதைநோக்கி அன்னத்தை சமையற்செய்துவைக்கக்கடவாயென்று சொல்லி எஜமானனுடைய வயலிற்சென்று நின்ற மாத்திரத்தில் உழுது விதைத்து தானியம் அங்குரித்துப் பயிராகி அறுவடையாயிற்று. அதனை திரிலோசன தாசருடைய வீட்டிற்குக்கொண்டுவந்தார். அவ்வூரார் ஜாலவித்தையால் பயிறிட்டாரென்றும் இதன் விவரமறியப்படவில்லை யென்றுஞ் சொல்லி ஆச்சரியமுற்றிருந்தார்கள். பிர்த்தியா தான்னியத்தை வீட்டிற் சேர்த்து தாயே! பசியாயிற்று போசிப்புக்குக் கொடுவென்றூர். அதற்கு முன்பே ஓர் மணங்கு தானியத்தை அம்மாது சமைத்துவைத்திருந்தாள். அவரைப் பார்த்தவுடன் பக்ஷணை செய்யலாமென்று அம்மணங்கு சாதத்தையும் வட்டிக்க அவரத்தனையுஞ் சாப்பிட்டுத் திருப்தியடைந்து இன்று பக்ஷணை மதுரமாயிருந்ததென்றும் வயிறு நிறைந்ததென்றுஞ் சொல்லிச் சிரித்து வுன்னைப் போன்ற ஸ்திரீயை நான் பார்த்ததில்லையென்று சொன்னர்.

பிர்த்தியா பயிரிட்டு தானியத்தைகொண்டுவந்த சங்கதியைச் திரிலோசன தாசர் கேள்வியுற்று ஆச்சரிய மடைந்திருந்தார். அவர் மனையாளும் பிர்த்தியாவுக்குச் சர்வகாலமு சமயற்செய்யவே வேலையாகி தான் பிறாகங்களைப் பார்க்காமல் அவர் சேவைகளி

லிருந்து அவருக்குச் சமானமனிதர் உலகிலெங்கு மில்லையென்று சொல்லிக் கொண்டிருந்தாள். தன்வீடு பழயகட்டடமானபடியால் ஒருநாள் விழுந்துபோயிற்று. அதனைச் செம்மைப் படுத்தவேண்டு மென்று அவரிடஞ்சொல்ல, அவரும் அவசியமென்று வுடனே ஆரண்ணியத்திற்குச்சென்று கழிகளை வேண்டியவண்ணங் கொண்டு வந்து ஒருவர் சகாயமின்றி வீட்டைச்சீர்செய்து விட்டார். பின்பு திரிலோசனதாசர்மனைவி பிர்த்தியாவைப்பார்த்து காட்டிற்குச் சென்று பசுக்களுக்குமேச்சலைக் கொண்டுவந்து ரிஷபங்களையும் குதிரைகளையுங் கழுவிச் சாலையிற்கட்ட வேண்டுமென்றும் இவ்வேலைகளைச் செய்தபிறகு தான் அன்னமிடப் படுமென்றுஞ் சொல்ல அவர் சொன்னவேலையைச் செய்ய அவ்விடத்தை விட்டுப்போனார். இவ்வேலைகளைச்செய்ய வெகுநேரம் பிடிக்குமல்லவா? என்று அம்மாது மெதுவாகச் சமையல்செய்ய வாரம்பித்தாள். இதற்குள் பிர்த்தியா காட்டிற்குச்சென்று பெரிய சுமையான புல்லைக்கொண்டுவந்து ரிஷபங்களையுங் குதிரைகளையுங்கழுவி சாலையிற்கட்டி மீண்டுவந்து தாயே! பசியாயிருக்கிறது அன்ன மளிக்கக் கடவாயென்றார். இதைக் கேட்டு அம்மாது என்னசெய்வேன். இதோ பிரசாதங்கொண்டுவந்தேனென்று ரொட்டிகளை விசேஷமாகச் சுட்டு இலையில் வட்டித்து பக்ஷிக்கவாவென்றழைத்தாள். அவரும் சொஸ்தமாகப் பக்ஷித்து, பசியடங்கவில்லை, இன்னமு மன்னம் வேண்டுமென்று கேட்க, அம்மாது, பின்னுமுனக் கன்னமிடுகிறேன் நம்முடைய பந்துக்கள் தூரதேசத்திலிருக்கிறார்கள். அவர்களுடைய க்ஷேமத்தை விசாரித்துக்கொண்டுவந்து சொல்லக்கடவா யென்றாள். அவர் மாறுத்தரஞ் சொல்லாமலும் பெருரையுங் கேட்காமல் அந்தப் பந்துக்களிருக்கும் ஊருக்குச்சென்று ஒருநாழிகைக்குள் ளவ்விடத்திலிருந்து கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்தார். மற்றவர்களுக் கவ்வூருக்குபபோக மாசப்பிரயாணமாக விருக்கும், இவ்வள்வு சீக்கிரத்தி லவ்விடத்திலுள்ள பந்துக்களின் க்ஷேம சமாசாரத்தை எப்படி தெரிந்துக்கொண்டு வந்தாரென்று ஆச்சரியப்பட்டுக்கொண்டிருக்கு மம்மாதை நோக்கி சீக்கிரமன்னமிடச் சொல்லிக்கேட்டார். அவள்மனதி லவஸ்தையடைந்து செய்வதென்னவென்று வெறுத்துக்கொண்டு வீட்டிலிருந்த பதார்த்தங்களுட னன்னத்தை வட்டித்தாள். அத்தருணத்தி லவளுடைய சினேகிதிவந்து உன்னை

நான் பார்க்கவந்தேன் சுகமாயிருந்த உன்னுடம் பிளைத்திருக்கிறதே! மலினவஸ்திரத்தை உடுத்திருக்கின்றனையே! உனக்கென்ன குறை? ஸ்நானஞ்செய்து தலைமயிர் வாராம லிருப்பானேன்? உன் மனதி லென்னசிந்தனையோ சொல்லென்று அவள் கேட்க, பக்தர் மனைவி, அம்மா! என்னசெய்வேன், நான் ஒருத்தியாயிருந்து சாது சேவைகளைச்செய்வது கஷ்டமென்று புருஷன் ஒரு சேவகனை வைத்தார். அந்தமனிதன் செய்யும் வேலைகளோ அசாத்திய மானவை, வயிற்று சோற்றிற்கே நம்வீட்டில் வேலைசெய்ய வுடன்பட்டான். ஆனாலவன் அபரிமிதமாகப் போஜனத்தைச் சாப்பிடுகிறான். அவனுக்காக மாவரைத்தலாலும் சமையற் செய்வதாலும் மிகுதியான வேலையுண்டாயிற்று. நூறுபேர் பக்ஷணைசெய்யு மன்னத்தை யவனொருவனே பக்ஷிக்கிறான். மனிதருக்குள் ளிப்படிப் புசிப்பவரை நான் பார்த்ததில்லை. அவன் போஜனத்திற்குட்கார்ந்தால் எனக்கு திகிலுண்டாகிறது. பகலுமிரவுங் கஷ்டப்படுவதால் நித்திரை கிடையாது. சுகமொன்று மில்லாமையால் சொகுசா யிருந்தவுடம்பு க்ஷீணித்துப்போயிற்று. சொல்லாத வார்த்தைகளைச் சேவகனுக்குச் சொன்னு லவன்போய்விடுவான். இது கணவருக்குத் தெரிந்தால் கோபிப்பார். அவன் வீட்டிற்கு வந்ததுமுத லன்னபானங்களை யறியேன், விடியற்காலத்தில் முகங் கழுவப் பொழுதிருக்கிறதில்லை எண்ணெயைத் தேய்த்துத் தலை வாருவதென்ன லெப்படியாகும்? என்றுசொல்ல இவ்வார்த்தைகளை பிர்த்தியா வாசற்படியில் நின்று கேட்டிருந்து திரிலோசனர் மனைவி கஷ்டத்தை யடைந்து தீனதசையைக் கொண்டாளென்று விலாச சேஷ்டைகளால் மறைந்தார்.

சற்றுநேரஞ் சென்றபின் திரிலோசனதாசர் சேவகரை யழைத்தார். அவ்விடத்தி லகப்படாம லிருந்ததால் மனைவியார் அவரைத் தேடவாரம்பித்தாள். அங்குமிங்குந் தேடியும் அகப்படாதபடியால் எப்பொழுது மிவ்விடத்தே யிருப்பவ னெங்கு போனானோ தெரியவில்லை யென்றாள். திரிலோசனதாசர் தேடிப் பார்த்தும் காணாமல் கிலேசமுற்று சேவகன்செய்த செய்கைகளைச் சிந்திக்கச் சிந்திக்க அவர் சேஷசயனரே என்றறிந்தனர். தெய்வ மாயைத் தன்னை [illegible]றென்று தரிக்கமாட்டாம லழத்தொடங்கினார். பின்பு மனையாளைப்பார்த்து நீ தகாதவார்த்தைகளைச் சொ

ன்னுதா லவர் போய்விட்டாரென்று சொல்ல மனையாள் புருஷனை நோக்கி பிராண நாதரே! எனது சினேகிதியும் நானும் பேசிக் கொண் டிருந்தோம். அவ்வார்த்தைகளைக் கேட்டிருந்து பிர்த்தியா போய்விட்டதுபோல் காண்கிறதென்று அத்யாதரணையுடன்மூதுக்கொண்டு ஓ பிர்த்தியா! வந்து பக்ஷித்துப்போகக் கடவையென்று எத்தனைபரியாயங் கூப்பிட்டாலும் வாராதிருக்கப் பர்த்தா மனைவியைப்பார்த்து நிந்திதவாக்கியங்களை நீ சொன்னபடியா லபராத முனக்கு நேர்ந்ததென்று பூமிமேல் விழுந்து ஹரி! கிருஷ்ண! கோவிந்தா! யென்று சொல்லி கிருபையுடன் நீ வாராவிடில் நான் தேஹத்தியாகஞ்செய்வேன். ஓ அனந்தசயனரே! மிதமிஞ்சின சேவைகளைச் சேவக ரூபத்தாற் செய்தீர். ஓ கிருபாமூர்த்தி! உமது திருவடிக் கமலங்களைப் பிடிக்கச்செய்யாமற் போனீர். நீரிப்பொழுது பிரசன்னராகாவிடிற் பிராணன் விட்டுப்போமென்று ஆர்த்தியுடன் புலம்பினுர். அப்பொழுது சர்வேஸ்வரன் ஸ்ரீராமரூபத்தைக் காண்பித் தருளினுர். திரிலோசனதாச ரனேகவிதங்களாக ஸ்தோத்திரஞ் செய்து பெருமாளை நோக்கி ஸ்வாமி! தேவரீரைப் பிர்த்தியாவென்று யார் பெயரிட்டழைத்தனரென்று கேட்க அதற்கு ஸ்ரீஹரி சொல்லுவார். பக்தாள் நிமித்தம் நான் நாமரூபங்களை கைக்கொள்ளுகிறேன். அவர்களுக்காகவே லீலைகளைச் செய்வேனென்று சொல்லி மறைந்தார். பின்பு திரிலோசனதாசர் திருப்தியுடன் பகவத்பஜனையிலிருந்து காலயாபனஞ் செய்துவந்தார்.

---

## அவந்தி துளசிதாசர் சரித்திரம்.

அவந்தி (உஜ்ஜயனீ) நகரத்தில் துளசிதாசரென்றோர் சத்புருஷரிருந்தார் அவர் வெகுஜன சேவ்யராகி ஏகாந்தத்தில் பகவத்பஜனைசெய்தும் அயாசிதமாக யாவரென்ன கொடுக்கிறார்களோ அதனுற் ஜீவித்தும் கிரியாசூன்னியராகி அமங்களனைப் போலக் கிரீடித்தும் ஜாதிநீதிகளைப் பாராமற் சஞ்சரித்தும், தனக்குத் தேஹமுண்டோ வில்லையோ என்று தோன்றுவதுபோலு மிருப்பர். மந்திரோபாசனை சலனமாயிற்றென்று சிலர் சொல்லுவர். எந்திரதந்திரங்க ளேதோ செய்துத் தேகத்தைத் தபிக்கச் செய்கிறுரென்று சொல்லுவார். யாரெப்படி சொன்னுலும் பிசாச விருத்தியை ஜனங்களுக்குக் காண்பித்து மிகுந்த பிர்தியுட

ன் ஸ்ரீஹரியைச் சிந்தித்திருப்பர். பூரணசாந்தியை வஹித்துச் சகலமும் ஸ்ரீஹரிமயமென்று சதானந்தபரிதரா யிருப்பர்.

அந்தப்பட்டணத்திலோர் வர்த்தகன் வியாபகனுகித் தாரா புத்திரர்களுடன் மிகுந்த தனசம்பத்துடனும் பலபேர்களால் மன்னிக்கப்பட்டும் மேன்மையாக வாழ்ந்திருந்தான். அவனுக்கோர் கன்னிகை வெகு ரூபவதியாகியும் லாவண்ணிய முடையவளாகியு மிருந்தாள். அவ்வூர்ஜனங்க ளனைவரு மக்கன்னிகைபோன்ற ரூபவதியை வேறெங்குங் கண்டதில்லை யென்பார்கள். நாளுக்குநாளவள் பெரியவளாகிவளர தாயாரானவள் தன் கணவனை நோக்கிப் பிராணநாதரே! நமது குமாரத்திக்குத் தகுந்த குணசீலனும் சௌந்தரிய முடைய வோர் வரனைப் பார்க்கவேண்டு மென்றாள். இதைக் கேட்டு வர்த்தகன் தன்னுடைய குமாரத்தி ரூபத்தை யோர்படத்தி லெழுதும்படிச்செய்து தனது இஷ்டமித்திரர்களை யழைத்து அப்படத்தை அவர்களிடங் கொடுத்துத் தனது புத்திரிக்குத் தகுதியான ஓர் பிள்ளையை அன்னியதேசங்களுக்குப்போய் விசாரித்து நிச்சயித்துவரும்படி வேண்டிய தனத்தையுங் குதிரை வண்டி முதலானவைகளையுங் கொடுத் தனுப்பினான். அவர்கள் தேசங்கள்தோறும் சென்று ஆறுமாதம்வரைக்கும்விசாரணை செய்துபார்த்தும் புத்திரிக்குத்தகுந்த கணவ னகப்படாமையால் புரான்பூருக்குப் போனார்கள். அவ்விடத்திற் கனவான்களான வர்த்தகர்களைக்கண்டுச் சங்கதியைத் தெரிவித்துப் படத்தைக் காண்பித்து இப்பெண்ணுக்குச் சரியான பர்த்தா வேண்டுமென்று சொன்னார்கள். தனவானான ஓர் வர்த்தகன் அப்படத்தைப்பார்த்து தன்னுடைய குமாரனுக்குத் தகுந்த பெண்ணென்று தனக்குள் ளெண்ணிப் பந்துக்களையும், இஷ்டமித்திரர்களையு மழைத்து எனக் கிருப்பவர்கள் பிள்ளையொன்று பெண்ணொன்று அவந்திபுரத்து கன்னிகை என் குமாரனுக்குத் தகுதியானவளாக விருக்கிறாள். ஆனாலென் பிள்ளைக் கொருகண் குருடாயிருப்பதால் அந்தப் பெண்ணைக்கேட்டு வாங்குவதற் கென்ன வுபாயமென்று விசாரிக்க அவர்க ளவ்வர்த்தகனை நோக்கி யுன் புத்திரிக்குப் புருஷ வேஷத்தைப்போட்டுப் பெண்ணைக் கொடுக்கச்சொல்லிக் கேட்டா லவர்கள் கொடுத்துவிடுவார்கள். விவாஹ சமயத்தில் நாம் பிள்ளையைப் பந்தலிலுட்காரவைத்து அகடவிகடஞ் செய்து கன்னிகையை கைக்கொள்

ளலாமென்று ஆலோசனையைச் சொன்னார்கள். அதற்கு சம்மதித்து அவந்திபுரவாசிகளை நோக்கி என் குமாரனப் புத்திரிக்குத் தகுந்தபுருஷனு யிருப்பானென்று சொல்ல அதற்கவர்க ளப்பிள்ளையைக் காண்பிக்கவேண்டுமென்று கேட்டதின்மே லப்பிள்ளை வீட்டார் தங்கள் பெண்ணுக்குப் புருஷவேஷத்தைப் போட்டு வேஷதாரியைக் காண்பிக்க அவர்கள் பிள்ளையென்றே விசுவசித்துப் பகவத் கிருபையா லிவ்வண்ணமான குமாரனை யெவள் பெற்றுளோவென்றுசொல்லி ரூபகுணங்கள் செம்மையா யிருந்தமையால் பெண்ணைக் கொடுப்பது நலமென்றெண்ணிமுகுர்த்த நிச்சயார்த்தஞ் செய்து தேங்காய்களைப் பங்கிட்டுக்கொண்டார்கள்.

அனந்தரம் படத்தை கைகொண்டு சென்றவர்கள் அவந்திநகரத்திற்கு சந்தோஷத்துடன் திரும்பிவந்து வர்த்தகனை நோக்கிப் பெருமாள் கிருபையால்பிள்ளை கிடைத்தான். சுலக்ஷணங்களுடையவன். சம்பத்துவிசேஷமா யிருக்கும் வர்த்தகனுடைய புத்திரன். அவனுடைய விலக்ஷணமான லக்ஷணங்களைப்பார்த்து முகுர்த்த நிச்சயார்த்தஞ் செய்து பந்துக்களுக்கெல்லாந் தாம்பூலங்களைப் பங்கிட்டு வந்தோமென்றார்கள். இதைக்கேட்டுப் பெண்ணின் தாய்தந்தைக ளிருவரும் பிரபல சந்தோஷத்தை யடைந்திருந்தார்கள், விவாஹம் நடப்பது பெண்வீட்டிலாதலால் அவந்திநகரார் விசேஷ சாமக்கிரியைச் சேகரப்படுத்தி அலங்காரங்களும் வஸ்திரங்களும் அமிதமாகவாங்கிச் சித்தப் படுத்தினர்கள்.

பிள்ளைவீட்டுக்காரன் மனதிற் சிந்தையுடையவனுகி லக்கின காலத்திலென்ன வனர்த்தமாகுமோவென் றேங்கியிருக்க அவனைச் சேர்ந்த மூர்க்கர்க ளனைவரும் அச்சமயத்திற் பார்ப்போமென்று ஹிதத்தைச் சொன்னர்கள். விவாஹத்திற்காக வேண்டிய பதார்த்தங்களைக் கைக்கொண்டு யானைகுதிரை பல்லக்கு இரதங்கள் வண்டிகள் இவையனைத்துங் கைக்கொண்டு அநேகஜனங்களுடன் விவாகத்திற்குப் பிரயாணப்பட்டு அவந்திநகர சமீபத்தில் வருமளவில் பெண்வீட்டார் அனேகவித வாத்திய கோஷங்கள் முழங்க எதிர்கொள்ளச் சென்றனர். தனுதிபரான வவ்விருவரும் ஒருவரையொருவர் நமஸ்கரித்தார்கள். ஊரா ரனைவரும் கலியாணப்பிள்ளையைப்பார்த்து கன்னிகைக்குத்தகுந்த குமாரனுவான். அவள் பாக்கியவதி யானபடியா லிவ்வண்ணமான பிள்ளை யகப்பட்டான்.

கண்திருஷ்டி யுண்டாமென்று சொல்லிக்கொண்டும் இது விசேஷமென்றும் அனைவரும் அவந்திபுரியைச் சேர்ந்தார்கள்.

முகூர்த்த தினத்தில் தேவப்பிரதிஷ்டை செய்து நலங்கிட்டு விசேஷமாக பிராம்மணர்களுக்குப் பக்ஷணையிட்டு சாயங்காலத்தில் கலியாணப்பிள்ளையை வரவழைத்து புண்ணியாஹவாசனஞ் செய்வித்துப் வெகுவிதமான வாத்திய கோஷங்கள் முழங்க விவாஹத்தை நடப்பிக்கத் தொடங்கினார்கள். அச்சமயத்திற் பிள்ளை வீட்டார், ஒற்றைக்கண்ணனை அவ்விடத்தில் நிறுத்துவதற்கு அனேகவித வுபாயங்கள் வஞ்சனையுடன் செய்ய எத்தனித்து பிரயோஜனப்படாம லிருந்தன. கன்னிகையின் பந்துக்கள் கண்ணுற்று வெகு ஜாக்கிரதையாயிருந்தார்கள். அனேகஜனங்களு மவ்விடம்வந்து சபைகூடி யிருந்தார்கள். வாத்தியங்கள் விசேஷமாக முழங்க புத்திரிக்குபதிலாகப் பிள்ளையை மாறுபாடு செய்துவைக்கச் சரிப்படாமல் பிள்ளைவீட்டுக்காரர் அதிகசிந்தையடைந்து மூர்க்கர்களுடைய வார்த்தையைக் கேட்டபடியால் மிகுந்த கெடுதலைக்கு இடமாயிற்றென்றார்கள். முகூர்த்த வேளையில் மங்களசூத்திரத்தை ஒரு ஸ்திரீ மற்றொருஸ்திரீயின் கழுத்திற் கட்டினாள். பின்பு மூன்றுநாள் மிகுதியாக உச்சவம் நடந்தது. நான்காவது தினத்தில் கலியாணப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் ஸ்நானஞ்செய்துவைக்கும் பொருட்டு கன்னியின் பந்துக்களனைவருங்கூடி கலியாணப் பிள்ளையையழைக்கப் பிள்ளையின் பந்துக்கள் பிள்ளைக்குக் காய்ச்சலாயிருக்கிறதென்றும் ஸ்நானத்திற்குச் சரிப்படாதென் றுஞ்சொன்னார்கள். பெண் வீட்டார் இதைக் கேட்காமல் பலாத்காரமாக ஸ்நானஞ் செய்துவைக்க அழைத்துக்கொண்டு போகப் பிள்ளைவீட்டார் மகத்தான பயத்தை யடைந்து அவ்விடத்திற்றங்காமல் வஸ்துக்களனைத்தையு மவ்விடத்தே விட்டுப் பிழைத்தால் போருமென்று ஓடிப் போனார்கள்.

பெண்வீட்டார் கலியாணப்பிள்ளைக்கு ஸ்நானஞ்செய்து வைக்குஞ் சமயத்தில் பெண்ணென்று தெரியவந்தது. கலியாணப்பெண்ணின் தாயாரிதைக்கண்டு வெகுவாகக் கலக்கமுற்று அழத்தொடங்கினாள். சிலர் வர்த்தகனிடஞ்சென்று இச்சங்கதியைச்சொல்ல அவன்வந்துபார்க்குமு[illegible]ல் குடிலரான சம்பந்திகளைக்கொல்லுங்களென்று புரான் பூர்ஜனங்கள் [illegible]டி திமிர் சென்று பார்க்குமளவில்

குதிரை யானை முதலானவைகளிருக்க ஒருமனிதனுவது இல்லாதிருந்ததைக் கண்டு கோபமுற்றுப் பிள்ளைவேஷம் பூண்டிருந்த பெண்ணை அடிக்கத்தொடங்கி சொல்லாத வார்த்தைகளைச் சொல்லிப் பெண்ணைக் கழுதையின் மீதுட்காரவைத்து சேவகர்களைக் கொண்டு நாலு வீதியுஞ் சுற்றச்செய்ய, புரஜனங்களனைவரும் மண்ணுஞ் சாணியையுங் கொண்டு அடித்தார்கள். இந்த விபரீத செய்கைகளைக் கண்டு அட்டஹாசத்துடன் அப்பெண் அழுதுக்கொண்டு யென்மேல் ஸ்ரீஹரி கோபித்துக் கொண்டார். எனக்காரும் பிடிப்பில்லை, ஓகிருஷ்ணு! கிருபாளோ! பாண்டுரங்கா! பரமபுருஷா! தாமோதரா! தானவாந்தகா! வேஷம் போட்ட துர்ப்புத்திகளென்னை விட்டுப்போனுர்கள். வீட்டில் நான் துக்கமென்பதறியாதிருந்தேனே! தாய் தந்தைகளைவிட எனக்கு வேறுபோஷணை யில்லாதிருந்தேனே! அவர்களிவ்விதமாக வென்னைச் சங்கடத்தில் விட்டு ஓடினுர்களே! சங்கடகாலத்தி லிராமநாதரே சரியான பந்துவாவாரென்று திடசித்த முடையவளாய் வேங்கடரமணரே! தசரதராமரே என்னுடைய துக்கத்தைக்கண்டு சீக்கிரத்தில் வாரும், நீர் தீனஜனங்களுக்குப் பந்துவென்று பெரியோர்கள் தெரிவித்தனர். நானதிதீனதசையை யடைந்தேன், மன்னிக்கக்கடவீர். உம்மை அனுதநாதரென்று அனேக சாதுக்கள் சொல்லி யிருக்கிருர்கள். ஓ ஜனுர்த்தனரே! காலமெனக்குக் கிட்டிற்று திக்கு வேறின்றி நீரே திக்கென்றடைந்தேன். ஆபத்தை நிவர்த்தித்தருளுமென்று சொல்ல அவ்விடத்திலுள்ள ஜனங்கள் பார்த்து சுகுமாரமான யிப்பெண்ணுக்கு சுகங்களனைத்தும் போய்விட்டனவல்லவா! இது விசித்திரகதியாமென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

அவ்வேளையிற் றுளசிதாச ரவ்விடமிருந்தனர், அப்பெண் தொந்தரை யடைந்து அவரை நோக்கி ஹரிதாசரென்றறிந்து கழுதையை விட்டிறங்கி அவரிடஞ்சென்று நமஸ்கரித்து நிற்க, அவர் சங்கதியொன்றையு மறியாமல் "விபத்தின்றி சமுசாரத்திலெப்பொழுதுஞ்சுகித்துவாழ்வா" யென்று சொல்ல அப்பொழுது அப்பெண் தனது சங்கதியை இவருக்கறிவித்தனள். அவாணுதாபத்தை யடைந்து ஸ்ரீஹரியை நினைத்து பதிதபாவனு! விசுவம்பரா பக்தபூஷணு! கோவிந்தா! முகுந்தா! அனுதரான தீனஜனங்

களை நீர் அன்புடன் ரக்ஷிப்பவரன்றோ! சராசரங்களை நீரேசெய்தீர். இப்பொழுது இந்த ஸ்திரீ, புருஷனென்னுங் குறிக்குச் சரிப்படுத்தி அருள்க்கடவீர். உனது பக்தன் வசனங்களை பொய்யாக்காமல் கிருபை செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, அப்பெண், புருஷனுகிக் காணப்பட்டாள். இதைக்கண்டு துளசிதாச ரவனைத் தன் பின்வைத்துக்கொண்டனர். சேவகர்க ளப்பிள்ளையை வரச்சொல்லி யிழுக்க அவர்களைக்கண்டு அவன் பெண்ணுயிராமல் புருஷனுயிருப்பானுகில் பிடிக்கக் கூடாதென்றூர். அப்பொழுது வுடனே வஸ்திரத்தை யவிழ்த்துப் பார்க்குமளவில் புருஷ சின்னங்களிருக்கக்கண்டு வர்த்தகனிடத்திற் சங்கதியைச் சொல்ல அவனுஞ் சரியப்பட்டு மனையாளுடன் வந்து பார்க்குமளவில் ஆண்குறிகளமைந்திருக்கக்கண்டு நமது பெண் புண்ணியசீலையென்று, யானை, குதிரை, இரதங்கள் கால்லாள்கள் முதலானுரைக் கொண்டுவந்து அப்பிள்ளைக்கு அலங்காரங்களைச் செய்துவைத்து அழைத்துபோக யத்தனிக்க அக்குமாரன் துள்சிதாசருக்கு நமஸ்கரித்து விடைபெற்று ஊர்க்கோலத்துடன் மாமனூர் வீட்டைச்சேர்ந்தான். ஓடிப்போன பந்துவர்க்கங்களைத் திரும்பி வர்த்தகனழைத்துக் கலியாண சம்பிரமத்தைத் திரும்பி கொண்டாடத் தொடங்கி முடித்தான். துளசிதாசருடைய ஆசீர்வசனத்தின்படி அக்கலியாணப்பிள்ளைவெகு காலம் வாழ்ந்திருந்தான். உலகத்தார் துளசிதாசரை ஈஸ்வராம்சமென்று சொல்லி அவருடைய மகிமையை அபாரமாகக்கொண்டாடினூர்கள்.

---

## காஞேபாட்டு சரித்திரம்.

கேந்தூரெனுங் கிராமத்தில் காஞேபாட்டென்னும் பிராம்மணர் வாசமாயிருந்தார். அவர் ஸ்ரீஹரிபஜனையை ஸ்திரமாகச் செய்துக்கொண்டு அயாசிதமாகக் கிடைத்ததற்கு அதிக சந்தோஷத்தை யடைந்து தயையும் பொறுமையுமுடையவராகி ஸர்வமும் ஹரிமயமெனும் நினைப்பினுல் ஸர்வதா சந்தோஷத்தை யடைந்திருப்பார். சுசீலையாகியும் பதிவிரதையுமான பாரியை அவருக்கிருந்தாள். சந்ததமுந் தன் புருஷனுடைய சித்தத்தின்படி வீட்டுக்காரியங்களைச் செய்துவருவாள். தம்பதிகளிருவரு மோர்மனதுடையவராகி ஹரி பஜனையைச் செய்துவருவார்கள். சம்பத்தை

யுந் தன்த்தையுங் கோராமல் சத்பாவத்தையடைந்து சிரவணத்தினுல் ஸர்வேஸ்வரனுடைய கீர்த்தியைச் சர்வகாலங்களிலுங் கேட்டு பவநிவர்த்தகமான ஸ்ரீவிஷ்ணு அர்ச்சனையைப் பக்தியுடன் செய்துக்கொண்டு ஹரி நாமத்தை முக்கியமாகப் பஜித்துக்கொண்டு பிரீதியுடனிருந்தார்கள்.

அவ்வூரிலிருந்து மற்றொரு பிராம்மணன் காசீபுரிக்குச் சென்ருன். அவ்விடத்திலவன் கங்கா ஸ்நானஞ்செய்து அவ்வூரைப் பார்க்கும்பொருட்டு சுற்றிலுந் திரிந்துவருங்கால் ஒருவர் ஓரிடத்திற் புராண வியாக்கியானஞ்செய்ய, அதனை வெகுஜனங்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவ்விடத்திலக் கேந்தூர் பிராம்மணனும் போய்க் கேட்கலுற்ருன். புராணிகர் இதிஹாசங்களிற் சொல்லப்பட்ட பகவத்பக்தருடைய மகிமையை விசேஷமாகச் சொல்லிக்கொண்டுவந்தார். கேட்போர் சிலரிதனைக்கேட்டு இந்த காலத்தி லிவ்வண்ணமான புருஷருலகிலிரார். முற்காலங்களிலும் அருமையாயிருந்திருப்பா ரென்ருர்கள். இதைக்கேட்டு கேந்தூர் பிராம்மணனவர்களைநோக்கி எங்கள் தேசத்திலிவ்வண்ணமான புருஷனிருக்கிருர். சகல சற்குணங்களும் பொருந்தினவராகி ஸ்ரீஹரிபஜனையைச் சர்வகாலமுஞ் செய்து கானுபாட்டரெனும் நாம[illegible] பார்வதிரமணனைப்போலப் பிரவர்த்தியுடையவரா[illegible]. இதைக்கேட்டு அவர்கள் சங்கரமூர்த்தி[illegible]ரூபமானமாகச் சொல்லுவது சரியாகுமோ? இது [illegible]பொய்யாகுமென்ன, அந்தப் பிராம்மணனவர்களை நோக்கி கேந்தூர் கிராமத்திற்கு நீங்களேசென்று அந்தப் பிராம்மணச் சிரேஷ்டரைப் பிரத்தியக்ஷமாகப் பார்த்துக் கொள்ளலாமென்ருன். அவ்விடத்திலோர் பண்டிதனவரைக் காணவேண்டுமென்று காசிபுரியைவிட்டு வெகுநாள் வழிநடந்து கேந்தூரெனுங் கிராமத்தைச்சேர்ந்து தன்னுள் எண்ணுவான் சமுசாரத்தை நடப்பித்துக்கொண்டு விரக்தியடைவது எப்படியாகும்? விஷ்ணுபஜனை[illegible]ஹரி எப்படி [illegible]மாவார் என்று சங்கித்து வீதி வீதி[illegible]சுற்றி கானுபாட்டர் வீட்டைச்சேர்ந்தான். அவ்வேளையிலவர் தன் அச்சவை கையிலேந்திப் பிரீதியுடன் முத்தமிட்டுக்கொண்டிருந்தார். இதைக்கண்ட வந்தப்பிராம்மணன் மனதில் விகற்பத்தையடைந்து கானுபாட்டெனும் பிராம்மணர் நீர்தானே

வென்று கேட்டான் அவரதற்காமென்று சொல்லி நமஸ்கரித்து, தீனனுண வென்மேற் கிருபைவைத்துவந்தநீர் யாரோ தெரியச்சொல்லும், எவ்விடத்திலிருந்து ஏன் வந்தீர்? எவ்விடம்போகிறீரென்று கேழ்க்க அந்தப்பிராம்மணன், ஐயா நான் காசியிலிருந்து உம்மைப்பார்க்கவந்தேன். நீர் விரக்தசித்தரென்று உம்முடைய கீர்த்தியை வெகுவாகக்கேட்டேன். மஹா கஷ்டத்துடனிவ்விடத்திற்கு நடந்துவந்தேன், நான்வந்தபின் உம்முடை ஸ்திதியைக் காணுமளவில், நான் வஞ்சிக்கப் பட்டவனைப்போற் காணப்படுகிறேன். நீர் புத்திரர்மேல் மோஹமெனும் மாயையில் ஆழ்ந்தவராயிருக்கிறீர், தாரா புத்திரர் தனம் வீடு முதலானவற்றில் பற்றில்லா திருப்பவனையன்றோ விரக்தனென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இவ்விடத்திலிருந்து யாத்திராபரனுய்வந்த ஒருபிராம்மணன் உம்மை விசேஷமாகத்தோத்திரஞ் செய்தான், அது உண்மையோ யல்லவோ வென்று கண்டறிய வேண்டுமென்று உமது தரிசனத்தை விசுவசித்துவந்தேன். அது வியர்த்தமாயிற்று. கற்பகவிருக்ஷமிருக்கிறதென்று அதின் சாயையினிடஞ் சென்றேன், அது ஓர் வேலஞ்செடியாயிற்றென்று சொல்லக்கேட்டு காஞேபாட்டு தனது இருகரங்களைக்குவித்து இனிய வசனங்களுடன் சொல்லுவார், ஸ்வாமி! தேவரீர் தூரதேசத்திலிருந்து நடந்துவந்தீர், என்ன அவகுணங்களை என்னிடங்கண்டீர்? அதனையெனக்குத் தெரியப்படுத்துவீராயின் அவைதனைவிட்டு உம்முடைய சுகுணத்தை நான்கற்றுக்கொள்ளுகிறேன், நீர் உதாசவிருத்தியை வஹித்திருப்பது உசிதமல்லவென்று அவன் பாதங்களிற் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தார். பரமசாந்தியுடனிப்படிச்செய்யப் பிராம்மண னவரைக்கண்டு குழந்தை மூக்கில் வழியுஞ் சளியைத் துடைத்துமுத்தமிட்டுக்கொள்வது சாதுக்களுடைய விருத்திக்கு ஒவ்வாதது; சகலத்தையும் விடாதிருந்தால் மாயாஜாலம் வேதனையைச் செய்யுமானதால் இதை விடவேண்டுமென்று விளம்பினன்.

இதைக்கேட்டு காஞேபாட்டு அந்த குழந்தையைக் கையிலெடுத்து அவ்விடத்திலிருக்குங் கிணற்றிற் போட்டு நான் மாயாதீதனுனேனென்று கூறி அப்பிராம்மணனை நோக்கி ஸ்வாமி! அடியேன் வீட்டிற் போஜனஞ் செய்யவேண்டும், அது பகவதர்ப்பணமாமென்

ஞர். இவ்விபரீதத்தைக்கண்டு அவ்வந்தணன் ஆச்சரிய மடைந்து கானோபாட்டைநோக்கி கூறுவான் உம்மைப்போன்ற தயாரகித னிவ்வுலகி லெங்குங் காணப்படான், வைராக்கியத்திற்கு சஹஜ ஸ்திதியை வஞ்சனையன்றி நான் சொன்னேன். நீர்நிராசையுடையவ னென்று காட்டக் குழந்தையைக் கொல்வது உமக்கு நியாயமா மோவென்று சொல்லி பயத்தையுந் துக்கத்தையு மடைந்து பின் வருமாறு சிந்திக்கத் தொடங்கினான். இவ்விடத்தில் நான் வாரா திருந்தா லிந்த சிசுஹத்திக்கு நான் காரணமாகாம லிருப்பேனல் லவா? இவ்வீட்டிற்கு வெளியிற்சென்று இதர ஜனங்களுக் கிதனைப் பிரசுரப்படுத்துவனாகில் என்னைநிந்தித்து என்னையே அவஸ்தைப் படுத்துவார்களே! சாதுபுருஷனை நாம் பார்த்துப்போவோ மென்று வந்தத்திற்குப் பாபமானது நேர்ந்ததே! என்று ஏக்கமுற் றிருந்தான். கானோபாட்டு அவனைநோக்கி ஐயா! நீர் விசனப் படவேண்டாம், ஸ்நானம் பண்ணி போஜனஞ்செய்யு மென்றார். அவர் மனையாளும் மமத்வத்தைவிட்டு அந்தப் பிராமணனிடஞ் சென்று கிலேசப்படாமற் பிரசாதபக்ஷணை செய்யக்கடவீர். இப் பொழுது சமையல் சித்தமாயிருக்கிறது பக்ஷிக்காமற் செல்வீராகி ல் எங்களுக்குப் பரமார்த்தமும் பிரபஞ்சமு மிரண்டும் விட்டுப் போ மென்றாள். இதைக்கேட்டு பிராம்மண னாச்சரியத்தை யடை ந்து ஸ்திரீயா யிருந்தும் கலக்கமின்றி சத்வஹானிக்கு பயந்துக் குழந்தைமேல் மோஹ மமதைகளைவிட்டு விரக்தியுடன் புருஷனு க்கு ஹிதத்தையே பார்க்கிறாளென்று அந்தப் பிராம்மணன் சங் கடப்பட்டு ஸ்நானஞ்செய்துக்கொண்டு ஒன்றுந்தோன்றாமல் இலை முன் உட்கார்ந்திருக்க அவ்வீட்டு கிருகஸ்தனாகிய கானோபாட்டு ஸ்ரீஹரிக்கு பிரசாதத்தை யற்பணம் பண்ணி மனையாளை நோக்கி அதிதிக்கு அன்னத்தை வட்டிக்கச் சொன்னார். அவளு மிரண்டிலை களில் தன்கணவருக்கும் அதிதிக்கும் அன்னத்தை யளித்தாள். அந்தப்பிராம்மண னதிகக் கிலேசத்தை யடைந்து பூர்வகாலத்தில் ஸ்ரீயாள னென்பவனால் சோமசேகரர் பிள்ளையைக் கொல்லவைத் தார், நானப்படி ஒன்றையுங் கேட்காமலிருக்க சிசுவை ஏன் கொன்றீர். நிராமயமாக சிசுவு இருக்குமாயின் அன்னம் ருசிக்கும். வயிறுநிறைய அன்னத்தைச் சாப்பிட்டு பெருத்த சந்தோஷத் துடன் போவேன். இந்த சிசுஹத்திக்கு நானே காரண மானே

னே! இப்போது அன்னம் ருசிக்காதேயென்று அமித விசனத்துடனிருக்க காஞேபாட்டு பகவானை யுத்தேசித்து பண்டரிநாதரே! பக்தபாலகரே! இங்குவாரும், நீர் அனேக பக்தர்களைக் காப்பாற்றி இரக்ஷித்தீரன்றோ? ஹிரண்ணிய கசிபுவால் ப்ரகலாதன் வெகு தொந்தரை யடைந்து உம்மை நினைக்க அப்பாலகனைக் காப்பாற்றி அவன் கோரிக்கையை நிறைவேற்றினீர், பரம கபடியான துரியோதனன் துரோபதையைப் பங்கப்படுத்த அவளுன்னை நினைத்தமாத்திரத்திலவளைக் காப்பாற்றினீர், நந்தன் யமுனையிலிறங்கி முழுகிப்போன சமயத்திலவனை நீர் மீட்டீர், கலியுகத்திலும்உமது பக்தர்களை வெகுவிதமாகக் காப்பாற்றினீர், பானுதாசருக்காக கூலத்தை மரமாக்கினீர். காட்டில் நாமதேவருக்கு ஜலத்தையுண்டாக்கி ரக்ஷித்தீர். தாமாஜி கருப்புகாலத்தில் தானியராசியைக் கொள்ளையிட நீர் விட்டுவெனும் பெயர்வகித்து பஞ்சமராகி அரசனுக்குத் தனத்தைக் கொடுத்தீர். இராகாவெனுங் குயவர், பூனைக்குட்டிகளைச் சூளையில் வைக்க நீர் அவைகளைக் காப்பாற்றினீர். இவ்விதமாக வும்முடைய கீர்த்தி யபாரமாகி உலகில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. இந்த சமயத்திலெங்களைக் காப்பாற்றும். கருணாகடாக்ஷத்துடன் பாருமென்று பிரார்த்திக்க, எம்பெருமானுடைய வீக்ஷணமுண்டான மாத்திரத்தில் அச்சிசுவு கிணற்றின் மேல் வந்து மோஹத்துடன் ஆடிப்பாடிக்கொண்டு பிதாவின்மேல் விழுந்தது. இதைக்கண்டு காஞேபாட்டு அப்பிராம்மணனைக் கண்டு ஸ்ரீஹரி கிருபாரசத்தால் குழந்தை யுயிர்த்து திரும்பிவந்தது. நீர் பகவத் பிரீதியாக பக்ஷணசெய்யக் கடவீரென்று சொல்ல அந்தப் பிராம்மணன் உடனே எழுந்திருந்து தம்பதிகளிருவருக்குந் தெண்டஞ் சமர்ப்பித்து மகிமையைக்கண்டு ஆச்சரியப்பட்டு நீங்களிருவரும் அக்ஷயமாக விருக்கக் கடவீர், உம்மைப்போல சத்புருஷ ரிவ்வுலகி லில்லையென்று புகழ்ந்து திருப்தியாகப் புசித்துப் போய் விட்டான். காஞேபாட்டு மனையாளுடன் பெருமாள் பக்தியிற் பூர்ண நிஷ்டையுடையவராகி பரமப் பிரீதியோடு வாழ்ந்திருந்தார்.

---

## பண்டரிபிராம்மணர்கள் சரித்திரம்.

தாமாஜியெனும் பிராம்மணன் கருப்புகாலத்தி லரசனுடைய தானியத்தைக் கொள்ளையிட, பெருமாள் ரக்ஷித்தாரென்பது முன்னே வெளிபாயிற்று. அனந்தரம் பிதருராஜ்யத்திற்கு அரசனொருகால் தனது மந்திரியை யழைத்து தாமாஜியினுடைய பெருமாள் திரவியத்தைக் கொண்டுவந்தாரே, அந்த தேவனை யான் பார்க்க வேண்டுமென்று சொல்லி பண்டரீபுரத்திற்குப்போகப் பிரயாணப் பட்டான். அதைக்கேட்டுப் பட்டணத்திலிருக்குமனேகரவனுடன் போகப் பிரயாணப்பட்டார்கள். சேனைகளுடனும் சதுரங்கபலத் துடனு மனேக வாத்தியங்கள் முழங்க பண்டரீபுரத்திற்குப் போகுந் தருணத்தில் தேசதேசங்களில் வார்த்தை விளம்பரமாகி பண்டரீபுரத்திற் கெட்டினது. அவ்விடத்திலுள்ள பிராம்மணர்க ளிதைக்கேட்டு வெகு கிலேசத்தை யடைந்தவர்களாகி அரசனிஷ்ட மெப்படியோ தெரியவில்லையே! அவிவேகனான வத்துலுக்க வரசன் அநாசாரங்களைச் செய்வானே! விசாரணையின்றி, விப்பிரஜனங்களை பிரஷ்டானாக்குவானே! இவ்விட மிராமலின்றொருதேசஞ் செல்வது நன்மையென்றுச் சிலர் சொல்லினர். சகல பாரங்களையும் ஸ்ரீஹரிமேலிட்டு இவ்விடமிருப்பது யுக்தமென்றும் பெருமாளை விட்டுப் போகக்கூடாதென்றும், அனேக பக்தர்களை யவர் காப்பாற்றின ரென்றும் சிலர் கூறினார்கள். இன்னுஞ் சில ரிக்கலிகாலத்தில் ஸ்ரீஹரி சுவதந்திரத்தை விட்டிருப்பதால் அவரொன்றுஞ் செய்யார், விக்கிரகத்தை யொளித்துவைப்பது நமக்குச் சரிப்படமாட்டாது அரசன் ஹரிதரிசனத்திற்காக ஆலயத்திற் பிரவேசிப்பான், அவ்விடத்திலவன் விக்கிரகத்தைப் பாராவிடில் அப்பொழுதே நம்மை சிக்ஷிப்பான், ஆதலாலப்படி செய்வதும் சரியல்லவென்று சிலர் பண்டரிபுரத்தைவிட்டுப் போகத்தொடங்கினார்கள். அவ்விடத்தில் பத்துபேர் மாத்திரம் பகவானை விசுவசித்துப் பயத்துடனிருந்தார்கள். அவர்களிலைந்துபே ரிராஜனுக்குப் பிரசாதங் கொண்டுபோய் கொடுப்போமென்று விளம்ப, ஜாதிஹீனனான வரசனுக்குத் துளசி இஷ்டமாகாதென்று சிலர் சொல்ல, ஜாதிபுஷ்பத்தைக் கைக்கொண்டு சென்றா லரசன் சந்தோஷிப்பான், ஆனாலது மிந்த ருதுவி லகப்படாதேயென்று சிலர் கூறினர். அச்சமயத்திலோர் பிராம்மண கன்னிகையைப்போல் பெருமாளவ்

விடம் ஜாதிபூ மாலையைத் தலையிற்றரித்து பாண்டுரங்கரை சேவிக்கிறதுபோல்வந்தார். அந்தப்பிராம்மணர்களந்தமாலைகளைத் தாங்களக் கன்னிகையைக்கேட்டு வாங்கிக்கொண்டு தேங்காயையுங் கொண்டு பெருமாள் நாமத்தை ஸ்மரணைசெய்து ஹரி! கோவிந்தா! உமது கிருபையை அருள்செய்யுமென்று சொல்லிக்கொண்டு ஒரு காதவழிச் சென்றபோது சதுரங்க சேனைசமுகத்தைக்கண்டு பயத்தை யடைந்து கணக்கனொருவனை அவ்விட மிருக்கக்கண்டு அவர்கள் வந்தவரவை அவனுக்கு விண்ணப்பஞ்செய்ய அவன் சமயம் பார்த்து அரசனுடைய தரிசனத்தைச் செய்வித்தான். அர்ச்சகர்களும் தாங்கள் கொண்டுவந்தப் பிரசாதத்தை யோர்தட்டில் வைத்து அரசன்முன் வைத்து சரணாகதியென்று சொல்லி நின்றார்கள். சாஸ்திர நைபுண்ணியத்தை யுடையவர்களா யிருந்தும் பகவத் பக்திநிஷ்டா சம்பன்னரா யிருந்தும் மகத்தான பயத்துட னரசன் முன் னிருந்தார்கள். அவ்வேளையி லந்தக் கணக்க னரசனைநோக்கி தாமாஜி தெய்வமான விடோபா மனிதர்க ளிவர்களென்று தெரிவிக்க அவ்வரச னவர்கள் கொண்டுவந்தப் பதார்த்தங்களில் புஷ்பமாலையை யெடுத்து நேர்த்தியா யிருக்கிறதென்று வாசனைப் பார்க்க அதிலோர் மயிரிருக்கக்கண்டு கோபமுற்று இதில் மயிரிருப்பதற்குக்காரணமென்னவென்று வினவினான். அர்ச்சகர்கள் பயத்தை யுடையவர்களாகி அரசனைநோக்கி ஓ மஹாராஜனே! இது விடோபாயகருடைய தலைமயி ரென்றார்கள். அதைக்கேட்டு அவன் உங்களுடைய தெய்வ மெதினாற் செய்யப்பட்டதென்று கேட்க அவர்கள் பாஷாணத்தா லென்றுசொல்ல அவன் திரும்பியும் பாஷாணத்திற்குத் தலைமயிருண்டோ? நானநேக மூர்த்திகளைப்பின்னப்படுத்தினேன் அவைகளுக்கு மயிரிருந்ததாகக் காணவில்லை. நீங்க ளசத்தியத்தைச் சொல்லுகிறீர்களென்ன அவர்க ளிதைக்கேட்டு எங்களுடைய தெய்வத்திற் கெந்தவிகாரமு மில்லை. அவ்விக்கிரகம் பின்னப்படத் தக்கதல்ல, பின்னப்பட்ட மூர்த்திக ளனைத்தும் சிந்தூரம் முதலாகிய வர்ணங்களால் விகாரங்களை யடைந்திருக்கும், துலுக்கரவைகளைப் பின்னப்படுத்தினார்கள். எங்களுடைய தெ[illegible] வவ்வண்ண மானவரல்ல. தலையின் மயிருடையவராக விருப்பார். [illegible] பார்க்கலாமென்று சொல்ல அரசன் கேட்டு சொன்னவண்ண மில்லாவிடி

னுங்களுடைய சிரங்களைக் கண்டிப்பேனென்று காவல்காளிகளை யழைத்து அவ்வர்ச்சகர்களைக் காவலில் வைத்தான்.

அனந்தரமரசன் சேனாபரிவாரத்துடன் ஆலயத்தைச் சேரப் போகுமளவில் மிகுதியான ஓசையுண்டாக பண்டரிபுரத்தி லிருக்குஞ் சகல ஜனங்களும் துலுக்கர் வருகிறார்களென்று பயமடைந்து ஊரைவிட் டோடிப்போனார்கள். அவ்வேளையிலர்ச்சகர்கள் அதிக சிந்தையுடன் ஹரிசர்வேஸ்வரனைக்குறித்து அநேகமாக இவ்வாறு தோத்திரஞ்செய்யத் தொடங்கினார்கள். ஓஹரி! சர்வேஸ்வரா! அரவிந்தாக்ஷா! மதுசூதனா! மாதவா! நாராயணா! நரஹரி! நீ நனேகபக்தர்களை காப்பாற்றினீர், நாங்களும்முடைய சேவையிலிருக்கிறவர்கள். எங்களா லபராத மாயிற்று. நீர் காப்பாற்றுவிடில் பிராணன்களை விட்டுவிடுவோம். ஓ பாண்டுரங்கா! விட்டல! பயத்தினால் நடுக்க முண்டாயிற்று, அரசன் பார்க்கும்படி நீர் தலையிற் சிகையைக் காண்பித்தருளும், எங்களை யிப்பொழுது காப்பாற்றுவிடில் உம்முடைய விருதுக்குக் குறைவு வந்திடும். சாதுக்களனைவருஞ் சிரிக்கத் தொடங்குவார்கள். சங்கடகாலத்திலும்மைவிட வெங்களை இரக்ஷிப்பவ ராரிருக்கிறார்கள், எங்களிடத்தில் நீர் பூரணகிருபையை வைத்தருளுமென் றனேக விதங்களாகப் பிரார்த்தித்துக்கொண்டு சன்னிதியைச் சேர்ந்தார்கள். அரசனும் பெருமாளுக் கெதிரில் நின்றான். அரசனிடஞ்சென்ற அர்ச்சகர்கள் காவலில் வைக்கப்பட்டார்களென்னுஞ் சங்கதி சன்னிதியிலிருக்கும் பிராம்மணர்களுக்குத் தெரியவந்தது. விட்டலமூர்த்தியின் றலைமேலிருந்த கிரீடத்தை யெடுத்துப்பார்க்க பாஷாணமாகவே யிருந்தது. தலைமேல் மயிரில்லாமையைக்கண்டு மிகுதியான மனக்கலக்கத்துட னழத்தொடங்கி அரசன் நம்மை கொன்றுவிடுவானேயென்று ஒன்றுந் தோன்றாம லிருந்தனர். அப்போது அரசன் பாண்டுரங்கர் சமீபத்தில் வந்து மூர்த்தியைப் பார்க்குமளவில் தலையில் மயிர்குடுமி யிருக்கக்கண்டு அதனிலிருந் திரண்டுமயிரை அரச னிழுக்கும்பொழுது இரக்தத்துட னிருப்பதாகக்கண்டு ஆச்சரியப்பட்டுப் பெருமாளுக்குப் பிரணாமஞ் செய்தான். சிறைச்சாலையி லிருந்த பிராம்மணர்களை விடுவித்து அவர்கள் சந்தோஷமடையும்படி நூதன வஸ்திரங்களைக்கொடுத்து குறைவு வொன்றுஞ் செய்யாமல் மகத்தான பிரீதியுடன் பெருமாள் பூஜையை

மேன்மையாகச் செய்வித்தான். அந்த பாண்டுரங்க மூர்த்திக்கு அலங்காரமாக வனேக ஆபரணங்களைக்கொடுத்து அந்த க்ஷேத்திரத்தை ஸ்ரீபாண்டுரங்கர் [illegible] சர்வசுவதந்திர மவருடைபதென் [illegible] காசர்கள் கீர்த்தனைசெய்ய அநுகூலயுஞ்செய்து [illegible] த்தந்து விட்டுக்கொண்டு தன்பட்டணம் [illegible] புண்டரிபிராம்மணர்கள் [illegible] பெருமையுடன் பெருமாளுக்கு பக்தி செலுத்தி வந்தார்கள்.

---

சகூ (...) பாயி சரித்திரம்.

கிருஷ்ணா தீரத்திற் கரவீரபுரமென்று மோர் கிராமமிருந்தது. அவ்விடத்திலோர் பிராம்மணன் மனையாளுடனும் பிள்ளையும் மருமகளுடனும் சமுசாரத்தை நடத்திவருவான். மருமகள் மேல் மாமியார் கடினசித்தத்தை யுடையாளாய் வெகுவ[illegible] லங்களைச் செய்துவருவாள். சகூயென்னும் நாமத்தை யுடைய அந்த மருமகப்பெண் இரவும் பகலும் வேலைகளைச் செய்துவருவாள். அகண்டமாக ஹரியை மனதிலிட்டு அதிகப் பிரேமையைக்கொண்டாடி ஒ கிருஷ்ணா! கோவிந்தா! புண்டரிகவரதா! [illegible] ங்காவென்று சொல்லிக்கொண்டு வருவாள். [illegible] மர்களுடைய ரூபத்தைக் கேள்வியுற்று கேட்ட[illegible] துப் பக்திசெய்துவருவாள். மாமியார் சொல[illegible] யனேகமாகச் சொல்லினு மவ்வார்த்தைகளுக்கு மாறு[illegible] றுஞ் சொல்லாமல் வேலைகளைச்செய்துவருவாள், மாமியார் [illegible] மருமகளுக்குப் பசிதணியப் போஜனமிடாள், இரவுகால[illegible] பழைய ரொட்டிகளைப் பக்ஷிணைக்குக் கொடுத்துவருவாள். வீட்டு வேலைகளை மருமகள் செய்யும் பொழுது மாமியார் விசேஷமாக தொந்தரையை யிடுவாள். உடைந்து பொத்தலுள்ள பானையிற் ஜலந்திரட்டி வரும்படி உத்தரவு செய்வாள். பண்டிகைதினங்களில் மாத்திரம் பிரசாதம் பூர்த்தியாக இடுவாள். இவ்வண்ணமாக இடுக்கண்படுத்தி வருவதைக்கண்டு அக்கம் பக்கத்தார் மாமியாருக்கு நியாயநீதிகளை யெவ்வளவு சொல்லியு மவள் காதுகொடாதிருந்தாள். சகூபாயி மேன்மையான பொறுமையாற் றனது மனைத்தொழில்களைச் செய்யுமளவில் ஹரியை மனதிலெண்ணிக்

கொண்டு தான்செய்த துஷ்கர்மவசத்தால் அபக்தர் வீட்டிற் கஷ்டத்தை யடையலாயினேனென்று மெண்ணுவாள். திரும்பியும் சர்வேஸ்வர னென்னை மாயையிற் கலக்கவொட்டாமல் வைத்தானென்றுஞ் சொல்லிக்கொண் டிருப்பாள். இப்படியிருக்க ஒருநாள் பக்கத்துவீட்டாள் அந்தசகூபாயியைப் பார்த்துஐயையோ! இப்படியேனிருக்கிறாய்? தாயார் வீட்டிற்குப் போகலாகாதா வென்ன அதைக்கேட்டு சகூபாயி, அம்மா! என் தாயார்வீடுவ்விடத்திற்கு வெகுதூரத்தி லிருக்கிறதென்றுசொல்லி சர்வகாரணரான ஸ்ரீஹரியும் பிராட்டியுமே தாய்தந்தைக ளாவார்கள். அவர்களொழிய வேறொருவரு மிவ்வுலகிலில்லை. அவர்களுக்குப் பெண்களும் பிள்ளைகளு மனேகருள்ர், அதனாலவர்க ளென்னை மறந்தாப்போலிருக்கிறதென்று சொல்லிக்கொண்டு இப்படி காலங்கழித்து ஹரிபுருஷோத்தமரை அன்புடன் நினைத்திருப்பாள்.

ஒருகாலத்தி லந்தகிராமத்தில் பண்டரி யாத்திரபாராளாகி பாண்டுரங்கருடைய நாமத்தைப் பாடிக்கொண்டு வாத்திய கோஷங்களுடன் பாகவதர்க ளனேக ரவ்வூர்வழியே சென்றார்கள். அச்சமயத்திற் சகூபாயி ஜலந்திரட்ட அவ்வழியாக வந்தாள். ஹரிநாமத்தின் பண்ணிசைப்பாட்டுகளை யவள்கேட்டு அவளுடைய சித்தம் ரமித்திருந்தது. அவர்களுடன் பண்டரி புரத்திற்குப்போக இச்சையுடையவளாகி அந்தப் பாகவதர்களுடைய பாதங்களில் விழுந்து அடியாளைப் பண்டரிபுரத்திற்குக் கொண்டுபோகக் கடவீர்களென்று வேண்டிக்கொண்டிருக்க அவ்விடத்திலிருந்த ஒரு ஸ்திரீ சகூபாயி வீட்டிற்குச்சென்று அவள் மாமியாரைநோக்கி உன்னுடைய மருமகள் பண்டரிபுரத்திற்குப் போகிறாளென்று சொன்னாள். இதைக்கேட்டு மாமியார் கோபங்கொண்டு தன் குமாரனை அழைத்து பிள்ளாய்! உனது மனைவி சகூபாயி, பண்டரிபுரத்திற்குப் பாகவதர்களுடன் சென்றாளென்ன, அவனதைக்கேட்டுக் கோபத்தை யுடையவனாகி யாத்திரைஜனங்களிடம் சென்று தன் பத்தினியை அங்குப் பார்த்து அவள் தலைமயிரைப் பிடித்திழுத்து வந்து வீட்டிற் சேர்த்து தானும் தாயாரும் தகாத வார்த்தைகளால் வைதார்கள். அதுபோராமல் அவளை யோர்கம்பத்திற்கட்டி பதினைந்து நாள்வரையில் பக்ஷணைசெய்ய அன்னபானங்க ளொன்றுங் கொடாம லிருந்தார்கள். அப்பெண்ணை யிப்படி தொந்தரைப்படுத்தி

... அவிழ்க்க யாரும் வாராமலிருக்க அவள் அவ்விடக்கூ... மையிலிருந்து பிராணனை விட்டுவிட நினைத்துப் பின்னும் வி...யகியாகி துக்கத்தைச் சுகமாக எண்ணி சமுசார சாகரத்தைக் கடக்கச்செய்யும் ஸ்ரீபாண்டுரங்கரைத் தன்னிருதயத்திற் கண்டு ஸ்வாமி! தாயுந்தந்தையு மண்ணனுந் தம்பியு மனைத்தும் நீயே, உன்னை யிந்த கண்களாற் காணாமல் பிராணன் போகுமாயின் ஒவ்வொரு அவதாரந் தொடங்கி உம்மு...னே பிறந்து உன் சம்பந்தத்தையுடையவளாயிருப்பேன். உம்மையன்றி வேறொருவருமில்லையென்று நம்பியிருந்தாள்.

பண்டரிபுரத்தில் பக்தஜனங்களனேகர் ஜயஜய...வென்று பாண்டுரங்கரைக் கொண்டாடிக் கொண்டிருக்க சகூபாயினுடைய முறையைக்கேட்டு இரவுகாலத்திற் பாண்டுரங்கர் பிரயாணமாக எத்தனிக்க, ருக்மிணிபிராட்டி அவரைநோக்கி, ஸ்வாமி! தேவரீரிந்த வேளையிற் ஏ...கபக்தர் காப்பாற்றும்படி அழைத்தனரென்று கேட்க, பெருமாளதற்கு சகூபாயி நிமித்தியம்போகிறேனென்று சொல்லி கரவீரபுரத்திற்குச்சென்றார். அவ்விடத்திலவள் கம்பத்திற் கட்டுண்டிருந்ததைப் பெருமாள் கண்டு தான் சகூரூபத்தை...த்து அவளைக்கட்டியிருந்த ஸ்தம்பத்தின் சமீபத்தி...சகூ அவரை நோக்கி யாரென்று வினவ பெருமாள் சொல்லுவார், நான் யாத்திரை செய்பவளென்றும் உன்னிடமிருந்தும் இல்லற தர்மத்தாலுன்னை யாத்திரையிற் சேர்க்கிறேன், ...வேண்டாம், உனக்குமாறாக நான் ஸ்தம்பத்திற் கட்டுண்டிருப்பேன். நீ யாத்திரைசெய்துக்கொண்டு வருவையாகில் நான் போய்விடுகிறேன் என்றுசொல்லி சகூ பாயியைக் கட்டின கயிற்றை அவிழ்த்து அவளை அவ்விரவில் யாத்திரை ஜனங்களிடங் கொண்டு வந்துவிட்டுத் தான் திரும்பிவந்து சகூபாயி ரூபத்துடன் கம்பத்திற் றன்னைத்தானே கட்டிக்கொண்டிருந்தார்.

அவ்விரவில் நடந்த சங்கதி வீட்டிலொருவருமறியாதிருந்தார்கள். பொழுது விடிந்தவுடன் மாமியார் மாமனார் சொல்லும் துர்வசனங்களை பெருமாள் கேட்டு சந்தோஷசித்தத்தோடு கட்டுக்குள்பட்டிருக்க, சகூபாயினுடைய பர்த்தா தனக்குள் ளெண்ணத்தொடங்கினான். பதினைந்து நாட்கள்...க என்மனையாள் அன்னபானங்களில்லாதிருக்கிறாள். ஒருவேளை தேகத்தை விடுவாளாகில்

எனக்கே நஷ்டமாகும். விவாஹத்திற்காக விசேஷ தனத்தை செலவுசெய்தேனே! வேறு விவாஹஞ் செய்யவேண்டுமென்றாலிப் போது கையிற் பணமில்லையே! யென்று யோசித்து சகூபாயியை கம்பத்தினிடமிருந்தவிழ்த்துவிட்டு மதுரவசனங்களைப்பேசி வீட்டு வேலைகளை செய்யச்சொல்லி வேண்டினன். பெருமாளனுமோதி த்து சகூபாயி ரூபத்துடனப்பொழுதே ஸ்நானஞ்செய்து நித்தியப் படி வீட்டுவேலைகளைச்செய்து சமையலை முடித்து, வீட்டாரனைவ ருக்கு மன்னத்தைப் பதார்த்தங்களுடன் வட்டித்தார். மாமனார் மாமியார் குமாரனிவர்கள் கூடிக்கொண்டு பக்ஷிக்குஞ் சமயத்தில் போஜனம் ருசியுடனிருந்ததென்று சொல்லிக்கொண்டார்கள். புருஷனுக்காகத் தான் செய்யவேண்டிய வேலைகளையெல்லாம் பிரீ தியுடன் செய்துவந்தார். ஹரிசருவேஸ்வரன் பக்தர்களுக்காக ஹீனத்தொழிலைச் செய்யலுற்றார். மனவாக்குகளுக் கெட்டாத மஹிமையுடைய ஸ்ரீயப்பதி ஓர் புருஷனுக்கு மனையாளாகி வீட்டு வேலைகளைச்செய்துவருவது அவருடைய கிருபையையும் சௌலப பியத்தையுங் காண்பிக்கிறதன்றோ? பக்தர்களுக்காக லஜ்ஜையை விட்டு பகவானான ஸ்ரீஹரி பிராம்மணன் வீட்டில் ரக்தியுடன் சகல வேலைகளையுஞ்செய்தார். இரவில் மூன்றாஞ்ஜாமத்தி லெழுந்திரு ந்து எந்திரக்கல்லில் மாவை அரைப்பர். வீட்டையாவும் பெருக்கி மெழுகி ஜலந்திரட்டிவைத்து வைப்பார். அணுவளவேனுங் குறை யின்றி மாமியார் மாமனாரிஷ்டப்படி விசேஷமான சந்தோஷத் தைக் காண்பித்துக்கொண்டு வீட்டுவேலைகளை நடத்திவருவார்.

பண்டரி புரத்திற் சகூபாயி பக்தர்களுடன்கூடி அதிகப்பிரே மையுடன் ஹரிதாசர்களுடைய ஸ்திதியைக்கண்டு சந்தோஷித்திருந் தாள். அவ்விடத்திலிருப்போர் ஹரிநாமத்தை அபரிமிதமாகச் சொல்லுவார்கள். அதிகப்பிரியத்துடன் ஆலிங்கனங்களை யொருவ ருக்கொருவர் செய்துக்கொள்ளுவர்கள். அபிமானங்களைவிட்டு ஒரு வருக்கொருவர் கோவிந்தாவென்று சாஷ்டாங்கமாக நமஸ்கரிப் பார்கள். குலங்களையுங் கோத்திரங்களையும் குறிப்பிட மாட்டார் கள். இவ்வண்ணமான மஹோத்சவத்தை சகூபாயி பார்த்து மன தில் சந்தோஷத்தை யடைந்து சந்திரபாகாநதியில் விதியுக்தமாக ஸ்நானஞ்செய்து பகவானைப் பார்க்கவேண்டி சன்னிதிக்குட் செ ன்று தீர்க்கதண்டஞ் சமர்ப்பித்து தான் தனதுமனதில் அநு

தாபத்தால் வெகுவித துக்கங்களை யடைந்து தான் எண்ணியிருந்
தபடி பெருமாளைச் சபாமண்டபத்திற் சேவித்து ஆலிங்கனஞ்
செய்து திருவடிகளைப் பிடித்துக்கொண்டு ஓ கருணாநிதி! உம்மைக்
கண்களாரக் காண்பதற் கிப்பொழுது காலம் நேர்ந்தது. ஓ கிருஷ்
ணா! கிருபாமூர்த்தி! அடியாள், சமுசாரத்தி லளவிறந்த துக்கத்தை
அனுபவித்தேன். ஓ கோவிந்தா! திரும்பி நான் காவீரபுரஞ்செல்
லேன். இது உன்னாணையாக்கும், ஓ பாண்டுரங்கா! பரமபுருஷா!
அடியாளைக் கருணைக்கண்ணால் பாருமென்று பிரார்த்தித்தாள். பின்
பு ஓரிடத்தில் ஹரிகீர்த்தனை நடந்துக்கொண்டிருக்க அவ்விடம்வந்
து ஹரிகுண வர்ணனையைக் கேட்டுக்கொண்டிருந்து மறுதினத்தி
லுதயமானவுடன் சந்திரபாகாநதியில் ஸ்நானம்பண்ணி பண்டரி
புரியைப் பிரதக்ஷணமாகவந்து பிராணன் போகும் பரியந்தம் பண்
டரிபுரியை விடமாட்டேனென்றெண்ணி பகவானுடைய திவ்யமங்
கள மூர்த்தியை பாவத்திலிருத்தி மகத்தான பிரீதியுடன் தியா
னிக்குமளவில் தேஹம் நழுவியது. அசேதனமான பிரேதமாய்
விட்டாள், அவ்விடத்திலோர் பிராம்மண னப்பிரேதத்தைக்கண்டு
தானிருக்கும் இவளையென்னும் வூருக்குச் சமீபத்திலுள்ள காவீர
புரத்திலிருக்கும் பிராம்மண ஸ்திரீயென்றுணர்ந்து அந்த பிரேதத்
திற்கு அக்கினிசம்ஸ்காரங்களை பீமாநதிதீரத்திற் செய்வித்துத் தா
ன்வந்தகாரியத்தை முடித்துக்கொண்டு தன்னிருப்பிடஞ்சென்றான்.

சகூபாயியைக் காப்பாற்றும் பொருட்டு கமலக்கண்ணன் கர
வீரபுரத்திற்குச் சென்றானன்றோ? அந்த ஸ்திரீயோ பண்டரிபுரத்
தில் பிராணனை விட்டாள். பெருமாளவ்விடத்தை யெப்படி விட்டு
வருவரென்று பிராட்டி மனதில் நினைத்து மயான பூமியிற் செ
ன்று சகூபாயி சரீரத்தினெலும்புகளைக் கடாக்ஷித்தமாத்திரத்தில்
பூர்வரூபத்தை வகித்து சகூபாயி எழுந்திருந்தாள். அன்றிரவிற்
பிராட்டி யவளுடைய சொப்பனத்திற்சென்று நீ கரவீரபுரத்திற்
குப் போகக்கடவை. இப்பொழுதடைந்திருக்கும் சரீரம் நூதன
மான தாதலால் நீ முன்னிட்ட ஆணைமுடிந்துபோயிற்று. இது
உனக்கு மருபிறப்பாகுமென்று மாதாவாகிய ருக்மணி பிராட்டி
சொல்ல அந்த ஆக்கினையை சிரசாவகித்து யாத்திராபராளுடன்
கரவீரபுரத்திற்குச் சகூபாயி வந்து சேர்ந்தாள். அவள்ரூபத்தை
வஹித்திருந்த பெருமாள் ஜலந்திரட்ட போகும்பொழுது சகூ

பாயியைக்கண்டு ஓ மாதே! யாத்திரை சபலமாயிற்ரு? வென்று கேட்க அவளந்த ஸ்திரீரூபமான பெருமாளை நோக்கி ஓ தாயே! உமது கிருபையினால் நான் விட்டலமூர்த்தியை நன்ருகச் சேவித்தேன். நீ செய்தவுபகாரத்தை நான் சொல்லத் தரமோ? இப்படியே வருஷந்தோறு முபகாரத்தைச் செய்தருளுவா யென்று சொல்ல, அவரப்படியே யாகக்கூடவதென்று அந்தர்த்தான மாயினர். சகூபாயி குடத்தில் ஜலத்தைப் பூரித்துக்கொண்டு வீட்டிற் பிரவேசித்தாள். இவள் யாத்திரைக்குப்போய்வந்த சமாசாரம் யாருக்குந் தெரியாதிருந்தது. முன்பு அக்கினிசமஸ்காரம் பண்ணின பிராம்மணன் இவளையென்னுந் தன் கிராமத்திற்சேர்ந்து பண்டரிபுரத்தில் சகூபாயிக்காக தான் நடத்திய தகனக்கிரியைகளைக் கரவீரபுரத்திலிருக்கும் பிராம்மண தம்பதிகளுக் கறிவித்தான். அவ்விருவருங் கேட்டு ஆச்சரிய மடைந்து சகூபாயியை அழைத்துச் சங்கதிகளை விசாரிக்க அவள் நடந்தவர்த்தமான மனைத்தையும் விவரமாகச் சொன்னாள். அவள்சொன்ன வனைத்தையுங் கேட்டு அதிகமாக அனுதாபத்தையடைந்து ஹரி பாண்டுரங்கரிடம் பத்தியைச் செலுத்தி மருமகள்மேல் மிகுதியான பிரியத்தையுடையவர்களாய் குடிலமான குணங்களனைத்தையும் விட்டார்கள். யாத்திராஜனங்களுடன்கூடி பிரதி வருஷமும் குடும்பமெல்லாம் பண்டரிபுரத்திற்குச் சென்று பிரபலமான பக்தியை வகித்தார்கள். சகூபாயி சர்வகாலங்களிலும் ஸ்ரீஹரி பக்தியில் ரமித்திருந்து சாசுவதபதவியை யடைந்தாள்.

---

## மாலோபந்து சரித்திரம்.

பராடாவென்னுந் தேசத்தில் பிராம்மண குலத்தில் மாலோபந்து என்பவரிருந்தார். அவர் சகல சுகுணங்களை யுடையவராகி ஸ்ரீஹரி பஜனையிற் பிரீதியடைந்து கிரகஸ்த தருமத்தை யவலம்பித்து பூததயையும் அதிதி பூஜையும் சத்திய வசனமுமுடையவராகி உலகில் மூற்றோனென்று துதிப்புற்றவராயிருந்தார். வெகுகாலமிப்படி நடந்துவர அவர் மனையாள் தேஹவியோகமடைய மாலோபந்து துக்கிதராகி மனதை ஹரியினிடத்தில் நிறுத்தி லீலா நாடகரான பகவானுடைய சித்திரமிதுவென்று தனக்குநேர்ந்த நஷ்டத்தை மனதிலெண்ணுமல் விவேகவிருத்தியை அவலம்பித்து பந்தம்

விட்டதென்றெண்ணி சமுசார சாகரத்தைத்தாண்டு முபாயமான ஸ்ரீஹரிநாமத்தைப் பஜித்து விரக்தியுடையவராகி தன்வீட்டில் வசித்திருந்தார். அவருக்கு விஹிதரான சிலர்கூடி, வேறொரு கன்னிகையைப் பிராம்மணர் வீட்டிலிருந்து கொண்டுவந்து கலியாணஞ் செய்தார்கள். சிலகாலங் கழிந்தபின் இரண்டாவது பாரியாளுக்கு பத்துபேர் பார்த்துக்கொண்டிருக்க தகப்பன் வந்தான். அவன் ஜாதியிற் பறையன். குமாரத்தியவனை உடனே கண்டுகொண்டாள். அவன் மாலோபந்தைப்பார்த்து ஐயா! திருடர் இரவுகாலத்திலென்குமாரத்தியைக் கொண்டுவந்து ஓர் பிராம்மணன் வீட்டில் விட்டனர். அவளவ்விடம் வளர்ந்துவந்தாள். அவளை நீர் கலியாணம் பண்ணிக்கொண்டீர். இது அநுசாரமாயிற்றென்று சொல்ல, மாலோபந்து துக்கித்து நான் மஹாபாபியானேனென்று ஸ்ரீஹரியை நினைக்கலுற்றார். மனையாளை யழைத்து, வந்தமனிதனைக் காண்பித்து இவனுன் தகப்பனோ? உண்மையைச் சொல்லென்று கேட்க, புருஷனுக்கு மாறுசொல்லாமல் பயத்தாற் சொல்லற்றிருந்தாள். அப்பொழுதந்த பிராம்மணரப்பறையனைப்பார்த்து உன் குமாரத்தியை யழைத்துக்கொண்டு போவென்றுசொல்ல அவனந்தணரை நோக்கி அது நீதியற்றதாகும். தீண்டலான பாண்டம் திரும்பி ஆதரிக்கப்படுமோ? குமாரத்தியை நான் கொண்டுபோனேனாயினென் ஜாதியாரென்னைக்கூட்டிக்கொள்ளாரென்று சொல்லிக் கும்பிடுபோட்டுச் சென்றான்.

ஊராரனைவரும் மாலோபந்துக்கு பஹிஷ்காரஞ் (ஜாதியிலிருந்து நீக்குதல்) செய்தார்கள். அவர் வீட்டிலிருந்த பந்துக்களனைவரு மவரைவிட்டுப் போனார்கள். அவர்பிள்ளை நரஹரியென்பவன்தவிர அன்னியனெவனு மிருக்கவில்லை. மாலோபந்து அவ்விடத்திய பிராம்மணர்களைப் பக்தியுடனழைத்து தன்னுடைய சம்பத்தையுந் தனத்தையுங் கொள்ளை யிட்டார். ஸ்ரீஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டு பாண்டுரங்கரிடம் பிரீதிசெலுத்தி வேதவேதாந்தங்க ளறிந்த பிராம்மண சபையை அவ்விடஞ் சேர்ப்பித்து அவர்களனைவருக்குந் தெண்டஞ் சமர்ப்பித்து, ஓஸ்வாமிகளே! நான் செய்த குற்றத்திற்கு பிராயச்சித்த விதியை சாஸ்திரங்களைப் பார்த்துச் சொல்லக் கடவீர்களென்று கேட்க, அவர்கள் நியாயரீதியாக தருமநூல்களைப் பார்க்குமளவில் தேஹத்தை மாய்த்துக்

கொள்ளும் பிராயச் சித்தந்தான் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட தென்றார்கள். அதைக்கேட்டு மாலோபந்தும் தான் கோரியது மதுதானென்று சொல்லி, எந்த யுக்தியாற் சரீரத்தை மாய்த்துக் கொள்ளலாமென்று கேட்கப் பிராம்மணர்கள், பட்டுப்போன புளியம்மரப் பொந்தில் படுத்துக்கொண்டு பாண்டுரங்கருக்கு நமஸ்கரித்து வராட்டிகளை சுற்றிலு மிட்டு நீயே நெருப்பைவைத்துக் கொள்ளவேண்டும், இதுதான் சாஸ்திரங்களிற் சொன்னவிதி, இதனாற் பாபந்தொலையு மென்று சொன்னார்கள். இதைக்கேட்டு மாலோபந்து தனக்கிது பூர்வ ஜன்மத்திற் செய்த கருமமிப்பொழு தனுபவத்திற்கு வந்ததென்று பிராம்மணர்கள் சொன்னபடி பெரியதான வோர் புளியமரப்பொந்திற் றன்படுத்துக்கொண்டு சுற்றிலும் வராட்டியைவைத்து நெருப்பைத் தானே மூட்டிக்கொண்டு தொந்தரையின்றி ஸ்ரீஹரி! விட்டலா! என்று கூவிக்கொண்டு சம்பத்தையும் சிநேகிதரையும் பந்துக்களையுஞ் சமயத்திற்கு உதவுவார்களென்று சிந்தித்திருந்தேன். அந்தியத்தி லவர்களனைவருங் கைவிட்டுத் தம்மையே நோக்கிக்கொண்டார்கள். ஓ பாண்டுரங்கா! பிதமற்றவேதனை தோற்றத்திற்கு வந்திடினும் தேவரீர்மீது சிந்தைப்பிருக்கும்படி கிருபைபாருமென்று தன்னுடைய மனதை ஸ்ரீயப்பதிமேல் வைத்து அந்த தேவ தேவனுடைய திருநாமத்தைச் சொல்லிக்கொண்டு மாதவா! முகுந்தா! கோவிந்தா! கிருஷ்ண! மதுசூதன! சக்ரதரா! ஆதிபுருஷா! கேசவா! அச்சுதா! ஆதிநாராயண! ஸ்ரீரகுராமா! லக்ஷ்மீபதி! ராவணாந்தகா! தாமோதரா! ஹரீ! விட்டலா! அடியேனைத் தயையுடன் பாருமென்று அனேகவிதங்களா லார்த்தியோடு ஹரிஸ்மரணையைச் செய்ய ஜனார்த்தனனுடைய கருணையினால் தேஹஞ்சலன மடையாம லிருந்தது. இதை அவ்வூர் பிராம்மணர்களனைவரும் பார்த்து ஹரிநாமப் பிரதாபத்தால் நெருப்புக்குஞ் சுடுஞ்சக்தி போயிற்று. பூர்வகாலத்தில் ஹிரண்ணியகசிபன் தன் பிள்ளையை சிக்ஷிக்க அக்கினியிலிட அவன் தகனமாகாமல் பெருமான் கிருபையாற் புவியி விளங்கியதுபோல மாலோபந்தும் நெருப்பின் சுடுகை அணுகாமலிருந்து விளங்கினார். அக்கினியணைந்து மீண்டபின் அவ்விட முட்கார்ந்திருக்கும் பக்தரைக்கண்டு பண்டரிநாத ரும்மை ரக்ஷித்தாரென்றும் நீர் பவித்திரரானீ ரென்றும்

பிராம்மணர்க ளனைவருங் கொண்டாடினார்கள். பஹிஷ்காரம் நிவர்த்தி யாயிற்று.

அதுமுதல் மாலோபந்து ஹரிபஜனையே செய்துக்கொண்டு புதியதான கவித்வ ரசனையைச் செய்து பாண்டுரங்கருக் கர்ப்பணை செய்துவருவார். பஞ்சமகுல ஸ்திரீயும் சத்சங்கத்தால் சத்குணங்களையுடையவளாகி மாலோபந்தரைக்கண்டு ஸ்வாமி! அடியாளுக்குத் தருணோபாயத்தைக் காண்பித்தருள வேண்டுமென்று கோரினாள். அவளை நோக்கிப் பக்தர் சொல்லுவார், நீ பிழைத்திருக்கும் வரைக்கும் அன்ன வஸ்திரங்களைக் கொடுக்கிறேன். உன் தந்தையுன்னை கைவிட்டானனபடியால் நானும் உன்னை விட்டுவிட்டால் தகுதியன்று, ஆனால் தூரத்திலிருந்துக்கொண்டு ஸ்ரீஹரியை நீ ஸ்மரணை செய்வாயாக, அதுவே தருணோபாயமா மென்று சொல்லி அவ்வீதிக்கு வெளியிலோர் குடிசையை யேற்படுத்தி அதிலவளை யிருக்கும்படிசெய்து போஜனத்திற்கு நடப்பித்துவந்தார். மாலோபந்து சொன்னபடியே அவள் நடந்துகொண்டும் ஸ்ரீஹரியை சர்வகாலங்களிலும் ஸ்மரித்துக்கொண்டும் மனவாக் காயங்களால் மாதவன் நாமத்தைப் பிரீதியுடன் சொல்லிக்கொண்டும் அதிகமான அன்பை ஹரியின்மேற் செலுத்த அவருடைய கருணையைப்பெற்று அப்போதுக்கப்போது பகவானவளுக்குத் தரிசனந் தந்தருளிவந்தனர். வெகுகால மிவ்விதமாக நடந்துவர ஒருநாளவள் தேகத்தைவிட்டாள். இதனை மாலோபந்து கேள்வியுற்று அந்தப் பிரேதத்தை வேறுமனிதர்கள் தீண்டாரன்றோ! என்ன செய்வோமென்று மிருந்த ஆதாரப்த்துடன் அவள் வீட்டிற்குச்சென்று பார்க்குமளவில் சரீரம் புஷ்பமாகக் காணப்பட்டது. ஆஹா! விஷ்ணு பஜனையின் மஹிமையை விசேஷமாக விவ்விடத்தில் ஸ்ரீஹரி காட்டினாரென்று பிரீதியடைந்திருந்தார்.

மாலோபந்து அந்த ஸ்திரீயையோர் திருஷ்டாந்தமாக வெடுத்துக்கொண்டு ஸ்ரீஹரி கைங்கரியத்தில் காயத்தைக் கிரியையுடன் வைத்திருந்தார், இவ்வண்ணமான பதத்தை அனைவருமடையக் கூடியல்லவோ! என்று அவர் தன் மனதிலெண்ணி சர்வேஸ்வரனுடைய நிருபையை அடையும்பொருட்டு மாலோபந்து பரிசுத்த பாவத்தை யுடையவராகி பகவானிடத்தில் பரிபூரண பிரேமையைச் செலுத்தி நிர்மல சத்தியாகத் திரேகத்தை சர்வேஸ்வரன்

சேவையிலேயே செலுத்தி அந்தியத்தில் ஹரி பதத்தையடைந்தார்.

## பிரேமாபாயி சரித்திரம்.

ஹிந்துஸ்தான் தேசத்திலோர் பட்டணத்தில் பிரேமாபாயி யென்னுமொரு பிராம்மண ஸ்திரி விதவையாயிருந்தாள். அவளுக்கு வைராக்கியமும் ஞானமு மொன்றுமில்லாமல் விசேஷமான பக்திமாத்திர முண்டு. பாகவதர்களை விசுவசித்தும் பூதங்களிடத்தில் தயையுடையவளாயும் பாகவத புராணத்தை சிரவணம் பண்ணியும் அதிதிகளுக் கன்னத்தைப் பிரீதியுடனளித்தும் ஹரி பக்தர்கள் தன்னிடம் வந்தாலவர்களுக்கிருக்க இடங்கொடுத்தும் ஸ்ரீ ஹரிநாமத்தை யிரவும் பகலுஞ் சொல்லிக் கொண்டு மிருப்பாள். தினந்தோறும் கங்காஸ்நானம் பண்ணி கோபாலமூர்த்திக்கு விதிப்படி பூஜைகளைச்செய்து பாகவத புராணத்தைச் சிரவணம் பண்ணப்போவாள். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சரித்திரங்களைக் கேட்குமளவில் அவளுக்கு ஆனந்த பாஷ்பங்க ளபரிமிதமாக ஒழுகும், சரீரத்தின்மேல் நினைப்பின்றி ஸ்ரீஹரிமேல் சொக்கி யிருப்பாள். தினந்தோறும் தப்பாமல் சரித்திரத்தைக்கேட்டுப் பக்தி பிரேமையைக் காண்பித்தலால் அவள் பிரேமாபாயியென்று பக்தஜனங்களாற் கூப்பிடப்பட்டாள்.

ஒருநாள் சாதுக்கள் பிரேமாபாயி வீட்டிற்கு வந்தார்கள். அவர்களிடம் பிரீதியைச் செலுத்தி சகலசேவைகளு மவர்களுக்குச் செய்து சமையற்செய்ய எத்தனித்து பின்வருமாறு சிந்தித்தாள். புராணசிரவண மின்றைக்குத் தப்பிப்போயிற்றே. பெருமாளுக்குப் பாகவதர்களுடைய சேவையே முக்கிய பிரீதியைக் கொடுக்குமென்றும் ஸ்ரீஹரி பூஜையைச்செய்யுஞ் சமயத்தில் சாதுக்கள் வருவார்களாயின் பூஜையைவிட்டு அவர்களுடைய சேவைசெய்யவே வேண்டுமென்றும் அவர்கள் விமுகராகிப்போவரேல் விஷ்ணுமூர்த்திக்கது பிரியகரமாகாதென்றும் இப்படி நீதிசொல்லப்பட்டிருப்பதனு லதைத் தானே நினைத்து புராணங்கேட்கப் போகாமல் சமையல் வேலையிலிருந்து சித்தமனைத்தையும் புராணத்தில் வைத்திருந்து பத்துவயதான தன்குமாரனை யழைத்து பிள்ளாய்! புராணஞ் சொல்லுமிடத்திற்கு நீயேபோய் கதையைக் கேட்டுவந்து எனக்குச் சொல்லக்கடவையென் றுக்கினை செய்தாள். அப்பாலக

னவ்வாறே புராணஞ் சொல்லுமிடஞ் சென்று கதையைக் கேட்டுக்கொண்டிருந்தான். பிரேமாபாயி பாகவதர்களுடைய பிரீதிகரமான சேவையிலிருந்தாள். பசுவானது தன்னுடைய கன்றின்மேல் பிரீதிவைத்து மேய்ச்சல் கொள்வதுபோல அவள் சித்தமனைத்தும் கிருஷ்ண சரித்திரத்தின்மேலேயே யிருந்தது.

சாதுஜனங்கள் ஸ்நானஞ்செய்து வந்தனர். அதற்குள் பிரேமாபாயி சமயற்செய்து வைத்திருந்தாள். உடனே அவர்களுடைய திருவடிகளைவிளக்கி சரணதீர்த்தத்தைச்ஸ்பரித்து பவித்திரமென்று சிரசின்மேற் றெளித்துக்கொண்டு அவர்களுக்கு ஆசனங்களைக் கொடுத்து திலகமிட்டு கந்தமும் அக்ஷதையுமற்பித்து இலைகளைப்போட்டு பக்ஷிய போஜ்யங்களுடனன்னமளித்தாள். அவர்கள் பக்ஷணைசெய்தபிறகு காசுத்திக்காக அவர்களுக்கு ஜலங்கொடுத்துத் தாம்பூலமளித்துப் பூஜிக்க அவர்களனைவரும் பிரீதியை வகித்து திருப்தராகி உட்கார்ந்திருந்தார்கள். இதற்குள் குமாரன் கிருஷ்ணகதையைக் கேட்டிருந்து வந்தான். உடனே தாயாரவனுக்கு பக்ஷணைசெய்வித்து தானும் பக்ஷித்து சுகமாக விருவருமுட்கார்ந்திருக்குஞ் சமயத்தில் குமாரனைக்கிட்டஅழைத்து, பிள்ளாய்! இன்று நீ கேட்டகதையை விடுவித்துச் சொல்லவேண்டுமென்று வினவ குமாரன் தான் கேட்டுவந்த கதையைக் கூறத் தொடங்கினன்.

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி நந்தகோபாலருக்குத் திருக்குமாரராகி கோகுலத்தில் வசிக்கும்பொழுது பாலலீலைகளைச் செய்தார். ஒருநாள் எசோதாப்பிராட்டி தயிர்கடைந்துக்கொண்டிருக்க ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அவளிடஞ்சென்று பாலைக்கொடுக்கச் சொல்லிச் சிணுங்கிக்கொண்டு அவள்மேல் விழ எசோதை அப்பொழுது கடையுங் கருவியான மத்தைவிட்டு தன் மடைமேல் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை எடுத்துவைத்துமுலைப்பாலைக்கொடுக்க, அவர் ஒருஸ்தனத்தின்மேற் கையைவைத்துக்கொண்டுமற்றொருஸ்தனத்தின் பாலைக்குடித்துக்கொண்டு தாயார் முகத்தைப் பார்த்திருந்தார். எசோதபிராட்டியும் அவர் முகத்தை மிகுதியான சந்தோஷத்துடன் பார்த்திருந்தாள். அவ்வேளையில் அடுப்பிலிருந்த பாற்பானை பொங்கிற்று. அதனைப் பார்க்கும் பொருட்டு எசோதை ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை கீழேவிடுத்து சீக்கிரமாக அடுப்பினிடஞ் சென்று ஐயோ! ஜாக்கிர

தையில்லாததால் பால்பொங்கிற்றே! யென்றெண்ணி யிருக்குமளவில், ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி மற்றொரு ஸ்தனத்தின் பாலைத் தான்குடிக்காமலிருக்க பாற்குடத்தில் மோஹத்தை யுடையவளாகிப்போய் விட்டாளே! மோகமின்றி பிரேமரசத்தைப் புசித்துக்கொண்டிருக்க மாயையிற் பிரீதி யடைந்தாளேயென்று மனதிலெண்ணிக் கொண்டு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி இதரமான பாலர்களை யழைத்து அப்பானையி லிருக்கும் வெண்ணெயையும் எடுத்தயினரையும் பங்கிட்டுக்கொடுத்து பாண்டத்தை யுடைத்தார். இதற்குள் எசோதா பிராட்டி அவ்விட மோடிவந்தாள். வெண்ணெய் இருந்த பானை உடைந்திருக்கக் கண்டு மிகுதியான தாபத்தை யடைந்து இவ்வண்ணமான பாலகனை யெப்பவும் கண்டிலேனே! வீட்டு வீட்டுக்குப் பிள்ளைக ளிருப்பார்களாகினு மிவனைப்போல் பாலகனை யெங்குங் காணேன். இதர கோபிகாஸ்திரீகள் சொல்லிக்கொண்டிருந்தது இன்று சத்தியமாகக் கண்டேனென்று சொல்லி பிரம்பைக் கையிலேந்திக்கொண்டுவர கிருஷ்ணமூர்த்தி ஓடத் தொடங்கினார். எசோதையும் பின்னாலேபோக அவர் கைக்கு அகப்படாமல் விசித்திரமாக கிட்டினாப்போல் நின்று உடனே பலாயனமாகி அகப்படாம லிருப்பர். கோபிகைக ளனைவருங் கிருஷ்ணமூர்த்திமேற் கோள்களைச் சொன்னது இன்று சத்தியமாய் விளங்கிற்றென்று எசோதை எண்ணமுற்று அவரைப் பிடிக்க வீதிவீதியாக அவர் பின்னே சுற்றினாள். இவளுடன் இதரமான கோபிகாஸ்திரீகளும் கூடிப் பிடிக்கவோடினு மகப்படாம லிருந்தார். அடிக்கடி சந்து சந்துகளி லோடுவதான விசித்திர செய்கையைச் செய்து வந்தார், அப்பொழுது இரண்டு ஜாமமாகி வெயில் தீக்ஷணமாக விருந்தது அந்நேரமாகியுங் குமாரனைப் பிடிக்கத் தாயார் தொந்தரை யடைந்து வியர்வை ஒழுக மேல்மூக்காடு கீழேதொங்க ஆயாசப்படுவதை ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி பார்த்துக் கருணை யுடையவராகி பிடிப்புக்குட்பட்டார். அப்பொழுது தாயார் பிள்ளையைப் பிடித்துக்கொண்டு தன்வீட்டிற்குத் தான் வரும்பொழுது கோபகன்னிகைகளனேகர் கூடவந்தார்கள். அனேக நாட் திருட னின்றகப்பட்டானென்று நினைத்து தாயார் தன்பிள்ளையை உரலில் கட்டிவிடுகிறேன். இதுவே சிக்ஷையாகுமென்று சொல்லி கயிற்றைக் கொண்டுவந்து நிற்க அவ ரிவ்வசனங்களைக்கேட் டழத் தொடங்கினார்.

ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியின் வயிற்றுக்குக் கயிற்றைக்கட்டி உரலுக்குக் கட்டவேண்டுமென் றெண்ணி ஓர் கயிறைக் கொண்டுவந்து வயிற்றிற்கட்ட அக்கயிறு நாலங்குலங் குறைவாயிற்று. மற்றொருகயிற்றைக் கொண்டுவந்து முடியிட்டு மறுபடியுங் கட்டத் தொடங்கியபோது இன்னும் நாலங்குலம் வேண்டியதா யிருந்தது. பிறகு தன்வீட்டிலிருக்குங் கயிறுகளெல்லாங் கொண்டுவந்தாள். அவையுஞ் சரிப்படவில்லை. மற்றுமுள்ளோர் வீடுகளிலிருக்குங் கயிறுகளைச் சேர்த்துக் கட்டிப் பார்க்கும்போதும் நாலங்குலங் குறைவாகவே யிருந்தது. அப்போது எசோதைக்கு வருத்தமாகி கோகுலத்தி லிருக்குங் கயிறுகளனைத்தையுங் கொண்டுவந்து கட்டினேனே! இன்னம் கயிறுகளுக்கு நானெங்குச் செல்வேனென்று கஷ்டத்துடன் சொல்ல, அவர் கிருபையுடையவராகி தாயார்போடும் [illegible]டிக்கி யுட்பட்டார். இதைக்கண்டு கோபிகைகளனைவருஞ் சி[illegible] தொடங்கினர்கள். ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி கட்டப்பட்டபின் [illegible]கு தீனனனவனைப்போலத்தோன்றினர். அவரை நோ[illegible]சோதாபிராட்டி உன்னை யெப்பவும் நான் விடமாட்டே[illegible]னென்று சொல்ல ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அழுதுக்கொண்டிருந்தார். தாயாரும் வீட்டுக்குள் சென்றாள்.

இந்தச் சரித்திரத்தை பிரேமாபாயிக்கு அவள்பிள்ளை சொல்லிக்கொண்டு வந்தான். அதைக்கேட்கவே அவளுக்குக் கண்களில் ஜலம்பெருகி குண்டிதையாகி சியாமள ரூபரான ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியை யார் விடுவிப்பார்கள். சாரமான விசாரணை செய்யாமல் கோமலரானவப்பாலகரைக் கட்டத்தொடங்கின எசோதையானவள் தாயாராகமாட்டாள், அவள் எருமைக்கிடா வாவாளென்று பெருமூச்சுவிட்டு தன் குமாரனைப்பார்த்து இந்த சமுசாரத்தை யுனக்காகவே நானிதுவரைக்குஞ் செய்து வந்தேன்; இப்பொழுது நான் கோகுலத்திற்குச் சென்று கோவிந்தமூர்த்தியின் கட்டுகளை அவிழ்த்துவிட வேண்டுமென்று சொல்லி சொக்கிப் பிராணனை விட்டாள். அங்கிருந்த பக்தர்க ளனைவரும் அவள் பரமபதத்தை யடைந்தாளென்று புகழ்ந்தார்கள் சர்வேஸ்வரன்மேற் சித்தத்தை வைத்து சரீரத்தைவிட்டாள். அவ்வேளையிற் பரிமளமுள்ள துளசியும்புஷ்பமுமாகாயத்தினின்றுபொழியப்பட்டன. இவ்விந்தையைக் கண்டு பிரஜைகள் ஜயஜய வென்று விசேஷமாகக் கொண்டாடி

ளுர்கள். குமாரனவளுக்குச் செய்யவேண்டிய சம்ஸ்காரங்களனைத்துஞ் சுகமாகச் செய்தான். பெண்பாலா யிருந்து பக்திமகிமையினால் பேற்றைப் பெற்ருள்.

---

## சிலாபாயி சரித்திரம்.

வடமதுரை சமீபத்திலோர் பட்டணமுண்டு அதிலரசாண்டுவரு மிராஜனுக்கு ஓர் கன்னிகை யிருந்தாள். அவளுக்கு சிலாபாயி என்று பெயர் வழங்கி யிருந்தது. சிறிய பிராயத்தில் தகப்பன் தன் கன்னிகைக்குக் கல்வி கற்றுக் கொடுக்கும் பொருட்டு ஓர் பண்டிதரை தன்னிடம் வைத்திருந்தான். அவரவ்விடத்தில் அத்தியயனுதிகளைச் செய்துக்கொண்டு சாலக்கிராம பூஜையைத் தினந்தோறுஞ் செய்துக்கொண்டிருக்க ஒருநாளந்த ராஜகன்னிகை அச்சடங்குகளனைத்தையும் பார்த்து அத்தகைய சாலக்கிராம சிலையொன்றைத் தனக்குக் கொண்டுவந்து கொடுக்கும்படி விநயத்துடன் குருவைக் கேட்டாள்.. அக்கன்னிகையின் நற்குணங்களை ஆசாரியர் கண்டு பிரியமுடையவராகி நுணுக்கமான ஓர் குண்டு கல்லைத் தான் கொண்டுவந்து இது சாலக்கிராம சிலையென்று சொல்லிக்கொடுத்தார். அப்பெண் அதனை வாங்கிக்கொண்டு ஆசாரியருக்கு நமஸ்கரித்துப் பக்திபாவனை யுடையவளாகி பிரீதியுடன் பூஜைகளை செய்யும் நியமத்தைப் பூண்டவளாகி ஆசாரியரெப்படிப் பூஜைசெய்து வருவாரோ அப்படி அவளும் அர்ச்சனுதிகளைச்செய்து வருவாள். மந்திரத்தை சொல்லாவிடினும் திருடமான விசுவாசத்தை வைத்திருந்தாள். பிரியத்துடன் அவள் பக்திசெய்து வருவது பெருமாளுக்கு உகந்ததா யிருந்தது. அந்த ஹேதுவினு லக்குண்டுக்கல்லிலும் ஸ்ரீஹரி நித்தியவாசம் பண்ணிவந்தார். தாய்தந்தைகளிது பிள்ளைகள் விளையாட்டென்று தங்கள் மனதிலெண்ணி இருந்தார்கள். நாளுக்குநாள் அந்நங்கை வளர்ந்துவந்நாள். பகவத் பக்தியும் பிரபலமாயிக்கொண்டே வந்தது.

தாய் தந்தைகள் இப்பெண்ணை தகுந்த வயதில் ஒரு இராஜகுமாரனுக்கு விவாஹஞ்செய்துகொடுத்தார்கள். ஐந்துநாள் அபாரமான வைபவத்துடன் கலியாணம் நிறைவேறிற்று. கடைசிதினத்தில் இராஜன் தனது புத்திரியை மாமியார் வீட்டிற் கனுப்பினன். அவள் தன்னுடைய திருவாராதனைப் பெட்டியை யாருக்குந் தெரி

யாமல் தன்னிடத்தில் வைத்துக்கொண்டு மாமியார் வீட்டிற்குச் சென்றாள். மூன்றுதினம் வழிநடந்து இறங்கினபொழுது பக்தியுடன் தன்னிடமிருக்குஞ் சிலாரூபமான பெருமாளுக்குப் பூஜைகளைச் செய்து ஆரதியைக் கொடுத்தாள். இதை அவள் கணவன் கண்டு குடிலபுத்தி யுடையவனாகித் தன்மனையாளுக் கறியாதபடி அந்தப் பெட்டியைத் தானெடுத்து அதனைத் திறந்து அதிலிருக்கும் வஸ்துக்களை வெவ்வேறாக வெடுத்து நதியிலிருக்கு மோர்மடுவிற் போட்டுவிட்டு தன்பத்நினிக் கிருக்கும் பரமார்த்த உபாதியைப் போக்கினே னென்று சந்தோஷித்திருந்தான். மறுதினம் ராஜகன்னிகை மார்க்கம் நடந்தபின் ஸ்நானம் பண்ணி திருவாராதனை செய்யத் தன் தேவதார்ச்சனப் பெட்டியைப் பார்க்குமளவில் வைத்தவிடத்திற் காணாமல் திகிலடைந்து ஐயோ! நான் பூர்ணமனதுடன் பூஜைசெய்து வந்தேனே! பெருமா ளெங்குச் சென்றார். சாலக்கிராமமூர்த்தி வாராவிடில் நான் ஜீவனை விடுவேனென்று சொல்லி ஸ்ரீஹரியைத் தனக்குள் நினைத்து ஓ தேவதேவா! தீனபந்தூ! கருணாகரா! கமலக்கண்ணா! ஸ்ரீநிவாசா! ஸ்ரீயப்பதீ! தேவரீர் அடியேன்மீது தயவுசெய்யாமல் கோபங்கொண்டு சென்றீரோ! அபசாரங்க ளமிதமாயிற் றென்று அடியாளைக் கைவிட்டீரோ! ஓ கிருஷ்ணா! ஹரி! எவ்விடஞ் சென்றீரென்று கண்களில் நீர் தாரைதாரையாக ஒழுக அமித துக்கத்துட னழுதுக்கொண்டிருந்தாள். மாமியாரும், மாமனாரும், புருஷனும் பலவாறாகச் சொல்லியும் கேளாமல் அன்னபானங்களை வர்ஜித்து திருவாராதனை யகப்படாவிடில் திவிக்குச் செல்வேனென்று பாவசுத்தியுடன் நான்குதினங்கள் வரைக்கும் பிரபல வைராக்கியத்தைக்கொண்டு பெருமாள்மேல் பாரத்தை வைத்திருக்க அவர் குருரூபத்தை வஹித்து சொப்பனத்தில் வந்து திருவாராதனைப் பெட்டியைக் கிருபையுடன் கொடுத்தார். சிலாபாயி பின்பு நித்திரைவிட்டெழுந்திருந்து பார்க்குமளவில் கையிற் பெட்டிவந்திருந்தது. உதாயமானவுடன் ஸ்நானம்பண்ணி பெருமாள் திருவாராதனஞ் செய்துக்கொண்டிருக்க அவள் கணவன்கண்டு ஆச்சரியப்பட்டு மடுவிலிட்ட அவ்வஸ்துக்க ளனைத்தும் வெளிக் கெப்படிவந்தன? அவைகளை ஸாக்ஷாத் நாராயணனே எடுத்துவந்தாரென்றெண்ணி அதிசயத்தை யடைந்து குடிலக்குணத்தையும் விட்டு தன் பத்

தினியுடன்கூடி அவனும் பகவத்பக்தியி லீடுபட்டு பரமார்த்தத்தை யடைந்தான், சிலாபாயி, தானனுஷ்டித்துவந்த பக்திமார்க்கத்தா லனேகரை சீர்திருத்தினள்.

---

## மண்டலீகன் சரித்திரம்.

ஹிந்துஸ்தான் தேசத்தில் மண்டலீகனென்னு மோரரசனிருந்தான். அவனுடைய மனையாள் ஸ்ரீஹரிபக்தியிற் சிறந்தவளாகி சீலாதி குணங்களுடன் பெருமாள் பூஜையைப் பிரீதியுடன் செய்வாள். மச்சஜயந்தி, கூர்மஜயந்தி, வாராஹஜயந்தி, நரசிம்மஜயந்தி, வாமனஜயந்தி, பார்க்கவஜயந்தி, இராமஜயந்தி, கிருஷ்ணஜயந்தி, இத்தினங்களில் பெருமாளுக்கு விசேஷ உச்சவங்களைச் செய்து வருவாள். இதுவன்றி ஏகாதசி விரத மன்புட னனுஷ்டிப்பாள். வைஷ்ணவர்களிடம் விசேஷ பக்தியைச் செலுத்துவாள். பகவத் கீர்த்தனையை யெப்பொழுதுங் கேட்டுக்கொண் டிருப்பதும், சகல பூதங்களுக்கு மன்னமிட்டு வருவதும், சர்வகாலங்களிலும் ஹரி நாமத்தை ஜபித்து வருவதும், இப்படி எவ்வேளைகளிலும் பாரியாள் சத்கருமங்களைச் செய்துக்கொண்டிருக்க, அவள் கணவன் ஸர்வாத்மாவான ஸ்ரீஹரி பூஜையையும் நேமநிஷ்டைகளும், நாமஜபங்களு மொன்றையும் உலகத்தோர் காணச்செய்திலன். அதனாற் புரஜனங்க ளனைவரும் பூபதிபக்திஹீனனென்றும் அவன் மனையாளை விஷ்ணுபக்தியிற் சிற ந்தவளென்றுஞ் சொல்லிக்கொண் டிருந்தார்கள். பிரஜைக ளரசனை யிவ்விதமாக நிந்தித்து வந்தாலும் இதைத் தான் கேட்டும் கோபத்தை யெவ்வளவுங் கொள்ளா திருப்பான்.

ஒருநாள் மனையாள் கணவனைநோக்கி ஓ பிராணநாதரே! ஸ்ரீஹரி பூஜையைச் செய்யுமேயென்றாள். இதைக்கேட்டு அரசனவளை நோக்கி அடி மாதே! என்மனது எப்பவும் விஷயங்களை விரும்புகிறது, பக்தி நிலைமையைப் பொருந்தவில்லையென்று சொல்லி, உள்நோக்கத்தி லபரிமிதமான பிரேம பக்தியைக் கொண்டு அல்லும் பகலுஞ்சுகித்து வெளிக்குத் தானொரு சமுசாரியைப் போல் சமத்வத்தைப் பாராட்டிவந்தான். பிரேமையெனும் பொய்கையில் முழுகினவனென்று ஒருவருமவனைக் கண்டறிந்திலர். நேமமும் பூஜைகளும் வெளிக்குக் காண்பித்தால், நிஷ்டாவந்தனென்று உலகத்தார் சொல்லுவார்களென்று உள்

நிஷ்டையுடையவனு யிருந்தான். இவ்விதமானப் பரபக்தியை அவன்செலுத்திவர அவன் மனையா ளொருநாள் புருஷனிடஞ் சய னித்துக்கொண்டிருக்க நித்திரையிலிருந்த வரசன் "இராமா" வென்று வாயினுலுச்சரித்தான். இதை அவள்கேட்டு பிரேமானந்தத்தைப் பிரபலமாக அடைந்து உதயமானவுட னுச்சவம் பண்ணத் தொடங்கி பகவத்கீர்த்தனமும் விஷ்ணு பூஜையும் பாகவதாராதனமும் முதலானவைகளைச் செய்யலுற்றுள். இவ்விசேஷங்களை அரசன் கண்டு மனையாளை நோக்கி இப்பொழுதிந்த வுச்சவமேன் செய்கிறுயென்று வினவ அவள் கணவனைக்கண்டு ஓ பிராணநாதரே! சென்ற இரவில் நீர் நித்திரையிலிருக்கும் சமயத்தில் உமது வாக்கிலிருந்து "இராமா" என்கிற சப்தம் வெளியாயிற்று, அடியாளும்மை விவாஹம் பண்ணினதுமுதல் ஹரிநாமத்தை தேவரீர் வாயால் கேட்டதில்லை யாதலால் அந்த நாமத்தை நான் கேட்டது முதலத்யுல்லாசத்தை யுடையவளாகி உச்சவத்தைச் செய்யலானேனென்றுள். இதைக்கேட்டு அரசனவளை நோக்கி பராத்பரரான ஸ்ரீராமர் இந்த தேஹத்தைவிட்டு வெளியில்வந்தார், இனி இந்ததேஹத்தை வைத்திருக்கமாட்டேனென்று பிராணனை விட்டான். அவ்வூர் ஜனங்களும் வைஷ்ணவர்களும் அந்தர் நிஷ்டையையுடைய வரசனென்று கொண்டாடினூர்கள். பர்த்தாவினுடைய நிஷ்டையை அந்த பாக்கியவதி பார்த்து பரமாச்சரியமடைந்து சொக்கித் தானும் பிராணனைவிட்டாள். ஆகவிப்படி இருவரும் பிரியாமல் பரமபதத்தை யடைந்தார்கள்.

---

## பிலாபாயி சரித்திரம்.

பிலாபாயி யென்பவள் ஓர் மந்திரியின் குமாரத்தியாகவிருந்து பிரியத்துடன் ஹரியைப் பூஜித்துவருவாள். கல்மஷத்தைப்போக்கும் ஹரிநாமத்தை யெப்பவும் சொல்லிக்கொண்டிருப்பாள். அவளுடைய பர்த்தா வியோகமானபின் அண்ணன் தம்பிகளிடஞ் சேர்ந்திருந்தாள். சிலநாட் கழிந்தபின் அண்ணன் தம்பிகளிருவரும் ஓரிடமிராமல் அளவற்ற கலஹங்களைச் செய்ய, மத்தியஸ்தர் சிலர்நேர்ந்து இவர்களுடைய இரண்டு கிராமங்களை ஒவ்வொருவரொவ்வொன்றை பங்கிட்டுக் கொண்டார்கள். பின்பு வெவ்வேருகி வேறு வேறு இடங்களில் நிவாசமாக விருந்தார்கள். அப்படியிருந்

தும் தம்பி சிர்மையுடையவனுகாமல் சேனைகளைத் தான் சேகரப்ப டுத்திக்கொண்டு அண்ணனிருந்த கிராமத்தின்மீது விழுந்து அனைத் தையுங் கொள்ளைகொண்டான். பிலாபாயினுடைய திருவாராதன ம் அன்னியர்கையி லகப்பட்டுப் போயிற்று. அவள் தினந்தோ றும் ஹரிபூஜையைச் செய்து பின்பு அன்னத்தைப் பக்ஷிப்பாள். தன் னுராதனைப் பெட்டிக் காணுதிருந்தபடியால் தன் தம்பிவீட் டிற்கு மனிதரை யனுப்பி தேவாராதனைப் பெட்டியைப் பார்க் கச் சொன்னுள். சேவகர் தம்பியார் வீட்டில்வந்து விசாரிக்கத் தன் வீட்டையெல்லாம் பரிசோதனைச் செய்தும் அந்த திருவாரா தனைப்பெட்டிக் கிடைக்கவில்லை யாதலால் அவளையே தன்வீட் டில்வந்து பார்த்துக்கொள்ளும்படி சொல்லி யனுப்பினுன். அம் மனிதன் சென்று அப்படியே சங்கதி யறிவிக்க அவளே தன் தம்பி வீட்டிற்குச் சென்று சோதித்து மகப்படாதிருந்தது. எவ்விடத் திலு மிது யில்லையென் றறிந்தவுடன், ஐந்துநாளுபவாசமாக அண் ணன்வீட்டிற் றுனிருக்க, பெருமாள் பிராம்மணன் ரூபத்தை வஹி த்து பிலாபாயி சொப்பனத்தில் வந்துதேவதார்ச்சனையைக் கொ ண்டுவந்து கொடுத்தார். பின்பு அவள் நித்திய நேமங்களை முடித் துப் பக்ஷணை செய்தாள்.

திருவாராதனைப் பெட்டி அக்காளுக்குச்சேர்ந்த சங்கதியைத் தம்பிகேட்டு பாவசுத்தியுடன் அனுதாபத்தை விசேஷமாக அடைந்து அண்ணனுக்கு அனேகாபராதங்களைச் செய்தேனென் று விநீதனுகி பெருமாளர்ச்சாமூர்த்தியை நானவ்விடம் நிறுத்தி வைக்காமல் கெடுதலைச் செய்தேனுதலால் பகவானுக்குத் தொ ந்தரைக் கொடுத்தேன், நான் மஹாபராதியென்று அண்ணன் தம்பிக ளிருவரும் சினேகபாவனை யுடையவராகி பிலாபாயினி டம் மந்திரோபதேசத்தைப் பெற்று பிரீதராகி சேவா இரதியை யுடையவராகி விஷ்ணுபக்தியைச் செய்துவரப் பெருமாள் பிரத்தி யக்ஷமாகி மூன்றுபேரையு மாதரித்தருளினுர்.

---

## இரமாபாயி சரித்திரம்.

சந்தராஜனெனு மோரரசன் ஸ்ரீஹரி பக்தனுயிருந்து பாகவ தர்களிடம் பிரபலமான பக்தியைச் செய்து வருவான். அவனுக் கொரு கன்னிகை இரமாபாயி யென்றிருந்தாள். அவளும் பக்தி

பாவனையை வஹித்தவளாயிருந்தாள். அவளுக்குச் சரிவயதுவந்தவுடன் தகப்பன் தனக்கு சமானமான ஓர் இராஜகுமாரனுக்கு அவளைக் கலியாணஞ்செய்துக்கொடுத்தான். அப்பெண்ணுக்குக் கிடைத்த புருஷன் அபக்தனுகியும் சொப்பனத்திலும் ஸ்ரீஹரியை நினையாதவனுக விருந்தான். அவன் பந்துக்களு மப்படியே பக்தியற்றவராக விருந்தார்கள். அவ்விடத்திலுள்ள ஜனங்களுக்கு விஷயானுபவமே பூர்த்தியாக விருந்தமையால் அப்பிரஜைகள் யாவரும் இரமாபாயிக்குச் சரிப்படா திருந்தார்கள். பகவத் பக்தியற்றவர்களுடைய சங்கத்திற் பொருந்தினேமே! என்று பெருத்த விசனத்தை யடைந்து தன்னை யிவ்விடத்தில் தகப்பன் கொடுத்ததற்கு அவனை வெறுக்காமற் முன்செய்த கருமமென்று நினைத்திருந்தாள்.

வெகுகால மிப்படி நடந்துவர, ரமாபாயி கர்ப்பவதியானுள். பத்தாவது மாசம் பிள்ளைப் பிறந்தவுடன் பந்துக்களனைவருக்கும் பிரபல சந்தோஷ முண்டாயிற்று. ஐசுவரியம் சம்பூர்ணமாக இரமாபாயிக்கிருந்து மதிக சிந்தையுடையவளாகித் தனக்கு சர்வவித பந்துவான ஸ்ரீஹரியை நினைத்து ஓ கோவிந்தா! உமது திருவடித் தாமரைகளை யென் ஹிருதயத்தி லெப்பவுந் தியானஞ் செய்கிறேன் ஸ்ரீஹரி! ரங்கா! உம்மையன்றி சஹாய கர்த்தாக்க ளெனக்கு யாருமிங்கில்லை ஸ்வாமி! இவ்விதத்திலுள்ள பக்திஹீனரான பிரஜைகளுக் கோர் மஹிமையைக் காண்பித்து இவர்களுடைய அவகுணங்களை யெப்போது நிவர்த்திசெய்வீரோ தெரியாது. ஓ வரதா! ஓ ராமா! ஏழையின் பிரார்த்தனையை ஈடேற்றி யருளுமென்று மனதி லெண்ணிக்கொண்டிருந்து காலங்கழித்து வந்தாள்.

இப்படியிருக்க ஒருநாள் ஹரிவாசரமான ஏகாதசி வந்தது. அன்றையதினம் மாம்ச பக்ஷணையைப் பண்ணவேண்டுமென்று நினைத்து ரமாபாயி புருஷனுன வரசன், ஒரு ஆட்டைக்கொண்டு வந்து அறுக்க எத்தனிக்கு மளவில் இரமாபாயி புருஷனைநோக்கி, பிராணநாதரே! இன்றையதினம் பெருமாளுக்கு முக்கியமாக விரதமிருக்கும் நாள். ஜீவஹத்தி யின்று செய்தால் நரகத்திற்குக் காரணமாகும். ஆனதால் ஆட்டைக் கொல்லவேண்டாமென்று சொல்லியு மவ்வரசன் தயையின்றிக் கொன்றுன். இதைக்கண்டு இரமாபாயி அதிக விசனத்தை யடைந்து ஓர் மனிதனையழைத்து இப்பட்டணத்திற் புனிதரான சாதுக்க ளிருப்பரோ? நீ ஊரெங்

ரு விசாரித்துவந்து சொல்லக்கடவா யென்றாள். அவனு மவ்வாறே கட்டளையிட்டபடி பட்டணத்திற் போய்ப்பார்க்குமளவில் ஸ்ரீஹரி தாசர்களான சாதுககளைக்கண்டு திரும்பிவந்து இரமா பாயியை நோக்கி தாயே! இவ்வூரில் பகவத் பக்தரான சாதுக்களைக் கண்டேனென்றான்.

இதைக்கேட்டு அம்மாது தன் சிசுவுக்கு விஷத்தைக் கொடுத்து தொட்டிலிற் படுக்கப்போட அக் குழந்தைக்குப் பிராணன் போயிற்று. வீட்டிலிருந்த ஜனங்க ளனைவரு மதிக வியாகூலத்தைக்கொண் டழத் தொடங்கினார்கள். ரமாபாயி மாத்திரம் வெளிக்குக் கண்களிற் ஜலம்வர வொட்டாமல் ஸ்ரீஹரி ஸ்மரணையைச் செய்துக்கொண் டிருந்தாள். அரச னவளைப்பார்த்து நீ மிகுதியான கடின சித்தத்தை யுடையவள். குழந்தைக்காக அழாதிருக்கிறாயே யென்று சொல்ல மனையாள் கணவனை நோக்கி இச்சரீரம் பிறப்பை யுடையது. நாசத்தை யடையும் இது மாயையினுடைய ஆடம்பர மாகும். ஸ்ரீஹரி தன்னுடைய கிருபையைக் காண்பிப்பாராயின் விக்கினங்க ளெவையுமணுகா. மஹாத்மாக்களான ஹரிதாசர்க ளிவ்விடத்திற்கு வருவார்களாயின் அவர்களுடைய திருவடி தீர்த்தத்தை நாம் கைக்கொண்டு இக்குழந்தைக்குக் கொடுத்தாலவனெழுந்திருப்பான் இதிற் சமுசயமில்லையென்று சொல்ல, அரசனவளைநோக்கி ஹரிதாசர்க ளெவ்விட மிருப்பார்களென்று கேட்க, மனையாள் பெருமாள் கோயிலி லிரங்கியிருக்கிறார்க ளென்ன, அவனுச்சரியப்பட்டு அவர்களிடஞ் சென்று சத்பாவத்தா லவர்களைப் பூஜித்து அவர்களுடைய திருவடி தீர்த்தத்தைக் கொண்டுவந்து குழந்தைக்குக் கொடுக்க, அச்சிசுவுக்குப் பிராணன்வந்து சௌக்கியமானதைக் கண்டான். இந்த விந்தையை அரசன் பார்த்துத் தன்னிடமிருந்த வனேக துர்க்குணங்களைவிட்டு ஹரிபக்தியை யடைந்து ஸ்ரீஹரியைப் பூஜித்தும் சாதுக்களைச் சேவித்தும் பக்தர்களிற் சிரேஷ்டனானான்.

---

## இராமராஜன் சரித்திரம்.

இராமபிரானை யெப்பொழுது முபாசித்துக்கொண் டிருக்கும் இராமராஜனென்னு மோர் அரச னிருந்தான். அவன் சர்வேஸ்வரனிடத்திற் பிரேமானந்தத்தை வகித்து பிரஜைகளுக் கெல்லாம்

பிரியனாகி இராமபிரானுடைய நாமத்தை நினைப்பிலிட்டும் வாயி னாற் சொல்வதுமாகவிருந்தான். இராமாயண கதையை விசேஷ ப் பிரீதியுடன் கேட்டு வருவான். ஆனால் அதில் சீதாபிராட்டியை இராவணனெடுத்துக் கொண்டுபோன கதையை மாத்திரம் க்ஷேமகர மல்லவென்று கேட்காதிருப்பன், அவனதைக் கேட்பதினால் வியாகூல மடைவானென்று அரசனிடமிருக்கும் பண்டிதனறிந்து அந்த கதா பாகத்தைவிட்டு மற்றபாகங்களைச் சொல்லிக்கொண்டு வருவான்.

வெகுநாள் இந்தப்பிரகாரமாக நடந்தேறிவர ஒருநாள் பண்டிதர் ஜ்வரதாபத்தால் பிடிக்கப்பட்டானதலால் தன்குமாரனைப் புராணத்தைச் சொல்ல நியமித்து சீதாபஹாரணத்தைத்தவிர மற்ற பாகத்தை வியாக்கியானஞ்செய்யக் கடவையென்று திட்டஞ்செய்தனுப்பினன். குமாரனு மப்படியே யாகட்டுமென்று அரசனிடஞ் சென்று இராமாயண கதையை வரிசையுடனாரம்பித்துத் தகப்பன் சொன்ன வார்த்தையை மறந்துவிட்டு சீதாராமர் பஞ்சவடியிற் சேர்ந்திருக்குமளவி லவ்விடத்திலுள்ள விருக்ஷங்களிடத்திற் காஞ்சனமிருகமாகி மாரீசன் வந்தான். சீதாபிராட்டி அந்த மிருகத்தைக் கண்டு இராமரைப் பார்த்து அந்த மிருகத்தைக் காண்பித்து ஆஹா! அந்தமிருக மெவ்வளவு சுந்தரமாகக் காணப்படுகிறது? பாருமென்றும் அதனைத் தான் விளையாடும் பொருட்டுக் கொண்டுவாருமென்றும் கேட்க இராம ரதனைக்கேட்டு அந்தப் பொன்வர்ணமான மிருகத்தைப்பிடிக்க வெகுதூரம் சென்று கைக்குக் கிட்டாமையால் இராம ரதனைக் கொல்ல அது "ஹா! லக்ஷ்மணா" வென்று கூவி கீழேவிழ, சீதாபிராட்டி லக்ஷ்மணரை இராமரிடம் போகச்சொல்லி அனுப்ப அத்தருணத்தில் இராவணன் நீதியைத் தப்பி சன்னியாசி வேஷத்தைப்பூண்டு சீதையினிடம்வந்து நிற்க அவனுக்கவ ளுபசாரவார்த்தைகளைச் சொல்லுஞ் சமயத்திற் பிராட்டியைத் தன்னிருப்பிடங் கொண்டுபோனானென்றான். சீதாபிராட்டியை இலங்கைக்கு இராவணன் கொண்டுபோனானென்ற கதையை அவ்வரசன் கேட்டு ஆவேசத்தை யடைந்து சேனாபரிவாரத்தைச் சித்தப்படுத்திக்கொண்டு அஸ்திர சஸ்திரங்களைக் கையிலேந்தி அந்த இராவணனைக் கொல்லும்பொருட்டுப் பிரயாணமாகி சமுத்திரத்திற்கு வந்தான். ஜலத்தி லரசன் பிரவேசிக்கு

மளவில் சாரங்கபாணியான ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியுடன் தனது ரூபத்தைக் காண்பித்து அவ்வரசனை நோக்கி இந்த சீதையை இராவணன் கொண்டுபோனான், நானவனைக் கொன்று சீதையைக் கொண்டுவந்தேனென்று பெருமாள்சொல்ல, அரசன் சமாதானப்பட்டு அபாரமான பக்தியைச் செலுத்தி ஜானகிஜீவனரான ஸ்ரீராமபிரானைப் பூஜித்து சமுத்திரத்தைவிட்டு தனது வீட்டிற்குச் சென்றான்.

---

## நரஹரிதாசர் சரித்திரம்.

ஒடியா ஜகந்நாதத்தில் நரஹரி தாசரெனும் பக்தரிருந்தார். அவர் இடைவிடாத பக்தியுடன் ஸ்ரீஹரி ஸ்மரணையைச் செய்துக்கொண்டு அவருடைய அவதார வேஷங்களனைத்தையும் அதிக நைபுண்ணியத்துடன் போட்டு பெருமாளுடைய சாக்ஷாத்காரத்தை பிரபலமாகக் காண்பிப்பர். வாத்தியமும் சங்கீதமும் நடனமும் விருப்பத்துடன் வைத்துக்கொண்டு தன்னுடைய வித்தையின் நிறைமையை விசேஷமாகக் காண்பிப்பார். இச்செய்கை பகவத்பக்தியை யுண்டாக்கி வருவதால் பிரஜைகளனேக ரவ்விடம் வந்து பார்ப்பார்கள்.

இவ்வண்ணமாக அவர் வெகுகாலம் நடத்திவர ஒருநாள் நரசிம்மஸ்வாமி அவதார வேஷத்தை நரஹரிதாசர் தரித்துசுப்பல்களாற் செய்யப்பட்ட ஸ்தம்பத்திலிருந்து வெளியேவந்து ஹிரணியகசிபனுடைய வேஷம்போட்டவனைக் கொன்று அவனுடைய குடலினைத்தையும் கழுத்திலணிந்துக்கொண்டு உக்கிரத்துடனிருக்க அவ்விடத்தில் பெரிய ஹாஹாகாரமுண்டாகி அனர்த்தமாய்விட்டது. பிரேதமாய் விழுந்த ஹிரணியகசிபவேஷதாரி பக்கத்திற் சேர்ந்தசில ஆப்தர்கள் அரசனிடமிச்சங்கதியைத்தெரிவிக்க அவன் பிராப்தமானது லபித்ததென்றும் பிரேதத்திற்கு சம்ஸ்காரங்களனைத்துஞ் செய்து என்னிடம் வருவீர்களாகில் நான் விசாரிப்பேனென்றான். இதைக்கேட்டு அவர்கள் பிரேதக்கிரியைகளைச் செய்துத் திரும்பி அரசனிடம் வந்துநிற்க, அரச னவர்களை நோக்கி இராம நாடகத்தை நரஹரிதாசரை நடத்தும்படிசெய்து அதில் தசரதன் வேஷ மவரையே போடும்படி ஏற்படுத்த வேண்டுமென்றான். அவர்களுமொருநாள் அரசனுக்கிணைப்படி இராமநாடகத்தைப்

போடும்படி நரஹரிக்கு நியமித்து வாத்தியகீதங்களும் விசேஷமாக வைத்தார்கள். ஹரிதாசர்க ளனைவரும் கீர்த்தனைசெய்து மதுரமான அவ்விராம கதையை யாரம்பித்து சகலருஞ் சந்தோஷிக்க அயோத்தியா காண்டத்திற் சிருபிதமான சங்கதியைச் சொல்லத் தொடங்கினர்.

தசரதமஹாராஜனை கைகேயிபார்த்து பூர்வத்திற் றனக்களித்த வரங்களை இப்பொழுது அடையவேண்டுமென்று அவைகளில் ஒன்றினு விராஜ்பத்தை பரதனுக்கும் மற்றொன்றால் இராமருக்கு வனவாசமும் ஆகிய இவ்விரண்டு வரங்களைக் கொடுக்கச் சொன்னாள். இதைக்கேட்டு தசரத மஹாராஜன் மனவருத்தமுற்றுக் கைகேயியை நோக்கி இந்த விராஜ்ய மனைத்தும் பரதனுக்கே ஆகட்டும் இராமனை மாத்திரம் பட்டணத்திலிருக்கச் செய்யக்கடவாயென்ன, அவள் சம்மதிக்காமலிருக்க, இராமபிரா னிதைக்கேட்டு சீதையுந் தம்பியுந் தானுங்கூடி தகப்பனாரான தசரத மகாராஜனிடம்வந்து தெண்டஞ் சமர்ப்பித்து வனவாசத்திற்குச் சென்றார். இச்சங்கதியை தசரத மஹாராஜ வேஷம் போட்டவர் கேட்டு பூமிமேல் விழுந்து இராமரெனக்குப் பிராணபூதராவர் ஆத்மரூபருமாவார். அந்தர்ஜ்ஜோதியுமாவார். அவரே யெனக்குத் தாயுந் தந்தையு மாவார். விஸ்ராந்தி கொடுப்பவரு மவரே! இன்று கைகேயி வார்த்தைப்படி இராமர் கானகத்திற்குச் சென்றனர். அவ ரெப்பொழுது திரும்புவாரோ தெரியாதே! பிராணநாதன் போனபிறகு பிராணனை வைப்பதென்னப் பிரயோஜன மென்று அவ்வேஷதாரி இராமரையே நினைத்திருந்து பிராணனைவிட்டுவிட்டார். ஜனங்க ளனைவரும் பார்த்துக்கொண்டிருக்க சுவாசமின்றி நரஹரிதாசர் விழுந்திருந்தார். வெகுநேர மவ்விட மப்படியே வைத்திருந்தும் உயிர்வரவில்லை. ஸ்ரீரகுராமரை சித்தத்திலிருத்தி ஸ்ரீயப்பதி பதத்தை யடைந்தாரென்று சகலருஞ் சொல்லிக்கொண்டார்கள்.

---

## ஒகராசு சரித்திரம்.

வைசியகுலத்தில் ஒகராசென்பவர் வைஷ்ணவபக்தியுடையவராகி சம்பத்தையும் தாராபுத்திரரையும் சரீரம் முதலானவைகளையும் லக்ஷிக்காமல் ஹரிபஜனையில் நிரதராகி அசத்தியத்தைச் சொல்

லாமல் காலயாபனம் பண்ணுவார். அவர் மனைவியும் புருஷனுக்கு மாறுசொல்லாமல் சாதுக்களைச் சேவித்துப் பணிவிடைச்செய்துவருவாள். ஸ்ரீஹரி சர்வபூதங்களிலும் நிறைந்திருப்பவரென்றெண்ணி பிரதி தினமும் பத்துபேருக் கன்னமிட்டு வருவார். தனக் கன்னவஸ்திரங்களுக்குக் குறைவு வந்தாலும் தன்னுடைய நியமத்தை விடாமல் நிறைவேற்றியும் சர்வகாலங்களிலும் ஸ்ரீஹரி! கிருஷ்ணா! அச்சுதா! ரங்கா! நாராயணா! நரஹரியென்று நாமத்தைச் சொல்லிக்கொண்டும் சத்விருத்தியை சதிபதிகள் வஹித்திருந்தார்களாதலால் சுகிருதமெனும் சம்பத்து அவ்விருவருக்குமுண்டாகிவந்தது,

இப்படி நடந்தேறிவர, பெருமாளந்தப் பக்தரையுமவர் மனைவியையும் சோதிக்கும்பொருட்டு அவர்கள் வீட்டுக் கோர் சாதுரூபத்தைப் பூண்டுவந்து வாசலில் நின்று அந்த பக்தருடைய மனைவியைப் பார்த்து உனது பர்த்தா எங்கு சென்றாரென்று கேட்க, அவர் கடைவீதிக்குச் சென்றாரென்று அம்மாது சொல்லி அவருட்காரும் பொருட்டு ஆசனமளித்தனள். அவரதின்மீதுட்கார்ந்து அவளைநோக்கி நான் கோரபசியினால் பீடிக்கப்பட்டவனாயிருக்கிறேன். இவ்விடத்தில் நீ அன்னமளிக்கிறாயென்று வெகுபேர் சொன்னார்கள். அந்த கீர்த்தியைக்கேட்டு நான் இங்கு வந்தேன். ஓ தாயே! இப்போது சமையற்செய்து அன்னமிடக் கடவையென்று கேட்க, உடனே அவள் உள்ளே சென்று பானைகளைப் பார்க்கத் தானியமில்லா திருந்தது, அப்பொழுது ஒன்றுந் தோன்றாமல் ஐயோ! பெருமாளுருவமான் இவருபவாசமாயிருப்பது நன்மையல்லவே யென்று யோசித்து ஒரு விராவுறனிடையுள்ள தன்னுடைய பொன் மூக்குத்தியைக் கடையில் விற்று கிடைத்த பணத்திற்கு சாமக்கிரிகையை வாங்கி வந்து சமையல் வேலையைச் சீக்கிரத்தில் முடித்து இலையிற் பதார்த்தங்களை வட்டித்துச் சாதுவை அழைத்து சாப்பிடும்படிச் செய்து தனது பிரீதியைக் காண்பித்தனள். பெருமாள் சந்தோஷப்பட்டு அவளைநோக்கி ஓ மாதே! நான் மிகுந்தபசியால் வருத்தமடைந்திருந்து பூர்த்தியாக வன்னத்தைப் பக்ஷித்து, திருப்தியடைந்தேனென்று சொல்லிப் பழயபானைகளடுக்கிவைத்திருக்கு மறையிற்சென்று ஓர் பானையிற் றன்கையை வைத்து இதில்


ఠగరాసు.
ஒகராசு.
భార్య.
மனைவி.
హరియానందు.
ஹரியானந்தர்.
శిష్యుడు
రాజు.
அரசன்.
రామచంద్రభట్టు.
இராமசந்திரபட்டர்.

மிகுதியாக திரவியமிருக்கும், உனக்கு வேண்டும்பொழுதெடுத்துக் கொள்ளலாம், சாதுஜனங்களுக்குப் போஜனமிட சௌக்கியமாகும். பரோபகாரத்திற்குப் பிரயோஜனப்படுமென் றுரைத்து மறைந்தார், அம்மாதும் பாவசுத்தியடைந்து பக்ஷணைக்கு இல்லையென்னும் கிலேசமடையாமல் அதிதியாகவந்த வவருக்கு உபசாரம் நடந்ததல்லவாவென்று வெகு சந்தோஷத்துடனிருந்தாள்.

பின்பு ஒகராசர் வீட்டிற்கு வந்தவுடன் நடந்தசங்கதியை மனையாள் கணவனுக்குச் சொல்லித் தன் வீட்டுவேலையி லிருந்தாள். பக்த னச்சங்கதி யனைத்தையுங்கேட்டு துராசையை யேன் கொள்ளவேண்டுமென்றும் அன்னியருடைய சொத்துத் தனக்கு வேண்டாமென்றுஞ் சொல்லி பகவத் பக்தியால் நிரபேக்ஷராகி யிருந்து அந்தப் பானையைத்தான் தீண்டாமலே யிருந்தார். ஒரு காலத்தி லனேக சாதுக்கள் வீட்டிற்கு வந்தார்கள். வீட்டில் தானியமில்லாததை அறிந்து அவர்களுக்குப் பக்ஷணை யெப்படிநடத்துவதென்று விசாரமுற்று அப்பானையண்டையிற் றான்சென்று பார்த்தார். அதில் பொன் வராஹன்களைக்கண்டு சந்தோஷித்து அந்தத் திரவியத்தைக்கொண்டு சாதுக்க ளெல்லாவரையும் செம்மையாகப் பூஜித்தார். பின்பு தன் மனையாளைப்பார்த்து அடி பெண்ணே! அன்றொருநாள் அதிதி கைவைத்த பாண்டத்தில் அபரிமிதமாக மோஹராக்கள் நிறைந்திருக்கின்றன. இது கோவிந்தனுடைய காரியமன்றி வேறல்ல, ஆகையால் அன்று அதிதியாய் வந்தவர் ஹரி சர்வேஸ்வரனேயாவர். இது அவருடைய செய்கையென்று நீயறியாதிருந்தாய். உனக்கே அவர் முன்பாக தரிசனங் கொடுத்தார். பெருமாளுடைய திவ்யமங்கள விக்கிரகத்தை நானெப்பொழுது காணப்போகிறேனென்று பிரிய பாவத்துடன் கண்ணீரொழுக வெகுவாக தோத்திரங்களைச் செய்யத் தொடங்கினர். ஜய ஜய ரங்கா! ஜய கோகுலவாசா! ஜயஜானகிஜீவனா! தேவரீரொருவராக விருந்து மூன்று லோகங்களையும் வியாபித்தீர். அவசரகாலத்தில் பக்த ஜனங்களுக்காக அவதாரங்களைத் தரிக்கின்றீர். ஓ பரம தயாளுவே! பக்தஜனங்களை வெகுவாக் ரக்ஷித்தீர். அடியேனுக்குத் தேவரீருடைய சகுண ரூபத்தைக் காட்டக்கடவீர். ஓ பரமபாவனரே! பக்த வத்சலரே! ஜனார்த்தனரே! ஸ்ரீஹரி! யென்று பிரார்த்திக்கப் பகவான் பிரசன்னராகி நான்கு

புஜங்களுடனும் கிரீட குண்டலங்களும் கௌஸ்துபமும் வனமாலையும் பீதாம்பரமும் வைஜயந்தியும், புன்சிரிப்பான திருமுக மண்டலத்துடன் பிரகாசம் பொருந்தும்படி சேவைசாதிக்கப் பக்தன் தீர்க்கதெண்ட நமஸ்காரஞ்செய்தார். பெருமாளுமந்தர்த்தானமாயினர். ஒகராசு அபாரபக்தியுடன் அன்னதானத்தை இடைவிடாது செய்து அந்தியத்தில் ஹரிபதத்தையடைந்தார்.

---

## ஹரியானந்தர் சரித்திரம்.

ஹரியானந்த ரென்பவ ரிராமானந்தருடைய சிஷ்யராகி பிரியத்துடன் ஸ்ரீ ஹரி பஜனையைச் செய்துகொண்டு சராசரங்களை ஆத்மரூபமாகப் பார்த்து ஆசையற்றவராகி அர்ச்சனை பூஜைகளைச் செய்து அனேக ஜனங்களை பக்திமார்க்கத்திற் பிரவேசிக்கச்செய்து புனிதராக்கிதன் வாழ்நாள் கழித்துவந்தார். சிஷ்ய வர்க்கமு மவரது சேவையைச் செய்துவருவார்கள். பிரதிதினமு மோர் சிஷன் பிக்ஷைவாங்குவதற்குக் கடைவீதிக்குப் போய் ஒருசேர் (ஓர்படி) மாவைக் கொண்டுவருவான். அந்த ஒருபடி மாவினால் சமையலைச் செய்வித்து அதனைக்கொண்டே நூறு பிராம்மணர்களுக் கன்னமளிப்பார்.

இவ்வண்ணமாக வெகுகாலம் நடந்துவர ஆசாரியரான ஸ்ரீ ராமானந்த சுவாமி தன் சிஷ்யர்களுடன் சஞ்சரித்துக் கொண்டு ஹரியானந்தரிருக்குமூருக்குப்போனர். ஹரியானந்தருடைய சிஷ்யன் பிக்ஷைக்காக கடைவீதியிற் சஞ்சரித்துக்கொண்டிருக்க பரமாசாரியரான இராமானந்தரைக்கண்டு நமஸ்கரித்தான். அவரவனை நோக்கி ஆசாரிய சேவையில் நீ அதிகப் பிரீதியை வகித்திருக்கிறாய், ஆனால் நீ அல்பாயுளை வுடையவன். நாளையதினம் மூன்றாஞ் ஜாமத்தில் நீ மரணமடைவாயென்று சொன்னர். இதைக் கேட்டு அந்தசிஷன் கிலேசமுற்று தன் ஆசாரியரிடம் வந்து பரமாசாரியர் சொன்ன சங்கதியை யறிவித்து ஆசாரியசேவை பூர்த்தியாக அமைவதற்கு ஆயுர்த்தாயம் பூர்த்தியாகயில்லையேயென்று விசனப்படுகிறேன், தேவரீர் சரணங்களே யெனக்குக் கதியல்லவேறொன்றில்லையென்று சொல்ல, ஆசாரியரவனை நோக்கி கோவிந்தனுடைய கிருபையினால் காலன் தன்னுடைய செய்கையை விதிக்கமாட்டான். நீ சிந்தைசெய்யவேண்டாமென்று சொன்னர். பின்பு ஹரியா

னந்தர் மறுநாள்காலே ஸ்நானஞ்செய்து பகவானுடைய் பூஜையைச் செய்ய வாரம்பித்து சிஷனைப் பெருமாள் சன்னிதிக்கு முன்பாக விருக்கச்செய்து தான் தியானத்தில் சர்வேஸ்வரனை சியாமள வர்ணரும் சுந்தரமானவரும் சுகுமாரரைப்போலும் சதுர்ப்புஜங்களுடனும் கோமளமான துளபமாலையும் கௌஸ்துவமணியும் கிரீடகுண்டலங்களும் கைகளிற் சங்குசக்கரங்களைத் தரித்தவராகவும் பிரபையுடன் கூடினவரைப்போலும் பாவனைசெய்து சிந்திக்க மனவாக்காயங்கள் ததாகாரமாகி யமைந்தன. அப்பொழுது ஸ்ரீ ஹரி அதே ரூபத்துடன் வெளியிலுங் காணப்பட்டார். அச்சமயத்திற் காலனுடைய தூதர் சிஷ்யனைக் கொண்டுபோகவர ஸ்ரீ ஹரியினுடைய சக்கர மவ்விடஞ் சுற்றிக்கொண்டிருந்தது அது அவர்களை அவன் சமீபத்திற்கு வரவொட்டாமல் தடுத்தது. அவர்கள் ஜாமம்வரைக்குங் காத்திருந்தும் ஒன்றுந் தோன்றாமல் அவ்விடம்விட்டு ஓடினார்கள். சிஷனப்பொழுது ஆசாரியரைக்கண்டு ஸ்வாமி! ஸ்ரீ ஹரியினுடைய சக்கரம் காலனுடைய தூதரை என்கிட்ட வரவொட்டாமல் தடுத்து நிவாரித்தது. அவர்களும் அசக்தராகிப் போய்விட்டனர். அஸ்தமனம் நெருங்கிற்று ஹரிபூஜையைச் செய்யவேண்டும் தேவரீர் சொஸ்தமனதுடன் ஜாக்கிரதையாகி எழுந்திருப்பது நன்று இது அடியேனுடைய விண்ணப்பமென்று சொல்ல, ஆசாரியர் தேஹபாவத்தை யடைந்திருக்க சிஷ்யன் சிறந்த பிரீதியுடன் குருசரணங்களைக் கெட்டியாகப் பிடித்து அளவிலாத ஆனந்தத்தில் அமிழ்ந்திருந்தான்.

மறுதினத்தில் ஜோல்னைவை யேந்திக்கொண்டு சிஷன் மாதுகரவிருத்திற்குப் போனான். இராமானந்தர் கடைவீதியி லவனைக்கண்டுக் கிட்டவழைத்து காலனை யெவ்வண்ணமாக செலித்தாயென்று வினவ அவன் சங்கதி யனைத்தையுஞ் சவிஸ்தாரமாகச் சொன்னான். அவரச்சங்கதி யனைத்தையும் கேட்டு ஆச்சரியமுற்று ஹரியானந்தருடைய ஆச்ரமத்திற்குப் பாதசாரியாய்வர, இராமானந்த சுவாமிக்கு வினய விதேயங்களுடன் நமஸ்கரித்து நிற்க, ஆசாரியர் ஹரிஆனந்தரைப் பார்த்து சாது ஜனங்களுக்குள் நீ சிரேஷ்டனவாயென்று கொண்டாடி யோகதாரணை சக்தியாற் காலனை யொருசமயத்தில் யான் வஞ்சிப்பேன். அதுவு மன்னியர் விஷயமாக ஆகமாட்டா தென்றுசொல்ல ஹரியானந்த ராசாரியரை

நோக்கி இது தேவரீருடைய கிருபையன்றி வேறன்றென்று அடிக்கடி நமஸ்கரித்தனர். இராமானந்தர் மறுபடியும் யோகத்தைக் காட்டினுஞ் சருணபக்தியே உத்தமமாகுமென்று சொல்லி இது ஸ்ரீயப்பதிக் கிருபையென்று தன்னிருப்பிடஞ் சென்றார். ஹரியானந்தர் அபாரமான பக்தியுட னுலகத்தில் வெகுகாலம் வீற்றிருந்தார்.

---

## இராமசந்திரபட்டர் சரித்திரம்.

தபதியெனும் நதிதீரத்தில் அமலாளமெனு மோர்கிராமமிருந்தது, அவ்விடத்தி லிராமசந்திரரெனும் பிராம்மணர் பிரக்கியாதி யடைந்திருந்தார். வேதசாஸ்திரங்களில் நைபுண்ணியமும் விஷ்ணுபக்தி பிராபல்யமுமுடையரா யிருந்து பிக்ஷைவாங்கி ஜீவனம் செய்துவருவார். ஆசையற்றவராகி அக்கினி சொரூபரான யக்யேஸ்வரரை அனுதினமு மாராதித்து அவ்வூரரசனுக்கு உபாத்தியாயராகி யிருந்தும் அது சம்மதியமல்லவென்று இராஜனுடைய வீட்டிற் கெப்பொழுதும் செல்லார். அரசன்மனைவி அபேக்ஷாரஹிதரான உபாத்தியாயருக்கு ஆபரணங்களையுந் திரவியத்தையுங் கொடுக்கவேண்டுமென்று கிருபையுடையவளாகி அவரது பத்தினியை வீட்டிற்கு வரச்சொல்லியழைத்துத் தன்மீதிருந்த வாபரணங்க ளனைத்தையு மவளுக்குத்தந்து அங்கீகரித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து நமஸ்கரித்தாள். உபாத்தியாயரின் மனையாளவைகளைப்பூண்டு அந்த ஆபரணங்களுடன் வீட்டிற்குவந்தாள். அவளைப்பார்த்த மாத்திரத்தில் அவளுடைய பர்த்தா அபாரமான துக்கத்தையடைந்து இந்த உபாதியை யேன் கொண்டுவந்தாய்? இது ஸ்ரீஹரி பதத்திற்கு விலக்காகுமே! ஒருதவியு மிதனாலாகாதே! யென்று கூறி புருஷன் வெறுப்புடனிருக்க அவள் கணவன் வாக்கியங்களைக்கேட்டு ஆபரணங்க ளனைத்தையும்கழற்றி வேறொன்று மெண்ணாம லக்கினிகுண்டத்திற் போட்டாள். பின்பு அவள் நிருபாதிகையாயிருப்பதைப் பார்த்து அவர் சந்தோஷித்திருந்தார்.

அரசனுக் கிச்சங்கதியை யாரோ அறிவித்தனர். அவனிதைக் கேட்டு உபாத்தியாயரிடம் வந்து ஸ்வாமி! உமக்குக் கொடுத்த வாபரணங்களைத் திரும்பி எனக்குக் கொடுக்கக் கடவீரென்ன,

இதைக்கண்டு இராமசந்திர பட்டர் தொந்தரை யடைந்து தியானத்தில் நின்று யக்கியமூர்த்தியான ஸ்ரீஹரியைப் பிரார்த்திக்குமளவில் சகல பூஷணங்களும் சிறந்த காந்தியுடன் அக்கினி குண்டத்தினிடந் தோன்றி வெளிவந்தன; அரசனதைக்கண்டு வினயத்துடன் பூமிமேல் விழுந்து நமஸ்கரித்துநிற்க, உபாத்தியாய ராசனை நோக்கி ஆபரணங்களைக் கொண்டுபோகக்கடவீரென்ன, அரசனவரை வணங்கி ஸ்வாமி! அடியேன் கொடுத்தத் திரவியத்தைத் திரும்பி வாங்கமாட்டேன், தேவரீர் மகிமையைக் காணவேண்டுமென்று இந்த யுக்தியைச் செய்தேனென்று சொல்ல, இராமசந்திரபட்டர் யாசகரை யழைத்து அவ்வாபரணங்க ளனைத்தையுமவர்களுக்குப் பங்கிட்டு நிரபேக்ஷராகி பகவத் பக்தியிற் சிறந்திருந்தார்.

---

## சுஹகசா சரித்திரம்.

அழுதாபாது எனும் பட்டணத்தில் சுஹகசா எனும் ஹரி பக்தரிருந்தார். அவர் ஜாதியில் துலுக்க ஹிஜடாவென்று சொல்லப்படுவார். (ஆண்பெண்ணுகாம லலியாயிருந்து ஸ்திரீ வேஷத்தைப் பூண்டிருந்தார்.) இருதயத்தி லெப்பொழுதும் சியாமள நிறமுடையவரும் சதுர்ப்புஜ சங்குசக்கரங்களை யுடையவரும் சுந்தரதிருமேனி யுடையவருமான ஸ்ரீஹரியின் திவ்விய மங்கள விக்கிரகத்தை தியானித்து அவரையே தன்னுள் பார்த்துக்கொண்டு அவரது திருநாமத்தை வாயினுற் சொல்லிக்கொண்டு சகலரிடத்தும் அவரொருவரே நிறைந்திருப்பாரென்று சமதிருஷ்டியை யடைந்து சர்வேஸ்வரனையே பார்த்துக்கொண்டிருப்பர். தன் ஜாதியார் பட்டணத்திற் சஞ்சரித்திருந்தால் அவர்களுட னவர் சேருகிறதில்லை. சீலராகி வீட்டிலிருந்துக்கொண்டு ஸ்திர புத்தியுடன் ஸ்ரீஹரி நாமத்தை ஏகாக்கிரமாக செய்துவருவார். காமம் மதம் முதலான விகாரங்க ளனைத்தையுங் கண்டித்து கைகளாற் றுன்செய்யுங் காரியங்க ளனைத்தும் ஹரிவரதருக்காகவே யென்றெண்ணியிருப்பார். பிராட்டி நாயகரான பெருமாளுந் தனது தரிசனத்தை அப்போதுக்கப்போ தளித்துவருவர்.

இவ்விதமாக வெகுகாலம் நடந்தேறிவர அத்தேசத்திற் கடினமான கருப்புண்டாயிற்று. அனேகர் அன்னங்கிடைக்காம லுயிர்களை

விட்டனர். மேகமெப்பொழுது வருஷிக்குமென்று சகலருமெதிர் பார்த்திருந்தனர். அத்தேசத்திற்கு பிரபுவாயிருந்தவன் அனேக பிராம்மணர்களைக் கொண்டு மழைபேயும்பொருட்டு அனுஷ்டானத்தைச் செய்வித்துத் தானு முபவாசியாயிருந்தான். ஏழுநாள் பரியந்த முபவாசமாக விருக்குமளவில் அவன் சொப்பனத்திலோர் புருஷன்வந்து இப்பட்டணத்திற் சுஹகசா யெனும் நிஜபக்தர் ஹிஜடாஜாதியிலிருக்கிறார், அவரை நீ சரணாகதி யடைந்தால் பெருமாள் சந்தோஷித்து பெருத்த மழையைப் பொழியச் செய்வார், நீ அஹங்காரத்தை வஹித்து அப்படி செய்யாவிடில் நிலைமைபொருந்தாதென்று சொல்லி மறைந்தான். இவ்வித சொப்பனத்தைக் கண்டு மறுநாளெழுந்திருந்து தேவனே யிப்படி சொப்பனத்தைச் சாதித்தாரென்றெண்ணித் தன்னுடைய மந்திரிகளுக்குத் தெரிவித்தான். அவர்க ளரசனைநோக்கி ஓ பிரபுவே! கடினமான கருப்பு காலத்தால் அளவிறந்தப் பிரஜைக ளவஸ்தைப் படுகிறார்கள், அவர்க ளனைவருக்கும் நன்மை செய்வது மேன்மையாமென்று விண்ணப்பஞ்செய்ய, அரசன் தனது பரிவாரத்துடன் ஹிஜடா வீட்டிற் கெழுந்தருளி தான் கண்ட சொப்பன சங்கதியைச் சுஹகசாவுக்குத் தெரிவித்து நமஸ்கரித்தான். இதைக்கேட்டு சுஹகசா அனுதாபத்தை யடைந்து ஸ்ரீஹரியை உத்தேசித்து ஓஸ்வாமி! இந்த உபாதியை எனக்கேன் வைத்தீர்? ஓ பரமபுருஷா! ஓ பரந்தாமா! நீச்ச ஜாதியிற் பிறந்ததன்றி ஹீன விருத்தியும் ஹீனலக்ஷணமு முடைய வெனக்கு ஓர் சுகுணமு மில்லாதிருக்க நீரெப்படி கிருபை செய்வீரென்று சொல்லி வாசலில்வந்து மழைபேயும்பொருட்டு மானத்தைப் பார்க்க மேகமெவ்விடத்து மில்லாதிருப்பதைக்கண்டு மிகுந்த விசனத்துடன் கண்களிரண்டையு மூடிக்கொண்டு ஸ்ரீஹரிமூர்த்தியைத் தனக்குள் பாவித்து ஓ பக்தவச்சலரே! பாண்டுரங்கரே! அனாதநாதரே! ஆபத்பாந்தவரே! கோவிந்தா! கோபிவஸ்திராபஹாரா! நாராயணா! நரஹரி யென்று அனேக விதங்களாகத் தோத்திரஞ்செய்தும் ஸ்ரீஹரிகருணையை யடையாதிருந்தனர். அதனாலவர் அபாரமாக அழத்தொடங்கி ஓ பாண்டுரங்கரே! உமது மீதிருக்கும் பிரீதியை நான் விட்டுவிடுகிறேன். என் மூக்கிலணிந்திருக்கும் நத்தைக் கழற்றிவிடுகிறேன் கைகளிலணிந்திருக்கும் வளையல்களை யொடித்து விடுகிறேனென்று அவை

களைச் சேதிக்க எத்தனித்தார். அவ்வேளையி லாகாசத்திலோர் மூலையிலிருந்து மேகங்கள் சூழ்ந்துவந்து மழையை வேண்டுமளவு பொழிந்தன. ஜனங்களனைவரும் ஜய ஹரி! ஜயரங்கா! ஜயஸ்ரீ கிருஷ்ணா! ஜய ரகுராமா! வென்று பக்தியுடன் சொல்லத்தொடங்கினார்கள். பகலுமிரவும் மழைபொழிய அரசன் திரும்பி பக்தருக்கு நமஸ்கரித்து உமக் கேதேனும் தேவையாயிருக்கிறதேனும் என்றான். அப்பொழுது சுஹகசா பிரபுவைநோக்கி எனக்குக் குறை ஒன்று மில்லாதிருக்க நானுமிடத்திலிருந்து பெறக்கோருவதென்ன விருக்கிறது? சருவேஸ்வரன் சொப்பனத்தி லுமக்குத் தெரிவித்து எனக்கு உபாதியை யுண்டாக்கினார். பிரஜைகளுடைய தொந்தரையை யினி நான் பொறுக்கமாட்டேன். சரீரத்தை விடுவேனென்று சொல்லி அங்கே ஓர் பள்ளத்தை தோண்டும்படி ஜனங்களுக்கு ஆக்கினைசெய்தார். அரசனும் மற்றவருங்கூடி அப்படியே யோர்பள்ளத்தை தோண்டினார்கள். சுஹகசா அப்பள்ளத்தில் நின்று அவ்விடத்தி லனைவரையும் பார்த்துத் தன்னுடைய தீக்ஷையை யாவர் கைக்கொள்வரோ அவர்களுக்குச் சமுசார பயம் நிவர்த்தியாய்விடும், வேண்டுமென்பவர்கள் வரலாமென்றழைக்க, அனேக ரவ்விடத்திற் கூடியிருந்தும் அவருடையவேஷம் நிந்திக்கத்தக்க வேஷமென்று யாருங் கைக்கொள்ளாம லிருக்கப் போக்கில்லாத ஓர் மனிதன்தைக்கண்டு தனக்கிருக்குஞ் சமுசாரம் நித்தியதுக்கமாக விருப்பதா லதனை நிரசிக்கக் கடவீரென்று சொல்ல, சுஹகசா அவனை அருகில் அழைத்து குருமந்திரத்தைச் சொல்லி தன் கையிலிருக்குங் கங்கணத்தைக் கழற்றி அவன்கையிற்போட்டு தன்மூக்கிலிருக்கும் நத்தையு மவன் மூக்கிலிட்டு ஸ்ரீ ஹரி ரூபத்தை தியானத்திலிட்டு சமாதி யடைந்துவிட்டார்.

---

## பன்ஹாஜீ சரித்திரம்.

குஜராத்தி தேசத்தில் டோங்கரென்றோர் வூரிருந்தது. அதில் நிஜபக்தரான பன்ஹாஜீ வாசமாயிருந்து பரந்தாமனுடைய நிஷ்டையைத் தனக்குள் பிரபலமாகச் செய்து வருவார். அரசனிடத்தி லவர் காவலாளியா யிருந்து அவனை ரக்ஷணைசெய்து அதின் மூலமாகத் தன்னுடைய குடும்ப போஷணத்தை நிறைவேற்றி வருவார்.

தானொருநாள் துவாரகையிலிருக்கும் ஸ்ரீ ஹரி மூர்த்தியைச் சேவித்து அதனை யெப்பவும் தியானஞ் செய்துக்கொண்டு சார்வதா அவர் திருநாமத்தைச் சொல்லி வருவார். பொய் சொல்லாமல் அரசனிட மதிக சினேகத்துட னிருப்பதால் பிரபலமான விசுவாசம் பிரபுவுக் கவர்மேலிருந்தது. இப்படி நடந்துவர நரகசதுர்த்தசி தினத்தில் தீபாவளி பண்டிகைக்கு தீபோச்சவத்தை அரசன் விசேஷமாகச்செய்வித்து வருஷந்தோறும் பிரபலமாக நடத்திவருவான். ஒருவருஷ முச்சவகாலத்தில் நடுராத்திரி பரியந்திரம் தானிருந்து வீட்டுக்குட்போகப் புறப்படும் தருவாயில் பன்ஹாஜீ தன் அங்கவஸ்திரத்தைப் பிடித்துக் கசக்கிக்கொண்டிருந்தார். அரச னதைக்கண்டு ஆச்சரியமுற்று ஏனிப்படி செய்கிறீரென்று கேட்டான். அதற்கு பன்ஹாஜீ துவாரகா நாதனுடைய சன்னிதியில் பிராம்மணர்கள் வஸ்திர பூஷணங்களைப் பெருமாளுக்கு விசேஷமாகச் சாத்தி ஹாரதியைக் கொடுக்கும்பொழுது அவருடைய அங்கவஸ்திரம் நெருப்புப் பற்றிக்கொண்டது. அதை நான்கண்டு நெருப்பை அவித்தேனென்றும், இவ்வேளையிற்பெருமாளுக்குமஞ்சன் வஸ்திரங்கட்டப்பட்டிருக்கிறதென்றும், அனேகமான வாபரணங்களும் பெருமாள்மேல் போடப்பட்டிருக்கின்றனவென்றும் சொன்னார். அரசனிதைக்கேட்டுஒன்றுந்தோன்றாமல்சேவகர்களையழைத்து துவாரகாபுரியரசன் தனக்கு ஷட்டகனாயிருந்தபடியால் அவ்வேளையிலே ஓர் கடிதமெழுதி அதி லித்தினத்தி லிவ்வேளையில் அங்கு சன்னிதியில் நடந்த விந்தை யின்னதென்று தெரியப்படுத்தும்படி கேட்டுவர சீட்டை அவர்கள் கையிற்கொடுத்தனுப்பினான், அச்சேவகர்கள் துவாரகா புரிக்குவந்து அரசனுக்குக் கடிதத்தைக் கொடுத்தார்கள். அவனதைப்படித்துப்பார்த்து உடனே மறுகடிதமெழுதினான். அதிற் சங்கதியாவது உச்சவதினத்தில் பெருமாள் சன்னிதியில் விசேஷமாக தீபங்களை யேற்றி மஞ்சளாடையும் மகத்தான வலங்காரங்களும் பகவானுக்குச்சாத்தப்பட்டிருந்தன. அர்ச்சகர்கள் நீராஜனத்தைக் கொடுக்குமளவில் பெருமாள் வஸ்திரத்தில் நெருப்புப்பட்டது. அவ்வேளையிற் பன்ஹாஜீ சன்னிதியிலிருந்து அவர்மேல்வைத்த பிரீதியால் பற்றியெரியும் வஸ்திரத்தைத் தன்கையா லணைத்தார். இது சங்கதியென்று கடிதமெழுதி அச்சேவகர்களிடங் கொடுக்க அவர்கள் கொண்டுவந்து அரசனுக்குச்

செலுத்தினார்கள். அரசன் கடிதத்தைப்பார்த்து பன்ஹாஜியைக் கண்டு பக்தியுடன் நமஸ்கரித்து ஸ்ரீஹரி பக்தராகி என்னிடஞ் சேவகா விருத்தியிலிருப்பது தகுதியல்லவென்று இரண்டு கிராமங்கள் பன்ஹாஜீ பக்தருக்குக் கொடுத்து பெருமாள் கயிங்கரியத்தைப் பிரியத்துடன் செய்து வாருமென்று வேண்ட அவரும் சந்தோஷித்து ஹரிபிரசாதமென்று நினைத்து அபரிமிதமாகப் பகவானிடம் பக்தி செலுத்திவந்தார்.

---

## ஸ்ரீதரன் சரித்திரம்.

ஹிந்துஸ்தான்தேசத்தில் ஸ்ரீதரரென்றொரு பிராம்மணரிருந்தார். அவர் ஸ்ரீஹரி பஜனையை சர்வகாலங்களிற் செய்துக்கொண்டும் நிஷ்கபட விருத்தியுடையராகி கிரகஸ்தராயிருந்தும் மோஹமமதைகளைவிட்டு மனையாளுடன் வாழ்ந்திருந்தார். விநோதமான ஹாஸ்ய வசனங்களெவர்கள் சொல்லினும் அவைகளைத் தான் கேட்டுக்கொண்டு சத்தியமென்றெண்ணியிருப்பர். ஒருகாலத்திலவர் தன் மனையாளைக் குதிரைமேலேற்றிக்கொண்டு யாத்திரைச் சென்றார். வழியில் கோரமான ஓர் பெரிய ஆரண்ணியத்திற் பிரவேசிக்குமளவில் சில திருடர்களவர்களுடன் சேர்ந்து வார்த்தையாடிக்கொண்டு கூடப்போகத் தொடங்கினார்கள். ஸ்ரீதரர் மனைவி தன் புருஷனைநோக்கி பிராணநாதரே! இரவுகாலஞ் சமீபித்தது. இது மஹாரண்ணியமானதால் பயத்திற்குக் காரணமாயிருக்கிறது. நாம் திரும்பிக் கிராமத்திற்குப் போவதுயுக்தமாகுமென்றாள். இதைக்கேட்டு திருடர்கள் ஸ்ரீதரரைக்கண்டு ஐயா! உம்மோடு நாங்களிருக்கப் பயமெப்படி யுண்டாகுமென்று சொல்ல, ஸ்ரீதரரவர்களை நோக்கி அதனை நம்புவதெப்படி? யென்ன, திருடர்கள் நம்மிருவருக்கு மத்தியில் ஈஸ்வரனாகிய ஆத்மாராம ரிக்ஷகனாகயிருக்கிறார். இது பிரமாணவாக்கியமென்று சொன்னார்கள். ஸதிபதிகளிருவரு மதனை விசுவசித்து வழிநடந்துக்கொண் டிருந்தார்கள். மகா கடினரான அத்திருடர்கள் சிறிதுதூரஞ் சென்றபின் ஸ்ரீதரரை வாளினால் வெட்டினார்கள். அவர் மனையாளையும் சகலவஸ்துக்களையு மவர்கள் கைக்கொண்டுபோகத் தொடங்க அவள் க்ஷணக்ஷணத்திற்கும் பின்பக்கம் நோக்கிப் பார்த்துக்கொண்டேவருவள். திருடர்க ளதைக்கண்டு உனது பர்த்தாமறித்தான், தொங்கிப்

பார்ப்பதிலென்ன பயனென்று கேழ்க்க அம்மாது, நீங்களாத்மா ராமரை சாக்ஷியாக வைத்தபடியா லவரை விசுவசித்திருந்து எனது கணவனை யிழந்தேன். அவர் வேகத்துடன் குதிரைமேலேறி வருவாரென் றெதிர்பார்க்கிறேன். அவர் அந்தரசாக்ஷியாகியும் சைதன்னியமாகியும் சர்வபூதங்களிலும் வியாபகராகியு மிருப்பவராதலால் சமுசயமின்றி அவரை நானிவ்விடத்திற் காண்பேன். அனேக பக்தர்களை இரக்ஷித்த அந்த ரகுராமர் என்னை இரக்ஷிக்க மாட்டாரோ? புனிதராகிய அச்சீதாபதி எனக்காக வாராரோ? என்று சொன்ன வக்கணமே ஸ்ரீராமபிரா னவ்விடத்தில் வில்லம்புகளுடன் பிரகடமாகி அத்திருடர்களைக் கொன்று ஸ்ரீதரனிருந்தவிடத்திற்குச் சென்று தமது கிருபாகண்ணோக்கத்தா லவரைப் பார்த்து அவருடைய சரீரத்தின்மேற் றனது பத்மஹஸ்தத்தை வைத்து பக்தனுக்கு எப்பொழுதும்போ லுயிருண்டாக்கினர். பின்பு பயமற்ற பாதை யகப்படும் பரியந்த மவர்களுடன் கூடச் சென்று இதரமான மனிதர்களுடைய சங்கத்தை அவருக்குண்டாக்கி ஸ்ரீராமபிரா னந்தர்த்தானமாயினர். தம்பதிகளான வவ்விரண்டு ஹரிபக்தர்களும் தாங்க ளுத்தேசித்த யாத்திரை ஸ்தலங்களனைத்தையுந் தரிசித்து தங்கள் வீட்டைச் சேர்ந்தனர். இராமசந்திரருடைய திவ்வியமங்கள ரூபத்தைத் தியானத்தி லிட்டுக்கொண்டு பக்தி பிராபல்யத்துட னிருவரும் வாழ்ந்திருந்தார்கள்.

---

## ஹரிபாளன் சரித்திரம்.

ஹிந்துஸ்தான் தேசத்தில் ஹரிபாள னென்னுமொருவர் மஹாதனவானாகி யிருந்து ஹரிதாசர்க ளெவர்க்கு மன்புடனாராதித்து வருவார். ஹரிதாசர்களைத் தவிர மற்றவரை சாமானியராக வெண்ணி குறிப்பிட்டு நோக்காமலிருப்பர். தானிருக்குங் கிராமத்திற்குப் பாகவதர்கள் வந்தால் பக்தியுடனவர்களை யெதிர்க்கொண்டு சென்று சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துத் தன் வீட்டிற் கழைத்துவந்து வுபசார பூஜைகளை விசேஷமாகச் செய்து உத்தமமான அன்னத்தை யவர்களுக் களித்து வஞ்சனையின்றி தனது சக்தியானுசாரமாக வஸ்திரங்களையும் திரவியத்தையுங் கொடுத்தனுப்புவார். இவ்வண்ணமாக சாதுசேவையைச் செய்யச் சகல தனமும் செலவாய்விட்டது. ஆயினு மிவருடைய கீர்த்தி பரவியிருந்த



కాశీపాళుడు భగవంతుడు. పిరాట్టి సాధు వికారరూపి. సుఖానందుడు. మాధవదాసు భగవంతుడు.

படியால் சாதுக்கள் விசேஷமாக வந்துக்கொண்டே யிருந்தனர். இப்படி வருபவர்களுக்கு அன்னமளிக்காவிடில் சத்வஹானி வருமென்றெண்ணி சுத்சரிதரான ஹரிபாளரோர் திருடன் வேஷத்தைப் பூண்டு வழிபோக்கரைப் பயமுறுத்தி அவர்களிடத்திலிருக்குஞ் சொத்தை பலாத்காரமாகக் கைக்கொண்டு ஸ்ரீவிஷ்ணு பக்தர்கள் தனக்கு பந்துக்களென்று அவர்களுக் கன்னமிட்டுவருவர். ஹரிதாசர்களுடைய அடையாளங்களை யுடைத்தானவர்கள் மார்க்கத்தில் வந்தால் அவர்களுடைய ஜோலிக்குத் தான் போகாமல் அவர்களிடத்தி லடக்கமாயிருப்பார். திருட்டுத்தனத்தைச் செய்யும் பொழுதும் மனிதர்மேற் சஸ்திரகாயங்களை யிடாமலிருப்பார். சாதுக்களுடைய சேவையினால் வரும் புண்ணிய மனைத்தும் சொத்துக்குச் சொந்தக்காரர்களை யடையுமென்று தனக்குள்ளெண்ணிக்கொண்டு பாகவத கைங்கரியத்தி லீடுபட்டிருந்தார்.

ஒருகாலத்தி லனேக சாதுக்கள் ஹரிபாளர் வீட்டிற்குவந்தார்கள், வீட்டிற்றுனிய மில்லாதிருப்பது தெரியவந்தது. உடனே வில்லம்புகளைக் கையிற்கொண்டு காட்டிற்குச்சென்று வழிபோக்கருக்காக எதிர் பார்த்திருந்தார். மார்க்கஸ்தர்கள் யாரும் வாராதிருப்பதைக்கண்டு மிகுதியாகக் கிலேசங்கொண்டு என்னசெய்வேன், அனேக சாதுக்கள் வீட்டில் பசியால் வருந்திக்கொண்டிருப்பார்களே! அதற்குப் பரிஹாரமெப்படியென்று சிந்தித்திருக்கப் பெருமாள் வர்த்தக வேஷத்தைப் பூண்டுப் பிராட்டியுடன் அவ்வழியில்வர ஹரிபாள ரதைக்கண்டு சந்தோஷப்பட்டு அவர்களுக்குக் குறுக்கேசென்று உங்கள் சொத்தையும் பணத்தையுங் கொடுங்கோள், அவைகளைக் கொடாவிடில் பிராணனை வாங்கிவிடுவேன், ஆகையால் தடைசெய்யாமற் கொடுக்கக் கடவீரென்று பயமுறுத்தினர். அப்பொழுது நல்லதென்று அவர்கள் தாங்க ளணிந்திருந்த வாபரணங்க ளனைத்தையுந் தப்பாமற் கொடுக்க, ஹரிபாள ரவைகளைச் சீக்கிரமாகக் கைக்கொண்டு வீட்டிற்குவந்து அந்தச் சொத்தைக்கொண்டு அமுதுபடி சாமக்கிரிகையைத் தருவித்து வைஷ்ணவர்களுக் கிஷ்டபோஜனத்தைக் கொடுத்துக்கொண்டிருந்தார்.

பெருமாளும் பிராட்டியுங் காட்டில் சொத்தை யெல்லாம் பறிகொடுத்து நிற்கப் பிராட்டி பெருமாளைநோக்கி ஸ்வாமி! வஸ்

திர பூஷணங்களனைத்தையு மும்முடைய பக்தன் கைக்கொண்டு சென்றானே! சுகமொன்றுங் காணோமென்றாள். பெருமாளதற்குச் சொல்லுவார். நம்மை அவனடிக்காம லிரக்ஷித்தானே! இந்த உபகாரம் மேன்மையல்லவோ வென்று பிரத்தியுத்தரம்கூறி பாகவத கயிங்கரியத்தி லீடுபட்டு பாதைநடப்போரைக் கொள்ளையடித்துப் போவானென்று சொல்ல, பிராட்டி யவனைப் பார்க்கவேண்டுமென்று விருப்பமுற்றனள். பெருமாளுமப்படியே நாமிப்பொழுது அவனிடம் போவோமென்று சாதுக்களுடைய வேஷத்தை யிருவரும் பூண்டுகோபீசந்தனமும் துளசி மாலையுந் தரித்து "ஜய சீதாராமா" வென்று சொல்லிக்கொண்டு ஹரிபாளன்வீட்டிற்குச்சென்றார்கள். அவன் அவர்களைக் கண்டவுடன் எதிர்க் கொண்டுவந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து அதிக வணக்கத்துட னிருவருக்குங் கைகாலலம்ப ஜலமளித்து ஆசனத்தி லுட்காரச்செய்து பின்னர் அவர்கள் பக்ஷிக்கும் பொருட்டு இலைகளி லன்னத்தையளித்து உபசாரங்களைச்செய்து இன்று சுதினமாகும் அடியேன் தன்னியனானேன் தேவரீர் தரிசனந்தந்து கருணையைக் காண்பித்தீர். ஏதேனு மபேக்ஷையிருக்கிற் றெரியப்படுத்தலாமென்று வினவினர். பெருமாள் பக்ஷணை செய்துக்கொண்டிருந்தே ஹரிபாளனைநோக்கி ஐயா! எங்களிடந் திரவியமும் ஆபரணங்களு மிருந்தன, வழியில் வருமளவில் திருடரவைகளைக் கொள்ளைகொண்டார்கள். எங்களுக்கு வேறு உபாயமில்லாமல் உம்மிடம் வந்தோமென்றுசொல்ல ஹரிபாள ரவரைநோக்கி சாதுக்கள் சொத்தைத் திருடுவது சதிரன்று, அத்திருடரை அரண்ணிய மனைத்துந்தேடிக் கண்டுபிடித்து நான் கொல்வேனென்று கூறினன். பெருமாளதற்குள் போஜனத்தை முடித்து வர்த்தக உருவத்தைப் பூண்டு அப்பக்தனெதிரில் நிற்க ஹரிபாளர் வெட்கமுற்று மனக்கலக்கமுடையவராகி கண்களிற் ஜலமொழுக நமஸ்கரித்து ஸ்ரீஹரி சர்வாத்மகரே! அப்பிரமேயரே! அச்சுதரே! அனாதநாதரே! பரமமூடனான நான் உம்மைக் காணாமலனேக வபசாரங்களைச் செய்தேன். தேவரீர் ஜகத்குருவாகி வர்த்தகரைப்போல வுருவைக் காண்பித்தீர். அடியேன் செய்த பாபங்களோ இவ்வளவென்று எண்ணமுடியாது. நீர் கருணாகரர் தீனபந்து அடியேனை க்ஷமித்துக் காப்பாற்றும், எனக்கு புகலிடம் வேறில்லை என்று பிரேமையுடன் விளம்பி தானபஹரித்த

வுடைமைகளை யவர் முன்வைத்து ஸ்வாமி! அடியேன் தேவரீருடை ய குழந்தையாவேன், தேவரீ ரனுக்கிரகிக்கக் கடவீரென்று பிரார்த் தித்தனர். பெருமா ளப்பொழுது பிரியத்துடன் தனது திவ்விய மங்கள விக்கிரக ரூபத்தைக் காண்பிக்க ஹரிபாளர் நமஸ்கா ரங் களைச் செய்துநிற்கப் பெருமாளவரை நோக்கிநிஷ்காமமாக நீ செய்த பக்திக்கு நான் சந்தோஷித்தேன் உன்வீட்டில் விசேஷமாக சித்திகள் விளங்கப்பட்டுவரு மென்று சொல்லி அந்தர்த்தான மானார். பின்பு ஹரிபாளர் தன்வீட்டில் விசேஷ சம்பத்திருக்கக் கண்டு சாதுக்களை ஸ்ரீஹரி ரூபமாக வெண்ணி அவர்களுடைய சே வையை யதிக பிரீதியுடன் செய்து காலத்தைக் கழித்தார்.

---

## ஜேஸூ சரித்திரம்.

ஜேஸூ என்பவர் பயிரிடுந் தொழிலுடையவராகி ஸ்ரீஹரி பஜனையைச் சிறப்புடன் செய்து மோஹ மமதைகளை விட்டு முகுந் தனே இரக்ஷகரென் றிருப்பர். பூமியை யுழுது பயிரிட்டுக் குடும்ப போஷணஞ் செய்து வருவார். ஹரிபக்தர்கள் வீட்டிற்கு வரு வரே லவர்களுக்கு அன்புட னன்னமளிப்பர். அவர் தன்தொழி லுக் குபயோகமாக இரண்டு இரிஷபங்களை வைத்திருந்தார். அவை களை இரவுகாலத்திற் றிருடர்கள் கொண்டுபோய் விட்டார்கள். பெருமா ளிதைக்கண்டு சிந்தையுற்று ஜேஸூ பக்தருக்குத் தெரி யாமலே வீட்டிலிருந்த மாடுகளைப் போலே வேறு இரிஷபங்களை நிருமித்து வைத்தார். குடியானவர் நித்தியம்போலே அந்த மாடுகளை வயலுக்கு ஓட்டிக்கொண்டு சென்று அவைகளைக் கொ ண்டு பூமியை யுழுதுக்கொண்டிருக்க அத்திருடர்கள் தாங்கள் கொண்டுபோன மாடுகளைப் போலவே அவைக ளிருக்கக்கண்டு மறுநாளு மத்திருடர்க ளம்மாடுகளைத் திருடிக்கொண்டு போனார் கள். பெருமாள் திரும்பியு மிரண்டுமாடுகளை நிருமித்து வைத்தார். ஜேஸூ குடியானவருக் கிதுதெரியாமலே நடந்துவர திரும்பியு மத்திருடர்க ளவைகளையு மிரவிற்கொண்டு சென்றனர். இவ்வித மாக நான்குதினங்கள் நடந்துவர திருடர்கள் பயமடைந்தவர்க ளாகிப் பாண்டுரங்கரை நினைத்து இது அவருடைய செய்கையாயி ருக்கு மென்று அனுதாபமடைந்து ஜேஸூ பக்தர் விஷயத்திற்

செய்த வபசாரத்திற்குத் தாங்கள் நரகத்தை அனுபவிக்க வேண்டி வருமென்று அந்த பக்தரிடம் வந்து தாங்கள் செய்த குற்றத்தைத் தெரிவித்து அவரைச் சரணமடைந்து ஸ்ரீஹரிபதனாயி லவர்களும் நிரதரானார்கள்.

---

## தனுஜாட்டு சரித்திரம்.

ஹிந்துஸ்தான் தேசத்தில் தனுஜாட்டு யென்பவர் பயிரிடுந் தொழிலுடையவராகி பாலிய தசையிலிருந்து விஷ்ணுபக்தியை விசேஷமாகச் செய்துவருவார். தன் வீட்டிற்குவரும் வைஷ்ணவ ஜனங்கள் ஸ்ரீவிஷ்ணு பூஜையை செய்துக்கொண்டிருக்க ஏதோ ஒரு நாள் தனுஜாட்டு அதனைக் கண்ணுற்று அந்தச் சாதுக்களுக்குத் தான் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ஸ்வாமிகளே! சேஷசயன னுடைய சாலக்கிராம சிலையைக் கொடுக்கச்சொல்லிப் பிரார்த் திக்க அவர்கள் கேட்டு கறுத்த ஒருருண்டையான கல்லை யவர்கள் கொடுக்க வதனை விசுவாசத்துடன் தான் கைக்கொண்டு நேமந்தப் பாமற் பூஜைசெய்து பிரீதியைச் செலுத்தி வருவார். பெருமாளும் பிரேமபாவனையைக் கண்டு அவர்மேற் றனது காருண்ணியத் தைக் காண்பித்துக்கொண்டிருப்பார்.

பசுக்களை மேய்க்க பிரதிதினமும் பக்தன் காட்டிற்குச் செல் வர். அந்த சாலக்கிராமத்தையுங் கூடவே கொண்டுபோய் தான் ஸ்நானஞ் செய்து அவ்விடத்தி லகப்படக்கூடிய வனபுஷ்பங்களைக் கொய்து அவைகளால் பகவத் பூஜையை மஹாபக்தியுடன் செய்து பழைய வமுதான கட்டுசாதத்தைப் பகவானுக் கற்பித்து ஸ்வாமி! கொஞ்சமாயினும் நீர் பக்ஷித்தருள வேண்டுமென்று மஹத்தான பிரியபாவத்துடன் பிரார்த்திப்பார். இவருடைய பக்திபாவத்தைக் கண்டு ஸ்ரீ ஹரி பக்ஷித்துவருவர். மீதிப்பிரசாதத்தைபக்தர் சந்தோ ஷத்துடன் சாப்பிடுவார். சிறுவயது முதற்கொண்டு தேவதேவ ரான ஸ்ரீஹரி, பக்தருடைய இஷ்டத்திற் கிசைவுற்றிருந்தனர். அவ ரும் சகலசுகுணங்களுடன் வளர்ந்துவந்தார். வயதுவந்தவுடன் சாது சேவையில் விருப்பமுற்றவரா யிருக்க ஓர்நாள் சாதுக்கள் ஸ்ரீஹரி யை பாடிக்கொண்டு தனுஜாட்டுவீட்டு துவாரத்தில் வந்து ஐயா! பெருத்த கருப்பில் அன்னதானத்தைச் செய்வீராயின் புண்

ணிய மூமக் கமையுமென்று சொல்லத் தனுஜாட்டு தன்னிடத்திற் ருணிய மெதுவு மில்லாதிருந்தபடியால் அனுதாபத்தை யடைந்து விரைதானியத்தை மாவாக்கி வைஷ்ணவ ஜனங்களுக்குப் போஜன மளித்தார். அவர்களுந் திருப்தியாகப் பக்ஷித்து முழு ப்பிரேமை யுடன் ஆசிர்வசனங்களைச் செய்தனர். தனுஜாட்டு சந்தோஷத் துடன் வீற்றிருக்க விரைதானியத்தை சாதுக்களுக் கிட்டபடியால் இனி நிலத்தை யிவரெப்படி பயிரிடுவரோவென்று வூராரனைவரு மவரை நிந்தித் திருந்தார்கள். பக்தரும் பெருமாள் கிருபையென் றவரிடம் பிரீதி செய்திருந்தார். வீட்டுமனிதர் பயிர்செய்யவொ ன்றும் வேலையில்லையென்று தனுஜாட்டுடன் சொல்ல அவர் பூர்ண சாந்தியுடன் ஜீவயில்லாத பூமியிலிட்ட தானியங்கள் ஸ்ரீஹரி கிருபையால் ஒருதானிய மனேக தானியமாகச் செய்யப்படுகின் றன வென்றும் சஜீவர்களான ஸ்ரீஹரி பக்தர்களுக்கிட்ட சத்பாத் திரத்தைச் சேர்ந்தவன்னம் விசேஷபலத்தைக் கொடுக்குமன்றோ வென்றும் சொன்னார். அது விஷ்ணுப் பிரீதியாக வமைந்ததென்ற நிச்சயத்தை யுடையவராகி அவர் ஈஸ்வரனை பஜித்திருந்தார்.

ஸ்ரீஹரி தனது பக்தரான தனுஜாட்டுவின் நிலத்தில் விசேஷ மாகப் பயிரை யுண்டுபெண்ணி தானியசமுர்த்தி யுண்டாக்கினர். கிராமவாசிக ளதை விந்தையுடன்கண்டு, கண்ணபிரான் கருணித் தாரென்று சொல்லத் தொடங்கினார்கள். அந்தப் பக்தருடைய கீர்த் தியு மெங்கும் பிரபலமாயிற்று, சங்கடகாலத்திற் பெருமாள் ரக்ஷித்தாரென்று தனுஜாட்டு சந்தோஷித்து அத்தானியத்தை சாதுக்களுக்காக விநியோகப்படுத்திச் சந்துஷ்ட சித்தராக வா ழ்ந்திருந்தார்.



## சுகானந்து சரித்திரம்.

ஹிந்துஸ்தான் தேசத்தில் சுகானந்தரெனும் பிராம்மணர் விஷ்ணுபக்தியிற் சிறந்தவராகி ஹரிபக்தர்களை யனுதினமும் பூஜி த்து வருவார். கபடமின்றி ஹரிபக்தியைவிட மேலான வேறு சாதனங்க ளில்லையென்று சித்தத் திருப்தியுடையவரா யிருப்பர். பெருமாளுக்கு நிவேதனமான் ப்ரசாதம் பெருந்த மஹிமையைப் புடையதென்று மிகுந்த பிரீதியை வைத்துப் பக்ஷிப்பர். பதிவிர

தையான் சுருசுரியெனுந் தன் மனையாள் பதியினெண்ணத்தின் படிநடந்து சர்வகாலங்களிலும் பாகவதர்களுக்குச் சேவைசெய்துப் பிரீதியுடனிருப்பள், சுகானந்தர் ஸ்நானஞ் செய்யாமலே பகவத் பிரசாதத்தை யனைவருங்காண பக்ஷித்து வருவார். ஹரிப்பிரசாதம் அனைத்தையும் புனிதமாக்குந் தன்மையுடையதாதலால்வேறு சுசித்வம் வேண்டுவதில்லையென்று சொல்லுவர். இந்த நிச்சயத்தையே தம்பதிகளிருவரும் வைத்துக்கொண்டிருந்தார்கள. புரஜனங்களிதைப்பரிக்ஷிக்க மனதிலெண்ணிக் கடைக்குச்சென்று ஜிலேபி வடைகளைக் கொண்டுவந்து சுகானந்தரிடஞ்சென்று இவை பெருமாள் சன்னிதிப் பிரசாதமென்று சொல்ல அவைகளை அவருடனே அதிக சந்தோஷத்துடன் பக்ஷித்தார். பின்பு அப்புரஜனங்கள் சிரித்து அவ்வஸ்துக்களைக் கடையிலிருந்து கொண்டு வந்தோம், நீர் பிராம்மணராயிருந்து சாப்பிட்டீரே! இது அனுசிதமாகும். பிராயச்சித்தங்கொள்ளவேண்டும். நீர் கேட்காவிடி லுமக்கு பஹிஷ்க்காரஞ் செய்யப்படு மென்றார்கள். சுகானந்தரிதைக் கேட்டு வாயிற் கையை வைத்து வடை ஜிலேபிகளை வெளியிலெடுத்தார். பக்ஷித்து ஒருநாழி பொழுதாயிற்று. அவ்வஸ்துக்கள் கடையினின்றுங் கொண்டுவந்தவைபோல குக்ஷியினின்றும்வெளிவந்தமையை குடிலஜனங்கள் கண்டு இது விசித்திரமென்று அவரை நமஸ்கரித்து தமதிருப்பிடஞ் சென்றார்கள். அந்த பக்தர் பரிசுத்த பாவத்தை யுடையவரென்று சகலரும் புகழ்ந்தனர்.

சுகானந்தர் மதுராபுரிக்கு யாத்திரைசெல்ல வுத்தேசித்து மனையாளை யழைத்துப் பக்தஜனங்கள் நம்வீட்டுக்கு வருவர்களாயின் அவர்கள் சேவையில் தற்பரையாயிருக்க கடவையென்றுரைக்க, அவள் அப்படியே செய்வேனென்ற சம்மதிவசனத்தைக் கேட்டு சுகானந்தர் யாத்திரைக்குச் சென்றார். அவர்போன மறுநாள் ஒருமனிதன் சாதுவேஷத்தைப்பூண்டு சுகானந்தர் வீட்டிற்குவர, சுருசுரி அவனுக்கு நமஸ்கரித்து ஆதரத்துடனுபசாரங்களாற் பூஜித்துப் போஜனமிட, அவன் காமுகனாகி சுருசுரீயின் சுந்தரரூபத்தை நோக்கி இன்றையதின மெனக்குப்போக தானங்கொடுக்க வேண்டுமென்று கேட்டான். அவளதனை செவியேற்றி இன்றிரவி லுமதுகோரிக்கையை தீர்க்கிறேன். இப்பொழுது பக்ஷணை செய்யுமென்று சொல்ல வேஷதாரி சந்தோஷித்து விஹி

தமர்க வன்னத்தைப் பக்ஷித்தான். இவனுடைய கெட்ட எண்ணத்திற் கனுகுண்ணியமாக இரவுகாலமும் வந்தது. சுருசுரீ படுக்கையை அலங்கரித்து இரண்டாஞ் சாமத்திற் றனது பதியினுடைய பாதங்களை மனதி லெண்ணி அறைக்குள் தீபமெரிந்துக்கொண்டிருக்க அறைக்கு வெளியில்வந்து அவனையழைத்துத் தானறைக்குள் புகுந்தனள், அவ்வேஷதாரி வாசற்படி முன்வந்து நின்று எதிரில் பார்க்குமளவில் விகார ரூபமான ஓர் ஸ்திரீயைக் கண்டனன். அந்த ஸ்திரீ கோரரூபத்துடன் அவனை யதட்டி குரூரதிருஷ்டியுடன் பார்க்க அந்த விடபுருஷன் அதிகபயத்தை யடைந்து தன்னுடைய தைரியத்தை விட்டவனாகி தீனத்வத்தை வகித்து ஓதாயே! உன்விஷயமாக நானபசாரப்பட்டேன் என்னுடைய தப்பிதத்தை க்ஷமிக்கக்கடவாய், இதோ உனக்கு நமஸ்கரிக்கிறே னென்று சொல்லி தெண்டன் சமர்ப்பித்து, அவ்விடத்தைவிட்டு தூரமாகச்சென்று அவ்விரவில் நித்திரை செய்தான்.

உதயமானவுடன் சுருசுரி எழுந்திருந்து வீட்டைப் பெருக்கிக் கொண்டிருந்தாள். அவ்வேஷதாரியும் வந்து அப்பதிவிரதைக்குத் தெண்டம் சமர்ப்பித்து அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்றுப் பிரார்த்தித்து அனுதாபத்தால் விரக்தசித்தனாகி அவ்வீட்டிலேயே யிருந்து சேவைகளைச் செய்து அரிஷட்வற்கங்களை ஜயித்து ஹரிபக்தியிற் பிரவேசித்தான். சுகானந்தர் நான்குமாசம் யாத்திரை செய்து திரும்பி வீடுவந்தார். அவர் வந்தவுடன் கபடசாதுவாக யிருந்தவன் தான் செய்த அபசாரத்தைத் தெரிவித்து பதிதனென்று நமஸ்கரித்து முன்னின்றான். சுகானந்தர் சந்தோஷித்துத் தனது கருணையைக் காட்டி சிலநாளவனை வீட்டி லிருத்திவைத்து அவனுக் குபதேசத்தைச் செய்தார். அதனால் ஸ்ரீஹரி பக்தியும் சாக்ஷாத்காரமும் பெற்று அம்மனிதன் சாதுக்களிற் சிரேஷ்டனானான். சுகானந்தர் தன் மனைவியுடனிருந்து பாகவத சேவையிற் றற்பரராகி வெகுகால்ம் வாழ்ந்திருந்தார்.

---

## மாதவதாசர் சரித்திரம்.

பிராம்மணர்களிற் சிரேஷ்டரான மாதவதாச ரென்பவர் மஹா பண்டிதராயிருந்து விஷயா சக்தியால் வாதனை யடையா

மல்விரக்தசித்தராயிருந்தார். வெகுநாளிப்படி நடக்க தன் துமனைவி வைகுண்டப்பதவி யடைந்தாள். மாதவதாசர் மகிழ்ச்சி யடைந்து பந்தம் தன்னடையே போயிற்றென்று சமாதானத்தை யடைந்து வீட்டிலிருந்த வஸ்துக்களனைத்தையும் இதர ஜனங்களுக்குப்பங்கிட்டு ஒருவராக யாத்திரைக்குச் சென்று ஒடியா ஜகன்னாதத்தைச் சேர்ந்தார். அவ்விடத்திற் றுனனுதாபத்துடன் சமுத்திர ஸ்நானம்பண்ணி பரம பிரீதியுடன் ஜகன்னாதரைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து சகுணமூர்த்தியான வவ்வெம்பெருமானைக் கண்ணாரக் கண்டு ஓ சர்வேஸ்வரா! கோவிந்தா! அனந்தகலியாணகுணபூரணா! உம்மை சேவித்தபின் சித்தம் சமாதானப்பட்டது. தாய், தந்தை, பந்து சிநேகிதரனைவரு மெனக்கு நீரே ஆவீர். உம்மைவிட ஜகத்தில் வேறொருவ ரில்லையென்று சொல்லி அதிகப் பிரீதியை ஜகன்னாதர் மீதில்வைத்து ஸ்ரீஹரி பஜனையைத் திடமான வன்புடன் செய்து வந்தார். வேதசாஸ்திரங்களை விசேஷமாக வாசித்தும் வித்தியாகர்வ மவரிடத்தில்லாதிருந்தது. சகுணமூர்த்தியில் மஹத்தானப் பிரீதியைவைத்து சன்னிதியிலேயே யிருந்தார். அர்ச்சகர்கள் சன்னிதியிலிருக்க வமையாதென்றும் பெருமானுடைய மூர்த்திக்கு உபத்திரவங்களாதலால் நேரிடுமென்றும் கண்டவிடங்களிற் றும்பிடுபோடுவது யுக்தமல்லவென்றுஞ் சொல்லி வெளியே துரத்தி விட்டார்கள். மாதவதாசர் மனக்கிலேசமுற்று மாதவனை மனதிலெண்ணி ஓ கிருபாமூர்த்தி! அடியேன் பக்திஹீனன், சேவாஹீனன், கைகளிற் றனமில்லாமற் பூஜையைச் செய்யலானேன். மானச பூஜையும் மனதிற் கெட்டவில்லை. அனன்னியனாகி யுன்னை சரணமடைந்தேன். ஓ கமலக்கண்ணரே! என்று அபாரமாக அழுதுக்கொண்டு அன்னபானங்களி லாசையற்று அல்லும்பகலும் ஹரிநாம ஸ்மரணையிலிருந்து மூன்றுநாள் கழித்தனர். ஜகன்னாதரிதைக்கண்டு ருக்மணி பிராட்டியை நோக்கினார். அந்தம்மாள் பெருமாள் பாவத்தைக் கண்டுகொண்டு பரிசுத்தான்னத்தைக் கொண்டுவந்து நித்திரையிலிருந்த மாதவதாசரை யெழுப்பி நீர் புசிக்கக் கடவீரென்று புகல மாதவதாசர் பிராட்டியைப்பார்த்து நீர் யாரென்று வினவ பிராட்டி கூறுவாள், நீர் யாரைக்குறித்து சர்வகாலங்களிலுந் தியானத்தி லிருக்கிறீரோ அவருக்கு நான் மனையாள் இனிநீர் பிடிமானத்தைவிட்டு பக்ஷணைசெய்யக்கடவீர், கொஞ்

சகாலத்திற்றனே கண்ணன் பிரசன்ன ராவாரென்று திருவாய்மல ர்ந்தருள அவ்வாக்கியங்களை மன்னித்து மாதவதாசர் பக்ஷித்தார். ருக்மணி பிராட்டியும் சொர்ண பாத்திரத்தை யவ்விடம்விட்டுச் சென்றார். மாதவதாச ரந்தப் பாத்திரத்தைக்கழுவி தன்னிடத்திற் பத்திரப் படுத்தினர்.

தேவாலயத்திற் சொர்ணபாத்திரங் காணுதிருந்தமையால் அதிகாரிகள் பட்டண மனைத்தையுந் தேடும்படிசெய்ய மாதவ தாசரிட மதை யிருக்கக்கண்டு அவரை யனேக விதங்களாகத் தூஷித்துச் சிறைச்சாலையில் வைத்தார்கள். ஜகன்னாதஸ்வாமி அர்ச்சகருடைய சொப்பனத்திற் சென்று மாதவதாசரெனக்கு மஹா பக்தர், அனந்த சுகுணங்களை யுடையவர். சொர்ணபாத் திரத்திற் பிரசாதத்தை ருக்மணி பிராட்டி மூலமாக நானனுப்பி னேன். அவர் குற்றவாளி யல்ல. பூஜிக்கத் தகுந்தவரென்று சொல்ல, அர்ச்சகர்க ளனைவரு மதிக அநுதாபத்தை யடைந்து மாதவதாசரை சிறைச்சாலையிலிருந் தழைத்துவந்து அதிக மரியா தைகளுடன் பெருமான் சன்னிதிமுன் நிற்கவைத்து தீர்த்தப்பிர சாதங்களைக் கொடுத்தார்கள். அதுமுத லவர்விஷயத்தி லனை வரும் பூஜைசெய்து வருவார்கள்.

சிலகால மிப்படி நடந்துவர ஓரிரவில் மாதவதாசர் சன்னிதி யில் நடு இராத்திரிவரைக்கும் நின்றிருந்தார். அர்ச்சகர்களனை வரு மவருக்குத் தேஹபாவனை யில்லாதிருக்கக் கண்டனராதலின் அவரைச்சன்னிதிக்கு வெளியிற் கொண்டுவந்துவைத்து கதவுகளைச் சாத்தி வீடுகளுக்குச்சென்றார்கள். மாதவதாசர் வெளியிலிருந்தமை யால் அவர்மேல் பனிவிழுந்து தேஹம் நடுக்கலுற்றது. ஜகன் னாத ரிதைக்கண்டுத் தான் போர்த்திருந்த சால்வையா லப்பக்த ருடம்பை மூடினர். உதயமானவுடன் பெருமாள் தரிசனத்திற்கு வெகுஜனம் வந்தார்கள். அர்ச்சகர்கள் ஹரிசன்னிதியில் வைத்த சால்வையைக்காணுமற் றேடுமளவில் சன்னிதிக்கு வெளியிலிருந்த மாதவதாசர்மேல் இருக்கக்கண்டு பெருமாள் செய்த செய்கையென் றும் பகவானிடம் விசேஷப்பிரீதி வைப்பதால் பக்திமகிமை வெ ளியாச்சுதென்றும் பிரஜைகள் சொல்லிக்கொண்டார்கள். அவ்வூ ரரசனும் மாதவதாசனைக்கண்டு நமஸ்கரித்து மரியாதைகளைச் செய்தான். பிரஜைக ளனைவரும் பெருத்த மரியாதைகளைச் செ

ய்ப வாரம்பிக்கவே மாதவதாசரதை சகிக்காம லத்தலத்தைவிட்டு வடமதுரைக்குக் செல்லலுற்றார். அம்மார்க்கத்தி லோருரைக் கண்டு அங்கோர் ஹரிபக்தரா யிருந்தவரிடஞ்சென்று போஜனத் திற்காக அன்னங் கேட்டார். அவர்வீட்டிற்கு வெளியில் நின் றிருந்தபடியால் அவ்வீட்டிற் குடையாள் வெளிவந்து நமஸ்கரித்து வீட்டு எஜமானர் வேறேருருக்குப் போகும்படி நேர்ந்து சென்றார். வேண்டும்சாமக்கிரிகையைத் தருகிறேன் சமையற்செய்து சாப்பிட லாம். நீர் பிராம்மணர், நாங்கள் க்ஷத்திரியர், மஹாநீசரென்று சொல்ல, மாதவதாச ரம்மாதை நோக்கி பகவன்னாமத்தை நீங்கள் சதாபஜித்துக்கொண்டிருக்க நீங்கள் சற்குலத்தாரென் றெண்ணு கிறேன். அன்னமளிக்கலாமென்றுசொல்ல இதைக்கேட்டு அம் மாது கடைக்குச்சென்று பாலையும் மிட்டாயையுங் கொண்டுவந்து கொடுக்க மாதவதாச ரதனை பெருமாளுக் கர்ப்பணைபண்ணி போக்தா ஸ்ரீஹரியென்று பக்ஷித்தார். பின்பு சிலநாள் வழிநடந்து மதுராபுரியைச் சேர்ந்தார்.

மாதவதாச ரவ்வூரைச் சேர்ந்தபின் பெருமாளைச் சேவிக்க அவ்வூரிலிருக்கும் மதுராநாதராலயத்திற்குச் சென்றார். அவ்விட த்தி லனேகஜனங்கள் கூட்டங்கூடி யிருந்தமையால் அர்ச்சகன் சன்னிதி சமீபத்திற்போக வொட்டாமற் றடுத்தான். பெருமாள் சேவைகிடைக்கா விடினும் மானசிகமாக அவரை நமஸ்கரித்து யமுனைத்தீரத்தில் "சிரகட்டம" என்னு மொரிடத்திற் சென்று ஸ்ரீஹரியைத் தன்னிருதயத்தில் ஸ்திரமாக நிறுத்தி வீற்றிருக்க இவரைககண்ட ஓர்மனிதன் களிகூ முடையனுகி போஜனபதார்த் தங்களைக் கொடுக்க மாதவதாசர் சமையற்செய்து ஸ்ரீஹரிக்கதனை அற்பணம் பண்ணவுடனே பெருமாளெழுந்தருளினர். மாதவதா ஸர் மோஹ மமத்வங்களுடன் அன்பு பெருக நமஸ்கரித்து நிற்க பெருமா ளவரைநோக்கி உனக்கு அர்ச்சக னபசாரஞ் செய்தான். உன்னிடத்திற் பக்தி உண்மையாகவே உண்டு. நீ கோபத்துடன் வந்து விட்டாயென்று இப்போது உன்னிடத்திற்கு வந்தேன், நா மிருவரு மிப்பொழுது பக்ஷிப்போமென்று இலைகளி லன்னத்தை வட்டித்துப் பக்தனுந்தானுமாக வுட்கார்ந்து பக்ஷணை செய்தார் கள். மாதவதாசரிதைக்கண்டு மகத்தான மகிழ்ச்சியை யடைந்தார். ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும் திருப்தியாக பக்ஷித்துசன்னிதிக் கெழுந்த

ருளினர். பின்பு அவ்வர்ச்சகர்களுக்குப் பெருமாள் சொப்பனத்திற் சென்று நீங்களிடும் நைவேத்தியங்கள் நமக்கினி ஒவ்வா. பெருத்த வபசாரத்தை மாதவதாசருக்குச் செய்தீர்களாதலால் நான் பக்ஷணை செய்யமாட்டேன், சிரகட்டத்திலிருக்கு மவரை யிவ்விடத்திற் குக் கொண்டுவந்து மன்னிப்பீராகில் நீங்களிடும் நைவேத்யங்களை நானங்கீகரிப்பேன், நீங்கள் மஹாதுஷ்டர்களென்று சொல்ல அர்ச்சகர்க ளாச்சரியப்பட்டு அந்தபக்தரை சன்னிதிக்குக் கொண்டுவந்து மரியாதைசெய்ய, சகல ஜனங்களும் பூஜிக்கத் தொடங்கினர்கள். இதைக்கண்டு மாதவதாசர் ஐயோ! இவ்விடத்திலு முபாதி யுண்டாயிற்றே! என்று நான்குமாசங்க ளவ்விடமிருந்து ஹரி கிருபா விசேஷத்தை யெண்ணி யெண்ணி அபரிமித ப்ரேமை யுடையவராகி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சஞ்சரித்த விடங்களிற் றன் சிலநாள் சஞ்சரித்துத் திரும்பி ஜகன்னாதத்திற்குச் சென்றார்.

அவ்விடத்திற் பெருமாளை தரிசித்து மாதவதாசர் பாகவத ஜனங்களுடன் கூடி வீற்றிருந்தார். சிலநா ளிப்படிகழிய விரோசன உபாதி (பேதி) யுண்டாயிற்று. அதனுற் றேர்ந்தரை யடைந்து சமுத்திர தீரத்திற்சென்றிருந்தார். பெருமாள் சகுணரூபத்தைத் தரித்து அவ்விடத்திற் சென்று மாதவதாசருக்கு சௌசத்திற்கு ஜலங் கொடுத்துக்கொண்டும் அவருடைய வஸ்திரங்க ளனைத்தையுந் துவைத்துக் கொடுத்தும் இவை முதலான வேலைகளைச் செய்துக்கொண்டிருக்க அவர் பெருமாளை நோக்கி பூஜியஞ்செய்பவர் ஸ்ரீஹரியென் றறிந்து, ஓ ஜகதீசரே! பெருத்தகஷ்டமான இதநொந்தரையை நிவர்த்திக்க சக்தியில்லையோ வென்று வினவ, பெருமான், இப்போதே இந்தச் சங்கடத்தை நிவர்திக்க ஒரு ஆடங்கமுமில்லை. பிராரப்தம் விஞ்சுமாதலால் அந்த கருமத்தை இன்னமோர் ஜன்ம மெடுத்து நீ அனுபவிக்கவேண்டிவரும், அதனல் நீ மற்றொரு ஜன்ம மெடுக்காமலே நான்குநா ளிந்த அவஸ்தையை அனுபவித்தால் சமுசயமின்றி சௌக்கியமாய்விடுமென்று பிரதியுத்தரஞ் சொல்லி மறைந்தார். அவர்சொன்னபடி சிலநாட்களிலே சௌஸ்தத்தை யடைந்து சுகமே யிருந்தார்.

ஒருநாள் பெருத்த வித்வாம்சனான ஓர் பண்டிதன் அவ்விடத்திற்குவந்து மாதவதாசருடன் வாதஞ்செய்ய யோசித்து அவரை நோக்கி நீர் வேதாந்தத்திற் பிரவணரென்று கேள்விப்பட்டேன்.

நால்வர்முன்பு நாமிருவருஞ் சற்றுநேரஞ் சம்பாஷிப்போமென்றழைக்க, மாதவதாசர் சம்மதித்து சௌசத்திற்குச் சென்று சமுத்திரதீரத்திலுட்கார்ந்து அனேக பண்டிதர்கள் அகங்காரத்தையடைந்து நசித்தவர்களாகி பிரம்மராக்ஷசர்களாகிப் பிறந்தார்களே! ஹரி! ஸ்ரீகிருஷ்ணா! அச்சுதா! அரங்கா! பண்டிதனிடமெனக்கு நடக்கப்போகும் வாதத்தைப் பரிஹரித்தருளுவீர். ஓ ஈஸனே! தயாளோ! அடியேனைப் பரிபாலித் தருளுமென்று சிந்தித்துக் கொண் டவ்விடமிருக்கப் பெருமாள் மாதவதாசருடைய ரூபத்தைத் தான் வகித்து பண்டிதனிடம்வந்துட்கார்ந்து ஒரே வார்த்தையி லவனை வென்றார், இதற்குள் மாதவதாச ரவ்விடம் வரவே பெருமாள் மறைந்தருளினார். அந்தப்பண்டிதன் மாதவதாசரைச் சரணமடைந்து ஸ்வாமி! தேவரீருடைய ஞானம் அபாதிதமென்று கொண்டாடிப் புகழ்ந்தான். மாதவதாச ரிதைக்கண்டுப் பெருமாள் கருணையே இவ்வண்ணமாயிற் றென்று நினைத்திருக்கப் பண்டிதன் பலருங்கேட்க, பிரபஞ்ச மனைத்துந் திரிந்து பண்டிதர்களனேகரைக் கெலித்தேன். இவ்விடத்தி லோர் வார்த்தைக்குத் தோற்றேன். இதுவென்ன விசித்திரம்! ஓ குருநாதரே! அடியேனுக் குபதேசத்தைச் செய்து ஆட்கொள்ளுமென்றுப் பிரார்த்தித்தான். மாதவதாசரு மப்பண்டிதனைக் கடாக்ஷித்து அனுக்கிரகிக்க அவன் பக்திமார்க்கத்தை யவலம்பித்து கிருதார்த்தனானான். மாதவதாசரும் மஹத்தானப் பிரீதியைப் பெருமாள்மேற் செலுத்தி மேன்மையுட னிருந்தார்.

---

## ஹரிவியாசர் சரித்திரம்.

மதுராபுரியில் ஹரிவியாச ரென்னும் பக்த சிரேஷ்ட ரொருவ ரிருந்தார். அவர் பெருமானுடைய சகுணமூர்த்தியை ஸர்வகாலங்களிலும் பஜித்தும் ஆறுசத்துருக்களை ஜெயித்தும், உலகத்தை ஹரிமயமாகக் கண்டுகொண்டும், தனது பார்வைமாத்திரத்தால் பிரஜைகளை யுத்தரிக்கச்செய்தும் மேன்மை பொருந்தி விளங்கினார். ஒருகாலத்தில் ஜகன்னாதத்திற்கு யாத்திரைபோகு மவசரத்தில் இருக்க யோக்கியமான வோரிடத்தில் தோட்டமும் செடிகளுடைய விழுதும் ஜலாசக்தியையுந் தான் கண்டு தனது சிஷ்ய ஜன

ங்களுடனவ்விடத்தி லிறங்கினர். பின்பு ஆங்கிருந்த தடாகத்தில் நீராடி சமையற் செய்துக்கொண்டிருந்தார்.

அத்தலத்தி லோர் சண்டிதேவி கோவில் மகிமையுடையதாக யிருந்தது. பிரஜைகளனேகர் தங்கள் பிரார்த்தனைகளைச் செலுத்தும் பொருட்டு பசுக்களைப் பலிதானங் கொடுப்பார்கள். ஹரிவியாச ரவ்விடமிறங்கி சமையற் செய்யும்பொழுது ஓர் சூத்திர னவ்விடம் பசுவை வெட்டினன். இதைக் கண்டவுடன் ஹரிவியாசர் ஐயோ! நானேதோ பாபத்தைச் செய்திருந்தபடியா லிவ்விடத்தில் நானிந்த ஹிம்சாகருமத்தைப் பார்க்கலாயினேன். தோஷாசாரத்தை திருஷ்டியிற் பார்க்க, அந்தப் பாவங்களுடைய பங்கு தனக்கும் நேரிடுமென்றும் இந்தஸ்தலத்திற்கு வெளியிற் பாகஞ்செய்வது சுத்தமாகுமென்றும் சொல்லி அநுதாபமுடையராய் சிஷருந் தானும் உபவாசமாகவே போகத் தொடங்கினர்கள். இவ்வண்ணமாக அவர்கள் போவதைக்கண்டு அந்த சண்டிதேவி பயமடைந்து ஹரிபக்தர்களுக்குக் குறுக்கேவந்து பூமிமேல் விழுந்து அவரை நமஸ்கரித்து அவர்களை நோக்கி என்னுடைய ஆச்சிரமத்தில் நீங்களிறங்குவது அதிக பாவனமாயிற்று. நீங்கள் புசிக்காமற் போவீரேல் பெருமாளென்மீது கோபிப்பார். நீங்கள் சாக்ஷாத் விஷ்ணுபக்தர்கள், அந்தப் பரமபுருஷன் மேலதிக பிரீதியுடையவர்கள், அவ்விடத்தில் நீங்கள் பக்ஷணைசெய்துப் போகவேண்டுமென்று சொல்ல, ஹரிவியாசர் தேவதையைக்கண்டு நாங்கள் ஹரிதாசர்களாகையால் பசுவைக்கொன்ற விடத்தில் பக்ஷணை செய்வோமாயின் கோரநரகத்தை யடையவேண்டிவரும். அவினீதமான இந்த ஹிம்சாகருமத்தை நீ விடுவையாயின் அவ்விடத்தில் நாங்கள் பக்ஷணை யெடுப்போமென்று சொல்ல, பவானி அதற்குச் சம்மதித்து அவர்களைக் கையைப்பிடித் தழைத்துவந்து பாகத்தைச் செய்வித்து பக்ஷணையும் செய்வித்தாள்.

பின்பு அத்தேவி பெருமாளுக்குப் பிரியமாகும் பொருட்டு அவ்வூரரசன் சொப்பனத்திற் சென்று தானிருக்குந் தேவாலயத்தில் பசுபலிதானம் முதலாகிய ஹிம்சா கருமங்களைச் செய்யக்கூடாதென்று இத்தேசமெங்கும் பிரகடப் படுத்தக்கடவாய். நீ ஹரிவியாசருக்குச் சரணாகதியாகி அவரிடத்தி லநுக்கிரகத்தைப் பெறக்கடவாய், இவ்வாக்கினையை மீறி நடப்பையேல் உங்களனை

வருக்கும் மிகுந்த கெடுதலே சம்பவிக்குமென்று கூறி மறைந்தாள். அவ்வரச னிந்த சொப்பனத்தை நம்பித் தன்னுடைய இஷ்டா ளுடனே கூடிக்கொண்டு பயர்த்தை யுடையவனுசி பவானி சன்னிதிக் கு வந்து ஹரிவியாசரைக்கண்டு அஞ்சலி அஸ்தனுகி அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க ஆசாரிய னவனைநோக்கி ஹிம்சா தருமத்தை யினி விட்டுவிடுங்கோள். உனது ராஜ்யத்திலு மதனை நிறுத்தவேண்டுமென்று சொல்ல, அரச னவ்வண்ணமே அந்நாட்டிடங்களிலு மிவ்வாக்கினையை பறை அறிவித்து ஆசாரிய னுடைய உபதேசத்தையும் பெற்று ஹரிபக்தனாய் விளங்கினன். அத்தேசத்திலுள்ள பிரஜைகளும் விஷ்ணுபக்தியை விரும்பி ஹிம் சை செய்வதைவிட்டு ஈசனுக் காளானார்கள். ஹரிவியாசர் ஜகன் னாதத்திற்குச் சென்று ஆறுமாத மவ்விட மிருந்துத் திரும்பி மது ராபுரிக்குவந்து சுகமே வாழ்ந்திருந்தார்.

---

## திரிபுரதாசர் சரித்திரம்.

மதுராபுரத் தரசனுக்கு மந்திரியாகி திரிபுரதாசரிருந்தார். ஆசாரியன் கிருபையடைந்தவுடன் அதிக விரக்தியை வகித்து தனது சகலதனத்தையுங் கொள்ளையிட்டுப் பிருந்தாவனத்திற்குச் சென் று மனையாளுடன் மாதவன் சேவையி னினிமையுட னிருந்தார்; மூன்று காலங்களிலும் ஹரிதரிசனத்திற் கிருவருஞ் செல்வார்கள்! பெருமாளும் தம்முடைய கிருபையை அப்போதைக் கப்போது காண்பித்து வருவார். ஒருகாலத்தி லரச னவ்விடம் வந்து தானங் களைச்செய்து அந்த க்ஷேத்திரத்தி லிருக்கிற சகலரையுந் திருப்தி செய்து பெருமானுக்குப்பூஜையைச்செய்யாமற் றன்பட்டணத்தைச் சேர்ந்தான். இதைக்கண்டு திரிபுரதாச ரதிக விசனமுற்று செடி யின் வேருக்கு நீரைவார்க்காமல் செடியின் கிளைக்கு ஜலத்தை விட்டாற்போல அவ்வரசன் ஹீனனென்று எண்ணியிருந்தார்.

ஒருநாள் திரிபுரதாசர் தன் மனையாளை நோக்கி ஸர்வேஸ்வர ரான ஸ்ரீகண்ணபிரானுக்கு ஓர் வஸ்திரஞ் செய்துக்கொடுக்க வே ண்டுமென்ன, மனையாள் கணவனைநோக்கி பிராணநாதரே! அபா த்திரமாக தருமமெல்லாம் அளித்தென்று விடுகின்றீர். வீட்டில் சொத் திருந்தால் விசேஷ பயமுண்டாகுமென்று வெளியாருக்குக் கொ டுத்துவிட்டீர். பெருமான் அவாப்தகாமராயிருக்க அவருக்கு எப

திர மென்னத்திற்கு? சொர்ணவர்ணமுடைய வநேக வஸ்திரங்கள் ஸர்வேஸ்வரனுக்குண்டு, ஆனதாலவருக்காக வஸ்திர சிந்தனையுமக்கேனென்று அவள்சொல்ல கணவனவளை நோக்கி ஸ்ரீஹரியிந்த சங்கல்பத்தை யுண்டாக்கின ராதலா லதனைச் செய்யவேண்டுமென்று கூறி தன்னிடமிருந்த ஓர் இங்கிபுட்டியைக் கடையில் கொண்டுபோய்விற்று அதனால் தனக்குக்கிடைத்த ஒரு ரூபாயைக் கொண்டு ஓர் கம்பளியைவாங்கி ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டே ஓர் குஞ்சையை (முட்டாக்கு) தைத்து அதனைப் பெருமாளுக்குச் சமர்ப்பிக்க வேண்டுமென்று சந்நிதிக்குக் கொண்டுபோய் அர்ச்சகனைக்கண்டு அவன்முன் னதனைவைத்து ஐயா! அர்ச்சகரே! இது ஏழையினுடைய கைங்கரியமென்று எம்பெருமான் திருமேனிமேல் சாத்தக்கடவீரென்றும் சொல்ல அர்ச்சகன் அதனை நோக்கி இந்த குஞ்சை தெய்வ யோக்கியமாக விருக்கவில்லை, பெருமாளுக்கு சால்வை முதலானவைகள் சால விருக்கின்றன, ஆதலென் நீர் கொண்டுவந்த வஸ்திரம் அவருக்குத் தகுதியான தல்லவே! என் கொண்டுவந்தீரென்று கேட்க திரிபுரதாசரவனைநோக்கி பெருமாளுக்கென் விண்ணப்பத்தைக்கூறி அதுதானென்னுடைய வஸ்திரமென்றும் அங்கிகாரஞ் செய்யுமென்றும் சொல்லக்கடவீரென்று அவ்வஸ்திரத்தை அவ்விடத்திலேயே விட்டேகினார்.

மறுதினம் பொழுது விடியற்காலத்தில் ஸ்ரீஹரிக்கு ஆரதி கொடுக்குஞ் சமயத்தில் பெருமாள் திருமேனி குளிரால் நடுக்கமுற்றிருக்கக்கண்டு அனைவருந் திகிலடைந்து வைஷ்ணவர்களநேகர் கூடி வஸ்திரங்களைப் போர்த்தியும் குளிர் நீங்காமல் திருமேனி நடுக்கலுற்றே யிருந்தது. திரிபுரதாசருடன் வாதாடின அர்ச்சகன் நித்திரையி லிருந்தான். அவ்வேளையிற் பெருமாளவன் சொப்பனத்திற் சென்று திரிபுரதாச ரர்ப்பித்த வஸ்திரத்தை யென்மேல் போர்த்தினால் நடுக்கல் நிவர்த்தியாகுமென்று சொல்ல அவன் உடனே எழுந்திருந்து அந்த குஞ்சையைக் கொண்டுவந்து பெருமாள் திருமேனிமேல் சாத்தினவுடன் நடுக்கல் நிவர்த்தியாகி குளிர் விட்டுப்போயிற்று. அடியார்களுடைய கீர்த்தியைப் பிரபலமாகும்படி ஹரிஸர்வேஸ்வரனே அருள்புரிகிறார். அநேக வைஷ்ணவ ஜனங்கள் திரிபுரதாஸரை யபாரமாக மன்னிக்கத் தொடங்கினார்கள்.

---

## லாலன்கோஜீ சரித்திரம்.

ஆசாரிய பக்தியில் தத்பரரானவரும், ஹரிநாமத்தை யிடைவிடாம லனுஷ்டித்து வருபவரும், பாபங்களுக் கனுதாபமுடையவருமான லாலன்கோஜீயெனும் பக்தரிருந்தார். அவருடைய ஆசாரியர் நிஷ்கபடராகி தனக்கந்திம சமயத்தில் கண்டாநாதங் கேட்குமென்றும் அப்பொழுது சிஷ்யர்களுக்கு போதம் நிலைநிற்குமென்றும் சொல்லிக்கொண் டிருப்பார். இதனை யிதரஜனங்கள் நம்பாமல் விகற்ப பாவனையுடையவர்களா யிருந்தார்கள். இப்படி யிருக்குமளவி லொருநாள் லாலன்கோஜீ கிராமத்திற்குச் சென்றார். அப்பொழுது ஆசாரியருடைய அந்திம சமயம் வந்தது. அவ்வேளையில் சிஷ்யனில்லையே! யென்று மிகுந்த சிந்தையடைந்து குச்சிதமான இந்த மலசரீரத்தைவிட்டு கோவிந்தனை யடைந்தார். அங்குள்ள ஜனங்க ளனைவருங்கூடி அவருக்குச் சம்ஸ்காரங்களைச் செய்தார்கள். லாலன்கோஜீ மூன்றும்நாள் வந்து ஆசாரியர் பரமபதத்தை யடைந்தாரென்னுஞ் சங்கதியைக்கேட்டு விசனமுற்று, வெகுகாலமாக அவர் கூடவே யிருந்தும் அந்திமதசையி லவருக்குச் சேவைசெய்யாமற் போனேனே யென்று சொல்லிக்கொண் டிருக்க அவ்விடத்திய ஜனங்க ளனைவரு மவரைச் சூழ்ந்து, ஐயா! உம்முடைய ஆசாரியர் பிராணனுட னிருக்கும்பொழுது தனக் கந்திமதசையிற் கண்டாநாதங் கேட்குமென்று சொல்லிக்கொண் டிருந்தார். அவ்வேளையில் நாங்க ளவ்வோசையைக் கேட்கவில்லை யாதலா லவரெப்படி ஸித்தியை யடைவாரென்று நிந்திக்கத் தொடங்கினார்கள். லாலன்கோஜீ அதனைக்கேட்டு அவர்களைநோக்கி ஆசாரியர் சொப்பனத்தில் வந்து கண்டாநாதத்தை எனக்காக வைத்தாரென்றும் தான் வைகுண்டத்திற்குப் போகிறதாகவு மென்னுடன் சொல்லிச் சென்றாரென்று அவர்களுக்கு விளம்பினார்.

இவ்வார்த்தைகளை லாலன்கோஜீ சொல்லியும் யாரும் நம்பாம லிருந்தார்கள். ஒருநாளவர் ஸ்நானம்பண்ணி ஆசனத்தி லுட்கார்ந்து மனதில் ஸ்ரீ சத்குருமூர்த்தியைச் சிந்தித்து கண்களை மூடி ஏகாக்கிரமாக விருக்க ஆகாயத்திற் கண்டாநாத மெல்லோருங் கேட்க முழங்கிற்று. லாலன்கோஜீ இதைக்கண்டு ஸ்ரீராம ராமாவென்று சொல்லிக்கொண்டே முக்தி யடைந்தார். அவர் சிநேகிதர்க ளிதைக்கண்டு ஆச்சரியப்பட்டு கிரியைகளை நடத்தி

னார்கள். ஆசாரியர் வசனஞ் சத்தியமென்று அவனியிற் காட்டினாரென்றும், உலகி லவர் ஜென்மமெடுத்தது சார்த்தகமாயிற்றென்றும், தன்னியரானவ ரென்றும் அந்திமதசையில் ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டே ஹரிபத மடைந்தாரென்று முலகத்தோர் அப்பக்தரை மிகவும் கொண்டாடினார்கள்.

---

## லாடுபக்தன் சரித்திரம்.

ஜோத்பூரில் லாடுவெனும் பக்தர் சுஞ்ஞானத்தை யுடையவராகி சற்பாத்திரத்தி லன்னதானத்தை நியதமாகச் செய்து வருவார். ஆசையற்றவராயும் பஜனை செய்துக்கொண்டு அங்குமிங்கும் யாத்திரை செய்துக்கொண்டும் ஒருவராகி விஸ்வத்திலுடைய விசித்திரங்களைப் பார்த்துக்கொண்டும் அவ்வவ் விடங்களில் தீர்த்த க்ஷேத்திரங்களையும் ஆராதனை தெய்வங்களையும், நவநவமாகப் பார்த்துக்கொண்டும் புனிதராகி சாதுஜனங்களைச் சேவித்துவருவார்.

இப்படி யாத்திரை செய்துக்கொண்டே காபுர தேசத்தைச் சேர்ந்தார். அவ்விடத்திலுள்ள ஜனங்கள் தயாகுண மற்றவர்களா யிருந்தார்கள். அவர்கள் சக்திபூஜையைச்செய்து மதுமாம்சத்தை யந்த தேவதைக்கு நிவேதித்து வருவார்கள். புருஷபலியை யந்த தேவிக்கு அப்போதுக் கப்போது கொடுத்து வந்தமையால் துர்ச்சனர்களாக எண்ணப்பட்டார்கள். ஓர் தடவை யந்ததேவிக்குப் புருஷபலியைக் கொடுக்கும் பொருட்டு ஒருமனிதனை யவ்வூரார் தேடிக்கொண் டிருந்தார்கள். அகஸ்மாத்தாக லாடுபக்தர் அச்சமயத்தி லவ்விடஞ்செல்ல நான்குபேர் வந்து பலாத்காரமாக அவரைப்பிடித்து அம்பாதேவி கோவிலுக் கழைத்துக்கொண்டு போக, அவர் ஹரிமேல் சித்தத்தை நாட்டி கம்பம்போல் நின்று தேஹபாவத்தைவிட்டு ஜகத்திற் கெல்லாம் ஜீவனதாரரும் ஈசுவாத்மகரும் சர்வமயருமானவர் ஸ்ரீஹரியேயென்றெண்ணி மோஹத்தைவிட்டிருக்க மூன்றுபே ரவரைப்பிடித்து நிற்கச்செய்ய ஒருவன் கத்தியை கையிலேந்தி தேவிக்குப் பலிகொடுக்க வெட்ட வெத்தனித்தான். இதை அத்தேவியானவள் கண்டு அமிதமாக கோபங்கொண்டவளாகி, ஒரு விகாரமான ரூபத்தைத் தான் வஹித்து பெரிய ஓசையிட்டு அந்நால்வரையும் பிடித்துக் கொன்று ஹரிதாசரான லாடுபக்தருடைய திருவடிகளை நமஸ்கரித்து உம்முடைய பக்த

திரமான ரூபத்தை உன்மத்தரான இவர்கள் கண்டுகொள்ளாம லுமக்குத் தொந்தரையை விளைவித்தனர். ஆதலின் நீர் க்ஷமிக்க வேண்டுமென்று பிரார்த்தித்த பின்பு அத்தேவி அஷ்டபாஹுக் களையுடையவளாய்ச் செவ்வுருபத்துடன் ஆடவும் பாடவுமாக விருந்து ஹரிபக்தரை நோக்கி வேண்டும் வரங்களைக் கேட்பீரெ னென்றாள். அப்பொழுது லாடபக்த ரத்தேவியை நோக்கி ஓ தேவி! நீ நரபலியைக் கோரியிருக்கிறாய், அதனை நீ விடவேண் டும். இத்தேசத்தில் ஜனங்க ளனைவரும் விஷ்ணுபக்தியி லிருக்க வேண்டுமென்று கேட்டார். அதற்கு அம்பிகை அப்படியே யாகக் கடவதென்று வாக்களித்து அவ்வூரரசன் சொப்பனத்திற் சென்று இவ்விடத்தில் விஷ்ணுபக்தர் வந்திருக்கிறார். அவருடைய வரவு இந்த தேசத்திற்கெல்லாம் க்ஷேமமாயிற்று. அவரிடத்தில் நீ செ ன்று அவருபதேசத்தைக் கொள்ளக்கடவை. இதுமுதல் லென் னுடைய சன்னிதியில் ஹிம்சா கருமஞ் செய்யக்கூடாதென்றுத் தெரியப்படுத்த, அரசன் விழித்துக்கொண்டு மறுநாள் காலையில் தேவிசன்னிதிக்குவர, பிரேதங்க ளவ்விட மிருக்கக்கண்டு ஆச் சரியப்பட்டு லாடபக்தரையு மவ்விடத்திற்கண்டு அவருக்குச் சரணா கதனாகி அவருபதேசத்தைக் கொண்டான். புரஜனங்களனைவரும் விஷ்ணுபக்தியை யடைந்தனர். பின்பு ஹரிகீர்த்தனை அவ்வவ் விடங்களில் நடப்பதும் விஷ்ணுநாமங்களை ஸ்மரிப்பதும், ஏகாதசி யுபவாசமும் பூதங்களிடத்திற் றயையு மத்தேசத்தி லுள்ளோர் கொண்டாடத் தொடங்கினார்கள். பின்பு சாதுக்களை சேவைசெய் வதனால் ஸ்ரீஹரி கிருபைக்குப் பாத்திரர்களாகி ஈடேறினார்கள்.

---

## திரிலோகர் சரித்திரம்.

தட்டார்குலத்தில் திரிலோகரெனும் ஹரிபக்தர் திகழ்வுற்றி ருந்தார். அவர் சாதுசேவையிற் சிறந்த பிரீதியுடையவராகி சத்தி யத்தைத் தப்பாமல் தனது குலவிருத்தியாற் குடும்ப போஷணஞ் செய்து விரக்தராகியு மிருப்பார். ஆபரணங்களைச் செய்யுமளவில் அதிற் றிருட்டுத்தனஞ் செய்யாமல் கஷ்டார்ஜிதமான திரவியமே தனக்குப் பிராப்தமென்றெண்ணியிருப்பர்.

இப்படி நடந்தேறிவர ஒருநாளவ்வூரரசன் வீட்டில் விவாஹத் தடஸ்தமாக, அதற்கு ஆபரணங்களைச் செய்யும் பொருட்டுத் திரி

லோகரை யழைத்துவரும்படி யரசன் சேவகரை யனுப்பினான். அவர்கள் திரிலோகரிடம் வந்து அரசனுக்கிணையை அறிவிக்க அவருடனே சேவகருடனிராஜன் வீட்டிற்குச் சென்றார். அரசன் திரிலோகரைப் பார்த்து நீர் வேலையில் நிபுணராயிருப்பவரென்றும் சத்தியவந்தரென்றுங் கேள்வியுற்றேன். ஓர் நகை எனக்கு வேண்டியிருக்கிறதென்று சொல்லி அதற்கேற்ற சொர்னத்தைக்கொடுத்து சீக்கிரத்திற் செய்துக்கொடுக்கும்படி ஆக்கினை செய்தான். திரிலோகர் பொன்னை யேந்திக்கொண்டு தன் வீட்டிற்கு வந்தார். உடனே சிலபாகவதர்கள் வீட்டிற்கு வரவே வெகு சந்தோஷத்துடன் பணியாரங்களும் பாயசான்னமும் பிரபலமாகச் செய்வித்து பிரீதியுடனவர்களுக்களிக்க அவர்களும் சந்தோஷமாகச் சாப்பிட்டு பெருமாள் திருநாமங்களையும் அவர் கலியாண குணங்களையும் சொல்லிப் புகழ்ந்துக்கொண்டிரண்டுநாளிருந்தார்கள். திரிலோகரிந்த பாகவத சம்பிரமத்திலிருந்து அரசன் றனது ஆபரணத்திற்காகக் கொடுத்த ஆக்கினையை மறந்து போயினார். மூன்றுநாளிராஜன் சேவகரையனுப்பி நகையுடன் திரிலோகரை யழைத்துவரும்படி கட்டளையிட்டான். அவர்களவரிடம் வந்து இராஜன் நகையுடனும்மை யழைத்துவரச் சொன்னானென்று சொல்ல அவர் திகிலடைந்து இராஜனிடஞ் சென்று தெண்டனிட்டு நாளையதினமுமது நகையைக் கொண்டுவந்து கொடுப்பேனென்றுசொல்ல அரசனவரைநோக்கி இப்பொழுது நீ சொன்னவாக்கை மறப்பையேல் சிக்ஷைக்குட் படுவாயென்ன திரிலோகரதனைக் கேட்டுக்கொண்டு வீட்டிற்குவந்து சிந்தை கலங்கினவராகி அந்த நகையை ஓர்நாளிற் செய்ய முடியாதே! என்னசெய்வேன்! ஒன்றுந்தோன்றவில்லையே! மறுநாளிவ்விடமிருந்தால் மரணம் நிச்சயமாமென்று துணிந்து இரவுகாலத்தில் ஸ்ரீஹரியைச் சிந்தையிலிருத்திக்கொண்டு ஆரண்ணியத்திற் கோடிப்போனார்.

உதயமானவுடன் ஸ்ரீஹரி தானே திரிலோகருடையரூபத்தைவஹித்து அந்தநகையைச்செய்துக்கொண்டுவீட்டில்உட்கார்ந்திருந்தார். இராஜதூதரவரிடம்வந்து அரண்மனைக்கு வரச்சொல்லி யழைக்க அவர் அவ்வாபரணத்தை கையிலேந்திக்கொண்டு அரசனிடஞ் சென்று அதனைக்கொடுக்க அவனத்தியானந்தமடைந்து இவ்வுலகிலிவ்வண்ணமான நகையைக் கண்டதில்லையென்று அமித

மாக தனத்தை திரிலோகருக்கு அரசன் கொடுத்தான். அப்பொருளைக் கொண்டுவந்து வீட்டிற் பெண்பிள்ளைக் கையிற் கொடுத்து சாதுக்களனேகர் இன்று வருவார்கள், அவர்களுக்காக சமையற் செய்து போஜனமளித்து உச்சவங் கொண்டாட வேண்டுமென்று சொல்ல, அவளு மாக்கினைப் பிரகாரம் சமையலைச் செம்மையாகச் செய்தாள். பகவத் பக்தரான பாகவதர்களும் பரம சந்தோஷத்துடன் வந்தார்கள். திரிலோகருடைய உருவைக்கொண்ட பெருமாள் வந்த வைஷ்ணவர்களுக்குப் பூஜைவிதிகளையெல்லாந் தீர்த்து இலைகளைவட்டித்து பந்திபி லுட்காரச்செய்து மதுரபதார்த்தங்களுடன் போஜன மளித்து அனைவருந் திருப்தியாகப் பக்ஷித்தபின் பெருமாள் பக்ஷித்து வீட்டாளுக்குச் சொல்லாமல் இளைத்த திருமேனியையுடைய ஓர் சாதுவேஷத்தைப் பூண்டு பிரசாதத்தைக் கொஞ்ச மெடுத்துக்கொண்டு திரிலோக ரிருக்கு மாரண்ணியத்திற்குச் சென்று அப்பக்தரைக்கண்டு ஐயா! நான் வழிதப்பிப்பிரமையடைந்திருக்கிறேன், வழியைக் காட்டவேண்டு மென்றார். திரிலோக ரவரைநோக்கி எவ்விடத்திலிருந்து வந்தீரென்று கேட்கப் பெருமாள் கூறலானார். பட்டணத்தில் திரிலோகர் வீட்டிலிருந்து யான் வந்தேன், அவர் மதுரமான வன்னத்தை விசேஷமாக அளித்தார், அனேக பக்தருடன்கூடி பிரபலமான உச்சவத்தை நடத்தினர். பக்துவான்னங்கள் விசேஷமாகச் செய்தார். அதனையுண்டதனால் தேஹாயாச முண்டாகி நித்திரை வந்துக் கொண்டிருக்கக் கிழத்தன மானபடியால் மோஹமடைந்து மார்க்கத்தைத் தப்பினேன். பிரசாதத்தைக் கொண்டுவந்தேன், நீரும் பக்ஷணை செய்யுமென்று தன் கிருபாவீக்ஷணத்தைச் செய்ய திரிலோகர் மஹா பிரசாதமென்று பக்ஷித்து ஆச்சரியமடைந்து அவரை நோக்கி அந்த கிரகஸ்தன் உச்சவமேன் செய்வித்தா னதற்கென்ன காரணமென்று வினவ பெருமாள் சொல்லுவார், நாணயமான ஓராபரணத்தை இராஜனுக்குச் செய்துக்கொடுத்தார். அதற்கரசன் சந்தோஷித்து தனத்தை தருந்தபடி கொடுத்தான். அதைக்கொண்டு உச்சவத்தை வேடிக்கையாக நிறைவேற்றினாரென்றார். இதைக்கேட்டு அவர் திகைத்து சாதுவேஷம்பூண்ட பெருமாளுடன் வீட்டிற்கு வந்தார். உடனே பெருமாள் மறைந்தருளினர்.

பின்பு திரிலோகர் தன் மனையாளை நோக்கி நடந்த சங்கதி

யென்னவென்று கேட்க, அவள் விநயத்துடன் சகலத்தையு மறிவித்தாள். இதைக்கேட்டு ஸ்ரீஹரிதானே தட்டான் வேஷத்தைப் பூண்டு அரசனுக்கு திருப்தி செய்தாரே! பகவானுக் கதிக தொந்தரையைக் கொடுத்தேனே என்று தன் ஆற்றாமையை விசேஷமாகச் சொல்லிக்கொண்டு அனேக விதங்களாக ஸ்ரீஹரியை தோத்திரஞ் செய்து ஹரிபக்தியி லமர்ந்திருந்தார். மனையாளும் தன் கணவனிஷ்டத்தின்படி நடந்துவந்தாள். பிரஜைகளனைவரு மவர்களிருவரையும் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

---

## சஜாணகசாயி சரித்திரம்.

சஜாணனெனு மோர் பக்தர் மாமிச விக்கிரய ஜீவனமுடையவராய் தன் ஜாதியாரிடத்தில் மாமிசத்தை வாங்கி லோகத்தாருக்கதனை விக்கிரயஞ்செய்து விரக்திபராகி, பிரபஞ்ச கிருத்தியங்களைச் செய்துக்கொண்டு ஹிம்சாகருமத்தைத் தான் கையாற் செய்யாமலும் அசத்தியவசனத்தைச் சொல்லாமலும் ஹரிபக்தர்களைப் பூஜித்து அறுசுவை யன்னத்தை ஸ்ரீராமபிரீதியாக அவர்களுக்களித்து பூத தயையும் பச்சாத்தாபமு முடையவராகி சாதுமார்க்கத்திற் சுசியுடையவராகி ஸர்வேஸ்வரனைப் பஜித்துக்கொண்டிருப்பர். அவருக்கு பரமார்த்த சாதனத்துக் கனுகுணமான மனைவியும் பதிவிரதா தருமத்தை அவலம்பித்துச் சாதுக்களுடைய பூஜையில் சிரத்தையா யிருப்பாள். சஜாணர் மாமிசத்தை நிறுக்கும்பொருட்டு ஓர் சிலையை வைத்திருந்தார். அது பொன்வர்ணச் சாயையுடன்கூடி யிருந்தபடியா லோர் பிராம்மணன் பார்த்து அதனை சாலக்கிராம சிலையென்றறிந்து சஜாணரை நோக்கி அந்தசிலை பகவானுடைய மூர்த்தியாக விருக்கிறது. மூடபுத்தியா லுனக்கது தெரியவில்லை. இது வுன்வீட்டிலிருக்கத் தகுந்ததல்ல, இதனுடைய விலையை நீ கேட்பாயாகி லுனக்குக் கொடுத்து அதனை நான் கொண்டுபோவே னென்ன, சஜாண ரிதைக்கேட்டு அந்த சாளக்கிராமத்தை பிராம்மணருக்குக் கொடுத்தார். சுசீலரான வந்தப் பிராம்மணரும் சந்தோஷத்துட னதனை வீட்டிற்குக் கொண்டுவந்து வைதீக பிராம்மணர்களை யழைத்து அவர்களுடன்கூடி உச்சவம் நடத்தி சாக்ஷாத் ஸ்ரீஹரி நம்மிடம் வந்தாரென்று விசேஷ பூஜைகளைச் செய்தார். அத்தினத்தி லிரவில் பெருமா ளந்தப் பிராம்

மணருடைய சொப்பனத்தில் வந்து சஜாணனிடத்தில் நான் வெகு சுகமாக விருந்தேன். நரசிம்ம மூர்த்தியாகிய நானுன்னிட மிருக்க மாட்டேன். பொழுது விடிந்தவுட னவனிடத்தி லென்னைக் கொடுத்துவிடக் கடவை. எனது வார்த்தையை நீ கேளாவிடில் நீ நாசமடைவாயென்று சொல்ல அவர் விழித்துக்கொண்டுப் பயமடைந்து நடுராத்திரியா யிருந்தபடியா லெப்பொழுது பொழுது விடியுமென் றெதிர்பார்த்திருந்தார். சஜாணரத்தினத்தில் மிகுதியான இலேசத்தை யடைந்து அன்னபானங்களௌவையும் கொள்ளாமல் சங்கடப்பட்டுக்கொண் டவ்விரவெல்லாங் கழிக்க அந்தப் பிராம்மணன் விடியற்காலத்தி லம்மூர்த்தியைக் கொண்டுவந்து ஐயா! அச்சப்படாமல் நீயே இந்த மூர்த்திக்குப் பூஜைசெய்யக் கடவாய். பெருமாள் கிருபை யுன்மீதிருக்கிறதென்று தன்னுடைய சொப்பன சங்கதியைத் தெரிவித்தார். சஜாண ரதிக சந்தோஷத்துடன் ஸ்ரீஹரிமூர்த்தியைத் தான் கைக்கொண்டு பூஜைகளைப்பெருமாளுக்குச் செய்து பின்பு தான் புஜித்தான். சஜாணர் மாமிச விக்கிரயஜீவி யானாலும் அவருடைய பக்திமேன்மையால் பெருமாளவர்மேல் பிரீதியுடையவராய் அவர்செய்யுங் கயிங்கரியங்களை அங்கிகரித்து அமிதபிரீதியுட னிருந்தார்.

இப்படியிருக்க ஒருநாள் சஜாணர் ஜகன்னாத க்ஷேத்திரத்திற்குப்போக யத்தனித்தார். அந்தச் சந்தர்ப்பத்தில் யாத்திரை செய்யும்பொருட்டு அனேக ஜனங்கள் வந்தார்கள். அவர்களைக் கூடி சாலக் கிராமத்தையு மெடுத்துக்கொண்டு பிரதிதினமும் விதி நியமத்துடன் பூஜைகளைச் செய்து உதர போஷணத்திற்கு பிக்ஷைவாங்கி யாத்திரை செய்துவருவார். இரவுகாலத்தில் தூரமாகவிருந்து மற்றவர்களுடன் சேராதிருப்பார். ஒருநா ளோர் பட்டணத்தை வழியிற்கண்டு யாத்திரை ஜனங்களனைவரு மவ்விட்மிறங்கவுத்தேசிக்கச் சஜாணர் பட்டணத்திற்குள் பிக்ஷைக்காகச் செல்ல அவ்விட மோர் ஸ்திரீ இவருடைய ரூபத்தை நோக்கிமோஹமடைந்து போகேச்சையைத் தான்வைத்துக்கொண்டு தன்வீட்டிலிறங்க இடங்கொடுத்து அமுதுபடி பருப்பு முதலாகியவைகளைக் கொடுத்து ஆதரிக்க வவர் உட்கருத்தை யறியாமல் பிரீதியுடன் கூடின பக்தியா லாதரிக்கிறு ளென்று பிரேமையுட னவ்விட மிருந்தார்.

நடுராத்திரியில் சஜாணரிட மம்மாதுவந்து உம்முடன்கூட நான் வருகிறே னென்ன அவரவளைநோக்கி உன்னுடைய பர்த்தா வீட்டிற் படுத்துக்கொண்டிருக்க அவனைவிட்டு நீ வருவது வுசிதமல்ல வென்ன அவளதைக்கேட்டு வீட்டிற் சென்று தன் கணவனுடைய சிரசைக் கண்டித்துத் தன் கையிலேந்திக்கொண்டு சஜாணரிடஞ் சென்று அவரை நோக்கி உமக்காக நானென் கணவனைக் கொன்றேன். என்னுடன் போகிக்கக் கடவையென்று சொல்ல அந்தப்பக்த ரதற்கு ஒப்பாம லிருக்க அம்மாது அவரை நோக்கி என்னிஷ்டத்தை நீ நிறைவேற்றும லிருந்தால் அதிக வனர்த்தத்தை யுன் விஷயமாகச் செய்வேன் பாரென்றாள். அவ ரதற் கெவ்வளவேனு முட்படா திருப்பதைக்கண்டு அம்மாது அபாரமாக வழுதுக்கொண்டு வீதிநடுவில் வந்து வாயிலடித்துக் கொள்ள வனேக ஜனங்க ளவ்விடத்தில் ஒன்றுகூடினார்கள். அம்மாது அவர்களனைவரையும் நோக்கி இப்புருஷ னென்கணவனைக் கொன்றான். திருட்டு வைஷ்ணவன், பாபநினைப்பை யுடையவனாகி யென்னிடம் வந்து பெண்பாலான வெனக்கிந்த அனர்த்தத்தைச் செய்தா னென்ன அவர்களனைவரு மப்பொழுது அந்த விஷ்ணு பக்தரை யதிகாரியினிடங் கொண்டு போனார்கள். அவ்வதிகாரியுஞ் சஜாணரைப் பார்த்து, இப்படிச் செய்வது யோக்கியமா ? வென்ன, சஜாணர் நடந்தசங்கதியை யுண்மையாகச் சொன்னார். அதிகாரி யதனைக்கேட்டு ஆலோசனை யொன்றுந் தோன்றாமல் உட்கார்ந்திருக்க, அங்கிருந்தசிலரவ்வதிகாரியைநோக்கி வியபிசாரஸ்திரீயின் வாக்கியத்தை விசுவசிப்பது யுக்தமல்ல வென்ன, அம்மாது பொய் சொன்னாளென்று அவ்வதிகாரி யெண்ணி சஜாணரை விட்டுவிடும்படி யாக்கினை செய்தான், ஜாரஸ்திரீ யதிகாரியை நோக்கி ஐயா! இவனென்கணவனைக் கொன்றான். குற்றஞ்செய்த வவனது கையைக் கண்டித்து விடுவது யுக்தமாயிருக்கும். என்வார்த்தையை நீர் கேளாதிருப்பீராகில் நா னரசனுக் கறிவிப்பே னென்றாள். இதைக்கேட்டு அவ்வதிகாரி பக்தருடைய கையைக் கண்டித்து விடும்படி யாக்கினை செய்தான். சஜாணரச் சிக்ஷைக்கு வுட்பட்டுப் பூர்வ ஜன்மத்தில் நானேதோ கொடிய கருமத்தைச் செய்தேனென்று தான் மனதி லெண்ணிக்கொண்டு அதிக விசனத்துடன் யாத்திரை ஜனங்களுக்குப்பின் நடந்து சென்றார்.

சஜாணரைக் காண்பவர்களுண்மையை யறியாமல், திருட்டு வேலை செய்தமையால் அவர் கைகள் சேதிக்கப்பட்டன வென்று சொல்ல வாரம்பித்தார்கள். எவரெப்படி சொல்லினும் சஜாணர் ஸ்ரீஹரி பஜனையைச் சந்தோஷத்துடன் செய்துக்கொண்டு ஜகன்னாத க்ஷேத்திரத்திற்குச் சமீபமாகச் சென்றார். ஸ்ரீஜகன்னாத சுவாமி அர்ச்சகர்களுடைய சொப்பனத்திற் சென்று சஜாண ரென்னும் பக்தர் யாத்திரையாக வருகிறார். நீங்களவருக் கெதிர் கொண்டுபோய் மரியாதைகளுடன் பல்லக்குமே லேற்றிக்கொண்டு வாத்திய கோஷங்களுடன் சன்னிதியிற் கொண்டுவந்து சேர்க்கக்க டவீரென்று ஆக்கினைசெய்ய அர்ச்சகர்களாச்சரியப்பட்டு மறுதின த்தில் பல்லக்கையுடனும் வாத்தியங்களுடனும் யாத்திரை ஜனங்க ளிறங்கியிருந்த விடத்தைச் சேர்ந்து சஜாணபக்தர் யாரென்று வினவ, அங்கிருந்த ஜனங்க ளவரைக் காண்பிக்க அர்ச்சகர் ரவரைக் கண்டு ஐயா! பக்தசிரேஷ்டரே! ஜகன்னாதருமமைப் பல்லக்குமே லுட்காரவைத்து வாத்திய கோஷங்கள் முதலான சம்பிரமங்களுடன் சன்னிதிக் கழைத்துவரச் சொன்னார். இந்தப் பல்லக்கின்மே லே றக்கடவீர். நாமவ்விடம் போவோமென்று கூறியவசனத்தை யிதர யாத்திரை ஜனங்கள் கேட்டு ஆச்சரியப்பட்டு சஜாணர் திருடரா யிருந்தும் ஸ்ரீஹரி கிருபையைப் பெற்றுரென்றார்கள். அவ்வேளை யில் சஜாண ரர்ச்சகரை நோக்கி ஸ்வாமிகளே! பல்லக்கின்மீது நானேறமாட்டேன். நான் பாபகருமத்தைச் செய்யாதிருக்க ஜகன் னாதர் என்மேற் கிருபைவைக்காம லேன் கையை கண்டிக்கும்படி செய்தார்? இது மூக்கை முதலில் அறுத்து மரியாதைகளைப் பிறகு செய்ததுபோலாயிற்று. கோவிந்தன் யென்மீதேன் கோபங்கொண் டார்? அவர் கிருபையுடைய கருணாமூர்த்தி யாயிற்றே! அவ ருடைய அனந்த கலியாண குணங்கள் புராணங்களிற் பிரசித்தமாக அறையப்பட்டிருக்கின்றனவே! அவையெல்லாம் பொய்யோ! அடி யேன் கரணத்திரயங்களாலுஞ் செய்யும்படியான சேவை நியதமாக விருக்கின்றதே! யென்று கண்ணீரொழுக சொல்லிக்கொண் டிரு க்க ஸ்ரீஹரியான ஜகன்னாதமூர்த்தி அந்தப் பக்தர் கண்களுக்கு மாத்திரம் புலப்பட, அவர் திருவடிகளைச் சஜாணர் நமஸ்கரித்து கையை யேன் வெட்டச் செய்தீரென்று கேட்க, பெருமாள் சொல் லுவார். பூர்வஜன்மத்தில் நீ பிராம்மணனாகி யிருந்து கங்கையில்

நீராடி அக்கரையோரத்தி லுட்கார்ந்து கமலேசனை பஜித்துக்கொண்டிருந்தாய். ஓர்பசு, கசாய்க்காரனின்றும் விடுபட்டு ஓடிக்கொண்டிருந்தது. அவன் சற்றுநேரஞ்சென்று உன்னிடம்வந்து இவ்வழியாகப் பசுபோயிற்றோவென்று கேட்டான். நீ உன் கையினாலப் பசுவு வோடின திக்கினைக் சமிக்கையாற் காட்டினாய். அவனவ்வழியாகச் சென்று அந்தப் பசுவைப் பிடித்துச் சேதித்தான், இந்த ஜன்மத்திலப்பசு ஸ்திரீயாகி அதைக்கொன்றவனவனுக்குப் புருஷனாகி இருவருக்கும் ஒற்றுமையின்றி காலங்கழிந்து பூர்வவிரோதத்தைக் கொண்டு புருஷனை யந்தஸ்திரீ கொன்றுவிட்டாள், நீ அவள் வீட்டிற்புகுந்தது பூர்வ வாசனையாயிருந்தது. பசு அவ்வழியாகப் போயிற்றென்று உன்கையால் சமிக்கைக் காட்டினபடியால் அந்த தப்பிதத்திற்கு உன்கை சேதிக்கப் பட்டது. இவ்விதமாக உன்னுடைய ஜன்மாந்தரத்தால் ஏற்பட்டிருந்தபடியால் அவரவர் ருணந் தீரும்பொருட்டு நடக்கவேண்டியது நடந்துவிட்டது. பூர்வ வாசனையால் உன்னுடைய ஸ்திதி பஜனைபாவனையி லிருந்தது. நல்லோ ரனைவரும் புகழ நீ நற்கதியை யடைவாயென் றுணர்த்தி பெருமாளந்தப் பக்தனுடைய கையை யெப்போதும் போற் செய்தனர். இதைக்கண்டு அந்த யாத்திரையிற் சேர்ந்த ஜனங்க ளனைவரும் சந்தோஷாதிசயத்தை யடைந்து ஜய ஜய வென்னும் ஓசையால் பக்தஜனங்கள் கொண்டாட, சஜாணரை ஜகந்நாதத்திற் கழைத்துப்போய் பெருமாள் சன்னிதியிற் பிரவேசித்தார்கள். சஜாணர் நியமயுக்தராகி ஜகந்நாத ஸ்வாமியைச் சேவித்து அதிக ஆனந்தத்துடன் அவருடைய சொரூப ரூப குண விபூதிகளில் ஈடுபட்டு அவருடைய திருமுக மண்டலத்தை நோக்கி ஓ தேவ தேவா! ஜகதீசா! ஸ்ரீநிவாசா! ஸ்ரீபப்பதி! ஜகந்நாதா! பதிதபாவனர் நீரென்னும் திருநாம மென்விஷயத்திற் பிரகடமாயிற்று. அனாதனை யென்னை ஆட்கொண்டீரென்று அனேகவிதங்களாகப் பிரார்த்தித்து ஸ்ரீஹரியினுடைய ரூபத்தையும் நாமத்தையு சார்வதா சிந்தித்து கிருதார்த்தரானார்.

---

## நரவாஹனர் சரித்திரம்.

மஹாநதி தீரத்தில் நரவாஹன னெனும் நாவிகரொருவரிருந்தார். அவரிரவும் பகலும் "இராதா கிருஷ்ணா" யெனும் நாமத்தை

ஸ்மரித்து விசேஷமாகச் சாதுக்களுடைய சேவையும் பகவானிடத்தி லதிகபக்தியு முடையவராயிருப்பார். சன்மார்க்கத்தாற் படவுகளை யோட்டிக்கொண்டு அதனால் வருமாதாயத்தால் சமுசாரத்தை நடத்திவருவார். ஹரிபக்தர்கள் நதியைத் தாண்ட வேண்டுமென்றால் அவர்களிடந் திரவியத்தை வாங்குகிறதில்லை. ஏழை ஜனங்களிடத்துந் துட்டு கேட்பதில்லை. தனவான்கள் தங்களுடைய சந்தோஷத்தாற் கொடுக்குந் திரவியத்தைக் கொண்டு சந்தோஷித்து அவர்களை மன்னித்துவருவார்.

ஒருகாலத்திற் சிலபேர்கூடி அவர்மேற் பொறாமைகொண்டு அரசனிடஞ் சென்று அனேகபிரகாரங்களாகக் கோள்சொன்னார்கள். அவனதைக்கேட்டுக் குரோத முடையவனாகி யவர்வீட்டைக் கொள்ளை யடிக்கும்படி உத்தரவு கொடுத்தான். இராஜபடாள் நரவாஹனருடைய வீட்டிற் சென்று பார்க்குமளவில் திரவிய மேதுமில்லாதிருக்க அவரைப்பிடித்து அரசனிடங் கொண்டுவந்து ஓ மஹாராஜரே! இவர் திரவிய மனைத்தையு மெவ்விடத்திலோ யொளித்துவைத்தார். வீட்டில் திரவியமொன்று மில்லையென்று சொன்னார்கள். இதைக்கேட்டு அரசன் நரவாஹனரை நோக்கி யுன் திரவியத்தை யெங்கு வைத்திருக்கிறாய்? அதனை நீ யறிவிக்கும் பரியந்தம் சிறைச்சாலையி லிருக்கவேண்டுமென்று ஆக்கினைசெய்ய இராஜதூதர்க ளவரை மிகத் தொந்தரைசெய்து சிறைச்சாலைக்கழைத்துச்சென்று காவலில் வைத்தார்கள். பகலெல்லா மன்னபானங்களொன்றும் பக்ஷிக்காமலிருந்து தினமும் இராக்காலத்தி லந்தப் பக்தருடைய வீட்டுதாசி அன்னத்தைக் கொடுத்துவந்தாள். அவளை யொருநாள் நரவாஹனர் நோக்கி யென்னிடத்திலிருந்த திரவியமனைத்தும் சாதுக்கள் விஷயத்தில் விரயமாயிற்று. அரசனுக்கெதைக் காண்பிப்பேன். சிறைச்சாலையி லகப்பட்டேனே? ஸ்ரீஹரி! கிருஷ்ணா! என்றுசொல்ல அந்த தாசியானவள் நரவாஹனரை நோக்கி ஐயா! விஷ்ணுமூர்த்தியை சேவித்தால் சங்கடமனைத்தும் நிவாரணமாய்விடும். அவருடைய பஜனையை நீர் செய்யும், உமது திரவியத்தை விசேஷமாகப் புண்ணிய கருமங்களிற் செலவு செய்தீர் ஸ்ரீஹரி ரக்ஷிப்பர். அவ ரனேக பக்தர்களைச் சங்கட காலங்களி லிரக்ஷித்தருளியிருக்கிறார், அவருடைய நாமத்தை யிடைவிடாது ஜபஞ்செய்யுமென்று சொல்ல, இதுவே ஓர் தூண்டுகோல் போ

லாகி இராதாகிருஷ்ணவென்று சொல்லிக்கொண்டு அவர் ஸ்ரீஹரி மேற் சித்தம் வைத்து ஓ விசுவவியாபகா! கோவிந்தா! ஹரி! சமுசார பிரமையிலிருந்து விடுதலை செய்யவும். அனித்தியமான இத் தேஹ சம்பந்தத்தால் அதிக நஷ்டத்தை யடைந்தேன். அநேக பக்தர்களை நீ ரிரக்ஷித்தீர். ஓ ஜனார்த்தனரே! இப்போதிந்த சங்கடத்தை அடியேனுக்குத் தீர்த்தருளுவீ ரென்று பிரீதியுடன் வேண்ட பெருமா னிதைக்கேட்டு மூன்றுநாள் கால்விலங்கை நீக்கி அரசன் சொப்பனத்திற் சென்று அடா! உன்மத்தனே! நீ இராஜ கர்வத்தால் பக்தனை நரவாஹனரைப் பணிந்து சன்மானிக்காமல் துஷ்டருடைய வார்த்தையை மெய்யென்று துச்சமானச் செய்கையைச் செய்தாய். சாதுசேவையில் நிரதராகி சகலதனத்தை யுஞ் செலவழித்தார். நீ அவர் திருவடிகளைப் பணியக் கடவை யென்று சொல்ல அரசன் திடுக்கிட் டெழுந்திருந்து சிறைச்சாலைக் குச் சென்று நரவாஹனருக்கு நமஸ்கரித்து மரியாதைகளைச் செய்யத் தொடங்கினன். நரவாஹனர் பின்பு நரஹரியைப் பஜித்துக்கொண்டு தன்வீட்டிற்கு வந்து விசேஷ பூஜிதை யடைந்து விளங்கினர்.

---

## இராயசிங்கு அங்கதன் சரித்திரம்.

க்ஷத்திரிய குலத்தி லிராயசிங்கென்றும், அங்கத னென்றும் தமயன் தம்பிமாரிரண்டுபேர் இராஜரீகஞ் செய்துக் கொண்டு மேன்மையைப்பொருந்தியிருந்தார்கள். தம்பியான அங்கதனுடைய மனைவி ஹரிபக்தியிற் சிறந்தவளாகி ஓர் சத்புருஷனிடத்தில் விசேஷமாக ஹரிபக்தியைக்கண்டு அவரிடம் உபதேசத்தை அடைந்து ஹரிநாமத்தைச்சொல்லிக்கொண்டிருப்பாள். இப்படி நெடுங்காலம் நிஷ்டையுடனிருக்க ஒருகாலத்திலவளுடைய வாசாரியர் பட்டணத்திற்கு வந்தார். இச்சங்கதியைக்கேட்டு வெகு சந்தோஷத்தை யடைந்து தன்வீட்டிற் கவரை அழைத்துவந்து உபசார பூஜைகளை வுசிதப்படிச் செய்யுமளவில் அவளுடைய கணவ னிதைக்கண்டு விபரீத மென்றெண்ணி கோபத்தை யுடையவனாகி ஸ்திரீகளுக்குத் தெய்வம் தங்கள் பர்த்தாவேயென்று சொல்லித் தன் மனையாளைக் குருபூஜையைச் செய்யவொட்டாமல் நிற்பந்திக்க அவ ளன்னபானங்களை விட்டு இராமபிரானைக் கதிநீயே யென்று கெட்டியாகச்

சிந்தித்து மூன்றுநா ளிடைவிடாமல் நியமத்தைப் பிடித்திருந்
தாள். அப்பொழுது அங்கதனுடைய சொப்பனத்திற் பெருமா
ளெழுந்தருளி அவனை கடாக்ஷித்து நோக்கினார். பொழுது விடிந்த
வுடனங்கதனெழுந்திருந்து தனது மனையாளிடஞ்சென்று பூரணசுந்
தரமான ஸ்ரீஹரி முகத்தைமேன்மையாகும்படி கண்டேன். உனது
பிரசாதத்தா லெனக்கும் பெருமாள் சேவை நேர்ந்தது. நானெ
ப்படி தரிப்பேனே? நாரணனுடைய பஜனையை யெவ்வண்ணமா
கச் செய்வதோ? என்று அனுதாபத்துடன் ஆசாரியரை யழைத்
து அளவற்ற சேவைகளைச் செய்து அவருடைய அனுக்கிரகத்
தைப்பெற்று சதிபதிகளிருவரும் வைஷ்ணவபக்தியைச் செய்து
பிரியத்துடன் சாதுக்களைப் பூஜித்துப் புகழ்பெற் றிருந்தார்கள்.

அண்ணனான இராயசிங்கு அரசாக்ஷியை நடத்திவந்து தம்பி
யை தேசாந்தரத்திற் சேனைகளுட னனுப்பி அன்னிய வரசருடைய
போர்புரியச்செய்தான். அங்கதனும் சுபமாம்படி சண்டைசெய்து
ஜயசீலனாகி விரோதி நகரத்தைக் கொள்ளை கொண்டான். அந்த
கொள்ளையில் நூறு இரத்தினங்க ளகப்பட்டன. அதிலொன்று
மேன்மையுட னிருந்தமையா லதனைத் தன்னிடம் வைத்துக்கொ
ண்டு ஜகன்னாதருக் கற்பனை செய்ய வெத்தனித்தான். மற்றவை
களை வைஷ்ணவ ஜனங்கள் சந்தோஷிக்கும்படி அவர்களுக்குப்
பங்கிட்டான். விசேஷமான திரவியத்தை அண்ணனுக்குக் கொ
ண்டுவந்து அற்பித்து அமூலியமானவந்த இரத்தினத்தைமாத்
திர மவனுக்குக் காண்பிக்காம லிருந்தான். சிலதுஷ்டர்க ளிச்சங்
கதியை யண்ணனானவரசனுக் கறிவிக்க அவன் தம்பியை நோக்கி
இரத்தினமொன் றுன்னிடமிருக்கிறதென்று கேள்வியுற்றே னத
னைக் கொடுக்கக் கடவை யென்றான். அப்பொழுது தம்பி அதனை
கொடுக்கேனென்று சொல்ல அண்ணன் கோபமுற்று குரோதத்
தை வெளியிற் காட்டாமல் தம்பியை யொருநாள் போஜனத்திற்
காகத் தன்வீட்டிற் கழைத்து தன் தங்கையால் விஷங்கலந்த பக்ஷி
யத்தை பாகஞ் செய்வித்து தம்பிக் கதனை வட்டிக்கும்படிச் செய்
தான். தம்பியான அங்கதன் ஸ்ரீஹரி போக்தாவென்று பகவா
னுக்கு நிவேதித்து பக்ஷிக்கத் தொடங்கினான். அவ்வேளையிற் பெ
ருமாள் பகினி (தங்கை) மேலாவேசமாகவந்து அங்கதனை நோக்கி
உனக்கிட்ட பக்ஷியம் விஷக்கலப் புடையதென்று சொல்ல, அவன்

ஹரி சமர்ப்பணம் பண்ணினேனாதலால் அவனுக்கு சேஷமான பிர சாதத்தை நாம் சாப்பிடவேண்டுமென்று யாவற்றையும் பக்ஷித் தான். பெருமானுடைய கிருபையா லவ்விஷ மவனைப் பாதிக் கவில்லை.

அங்கதன் பின்பு தன் மனையாளிடம் வந்து தனக்கு விஷம் வைத்த சங்கதியைத் தெரிவித்து அப்பட்டணத்தி லிருப்பதுயுக்த மல்லவென்று சதிபதிக ளிருவரும் ஜகன்னாதத்திற்கு வந்தார்கள், இதை யரசன் கேள்வியுற்று க்ரோதமடைந்து மந்திரியை சேனைக ளுட னனுப்பி அங்கதனைப்பிடித்து இரத்தினத்தைக் கொண்டுவரு ம்படி யாக்கினை செய்தான். அந்த மந்திரியு மங்கதனிடஞ் சென் று அரசன் கட்டளையை யறிவித்தான். தம்பியும் விரைவுடனந் த ரத்தினத்தை அவனுக்குக் காண்பித்து இது ஜகன்னாதருக்கு அர்ப்பணையாயிற் றென்று சொல்லி அவ்விடத்தி லோர் புஷ்கரணி யில் போட்டுவிட்டான். பின்பு அரசனுடைய சேனையாட்க ளனை வரு மந்த புஷ்கரணியி லதனைத் தேடியு மதனைக்கண்டிலர். அப் பொழுது அங்கத னவர்களைப்பார்த்து அந்த ரத்தினம் ஜகன் னாதருடைய கழுத்தி லமைந்திருக்கும். இவ்விட மது இராது சன்னிதியிற்சென்று பார்க்கக்கடவீரென்று சொல்ல, அந்தமந்திரி பெருமாள் சன்னிதிக்குப்போய் பார்க்குமளவில் அதனை ஜகன்னாதர் கண்டத்தி லிருக்கக்கண்டு இந்த இரத்தின மெவ்விடத்தியதென்று அர்ச்சகனைக் கேட்க அவன் அந்த இரத்தினமிவ்விடத்திற்கிழவிழுந் திருந்தது. பெருமான் சொப்பனத்திற் கண்டாமணி செய்யச் சொல்லி ஆக்கினைச் செய்தார். அப்படியே அதனை ஆபரண மாகச் செய்து அற்பித்தே னென்று சொன்னான். இதைக்கே ட்டு மந்திரி இராயசிங்கனிடஞ் சென்று நடந்த சங்கதியை யறி வித்தான். அவனனுதாபத்துடன் ஹரிபக்தியிற் பிரீதியுடையவ னானான்.

---

## குணவதிபாயி சரித்திரம்.

புருது யெனு மோரரசனுக்கு ஓர் கன்னிகை பிறந்தாள். அவ ளுக்கு குணவதியெனும் பேரிட்டு வளர்த்து பெரியவளானவு டன் மாசோசிங்கெனு மரசனுக்கு மணம் புரிந்தார்கள். சதி பதிகளிருவருஞ் சமுசாரத்தைச் சௌக்கியமாக நிறைவேற்றிவர

குணவதி கர்ப்பமாகி யோர் புத்திரனைப் பெற்றாள். அக்குழந்தைக்குச் சேவைசெய்யும் பொருட்டு அரசனோர் தாசியை தன் மனையாளிடம் வைத்தான். அந்த தாசியானவள் வேலைகளைச் செய்யும்போது ஹரிநாமத்தைச் சொல்லுவாள், தொட்டிலிற் குழந்தையைப் படுக்கப்போட்டு அதனை ஆட்டிக்கொண்டிருக்கும் பொழுது அச்சுதா! கிருஷ்ணா! ஹரி! கோவிந்தா! ஸ்ரீஹரியென்று சொல்லிக்கொண்டிருப்பாள். குணவதி யிதைப்பார்த்து என்னஜெபிக்கிறாய்? அதனைச் சொல்லவேண்டுமென்று கேட்க, அந்தத்தாசி அவளைநோக்கி நான் ஸ்ரீஹரிநாமத்தை யுச்சரிக்கிறேன், இந்த தேஹமனித்தியம், நிமிஷத்தில் நசித்துப்போம், பாசபந்தங்களை விட்டு பெருமாள்மேல் பக்தி செலுத்தவேண்டு மென்றாள். குணவதி யிதனைக்கேட்டு பகவத் பஜனையை தனக்குச் சொல்லவேண்டு மென்று கேட்டாள். அப்படியே செய்வேனென்று ஸ்நானஞ் செய்து வரச்சொல்ல குணவதி நீராடி வந்தவுடன் பூஜாதிரவியங்களைச் சேகரித்துப் பெருமாளுடைய பூஜையை அவள்கையாற் செய்வித்து அர்ச்சனாதிகளையும் முடித்து ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியைத் தியானிக்கச்சொல்லி அவர் திருநாமத்தை யுபதேசித்தாள். அம்மாது கலக்கமின்றி அவள் செய்த போதனையைக்கெட்டியாகப்பிடித்தாள். நாளுக்குநாள் ஸ்ரீஹரி பக்தியும் சித்தியா யவள் கண்ணன் மீது கனத்த பிரேமையாற் கண்ணீரிடுவாள். வீட்டுவேலைகளிலும் பதியினிடத்தும் புத்திரனிடத்தும் நினைப்பில்லாம லிருப்பாள். இதைக்கண்டொருநா ளரசன், தன் மனைவியைப்பார்த்து இந்த அவஸ்தை யுனக் கெப்படி யுண்டாயிற்றென்று கேட்க, குணவதி கணவனை நோக்கி பிராண நாதரே! என்னுடைய மனதை ஸ்ரீஹரி சரணங்களிற் செலுத்தினேன், ஆயினு மவருடைய தரிசனமின்னும் அகப்படவில்லையென்ன அரசன் குரூர திருஷ்டியால் நோக்க, அவள் உடனே பயத்தால் கண்களைமூட, அப்பொழுது பகவான் தோன்றலுற்றார். சதுர்பாஹுக்களும் மகுடகேயூர ஹாரங்கள் முதலான திவ்யாலங்காரங்களுடன்கூடின திவ்யமங்கள விக்கிரகத்தைக்காண நமஸ்கரித்து சந்தோஷித்தாள். பெருமாளுந் தனது திருக்கையை அவள் சிரசின்மேல் வைத்து நீ பயப்படவேண்டாம், பக்தஜனங்களுக்கு சகாயனாயிருப்பேனென்று சொல்ல அவளுடனே கண்ணைத் திறந்தாள். மகத்தான கோபத்துடன்

பர்த்தா தன்மனைவியைப் பார்த்து சாதுக்களனைவரும் வீட்டிற்கு வருகிறபடியால் சமுசாரந் தாறுமாறாயிற்று. இனி யின்றுமுதல் சாதுக்க ளிவ்விடம் வரக்கூடாதென்று கட்டளையிட்டு அந்த தாசியைக்கண்டு குணவதி, யிச்செய்கைகளுக் குடன்படாதிருக்கப் பார்த்துவரக் கடவையென்று சொல்லி காவலாளிகளுக்கும் அங்ஙனமே சாதுஜனங்களை வரவொட்டாமலிருக்கக்கடவீரென்று ஆக்கினைசெய்துச் சென்றான்.

அரசன்போனபின்பு குணவதி நாராயணனை மனதிலெண்ணி அவருடைய திருநாமத்தை ஸ்மரணைசெய்து சந்தோஷத்துடனிருந்து சாதுக்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தைத் தான் தாசிமூலமாக வெளியிலிருந்து வரவழைத்து உட்கொள்ளுவாள். அரசனுடைய மந்திரி அபக்த பூரணனாயிருந்து இச்சங்கதியைத் தான் எஜமானனுக் கறிவித்தான். இதைக்கேட்டு அரசனதிகமாக க்ஷோபித்தான். அச்சமயத்தில் குணவதியானவள் தன் தலைமயிரை யெடுத்துவிட்டு ஆபரணங்களனைத்தையுங் கழற்றி அற்பமான ஓர் வெண்மை வஸ்திரத்தை யுடுத்திக்கொண்டு துளசிமாலையைப் பூஷணமாக உடையவளாகி கோபிசந்தன ஊர்த்வ புண்டரத்தைத் தரித்து வைஷ்ணவர்களான சாதுக்களை யழைத்துப் பூஜித்து அபார வைராக்கியத்தை யடைந்திருந்தாள். இந்த சங்கதியையும் மந்திரி அரசனுக் கறிவித்தான். அரசன் மகத்தான கோபத்தை யுடையவனாகித் தன்குமாரனுக் கறிவித்தான். அவன் தகப்பன் வார்த்தைக்கு விரோதமில்லாமல் பொதுவில் நின்று தாயார் மேன்மையடைவாளென்று தனக்குள் நினைத்திருந்தான்.

இவ்வண்ணமாக இருக்க அரசன் நான்கு தூதரை யழைத்து தன் மனையாளைக் கொன்றுவர வேண்டுமென் றவர்களுக்குக் கட்டளையிட்டான். அவர்களும் சந்தடிசெய்யாமல் குணவதியைக்கொல்ல வேண்டுமென்று வந்தார்கள். அவ்வேளையி லம்மாது தன்னுடைய பூஜாகிருகத்திலிருந்து பெருமாள் மூர்த்தியை அர்ச்சித்துக்கொண்டிருந்து ராஜபடாள்வந்த சங்கதி யறியாதிருந்தாள். பெருமாள் அகஸ்மாத்தாக புலிரூபத்தைத் தரித்திருக்கக் குணவதி கண்டு மோகமடையாமல் இவ்விதப் ரூபத்தை பெருமாளடைவதற் கேது காரணமோவென்று புஷ்பதளாலும் சுந்தாக்ஷதைகளாலும் அவ்வுருவங்கொண்ட தேவனை பூஜித்து முடிந்தபின் சாதுஜனங்களைப்

பூஜிக்கும் பொருட்டு வெளியேவரவே இராஜபடர்களைக் கண்டாள். அச்சமயத்தி லப்புலியும் வெளியில்வந்து மஹத்தான பயத்தைக் காண்பித்து அந்நால்வரையுங் கொன்றுவிட்டு அரைக்குட் சென்று அந்தர்த்தானமாய் விட்டது. அப்பொழுது பக்தர்களனைவரும் ஜய ஜய சப்தங்களைச் சொல்லிக்கொண்டு ஸர்வேஸ்வரனைத் தொழுதார்கள். இச்சங்கதியை யரசன் கேட்டு பயமடைந்து மனையாளிடம் வந்து பெருமானுக் கடிபணிந்து பக்த சிரேஷ்டனானான். அதுமுத லவ்வரசன் சாதுபூஜைகளுக்கு அமித திரவியத்தைச் செலவுசெய்து ஹரிபக்தியை விடாமல் மேன்மையடைந்தான். குணவதியும் ஸ்ரீஹரிசரணங்களில் சிறந்த பக்தியைச்செய்து சத்கதி யடைந்தாள்.

---

## குவராபாயி சரித்திரம்.

இராஜ புரோகிதரான பிராம்மண ரொருவருக்கு ஓர் கன்னிகையிருந்தாள். அவளுக்குத் தாய்தந்தைகள் குவராபாயியெனும் நாமத்தை வைத்தார்கள். அவள் ரூபலாவண்யாதிகுணங்களுடன் ஹரிபக்தியும் விசேஷமாக உடையவளாகி யிருந்தாள். தாய்தந்தைக ளவளுக்குச் சிரிட்டுப் பார்க்கும் பொருட்டுச் சிறுபிராயத்திலேயே விவாஹத்தை முடித்தார்கள். விவாஹ மாயினு மப்பெண் ஹரிபக்தியிலே மிகுதியாக விருத்தியடைந்து வந்தாள். ஒருநாள் மாமியார் வீட்டார் பெண்ணை யனுப்பும்படி யழைக்க வந்தார்கள். குவராபாயி அவர்களைக் கண்டவுடன் தனக்குள் யெண்ணமிடத் தொடங்கினாள். அஃதென்னவென்றால், இச்சரீரம் நிலையற்றது. விஷய சுகங்களை போகித்தவுடன் துக்கங்களுடனேவரும், அதனால் நரகபோகங்களில் விழும்படிவரும், அதற்குமே லாத்மசுகமடையலாகாதன்றோ? பர்த்தாவின் சங்கம் சந்தானத்தை யுண்டாக்கும். அதனால் மோஹ மமதைக ளுண்டாகும். இது ஸர்வேஸ்வரன் திருவடி யடைவதற் கிடையூறாக விருக்குமென்று பலவாறான விவேக யுக்திகளால் மனதைத் திடப்படுத்திக்கொண்டு நடுராத்திரியி லெழுந்திருந்து ஆபரணங்களைக் கழற்றி மடியிலிட்டுக்கொண்டு வீட்டைவிட்டு வெளியிற் புறப்பட்டுப் பட்டணத்துவாரத்தில் வருமளவில் அது மூடியிருக்கக்கண்டு ஸ்ரீகிருஷ்ணரைச் சிந்திக்க அந்த கவாடந் திறக்கப்பட்டது, அப்பொழுது குவரா

பாயி அவ்வூரைவிட்டு நெடுந்தூர மொண்டியாகச் சென்று அ...ற ஷையாயும் தைரியத்தை யுடையளா யிருந்தாலும் தைரியத்தை விடாமல் பிருந்தாவனத்தைச் சேர்ந்து அவ்விடத்தில்யமுனைக்கரை யோரத்திற் சி...ட்டமென்றொரு பிரதேசத்தில் ஸ்நானஞ்செய்து அவ்விடத்திலிருக்குஞ் சன்னிதிக்குச் சென்று ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைத் தரிசித்து ஓ கிருஷ்ணா! துவாரகாவாசா! பரமதயாநிதீ! பவபந்தத்தை விடுதலை செய்யுமென்று விண்ணப்பஞ் செய்து நமஸ்கரித்துத் தன்னிடத்திலிருக்கு மாபரணங்களைச் சாதுக்களுக்குப் பங்கிட்டு ஹரிசிந்தனை செய்துக்கொண்டு அவர் கிருபையை யெதிர் நோக்கிக்கொண்டு ஏகரீதியாக ஹரிநாமத்தை யுச்சரித்துக் கொண்டு ஒன்றையும் புசிக்காமல் மூன்றுநா ளவ்விடமிருக்கப் பெருமா ளாவளுக்குத் தரிசனங் கொடுத்து அப்பெண்ணை நோக்கிச்சக்கரத்தாழ்வாரையுடைய நாம்உன்னை யனேகவிதங்களாக இரக்ஷிப்போம், இராதா குண்டத்தில் நீ யிருக்கக்கடவா யென்று சொல்லி அந்தர்த்தான மானார். பின்பு குவராபாயி பெருமா ளாக்கினைப்படி ராதா குண்டத்திற் சென்று நிவாசமாயிருக்க ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அவளுக் கன்னமளித்து வருவார்.

குவராபாயின் தகப்பனார், பெண்ணை வீட்டிற்காணாமல் தேடிக்கொண்டு பிருந்தாவனத்திற்குவந்து இராதாகுண்டத்திற் றன் குமாரத்தியைக்கண்டு சந்தோஷித்து குலஜனங்க ளனைவரு முன்னை நிந்திக்கும்படி செய்துக்கொண்டனையே! நீ செய்த வேலை கிரமமல்ல, நான் வெட்கப்படும்படி செய்துவிட்டாயே யென்ன, குமாரத்தித் தகப்பனைநோக்கி உமக்கு அறுபது வயசாயிற்று. இன்னமிந்த சமுசாரத்தையே பிடித்திருக்கின்றாய் சரீரம் ஸ்திரமல்ல, மித்தியா ரூபமாகும். இதனையே ...யிருந்தால் ஸ்ரீஹரியை யெப்படி காணக்கூடும். நீ இப்பொழுது வைராக்கியத்தை யடைந்து உத்தமமான ஞானத்தை யடைவது சிரேஷ்டமாகு மென்று சொல்ல இவ்வார்த்தைகளைக் கேட்டுதகப்பன் சந்தோஷித்துக்குமாரத்தியை வீட்டிற்கு வரும்படி யழைத்து சங்கோசமின்றி அவ்விடத்தில் ஸ்ரீஹரி பஜனையைச் செய்துக்கொண்டிருக்கலாம், மாமியார் வீட்டிற் குன்னை போகும்படிச் சொல்லமாட்டேன். என் வார்த்தையை நீ மன்னிக்கக் கடவாயென்று பலவாறாக வேண்டிக்கொள்ள, குவராபாயி பெருமா ளாக்கினையை நானெதிர்ப்பார்க்கிறே

னென்று சொல்ல, அன்றிரவில் ஸ்ரீஹரி அவள் சொப்பனத்தில் வந்து வீட்டிற்குப் போகும்படி யாக்ஞைச் செய்தார். அப்படியே மறுதினத்தில் பெருமாள்மேல் சர்வபாரங்களை வைத்து தகப்பனுருடன் வீடுவந்து சேர்ந்தாள். அவ்விடத்தில் தானொரு தேவகிரகத்தை இஷ்டப்படி செய்துக்கொண்டு பெருமாளுடைய மூர்த்திக்குப்பிரீதியுடன் பூஜைகளைச்செய்து சாதுக்களான வைஷ்ணவர்களை சன்மானித்து இரவுகாலத்தில் ஸ்ரீஹரி கீர்த்தனையை இன்புற்றுச் செய்துவருவாள். அவளுடைய கீர்த்தனங்களைக்கேட்டு அனேகர் பக்திநிஷ்டையை யடைந்தனர்.

சேகாவதனெனு மவ்வூருக்கரசன் ஒருநாள் தன்புரோஹிதரைக்கண்டு உமது குமாரத்தி ஹரிகீர்த்தனையை யதிக மதுரமாகச் செய்கிறளென்று கேள்வியுற்றேன். நானதைப்பார்க்க வேண்டுமென்று சொல்லி தானே புறப்பட்டு புரோஹிதர் வீட்டிற்கு வந்தான். குவராபாயி ஸ்ரீஹரிமூர்த்தி சன்னிதியில் கீதங்களைப் பாடிக்கொண்டு மஹத்தான பிரேமையுடன் நாட்டியஞ் செய்துக்கொண்டிருந்தாள். அதற்கிணையாக தாளவீணை மிருதங்க ஓசைகளுமுண்டாக சகல ஜனங்களுந் தல்லீனராயிருந்தார்கள். அவ்வரசன் சுந்தரமான அந்த ஸ்திரீயைக்கண்டு அதிக காமங்கொண்டவனுகி பகவானுடைய கலியாண குணங்களை விளக்கும் சரித்திரங்கள் மீது மனம் வையாமல் பிரமைகொண்டிருக்க தன்னுடைய கண்கள் க்ஷணக்ஷணத்திற்கும் நித்திரையால் மூடலுற்றன. அதில் விந்தையான ஓர் சொப்பனத்தைக் கண்டான், அதென்னவென்றால் பெருத்த வெள்ளத்துடன் கூடிய ஓராற்றை கண்டதுபோலும் குவராபாயி அவ்வாற்றிற் கப்புறத்தினின்றிருந்ததுபோலும் அரசனை அவள் கண்டு ஓ பாபமதியுடையவனே! இவ்வாற்றை கடந்துவாவென்று சொன்னதுபோலும் இதற்குள் தான் விழித்துக்கொண்டதுபோலுங் கனவுகண்டனன், அங்குட்கார்ந்திருந்து அரசன் இந்த சொப்பனத்தின் பொருளை விசாரிக்குமளவில் குவராபாயி சமுசார சமுத்திரத்தைத் தாண்டியிருப்பவள்போலும் பாவியான தானதனை யெப்படி தாண்டுவது என்றும் அர்த்தமாக்கிக்கொண்டு மோஹத்தைவிட்டு அனுதாபத்தை யடைந்து உடனே அம்மாதுக்குதெண்டஞ் சமர்ப்பித்து அவளனுக்கிரகத்தைப் பெற்று ஹரிபக்தியை விசேஷமாகச் செய்தான். குவராபாயி ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியை

மிகுதியான பிரேமையுடன் பஜித்து அநேக ஜனங்களைப் பக்தியில் திருத்தி அவனியில் பிரசித்தி யடைந்திருந்தாள்.

---

## கிரிதரலாலா சரித்திரம்.

கிரிதரலாலா வென்பவர் கிருஷ்ணபஜனையிற் றற்பராகி பிருந்தாவனத்தில் வெகு ஜனங்களால் மன்னிக்கப்பட்டிருந்தார். அவர் சாது ஜனங்களைத் தெய்வ சமமாகவெண்ணி சத்பாவத்துடன் பார்த்தும் பூதங்களிற்றயை பூர்த்தியாக யுடையவராயு மிருப்பார். அவர் இராதாகிருஷ்ண வேஷத்தைப்போட்டு ரமணியமாக நடனஞ்செய்து சங்கீதவித்தையுடன் சகலரையு மானந்திப்பிக்கச்செய்வர். ஒருநாள் இராசலீலை செய்யும்பொருட்டு விஷ்ணு சன்னிதிக்குவந்து உட்கார்ந்திருக்க அநேக ஜனங்களவ்விடத்திற்கு வந்து வேஷத்தைத் தரித்துக்கொள்ளும்படி பிரார்த்தித்தார்கள். கிரிதரலாலா எழுந்திருந்து கிருஷ்ணமூர்த்தி சன்னிதிக்குச்சென்று பெருமான் திருவடிகளை நமஸ்கரித்து அஞ்சலிஅஸ்தராகி ஓஸ்வாமி! தேவதேவா! வேஷம்போடுவதற்கு வஸ்திரங்களை மறந்துவந்தேன், அடியேன் வீட்டிற்குச் சென்றவைகளைக் கொண்டுவர வேண்டுமென்றால் காலஹரணமாகுமென்று சொல்லி பெருமாள் திருமுகத்தைப் பக்தன் பார்த்தவளவில் சரிகைவஸ்திரங்களவ்விடம் விழுந்திருக்கக் கண்டார். ஜனங்களனைவரு மதைப்பார்த்து இது பக்தி மகிமை யென்று நமஸ்கரித்து மேன்மைப்படுத்த அவரன்றைய தினம் இராதாகிருஷ்ண வேஷத்தைப்போட்டார். அது அற்புதமாம்படி விளங்கிற்று. பிரஜைகளனைவரும் ஸ்ரீகிருஷ்ணவதார சரித்திரலீலைகளை யின்று பிரத்தியக்ஷமாகக் கண்டோமென்று கொண்டாடினார்கள். நாளுக்குநா ளவருடைய பிரசித்தி நான்கு திக்குகளிலும் பரவிற்று.

கிரிதரலாலா சாதுக்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தைப் பிரதிதினமும் ஸ்வீகரித்துவருவார். சாதுக்களுடைய சேவைக்கு மிஞ்சினசாதனை ஜகத்தனிலில்லையென்று அவர்களுடைய ஜாதி குலங்களறியாமல் பக்தியுடன் தொழுதுக்கொண்டு வருவார். இப்படியிருக்க ஒரு சாதுபுருஷன் ஹரிபதத்திற்குச் சென்றார். கிரிதரலாலா பாவசுத்தியுடனவருடைய தேஹத்தைக் கழுவி பாததீர்த்தத்தை ஸ்விகரித்தார். அதைக்கண்ட பிராம்மணர்கள் அசுத்தமான

பிரேதத் தீர்த்தத்தை அருந்தினீரே! பிரஷ்டராகி வேதவிதிக்கு விரோதமான வாசாரத்தை வகித்தீர். சாதிஹீனமான சவத்தின் தீர்த்தத்தைக் கொண்டதால் வர்ண சங்கரமாயிற்றென்று நிந்திக்க கிரிதரலாலா சொல்லுவார், சாதுக்கள் ஜகத்தை உத்தரிக்கவந்தவர்களாவார்கள், அவர்கள் பிறப்பிறப்பில்லாமற் புண்ணியசீலர்களாயிருப்பார்கள். அங்கு மிங்கு மசையாத சைதன்னியரூபரான ஹரி வியாபகராகி யெங்குமிருக்க, அத்தேகத்திலு மில்லாமற்போவரோ? வென்ன, பிராம்மணர்க ளவரைநோக்கி பிரம்மஞானத்தை வெகுவாகச் சொல்லுகிறீர், பிரஜைகளனைவரும் பார்க்கப் பிரேதத்தை இப்பொழுது பிழைக்கச்செய்யும், இல்லையாகி லுமக்குத் தகுந்த பவிஷ்காரத்தை வைப்போமென்று பயமுறுத்த, கிரிதரலாலா சங்கடமடைந்து கிருஷ்ணனிடம் மனதைச்செலுத்தி கண்களைமூடிக்கொண்டு ஏகாக்கிரமாகவிருக்க அனைவரும் பார்க்கும்படி அந்த பிரேத மெழுந்திருந்துட்கார்ந்தது. இந்தவாச்சரியத்தைக் கண்டு பிராம்மணர்களனைவரும் கிரிதரலாலாவை நமஸ்காரஞ் செய்து அவருடைய பக்திமஹிமையைக் கொண்டாடினார்கள். ஸ்ரீஹரி கிருபையால் அவர் கிருதார்த்தரானார்.

---

## நாராயணஸ்வாமி சரித்திரம்.

நாராயணனென்னு நாமத்தையுடைய ஓர் மஹாபுருஷன் நரஹரி பஜனையிலிருந்து சாராசார விவேகியாகி சன்னியாசாஸ்ரமத்தை யடைந்தார். ஆறு சத்துருக்களையுஞ் ஜெயித்து ஹரிபக்தியும் ஞானமுமடைந்து பின்பு பரமஹம்சராகி சஞ்சரித்திருந்தார். அவர் சகலமும் பிரம்மமெனுஞ் சாக்ஷாத்காரத்தைப் பெற்று களங்கரகிதமான சகுண நிற்குணங்களிரண்டையும் ஸ்ரீஹரிமய மென்றெண்ணி சகலஜாதிகளிலும் பிக்ஷைவாங்கிச் சாப்பிட்டுக் கொண்டிருந்து எவ்விடத்திலுஞ் சஞ்சரித்துவருவார்.

இப்படியிருக்க ஒருநாளவர் திரியம்பகத்திற்கு சஞ்சரித்துக் கொண்டு வந்தார். அனேக ஜனங்களவ்விடத்திற்கு யாத்திரை நிமித்தம் வந்திருந்தார்கள். அவர்களுடன் கிரிபுரிபாரத தீர்த்தரும் வந்திருந்தார். நாராயணஸ்வாமி தீர்த்தரிடஞ்சென்று போஜனமளிக்கச்சொல்லிச் சாப்பிடத்தொடங்கினார். அனேக ஜனங்களுக்குச்

செய்திருந்த வன்னத்தை அவரொருவரே பக்ஷித்தார் பின்பு ஜலத்தைக் கொள்ளாமல் காட்டிற்குச்சென்று ஓர் செடிநிழலில் நித்திரையிலிருக்க ஸ்ரீபாதர் (சன்னியாசி) அவருடைய சிஷ்யர்களிற் சிலரை அந்த ஸ்வாமிமேற் காவல்வைத்திருந்தார். நான்காநாளவரெழுந்திருந்தார். அப்பொழுது ஸ்ரீபாதருடைய சிஷ்யரவருக்கு ஜலத்தைக்கொடுக்க அதனை வேண்டாமென்று கிராமத்திற்குச் சென்று அவ்விடமோர் பெரியமெத்தை வீட்டைக் கண்டு அதின் வாய்க்காலால் வரும் கசடுஜலத்தை சாப்பிட்டார். பின்பு அவ்விடமிருந்து ஓர் சிவாலயத்திற்குச் சென்றார். அங்கு பிராம்மணர்களுருத்திராபிஷேகஞ் செய்துக்கொண்டிருக்க நாராயணசுவாமி தனது லிங்கத்தைப் பிடித்து மூத்திரதாரையை சிவலிங்கத்தின்மீது விடத்தொடங்கினர். அவ்விடத்திலுள்ள பண்டிதர்கள் "லகுருத்திரம்" பூர்த்தியாகும் பரியந்தம் மூத்திரதாரையை நிறுத்தக் கூடாதென்ன, அவரந்தப் பிராம்மணர்களை நோக்கி ஸ்வாமிகளே! நானபிஷேக பாத்திரத்தைப்பிடித்தேனவ்வளவே ஒழிய வேறொன்றுஞ் செய்யவில்லையென்று சொல்லிக்கொண்டு மந்திரமெல்லாஞ் சமாப்தியாகும் பரியந்தம் மூத்திரதாரையை விட்டுக்கொண்டிருந்தார். பண்டிதர்களிதைக்கண்டு ஆச்சரியமுற்று ஸ்ரீஹரி தந்திரமிதுவென்றிருந்தார்கள்.

அவ்விடமிருந்து அப்பரமஹம்சர் நாசிக் கெனும் பட்டணத்திற்குப் போகப் பிரயாணமாகச் சென்றார். வழியிற் குடும்பிகனை ஓர் கிரகஸ்தன் யாத்திரை செய்துக்கொண்டு அரணியத்திற் போகுமளவில் தான் கொண்டுவந்த குதிரை மரணமடைந்தது. கூடயிருந்த ஜனங்களும் வெகுதூரம்போய்விட்டார்கள். அப்பொழுது திருடர் பயத்தாலந்த கிரகஸ்தன் தொந்தரை யடைந்து ஸ்ரீகிருஷ்ணனைத் தியானிக்க அவ்வேளையிற் பரமஹம்சரவ்விடம் வந்து என்ன சங்கதியென்று விசாரிக்க கிரகஸ்தன் நடந்ததைச்சொன்னன். சதானந்தரான அந்த பரமஹம்ச ரவ்வார்த்தைகளைக்கேட்டு குதிரையினிடம் வந்து அதனைநோக்கி சீக்கிரத்தி லெழுந்திருந்து இவர்களை வீட்டிற்சேர்க்கக் கடவையென்று சொல்லவே அது ஜீவத்வத்தை யடைந்து பளுவைச் சுமந்துக்கொண்டு அந்த கிரகஸ்தனை குடும்பத்துடன் வீட்டிற் சேர்த்து பிராணனை விட்டது. ஸ்ரீஹரிதாசர்கள் சர்வேசுவரனுக்கு வஸ்து பின்னமாயிரார். இவ்

விதமாக அந்தப் பரமஹம்சரான நாராயணசுவாமி உலகோபகாரமாக அவதரித்து அந்தியத்தில் ஹரிபதமடைந்தார்.

---

## இராமகிருஷ்ணர் சரித்திரம்.

படோதா பட்டணத்தில் இராம கிருஷ்ணரென்றோர் பிராம்மண பண்டிதரிருந்தார். மஹத்தான பிரேமையுடன் மாதவன் பஜனையை மேன்மையுடன் செய்து சகல பூதங்களிலு மாத்மபாவனையைச் செய்து ஹரிநாமத்தை யல்லும் பகலுஞ் சொல்லிக்கொண்டு ஆசாபாசங்களை விட்டு ஜனங்களுக்கு ஸ்ரீ ஹரி மந்திரத்தைச் சொல்லுவார். இப்படியிருக்க ஒருஸ்திரீ தன் பர்த்தாவுக்கறிக்கைச் செய்யாமல் அவரிடம் வந்து வுபதேசத்தைப் பெற்றாள். இச்சங்கதி பரம்பரமாக அவள் பர்த்தா கேள்விப்பட்டு, மனதிற் கபடத்தை வைத்துக்கொண்டு தன்மனையாளை நோக்கி நான் கிராமத்துக்குப் போகிறேன். நான்கு நாளவ்விடமிருந்து திரும்பி வருகிறேனென்று சொல்லி யவள் கண்களுக்கவன் போனது போலத் தோன்றச்செய்து யாருமறியாதபடி இரகசியமாக ஓரறையி லொளித்திருந்தான். இல்லாள் தன் கணவன் வீட்டிலில்லையென்று நினைத்து நிஷ்கபடமாக தன் தோழியைக்கூடி குருசன்னிதியிற் சேர்ந்து மஹத்தானப் பிரீதியுடனவரை நமஸ்கரித்து வீட்டிற்கு வரும்படிப் பிரார்த்தித்தாள். ஆசாரியரவளை நோக்கி யுன்னுடைய கணவன் வீட்டிலில்லாத வேளையில் நான்வருவது யுக்தமல்ல. பாசபந்தங்களி லுழலுமவனான வுன்கணவன் கேட்டால் நம்மிருவரிடத்திலும் அதிக கோபத்தைக் கொள்ளுவான். நானுன் னுஞ்சோறு வுன்னுடையதாக விருக்கும். வீண்தொந்தரை நீயே யனுபவித்துக் கொள்ளுகிறாயென்று சொல்ல அம்மாது, கண்களிற் ஜலம்பெருக ஸ்திரீகளுடைய ஜீவனம் பராதீனமாயிருப்பினும், ஸ்வாமிசேவை யெனக்கெப்படி லபிக்கும் என்வீடெப்படி பவித்திரமாகுமென்று சொல்லி நமஸ்கரித்தாள். ஆசாரியரவளுடைய சத்பாவத்தைக்கண்டு அவள் வீட்டிற்கு வந்தனர். அந்த வீட்டாளதிகப் பிரீதியுடன் சமயலைச்செய்து ஆசாரியர் பூஜைக்காக ஆஸனபாத்தியாதியுபசாரங்களை யற்பிக்கும் சமயத்தில் அவளுடைய கணவன் சமயம்பார்த்து கையில் சஸ்திரத்தையேந்தி கோபத்துடன் தன்மனையாளை யடிக்க வெத்தனித்து வந்து குருவைப் பார்க்குமனா


இராமசாஸ்திரபட்டர்.
இராமகிருஷ்ணன்.
రామకృష్ణుడు.
காஜீமஹம்மது.
కాజీమహమ్మదు.
பகீர்.
ఫకీరు.
பலுபுகார்
బలఖుఖారు.

யில் அவர் ஸ்திரீ ரூபத்துடனிருப்பதைக் கண்டு பச்சாத்தாபத்தை யடைந்து துவேஷபுத்தியை விட்டுப் பக்தி லக்ஷணத்தைக் காண்பிக்கவே முன்போல புருஷரூபத்தை ஆசாரியரடைந்தார். இந்த வாச்சரியத்தைக் கண்டு வினீதனுகி அப்புருஷனவரிடம் உபதேசத்தைப் பெற்றான். பின்பு சதிபதிகளிருவரும் ஆசாரியருக்குச் சத்பக்தியைச் செய்தார்கள். அப்புருஷனிடமிருந்த துஷ்ட விருத்திகளெல்லாம் நிவர்த்தியாய்விட்டன. இவ்விதமாக பக்தர்களுடைய மஹிமைகளைப் பகவான் பிரகடமாகும்படிச் செய்கிறார்.

---

## இராமசந்திரபட்டர் சரித்திரம்.

டில்லி நகரத்தில் இராமசந்திரனென்பருர் பிராம்மணர் நியமத்துடன் ஸ்ரீஹரி பஜனையி லதிகப் பிரீதியை வைத்து இடைவிடாமல் நாமஸ்மரணை செய்துவருவார். வேதங்களிலும் விசேஷனை புண்ணிய மிருந்தும் ஒருவருடனும் வாதஞ்செய்யாமல் அஹங்காரத்தை விட்டிருப்பார். அயாசிதமாகவரும் திரவியத்தைக் கொண்டுதன்னுடைய குடும்பபோஷணத்தை நடத்திவருவார். ஸ்நானசந்தியாதி அநுஷ்டானங்களும் பஞ்ச மஹாயக்ஞங்களும் விஷ்ணு பூஜையும் அதிதி பூஜையும் பிரயாசையென் றெண்ணாமல் கிரமமாகச் செய்துவருவார். பிரஜைகளுக்கு பாகவதத்தை வியாக்கியானஞ் செய்வார். இவ்விதமான நிஷ்டையை யுடையவராயிருக்கமையால் ஈஸ்வரனுடைய கிருபை யவரிடந் தங்கலாயிற்று. இதுவன்றி பாகவதர்களிடத்தில பாவசுத்தியுடன் பக்தி செய்துவருவார்.

அவ்வூரி லரசன் மெத்தை வீடொன்றைக் கட்ட வாக்கினைசெய்தான். அவ்விடத்தில் நிவாசமாயிருந்த பிரஜைகளனைவருக்கும் அவரவர்களுடைய நிலங்களுக்கிரண்டு பங்குதிகவிலை கொடுத்து பூமியை வாங்கினான். அவ்வரசன் நயமான வார்த்தைகளாலும் கனிகரமுடைய சொற்களாலும் பிரஜைகளை போகச்சொல்ல அவர்கள் தங்களிருப்பிடங்களை விட்டு வெறிடங்களுக்குச் சென்றனர். இராமசந்திரர் வீட்டின் வெளிச்சுவரையாவ திடிக்கும்படிச்செய்து வேறோர்வீட்டை யவருக்குக் கொடுப்பதாகவும் தனக்கு அவ்வீட்டை விடவேண்டுமென்றுஞ் சொல்ல அந்தப் பிராம்மணர் பணம்வேண்

டாமென்று வீட்டைவிட்டு காசிபுரிக்குச் சென்றார். அப்பொழுது பகவான் காஜீரூபத்தை தரித்து அரசன் சொப்பனத்திற் சென்று பூஜிதரான அந்த இராமசந்திரரை நீ யழைக்கக்கடவாய். உன் மேலவன் கோபங்கொண்டாலது உனக்கு அனர்த்தத்தைக் கொடுக்கும் பக்தியுடன் நீ யவரை இங்கழைப்பது வுனக்கு மேன்மைக் கிடமாகுமென்று சொல்ல இந்த சொப்பனத்தைக்கண்டு அரசன் தன்னுடைய மந்திரியையனுப்பி யந்தபக்தரை தன்கூட வழைத்து வந்து அவர் வீட்டிற் சேர்க்கும்படிக் கட்டளையிட்டான்.

பின்பு மந்திரியானவன் காசிபுரிக்குச்சென்று அந்த பிராம்மணரான இராமசந்திரரைக் கண்டுபிடித்து அனேக விதங்களாலவரை வீட்டிற்கு வரக்கடவீரென்று வேண்டி யழைத்துவந்து அவருடைய வீட்டிலவரை பிரவேசிக்கும்படிச் செய்தான். இராமசந்திரர் அன்றுமுதல் பூர்வம்போலே தன்வீட்டிற் றான் சுகமே வாழ்ந்திருந்து நியமந்தப்பாமல் நன்னெறியில் நின்றார்.

---

## காஜிமஹம்மது சரித்திரம்.

ஜாதியிற் றுலுக்கராயிருந்தும் காஜிமஹம்மது என்பவர் சத்விருத்தியிற் றனிருந்து ஸ்ரீஹரி ஸ்மரணையை யிடைவிடாமற் செய்வதும் இராஜ திரவியத்தைக் கைக்கொள்ளாமலும் சத்தியத்தையே சொல்லியுங் கஷ்டார்ஜிதமான வன்னத்தையே பக்ஷிப்பதும் நன்னெறி தவறாமலுமிருப்பார். அவர் மனைவி சரிகைவேலைகளைச் செய்து அதனை விக்கிரயமபண்ணி அதனால்வரும் திரவியத்தைக் கொண்டு சதிபதிகளிருவருஞ் ஜீவனஞ் செய்துவருவார்கள். அரசன் நியாயவிசாரணை செய்யும்பொருட்டு காஜிமஹம்மதை நியமித்தான். இவரும் நியாயாநியாயங்களை விசாரித்து சத்தியமாகத் தீர்ப்புகளைச் செய்துவருவார். இவ்வேலைக்காகத் திரவியத்தை யபேக்ஷிக்காமல் ஆசா ரஹிதராகி யிருப்பார். ஆசையுமிச்சையு மவமானத்திற்கு பீஜமென்றும் இவைதொலைந்தா லெவ்விடத்திலும் பூஜிதை யடையலாமென்றும் பொன்னையும் பணத்தையும் மண் சமானமாகப் பார்த்துவருவர், சத்தியந்தா னிடைவிடாத சம்பத்தென்று சரியாக நியாயத்தை தீர்த்துவருவார்.

காஜி மஹம்மதுக்கோர் புத்திரியிருந்தாள். அப்பெண்ணை திரவியவந்தனான ஓர் சேனாதிபதிக்கு விவாஹஞ் செய்துக்கொடுத்தார்.

மகனும் மருமகனும் மஹத்தான போகங்களை யனுபவித்திருந்து ஓர் பிள்ளையை பெற்றபின் மருமகன் மரணமடைந்தான். அவனுடைய கணக்கப்பிள்ளைத் தன் எஜமானனுடைய வீட்டிற்குச் சென்று கடனுக்காகக்கொடுக்கவேண்டியத் திரவியத்தைச் செலுத்தியபின் பிரேதமெடுக்கப்படும் இல்லாவிடில் அதனை நீங்கள் தீண்டக்கூடாதென்று நிர்ப்பந்தித்தான். வீட்டாளக்கணக்கனை நோக்கி புருஷன் பிழைத்திருக்கும் பொழுது பேசாமலிருந்து இப்பொழுது கடன் கேட்கவந்தாய். என் புருஷனெனக்குக் கடன் சங்கதியைச் சொல்லவேயில்லை இப்பொழுது நீ கொண்டுவரும் வியாஜ்ஜியம் பொய்யாக யேற்பட்டது போலிருக்கிறது இராஜனுக் கறிவிக்கிறேனென்று அவனிடத்தில் விண்ணப்பஞ்செய்ய அரசன் காஜியினிட மதனை விசாரணைக்கனுப்பினான். அப்பொழுது அந்தபிரேதத்திற்கு வாசனை திரவியங்களையிட்டு குமாரத்தியும் பேரனுமழுதுக்கொண்டிருக்க அதனை காஜியினிடங் கொண்டுவந்தார்கள். கணக்கப்பிள்ளைப் பிரேதத்தை விடேனென்றும் கடனை முதல் தீர்த்து சம்ஸ்காரங்கள் செய்யவேண்டுமென்றும் வற்புறுத்தி நின்றான். அவன் லஞ்சங்கொடுத்து தப்புசாக்ஷிகளை யேற்படுத்தி அவன் பக்ஷமாகச்சொல்லும்படி சிலரை யேவினான். காஜி சாக்ஷிகளுடைய வசனங்களைக்கேட்டு அவை பொய்யென்று தனக்குத் தோன்றியும் இறந்துபோனவன் தன் பந்துக்களிற் சேர்ந்தவனாதலால் தன்னுடைய தீர்ப்பை உலகத்தார் அங்கீகரிக்காமல் பக்ஷபாதமான தீர்ப்பென் றெண்ணுவார்களே யென்று சிந்தையுடையவராய் ஸ்ரீஹரியைப்பிரார்த்தனை செய்யத்தொடங்கினர். ஓ மாதவா! முகுந்தா! மதுசூதனா! ஹரி! ஊராருடைய அபவாதம் அடியேனுக்குண்டாகாமல் கடாக்ஷித் தருள்புரியுமென்று பெருமானை நமஸ்கரித்து பிரேத சமீபத்திற்சென்று அதனைநோக்கி ஓ சேனாபதியே! நீ எழுந்திருந்து கணக்கப்பிள்ளையின் கணக்குகளைக் கண்ணுற்றுப் பார்த்து தப்பிதங்களின்றி சீர்திருத்தியபின் நீ மிருத்யு ஸ்தானத்திற்குப் போகக்கடவாயென்று சொல்ல அவன் நித்திரைவிட்டெழுந்திருக்குமாப்போல் விழித்தெழுந்து உட்கார்ந்து மீசையுந் தாடியையும் ஒதுக்கிக்கொண்டிருந்து குரூரதிருஷ்டியுடன் உருவின கத்தியைக் கையிலெடுத்துக்கொண்டு கணக்கப்பிள்ளையை நோக்கி கணக்கைக் கொண்டுவா வென்று அதட்டிச் சொல்லலுற்றான்.

இதைக்கண்டு அந்த தூர்த்தன் காஜியின் கால்களைப் பிடித்துக்கொண்டு என் பிராணனை ரக்ஷியும் என்னுடைய கொடுமையான சேஷ்டை யிவ்வண்ணமாயிற்று கணக்குகளையொளித்து தப்பு கணக்கைக் காண்பித்தேன் சேனுபதிக்கு உரிமையான ரொக்கந் தன்னிடமிருப்பதைத் தெரிவித்தான். இதைக் கண்டு மருமகன் மாமனுடைய ஆக்கினையைக்கொண்டு திரும்பி பிராணனை விட்டான். அவ்விடத்திய ஜனங்க ளனைவரும் காஜிமஹம்மதின் காரியத்தைக் கண்டு மிகுதியாகக் கொண்டாடினார்கள்.

காஜிமஹம்மதின் குமாரத்தி தன்பிள்ளையுடன் பிதாவின் சரணங்களில் விழுந்து மனிதசாமர்த்தியத்திற்கு மிஞ்சின வுமது மகிமையினுற்றிரும்பித் தன் கணவனை எழுப்பும்படி வேண்டினுள், காஜி குமாரத்தியை நோக்கி இன்று உன்கணவனை எழுப்புவேனுயின் லோபகுண மெனக்கு சித்திக்கும் அதனுலெனக்கு களங்கம்வரும் பலரால் நிந்திக்கப்படுவேன். உன் சொற்படி செய்வது சரியல்ல வென்று தன்மருமகன் பிரேதசரீரத்தைப் பூமியிற் புதைத்துவிட்டார். உலகத்தார்மத்தியி லவர் கீர்த்தி விசேஷமாக விளங்கிற்று. பகவத் பக்தியுமவரிடம் பிரபலமாகவிருந்தது. சிலகாலங் கழிந்தபின் காஜிமஹம்மது ஸ்ரீஹரிபதத்தை யடைந்தார்.

---

## பலகுபுகார் சரித்திரம்.

பலகுபுகா ரெனுந் துலுக்க வரசனிராஜ்ஜிய பரிபாலனம்பண்ணிக்கொண்டு பிரஜைகளனைவரையுந் தர்மமார்க்கத்தில் நிறுத்தி அவர்களுக்குக் குறைவுவராமற் பாதுகாத்துவந்தார். அவருடைய இராஜ்ஜியத்தில் யாசகவிருத்தி தோன்றாமலிருந்தது. அவரும்போக சுகங்களை விசேஷமாக வனுபவித்து வருவர். அவருடைய அஷ்டமந்திரிகளை ஒருநாளழைத்து தான் சத்குருவைச் சரணமடைய வேண்டுமென்றும் சிஷ்டாசாரமான சத்குரு யாரிருக்கிறுரென்று கேட்க பிரதானி யரசனைநோக்கி பக்தசிரேஷ்டரான கபீரென்பவரிருக்கிறுர், அவர் ஆத்மவித்தையை கற்ற மஹாநுபாவர். அவரே வுமக்குத்தக்க ஆசாரியராவார், உலகப்பிரசித்தரானவ ரென்று சொல்ல, அரசன் கபீரிருக்குமிடமான காசிபுரிக்குச்சென்று அவரிடத்தில் சிஸ்ருஷைசெய்து பக்தியைச் செலுத்த அவரிராமோபாசனையை இராஜனுக்குபதேசித்தார். அரசன் ஆனந்தத்துடன்

தனது நகரத்திற்கு வந்து தன் மனைவிகளுடன்கூடி சுகமாக போகங்களை யனுபவித்துக்கொண்டு அரசாக்ஷி செய்துவந்தார்.

இப்படி நடந்துவர ஒருநாள் அரண்மனைதாசி அரசனுக்காகப் படுக்கையைப் போட்டாள். அந்தப் படுக்கைகட்டிலின்மேல் ரமணீயமாகவும் மிருதுவாகவுமிருந்தது அரசனுடைய வரவை எதிர்பார்த்திருக்க அந்ததாசிக்கு நித்திரைவந்தது. அவள் தன்தலையையந்தப்படுக்கைமேல்வைத்து நின்றவண்ணமே நித்திரை செய்திருந்தாள், அரசன் கொலுமண்டபத்திலிருந்து படுக்கை வீட்டில் வந்து பார்க்குமளவில் தாசி நித்திரை செய்துக்கொண்டிருக்கக்கண்டு பிரம்பால் நாலடியடித்து எழுந்திருக்கச்சொல்லி யதட்டினார். அப்பொழுது தாசி சிரிக்கத்தொடங்கினாள். அரசனவளை நோக்கி ஏன் சிரிக்கிறயென்று கேட்க அவளரசனைகண்டு உமது பஞ்சணை மெத்தைமேல் நான் தலையைவைத்ததற்கு இவ்வளவு சிக்ஷை கிடைத்தது. நீரதின்மேல் நித்தியமும் படுத்துக்கொள்ளுகிறீர் உமக்கெவ்வளவு தெண்டனை கிடைக்குமோ தெரியாது விசேஷமான போகங்களை யனுபவிக்கிறீர் இதனால் மேன்மையான கதி யிருக்குமென்று தோன்றவில்லையென்று சொல்ல, அரசன் உடனே விரக்தியைப் பூண்டு இராஜ்ஜியபாரத்தைச் செம்மையல்லவென்று விட்டு பலரும்பார்க்க ஜிதோஷ்ணங்களை வர்ஜித்து பசிதாஹங்களிற் குட்படாமல் ஆசாரகிதராகி இராமபிரானையே மூர்த்தியாகத் தியானத்திலிருத்தி அவர் நாமத்தை யிடைவிடாது சொல்லிக்கொண்டு நான்கு தினங்கள் சஞ்சரித்துக்கொண்டிருக்க இராமபிரான் சகுணரூபமாக சாக்ஷாத்கரித்து அபயங்கொடுத்துச் சென்றார்.

அனந்தரம் பலகுபுகார் ஆங்காங்கிருந்த ஸ்தலங்களிற் சஞ்சரித்துவர ஓரிடத்தில் உதாசவிருத்தியை வஹித்த ஓர் பகிரைக்கண்டு தனக்கு துணையாவானென்று அவனிருக்குமிடஞ் சென்றார். அப்பகிர் பிக்ஷை வாங்காமலும் உலகத்தாரைக் கூடாமலு மவ்விடமிருக்கக் கடவுள் ரொட்டிகளை அவருக்கு அனுப்புவார். அவைகளைப் பக்ஷித்து திருப்தனாகி அவ்விடமிருப்பான். பலகுபுகார் அவ்விடம் வந்திருந்தால் தன் பாகத்திலவருக்குக் கொடுக்கவேண்டி வருமென்று அந்தப்பகிரவனை நோக்கி வைராக்கியத்தைக்கொண்டு எத்தனை நாளாயிற்றென்ன அவரெட்டுநாளாயிற்றென்றார். பகிரவனைநோக்கி உனக்கிவ்விடத்தில் ஸ்தலமில்லையென்று சொல்ல பலகுபுகா

ரந்தப் பகீரைநோக்கி ஐயா! நானிந்தமடத்திற்கு வெளியிலிருக்கி றேனென்றார். அதற்கவன் சம்மதிக்க பலகுபுகார் வெளித்திண் ணையில் வீற்றிருந்தார்.

பலகுபுகார் மடத்திற்கு வெளியிலிருக்குந் தருணத்தில் ரொட்டியும் பதார்த்தமும் உள்ளிருக்கும் பகீருக்காக வரக்கண்டார். அதனைப்பார்த்து அணுமாத்திரமதற் கபேக்ஷிக்காமல் மௌனமாகவிருக்க இராமபிரான் மனிதவேஷம் பூண்டு சொர்ணபாத்திரத்தில் பஞ்சபக்ஷியங்களும் மேலானவன்னமும் வைத்துக்கொண்டுவந்து அந்தப் பகீர் பார்த்துக் கொண்டிருக்க பலகுபுகாருக்குக் கொடுத்தார். இதைக்கண்டு அந்தப்பகீர் தனக்குள் ளெண்ணத்தொடங்கினன். பலகுபுகார் எட்டுநாளாகவிரக்தியடைந்தவர், நான்ஜன்மம்முதற்கொண்டு வைராக்கியத்தை யடைந்தவனாயிற்றே! அவருக்கு மேன்மையான பதார்த்தங்கள் போஜனத்திற்குக் கிடைப்பதும் எனக்கு ரொட்டிமாத்திரங் கிடைப்பதற்கென்ன காரணமோ வென்றுத் தானந்த ரொட்டியைச் சாப்பிடாம லுபவாசமாக விசனத்துடனிருந்தார். இரவுகாலத்தில் பகீர் சொப்பனத்தில் ஈஸ்வரன் ஓர் பகீர் ரூபமாகவந்து, பலகுபுகார் தனது ராஜ்ஜியமுமனைத்தும் பற்றில்லாமல்விட்டு நிஷ்காமனாகி இராமரைப் பஜித்துச் சஞ்சரித்துக்கொண்டிருக்க அவருக்கு சௌபாக்கியத்தைக் கொடுத்தோம், நீயிதற்குமேற் ஜன்மத்தி லரசனாவதற்கு இச்சைவைத்திருப்பதால் உனக்கு தினமும் ரொட்டியைக் கொடுக்கிறோம். உனது சங்கல்பத்தை நீ அறியாமல் என்மேல் நிமித்தத்தை யேன் வைக்கிறாயென்று சொல்லி மறைந்தார். பகீர் உடனே விழித்துக்கொண்டு ஆச்சரியப்பட்டு பலகுபுகாருடைய திருவடிகளைப் பிடித்துக்கொள்ள இருவரும் அன்னியோன்னியமான சினேஹத்தை யுடையவர்க ளானார்கள்.

அனந்தரம் பலகுபுகா ரவ்விடத்தை விட்டு இதரவிடங்களிற் சஞ்சரித்துக்கொண்டிருக்கஓர்பெரியபட்டணத்தைக்கண்டு அதில் பிரவேசித்தார். அவ்விடத்தில் மடமொன்றிருந்தது அதிலனேக பகீர்களிருந்தார்கள். அவர்கள் கடினசித்தர்களாகி யிவரையதிற் பிரவேசிக்க வொட்டாம லிடையூறுகளைச் செய்தார்கள். அப்பொழுது பெருமாள் பகீர் மஹந்துரூபத்தைக்கொண்டு அவ்விடந்தோன்றி பலகுபுகார் பரமபக்தரென்று அங்கிருந்தப்பிரஜைகளுக்கெல்

லாந் தெரிவித்தார். இவ்வண்ணமாக அனேக விதங்களாக பலகுபு கார் ஸ்ரீஹரி கருணையை யடைந்து பின்பு ஹரிபதத்தை யடைந்தார்.

---

## ஷேக்பரீது சரித்திரம்.

துலுக்கருடைய ஜாதியில் ஷேக்பரீதென்பவன் துஷ்ட சஹவாசத்தைவிட்டு சன்மார்க்க நெறியைச் சார்ந்திருந்தான். அவன் தனது பாலப்பிராயத்தி லிருக்கும்பொழுது தாயாரைநோக்கி பகவானுடைய தரிசனமெப்படிக் கிடைக்குமோ தெரியப்படுத்தும்படிகேட்க அவள் தன் வைதவ்வியத்திற் கனுதாபமடைந்து குமாரனைப்பார்த்து சொல்லுவாள், பகவானை யடைவது சுலபமே. அவருடைய பிராப்த்திக்காக உலகத்தோரனேகப் பிரயாசைகளைப் படுவார்கள், சிலர் யாவற்றையும்விட்டு வனவாசிகளா யிருப்பார்கள். சிலர் பிரமசாரிவிரதம் பூண்டு பரமாத்மாவைத் தேடிக்கொண்டிருப்பார்கள். சிலர் தமக்குட் டம்மைக்கண்டு ஸ்ரீஹரியை யறிவார்கள். சிலரிப்புவியிற் சமுசாரத்தைவிட்டு அரணியத்தி லுபவாசமாகவிருப்பார்கள். பலாபேக்ஷையின்றி சத்கருமங்களை வெகுவாகச் சிலர் செய்வார்கள் சிலர் பற்றொன்றில்லாத பரமாத்மாவுக்குச் சமானமாகப் பிரபஞ்சத்தைப் பார்ப்பார்கள். சிலர் சாதுக்கள் சேவைகளைச்செய்து சம்சாரத்தைத் தாண்டுவார்கள். சிலர் சத்தியத்தைத் தபமென்றெண்ணி அதனைச் சாதித்துவருவார்கள். சிலர் பரோபகாரத்தைச் செய்வார்கள். சிலர் பக்தியுடன் ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டிருப்பர். சிலர் யோகிகளென்று பெயரிட்டுக்கொண்டு யோகாப்பியாசஞ் செய்வார்கள். ஸ்ரீஹரியை யடையும்பொருட்டு இவ்வண்ணமான யுபாயங்களை யுலகோர் செய்துவருவார்கள். இவைகளிலுனக் கெது சௌக்கியமோ சொல்லென்று வினவ ஷேக்பரீது தாயாரைநோக்கி யன்னத்தைவிட்டு ஆரண்யத்திற் சஞ்சரிப்பேன். இது பிரமாணமென்று சொல்லி ரொட்டிகளைச் செய்துக்கொடுவென்றான் தாயாரிதைக்கேட்டு சாப்பாட்டை விட்டபின் ரொட்டிகளென்னத்திற் கென்று கேட்கக் குமாரனவளைநோக்கி ஆச்ரிதமான மனதிற்கு அவை சமீபத்திலிருப்பது உசிதமென்றுசொல்ல தாயாரப்படியே ரோட்டிகளைச் செய்துக் கொடுக்க ஷேக்பரீது அவைகளைக் கைக்கொண்டு வனத்திற்குச்சென்றான்.

ஆரண்ணியத்தில் ஷேக்பரீது வாசமாயிருந்து பசியெடுத்தாலும் ரொட்டியைத்தின்னுமல் செடிகளிலிருக்கு மிலைகளைப் பிடிங்கிப் பக்ஷித்துவருவான். ஹரிதரிசனத்திற்காக அதிகவபேக்ஷைவைத்திருப்பான். இப்படி யனேகநாள் ஆரண்ணியத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கக் கோணிகளிற் சர்க்கரை நிறப்பி ஓர் வர்த்தகன் எருதுகளின்மீதுகளை யேற்றிக்கொண்டு அக்காட்டிற்போக ஷேக்பரீது அவ்விடத்திலிருந்து கோணிகளிலென்ன இருக்கிறதென்றுக் கேட்டான். வர்த்தகன் மண்ணென்று விடைபகர நன்றென்று ஷேக்பரீதுசொல்ல வர்த்தகன் தன்னூரைச்சென்று கோணிகளை யவிழ்த்துப்பார்க்குமளவில் யாவும் மண்ணுயிருந்ததை வர்த்தகன் கண்டு அசத்தியவசனத்தை சத்புருஷனுக் கறியாமற் சொல்லிவிட்டேன். அது இப்பொழுது கெடுதலைக்கிடமாயிற்றென்று திரும்பி அக்கோணிகளை எருதுகளின்மீதிட்டு வந்தவழியே திரும்பிப் போய்க்கொண்டிருக்க ஷேக்பரீது திரும்பி அக்கோணிகளை நோக்கி இவைகளிலென்ன யிருக்கிறதென்ன, வர்த்தகன் சர்க்கரையிருக்கிறதென்று சொன்னுன். பக்தன் நன்றென்று பிரியவாக்கியத்தைச்சொல்ல வர்த்தகனப்பொழுது கோணிகளை யவிழ்த்துப் பார்க்க சர்க்கரை நிறைந்திருந்தது, கர்த்தரான ஈஸ்வரன் கருணித்தாரென்று சந்தோஷத்துடன் சென்றுன்.

பன்னிரண்டு வருஷம் ஷேக்பரீது தவசு செய்துக்கொண்டிருந்து ஸ்ரீஹரியின் ரூபத்தைக் காணுமல் ஆரண்ணியத்திலிருந்து தன் வீட்டிற்குவந்து தாயாருக்கு நமஸ்கரித்தான். ரொட்டி மூட்டையுந் தன்னுடன்கூட கொண்டுவந்து கொடுத்து தானடைந்த கஷ்டங்களனைத்தையும் தாயாருக்குச் சொல்ல அவள் தன்பிள்ளையினுடம்பு மெலிந்திருப்பதும் தலையிற ஜடைகள் வளர்ந்திருப்பதை யுங்கண்டு, பிள்ளாய்! நீ விருக்ஷங்களுக்கு விஹிதமாயிராமல் ஹிம்சைசெய்து வந்தாய் ஸ்ரீஹரி அந்த தோஷத்தாலுனக்குத் தரிசனங் கொடுக்கவில்லை யென்றுள், குமாரனிதைக் கேட்டு இது முதல் செடிகளுக்குத் தீமைசெய்யேனென்று தாயாரை நமஸ்கரித்துத் திரும்பி ஆரண்ணியத்திற்குச் சென்று உலர்ந்த சருகுகளைப் பக்ஷித்துப் பகவானை யெப்போது காண்பேனென்று பெருத்த ஆவலுடனிருந்தான். இப்படி சிலநாள் கழிந்தபின், ஒருதடவை தன் கால்களிரண்டையுமோர் செடியின் கிளையில்

கட்டிக்கொண்டுத் தலைகீழாக உஞ்சலாடிக்கொண்டிருந்து ஸ்ரீஹரியைத்தான் நினைக்கத்தொடங்கினன். ஓ சாகர சயனரே! ஷட்குணபூர்ணரே! நாராயணா! வாசுதேவா! முகுந்தா! முராரீ! பதிதபாவனா! பாண்டுரங்கா! ஸ்ரீஹரி! அடியேனை ஆதரித்தருளுமென்று சொல்லிக்கொண்டிருக்க, காஷ்டம்போலத் தன்னுடைய சரீரமிருக்கக் காகங்களும் பக்ஷிகளு மதனைக் குத்திக்கொண்டு பக்ஷிக்கத்தொடங்கின. அவர் அப்பறவைகளைக்கண்டு கண்களிரண்டைத் தவிர மற்ற சரீரமனைத்தையும் பக்ஷிக்கக்கடவீர்கள் ஸ்ரீஹரியைக் காணும்பொருட்டு சக்ஷுக்களை யிருக்கச்செய்யக் கோருகிறேன் அவைகளை நீங்கள் பக்ஷிக்கவேண்டாமென்று சொல்லிக் கண்களால் தாரைதாரையாக ஜலம்பெருக ஓ கருணையங்கடலே! கிருபாமூர்த்தி! தயாநிதி! தீனபந்து என்று சொல்லிக்கொண்டு பிரேமைபூர்த்தியால் பரிசுத்தனாயிருக்க ஸ்ரீஹரி அப்பொழுது பிரசன்னராகி காற்கட்டுகளை அவிழ்த்து விசேஷப் பிரேமையைக்காட்டிச் சொல்லுவார். அல்லும் பகலென்றெண்ணாமல் இரண்டு தவத்தை நீ செய்தாய், என்னுடைய மேன்மையான ரூபத்தை காண்கைக்காக நீ அவைகளை அனுஷ்டித்துவந்தாய், கண்களைத்திறந்து பார்க்கக் கடவாயென்று கிருபாதிருஷ்டியால் நோக்க, ஷேக்பரீது திவ்விய சரீரத்தை யுடையவனாகி கண்களைத்திறக்க ஸ்ரீஹரி தன்திவ்விய ரூபத்துடன் எதிரில் நின்றார். சதுர்ப்புஜமும் பீதாம்பரமும் சங்கு சக்கரங்களுமான அப்பிராக்கிருத திவ்வியமங்களவிக்கிரகத்தைப் பார்த்து அனேக பரியாயங்க ளவர்திருவடிகளை நமஸ்கரித்து அந்த ரூபத்தை மனதிற் பதிப்பித்துக்கொண்டான். பெருமாள் மறையவே தாயாரிடம் வந்துசேர்ந்தான். தாயார் பிள்ளையின் விருத்தி திரும்பிற்றென்று சந்தோஷப்பட்டாள். அது முதல் ஷேக்பரீது அதிக கீர்த்தியை வகித்திருந்தான்.

---

## நாராயணபட்டர் சரித்திரம்.

தபதியெனும் நதிதீரத்திலோர் பிராம்மணன் நாராயணனெனும் நாமத்தை வஹித்து ஸ்ரீஹரி பக்தியைச் செலுத்திப் பிரபஞ்சமனைத்தும் பிராந்தியாகக்கண்டு பாரமார்த்திக நோக்கையுடையவராயிருந்தார். அன்னவஸ்திரங்களுக் கதிகசங்கடமடைந்தும் ஹரிபஜனையிற் றற்பரராயிருப்பார். ஒருநாளிவர் ஸ்நானத்திற்குச் செ

ன்றவளவில் பகவான் இவரை பரிக்ஷிக்கும்பொருட்டு ஓர் பிராம்ம ணவேஷத்தைத் தரித்து நாராயணருடைய வீட்டிற்குவந்து அவர் மனையாளைக்கண்டு வினீதராகி தாயே! நான் பண்டரியாத்திரைக் காகப் போகவேண்டும். பரிசவேதி யென்னிடமொன்றிருக்கிறது. வழிநடக்கும்பொழுது அது கிட்டயிருக்கத்தக்கதல்ல நீங்களிவ்வி டத்தில் நிரபேக்ஷையுட னிருப்பவர்களாதலால் உங்கள்மேல் விசு வாசத்தை வைத்தேன், நான் நிர்ப்பயமாக அந்த பரிசவேதியை உன்னிடம் வைக்கிறேன். அதின் மகிமையுமுனக்குச் சொல்லு கிறேன் கேள். அந்த பரிசவேதியை இரும்புமேல் உறைத்தால் அந்த இரும்பு பொன்னாய்விடும், நீங்களும் குறைவின்றிச் சுவர் ணத்தைச் செய்துக்கொள்ளலாம். யாத்திரை செய்துக்கொண்டு இரண்டாண்டு கழிந்தபின் வருகிறேன் அப்பொழுதெனக் கதனைக் கொடுக்கலாம். தொந்தரையொன்றுமில்லை உன்புருஷனுக்கு என் னுடைய நமஸ்காரங்களை சொல்லு, ஆனாலிந்த சங்கதியை யாருக் குந் தெரியவொட்டாமலிருக்கவேண்டும் என்று சொல்லி பரிசவே தியைக் கொடுத்து பெருமாள் போகவே அவள் அனுமோதத்தை யடைந்து கொஞ்சமாக பொன்னைச்செய்து இது கண்ணன் கிரு பையென்று மனதி லெண்ணிக்கொண்டு கடைவீதியிற் சென்று வீட்டிற்கு வேண்டும் வஸ்துக்களை வாங்கிவந்து சமையற்செய்து சித்தப்படுத்தினாள். தன் கணவரான நாராயணபட்டர் ஸ்நான சந்தியா ஜபங்களை முடித்துக்கொண்டு வீட்டிற்குவர தானியம் மிகுதியாக விருக்கக்கண்டு இது எவ்விடமிருந்து வந்ததென்று கே ட்க பர்த்தாவுக்கு பிராம்மணர் கொடுத்துப்போன பரிசவேதிசங் கதியைச் சொல்லி இனியிந்த சமுசாரத்திற்கு நீர் கஷ்டப்பட வேண்டுவதில்லை, பகவன் நாமத்தை இடைவிடாது செய்துக்கொ ண்டு எப்பொழுதும் பஜனையிலிருக்கலாமென்று சொல்ல, இதைக் கேட்டு பக்தர் பரிசவேதியைக் காட்டச்சொல்லி அதனை வாங்கிக் கொண்டு நபதிநதியிற் போட்டுவிட்டு வீட்டிற்குவந்து ஓரதிதிக்கு அன்னமிட்டுத்தானும் பக்ஷித்தார். மனையாள் புருஷனைக்கண்டு பரிசவேதியை பிராம்மணன் திரும்பிவந்து கேட்டாலென்ன செய் வதென்ன நாராயணபட்டர் அவர் வந்தாலென்னிடமனுப்பும், நான் ஒன்றுக்கு நான்கு பரிசவேதிகளைக் கொடுக்கிறேனென்று சொல்லிச் சமாதானப்படுத்தி சர்வேஸ்வரனை பஜிக்கலுற்றார்.

நாராயணபட்டர் பிரமாதமெதுவுமில்லாமல் தனக்குள் ளெப்பவும் பக்திசெய்து மனவாக்காயங்களால் மாதவனைச் சேவிப்பார். இப்படியே ஈராண்டு பகவத்சேவையில் விடாத நியதியுடனிருக்குமளவில் பரிசவேதியைக் கொடுத்தப் பிராம்மணர் நாராயணபட்டர் மனையாளிடம்வந்து தான்கொடுத்துவைத்த பரிசவேதியைக்கேட்டார். அவள் அவரைநோக்கி ஐயா! அது என்கணவனிடமிருக்கிறது அவரிப்பொழுது ஸ்நானத்திற்குச் சென்றிருக்கிறாரென்றாள். அந்தப்பிராம்மணர் பரிசவேதியை யுன்னிடங்கொடுத்தேனே! அதனை நீ உன் பர்த்தாவுக்குக் கொடுத்தது உசிதமல்லவே! என்றுசொல்ல அம்மாது அவரைநோக்கி ஐயா! இவ்விதமான சங்கதிகளைப் பர்த்தாவுக்கறிவிக்காவிடில் பதிவிரதையன்றென்று பலருஞ் சொல்லுவார்களே! ஆனதினால் நானவருக்கறிவித்தேன், அவருமிப்பொழுது வருவாரென்றாள். பிராம்மணரவளை நோக்கி ஓமாதே! ஸ்நான கட்டத்திற்குச் சென்று பரிசவேதியை அவரிடத்திற்கேட்டு எனக்குநீ கொடுக்கவேண்டுமென்று அவளையழைத்துக்கொண் டிருவரு மங்கு வந்தபொழுது அம்மாது அதிகக்கிலேசத்துடன் தன் கணவன் சமீபஞ்சென்று அவரேகாந்தமாகப் பஜனை பண்ணிக்கொண்டிருக்கக் கண்டு ஓ பிராணநாதரே! பரிசவேதிக்காகப் பிராம்மணர் வந்திருக்கிறார், அதனைக் கொடுக்கக் கடவீரென்று பயத்துடன் சொல்ல நாராயணபட்டர் கண்களைத் திறந்து அவர் முன்னின்ற பிராம்மணரைக் கண்டு ஐயா! உமது பரிசவேதியை நதியில் போட்டுவிட்டேன். உமக்கேனிந்த உபாதியென்று என்மனதிலெண்ணி அவ்விதஞ்செய்தேனென்றுசொல்ல பிராம்மண னதை யெப்படியாவது வரவழைக்கவேண்டும் வுன் மனையாளுக்குக் கொடுத்திருந்தேன் அதை நீர் வாங்கிக்கொண்டீர். ஆனதினால் நீரிப்பொழுது கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்த நாராயணபட்டர் ஸ்ரீஹரியை மனதிலெண்ணி ஜலத்திலிறங்கி நான்கு சிறுகற்களை கையிற்கொண்டு வெளியில்வந்து அந்தப் பிராம்மணரை நோக்கி உம்முடைய் பரிசவேதியைக் கண்டு எடுத்துக்கொள்ளலாமென்று அவைகளைக் காண்பிக்க அந்தப் பிராம்மணரொன்றை யெடுத்து பரிக்ஷித்துப் பார்க்குமளவில் இரும்பு பொன்னாகி விளங்கிற்று.

அனந்தரம் பெருமாள் அவருடைய நிஜ ரூபத்துடன் பிரசன்

னமர்னர். சதுர்ப்புஜங்களும், பீதாம்பரமும், சங்கு சக்கரங்களும் முதலானவைகளுடைய திவ்வியமங்கள விக்கிரகத்தைச் சதிபதிக ளிருவருஞ் சேவித்து மஹத்தான பிரேமையுடன் திருவடிகளில் விழுந்து ஆனந்தோத்கர்ஷ்ந்தா லனேகத் தோத்திரங்களைச் செய்து நீயே கதியென்று திரும்பியும் நமஸ்கரிக்க ஸ்ரீஹரி கருணித்து அந்தர்த்தானமானர். பின்பு பரிசவேதிகளை ஜலத்திற்போட்டு ஹரிபஜனையி லிருவரும் ஸ்திரமாகவிருந்து அந்தியத்தில் ஹரிபதம டைந்தார்கள். இவ்வண்ணமான நிராசையைக் கொண்டு இஹத்தில் நிலைபெற்ற கீர்த்தியை யடைந்தார்கள்.

---

## இரத்தினுகரர் சரித்திரம்.

பகலாணமெனும் பட்டணத்தில் இரத்தினுகர ரென்னுமோர் வர்த்தகரிருந்தார். அவருக்குத் திரவியங் கிடைக்காதிருந்தபடி யால் அதிக கஷ்டத்தை யடையலுற்றார். எத்தனை யுபாயங்கட் செய்யினு மவருக்குக் கஷ்டமே சம்பிராப்தமாயிருந்த தாதலா லமித துக்கத்தை யடைந்து கடன்காரராகி விபத்தசையில் நின்று ஒன்றுந்தோன்றமல் உணவைவிட்டு ஸ்ரீஹரியின் ஜபானுஷ்டானத் தைச் செய்யத்தொடங்கினர். பதினன்கு நாட்களிவ்வண்ணமாக விருக்கப் பகவான் சொப்பனத்தில் வந்து வியாபாரத்தை விட்டு பகவத் பஜனையைச்செய்யக் கடவாயென்றும் பிரபஞ்ச கிருத்திய ங்களை செய்வையேல் பிரபல கஷ்டங்க ளடைவாயென்றும் சொல்லி மறைந்தார். இச்சங்கதியை மனையாளுக்கறிவித்து இருவரு மென்ன செய்வோமென்றெண்ணி தங்களுக்குள் சொல்லிக்கொள் ளுவார்கள். வைராக்கியத்தை வஹித்து வீட்டு வீட்டுக்கேகி பிக்ஷையைக் கேட்டால் பந்துக்கள் தூஷிப்பார்கள். வெட்கத்தை விட்டெப்படி சஞ்சரிப்பது? என்றிவ்வாறு சிந்தித்திருந்தே சில நாள் கழித்தார்கள். இப்படியிருக்க அத்தேசத்தில் கருப்பு வந்தது, அதனல் ஜீவனங் கடினமாயிற்று. இதைக்கண்டு இரத்தினு கரன் வேறோரிடத்திற்குச் சென்று நான்கு எருதுகள்மேல் வஸ்து க்களை வைத்துக்கொண்டுத் திரும்பி வருகிற சமயத்தில் காட்டுவழி யாயிருப்பதைக் கண்டு ஒருவராக நடந்து கொண்டிருக்க ஓர் புலி எதிரே வந்தது. அதனைக்கண்டவுடன் எருதுகள் நான்கும் காட் டிலோடின. தானியம் நிறைந்த கோணிகள் கீழே விழுந்திருக்

தன். எருதுகளகப்படாமல் அவர் தைனியத்தை யடைந்து வழிநடப்பதெப்படி யென்று ஒன்றுந்தோன்றமல் சமுசாரத்திற் நாக கஷ்டப்பட. கஷ்டமே நேர்ந்தது. என்ன செய்வேன்? ஓ கிருஷ்ணு! கிருபாளோ! ஆனுதன் தீனன் அற்ப புத்தியுடையவன் கிருபைசெய்து காப்பாற்று மென்று பலவாறுகத் தன் ஆற்றுமை யைச் சொல்லி முறையிட, ஸ்ரீஹரி வழிநடப்பவரைப்போல எருதுகளுட னவ்விடத்திற்கு வந்து அக்கோணிகளை அவ்வெருதுகள்மே லேற்றி வழி நடக்கும்படி செய்வித்து மறைந்தருளினுர். இதைக் கண்டு இரத்திஞகரர் அனுதாபமடைந்து ஸ்ரீஹரிக்கு நான் கஷ்டங்கொடுத்தேனே! யென்று கிலேசமுற்று தனது வீட்டைச்சேர்ந்தபின் பிராம்மணர்களை யழைத்து வீட்டி லிருக்கும் வஸ்துக்களனைத்தையு மவர்களுக்குக் கொடுத்து உபாதிகளைவிட்டு விரக்தராகி சத்வகுணசம்பன்னராகி ஹரிபஜனையைச் செய்யலுற்றுர்.

இரத்திஞகரர் தன்னுடைய வர்த்தக விவஹாரத்தை விட்டு அயாசக விருத்தியினுல் உதரபோஷணத்தைச் செய்து ஒருவருடைய உபார்ஜனையன்றி பரிசுத்த மனதுடையவராகி பகவத்குணங்களைச் செம்மையாகப் பாடிக் கொண்டிருப்பார். அனேக ஜனங்கள தனைக் கேட்க வருவார்கள். இதனுல் பிரஜைகள் பக்திமார்க்கத்தில் பிரவேசிக்கலானுர்கள். இவருடைய கீர்த்தி வெகுதூரஞ்சென்று அனேக ரவ்விடம்வந்து வுபதேசத்தைப் பெற்று கிருதார்த்தரானுர்கள். அபேக்ஷையில்லாத ஆசாரியரைக்கண்டு அபரிமிதமாகத் தானியங்களைக் கொடுக்கலுற்றுர்கள். அதனுல் பிரதிதினமு மவர் அன்னதானத்தைச் செய்துவருவார். துர்மார்க்கர்களாயிருந்தாலும் இரத்திஞகரருடைய கிருபை அடைந்தமாத்திரத்தில் பெருமா ளனுக்கிரகித்து சன்மார்க்க நெறியில் நிற்கச்செய்வார்.

அனந்தரம் இரத்திஞகரர் தீர்த்த யாத்திரைக்காக பிராம்மணர்களுடன்கூடி பிரயாணப்பட்டு ஹரிஹர க்ஷேத்திரங்களை அவ்வவ்விடங்களிற் சேவித்து அயோத்தி, காசி, பிரயாகை ஹரித்துவாரம் குருக்ஷேத்திரம் கோவர்த்தனம் முதலான க்ஷேத்திரங்களைத் தரிசித்து ஆங்காங்கு கீர்த்தனையுஞ்செய்து கோகுலாஷ்டமி தினம் கஜபுரத்திற் சேர்ந்தார். அவ்விடத்தில் மஹோத்சவத்தைக் கொண்டாட, தலுக்கவரசன் ஐந்நூறு சொர்னமுத்திரைகளைச் செலவுக்காக சஹாயமாகக் கொடுத்தான். ஸ்ரீஹரி கிருபையால்

ஜனங்களனேகர் சத்பக்தியிற் பிரவேசித்தார்கள். பெருமாள் விஷயத்தில் பிரேமையும் பிரஜைகளுக்குப் பிரபலமாகவுண்டாயிற்று. அவ்விடமிருந்து துவாரகை யாத்திரைக்குப் போய்க்கொண்டிருக்க வழியில் படோசியெனும் பட்டணத்தி லொருநாளிறங்கினர். அவ்விடம் பஜனைசெய்ய வாரம்பிக்க பிரஜைகளனேகர் சேர்ந்தார்கள். அவ்வூர் துலுக்கவாசன் துர்மதனுயிருந்து பஜனைசமூஹத்திற்கு மாம்ச துண்டங்களை அந்த ஹரிதாசருக்காக வனுப்பினன். இரத்னுகர ரதைக்கண்டுக் கிலேசத்துடன் ஹரியை நினைத்து ஒ பதித பாவனு! ஒ கிருஷ்ணு! ஒ முகுந்தா! அடியேனை ரக்ஷியும் உம்முடையவனென்று நிஷ்காமமாக வும்மிடத்தில் பிரியத்தை வைத்தேன், எனது கோரிக்கைகளை நிறைவேற்றக்கடவீர், ஒ தேவதேவா என்று மாமிசபாத்திரத்தின் மீதிருந்த வஸ்திரத்தை யெடுக்குமளவில் தாழம்பூவால் பாத்திரம் நிறைந்திருக்க அனைவருங் கண்டார்கள். அவர் அவைகளை யெடுத்து அனைவருக்குங் கொடுத்து சிலவற்றை அரசனுக்குப் பிரசாதமாக வனுப்பினர். இதை அரசன் கண்டு அனுதாபத்துடன் அபராதக்ஷமைக்காக அதிக திரவியத்தைக் கொடுத்தனுப்பி வெகுமரியாதைகளைச் செய்தான். அங்கிருந்த மூர்க்கஜனங்களும் மூடஜனங்களும் ஹரிபக்தியி லமைதியடையவர்களானர்கள். இதுவும் பெருமாள் கிருபையென்று அவர் பரிதிருப்தராயிருந்தார்.

அனந்தர மவ்விடத்தை விட்டு இரத்னுகரர் துவாரகாபுரிக்குச்செல்ல அர்ச்சகர்களெதிற்கொண்டு வந்தார்கள். இரத்னுகரருமவர்களுக்கு வந்தனுதிகளைச்செய்து மன்னித்து சன்னிதியிற்சென்று துவாரகாநாதரைச் சேவித்துத் தீர்த்தப்பிரசாதங்களைக் கொண்டு விடுதி வீட்டில் வீற்றிருந்தனர். அவ்விடத்தி லனேகர் கூடி அவரிடம் வந்து ஐயா! இவ்விடத்தில் கோமதி தீர்த்தம் பச்சை நிறத்துடன் புழுக்களால் நிறைந்திருக்கின்றது. அதனை நீர் சீர்திருத்துவீராயின் உம்முடைய பக்திப்பிரபாவம் மேன்மையடையும், அனைவருக்கும் பிரீதிகரமாகு மென்று சொல்ல இதைக் கேட்டுப் பெருமாள் சன்னதிமுன்பு பரிசுத்தமான சித்தத்துடன் நின்று ஹரி கிருஷ்ணு! அச்சுத ரங்கா! தேவரீர் தயவுசெய்து பிரஜைகளுடைய உபாதியைப் போக்குவியும் ஒ சர்வேஸ்வரா! ஒ கோவிந்தா! தீனனுன வடியேன்மீது கலிகரத்தைவையும், ஒ

முகுந்தா! கருணைபாரும் உன் திருவடியே திக்கென்று நம்பினே னென்று வேண்டிக்கொள்ள பெருமாள் சொப்பனத்தில் வந்து சமுத்திரஜல மந்தநீரத்தில் வராதபடியாலது விவர்ணமாகி புழுக் களிருக்க இடங்கொடுத்தது, சமரச பாவனையைக்கொண்டு நீ அந்த கோமதியில் ஸ்நானஞ் செய்வையாயின் பிரவாஹம்வரும், நீ பய ப்படவேண்டாமென்று சொல்ல, விவேகசீலரான வவர் [illegible]வில் அக்கோமதி தீர்த்தத்திற்குச் சென்று கால்களை வைக்கவே வெள் ளம் வந்தது உடனே பழையநீர் போய்விட்டது, பரிசுத்தமான ஜல மிருக்கக்கண்டு பிரஜைக ளனுமோதித்தார்கள். இது ஸ்ரீ ஹரியின் கிருபையென்று இரத்தினகரர் சந்தோஷித்து பகவானை யனேக விதங்களாக அடிபணிந்தார். பெருமாளுக்கு அதிக பிரியமுடை யவரென்று அனேக பிரஜைகள் இரத்தினகாரரைப் பூஜித்தார்கள். அவ்விடத்திலவர் ஓர்பக்ஷம் நாட்களிருந்து சர்வேசுரனைப் பாடிக் கொண்டு ஸ்வதேசத்திற்குத் திரும்பிவந்தார். அவரை அடைந்த வனேகர் கிருதார்த்தரானார்கள். சேஷசயனரான ஸ்ரீ ஹரி தன்ன டியார்களை யெப்பொழுதும் மேன்மைப்படுத்துவார்.

---

## சூரத்து மாதவதாசர் சரித்திரம்.

சூரத்தென்னும் பட்டணத்தில் மாதவதாசரென்பவர் சுருண சாலியாயிருந்து ஒருகோரிக்கையு மில்லாமல் ஸ்ரீ ஹரியை அனுதின மும் பூஜித்தும் போற்றிவருவார். ஸ்ரீ ஹரிமூர்த்திக்கு ஷோடசோ பசாரங்களைச்செய்து சற்கரை நைவேத்தியஞ் சமர்ப்பித்து ஜனங் களுக் கதைத் தினமும் பங்கிட்டுவருவார். அவர் பரமபக்தரென் றறிந்துப் பூஜைசெய்யும் வேளையிலனேகர் வந்து பிரசாதத்திற்கு காத்திருப்பார்கள். வந்தவர்க ளனைவருக்கும் பிடி பிடி சற்கரைக் கொடுத்தனுப்புவார். சேரு சற்கரையானாலும் மணங்கு சற்கரை யானாலும் பிடி பிடிசற்கரை யனைவருக்கும்வரும். இவ்விசித்திரத் தை ஜனங்கள் கண்டு விந்தையடைவார்கள். மாதவதாசரும் சகல ரையுஞ் சமமாகப் பார்த்துவருவார். இதனாலனேக ஜனங்களை ஹரி தாஸ்யத்திலும் அவருடைய பஜனையிலு மீடுபெடும்படி செய்தார்.

சில குடிலஜனங்க ளவரை நிந்தித்து பானையிற் சாம்பலைப் போட்டு வஸ்திரத்தா லதைமூடி மாதவதாசர்முன்வைத்து மேலா ன சற்கரை இதுவென்றும் பெருமாளுக் கர்ப்பணைசெய்து சகல

ருக்கும் பங்கிடுமென்றும் சொல்ல, அவரப்படியே செய்கின்றே னென்று அதை ஹரிக்கு நிவேதனே செய்து அந்த சற்கரையை பிர ஜைக ளனைவருக்கும் பங்கிட்டார். அந்த குடிலஜனங்க ளிதைக் கண்டு வியப்புற்று இது கோவிந்தனுடைய மஹிமையென்று கை களைச் சிரங்களிற்கூப்பித் தாங்கள்செய்த வபசாரத்தை யனுதாபத் துடன் தெரிவித்து சரணாகதராகி யவர்கருணையைப்பெற்று நாளு க்கு நாள் ஹரிபக்தியிற் சிறந்து தெளிவுடையவரானார்கள்.

இச்சங்கதியைச் சிலர் அந்த நூரத்திலிருக்கு மரசனுக்கறிவித் தார்கள். அவனிரண்டு சர்ப்பங்களைப் பானையிலிட்டு அதை வஸ் திரத்தால் மூடிவைத்து மாதவதாசரைத் தன் வீட்டிற்கழைத்து வெளிக்குமாத்திரம் பிரியத்தைக்காண்பித்து உட்காரும்படி மரியா தைசெய்து அந்தப்பானையை அவர்முன்வைத்து இதிலிருக்கும் சர் க்கரையை யுங்கள்கையினலெடுத்து அனைவருக்குங் கொடுமென்று வேண்ட, அவர் பானையைத்திறந்து சர்க்கரை யிருக்கக்கண்டு அதனை ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்து அனைவருக்கும் பங்கிட்டார். அரசனிந்தவாச் சரியத்தைக் கண்டு அவருக்குத் தெண்டஞ்சமர்ப்பித்து தனத்தை யும் பல்லக்கையுங்கொடுத்து உமக்குவேண்டும் வஸ்துக்களைக் கேட் டால் கொடுப்பேனென்று சொல்ல மாதவதாச ரவனை நோக்கி ஓ மஹாராஜரே! சகல பதார்த்தங்களும் நிலையற்றனவை, என க்கு ஒன்றின்மேலு மிச்சையில்லை யென்று சொல்ல அரசன் அவ ரை நிராசை யுடையவரென்றறிந்து அவனே அந்த பக்தரை அவர் வீட்டுவரைக்கும் கொண்டுவந்து விட்டுத் தன்னிருப்பிடஞ் சென்றான்.

மாதவதாசர் கீர்த்தியுடையவராகி அவ்விடமிருக்குந் தருண த்தில் துவாரகை யாத்திரைக்குப் போகும்பொருட்டு அனேகரு டன்கூடி தானுஞ்சென்றார். ஒருநாள் பெரிய ஆரண்ணியத்தில் நட ந்து செல்லும்பொழுது ஸ்ரீஹரி புலிரூபமாக வெழுந்தருளினர். சகல ஜனங்களும் பயத்தால் பீடிக்கப்பட்டவர்களாகி யதனைக் கண்டு ஓடினார்கள். பிரியபக்தரான மாதவதாசர் சகல பூதங்களி லும் ஸ்ரீஹரி யிருப்பாரென்று மனதிலெண்ணி புலியின் முன்னே சென்று பயப்படாமல் நின்றனர். உடனே ஸ்ரீஹரி தன்னுடைய நிஜமாகிய பஞ்சோபநிஷண்மய திவ்வியமங்கள ரூபத்துடன் வியாச முனீந்திரர் பாகவதத்தில் வர்ணித்தபடி சதுர்ப்புஜராய் நின்றார்

அப்பொழுது மாதவதாசர் அன்புடன் ஹரிபாதங்களைப் பிடித்து க்கொண்டு ஆனந்தத்தில் மூழ்கிக் கண்ணீரொழுகப் பெருமாள் திருமுகமண்டலத்தை நோக்கி ஓ ஸ்வாமி! தேவரீர் புலிரூபத்தை யேன் தரித்தீரென, பெருமாளதற்கு நீ ஏகாந்தசேவை யடையும் பொருட்டு அப்படிச் செய்தேன், கூடவந்த யாத்திரைஜனங்கள் பய த்தால் போய்விட்டார்கள். துவாரகையிலிருந்து உன்னைப் பார்க்க விவ்விடத்திற்கு வந்தேன். உனக்கு தரிசனங்கொடுத்தேன். இனி என்வார்த்தையை மீருமல் சூரத்துப்பட்டணத்திற்குத் திரும்பிப் போகக்கடவை உனக்கு மேன்மையுண்டாமென்று சொல்லி அந்தர் த்தானமானர். பயந்து ஓடின ஜனங்களனைவரும் பருவதத்தின்மீ தொளித்திருந்து பகவானைக் காணுதவர்களாகி மாதவதாசரை அப்புலி கொன்றிருக்குமென்று சொல்லிக்கொண்டிருக்க, பக்தன் அவர்களனைவரையும் வரும்படி கூச்சலிட்டு புலிபோயிற்றென்று சொல்லவே அவர்கள் திரும்பிவந்தார்கள். பின்பு மாதவதாசர வர்களை நோக்கி வந்தது புலியல்ல, சாக்ஷாத் ஸ்ரீஹரியே வந்தார். இது தெய்வ மஹிமையாகும் அவர் மஹிமையை அவருடைய பக்தர்களறிவார்கள் இதர ஜனங்களெப்படி அறியக்கூடும் நான் ஸ்ரீஹரியைக் கண்டேன் எனது ஜன்மமற்றது மற்றவர்களவரை யறியவு மடையவு மரிதாகும் இனிநான் சூரத்துபட்டணத்திற்கு ப்போகத் திரும்புகிறேன். நீங்கள் துவாரகைக்குச் சென்று தா மோதரனைக் காணத்தகுமென்று சொல்லி நிஜநிவாசத்திற்கு மாத வதாசர்வந்து சுஜனவிதேயராகி அநேகஜனங்களை பக்தியில் நிறு த்தி பிரேமை அதிகமாகப் பஜனைபஜனையை பெருக்கச்செய்து மேன்மை யடைந்தார்.

---

## விட்டலபுரந்தரர் சரித்திரம்.

பிதருபட்டணத்திற்கருகே விட்டல புரந்தர ரென்பவர் வாழ் ந்திருந்தார். ஸ்ரீபண்டரிநாதருடைய பஜனை யிடைவிடாது செய் துக்கொண்டு தன் வீட்டுக் காரியங்களைச் செய்தும் சத்தியமுந் தயையு முடையவராய் பூதஹிதம் பண்ணியும் சமுசார நிர்வா ஹகம் துர்ப்பலமாயிருந்தும் அதிதிகளுக்கன்னமளித்தும் நேமத்து டன் பண்டரியாத்திரை பிரதி யுச்சவத்திற்குப் போய்க்கொண்டும் இந்த நிபந்தனத்துடன் நெறிதப்பாமல் காலயாபனஞ் செய்து

வருவார். ஒருவருஷம் ஜ்வர பாதையால் சக்தியற்றவராக விருந்தார். அச்சமயத்தில் கார்த்திகை மாதம் வந்ததைக் கண்டு இந்தத்தடவை பாண்டுரங்கரை யெப்படிப் பார்ப்பேன் வியாதி நீங்கவில்லையே யென்று மிகுந்த இலேசத்தை யடைந்து ஆற்றாமையால் நித்திரை பிடிக்காமல் பிராணன் தபிக்கப்பட்டு நேமத்திற்கு விக்கினம் நேரிடுகிறதே யென்று மூன்றுநாள் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தும் காய்ச்சல் விடாமலே யிருந்தது. அவ்வேளையிற்றன் சரீரத்தில் நம்பிக்கை வைத்தால் ஸ்ரீஹரியைப் பார்க்கமாட்டேனென்றும் வீட்டிலிருக்கிலும் மரணம் வருவது விட்டு நீங்காதென்றும் நம்முடைய நியமத்தை நிறைவேற்றிக் கொள்ளுவது முக்கியமென்று சிந்தித்து பண்டரியாத்திரை புறப்பட்டார். அவருடன் துணையாகச்செல்ல ஒருபுருஷனுவதில்லை. மனையாளொருத்திமாத்திரங் கூடவிருந்தாள். எருதாவது குதிரையாவது யாதொன்று மில்லாமல் நடந்தே போனார்கள். காய்ச்சல் தேஹத்திலதிகமாகி கால்கள் பூமிமேலிட சக்கியமில்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டு இரண்டுநாள் பிரயாணம் நடக்க புருஷனுக்குத் தாபமதிகமாயிற்று. பதியை விடாமல் மனையாள் இரவுகாலங்களில் வேண்டிய உபசாரங்களைச் செய்தும் காய்ச்சலதிகமாகவே யிருந்தது. மறுநாள் தேஹவிஸ்மிருதி புருஷனுக்கிருப்பதைக்கண்டு மனையாள் பயந்து என்னசெய்வே னென்று விசேஷமாக அழுதுக்கொண்டு தனக் கோருபாயமுந் தோன்றாமல் ஹரி! கிருஷ்ணா! என்று உரக்கக்கூவி அபார துக்கத்தால் புலம்பினாள். கணவனகொஞ்சம் தெளிவுக்கு வந்து மனையாளை நோக்கி என்னைக்கட்டில்மேல் படுக்கப்போட்டு நான்கு மனிதர்கள் சுமந்துக்கொண்டு போகவேண்டும். பண்டரியைச் சேர்ந்தால் காய்ச்சல் போகுமென்று சொன்னார். மனையாள் அதற்குக் கையிற் காசில்லாதிருக்கக் கூலிமனிதரை யெப்படி வைப்பேன். வழிசெலவுக்கே வெகுகஷ்டமாயிருக்கிறது. மனிதரை வைத்தால் அவர்களுக்குக் கூலிக்கொடுக்க துட்டில்லையே! என்று துக்கித்து ஓ தேவதேவா! பண்டரிநாதா! ஏழையான வெனக்கு உன்னைத்தவிர வேறு திக்கில்லை. ஓ பாண்டுரங்கா! நீர் அனாதர்களுக்குப் பந்துவாயிற்றே! பண்டரிபுரத்தை தச்சேர இன்னம் நான்குதினங்கள் நடக்கவேண்டும். என் புருஷன் காய்ச்சலால் பாதையடைகிறார். நானெப்படிப் பிழைக்கப்போ

கிறேன். ஓ ருக்மணீபதி! இராதாரமணு! கஜேந்திரவரதா! கோகுலவாசா! கோவிந்தா! இரக்ஷியுமென்று முறையிட பண்டரிநாதன் தானே நான்கு உருவங்களாக வந்து குடியானவர்கள் போலெதிரில் நின்று தாயே! ஏன் கஷ்டப்படுகிறுயென்று அம்மாளைக் கேட்க அவளவர்களுக்குத் தனது சங்கதியை யறிவித்தாள். அம்மனிதர்களிதைக் கேட்டு நாங்கள் பண்டரி புரத்திலிருப்போர்கள். அவ்விடத்திற்கே போகிறோம். வியாதியினுல் வருத்தமுறுமுன் பர்த்தாவைப் பண்டரி புரத்திற் சேற்கிறோ மென்று சொல்லி ஓர் டோலியைக் கொண்டு வந்து பக்தரை யதனிலிட்டு அதனைச் சுமந்துக்கொண்டு நடந்து ஒரேதினத்தி லூரைச்சேர்த்தார்கள். அவ்விடத்திற் பண்டரிநாதருடைய குணரூப வர்ணனையை புரந்தரர் கேட்டு ஸ்ரீஹரிநாமம் சஞ்சீவன மென்று சந்தோஷத்தை யடைந்தார். மனிதரூபரான விட்டலரங்கர் டோலியை இறக்கி ஓர்வீட்டிற் பிரவேசிக்கச்செய்து கட்டில் முதலான வஸ்துக்களனைத்தையும் கொண்டுவந்து கொடுத்து சன்னிதிக்குச்சென்றுப் பெருமாள் பாததீர்த்தத்தைக் கொண்டுவந்து பக்தருடைய வாயிலிடவே தேஹத்திற் பளுவுகுறைந்தது, அவருமம்மாளும் பக்தரைப் பிடித்துக்கொண்டு மெதுவாக பெருமாள் சன்னிதிக்குவந்து நின்றனர். புரந்தரர் பெருமாள்திருவடிகளை நமஸ்கரித்துப் பூஜைசெய்து முன்னின்று, ஸ்வாமி! தேவரீர் திருமுகமண்டலத்தை தெய்வயோகத்தாற் கண்டேனென்று மகத்தானபிரேமையுடன் கற்கதத்கண்டராகி ஆனந்த பாஷ்பத்துட னலிங்கனஞ்செய்து ருக்குமணியையும் சத்தியபாமையும் ஸேவித்து வீடிவீட்டிற்கு மூவரும் வந்தார்கள். திரும்பி வருகிறேனென்று மாதவர் போகத் தொடங்கப் புரந்தரரவரை நோக்கி ஐயா! நீர்பெருத்த வுபகாரத்தைச் செய்தீர் உமக்கு கொடுக்கத் தகுந்த பதார்த்த மொன்றுங்காணேன் உமது பேரென்னவென்று கேட்க அவர்புறந்தரரை நோக்கி ஐயா, என்பேர் பாண்டுரங்ககோளீ யென்று சொல்லுவார்கள். இவ்விடத்திலெனக்கு விசேஷ பந்துக்களிருக்கிறார்களென்றும் உம்மைநான் திரும்பிப் பார்ப்பேனென்றுஞ்சொல்லி மறைந்தருளினுர்.

புரந்தரர் பண்டரிபுரத்திலேலேழுநாளிருக்கு மள்வில் நாளுக்கு நாள் தேஹத்தில் வலிவுஉண்டாயிற்று. ஆரோக்கிய மடைந்தபின்

ஹரியினிட மாக்கினையைப் பெற்றுக்கொண்டு பாண்டுரங்ககோளி தனக்காகச் செய்த நன்றியை மறவாமற் றன் மனதிலிட்டுக்கொண்டு மகத்தானப் பிரீதியுடனவரையே ஸ்மரித்துக்கொண்டு தன் வீட்டைச்சேர்ந்தார். படுக்கும்போது மிருக்கும்போதும் நடக்கும்போதும் உண்ணும்போதும் ஹரி சிந்தையையே யிடைவிடாது செய்துவருவார். இப்படி காலயாபனம் பண்ணிக்கொண்டிருந்து மறுவருஷம் பண்டரிபுரத்திற்குச் சென்று பதிசதிகளிருவரும் பாண்டுரங்ககோளிக்காக வெகுவாகத் தேடியுங்காணுமல் விசனமுற்று போஜனஞ் செய்யாமல் பிராணமித்திரரான பாண்டுரங்ககோளியைக் காணப் பெறவில்லையே யென்று அனுதபித்திருப்பதைப் பெருமாள் கண்டு புரந்தரருக்குப் பிரசன்னராகிப் பாண்டுரங்ககோளி நான்தான், உன்னுடம்பை நீயறியாமல் பிரக்கினை தப்பியிருக்கும்பொழுது உன்னைப் பண்டரி புரத்திற்குக் கொண்டு வந்தேனென்று சொல்லப் புரந்தரர் வெகு சந்தோஷத்துடனவர் திருவடிகளைப் பிடித்து ஸ்வாமி! இந்த நிலைமையற்ற காயத்தை நீரேன் சுமந்தீர்? இதனு லுமக்கென்ன மேன்மை யுண்டாயிற்றென்று கேட்கப் பெருமாளவரை நோக்கி நீ காயத்தினுலும் வாக்கினுலும் சேவித்து யென்னை உன்மனதில் நிறுத்தினுய் காயம்போகுமாறு லென்னை நீ இக்கண்களால் காண்பமதெப்படி? என்று சமாதானப் படுத்திப் பக்ஷணை செய்யக் கடவீர்களென்று சொல்லி பகவானந்தர்த்தானமானுர். சதிபதிக ளிருவரும் சந்தோஷத்துட னன்னமருந்தி யாத்திரை முடிந்தபின் தங்களிருப்பிடஞ் சென்றுர்கள்.

---

## நரசிம்மசரஸ்வதிஸ்வாமி சரித்திரம்.

மேற்குதிக்கி லொரு பிராம்மணன் மஹாவித்வாம்சனுயிருந்து பகவதுபாஸனையை விசேஷமாகச் செய்துவர, தத்தாத்திரேயருடைய அம்சமாக ஒரு குமாரன் பிறந்தார். குழந்தை சுந்தரமான சொரூபத்தை யுடையதாகக் கண்டு அந்தப் பிராம்மணன் சந்தோஷத்தை யடைந்து பன்னிரண்டாநாள் நரசிம்மனென்று அக்குழந்தைக்கு நாமகரணஞ்செய்து பெருத்தப் பிரேமையுடன் வளர்த்து ஐந்தாவது வயதில் உபநயனத்தை நடத்தி வித்தியாப்பியாசஞ் செய்ய வமைத்தான். வேதாத்தியயனத்தை யொருதரஞ் செய்தால் அதனை தாய்தந்தைகள் கேட்கக் கண்டாபாடமாகச் சொல்லு

வார். வித்தியாப்பியாசத்தி லப்பிள்ளையின் விசாலபுத்தியைப் பார்த்து விஷ்ணுஹம்சரென்று சொல்லுவார்கள். சாஸ்திரங்களையெல்லாஞ்சிறு பிராயத்திலேயே கற்றுக்கொண்டதால் சரஸ்வதி நிலயமான முகமென்று ஜனங்கள் சொல்லுவார்கள். அதைப்பற்றி அவருக்கு சரஸ்வதியென்னும் நாம மதுமூதனுண்டாயிற்று. எட்டுவயதில் சகலார்த்தங்களை யறிந்து ஏகாந்தத்தில் ஸ்ரீஹரி பஜனையைச் செய்துகொண்டு ஆரண்ணியத்திற்குப் போக லுற்றார். விரக்தி பரராய் வைராக்கியத்தை வஹித்திருக்கத் தாய் தந்தைக ளவருக்கு விவாஹஞ்செய்யப்படி கூடுமென்றெண்ணி ஏகாந்தத்தில் பிள்ளையை நோக்கி அப்பா! சமுசார தருமத்தில் மனதைச்செலுத்தும்படி வேண்டுகிறோமென்றனர். குமாரரதனைக் கேட்டு பிதாவை நோக்கி சமுசார சப்தமே பொய்யாய் நிகழும், கானநீர் சமுத்திரத்தில் படவுகள் நிற்குமோ? சொப்பனத்தில் றணத்தைக் கைக்கொள்வதுபோல சமுசாரத்தைக் குறிப்பிடுவதாகும், அறிவினாலும்மை நீர் விசாரித்து ஆத்ம ரூபத்தை யறியக்கடவீரென்று சொல்லத் தகப்பனார் தேஹமோகத்தால் இக லோக பிராந்தியை யடைந்திருந்தாராதலால் செவிடனுக்கு கானவித்தை பிடிபடாததுபோலாயிற்று. குமாரர் தகப்பனை நோக்கி காசிபுரிக்குப் போகிறேனென்று சொல்லத் தகப்பன் அதிக துக்கனத்தை யடைந்து வேறு புத்திரனெனக் கில்லையே! எனக்கும் உன்தாயாருக்குங் கிழத்தன மாயிற்றே! நீ போய்விடுவாயானால் எங்களுடைய ஹிதத்தை யார் பார்ப்பார்களென்று கேட்கப் பிள்ளை தகப்பனைப்பார்த்து இரண்டு பிள்ளைகளுமக்குப் பிறப்பார்கள். அவர்கள் வம்சோத்தாரணை செய்வார்கள் இது சத்தியமென்று சொல்லித் தாய்தந்தைகளை நமஸ்கரித்து ஸ்ரீஹரி காரியமே நமக்குச் செய்காரியமென்று காசிபுரிக்குச்சென்று அவ்விடம் சன்னியாசாச்சிரமத்தை ஸ்வீகரித்துப் பின்பு பரமஹம்சராகி சஞ்சரித்தார்.

நரசிம்மசரஸ்வதிஸ்வாமியின் பிரக்கினையும் மகிமையும் அமிதமாக விருந்தது. அவருடைய தரிசனமாத்திரத்தில் ஜனங்களும் வெகுபேர் உஜ்ஜீவனமடைந்தார்கள். சுகுணசாலிகளான மூன்றாறு சிஷர்களைச்சேர்த்து ஓராண்டு அவ்விடமிருந்து திரும்பி தன் ஊரைச் சேர்ந்து அவ்விடத்திலு மனேக சிஷர்களைச் சேர்த்தார். ஆங்கிருந்து காண்காபுர மென்னும் க்ஷேத்திரத்தைச் சேர்ந்து அவ்விடம்

அமரஜயென்னும் பெரிய நதி யிருக்கக்கண்டு அவ்வாற்றின் கரை யிற் ருெருநிவாசபூமியை யேற்பாடு செய்துக்கொண்டிருக்க அங்கவருக்குப் பிரதிஷ்டை வெகுவாக நேர்ந்தது. பண்டிதர்க ளாகிய க்ஷேத்ரவாசிகள் அவர் மஹிமைகளைக் கேட்டு விசேஷ மாக நிந்திக்கத் தொடங்கினார்கள். பிரமசரியத்தைவிட்டு சன்னி யாசியாய் யோகதண்டத்தையும் வஸ்திரத்தையும் சகல தருமங் களையும் விட்டு இஷ்டப்படி பக்ஷித்துக்கொண்டு இப்படி திரிவது சரியோ! வென்று அவரை பரிக்ஷிக்கும்பொருட்டு அவரிடம் வந் துக்கொண்டிருந்தார்கள். ஐந்நூறுபேர் பிராம்மணர்கள் இப்படி குரோதத்துடன் வருமளவில் வழியில் காற்றும் மழையும் பிரதா பத்தைக் காண்பித்து தூசு எங்கும்பரவி அவர்கள் கண்களெல் லாம் மண்ணினால் மறையப்பட்டன, வேஷ்டிகளெல்லாம் பறந்து போயின, காற்றின் வேகத்தால் வருமனர்த்தத்தின்முன் தங்களு டைய செய்கைகளொன்றும் பிரயோஜனப்படாமல் நக்னராகி வெட்கமுற்று சாதுபுருஷரை நிந்திப்பதா லிந்த வவமானமும் கேடும் நமக்கு நேர்ந்தன, இப்பொழுது நாமிக்கோலத்துடன் வீட் டிற்குச் சென்றால் ஊரார் பரிஹாஸஞ் செய்வார்கள். பரமஹம்ச ரிடம்போய்ச்சரணமடைந்தால் நமக்குப் பாங்காகுமென் றெண்ணி யனைவரு மவரிடம்வந்து தோத்திரங்களைச் செய்து ஸ்வாமி! நா ங்கள் மதோன்மத்தர்கள் எங்களுடைய வபராதங்களை நீங்கள் ம ன்னித்து எங்களை சீர்திருத்தியருளு மென்று விண்ணப்பஞ் செ ய்தார்கள். இதைக்கேட்டு ஸ்வாமி தயையுடையவராகி அவர்க ளனைவருக்கும் வஸ்திரங்களைக் கொடுத்தார். இது ஸ்வாமி மஹி மையென்று தங்களுக்குள் ளறிந்துகொண்டு தங்கள் தங்கள் வீடு களுக்குச் சென்றார்கள்.

ஒருநாள் நரசிம்மசரஸ்வதிஸ்வாமி அமரஜ நதியில் ஸ்நானஞ் செய்யும்பொழுது அனைவரும் பார்க்க நான்குநாழிகை வரைக்கும் ஜலத்திலேயே யிருந்தார். அவ்விடத்திலோர் செம்படவ னிதைக் கண்டு ஜலத்தில் முழுகி அவ்விடம் கண்களைத் திறந்துப் பார் த்தபோது ஓர் வீட்டைக் கண்டு ஏழுபேர் அப்சரஸ்திரீக ளிரு ந்து ஸ்வாமிக்கு இஷ்டபூஜைகளைச் செய்து உணவையுங் கொ டுத்துத் தாம்பூலத்தையுந் தந்து போகப்பார்த்தான், ஸ்வாமியும் சந்தோஷத்துடன் அவ்வீட்டைவிட்டு வெளியே வந்தனர். அப்

பொழுது அந்த செம்படவனைக்கண்டு அவனங்குவந்த சங்கதியைக் கேட்டுப் பிரீதராகி இந்தச் சமாசாரத்தை வெளியில் யாருக்குஞ் சொல்ல வேண்டாமென்று திட்டப்படுத்தி யோர் பானைநிறைய மொஹராக்களை யவனுக்குக் கொடுத்து இதையும் வெளியிடவே ண்டாமென்று சொல்லி இருவரும் ஜலத்திற்குமேல் வெளிவந்தார் கள். இதரஜனங்கள் செம்படவனுக்கு பாக்கியம் வந்ததைக்கண்டு அது பரமஹம்சஸ்வாமியின் கிருபாரசமென் றறிந்துக்கொண் டார்கள்.

ஒரு பிராம்மணன் தரித்திரபீடையால் தீனத்வத்தை வஹித் து நரசிம்மசரஸ்வதிஸ்வாமியைச் சேர்ந்து ஓஸ்வாமி! தேவரீ ரொருகா லடியேன் வீட்டில் பிக்ஷைகொள்ள வேண்டுமென்றான். ஸ்வாமி இதைக்கேட்டு எப்போதாவது வருகிறேனென்றுசொல்ல அந்தப்பிராம்மணன் நமஸ்கரித்துப் பிரேமையுடன் வீட்டுக்குச்சென் ருன். ஒருநாள் அந்தப் பிராம்மணன் வைஸ்வதேவபூஜை செய்யும் சமயத்தில் அவன் வீட்டிற்கு ஸ்வாமி சென்றார். அவன், வந்தவருக் காசமன மளித்து உட்காரச்செய்து அவர் பாதங்கள்மேல் விழு ந்து மகத்தான கிலேசத்தை யடைந்து, இன்றையதினம் புளியங் கொட்டைக் களி வீட்டிற் செய்திருக்கிறதே! இது பரமஹம்ச ஸ்வாமிக்கு பக்ஷிக்கக் கொடுக்கச் சரிப்படாதேயென் றெண்ணி பயத்துடனிருக்க, ஸ்வாமி! அந்தப் பிராம்மணனை நோக்கி பால் சாப்பிடும் பொருட்டு இவ்விடத்திற்கு வந்தேன். எருமைப்பாலைக் கறந்துக்கொடுக்கச் சொல்லிக் கேட்க பிராம்மணன் என்னிடமிரு க்கு மெருமை மலடாயிருக்கிறது, பால்கொடுக்கிற தில்லையென்று கூற, ஸ்வாமி, இதைக்கேட்டு இன்றுமுதல் லது சரியாகப் பால் கொடுக்கும் நியமந் தப்பாதென்று சொல்ல அந்தப் பிராம்மண னன்றையதினம் எட்டுசேர் பாலைக்கறந்து ஸ்வாமிக்குக் கொடுத் தான். அதிற் கொஞ்சம் பாலை அவர் பிரீதியுடன் சாப்பிட்டுநாளைய தினத்தில் சிஷ்யருடன் கூடி போஜனத்திற்காக வருகிறேன் இரு பத்தைந்துபேருக்கு மாத்திரம் வீட்டிற் சமையல்செய்து வைக் கவேண்டுமென்றும் அதுவே அனேக ஜனங்களுக்குப் போதுமான தாகயிருக்குமென்றும் ஊரிலிருக்கும் பிராமயணர்களெல்லவரையும் போஜனத்திற் கழைக்கும்படி திட்டப்படுத்தித் தன்னிருப்பிடஞ் சென்றார். மறுநாள் ஸ்வாமி ஆக்கினைப்பிரகாரம் அந்தப்பிராம்ம

ணன் சமையலைச் செய்வித்தான். பரமஹம்சஸ்வாமி சிஷர்களுடனும் அனைப் பிராம்மணர்களுடனும் வந்து பக்ஷிணை செய்தார். இந்த ஸ்வாமியினுடைய அபார லீலையென்று அனைவரும் புகழ்ந்தார்கள். மிகுதியாயிருந்த பிரசாதத்தைச் சகல ஜாதியாருக்கு மிட்டார்கள். நாளுக்குநா ளந்தப் பிராம்மணன் தனவானாகி விருத்தியாதி யடைந்தான். பிரஜைக ளனைவரும் பாவசுத்தியுடன் நரசிம்ம சரஸ்வதிஸ்வாமியைத் தொழுதார்கள்.

பீஜாபுரத்தி லோரரசன் மிகுந்த போகத்தி லடிபட்டு ஸ்திரீ லம்படனாகி யிருந்தான். அவனுக்குப் பெருந்தவியாதி தேஹத்தில் நேர்ந்தது. அதற்காக வேண்டிய ஔஷதங்களை விசேஷமாக சாப்பிட்டும் குணமாகாமல் தொந்தரை யடையலுற்றான். அவ்விடத்திற்கு பரமஹம்ச ஸ்வாமி அகஸ்மாத்தாக சென்று அவர் திருக்கையை அத்துலுக்கவரசன் சிரசின்மேல் வைக்க பெருத்ததாயிருந்த அந்தவியாதி பரிஹாரமாயிற்று. பின்பு அவ்வரசனுக்கு அனேக நீதிகளைச் சொல்லி பிடிப்புடன் ஸ்ரீஹரிபஜனையில் பக்தி செய்யும்படி கட்டளை யிட்டார். ஆசாரியப் பிரீதியாக அனேக சேவைகளை மனம் வாக்குக் காயங்களா லிராஜன் செய்யத்தொடங்கினான். குருவானவ ரதைக்கண்டு தன து பாதுகைகளை அவனுக்குக் கொடுத்து பக்தியுடன் நிதமும் சேவித்து வருவாயென்றுசொல்ல அவ்வரச னந்த நெறியிலிருந்து ஸ்ரீஹரிபக்தியிற் சிறந்தவனானான்.

நரசிம்மசரஸ்வதிஸ்வாமி "குருந்தவாடா" வென்னு மோர் ஸ்தலத்திற் கெழுந்தருளினார். அனேகஜனங்க ளவரை சேவிக்கும் பொருட்டு வருவார்கள். அவரவர்கள் மனோரதங்கள் பூர்த்தியாகி வந்தன. அவ்விடத்தி லோர் ஸ்திரீ, பிள்ளையில்லா திருந்தாள். ஓர் பிள்ளைப் பிறந்தால் குருதரிசனத்திற்கு வருகிறே னென்று அவள் பிரார்த்தனை செய்துகொண்டாள். பின்பு அந்தஸ்திரீ கர்ப்பமுடையாளாகி புத்திரனைப் பெற்றாள். ஆறுமாதங்கள் வரைக்கு மாசாரியரைக் காணுமலிருக்கப் பிள்ளை மரணமடைந்தான். அதிக விசனத்தை யடைந்து பிரேத புத்திரனைக் கைக்கொண்டு ஆசாரியரிடஞ் செல்ல அப்பிள்ளை ஜீவந்தனாகி கண்களைத் திறந்து ஆசாரியரைக் கண்டான். இதைக்கண்டு அந்தஸ்திரீ அதிகப்பி[illegible]ர் குரு ஆராதனையை விசேஷமாகச் செய்தாள்.

ஓர் வர்த்தகன் மிருத்துவசமாகி மரணமடைந்தான். [illegible]ர்

மனைவி உடன்கட்டை யேறுவதற்குப் போய்க்கொண்டிருந்தாள், வழியில் பரமஹம்சஸ்வாமியைப் பக்தியுடன் நமஸ்கரித்தாள், அப்பொழுது அவர் புத்ரவதியாகக் கடவாயென்று ஆசீர்வதித்தார். இதைக்கேட்டு அவள் ஸ்வாமி! என்புருஷன் மரணமடைந்தான், உடன்கட்டையேறப் போகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய அவரவளை நோக்கி உன்புருஷனிப்பொழுதெழுந்திருப்பனென்று திருவாய்மலர்ந் தருளினர். அவள் மசானபூமிக்கு வந்தமாத்திரத்தில் சகலபந்துக்களும் பார்த்துக்கொண்டிருக்க கணவனெழுந்திருந்து உட்கார்ந்தான். ஸ்வாமி ஆசீர்வதித்த வண்ணமே தம்பதிகளிருவரும் வெகுநாள் வாழ்ந்திருந்து புத்திரரைப்பெற்றார்கள். இவ்விதமாக அந்தப் பரமஹம்சஸ்வாமி, பவித்திரராகி பரோபகாரமே யாத்திரையாகக்கொண்டு அனேக ஜனங்களை ஹரிபக்தியிற் சேர்த்து உத்தரித்தார்.

---

## முத்கலபட்டர் சரித்திரம்.

முத்கலரென்பவர் வேதசாஸ்திர புராணங்களிற் சிறந்தவராகி அஹங்காரமற்று விசேஷபண்டிதர்கள் வரினும் வாதஞ்செய்யாமல் பிரியத்தைக்காண்பித்து ஜனங்களிடத்து கிருபையுந் தயையுமுடையவராகி ஒருவரிடத்திலு முபார்ஜனையின்றி பொருமையுடனும் திருப்தியுடனு மிருந்து ஸ்ரீராமமூர்த்தி பூஜையைச்செய்து வருவார். சர்வாவஸ்தைகளிலும் சர்வமு மிராமராயிருக்கக்காண்பதும் திருவாணசுக தாயக ரவரேயென்றும் நிச்சயித்து அயாசிதமான விருத்தியா லன்னவஸ்திரங்களை நடப்பித்து பஞ்ச மஹாயக்கியங்களைப் பால்மாராமற் செய்து இராமஜயந்தியில் பத்துநாளுச்சவம் பிரபலமாக நடத்தி அன்னசாந்திரும் அடைவோடு செய்துவருவார். நன்னெறி நல்லொழுக்க மிருந்தபடியால் பிரதிஷ்டை மிகுதியாக யுண்டாகி பிரஜைகள் சஹாயஞ் செய்து வருவார்கள். இப்படி வெகுகாலங் கழித்துவர குடும்ப சஹிதராக மஹாயாத்திரை செய்யத் தொடங்கி எருதுகளையும் குதிரைகளையும் மனிதரையுங் கூடவைத்துக்கொண்டு செல்லுமளவில் காசி கட்டத்தைச்சேர்ந்து அவ்விடத்தில் விசுவேசுரருக்குப் பூஜைகளைச் செய்து ஸ்ரீரகுநந்தனரைப் பாடியாடி கயைக்குச் சென்று அவ்விடத்தில் ஸ்ரீஹரிபாதத்திற் பிண்டம் போட்டு பிரயாகைக்குப்

போய் திரிவேணி ஸ்நானஞ்செய்து ஜோதிலிங்கம் முதலான ஸ்தலங்களைச் சேவித்துக்கொண்டு ஸ்ரீராமநவமி உச்சவத்தைச் செய்ய வீட்டிற்குச் செல்லத் திரும்பினர். வழிநடந்து வருமளவில் உலகத்தாரனேகர் இவரை புகழ்ந்தேத்தினர்கள். அவர் விரும்பாதிருக்க விசேஷ திரவியசகாயத்தைச் செய்தார்கள். ஸ்ரீரகுநாதர் கீர்த்தியையும் பெருமையையும் அவருடைய கீர்த்தனத்தாலும் நாமஸ்மரணையாலும் புகழ்ந்து ஜனங்களைச் சந்தோஷப்படுத்தி இராமோச்சவத்திற்கு மிகுதியாகத் தனமகப்பட்டதென்றெண்ணிச் சந்தோஷத்துடன் ஸ்ரீஹரி பஜனையைச் செய்துகொண்டு சென்றார்.

முத்கலர் திரவ்வியத்துடன் வழிநடந்து போவதை நான்கு திருடர்க ளறிந்து அத்தனத்தை யபகரிக்க வெண்ணி அவர்கள் பின்றொடர்ந்து சென்று சமயோசிதத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். முத்கலபட்டர் அவர்களைத் திருடர்களென்னும நினைப்பைக் கொள்ளாமல் இரகுநாதர் சரித்திரங்களைப் பாடிக்கொண்டு சிந்தனையற்றுப்போய்க் கொண்டிருந்தார். நான்கு சேவகர்கள் அந்தபக்தர் பின்னாலே நடந்து சென்றுக்கொண் டிருப்பதை அத்திருடர் பார்த்து அவர்களுக்குச் சமயமகப்படாம லிருந்தது. ஒரு அவசரத்தி லத்திருடர்கள் சேவகரைநோக்கி நீங்கள் யாரென்று வினவ, அவர்கள் நாங்கள் முத்கலபட்டருடைய சேவகர்கள், அயோத்தியிலிருந்து இவ்விடம்வந்து அவருடைய சேவகத்தி லமர்ந்தோம். இவரை வீட்டிற்சேர்த்துப் போவோமென் றவர்களுக்குப் புகன்று முத்கலருக்குத் தங்களுடைய ரூபங்களைக் காட்டாம லவர்கூடவே நடந்து சென்றார்கள். திருடர்களச் சேவகர்களிடந் தனுர்பாணங்களைக்கண்டு தமக்குள் தொந்தரை யடைந்து திருட சமயமகப்படாம லிருந்தார்கள். முத்கலர் வழிநடந்துக்கொண்டு, ஓ! ஜானகிவல்லபா! ஸ்ரீரகுநாயகா! சக்கரவர்த்திக் குமாரா! தானவமர்த்தனா! என்று சொல்லிக்கொண்டு வீட்டைச் சேர்ந்தார். சேவகர்களாய்வந்த நால்வரும் அந்தர்த்தான மாயினர்கள். துன்மார்க்கரான திருடர்களும் முத்கலர் வீட்டிற்குவந்து ஐயா! உமது சேவகர்க ளெங்குசென்றனரென்று கேட்க அவர்சேவகர்களை நான் வைக்கவில்லையென்றுசொல்ல திருடர்களவரைநோக்கி ஐயா! உமக்குமுன்னும்பின்னுமாகக்காவலிருந்து உம்மைக்காப்பாற்றிக் கொண்டுவந்துவீட்டிற்சேர்த்தார்களேயெ

ன்றுசொல்லி அச்சேவகர்களுடன் தாங்கள் செய்த சம்பாஷணை மும் தாங்கள் திருடவதற்காகவந்த சங்கதியையும் தெரிவித் தார்கள். பத்தினிசமேதராக பக்தர் கேக் கிலேசத்தை யடைந்து ஆஹா! சேவகர்களாக விருந்தவர்கள் இராமரும் லக்ஷ்மணரும், பாதரும், சத்துருக்கனரு மாவாரன்றோ! அவர்கள் புண்ணியமூர்த் திகளான உங்களுக்கு தரிசன மளித்தனர். நீங்கள் தன்னியரல் லரோ? வென்று அவர்களுக்குத்தெண்டஞ் சமர்ப்பித்தார். இதைக் கண்டு திருடர்க ளனுதாபத்தை யடைந்து அவர்களுடைய துர்க் குணங்களைவிட்டு ஸ்ரீஹரி பஜனையால் நாம் கிருதார்த்தர்களா வோமென்று அதனைச் செய்யலுற்றார்கள். முத்கலப்பட்டரு மவர்களை யனேகவிதங்களாக ஆதரித்தார்.

அனந்தரம் முத்கலர் தன் திருவாராதன கிரகத்திற் பிரவே சித்து இராமமூர்த்தியை நமஸ்கரித்து ஜய ரகுநந்தனா! சீதாரமணா! சியாமள சுந்தரா! நீர் சாம்பமூர்த்திக்குப் பிரியகரமானவர், பார் வதிதேவி ஹிருதயத்தில் நித்தியவாசம் பண்ணுமவர். வில்லம்பு களைக் கைகளிலேந்தி நீர் வழிகட்டியடிக்குந் திருடர்களுக்குத் தரி சனந் தந்தருளினீர். அடியேனென்ன பாபத்தைச் செய்தேன் என் கண்களுக்குத் தோன்றுமற் போனீரே! ஓராமா! வென்றிவ்வண்ண மாக நூறு ஸமஸ்கிருதசுலோகங்களால் ஸ்ரீராமபிரானைத் தோத் திரஞ்செய்தார். அவைகளில் மதுரரசமும் பிரேமபாவமு மிகுதி யாக விருக்கக்கண்டு ஸ்ரீராமச்சந்திரரும் லக்ஷ்மணப்பெருமாளும், பரதரும், சத்துருக்கினரும், வந்து தரிசனங்கொடுக்க அவர்களு டைய ரூபங்களைத் தானிருதயத்தி லிருத்திக்கொண்டு சந்தோஷத் துட னிருந்தார். இதற்குள் ஸ்ரீராமஜயந்தி வந்தது. அனேகம் பேர் கூடிக்கொண்டு மஹோற்சவத்தை நடத்திவந்தார்கள். இரவு காலத்திற் கீர்த்தனைசெய்யுஞ் சமயத்தில் விளக்கெரிய எண்ணெய் இல்லாதிருந்தது. நடு இராத்திரியில் வீதிகளிற் ஜனங்கள் [illegible]யக் கூடாதென்னும் நிபந்தனை யவ்வூரரசனு [illegible]யிருந்தது. எண் ணெயில்லாவிடிற் தீப மெரியாதாதலாற் சங்கட மடைந்திருக்க இராமபிரான் முத்கலபட்டர் சிஷ்யனைப்போலக் [illegible] வீதியிற்சென் று இரண்டு இராமமுத்திரைகளை ஓர் கோமட்டிகையிற் கொடுத்து எண்ணெயைக் கொடுக்கச்சொல்லிக் கேட்க அவன் சம்மதித்து பானையெண்ணெயைக் கொடுத்தான். அதனை ஸ்ரீராமமூர்த்தி

கொண்டுவந்து விளக்குகளில் வார்த்து இரவுமுழுதுங் கீர்த்தனை நடக்கும்படி செய்வித்தார். அனேக பிரஜைக ளவ்விடம்வந்து கீர்த்தனையைக் கேட்டு உல்லாசத்தை யடைந்து புனிதர்களாகிச் சென்றார்கள். பொழுது விடிந்தவுடன் சோமட்டி இராமமுத்திரைக ளிரண்டையுங் கொண்டுவந்து முத்கலரை அனேகருடன் வீற்றிருக்கக்கண்டு ஐயா! உம்முடையமனித னிந்த முத்திரைகளைக்கொடுத்து இராத்திரி தைலத்தை வாங்கிவந்தான். இந்த முத்திரைகளை நீரேவைத்துக்கொண்டு அதின் கிரயத்தைக் கொடும் என்று கேட்டான். இதைக்கண்டு முத்கலர் தன் சிஷர்களையழைத்து விசாரிக்கும்பொழுது அவர்களுக்குச் சங்கதி தெரியாதென்றார்கள். அப்பொழுது முத்கல ரிதனைக்கேட்டு இது ஸ்ரீராமபிரான் கிருத்யமென்று சிந்தித்து அந்த இராமமுத்திரைகளை கைக்கொண்டு வர்த்தகனுக்கு பணத்தைக் கொடுத்து அம்முத்திரைகளைப் பகவத் சன்னிதியில் வைத்து வினயவிதேயராகிப் பூஜித்து பகவத் பக்தி செய்து விசேஷ கீர்த்தியைப் பெற்றிருந்தார்.

---

## ஜஸவந்தர் சரித்திரம்.

தபதியெனும் நதிதீரத்தில் பேரடாயெனுங் கிராம மொன்றுண்டு. ஜஸவந்தரெனும் பக்த ரவ்வூரில் வாசமாயிருந்தார். அவர் பிராம்மணராகி ஜனித்து சுசீலராகியும் புண்ணிய மூர்த்தியாகியும் சீதாராமரைப் பூஜிப்பவராகியும் அயாசிதவிருத்தியை யுடையவராகியும் அதிதிகளுக் கன்னமிடுபவராகியு மிருந்தார். குடும்பரக்ஷணைப் பிரயாசையுடன் செய்துவருவார். பூததயையும் பச்சாத்தாபமு முடையவராகி பக்தியுடன் ஹரிகீர்த்தனை செய்து சத்தியத்தையே சொல்லி பகவன் நாமஸ்மரணைவிடாமல் துஷ்ட சிந்தனை யில்லாமல் தன்னைப்போலவே மற்றவர்களைப் பாவித்து வருவதுமன்றி பகவத்கதைகளைச் சொல்லி வந்தனர். அனேகஜனங்க ளதனைக் கேட்கவருவார்கள்.

இவ்வண்ணமாக வெகுகாலம் நடந்துவர ஒருதருணத்தி லவ்வூரில் ஏழுநாள் பரியந்தம் மழைவிடாமற் பொழிய தபதிநதியில் அமிதமான வெள்ளம் வந்தது. கிராமவாசிக ளனைவரும் பயந்து ஓரிடத்திற் கூடி நீரைநிறுத்த ஒருபாயமுந் தோன்றுமலென்ன செய்வதென்று விசாரமடைந்திருக்க அவர்களி லொருவன் ஜஸ

வந்தருக்கு பகவான் பிரசன்னராயிருப்பதால் நாமனைவரு மவரிடஞ் செல்லுவோமென்று பேசிக்கொண்டு எல்லோரு மவரிடம் வந்து ஐயா! ஹரிபக்தரே! தனது பக்தர்களை சங்கடகாலத்திற் ஸ்ரீராமமூர்த்தி காப்பாற்றுவாரென்று நீர்நிதமும் சொல்லுகிறீரே? இப்பொழுது எங்களுக்கு வெகு தொந்தரையானகாலம் நேர்ந்திருக்கிறது ஆற்றில் வெள்ளம் பூர்த்தியாகி கரைகாணு திருக்கிறது. கிராமத்திற்குள் ஜலம் வரும்போலத்தோன்றுகிறது. பகவானுடைய மகிமையை இவ்வேளையிற் காட்டிக் காப்பாற்றியருளும் கிராமத்தில் ஹாஹாகார மதிகமாக உண்டாயிருக்கிறது. ஸ்ரீராமசந்திரரை நீர் பிரார்த்தித்து அனைவரையும் ரக்ஷியுமென்று ஊரரெல்லாம் விண்ணப்பஞ் செய்தார்கள். இதைக்கேட்டுப் பக்தன் ஆர்த்தியுடன் திருவாராதனைக் கிரகத்திற்குச் சென்று கதவை மூடிக்கொண்டு இராமமூர்த்தி முன்னின்று ஸ்ரீரகு நந்தனு! சீதாரமணு! ஆச்ரிதஜன போஷகா! காருண்ணியாலயா! கமலக்கண்ணு! இரணபீமா! இவ்வேளையி லிரக்ஷியும் தீனஜனங்களைக் காப்பாற்றும்பொருட்டு தினகர வம்சத்திற் பிறந்தீர், தேவர்களை இரக்ஷிக்கும்பொருட்டு இராவணன் முதலான இராக்கதரை சம்ஹரித்தீர், தபதிநதி பெருக்கெடுத் திருக்கிறது கிராமத்தி லிருப்பவர்க ளனைவரும் வருத்தமுறுகிறார்கள் எனது மரணத்திற்கு நான் பயப்படேன் ஜனங்கள்படு மவஸ்தையை என்னால் பார்க்கமுடியவில்லை, உமது திருநாமத்தால் பாஷாணமும் சம்பத்துடையதாகி தரித்தது, பக்தரனேகர் தரித்தார்களென்று கண்களில் ஜலம் பெருக பக்தர் பிரார்த்தனை செய்து ஸ்ரீராமரைத் தியானித்து நிற்க, ஆகாயவாணியாக ஸ்ரீராமர் சொல்லலுற்றார். ஆற்றில் வரும் வெள்ளத்தை ஆஞ்சனேயர் அருந்திவிடுவர். ஓர் மாருதி மூர்த்தியை வெள்ளத்திற் கெதிராகக் கரையோரத்தில் வைக்கக் கடவை யென் றருளிச் செய்தார். இதைக் கேட்டு பக்தர் அரை கஜத்திற்குச் சரியான ஓர் ஆஞ்சனேய விக்கிரகத்தைக் கொண்டுவந்து நதிக்கு முன்பாக நீர் அதிகமாயிருக்கு மிடத்தில் ஸ்தாபித்தார். பிரஜைக ளனேக ரிந்த விந்தையைப் பார்க்கவந்தார்கள். அப்பொழுது மாருதி அட்டஹாசத்துடன் மஹத்தான ரூபத்தைக் கொண்டு வீராவேசத்துட னேசையிட்டு பெரியவாயைத்திறந்து பிரவாஹமத்தனையும் வாயினாற் பருகினார். ஜலம் கிரா

மத்திற் கெட்டவில்லை. பிரஜைகளுடைய துக்கமும் போயிற்று. அவர்க ளனைவரு மானந்தமடைந்து பக்தருடைய பாதங்களில் விழுந்து உண்மையாகவே இராமபிரா னுமக்கு சாத்தியமாக யிருக்கின்றார். அனைவரிடத்தும் கிருபை செய்தாரென்று பக்தரைக் கொண்டாடினார்கள்.

நான்குதினங்க ளானபின் ஆற்றில் வெள்ளங் குறைந்தது. சிலகுடிலஜனங்கள் நடந்தசெய்கையைக்கண்டு சஹிக்காமல்செம்பினாற்செய்யப்பட்டஅம்மூர்த்தி, ஜலத்தைப் பானஞ்செய்யுமா? இதுவுண்மையல்ல, ஆற்றில் வெள்ளம் பெருகிவருவதும்சஹஜம், அதுகுறுகிவிடுவதும் சஹஜம், கற்களாலும்செம்பினாலுஞ்செய்யப்பட்ட மூர்த்திகள் வீட்டுவீட்டி லிருக்கின்றன. அவைகளெங்குஞ் ஜலத்தைப்பானம்பண்ணதாகக் காணவில்லையென்று ஏளிதமாகப்புகல, ஸ்ரீராமசந்திர ரப்பொழுது ஆஞ்சனேயமூர்த்தி நாபியினிட மோர் ரந்திர மிருப்பதாகத் தோன்றச்செய்து அதன் வழியாகப் பெரிய ஜலதாரை யுண்டாகச் செய்தார். நான்கு தினங்கள் பரியந்த மந்த ஜலதாரை விடாதிருந்தது. துஷ்ட ஜனங்க ளிதனைக்கண்டு தீனர்களாகிவந்து ஜஸவந்தரை நமஸ்கரித்து அவர்களு மிராமபக்தராகி கிருதார்த்தரானார்கள். ஜஸவந்தர் ஸ்ரீரகுராமருடைய சுவரூபத்தில் தமது மனதை லீனப்படுத்தி உலகத்தில் விசேஷ கீர்த்தியை வகித்திருந்தார். ஆஞ்சனேயருடைய விக்கிரக மிப்பொழுது மவ்விடத்திற் பிரசித்தமாக விருப்பதை யாவருங் காணலாம்.

---

## நிரஞ்சன் சரித்திரம்.

நாரதபிந்து சமீபத்தில் நாமல்யென்னு மோரூருண்டு. அவ்விடத்தில் நிரஞ்சன னெனும் பிராம்மணர் தீர குணங்களையுடைத்தாய் விரக்தசித்தராகி உதாச விருத்தியை வஹித்து ஸ்ரீகணபதி பூஜையை விதியுக்தமாகச் செய்துக்கொண்டு ஏகநிஷ்டராகி இதரதேவதா நோக்கமின்றி ஆராதனையை நிதமும் நடத்தி வருவதால் கணபதி சாக்ஷாத்காரமாகி நிற்பர். ஒருநாள் வித்வாம்சரான ஓர் பிராம்மணர் நிரஞ்சன் வீட்டிற்குவந்து அவர் கணபதி பூஜையைச் செய்துக்கொண் டிருக்கக்கண்டு சாஸ்திரத்திற்கு விரோதமான நடத்தையை இவ்விடங் கண்டேன். சாலக்கிராம சிலையை இவ்விடம் நான் காண்பதற்கில்லை, ஸ்ரீஹரியைத்

தவிர இதரதேவதைகளைப் பூஜித்தால் தீர்த்தபரிக்கிரஹஞ் செல்லாதென்று சொல்லி அந்த அதிதியானவர் ஓர் சாலக்கிராமத்தை நிரஞ்சன் கையிற் கொடுத்து இதனை நீர்பூஜித்து தீர்த்தத்தைக் கொள்வது சாஸ்திரவிதியாகுமென் றுரைக்க, அவரந்த சாலக்கிராமத்தைக் கையில் வைத்துக்கொண்டு சங்கோச முடையவராகி சிலத்துடன் ஏகநிஷ்டையாகக் கணபதியைத் தொழுது காலஞ் செலுத்தினேனே! அது இப்பொழுது பிசகும்போற் காண்கிறதே! இதை யெப்படிச் சஹிப்பேனென்று தீனராகக் கிலேசத்துடன், ஓ கஜவதனரே! உம்முடைய நாமத்தை நானெப்பொழுதுஞ் சொல்லிக்கொண் டிருப்பேனல்லவா! எனது பிராணம்போனாலும் உம்மேல் பக்தியை நான் விடமாட்டேன். உம்முடைய தியானம் சம்பூர்ணமாக விந்தச்சிலையில் எனக்கு நிற்காது, இருஷிகளும் தேவர்களு மென்மேல் கோபித்தாலும், ஆகாயமென் றலைமேல் விழுந்தாலும் ஓ விநாயகரே! உமது பக்தியை நான் விடேனென்று சொல்ல ஸ்ரீஹரி நிரஞ்சனனுடைய பக்திக்குமெச்சி அந்த சாலக்கிராம சிலைக்கு யானைத்துதிக்கை யுண்டாக்கி யருளினார். அவ்விடத்திலிருந்த இதரபண்டிதர்க ளிந்த விந்தையைக்கண்டு சந்தோஷத்துடன் ஜய ஜய சப்தங்களைச் செய்து நமஸ்கரித்து உம்முடைய பக்திக்கு ஸ்ரீஹரி திருப்தி யடைந்து குறியைக் காண்பித்தார். யாரார்கினைப் பெப்படி யிருக்குமோ அப்படியே ஈஸ்வரன் கிருபை செய்கிறாரென்று இயம்ப நிரஞ்சனரந்த சிலைக்குக் கலக்கமின்றிப் பூஜைசெய்து திருப்தரானார். வந்தப்பிராம்மணருந் தீர்த்தப் பிரசாதங்களைக் கொண்டார். உபாசனையிற் கிரமமான உபபத்தி ஓர் புருஷன் வைப்பானாகி லவன் சுகுணசம்பத்தை யடைந்து ஈஸ்வரனைப் பிரசன்ன னாக்கிக்கொள்ளுவான். நிரஞ்சனர் மேலான கீர்த்தியுடன் நிலைபெற்றிருந்தார்.

---

## ஜயராமஸ்வாமி சரித்திரம்.

வடகாமென்னு மூரில் கிருஷ்ணதாசரெனும் பிராம்மணர் சுகுணசீலராகி பெருமாளை யர்ச்சித்துக்கொண்டிருந்தார். கிரகஸ்தத் தருமத்தை யவலம்பித்து நியதகருமங்களை நிறைவேற்றிக்கொண்டுவருங் காலத்தில் தன் மனையாள் மரணமடைந்தாள். சிலநாட் சென்றபின் அவர் இரண்டாவது விவாஹ கோரிக்கையுட னிருந்

தார், அத்தருணத்திலவ்வூரரசனுடையசேனைக்குக்கொடுக்கல்வாங்கல் வியாபாரத்தை மேற்கொண்டிருந்தனர். சிலநாளிலச்சேனை வேறொரு தேசத்திற்குப்போகத் தொடங்கிற்று. இவரு மவ்விவஹார நிமித்தியம் சேனைகளுடன் போக நேரிட்டது. அச்சேனைத் தலைவர் அன்னியராஜ்ஜியத்திற் பிரவேசித்து போர்செய்துச் சத்துருக்களை வென்று பட்டணவாசிகளைப் பறக்கடித்துக் கொள்ளையடித்தார்கள். அவ்விடத்தி லோர் பிராம்மணன் அச்செய்கையைக் கண்டு கலக்கமுற்றிருக்க அவனைக் கிருஷ்ணதாசர் கண்டு ஆதரித்து அவன்வீட்டிற் றுனிறங்கி சிலநாளிருக்க சுந்தரமான ஓர் கன்னிகையை அவன்வீட்டிலிருக்கக் கண்டார். அவளைத் தனக்கு விவாஹத்திற்கொடுக்கச்சொல்லிக்கேட்க அவ்வீட்டாருஞ்சம்மதித்து அப்பெண்ணை மணஞ்செய்துக் கொடுத்தார்கள். சிலநாட்களுக்குப்பின் தம்பதிகளிருவரும் ஸ்வக்கிராமத்திற் சேர்ந்தார்கள். பெண்ணுக்கு வயதுவந்தபின் ருதுசாந்தி முகூர்த்தத்தை நடத்திகிரகஸ்த தருமத்தை அவலம்பித்துக் கிருஷ்ணதாசர் வாழ்ந்திருந்தார்.

சிலகாலங்கழிந்தபின் ஒருநாள் கிருஷ்ணதாசருடையமனையாள் ஜலங்கொண்டு வருவதற்கு கிணற்றிற்குச் சென்றாள். அவ்விடந்தனக்கு பந்துவான ஓர் ஸ்திரீயைப்பார்த்து இருவருங்கூடி பேசத்தொடங்கினார்கள். அந்த ஸ்திரீ அம்பட்டத்தியா யிருந்தாள். அவள் கிருஷ்ணதாசர் மனையாளைப்பார்த்து பட்டணத்தைக்கொள்ளை கொள்ளும் காளில் உன்னைக் கைவிட்டு உன்சங்கதியறியாமல் பெருத்த விசனத்துட னிருந்தேன். நீயிவ்விடத்திற் கெப்படி வந்தாய் சொல்லென்று கேட்க அம்மாது அவளைநோக்கி வேறு சேனையி லகப்பட்டு மெய்மறந்து ஒன்று மறியாமல் ஓர் பிராம்மணன் வீட்டி லொளித்திருந்தேன். அவ்விடத்திற் கோர் பிராம்மணன் வந்து என்னைப்பார்த்து விவாஹம் பண்ணிக்கொள்ள இச்சித்தான். அவ்வீட்டுப் பிராம்மணர்க ளென்னைப் பிராம்மண கன்னிகையென் றெண்ணி என்னை விவாஹத்தி லவருக்குக் கொடுத்தார்கள். என்விதி யிப்படி யாயிற்றென்று சொன்னாள். அவ்வீதியில் நான்கு ஸ்திரீக ளிவ்வார்த்தைகளைக் கேட்டு கனிகரமின்றி கிராமத்தில் வெளியிட்டார்கள். இந்தச் சங்கதியைச் சிலர் கிருஷ்ணதாசருக்குச் சொல்லி அம்பட்டத்தியை கலியாணம் பண்ணிக்

கொண்டாய். இது மஹாபாப மல்லவா! சகலரும் நரகத்தை யடையும்படி வர்ணசங்கர முண்டாயிற்று. துராசாரத்தை வஹித்து அன்னியதேசத்திற் சென்றபோது அவளைத் திருடிக்கொண்டுவந்து மனையாளாகச்செய்து பிராம்மண ஜாதியை நீருக்கினையே? என்று பிராம்மணர்க ளனைவருங்கூடி கிருஷ்ணதாசன் பிரஷ்டனென்றும் தேஹாந்தப் பிராயச்சித்தமே இவனுக்கு சிக்ஷையென்றுந் தீர்மானித்து அவரிடம் யாரும் போகாதிருந்தார்கள். கிருஷ்ணதாச ரிச்சங்கதியைக் கேட்டு அபவாத மிவ்வண்ணமாக வந்ததேயென்று அனுதாபத்தை யடைந்து கண்களில் நீரொழுகக் கிருஷ்ணபகவானை மனதில் நினைத்து எண்பத்துநான்கு லக்ஷம் யோனிகளிற் றிரிந்து திரிந்து இப்பொழுது மானிட உருவத்தைப் பெற்றேன் இதனில் ஆத்மஹத்தியைச் செய்துக்கொள்வேனாகில் ஸ்ரீஹரி யெனக் கெப்படி பிராப்தியாவார் நரகத்தை யடையவேண்டி வருமென்று எண்ணி பிராம்மணர்களை நமஸ்கரித்து உங்களுடைய பாதங்களிற் சேவாரதி யுடையவன் இப்பொழுது மீறி பிரஷ்டனாய் விட்டேன். இனி பெருமாள் பதிதபாவன ராதலால், என்பங்கி லவரிருப்பாரென்று சகலத்தையும் விட்டு ஹரிபக்தியை அதிகப்படுத்திக்கொண்டு ஹரிநாமத்தை எவ்வேளையினு முச்சரித்துக்கொண்டு பகவத்கதையை பிரஜைகளுக்குச் சொல்லி வருவார். ஞானேச்வரியெனு மோர் கிரந்தத்தை கிரமமாக வாசித்து சாந்தி தாந்திகளையும் தயா தர்மங்களையு முடையவரானார்.

பரோபகாரத்தை வெகுவிதமாகப் பாடுபட்டுச் செய்துவருவார். நிராசையுடனிருந்து ஸ்ரீஹரி கீர்த்தனையை நேமத்துடன் செய்வார். அனேகபக்த ரதிகப் பிரேமையுட னவர்சொல்லுங் கதையைக் கேட்டு வந்தனுதிகளையுஞ் செய்வார்கள். பிராம்மணர்கள் மாத்திரம் துர்வார்த்தைகளைப் புகன்றுக்கொண்டு அம்பட்ட கிருஷ்ணனென்று பேரிட்டு வருவார்கள். குசேஷ்டையாக ஒரு பிராம்மணன் தனக்கு க்ஷவரகருமத்தை செய்யச்சொல்லி வந்தான். அப்படியே யாகக்கடவதென்று கத்தியைக்கொண்டு தலையைச் சிரைத்தார். கிருஷ்ணதாசர் தனக்குள், பூர்வஜன்மத்தில் விஷ்ணுபக்தி விசேஷமாகச்செய்தபடியால் அபிமான மிந்த ஜன்மத்தில் பேராயிற்று என்றெண்ணமுடையவராயிருந்தார். ஸ்நானமும் சந்தியாவந்தனமும் ஆசார ஒழுங்கும் சற்றேனும் பிச

இன்றி அனுஷ்டித்து ஸ்ரீ ஹரிஸ்மரணையும் கீர்த்தனையும் மறவாமல் செய்துவருவார்.

இது இப்படியிருக்க பண்டரிபுரியில் ஓர் பிராம்மண தம்பதிகள் பாண்டுரங்கரைச் சேவித்து பெருமாள்மேல் நிறைந்தப் பிரேமையை நிதஞ்செய்து வருவார்கள். ஸ்ரீஹரிமேற் பிரீதியால் ஸ்வக்கிராமத்திற்குப்போக இச்சையில்லாமல் பண்டரி புரத்திலேயே அவர்களிருந்து காயத்தை விட்டார்கள். அவர்களுக்குப் பிள்ளை ஜயராமென்பவர் சரமகிரியைகளைச் செய்து பிரியத்துடன் பண்டரி நாதரைத் தொடர்ந்திருந்து மூன்றுகாலங்களிலு மவரைத் தரிசித்து ஹரிகீர்த்தனையைக் கேட்டு வருவார். பாண்டுரங்கரே தாயுந் தகப்பனும் பந்துவர்க்கமுமென் றெண்ணி உலகத்தில் மற்றொருவ ரில்லையென்று நிச்சயித் திருந்தார். ஓரிடத்திற் புராணம் நடந்துக்கொண்டிருக்க அதனை தான் தினமுங் கேட்டு வருவார். அப்புராணச்சிரவணத்தால் தெய்வத்தைக் காட்டிலுங் குரு சிரேஷ்டமென்று தெரியவந்தது. தனக்குச் சதாசாரியரைக் கூட்டிவைக்க வேண்டுமென்று ஸ்ரீஹரியை உத்தேசித்து ஓ பாண்டுரங்கா! ஸ்ரீஹரி! பிரதான புருஷா! ஆசாரியரைக் காண்பியுமென்று அனேகநா ளனுஷ்டானத்தை அன்புடன் செய்துவர பெருமாள் சொப்பனத்தில் பிராம்மணரைப்போல் வந்து வடகாமில் கிருஷ்ணதாசரென்பவர் வாசமாயிருக்கிறார். அவரை நீ சரணமடையக் கடவாய். அவரென்னைக் கண்டிருப்பவரென்று சொல்லி மறைந்தார். இந்த சொப்பனத்தைக் கண்டவுடன் ஜயராமர் தனக்கு பகவத்கிருபை உண்டாயிற்றென்று நினைத்துப் பொழுது விடிந்தவுடன் பீமாநதியில் ஸ்நானம் பண்ணி பாண்டுரங்கரைச் சேவித்து அவருடைய கிருபையை நாடிப் பண்டரிபுரத்தைப் பிரதக்ஷணமாகவந்து பாதசாரிபாய் நடந்து அடிக்கடி கீழே விழுந்து தெண்டஞ் சமற்பித்து பிரேமபாவனையாற் கண்களில் நீர் பெருக பண்டரி புரத்தைவிட்டு ஆசாரியரிருக்கு மூருக்குப் பிரயாணமாகிச் சிலநாள் நடந்து அவரிருப்பிடஞ் சேர்ந்து அவரைக் கண்டுபிடித்து நமஸ்கரித்தார்.

கிருஷ்ணதாசர் ஜயராமருடைய வரலாறை விசாரிக்குமளவில் இவர் தன்னுடைய பிறப்பும் பாண்டுரங்கருடைய ஆக்கினையு மவருக் கறிவித்தார். இதைக்கேட்டு கிருஷ்ணதாசர் ஆச்சரியப்

பட்டு விட்டலமூர்த்தி எனக்கு உபாதியைக் கற்பித்தார். நானோ ஜாதிப்பிரஷ்டனாயிற்றே! பிராம்மணர்களெனக்குத் தேஹாந்தப் பிராயச்சித்தத்தை நியமித்திருக்கிறார்கள். மோஹ லக்ஷணத்தை யுடைய சரீரத்தில் மமத்வத்தை முழுமையாக வைத்தவனாவேன், வெளிக்குமாத்திரம் பக்தி லக்ஷணத்தைக் காண்பிப்பவனாவேன், ஆசைக்குட்பட்டு சஞ்சரித்துக்கொண்டிருப்பவன். இவ்வண்ணமானவனை நீ ஆசாரியனாகச் செய்துகொண்டால் குலத்தார் சம்மதியார். என்மீதிலேயே பிரபலமான பஹிஷ்காரமிருக்கின்றதே. நீயெப்படி சுகத்தை யடைவாயென்று சொல்ல ஜயராம ரழுதுக்கொண்டு ஸ்ரீகுரு சரணங்களைப் பிடித்து நான் திரிகரண சுத்தியாகப் பெருமாள் கருணையாலுமது திருவடியைப் பிடித்தேன். அடியேன்மேல் கிருபாதிருஷ்டி வைத்துப் பவித்திரனாகச்செய்யக்கடவீரென்று உலகத்தார் நிந்தைக்கு சற்றும் வெருவாமல் வேண்ட, கிருஷ்ணதாசர் அனேக சகுனங்கள் ஜயராமரிட மிருக்கக்கண்டு அவர்தலைமேற் றனது அபய ஹஸ்தத்தை வைத்து சுபகரமாக வுபதேசித்து ஸ்ரீஹரி பஜனையி லிருத்திப் பிரியத்தைக் காண்பித்திருக்க பிரிய பக்தரான சிஷ்யரும் நேமந் தப்பாமல் அனன்னியராகி சேவைகளைச் செய்துவந்தார்.

அந்த கிராமத்திலுள்ள பிராம்மணர்கள் ஜயராமர் கிருஷ்ணதாசரிடம்வந்த சங்கதியை பரஸ்பரமாகக்கேள்விப்பட்டு குருக்களனேகர் ஞானவான்களாகி உலகிலிருப்பார்கள், அவர்களைவிட்டுப் பிரஷ்டனை சரணமடைந்தானே! பிராம்மண பிள்ளையாயிருந்து அம்பட்டனுடைய சிஷ்யனாகலாமோ? அவனுடன் வார்த்தை யாடுவதே அயோக்கியமாகுமே? யென்று ஜயராமருக்கு பஹிஷ்காரத்தை வைத்தார்கள். ஊரிலுள்ளோ ரெவ்வளவு நிந்தித்தாலும் ஜயராமர் கேட்காமல் குருவே தெய்வமென்று பாவித்துச் சேவை செய்து வருவார். பிராதக்காலத்தி லெழுந்திருந்து தனது நித்திய சௌச கருமங்களை முடித்துக்கொண்டுப் பாத்திரங்களை சுப்பிரமாகத் துலக்கித் தான் ஸ்நானம் பண்ணி சந்தியாவந்தனாதி கருமங்களை முடித்து ஆசாரியருக்கு ஜலங்கொண்டுவந்து வைத்து அவருக்கு ஸ்நானஞ் செய்வித்துப் பெருமாள் திருவாராதனைக்குப் பூஜா திரவியங்களைக் கொடுத்து, யோகிஜனங்களுக்கு சிஷ்ய ரெவ்விதமாக சேவை செய்வரோ அந்தப் பிரகாரமாக பக்தி சிரத்தை

யுடன் பணிவிடைகளைப்புரிந்துவந்தார். குருபக்தியிற் பரிபூரண நிஷ்டை யுடையவராய் கவித்வதோரணை யுண்டாகவே விசேஷமாகக் கவிபாடத் தொடங்கினார். ஹரிகுணானுவாதம் நிதமும்செய்யும் பொழுது நிறைந்த பிரேமையால் சொக்கியிருப்பார். நிஷ்கபடஜனங்க ளனேகர் பிரீதியுடன் கேட்கவந்து வந்தனாதிகளையும் விசேஷமாகச் செய்வார்கள்.

ஒருகாலத்தில் சங்கராசாரிய ரவ்விடத்திற்கு வந்தார். சகல பிராம்மணர்களுங் கூடி விசேஷமாக அவரை மன்னித்து பிக்ஷை முதலானவை யளித்து அவரை வீற்றிருக்கச் செய்தார்கள். கிராமாதிகாரி அவரை நோக்கி, ஸ்வாமி! ஜயராம னெனும் ஓர் பிராம்மணப்பிள்ளை அம்பட்டனிட மனுக்கிரகத்தைப் பெற்று அல்லும் பகலு மாசாரியனுக்குச் சேவை செய்துவருவானென்றான். இதைக்கேட்டு சங்கராசாரியா ரவனைத் தன்னிடங்கொண்டுவரும்படி கட்டளையிட்டார். அவராக்கினைப்படி பரிசாரகர்கள் ஜயராமரைப் பிடித்துக்கொண்டுவந்து எதிரில் நிறுத்த, சங்கராசாரியார் அவரை நோக்கி அம்பட்டனிடத்தி லுபதேசத்தையெப்படிப் பெற்றாய்? பிரஷ்டனானவனை நீ குருவாக ஏன் செய்துக்கொண்டா? யென்று வினவ, ஜயராமன் அவரை நமஸ்கரித்து சத்பாவத்தை யுடையராய் சொல்லுவார், பிரியமுடைய வெனது குருவு கிருஷ்ண மூர்த்தியே யாவார், அன்புட னவரைச் சரணமடைந்தேன். தேவரீரவ்விடம் கிருபைசெய்து வருவீராகில் பிரத்தியக்ஷமாகப் பார்க்கலாம். எனதாசாரியர் க்ஷௌரகனாக யிருந்தால் நான் சிக்ஷையடையக் கடவே னென்றார். சங்கராசாரிய ரிதைக் கேட்டு ஆச்சரிய முடையராய் அனேக பிராம்மணர்களைக்கூட அழைத்துக்கொண்டு கிருஷ்ணதாச ரிருக்கும் வீட்டைச் சேர்ந்தார். அவ்வேளையில் கிருஷ்ண தாசர் பெருமாளுக் கர்ச்சனை செய்துக்கொண்டிருந்தார். சதுர்ப்புஜங்களும் சங்குசக்கரங்களும் திவ்வியாலங்காரங்களையுடைய கிருஷ்ண மூர்த்தியாக சங்கராசாரியாருக்குக் காணப்பட்டார். உடனே அவர் கிருஷ்ண தாசருக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து ஜயராமரை நோக்கி நீ தன்னியதை யடைந்தாயென்று பெருமையைக் கொண்டாடினார். பண்டரி நாதனாயே கிருஷ்ண தாசராகக் கண்டேன். பிராம்மணர்களிட்ட பஹிஷ்க்காரம் பரிஹாரமாய் விட்டதென்றும் திரிகரண சுத்தியாக அனைவரு மவ

ருக்குச் சேவைசெய்யக் கடவரென்றும் கட்டளையிட்டார். அது முதல் பிராம்மணர்களனைவரு மவ்விரண்டுபேரையும் விசேஷமாக மன்னித்துப் பூஜித்து வந்தார்கள்.

---

## யாமாஜிபடேல் சரித்திரம்.

மாணிக போதலரெனுங் குடியானவர் மிகுந்த கீர்த்தியுடன் தாமண கிராமத்தில் தான தர்மங்களை விசேஷமாகச் செய்துக்கொண்டு பாண்ரெங்கரிடத்தில் பக்தியைச் செலுத்திப் பகவத் பஜனையி லீடுபட்டிருந்தார், இவரது பிரேமபாவத்தைக்கண்டு ஸ்ரீஹரி தரிசனங் கொடுத்து வருவார், மமதாயி யென்பவ ளவருடைய மனையாள் பதிவிரதையாகி பண்டரிநாதரைப் பஜித்து வருவாள். அந்தத் தம்பதிகளுக்கு யாமாஜி யென்பவர் குமாரராகப் பிறந்து தகுந்தவயது வந்தவுடன் தகப்பனுருக்குத் துணையாக பஜனைசெய்து ஹரிகுண கீர்த்தனையை அல்லும் பகலும் பாடியாடி காலங்கழிப்பார். இப்படி சிலகாலங் கழிந்துவர போதலர் தன் குமாரனுக்கு விவாஹஞ்செய்து மூடித்தார். சந்தோஷத்துடன் அனைவரும் ஹரிபஜனையில் நிலைமை பொருந்தியிருந்தார்கள்.

வெகுகால மிவ்வண்ணமாக நடக்க பகீரொருவர் வந்து வீட்டின்முன் நிற்க போதலர் பார்த்து வுமக்கென்ன வேண்டுமோ கேட்டால் கொடுக்கிறே னென்று சொல்ல, பகீ ரவரைநோக்கி உனது மருமகளைக் கொடுக்கவேண்டுமென்று கேட்க போதலர் சங்கடப்பட்டு தன் புத்திரனை யழைத்து வீட்டிற்கு வந்த அதிதி ஆதரணை யடையாமற்போனால் நமக்குச் சத்வஹானி உண்டாம். உன்மனதிற் றோன்றுவதைச் சொல்லென்ன அவர் தகப்பனுக்கு நமஸ்கரித்து தாய்தந்தைகளான உங்களுக்குத் தாஸிதாசராகி விக்கிரயமாய்விட்டோம் தேவரீர் மனோபாவமே அடியேனுக்கு முண்டென்றார். பிள்ளைவார்த்தைகளைத் தகப்பன் கேட்டு சந்தோஷித்து மருமகளை யழைத்து இந்த பகீர்சாஹெபு பின்னால் நீ போக சம்மதிப்பாயோ வென்று கேட்டார். அப்பெண்ணின்பேர் பகிரதி யென்று சொல்லப்பட்டது ரூபவதியாகவும் நல்லகுண முடையவளுமாக யிருந்தாள். அவள் தனது மாமனார் சொல்லைக் கேட்டு

அவர் திருவடிகளை நமஸ்கரித்து தேவரீருக் கடியாள் தாசியாவேன். என்னைகேட்க வேண்டுவதென்? தேவரீ ரிஷ்டப்படி செய்யத் தகுமென்ருள். பகி ரப்பொழுது அவர்களுடைய நினைப்புகளைக் கண்டறிந்து பாகிரதியை ஸ்நானம் பண்ணச்சொல்லி நியமித்து அவளுக்கு பஞ்சாமிருதத்துடன் போஜனமிட்டு அனுப்பவேண்டும். நானவளை வெகுதூரங் கொண்டுபோவேன். நீங்களவள் மேல் மோஹ மமதைகளை யுடையவர்களாகில் நான் விசனத்துடனிவ்விடம் விட்டுப் போவேனென்று சொல்ல இவ்வாக்கியங்களைப் போதலர் கேட்டு பொறுமையுடன் பாகிரதிக்கு ஸ்நானம்பண்ணுவித்து புதுவஸ்திரத்தைக் கொடுத்து போஜன மளித்து மஞ்சள், குங்குமம் வெற்றிலைப்பாக்கு இவைகளைக் கொடுத்து பகிர்சாஹேபு கையிலொப்பிவித்து பக்தியுடன் பகிரை நமஸ்கரித்தார். பகிரதற்குச் சந்தோஷித்து ஆசீர்வசனங்களைச் செய்து அம்மாளைத் தன் தோளின்மே லிட்டுக்கொண்டு வெகுதூரஞ் சென்ருர். பிரஜைகளனைவரு மிதைக்கண்டு போதலருக்குப் பைத்தியம் பிடித்ததென்று சொல்லத் தொடங்கினர்கள்.

பகிர்சாஹேபு பாகிரதியை அவ்வூரெல்லைவரைக்குங் கொண்டுபோய் அவ்விடம் விட்டுப் பாண்டுரங்கருடைய ரூபத்தைத் தரித்துப் பிரஸன்னராகி அம்மாளை நோக்கி உன் கற்பத்தி லென்னுடைய கலையுடன்கூடின பிள்ளை பிறப்பானென் றுரைத்து அந்தர்த்தானமானர். பின்பு பாகிரதி அவ்விடத்தி லொருவருமின்றி அழத்தொடங்கி என்னை இட்டுக்கொண்டுவந்தவ ரந்தர்த்தானமாய் விட்டார். திரும்பியும் நான் வீட்டிற்கு போனுல் பர்த்தா யென்னை யடிப்பாரே! ஓ பண்டரி நாதா! ஸ்ரீஹரி! சர்வேஸ்வரா! அடியாளுக்குப் பிரபஞ்சமும் அந்தரித்து பாரமார்த்திகமும் அந்தரித்தது, இனிநடக்க வேண்டியதென் னென்று பிரலாபித்துக்கொண்டிருக்க அவ்வழியாகப் போய்க்கொண்டிருந்த பிரஜைகள் சிலர் அம்மாளைக்கண்டு போதலரிடம் வந்து ஐயா! உமது மருமகள் தனிமையாக அழுதுக்கொண் டிருக்கிறுளென் றறிவித்தார்கள். இதைக்கேட்டு போதலர் பாண்டுரங்கரே பகிர் ரூபத்துடன் வந்து பாகிரதியைச் சுமந்துக்கொண்டு போனுரென்றும் இது பெருத்த புண்ணிய மன்ருேவென் றெண்ணித் தன் குமாரரான யாமாஜியுடன் மருமகளிருக்கு மிடத்திற்குச் சென்று அதியானந்தத்துடன்

ஹரிகீர்த்தனையைப் பாடி விட்டலநாமத்தை உரக்கக் கூவிக் கொண்டிருக்க அனேக பிரஜைகளவ்விடம் வந்தார்கள். அவ் வேளையில் பாகிரதி தன் மாமனார் பாதங்களைப் பிடித்துக்கொண் டிருக்க போதல ரவளை எழுப்பி நம்மை பரிசோதிக்கப் பாண் டுரங்க ரிச்செய்கையைச் செய்தாரென்று சொல்லி ஹரிகுணகீர்த் தனையைச் செய்துக்கொண்டு அவளை வீட்டிற் கழைத்துவந்து பிரீதியுட னிருக்க அவளுக்கோர் பிள்ளை பிறந்தது. பந்துக்களனை வருங்கூடி அந்த பிள்ளைக்குப் பகவானென்று நாமகரணஞ் செய் தார்கள். இந்தப் பிள்ளை வளர்ந்து வித்தைகளை வாசித்து ஞானசம் பன்னராகி ஸ்ரீஹரிபக்தி மஹிமையை லோகத்தாருக்குப் பிரகட ஞ்செய்தார். ஹரிபக்தியை எவ்வண்ணமானவர் செய்பினும் முடி வில் ஹரிபதத்தை யடைவார்.

---

## மத்வநாதர் சரித்திரம்.

ஜனஸ்தானமென்றோ ரிடத்தில் மத்வநாத ரென்பவர் நிவ சித்திருந்தார். அவர் சத்வசீலராகி ஸ்ரீஹரி பஜனையில் சர்வகாலங் களிலும் பிரீதியை வஹித்து ஏகாக்கிரமாக பண்டரிநாதரை யாரா தித்தும் அர்ச்சாமூர்த்திகளுக் கனவரதமும் பூஜைசெய்து வருவார். ஸ்ரீஹரி கிருபையால் கவித்வ தோரணை யுண்டாகி ஏராளமாக ஹரிகீர்த்தனைை எல்லோருக் கிஷ்டமாகும்படி செய்வார். வரக வித்வ மாதலால் வெகுஜனங்கள் வந்து பரம சந்தோஷத்துடனும் பக்தியுடனும் கேட்பார்கள்.

இப்படி நெடுங்காலஞ் செல்ல தேசசஞ்சாரஞ் செய்யத்தொ டங்கி ஆசாபாசங்களை விட்டு ஹரிநாமத்தைச் சொல்லி அனே கரை ஹரிபக்தியி லமைத்தார். இங்ஙனம் சஞ்சரித்துக்கொண்டே சிலபேருடன் அவுரங்காபா தென்னும் பட்டணத்திற்குச் சென் றார். சில ரவ்விடத்தில் அவரை அதிகமாகச் சன்மானித்து கௌர வப்படுத்தி அனேகவிதங்களாக அவரைபிரார்த்திக்கக்குடும்பசஹி தராகி அவ்விடமேயிருந்தார். அவர் ஹரிகுணானுவாதத்தைச்சொல் லத்தொடங்கினல் அனேகருக்கது மதுரமாயிருந்ததால் வெகுவாக எல்லோரும் அவரைப் புகழ்ந்தார்கள். அன்னியதேசங்களிலு மவ ருடைய கீர்த்தி எட்டினது. பாஸ்கரராயனென்றொரு பிராம் மணன் பம்பாயி லிருந்துக்கொண்டு பகவத் பஜனையை பிராகிருத

மான தேசபாஷைகளிற் செய்வது தகுதியன்றென்று தேசாந்தரங்களிற் சஞ்சரிக்கும் ஹரிதாசர்களை வரவழைத்து அவர்களுடன் தர்க்கவாதங்களை விசேஷமாகச் செய்து ஜயசீலனாக விருந்தான். அவுரங்கபாதில் மத்வநாதருக்கு ஸ்ரீஹரிசொப்பனத்தில்வந்து பம்பாயிக்குச் சென்று பாஸ்கரனைவென்று திரும்பிவரக்கடவையென்று சொல்ல, மத்வநாதர் விழித்துக்கொண்டு ஹரியாக்ஞைப்படித் தன்சிஷர் பின்றொடர தாளவீணை மிருதங்க வாத்தியங்களுடன் பொம்பாயி பட்டணத்தைச் சேர்ந்தார். இவர் புகழ்பெற்றவராக விருந்தபடியாற் பிரஜைக ளனேகர் மன்னித்தார்கள், அவர் கீர்த்தனைசெய்ய யத்தனித்திருக்க பாஸ்கரராய னிதைக்கேட்டு கீர்த்தியடைந்த அவரை ஜயித்துவிடுவோமாயின் தேசபாஷைகளிற் கதாகீர்த்தனை செய்வது தீர்மானமாக நின்றுவிடுமென்று மனதிலெண்ணி மத்வநாதரிடஞ் சென்றான். அவ்விடத்திற் கதை கேட்கும்பொருட்டு பண்டிதர்களும் வந்திருந்தார்கள். அவர்களுக்குள் பாஸ்கரராயன் முக்கியாசனத்தி லுட்கார்ந்து ஜமதக்னியைப்போல கோபாக்கினியைத் தன்முகத்தில் வீசும்படி தோன்றச்செய் திருந்தான்.

மத்வநாதர் வாத்ய கோஷங்களை முழங்கச்செய்து மாதவனுடைய நாமத்தைக் கொண்டாடி தத்வவேதியான ஞானதேவரைத் துதித்து பாடத் தொடங்கினர். பண்டிதனான் பாஸ்கரராயனிதைக்கேட்டு குரோதத்துடன் சபையிற் மஹா பெரியவரென்று ஞானதேவரை நீர் மனதிலெண்ணினீர். அவர் சன்னியாசி புத்திரனன்றோ? அவரை நீ ஸ்ரீஹரி அம்சமென்று சொல்லுகிறீரே! எந்த சாஸ்திரத்தி லிந்த ரீதிவிளங்கி வருமென்று வினவ, மத்வநாத ரவரைநோக்கி ஐயா பண்டிதரே! லீலா விக்கிரஹரான் நாராயண மூர்த்திக்கு ஜாதிகுலங்களில்லை. பக்தஜனங்களுடைய ஹிதத்திற்காக மச்ச, கச்சப, வராஹ, நரசிம்ம, மனிதரூபங்களைக் கொண்டார். இப்படி அவர் கொண்டதினால் சர்வேஸ்வரரான, எம்பெருமான் பிரதாபத்திற்குக் குறைவுண்டோ! சன்னியாசி பிள்ளையான ஞானதேவரும் எருமைக் கிடாவினால் ருக்வேதத்தை பைடன்புரத்தில் பிராம்மணாள்முன் படிக்கச்செய்தார். ஈஸ்வரனும் பக்தனும் ஜாதியில்லா திருப்பவர்கள். உலகத்திற்கு நன்மைசெய்யும் பொருட்டு ஸ்வயிய லீலையினால் அவர்களை அவதாரங்

களுக்குச் சரியென்றுச் சொல்லுவார்கள். வேதவியாச பகவான் சம்ஸ்கிருத வாணியில் கலிகாலத்தில் பகவந்நாமம் முக்கிய சாதனமென்று சொன்னார். அந்த அர்த்தத்தையே துகாராமர் தேசியமான பிராகிருதபாஷையில் வெளியிட்டார். நாமப் பிரபாவம் நிருமலமானது, அதனை ஜனங்கள் சாதித்தால் ஹிதத்தையே அடைவார்கள். இதை உச்சரிக்க இன்ன காலமென்றும், இன்ன தேசமென்றும் நியதமில்லையென்றுசொல்லி ஹரிநாமத்தை ஆனந்தத்துடன் சொல்லத் தொடங்க பிரஜைக ளனைவரும் மதனையே சொல்லலுற்றார்கள். அவ்வேளையில் நாராயணனுடைய கிருபையால் நாதபிரம்மம் நிறைந்துவிட்டது. இதைக்கண்டு பாஸ்கர பண்டிதன் வெட்கத்தைவிட்டு அனைவர் முன்பு ஹரிதாசரான மத்வநாத்ரை நமஸ்கரித்தான். அவரு மவனை வாரியணைத்து உட்காரச்செய்து சம்ஸ்கிருதத்தில் புராணங்களைச் சொல்லுவோமாயின் பூர்வாபரங்களறியாதமனிதருக்குபோதையாகுவது அருமையாதலால் அவ் வபிப்பிராயங்களை பிராக்கிருதத்தி லனைவரு மறியும்பொருட்டு நாம் சொல்லுவது நன்மை, சிரவணஞ்செய்பவருக்கு மவ்வர்த்தங்கள் தெளிவாகவிருக்குமென்று சொன்னார். ஹரிதாசர்க ளனைவரு மிதைக்கேட்டு ஹரிநாமத்தை கர்ஜ்ஜித்துமத்வநாதரை தன்னியரென்று விசேஷமாகத் தோத்திரங்கள் செய்து பெருமாளுக்கு மங்கள ஹாரதியைக் கொடுத்து விலையுயர்ந்த வஸ்திரங்களை மத்வநாதருக்குக் கொடுக்க யத்தனிக்க அவருக்கது இஷ்டமாகாமல் பாஸ்கர பண்டிதருக் கவைகளைக் கொடுக்கச்செய்து மஹத்தான சந்தோஷத்துடன் பண்டரிநாதரைப் பாடிக்கொண்டுத் திரும்பி அவுரங்க பாதைவந்து சேர்ந்தார்.

அவ்விடத்தில் லக்ஷுமண னெனும் கிரகஸ்தன் மத்வநாதருக்கு சிஷனாயிருந்தான். கீர்த்தனைசெய்யுஞ் சமயத்தில் ஸ்வரயுக்தமாக இராகதாளங்களி லவருக்குச் சஹாயப்படுத்திக் கொண்டுவருவான். இதனால் கீர்த்தனை மஹா மதுரமாக விளங்கியிருக்கும். வீசாஜீயெனும் வர்த்தகனிடம் கணக்கெழுதும் சேவகத்திலிருந்து இரவு காலங்கள் தவிர மற்றகாலங்களில் வர்த்தகனிடமிருப்பான். ஒருகாலத்தில் அக்கணக்கு புத்தகங்களை வீசாஜி பரிசோதனை செய்ய ஆயிரத் தறுநூறு திரவியங் குறைவாயி

ருந்தபடியால் லக்ஷ்மணனை ஹாஜீமஹம்மது என்னும் அதிகாரி மூலமாக காவலில் வைத்தான். அன்றைய தினத்தில் ஆசாரியர் வீட்டில் மஹோற்சவமாக யிருந்தபடியால் அனேக ஜனங்க ளவ ரிடங் கதைகேட்க ஆவலுடன் வந்திருந்தார்கள். சிஷனில்லாம லாசாரியர் கீர்த்தனை செய்யக் கூடாமையா யிருந்தது. அதனால் மத்வநாதர் வீசாஜீயிடம் வந்து மூன்று நாட்களில் திரவியத் தைக் கொடுக்கிறேன், சிஷனை விட்டுவிடுமென்றார், அதனைக் கேட்டு வீசாஜி அப்பொழுதே திரவியத்தைக் கொடுக்கச்சொல் லிக் கேட்டான். அவ்வேளையி லாசாரிய ரிடத்தில் திரவியங் கொ ஞ்சங்கூட இல்லாதிருந்தபடியால் ஒன்றுந் தோன்றாமல் கலக்க முற்று தன் கிரகத்தைச்சேர்ந்து பெருமாள்மேல் பாரத்தைப் போட்டு பெருத்த ஆவலுடன் ஹரி ! நாராயணா ! அடியேனைக் கருணைபாரும். எனது சிஷன்மீதிற் கிருபை வையுமென்று அமித மான ஆர்த்தியுட னிவரிருக்க சிறைச்சாலையில் லக்ஷ்மணன் பொ றுமையுடன் ஹரிபஜனையை செய்துக்கொண்டு ஓ கிருபாசாகரா! பண்டரிநாதா ! கிருஷ்ணா ! கிருபாளோ ! இந்த சங்கடத்திலிருந்து விடுவித்து இரக்ஷணை செய்தருளும். ஆசாரிய கைங்கரியத்திற்கு அவரிடம் போகவேண்டும், அதற் கிசையும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, வாசுதேவரோர் பகீர்வேஷம் போ ட்டுக்கொண்டு நித்திரையிலிருந்த ஹாஜீ மஹம்மதை அடிக்கலுற் றார். இதென்ன விபரீதமென் றவனெழுந்திருந்து நிற்கப் பெரு மாள் காஜீரூபத்தை வஹித்து அவனை நோக்கி காவலி லிருக்கும் லக்ஷ்மணனை இப்பொழுதே விட்டுவிட வேண்டும். என் பேச் சைக் கேட்காவிடி லுன்னை சிக்ஷிப்பேன். அதனாலுனக் கனர்த்தம் நேரிடுமென்று சொல்லி மறைய கொத்வா லப்பொழுது தீவட்டி யைக் கையிற் கொண்டு வெளியில் வந்தான். இதற்குள் ஸ்ரீஹரி வீசாஜியிடஞ் சென்று அடிக்கலுற்றார். அவனுந் தூக்கத்தி னின் றும் எழுந்து வெளியேவர ஹாஜீயைக் கண்டான். இருவருங் கூடினபின் தாங்களடியுண்ட சங்கதி ஒருவருக் கொருவர் சொல் லிக்கொண்டு சிறைச்சாலைக்கு வந்து லக்ஷ்மணனை விடுவித்தார் கள். லக்ஷ்மணனுடனே ஆசாரியர் வீட்டை யடைந்து குருவுக்கு தெண்டஞ் சமர்ப்பிக்க அவர் பிரேமையுடன் சிஷனை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு பிரீதி யடைந்தனர். அவ்விடம் வந்தவர்க

னைவரு மானந்த மடைந்தார்கள். மத்வநாதர் மாதவருடைய கதையை கீர்த்தனஞ் செய்ய வாரம்பித்தார். பிரஜைக ளனை வரும் மமதைகளை விட்டு மஹத்தான சந்தோஷத்துடன் கேட்க லாற்றார்கள். க்ஷேத்திர வாசிகளும் வித்வான்களும் அவர் மஹி மையைக்கண்டு புகழ்ந்தார்கள். கீர்த்தி தேசமெங்கும் பிரகட மாயிற்று. அன்றுதொடங்கி ஹாஜிமஹம்மது பகீராய் விட்டான்.

ஒரு பிராம்மண கிரகஸ்தன் மத்வநாதரிடம் வந்து சுந்தர வாடா யெனுந் தன்னுடைய கிராமத்திற்கு வரச்சொல்லி யழைக்க, மத்வநாதர் சம்மதித்துக் குடும்பத்துட னவ்விடஞ் சென்றார். கிரா மத்திற்கு முன் ஓர் கணபதி கோவில் கட்டப்பட்டிருந்தது. மஹோ ச்சவங்களும் நடந்து வந்தன. அவ்விடத்திற் ஜலசௌக்கிய மில்லா திருந்தபடியால் மத்வநாத ரவ்விடத்தில் நின்று கங்கையை பிரார்த்தித்தார். அந்தப்பிரதியருளால் ஜலதாரை யுண்டாயிற்று, உடனே ஆங்கோர் புஷ்கரணியைக் கட்டிவைத் துபகரித்தார். பிர ஜைக ளனைவரு மதனை பாகிரதி தீர்த்தமென்று ஸ்நானம்பண் ணுவார்கள். அத்தீர்த்த மகிமைவால் பிரஜைகள் இராகத் துவே ஷங்களையற்று சாதுமார்க்கத்திற் சஞ்சரித்தார்கள்.

இப்படி காலங்கழிய மத்வநாதருக்கு வார்த்திகவயது நேர்ந் தது. பிரதி வருஷந் தப்பாமற் பண்டரி யாத்திரையைச் செய்து வருவர். கிழத்தனத்தால் அசக்தராகி கிலேசமுற்று பண்டரிநாதர் தன்னுடைய ரூபத்தை தன்னிருப்பிடத்திற் காண்பித்தால் பேரா னந்தத்தை யடைவேனென்று பெருமூச்சு விட்டிருக்க ஸ்ரீஹரி சொப்பனத்தில் வந்து கிராம ஜோசிவீட்டில் நானொளித்திருக்கி றேன். அவ்விடத்தில் தோண்டிப்பார்க்கக் கடவாயென்றார். பொ ழுது விடிந்தவுடன் ஜோசிவீட்டிற்கு மத்வநாதர் சென்று சொப் பன சங்கதியைத் தெரிவிக்க உத்தவனென்னு மந்த ஜோசி பூமியை தோண்டுவதற் குடன்பட மத்வநாதர் சுத்தமனதினால் தன் கைக ளால் மண்ணைத் தோண்ட வாரம்பித்தார். பெருமாள் தரிசனத் தை விரும்பி அனேக ரவருக்குச் சஹாயஞ் செய்யலுற்றார். அனை வருங்கூடி தோண்டுமளவில் பாண்டுரங்க மூர்த்தியையும், ருக்மா பாயி மூர்த்தியையுங் கண்டு ஜய ஜய சப்தங்களை சொல்லிக்கொண்டு ஜனங்க ளாரவாரத்துடன் கூச்சலிட்டார்கள். உத்தவ ஜோசி யிதைக்கண் டானந்தித்து ஓர் ஆலயத்தை உன்னதமாகக் கட்டி

அம்மூர்த்திக ளிரண்டையு மவ்விடத்தில் ஸ்தாபித்து பிரபலமான வுற்சவங்களும் ப்ராம்மண போஜனமும் நடப்பித்தான். ஸ்ரீ ஹரி கீர்த்தனையை இரவுகாலத்தில் மத்வநாதர் செய்து வருவார். பக்தருக்காகப் பண்டரிநாத ரவ்விடம் வந்தாரென்று பிரஜைக ளனைவரும் பகவானை பக்தியுடன் பூஜிப்பார்கள். மத்வநாதரு மதனால் மஹத்தான கீர்த்தியை யடைந்திருந்தார்.

---

## சாங்காகேசவர் சரித்திரம்.

தேவேந்திரன் சொர்க்கத்திற் றேவகணங்களுடன் கூடியிருக்க ஓர்காலத்தில் மருத்கணங்களி லொருவ ரிந்திரனுக்கினையை மறுத்தபடியால் மனிதனாகக் கடவையென்று இந்திரன் சாபங் கொடுத்தான். அதனாற் கிலேசமுற்று தன் தூர்த்த விருத்தியை விட்டு அனுக்கிரகத்தை வேண்ட இந்திர னவரை நோக்கி ஸ்ரீஹரி கிருபையால் புனிதனாகி பூலோகத்தில் பூர்ணஞானியாகி பெருத்த கீர்த்தியை நிறுத்தித் திரும்பி வரக்கடவாயென் றனுக்கிரகஞ் செய்தான். இவ்வார்த்தையைக் கேட்டு பூலோகத்தில் வந்து சந்திரபாகைநதியில் ஸ்நானம் பண்ணி தவம்புரிந்து சுந்தரமான சரீரத்தை யுடையவராகியும் மௌனியாகியும் குருடரைப்போலு மிருந்தார். அனேக ஜனங்க ளவரை பார்க்க வருவார்கள். அழகு பொருந்திய சரீரத்துட னிருந்தபடியால் சாங்கதேவ ரென்று ஜனங்க ளவரைக் கூப்பிடத் தொடங்கினர்கள்.

வருணமெனும் வூரிலிருந்து இரண்டு பிராம்மணர்கள் வந்து அதிக பக்தியுடன் சாங்கதேவருக்குப் பணிவிடைகளைச் செய்து வருவார்கள். ஒருமாச பரியந்தம் சுச்ருஷையை நடத்தி அவரை நோக்கி அடிமைகளான வெங்களுக் குபதேசத்தை தயையுடன் செய்யவேண்டு மென்று கேட்க சாங்கதேவ ரவர்களைப் பார்த்து உபதேசமாவ தெவ்வண்ணமானதோ தெரியா தென்றும் உலகில் நானொண்டியா யிருக்கலானே னென்றும் தாய்தந்தைகள் யாருமில்லையென்றும் மந்திர தந்திரங்க ளறியே னென்றும் மனைவி புதல்வரும் க்ஷேத்திர வித்தங்களுந் தனக்கில்லை யென்றும் உபதேசத்திற்காக சத்புருஷர்களை அனுசரிக்கக் கடவீரென்றுஞ் சொல்லியருளினர். சிஷர்க ளவரை நோக்கி ஸ்வாமி! நாங்கள் வேறிடம் போவோ மென்று அவரை விடாமலிருக்க அவர்கள் தனத்



சாங்கா கேசவர்　　யாதவ பந்த்.
శాంగా కేశవుడు.　　యాదవ బంధులు.



ஸ்திரீரூபான பெருமான்.　　யாதவயன்துமனைவி.
స్త్రీరూపుధరించిన భగవంతుడు,　　యాదవవంశు భార్య.



சாங்காகேசவர்.　　பிதர் அரசன்
శాంగకేశవుడు.　　బిదరురాజు.

தின்மீ தபேக்ஷையு முடையவர்களாகி யிருப்பதை ஆசாரிய ரறிந்து அவர்களை யழைத்து உங்கள் இஷ்டத்தைச் சொல்லுங்களென்று வினவ, அவர்கள் ஸ்வாமி! வர்த்தகத்தில் நஷ்டம் வெகுவாக வருகின்றது எங்களாற் றப்பிதம் நேரிடாமுன் திரவியம் போய்விடுகின்றது இதற்கு பரிஹார மெப்படியென்று வினவ ஆசாரிய ரவர்களை நோக்கி சந்தைக் கூட்டத்திற்கு நீங்கள் போகும்பொழுது வருகிறேனென்றார். இதைக்கேட்டு சிஷர்கள் சந்தோஷித்து கருணையுடையவரென்று நமஸ்கரித்து அவர்கள் சந்தைக் கூட்டத்திற்கு போகும்நாளி லவரை அழைத்துப்போய் அவர்கள் கடையி லோராசனத்தைப்போட்டு அதன்மீது ஆசாரியரை உட்காரச் செய்து வர்த்தகஞ் செய்ய வாரம்பித்தார்கள். கிராக்கி ஜனங்க ளனேகர் வந்து கேட்ட விலைகளாக கொடுத்து சரக்குகளைக் கொண்டுபோவார்கள், அவர்கள் கொண்டுவந்த சரக்குக ளனைத்தையும் விற்றபின் லாபம் இரண்டத்தனையா யிருந்ததைக்கண்டு பொருளதிகமாக வந்ததென்று ஆசாரியருக்குச் சொல்லி நமஸ்கரித்தார்கள். அவரும் ஸ்ரீஹரி கொடுத்தாரென்று சொன்னார். பின்பு சிஷர்களிருவரும் ஆசாரியருக்காக சமையற்செய்து வைத்தார்கள், சாங்கதேவர் மிருத்திகையினால் லிங்கத்தை பண்ணி சோடச பூஜைகளை விதி பூர்வகமாகச் செய்து பிரேமையுடன் நைவேத்தியமிட்டு இரண்டு சிஷரையும் பந்தியி லுட்கார வைத்துக்கொண்டு பக்ஷணைசெய்தார். உதயமானவுட னாசாரியரை யிருப்பிடத்திற் சேர்த்து சேவை செய்துக்கொண் டிருந்தார்கள்.

இவ்வண்ணமாக ஒவ்வொரு வாரமும் சந்தைக் கூட்டத்திற் காசிரியரை அழைத்துப்போய் அனேக சரக்குகளை விக்கிரயப்படுத்தி வோராண்டு அதிக லாபத்தையடைந்துவந்தார்கள். அவர்களுடைய தரித்திர மனைத்தும்போய் திரவியவான்களானார்கள். குருடரைப்போலிருந்த சற்குருசேவையா லவர்கள் சம்பத்தையுடையவராயினும் சமுசாரத்திற் பாசபத்தர்களாகி பிரபல மோஹத்தையடைந்தபடியால் நாளுக்குநாள் ஆசாரியசேவை அந்தரித்தது. இதை சாங்கதேவர் கண்டு கண்ணில்லாதவரைப்போ லிருந்தபடியால் பூஜாதிரவியங்க ளன்னியரால் கொடுக்கப்பட்டுவந்தவருக்கு சிஷர்கள் சேவையி லில்லாமையால் விசனமுற்றவராகி வன மத்தியத்திற் றொருவரே யிருக்கலானார். வெகுநேரஞ் சென்றபின் னொரு சிஷ

ன் வந்தான். சிஷன் சமுசார வஸ்யனுனென்றவரறிந்தும் ஒன்றுஞ் சொல்லாமல் சிவபூஜைக்கு மிருத்திகையைக் கொண்டுவரச் சொல்லிக் கட்டளையிட்டார். சிஷன் கபடத்தை யுடையோனுகி தபதி தீரத்திற்குச் சென்று அவ்விடத்தில் மணலைக் குவித்து ஆசாரியரிடமிருந்த பித்தளைச்சொம்பை அபஹரித்து அதைக்கொண்டுவந்து தலைமேலாக அவ்விடத்தில் வைத்து சித்தப்படுத்தினன். இதற்குள் இரண்டாவது சிஷன் வரவே இருவருங்கூடி ஆசாரியரிடம் வந்து மிருத்திகை யெங்கு மகப்பட வில்லையென்றும் ஆற்றினிடமோர்லிங்க மிருக்கிற தென்று சொல்லி ஆசாரியர் கையைப்பிடித்தவந்து தாங்கள் மணற்குவியல்மேல் வைத்த சொம்பின்முன் உட்கார வைத்தார்கள். சாங்கதேவர் சங்கருடைய நாமத்தைப் பிரியத்துடன் சொல்லி சராசரமனைத்தும் லிங்க மயமா யிருக்குமன்றோ? வென்று தன்கைகளா லந்தச்சொம்பைத்தீண்டி கனத்தலிங்கமென்று கருதி பார்த்திவலிங்கத்திற்கும் ஸ்தாவர லிங்கத்திற்கும் பேதமின்றென்று ஆர்த்தியுட னர்ச்சனை பூஜனுதிகளைச் செய்துக்கொண்டிருந்தார். சிஷ ரிருவரு மன்னத்தைப் பாகஞ் செய்து சாம்பமூர்த்தி நிவேதனத்திற்கு பாத்திரத்திற் கொண்டுவந்தார்கள். அதனைச் சாங்கதேவர் சங்கரமூர்த்தி முன்வைத்து தான் நின்றுக்கொண்டு பங்கஜலோசனு! பார்வதி ரமணு! அடியேன் மந்திரஹீனன், கிரியாஹீனன், பக்திஹீனன், தந்திரங்களேதொன்று மறியேனென்று தெண்டஞ் சமர்ப்பித்துப் பூஜையைமுடித்தார். பின்பு சிஷர்கள் அவர் கையைப் பிடித்துக்கொண்டு ஆச்சிரமத்திற் கழைத்துக்கொண்டு போய்ப் பக்ஷணைசெய்ய வுட்கார வைத்தார்கள். அப்பொழுது ஆசாரியர் சொம்பைக் கொடுக்கச்சொல்லிச் சிஷரை கேட்க அவர்க ளோடிச் சென்று தபதிதீரத்தில் வைத்திருந்த சொம்பையெடுக்க வசமாகாமல் தங்கள் சக்தியளவு பேர்த்துப் பார்த்தும் அசக்தராகி சாங்கதேவரிடஞ்சென்று தாங்கள் செய்த சேஷ்டைகளைத் தெரிவித்து அபராதிக ளானேமென்று நமஸ்கரிக்க, அவரவர்களை க்ஷமித்துப் பூஜைசெய்த விடத்திற்கு வந்து சாம்பமூர்த்தியை அனேக விதங்களாகப் பிரார்த்தித்தார். ஓ தேவா! பதிதனை வென்பக்திக்கு நீர் பிரகடன மானீரன்றோ! ஓ மிருடானீவரா! ஓ சதாசிவ மூர்த்தீ! அடியேனைக் கருணையுட னிரக்ஷித்து சேவையைக் கைக்கொள்ளக் கடவீரென்றுப் பிரார்த்தித்து வட்

வேசுவர ரென்று அந்த லிங்கத்திற்குத் திருநாமஞ் சாற்றி லகைகளைத் தலைமேற் கூப்பி நிற்க தன்கண்க ளிரண்டுங் காணலுற்றன. பின்பு சிஷர்களை தங்கள் வீட்டிற் கேகச்சொல்லி உத்திரவு செய்ய அவர்களவரை நமஸ்கரித்துச் சென்றார்கள்.

அனந்தரம் பிரஜைக ளனேக ரிவருடைய கீர்த்தியைக்கேட்டு வந்து தங்கள் பிரார்த்தனைகளை நிறைவேற்றிக்கொண்டு போகத் தொடங்கினார்கள். ஒருவர்த்தகன் மிகுந்த திரவியத்தைச் செலவு செய்து ஓர் மடத்தைக் கட்டிவைத்தான். அது அனேகருக்குச் சஹாயமாக அமைந்திருந்தது. அன்னசாந்தியு மவ்விடத்தில் அபாரமாக நடந்துவரும், நாலுதிக்குகளிலும் சாங்கதேவருடைய புகழ் நிறைந்திருந்தது. வடவேசுவரரையே அவ ராராதித்து வருவார். ஆசனசயனாதிகளிலு மவர்நினைவை மாறார். யோகத்திற்குத் தகுந்த சாதனங்களை அவர் கைக்கொண்டு அதற்கு வேண்டிய அனுஷ்டாங்கங்களை ஆதரத்துடன் செய்து வருவார். சித்திகளைக் கொண்டு அவர் காலனை வஞ்சித்து பதினான்குநூறு வருஷங்கள் பிழைத்திருந்தார். விசித்திர சித்திகளை ஜனங்களுக்குக் காண்பித்து விவசரித்துக்கொண்டு பதினான்குநூறு சிஷர்களை அவர்பாலித்து வந்தார்.

இவ்விதமாக விருக்கப் பைடணு புரத்திலிருந்து யாத்திரை செய்துக் கொண்டு ஒரு பிராம்மண னவ்விடம் வந்து சாம்பமூர்த்தியைப் போன்ற சுந்தரமான ரூபமுடைய சாங்கதேவரைக் கண்டு சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுச் சந்தோஷத்துடன் வெகுவாகத் தோத்திரங்களைச் செய்தான். அப்பொழுது சாங்கதேவ ரவனைக்கண்டு எவ்விடத்திலிருந்து வந்தாய்? அந்ததேசத்தில் விசேஷ மென்னவென்று வினவினர். அந்தப்பிராம்மண னிதைக்கேட்டு ஸ்வாமி! நானிருப்பது பைடணென்னும் ஊர், அவ்விடத்தி லாறு மாசங்களுக்குமுன் விந்தையான ஓர் சங்கதி நடந்தது, அதாவது சன்னியா சாச்சிரமத்தை யடைந்த ஓர் பிராம்மணனுக்கு நான்கு பேர் பிறந்தார்கள். அவர்களி லொருவர் ஞானதேவ ரென்பவர் எருமைக்கடா வாயினால் ருக்வேதத்தை ஓதுவித்தார். இந்த வற்புதத்தை நானெவ்விடத்துங் கண்டதில்லை யென்று சொன்னான். இதைக்கேட்டு சாங்கதேவர் ஞானதேவருடைய விருத்தாந்தத்தை சவிஸ்தாரமாக வறிந்துக்கொண்டு அவர் விஷ்ணு அம்சமென்று தனக்குள் ளெண்ணி சிஷர்களுட னவரிடஞ் சென்று அவரனுக்

கிரகத்தைப் பெற்றுப் பண்டரிநாதருக்குப் பக்தராய் விளங்கினர். (இதை ஞானதேவர் கதையிற் கண்டுகொள்ளலாம்.)

சாங்கதேவர் ஞானதேவரிடம் மந்திரோபதேசத்தைப் பெற்ற பின் மந்திரார்த்தத்தை வெளியிடும்படி ஞானதேவரைப் பிரார்த்தித்தார். அதற்கு அவர் சாங்கதேவரைக்கண்டு நீர் உம்முடைய சிஷர்களிலொருவனைப் பலிதானங் கொடுப்பையேல் உமக்கு மந்திரார்த்தத்தைச் சொல்லுகிறேனென்றார், இதைக்கேட்டு சாங்கதேவர் தானிறங்கியிருக்குமிடத்திற்கு வந்து சிஷர்களனைவரையுமழைத்து ஞானதேவருக்கிவரிலொருவனைப் பலிதானமாகக் கேட்டார் அதற்குடன்படுவோர் யாரென்று கேட்க, அவர்களனைவருமாசாரியரை நோக்கி உம்முடைய ஆதீனமாக நாங்களிருப்பவர்களென்றுசொல்லி இரவுகாலத்தி லனைவருமேகாந்தத்தில் யோசனைசெய்து ஆசாரியர் நித்திரைசெய்யுஞ் சமயத்தில் பதிநான்குநூறு சிஷர்களும் பலாயன மானார்கள், உதயமானவுடன் சாங்கதேவர் சிஷர்களை யழைத்தார், ஒருவனுமவ்விடத்திலில்லாதிருப்பதைக் கண்டு தானே ஜலமிருக்குமிடத்திற் சென்று சௌசாசமாசனுஷ்டிக் கிரியைகளைச் செலுத்தி இருப்பிடம் வந்தபொழுது ஞானதேவரவ்விடத்திற் கெழுந்தருளினார். சாங்கதேவரவரைக்கண்டு நமஸ்கரித்து அடியேனுடைய அபிமானத்தைத் தீர்த்து ஆட்கொண் டருளினீர் சிஷர்களனைவருந் தொலைந்தார்கள் உபாதிரஹிதனாகி நின்றேன் கிருபைசெய்து அடியேனைப் பலிதானமாக அங்கீகரித் தருளுமென்றார். இதைக்கேட்டு ஞானதேவர் சாங்கதேவரைத் தன்வீட்டிற் கழைத்துவந்து, ஓர் சமுசாரிபுருஷன் இல்லற தருமத்தை விடுவது சுலபமாகும், இல்லறத்தை விட்டு ஏகாங்கியானவன் தன்மடத்தை விடுவது எவ்வளவோ அருமையாகும், அதனை நீ அபேக்ஷிக்காமல் விட்டுவிடுவது நன்மையாமென்று சொல்லித் திருமந்திரத்திற் கர்த்தத்தை அறிவித்துக் கொண்டு ஓர்மாதம் வரைக்கு மவ்விடத்தில் வைத்துக்கொண்டு ஹரிகுண கீர்த்தனையைக் கேட்கும்படி செய்து பாண்டுரங்கரை யுபாசிக்கும்படியும் ஹரிநாமத்தை நாக்கி லமையும்படி செய்துக் கொள்ளென்றும் சொல்லச் சாங்கதேவர் பக்தியுடனவர் கட்டளையின்படி நடந்துவந்தார்.

அனந்தரம் சாங்கதேவர் தனித்து வடவேசுவரத்திற்குவந்து

ஹரிகுண கீர்த்தனையை யிடைவிடாமற் செய்துவருவர். வடவேசுரத்திற் கருகில் நாராயண் டோஹி யென்னும் நல்லஸ்தல மொன்றுண்டு, அங்கு பிராம்மண தம்பதிகள் முதோபந்து வென்றும் ருகுமாபி யென்றும் யிருவர்வாசமா யிருந்தார்கள். அவர்கள் வடவேசுரத்திற்கு வந்து அன்னபானங்களின்றி தவம்புரிய விருக்க சாம்பமூர்த்தி கிருபைகொண்டு சாங்கதேவர் சொப்பனத்தில் வந்து அந்தப் பிராம்மண தம்பதிகளின் அபீஷ்டத்தை நீ அனுகூலிக்கச் செய்யக்கடவாயென் றருளினர். சாங்கதேவ ரிதைக்கேட்டு மறுநா ளவ்விருவரையு மழைத்து உங்களுடைய கோரிக்கையை வெளிப்படுத்தக் கடவீர். சாம்பமூர்த்தி கிருபையா லதனைப் பூர்த்தி செய்வே னென்று சொல்ல அவர்க ளவரை நமஸ்கரித்து உம்மைப்போல வோர்புத்திரன் வேண்டுமென்று கோற, சாங்க தேவர் த்டஸ்தராகி நின்று பன்னிரண் டாண்டுகளில் நான் பாலகனுகி கோரக்நாத ரனுக்கிரகத்தா லுமதிடம் வருவேன். கோரக்கர் வரவை நீங்க ளெதிர்பார்த்திருக்கக் கடவீரென்று சொல்லி அவர்களைப் போகும்படி ஆக்கினையிட்டு அவ்விடத்திலிருந்து ஸ்ரீஹரி பஜனை செய்துக்கொண்டுபத் த்துவருஷங்கள் கழித்தார். பின்பு கோரக் நாதரிடஞ் சென்று ஸ்வாமி! பார்வதீரமணனு க்கினையைப் பூர்த்திசெய்ய வேண்டுமென்று தான் வரங்கொடுத்த சங்கதியைத் தெரிவித்து பிராம்மண தம்பதிக ளிருவருடைய குறையை தீர்த்தருளுமென்று அனேக விதங்களாகத் தோத்திரஞ் செய்ய அவராக்கினையைக் கொண்டு தன்னுடைய் யோகசக்தியாற் சமாதி யடைந்தார்.

பின்னர் சிலநாட் கழிந்தபின் கோரக்நாதர் நாராயண டோஹி என்னும் ஸ்தலத்திற்குப்போய் ஓர்பிக்ஷுகரைப்போல்முதோபந்து வீட்டிற்குவந்து ஆலக்கென்று ஓசையிட அந்த வேதியன் மனைவி பிக்ஷையைக் கொண்டுவந்து போட்டு முன் சாங்கதேவர் கொடுத்த வரத்தை மனதிலெண்ணி அவருக்கு நமஸ்கரித்து ஓர் பிள்ளை வேண்டுமென்று கேட்க நல்லதென்று அவர் தன் வேணுவை யெடுத்து ஊதத்தொடங்கினர். அப்போது அன்று பிறந்த பாலகனைப்போல அவ்விட மோர் சிசுவு காணப்பட்டது. உடனே கோரக்கர் அந்தர்த்தானமாகச் சென்றார்.

தம்பதிகளிருவரு மக்குழந்தையைக்காணவே பிள்ளையெனும்

பிரேமை யவர்களுக் குண்டாயிற்று. ருகுமாபாயிக்கு ஸ்தன்னி யத்திற் பால் சுரப்புண்டாயிற்று. அந்தச் சிசுவுக்குச் சாங்கதேவ ரென்று தாய்தந்தைகள் பெயரிட்டார்கள். சாம்பமூர்த்தி யாக் கினைப்படி அவரே பிள்ளையானாரென்று சகலருஞ் சொல்லிக்கொ ண்டார்கள். அச் சிசுவுக்கு சௌளோபநயனங்களைச் செய்தபின் வித்தைகளைக் கற்பிக்கத் தொடங்கினார்கள். விளையாட்டாகவே சகல வித்தைகளையுஞ் சங்கிரஹித்தார். பின்பு தாய் தந்தையர் விவா ஹத்தை விதிப்படி செய்வித்தார்கள். சாங்கதேவரும் விவேக சீலராகி கிரகஸ்த்த தருமத்தை அவலம்பித்து விட்டலநாமத்தை மற வாம லிருப்பர். சம்பத்துண்டாகியும் தருமவிதிப்படி சத்கருமங் களைச்செய்தும் தாய்தந்தையர் வாக்கியங்களைப் பரிபாலித்தும் நடந்து வருவார். இருபத்து நான்காவது வயதில் தாய்தந்தைகள் ஹரிபத மடைந்தார்கள். அப்பொழுது சாங்கதேவர் அவர்களுக் குஉத்தரகிரியைக ளனைத்தையுஞ் செய்து பிராம்மணர்களுக்கு பிர பலமாகத் திரவியங்களைக் கொடுத்தார். தனது பூமியனைத்தையும் சிறிய தகப்பனுக்குக் கொடுத்து பண்டரியாத்திரையாகப் பிர யாணப்பட்டுவந்து அவ்விடத்தி லனேக பக்தர்களைக் கண்டு அபார மான பிரீதியடைந்து அபிமானத்தைவிட்டு எல்லவர்களுக்கும் நமஸ் கரித்து சன்னிதிக்குட் சென்று ஸ்ரீபாண்டுரங்கனைத் தரிசித்து அவர் திருவடிகளுக்கு நமஸ்கரித்து ஆர்த்தியுடன் கத்கதகண்ட ராகி ஓ விட்டல மூர்த்தி! உனது கிருபை என்மீது லவலே சம் லபிக்கச்செய்து பவபந்தங்களைப் போக்கடித்து பவித்திரனாகச் செய்தருளும், தேவரீர், பக்தனுடைய் இருதயத்திலிருந்து வார்த்தை களை வசனிக்கச் செய்கிறீர். நாமோச்சாரணை யென் நாக்கில் ரமித் திருக்கச்செய்தருளும் தேவரீர் கிருபையால் உமது அடியார்களடி களுக்கு நான் சரணமடைந்தேன். பிராந்தியை மத்தியிலிட்டுத் தேவரீர் திருவடிகளை மறக்கும்படி செய்ய வேண்டாமென் றிவ் வண்ணமாய் மிகவும் தோத்திரஞ்செய்து நிச்சல சித்தராகி ஹரி கீர்த்தனையைச் செய்து மூன்று நாட்க ளன்னோதகங்களைத் தீண் டாமல் சந்திரபாகா நதியினிட மிருந்துக்கொண்டு அகண்ட விரக்த ராகி ஸ்ரீஹரியைக் கண்ணால் காண்பதற்கு அனுஷ்டானஞ் செய்து வந்தார். கருணாமூர்த்தியான பாண்டுரங்கரும் கிருபையுடன் திவ் வியமங்கள விக்கிரகத்தை யுடையராகி எதிரில் நின்றார். அப்பிரா

கிருதமான அவ்வுருவத்தைக்கண்டு நமஸ்கரித்து, அடியேனுக்குப தேசித்து ரக்ஷியுமென்று பிரார்த்திக்க பெருமா ளவரை ஆற்றில் முழுகச் செய்தார். அவரப்படியே செய்ய ஆங்கோர் சுந்தரமான வீடு காணப்பட்டது. அவ்விடத்திற் பாண்டுரங்க ரெழுந்தருளி யிருந்து அவர் முன் புண்டரீகர் இருக்க பூர்ணகிருபையுடன் சாங்கதேவருக்கு ஷடாக்ஷர மந்திரத்தை அனுக்கிரகித்தார். அப்பொழுது அனேகவிதங்களாகச் சாங்கதேவர் ஸ்ரீஹரியைத் தோத்திரஞ்செய்து புளிதராகி ஆற்றிற்கு வெளியே திரும்பிவந்து கண்திறந்துப் பார்க்குமளவில் பண்டரியைக் கண்டார். அத்தியந்த சந்தோஷத்துடன் சன்னிதியில்வந்து விட்டல மூர்த்தியைக்கண்டு அபார பிரேமையுடன் தோத்திரங்களைச்செய்து வீட்டிற்குப்போக ஆக்கினையைக் கேட்டு திருப்த சித்தராகி பரிவாரத்துடன் ஸ்ரீஹரி நாமத்தைச் சொல்லிக் கொண்டே தன் வீட்டைச் சேர்ந்துச் சுகமே யிருந்தார்.

வெகுகால மவ்விடமிருக்க ஒருதடவை பெருமாள் ஓர் புருஷனைப்போல சாங்கதேவர் முன்வந்து கோதாவரி தீரத்தில் நிவாசமாக விருந்து அவ்விடத்திற் கேசவ மூர்த்தியைப் பக்தியுடன் பூஜிக்கக் கடவை யென்று ஓர் சாலக்கிராம சிலையைக் கொடுத்துச் சென்றார். சாங்கதேவரு மிது ஸ்ரீஹரி கிருபையென்று அவ்வாக்கியத்தை விசுவசித்து நாராயண பேடாஹி ஸ்தலத்தை விட்டுப் போக உத்தேசிக்க அனேக ஜனங்கள் விசனப்பட்டுநிற்க அவர்களை விட்டுப்போவதற்குத் தாபமடைந்து ஆயினும் ஹரியாக்கினைக்கு உள்ப்பட வேண்டுமென்று அவர்களுக்குச் சமாதானஞ் சொல்லிக் குடும்பசஹிதராகி கோதாவரி தீரத்திற்குச் சென்றார். அவ்விடத்திற் கேசவ மூர்த்தியை ஸ்தாபித்து அதிகப் பிரேமையுடன் பிராம்மணர்களுக்குப் போஜன மளித்து ஹரிகீர்த்தனையைச் சாங்கதேவர் செய்துவர அனேக ஜனங்கள் கதையைக் கேட்க வருவார்கள். சகலஜனங்களு மவரை சாங்காகேசவதாசரென்று கூப்பிட்டார்கள். பிரார்த்தனைகள் நிறைவேறி வந்ததனால் பிரஜைகளனேகர் வந்து இஷ்டசித்தியைப்பெற்றுப் போவார்கள்.

அந்தப் பக்தருடைய மஹிமைகள் வெகுதூரத்தி லெட்டி தேவகிரியிலிருக்கும் இராமராஜனுக்கு தெரியவந்து பாவசுத்தியுடன் வெகுஜனத்துடன் தரிசனத்திற்குவந்து சாங்கதேவரைக்

கண்டு நமஸ்கரித்து நிற்க அவ்வரசனைக்கண்டு இவ்விடம் பக்ஷித்துப்போக வேண்டுமென்ன, மஹாத்தான சேனைகூட விருக்கின்றதே யென்று ராஜன் சொல்ல அனைவருக்கும் போஜனமாகுமென்று சாங்கதேவர் சொல்ல அரசன் சம்மதிக்க அனைவரும் ஸ்நானம்பண்ணி வந்தார்கள். யாவரையு முட்காரச் செய்து சாங்கதேவர் பெருமாள் சன்னிதியிற் சென்று திருவடி தீர்த்தத்தைக்கொண்டுவந்து சமையல் வீட்டிற்குச் சென்று ஸ்ரீ ஹரியை நினைத்துச் சகல பதார்த்தங்கள் மீது அத்தீர்த்தத்தை தெளித்து சகலருக்கும் இலைகளை வட்டித்து பிரசாதத்தைப் பரிமாறினார்கள். பத்துபேருக்குச் சமைத்துவைத்த அன்னம் ஆயிரம் ஜனங்களுக்குச் சரியாய் வந்தது. இதைக்கண்டு அரச னாச்சரியப்பட்டு விநயவிதேயனாகித் தோத்திரங்களைச் செய்துத் தன்வீட்டிற்குச் சென்றான்.

சாங்கதேவ ரவ்விடத்தில் பன்னிரண்டு வருஷங்கள் வீற்றிருந்தார். ஹரிகதை கீர்த்தனை அநுதினமு மவ்விடத்தில் நடந்துவந்தது. பிரஜைகள் வெகுதூரத்தி லிருந்து அதனைக்கேட்க வருவார்கள். இப்படி யிருக்க கனுபுருகாயென்றோர் கிராமத்தில் சங்கரனென்றொரு பிராம்மண னிருந்தான். அபாரதன மவனுக்கிருந்தும் புத்திரனில்லா திருந்து யவ்வன தசையில் மரணத்தையடைந்தான். அவன் மனைவியும் தாயாருங்கூடி அதிக வியசனத்தை யடைந்து அவனுடைய சம்ஸ்காரத்தைப் பிராம்மணர்களைக் கொண்டு செய்வித்தார்கள். மருமகள் துக்கத்தா லவ்விடத்தி லிருக்கப் பிடிக்காமல் காசிபுரிக்குப் போகவேண்டி பிரயாணமாகி நடுவழியில் கோதாவரிக்கு வந்து அவ்விடத்தில் சாங்கர சேசவதாசர் கீர்த்தியைக்கேட்டு அவரைத் தரிசித்துப் போகவேண்டுமென்றெண்ணி அவ்விட மொருநா ளிருந்தார்கள். சிறுவயதில் விதவையாய் விட்டபடியா லம்மாதுக்கு சிலபந்துக்கள் கூடி தலைமயிர் வாங்கா திருந்தார்கள். மாமியாரும் மருமகளு மிருவருங்கூடி அந்த ஹரிபக்தரிடஞ் சென்று மருமகள் முன்பு தெண்டஞ் சமர்ப்பிக்க "புத்ரவதீபவ" என்று ஆசிர்வசனஞ் செய்தார். இது விசித்திரமாக விருக்கிறதே யென்று சிரித்து மாமியார் தன்விருத்தாந்தத்தை யெல்லாந் தெரிவித்தாள். இதைக்கேட்டு சாங்கதேவர் அறியாமற் சொல்லிவிட்டேன். பெருமாள் கிருபையால் புத்திரனப் பெண்வயிற்றிற் பிறப்பானென்றும் அவ்விட மிருந்த அனே

கப் பிராம்மணர்கள் முன்சொல்லி அந்தப்பிள்ளை ஹரி கிருபாபாத்திரனுகி புனிதனு யிருபபானென்றுஞ் சொல்லி அவ்வருங்கூடி அவர்களை அங்கே யிருக்கச் செய்யவேண்டு மென்று ஏற்பாடுகள் செய்தார்கள். மாமியாரும் மருமகளு மோர் வீட்டில் வாசமாயிருக்க மருமகளுக்கு கர்ப்பம் நவமாச பூர்த்தியாகி விளங்க [illegible] ஓர் புத்திரனவ்விதவைக்குப் பிறந்தான். பதினோராம்நாளவர்களக்குழந்தையைப் பக்தர்முன் கொண்டுவந்து அவர் திருவடிகளிற் போட்டு நமஸ்கரித்தார்கள். இதைக்கண்டு சாங்கதேவர் பிள்ளைக்கு விட்டலனென்று பேரிட்டு பிராம்மணர்களை யழைத்துக் கருமங்களைச் செய்யச்சொல்லிக் கட்டளை யிட்டார். பிராம்மண ஜனங்க ளதற்கு உடன்படா திருந்தார்கள். இதைச் சாங்கதேவர் கண்டு இவர்கள் துன்மார்க்கர்க ளென்று கருதி ஐந்துவயது பரியந்த மக்குழந்தையை அவ்விடமே யிருக்கச்செய்து பின்பு அந்தப் பிள்ளையுடன் பண்டரி புரத்திற்கு யாத்திரையாகச் சென்று அவ்வூரிலுள்ள சில பிராம்மணர்களை அழைத்து அப்பாலகனுக்கு உபநயனத்தை பண்டரியிலிருக்கிற நீங்கள் செய்யக் கடவீர்கள், ஸ்ரீஹரி வரத்தால் பிறந்த பிள்ளை யிவனுவான், இவனுக்கு நீங்க ளிதைச்செய்வீராகில் மஹத்தான சுகிருத முங்களுக் குண்டாமென்று சொல்ல அவர்கள் விதவைக் குமாரனுக்கு உபநயனுதிகள் செய்யலாகா தென்று உடன்படாமல்போனுர்கள். அப்பொழுது சாங்கதேவர் பெருமாள் சந்நிதிக்குச் சென்று பாண்டுரங்கர் பாதங்களைப்பிடித்துக் கொண்டு ஸ்வாமி! வரபுத்திரனுடைய தாயா ரின்றையதினஞ் சமையலனைத்துஞ் செய்வாள் ஓ முராரி! தேவரீ ரவ்விடத்திற்கு வந்து பக்ஷணசெய் தருளவேண்டும் ஓ தீனதயாபரா! பதிதபாவனு! தேவதேவா! தேவரீ ரடியேன் விண்ணப்பத்தை தயையுடன் மன்னித்தருளவேண்டு மென்று பிரார்த்திக்க ஸ்ரீஹரி அதற்குச் சம்மதித்தனர். பின்பு சாங்கதேவர் தன் வீடுதிற்குச் சென்று, வரபுத்திரன் தாயாரை நோக்கி நூறு பிராம்மணர்களுக்குத் தகுந்த சமையலைச் செய்துவைக்கக் கடவை, ஸ்ரீஹரி போஜனத்திற்கு வருவாரென்று சொல்ல அவளும் மோஹ மமதை (பிரேமை) யுடன் சமையற் செய்ய வாரம்பித்தாள். மாமியாரான பிராம்மண ஸ்திரீ பண்டரி பிராம்மணர்களைப் போஜனஞ் செய்யக் கூப்பிட, ஒருவரும் வரமாட்டோமென்று சொல்லிவிட்டார்கள். அதிக விசனத்துட

ன்வள் திரும்பிவந்து அச்சங்கதியை சாங்கதேவரிடஞ் சொல்ல அவரவளைநோக்கி ஸ்ரீஹரி மேன்மையைச் செய்வாரென்று சமாதானப் படுத்தினர்.

சன்னிதியிலத்தினத்தில் பாண்டுரங்கமூர்த்தி காணப்படாதிருந்தார். சேவிக்க வருமவர்க ளவ்விடம் ஸ்ரீநாதனைக் காணுமல் கலக்கமுற்றூர்கள். பிராம்மணர்களிதைக்கண்டு ஆங்காங்கு ஸ்ரீஹரியைத் தேடத்தொடங்கினூர்கள். சஜ்ஜனர்கள் சிலரவர்களை நோக்கிச்சாங்கதேவரவரை கொண்டுபோய் வைத்திருப்பார் அவரிடம்போய்ப்பார்ப்போமென்று அனைவருமவரிடம்வந்து, ஐயா! பெருமாள்கோயிலிலில்லாமல் மாயமானதென்ன சாங்கதேவ ரவர்களை நோக்கி விதவைக்கு நீங்கள் பவிஷ்காரம் வைப்பதனுல் ஸ்ரீஹரி போஜனத்திற்காக எங்களிடம் வந்தாரென்றூர். பிராம்மணர்க ளவ்விடஞ் சோதிக்கும்போது அவர்களுக்குப் பெருமாள் தோற்றும லிருந்தார். சாங்கதேவருக்கு மாத்திரம் தோன்றும்படி யிருந்தார். பக்திலக்ஷணத்தைவிட்ட பிராம்மணர்கள் சந்தேஹத்தை யுடையவர்களாகி ஸ்ரீஹரியிவ்விடத்திற்குவந்தது சத்தியமா யிருந்தால் இவ்விடத்திற் செய்த சமையல் சித்தன்னை பெருக்கும் பூர்த்தியா ஆகவேண்டுமென்றூர்கள். அதைக்கேட்டு சாங்கதேவர் சொர்க்கத்திலிருக்குங் காமதேனுவைப்போலே அனேக ஜனங்களுக் கிந்த அன்னமே அதிகத்திருப்தியைச்செய்விக்குமென்றும் புனிதமானபிரசாதத்தை யிவ்விடம்வந்துகொள்ளவேண்டுமென்றும்சொன்னூர். பிராம்மணர்க ளனைவரும் ஸ்நானம்பண்ணி வந்தார்கள். இதர பிரஜைகளும் இது விசித்திரமென்று பார்க்கவந்தார்கள், இலைகளைப்போட்டு அனைவரையும்உட்காரச்செய்து விதவைஸ்திரீ வட்டிக்கப்பிராம்மணர்க ளனைவரும் சொஸ்தமாகப் பக்ஷித்தார்கள். நாலாயிர மந்தணர்கள் நலமாகப் பக்ஷித்துப் பெருமாள் சன்னிதியிற் சென்று பார்க்குமளவில் பாண்டுரங்க மூர்த்தியை அவ்விடத்தி லிருக்கக்கண்டு அதிக சந்தோஷத்துடன் சாங்கதேவரிட மவர்க ளனைவரும் வந்து விதவைப் பிள்ளைக்கு உபநயனத்தைச் செய்ய முகூர்த்தம் வைத்து ஓர் சுபதினத்தில் அந்தணர்க ளனைவருங்கூடி உபநயனத்தைச் செய்து முடித்தார்கள், அபரிமிதமான திரவியத்தை அந்தவிதவை ஸ்திரீ பிராம்மணர்களுக்குக் கொடுத்தாள்.

சாங்கதேவ ரப்பிள்ளைக்கு உபநயன காரியத்தை இவ்விதமாக

முடித்து விதவைஸ்திரி யிருப்பிடமான கல்புருகா கிராமத்திற்கு யாவருஞ்செல்ல அவ்வூரா ரனைவருமெதிர்கொண்டுவந்து மன்னித்தார்கள், சாங்கதேவர் சங்கரன் வீட்டிற்குப்போய் அப்பாலகனை அவ்விடத்தில் நிறுத்தினர். ஒரு பிராம்மண கிருகஸ்தன் தன் குமாரத்தியை அப்பிள்ளைக்குக் கொடுப்பதாகச் சொல்ல சாங்கதேவர் சந்தோஷத்துட னங்கிகரித்து ஓர் சுபதினத்தில் அபார விபவத்துடன் விவாஹத்தை நடத்தினர். அக்குமாரனை அவ்விடத்தில் விட்டு சாங்கதேவர் தன்னிருப்பிடம் வந்து துவாரகை யாத்திரைப்போக உத்தேசிக்க அனேக ஜனங்க ளவருடன்கூட போகத் தொடர்ந்தார்கள்.

தாளுரெனுங் கிராமத்தில் துரைத்தனக் காரராகி யாதவப்பட்ட ரென்பவ ரிருந்தார். அவரும் சாங்கதேவருடன் சச்சங்கம் நடக்குமென்று துவாரகை யாத்திரைக்குப் பிரயாண மானர். அவர் மனையாள் கர்ப்பிணியா யிருந்தபடியால் வீட்டிலிருக்கும்படி கணவன் உத்திரவு செய்ய அவள் கேட்காமல் எல்லாருடன் யாத்திரைக்குப் புறப்பட்டாள். ஊரார்ச்சில ரவளை நிந்திக்கத் தொடங்க அம்மாது பூர்ண பக்தரான சாங்கதேவருடன் சென்றால் ஸ்ரீஹரி தயையுடன் ரக்ஷிப்பரென்று சொல்லி மெதுவாக நடந்து அவளும் யாத்திரை ஜனங்களுடன் போய்க்கொண் டிருந்தாள். நாளுக்குநாள் நடப்பது பளுவாய்த் தோன்றிற்று. யாதவ பட்டர் சாங்கதேவ ரனுக்கிரகத்தைப் பெற்று சாதுமார்க்கத்தில் பிரம்ம நிஷ்டையைச் செய்துக்கொண்டு குடும்ப விஷயமாய் மனதை வையாமல் தன்வழியே தான் போய்க்கொண் டிருப்பர். அவர்மனைவி பதிசேவையை விட்டிருக்க இஷ்டமில்லாமல் சாயங்காலம் வரைக்கும் மெதுவாகச் சங்கடப்பட்டு ஸ்ரீகிருஷ்ண நாமத்தை உறுதியாகச் சொல்லிக்கொண்டு நடந்து யாத்திரை ஜனங்கள் இறங்கினவிடத்திற் சேர்ந்து பின்பு போஜனாதிகளைச் செய்து வருவாள். கர்ப்பம் பெருகி வளர்ந்துவர சரீரத்தில் வெயர்வைதட்டத் தொடங்கிற்று. தாயாராவது தங்கையாவது சமீபத்தி லில்லாததால் தடமாடிக்கொண்டு நடப்பாள். இப்படி நடந்துவர நவமாசம் பூரிதமாயிற்று. ஆரண்ணியத்தில் யாருமின்றி ஒண்டியாக நடந்துக்கொண்டிருக்க இடுப்பு நோவினால் பிரசவவேதனைத் தொடங்கிற்று. அதனால் நடக்க சக்தியற்று ஓர் செடிக்கீழ் தங்கலா

ளுள். யாத்திரை ஜனங்க ளெல்லாரு மிவளை நினைப்பில் வையாமல் முன்னாகப் போய்விட்டார்கள். சாங்கதேவருடன் யாதவபட்டரும் போய்விட்டார். ஆரண்ணியத்தி லம்மாதுக்கு யாருமில்லாமல் அதிக கஷ்டந் தோன்றிற்று. அப்பொழுது சர்வ சுகுணங்களும் பொருந்திய சாங்கதேவரான் ஆசாரியரை அவள் நினைத்து பரதேசியாகி ஆரண்ணியத்தி லொன்டியாய் பாதையடைந்தே னென்று சொல்லி, நரஹரி, அச்சுதா, ஸ்ரீஹரி! கோவிந்தா! நாராயணா! உம்மை அனாத பந்துவென்று பக்தஜனங்க ளளவின்றி வர்ணித்தார்கள். ஓ ஜனார்த்தனரே! ஸ்ரீகிருஷ்ணா! என்னைக் காப்பாற்றும் அனேக பக்தர்களுடைய ஆபத்துக்களை ஆராய்ந்து நிவர்த்தி செய்தீர். ஓ புராண புருஷரே! என்னைக் கண்பார்த்து காப்பாற்று மென்று அனேக விதங்களாக வேண்ட ஸ்ரீஹரி அப்பொழுது ஓர் ஸ்திரீரூபத்தை வஹித்து புடைவை கட்டி ரவிக்கையைப் போட்டுக்கொண்டு நெற்றியிற் குங்குமமிட்டு அவ்விடத்திற்றோன்ற, கருப்பிணியான அம்மாது யாரென்று வினவ, ஸ்திரீவேஷம் பூண்ட பெருமாள், என்னை ஆசாரியரான சாங்கதேவரனுப்பினார், என்னை கிருஷ்ணாபாயி யென்று கூப்பிடுவார்கள், உனக்குப் பிரசுருதிசமயம் வந்ததென்று உன்னிடம் வந்தேன் நீ பயப்பட வேண்டாமென்று சொல்லி, ஆங்கோர் கிராமத்தை யுண்டாக்கிக் கருப்பிணி ஸ்திரீயினுடைய இடுப்பைப் பிடித்துக் கொண்டு அவளுக்குத் தொந்தரையாகாம லோர்வீட்டிற் கொண்டுவந்து சேர்த்து அவளுக்கு சேவைகளைச் செய்துக்கொண் டிருந்து சங்கோசிக்க வேண்டாமென்று சொல்ல, அம்மாது சந்தோஷித்து ஐயோ! என்னிடத்தில் திரவிய மேதாகிலுமுனக்கு கொடுக்க ஒன்றுமில்லையே! யென்று அனேக விதங்களாக கிருஷ்ணபாயியை தோத்திரஞ் செய்து கொண்டிருந்தாள். கிருஷ்ணபாயியும் நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாமென்று சொல்லி இடுப்பைப் பிடித்துக்கொண் டிருக்கப் பிரசவநோய் உண்டாகவே அதிக பிரேமையுட னவளுக்குப் பரிசர்யை (வேலை) களை செய்துவர சுலக்ஷணமான ஓர் புத்திரன் ஜன்மித்தான். கிருஷ்ணபாயி அச்சிசுவுக்கு தொப்புளை யறுத்து சுடுஜலங் கொண்டு அக்குழந்தைக்கு ஸ்நானஞ் செய்வித்து பிள்ளையைப் பெற்றவளுக்குப் படுக்கையைப் போட்டு பத்திய மிட்டு காயமிடித்துக் கொடுத்து தீபமேற்றி அதனை அவிய ஒட்டாமல் பார்த்

துக்கொண்டு அப்போதுக் கப்போது எந்தெந்த பதார்த்தங்கள் வேண்டுமோ அவைகளுக்கு குறைவில்லாக் கொடுத்துச் சேவாதற் பரையாயிருந்து பதினொரும்நாள் ஸ்நானஞ் செய்வித்து ஓர்மாதம் வரை இவ்விதமான சேவைகளை ஸ்திரீரூபத்துடன் ஸ்ரீகிருஷ்ணர் செய்துவந்தார். இது வுலகி லெவர்க்குந் தெரியாதிருந்தது,

இது யிப்படியிருக்கச் சாங்கதேவர் யாதவபட்டருடன் துவாரகையைச் சேர்ந்து சன்னிதியிற் பிரவேசித்து பெருமாள் விக்கிரகத்தைப் பார்க்குமளவில் மூர்த்திகர மதனிடமில்லாம லிருப்பதைக் கண்ணுற்று மோதமடையாமல் தனது யோகதிருஷ்டியாலுள்ளே தான் பார்க்கும்பொழுது பெருமாள் காட்டில் பிள்ளைப் பெற்றவளுக்குச் சேவைசெய்துக்கொண் டிருக்கத் தோன்றிற்று. அப்பொழுது ருக்மணிதேவி பிரசன்னமாய் பெருமா ளிவ்விடம்விட்டு காட்டிற் பிரசவித்த ஸ்திரீயினிடஞ் சென்றோர் மாசமாயிற்று நீ யிப்பொழுதே அவ்விடஞ் சென்று பெருமாளை யழைத்துவா வென்ன, சாங்கதேவருடனே பிரயாணமாகி காட்டிற் சேர்ந்து பார்க்குமளவிலோர் கிராமத்தைக்கண்டு அவ்விடத்தி லிருப்போரைப் பார்த்து கிருஷ்ணுபாயி வீடெங்கிருக்கிறதென்று கேட்க அங்குள்ளோரவ்வீட்டைக் காண்பித்தார்கள். அவ்விடத்திற்குச் சாங்கதேவர் போகவே சுந்தரமான ஸ்திரீரூபத்தைக்கொண்ட ஸ்ரீஹரி சாங்கதேவரைக் கண்டுத் தெண்டஞ் சமர்ப்பித்து அந்தர்த்தானமானார். சாங்கதேவ ரவரை ஸ்ரீஹரியென் றறியாமல் பிராந்தியையுடையராய் வீட்டிற்குள் செல்ல பிள்ளைப் பெற்றவள் தன் பிள்ளையை குருபாதங்களிற் போட்டு தானுந் தெண்டஞ் சமர்ப்பித்து ஸ்வாமி! தேவரீர் கிருஷ்ணு பாயியைச் சமயத்தி லனுப்பினபடியால் எனக்கு ஆயாசமின்றி சௌக்கியத்தைச் செய்து வந்தாளென்று நடந்த சங்கதியைத் தெரிவிக்க, அவர் கிருஷ்ணுபாயி யெங்கேயென்று கேட்க அவள் வெளியி லிருப்பாளென்று சொல்லச் சாங்கதேவர் வெளியேவந்து பார்த்துங் காணமல் மிகுதியான கிலேசத்தை யடைந்து பிராட்டி ஆர்த்தியை மனதி லெண்ணி சகலரையு மழைத்துக்கொண்டு சீக்கிரத்தில் துவாரகையைச் சேர்ந்து பெருமாள் சன்னிதியிற் சென்று மூர்த்திகரமான ஸ்ரீஹரி ரூபத்தை மோகத்துடன் பார்த்து, ஓ கிருஷ்ணா! தேவரீர் ரனாதபந்து யென்பது நிஜமாயிற்று காட்டிற் பிள்ளையைப் பெற்றவளுக்காக

அமிதமான சேவைகளைச் செய்தீர் அடியேனுக்காகத் தொந்தரை யெடுத்துக்கொண்டு பக்தர்களைப் பாதுகாத்தீர். ஓ முகுந்தா! மாதவா! ஸ்ரீநிவாசா! ஸ்ரீபப்பரி யென்று ஆர்த்தியுடன் கண்களிற் ஜலம்பெருக அனேக விதங்களாகத் தோத்திரஞ் செய்து யாதவ பட்டரை யழைத்து உனது குடும்பத்தைக் குமாரனுடன் நீ நிர்வஹித்துக் கொள்ளக்கடவை. இந்தச் சத்புத்திரன் சாதுக்களுக்குள் சிரேஷ்டனுவான். நீ சமுசாரத்தை விட்டுவிடுவது சரியன்று, வம் சோத்தாரணை செய்யத்தக்கப் போறும் பிறப்பானென்று யாதவர் மனைவியையும் புத்திரனையு மவர் வசமாக்கி, துவாரகையில் நான் குமாதங்க ளிருந்துப் பெருமானை பிரியத்துட னனுதினமுஞ் சேவித்து சாங்கதேவர் பரிவாரத்துடன் தனதிருப்பிடம் வந்து சேர்ந்தார்.

அவ்விடத்திற் சிலகாலம் வீற்றிருந்து மளவில் பண்டரிபுரத்தில் துருக்கருடைய தொந்தரையால் பிராம்மண ரனேகர் தங்கள் வீடுகளைவிட்டுப் போனார்களென்றும் பிதர்பட்டணத்தி லிருக்குந் துலுக்கவரச னிதற்குக் காரணமென்றுந் தெரியவந்து சாங்கதேவர் மிகுந்த விசனத்தை யடைந்து ஹரிகோவிந்தா! கிருஷ்ணு! முகுந்தா! அச்சுதா! நரஹரி! தேவதேவா! ஜனார்த்தனு! தேவரீர் பூர்வத்தில் துர்ஜனங்களை யடித்துக்கொன்றீர். உம்முடைய பிரதாப மிவ்வளவென்று வர்ணிக்கக் கூடாததா யிருக்கின்றது. எப்பொழுதும் பக்தர்களுக்கு ஹிதத்தைச் செய்தே அவர்களை யிரக்ஷித்து வருவீர். இப்பொழுது துலுக்கர் தொந்தரை செய்ய அவர்களை சிக்ஷிக்காமலிருப்பது தகுதியா? ஓ பாண்டுரங்கரே! யென்று வேண்டிக்கொண்டு தியானத்தி லிருக்கப் பெருமாள் பிரகடமாகி பிதருபட்டணத்திற்கு நீ போகக்கடவையென் றுக்கினைசெய்ய, சாங்கதேவ ரக்கட்டளையைச் சிரமேற் வஹித்து பரிவாரத்துடன் பாண்டுரங்கருடைய நாமத்தைச் சொல்லிக்கொண்டு பயமின்றி பிதர்பட்டணத்திற்குப் போகப் பிரயாணமானார். தானிறங்கு மிடங்களிடோறும் ஹரிகீர்த்தனைகளைச் செய்துகொண்டுவர அனேக ஜனங்கள் சிரவணஞ் செய்ய வருவார்கள். துர்மார்க்கராயிருந்து பகவத்கீர்த்தனங் களைக் கேட்டவர்களும் ஸ்ரீஹரி கிருபையால் சிறந்தபக்தியை யடைந்தார்கள். இதுவுமன்றி காமிய நிமித்தமான பிரார்த்தனைகள் கைகூடி வருவதால் அனேக ஜனங்கள் பக்தியுடனவரி

டம் வருவதும் போவதுமாக விருப்பார்கள். இவ்விதமான கீர்த்தியுடன் சாங்கதேவர் புறப்பட்டனேர் திருப் போகலுற்றார்.

மார்க்கத்திலோர் கிராமமிருந்தது அதில் ஜங்கம ஜாதியார் வெகுபேர் வாசமாகவிருந்தார்கள் அவர்கள் துச்ச மந்திரங்களை யனேகமாக கற்றுக்கொண்டு அதனால் கர்வமடைந்திருந்தார்கள், அவர்களெல்லாருக்குங் குருவான ஒருவன் ஓர் நாயை வளர்த்து அதற்குச் சாங்கதேவனென்று பேரிட்டு கோப்பியமாக வைத்திருந்தான். சாங்கதேவ ரவ்விடம்வர ஜங்கமகுரு பேசாதிருந்தான். சாங்கதேவ ரவனுக்கு தெண்டன் சமர்ப்பிக்க அவன் வணங்காம லாசனத்தி லுட்காருமென்றான். அவர்கள் கபடமாக மனையின்கீ ழொரு பள்ளம் வெட்டி புருடர் யாரேனு முட்கார்ந்தால் கீழேவிழத்தக்க உபாயத்தைச் செய்திருந்தார்கள். இதைச் சாங்கதேவர் கண்டு அம்மனை எரிந்துபோகும்படி நோக்க, அந்த மனை பற்றியெரியத் தொடங்கிற்று. இதைக்கண்டு ஜங்கம குரு வியப்புற்று சாங்கதேவருக்குத் தெண்டஞ் சமர்ப்பித்து ஐயா! இம்மனையை அக்கினி தஹனமாகாமல் தயவுசெய்யவேண்டுமென்று வேண்ட சாங்கதேவர் அதன்மேல் விபூதியைப் போட்டமாத்திரத்தி லக்கினி சாந்தமாயிற்று. அவ்விடத்திலுள்ளோ ரிதனைக்கண்டு ஆச்சரியப்பட்டு ஜங்கம குருவான மல்லிகார்ஜுனனும் சாங்கதேவருக்கு மரியாதைகளைச் செய்துத் தங்களிடத்தில் பக்ஷணை செய்து போகும்படி ஆதரணை செய்தான். சாங்கதேவ ரதற்குச் சம்மதித்து பிராம்மணர்களை சமையல் செய்யச்சொல்ல அவர்களும் பாகத்தை சித்தப்படுத்தினார்கள். பின்பு அவர் ஜங்கமர்களை யழைத்து நீங்க ளொருபங்தியாக வுட்கார்ந்து சாப்பிட்டால் நாங்களு முங்களெதிரி லோர் பங்கியாகச் சாப்பிடுவோமென்ன அதற்கவர்கள் சம்மதித்து அனைவரும் இலைகளிற் பிரசாதத்தை வட்டித்துக்கொண்டு உட்கார சாங்கதேவரும் பிரசாதத்தை பெருமாளுக் கற்பணைசெய்து இலைகளைப் போட்டுப் பதார்த்தங்களை வட்டிக்கச் செய்துப் பிராம்மண ஜனங்களை உட்காரச் செய்து ஜங்கம குருவைப் பார்த்து சந்திரமௌளிக்கு நீங்கள் நிவேதனம் பண்ணி சாப்பிடலாமென்று சொல்ல அவர்கள் தங்களுடைய லிங்கக்காய்களை அவிழ்த்துப் பார்க்க அவைகளிற் சிவலிங்கங்க ளகப்படவில்லை. ஜங்கம சிஷ்யர்கள் தங்கள் குருவின் முகத்

தைப்பார்த்தும் குருவு சிஷர்முகங்களைப் பார்த்தும் ஒன்றுந் தோன்றாமல் வெட்கமுற்று மிகுந்த வணக்கத்துடன் ஜங்கம குருவு சாங்கதேவரை நோக்கி நீர் உம்முடைய சமுதாயத்துடன் பக்ஷிக்கக்கடவீர் சிவபெருமான் கோபமுடையராகி எங்களிட மிருந்து எங்கு சென்றனரோ? நிதானமாக நாங்கள் பின்னிட்டுப் பக்ஷிப்போமென்றான். இதைக்கேட்டு சாங்கதேவர் சொல்லுவார். ஒரு ஜங்கமய்யர் உபவாசத்துடன் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கிறார். அதைப்பற்றி சாம்பமூர்த்தி உம்மைவிட்டுப் பிரிந்தார். ஓர் நாயை நீங்கள் பிழைக்கடையில் சாங்காயென்ற நாமத்தைச் சாற்றிவைத் திருக்கிறீர்கள் அது பசியுடனிருக்கிறது அதனை யொளித்துவைப்பதற் கென்னகாரணமோ தெரியவில்லை பூமியெங்கும் லிங்கமயமாக விருக்கின்றது அந்தஸ்வானமே (நாய்) உங்களுடைய லிங்கங்களையுண்மையாகப் பக்ஷித்திருக்கின்றதென்று சொல்ல, ஒருஜங்கமன் அந்த நாயைக் கொண்டுவந்தான், சாங்கதேவ ரதனை நோக்கி ஸ்வானமாயிருந்து லிங்கங்களை யபஹரிப்பது சரியன்றே! சிவபக்தருடைய லிங்கங்களை சீக்கிரத்திற் கொடுக்கச்சொல்லி வேண்ட உடனே அந்த ஸ்வானம் தலையைக் குனித்து வாயினு லவர்களுடைய லிங்கங்களனைத்தையுங் கக்கிற்று. அவ்விடத்திய ஜங்கமகுரு விதைக்கண்டு ஆச்சரியமடைந்து நின்றான். அப்பொழுது அவ்வவர்களுடைய லிங்கங்களை அவ்வவர்கள் கைக்கொண்டார்கள். பின்பு அந்தஜங்கமர்கள் அடிக்கடி ஸ்ரீஹரி பக்தர்களுடைய மஹிமையைப் புகழ்ந்து சாங்கதேவரை நமஸ்கரித்து வணக்கத்திற்கு வந்து சிவபெருமானுக்குப் பிரசாதத்தை நைவேத்தியஞ் செய்ய, சாங்கதேவர் ஸ்ரீஹரி போக்தாவென்று ஆபோசனங் கொள்ள அனைவரும் பிரசாதத்தை பக்ஷித்தார்கள். பின்பு சாங்கதேவர் ஜங்கமர்களை நோக்கிமஹத்வமும் சம்பத்து முங்களுக்கு வந்தபோதிலும் கர்வத்தை யடையா திருப்பீராயின் மேன்மை யடைவீர்கள், கெடுதலையான சேஷ்டைகளை யெப்பொழுதுஞ் செய்யவேண்டாம், சர்வ பூதங்களிலும் ஏகாத்மாவாகி சர்வேஸ்வர னிருப்பார், கர்வத்தை விட்டு ஒருவருக்குந் தொந்தரை யிடா திருங்கோ ளென்றுசொல்ல ஜங்கமர்கள் உமதிஷ்டப்படி யிருப்போமென்று சரணங்களைப் பிடிக்க ஜங்கம குருவை சாங்கதேவர் ஆலிங்கனஞ் செய்து அவ் விடத்தை விட்டுப் புறப்பட்டார்.

அனந்தரம் பீதர்பட்டணத்திற்குப் பிரயாணமாகி வழிநடந்து பட்டண சமீபமான ஓர் தோட்டத்தி லிறங்கி அவ்விடத்தராடி பலஹாரத்தைக் கொண்டு தாளவீணைகளை யேந்தித் தாமோதரனைப் பாடிக்கொண்டு ஸ்ரீஹரி கதைகளைச் சொல்லத் தொடங்க அதைக்கேட்க அநேகர் வந்தார்கள். அப்பட்டணத்தி லிராஜனிட மிருக்கும் ஜோசியரும்வந்து கேட்டுக்கொண் டிருந்தார். ஓர் ஜாமம் வரைக்கு மவர் விடமிருந்து ஹரிகதை நடத்திய பின் சாங்கதேவரைக் கண்டு இவ்வூ ரரசன் விஷ்ணு கோவில்களைக் கெடுத்து வருகிறான். பண்டரிபுரத்து சன்னிதி துலுக்கர் கையிற் பிடிபட்டதாயிற்று. அவ்விடத்தில் மசூதி கட்டுகிறார்கள். அவ்வூரிலுள்ள பிராம்மணர்கள் பாண்டுரங்கருடைய விக்கிரகத்தை ஒளித்துவைத்துக் கொண்டார்கள். இப்பொழுது கடின காலமாயிற்று. நீர் செய்யும் மிருதங்க வாத்தியங்களை அரசன் கேட்பானாகில் மிகுதியான தொந்தரை யுமக்கு நேரிடும்படி செய்வான். ஹரிபக்தர்களைத் துரத்துகிறான். ஹிதமானச் செயலெவ்வளவுங் காணப்படவில்லை. ஆயினு மிப்பொழுது அரசனுக்கு அமிதகஷ்டம் வந்திருக்கின்றது. அவன் மனையாட்டி நேற்றையதினம் பாம்புகடியால் மரணமடைந்தாள். அநேக வைத்தியர்கள் வந்து பார்த்து மவளெழுந்திருக்கவில்லை. அதனா லவ்வரச னிப்பொழுது அமிதமான கிலேசத்தி லமிழ்ந்திருக்கிறா னென்றுசொல்லச் சாங்கதேவ ரதைக்கேட்டு பாண்டுரங்கர் கிருபையால் பிரேதத்தை எழுப்புகிறேன், அரசனிடஞ் சென்று இதைச் சொல்லும்படி வேண்டினார். ஜோசியர் சம்மதித்து வுடனே அரசனிடஞ் சென்று சங்கதியைச் சொன்னார். அரசனு மதைக்கேட்டு சாங்கதேவரை யழைத்து வரும்படி மனிதரை யனுப்பினான். அவர்க ளவரிடம்வந்து அரசனுக்கினையை அறிவிக்கச் சாங்கதேவர் தன் சிஷ்யர்களுடன் ஸ்ரீஹரி நாமத்தைப் பாடிக்கொண்டு வாத்தியகோஷங்கள் முழங்க அரசனிடம்வந்தார். அவன் அவரை நமஸ்கரிக்காமல் கர்வமுடையவனாயிருக்க சாங்கதேவர் விபூதியை கையிற் கொண்டு அவ்விடத்திலேறிய அரசன் கண்களுக்கவர், துலுக்கர் தொழும் ஸ்வாமியைப் போலத் தோன்றினார். உடனே அரசன் நமஸ்காரம் பண்ணி மனையாளை யெழுப்பும்படி கேட்டான். சாங்கதேவ ரப்பொழுது விபூதியை கையிற் கொடுத்து அந்த ஸ்திரீயினுடைய நெற்றியிலிடும்

படிச் சொன்னார். அதனை அரசன் கொண்டுபோய் அவன் மனையாள் நெற்றியில் வைக்கப் பிரேதமாயிருந்த வவளெழுந்திருந்து கூச்சலிட வாரம்பித்து பித்தேறினவள்போல் சேஷ்டைகளைச் செய்ய அரசன் பெருத்த கிலேசத்துடன் சாங்கதேவரிடம் வந்து சங்கதியை யறிவித்தான். இதைக்கேட்டு சாங்கதேவ ரரசனைக்கண்டு உன்மனையாளுடைய வாஞ்சை யேதோ அதனை சொல்லச்சொல்லி கேளென்றார். அரச னந்தப்படியே தன்மனையாளிடஞ் சென்று உன்னிஷ்ட மேதோ தெரியப்படுத்தென்று கேட்க அவளரசனை நோக்கி இவ்விடத்திற்கு வந்திருப்பவர் பாண்டுரங்கருடைய பக்தராவார். அவரிஷ்டத்தைத் தீர்த்து அனுப்பும்படிச் சொன்னாள். அதைக்கேட்டு சாங்கதேவரிட மரசன்வந்து என்னவேண்டுமென்றுகேட்க அவர் திரவியமேதுவு மெனக்கு வேண்டாம். பண்டரிபுரியிலிருக்கு மாலயம் ஸ்ரீ பாண்டுரங்க மூர்த்தியின் ஸ்தானமாகும். அதனை நீங்கள் வசப்படுத்திக்கொண்டு துராசாரத்தைசெய்தபடியால் ஆபத்துக ளுனக்கு நேர்ந்தது. துலுக்கருடைய தொந்தரை இனி யெப்பொழுது மவ்விடத்தில் நேரிடாதபடி தஸ்தாவேஜு ஒன்றெழுதி மொஹர் செய்துக் கொடுக்கவேண்டுமென்று கேட்டார். இதைக்கெட்டு அரசனப்படியே யொருதாகீது யெழுதச்சொல்லி தன்னுடைய ராஜமுத்திரையிட்டு சாங்கதேவருக்குக் கொடுத்து அனேக விதங்களா லவரைப் பூஜித்து சேவகரைக்கூடக்கொடுத்து வழிகூட்டி அனுப்பினதனால் சந்தோஷத்துடன் சாங்கதேவர் பண்டரிபுரத்திற்கு வந்தார்.

அரசனுடைய சேவகரையும் தாகீதையுங் கொண்டு இரண்டொருநாளி லவ்விடத்திய சர்வகாரியங்களையுஞ் சரிப்படுத்தி தேவாலயத்திற் பண்டரிநாதரைத் திரும்பியும் ஸ்தாபித்து சம்புரோக்ஷணையை மேன்மையாகச் செய்தார். எப்பொழுதும்போல ஹரிதாசர்கள் ஈஸ்வரனுடைய நாமத்தைப் பெருத்த ஓசையுடன் அச்சுதா! கிருஷ்ணா! கோவிந்தா! விட்டலா! பாண்டுரங்கா! என்று கொண்டாடினார்கள். பிராம்மணர்க ளனைவரும் சாங்கதேவரைப் புகழ்ந்து ஹரிமஹிமைகளைக்கண்டு ஆனந்தமடைந்தார்கள் சாங்கதேவர் ஸ்ரீஹரியை யுபசரித்து ஒராண்டவ்விட மிருந்தார்.

ஒருநாள் சாங்கதேவர் பாண்டுரங்கரை நோக்கி ஸ்வாமி! அடியேனுக்குச் சமாதி எவ்விடத்தி லருளுவீரென்று கேட்கப்

பெருமாள்வரை நோக்கி கோதாவரி தீரத்திற்கே போகக்கடவாய் உனக்குபதேசித்த ஷடாக்ஷரத்தை உன் பிள்ளைகளுக்குஞ் சொல்லவும், இதனால் சம்பிரதாயம் பெருகிவரும் என்றார். இதைக்கேட்டுச் சாங்கதேவர் பாண்டுரங்கருடைய திருவடிகளுக்குந் தெண்டஞ் சமர்ப்பித்து கனிந்த மனதையுடையவராய் அனேகப்பிரகாரங்களாக ஹரிசர்வேஸ்வரனைத் தோத்திரங்கள் செய்து பண்டரிபுரத்தைவிட்டுப் பிரயாணப் படுவதற்கெத்தனிக்க அவ்விடமிருக்குஞ் ஜனங்க ளனைவரும் அனேக மரியாதைகளைச் செய்தார்கள் பாண்டுரங்கரிடம் பூர்ணபக்தியுடன் சாங்கதேவர் நிஜநிவாசத்திற்குப்போகப் பிரயாணமானார்.

கோதாவரி தீரத்திற்குச் சாங்கதேவர் வந்து தன் குமாரனை கேசவனை யழைத்து ஷடாக்ஷர மந்திரத்தை யவனுக் குபதேசித்து அதனை யிரண்டாவதுபுத்திரனுக் கிட்டலனுக் குபதேசிக்கும்படி ஆக்கினை செய்து இதைக்கொண்டு லோகத்திற்கு ஹிதத்தைச் செய்யும்படி ஈஸ்வர ஞாக்கினையைத் தெரிவித்து அனேக பக்தர்கள் கூடியிருக்க அனைவரையும் நமஸ்கரித்து சாங்கதேவர் பின்பு சமாதியில்நின்றனர். அப்பொழுது சகலரும் "ஜயவிட்டல" வென்று கைதட்டி ஹரிநாமத்தைக் கொண்டாடினார்கள். அன்று ஹரிகீர்த்தனையை அனேகர் செய்தார்கள். பன்னிரண்டு வருஷங்கள் கழிந்தபின் திரும்பி அவர் வெளிவந்து இரண்டாவது பிள்ளைக்குத்தான் மந்திரோபதேசத்தைச் செய்து அண்ணனுக்குந் தம்பிக்குமிருந்த விரோதத்தைப் போக்கி அந்தர்த்தான மானார். இரண்டாவது குமாரனுடைய சந்ததியால் ஸ்ரீஹரிபக்தி பிரபலத்திற்கு வந்தது. ஏழுபுருஷர்க ளானபின்பு கோனேரி யென்பவன் சாங்கதேவருடைய அம்சத்தாற் பிறந்து சன்னிதியை ஜீர்ணோத்தாரணஞ் செய்வித்தான்.

ஸ்ரீஹரிதாசர்களுடைய மஹிமைகள் இவ்வளவென்று சொல்ல அளவிடக் கூடாததாயிருக்கின்றன.

---

(இம்மட்டும் தெலுங்கு பக்தமாலையிலுள்ள வடதேசத்து பக்தர்கள் சரித்திரங்கள் முடிவு பெற்றன.)

---

# பத்ராசல ராமதாசர் சரித்திரம்.

நெல்கொண்டவெனும் கிராமத்தில் நியோகிப் பிராம்மணர்
களில் ஆத்ரேயச கோத்திரரான லிங்கன்ன ரென்பவருக்கும் கா
மாம்பா வென்னும் அவர் பாரியாளுக்கும் பெருமாளுடைய வரத்
தால் ஓர் பிள்ளை பிறந்தது. பிறந்த பன்னிரண்டாவது நாள்
பிராம்மணர்களெல்லோருங்கூடி அப்பிள்ளைக்கு கோபன்னனென்
று நாமகரணஞ் செய்து ஆசீர்வதிக்க தாய்தந்தைகள் அக்குமா
ரனை லலிதமாக வளர்த்து யுக்தமான காலத்தில் உபநயனத்தை
நடத்தி வித்தியாப்பியாசஞ் செய்வித்தார்கள். ஓரிடத்தில் ராமா
யண கதாப்பிரசங்கம் நடக்க ஏழுவயதில் அப்பிள்ளை அதனைக்
கேட்டு ஐயோ! நான் இராமர் பிறந்த காலத்தில் பிறவாமற் போ
னேனே! நான் அப்பொழுது பிறந்திருப்பேனாயின் சுக்கிரீவன் முத
லானவர்களுடன் கூடி ஸ்ரீராமபிரானுக்குச் சேவைசெய் திருப்பேனே!
என்றிவ்விதமான நினைப்புடையவராய் இராமபக்தி நெஞ்சிற்பட்டு
கௌமார பருவத்தை யடையுமளவில் சகல சாஸ்திர சாரங்களை
யறிந்து நீதி நிபுணராயிருத்தலை தாய்தந்தைகள் கண்டு சந்தோஷ
சித்தராயிருந்து சிறிதுகாலங் கழிய இவர்கள் திருநாட்டுக் கெழுந்
தருளினார்கள். பின்பு பந்துக்கள் கூடி அப்பிள்ளைக்கு விவாஹஞ்
செய்வித்தார்கள். கோபன்னர் கிரகஸ்த தருமத்தை யவலம்பித்
து இராமபிரானைப் பூஜித்துக்கொண்டு ஆசாரிய கடாக்ஷத்திற்
கெதிர்பார்த்திருந்தார்.

[illegible] ய கோபன்னர் வீற்றிருக்கும் வீட்டிற்
கருகில் [illegible] ராமபஜனை செய்துகொண்டு ஆனந்தத்
துட னிருந்தார். அவ்வீட்டிற்கு கோபன்ன ரெழுந்தருளி ஆர்த்
தியுடன் செய்யும் அந்த பஜனையை கேட்டு அவர் மகாத்துமாவென்
றறிந்து அவரிடத்தில் அன்புபெருகி அடியற்ற மரம்போ லவர் சமீ
பத்தில் நின்றிருந்தார். அந்த மஹாத்துமா கோபன்னருடைய முகக்
குறிப்பினால் அவர் வைலக்ஷண்ணியத்தைக் கண்டு உத்தமகுணங்
களுடையவரென் றறிந்துகொண்டு அவர் பஜனை முடிந்தவுடன்
கோபன்னரை ஏகாந்தத்திற் கழைத்து உனக்கு ரக்ஷகமாகு
மொன்றைச் சொல்லுகிறேன் அதை நீ அனுஷ்டிக்கக் கடவை யெ



రామదాసు. తానీషా. పెద్దదాసు. రాజు. విఠోబా. పురందరదాసు.

இராமதாசர். தானேஷா பெத்ததாசர். அரசன். விடோபா. புரந்தரதாசர்.

ன்று ஸ்ரீராமதாரக மந்திரத்தை யுபதேசித்தருளி அவ்விடத்திற் றங்காமல் சென்றனர். இப்படி அனுக்ரஹித்துச் சென்றவர் மஹானுபாவரான கபீர்தாஸர், அவர் காசியிலிருந்து சேது யாத்திரைக்குச் சென்றபோது தெய்வயோகத்தால் வழியிற் கோபன்னருக்கு கடாக்ஷ வீக்ஷணத்தைக் காட்டிச் சென்றார்.

எம்பெருமான் நிர்ஹேதுகமாக அருள்புரிந்தாரென்று கோபன்னர் ஆனந்தத்தை யடைந்து மந்திரானுஷ்டானத்தி லிடைவிடா முயற்சியுடையவராய் வெகுகாலஞ் ஜபித்துவர அதினுடைய மஹிமையை இவர் கண்டறிந்து அதனால் தான் தன்னியனதை யடைந்ததாகவும் இந்த மந்திரம் எமதூதர் விஷயத்திற்கு மிருத்தியு சமானமென்றும் இதைப்பெற்றபின் இதரானுஷ்டானங்களி லிச்சையற்றதென்றும், திவ்யதேச யாத்திரைகளைச் செய்ய அவசியமற்றதென்றும், பர்வகாலங்களில் உபவாசங்க ளிருக்க அவசியமற்றதென்றும், எத்தனைகால மாராய்ச்சி செய்யினும் ஏகனுகிய நாராயணனைத் தவிர வேறொருவ னில்லையென் றறியப்பட்டதென்றும், எல்லா மவனுருவங்களா யிருக்குமவனுடைய சரித்திரங்களைக்கேட்டு அவன் கலியாணகுணங்களி லீடுபட்டால் அனந்தஜன்மங்களிற் செய்த பாபங்கள் தொலைந்து பிறப்பறு மென்றும், அந்தர்லக்ஷியத்தில் ஆத்மபாவனை பொருந்தி ஹரிசர்வேஸ்வரனை அநுபவிக்கும் ஆனந்த மடையப்படு மென்றும் காரணங்கள்விடுபட்டுமோக்ஷ சத்கதியை கண்ணூரக் காணப்படுமென்றும், இதுயாவு மிராம பிரானுடைய திருவருளென்றும் தன் னனுபவத்தைச் சொல்லி இராமநாமத்தை இடைவிடாது ஸ்மரித்து வருவார்.

இவ்விதமாகக் காலயாபனஞ் செய்துக்கொண்டு தருமநெறியில் நிற்க ஓர் குமாரன் பிறந்தான். பிதுரார்ஜிதமான பொருளனைத்தும் சத்கருமங்களில் செலவாய் விட்டதால் உதரபோஷணத்திற்கு உஞ்சவிருத்தி செம்மையா மென்று ஸ்ரீ ஹரி தாசர்களுடன் சேர்ந்து பிக்ஷையெடுக்க இச்சித்தார். பிராம்மணராகவிருந்தும் இவர் முன்னோர்கள் லௌகிக விருத்திகளிற் ஜீவனஞ் செய்து வந்தவர்களாதலால் ஜனத்தார் இவரை பிக்ஷையெடுப்பதாயுக்தமன்றென்று ஆக்ஷேபிக்க உணவுமுதலியவைகட்கு விசேஷப் பிரயாசை யடைந்திருந்தார். கோபன்னரிந்த தொந்தரையை கருமதந்திரமென் றறிந்து அதனை உபேக்ஷித்து முயற்சியா

வும் முராரிபஜனைமேல் வைத்து அபேக்ஷையுட னதை அவலம்பித்திருந்தார். கட்டுவதற்கு கந்த இல்லாமையும் உண்பதற்கு உணவில்லாமையும் ஊராரனைவரும் பார்த்து விசேஷ கனிகரத்துடன் கண்ணீர் விட்டிருந்தார்கள்.

ஒருவருடை காலமிப்படிசெல்ல ஐதராபாதெனும் பட்டணத்தில் கோபன்னருடைய மாமன்மார் அக்கன்ன மாதன்ன என்பவர்கள அப்பட்டணத்திற் கரசனான தானேஷா இடத்தில் மந்திரிகளா யிருப்பதை யறிந்து கோபன்ன ரவர்களிடஞ் சென்று தன் வரலாற்றைத் தெரியப்படுத்தி ஜீவனோபாயத்தை வேண்டினர், மாமன்மார்இவருடைய சுகுண சம்பத்தியைக் கண்டு சந்தோஷித்து அரசனிடத்திலவரைக் கொண்டுபோய் விட்டார்கள். கோபன்னர் அரசனுக்கு வழக்கப்படி வந்தன வழிபாடுகள் செய்து எதிரில் நின்று தான் வந்தகாரியத்தை விளம்பரப்படுத்த அரச னிவருடைய ரூப லாவண்ணியங்களையும் வாக்கிய சரளியையுங் கண்டு மேன்மை பொருந்தினவ னென்றும்குணசாலியென்றுமறிந்துமந்திரிகளைநோக்கி எத்தொழிலுக் கிவர் உருப்பாவாரென்று கேட்க, அவர்கள் டில்லீபிரபுத்வத்திற் சேர்ந்த நம்முடைய வரசாக்ஷியில், பத்திராசலமெனுந் தாலூகாவிற்கு அதிகாரியாகச் செய்தனுப்பலா மென்றார்கள். அரச னதற்கு சம்மதித்து அவ்விடத்திற்கவரை அனுப்பும்படி உத்தரவு செய்ய இராஜமுத்திரையுடன் கோபன்னருக்கு அதிகார பத்திரத்தைக் கொடுத்து பிரஜைகளுக்குத் தொந்தரையின்றி தேச பரிபாலனஞ் செய்து பகுதிபணத்தை பால் குறையாமல் பிரபுவான அரசனுக் கனுப்பவேண்டு மென்று திட்டப்படுத்தி மந்திரிக ளவ்வூருக் கனுப்பினர்கள். கோபன்னர் சந்தோஷத்தை யடைந்து பத்திராசலமெனும் வூரைச்சேர்ந்து பிராட்டியுட னவ்விடம் வீற்றிருக்கும் ஸ்ரீராமபிரானைச் சேவித்து அதிகாரச்சாலையி லெழுந்தருளி குடியானவர்களை யழைத்து அவர்களுக்கு ஹிதங்களைச் சொல்லி ஸ்ரீராமபஜனையால் சேரும் நன்மைகளையு மறிவித்து வருஷந்தோறும் தப்பாமல் வாடிக்கையான திரவியத்தை அரசன் பகுதிக்காகக் கட்டவேண்டுமென்று சொல்லி அவர்க ளனைவரையுந் தன் பிள்ளைகளைப்போலப் பாவித்து தன் னதிகாரத்திற்குள் ளடங்கிய கிராமங்களை தயா தாக்ஷிண்யத்துடன் பாலித்து வந்தார்.

இப்படி சிருடன் கோபன்னர் அந்த தாலூக்காவை பரிபாலித்து வெகுநாள் பாதுஷாவுக் கனுப்பவேண்டிய பணத்தை வருஷந்தோறும் தப்பாம லனுப்பிக்கொண்டும் பிரஜைகளைப் பரிபாலிப்பதில் மேன்மையான பேரை வஹித்துக்கொண்டு மிருப்பதை அரசன் கேட்டு இவர்மேல் அதிகப் பிரீதியுடையவனாயிருந்தான். கோபன்னர் பகவத் பாகவத கைங்கரியத்திலு மீடுபட்டு தானமுந் தருமமும் பரோபகாரமும் அவ்விடத்தி லுகந்தருளின நிலத்தி லதிகப் பிராவண்ணியமும் அடிக்கடி ததியாராதனை ஹரிப்பிரீதியாகச் செய்வதும் இராமநாம ஜபமும் அவர் மேல் கவித்வரசனைகளை கனிகரமாகச் செய்தும் லோகோபகாரமாக விருந்தார்.

ஒருநாள் அனேக பிராம்மணர்களுக்கு கோபன்னர் போஜனமளித்துக்கொண் டிருக்குஞ் சமயத்தில் அவருடைய பாலகன் விளையாடிக்கொண்டு தாயார் சமையல் வீட்டிலிருக்க அவ்விடஞ் சென்று அகஸ்மாத்தாகக் கொதித்துக்கொண் டிருக்கும் தைலபாத்திரத்தில் விழுந்து பிராணனை விட்டான். அவ்வேளையில் தாயார் தைரியத்தை விடாமல இச்செயல் ததியாராதனைக்கு விக்கினமா மென்றெண்ணி தன் பர்த்தாவுக்கு இச்சங்கதியை யறிவிக்காமல் மரணமான பிள்ளையை மறைத்து வைத்து அனைவரும் புசித்தபின்பு அச்சங்கதியைத் தெரிவித்தாள். கோபன்னர் தெய்வகதி யடைந்த தன் குமாரனைப்பார்த்து ஸ்ரீராமபிரானை உத்தேசித்து ஓ ரகுகுலதிலகரே! ராவணாந்தகரே! பயநிவாரகரே! பக்தபூஷணரே! அடியேனுக்குத் தேவரீர் தாயுந் தந்தையுமாயினீர். இவனொன்று மறியாத பாலகன் இவன்மேல் கிருபைசெய்யவும், இராம ராஜ்ஜியமான தேவரீ ரரசாக்ஷியில் ஓர் பிராம்மண குமாரன் பரலோகத்தை யடைய தேவரீர் கொலுமண்டபத்தி லச்சவத்தை தகப்பன் கொண்டுவந்து முறையிட அவன் முறையைக் கேட்டு அந்தபுத்திரனை ஜீவந்தனுக்க வில்லையோ! அடியேன் தேவரீருடைய தாசன் வேறுகதியில்லாதவன் தேவரீருடைய சஞ்சீவனமான நாமமே அடியேன் சகலமு மென்றிருப்பவன் இப்பாலகனை ஜீவந்தனாகச் செய்யக்கடவீர். ஓ ரகுராமா! ஓ பரமபுருஷா! என்று கண்களில் ஜலம்பெருக பிரார்த்திக்கத் தொடங்கினர். பகவான் கருணை யுடையவராகி அப்பிள்ளையை ஜீவிதனாகும்படி கடா

க்ஷித்தார். உடனே அவன் தூங்கி யெழுந்திருந்தவன்போல் புனர்ஜீவித னானான்.

இவ்வண்ணமாக அனேக சத்கர்மாசரணங்களுடன் கோபன்னர் பத்ராசலத்தில் வீற்றிருக்குங் காலத்தில் அரசனுடைய திரவியம் ஆறுலக்ஷம் வராஹன், பணப்பெட்டியிற் சேர்ந்திருந்தது. ஒருநாள் அவர் சன்னிதியிற் சென்று பெருமாளை பிரியத்துடன் சேவித்து வெகுநேரம் தியானத்திலிருக்க சன்னிதி ஜீர்ணோத்தாரணஞ் செய்யவேண்டுமெனும் சங்கல்ப முதயமாயிற்று.

இதற்கு வெகுகாலத்திற்குமுன் பத்ராசலத்தி னருகிலிருக்குமோர் கிராமத்தில் தம்மல்தம்மக்கா எனுமோர் பெண்பிள்ளை வாசமா யிருந்தாள். அவள் சுசிலையாயும் நல்லொழுக்கமும் பகவத்பக்தியு முடையவளா யிருந்தமையால் பெருமாள் அவள் சொப்பனத்திற் சென்று தான் பத்ரகிரி சிகரத்திலிருக்கும் இராமபிரானென்றும் பிரஜைகளுக் கிதனை விளம்பரப் படுத்தி பூஜையை நடப்பித்து வருவாயென்றும் இப்படி செய்வையேல் சத்பதவியை யடைவாயென்றுஞ் சொல்லி மறைந்தனர். உதயமானபின் தம்மக்கா ளெழுந்திருந்து வூரா ரனைவருக்கும் சொப்பனத்தின் சங்கதியைத் தெரியப்படுத்தி அவர்க ளனைவருடன் அன்றைய தினமே மலைமேலேறி பரிசோதித்து பார்க்குமளவில் ஓரிடத்தில் கொடிகளாலும்செடிகளாலும்மூடப்பட்டுசீதாராமலக்ஷ்மண விக்கிரகங்களையிருக்கக்கண்டார்கள். சகலரு மானந்தமடைந்து உடனே சம்புரோக்ஷணை முதலாகிய வெல்லாஞ் செய்வித்து பிரதி தினமும் பூஜைசெய்யவாரம்பித்தார்கள். கிராமாதிகாரியான பத்திரரெட்டி யென்பவன் சில கிராமஸ்தர்களைச் சகாயமாகக் கொண்டு ஒரு சின்ன ஆலயமும் மண்டபத்தையுங் கட்டிவைத்து அதில் பெருமாளை பிரதிஷ்டை செய்வித்து பிரம்மோத்சவம் முதலானவைகளை செய்வித்துக் கொண்டிருந்தான்.

அந்த ஆலயங்கட்டி வெகுகால மானதால் அதனை செம்மை செய்யவேண்டுமென்று கோபன்னர் சங்கற்பித்து ஒரு நாள் தன் வீட்டிற்குகுடியானவர்களை யழைத்துசொல்லுவார் மானிடப்பிறவி அருமையானது, மரணமடையாமுன் மாதவனைப் பஜித்து ஹிதத்தைத் தேடிக்கொள்ளவேண்டும் இல்லையாகில் ஜன்மமரணப் பிரவாஹத்தில் விழுந்து விடுவோம்; ஆனதால் ஸ்ரீராமபிரான் திருவடி

யைத் தொழுது உஜ்ஜீவனத்தைத் தேடவேண்டும். ஸ்ரீராமருடை-ய சன்னிதியை ஜீர்ணோத்தாரணஞ் செய்யவேண்டுமென்று எண்ணங் கொண்டேன். நீங்களனைவரு மதற்கு சஹாயமாகக் கடவீர்களென்று கேட்க அவர்க ளனைவரும் சந்தோஷித்து சம்மதி வசனத்தைக் கொடுத்தார்கள். உடனே கோபன்னர் சிற்பிகளை வரவழைத்து ஆலய மண்டபங்களைக் கட்டவாரம்பித்து அநேக வேலைக்காரரைத் தருவித்து வேலையை நடப்பித்தார். தன் சொந்த திரவிய மனைத்தும் செலவாய்விட்டது. தன்னிடமிருந்த இராஜதிரவியத்தை இராமபிரான் விஷயமாக செலவழித்தால் மேன்மையாமென்று பயமின்றி பிராகாரங்களும் மண்டபங்களும் கோபுரங்களும் விமானமும் இன்னும் பெருமாள் கயிங்கரியத்திற் கனுகூலமான இரதம் வாஹனங்கள் சத்ர சாமரங்கள் ஆபரணாதிகள் முதலான வனைத்தையும் செய்வித்தார். இவையாவையுங் கொஞ்சகாலத்திலேயே ஏற்பாடுசெய்து இராஜனுடைய ஆறுலக்ஷ வராஹன்களையும் விரயப்படுத்தி சங்கல்பம் நிறைவேறிற் றென்று சந்தோஷ சித்தராயிருந்து பெருமாள்மேல் நூதன கிருதிகளைச் செய்து விசேஷமாகக் கொண்டாடினார்.

அப்பொழுது கிராமவாசிக ளனைவரும் ஸ்ரீராமபிரான் சன்னிதி சீர்பட்டதென்றும், புதிய கட்டடங்கள் பூர்த்தியாயிற் றென்றும் கோபன்னர் தர்மாத்மா வென்றும் சொல்லிக்கொண் டிருந்தார்கள். எவரேனு மிராஜத் திரவியத்தை யிப்படி செலவு செய்தது சரியல்ல வென்று லது இராம கயிங்கரிய மாதலால் பகவானை நம்பினவர்களுக் கவர் விபத்துக்களை வரவொட்டாரென்று கோபன்னர் சொல்லிக்கொண்டு பெருமாளுக்கு பிரம்மோச்சவம் மாசோச்சவம் முதலானவைகளைச் செய்து சந்தோஷத்தை யனுபவித்துவந்தார்.

ஐதராபாது நகரத்தில் கணக்காளிகள் இராஜ்யத்தின் வரவு செலவு கணக்கை பரிசோதிக்கு மளவில் பத்ராசலத்தி லிருந்து ஆறுலக்ஷம் வராஹன்கள் வஸூலாகாம லிருப்பது தெரியவந்து கோபன்னருடைய மாமன்மாரான அக்கன்ன மாதன்ன ரென்பவர்கள் ஆப்தனான ஒருவனை கோபன்னரிடம் அனுப்ப, அவன் அவரிடம் வந்து இராஜத்திரவியத்தை யேன் அனுப்பவில்லையென்று கேட்க, கோபன்ன ரவனைநோக்கி ஸ்ரீராமர் கயிங்கரியத்தில் திரவிய

மனைத்தையுஞ் செலவழித்தேன். பெருமான் கடாக்ஷம் நேரிடுமாயின் பொருளைக் குறைவின்றி செலுத்தி விடுகிறேனென்று சொல்ல, அவன் விசனத்தையடைந்து வந்தவழி சென்று மந்திரிகளுக் கறிவிக்க அவர்கள் வருத்தமுற் றிருந்தார்கள். பத்ராசலத்தில் கோபன்னருடைய பந்துஜனங்களும் சிநேகிதர்களு மவரை நோக்கி இராஜத் திரவியத்தைச் செலவழித்தது சரியன்று, நீர் யோசிக்கக்கடவீரென்று வற்புறுத்திச் சொல்ல அவர் பெருமானை நம்பினேன் அவர் திருவுள்ளப்படி நடக்கட்டுமென்றார்.

இது இப்படியிருக்க நகரத்தில் உத்தியோகஸ்தர்களில் சிலர் தாரா பதியான தானேஷாவினிடஞ் சென்று கோபன்னர் இராஜ திரவியத்தினால் நடத்திய செலவுகளை யாவும் செவியேற்கச் செய்தனர். இதைக் கேட்டவுடன் அரசன் கோபங்கொண்டு உடனே சேவகர்களை யனுப்பி கோபன்னரையும் இராஜ திரவியத்தையுங் கொண்டுவரச்செய்யக் கட்டளை யிட்டான். மந்திரிக ளவ்வாறே யமதூதர்களுக்குச் சமானர்களான இரண்டு துலுக்கசேவகர்களை யனுப்ப அவர்கள் பத்திராசலத்திற்குவந்து கோபன்ன ரிருக்குங் கச்சேரி கூடத்திற் சென்று அவரைநோக்கி இராஜனுடைய வுத்தரவை யறிவித்து திரவியத்துடன்கூட வரச்சொல்லி யழைத்து அதிக நிர்ப்பந்தங்களைச் செய்தார்கள். கோபன்ன ரவர்களை நோக்கி என்னை இப்படி நிர்ப்பந்திப்பதற்குக் காரண மென்னவென்று கேட்க, இராஜனுடைய திரவியத்தை இராஜனுக்குக் கொடாமல் வேறுவிதமாகச் செலவழித்தா யாதலால் அரச னதிக கோபமுடையவனா யெங்களை யனுப்பினானென்று உருவின கத்திகளுடன் இருவரு மிருபக்கங்களில் நின்றார்கள். கோபன்னர் சர்வ பரங்களையும் ஸ்ரீராமர் மேலிட்டு உள்ளத்தி லவரையே நினைத்துக்கொண்டு, ஓ இரக்ஷகரே! அடிநாள் தொடங்கி அடியேன் தேவரீர் திருவடியைப் பிடித்தேன். சரணாகதனிருக்கு தேவரீருக்கிக தவிர வேறொருவருக்கு மில்லை, முன்செய்த வினை தப்பாதன்றோ! எவ்வித துன்பம் வரினும் அடியேன் அன்னியரை சேவியேன், தேவரீர் தம்பியுடன் வந்து அடிமையை இரக்ஷிக்கக் கடவீரென்று அநேக விதங்களாகப் பிரார்த்தித்து தன்னிருப்பிடத்தை விட்டு ஐதராபாத் நகரைச் சேர்ந்தார். அரசன் கொலு மண்டபத்தி லவரை வரவழைத்துப் பொக்கிஷத்திற்

சேர்க்கவேண்டிய பணத்தை உடனே செலுத்தவேண்டுமென்ன, கோபன்ன ரரசனைநோக்கி ஐயா! உமது திரவியத்தை பகவத் விஷயத்திற் செலவுசெய்து பிரபல கீர்த்தி யுமக்கு நேரிடச்செய்தேனென்ன அரசன், உமது கஷ்டார்ஜ்ஜித திரவியத்தை எவரப்பிரீதியாகச் செலவுசெய்வதா லப்பிரயோஜனத்தை யடையக்கூடு மன்றி ஒருவர் சொத்தை இப்படிச் செலவழிப்பதல் பிரயோஜன முண்டென்று யாவர் கற்றுக்கொடுத்தாரென்ன, கோபன்னர் ஓ பிரபுவே! பெருமாளுக்குக் கோபுர பிராகார மண்டபங்கள் கட்டின செலவு உம்முடைய ஒருநாள் செலவுக் கிடாகாதென்ன அரசன் அப்படி உத்தரவின்றி செலவுசெய்யக் கூடுமோவென்ன கோபன்னர் தேஹம் அஸ்திர மாகலால் பகவத் கயிங்கரியத்தி லீடுபட்டேனென்ன! அரசன் கோபங்கொண்டு கேள்விகளுக் குத்தரவு நேருதியாகச் சொல்லாமல் அகடவிகடமாகச் சொல்லுகிறீர் மதிமயக்க முள்ளவர் போல் காண்கின்றீர் எமது கருத்து நிறைவேறியீர்போலும் காண்கிறதென்ன, கோபன்னர் மஹாராஜரே! நீர் நியமித்த வேலையில் நியமத்துட னிருந்து பகவானிடத்தில் பக்தியைச் செலுத்தி ஸ்ரீராமர் கோயிலை ஜீர்ணோத்தாரணஞ் செய்தேன், உம்முடையவனு யிருந்து செய்தேனாதலால் அந்தத் தரும முமக்கேயாமென்றுசொல்ல அரசன் யோசித்து இது தனக்கு சுகிருதமாமென்று அறிந்துகொண்டும் கோபன்னரைத் தண்டனை செய்யாவிடில் அன்னியரும் இராஜதிரவியத்தைச் செலவழித்து விடுவார்களென் றெண்ணி ஒருவாரத்திற்குள் திரவியத்தைச் செலுத்தவேண்டுமென்றும் இல்லாவிடில் அதனை செலுத்தும் வரைக்கும் சிறைச்சாலையிலிருக்கவேண்டுமென்று கட்டளையிடச் சேவகர் கோபன்னரைச் சிறைச்சாலைக் கழைத்துக்கொண்டு போனார்கள். அவர் போகும்வழியில் ஜனங்க ளவரைக்கண்டு பெருமாளை நிந்திக்கத் தொடங்கினார்கள். அவரும் சிறைச்சாலையிற் பிரவேசித்து பகவன்னாமத்தைச் சொல்லிக்கொண்டும் தான் அவ்விடத்தில் படுந் துன்பத்தை நூதன கவிகளால் பாடிக்கொண்டும், காற்சேர் உப்பும் காற்சேர் அமுதஞ் சேர்ந்த அன்னத்தால் தேஹபோஷணை செய்துக்கொண்டும் ஒவ்வொரு காலத்தில் சேவகரடித்தால் அவ்வடிகளைப் பட்டுக்கொண்டும், முட்கள் மேலும் கத்திகள் மேலும் வெய்யிற்காலத்தில் காய்ந்த மணல்மேலும் நடக்கச்செய்தால் அதற்கும் பொறுமை

யுடன் சகித்து அவ்வவ் வேளையில் பகவானைத் துதித்தால் தொந்தரை நிவாரணமாவதும் அதனால்தான் நிர்ப்பரரா யிருத்தலும் இராமநாம ருசியைக் கொண்டாடுவதும் அதில் நிமக்னராகி சேஷ்டையற்று வெகுநேர மிருத்தலும் சிலவேளைகளில் ஆனந்தாதிசயத்தால் இராமகுணங்களைப் பாடியாடுவதும் தேள்கொட்டினால் பகவத் கடாக்ஷத்தால் தொந்தரை யடையாம லிருப்பதும் காவலாளிகளுக்கு இராமநாமப் பிரபாவத்தை அறிவித்துக்கொண்டும் பின்னும் பெருமாளை யுத்தேசித்து சிறைச்சாலையி லிப்படி யிருந்து துன்பப்பட காருத்தரான நீர் கடாக்ஷிக்காம லிருப்பது நியாயமா வென்றும் ஓ ராமபிரானே! தேவரீ ரென்னை மீட்காவிடினும் தேவியாராகிய ஜானகி பிராட்டியாரால் மீட்கச் செய்யலாகாதா வென்று முறையிடலும் இதுவும் பயன்படாதிருப்பதால் தானே பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு ஓ ரமாமணியே! ஜகன் மோஹினியே! பெருமானுக் கென்வரலாற்றைச் சொல்லி இச்சிறையிலிருந்து மீட்கும்படி பிரார்த்தித்துக்கொண்டும் வெகுகாலம் சிறைச்சாலையில் கழித்தார். "பிராட்டி இவர் முறையைக்கேட்டு பெருமாளை நோக்கி ஓ ஸ்வாமீ! தேவரீர் பக்தபோஷக ரென்றும் பதிதபாவன ரென்றும் ஆர்த்தபந்து வென்றும் திருநாமத்தை வகித்தீர், அவ்விருதுகளுக்குச் சரியாக அனேக பக்தர்களைக் காப்பாற்றினீர், இப்பொழுது கோபன்னருடைய ஆர்த்தியைக் குறைதீர நிறைவேற்றக் கடவீரென்று பிரார்த்தித்தாள். ஸ்ரீராமரிதைக்கேட்டு சௌமித்திரியுடன் சேவகரைப்போல் வேஷத்தைத் தரித்து கோபன்னர் இராஜனுக்கு செலுத்தவேண்டிய திரவியத்தை யெடுத்துக்கொண்டு தானேஷா அரசனிடஞ் சென்றனர். அந்தத் தின மிரவில் பெருமாள் ரக்ஷித்தருளாவிடில் கோபன்னர் பிராணத்தியாகஞ் செய்துக்கொள்ள யத்தனித்து கிண்ணத்தில் விஷத்தை சித்தப்படுத்தி வைத்திருந்தார். தானேஷாவும் தன் சொப்பனத்தில இரண்டு சேவகர்கள் கோபன்னர் செலுத்தவேண்டிய திரவியத்தைக் கொடுத்து கைசீட்டு கொண்டுபோனதுபோல் கண்டு கலங்கிநிலிக்குச் சொல்லிக்கொண் டிருந்தான், அப்பொழுது விடியற்காலத்திற்கு ஏழுநாழி பொழுதிருந்தது.

இரவுகாலமான நடுச்சமயத்தில் பன்னிரண்டு காவலாளிகள் கண்களுக் கறியாமல் பெருமானுந் தம்பியும் அந்தப்புரத்திற் சென்

று அனேக வலங்காரங்கள் சூழ்ந்திருக்கும் அரசன் படுக்கையறைக்குச் சென்று திரவியங் கொண்டுவந்தோம், கதவைத்திறவென்று கதவைத் தட்டினார்கள். அவன் கதவைத்திறந்து திவ்விய சுந்தர ரூபங்களுடன் விளங்கு மிருவரைக்கண்டு வியப்புற்று பாரமான திரவியத்தையுங் கண்டு நீங்க ளெவ்விட மிருப்பது? யாரனுப்பினார்? ஏன் வந்தீர்கள்? காவலாளிகளை யெப்படி கடந்துவந்தீர்கள்? என்று கேட்டான், அதற்குப் பதிலாகப் பெருமாள் நாங்களிருப்பது பத்ராசலம், கோபன்னர் வீட்டில் சேவகா விருத்தியை யவலம்பித்தோம். அவர் செலுத்தவேண்டிய திரவியத்தை யுமக்குச் செலுத்தி அவரைச் சிறைமீட்க வந்தோம். உமது காவலாளிக ளெங்களை காணாதிருந்தனர். திரவியத்தைக் கைக்கொண்டு கைச்சிட்டைக் கொடுக்கச்சொல்லிக் கேட்டார். அரசன் பின்னு மவர்களைநோக்கி உங்களுடைய பெயரென்ன? குலமென்ன என்று கேட்கபெருமாள், என்பெயர் ராமோஜியென்றும் இளையோன் பெயர் லக்ஷ்மோஜியென்றும் நாங்கள் சூரியகுலத்தோரென்றும் சொல்லிதிரவிய மனைத்தையு மவனுக்கு ஒப்புவித்து கைச்சீட்டுக்காக அரசனை நோக்கி நின்றார்கள். அவன் இவர்களுடைய திருமேனிகளையும் லாவண்ணியத்தையும் பார்த்து சந்தன குசுமங்களால் பூஜிக்கவேண்டு மென்று எண்ணங் கொள்ளப் பெருமா ளதை யறிந்து அவைகளை வேண்டாமென்று கைச்சிட்டை மாத்திரம் பெற்றுக் கொண்டு பெருமாள் தானேஷா வரசனைப்போல வேஷத்தைத் தரித்து கோபன்னரிருக்கும் சிறைச்சாலைக்கு வந்தார். அவ்வேளையில் அவர் ஸ்ரீ ஹரி இரக்ஷிக்க இன்னம் வரவில்லையே! யென்று சிந்தா ஸ்துதிகளை சொல்லிக்கொண்டே மானச பூஜையில் நிமக்னராயிருந்தார். பெருமா ளவ்விடஞ்சென்று கிண்ணத்தி லிருக்கும் விஷத்தை கீழே கொட்டிவிட்டு அவருடைய பக்திக்கு மெச்சி ஓ ராமதாசரே! யென்று பெயரிட்டழைத்து நீர் கொடுக்கவேண்டியதிரவியம் சேர்ந்தது இதோ கைச்சீட்டைப் பெற்றுக்கொள்ளுமென்றுசொல்லி அதனை கொடுத்து தம்பியுடன் கூடி அவர்களிருப்பிடஞ் சென்றனர்.

பின்னர் இச்செய்கையை இராமதாசர் கண்டு இது இராமபிரான் செய்த காரியமேயென்று சித்தத்திலெவரை தியானித்து ஓ பரந்தாமா! சீதாபதி! உம்முடைய மாயையை பிரம்மதேவன் முத

லாஞோரதியார்களே! அடியேனெம்மாத்திரம், கருணையுடனென்னைக் காப்பாற்றினீரே யென்று சிருதக்ஞதை யடைந்திருந்தார்.

பெருமாள் தம்பியுடன் வந்து திரவியத்தை தானேஷா அரசனுக்கு கொடுத்ததும், தான் கைச்சீட்டைத்தந்தது முதலான சங்கதிகள் ஏதோ ஒருமயக்கத்தில் நடந்ததைப்போல அரசன் கண்டு தன் பத்தினியைப் பார்த்து தன்னுடைய சொப்பனம் நிஜமாயிற்றென்றும் வந்தவர்கள் புராணபுருஷர்களே யாவார்களென்றும் அறியாமல் மோசம் போனேனென்றும் இப்படியிருந்த அநுதாபத்தை யடைந்து பொழுது விடிந்தவுடன் இராமதாசரை கொலுமண்டபத்திற் கழைத்துவரும்படி கட்டளை யிட்டான். அக்கன்ன மாதன்னனெனும் மாமன்மார்கள் அவ் வுத்தரவைக் கைக்கொண்டு சங்கதியறிந்தவர்களாகி இராமதாசரிடஞ் சென்று இராமரும் லக்ஷ்மணரும் திரவியத்தைக் கொடுத்துப் போனார்களாம் நீர் கொலுமண்டபத்திற்கு வாருமென்று மரியாதையுடன் அரசன் முன்பு அழைத்து வர, உடனே அரச னெழுந்திருந்து அவருக்கு வந்தனஞ் செய்து உமது மஹிமையினால் ஸ்ரீராமமூர்த்தியை நான் கண்டேன் நீர் தன்னியரென்று சொல்ல, இராமதாசர் அரசனை நோக்கி மஹாராஜரே! உமது பாக்கியமே பெரிதாகும், நீர் அனாயாசமாக அவரைப்பார்த்து சம்பாஷித்தீர் உமது புண்ணியமென்னென்று சொல்வேனென்றார். அரசன் சந்தோஷித்தனாகி அந்த பத்ராசல தாலூக்காவை ஸ்ரீராமமூர்த்தியின்பேர்மேல் பட்டா செய்வித்து இராமதாசரை பிரபுவாக நியமித்து பெருமாள் கயிங்கரியத்தி லீடுபட் டிருக்கும்படி கட்டளையிட் டனுப்பினான். பெருமான் தந்த ஆறுலக்ஷம் வராஹன்களையு மவ்விடத்திய விசேஷ கயிங்கரியங்களுக்கு உதவியாகும்படி கொடுத்தான்.

இராமதாசர் அரசனிஷ்டப்படி பத்திராசலத்திற்கு வருகிறவழியில் திருடர்களநேகர் இவரை வழிகட்ட, அப்போது கரதாளத்தைக் கையிலேந்தி ஓ ராமப்பிரபுவே! ரக்ஷியும்! ரக்ஷியுமென்று அவருடைய கலியாண குணங்களை வெகுவாக வர்ணித்து பாடவாரம்பித்த மாத்திரத்தில் பெருமான் இவர் கண்களுக்குக் காணாமல் அத்திருடர்களை வெட்டிவிட்டார். இதற்கு இராமதாசர் பக்தியுடையவராகி அவருடைய பக்தபோஷண தீக்ஷையை வெகுவாக வர்ணித்

தார். பின்பு பரமானந்தத்துடன் நிருத்தியஞ் செய்துக்கொண்டும் பாடிக்கொண்டும் பத்ராசலத்திற் பிரவேசித்து சன்னிதிக்குச் செல்லும்போது ஓ பத்ரகிரீசரே! வெகுகாலத்திற்குபின் இன்றைக்கு உம்மைச் சேவிக்கலாந்தேன் எனது ஜன்மம் சபலமாயிற்று தாயார் கர்ப்பத்தில் மலமூத்திரங்களில் மூழ்கி பூமியிற் பிறந்து பொய் சொல்லிக்கொண்டு பாபகர்மிகளைக் கிட்டி கோபமுடையவனும் பாபமுடையவனும் குணஹீனனும் குரூரனும் குத்ஸிதனுமு மிருந்த அடியேனை ரக்ஷித்தீரே! லோகாலோகங்களுக்கெல்லாம் ஆதாரமான ஆதிபுருஷர் நீர், பிராட்டியுடன் தேவரீரெழுந்தருளி யிருக்குஞ் சேர்த்தியில் சேவிக்க லாயிற்று. அடியேன் தன்னியனானே னென்றார். பின்பு அவ்வூரா ரனைவரும் மேளதாளங்களுடன் எதிர்கொண்டுவந்து இராமதாசருக்கு நமஸ்கரித்தார்கள். அவர் நாமகீர்த்தனைகளைப் பாடிக்கொண்டு சன்னிதியைச் சேர்ந்து பிரதக்ஷணம் வந்து துவஜஸ்தம்பத்தினிடம் நின்று சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து கர்ப்பகிருகத்திற் சென்று சீதாலக்ஷ்மண சஹிதரான இராமபிரானைப்பார்த்து ஆனந்த பரவசராகி கண்களில் ஜலம்பெருக மெய்மறந்து சித்திரபடம்போல சற்றுநேர மிருந்து கத்கத ஸ்வரத்துடன் என்னிராமரை இன்று நான் கண்டேன். பக்த ஜனங்களுக்கு ஓர் பயிரா யிருப்பவர். சிராசமேதர், கோதண்டங் கையி லேந்தினவர். ஸ்யாமளரூபர் கருணாரசத்தைப் பொழியுமவர், புன்சிரிப்பான திருமுகமுடையவர் பீதாம்பரத்தைத் தரித்தவர், அடியேனை யாட்கொண்ட கிருபாமூர்த்தியன்றோ? வென்று தோத்திரஞ்செய் தருளினார். அப்பொழுது அர்ச்சகர்கள் தீர்த்தம் பிரசாதம் ஸ்ரீசடகோபங்களைப் பிரசாதித்தார்கள். பின்பு தனது கிரகத்திற்றுவந்து குணானுபவத்திலும் பகவதாராதன கயிங்கரியங்களிலு மீடுபட்டு சுகமாக வாழ்ந்திருந்தார்.

ஒருநாள் சீதாபிராட்டி பெருமானை நோக்கி அந்தரங்க பக்தரான இராமதாசருக்கு முன்னதாக தரிசனங் கொடாமல் துலுக்கனான தானேஷாவுக்கு தரிசனமேன் தந்தருளினீ ரென்று வினவ பெருமாள் சொல்லுவார், தானேஷா பூர்வஜன்மத்தில் கங்கா நதிக்கு வடக்கே ஓர் சிவாலயத்தில் இந்திரபதவியைவேண்டி ஒரு வருஷகாலம் நியமம்பூண்டு சாம்பமூர்த்திக்கு அபிஷேகஞ்செய்து

வந்தான். ஓராண்டிற்கு ஒருநாள் குறைவாயிருந்தபோது பரமேஸ்வரனந்த லிங்கத்திலில்லையென்று வெறுப்புடன் ஒருஜலகடத்தை ஈசன் சிரசுமேல் போட்டான், உடனே சாமபமூர்த்தி பிரசன்னராகி தாமச புத்தியால் மிலேச்சருய்ப் பிறந்து அரசனாகி இராமபிரானை நீ பார்ப்பாயென்று சொல்லி மறைந்தார். அந்த வரப்பிரசாதத்தால் தானேஷாவுக்குத் தரிசனந் தந்தோம். இராமதாசர் பூர்வஜன்மத்தில் வெகு புண்ணியத்தைச்செய்து சிவபூஜாதுரந்தரராயிருந்து விளையாட்டு புத்தியினால் ஓர் கிளியை பஞ்சரத்தில் வைத்து சார்த்து அதற்கு இராமநாமத்தைச் சொல்லி கற்பித்ததனால் இந்த ஜன்மத்தில் வெகுபக்தியை யடைந்து கிளியை பஞ்சரத்திலடைத்ததனால் சிறைச்சாலையி லிருக்கலாயிற்று. கருமசேஷமிப்பொழுது அவருக்கு நிவாரண மாயிற்றென் றருளினர்.

இராமதாச ரவ்விடமிருந்து இராமநாம பிரபாவத்தை விசேஷமாக அனைவருக்குஞ் சொல்லிக்கொண் டிருக்க மூடர்கள் சிலர் இராஜ துரோகமும் பண்ணி அவன் பணத்தைக்கொண்டு கல்லை யலங்கரித்ததனா லென்ன பிரயோஜனமென்று வீதிகள் தோறும் சொல்லிக் கொண்டு திரிய இராமதாச ரதைக்கேட்டு பூஷித்தவரும் தூஷித்தவரும் அவகுணங்களைப் போக்குவார்களோ? நாராயணன் சாக்ஷியா யிருக்கத் தூஷணை பூஷணங்கள் பிரயோஜனப்படா வென்றார். இதர்க்கு பரிஹாரம் பகவன்னாம சங்கீர்த்தன மென்று ஜனங்களனைவருக்கும் போதித்து காமக் குரோதங்களை நிவர்த்தி செய்வித்த வெகுபேரை திருத்தினர்.

சிலநாள் கழிய இராமதாசர் காலில் நோயுண்டாகி தொந்தரை செய்ய ஜன்மமெடுத்தது முதல் தான் பட்டபாடெல்லாம் விளம்பரமாக சொல்லிக்கொண்டு இன்னம் ஜன்மமெடுக்க நேரிடுமோவென்னும் பயத்தை யடைந்து அதை நிவர்த்திசெய்யும்படி பகவானை பிரார்த்தித்து இனி யிச்சரீரத்துட னிருப்பது சரியன்று ஸ்ரீஹரி திருவடியை சீக்கிரத்தி லடையவேண்டுமென்று பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய அவர் சிலகால மிருக்கக்கடவீரென்று அசரீரி வாக்காகச் சொல்ல அதற்குத் தேவரீர் திருவுள்ளமென்று இராமதாஸர் இராமநாம பிரபாவத்தால் வைராக்கியத்தை யடைந்து தன்னை யுணர்ந்து பக்வதனுபவத்தைப் பெற்று சர்வமுமிராமமயமாகக் கண்டு தன் னனுபூதியை லோகத்தாருக் கனுகூல

மாக கீர்த்தனைகளாகச் செய்து வெளியிட்டார், வைராக்யத்தின் பெருமையும் ஞானத்தின் மேன்மையும் பக்தியின் பிரபாவமும் உலகத்தோருக்கு அறிவித்துக்கொண்டு சிலகாலங்கழிய பெருமாளவரை திருநாட்டுக்கெழுந்தருளிவிக்க ஓர் இரதத்தை யனுப்பினார். அதைக்கண்டு சந்துஷ்டசித்தராய் அதின்மேலேறும் சமயத்தில் தனக்குப் பணிவிடை செய்துக்கொண்டிருந்த மனைவியை யழைக்க அவள் தனக்கு கொஞ்சம்வேலை யிருக்கிறது, பின்வருகிறேனென்று சொல்ல உனது பிராப்த மிவ்வளவுதானென்று சொல்லி தன்னைச் சூழ்ந்தவரிடத்தில் க்ஷமாபணங்களைக் கேட்டு அவர்களுக்கு நமஸ்கரித்து சத்கதிக்குச் சென்றார். பின்னிட்டு அவர்மனைவி இச் சங்கதியை யறிந்து பிரலாபிக்கப் பெருமாள் கடாக்ஷித்து பரமபதத்தைக் கொடுப்போ மென்றும் அதுவரைக்கும் பத்திரகிரியில் துளசிவன கயிங்கரியத்தி லிருக்கக் கடவாயென்று மருளினார்.

---

# பெத்ததாசர் சரித்திரம்.

---

தஞ்சமா நகரத்தில் வைசியகுலத்தில் சேஷாசலசெட்டி யென்பவ ரிருந்தார். அவர் தனவானாகியும் நீதி நிபுணராகியும் பாகீரதி யெனும் பத்தினியுடன் கிரகஸ்தத் தருமத்தை யவலம்பித்துப் பெருமாளிடத்தில் பக்திசெலுத்திக் கொண்டிருக்க அவரது கிருபாவிசேஷத்தால் ஓர் பிள்ளை பிறந்தது. தாய்தந்தைகள் சந்தோஷித்து அப்பிள்ளைக்கு ஜாதகரும நாமகரண கருமங்களைச் செய்வித்து தகுந்தவயது வந்தவுடன் வித்தியாப்பியாசம் செய்வித்தார்கள், பால்ய பருவத்திலேயே அப்பிள்ளையின் நடவடிக்கைகள் அருமையான சாதுலக்ஷணங்களைப் பொருந்தி யிருந்தபடியால் சஜ்ஜனர்களனைவரும் அவரைசத்தசாதுவென்றுகொண்டாடி "பெத்தசுவாமி" யென்று பெயரிட் டழைத்து வருவார்கள். சிறுவயது முதற்கொண்டு ஸ்ரீநரசிம்மரை அவர் ஆராதித்து அத்தேவன் திருவடிகளைத் தன் னிருதயத்தில் நிலைபொருந்தச் செய்துக்கொண்டார், பிள்ளைக்குச் சரிவயது வந்தவுடன் உத்தியோகத்திற்குப் போகவேண்

டுமென்றுத் தகப்பன் நியமிக்க அவரதை மனதிலிடாமல் சேவகாவிருத்திக்குச் செல்லா திருந்தார். தகப்ப னிதைக்கண்டு தமது குலவிருத்தியான வளையல்விற்கும் வியாபாரத்திலிருக்க நியமித்தார். இதைத்தான் அங்கீகரித்து வளையல்களைக் கைக்கொண்டு கண்ட ஸ்திரீகளுக்குக்காசு கேட்காமல் வளையலிடத் தொடங்கினர். இதைத் தகப்பன் கண்டு தொந்தரை யடைந்து பிள்ளையை நோக்கி இதனல் நஷ்டம் வருமே! யென்று சொல்லி அவ்வியாபாரத்தினின்றும் நீக்கி மூத்தோரான சிலரைக்கொண்டு சேவக விருத்தியை அவலம்பிக்கும்படி அக்குமாரனுக்குப்போதிக்கச்சொன்னர். அவர்களிவ்விஷயத்தைப்பற்றி அப்பிள்ளைக்கு ஹிதத்தைப் போதிக்க அவர் ஒருவாருக சம்மதித்து ஜாகிரி கிராமத்தில் ஸ்ரீஹரி சிந்தனையுடன் சேவகா விருத்தியிலிருந்து ஒருநாள் குதிரை யேறிக்கொண்டு கொலுமண்டபத்திற்கு போகுங்கால் வழியில் சிறுவர்கள் விசேஷமாகக்கூடி கெச்சகாய்களை யாடிக்கொண் டிருந்தார்கள். இவர் குதிரையின் குளம்படியால் அக்காய்கள் சிதறிச் சூர்ணமாயின. அச்சிறுவர்கள் ஆட்டத்தைக் கெடுத்தாயென்று அனைவருமொன்ருகக் கூடி அவரைப் பிடித்துக்கொண்டு துர்ப்பாஷைகளால் திட்டுவதும் அடிக்கப் போவதுமாக விருக்குஞ் சமயத்தில் அரங்கனெனும் பெயருடைய ஓர்யாதவச் சிறுவன் அப்பிள்ளைக ளனைவரையுந் துறத்திவிட்டு பெரிய திருமண்காப்பைத் தரித்திருக்குமிவர் "பெத்ததாச" ராவாரென்று அவர்களை யதட்டிக் கிட்டவரவொட்டாமற் செய்தான். இவ்வுபகாரத்தைச் செய்த அச்சிறுவனுக்கு பெத்ததாசு நமஸ்கரித்து நான் முன்செய்த பூஜாபலத்தினல் உன்னைக் கண்டேனென்று தன் குதிரையையும் வஸ்திராபரணங்களையு மச்சிறுவனுக்குக்கொடுத்துவிட்டு சேவகா விருத்தியைவிட்டு வீட்டிற்குத் திரும்பிவிட்டார்.

அதுமுத லவர் தனக்கு ஸ்ரீஹரிகிருபை பூரணமாகச் சித்தித்த தென்றும் திருமண் காப்பைத் தரித்தவ ரெவரேனும் தனக்கு ஸ்வாமிக ளொன்றும் நிச்சயித்துக்கொண்டு நரசிம்ம ஸ்வாமி கோவிலை யடைந்து அவரை இஷ்ட தெய்வமென்று நம்பி பந்தங்களனைத்தையும் விட்டிருந்தனர். அவ்விடத்தில் அவர் ஸ்ரீஹரி! கோவிந்தா! அச்சுதா! கிருஷ்ணுவென்று அநுதினமும் ஸ்ரீஹரியைப் பூஜித்துக்கொண்டிருக்க அவருடையதாய்தந்தைகளும்பந்துக்களும்

ஆச்சரிய மடைந்து வீட்டிற்கு அழைத்து வருவதற்கு அவரிடஞ்சென்று கூப்பிட, அவர் தாயாரை நோக்கி அம்மே! உம்மை அஞ்ஞானஞ் சூழ்ந்திருக்கின்றது, அத்தை விடக்கடவீர். உலகத்தில் தாய், தந்தை, தனயர், முதலானோர் சந்தைக்கூட்டம்போலாவார், சொப்பனம்போன்ற பிரபஞ்சமாம், இவர்கண்மே லாசா பாசங்களை வைப்பதுஈசன் திருவடி யடையப் பிரதிபந்தமாம், சரீரம் நீர்குமிழியைப்போ லொத்தது. இதனை ஸ்திரமென்று நம்பி சமுசாரபந்தத்திற் குட்பட்டவராய் பிரஜைகள் காமக்குரோதங்களை வளர்த்து, மதோன்மத்தர்களாகி, சம்பத்தைப் பார்த்து சந்தோஷ மடைந்து காமத்தாற் கண்மூடப்பட்டவராகி நற்கதியைத் தேடாமல் தாரா புத்திரர்களுக்காகத் தனத்தைச் சம்பாதித்து காலத்தைக்கழித்துவிட்டு முடிவில் எமன்கையி லகப்பட்டு நரக கூபங்களில் விழுந்து பாபிகளாகப் பிரபஞ்சத்தில் பிறப்பது மிறப்பதுமா யிருப்பார்களென்று சொல்லி மௌனமா யிருந்தார். தாய்தந்தைகள் அவர் சொன்ன வசனத்தைக் கேட்டு அவர்களுடைய குணங்கள் திரும்பப்பட்டு சர்வகாலங்களிலும் ஸ்ரீய்ப்பதியைப் பஜித்து ஸ்ரீஹரியினுடைய சாயுஜ்யத்தை யடைந்தார்கள்.

அனந்தரம் பெத்ததாச ரவ்விடம் ஹரிசேவையில் வர்த்தித்துக் கொண்டிருக்க சிலர் அவரை மகாநுபாவ ரென்று கொண்டாடினார்கள். சிலர் பைத்தியம் பிடித்தவரென்று தூஷித்தார்கள். இந்த தூஷண பூஷணங்க ளிரண்டும் தேஹத்தைச் சேர்ந்தவையென்று தான் அவைக்கு வேறாகியும் பகவத் சேஷபூதனான பிரத்தியகாத்மாவென்றிருப்பார். இப்படி யிருக்க அவ்வூரரசன் மன்னார்நாயனென்பவன் தன்னிடமிருக்கும் வித்வான்களை ஒருநாள் நோக்கி நீங்கள் சகல சாஸ்திரங்களையுங் கற்றவர்களன்றோ? ஸ்ரீஹரி யிருக்கும் வூரின் நிலைமையை நீங்கள் சொல்லக்கடவீர்களென்றான். அதற்கு அவர்கள் மாறுத்தரஞ் சொல்லவறியாமல் ஓ மஹாராஜரே! இதை வேதவேதாந்தங்களை யனுபவமாக வறிந்தமஹான்கள் சொல்லக் கடவர்களென்ன அரச னவர்களை நோக்கி அவ்வண்ணமானவ ரிவ்வூரி லிருப்பரோ வென்ன அவர்கள் ஸ்ரீநரசிம்மரைத் தொழுதுக்கொண்டு பெத்ததாச ரென்பவ ரிருக்கிறாரென்ன அரசன் அவரை அழைத்துவரும்படி சேவகரை யனுப்பினான். அவர்கள் பெத்ததாசரிடம் வந்து அவரைக்கண்டு ஸ்வாமி! அரசனழைக்கிறான்,

வாருமென்ன, அவர் சேவகரை நோக்கி நான் நரசிம்மருடைய தாஸ்யத்தை விட்டு ஓர் நரனிடஞ்செல்லேனென்ன, சேவகர் பலாத்காரமாக அவர் கையைப் பிடித்துக்கொண்டு அரசனிடங்கொண்டுவந்தனர். அரச னவரைநோக்கி அஞ்சலிசெய்து உசிதமானஓ ராசனத்தி லுட்காரச் செய்து ஐயா! நீர் சர்வேஸ்வரனுடைய மகிமைகளை யறிந்த சர்வஞ்ஞ ரல்லரோ? பன்னகசயனனும் பதிதபாவனனுமான ஸ்ரீயப்பதி வீற்றிருக்கும் வைகுண்ட மிவ்விடத்திற்கெவ்வளவு தூரமென்று கேட்டான். அதற்கு பெத்ததாசர் அரசனை நோக்கி ஓ இராஜனே! துரோபதி ஆபத்காலத்தில் முறையிட்டாள், கஜேந்திராழ்வான் கஷ்டகாலத்தில் கூப்பிட்டார், இவர்களுடைய முறையைக் கேட்டு வைகுந்தனுதன் வந்தனராதலால் இவ்விடத்திற்கு வைகுண்டம் கூப்பிடுதூர மிருக்குமென்றார். அரசனிதைக்கேட்டு அதிக சந்தோஷ மடைந்து அவருக்கு வெகுமதிகளை விசேஷமாகத் தந்து அனுதாபத்தை யுடையவனாய் இவ்வண்ணமான பக்தியும் ஞானமு மெனக்கெப்படி சித்தித்து ஸ்ரீஹரியைச் சேவிப்பே னென்றும் பெத்த தாசர் கிருபைசெய்து தன்மேல் அவர் ஒரு கவியைப் பாடினல் அதனுல் கிருதார்த்தனுவேனென்று மனதி லெண்ணி அவரை நோக்கி அய்யா! நீர் எனது வமிசபாரம்பரையையும் இராஜ்ஜியத்தையும் வர்ணித்து என்மீதொரு கவியைப் பாடுமென்று சொல்ல, பெத்ததாசர் விசனமடைந்து நரசிம்மரைப்பாடின நாக்கினல் நரநாதனைப் பாடேனென்று நால்வர் கேட்க நவின்றனர். அரச னிதைக்கேட்டு கோபங்கொண்டிருக்கும் சமயத்தில் சில துர்ஜனர்க ளவனைநோக்கி, மஹாராஜரே! இவர் திருமண்காப்பு தரித்திருக்கிறவர்மேல் கவிகளைப் பாடுவாரன்றி இதரஜனங்கள்மேல் பாடுவதில்லையென்றார்கள். அரசனுக்கிரகித்து சேவகர்களை விட்டு அவரை ஆசனத்திலிருந்து இறக்கித் தன்முன் பிடித்துவரும்படிச் செய்து பரியாச வாக்கியங்களைப் பலவாருகப் புகன்று ஓர் கழுதையைக் கொண்டுவரச் சொல்லி அதற்கு திருமண் காப்பை நெற்றியி லிடச்செய்து எதிரில் நிற்கவைத்தான். பெத்ததாச ரதனை பெருமாள் சொரூபமென்று நமஸ்காரஞ் செய்தார். வேறொரு கழுதையை அவ்விடத்திற்கொண்டுவந்து நிற்கச்செய்ய அதைக்கண்டு பெத்ததாசர் தெண்டன் சமர்ப்பிக்கவில்லை. அரச னவரை நோக்கி, அடா மூடப்பயலே!

இக்கழுதையை யேன் நமஸ்கரிக்க வில்லையென்று கேட்க அவர் ஓ அரசனே! இது உனக்கு சமான மானதால் அதற்கு நமஸ்கரிக்க வில்லை யென்றார்.

அரசன் இவ்வசனத்தைக் கேட்டு பெத்த தாசரை சிறைச்சாலையில் வைக்கச்செய்து அதிக தொந்தரைப்படுத்தி மிகமுத்திரைகளைக் கதவிற்கு போட்டான். அவர் ஓ ஹரி! யென்னும் வாக்கியத்தைச் சொன்னமாத்திரத்தில் சிறைச்சாலையை விட்டு தன் வீட்டிற்குச் சென்றார். காவலாளிகள் கலக்கமுற்று அரசனிடஞ் சென்று பிரபுவே? பெத்ததாசர் பெருத்தமாயை செய்து போய்விட்டாரென்ன, அரசன் அவரைக்கட்டி கொண்டுவரும்படி செய்து கத்திகளால் வெட்டும்படியும், சூலங்களால் குத்தும் படியும் கதைகளைக் கொண்டு அடிக்கும்படியும் யானைகளைக் கொண் டவர்மேல் நடப்பித்தும், போனுகளிற் போடவைத்தும், ஆழ்ந்த ஜலத்தில் மூழ்கச் செய்வித்தும், விஷத்தைக் கொடுப்பித்தும் நெருப்பை வெகுவாக மூட்டி யதனிற் றள்ளியும் இப்படி வெகுவிதமான ஹிம்சைகளைச் செய்யுமளவில் அவருடைய தேஹம் வாடாமலும் முகத்தினுடைய காந்தி மாறாமலும் கண்களிற் ஜலம் கொஞ்சமேனும் வாராமலும் பலவேளைகளிலும் ஓ பரமபுருஷா! ஓ பிரஹ்லாத வரதா! ஓ மாதவா! ஓ முகுந்தா! நாராயணா! நரஹரியென்று அனந்த நாமங்களைச் சொல்லிக்கொண் டிருப்பர். அஸ்திரங்களின் வெட்டு குத்தல்களவரை யொன்றுஞ் செய்பவில்லை, யானைகள் ஓடிப்போயின, அக்கினி சீதளமாயிற்று, ஜலம் மூழ்கச் செய்யவில்லை, இப்படி யிருப்பது விசேஷ சோத்தியமாக விருக்கக்கண்டு அரசன் தான் முன்னுக் கனுபவிக்க வேண்டிவரும் வினையை மனதிலெண்ணமல் இரும்பு காம்புகளைக் கனலில் காயவைத்து அவர் சரீரம் முழுக்கச் சூடுகளைப் போட்டு ஓர் வண்டியின்மே லேற்றி கழுவிலேற்ற வூரெங்கும் சுற்றச் செய்தான். ஊரிலிருக்கும் சஜ்ஜனர்களும் பக்தர்களும் பெத்ததாச ரடையும் பெருத்த துன்பங்களைக் கண்டு பொறுக்க மாட்டாமல் பிரேம பாவத்தால் அவர் பின்றொடர்ந்து சர்வேஸ்வரனை யுத்தேசித்து ஓ நரஹரி! உம்மை நம்பினவடியவருக் கிவ்விதமான துக்கங்கள் வரக்கூடுமோ! நீர் பிரஹ்லாதனை இரக்ஷித்தீர் அவருன்னை நினைத்த மாத்திரத்தில் ஸ்தம்பத்தினின்றும் வெளிவந்தீர், கஜேந்திராழ்வானை கருணித்தீர் எங்களனைவர்

மனங்களும் பதைக்கின்றனவே! இனியாகிலு மிராஜனுக்கு இது துர்நீதி யென்ரறிவிக்க லாகாதா? என்று அனைவரும் முறையிட இராஜபடர்கள் பெத்த தாசரைக் கழுமரத்திலேற்றுவதற்கு அதன் சமீபத்திற்கு கொண்டுவந்தார்கள். அப்பொழுது அந்த ஹரி தாசர் தனக்குள் ஸ்ரீஹரியை நினைத்து ஓ கோவிந்தா! உம்மை நம்பினதற்கு இதுதான் சமயமென்று இரக்ஷிக்கக் கடவீர். நீர் கருணா சமுத்திரர், சரணாகத ரக்ஷகர், சர்வலோக சரண்ணியர், போக்கு வேறின்றி உம்மையே பிடித்தேன். ஆதிநாராயணா! ஹரிசர்வேஸ்வரா! வாசுதேவா! முகுந்தா! வைகுண்ட வாசா! பங்கஜநாபா! பரவாசுதேவா! பதிதபாவனா! பரப்பிர்ம்ம ரூபா! கோவர்த்தனோத்தாரா! கோபிகா ரமணா! நந்த நந்தனா! நவனீத சோரா! வேணுநாத விநோதா! வேதாந்த வேத்தியா! கல்லைப் பெண்ணாக்கிய காருண்ணிய மூர்த்தீ! அசுரரைக் கொன்று அமரர்களைக் காத்தவரே! பரம பாவனரே! பக்த வத்சலரே! அடியேனை இந்த வேளையில் ரக்ஷித்தருளுமென்று தன்னுள் ஸ்மரித்து அக் கழுமரத்தை அவர் கண்டமாத்திரத்தில் அது அக்கினியினால் தகிக்கப் பட்டு பஸ்மமாய் விட்டது. அதைக்கண்ட அனைவரும் ஆச்சரிய மடைந்தார்கள்.

இவ்விட மிப்படியிருக்க கொலுமண்டபத்தில் மன்னூர் நாயக்கனிடம் பெருமாள் ஆவேசரூபமாக சென்று அடா! நராத்மனே! மடையனே! சற்றேனுங் கிருபையின்றி பெத்த தாஸனை அநேக விதங்களால் சிக்ஷித்தாயே! என்று சொல்லி சவுக்கைக் கைக்கொண்டு அரசனை யடிக்கத் தொடங்கினர். இந்த ஹிம்சையை அவன் பொறுக்காமல் பெத்த தாசரை அழைத்துவரும்படி ஆக்ஞாபித்தான். சேவகர்கள் வுடனே யோடி அந்த ஸ்ரீ ஹரி பக்தரை அழைத்துக்கொண்டு சீக்கிரத்தில்வர அரசன் அவர் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு, ஸ்வாமி! தேவரீர் இத்தன்மையான புண்ணிய புருஷரென்று நானறிந்திலேனே! அடியேன் மஹாபாவி யானேன், குரூரன், குடிலன், தேவரீர் கிருபாகண்ணோக்கம் வைத்து அடியேனை யாட்கொள்ளுவீரென்று அபிமானத்தை விட்டு ஆர்த்தியுடன் சொல்ல பெத்த தாச ரவனைநோக்கி ஓ அரசனே! நீரென் விஷயமாகச் செய்த சேட்டைகளுக்கு பெருமா ளுனக்கு தரிசனந் தந்தருளினர். அவரை நீர் கண்ணாரக் கண்டதால் நீர் பூஜ்ஜிய

ஞனீர், சத்கதியடைவீரென்று சொல்லி ஹரி! வாசுதேவா! அச்சுதா! கிருஷ்ணு! வென்றுபாடவும் ஆடவுமாக விருந்து பாகவதர்களுடன் கூடி கூத்தாடிக்கொண்டிருக்க பெருமாள் ஒரு பிராம்மணருபுமாக பிரத்தியக்ஷமாகி அவரைக் கோட்டைக் கடைவீதிவரைக்கும் அழைத்து வந்தார்.

பின்பு பெருமாள் பெத்த தாசரை அழைத்துவர கோட்டை வாசற்படியைத் தாண்டின வளவில் பெருமாள் கஸ்தூரி திலகத்தை யவருக் கிட்டார். பலசரக்குக் கடைவீதி வருமளவில் புனுகைப் பூசினர். வடவாற்றின்கரை வருமளவில் சந்தனத்தைப் பூசினர். கருந்திட்டாங்குடி வந்தவுடன் வனமாலையை சாத்தினர். மின்னூரு சமீபம் வந்தவளவில் பன்னீரைத் தெளித்தார். அம்மபேட்டை சேர்ந்தபோது புஷ்பஹாரத்தைக் கழுத்தில் போட்டார். அடுங்பேட்டைக்கு வருமளவில் வழிகாட்டி, வரச்சொல்லி அழைத்தார். கண்டூர சாலைகளிடம் வரும்பொழுது பெருமாள் கொடை பிடித்தார். திருப்பந்தூரில் வந்தவுடன் வஸ்திராபரணங்களைக் கொடுத்தார். திருக்காட்பள்ளித்'தெருவில் வரும்பொழுது விசிறியைக் கொண்டு விசிறினர். கோல்லிடம் வந்தபோது ஆலவட்டத்தைப் பிடித்தார், அணைக்கட்டு சமீபம் வருமளவில் பொங்கலும் புளிஹோரையுங் கொடுத்தார். காவேரி கரையோரம் வரும்பொழுது வெற்றிலைபாக்கை கொடுத்தார், ஜம்புகேஸ்வரத்திற்கு வருமளவில் வழிகாட்டி மறைந்து விட்டார். ஸ்ரீரங்கத்திற்குட் பிரவேசிக்கவே பெத்ததாசர் வந்தனரென்று கேளவியுற்று புரிஜனங்களும் பிராம்மணர்களும் எதிற்கொண்டு சென்று அவரைச் சன்னிதிக்கு அழைத்துவர அரங்கனுதன் சிரித்த முகத்துடன் சேவை சாதித்தருளினர். அர்ச்சகர் அவருக்குத் தீர்த்தமுந் திருமாலையும் ஸ்ரீ சடகோபமுந் தந்தார்கள். அப்பொழுது பெத்த தாசர் ஹரிதிருவடிகளை மனதில் ஸ்திரமாக நினைத்துப் பெருமாளுடைய புகழைப் பிரபலமாக வர்ணித்து அவரைநோக்கி அடியேன் சிறுவயது முதற்கொண்டு ஸ்ரீநரசிம்மரை பாவனைபி விட்டேன், அரங்கநாதரான தேவரீ ரழைத்துவந்தீரென்று சொல்லவே பெருமாள் நரசிம்மாக்கிருதியைக் காட்டினர். உடனே பெத்த தாசர் தன் தேஹத்தை மறந்திருக்கவே ஹரி சர்வேஸ்வரன் தன்னில் அவரை அந்தர்பூதனக்கிக்கொண்டார். தாசர் திருமேனி காணப்படவில்லை,

வேதசாஸ்திரங்களை விசேஷமாக வாசிக்காவிடினும் விபுலமான ஹரிபக்தியால் பெத்ததாசர் பெற்ற பேற்றைப் பெறலாம்.

---

## புரந்தரதாசர் சரித்திரம்.

பீமாநதி தீரத்திலிருக்கு மோர் கிராமத்தில் பிராம்மணகுலத்தில் புரந்தர னென்பவர் லக்ஷுமி யென்னும் பதிவிரதா சிரோமணியாகிய மனைவியுடனும் ருக்மிணி யென்னுங் குமாரத்தியுடனும் கிரகஸ்த தருமத்தை யவலம்பித்து லக்ஷாதிகாரியாகிக் கொடுக்கல் வாங்கல் விவஹாரத்தை நடத்தி வருவார். லோபத்வ குணத்தால் ஒருவருக்கும் பிக்ஷையிடுவதில்லை. யாசகந்திற் கெவரேனும் வருவரேல் தூஷணவார்த்தைகளைச் சொல்லுவார், கையறுபட்டாலும் சுண்ணாம்பு கொடார். தருமசிந்தனையைத்தா னெவ்வளவுஞ் செய்வதில்லை. துட்டுவிஷயமாக எவரேனும் வார்த்தையாடினால் துக்கமுடையவராய் மறுமொழி சொல்லாமல் போவார். இதனா லனைவரு மவரை அதிபாபியென்று சொல்லத் தொடங்கினார்கள். இப்படி முப்பதாண்டுகள் சென்றவளவில் ஒருநாள் ஸ்ரீயப்பதி தன்னுடைய நிர்ஹேதுக கிருபையால் ஒரு கிழப் பிராம்மணனை போல் வேஷந்தரித்து தைனியரைப்போல் காண்பித்து நடுக்கமுடைய சரீரத்துடன் கந்தலைக் கட்டிக்கொண்டு அடிக்கடி பின்பக்கம் பார்த்துக்கொண்டு புரந்தரரிடம் வந்து ஆசிர்வாதம் பண்ணி தேங்காயைக் கையிற் கொடுத்து ஐயா! பிரபுவே! என்னுடைய குமாரனுக்கு விவாஹஞ் செய்யும் பொருட்டு ஆயிரம் ரூபாய் வேண்டி தூரத்திலிருந்து வந்தேன். நீர் கிருபைசெய்து திரவ்விய சஹாயம்பண்ணி அக்காரியத்தை நிறைவேற்றக் கடவீரென்று சொன்னார். இதைக்கேட்டு புரந்தரன் மிருதியான கோபத்தைக்கொண்டு என்னைப் பிரபுவாகச் சொல்லுகிற நீயார்? உன்னை நான் திட்டாமலும் அடிக்காமலும் போகச்சொல்லுவதே பெரிய வெகுமானமாக நீ பெண்ணக்கடவாய் இங்கிருக்க வேண்டாமென்ன, அவர், சனிகரந்தட னவ்விடத்தை விட்டு அவர் மனையாளாகிய லக்ஷுமியினிடஞ் சென்று அவ்வாறு காரியத்தை அவளுக் கறி

ரிக்க அவள் தனது மூக்கி லணிந்திருந்த நத்தை அவர் கையிற் கொடுத்து காரிய சாதனஞ் செய்துக்கொள்ளுமென்று தெண்டனிட் டனுப்பினள். அவரதைக் கைக்கொண்டு புரந்தரரிடம் வந்து அவ்வாபரணத்தைக் காண்பிக்க அதனைக் கண்டவுடன் தன் மனையாளுடைய ஆபரணம்போ லிருக்கிறதே? யென்று சமுசயப்பட்டு கடையிலிருந்து வீட்டிற்கு வந்து மனையாளை நோக்கி உன் மூக்கிலிருந்த நத்து எங்கு போயிற்றென்று வினவினன். இதைக் கேட்டவுடன் அவள் அதிக பயத்தை யுடையவளாய் ஓ பண்டரிநாதா! பாண்டுரங்கா! நாராயணா! நரஹரி! முகுந்தா! முராரி! ஸ்ரீபதி, ஸ்ரீநிவாசா, முற்காலத்தி லனேக பக்தரைக் காத்து ரக்ஷித்தவனே! கிருஷ்ணா! கோவிந்தா! அடியாளை இப்போது இரக்ஷிக்கக் கடவீரென்று பிரார்த்தித்துப் புருஷனைநோக்கி பிராணநாதரே! அடியாள் பானையில் பத்திரப்படுத்தி வைத்தேனென்று சொல்லி பானையில் கையிட்டுப்பார்க்குமளவில் தனது நத்தை அவ்விட மிருக்கக்கண்டு அதனை யெடுத்துவந்து கணவனிடங்கொடுத்தாள். அவருக்கு அவ்வாபரண மபரிமிதவிலையுடையதாகக் காணப்பட்டு தனது பாரியாளைப் பார்த்து நடந்த சங்கதியை யுண்மையாக வுரையென்று வினவ, அவள் பிராம்மணர், தன்னிடம் வந்ததும், விவாஹத்திற்காகத் திரவியங் கேட்டதும் தான் தனது நத்தைக் கொடுத்ததும் பின்பு தான் பயத்தால் பகவானைப்பிரார்த்தித்ததும் பானையில் கைவைத்துப் பார்க்க அது கிடைத்தது மிவைகளை யெல்லாம் சவிஸ்தாரமாகச் சொன்னாள். புரந்தர ரிதைக்கேட்ட மாத்திரத்தில் பிரபலமான அனுதாபத்தை யுடையவராகி அசித்திய வஸ்துக்களை நித்தியமென் றெண்ணி யிருந்தேனே! என்று வெறுப்புற்று மோக்ஷ ஹேதுவான வைராக்கியத்தை யடைந்து தனதாஸ்திபாக்ய மனைத்தையுங் கொள்ளைவிட்டு முன்செய்த பூஜா பலத்தால் இவ்விவேக முதயமாயிற்றென்று நினைத்து அபாரமான பக்தியை ஹரிசர்வேஸ்வரன்மேல் வைத்து அவரது நாமத்தை அல்லும் பகலு முச்சரித்துக்கொண்டு வாஞ்சைக ளனைத்தையும் விட்டு உஞ்சவிருத்தியினால் ஜீவனஞ் செய்துவந்தார்.

அந்தக்காலத்திலேதானே புரந்தரதாசர் தன் குமாரத்தியை யோர் பிராம்மணருக்குப் பாணிக்கிரகணமாகக் கொடுத்திருந்தார். அந்தப்பெண் விரகறியும் பருவமடைந்தா ளென்று பெண்

ணின் புருஷன் வீட்டார் மனிதனை யனுப்பினார்கள். அவன் புரந்தரதாச ரிருப்பிடம் வந்து அவர் மனையாள் லக்ஷ்மியைக்கண்டு உமது கணவ ரெங்கேயென்று கேட்டான். அவ்வேளையி லவள் கிழிந்தப் புடைவையைத் தைத்துக்கொண் டிருந்தாள். அக்கேள்வியை அவன் கேட்டமாத்திரத்தில் ஊசியினால் கையைக்குத்திக்கொண்டு அதனால் துன்பமுற்று தன் கணவன் அச்சுதனுக்கு அடிமையாய் விட்டாரென்றாள். அவள் வருத்தத்துட னிவ்வார்த்தையைச் சொல்லவே, பகவான் புரந்தரதாசர் வேஷத்தைத் தரித்து கரதாளமுந் தம்பூரையுங் கையிலேந்தி நாராயணனுடைய நாமத்தைப் பாடுவதும் நடனஞ் செய்வதுமாக வந்த மனிதனுடன் சென்று கிஷ்கிந்தை யென்னும் அப்பெண்ணிருக்கும் ஊருக்குச் சென்று பிள்ளைக்கு வேண்டிய வஸ்திராபரணங்களையும் பெண்ணுக்கு வேண்டிய புடைவை ரவிக்கை பூஷணங்களும் தந்து ருதுசாந்தி முகூர்த்தத்தில் சகல பிராம்மணர்களுக்கும் பூரிதக்ஷிணைகளைக் கொடுத்து காரியத்தை நிரைவேற்றி மறைந்தார். இச்சங்கதியை அவ்விடமிருந்த பிராம்மணர்கள் புரந்தர தாசரிடம்வந்து சொல்ல அனைவருங் கேட்டு ஆச்சரியமுற்று பெருமாள்செய்த காரியமென்று பிரியமுற்றிருந்தார்கள்.

ஒருநாள் புரந்தரதாசர் திருவத்தியயனஞ் செய்து பிராம்மணர்கள் போஜனம் பண்ணும் சமயத்தில் பருப்பை வட்டித்து நெய்யைக் கொண்டுவரச் சொல்லி புரந்தரதாசர் சிஷ்யர்களைக் கூப்பிட்டும் வாராதிருக்க "அப்பண்ணா" வென்று உரக்கக்கூவ உடனே பெருமாள் அப்பண்ணா வடிவுகொண்டு நெய்தாலையுடன் வந்து நெய்யை யனைவருக்கும் வட்டித்தார். யாவருக்கும் சமூர்த்தியாக வட்டித்தும் குடம் நிறைய நெய்யிருந்தது. இது புதுமை யென்று புரந்தரதாசர் பார்க்குமளவில் பெருமாள் மறைந்தார்.

ஒருதினத்தில் புரந்தரதாசர் ஓர் சிறுவனை ஜலங்கொண்டுவரச் சொல்லித் தான் புறக்கடைக்குச் சென்றார். சிறுவனெவனும் ஜலங்கொண்டு போகாமையால் பெருமாளே ஓர் சிறுவனாகி சொம்பில் ஜலத்தைக் கொண்டுவந்து கொடுத்தார். புரந்தரதாச ரவனைநோக்கி இவ்வளவு தாமஸ மென்னவென்று தலையி லொருதரம் மோதினார். பெருமாள் மறையவே புரந்தரதாசர் மோசம் போனேனேயென்று புலம்பலுற்றார்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

    

ஸ்ரீயப்பதி நிர்ஹேதுக கடாக்ஷத்தால் பிராப்பிய பூமியையடைந்த பக்தசிரோமணிகளுடைய சரித்திரங்களடங்கிய

# பக்தமால வசனம்.

இஃது

ஸ்ரீமஹீபதிபாவா

என்னும் பக்தசிரேஷ்டரால் மஹாராஷ்ட்ர பாஷையில் செய்யப்பட்டிருந்த வடதேசத்து பக்த சரித்திரங்களடங்கிய பக்தவிஜயம், சந்தவிஜயம், சந்தலீலாமிருதம், பக்தலீலாமிருத மெனும் கிரந்தங்கள்

---

(Retired Head Acctt., P.W.D., Hyderabad.)

வே. பாலகிருஷ்ண முதலியாரால்

தெலுங்கு பாஷையில் தோராகவித்வமாக செய்யப்பட்டபடி அவரால் தமிழில் வசனரூபமாக மொழிபெயர்க்கப்பட்டு இத்தேசத்தில் வழங்கும் சிலபக்தர் சரித்திரங்களும் சேர்க்கப்பட்டு

---

(Manager, Madras Brigade Office.)

ஸ்ரீமான் வி. சுந்தரப்பிள்ளை அவர்களால்

பார்வையிடப்பட்டு

---

Supdt. of Plague Pass Ports (Madras Municipality.)

ம-ா-ா-ஸ்ரீ வே. பாஷியம் முதலியாரவர்கள்

வேண்டுகோளின்படி

(படங்களுடன்)

---

சென்னை திரு அல்லிக்கேணி

ஆம்ப்தில் அச்சுயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1907.

# பீடிகை.

(భక్తిర్జనిత్రీ జ్ఞానస్య భక్తిర్మోక్షప్రదాయినీ") "பக்திர் ஜனித்ரீ ஞானஸ்ய பக்திர் மோக்ஷப்பிரதாயினி" யென்று பிரமாணமுண்டு. அதின் கருத்து பக்தி ஞானத்திற்குத் தாயாகுமென்றும் பக்தி மோக்ஷத்தைக் கொடுக்குமென்றும் சொல்லப்படுவதால் சேதனுஜ்ஜீவனம் ஈஸ்வர பக்தியன்றி நேரிடாது. விஸ்ராந்தியடைவதற்கு அதைத் தவிர வேறொன்றும் காரணமாகாது. உலகத்திலவ்விதமான பக்தி, பிரபலமாவதற்கு இந்தப் பரதகண்டத்தில் இக்கலியுகத்தில் பகவான் விஷயமாகப் பக்தியுடையவர்களாய் பிராப்யபூமியை யடைந்த பக்தசிரோமணிகளின் சரித்திரங்களை வாசித்து அவர்கள் ஸ்ரீஹரியை ஸ்வாதீனம் பண்ணிக்கொண்ட மார்க்கங்களை மனதிலிருத்தி அவைகளைத் திருஷ்டாந்தமாகக் கொண்டு சேதனர்கள் தம்மிடமுண்டாகிய துர்க்குணங்களை மாற்றி சத்குணங்களை யடைந்து பக்தியும் வைராக்கியமும் சேஷத்வ (பிரத்தியேகாத்ம) ஞானமு முடையவராய் பகவதநுபவத்தைப் பெறலாம்.

இந்த சரித்திரங்களைத் திருத்தமாகயானறிந்துக்கொள்ளும் பொருட்டு உத்தரதேசத்தில் உத்தியோக மூலமாக சஞ்சரிக்கும் பொழுது மஹாராஷ்ட்ரபாஷையைக் கற்றுக்கொண்டு பக்தசிரோமணியான மஹீபதிபாவாசெய்த நாலுகிரந்தங்களையும் செம்மையாக வாசித்து அந்தக்கிரந்தகர்த்தாவி னபிப்பிராயத்திற்கிணங்க எவ்வளவும் வேறுபாடின்றி அடியேனுடைய சொந்த யுக்திகளை யொன்றுஞ்சேர்க்காமல் இச்சரித்திரங்கள் மொழிபெயர்க்கப்பட்டன, ஆனதால் இதுவரையில் தமிழில் பிரசுரமான வனேக பக்த சரித்திரகிரந்தங்களைக்காட்டிலு மிது ஆதாரமுடையதாகவும் சரித்திரங்களனைத்தும் பூர்த்தியுடையதாகவும் சொல்லப்படும். இத்தேசத்தில் வழங்கும் (3) பக்தர்களுடைய சரித்திரங்கள் தெலுங்கு பாஷையிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டன. தமிழ் நடையுள்ள சகலருக்கு முபயோகப்படும்.

கிரந்த பரிசோதனைசெய்த ஸ்ரீமான் சுந்தரப்பிள்ளை யவர்களுக்கும், அச்சிடும் சமயத்தில் பிழைகளைப் பரிசீலனஞ் செய்த ஸ்ரீமான் தி. இராமானுஜ முதலியா ரவர்களுக்கும், இதை பிரசாரத்திற்குக் கொண்டுவந்த பாஷ்யமுதலியா ரவர்களுக்கும், இந்த அச்சுயந்திர சாலையிலுள்ள தலைமையானவர்களுக்கும் அநேக வந்தனங்களை சமர்ப்பிக்கின்றேன்.

பக்தியைப் பிரபலப்படுத்தும் கிரந்தமாதலால் பாகவதோத்தமர்கள் யாதொரு குறைகளைப் பாராமல் அம்சத்தைப்பொருட்கொண்டு பார்க்கவென்று பிரார்த்திக்கின்றேன்.

[illegible]

வே. ப.

பக்தமாலவசன விஷயாநுக்ரமணிகை.

பக்தமாலவசன விஷயசூசிகை

ஸம்பூர்ணம்.

# கிரந்தகர்த்தா செய்த புத்தகங்களின் அட்டவணை

## தமிழ்.

| | | | Rs | |
|---|---|---|---|---|
| 1. | அத்யாத்ம ராமாயணவசனம் | ... ... | 1 | [illegible] |
| 2. | அவதூத யெதுசம்வாதம், | (Out of print.) ... | | |
| 3. | பகவத்கீதா வினவிடை, | do. ... | | |
| 4. | முமுக்ஷு தினசரியை, | do. ... | | |
| 5. | பக்தமால வசனம் | ... ... | 2 | 2 |
| 6. | வினவிடை மாலை | ... ... | [illegible] | 1 |
| 7. | பிபாஜிராஜன் சரித்திரம் | ... ... | | |
| 8. | வேங்கடேச ரகசியானுபவம் | ... ... | | |
| 9. | மஹா நாராயணோபனிஷத்து, | (Not published). | | |
| 10. | அனுபவ ரசவாக்கியங்கள் | ... ... | | |
| 11. | பிக்ஷு கீதை | ... ... | 0 | 1 |
| 12. | ஜல கீதை | ... ... | 0 | 1 |

## தெலுங்கு,

| | | | Rs | |
|---|---|---|---|---|
| 1. | பக்தமால தொஹரா கவி, | (Unbound) ... | 1 | 4 |
| 2. | ஆள்வாராசாரிய வைபவம் ஷை கவி | ... | 0 | 10 |
| 3. | ஸ்ரீக்ருஷ்ணஜன்ம சரித்திரம் ஷை கவி | (Out of print). | | |
| 4. | வேங்கடாசல மகத்மியம் ஷை கவி | do. ... | | |
| 5. | வெங்கடேச ரகசியானுபவம் வசனம் | do. ... | | |
| 6. | பக்தவிஜய சாரசங்கிரகம் பத்திய கவி | do. ... | | |
| 7. | பக்தவிஜயம் வசனம், | (Not published.) ... | | |
| 8. | பகவத்கீத பிரஸ்னோத்தரம். | do. | | |
| 9. | அத்யாத்ம ராமாயணவசனம், | do. ... | | |
| 10. | மஹாநாராயணோபனிஷத்து, | do. ... | | |
| 11. | கைவல்ய நவனீதவசனம் | do. ... | | |
| 12. | பஞ்சதசி வசனம், | do. ... | | |
| 13. | முமுக்ஷு தினசரியை வசனம், | (Out of print.) | | |
| 14. | பிபாஜிராஜன் சரித்திரம் | ... | 0 | 2 |

## இங்கிலீஷு.

1. Short Hints or Hindu Philosophy, (Out of print.)
2. Essence of Geeta, (Not published.)

---

புத்தகங்கள் வேண்டியவர்கள் திருவல்லிக்கேணி செங்கல்வராய முதலி வீதி நெ. 18 கிரகத்தில் வெ. பால்கிருஷ்ண முதலியாருக்கு அட்டவணையிலுள்ளபடி எழுதி பெற்றுக்கொள்ளலாம்.

பின்பு பெருமாள், புரந்தரதாசர் மகிமையை வெளியாக்கும் பொருட்டு, சன்னிதியில் ஸ்ரீஹரிமூர்த்தி யணிந்திருந்த கங்கணத்தைக் கைக்கொண்டு புரந்தரதாச ருருவத்தை வகித்து கனகவல்லியெனு மோர் வேசிவீட்டிற்குச் சென்று நிற்க, அவ ளவருக்குத் தெண்டனிட்டு ஆசனமளித்துப் பூஜித்தாள். அவர், கனகவல்லியை நோக்கி, ஒ மாதே! உன்மேல் மையல்கொண்டு வந்தேனென்று சொல்ல அவள் ஸ்வாமீ! அடியா ளவ்வளவுமேன்மைக்குப் பாத்திரமுடையாளோ! பூர்வ காலத்தில் புரூரச் சக்கிரவர்த்தி விஸ்வாமித்திரர் முதலானோர் வேசிகளால் பட்டபா டறியீரோ? பாகவதர்கள் எங்கள் குடிசைகளைப் பாம்புப் புத்துக்களென்று மதித்துப் பகவத் பஜனைசெய்துக்கொண்டு பார்க்காமல் போய்விடுவார்கள். குபேரசம்பத்தை யுடையவனெங்களை யடைந்தால் நாங்க ளவனை கோமணாண்டி யாக்கி வீதியில் விட்டுவிடுவோம். நெருப்புப்பற்றின வீட்டில் சுவர்களாவது நிற்கும், எங்களைப் பற்றினவர்களிட மெதுவு மிராது. ஆதலா லெங்களுடைய சகவாசம் துர்ஜ்ஜனங்களுக்கே யன்றி உமக்கு சரியல்லவென்று சொல்ல, பெருமாள் லீலையாக சிரித்த முகவிலாசத்துடன் கங்கணத்தை யவ்விடத்தில் விட்டு தான் மறைந்தருளினர். பொழுதுவிடிந்தவுடன் கோயிலர்ச்சகர் பெருமாள் மூர்த்தியணிந்திருந்த கங்கணத்தைக் காணாமையால் அரசனுக் கிதை யறிவித்தார்கள். அவன் மந்திரியை நோக்கி திருடனைப்பிடித்தா லவனுக்கோர் பை வராஹன் கொடுப்பதாகப் பறையடிக்க உத்தரவு செய்யச் சொன்னான். அப்படி பறையடிக்க, வூரெங்கு மித்திருட்டுசங்கதி வெளியாகவே கனகவல்லி அக் கங்கணத்தைக் கொண்டுவந்து இராஜசபையில் வைத்து புரந்தர தாசர், சென்ற இரவி லென்வீட்டிற்கு வந்து லீலாஜாலங்களைச் செய்து இக்கங்கணத்தை யவ்விடம் விட்டுச் சென்றனரென்றாள். இதைக்கேட்டதே அரசன் புரந்தர தாசரைப் பிடித்துவரச் சொல்லி ஆக்ஞைசெய்தவுடனே சேவகர் சென்றழைத்துவந்தனர். அரசன் விசாரணைசெய்யாமல் புளியம் மலாரா லடிக்கச்சொல்லி கட்டளையிட்டான். அவர்களந்த உத்தரவின்படி யடிக்கத் தொடங்கவே, பெருமா ளாவிர்ப்பவித்து புரந்தர தாசர் மஹத்வத்தை வெளிப்படுத்தக் கோரி யிந்த லீலையை நான் செய்தேன். அவ ரிதைச்செய்தவ ரல்லவென்று மறைந்தார். இதைக்கேட் டனைவரும்

புரந்தர தாசருக்கு நமஸ்கரித்து பூஜித்தார்கள். அவர் கன்னடி பாஷையி லனேக கிருதிகளைச்செய்து உலகத்தை உஜ்ஜீவிப்பித்து பாண்டுரங்கர் கிருபையால் பரமபத மடைந்தார்.

(இராமதாசர் சரித்திரம் சிங்கரிதாசர் செய்த தெலுங்கு தோராக்களைக்கொண்டும் பெத்ததாசர், புரந்தரதாசர் சரித்திரங்கள், வெங்கடவிட்டல தாசர் செய்த தோராக்களைக்கொண்டும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன.)

---

அடியேன் பாமரன், இலக்கணநூலைக் கற்றவனன்று, சாஸ்திரங்களையும் வாசித்தவனன்று, ஸ்ரீபார்த்தசாரதிஸ்வாமி பாஷாந்தரத்தி லிருந்த விச்சரித்திரங்களை மொழிபெயர்க்கும்படிச் செய்வித்தார். இந்தப் பிரபந்தத்தை வாசிக்கும் பகவத்தாசர்களுடைய பாதங்களை பக்தியுடன் யான் நமஸ்கரிக்கிறேன். பிழைகளிருந்தால் க்ஷமித்தருளும்படி அவர்களைப் பிரார்த்திக்கின்றனன்.

---

தோரா. — வேங்கடகிருஷ்ண ஸ்ரீநரசிம்மா வேதவல்லி மன்னுதா
அங்கிதவிட்டல பார்த்தசாரதீ ஹரிவரத ரகுநாதா.

பக்தமாலா வசனம் சம்பூர்ணம்.
ஆசாரியர் திருவடிகளேசரணம்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பண மஸ்து.

---

விளாங்காடு முனித்திரயம்
தூப்பில் வேதாந்தாசாரியர் குமாரர்
ஸ்ரீ நிவாஸாசாரிய ரியற்றியது

விருத்தம்.

பொன்னுலகத் திமையவரும் போற்றுந் தூயோன்
நன்னிலத்தி லிராமசாமி நற்சுதன் பாலகிருஷ்ணன்
பன்னுஸ்ரீ பக்தமாலை பகர்ந்தனன் வசனமாகத்
தன்னிணை யில்லா ராமர் தணிவுடன் ரக்ஷிப்பாரே.

---

